திருத்தக்கதேவரியற்றிய

# சீவகசிந்தாமணிமூலமும்

மதுரையாசிரியர் - பாரத்துவாசி

## நச்சினார்க்கினியருரையும்

———

இவை

சேலம் ம-ா-ா-ஸ்ரீ

இராமசுவாமிமுதலியாரவர்கள் விருப்பத்தின்




திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள்

ஷை ஆதீனத்துமஹாவித்துவான்

மீனாட்சிசுந்தரம்பி

ஆகிய

# நச்சினார்க்கினியர்வரலாறு.

இச் சீவகசிந்தாமணி உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர் பாண்டியநாட்டுள்ள மதுராபுரியிற் பிராமணகுலத்திற் பாரத்துவாசகோத்திரத்தில் அவதரித்தவர். தமிழ்ப்பாஷையிலுள்ள பலவகையான எல்லாநூல்களிலும் அதிபாண்டித்தியமுடையவர். இவரது சமயம் சைவமே. இவர் இன்னராதல் "வண்டிமிர் சோலை மதுராபுரிதனி - லெண்டிசை விளங்க வந்த வாசான் - பயின்ற கேள்விப் பாரத்து வாச - னான்மறை துணிந்த நற்பொரு ளாகிய - தூய ஞான நிறைந்த சிவச்சுடர் - தானே யாகிய தன்மை யாளன்" என்னும் இந்நூல் உரைச்சிறப்புப் பாயிரத்தால் விளங்கும்.

நச்சினார்க்கினியர் இந்நூலுக்கன்றித் தொல்காப்பியத்திற்கும் கலித்தொகைக்கும் முருகக்கடவுளை மதுரைக்கணக்காயனார்மகனார் நக்கீரனார்பாடிய *திருமுருகாற்றுப்படைக்கும், சோழன் கரிகாற்பெருவளத்தோனை முடத்தாமக்கண்ணியார் பாடிய பொருநராற்றுப்படைக்கும், ஓய்மாநாட்டு நல்லியக்கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்பாடிய சிறுபாணாற்றுப்படைக்கும், தொண்டைமான் இளந்திரையனை கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பெரும்பாணாற்றுப்படைக்கும், நப்பூதனார் பாடிய முல்லைப்பாட்டிற்கும், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடிமருதனார் பாடிய மதுரைக்காஞ்சிக்கும், பாண்டியன் நெடுஞ்செழியனை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடிய நெடுநல்வாடைக்கும், ஆரியவரசன் பிரகத்தனைக் கபிலர்பாடிய குறிஞ்சிப்பாட்டிற்கும், சோழன் கரிகாற பெருவளத்தோனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப்பாலைக்கும், வேளனன்னன் சேய்நன்னனைக் கௌசிகனார் பாடிய †கூத்தராற்றுப்படைக்கும், மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த திருச்சிற்றம்பலக்கோவையாருக்கும், திருவள்ளுவநாயனார் அருளிச்செய்த திருக்குறளுக்கும் உரைசெய்தருளினர். இன்னுஞ் சிலநூல்களுக்கு இவர் உரையியற்றினரென்று கேள்வியுண்டு அவை இவையென்று புலப்படவில்லை.

இந்தச் சீவகசிந்தாமணிக்கு நச்சினார்க்கினியர் முதன்முறை ஒருரையெழுதி, அக்காலத்துப் பிரசித்திபெற்றிருந்த சைனவித்துவான்கள் சிலருக்குக் காட்டினர். அவர்கள் அவ்வுரையை அங்கீகரியாமைகண்டு, பின்பு ஆருகதநூல்கள் பலவற்றையும் நலமுற ஆராய்ந்து இரண்டாமுறை இவ்வுரையையெழுதி அவர்களுக்குக் காட்ட, அவர்கள் உற்றுநோக்கி வியந்து பின்பு இவ்வுரையை அங்கீகரித்துக் கொண்டாரென்று சைனர் கூறுகின்றனர்.

இந்தச் சீவகசிந்தாமணியுரையில் நச்சினார்க்கினியர் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு முதலிய நூல்கள் பலவற்றிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக்காட்டியிருக்கின்றனர்.

* இந்நூல்முதலியபத்துநூல்களும் பத்துப்பாட்டென்னப்படும்.
† இக்கூத்தராற்றுப்படைக்கு மலைபடுகடாம் என்றும் ஒருபெயருண்டு.

என்னைச் சுடாதொழிக" என்று கூறுரைத்து, அக்கட்டியைத் தங்கை யியும நாவாற் பரிசித்தும் தாம் யாதொரு துன்பமும் அடையாது இன்ர்.

அங்ஙனமிருத்தலை முன்பு சந்தேகித்துப் பேசினோர்கண்டு அஞ்சி "யாம பஞ்சேய்தேம்; யாம என்னகாரியஞ்செய்தேம்" என்று நடுநடுங்கி, அவரை 'யாங்கள் கருதிப்பேசிய பெருங்குற்றத்தைப் பொறுத்தருள்க" என்று யிரந்து வேண்டிக்கொண்டனர். தேவா அவர்களை நோக்கி "நீவிர் என வாழுககத்தைப் பலரும் அறியச் செய்கிராதலின், எனக்குக் குற்றஞ்செய்தி ரலலீா; இதுபற்றி நீவிர் அஞ்சன்மின" என்று பல இனியமொழிகள் கூறி, அவா களச்சமகற்றினா.

இவற்றையெல்லாம் பாாததுககொணடிருந்த சங்கபபுலவரும, பாண்டியராச னும் திருத்தக்கதேவரது துறவொழுக்கத்தையும், மாா யோகபாடுகளையும மிக வியந்து பாராட்டினாாகள்.

பின்பு தேவா அவாகளிடததுவிடைபெறறுச சென்று, தமயாசிரியரிடத்தே அங்கு நிகழ்ந்தவற்றையெல்லாங் கூறி உடனுறைவாராயினா

எட்டுத்தொகை:—

வெண்பா.

நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தார் சொல்லுங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை.

பத்துப்பாட்டு:—

முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை மலைகடாம் பத்து.

பதினெண்கீழ்க்கணக்கு:—

நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு.

"பாற்கடல்போல" என்றும், "பச்சைமாலனைய" என்றும் இந்நூலுரையினீற்றில் உரைச்சிறப்புப் பாயிரங்களாக இரண்டுசெய்யுள்கள் உள்ளன. அவை நச்சினார்க்கினியர்காலத்திருந்த ஆன்றோரால் செய்யப்பட்டனவே.

நச்சினார்க்கினியர் இந்நூலுரையில் மேற்கோள்களாக எடுத்துக்காட்டிய நூல்களுள் விளங்கிய நூல்களின் பெயரகராதி:—

தமிழ்நூல்கள்.

அகநானூறு
ஆசாரக்கோவை
ஏலாதி
கலித்தொகை
களவழிநாற்பது
குறுந்தொகை
சிலப்பதிகாரம்
சிறுபஞ்சமூலம்
சிறுபாணாற்றுப்படை
திரிகடுகம்
திருக்குறள்
திருச்சிற்றம்பலக்கோவையார்
திருமுருகாற்றுப்படை
திருவாசகம்
நற்றிணைநானூறு
நாலடியார்
நெடுநல்வாடை
பட்டினப்பாலை
பதிற்றுப்பத்து
பரிபாடல்
பழமொழி
புறநானூறு
பெரும்பாணாற்றுப்படை
பொருநராற்றுப்படை
மணிமேகலை
மலைபடுகடாம்
வளையாபதி

---

வடமொழிநூல்
கபர்த்திகாரிகை.

*2

### இக்காப்பியத்தலைவனாகிய

# சீவகன்சரித்திரச்சுருக்கம்.

## [க.—நாமகளிலம்பகம்.]

இப்பரதகண்டத்தில் ஏமாங்கதநாட்டில் இராசமாபுரத்திற் குருகுலத்திலே உதித்துச் செங்கோல்செலுத்திய சச்சந்தனென்னுமரசன், தன்மாமனும் விதையதேயத்தரசனுமாகிய ஸ்ரீதத்தன்மகள் விசயையை மணந்து அவளது பேரழகுபற்றியெழுந்த வேட்கை மிகுதியால் அவளோடும் அநவரதஞ் சுகித்திருப்பக் கருதி, நிமித்திகன்முதலிய மந்திரிமார்கூறிய உறுதிமொழியைக் கொள்ளானாய், கட்டியங்காரனென்னும் மந்திரியொருவனையழைத்து, அவனைநோக்கி "நீ இந்நாட்டைக் காத்துவருதி' எனவிதித்து, அந்தப்புரம் புகுந்து, தானெண்ணியவண்ணஞ் சுகித்திருந்தான்.

அரசன் அப்படியிருக்கையில், விசயை கருப்பமுற்று, ஒருநாளிரவில் மூன்று கனாக்கண்டு, அவற்றின்பயனை அரசனாலுணர்ந்து வருத்தமுற்று, அவன் தேற்றத் தேறியிருந்தனள்.

அப்பொழுது கட்டியங்காரன் அரசனைக்கொன்று இராச்சியமுழுமையுந் தானே யாளக்கருதி, அறிவுடையோர் சொற்கேளானாய், தன் மைத்துனனாகிய மதனனோடு யோசித்து, பின்பு அரசனிருக்கும் அந்தப்புரத்தைச் சேனைகளோடும் வளைந்து கொண்டான். அதனை அரசன் வாயில்காப்பாளனாலறிந்து, மனங்கலங்கிப் புலம்பிய விசயையைத் தேற்றி, அவளை முன்னமே தான்செய்வித்த மயிற்பொறிமேலேற்றி, மகப்பேற்றைக் கருதி ஆகாயவழியே வேறிடஞ்செல்ல விடுத்துத் தான் புறம்போந்து, கட்டியங்காரனோடும் அவன்படைவீரரோடும் போர்செய்து, பின்பு வனால் மாய்ந்தனன். அப்பாற் கட்டியங்காரன் வெற்றிமுரசறைவித்து எல்லா ற்றையுங் கவர்ந்துகொண்டனன்.

ஆகாயவழியேசெல்லும் விசயை அம்முரசொலிகேட்டுக் கலங்கித் தான் ஊர்ந்துசெல்லும் மயிற்பொறியை முறுக்கிநடத்தமாட்டாது மூர்ச்சித்தமையால், அப்பொறி அப்பாற் செல்லமாட்டாமல் அந்நகரத்தைச்சார்ந்த ஓர்மயானத்திடையே மெல்லவீழ்ந்தது. உடனே அவள் அவ்விடத்துச் சுபகாலத்தில் ஓராண்மகவைப் பெற்றுக் கவலையொருவாறொழிந்து, அக் குழந்தைக்குப் பாலூட்டி, அரசனிறந்த தற்கிரங்கி, அப் பிள்ளையைநோக்கி, "வேந்தே! அரசன் பலபல சிறப்புச்செய்யப் பிறக்குநீ பாவியேன்காண இங்ஙனம்பிறப்பது தகுதியா? உலகுடையாய்! நீ கிடக்கின்ற இடம் பகைவனிடமாயிராநின்றது; நினதுபாயல் சுடுகாடாயிராநின்றது; யாதும் உசாவுதற்கு ஒருதுணையுமில்லாத் தமியேனாயிராநின்றேன்; நின்னைக் கொண்டு போகக்கருதில், இக்காலம் போகவொண்ணாத இருளாயிராநின்றது; மேல் நீவளருமாறும் அறியேனாயிராநின்றேன்; சிந்தாமணியே! நீ ஒன்றுமுணராமற் கிடவாநின்றாய்; எனதுவருத்தநீக்கப்பிறந்த நீ, என்னிடத்துப் பிறந்த துன்பக்கடலை யான் துந் தெப்பமாகாதபொழுது என்னைக் காப்பவர்யாவர்? உரைக்கின்றிலை" என்று

கூறித் தனியேயிருந்து வருந்திப் புலம்பும்பொழுது, அம் மயானத்துள்ள தெய்வ மொன்று மனமிரங்கி, அவள்தோழியாகிய சண்பகமாலை வடிவங்கொண்டு அவள் முன்னேவந்து துயரந்தீரும்படி அவளுக்கு இனிய வார்த்தைகள்கூறி, அவளிடத்திருந்த (சச்சந்தன்பெயரெழுதப்பட்டுள்ள) மோதிரத்தைக் குழந்தைக்குச் சேர்த்து அக் குழந்தையை ஓர்படுக்கைமீதுகிடத்தி, அவளைநோக்கி "இனி இப்பிள்ளையை எடுத்துக்கொண்டுபோதற்கு ஒருவன்வருவான்; ஆதலால், யாம் ஒளித்திருத்தல் நலம்" என்றுகூற, உடனே அவள் விலகிச்சென்று மறைந்து நோக்கிக்கொண்டு நின்றனள்.

அவள் அப்படிநிற்கையில், மரித்த தன்குழந்தையைப் புதைத்தற்கு அங்கே வந்த கந்துக்கடனென்னும் வணிகனொருவன் யாருமின்றித் தனியேகிடந்த அக் குழந்தையைக்கண்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்து அதின் கையிலிருந்த மோதிரத்தால் இராசபுத்திரனென்றறிந்து, பிறரறிந்துகொள்ளாதபடி அம்மோதிரத்தை மறைத்துக் கொண்டவனாய் அக்குழந்தையை அன்போடெடுப்ப, அது தும்மிற்று. அப் பொழுது தெய்வம் "சீவ" என்று வாழ்த்தியது. பின்பு கந்துக்கடன் அக்குழந்தையை எடுத்துக்கொண்டு விரைந்துசென்று இராசமாபுரத்துள்ள தன்வீட்டினுள்ளே புகுந்து தன்மனைவியாகிய சுநந்தையைநோக்கி, "நின்மகன் சாதலில்நின்றுந் தப்பினான்" என்றுகூறிக் கொடுப்ப, அவள் தொழுதுவாங்கிப் பெருமகிழ்ச்சியடைந்து வளர்த்துவருநாளில், முன்னந் தெய்வம் சீவவென்று வாழ்த்தினமைபற்றி, அறிவுடையோர் அப்பிள்ளைக்குச் சீவகனென்று நாமகரணஞ் செய்தனர். பின்பு சுநந்தை நந்தட்டனென்னும் ஒருபுத்திரனைப் பெற்றாள். இதுநிற்க.

மயானத்திருந்த விசயை தோழியாகவந்த தெய்வத்தோடுந் தண்டகாரணியம் புகுந்து, தவவேடம்பூண்டு, மகனுக்கு ஆக்கம் உண்டாகுகவென்று நோற்றுக்கொண்டிருந்தாள். தெய்வம், "இராசமாபுரத்திற்சென்று நின்புதல்வன்செய்தியை அறிந்துவருவேன்" என்றுகூறி, விசயையிடத்து விடைபெற்றுப்போய்த் தானுறையும் புறங்காட்டைச்சேர்ந்திருந்தது. சீவகன் *தோழர்களோடும், தம்பிமாராகிய †நபுலவிபுலர்களோடும், நந்தட்டனோடும் இனிதுவளர்ந்து உரியபருவத்தில் வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்று, கந்துக்கடன்கட்டளைப்படி அச்சணந்தி யாசிரியரிடத்து வில்வித்தைமுதலியவற்றை எளிதிலே பயின்று சிலகாலத்துட் சகல வித்தியாபாரங்கதனாயினான்.

ஆசிரியர், சீவகனது புத்தியின்றிறமும் கல்விமுதிர்ச்சியுங்கண்டு அளவில்லா ஆச்சரியமும் மகிழ்ச்சியுமுடையராய், முன்பு அவனுக்குத் தருமோபதேசஞ்செய்து பின்பு அவனைத் தனியிடத்திற்கு அழைத்துச் சென்று, தாம் ஓராசனத்திருந்து அவனைநோக்கி "இந் நகரத்தரசனாயிருந்த சச்சந்தனென்பவன் பூர்ண கருப்பிணியாகிய தன்மனைவி விசயையை மயிற்பொறிமேற்போக்கிப் பின்பு கட்டியங்காரனென்னும் மந்திரியாற் கொல்லப்பட்டான். அவ் விசயை மயானமடைந்து ஒருபிள்ளையைப் பெற்றாள். அப் பிள்ளையைக் கந்துக்கடனெடுத்துவந்து தன்மனைவியாகிய

* சச்சந்தனிறந்தபின்பு, அவன்சுற்றத்தைக் கட்டியங்காரன் அழிப்பதுதெரிந்து அச் சச்சந்தன்றேழர் தம்புதல்வர்களைக் கந்துக்கடனிடத்தே ஒப்புவித்து வளர்த்து வரும்வண்ணம் வேண்டிக்கொள்ள, கந்துக்கடன் அவர்களைச் சீவகனோடுசேர்த்து அன்போடு வளர்த்துவருவானாயினான். அதனால், அப்பிள்ளைகள் சீவகனுக்குத் தோழராயினர்.

† நபுலவிபுலர் - சச்சந்தனுடைய காமக்கிழத்தியர்புத்திரர்.

நந்தைகையிற் கொடுப்ப, அவள் அன்போடு வளர்த்துவருவாளாயினள்" என்று கதைமுகத்தாலே, கன்னன் கன்னனுக்குப் பிறப்புணர்த்தியதுபோலக் கூற, அதுகேட்ட சீவகன் "அப்பிள்ளை யாவன்" என்று வினவ, ஆசிரியர் "நீதான்" என்றவுடன், சீவகன் பதைபதைத்து மூர்ச்சித்து, அவர்தேற்றத்தேறிக் கட்டியங்காரனைக் கொல்லுதற்குச் சந்நத்தனாயெழுந்தான். ஆசிரியர் அவனைநோக்கி, மைந்த! இது காலமன்று; இன்னும் ஒருவருடஞ் சென்றபின்னர், நீ எண்ணியது செய்க; இப்பொழுது உன்னை வெளிப்படுத்தாதொழிக; இதுயான்வேண்டுவது" என் சொல்ல, சீவகன் ஆசிரியர்கட்டளையை மறுத்தற்கஞ்சி, "அப்படியே யாகுக" என்று உடன்பட்டான்.

பின்பு ஆசிரியர் தம்வரலாறு கூறுவாராய், அவனைநோக்கி "யான் முன்னம் வெள்ளிமலையிலுள்ள வாரணவாசி என்னும் நகரத்தரசன்; உலோகமாபாலனென்னும் பெயருடையேன், தவஞ்செய்தற்கெண்ணி, மகனுக்கு அரசளித்துத் தவவேடம்புனைந்து நோன்புபுரிகையிற் பூர்வசன்மபாவத்தால் எனக்கு யானைத்தீயென்னும் நோய் உண்டாகியது; அதனால், மிகவும்வருந்தி ஒருவாற்றானுந் தீரப்பெற்றிலேன்; இங்குவந்து நின்னைக்கண்டவுடன் அந்நோய் தீரப்பெற்றேனாதலின், நின் பெருவிருப்புற்று, நினக்குக் கல்வியறிவுறுத்தற்கே ஈண்டிருந்தேன். என்னெண்ணம் முற்றியது. இனித் தவஞ்செய்தற்குச்செல்ல எண்ணுகின்றேன்; விடைகொடு" என, சீவகன் அவரைப் பிரிதற்குச் சிறிதுங் கருத்திலனாயினும் அவர் தவஞ்செய்தலை மறுத்தற்கஞ்சிச் சம்மதிப்ப, அவர் *இருபத்துநான்காந்தீர்த்தங்கரராகிய வர்த்தமானசுவாமிகளுடைய சமவசரணமடைந்து நோன்பியற்றி முத்தியடைந்தார். சீவகன் இராசமாபுரத்தே யிருந்தனன்.

## [உ.—கோவிந்தையாரிலம்பகம்.]

பல நாட்சென்றபின், ஒருநாள் அரசனதுபசுக்கள் சமீபத்துள்ள ஒருமலையை அடுத்து மேய்கையில், அம்மலையிலுள்ளவேடர் அவற்றைக் கவர்ந்துகொண்டுசெல்ல, அப்பசுக்களைப் புரக்குமிடையர் அவ்வேடர்களை யொன்றுஞ்செய்யமாட்டாது அரசனைச் சூழ்ந்து விரைந்தோடிச் சென்று கட்டியங்காரனிடத்து முறையிட்டார். உடனே அவன் அவ்வேடரைவென்று நிரைமீட்டுவரும்படி தன்புதல்வர் நூற்றுவருக்கும் மதனனுக்குங் கட்டளையிட, அவர் படையுடனேசென்று, பொருது, அவ்வேடராற் றோல்வியுற்று மீண்டார். [illegible] யர் மீட்டும்வந்து அச்செய்தியைக் கட்டியங்காரனுக்கு [illegible] னன். அதனை, அவ்விடையர்தலைவனாகிய [illegible] குள்ள என்கன்னியாகிய கோவிந்தையை [illegible] "இந் நிரைமீட்டுவருமைந்தற்குப் பேரழகுடைய [illegible] றைவித்தான். அதுகேட்டும் வேடருக்கஞ்சி யாவரும் [illegible] சும் சும்மாவிருந்தனர். அதனை யுணர்ந்த சீவகன், குளுனைத்துப் போர்க்கோலங்கொண்டுசென்று யுத்தஞ்செய்து,

---

* தீர்த்தங்கரர் இருபத்துநால்வர். அவர்கள்பெயர்வருமாறு:—(க) விருஷபர், (உ) அஜிதர், (ங) சம்பவர், (ச) அபிநந்தனர், (ரு) சுமதி, (சு) பத்மப்ரபை, (எ) சுபார்ச்வர், (அ) சந்திரப்ரபை, (கூ) புஷ்பதந்தர், (க0) சீதளர், (கக) சிரேயாம்ஸர், (கஉ) வாசுபூஜ்யர், (கங) விமலர், (கச) அநந்தர், (கரு) தருமர், (கசு) சாந்தி, (கஎ) குந்து, (கஅ) அரர், (ககூ) மல்லி, (உ0) முனிசுவ்ரதர், (உக) நமி, (உஉ) நேமி, (உங) பார்சுவர், (உச) ஸ்ரீவர்த்தமானர்.

அவ்வேடர் ஐம்பத்தாறுயிரவரும் தனக்கு ஒருவாற்றானும் பகைவரன்மை அவர்களைக் கொல்லாது அச்சுறுத்தி நிரைமீட்டுவந்து, நந்தகோன் வேண்டுகோ படி அவன்மகளைத் தான் அப்பொழுது மணஞ்செய்தல் தன்குலத்திற்குப் பொரு தென்றெண்ணி, தன்தோழனாகிய பதுமுகனுக்கு அவளை மணஞ்செய்வித்தனன்

## [௩.—காந்தருவதத்தையாரிலம்பகம்.]

அப்பால் வெள்ளிமலையிலுள்ள வித்தியாதரராசனாகிய கலுழவேகனென்ப தன்மகள் காந்தருவதத்தைக்கு இராசமாபுரத்தில் மணநிகழுமென்பதைச் சே ராலறிந்து, அங்ஙனஞ் செய்விக்கத்துணிந்து, அவ் விராசமாபுரத்து வணிக ஸ்ரீதத்தனென்பான் ஒருதீவிற்சென்று பெரும்பொருளீட்டி நகரடையவெண்ணி சனங்களோடும் மரக்கலமூர்ந்து கடலிற்செல்வதைத் தெரிந்து, அவனை யழை வரும்படி தன்னிடத்துள்ள தரனெனும் வித்தியாதரனொருவனை யனுப்பினான். தரன் போந்து சனங்களுடன் சப்பல்முழுகியதுபோலே தன்வித்தைமகிமை ஸ்ரீதத்தனுக்குத் தோற்றுவிப்ப, ஸ்ரீதத்தன் அக் கப்பலினின்றும் முறிந்துவிழுந் மரத்துண்டத்தைத்தழுவி மெல்லமெல்லச்சென்று கரையையடைந்து ...ரு ருந்தனன்.

அப்பொழுது, தரன் ஆறுசெல்வான்போன்று அவனைச்சந்தித்து ... அவனை யழைத்துக்கொண்டு கலுழவேகனிடஞ்செல்ல, கலுழவேகன் ... க்கு நிரம்ப உபசாரங்கள்செய்து அளவளாவியிருந்து, பின்னர்க் காந்த... யின் வரலாறுகளைக்கூறி, அவளை வீணாபதியென்னுந் தோழியுடன் அவன்... வித்துப் பலபொருள்களுமுதவி, அவனைநோக்கி, "இசையில் இவளைவெல்... னே அவனுக்கு இவளை மணம்புரிய" என்று சொல்லி விடுப்ப, ஸ்ரீத... ளோடும் புறப்பட்டு விமானமூர்ந்து போந்து, பரிசனங்களுடன் முழுகி... கத் தான் முன்னங்கரூதிய கப்பலைத் தரன்காட்டக்கண்டு உவப்புற்று, ... தனக்கினியவரனைவருந் தன்னைச்சூழ இராசமாபுரஞ்சார்ந்து தன்மனையை... தன்மனைவியாகிய பதுமைக்கு நிகழ்ந்தவற்றைக்கூறிக் காந்தருவதத்தையை... னிமாடத்தேயிருத்தி, கட்டியங்காரனைக்கண்டு அவனுடம்பாடுபெற்று ஒரு... செய்வித்து, "இக் காந்தருவதத்தையை வீணையில்வெல்வோரே இவளை மண சற்குரியர்" என்று பிரசித்தஞ்செய்தனன். அஃதுணர்ந்த பலதேயத்தாரு ...க்தே வந்துகூடினார்கள். பின்பு ஸ்ரீதத்தன் காந்தருவதத்தையை ய... வாறு, ...ம் மண்டபத்தேயிருத்தி, அவளை ...ச்செய்தான். ... பலரும் ஆச்... முற்றனர். முதல் மூன்று... ள்ளே இசையில்வ வொருவருந் தன... னியேவந்து பாடியும், ...சித்தும் அவளை வெல் லமையில்லாராய்த் ...ல்வியுற்றனர். இப்படி ஆறுதினஞ் சென்றன.

பின்பு இச் செய்தியுணர்ந்த சீவகன் தன்கல்வியைத் தோற்றுவிப்பா ...டிச் செல்லக்கருதித் தன்றோழனாகிய புத்திசேனனூற் கந்துக்கடனுக்குத் ... தான். கந்துக்கடன் அநங்கமாலையென்னும் பரத்தைநிமித்தம் சீவகனிடத் டியங்காரனுக்கு மிக்க சினமுண்டாயிருத்தலை நாகமாலையென்பவளால் அப்... அறிந்துகொண்டமையால், "படையமைத்து அவ்விடஞ்செல்க" என்று விடுப்ப, சீவகன் அப்படியேபோந்து, அம் மண்டபமடைந்து, தான் இசையில் தலைப் பலர்க்கும் புலப்படுத்திக் காந்தருவதத்தையை வென்றனன். உடனே அவனுக்கு மாலையிட்டனள்.

ட்டியங்காரன் மனம்புழுங்கி, அங்குவந்திருக்கும் ம்ளைத்தற்குரிய சிலவார்த்தைகள்கூறி, "அரசர்களே! ந காந்தருவதத்தையை மணஞ்செய்தற்குரியர்" என்று ளடுவெந்து சீவகனோடு போர்செய்து தோல்வியுற்றனர். த்தையைத் தன்மனைக்கு அழைத்துச்சென்று சுபமுகூர்த் படி மணம்புரிந்து அவளோடும் இன்புற்றிருந்தனன்.

[ச.—குணமாலையாரிலம்பகம்.]

லநாளாயபின், இளவேனிற்காலம்வந்தது. அப்பொழுது நகர்ப்பு ல விளையாடுதற்குச்சென்ற இராசமாபுரத்தினருட் சுரமஞ்சரியும் குண ண்ணங்காரணமாகத் தம்முள் மாறுபட்டுத் தஞ்சுண்ணங்களுள் நல அறிந்துவரும்படி தந் தோழியரிருவரையனுப்ப, அவர் அவ்வாறே வற்றைக்காட்டினர். கண்ட அவர் "இவற்றைச் சீவகனுக்குக் ன்றனர் அம் மகளிர் அவன்மாட்டுச்சென்று அவற்றைக் காட்ட, மாலைசுண்ணத்தை நல்லதென்றான். அவர் மீண்டுசென்று, அச்செய்தி லையர்க்கறிவித்தனர். அதனைச் சுரமஞ்சரிகேட்டு அவலமுற்று, "என தை யிகழ்ந்தசீவகன் பின்னா வலிந்துவந்து என்னைவிரும்பும்படி யான் " என்றுகுறிப்பாலுணாத்திக் கன்னிமாடஞ்சென்று மற்றை யாடவரொரு ருதாளாய்ச் சீவகனையே கருதி நோன்பியற்றியிருந்தனள்.

அப்படியிருக்க, அப் புறநகர்ச்சோலையிலே பிராமணருடைய சோற்றுக் யொன்றுதீண்ட அதனை அப் பிராமணர் தடியால் மொத்தினர். அது குளத்தில்விழுந்து நீந்தி வருந்துந்தருணத்தில், அதனைச் சீவகன்கண்டு ப் பஞ்சநமஸ்காரமென்னுமந்திரத்தை அதன்செவியில் உபதேசித்தான். நாய் அவ்வுபதேசத்தால் தன்னுடம்பை ஒழித்துத் தேவனாகி விண்ணிற் யாவருங்கண்டு வியப்புற்றனர்.

அத்தேவன் சுதஞ்சணனென்னும் பெயருடையவனாய் மீண்டுவந்து சீவ கிற்ப, சீவகன் "நீயார்" என்றனன். சுதஞ்சணன், "ஈங்குநின்றும் ற்சென்று இயக்கர்தலைவனாய்ச் சங்கவெண்மலையிற் சந்திரோதயமென்னு பேறுயினேன்; எனக்குப் பெயர் சுதஞ்சணனென்பது; நினக்குப் பணி துடையேன்" என்றுசொல்ல, சீவகன், "எனக்குப் பகைவராற் றுன் பொழுதுவந்து உதவிசெய்க; இப்பொழுது நின்னிடஞ்சென்றுறைக" எ தஞ்சணன் விசும்பாறுகச்சென்று தன்னகரமடைந்தனன்.

சென்றபின்பு, சோலையிலிருந்தோர்யாவரும் தத்தம் ஊர் ... ...ணிவேகமென்னும் பட்டத்துயானை

துதெரிந்து ஒருவாறு துயரந்தீரப்பெற்றிருந்தனள்.
விநயமாமாலையறிந்து, தன்கணவனாகிய குபேரமித்திர
சீவகனுக்குக் குணமாலையைக் கொடுத்தலின் மிக்க
கருத்தைமொழிந்து சிலமுதியோரைக் கந்துக்கடனிடத்த
முதியோர் அவனிடம்போய்ப்பேச, அவனுடம்பட்டபி
ஈட்டப்பட்டன. அதன்பின்பு, சீவகன் குணமாலையை மல
யாது மகிழ்ச்சியுற்றிருந்தான்.

சீவகன் இப்படியிருக்கையில், முன்னர் அவனுக்குத் தோ
நாணிக் கவளமுதலியன கொள்ளாமற் கோபத்தோடு நிற்றலைக் கட்டி
"இதற்குக் காரணம் என்ன" என்று வினவினான். பாகன் சீவகனால
தைக்கூற, உடனே அவன் சினந்து, தன் மைத்துனனாகிய மதனனை
யையுநோக்கி, "நீவிர்சென்று சீவகனாகிய செட்டிமகனை விா
என்று ஆஞ்ஞாபிக்க, அவர்கள் சென்று சீவகனிருக்குமிடத்
டார்கள். அதனை உள்ளேயிருந்த சீவகனறிந்து கோபங்கொண்டு யுத்
புறம்போந்தும் "இன்னும் ஒருவருடம்வரை கட்டியங்காரனிடத்துக் பெ
ளாதிருப்பேன்" என்று முன்னம் ஆசிரியராணைக்கிசையத் தான் கூறியவ
கோபந்தணிந்து நின்றவளவிலே, கந்துக்கடனும் சுநந்தையும்வந்து, "எ
சனுக்கு அடங்கியொழுகுதல் ஆண்மை" என்றனர். அதனாலும் சீவக
த்தை வெளிப்படுத்தானாய் மதனன்முதலியோர் சூழ்ந்துவரச் செல்லு
இக்கொடுமையைக்கண்ட ஊரவர்யாவரும் பதைப்புற்று வருந்திப்புலம்பி
இச்செய்தியைத் தோழருந் தம்பிமாருங் கேட்டுச்சினந்து மதனன்மு
வெல்லுதற்குரிய உபாயத்தை நாடிக்கொண்டு நின்றனர். காந்தருவதத்
தன்கணவனைச் சிறைமீட்கக் கருதித் தன்தெய்வங்களைத் தியானிப்ப, உ
தெய்வங்கள் போந்து அவனைச் சூழ்ந்துகொண்டன. இவற்றைத் தெரி
"இனிச் செய்வதென்னை" என்று ஆலோசித்து, காந்தருவதத்தை தன் சி
நீக்க முயன்றதற்குநாணித் தன் உயிர்த்தோழனாகிய சுதஞ்சணனை ந
நினைத்தவுடன் அச் சுதஞ்சணனுக்கு இடக்கண்ஆடியது; ஆடினவளவி
இதனால் எனக்குத் தீங்குவருமோவென்று நோக்காது முதலிலேசீவகனை
நினைந்து அவனுற்ற துன்பத்தைத் தனது ஞானத்தாலறிந்து விரைந்தவ
வந்ததுபோலத் தோற்றும்படி அவ்விடத்துக் காற்றும் மழையும் மிக்கு
க்குந் தோற்றாமற் சீவகனையெடுத்து மார்போடணைத்து ஏந்திச்செ
ந்து, அவன்பெருமையையும் அவன் தனக்குச்செய்த பேரு
விளங்கக்கூறி, அவனை மகிழ்வித்து, அவனோடும் அ

சீவகனைக் காணாது திகைத்து, "கட்டியங்காரனி
ண்ணி, அங்குள்ளாரெ னை வாளாற்பிள

## [ரு.—பதுமையாரிலம்பகம்.]

அங்கே சுதஞ்சணன் பலதேயங்களையும் ஆங்காங்குள்ள மலைகள் ஆறுகள் தலியவற்றையுங் காணுதற்குச் சீவகன் விருப்புற்றிருப்பதைத் தெரிந்துகொண்டு, பற்றின் வழிமுதலியவற்றைக் கூறி, பின்னர்க் காமனும் விரும்புங் கட்டழக ந்த சரீரத்தைக்கொடுப்பதும் விடமுதலியவற்றைக் கெடுப்பதும் வேண்டியவுரு த் தருவதுமாகிய மூன்றுமந்திரங்களை அவனுக்குமொழிந்து, அவனையேந்திக் ண்டு தன்மலையினின்றுமிறங்கிப் பூமியில்விடுப்ப, சீவகன் அவன் முன்னர்க் ய வழியேபோய், மிருகங்களையும் பறவைகளையுங் கொன்று தின்று திரியுங் டய வேடனொருவனைக்கண்டு, அவனை நல்வழிப்படுத்த நினைந்து, அவனுக்கு மொழியுரைத்தனன்.

உரைத்து அப்பாற்சென்று காட்டுத்தீயால் வளைக்கப்பட்டுநின்ற யானைத்திர ன் வருத்தத்தைநீக்கினான்; நீக்கி அரணபாதமென்னும அசலமடைந்து, ஆங்குள்ள நக்கடவுளையும் சாரணரையும் வழிபட்டேத்தி, அப்பாற் பல்லவதேயத்துள்ள கிராபமென்னு நகரைநண்ணி, அந்நகரத் தரசனுசிய தனபதிமகன் உலோகபால நட்புற்று, அவன்சகோதரியாகிய பதுமையென்பவள் சோலையிற்சென்று பூக் து விளையாடுகையிற் பாமபுகடித்தமையால் அவளுக்குண்டான விடவேகத் போக்கி, அவளை மணம்புரிந்து, அவளோடும் அவ்விடத்தே இரண்டுமாதந்தங்கி புற்றிருந்து, பின்பு வேற்றடஞ்செல்ல விருப்புற்று, ஒருநாளிரவினடுவில் ஒருவ டுஞ்சொல்லாது வேற்றுருக்கொண்டு அந்நகரினின்றுநீங்கி, அப்புறஞ் செல்வா னன்.

பின்பு பதுமை சீவகன் தன்னைநீங்கியதுதெரிந்து துன்பக்கடலிலழுந்தி, அவ னுடு கூடியிருக்கையில் இன்பமவிளைவித்த ஒவ்வொருபொருளையுநகண்டு பலவாறு லம்பித் தன்றோழிமாருள் அறிவுடையாளொருத்திதேற்ற ஒருவாறு தேறியிருந்த ள். இஃதுணர்ந்த தனபதி மிகவுங்கவலையுற்றுச் சீவகனைநாடிக் கொணருமவண் ம் சிலரையனுப்ப, அவர் சீவகனைப் பலவிடத்துந்தேடி யலைந்து பின்பு கண்டு, "நின்னைப் போன்றானொருகுரிசிலைக் கண்டதுண்டாயிற்கூறுக" என்ன, சீவகன் அவரைநோக்கி, "அவனை ஒன்பதாந்திங்களிலே காண்பீர்; அதற்குமுன்னர்க் காணீர்; ன்கூறியது பொய்யுரையன்று; இச்செய்தியை நும்மரசனுக்குக் கூறுமின்" என்ற டுப்ப, அவர்போந்து அச்செய்தியைத் தனபதிக்குத் தெரிவித்தார். அவன் று வருத்தமொழிந்திருந்தான். சீவகன் அப்பாற் சென்றான்.

## [சா.—கேமசரியாரிலம்பகம்.]

அப்படிச்சென்ற சீவகன் பலவிடங்களையுங்கடந்து சிக்சி
பள்ளியைச் சார்ந்து, அ[illegible] தாபதர்களோடும்
நாட்டிலுள்ள கே
மூச
யென்
களை

அதுதொடங்கி நாடோறும் வருவோர்பலரையுந் தன்மனைக்கழைத்துச்சென்று உபசரித்து விருந்தூட்டி ஒருவரையுங்கண்டு அவள் நாணுமைதெரிந்து "இவளுக்குக் கணவனுவான் வருங்காலம் உளதோ" என்று கவலையுற்றிருந்தான்.

அப்படியிருந்த சுபத்திரன் சீவகனைச்சந்தித்து அவன்வடிவழகுகண்டு மகிழ்ச்சியுற்று, அவனைத் தன்வீட்டிற்கு அழைத்துச்சென்ருன். சென்றபொழுது கேமசரி சீவகனைக்கண்டு நாணமடைந்து பின்னர் மோகமுற்று வருந்தினுள். அதையறிந்த சுபத்திரன் சீவகனுக்கு அவளை மணம்புரிவிக்க, அவன் அவளோடும் அவ்விடத்தே இரண்டுதிங்கள் தங்கியிருந்து பின்பு வேறிடஞ்செல்லக்கருதி, அவளிடத்துச் சொல்லாது பிரிந்துசென்று, எதிர்ப்பட்டானெருவனுக்குத் தருமோபதேசஞ்செய்து தன் அணிகலன்களை யவனுக்களித்து, அப்பாற் செல்வானுயினுன்.

கேமசரி சீவகனைக்காணுது திகைத்துப் பிரிவாற்ருது பலவாறுபுலம்பித் தன் நற்ருயாகிய நிப்புதியென்பவள் தேற்ற, ஒருவாறு துயரந்தீர்ந்திருந்தனள்.

## [எ.—கனகமாலையாரிலம்பகம்.]

பின்பு சீவகன் சிலவிடங்களைக் கடந்துசென்று மத்திமதேயத்துள்ள ஏமமாபுரமென்னு நகரிக்குச் சமீபமாகிய ஒருபூஞ்சோலையையடைந்து, ஆங்குள்ள அழகான ஒருபொய்கையைக்கண்டு, அதின்வளங்களைநோக்கிக் காந்தருவத்தையையும், குணமாலையையுநினைந்து பலவாறுபுலம்பி மிகுந்தவருத்தமடைந்து அப்பாற்செல்லாது அவ்விடத்தே யிருந்தான். அப்பொழுது அந்நகரத்தரசனுகிய தடமித்தன்புதல்வன் விசயனென்பவன் அச்சோலையையடைந்து சீவகனைக்கண்டு, "இவன் இவ்விடத் தானல்லன்" என்றெண்ணி, தேயமுதலியவற்றை வினவ, சீவகனும் தானின்ருனென்று புலப்படாவண்ணம் அவற்றைக்கூறி, அவ்விடத்துப் பலமுறைமுயன்றும அவ்விசயன் எய்துவீழ்த்தமாட்டாத மாங்கனியொன்றைத் தான் ஓரம்பாலெய்து அவ்வம்புடன் அம்மாங்கனி தன்கையில்வரப்பெற்றுத் தான் வில்வித்தையில்வல்லனுதலை வெளிப்படுத்த, அதனை அவ்விசயனறிந்து மகிழ்ந்து சீவகனை உடன்கொண்டு சென்று தன்றந்தையாகிய தடமித்தனுக்கறிவித்தான். அவன் சீவகனைக்கண்டு உவப்புற்று, விசயன்முதலிய தன்புத்திரரைவர்க்கும் வில்வித்தைமுதலியன கற்பிக்கும் ..ட அவனை நியோகிப்ப, அவன் அவற்றை அவர்களுக்குக் கற்பித்துவருகையில், ..கள் அவ்வித்தைகளில் மிகவும் வல்லுநராயினர். அதனை அரசனறிந்து அள மகிழ்ச்சியுற்று, அவனைத் தன்னிடத்தே வைத்துக்கொள்ளக்கருதித் தன் ..மாலையை அவனுக்கு மணம்புரிவிக்க, அவன் அவளோடுகூடி அவ்வி

..மிருக்க, நந்தட்டன் சீவகன் இன்னவிடத்திலுள்ளானென்பதை ... அவனைக்காணுது வருந்திக் காந்தருவதத்தையை ... கனகமாலையோ ... சீவகனை ... ..வீசே ... ..டந்த

இச்செய்தியையறியாத தோழர்கள் கவலைமிக்குக் காந்தருவதத்தையையடைந்து, சீவகன் ஏமமாபுரத்தே இருத்தலையும், நந்தட்டன் அவனிடத்தடைந்ததையும் அவளாற் றெரிந்துகொண்டு தாமும் சீவகனிடஞ் செல்லக்கருதி அவளுக்குத்தெரிவித்து விடைபெற்றுப் பலவீரரகளோடும் புறப்பட்டு, ஏமமாபுரஞ் செல்வாராய், விசயை தவஞ்செய்துகொண்டிருக்குந் தவப்பள்ளியை யடைந்தனர். அப்பொழுது விசயை அவர்களைநோக்கி, "நீங்கள் எங்குள்ளீர்? எங்குச் செல்கின்றீர்" என்று வினவ, தம்வரலாறுசொல்லுகையிற சீவகன்வரலாறுஞ் சொல்லும்படி நேர, அதனைக் கூறுகின்ற தேவதத்தன், "கட்டியங்காரன் கட்டளையால் மதனன்முதலியோர் சீவகனைக் கொல்லக் கொலைக்களங் குறுகவும் ஓர்தெய்வம் வந்துகாத்தது" என்றுசொல்ல வெண்ணி, "சீவகனைக்கொல்ல" என்றவளவில், விசயை பதைபதைத்து மூர்ச்சித்துப் பின்பு எழுந்து சீவகன்வரலாறுகளை வெளிப்படச்சொல்லிக் கண்ணீர்விட்டுப் பிரலாபித்தழுகையில், தோழர் தம்முள் ஒருவரையொருவர் நோக்கி மகிழ்ந்து அவளைச் சீவகன் நற்றாயென்றும், சீவகனை இராசகுமாரனென்றும் விளங்க அறிந்தவர்களாய் சீவகன் இறவாதிருத்தலை அவளுக்குணர்த்த, விசயை "என்மீதுவைத்த காதலாலே என்னிறை இறந்தபின்பு, யான் மிகுந்ததுன்பமடைந்தேன்; இச்செய்தியை என் ஐயனுக்கு உணர்த்தி அவனை என்னிடத்து அழைத்துவாருங்கள்" என்றுசொல்ல, தோழர்வணங்கி, "தாயே! ஒருமதிக்குள்ளே நம்பாற் சீவகனை அழைத்துவருவேம்; நீவிர் கவலைப்படவேண்டாம்" என்றுசொல்லி விடைபெற்று ஏமமாபுரத்தைச் சார்ந்த ஒருசோலையையடைந்து அங்கிருந்துகொண்டு அந்நகரத்தில் நந்தட்டனோடு சீவகனிருத்தலை ஒற்றரால்றிந்து சீவகனைக் காணுமாறு எங்ஙனமென்று ஆலோசித்து யுத்தஞ்செய்யவந்தவர்களைப்போலவே கோலங்கொண்டு அந்நகரை வளைந்து அரசன் பசுக்களைக் கவர்ந்தனர்.

அதனையறிந்து சினந்த அரசன்கட்டளையாற் பெரும்படைசூழத் தேர்மீதேறிப் போர்செய்தற்கு நந்தட்டனோடுவந்த சீவகனைக்கண்டு, பதுமுகன் "அடியேம் நின் றிருவடிநிழலிலே உறையவேண்டிச் சச்சந்தன்மகனாகிய நின்னைக் காணவந்தேம்" என்று எழுதியெய்த அம்புசென்று சீவகன்றேர்மீது மாறிவீழ்ந்தவளவிலே, சீவகன் இக்கணையை இவ்வாறு வீழும்படி எய்தான் பதுமுகனேயென்றறிந்து போர்செய்யாதபடி தன்படையை விலக்கிநிற்ப, தோழர்சென்று அவனைவணங்கிப் பேராநந்தமுற்று அவனோடு நகரஞ்சென்று அரசனைப் பணிந்தனர். அரசன் "இவர்கள் யார்" என்று வினவ, சீவகன் "என் உயிர்த்தோழர்" என்றான். பின்பு சீவகன் தனியேயி[illegible] [illegible]ோழரைநோக்கி, "என்னிலைமையை எங்குணர்ந்தீர்" என்ன, அவர் "சச் [illegible]தயியாகிய விசயையைத் தண்டகாரணியத்துக்கண்டு தெரிந்துகொண்[illegible] [illegible]ர். உடனே சீவகன் கண்ணீர்சொரிய, உரோமஞ்சிலிர்ப்ப, "[illegible] [illegible]ன்னைப் பெற்ற அடிகளும் உளரோ உளரோ" என்று பன்முறை [illegible]ன்றதிசை எங்கேயெங்கேயென்று கேட்டு, அத்திசையையே[illegible] [illegible]ங்குச்செல்லுங் கருத்[illegible] [illegible]கி விடை[illegible] [illegible]சென்றான்.

உடனே [illegible]

[illegible]ந்து வி[illegible]

[illegible]ராடும்

## [அ.—விமலையாரிலம்பகம்.]

சென்ற சீவகன் தோழரோடுந் தண்டகாரணியமடைந்து தன்வரவு நோக்கிக் கொண்டிருந்த விசயமாதேவியைத் தரிசித்து வணங்கிப் பேரானந்தமுற்முன். விசயையும் சீவகனை எடுத்துத்தழுவிப் பெரிதும் பாராட்டி அன்புறுவாளாயினள். இங் ஙனம் ஆறுதினஞ்சென்றன. பின்பு விசயை தோழருட் சிலரை வேறேயழைத்துச் சில உபாயங்களைக்கூறிப் பின்பு சீவகனை நோக்கி, "நின்மாமனாகிய கோவிந்தனைக் கண்டு, அவனேவலாற் பகையை வெல்லக்கடவை" என்ன, சீவகன், "உமதுகட்டளைப் படியே செய்வேன்" என்றுகூறி, ஆங்கிருந்த சில தவமகளிரோடும் விசயையை முன்னதாகத் தன்மாமனகரிற்கனுப்பிவிட்டுத் தான் குதிரையேறி எல்லாரோடும் ஏமாங்க தநாட்டைச்சார்ந்து இராசமாபுரத்தின் அருகேயுள்ள ஒருசோலையிற்றங்கி உண்டுறங் கியபின், மற்றைநாட்காலையிற் றோழரை அவ்விடத்தே வைத்துவிட்டுத் தான் மகளிர் விரும்புதற்குரிய ஒருவடிவங்கொண்டு, அந் நகரத்து வீதியிற்சென்முன்.

அப்பொழுது, தான்விளையாடிய பந்தினுளொன்று எழும்பிச்சென்று சீவகன்முன் னேவீழ அதனை எடுத்தற்குவந்த விமலையென்பவள் சீவகனைக்கண்டு வேட்கையதிகரிக்கப்பெற்று நெஞ்சங்கலங்கி நாணமகன்று வருந்துவாளாயினள். சீவகனும், அவள் பேரழகைநோக்கி அதிகமோகங்கொண்டு அப்பாற்செல்லமாட்டாது அவள்தந்தையாகிய சாகரதத்தனுடைய கடையிலே வருந்தியிருந்தான்.

சாகரதத்தன் தன்னிடத்துப் பலநாளாக விலையாகாதிருந்த சரக்கையெல்லாம் அப்பொழுதுவிற்று மிகவுமகிழ்ச்சியடைந்து சீவகனைச்சந்தித்து, அவனைநோக்கி, "நம் பனே! என்மனைவியாகிய கமலைபெற்ற விமலைக்குச் சாதகஞ்செய்யவந்த சோதிடரை நோக்கி, 'என்பண்டம் விலையாகாமைக்குக் காரணம்யாது' என்று வினவினேன்; அச்சோதிடருள் ஒருவன், 'நின்மகள் விமலைக்குரிய கணவன் நின்கடையில்வந்து தங்குவான்; அப்பொழுது எல்லாம் விலையாகும்' என்முன். அப்படியே நீவந்து தங்கியவுடன் எல்லாப்பண்டமும் விலையாயின; ஆதலால், நீயே விமலைகணவன்" என்றுகூறிச் சுபமுகூர்த்தத்திலே அவனுக்கு விமலையை மணஞ்செய்வித்தான். சீவ கன் அவளோடும் அவ்விடத்தே இரண்டுதினந் தங்கி மற்றைநாட் காலையில் எழுந்து சோலையிலுள்ள தோழரையடைந்தனன்.

## [கூ.—சுரமஞ்சரியாரிலம்பகம்.]

அப்பொழுது தோழர், சீவகனது மணக்கோலங்கண்டு மகிழ்ந்து "நீமணஞ்செ[illegible] ...ர்பெயர்கூறுக" என்ன, சீவகன் "விமலை" என்முன். கேட்டதோழர் மிகவ[illegible] ...னே காமனென்று" கூறினர். அவர் அங்ஙனங்கூறக்கேட்ட புத்திசே[illegible] ...க்கி, "இவர்களைப்போல யானும் நின்னை வியப்பேனல்லேன்; இ[illegible] ...ஒருமடந்தை சுரமஞ்சரியென்றுள்ளாள்; அவள், ஆடவர் தன்ம[illegible] ...[illegible] விடுவேனெனக் [illegible] ...ாதிற்பள்; அவளை மயக்க[illegible] ...திலக[illegible] ...றுசொல்ல, சீவகன் ...ாட்டத்தில் ...உடனே ...ாதிகப்

அப்பொழுது சீவகன் தன்முதுமையைக்கண்டு அச்சுறுத்தற்கஞ்சிய அவ் வாயில்காக்கு மகளிரைநோக்கி, "பசியால் மிக வருந்துகின்றேன்" என்றான். அம்மகளிர் விரைந்து சுரமஞ்சரியை யடைந்து "ஊதப்பறக்குந்தன்மையனாய் மிகுந்த பசியாளனாய் ஒரு விருத்தப்பிராமணன் நம் மனைவாயிலில் வந்துநிற்கின்றான்; அவனிடத்து யாஞ் செய்வதறிந்திலேம்; விரைந்துகூறுதி" என்ன, சுரமஞ்சரி "அம் மூப்புடையானைப்பாராப்பின் விரதங் குன்றுவதன்று" என்றெண்ணி மாடத்தினின்று மிறங்கிவந்து, அம்முதியோனைநோக்கி, "நீர்வந்தது என்னகாரியத்தைக்கருதி" என்றுவினவினள். அவன் "குமரியாட" என்றான். அவள் "அதனாற் பயனென்னை" என்ன, முதியோன் "இம் மூப்புப்போம்" என்றான். சுரமஞ்சரிகேட்டுநகைத்து "இவர் பித்தர்போலும்; இதுநிற்க; இவர்பசியைத்தீர்ப்பது பேரறம்" என்றெண்ணி, அம்முதியோனைத் தன்மாடத்தே யழைத்துச்சென்று ஸ்நாநஞ்செய்வித்துப் பொற்கலத்தைப் பரப்பி அறுசுவையடிசிலூட்டி முகவாசமீந்து கட்டின்மீதுள்ள பஞ்சணையிலே படுக்கச்செய்ய, அம்முதியோன் சிறிதுநேரம் உறங்குவான்போற்கிடந்து பின்னர் ஒருகீதத்தைப் பாடினான். கேட்டமகளிர் விம்மிதமுற்றனர். சுரமஞ்சரி நாணி நகைத்துக் கேட்டுக்கொண்டு நின்றனள்.

அங்ஙனம்நின்ற சுரமஞ்சரி, "இப்பாட்டுச் சீவகன்பாட்டை ஒத்துளது" என்று தோழியர்வியந்து சொல்லக்கேட்டு, "நாளைச்சென்று காமனைவழிபட்டு 'இப்பாட்டையுடைய சீவகனை விரைவிற்றருக' என்று வேண்டிக்கொள்வேன்" என்றுகூறி, மற்றைநாளில் தன்னுயிர்த்தோழியுடனே அவ் வேதியனையும் அழைத்துக்கொண்டு சகடமூர்ந்து, ஆடவர்காணாமற் காமன்கோட்டத்தை யடைந்து, தான்பரவுகின்றது கேளாதபடி கூடவந்த அந்தணனை ஆங்குள்ள ஓரறையில் வைத்துவிட்டுச் சென்று காமனைவணங்கி, "பூமலிமார்பனே! எனக்குச் சீவகனை விரைவிற்றரின் மகரக்கொடியும், அம்பும், கருப்புச்சிலையும், தேரும், ஊருந் தருவேன்" என்றுவேண்ட, ஒளித்திருந்த புத்திசேனன் "சீவகனை நீபெற்றாய்; இனி விரைவிற்செல்" என்றுசொல்ல, அதனை அவள் காமத்தெய்வம் வாய்விட்டுக் கூறியதாகவே யெண்ணிப் பின்னும் பரவி மீண்டுவந்து அறையிடத்தே உரிய வடிவுகொண்டுநின்ற சீவகனை நெஞ்சுதுணுக்கெனக்கண்டு நாணி நைந்துநிற்ப, சீவகன் மிக்க காதலுடையனாய்ச் சுரமஞ்சரியைத் தழுவி "நின்னை நாளைமணஞ்செய்வேன்" என்றுவிடுப்ப, அவள் தன்மனையை யடைந்தனள்.

தோழர் இச்செய்தியைப் புத்திசேனனாற் றெரிந்துகொண்டு சீவகனைக் "காமதிலகன்" என்று புகழ்ந்தனர். நிகழ்ந்த இச்செய்தியைச் சுரமஞ்சரிதாயாகிய சுமதியும் தந்தையாகிய குபேரதத்தனுங்கேட்டு மகிழ்ந்து [illegible]ரத்திற்கெல்லாமறிவித்துச் சீவகனுக்குச் சுரமஞ்சரியை மணஞ்செய்வித்தனர். சீவகன் அவளோடும் அன்று அவ்விடத்தே தங்கியிருந்து, மற்றைநாளெழுந்து தோழர்சூழத் தன்மனையை யடைந்து, தன் குதிரைமுதலியவற்றைநோக்கித் தன்னையேநினைந்து அழுது புலம்பியுருகிக்கொண்டிருக்கின்ற சுநந்தையையும் கந்துக்கடனையுங்கண்டு வணங்கி, அவர்கள் வருத்தத்தைப் போக்கி, மற்றையோரை மகிழ்வித்து, காந்தருவதத்தையைக் கண்டு, குணமாலையைத் தேற்றி, மேல்முடியுங் காரியங்களைக் கந்துக்கடனுக்குக் கூறி, விடைபெற்று, குதிரைகொள்ளும்வாணிகன்போல வேடம்பூண்டு, தோழர்சூழ ஏமாங்கதநாட்டைக்கடந்துசென்றான்.

## [க0.—மண்மகளிலம்பகம்.]

அங்ஙனஞ்சென்றசீவகன் விதையநாட்டையடைந்து நகரத்தார் எதிர்கொண்டு விரும்பச் சென்று தன்மாமனாகிய கோவிந்தராசனை வணங்கினான். கோவிந்தராசன் மகிழ்ந்து விருந்துசெய்வித்துச் சீவகனுக்கு மேல் நடத்தவேண்டுவனவற்றை யெண்ணித் தன்மகனாகிய ஸ்ரீதத்தனுக்குச் சுபகாலத்திலே அரசளித்து எல்லாரோடுமிருக்கையில், தன்னை இராசமாபுரத்து வரும்படிவேண்டித் தன் கருத்தறிதற்பொருட்டு வணக்கமுடையவன்போலே தனக்குக் கட்டியங்காரனனுப்பிய வஞ்சகவோலையை விரிசிகனென்பவன் படிப்பவறிந்து, "கட்டியங்காரனைக் கொல்லுதற்குரிய உபாயம் இதுபோல வேறொன்றுமில்லை" என்று சீவகன்கூறக் கேட்டு, நால்வகைச் சேனையோடும் புறப்பட்டு இராசமாபுரத்தின் பக்கத்தே வந்து தங்கினான். அப்பொழுது கட்டியங்காரனுக்குத் துர்நிமித்தங்கள் நிகழ்ந்தன.

அவைநிகழ்ந்தபின், கோவிந்தன் கட்டியங்காரனைக் கபடமாக வருவிக்கவெண்ணித் திரிபன்றியந்திரமொன்று செய்வித்து, "இவ்யந்திரப்பன்றியை எய்துவீழ்த்தியவனே என்மகள் இலக்கணைக்குக் கணவனாவான்" என்று பிரசித்தஞ்செய்தான். அதுதெரிந்த கட்டியங்காரனும், பலதேயத்தரசரும் அவ்விடத்தே வந்துகூடி அந்த யந்திரத்தைநோக்கி வியப்புற்றனர். பின்பு இலக்கணையை விரும்பிய அரசிளங்குமரர் தனித்தனியேவந்து வில்லைவளைத்து அம்புதொடுத்து அப்பன்றியை எய்துவீழ்த்தமாட்டாதவராய் மெலிவடைந்தனர். அப்பொழுது சீவகன் யானைமேற்கொண்டு வெளிப்பட, அவனை இறந்தானென்று கருதியிருந்த கட்டியங்காரன் கண்டு துணுக்குற்றுப் புலியைக்கண்ட மான்போலே யஞ்சிக் கலக்கமுற்றான். சீவகன் யானையினின்றுமிறங்கி அவ்யந்திரத்திலுள்ள சக்கரத்தின்மேல் ஏறிநின்று வில்லைவளைத்து அம்புதொடுத்து அப்பன்றியை வீழ்த்தினன்.

அப்பொழுது கோவிந்தன் கட்டியங்காரனுக்கும் மற்றையோருக்கும் சீவகனை இன்னானென்று விளங்கக் கூறினன். அதன்பின்பு ஆகாயத்திடத்தே ஓரியக்கன் றோன்றிச் "சீவகனாகியசிங்கம் கட்டியங்காரனாகிய கரியினுயிரை விழுங்கும்" என்று கூறக்கேட்டுக் கட்டியங்காரன் மிகச்சினந்து சீவகனைநோக்கி, "நினக்கு ஒருபொழுதும் அஞ்சுவேனல்லேன்; எனது ஆற்றலை நின்றந்தையறிவன்; நீயறியாய்; நின்னையும் என்னைக் கபடமாக வருவித்துக்கொல்லத் துணிந்த நின்மாமனையும் வெல்லும் விருப்புடையேன்; போர்செய்தற்கு எழுக" என்றுசொல்லித் தன்மக்கள் நூற்றுவரோடும் மற்றை அரசர்களோடுங்கூடி யுத்தசந்நத்தனாக, சீவகனும் தோழரோடும் தம்பிமாரோடும் மற்றை அரசரோடும் புறப்பட, அவ்விருதிறத்தார் சேனையும் எதிர்த்துநின்று போர்செய்தன. சீவகன்படைவீரராற் கட்டியங்காரன்படைவீரரிற் சிலர் மாய்வுற்றனர்; சிலர் தோற்றோடினர். பின்பு சீவகன் கட்டியங்காரன் புதல்வர் நூற்றுவரையும் பதுமவியூகம்வகுத்து அதனுள்ளேயிருந்த அவனையுங் கொன்று விளங்கினான். எல்லாரும் புகழ்ந்தனர். விசயைகேட்டு மகிழ்ந்தனள்.

## [கக.—பூமகளிலம்பகம்.]

பின்பு சீவகன் இராசமாபுரமடைந்து மாளிகைபுகுந்து, தன்னைக் கண்டொடுங்கிய கட்டியங்காரன் பரிசனங்களுக்கு அபயமளித்து, வேண்டும்பொருள்களும் விருத்தியுமுதவி, அவர்விருப்பின்படி உரியவிடங்களுக்குப் போகச்செய்து, பின்பு எல்லாவிடங்களையுங் கண்ணுற்று முத்திரைவைத்துக் காவலிட்டு, யுத்தவீரர்களை இளைப்

பாறச்செய்து மகிழ்வித்து, வேத்தவைசார்ந்து சுபகாலத்திலே சிங்காசனத்தில் வீற்றிருந்து மணிமுடிசூடி, கட்டியங்காரனாற் றுன்பமுற்ற யாவரையும் இன்பமுறுவித்து, நீதிநெறியை நடாத்தி அரசியற்றுவானாயினன்.

## [கஉ.—இலக்கணையாரிலம்பகம்.]

பின்பு அவன் தன்னருகிலுள்ளாரை நோக்கிப் "பதுமைமுதலிய தேவியரை அழைத்துவருவீர்" என்ன, அவர் உடனே ஆங்காங்குச் சென்று அவர்களை யழைத்துவந்தார். வந்தமங்கையர் சிவகனைத் தொழுதுவணங்கி, அவனால் அங்கீகரிக்கப்பட்டுப், பெருமகிழ்ச்சியோடிருந்தனர்.

அப்பாற் கோவிந்தராசன் இலக்கணையைச் சிவகனுக்கு மணஞ்செய்விக்கக் கருதிக் கணிதர்களால் விவாகமுகூர்த்தம் வரையறைசெய்து முரசறைவித்து நகரையலங்கரிப்பித்து, குறித்த முகூர்த்தத்தில் விதிப்படி சிவகனுக்கு இலக்கணையை மணஞ்செய்வித்தான். பின்பு சிவகன் எல்லாருங்கண்டு மகிழும்படி நகர்வலமாகப் பவனிவந்து, ஆலயமடைந்து அருகக்கடவுளை வலஞ்செய்து ஏத்தித் தொழுது, அக்கடவுளுக்கு நூறு ஊர்கள் முதலியவற்றைச் சேர்ப்பித்துத் தன்மாளிகையடைந்து சிங்காசனத்திருந்து செங்கோல்செலுத்தி அரசுபுரிவானாயினன்.

அங்ஙனம் அரசுபுரிகின்ற சிவகன் தன்னை வருந்திவளர்த்த கந்துக்கடனுக்கு இதற்குமுன்னில்லாத அரசுரிமையையும் சுநந்தைக்குத் தேவிபட்டத்தையுங் கொடுத்தான்; நந்தட்டனை இளவரசாக்கினன்; நபுலவிபுலர்க்குக் குறுநிலமன்னர்மகளிரை மணஞ்செய்வித்து நாடுகளையும் நல்கினன்; தன்றோழர்க்கு அரசையும் ஏனதிமோதிர முதலியவற்றையும் ஈந்தான்; தன்னிமித்தம் வருந்திய பிறர்க்கு அமைச்சரைக்கொண்டு நிதியையும், நாட்டையுங் கொடுப்பித்தான்; தன்னை வருந்திவளர்த்த செவிலித்தாயர்க்கு நாடோறும் ஆயிரம்பொன் இறை தண்டுதற்குரிய ஐந்துகிராமங்களைக்கொடுத்தான்; மாமனாகிய கோவிந்தனுக்குக் கட்டியங்காரனுடைய பொருள்களையெல்லாம் உதவினன்; தனக்குப் பேருதவிபுரிந்த சுதஞ்சணனுக்குக் கோயில்சமைப்பித்து, அவன்வடிவைப் பொன்னாலியற்றி, ஒருநாளும் நிலைபெறுத்தி, அவன் சரிதத்தை ஒருநாடகமாகச்செய்து நடத்தினன். இனிப் பெருதார் யாரென்று சிந்தித்து, இளமைப்பருவத்தே தான் விளையாடிக்கொண்டிருந்த ஓர் ஆலமரத்திற்கு அதற்கேற்ப மாலையணிந்து பீடஞ்சேர்த்தி ஐந்தூரை அதற்கு இறையிலியாகவிட்டான். இன்னும் இவ்வாறு செய்யவேண்டுவனவெல்லாஞ் செய்துமுடித்துத் தேவிமாரெண்மரோடுங் கூடி மகிழ்வுற்றுச் செங்கோல் செலுத்திக்கொண்டு வருநாளில், உலகஞ் செழிப்புற்றது; யாவரும் இன்புற்றனர்; எல்லாவுயிர்களும் மகிழ்வடைந்தன.

## [கங.—முத்தியிலம்பகம்.]

அப்படிநிகழும்பொழுது, ஒருநாள் விசயை, தவப்பள்ளியினின்றுந் தனக்குத் துணையாகப்போந்த தவமகளிர்க்குக் கைம்மாறில்லையேயென்றெண்ணி அருகக்கடவுளுக்குக் கோயில்சமைப்பித்துப் பூசைசெய்து, அப்பூசையின் பயனையெல்லாம் அவர்களுக்குக் கொடுத்தனள்; முன்பு சண்பகமாலைபோல் வந்து தன்னிடரைத்தீர்த்துத் தன்னைத் தாபதப்பள்ளியிலே சேர்த்துப் பாதுகாத்த தெய்வத்திற்கு அதுதங்கும் புறங்காட்டிலே கோயில்சமைப்பித்தாள்; தன்னை யெடுத்துப்போந்த மயிற்பொறியைத் தான் எப்பொழுதுங் காணும்படி தானுறையுமாடத்தே யெழுதுவித்தாள்; சிவகன்

பிறந்தவிடம் சுடுகாடாகக் கிடவாதபடி சாலையாக்கி, அவ்விடத்து ஐந்நூற்றைந்து பிள்ளைகளுக்கு நாடோறும் பாலும் அன்னமும் உண்பிக்கும்படி செய்வித்தாள்; சுநந்தைக்கு உபசாரமொழிகூறி மேம்பாடுறுவித்தாள்; தன்னைவணங்கிய காந்தருவதத்தைமுதலிய எண்மரையும் எடுத்துத்தழுவி, "உலகாளுஞ்சிறுவனைப் பெறக்கடவீர்" என்று பணித்தாள்.

இங்ஙனம் தான் செய்யவேண்டியவற்றைச் செய்துமுடித்துப் பின்னர்ச் சீவகனையழைத்து அருகேயிருத்தி அவனுக்குத் தருமோபதேசஞ்செய்து தான் துறக்கவெண்ணியதைத் தெரிவித்து உடம்பாடுபெற்றுச் சிவிகையேறிச் சுநந்தையோடும், துறக்கவிரும்பிய மற்றைமகளிரோடுஞ் சமீபத்துள்ள ஒருதவப்பள்ளியைச்சார்ந்து, ஆங்குத் தவஞ்செய்துகொண்டிருக்கும் பம்மையென்பவளைத்தொழுது, "அடிகளே! எம்மையெல்லாம் பிறவிக்கடலினின்றுங் கரையேற்றுவீர்" என்று பிரார்த்தித்து, அவள் கூறிய அறமொழிகேட்டுத் தீக்ஷைபெற்று விதிப்படிதுறந்து அவ்விடத்தே தவஞ்செய்துகொண்டிருந்தாள்.

அவள் அவ்வாறிருக்க, பின்பு ஒருநாள் சீவகன் அத் தவப்பள்ளியைச் சார்ந்து, விசயை, சுநந்தை இருவரையுந் தரிசித்துவந்து, தேவிமாரெண்மரோடும் நீர்விளையாட்டுநிகழ்த்தி, இளவேனில்முதலிய ஒவ்வொருபருவத்திலும் அவர்களோடும் இன்பநுகர்ந்து செல்லாநிற்கையில், தேவியரெண்மரும் கருப்பமுற்றுத் தனித்தனியே ஒவ்வொரு புத்திரனைப்பெற்றார் காந்தருவதத்தை, குணமாலை, பதுமை, கேமசரி, கனகமாலை, விமலை, சுரமஞ்சரி, இலக்கணை யென்னுந் தேவியர்புதல்வரெண்மருக்கும் முறையே சச்சந்தன், சுதஞ்சனன், தரணி, கந்துக்கடன், விசயன், தத்தன், பரதன், கோவிந்தனென்று பெயர்களிடப்பட்டன. அப்புதல்வர் வளர்வுற்று, ஐந்தாவது பிராயத்தில் வித்தியாரம்பஞ் செய்யப்பெற்று, முறையே கலைகள்கற்று, படைக்கலம் பயின்று, ஊர்திகளூர்ந்து மேன்மையடைந்தார். அப்பொழுது சீவகனுக்கு நாற்பத்தைந்தாவது பிராயஞ்சென்றது

பின்னர் ஒருநாள் மல்லிகைமாலையென்பவள்வந்து சீவகனைவணங்கி, "அரசே! சோலை நிறையப்பூத்து அழகெய்தியது; அதனைக் கண்டருள்க" என்ன, சீவகன் தேவியர்சூழ அச் சோலையையடைந்து எல்லாவளங்களையுந் தான்கண்டு தேவியர்க்குக் காட்டி ஒருபலாமரத்தின் நீழலையடைந்து ஒருபக்கத்திருந்தான். அப்பொழுது அவ்விடத்தே ஓராண்குரங்கு தன்னோடுபிணங்கிய தன்காதன்மந்தியை மகிழ்விக்கும்பொருட்டுப் பலாப்பழமொன்றையெடுத்துக் கீறிச் சுளைகளை அதற்குக்கொடாநிற்கையில், அச் சோலைகாப்பானாகிய ஒருவன்வந்து அக் கனியைக்கவர்ந்து அக்கடுவனையும் மந்தியையும் ஓட்டித் தான் உண்டு மகிழ்ந்தான். அதனை ஆங்கிருந்த சீவகன் கண்டு செல்வத்தில் மிகவுமருவருப்புற்று, "கைப்பழமிழந்தமந்தி அரசையிழந்த கட்டியங்காரனையொத்தது; இச் சிலதன், அக் கட்டியங்காரனைத் துரந்து அரசையெய்திய என்னையொத்தனன். வலியான் கவர்ந்துநுகர்தற்குரிய இச்செல்வத்தால் அடையும்பயனென்னை" என்றெண்ணித் துறக்குஞ்சிந்தையனாய்த் தன்மாளிகையடைந்து ஸ்நானஞ்செய்து அறுசுவையடிசிலுண்டு முகவாசங்கொண்டு தேவிமார்களோடுங் கோயிலைச்சார்ந்து அருகக்கடவுளைவணங்கித் துதித்து வலமாக வந்தான்.

வந்தவன் அவ்விடத்து அசோகமரத்தின்கீழே பளிக்குக்கன்மேலே சாரணரிருவர்இருப்பக்கண்டு, அவரைத் தரிசித்து வணங்கி வாழ்த்தி, அவரைநோக்கி, "அடிகளே! பிறப்பினையொழிக்கும் வழியறியாதேன் பலபிறப்புக்களிலுஞ் செய்துகொண்ட தீவினைகெடும்படி தவஞ்செய்து ஞானத்தையடையுமாறு அருளுமின்" என்று

பிரார்த்திக்க, அவருள் இரத்தினப்பிரபையென்பவர், "அரசனே! கேட்பாய்" என்று, தவத்தாற் பெறுகின்ற மக்கள்யாக்கையையும், அந்தயாக்கை நூறியாண்டும் நிலைபெற்றுநில்லாது கருப்பமுதலாக அழிகின்ற அழிவையும், நரககதி விலங்குகதி மக்கட்கதி தேவகதியென்கின்ற நாற்கதித்துன்பத்தையும், துணியப்படும் பொருளையும், அப்பொருளைத் துணியுந்துணிவையும், சீலத்தையும், தானத்தையும், அச்சீலத்தாலுந் தானத்தாலும் பெறப்படும் பயனையும், வீட்டிலக்கணத்தையும் விளங்க விரித்துக்கூறினர். யாவற்றையும் சீவகன் விரும்பிக்கேட்டு, "சுவாமீ! அடியேனுடைய முற்பிறப்பையும், அப் பிறப்பிற்செய்த பாவத்தையும் அருளிச்செய்க" என்ன, அவர் கூறுவாராயினர்.

"தாதகியென்பதொருநாட்டிற் பூமிமாதிலகமென்னுநகரில் அரசன் பவணமாதேவனென்பான்; அவன்மனைவி சயமதியென்பாள்; அவர்புத்திரன் அசோதரனென்பான். அவனுக்குத் தந்தைதாயர் இலக்கணமமைந்த மகளிரை மணஞ்செய்விக்க, அவ்வசோதரன் அம்மனைவிகளோடும் இன்புற்றுறைகுநாட்களிலே, ஒருநாள் அவன் அம்மனைவியரோடும் நீர்விளையாடுதற்கு ஒருதடாகத்தை அணுகியபொழுது, அவன் மனைவியர் ஆங்குள்ள தாமரைமலரில் ஒளித்திருக்கும அன்னக்குஞ்சுகளைக்கண்டு "இவற்றைப் பிடிப்பித்துத்தருக" என்று அவனைவேண்ட, அசோதரன் தன்னருகேநின்ற ஏவலாளனொருவனைக்கொண்டு, அவற்றுளொன்றைப் பிடிப்பித்து அம்மாதர்களுக்குக்கொடுத்தனன். அவர்கள் அதற்குப் பாலூட்டித் தமதுமார்போடணைத்துப் பாதுகாத்துவந்தார். இதனை ஒருநாட் பவணமாதேவன் கண்டு, நடுநடுங்கி, அசோதரனால் விளைந்தமை தெரிந்து, சினந்து, அவனைவருவித்து, நேரேயிருத்திப் பலவறம்போதித்து, மைந்தனே! பறவைகளையும், மிருகங்களையுந் தங்கிளையினின்றும் பிரித்துக் காவல்செய்து வைத்தோர், மறுமையில் தாமுந் தங்கிளையினின்றுநீங்கிப் பிறராற் காவல்செய்யப்படுவர்" என்றுகூற, அசோதரன்கேட்டு மிகவுமஞ்சி, அவ்வன்னப்பார்ப்பைத் தன்மனைவியரிடத்தினின்றும் விடுவித்து, அன்று பிடித்த தடாகத்தே போகவிட்டுத் தந்தையைப்பணிந்து, "அடியேன் துறந்து தவஞ்செய்வல்" என்ன, அரசன், "மைந்தனே! உலகைக்காத்துப் பின்துறவினையடைதி" என்று வற்புறுத்திக்கூற, அதனை அவன் மனங்கொள்ளானாய்த் தந்தையை யுடன்படுவித்து விடைபெற்றுத் துறவிற்சென்றான். அவ்வசோதரன் நீயே" என்றுகூறி மேற்செய்தி கூறுஞ் சாரணர், "அங்ஙனந் துறவிற்சென்றநீ தவஞ்செய்து மறுமையில் ஸகஸ்ராரமென்னுங் கற்பத்து இந்திரனாய் அரசுபுரிந்து இங்கே அவதரித்தாய்; அன்னப்பார்ப்பைக் கிளையினின்றும் பிரித்துச் சிறைவைத்தமையால் நீயுங் கிளையினின்றும் பிரிந்து சிறைகொள்ளப் பட்டாய்" என்று கூறக்கேட்டு அஞ்சிப் பதைபதைத்துத் துறக்குஞ்சிந்தையனாய்ச் சீவகன் அவரைவணங்கித் துதித்தான். அப்பொழுது அச் சாரணரிருவரும் எழுந்து விசும்பாறாகத் தாங் குறித்தவிடஞ்சென்றார்.

உடனே சீவகன் தேவிமாரோடுந் தன்மாளிகையடைந்து தன்கருத்தை யாவருமறியக்கூறி, நந்தட்டனையழைத்து "நீயிவ்வுலகாள்வாய்; நான் துறப்பேன்" என்ன, அவன், "இவ்வற்ப வாழ்வைவேண்டேன்; நின்றிருவடியை வழிபட்டுவாழும் வாழ்வையன்றோ அடியேன் வேண்டுவது" என்றான். பின்பு தன்புதல்வன் சச்சந்தனையழைத்து அவனுக்கு இராசதருமங்கள் பலவற்றையுங்கூறி மணிமுடிசூட்டி அவனையரசாக்கி, தம்பிமார்புதல்வருக்கும், தோழர் புதல்வருக்கும் உரிய சிறப்புக்களியற்றி, தான் துறத்தல்கேட்டுப் பிரிவாற்றாது "யாமும் நின்னொடு துறப்பேம்" என்று கூறிய தேவிமாரெண்மரையும் விசயைபாற் சேர்த்துத் துறப்பித்து, தன்பிரிவையெ

ண்ணித் தேயத்தாரும், நகரத்தாரும், மற்றையாரும் விம்மிவிம்மிப் பிரலாபித்தழவுந் தான் ஒருவரையும் நோக்கானாய்த் தேவர்கள் தாங்கிச்செல்லுஞ் சிவிகையூர்ந்து சமவசரணமடைந்து ஸ்ரீவர்த்தமானசுவாமிகளைத் தரிசித்துச் சுதன்மரென்னுங் கணதரரால் விதிப்படியே துறந்து விபுலகிரியில் தவஞ்செய்து கருமக்ஷயம்பண்ணி யாவருக்குந் தருமோபதேசஞ்செய்து எல்லாவுலகத்திற்கும் உச்சியிலுள்ளதாகிய சித்தக்ஷேத்திரத்தையடைந்து வீடுபெற்றான்.

பின்பு அவன்மேனி அக்கினியிந்திரனாற் கருப்பூரவிநாசம்போலே மறைந்தபின்பு, எல்லாவுலகத்தாருங்கூடிப் பஞ்சகல்யாணத்துள் ஒன்றாகிய பரிநிர்வாணமென்னுங் கல்யாணத்தை விதிப்படி செய்தார்கள்.

தேவிமாரெண்மரும் தவஞ்செய்து மறுமையில் இந்திரராய் இன்புற்றனர். நந்தட்டனும், தோழருந் தவஞ்செய்து மறுமையிற் றேவராய்ச் சுவர்க்கம்பெற்றனர்.

சீவகன்சரித்திரச்சுருக்க முற்றிற்று.



# அபிதானவிளக்கம்.



அச்சணந்தி - சீவகனாசிரியன்.

அசலகீர்த்தி-கனகமாலையின் சகோதரரு ளொருவன்.

அசலன் - புத்திசேனன்பிதா.

அசனிவேகம் - அரசன்பட்டத்துயானை.

அசோதரன் - சீவகனுடைய பூர்வசன்ம நாமதேயம்.

அநங்கமாலை - ஓர்நாடகப்பரத்தை.

அநங்கவிலாசினி - கனகமாலைதோழி

அரணபாதம் - சிறையமுள்ள ஓர்மலை.

அருஞ்சயன் - விசயைபாட்டன்.

அலங்காரமாலை - இலக்கணைதோழி.

ஆரியநந்தி - சீவகனாசிரியன்.

இராசமாபுரம் - சீவகனகர்

இலக்கணை-சீவகன்மனைவிகளுளொருத்தி

உருத்திரதத்தன் - சச்சந்தன்மந்திரி.

உலோகமாபாலன் - சீவகனாசிரியன்; பது மைசகோதரன்.

ஏமமாபுரம் - தடமித்தனகர்.

ஏமாங்கதம் - சீவகனாடு.

ஐஞ்ஞூற்றுவர் - சச்சந்தனது அகப்பரிவா ரமகளிர்; இவர்கள்புதல்வரும் சீவகன் தோழருமாகியவீரர்.

கட்டியங்காரன் - சச்சந்தன்மந்திரி, இவ ன் சச்சந்தனைக்கொன்று இராச்சியத் தைக் கவர்ந்துகொண்டவன்.

கதம்பன் - கனகமாலையின் சகோதரரு ளொருவன்.

கந்துக்கடன் - சீவகனை வளர்த்தவணிக ன்; சீவகன்புதல்வருளொருவன்.

கமலை - விமலைதாய்.

கலுழவேகன் - காந்தருவதத்தைபிதா, இ வன் வெள்ளிமலையிலுள்ள வித்தியா தரராசன்.

கனகபதாகை - சுரமஞ்சரிதோழி.

கனகமாலை - சீவகன் மனைவிகளுளொரு த்தி.

கனகமாலையின்சகோதரராவர்:—

க. விசயன்.

உ. கதம்பன்.

ங. கனகன்.

ச. அசலகீர்த்தி.

ரு. சேனன்.

கனகன் - கனகமாலையின் சகோதரரி லொருவன்.

காந்தருவதத்தை - சீவகன் மனைவிகளு ளொருத்தி.

காமினி - ஆகாசகாமினியென்னும் ஓர் வித்தை.

குணமாலை - சீவகன் மனைவிகளுளொரு த்தி.

குபேரதத்தன் - சுரமஞ்சரிபிதா.

குபேரமித்திரன் - குணமாலைதந்தை.

குருகுலம் - சீவகன்பிறந்தகுலம்.

குருதத்தை - ஸ்ரீதத்தன் (சீவகன்தோழ ன்) தாய்.

கூனி - சண்பகமாலை.

கேமசரி - சீவகன் மனைவிகளுளொருத்தி.

கேமமாபுரம் - சுபத்திரனூர்.

கோதாவரி - நந்தகோன்மனைவி.

கோவிந்தன் - விசயைசகோதரன்; நந்த கோன்; சீவகன் புத்திரருளொருவன்.

கோவிந்தை - நந்தகோன்புதல்வி, இவள் பதுமுகன்மனைவி.

சங்கவெண்மலை - சுதஞ்சணன்மலை.

சச்சந்தன் - சீவகன்பிதா; சீவகன்புதல்வ ருளொருவன்.

சண்பகமாலை-விசயைதோழியாகியகூனி.

சந்திராபம் - தனபதிநகர்.

சந்திரோதயம் - சுதஞ்சணனகர்.

சயமதி - பவணமாதேவன்மனைவி.

சலநிதி - சீவகன்றோழர் ஐஞ்ஞூற்றுவருளொருவன்.

சாகரதத்தன் - விமலைபிதா.

சாகரன் - ஸ்ரீதத்தன் (சீவகன்றோழன்) பிதா.

சீதத்தன் - இராசமாபுரத்துள்ள ஓர்வணிகன், இவன் வெள்ளிமலையிலிருந்து காந்தருவதத்தையை அழைத்துவந்தவன்; சீவகன்றோழருளொருவன்; கோவிந்தமகாராசன்பிதா; கோவிந்தமகாராசன் புத்திரன்.

சீவகன் - இக்காப்பியத்தலைவன்.

சீவகன் புத்திரரெண்மர்:—

| | |
|---|---|
| க. சச்சந்தன். | ரு. விசயன். |
| உ. சுதஞ்சணன். | சு. தத்தன். |
| ங. தரணி. | எ. பரதன். |
| ச. கந்துக்கடன். | அ. கோவிந்தன். |

இவ்வெண்மரும் முறையே காந்தருவதத்தை முதலிய எண்மரிடத்தும் பிறந்தோர்.

சீவகன் மனைவிகளெண்மர்:—

| | |
|---|---|
| க. காந்தருவதத்தை. | ரு. கனகமாலை. |
| உ. குணமாலை. | சு. விமலை |
| ங. பதுமை. | எ. சுரமஞ்சரி. |
| ச. கேமசரி. | அ. இலக்கணை. |

சீவகன் றோழரைஞ்ஞூற்றுநால்வர்:— சீதத்தன், புத்திசேனன், பதுமுகன், தேவதத்தன் ஆகிய இந்நால்வரும், ஐஞ்ஞூற்றுவரும். [ஐஞ்ஞூற்றுவர் - அகப்பரிவாரமகளிர் ஐஞ்ஞூற்றுவருடைய புத்திரர்.]

சுதஞ்சணன் - சீவகனுபதேசத்தால் நாய்ப்பிறப்பொழிந்து இயக்கவடிவம் பெற்றோன்; குணமாலைபுதல்வன்.

சுதன்மர் - பதினொருகணதரரிலொருவர், இவர் சீவகன் சரித்திரத்தைச் சேணிகமகாராசனுக்கு முதலிற் கூறியவர்.

சுநந்தை - சீவகனை வளர்த்த தாய்.

சுபத்திரன் - கேமசரி பிதா.

சுமதி - சுரமஞ்சரி தாய்.

சுரமஞ்சரி-சீவகன்மனைவிகளுளொருத்தி.

சுரமை - சுரமஞ்சரி.

சேணிகமகாராசன் - மகததேயத்தரசன்.

சேனன் - கனகமாலை சகோதரருளொருவன்.

தக்கநாடு - கேமமாபுரத்தையுடையதேயம்

தடமித்தன் - கனகமாலை பிதா.

தத்தன் - சீவகன்புத்திரருளொருவன்.

தரணி - சீவகன் புத்திரருளொருவன்.

தரன் - கலுழவேகனிடத்துள்ள ஓர்வித்தியாதரன், இவன் கப்பல் முழுகியது போல் ஒருமாயஞ்செய்து ஸ்ரீதத்தனைக் கலுழவேகன்பால் அழைத்துச் சென்றவன்.

தருமதத்தன் - சச்சந்தன் மந்திரி.

தனபதி - பதுமை பிதா.

தனபாலன் - பதுமுகன் தந்தை.

தாதகி - பவணமாதேவன்றேயம்.

தாரணி - கலுழவேகன் மனைவி.

திலோத்தமை - பதுமைதாய்; புத்திசேனன்றாய்

தெய்வம் - விசயைக்கு உதவிசெய்தற்குக் கூனியாகிய சண்பகமாலை வடிவுகொண்டுவந்த தெய்வம்.

தேசிகப்பாவை - ஓர் பரத்தை.

தேவதத்தன் - சீவகன்றோழா நால்வருளொருவன்

நந்தகோன் - பசுத்தலைவன்.

நந்தட்டன் - கந்துக்கடன் புதல்வன், இவனைச் சீவகன் தம்பியென்று கூறுவர்.

நபுலவிபுலர் - சீவகன் றம்பிமார், இவர்விசயையின் புதல்வரல்லர்,காமக்கிழத்தியரிடத்துச் சச்சந்தனுக்குப் பிறந்தோர்.

நரபதிதேவன் - கேமமாபுரத்தரசன்.

நரதேவன் - தடமித்தன்.

நளினை - கனகமாலைதாய்.

நாகமாலை - சச்சந்தனது அகப்பரிவாரத்துள்ளாளொருத்தி.

நிப்புதி - கேமசரி தாய்.

நிமித்திகன் - சச்சன்மந்திரி.

நூற்றுவர் - கட்டியங்காரன் புத்திரர்.

பஞ்சநமஸ்காரம் - ஐந்துமந்திரம்.

பஞ்சவர் - சந்திர ஆதித்திய கிரக நக்ஷத்

திர தாரகைகள், இவர்களை ஜ்யோதிஷ்கரென்பர்.

பதுமுகன் - சீவகன்றோழர் நால்வரிலொருவன்.

பதுமை - ஸ்ரீதத்தன்மனைவி; சீவகன்மனைவிகளுளொருத்தி.

பம்மை - ஓர் தவப்பெண்.

பரதன் - சீவகன்புதல்வரிலொருவன்.

பல்லவதேயம் - தனபதிநாடு.

பவணமாதேவன் - அசோதரன்பிதா.

பவித்திரை - பதுமுகன்றாய்.

பன்றிப்பொறி - இலக்கணையின் விவாகத்தின் பொருட்டுக் கோவிந்தமகாராசனால் இயற்றுவித்த வராகயந்திரம்.

பாணிமுகம் - உயிர்போமுகங்களிலொன்று.

பிரீதிமதி - தேவதத்தன்றாய்.

புத்திசேனன் - சீவகன்றோழா நால்வருளொருவன்.

புதவி - கோவிந்தமகாராசன் மனைவி.

பூமிமாதிலகம் - பவணமாதேவனகா.

பூரணசேனன் - கட்டியங்காரன்படைத்தலைவன்.

மத்திமதேயம் - தடமித்தன் றேயம்

மதனன் - கட்டியங்காரன் மைத்துனன்.

மதிதரன் - தனபதி மந்திரி.

மதிமுகம் - ஒருவித்தை.

மயிற்பொறி - விசயை ஊர்ந்துசென்றயந்திரமயில்.

மன்மதன் - மதனன் தம்பி.

மாலை - குணமாலைதோழி.

வசுந்தரி-தடமித்தன் கோயிலிலுள்ள ஓர் வேலைக்காரி.

வளையசுந்தரம் - தடமித்தன் பட்டத்துயானை.

வனகிரி - சிறுலையமுள்ள ஓர்மலை.

வாரணவாசி - அச்சணந்தி ஆசிரியனகர்.

விசயதத்தன் - தேவதத்தன்றந்தை.

விசயன் - கனகமாலை சகோதரருளொருவன்; சீவகன்புத்திரருளொருவன்.

விசயை - சீவகன் நற்றாய்.

விநயமாமாலை - குணமாலைதாய்.

விமலை - சீவகன் மனைவிகளுளொருத்தி.

விலாசி - இலக்கணைதோழி.

வீணாபதி - காந்தருவதத்தைதோழி.

வெள்ளிமலை - கலுழவேகன்மலை.

யவதத்தன் - ஸ்ரீதத்தன் பிதா.

# இலம்பகவகராதி.

பக்கம்.





"மூவாமுதலா" என்னுங் கவியின் உரையில் எழுதப்பட்டுள்ள அளவியற்சந்தம் முதலியவற்றின் இலக்கணங்களாவன :—

க.—தனித்தனியே நான்கெழுத்துச்சிறுமையும் இருபத்தாறெழுத்துப் பெருமையும்பெற்று, எழுத்தளவொத்து, குருவும் இலகுவும் ஒத்த அடிகளால் வருவன அளவியற்சந்தம்.

உ.—குருவும் இலகுவும் ஒவ்வாதனவாய் மற்றவை ஒத்த அடிகளால் வருவன அளவழிச்சந்தம்.

ங.—இருபத்தாறெழுத்துமுதலாக எழுத்தளவொத்து, குருவும் இலகுவும் ஒத்த அடிகளால் வருவன அளவியற்றண்டகம்.

ச.—குருவும் இலகுவும் ஒவ்வாது மற்றவை ஒத்துவருவன அளவழித்தாண்டகம்.

ரு.—சந்தவடியும் தாண்டகவடியும் ஒத்து வழங்குவன சமசந்தத்தாண்டகம்.

சு.—சந்தவடிமிக்கும் தாண்டகவடிமிகாதும் வருவன சந்தத்தாண்டகம்.

எ.—தாண்டகவடிமிக்கும் சந்தவடிமிகாதும் வருவன தாண்டகச்சந்தம்.

"ஈரிரண் டாதி யிருபத்தா றந்தமாச்
சாரு மெழுத்தின சந்தமாஞ்—சீரொத்த
மூவொன்ப தாதியாய் முற்றின தாண்டகமென்
றோதினார் தொல்லோ ரெடுத்து."

"சந்தமுந் தாண்டகமுந் தம்முளள வொத்தலகு
வந்த முறைமை வழுவாத—முந்தும்
அளவியலா மென்றுரைப்ப ரவ்வாறன் றாகில்
அளவழியா மென்ப ரவர்."

"சந்த சரணமுந் தாண்டகத்தின் பாதமும்
வந்து மயங்கி வழுவிகந்த—செந்தமிழ்கள்
ஈண்டு வடநூற் புலவ ரியற்சந்தத்
தாண்டக மென்றுரைப்பர் தாம்."

இவற்றின் விரிவெல்லாம் யாப்பருங்கலவிருத்தியுட் காண்க.

“ திங்கண்மும் மாரி பெய்க திருவறம் வளர்க செங்கோ
னன்கினி தரச னாள்க நாடெலாம் விளைக மற்று
மெங்குள வறத்தி னோரு மினிதூழி வாழ்க வெங்கள்
புங்கவன் பயின்ற நன்னூல் புகழொடும் பொலிக மிங்கே.”

# சீவகசிந்தாமணி

## நச்சினார்க்கினியருரை.

### கடவுள்வாழ்த்து.

மூவாமுதலாவுலகமொருமூன்றுமேத்தத்
தாவாதவின்பந்தலையாயதுதன்னினெய்தி
யோவாதுநின்றகுணத்தொண்ணிதிச்செல்வனென்ப
தேவாதிதேவனவன்சேவடிசேர்தும்மன்றே.

இத்தொடர்நிலைச்செய்யுள் தேவர் செய்கின்றகாலத்திற்கு நூல் அகத்தியமுந் தொல்காப்பியமு மாதலானும், *"முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி" என்றதனால் அகத்தியத்தின் வழிநூல் தொல்காப்பிய மாதலானும், பிறர்கூறிய நூல்கள் நிரம்பிய இலக்கணத்தன அன்மையானும், அந்நூலிற் கூறிய விலக்கணமே இதற்கு இலக்கணமென்றுணர்க. அவ்விலக்கணங்களிற் செய்யுளியலின்கண்ணே ஆசிரியர் பா நான்கென்றும், அவற்றை அறம்பொருளின்பத்தாற் கூறுகவென்றுங்கூறிப் பின்பு அம்மைமுதலிய எட்டுந் தொடர்நிலைச்செய்யுட்கிலக்கணமென்று கூறுகின்றுழி †"இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்" என்பதனால் "மெல்லென்ற சொல்லான் அறம்பொருளின்பம் வீடென்னும் விழுமியபொருள் பயப்பப் பழையதோர்கதை மேற் கொச்சகத்தாற் கூறின் அதுதோல்" என்று கூறினமையின், இச்செய்யுள் அங்ஙனங்கூறிய தோலாமென்றுணர்க. இச்செய்யுள் முன்னோர்கூறிய குறிப்பின்கண் வந்த செந்துறைப் பாடாண் பகுதியாம். இதனானே ‡"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" என்பதற்குத் தேவபாணியுங் காமமுமேயன்றி வீடும் பொருளாமென்பது ஆசிரியர் கருத்தாயிற்று. முந்து நூல்களிற் காப்பியமென்னும் வடமொழியால் தொடர்நிலைச்செய்யுட்குப் பெயரின்மையும் இதற்குப் பின்புகூறிய நூல்கள் இதற்கு விதியன்மையு முணர்க.

இனி இத்தொடர்நிலைச்செய்யுளை இனமென்ப. அவர் இனமென்று காட்டிய உதாரணங்கடாம் அவர்சேர்த்த அவ்வப்பாக்கட்கே இனமாகாது ஒழிந்தபாக்கட்கும் இனமாதற் கேற்றலானும், துறையை விருத்தமாகவுந் தாழிசையைவிருத்தமாகவும் ஓதுதற்கு அவையேற்றமையானும், "மூவாமுதலா" என்னுங் கவிமுதலியன தாழம் பட்டவோசையான் விருத்தமாயுஞ் சீர்வரையறையானும் மிகத்துள்ளியவோசையானுந் துறையாயுங் கிடத்தலின், இவற்றை விருத்தக்கலித்துறையெனல்வேண்டும்; அதுகூறவே துறையும் விருத்தமுமெனப் பகுத்தோதிய இலக்கணநிரம்பாதாமாகலானும் இனமென்றல் பொருத்தமின்று. இச்செய்யுட்களின் ஓசைவேற்றுமையும் மிக்குங் குறைந்தும் வருவனவுங் கலிக்கேயேற்றலிற் கொச்சகமென்றடங்கிற்று.

---

* தொல்காப்பியம் - சிறப்புப்பாயிரம்.

† ,, பொருளதிகாரம், செய்யுளியல் உகக.

‡ ,, ,, ,, கசக.

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடைய்து" என்பதனால், இக்கவியும் மேலிற்கவியும் முன்னிலையன்றியுந் தேவர்ப்பராயின.

இனி அளவியற்சந்தம், அளவழிச்சந்தம், அளவியற்றாண்டகம், அளவழித்தாண்டகம், *சமசந்தத்தாண்டகம், சந்தத்தாண்டகம், தாண்டகச்சந்தமென அடக்குவார்க்கு அவற்றுள்ளுஞ் சிலவன்றி முழுதுமடங்காமை யுணர்க.

மூவா முதலா வென்பன மூத்த முதலியவென்னும் பெயரெச்சங்களின் எதிர்மறையடுக்கு. †"எதிர்மறுத்து மொழியினும் * * பொருணிலை திரியா" என்பதனால் உலகமென்னும் வினைமுதற்பொருளொடு முடிந்தன. ‡"முதலா வேன தம்பெயர் முதலும்" என்பதனான் முதலுமென்பதோர்வினை உடம்பாட்டிற்குளதாம். ஆசிரியர் §"காலமுலகம்" என்றும் பிறண்டுஞ் சூத்திரஞ்செய்தலின் அது வடமொழியன்று. ஈண்டு உலகமென்றது உயிர்க்கிழவனை; ||"உலகமுவப்ப" என்றதுபோல. ஒரு மூன்று மென்ற குற்றியலுகரம் மெய்யொடுங்கெட்டு, ¶"முதலீ ரெண்ணினொற்று ரகர மாகு, முகரம் வருத லாவயி னான" என்னும் விதியும்பெற்று, ††"அளந்தறி கிளவி" என்னுஞ் சூத்திரத்துத் "தோன்றுங்காலை" என்ற இலேசான் முடிந்தது. ஒரு மூன்றுமேத்த எய்தியென்க. உம்மை ‡‡"இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவி வினைப்படு தொகுதியின்" வந்தது. உலகமென்னும்பெயர் மூன்றென்னும் பெயர்ப்பயனிலைகொண்டு அதுதான் ஏத்தவென்னும் வினைப்பயனிலைகொண்டது. வருத்தமாகியகுறிப்புணர்த்திய தாவென்னுமுரிச்சொல் வினைக்குமுதனிலையாய்த் தாவாதவெனப் பெயரெச்சமறையாய் இன்பமென்னும் பெயரொடு முடிந்தது. ஏத்தத்தாவாத வென்பது §§"வினையெஞ்சுகிளவியும் * * ஞாங்கர்க்கிளந்த வல்லெழுத் துமிகுமே" என்பதனான் ஒற்றுமிகாது. தாவாதவின்பமென்பது உடம்படுமெய்யாயிற்று இன்பமென்னும் பெயர் தலையாயது என்னுங் குறிப்புப்பெயர் கொண்டது. ||||"அல்வழி யெல்லா மெல்லெழுத் தாகும்" என்பதனான் மகரம் நகரமாயிற்று. தன்னினெய்தி யென்ற இன் காரகவேதுப் பொருட்கண்வந்த ஐந்தாமுருபு. தன்னிலெய்தியென்று பாடமாயின், மணியினதொளியும் மலரினதுநாற்றமும்போலத் தன்னுள்ளே பெற்றென்க. எய்தியெனநின்ற செய்தெனெச்சங் காரணகாரியப் பொருட்டாய் நின்றவென்னும் பெயரெச்சவினையொடு முடிந்து அது குணமென்னும் பொருட்பெயரொடுமுடிந்தது. ஓவாதென்னும் எதிர்மறையெச்சமும் நின்றவென்பதனொடு முடியும். குணமாவன: தாவாதவின்பமென்பதனாற்பெற்ற அநந்தசுகமொழிந்த எழுகுணங்களும். அவை அநந்தஞானம், அநந்தவீரியம், அநந்ததரிசனம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியாவியல்பு என்பன. அத்து இரண்டாமுருபின்கண்வந்த சாரியை. ¶¶"அத்தேவற்றேயாயிரு மொழிமே, லொற்றுமெய்கெடுதறெற்றென்றற்றே" என்பதனான் மகரங்கெட்டு †††"அத்தி னகர மகரமுனை யில்லை" என்பதனான் அகரங்கெட்டு முடிந்தது. ‡‡‡"குற்றிய லுகரமு மற்று" என்பதனான் வருமொழியிலொகரமேறிற்று.

---

* அளவுமிகுஞ் சந்தத்தாண்டகமென்றும் பிரதிபேதமுண்டு.
† தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - வேற்றுமைமயங்கியல் உ௪.
‡ தொல் - எழுத் - மொழிமரபு ௩௩. § தொல் - சொல் - கிளவியாக்கம் ௫௭.
|| திருமுருகாற்றுப்படை. ¶ தொல் - எழுத் - குற்றியலுகரப் புணரியல் ௩௩.
†† தொல் - எழுத் - குற்றியலுகரப் புணரியல் ௬௪.
‡‡ தொல் - சொல் - கிளவியாக்கம் ௩௩. §§ தொல் - எழுத் - உயிர்மயங்கியல் உ:
|||| தொல் - எழுத் - புள்ளிமயங்கியல் ௧௧. ¶¶ தொல் - எழுத் - புணரியல் ௩௧.
††† தொல் - எழுத் - புணரியல் உ௩. ‡‡‡ தொல் - எழுத் - புணரியல் ௩.

சொன்மாண்பமைந்த குழுவின்சரண்சென்றுதொக்க
நன்மாண்புபெற்றே னிதுநாட்டுதன்மாண்புபெற்றேன்.

சொல் - புகழ். குழு - ஆசிரிய உபாத்தியாயசாதுக்கள்.

இ - ள். உறவும் பகையுமில்லாதான்கூறிய நற்குணங்கட்கிருப்பிடமாய்ப் பழையதாகிய மாட்சிமையமைந்த அறத்தையும், அதனைப் பொருந்திநின்ற குழுவினையுஞ் சரணாகச் சென்றுசேர்ந்த நல்வினையுடையேனாதலின், இக்கதையை உலகிலே நிலைபெறுத்துதற்கு நல்வினையுடையேனெனத் தெளிந்து கூறினானென்க.

இறைவன் அன்பிலனாயினும் அருஞ்சுரத்தின் மரம்போல் அடைந்தார்க்களித்தல் அவற்கியல்பு இல்லாவென்று பாடமாயின் இல்லாவறமென்க.

இனிக் குணங்கட்கிடமாய்ப் பகைநண்பில்லானெனிற் பிறர்க்குள்ளது இவற்கின்றென்றாகும்; *"குணமென்னுங் குன்றேறிநின்றார்வெகுளி" என்றலின்.

இது சாதுசரணமுந் தன்மசரணமுங் கூறிற்று. (௬)

## அவையடக்கம்.

கற்பாலுமிழ்ந்தமணியுங்கழுவாதுவிட்டா
னற்பாலழியுநகைவெண்மதிபோனிறைந்த
சொற்பாலுமிழ்ந்தமறுவும்மதியாற்கழூஉவிப்
பொற்பாவிழைத்துக்கொளற்பாலர்புலமைமிக்கார்.

இ - ள். கல்லின் பகுதியீன்ற மணியும் நிறைமதிபோற் கலைகணிறைந்த சொல்லின் பகுதியீன்ற மறுவுங் கழுவாதொழிந்தால் நன்மைகெடும்; ஆதலிற் சான்றோர் தமதறிவாலே கழுவி அழகாக அமைத்துக்கொளற்பாலரா யிருந்தாரென்க.

எனவே யான் அத்தன்மையனன்றென்பது சொல்லெச்சம், † "சொல்லொடுங் குறிப்பொடுமுடிவுகொளியற்கை, புல்லிய கிளவி யெச்சமாகும்." என்றாராதலின். மறுவில்லாமதிக்கு மறுவடுத்தாற்போலக் கலைநிறைந்தசொற்கு அடுத்த மறுவாவது வழுவமைக்குஞ்சொல்; அதனைச் சங்கத்தார் ஆராய்ந்தமைகூறவே அவையடக்க முணர்த்திற்று. மதிபோல் நிறைந்த மதியுமாம். (௪)

முந்நீர்ப்பிறந்தபவளத்தொடுசங்குமுத்து
மந்நீருவர்க்கும்மெனின்யாரவைநீக்குகிற்பா
ரிந்நீரவென்சொற்பழுதாயினுங்கொள்பவன்றே
பொய்ந்நீரவல்லாப்பொருளால்விண்புகுதுமென்பார்.

நிலத்தைப் படைத்தலுங் காத்தலும் அழித்தலுமாகிய மூன்று தொழிலுமுடைமையின் முந்நீர் - ஆகுபெயர்.

இ - ள். பவளமுஞ் சங்கும் முத்துங் கடலிலே பிறந்தன; அவை பிறந்த அக்கடல் உவர்க்குமென்று கூறினும் அவற்றைக் கைவிடுவாரில்லை. அதுபோல மெய்யாகிய புராணப்பொருளாலே வீடுபெறுவே மென்பார் எனது இவ்வாறுவர்க்குந் தன்மையையுடைய சொல் தீதாயினும், அச்சொற்பொதிந்த பொருளாலே அச்சொல்லைக் கொள்வரெனத் துணிந்து கூறினானென்க. (௫)

*திருக்குறள், நீத்தார்பெருமை, ௯. †தொல், பொருள், செய், உ0எ.

# பதிகம்.

மீனேறுயர்த்தகொடிவேந்தனைவென்றபொற்பிற்
றேனேறனையானுளன்சீவகசாமியென்பான்
வானேறநீண்டபுகழான்சரிதம்மிதனைத்
தேனூறநின்றுதெருண்டாரவைசெப்பலுற்றேன்.

ஏறுயர்த்த - ஏற்றைமேம்படுத்தின. * "கடல்வாழ்சுறவுமேறெனப்படுமே" என்றார். சாமி-பாகதம்.

இ - ள். காமனைவென்ற பொற்பினையுடைய ஏறனையான்றான் ஒருவனுளன். அவன்யாரெனிற்சீவகசாமியென்பான் அவனது ஒழுக்கங்கேட்டோர் நெஞ்சிடத்தே நின்று இனிமைமிகும்படி தெளிந்தோர் அவையிலே இத்தொடர்நிலைச் செய்யுளைக் கூறலுற்றேனென்க.

புகழானென்னும் பெயர் சொல்லுவான்குறிப்பான் அவனென்னுஞ் சுட்டுப்பெயர் மாத்திரையாயிற்று; † "நாணிநின்றோள்" என்றும், † "அணங்கருங்கடவுளன்னோள்" என்றும் அகத்திற் கூறினாற்போல. இது ‡ "பொருளொடு புணராச்சுட்டுப்பெயராயினும்" என்னுஞ் சூத்திரவிதி. மேல் இங்ஙனம் வருவனவற்றிற்கெல்லாமொக்கும். சீவகனை முற்கூறினார் கதைக்கு நாயகனாதலின். (௧)

கோடாதசெங்கோற்குளிர்வெண்குடைக்கோதைவெள்வே
லோடாததானையுருமுக்குரலோடையானை
வாடாதவென்றிமிகுசச்சந்தனென்பமன்னன்
வீடாதகற்பினவன்றேவிவிசயையென்பாள்.

செங்கோல் - பிறிதினியைபு நீக்கிய விசேடமாயினுங் கோடாதவென்று அடையடுத்தலிற் கோலென்னுந் தன்மையாயிற்று. வெண்குடை - இயைபின்மை மாத்திரை நீக்கிய விசேடம். உருமுக்குரல்போலுங் குரலையுடைய யானை. வீடாத-விகாரம்.

இ - ள். செங்கோன்முதலியவற்றையுடைய மன்னன் குறையாதவென்றிமிகு சச்சந்தனென்பர்; அவன் தேவி விசயையென்று பெயர்கூறப்படுவாளென்க. (௨)

சேந்தொத்தலர்ந்தசெழுந்தாமரையன்னவாட்கட்
பூந்தொத்தலர்ந்தபசும்பொற்கொடியன்னபொற்பி
னேந்தொத்திருந்தமுலையின்னமிர்தன்னசாயல்
வேந்தற்கமுதாய்விளையாடுதற்கேதுவாமே.

இ - ள். சிவந்து தம்மிலிணையொத்து அலர்ந்த தாமரையன்னகண்ணிணையும் பொற்பினையுந் தம்மிலொத்து அடிபரந்த ஏந்துமுலையினையுமுடைய சாயலாள் வேந்தனுக்கு அமுதமாய்ப் புணர்ச்சிக்குக் காரணமாமென்க.

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல் ௪௰.

† அகநானூறு, ௧௬.—நாணிநின்றோ ளிலைகண் டியானும், பேணினெ னல்லனோ மகிழ்நவானத், தணங்கருங் கடவு ளன்னோளென், மகன்றா யாதல் புரைவதா லெனவே.

‡ தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், ௩௭.

அமிர்தம் கட்கினிதாகிய மென்மையுந் தன்னைநுகர்ந்தார் பிறிது நுகராமற் றடுக்குமென்மையு முடைமையின், அமிர்தன்னமென்மையையென்றார். *"சாயன் மென்மை" என்று பொதுப்படச்சூத்திரஞ்செய்தது ஐம்பொறியால் நுகருமென்மை யெல்லாமடங்குதற்கு. "மயிலன்னசாயல்," "சாயன்மார்பு" என ஒளிக்கும் ஊற்றிற்கும் வந்தன; பிறவுங் காண்க. சாயல்-ஆகுபெயர். மறுமையிற்சென்று பெறும் அமுதமும் இவளெனக்கொண்டு மயங்கினமைதோன்றமீட்டும் அமுதாயென்றார். (௩)

கல்லார்மணிப்பூணவன்காமங்கனிந்துகன்றிச்
சொல்லாறுகேளானனிசூழ்ச்சியுட்டோற்றவாறும்
புல்லார்புகலப்பொறிமஞ்ஞையிற்றேவிபோகிச்
செல்லாற்றிழுக்கிச்சுடுகாடவள்சேர்ந்தவாறும்.

நனி - விசேடித்தவுரிச்சொல். பொறி - இயந்திரம். செல்லாற்றிழுக்குதல் - வெற்றிமுரசுகேட்டுக்கலங்குதல். தேவி போகி இழுக்கிச் சேர்ந்தவாறு மெனமுடிவுழி அவளெனவேண்டாமையின், அது தெய்வத்தைச் சுட்டாது, அங்ஙனம் அமுதாயவள் இங்ஙனமாயினாளெனத் தேவரிரங்குதலின், முன்னர்க்கவியை நோக்கித் தகுதிபற்றிவந்தது. இனிச் சாத்தியவள்வந்தாளென்றாற்போலத் தேவியவளென வினைக்கொருங்கியன்றதென்பாருமுளர், அது வழக்கிற்சென்று மறுக்க.

இ - ள். பூணவன் வேட்கைசெறிந்து அதிலே அடிப்பட்டு அமைச்சர் சொல் வழியைக் கேளானாய்ப் பகைவர் மனமகிழ எண்ணத்திலே மிகத்தோற்றபடியும், தேவிபோகி இழுக்கி அவள் சுடுகாட்டைச் சேர்ந்தபடியுமென்க. (௪)

நாளுற்றுநம்பிபிறந்தான்றிசைபத்துநந்தத்
தோளுற்றொர்தெய்வந்துணையாய்த்துயர்தீர்ந்தவாறுங்
கோளுற்றகோன்போலவன்கொண்டுவளர்த்தவாறும்
வாளுற்றகண்ணாண்மகன்வாழ்கெனநோற்றவாறும்.

தோள் - கை. உற்று - உவமவாசகம். "செப்புற்றகொங்கை" என்றார் பிறரும். †"ஒழியாது" என்னுமிலேசாற் கோனையென்னும் உருபு தொக்கது. அவனென்று கந்துக்கடனைச் சுட்டிற்று, கதையை உட்கொண்டு. அரசன் இறந்ததற்கேதுவாகலின் சாவிடும் வாளுற்றகண்ணாளென்றார். வாழ்கென - வியங்கோள்வினையாம். நோன்பு - வேட்கையுள்ளது

இ - ள். நம்பி ஒன்பது திங்களும் நிறைந்து, திசைகளிற்பல்லுயிர்களும் வளர்தல் காரணமாகப் பிறந்தானாக; ஒருதெய்வம் கூனியது உருவாய்த்தன்கை தனக்குதவு மாறுபோலத் தேவிக்கு உதவித் துயரந் தீர்த்தபடியும், கொலையுண்ட சச்சந்தன் வளர்க்கு மாறுபோலக் கந்துக் கடனுட்கொண்டு வளர்த்தபடியும், கண்ணாள் நோற்றபடியுமென்க.

நல்ல நாளுற்றென்றுமாம். (௫)

நெஞ்சம்புணையாக்கலைமாக்கடனீந்தியாங்கே
வஞ்சம்மறவர்நிரைவள்ளல்விடுத்தவாறும்
விஞ்சைக்கிறைவன்மகள்வீணையிற்றோற்றவாறு
நஞ்சற்றகாமநனிநாகரிற்றுய்த்தவாறும்.

---

* தொல்காப்பியம், சொல்லதிகாரம் உரியியல், ௨௧.

† ,, எழுத்ததிகாரம், தொகைமரபு, ௧௫.

தேனூறுதீஞ்சொற்குணமாலையைச்சேர்ந்தவாறுங்
கோனூறுசெய்வான்கருதிச்சிறைகொண்டவாறும்
வானூறிழிந்துமழைமின்னெனவந்தொர்தேவ
னூனூறொளிவேலுரவோற்கொண்டெழுந்தவாறும்.

வான் - வினையெச்சம். கருதியென்பது கருதவென நின்றது, "உரற்கால்யானை யொடித்துண்டு" என்னுஞ் செய்தெனெச்சம் பிறவினை கொண்டாற்போல. சிறை - அன்னப்பார்ப்பைச் சிறைசெய்தது. ஓர்தேவன்-விகாரம். மழை-அவனூர்தி. ஆசிரியன் கூற்றை உட்கோடலின் உரவோன் அறிவுடையோனாயிற்று.

இ - ள். உரவோன் தேனினதினிமை இடைவிடாத இனிய சொல்லையுடைய குணமாலையைச் சேர்ந்தபடியும், கட்டியங்காரன் கொல்லுதற்குக் கருத முற்பிறப்பிற் றீவினையாகியசிறைவந்து அவனைக் கைக்கொண்டபடியும், ஒருதேவன் மழைமேலேறி மின்போல வான்வழியாக வந்திழிந்து அவனைக் கைக்கொண்டுபோனபடியு மென்க.

அவனெனச்சுட்டுவெருவித்து உரவோனைச் சுட்டாக்கலுமொன்று. (௧௦)

தேங்காதமள்ளாதிரடோளிணைசிக்கயாத்த
பூங்கச்சுநீக்கிப்புனைமாண்கலநல்லசேர்த்தி
நீங்காதகாதலுடையாய்நினைக்கென்றுபின்னும்
பாங்காயவிஞ்சைபணித்தாங்குவிடுத்தவாறும்.

பூங்கச்சியாத்த கெடாதவீரர்; தோளிணையையுடைய வீரர். இவை இகழ்ச்சி. கச்சு—சேலையின் மேற்கட்டினது. சிக்க-அகப்படக்கோல, திசைச்சொல். நீக்கி-அச்சிறையைநீக்கி. பின்னுமென்றது இடாவரினென்றதன்றி இன்பமுறுங்காலும் நினைக்கவென்றது.

இ - ள். மள்ளர் சீவகனைச் சிக்க, தேவன் அதனை நீக்கிக் கலத்தைச் சேர்த்தி என்றும் நீங்காத காதலையுடையாய் பின்னு நினைக்கவென்று தனக்குரிய விஞ்சைகளை அவனுக்கு நிறுத்தி அவ்விடத்து நின்று விடுத்தபடியுமென்க.

இது முற்கூறியகவியிற் சிறைப்பாவத்தைத்தொடர்புபடுத்தெடுத்து விரியக் கூறிப் பின் அவற்குச் செய்த சிறப்புக்களுங் கூறிற்று. கட்டில்லாமை பின்னே யுணர்க. (௧௧)

பைந்நாகப்பள்ளிமணிவண்ணனிற்பாயல்கொண்டு
கைந்நாகந்துஞ்சுங் கமழ்காந்தளஞ்சாரல்போகி
மைந்நாகவேலிமலிபல்லவதேயநண்ணிக்
கொய்ந்நாகச்சோலைக்கொடியந்நகர்புக்கவாறும்.

மை - மேகம். கொய்ந்நாகம - புன்னை. மாநகருமபாடம். காந்தள் வடிவிற்கும் நிறத்திற்கு முவமம்.

இ - ள். நாகப்படுக்கையிலே மாயோன்துயிலுமாறுபோலக் காந்தளைப்படுக்கையாகக்கொண்டு யானைதுயிலு மழகிய சாரலைப்போய்ப் பல்லவதேசத்தைநண்ணி அதின்நகரிலே புகுந்தபடியுமென்க. (௧௨)

காட்டிடைப்போகையினாலே, மின்னின்றன்மையையுடையவேலவனாகிய தடமித்தன் அச்சம்பரந்த சிலைத்தழும்பைக்கண்டு எதிர்கொண்டபடியு மென்க. (௧௬)

திண்டேரரசர்திறற்சிங்கங்கள்வில்லும்வாளுங்
கண்டாங்குவந்துகடிபெய்திவட்காத்துமென்று
கொண்டார்குடங்கையளவேயுளகண்ணினாளைப்
புண்டாங்கெரிவேலிளையோற்குப்புணர்த்தவாறும்.

கொண்டார் - ஏற்றார். பகைவர் புண்ணைத்தாங்குதற்குக்காரணமானவேல் - வினைத்தொகை; ஏதுப்பொருள் கருவிக்கண் அடங்கும்; "மற்றிந்நோய்தீருமருந்து" என்றாற்போல. அரசன்றிறலும் பாடம்.

இ - ள். அவன் அரசசிங்கங்களினுடைய விற்றொழிலையும் வாட்டொழிலையுங்கண்டு அப்பொழுதே உவந்து இவ்விடத்தே இவனைக் காவலிட்டுக் காப்பேமென்று உட்கொண்டு கண்ணினாளை இளையோற்குப் புணர்த்தபடியுமென்க. (௧௭)

மதியங்கெடுத்தவயமீனெனத்தம்பிமாழாந்
துதிதற்குரியாள்பணியாலுடனாயவாறு
நிதியின்னெறியினவன்றோழர்திரந்தவாறும்
பதியின்னகன்றுபயந்தாளைப்பணிந்தவாறும்.

இ - ள். நந்தட்டன் திங்களைக்கெடுத்த உரோகிணியென்னும்படி மயங்கி உலகுவிளங்கத்தோற்றினவனுக்குரிய சத்தை யேவலாலே அவனைக்கண்டபடியும், பொருள்தேடவேண்டுமென்னும் வழியாலேஅவன்றோழர் அவனைத் தேடினபடியும், அவன் விசயையைக்கண்டபடியுமென்க.

வயமீன்களெனத் தோழர்திரந்தபடியு மென்றுமாம். பதியினின்று நீங்கிப் பிள்ளைப்பெற்றாளெனவே விசயையாம். பதி - இராசமாபுரமுமாம். (௧௮)

கன்னவாளறுக்குங் கடம்தாரவன்றாயொடெண்ணி
விண்வாளறுக்குநகர்வீதிபுகுந்தவாறு
மண்மேல்விளக்காய்வரத்திற்பிறந்தாளோர்கன்னிப்
பெண்ணாரமுதின்பெருவாரியுட்பட்டவாறும்.

மாலையைக்கண்டகண் பிறிதிற்செல்லாமையின் வாளறுக்குமென்றார். விண் - தேவருலகு. மண்ணுக்கு - உருபுமயக்கம். கன்னிப்பெண்ணாரமுதின்பெருவாரி - பலசொற்றொகையாயினுங் கற்சுனைக்குவளையிதழ்போல இருசொற்றொகையாய் நின்றது.

இ - ள். தாரவன் விசயையுடனேயெண்ணி இராசமாபுரத்திற் றெருவிலே புகுந்தபடியும், வரத்தோடே பிறந்தாளொருகன்னிப்பெண்ணாகிய அமிர்தினது போககடலிலே அகப்பட்டபடியுமென்க. (௧௯)

துஞ்சாமணிப்பூட்சுரமஞ்சரியென்னுநாமத்
தஞ்சாயல்பூத்தவகிலார்துகிலாய்பொனல்கு
லெஞ்சாதவின்பக்கொடிதாழ்த்ததும்பன்றியெய்து
நஞ்சூறுவேலான்பகைநாமறக்கொன்றவாறும்.

துகிலும் மேகலையையும் உடைத்தாகிய வல்குலையுடைய கொடி; இன்ப

மாகியகொடி. பொன் - ஆகுபெயர். கொடியென்றலானும் விரதத்தை நீக்குத லானுந் தாழ்த்ததென்றூ. நாம் - அச்சம்; நாமமாயின் விகாரமாம்.

இ - ள். வேலான் ஒளிமாறூதமணிப்பூணினையும் நாமத்தினையும் சாயகினையம பூத்தகொடியை வளைத்தபடியும், பன்றியையெய்து பகையைக் கொன்றபடியு மென்க. (உ0)

புண்டோய்த்தெடுத்தபொருவேலெனச்சேந்துநீண்ட
கண்போன்றமாமன்மகள்கண்மணிப்பாவையன்ன
பெண்பாலமிர்தினலம்பெற்றதும்பொற்பச்செங்கோ
றணடான்மதிதோய்குடைதன்னிழற்பாயவாறும்.

தன்மாமனுடையமகள்; அவன்கண்போன்றமகள்; அவன் தேவியுடைய வேலெனச் சேந்துநீண்டகண்மணியிற்பாவையன்ன பெண். "உலகண்மணிப் பாவை" என்றூர் பிறரும்.

இ - ள். அவளிடத்து அமிர்தையொத்த இனியநலத்தைப்பெற்றபடியும் செங்கோல் பொலிவுபெறூநிற்பக் குடை நிழலைப் பரப்பினபடியுமென்க.

வேல்படும்பொழுதே புண்ணும் உடனே நிகழ்தலிற் புண்டோய்த்தென்று. தோய் - உவமவாசகம். குடை - எழுவாய். குடைத்தண்ணிழலும் பாடம்.

திறைமன்னருய்ப்பத்திருநிற்பச்செங்கோனடப்பக்
குறைவின்றிக்கொற்றமுயரத்தெவ்வர்தேர்பணிய
வுறைகின்றகாலத்தறங்கேட்டுருமுற்றபாம்பி
னறிவன்னடிக்கீழரசஞ்சித்துறந்தவாறும்.

குறைவின்றி - மத்திமதீபம். உய்ப்ப - செலுத்த. நிற்ப - கெடாது நிற்ப.

இ - ள். உய்ப்ப, நிற்ப, நடப்ப, உயரும்படிதேர்பணிய வீற்றிருக்கிற காலத்தே அறத்தைக்கேட்டு, உருமேற்றின் ஓசைகேட்ட பாம்புபோல அரசாட்சியை அஞ்சி, அறிவனடிக்கண்ணே துறந்தபடியுமென்க.

இவன் துறவுகூறவே எல்லாந் துறவுமுணர்த்திற்று.

கோணைக்களிற்றுக்கொடித்தேரிவுளிக்கடல்சூழ்
வாண்மொய்த்ததானையவன்றம்பியுந்தோழன்மாரும்
பூண்மொய்த்தபொம்மன்முலையாரும்புலந்துறப்ப
வீணைக்கிழவன்விருந்தார்கதிசென்றவாறும்.

ஐ - அசை.

இ - ள். மாறுபாட்டினையுடையகளிறுமுதலியவற்றைச்சூழ்ந்த காலாளையுடையவனுடைய தம்பியும் தோழர்நால்வரும் தேவியரெண்மரும் இந்நிலத்தை விட்டுச் சுவர்க்கம்பெறத் தான் வீடுபெற்றபடியுமென்க.

இவனை யொழிந்தோர்க்கு வீடுபெறநல்வினையின்று. "தென்புலமருங்கின வீறுநிறைய" என்றூற்போலப் புலம் - நிலமாம். *"ஏசுபெண்ணொழித் திந்திரர்களாய்த் தூயஞானமாய்த்துறக்க மெய்தினார்" என்று தேவியரை முற்கூறி, †"ஐவருந் - திரு

* முத்தியிலம்பகம், தேவிமார்நோற்றுயர்வு, ங.
† ,, நந்தட்டன்றோழன்மார்நோற்றுயர்வு, ங.

வின்றேற்றம்போற் றேவராயினார்" என்றுபிற்கூறுவாராதலான், முலையாரும் நம்பி யுந் தோழன்மாருமெனல்வேண்டுமாயினும், ஆண்பால் சிறப்புடைமையின் முற் கூறினார். பாட்டுக் காமத்தைக்கவிளைத்தலின் அதிற்பற்றற்று வினையவீடுபெற்றமை தோன்ற வீணைக்கிழவன் விருந்தார்கதி சென்றானென்றார். (உ௭)

தேன்வாயுமிழ்ந்தவமிர்துண்டவன்போன்றுசெல்வன்
வான்வாய்வணக்குநலந்தார்முலைப்போகம்வேண்டா
னேனோருமேத்தவவெய்தியவின்பவெள்ள
மீனோர்க்குரைப்பாம்பதிகத்துளியம்புவாரே.

உமிழ்ந்தவமிர்து - இலைபூத்தமரம்போனின்றது.

இ - ள். அழியாதசெல்வத்தை யுடையவன் தேனையுமிழ்தற்குக் காரணமாகிய அமிர்தத்தை யுண்டவனை யொத்து, வானிடத்துமகளிரை அடக்கவல்லவைக்கும் நலத்தா ருடைய போகத்தைவேண்டானாய், எல்லாருமேத்த அவன் அவ்வீட்டிலே சேய மடந்தையை நுகர்ந்த பேரின்பத்தையும் பதிகத்தில் பாடச் சொல்லிய இவ்வுலகி லுள்ளோர்க்குரைப்பாமென்றொன்க.

இன்பவெள்ளத்தையுமென்று உம்மையுமுருபும் விரித்துச் "சுலவாமணி" என்னுங்கவிமுதலியவற்றின் உம்மைகளுக்கும் இரண்டாவதுவிரித்து உரைப்பா மென்பதனோடு முடிக்க.

முற்கூறிய வீட்டையுட்கொண்டுகூறியதிப்பயனுங் கொண்டுகூறினார்.

பதிகமுற்றிற்று.

ஆ கவி - உ௮



# நாமகளிலம்பகம்.

## நாட்டுவளம்.

நாவீற்றிருந்தபுலமாமகளோடுநங்கைபொற்
பூவீற்றிருந்ததிருமாமகள்புல்லநாளும்
பாவீற்றிருந்தகலைபாரறச்சென்றகேள்விக்
கோவீற்றிருந்தகுடிநாட்டணிகூறலுற்றேன்.

இ-ள். பாவிலேவீற்றிருந்த கலைகள் தட்டறநடந்த கேள்விக்கோ நங்கை நாமகளோடு திருமகள் வெறுப்பின்றி நாடோறும்புல்லும்படி தான் வீற்றிருந்ததற்குக் காரணமான நாட்டழகைக் கூறுதலுற்றேனென்றுகொள்க.

கேள்விக்கோவெனவே, கல்வியுஞ் செல்வமும் பெற்றனவெனும், அவை நாடோறும் புதிதாக நிகழுகின்றமை தோன்றப் பின்னும் புல்லவென்றார்.

இனி அவர்கள் நாட்டிலே புல்ல என்றுமாம். (க)

காய்மாண்டதெங்கின்பழம்வீழக்கமுகினெற்றிப்
பூமாண்டதீந்தேன்றொடைகீறிவருக்கைபோழ்ந்து
தேமாங்கனிசிதறிவாழைப்பழங்கள்சிந்து
ஏமாங்கதமென்றிசையாற்றிசைபோயதுண்டே.

வீழவென்னும் எச்சம் காரணகாரியப்பொருட்டாய் இறந்தகாலமுணர்த்திற்று. ஒழிந்தஎச்சம் சினைவினைசெய்வதன் றொழின்மேற்று. பூமாண்ட தீந்தேன்றொடை - பொலிவு மாட்சிமைப்பட்டதேன்போல இனிய சுவையுடைய தாறு. "நறைசெய் தீந்தொடை நின்றனபசுங்காய்" என்றார் பிறரும். இனித் தேனுந் தாறுமென உம்மை விரித்தலுமாம். வருக்கை - ஆகுபெயர்.

இ-ள். பழம் வீழுதலாலே கீறிப் போழ்ந்து சிதறிச் சிந்தும் ஏமாங்கத மென்றுபெயர் கூறப்பட்டு இசையாலே திசையெல்லாம் போயதோர் நாடுண்டென்க.

இனி வீழ அப்பழம் கீறிப் போழ்ந்து சிதறிச் சிந்துமெனச் செய்விப்பதன் றொழிலுமாம்: வில்லெய்பதுபோல. (உ)

### வேறு.

இலங்கலாழியினான்களிற்றீட்டம்போல்
கலங்குதெண்டிரைமேய்ந்துகணமழை
பொலங்கொள்கொன்றையினான்சடைபோன்மின்னி
விலங்கல்சேர்ந்துவிண்ணேறிவிட்டார்த்தவே.

மறுகுகின்றதெண்டிரை - ஆகுபெயர்.

இ-ள் கணமழை சக்கரவர்த்திகளிற்றீட்டம்போலே திரையைப்பருகிச் சூன் முதிருமளவும் மலையைச்சேர்ந்து பின்பு விண்ணிலேயேறிச் சடைபோலமின்னி யாய்விட்டார்த்தனவென்க. (௩)

தேனிரைத்துயர்மொய்வரைச்சென்னியின்
மேனிரைத்துவிசும்புறவெள்ளிவெண்

கோணிரைத்தனபோற்கொழுந்தாரைகள்
வானிரைத்துமணந்துசொரிந்தவே.

இ-ள். வான் ஒன்றின்மேலொன்ருகாமல் நிரைத்துத் தம்மிற்கூடித் தேனிருல் நிரைத்துயர்ந்த வரைத்தலையிலே வெள்ளியாற்செய்த வெள்ளிய கோல்களை விசும்புற நிரைத்தாற்போலத் தாரைகளை நிரைத்துச்சொரிந்தனவென்க. (ச)

குழவிவெண்மதிக்கோடுழக்கீண்டுதேன்
முழவினின்றதிர்மொய்வரைச்சென்னியி
னிழியும்வெள்ளருவித்திரள்யாவையுங்
குழுவின்மாடத்துகிற்கொடிபோன்றவே.

இ-ள். வரைத்தலையினின்றிழியும் வெள்ளருவித்திரள் யாவையும், பிறைக்கோடுழுதலின் இருல் கிழிந்து வரைத்தலையினின்றிழியுந் தேன்றிரள் யாவையுந் திரட்சியை யுடைய மாடங்களில் துகிற்கொடியை யொத்தனவென்க.

முழவுபோல அதிர்தல் இரண்டிற்கு மேற்றுக. "வெண்டுகில்" என்றும் *"கோபத் தன்ன தோயாப்பூந்துகில்" என்றுங்கூறலிற் றுகில் வெண்மை செம்மை இரண்டிற்கும் பொது. (ரு)

இலங்குநீண்முடியிந்திரன்மார்பின்மேல்
விலங்கிவீழ்ந்தமுத்தாரமும்போன்றவை
நலங்கொள்பொன்ஞெடுநன்மணிசிந்தலாற்
கலன்பெய்பேழைகவிழ்த்தவும்போன்றவே.

விலங்கிவீழ்தல் - பிணைத்திட்டமாலைபோலேவீழ்தல். கவிழ்த்த - தொழிற்பெயர். சிந்துதல் - உள் நிறைதலிற் றெறித்தல்.

இ-ள். அவ்வருவிகடாமே விழுகின்றபொழுது இந்திரன் மார்பின்மேலே வீழ்ந்த முத்துவடத்தையுமொத்து, அவை பொன்னையு மணியையுஞ் சிந்துதலின் அவனுபரணப் பெட்டிதான் கவிழ்க்கப்பட்ட ஆபரணங்களையு மொத்தன வென்க.

இது நீரிற்குவமைகூறிற்று. (சு)

வள்ளற்கைத்தலமாந்தரின்மால்வரைக்
கொள்ளைகொண்டகொழுநிதிக்குப்பையை
யுள்ளமில்லவர்க்கூர்தொறுமுய்த்துராய்
வெள்ளநாடுமடுத்துவிரைந்ததே.

உய்த்து - உய்ப்ப. உராய் - பெயர்ந்து.

இ-ள். வெள்ளமானது வண்மையையுடைய கையினைத் தம்மிடத்தேயுடைய நன்மக்களைப்போலே நிதித்திரளை மடிந்திருப்பார்க்கு ஊர்தொறுங் கொடுப்பதாக நாட்டிலே முகஞ்செய்து விரைந்ததென்க. (எ)

மையல்யானையின்மும்மதமார்ந்துதே
னையபொன்னசும்பாடியளைந்துராய்ச்
செய்யசந்தனந்தீம்பழமாதியா
னையவாரிநடந்ததுநன்மரோ.

---

* திருமுருகாற்றுப்படை.

இ - ள். அவ்வெள்ளம் மூன்றுமதமுமுள்ளேநிறைந்து தேனைப்பூசி வியப்பை யுடைய பொன்னசும்பையளைந்து பெயர்ந்து, சந்தனம் பழமென்கின்றவை முதலாகப் பிறவற்றையும் இழந்தேமென்று காடுவருந்தும்படிவாரிப் பெரிதாக நடந்ததென்க.

உண்டு பூசி அளைந்து செருக்கி நாட்டைநோக்கி நடந்ததென்றார்; குறிப்பு. ஐய- உரிச்சொல்லீறு திரிந்தது. *" நன்றுபெரிதாகும்." (அ)

வீடில்பட்டினம்வெளவியவேந்தெனக்
காடுகையரிக்கொண்டுகவர்ந்துபோய்
மோடுகொள்புனன்மூரிநெடுங்கட
ஞடுமுற்றியதோவெனநண்ணிற்றே.

வீடு - விகாரம்.

இ - ள். புனலானது குடிநீங்குதலில்லாத பட்டினத்தைக் கொள்ளை கொண்ட வேந்தெனத் திரைகளாகியகைகளாலே காட்டையரித்தல் கொண்டு அப்பொருள்களை உளளடக்கிக்கொண்டுபோய்க் கடல் நாட்டை வளைத்ததோவென்று மக்கள் வருந்தும் படி அந்நாட்டை நண்ணிற்றென்க. (க)

வேறு.

திரைபொருகனைகடற்செல்வன்சென்னிமே
னுரையெனுமாலையைநுகரச்சூட்டுவான்
சரவெனும்பெயருடைத்தடங்கொள்வெம்முலைக்
குரைபுனற்கன்னிகொண்டிழிந்ததென்பவே.

சரவென்னும் பெயரினையுந் தடமாகிய விரும்பிய முலையினையு முடைய புனலாகிய கன்னி. முலைபோற்சுரத்தலின் முலையாம். கொள்கன்னி - வினைத் தொகை. கன்னியென்னும் விசேடிக்கப்படுஞ் சொல்லை நீர்விசேடித்து அஃறிணை யாக்குதலின் இழிந்ததென்றார். என்ப - அசை. இது † புறனடையாற்கொள்க.

இவ்விதி மேலுங்கொள்க.

இ - ள். கடலாகிய தன்கணவன் நுகர்தற்கு முற்கூறியபொருள்களை உள் ளடக்கிக் கொண்ட கன்னி அவனுக்குச் சூட்டுதற்குத் தன்தலைமேல் நுரையாகிய மாலையைக் கொண்டிழிந்ததென்க. (க0)

பழங்கொடெங்கிலையெனப்பரந்துபாய்புனல்
வழங்கமுன்னியற்றியசுதைசெய்வாய்த்தலை
தழங்குரற்பம்பையிற்சாற்றிநாடெலா
முழங்குதீம்புனலகமுரியமொய்த்தவே.

பழங்கொடெங்கு - காய்த்ததெங்கு. இலை - நெருக்கத்திற்கு. இலையெனப்பாய் புனல் பரந்துவழங்கும்படி நீாவரத்தறிந்து முன்னே படுத்தவாய்த்தலை. தழங்குரல்- விகாரம்.

இ - ள். புனலாலே வாய்க்காலுட்கரை முரிதலின், நாட்டிலுள்ளாரெல்லாரும் பறையினாலே சாற்றி வாய்த்தலையிலே மொய்த்தார் படவிடுதற்கென்க. (கக)

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரியியல், சஎ.

† „ „ இடையியல், சஅ.

சேறமைசெறுவினுட் செந்நெல்வான்முளை
வீறுடுவிளைகென நதொழுதுவித்துவார்
நாறிதுபதமெனப்பறித்துநாட்செய்வார்
கூறியகடைசியர்குழாமகொண்டேகுவார்

இ - ள். அங்ஙனம் உழுவார நிலமகளைத்தொழுதாக. நசமைந்தசெய்யிலே முளையை விளைகவென்று வித்துவார், இந்நாற்றுச் செவ்வியென்று பறித்து அதிலே நாட்கொண்டுவைப்பார், முன்னைநாளே எமக்கென்று கூறிவைத்த கடைசியர்திரளைக கொண்டேகுவாராயினரென்க.

இத்துணைநிலத்திற்குஇத்துணை கடைசியரென்று கூறியவென்றுமாம். (கசு)

மூலைத்தடஞ்சேதகம்பொறிப்பமற்றவர்
குலைநதுடன்பதித்தலிற்குதித்தவாட்கயல்
புலந்திடைக்கவரிகன்றூட்டப்போந்தபா
னிலத்திடைப்பாய்ந்தவைபிறழுநீரவே.

மற்று - வினைமாற்று. குறிஞ்சிநிலத்தே கவரி தன்கன்றை யூட்டுதலான் அதற்கு நிகருச்சொரிந்த பால் மறைத்த நிலத்திடையென்க. * "கவரியுங்கராமுநிகரவற்று றல்லே" என்பதனுங் கன்றென்ப.

இ - ள். அக்கடைசியர் மூலைப்பரப்பிலே சேறுதெறிப்ப முடியைக்குலைத்து எல்லாருநடுதலின் வெருவி அவ்விடத்தே குதித்த கயல் அவர் நெருங்குதலிற் பானி லத்திடத்தே பாய்ந்து அவை அதிலேகிடந்து பிறழுநீர அந்நிலமென்க. (கஎ)

பாற்சுவையறிந்தவைபழனத்தாமரை
மேற்செலப்பாய்தலின்வெரீஇயவண்டினங்
கோற்றொடிநுளைச்சியர்முத்தங்கோப்பவ
ரேற்றியமாலைத்தேனிரியப்பாய்ந்தவே.

இ - ள். அக்கயல்கள் உயர்ந்த பாற்சுவையை அறிந்து நீரன்மையிற மருதமரை மேலே செல்லப்பாய்தலின், அதற்கு வெருவியெழுந்த வண்டினம் நுளைச்சியா முத்தைக்கோப்பவர் சூடின மாலையில் தேனினங் கெடும்படி பாய்ந்தனவென்க.

தெரிந்தனவும் பாடம். (கஅ)

இரிந்ததேன்குவளையினொற்றிதைதவா
முரிந்துபோதவிழ்ந்துகொய்குயிர்க்குழுமலையி
னரும்புசேர்ந்தணிஞிமிறார்ப்பவாய்பதம்
விருந்தெதிர்கொணமெனத்தழுவிவீழ்ந்தவே.

இ - ள். முல்லையின் அரும்பு போதாய்அவிழ்ந்து தேனைச் சொரியப்படுங் குவளையினொற்றியிலே முன்புஇரிந்த தேனினஞ்சேர்தலாலே அதிலிருந்தஞிமிறுகள் முரிந்தார்ப்ப, அத்தேனினம் இவ்வழகிய உணவை நமக்கு விருந்திடுகின்றோம். இதனை ஏற்றுக்கொண்மினென்று கூறினாற்போல அவற்றைத்தைதவா, அஞ்ஞிமிறுகள் அத்தேனினத்தைத் தழுவி அதிலே வீழ்ந்தனவென்க

கொண்மின் - விகாரம். இயற்றல் நிலமயக்கங்கூறினார்.

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், சஎ.

வளமுடிநடுபவர்வரம்பிற்கம்பலை
யிளமழைமுழக்கெனமஞ்ஞையேங்கலி
னளமருகுயிலினமழுங்கிப்பூம்பொழி
லுளமெலிந்தழுகுரிரிறெடுங்குமெனப்படுமே.

இ - ள். நடுபவர்ப முலையைக் கார் செய்யத்தொடங்கின மழைமுழக்கென்று உட்கொண்டு மயிலாரவஞ்செய்தலின், அக்கம்பலையை மழைபெய்தலைக்குறித்த குயிலினம் உண்மையென்றுவருந்திப் பிரிந்தமகளிரைப்போலே பொழிலிலே மயங்கியிருக்குமென்க.

மீண்டும் நடவத்தொழின் முதலாயவை கூறுகின்றார். (உ0)

வலைக்கைபாற்கடைசியர்மட்டுவாய்க்கலிற்
றிளைத்தவர்பருகியதேறறெறங்குழிக்
களிப்பவுண்டிளவனங்கண்ஞிமிராளாயைத்
திளைத்தலிற்பெடைமயிறெருட்டுஞ்செம்மற்றே.

இ - ள். கடைசியர் கையாலேமதுவைவார்த்தலிற் சொரிகிறலே கிடைவிடாதுபயின்றவருண்ட தேறன்மிக்குச்சொரிந்த தெளிந்த காமரசம் அறிந்த அன்னம் அதனையுண்டு காமவின்பநுகர்ந்தறியாத நாரையைப்புணர்தலின் அதனைக் கண்டு மயிற்பெடை தன்மயிலைத் தெருட்டுந்தன்மைத்தென்க.

* "திளையாவருமருவி" என்றார் பிறரும். பெடையென்றும் மயிலென்றும் பிரிக்க. நீர் கள்ளுண்டு இதுபோன் மயங்கினீரென்று தெருட்டாநின்று இனி மயிலைக்கண்டாற் கள்ளின்களிப்புத் தீருமென்றலின் இதுவுந் தெருட்டிற்றென்றுமாம்.

கண்ணெனக்குவளையுங்கட்டலோம்பினா
வண்ணவாண்முகமெனமரையினுள்புகார்
பண்ணெழுந்தியல்படப்பரப்பியிட்டனர்
தண்வயலுழவர்தந்தன்மையின்னதே.

குவளையும், உம்மை சிறப்பும்மை. ஓம்பினார் - வினையெச்சமுற்று. உள்புகா - தொழிற்பெயர்.

இ - ள். காதன்மகளிர் முகமென்றுட்கொண்டு தாமரையாகிய களையின் அருகு செல்லாதவர் அவர்கள் கண்ணென்றுட்கொண்டு சூடுதற்குப்பறிக்கும் குவளையையுங் களைபறித்தலைப் பரிகரித்துப் பண்ணை எழுத்தின்வடிவுதோன்றப் பாடினாராதலின் உழவர் தன்மை இப்படியிருந்ததென்க.

தாமரையைக் "கடவுளொண்பூவடைதலோம்பி" எனக் கூறுதலானும் அவா பறியாராயிற்று. மரையினுள்ளென்னும் உம்மையில்சொல் எஞ்சுபொருட்கிளவியான செஞ்சொலன்மையுணாக. கண்ணும் முகமுங் காதன்மையைத் தோற்றுவித்தலின் அதற்கேற்கப் பாடினரென்க. (உஉ)

நித்திலப்பந்துடனீன்றபாதிரி
யொத்தபூவுடற்றியநாவிஞ்கிறை
றத்துநீர்நாரைமேலெறியத்தண்கடம்
பைத்தெழுதிரையெனப்பறவையாலுமே.

* திருச்சிற்றம்பலக் கோவையார், உகூச.

பொலிவெய்தப்பூம்பொய்கைசிலம்பிப்பார்ப்பெழ
மலைபடவரிந்துகூன் குயங்கைமாற்றினார்.

சம்பலம் - உரிச்சொற்றிரிவு. பொய்கை பார்ப்பெழவென இடத்து நிகழ்பொரு ளின்றொழில் இடத்தின்மேனின்றது. பட - உவமவுருபு.

இ - ள். அந்நெல்லை அரிதற்குத்தக்க வலியுடைக்கைகளாலே வருந்த வாட்க சம்பலம்பொலிவெய்துதலாற் பார்ப்புமுட்படஆரவாரித்தெழ அரிந்திட்டு வளைந்த அரி வாளை மாற்றினாரென்க.

முன் களைபறியாதவற்றை ஈண்டுக் களிப்பினாலரிந்தார். (௪௭)

வாளையின்னிளந்தலையிரியவண்டலர்
தாளுடைத்தாமரைகிழியவண்சுமை
கோளுடையிளையவர்குழாங்கொண்டேகலிற்
பாளைவாய்க்கமுகினம்பழுங்கச்சிந்துமே.

தலை - இடம். வண்டலர் - வண்டு துகைத்தலர்ந்த பாளைவாய்க்கமுகு - மடற் கமுகு.

இ - ள். தொழிற்கோட்பாட்டையுடைய இளையவர்குழாம் இரியக் கிழியச் சூட்டைச் சுமந்து போதலின் அதுபட்டுக் கமுகினம் பழுக்காய் சிந்துமென்க. (௪௮)

சோர்புயன்முகிறலைவிலங்கித்தூங்கில
மார்புகொண்டார்ந்ததுதரலவஞ்சுளை
யார்வுறுபலாப்பழமழிந்தநீள்களம்
போரினான்மலிந்துடன்பொலிந்தநீரவே.

புயல் - நீர். விலங்கி - விகாரம், விலங்கவென்க. பழம் - கனத்திற்கு அடை. நிலத்திற்குக் களம் சினையாம்.

இ - ள். முகிலைத் தலைசென்றுதடுக்கும்படி நிலத்தின்மார்பையெல்லாந் தமக்கு இடமாகக்கொண்டுநிற்கையினாலே அந்நிலம் பொறுக்கமாட்டேனென்று வாய்விடும் படி களங்களெல்லாம் போரான்மிக்குப்பொலிந்த நீரவென்க.

இனி நிலத்திலே முகிலைவிலக்கிப் பழையகூடுகள் நிறைதல்சொல்கையாலே அங்ஙனம் அவைநிறைந்தநிலம் இப்பொழுது இடுகின்ற போரைப்பொறேனென்று வாய்விடும்படியென்றுமாம். ஆர்வு கொண்டெனவே கூடுகள்பெற்றாம். (௪௯)

சடுசால்போரழித்தெருமைப்போத்தினால்
மாடுறத்தெழித்துவைகளைந்துகாலுறீஇச்
சேடுறக்கூப்பியசெந்நெற்குப்பைகள்
கோடுயர்கொழும்பொனின்குன்றமொத்தவே.

இ - ள். பெருமைநிறைந்தபோரைத் தலையைத்தள்ளிப் போத்தினைப்பாய்க்கத் தேயுற உரப்பி வைக்கோலைக்களைந்து தூற்றிக்குவித்தபொலிகள் குன்றமொத்தன வென்க.

சடு - இடுதலுமாம். * "பெற்ற மெருமை புலிமரை புல்வாய் - மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே." இனிக் கரும்பின்செய்திகூறுகின்றார். (௫0)

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், சுக.

கரும்புகண்ணுடைப்பவராலைதோறெலாம்
விரும்பிவந்தடைநதவர்பருகிவிஞ்சிய
திருந்துசாறடுவுழிப்பிறந்ததீம்புகை
பரந்துவிண்புகுதலிற்பரிதிசேந்ததே.

இ - ள். கரும்பைச் சாறுகொள்வாருடைய ஆலைதோறும் அடைந்துவந்தவரெல்லாம்பருகி மிக்கசாற்றைப் பாகுசெலுந்துமிடத்துப்பிறந்தபுகை விண்ணிலே பரந்துசேறலிற் பரிதிசிவந்ததென்க.

எல்லாமென்ப திருதிணைக்கும் பொது. பருகுதலிற் றிருந்திற்று.

இனி இங்ஙனம் ஒருக்கினபண்டங்களைக் கொண்டுபோகின்றமை கூறுகின்றார். (௩௩)

க.* திணைநிலைப்பொருநர் தந்தசெல்லலகீழ்ப்படப்
பணைநிலையாய்செந்நெற்பகரும்பண்டியுங்
கணைநிலைக்கரும்பினிற்கவரும்பண்டியு
மணநிலைமலர் பெய்துமறுகும்பண்டியும்.

இதுமுதல் மூன்றுகவியு மொருதொடர்.

உழவர் திணைப்பொருநராது மிடிதீரக்கொடுத்து மிக்கநெல்லை விற்றற்குக்காரணமான பண்டியும், கரும்பினின்று பாகுமுதலியன கொண்டுபோம் பண்டியும், மலர்பெய்து போம்பண்டியு மென்க. பணை-விகாரம். நிலை - நிலைபெறுதல். ()

உ. மல்லலைநதெங்கினிளநீர்பெய்பண்டியு
மெல்லிலைப்பண்டியுங்கமுகின்மேதகு
பல்பழுக்காய்க்குலைபெய்தபண்டியு
மொல்குதீம்பண்டம்பெய்தொழுகும்பண்டியும்.

இளநீர்பெய்த பண்டியும், வெற்றிலை பெய்த பண்டியும், பழுக்காய்பெய்த பண்டியும், குழையும் இனியபழம்பெய்து இடைவிடாதுபோம்பண்டியுமென்க. மெல்லிலை - விணைத்தொகை. (௩௩)

௩. கருங்கடல்வளந்தரக்களையும்பண்டியு
நெருங்குபுமுதிரையினிறைநதபண்டியும்
பெருங்கலிப்பண்டிகள்பிறவுஞ்செற்றுபு
திருந்திபெத்திசைகளுஞ்செறிந்தவென்பவே.

கடல்வளமாவன "ஓர்க்கோலை சங்க மொளிர்பவளம் வெண்முத்த - நீர்ப்படு முப்பினோ டைந்து." செற்றுபு என்றுமெச்சம் ஒலியையுடையவென்னும் வினையொடு கூடும். நெருங்குபு - நிகழ்காலமுணர்த்தும். உம்மை மாறுக.

இ-ள். முற்கூறிய பண்டிகளும், வளத்தை நகர்க்குத் தருதற்கு முழங்கும்பண்டியும், நெருங்கி முதிரையானிறைந்தபண்டியும், ஒழிந்தபண்டங்கள்செற்றி ஒலியையுடையபண்டிகளுந்திருந்தி எத்திசைகளுஞ் செறிந்தனவென்க.

நகர்க்கையும் பாடமாயிற்கறைதல் திசைச்சொல்லாய்க் கொண்டுபோமென்னும் பொருள்பயக்கும். (௩௪)

கிளிவளர்பூமருதணிந்துகேடிலா
வளவயல்வைகலுமின்னதென்பதேன்

றுளியொடுமதுத்துளியறாதசோலைசூ
ழொளியமையிருக்கையூருனொக்கநின்றவே.

கேடு "விட்டில்கிளி நால்வாய் வேற்றரசு தன்னரசு, நட்டம் பெரும்பெயல் கா லெட்டு." தேன் - வைத்ததேன். மது - பூவின்மது.

இ - ள். மருதணியப்பட்டுக் கேடில்லாதவயல் நாடோறும் இத்தன்மைத்து; இனி யான்கூறுநற்குநின்றன குடியிருப்பையுடைய நாட்டிலூர்களென்க.

என்ப - அசை. (ருரு)

வேறு.

சேவலன்னதாமரையின்றோடவிழ்ந்தசெவ்விப்பூக்
காவிற்கூடெடுக்கியகவ்விக்கொண்டிருந்தவே
தாவில்பொன்விளக்கமாத்தண்குயின்முழவமாத்
தூவிமஞ்ஞைநன்மணம்புகுத்துந்தும்பிக்கொம்பரோ.

எடுக்கிய - எடுத்தற்கு. தா - வலி. தூவி - தூட்டு. மணம் - பூவின் மணமும் கலியாணமும்.

இ - ள். தும்பியையுடைய கொம்புகள், சேவலாகிய அன்னம் பூவைக்கவ்வி யிருந்தன, அவ்வன்னம் விளக்காகக் குயில் முழவாக மயிலை மணந்தே புகுத்தி விடுமென்க.

தாமரையாகுங் குயிலோசையாகு இளவேனிலென்றுகருதி மயில் பூம் பொதும்பரின்மறைதலிற் கொம்பு புகுத்துமென்றும். பெடைத்தோகைமயிலுடசேர விருந்தன வென்றுணர்க.

இனி மயில் அன்னம்விளக்காகக் குயில்முழவாகத் தும்பியைக் கொம்பிடத் தேமணம்புகுத்துமென்றுமாய். கொம்பிடலாவுமயில் விளக்காகுமுழவாகும் அக கொம்பினின்றும்போந்தாடுதலின் அக்கொம்பிற்பூவின்மணத்தே தும்பியைப் புகுதவிட்டதாயிற்று. மெல்லிய ஓசையன்னமயிற் குயிலோசையைப்பறையாது முழவாகக் கருதிற்று. இதற்கு இக்கருத்து நிகழ்தல் * "படமைக்குயின்ற" என்னும் அகப்பாட்டிற் காண்க. (ருசு)

கூடினார்கணம்மலர்க்குவளையங்குழியிடை
வாடுவள்ளைமேலெலாம்வாளையேறிப்பாய்வன
பாடுசால்கயிற்றிற்பாய்ந்துபல்கலமொலிப்பப்போந்
தாடுகூத்தியாடல்போன்றநாளைகாண்பவொத்தவே.

இ - ள். கண்போலுஞ் செவ்விமலரையுடைய குவளையோடையில் நீர்தாழ தலிற் சிறிதுவாடின வள்ளைமேலெல்லா வாளைமீன்களெல்லாம் பாய்கின்றவை, கழாயினின்றும் இழிந்து பக்கத்தினமைந்த கயிற்றின்மேல் ஏறிநடக் கலனொலிப்ப ஆடுங்கூத்தியது கூத்தையொத்தன; ஈளையில்ருந்தாரைகள் காண்பனபோன்றன வென்க.

குவளைக்குழியில் நாட்டினகழாயும் அதிற்படர்ந்தகொடியும் அதிற்பாய்கின்ற மீனும், கழாயும் அதன்கீழிழிந்தாடுங்கயிறும் அக்கூத்தியும் போன்றன. வடிவுந் தொழிலும் உவமம். காண்ப - அகரஈற்றுப் பலவறிசொல்; தொழிற்பெயராய்நின்றது.

* அகநானூறு, அஉ.

காவியன்னகண்ணினார்கயந்தலைக்குடைதலி
னாவியன்னபூந்துகிலணிந்தவல்குற்பல்கலை
கோவையற்றுதிர்ந்தனகொள்ளுநீரின்மையின்
வாவியாவும்பொன்னணிந்துவானம்பூத்தவொத்தவே.

இ - ள். மகளிர் கயந்தலையிடத்தே விளையாடுதலின் பலகலைகள் வடமற்று உதிர்ந்தன; அவற்றை எடுப்பாரின்மையின் வாவிகளெல்லாம் பொன்மாலையையணிந்து, வானம் மீன்பூத்த தன்மையையொத்தன வென்க.

பொன் - ஆகுபெயர். மேகலையுதிர்ந்தாலவை அற்றுவீழ்ந்தன. கயந்தலை - விகாரம். (௩௮)

பாசவலிடிப்பவுலக்கைவாழைப்பல்பழ
மாசினிவருக்கையாதழுந்துதேங்கனியுதிர்த்
தூசலாடுமைபைங்கமுகுதிரத்தெங்கின்பழம்பரீஇ
வாசந்தாழைசண்பகத்தின்வான்மலர்கணக்குமே.

இ - ள். உலக்கை வாழைப்பழத்தை உதிர்த்து ஆசினிமுதலியவற்றை முறித்து அவற்றின்பழங்களையும் உதிர்த்துப் பின்னும்பைசின்ற கமுகின் பழத்தையுந் தெங்கின்பழத்தையும் பறித்து தாழையலரையுஞ் சண்பகத்தின்மலரையு நக்குமென்க.

எனவே விளையவும் பயன்படுமென உண்மை கூறினார். இத்துணையுஞ் சோலைகளும் அவற்றிற்கு அயலான வயல்களையுங் கூறினார். (௩௯)

மங்குறுநிலவுந்திமேய்ந்துமாமுலைசுரந்தபா
லின்றதாரையாலிலநனைப்பவேகிகீன்மனைக
ன்றருந்திமங்கையர்கலநிறைம்பொழிதர
நின்றமேதியாற்பொலிந்தநீரமாடமாலையே.

இலஞ்சு - மசி; ஆகுபெயர். கிளை - சால்; "பிறவாய் பரந்தசீரநு நிறைமுதல்" என்றார் பிறரும். மாலை - ஒழுங்கு

இ - ள். மடுவை மேய்தலாற் சுரந்தபால் நிலத்தை நனைக்கும்படி மாறாதுநின்ற தாரையாலே கன்றை நினைத்துப்போய் அதனைஅருத்தி மங்கையரெடுத்த கறவைக் கலமும் அதனினின்றும் பால்சொரியுஞ்சாலும் வழியும்படிநின்ற மேதியாலே பொலிந்த தன்மைய வென்க. (௪௦)

வெள்ளிப்போழ்விலங்கவைத்தனையவாய்மணித்தலைக்
கொள்பவளங்கோத்தனையகாலகுன்றிச்செங்கண
வொள்ளகிற்புகைதிரண்டதொக்குமாமணிப்புறாக்
கிள்ளையோடுபாலுணுங்கேடில்பூவைபாடவே.

மா - பெருமை. மணி - அழகு.

இ - ள். அம்மாடத்திலே வெள்ளித்தகட்டை விலங்குதலாக வைத்தன்ன வாயினையுந் தலையினையும் அகிற்புகை திரண்டதனை யொக்கு நிறத்தினையுமுடைய புறாக் காலவாய்ச் சுன்னவாய்ப் பூவைபாடாநிற்கக் கிள்ளையோடே பாலுண்ணு மென்க.

கொள்ளுதல் - அழுத்துகொள்ளுதல். நடுவுபலவணையுங்மையிற் கோத்த வென்றார். ஒள்ளகில் அதற்கொளி. இம்மாடப் பிள்ளைகள்பாலுண்டாரென்பதுந் தோன்றிற்று. (௪௧)

காடியுண்டபூந்துகில்கழுமவூட்டும்பூம்புகை
மாடமாலைமேனலார்மணிக்குழலின்மூழ்கலிற்
கோடுயர்ந்தகுன்றின்மேற்குழீஇயமஞ்ஞைநஞ்சிற
காடுமஞ்சினுள்விரித்திருந்தவண்ணமன்னரே.

இ - ள். காடியுண்டதுகில் புகையிலே மயங்குதலாலே மாடவொழுங்கின் மேலிருக்கின்ற நல்லாருடைய குழலினூட்டும் புகையிலே, அக்குழன் மறைதலின் அவர்கள் மலைமேற்றிரண்ட மயில்கள் நஞ்சிறகை அவ்விடத்து உலாவு மஞ்சினுள்ளே விரித்திருந்த தன்மையை யொப்பாரென்க.

காடி - கஞ்சி. சுட்டு வருவிக்க. அன்னதென்ற பாடத்திற்கு மூழ்குதல் வண்ணமென்னது அன்னதென்க. (௪௨)

கண்ணுளார்நுங்காதலரொழிககாமமீங்கென
வுண்ணிலாயவேட்கையாலூடினாரையாடவர்
வண்ணமேகலைகளைப்பற்றவற்றுதிர்ந்தன
வெண்ணில்பொன்சுடுநெருப்புக்கமுற்றமொத்தவே.

இ - ள். நும்மாற்காதலிக்கப்பட்டமகளிர் நுங்கண்ணுள்ளார் ஈங்குக் காமத்தை யொழிகவென்றுகூறி உள்ளேநிலைபெற்ற விருப்பத்தாலே ஊடிப்போகின்றவரைக் கணவர்மேகலைகளைப்பிடிக்க, அவை அற்றுச்சிந்தினவைகிடந்தஇடம் மாற்றற்ற பொன்னைச் சுடுநெருப்புச்சிந்தின முற்றங்களையொத்தன வென்க.

இமையாதுநோக்கலின் இங்ஙனம்ஊடினார். ஈங்குத் தன்மையையுணர்த்துதல் *“செலவினும் வரவினும்” என்னுஞ்சூத்திரத்திற் கூறினாம். பொன்னுக்குமணிக்குந் தழலுங் கரியுமுவமை. (௪௩)

கோட்டிளந்தகர்களுங்கொய்மலரதோன்றிபோற்
சூட்டுடையசேவலுந்தோணிக்கோழியாதியா
வேட்டவற்றதூறுள்ளார்வெருளிமாந்தர்போர்க்கொளீஇச்
காட்டியார்க்குங்கௌவையுங்கடியுங்கௌவைகௌவையே.

இ - ள். செல்வச்செருக்கினையுடையமாந்தர் அவற்றினது புண்ணைக்கருதாராய்ப் பின்னும்போரைவிரும்பித் தகர்களையுஞ் சூட்டுடையதோணியில்வந்த கோழிமுதலாவுள்ள கோழிகளையும் பூழ்முதலிய சேவல்களையுங் காட்டிக்கொளுத்தி ஆர்க்குங் கௌவையும் விலக்குங் கௌவையுமே அவ்விடத்திற் காரவாரமென்க. (௪௪)

இறுநுசுப்பினங்கலாரேந்துவள்ளத்தேந்திய
நறவங்கொப்பளித்தலினாகுபுன்னைபூத்தன
சிறகர்வண்டுசெவ்வழிபாடமாடத்தூடெலா
மிறைகொள்வானின்மீனைவரம்பைமுலையினிருந்தவே.

“நாகுபுன்னை” வேற்றுமைத்தொகையாய் †“ஒற்றிடையின் மிகாமொழியும்” என்னுஞ்சூத்திரத்தான் ஒற்றடாது நின்றது. ‡“சொல்லியமரபின்” என்னுஞ்சூத்

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், ௨௮.
† ,, எழுத்ததிகாரம், குற்றியலுகரப்புணரியல், ௭.
‡ ,, பொருளதிகாரம், மரபியல், ௨௬.

திரத்திற் "சொல்லுங்காலை" என்றதனால் நாகு பெண்மையேயன்றி இளமையு முணர்த்திற்று ; "நாகுமுதிர் நுணவம்" என்றார் பிறரும். இறை - தங்குதல். அரம்பை - ஆகுபெயர்.

இ - ள். நல்லார் மணிவட்டிலிலே எடுத்தநறவத்தைக் கொப்புளித்தலிற் புன்னைகள் மாடத்தூடெலாம் வண்டுபாடும்படி மீனெனப்பூத்தன ; அவர் கொப்புளித்தலின் வாழைமுகை முலைபோலே இருந்தன வென்க. (சரு)

விலக்கில்சாலையாவர்க்கும்வெப்பின்முப்பழச்சுனைத்
தலைத்தணீர்மலரணிந்துசந்தனஞ்செய்பந்தருங்
கொலைத்தலையவேற்கணார்கூத்துமன்றியைம்பொறி
நிலத்தலையதுப்பெலாநிறைதுளும்புமூர்களே.

நோயறுத்தற்குக் கடு நெல்லி தான்றி கூட்டியளாப்பார்கள். தலைய - இரண்டிடத்தும் வினைக்குறிப்பு.

இ - ள். நாட்டிலூர்கள், யாவர்க்கும் விலக்குதலில்லாத அடிசிற்சாலை முதலியனவும், வெம்மையில்லாத சுனையிற் காலையிலெடுத்த தணணீரிலே பூவுமிட்டுச் சந்தனமுமிட்ட தண்ணீர்ப்பந்தரும், கூத்தாடுமிடமுமொழிய ஐம்பொறிநிலத்திடத்தனவாகிய நுகரும்பொருள்களெல்லாம் நிறைந்துததும்பு மென்க.

இவை அரசனறம். (சசு)

அடிசில்வைகலாயிரமறப்புறமுமாயிரங்
கொடியனார்செய்கோலமும்வைகலாறுமாயிர
மடிவில்கம்மியர்களோடுமங்கலமுமாயிர
மொடிவிலவேறாயிரமோம்புவாரிலோம்பவே

வேறாயிரமும் இல்லையும் விகாரம். அறப்புறம் என்பதற்கு ஓதுவிக்குஞ் சாலையென்பதும் ஒன்று. ஒடிவு - தவிரவு ; "ஒடியாவிழா" என்றார் பிறரும்.

இ - ள். அவ்வூர்களில் நாடோறுங்காணப்பட்ட வைகுதலையுடைய அடிசிற்சாலையும் ஆயிரம் ; அறத்திற்குவிட்ட இறையிலிநிலங்களும் ஆயிரம் ; மகளிர் கோலஞ்செய்யுமிடமும் ஆயிரம் ; தொழிலின்மடியாத கம்மியருமாயிரம், கலியாணமுமாயிரம் ; வெவ்வேறாகிய ஆயிரம் பாதுகாப்பாராற் காத்தலிற்றவிர்தலில்லையென்க. ()

நற்றவஞ்செய்வார்க்கிடந்தவஞ்செய்வார்க்குமஃதிடம்
நற்பொருள்செய்வார்க்கிடம்பொருளசெய்வார்க்குமஃதிடம்
வெற்றவின்பம்விழைவிப்பான்விண்ணுவந்துவீழ்ந்தென
மற்றைநாடுவட்டமாகவைகுமற்றநாடரோ.

இ - ள். அவ்வேமாங்கதமென்னும்நாடு, வெற்றியையுடைய தனதின்பத்தை உலகை விரும்பப்பண்ணுதற்கு விண் மகிழ்ந்துவீழ்ந்ததென்னும்படி தன்னையொழிந்தநாடு தனக்குளல்லையாக வைகும். அதுவீடுபெறத்தவஞ்செய்வார்க்கு இடம்; மறுமைகருதி இல்லறநடத்துவார்க்கும் இடம்; அது நற்பொருளைப்பயக்குங்கல்வியைக் கற்பார்க்கு இடம்; நிலையாதபொருளைத் தேடுவார்க்கு மிடமென்க.

உம்மையிரண்டும் - இழிவுசிறப்பு. வெற்றம் - வெற்றி. "ஊருணாக்கநின்ற" என்ற கவிமுதலாக முடித்த வினைகளைச் சேர்த்து அவற்றையடைய நாடு விண்வீழ்ந்தென வைகும்; அது இவை செய்வார்க்கிட மென்க. (சஅ)

## நகர்வளம்.

கண்வலைக்காமுகரென்னுமாபடுத்
தொண்ணிதித்தசைதழீஇயுடலம்விட்டிடும்
பெண்வலைப்படாதவர்பீடிரேங்கிய
வண்ணலங்கடிநகரமைதிசெப்புவாம்.

இ - ள். கண்ணாகிய வலையாலே காமுகரென்னும் விலங்கை அகப்படுத்து நிதியாகிய தசையைக் கைக்கொண்டு உடலைக் கைவிடும் பெண்ணினுடைய சூழ்ச்சியில் அகப்படாத முனிவருடைய தவப்பயன்போலே செல்வமோங்கிய இராசமாபுரத்தின் நிறைவு கூறுவாமென்க.

அம் - சாரியை. (சகூ)

விண்புகுவியன்சினைமெலியப்பூத்தன
சண்பகத்தணிமலர்குடைந்துதாதுக
வண்சிறைக்குயிலொடுமயில்கண்மாறுகூய்க்
கண்சிறைப்படுநிழற்காவுசூழ்ந்தவே

இ - ள். குயில்கள் பூத்தனவாகிய சண்பகத்தின்மலரைத் தாதுகக்குடைந்து மயிலோடேமாறுகக்கூவி, நோக்கினார்கண்கள் மீளாத நிலைமையுடையகா அந்நகரைச் சூழ்ந்தனவென்க.

மெலிய - வளைய. காரகாலத்துமயிலின்களிப்பைத் தான் உட்கொடலின் மாறென்றார். மயிலொடென மாறுக. செய்தெனெச்ச விடுக்கு *"அம்முக்கிளவி" என்னுஞ் சூத்திரத்திற் பிறவினைகொள்ளுமென்றதனாற் பிறவினையாகிய உடைய வென்னும் குறிப்பினைக்கொண்டது. இகரவீறு திரிந்தது. இனி மேலிற்கவிக்கும்பொருந்த மயிலை உவமத்தொகைக்கண்வந்த ஆகுபெயரென்று மகளிராக்கி மகளிர் குயிலொடுமாறு கூவினரென்றுரைப்பதும் பொருள். இனிச் சண்பகத்தின் தேன்றுளித்தலிற் காரென்று மயிலொடுமயிலும், வேனிலாதலிற் குயிலொடுகுயிலுங் கூவினவென்றுமாம். சிறுபான்மை மயில் கூவிற்றென்றலு மரபு (ரு0)

கைபுனைசாந்தமுங்கடிசெய்மாலையு
மெய்புனைசுண்ணமும்புகையுமேவிய
நெய்யொடுகுங்குமநிறைந்தநாணிறும்
பொய்கைகள்பூம்படாம்போர்த்தபோன்றவே.

மேவியநெய்-பூசினபுழுகு குங்குமம் - குங்குமமும். இவை குளிப்பார் அணிந்தன.

இ - ள். சாந்தமுதலியன நிறைந்த பொய்கைகள் நாணத்தாலே பொலிவினையுடைய படாம்போர்த்ததன்மையை யொத்தனவென்க.

இனிப் பிறர்மாசுபட்டதென்னுநாணாலே பூவாகியபடாம்போர்த்ததுவுமாம்

க. கடிநலக்கரும்பொடுகாய்நெற்கற்றையின்
பிடிநலந்தழீஇவரும்பெருங்கைக்குஞ்சர
மடிநிலையிருப்பெழுவமைந்தகன்மதிற்
புடைநிலைவாரிகள்பொலிந்தசூழ்ந்தவே. (ருஉ)

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வினையியல், கூச.

௨. சலசலமும்மதஞ்சொரியத்தத்தமுட்
கொலேமருப்பிரட்டைகள்குளிப்பப்பாய்ந்திரு
மலேதிளேப்பனவெனநாகமான்றபோர்
குலவியநிலேக்களங்கோலமார்ந்தவே.

இவையிரண்டுமொருதொடர்.

இன்பிடி - கவளம். அடியிளகாதுநிற்றலேயுடைய கணையமமைந்தவாரி. சலசல-முழக்கம். தம்மிற்போர்செய்வன இரண்டுமலேயென்னும்படி யானைகள் ஓசைபடமும்மதஞ்சொரிதலாலே இரண்டுகொம்புந் தைத்தமறையப் போர்செய்தற்கு வளேந்த நிலேபெற்றகளம்.

இ - ள். சூழ்ந்த கன்மதிலின் உட்புடைநிலேயிலே கரும்புமுதலியவற்றின் நலத்தை விரும்பிவருங் குஞ்சரநிற்றலேயுடைய கூடங்களும் பொலிந்த; அக்குஞ்சரம் போர்செயதற்குச் சமைந்த களங்களுங் கோலமார்ந்தனவென்க. (௫௩)

முத்துடைவெண்மருப்பீர்ந்துமொய்கொளப்
பத்தியிற்குயிற்றியமருங்கிற்பல்வினைச்
சித்திரக்கிம்புரிவைரஞ்சேர்த்துந
ரொத்தியல்டங்களுமொழுங்குநீண்டவே

பத்தியாங்கிலே பலவினைகளைக்குயிற்றிய நல்ல கிம்புரி. இன் - அசை

இ - ள். மருப்பையறுத்துக் கூர்மையிட்டு அது வலிகொள்ளும்படியங்கு கிம்புரியிலே வைரமிடுவார் தம்மிற்பொருந்தியிடங்களுந் தெருக்களு மொழுங்குநீண்டன வென்க.

இனிக் கிம்புரி வயிரங்கொள்கையுமாம்; ஆகுபெயர் (௫௪)

ஓடுதேர்ச்சாரிகையுகுபொற்பூமியு
மாடகமாற்றுந்தார்ப்புரவிவட்டமுங்
கேடகவாட்டொழிலிடமுங்கேடிலாக்
கோடுவெஞ்சிலேத்தொழிலிடமுங்கூடின்றே.

ஆடகத்தார் - வேற்றுமைத்தொகை. கோடுசிலே - வினைத்தொகை.

இ - ள். தேரினது கதிவிசேடத்தாலே சிந்தும் பொன்னையுடைய தேரேறுமிடமும், குதிரையேறுமிடமும், கேடகத்தோடு வாட்டொழில்செய்யுமிடமும், பயிற்றுதலிற் கெடுதலில்லாத விற்றொழில் செய்யுமிடமுங் கூடிற்றென்க. (௫௫)

புடைநகாதொழிலிடங்கடந்துபுக்கபி
ன்னிடைநகர்ப்புறம்பணையியம்புமோசையோர்
கடலுடைந்ததுவெனக்கலந்ததக்கடன்
மடையடைத்தனையதம்மாக்களீட்டமே.

இ - ள். புறப்படைவீட்டிற் றொழில்செய்வாரிடத்தை யான் ஒருவாற்றாற்கூறி இடைநகரினதுதன்மைகூறத்தொடங்கினபின்பு, முற்கூறிய புடைநகர்ப்புறமாகிய மருதநிலத்தே சென்றொலிக்கு மிடைநகரிேனசை கடலுடைந்த வோசையென்னும் படி அவ்விடத்தே பொருந்திற்று; அவ்வோசை பிறத்தற்குக் காரணமாகிய மாக்களீட்டம் அதன் உடைப்பை உலகு குவிந்தடைக்குந்தன்மையையொத்தது; ஆதலாலென்றாற் கூறுதலரிதென்றாரென்க.

கடந்தென்றார், கூறுதலருமைபற்றி. புகுதல் - சொல்லப் புகுதல் அடைத்தனை யது - காலமயக்கம். (௫௬)

சிந்துரப்பொடிகளுஞ்செம்பொற்சுண்ணமுஞ்
சந்தனநீரொடுகலந்துதையலார்
பந்தொடுசிவிறியிற்சிதறப்பார்மிசை
யிந்திரவில்லெனக்கிடந்தவீதியே.

இ - ள். தையலார் சிந்துரப்பொடிகளையுஞ் சுண்ணத்தையுஞ் சந்தனத்தையும் பனிநீரோடேகலந்து மட்டத்துருத்தியாலும் நெடுந்துருத்தியாலுஞ்சிதற; அவை பாரிலேகிடந்த இந்திரவில்லென வீதியிலேகிடந்தனவென்க (௫௭)

மாற்றரும்பசும்பொனின்மாடத்துச்சிமேற்
றூத்திரள்மணிக்குடநிரைத்துத்தோன்றுவ
பூத்தனவேங்கைமேற்பொலிந்துகார்நினைத்
தேத்தருமயிற்குழாமிருந்தபோன்றவே.

இ - ள். மாற்றற்ற பொன்மாடங்களினுச்சியிலே நீலமணிக்குடங்கள் நிரைத்துத் தோன்றுவன, பூத்தனவாகிய வேங்கையின்மேலே மேகத்தைநினைத்தலான் மேனோக்குதலைத்தருகின்ற மயிற்றிரள் பொலிந்திருந்தனவற்றை யொத்தனவென்க.
"எக்கழுத்தம்" என்றார்பிறரும். (௫௮)

நெடுங்கொடிநிழன்மதிநெற்றிதைவர
வுடம்புவேர்த்தினமழையுராறிநோக்கலி
னடுங்குபுநல்வரைமாடத்துச்சிமே
லடங்கிவீழ்ந்தருவியினழுவபோன்றவே.

இ - ள். கொடி மிக்குச்சென்று மதியின்றலையைத் தடவுதலின், நடுவுதிரிய மேகம் உடம்புபுழுங்கி வேர்த்து இடித்து நோக்கிப் பெய்தலினுளதாயவருவியின் கணத்தால் நடுங்காநின்று மாடத்துச்சியிலே குவிந்துவீழ்ந்து அழுவனபோலே யிருந்தனவென்க.

பிலர்கோபத்திற்கஞ்சிச் செருக்கடங்கி யழுதலென்பது போதரும். (௫௯)

பொற்சிறுதேர்மிசைப்பைம்பொற்போதக
நற்சிறாரூர்தலினங்கைமார்விரீஇ
யுற்றவர்கோழிமேலெறிந்தவொண்குழை
மற்றத்தேருருள்கொடாவளமைசான்றவே.

விரீகி - விரீஇ ஆயிற்று. மற்று - அசை.

இ - ள். நங்கைமார் நெல்லுப்பார்த்திருக்கின்றவர்கள் கோழிமேலெறிந்தகுழை சிறார் தேர்மிசைப்போதகத்தையூர்தலின் அத்தேரைப் போதல்கொடாத செல்வ நிறைந்தனவென்க. (௬௦)

மாலையும்பசும்பொனுமயங்கிவார்களைக்
கோலெயுங்குனிசிலைநுதலினாரொடு
வேலியலாடவர்விரவிவிண்ணவ
ராலயமிதுவெனவையஞ்செய்யுமே.

கணை - அலகு.

இ - ள். அவ்விடம் மாலையும் பூணும் மயங்கப்பட்டுச் சிலைபோலு நுதலினரோடே யாடவரும் கலக்கப்பட்டுத் தேவரிருப்பிட மிதுவென் றையந்தருமென்க. (சுக)

கற்சுண்ணகுநுசெய்ததோள்மைந்தர்காதலா
னற்சுண்ணப்பட்டுடைபற்றநாணினும்
பொற்சுண்ணத்தால்விளக்கவிப்பப்பொங்கிய
பொற்சுண்ணம்புறம்பணைதவழும்பொற்பிற்றே.

கல் - உலம். சுண்ணப்பட்டு - சுண்ணமணிந்தபட்டு. சுண்ணத்தால் - உருபினும் பொருளினுமெய்தமொறி ஒன்றனிலைக்களத்தொன்றுசென்றது. மகளிர் - தோன்றா வெழுவாய்.

இ - ள். மைந்தர் மகளிர்புலந்துபோவழித் தங்காதலால் அவருடையைப்பிடிக்க அதுநெகிழ்ந்தநாணாலே அவர் சுண்ணத்தைக்கொண்டு விளக்கையவிப்ப மிக்கெழுந்தசுண்ணம் புறம்பின்மருதநிலத்தேபரக்கும் பொற்பிற்றவ்விடமென்க.

காதலாரும் பாடம். (சுஉ)

நலத்தகுநானநின்றிடிக்குநல்லவ
ருலக்கைபாலுதிர்ந்தனதெங்கினொண்பழ
நிலத்தவைசொரிதலின்வெரீஇயமஞ்ஞைபோய்க்
கலத்துயர்கூம்பின்மேலாடுங்கவ்வைத்தே.

நலத்தகு - வியத்தகு வென்றாற்போல நின்றது.

இ - ள். விரும்பத்தருகின்ற சுண்ணத்தை நின்றிடிக்கு மகளிருலக்கையாற் கழன்றனவாகிய பழத்தைத் தெங்கு மடலிலேதாங்கி நிலத்தேசொரிதலின் வெரீஇய மயில்போய் அச்சநீங்கிக் கூம்பின்மேலாடுங் கௌவைத்து அவ்விடமென்க.

நானம் - ஆகுபெயர் ; அதிலே நனைத்திடித்தலின். புகாரினது ஆழத்தால் நகரளவுங்கலம்வந்தது. அரசன்விளையாடுதற்குச் சமைத்தனவுமாம். (சுந)

இட்டவெண்ணிலப்படாவகையினின்டிய
முட்டிலாமூவறுபாடைமாக்களாற்
புட்பயில்பழுமரப்பொலிவிற்றாகிய
மட்டுடைவளநகர்வண்ணமின்னதே.

மிலேச்சராதலின் ஐயறிவிற்குரிய மாக்களென்னும் பெயராற் கூறினர்.

இ - ள். போகட்டஎள்ளு நிலத்தில்வீழாததொருகூற்றாலே திரண்ட குறைவற்ற பதினெட்டுப்பாடைமாக்களாலே பழுமரப்பொலிவிற்றாகிய நகரின்செய்தி எக்காலமும் யான் முற்கூறியதன்மைத்தென்க

இதனானே நெருக்கமும் ஓசைவேறுபாடும் பயன்கோடலுங்கூறினர்.

"கடிநகரமைதிசெப்புவாம்" என்றதுமுதலாக நடுவுகூறிய வினைகளைப் "புடைநகர்த்தொழிலிடங்கடந்து" என்பதனோடு முடித்து, அதுமுதல் இடைநகரிற் கூறிய வினைகளை "இன்னது" என்பதனோடுமுடிக்க. (சுச)

தங்கொளிநித்திலத்தாமஞ்சூடிய
வெங்களியிளமுலைவேய்க்கண்மாதரார்

பைங்கிளிமுன்கைமேற்கொண்டுபார்ப்பெனுங்
கொங்கொளிர்தாமரைக்கிடங்குகூறுவாம்.

சூடியவென்றார் முலைமுடிசூடிற்று என்றாற்போல. வெம்மை - விருப்பம். மேல் தாமரைகூறுதலிற் பார்ப்பு - அன்னப்பார்ப்பு.

இ-ள். மாதரார் கிளியை முன்கையிலேகொண்டு மாடங்களிலேநின்று பார்ப்பை அக்கிளிக்கு எண்ணிக்காட்டுதற்குக்காரணமாகிய கிடங்கினைக் கூறுவாமென்றா ரென்க. (௬௫)

கோட்சுறாவினத்தொடுமுதலைக்குப்பைக
ளாட்பெறாதிரிதரவஞ்சிப்பாய்வன
மோட்டிறாப்பனிக்கிடங்குழக்கமொய்த்தெழுந்
தீட்டறாப்புள்ளினமிரற்றுமென்பவே.

இ - ள். சுறாவினத்தோடே முதலைத்திரள் கரையிலேவந்த ஆளை எதிர்ப்படப் பெறாவாய் உள்ளேதிரிதருதலான், அதற்கஞ்சி விசைத்துப்பாய்வனவாகிய இறா உழக்குதலின் ஈட்டமறாத புள்ளினம் எழுந்தரற்றுமென்க.

முன்னே கழியவுணர்ந்தமைபெறுதலிற் சுறவுகூறினார். கரையில்அஞ்சி ஆழத்திற்சென்றால் ஆளைக்கொல்லுதல் அவற்றிற்குத்தொழில். (௬௬)

சிறையனப்பெடையினோடிச்சேவல்போ
யறுபதவண்டினமார்ப்பத்தாமரை
யுறைவதுகுழுவினினீங்கியோகொடு
கறையறமுயல்வதோர்கடவுளொத்ததே.

இ - ள். அன்னப்பெடையினோடே சேவலூடிப்போய் வண்டினமெழுந்தார்ப்பத் தாமரைப்பூவிலே குவிந்திருக்கின்றது, சுற்றத்தினின்றுநீங்கிக் கறையறத் தீயிடை நின்று யோகத்தோடு தவஞ்செய்வதோர்கடவுளையொத்ததென்க.

கறை - மும்மலமும். யோகம் - திரிந்தது. எழுந்தவண்டு புகைக்கும், பூ நெருப்பிற்கு முவமம். (௬௭)

அரும்பொனும்வெள்ளியுமணியுமல்லது
கருங்கலந்தோய்விலாக்காமர்பூந்துறை
குரும்பைமென்முலையின்மேற்குலாயகுங்குமம்
விருந்துசெய்திடவெறிமேனிசேர்ந்ததே.

இ - ள். குளிப்பார்முலையிற்குங்குமம், தன்னைப் புதுமைசெய்தலாலே பொற்குடமுதலியனமுகத்தலல்லது மட்குடமுகவாத துறை மேனிசிவந்ததென்க.

பொன்முதலியகாரணப்பெயர் அவற்றானியன்றகாரியத்தின்மேனின்ற ஆகுபெயர். வெறி - மணம். (௬௮)

பட்டவர்தப்பலிற்பரவையேந்தல்கு
லட்டொளியரத்தவாய்க்கணிகையல்லது
மட்டுடைமணமகண்மலர்ந்தபோதினுங்
கட்டுடைக்காவலிற்காமர்கன்னியே.

உருக்கி ஒளியையுடைய அரத்தம். மட்டு - காமபானம். கட்டு - கற்பித்தல்.

இ - ள். அகப்பட்டவரைக் கரையேறுமற்கோறலிற் பரத்தையையொக்கும்; அதுவொழிய மலர்ந்தபூவினுள் மணஞ்செய்த குலமகளையொக்கும்; காவலாற் கன்னியையொக்குமென்க. (௬௯)

> நிரைகதிர் நித்திலங்கோத்துவை த்தபோல்
> விரைகமழ்கமுகின்மேல்விரிந்தபாளையுங்
> குரைமதுக்குவளைகள்கிடங்கிற்பூத்தவு
> முரையினேரோசனையுலவிநாறுமே

குரைமது - வினைத்தொகை. உரை - புகழ். புகழால் எங்குமுலாவி.

இ - ள். நித்திலத்தை நகக்கோத்துவைத்தபோற் கரையிற் கமுகின்மேல்விரிந்த விரைகமழ்பாளையும், அகழிற்பூத்தகுவளையும் உலாவி நூரோசனைநாறுமென்க. (௭0)

> தாய்முலைதழுவியகுழவிபோலவு
> மாமலைதழுவியமஞ்சுபோலவு
> மாய்முகிறழீஇயசும்பருந்தநெற்றிய
> சேயுயர்மதில்வகைசெப்புகின்றதே.

இ-ள். நீர்சுமந்திளைத்த மேகத்தைத் தன்னிடத்தே அணைத்தலாலே, குழவியை அணைத்த தாயுடையமுலைபோலவும், மஞ்சைத்தன்னிடத்தே அணைத்த பெரியமலை போலவும், அசும்பருந்தலையையுடைய மதிலின்கூறுபாடு இனிக் கூறுகின்றதென்றாரென்க. (௭௧)

வேறு

௧. மாற்றவர்மறப்படைமலைந்துமதில்பற்றி
னூற்றுவரைக்கொல்லியொடுநூக்கியெறிபொறியுந்
தோற்றமுறுபேய்களிறுதுற்றுபெரும்பாம்பு
கூற்றமனகழுகுதொடர்குர்தமொடுகோண்மா.

இத்தும்முதலாகக் "கரும்பொடாள்" அளவுமொருதொடர்

நூற்றுவரைக்கொல்லி - சதக்கினி; நூறுபேரை ஒருகாற் கொல்வதொருபொறி. பகழி - தள்ளி. எறிதல் - உடைத்தல்; "சேரியம் பெண்டிர் நெஞ்சத்தெறிய" என்றாற் போல. தோற்றமுறுபேய் - கட்புலனுகியபேய். துற்றுதல் - விழுங்குதல். தொடர் - ஆவச்சுசங்கிலி. குர்தம் - விட்டேறு. கோண்மா - புலிமுதலியன. இவற்றிற்கு எண்ணும்மைவிரிக்க. (௭௨)

௨. விற்பொறிகள்வெய்பவிடுகுதிரைதொடரயில்வாள்
கற்பொறிகள்பாவையனமாடமடுசெந்தீக்
கொற்புனைசெய்கொள்ளிபெருங்கொக்கெழில்செய்கூகை
நற்றலைகடிருக்கும்வலிநெருக்குமரநிலையே.

விடுகுதிரை - பகைவர்மேலே விடுங்குதிரைப்பொறி. தொடரயில்வாள்-தாமேதொடர்ந்துகொல்லும்வாள். கற்பொறி - இடங்கணிமுதலியன. பாவையும் அன்னமும் மாடங்களும் அடப்படுந்தீயும். மாடம் - நாடகசாலை. கொல் - கொற்சாதி. காய்ந்த இரும்புடன் கொள்ளுதலிற் கொற்புனைசெய்கொள்ளியென்றார். எழில் - இகழ்ச்சிக்குறிப்பு. தலைகளைத்திருகிக்கொள்ளும்வலியுடைனைநெருக்குமரமாலையையுவித்துலாம். இவற்றிற்கும் உம்மைவிரிக்க. (௭௩)

௬. செம்புருகுவெங்களிகளுமிழ்வதிரிந்தெங்கும்
வெம்புருகுவட்டுமிழ்வவெங்நெய்முகந்துமிழ்வ
வம்புமிழ்வவேலுமிழ்வகல்லுமிழ்வவாகித்
தம்புலங்களால்யவனர்தாட்படுத்தபொறியே.

எவ்விடத்துந்திரிந்து செம்புருகினநீரை உமிழ்வனவும், பகைவர் வேதற்குக்காரணமான உருகுவட்டைஉமிழ்வனவும், நெய்யைஉமிழ்வனவுமாக யவனர்இயந்திரித்த பொறியும். உம்மை விரிக்க. ஆகி - ஆக. புலம் - அறிவு. (எச)

எ. கரும்பொனியல்பன்றிகதநாகம்விடுசகடங்
குரங்குபொருதகரிஞெடுகூர்ந்தரிவநுண்ணூல்
பரந்தபசும்பொற்கொடிகள்பதாகையொடுகொழிக்குந்
திருந்துமதிறெவ்வர்தலைபனிப்பத்திருந்தின்றே.

இரும்பான்இயன்ற பன்றி. நாகம் - விடவரவு. நூல் - அரிகயிறு. பதாகை-பெருங்கொடி.

இ - ள். பொற்கொடிகள் பதாகையொடு கொழிக்குந் திருந்துமதில், மாற்றலர் மறப்படை அகழைக்கடந்து தன்னைப்பற்றின் அத்தெவ்வர் தலைபனிக்கும்படி நூற்றுவரைக்கொல்லிமுதல் மரநிலையீறாகவுள்ளவையும், செம்புருகு களிமுதலியவற்றையுமிழ்வனவாக யவனர்தாட்படுத்த பொறிகளும், பன்றிமுதல் நுண்ணூலீறாயுள்ளவையுந் திருந்திற்றென்க.

மதில் இன்னதுமின்னதுந்திருந்திற்றெனச் சினைவினைமுதலொடுமுடிந்தது. பற்றிற்பனிப்பவென்க; இத்தொடர்நிலையிற் சொற்களைத்துணித்துப் பலவிடத்தினுமெடுத்துக்கூட்டியது செய்யுளுறுப்பிருபத்தாறினு மாட்டென்னுமுறுப்பாதலின். *"அகன்றுபொருள்கிடப்பினு மணுகியநிலையினு, மியன்று பொருண்முடியத்தந்தனருரைத்தன், மாட்டெனமொழிபபாட்டியல்வழக்கின்" என்றும், †"மாட்டுமெச்சமு மாட்டலின்றியுடனிலைமொழியினுந் தொடர்நிலைபெறுமே." என்றுந் தொல்காப்பியனார்கூறினார். இதனால் நாடுமுதலியகவிகளின் மாட்டின்றி யுரைனவுங்கொள்க. இப்பயிதி மேல்வருவனவற்றிற்குங்கொள்க. (எரு)

வயிரவரைகண்விழிப்பபோன்றுமழையுகளும்
வயிரமணிந்தாழ்கதவுவாயின்முகமாக
வயிரமணிஞாயின்முலைவான்பொற்கொடிகூந்தல்
வயிரக்கிடங்காடைமதிற்கன்னியதுகவினே.

வரைகள் கண்விழிப்பனபோன்று கதவுடையவென வினைக்குறிப்பொடு முடிந்தது. மழையுகளும்வாயிலெனவே கோபுரமாம். ஞாயில் - எப்புழைக்குநடுவாயெய்து மறையுஞ்சூட்டு. கவினது எனமாறுக. அது இடப்பொருளுணர்த்திற்று.

இ - ள். முலையினையுங் கூந்தலினையும் ஆடையினையுமுடைய மதிற்கன்னி கதவினையுடைய நாலுவாயிலும் நாலுமுகமாகக் கவினிடத்ததாயிற்றென்க.

இனி ஆகவென்பதை எங்குங்கூட்டி மதில்இன்னது இன்னதாகக் கவினிடத்ததென்றுமாம். மதிலின்னதின்னதாகையினாலே அம்மதிற்கன்னியதாயிருக்குமழகென்றுமாம். (எகு)

* பொருளதிகாரம், செய்யுளியல், உகக.
† ,, ,, உகஉ.

செம்பொன்மழைபோன்றடிதொறுமாயிரங்கள்சிந்திப்
பைம்பொன்விளைதீவினிதிசடிந்துபலர்க்கார்த்தி
யம்பொனிலத்தேகுகுடியகநகரமதுதா
னும்பருலகொப்பததன்றன்மைசிறிதுரைப்பாம்.

இ - ள். இனிக் கூறுகின்றது பொன்விளைகின்ற தீவில் நிதியைவெட்டிப் பொன்மழைபோன்று அடிக்கடிசிந்திப் பலர்க்கும் பல ஆயிரங்களைக்கொடுத்து நிறைவித்தநிறைலே மறுமையில் தேவருலகத்திலே செல்லுங்குடியையுடைய உண்ணகரம்; அதுதான் நுகர்ச்சியான் உம்பருலகொப்பதொன்றாயினும் அதன்றன்மை சிறிதுகூறுவாமென்றாரென்க. (எஎ)

வேறு.

துப்புறழ்தொண்டைச்செவ்வாய்த்தோழியர்காமத்தூதி
னொப்பவொன்றுதியாகவாயிரத்தோரெட்டீறாச்
செப்பித்தஞ்செம்பொனல்குனலம்வரைவின்றிவிற்கு
முப்பமைகாமத்துப்பினவரிடமுரைத்துமன்றே.

இ - ள். வேட்கையினைவிளைவிக்குந் தோழியராகியதூதாலே செம்பொன்ஒன்றுதியாக ஆயிரத்தெட்டீறாகக்கூறுக, வந்தவனுக்கு ஒப்பவிலைசொல்லித் தம்மல்குலை விற்கும் உவமையில்லாத காமநுகர்ச்சியையுடைய பரத்தையரிடத்தைக் கூறுவாமென்க.

தொண்டை - வாய்க்குவமை. நலம்வரைவின்றி - ஒருவரிடத்தும் அன்புநிலைபெறின்றி. "உப்புடைமுந்நீர்" என்றார் உவர்ப்பிற்கு. உப்பு - இனிமையுமாம். இனி உவமைசொல்லாகையால் நீர்க்கு நீர்மையுளவென்று உப்பினுமாறுபோலக் கொடுக்கும் பொருளளவான அன்பென்றுரைப்ப. துப்பையொக்கும் தொண்டைபோலுஞ் செவ்வாயென இரண்டுவமையுஞ் செவ்வாயை நோக்குதலின், அடுத்துவரலுவமையன்று. (எஅ)

குங்குமமெழுகிச்சார்வாந்திண்ணையுங்குயிற்றியுள்ளாற்
றங்குமென்சாந்தத்தோடுதாமமுந்தாழநாற்றி
யெங்குநற்சுவர்கடோறுநாடகமெழுதியொப்பப்
பொங்குமென்மலர்பெய்சேக்கைபொலிந்துவிண்புகற்சியுண்டே.

இ - ள். அச்சேரிப்புறமெங்குஞ் சார்ந்திருக்குமிடத்தையுந் திண்ணையையும் பண்ணிக்குங்குமத்தாலேமெழுகி, உள்ளெல்லாம் மெழுகினசந்தனத்திலே மாலையையுந் தாழநாற்றிச் சுவர்கடோறுங் காமக்குறிப்புப்பட நாடகமெழுதிச் சேக்கைபொலிந்து விண்ணை விரும்பப்பண்ணுந்தன்மையுடைத்தென்க. (எகூ)

தூசுசூழ்பரவையல்குல்சுமக்கலாதென்னவீழ்ந்த
காசுசூழ்கோவைமுத்தங்கதிர்முலைதிமிர்ந்தசாந்தம்
வாசநற்பொடிகண்மாலைவண்டொடுவீழ்ந்தமுற்ற
மாசைப்பட்டரசுவைகவருங்கடிகமழுமன்றே.

இ - ள். தூசுசூழ்ந்தஅல்குலைச்சூழ்ந்தகோவை, இவ்வல்குல் நம்மைச் சுமக்கமாட்டாதென்று கருதினாற்போல வீழ்ந்தகாசுமுத்தும் சாந்தம் சுண்ணம் மாலை என்கின்றவை வீழ்ந்தமுற்றம் அரசு விரும்பித் தங்கும்படி கமழுமென்க. (அ0)

அஞ்சிலம்பொலியோடல்குற்கலையொலியணிந்தமுன்கைப்
பஞ்சிமெல்விரலிற்பாணிபண்ணொலிபவளச்செவ்வா
யஞ்சிநேர்ந்துயிர்க்குந்தேன்சோர்குழலொலிமுழவினோசை
துஞ்சலிலோசைதம்மாற்றுறக்கமுநிகர்க்கலாதே.

முன்பு சேடியர்கையாற் செம்பஞ்சணிந்த விரல். செவ்வாயை முன்னும்பின்னுங்கூட்டுக. வாயுறுத்தற்குஅஞ்சி உற்றபின் தன்றொழின்முடித்தற்கு நேர்ந்தூதுங் குழல்.

இ - ள். சிலம்பொலியோடே கலையொலி யாழொலி பாட்டொலி குழலொலி முழவினொலியாகிய ஒழியாவொலிகளாலே இச்சேரிக்குத் துறக்கமு மொவ்வாதென்க.

தேனுலாமதுச்செய்கோதைதேம்புகைகமழவூட்ட
வானுலாஞ்சுடர்கண்மூடிமாநகரிரவுசெய்யப்
பானிலாச்சொரிந்துநல்லாரணிகலம்பகலைச்செய்ய
வேனிலான்விழைந்தசேரிமேலுலகனையதொன்றே.

சுடரென்றது - ஞாயிற்றினதுசுடரையுந் திங்களினதுசுடரையுமாகப் பானிலாவைத் திங்களின்சுடரிற்கேற்றுக.

இ - ள். கோதையைப்புகைத்தலால்அப்புகை வானுலாஞ்சுடர்களைமறைத்து நகரைப் பகலேஇரவையுண்டாக்க, அவ்விரவை நல்லாரணிகலத்தின் மாணிக்கங்கெடுத்துப் பகற்பொழுதைச்செய்ய இயல்பானஇரவிலும் பானிலாச்சொரிந்து வானுலாவுந் திங்களின்சுடர்களை அம்மணிகளைமறைத்துப் பகற்பொழுதைச்செய்ய அச்சேரி மேலுலகை யொப்பதொன்றே யாயிற்றென்க

ஏகாரம் - தேற்றம். இரவும்பகலுமின்மையிற் றுறக்கமொத்தது. இனிப் பால் - பகுதி, நிலா - ஒளியென்று முரைப்ப; "நிலாத்தலைதிகழும்பைம்பூண்", "பணிநிலாவீசும்பைம்பொற்கொடி" என்றாற்போல. (௮௨)

இட்டநூல்வழாமையோடியோசனையெல்லைநீண்டு
மட்டுவார்மாலைவேய்ந்துசதுக்கங்கண்மலிந்தசும்மைப்
பட்டமும்பசும்பொற்பூணும்பரந்தொளிபூத்துநின்றே
னட்டுந்தாரலங்கன்மார்பராவணங்கிளக்கலுற்றேன்.

இ - ள். வலித்தநூற் செவ்வைதப்பாமற்கிடந்து நீண்டு வேயப்பட்டு நாற்சந்துகளிலே மிக்கவொலியினையுடைய அங்காடித்தெருக்கூறுத லுற்றேனென்றாரென்க.

தம் தரத்திற்கேற்பப்பெற்ற பட்டமும் பூணும் எங்கும்விளங்குதற்குக்காரணமான வணிகர் முதலாயினர். (௮௩)

மணிபுனைசெம்பொற்கொட்டைவம்பணிமுத்தமாலை
கணிபுனைபவளத்திண்கால்கம்பலக்கிடுகினூன்றி
யணிநிலமெழுகிச்சாந்தினகிற்புகைத்தம்பொற்போதிற்
றிணிநிலமணிந்துதேங்கொளையவிசிதறினாரே.

கணி - நூல்போனவன். அவன்புனைந்தகால். திணிநிலம் - படுத்த நிலம். தேங்கொளையவி - தெய்வங்கள் இனிதாகக்கொண்ட ஐயவி.

இ - ள். மணியழுத்தின பொன்னாற்செய்த கடைமணியையுடையகச்சுத்தூக்கின பவளக்காம்பைக் கம்பலம்வேய்ந்தசட்டத்திலே கொளுத்தியூன்றி மெழுகிப் புகைத்து அணிந்து சிதறினாரென்க.

முத்தமாலைபுனைந்த கிடுகு. (௮௪)

பொன்சொரிகதவுதாழ்திறந்துபொன்யவனப்பேழை
மின்சொரிமணியுமுத்தும்வயிரமுங்குவித்துப்பின்னு
மன்பெரும்பவளக்குப்பைவாலணிகலஞ்செய்குப்பை
நனபகலிரவுசெய்யுநன்கலங்கூப்பினாரே.

இ - ள். பொன் தானைசொரிதற்குக்காரணமானகதவைத்திறந்து பேழையிலிருந்த மணிமுதலியவற்றைக்குவித்துப் பின்னரும் பவளத்திரள்களையுங் குறைப்பணிகளையும் நீலப்பூண்களையுங் குவித்தாரென்க.

நன்பகல் - கடும்பகல். (௮௫)

விழுக்கலஞ்சொரியச்சிந்திவீழ்ந்தவையெடுததுக்கொள்ளா
வொழுக்கினரவர்கள்செல்வமுரைப்பரிதொழிகவேண்டா
பழுக்குலைக்கமுகுந்தெங்கும்வாழையும்பசும்பொனாலு
மெழிற்பொலி மணியினாலுங்கடைதொறுமியற்றினாரே.

இ - ள். கலத்தைச்சொரிதலாற் சிதறிவீழ்ந்தவற்றைக்கொள்ளா ஒழுக்கினர்; அதுவேயன்றி அவர்கள் நாடோறும் உண்டற்குக் கமுகு முதலியன தேடவேண்டா; அது என்னையெனின், அவற்றைப் பொன்னாலு மணியாலு மியற்றினாராதலான். அவர்கள் செல்வமென் றுரைத்தலரிது; இனி நீருங்கெட்கவேண்டுமென்னும்விருப்பத்தையொழிவீராகவென்க.

இனி உரைப்பரிதுகேட்கவிரும்பவேண்டா ஒழிகவென்றுமாம். (௮௬)

மூசுதேனிறாலின்மூசமொய்த்திரையியம்பியாங்கு
மோசையென்றுணரினல்லாலெழுத்துமெய்யுணர்தலாகாப்
பூசுசாந்தொருவர்பூசிற்றெழுவர்தம்மகலம்பூசி
மாசனமிடம்பெறாதுவன்கடைமலிந்ததன்றே.

இறாலின் மூசு தேன்போல மூச. உம்மை - சிறப்பு. ஓரோசையும் பாடம். பூசு சாந்து - நன்குமதித்த சாந்து. பூசி - பூச.

இ - ள். மாசனம் போக்கிடம்பெறாமல் ஒருவர்பூசிற்றெழுவர் தம்மகலம் பூசும்படிமூச அங்குப்பிறந்தவோசையும் மொய்த்திரைபோல இயம்பி ஓசையென்றுணர்தலன்றி எழுத்தின்வடிவுணர்தலாகாதாய்க் கடையிலேமலிந்ததென்க.

நான்குசாதியும் அநுலோமப்பிரதிலோமருஞ் சங்கரசாதியும்பற்றி எழுவரென்றார். (௮௭)

மெய்யணிசெம்பொற்சுண்ணமேதகுநானநீரி
னைதுபட்டொழுகியானையழிமதங்கலந்துசேறாய்ச்
செய்யணிகலன்கள்சிந்திமாலையுமதுவுமல்கி
வெய்தடியிடுதற்காகாவீதிகள்விளம்பலுற்றேன்.

அணிசுண்ணம் - உண்டசோறுபோனின்றது. மிச்சில்கவிழ்த்தல் மரபு. செய்யணிகலம் - அரிதிற்செய்தகலம். மாலையினுங் கலத்தினுந்தீண்டுதற்கு அடிநாணிற்று ; தமது நலத்தான்.

இ - ள். அணிந்துமிக்கசுண்ணம் நானத்தாலும் பனிநீராலும் இளகுதல்பட்டு வீதியிலொழுகலின் அதனோடுமதமுங்கலந்து மதுவுமல்கிச் சேறாய்ச் சிந்தி மல்கிவிளைய அடியிடுதற்காகாவீதிகள் கூறலுற்றேனென்க.

இவை பீடிகைத்தெருவொழிந்தன. (௮௮)

வேறு.

முழவணிமுதுநகர்முரசொடுமலிவிழ
விழவணிமகளிர்தம்விளைகமழிளமுலை
யிழையணியொளியிளவெயில்செயவிடுபுகை
மழையெனமறையினபொலிவினதொருபால்.

இ - ள். ஒருபால் முழவுநிறைந்த கோயில்களிலே முரசுமுழக்கொடும் விழவின் மிகுதியாலால் அவ்விழவிற் கொப்பித்த மகளிருடைய முலையிலணிந்த இழையின் ஒளி இளவெயிலையுண்டாக்கும்படி இட்டபுகை மழையென முகிலை மறைத்த பொலிவினையுடைத்தாயிற்றென்க. (௮௯)

குடையொடுகுடைபலகளிறொடுநெரிதர
வுடைகடலொலியினொடுறுபவர்பலசெல
முடியொடுமுடியுறமிடைதலின்விரிசுடர்
கொடியுடைமழைமினிற்குலவியதொருபால்.

உடைகடலொலி - உடைகடலொலிபோலுமொலி.

இ - ள். ஒருபால் அரசனைக்குடையுங்குடையுமாக களிறுகளிறும் பலவீநெருங்கிச் சேவித்தல் காரணமாகத் தேவருடைய பலிநடத்தலாலே, அதனைச் சேவிக்குமரசர்முடியு முடியுநெருங்குதலின் விரிசுடர் மழையின்மின்போற் குலவியதென்க.

இது செல்வமுண்டாதற்குப் பலிநடக்குமென்றார். இனிப் பலிநடத்தலிற் குடைமுதலியனநெரிதர முடிநெருங்கிற்றென்றுமாம். (௯௰)

பூத்தலைவாரணப்போர்த்தொழிலிளையவர்
நாத்தலைமடிவிளிக்கூத்தொடுகுயிலக்
காய்த்துறுதமனியத்துகளொடுகடிகமழ்
பூத்துகள்கழுமியபொலிவினதொருபால்.

பூ - தோன்றிப்பூ. காய்த்துறு - காய்த்தலுற்ற.

இ - ள். ஒருபால் கோழிப்போரின்வெற்றியைத் தமதாகவுடைய இளையவர் சீழ்க்கைக் கூத்தோடுநெருங்குதலான், அப்பொழுதுசிந்தும் பொற்றுகளும் பூத்துகளு மயங்கின பொலிவினதென்க. (௯௧)

மைந்தரொடேடியமகளிர்விளையிளையவ
ரந்துகில்பற்றலிற்காழ்சரிந்தணிகிளர்
சுந்தரநிலமிசைச்சொரிதலின்மின்னணிந்
திந்திரதிருவிலினெழிலினதொருபால்.

இ - ள். ஒருபால் கணவரோடூடியமகளிரை அவர் துகில்பற்றலிற் காசுகோவையற்று நிலத்தே விசையோடேசிந்துதலின் ஒளியையணிந்து வானவில்லினெழிலினவென்க.

சுந்தரம் - நன்மை. (௬௨)

வளையறுத்தனையவாலரிசியமைபத
மளவறுநறுநெயொடுகறியமைதுவை
விளைவமைதயிரொடுமிசைதவிர்விளையுமி
ழுளவணிகலமெனுமுழையினதொருபால்.

இ - ள். ஒருபால் வளையை நுண்ணிதாக அறுத்தாற்போன்றனவாகிய வாலிய அரிசியாலமைந்தசோற்றையும் நெய்யாலட்டகறியையும் முற்றினதயிராலமைந்த துவையினையும் மிசைகுவீராக விளையுங்கோள்? உண்டார் றருதற்கு அணிகலமுள வென்றுமுழையினரென்க.

ஒடு - என்றெடுவெயாம [illegible] பாடம். (௬௩)

வரைநிரையருவியின்மதமிசைசொரிவன
புரைநிரைகளிறொடுபுனைமணியியறேர்
விரைநிரையிவுளியொடிளையவர்விரவுபு
குரைநிரைகுளிர்புனல்யாற்றினதொருபால்.

இ - ள். ஒருபால் மலையொழுகினருவியைத் தம்மேலேசொரிந்துகொள்வன போல மதநீரைத் தம்மேலே சொரிவனவாகிய உயர்ச்சியையுடைய களிற்றொடுந் தேரிற் பூண்டாற் செலவையுடைத்தாகிய இவுளியொடும் இளையவர்விரவி நிரைத்தயாற்றினதென்க.

அருவிபோல் வீழ்கின்ற மதமென்பாருமுளர். மிசையும் பாடம். (௬௪)

வரிவளையரவமுமணிமுழவரவமு
மரிவளர்கண்ணியரணிகலவரவமும்
புரிவளர்குழலொலிபொலிமங்கலவினிய
திருவிழைகடிநகர்திறவிதின்மொழிவாம்.

புரிவளர்குழல - நரம்பிடத்து இசைவளர்தற்குக் காரணமாகியகுழல். “குழல் வழியாழ்வழீஇத்தண்ணுமைப்பின்னர், முழவியம்பலாமந்திரிகை.” விருப்பமுமாம்.

இ - ள். குழலொடு வளையரவமும் முழவரவமும் கலவரவமுங் கவினியமனை களைச் செவ்விதாகக் கூறுவாமென்றாரென்க.

இது அரசற்குரியவரிருப்பு. (௬௫)

வேறு.

பாவையன்னவர்பந்துபுடைத்தலி
னாவியன்னம்வெரீஇத்துணையென்றுபோய்க்
கோவைநித்திலமாடக்குழாமிசை
மேவிவெண்மதிதன்னொடிருக்குமே.

இ - ள். மகளிர் பந்தடித்தலின் அன்னம் அவ்வோசைக்கு வெருவி மதியை இனமென்றுகருதிக் கூடப்போய் மாடங்களின்மேலே அம்மதியோடே மேவியிருக்கு மென்க.

மதியியங்குந்தோறுந் தானுமியங்கிற்று. (௬௬)

திருவங்கீண்கர்ச்செம்பொனினீடிய
வுருவவொள்கொடியூழிறுடங்குவ
பரவைவெங்கதிர்ச்செல்வனைபைம்மயிர்ப
புரவிபொங்கழலாற்றுவபோன்றவே.

பரவை - பரத்தல்.

இ - ள். அத்திருவையுடையமனைகளில் நீடியகொடி முறையாலசைவன; செல்வன்புரவியை அழலாற்றுவபோன்றனவென்க. (௯எ)

இழைகொள்வெம்முலையீரமுலர்த்துவார்
விழையவூட்டியமேதகுதீம்புகை
குழைகொள்வாண்முகஞ்சூழ்குளிரங்கதிர்
மழையுணமாமதிபோன்மெனத்தோன்றுமே.

இழை தான்விரும்பிக்கொண்ட வெவ்வியமுலையிலே கணவர்பூசிய சந்தனமுதலியவற்றின் ஈரத்தைப்புலர்த்துவார - தொழிற்பெயர்.

இ - ள். கணவர்விழைய ஈரமுலர்த்துவாரூட்டிய புகைசூழ்முகம் மழையுட் குளிருங் கதிர்மதிபோலுமெனத் தோன்றுமென்க. (௯அ)

செம்பொற்கண்ணிசிறூர்களைந்திட்டவு
மம்பொன்மாலையவிழ்ந்துடன்வீழ்ந்தவுந்
தம்பொன்மேனிதிமிர்ந்ததண்சாந்தமும்
வம்புண்கோதையர் மாற்றுமயலரோ.

இ - ள். மகளிர் தம்மேனிதிமிர்ந்தசாந்தமும் மயிர்குலைந்துசோரவீழ்ந்தமாலையுஞ் சிறூர்களைந்த கண்ணியுஞ் சேடியர்மாற்றுந்தராலென்க.

வண்டுகள் புதுமையையுண்ட பழமாலையைச்சூடுதலிற் சேடியராயிற்று. *"கள்ளுகை விட்ட மயல்" என்றார்பிறரும். (௯௯)

வேரியின்மெழுக்கார்ந்தமென்பூநிலந்
தாரியாகவஞ்சாந்தந்தளித்தபின்
வாரிநித்திலம்வைப்பபொற்பூவொடு
சேரிதோறிதுசெல்வத்தியற்கையே.

அரி - ஐம்மை; விசாரம். ஆரி - அழகென்றுமாம்; ஆரியாக - மேலாகவென்றுமாம். மேலும் †"தளித்தசுண்ணம்" என்ப. வேரி – இருவேரியுமாம்.

இ - ள். நாற்றமுந் தோற்றமும் இனியவற்றான் மெழுகிய மெழுக்கார்ந்தவேரியையுடைய பூநிலத்தே ஐதாகத்தொழில்படச் சாந்தைப்பூசினபின்பு பொற்பூவோடு நித்திலத்தையும் வைப்பார்கள்; ஆதலிற் சேரிதோறுஞ் செல்வத்தியற்கை இத்தன்மைத்தென்க. (௧௦௦)

கருனைவாசமுங்காரிருங்கூந்தலா
ரருமைசான்றவகிற்புகைவாசமுஞ்

* நாலடியார், தூயதன்மை, ௩.
† பதுமையாரிலம்பகம், ௧௩௫.

செருமிச்சேர்ந்துகண்ணீர்வரத்தேம்பொழி
லுரிமைகொண்டனவொண்புறவென்பவே.

கூந்தலிலார்ந்த புகையெனவினைத்தொகை; பெயருமாம்.

இ - ள். புறவுகள் பொரிக்கறியினது வாசப்புகையும் அகிலினது வாசப்புகையும் செருமிக் கண்ணீர்வருதலாலே பொழிலைத் தாமிருத்தற்குரிய இடமாகக்கொண்டனவென்க. (௧0௧)

நறையுநானமுநாறுநறும்புகை
விறகின்வெள்ளியடுப்பினம்பொற்கல
நிறையவாக்கியநெய்பயிலின்னமிர்
துறையுமாநதர்விருந்தொடுமுண்பவே.

நறை - நறைக்கொடி. நானம் - தூவியெரிக்கும்புழுகு. நிறைய - மடைநூல் விதியிற்குறையாமல். விருந்து பெறற்கருமையின் உம்மை - சிறப்பும்மை.

இ - ள். வெள்ளியடுப்பிலே நறையுநானமுநாறும் நறும்புகைவிறகாலாக்கின அமுதை மாந்தர் பொற்கலத்தே விருந்தோடுமுண்பரென்க.

விறகு - சந்தனமுதலியன. (௧0௨)

பாளைமென்கமுகின்பழமெல்லிலை
நீள்வெண்மாடத்துநின்றுகொண்டநல்லா
ராளிமொய்ம்பர்க்கொடுத்தணிசண்பக
நாள்செய்மாலைநகைமுடிப்பெய்பவே.

மணமெல்லியபாளை. வெள்ளிலைபாடமாயிற் கொடிபிலெவெழுத்ததாம். நகைமுடி - முத்தமாலையையுடையமுடி.

இ - ள். நல்லார் மாடத்தேநின்று பாக்கையும் வெற்றிலையையும் பறித்துக்கொண்டு மொய்ம்பர்க்குக்கொடுத்து அவரணிந்த சண்பகமாலையைவாங்கி நாட்காலமன்றுயினும் வேட்கைமிகுதியாற் றமதுமுடியிலே பெய்வரென்க.

இனி நாட்காலத்தேசெய்த சண்பகமாலையணிந்த முடியிலே அக்காலத்திற்கு உரிய பூக்களைப் பெய்வரென்றுமாம். (௧0௩)

எழுதுவாணெடுங்கண்ணிணையநலார்
மெழுகுகுங்குமமார்பிடைவெம்முலை
யுழுதுகோதையுஞ்சாந்துமுவந்தவை
முழுதும்வித்திவிளைப்பர்திளைப்பவே.

மையெழுதுங்கண். குங்குமமெழுகும். திளைப்பன - கரணங்கள்.

இ - ள். அம்மகளிர் கணவர்மார்பிலே முலையாலே உழுது கோதையையுஞ் சாந்தையும் வித்தித் திளைப்பனவற்றிற் றுங்கள் உவந்தனவற்றைமுழுதும் விளைப்பரென்க. (௧0௪)

குஞ்சிமேலணிச்சம்மலர்கூட்டுணு
மஞ்சிலோதியரம்மலர்ச்சீறடி

மஞ்சுதோய்மணிமாடத்துமல்குபூம்
பஞ்சிமேலும்பனிக்கும்பனிக்குமே.

கூட்டுணும் - கவரும்.

இ - ள். ஒதியருடைய அனிச்சமலர்கூட்டுணுஞ் சீறடி ஆடவர் குஞ்சிமேலும் பனிக்கும் ; பஞ்சிமேலும் பனிக்குமென்க.

கோபத்தாலுங் கரணத்தாலு நடுங்கிற்றென ஊடலுங்கூடலு முணர்த்திற்று. " கொல்புனற்றளிரினடுங்குவணின்று" என்றார் பிறரும். நகராதலின் ஊடற்குக்கார ணங்கூறாராயினர். * " எஞ்சுபொருட்கிளவி செஞ்சொலாயிற் - பிற்படக்கிளவா முற்படக்கிளத்தல்" என்பதனாற்குஞ்சிமேலுமென்று உம்மைகொடாராயினர். (கயரு)

தூமமேகமழூந்துகிற்சேக்கைமேற்
காமமேநுகர்வார்தமகாதலால்
யாமமும்பகலும்மறியாமையாற்
பூமிமாநகர்பொன்னுலகொத்ததே.

ஏகாரம் - தேற்றம். காமமே - ஏகாரம் பிரிநிலை. " யாமத்துமெல்லையும்" என்றார்பிறரும். பூமியின். பூமென்மாநகரும பாடம். பூ - வடமொழி.

இ - ள். சேக்கைமேனுகாவார் தம் காதலால் இரவும்பகலு மறியாமையின் அந்நகர் பொன்னுலகத்தை ஒத்ததென்க. (கயசு)

அரவுகான்றிட்டவங்கதிர்மாமணி
யுரவுநீர்முத்துமுள்ளுறுத்துள்ளவை
யிரவன்மாநதர்க்குமின்னவையீவதோர்
புரவுபூண்டனர்பொன்னகர்மாந்தரே.

உரவுநீர் - உலாவுநீர். உம்மை - இழிவுசிறப்பு.

இ - ள். மணியுமுத்தும் உள்ளுறுத்தின்னவை இரவன்மாந்தர்க்கும் உள்ளன வாதலாற் பொன்னகாமாந்தரே புரவுபூண்டனரென்க

இது இகழ்ச்சி. ஏகாரம் - எதிர்மறை. இனி இன்னவை இரவன்மாந்தர்க்கு முள்ளனவாயிருத்தலிற் பின் மந்தரே புரவுபூண்டாரென்றது - உயிர்உறுப்புமுதலி யன கொடுத்தற்குத் துணிந்தாரிவரே யென்றுமாம். ஏகாரம் - தேற்றம் (கயஎ)

முல்லையங்குழலார்முலைச்செல்வமு
மல்லல்மாநகர்ச்செல்வமும்வார்கழற்
செல்வர்செல்வமுங்காணியவென்பர்போ
லெல்லியுமமிமையாரிமையாததே.

இ - ள். இமையார் இமையாதிருந்தஇருப்பு, நீயிர்இம்மூன்று செல்வத்தையும் விடாமற்காண்டற்கு யாம் விழித்திருந்தேமென்று தங்கண்ணைநோக்கிக் கூறுவாரைப் போலே யிருந்ததென்க.

மூன்றுவன போகமுஞ் செல்வமும் வீரமும். என்ப என்பதுபாடமாயின் இமை யார் நீயிரிவைகாண்டற்கு யாங்கள் இமையாதிருந்ததென்று கண்ணிற்குக் கூறுவாரொ ன்க. ஏகாரம் - ஈற்றசை. (கயஅ)

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், இடையியல், ௬௬.

முழவுஞ்சங்கமுமுன்றின்முழங்குவ
விழவும்வேள்வும்விடுத்தலொன்றின்மையாற்
புகழுலாம்படித்தன்றிதுபொன்னக
ரகழ்தன்மாக்கடலன்னதோர்சும்மைத்தே.

வேள்வி - விசேடமான நாள்களில் நிகழ்வன. இது வேள்வென ஈறுதிரிந்தது.

இ - ள். விழவினும் வேள்வியினுமொன்றைக் கைவிடுதலின்மையான் முழவுஞ் சங்குமுழங்குவன கடலன்னதோர் சும்மைத்தாதலான் இப்பொன்னகர் புகழுலாம் படித்தன்றென்க. (௧0௯)

திங்கண்முக்குடையான்றிருமாநக
ரெங்குமெங்குமிடந்தொறுமுண்மையா
லங்கண்மாநகர்க்காக்கமருததோர்
சங்கநீணிதியாற்றழைக்கின்றதே.

சங்கமென்னும் பேரெண்ணையுடைய தோன்றுபட்டநிதியோடே.

இ - ள். ஸ்ரீகோயில் தெருவிடமெங்கு மனையிடமெங்கு முண்டாகையினாலே மாநகர்க்கு இடந்தோறும் நிதியோடே அருததோராக்கந்தழையாநின்றதென்க.

இனி மாநகருண்மையால் நகர்க்குஆக்கமருது ; அவ்வாக்கம் ஒருசங்கநிதியாலே தளிர்க்கின்றதென்றுமாம். சங்கநிதி - அரசன். (௧௧0)

வேறு.

தேன்றலைத்துவலைமாலைபைந்துகில்செம்பொன்பூத்து
நான்றனவயிரமாலைநகுகதிர்முத்தமாலை
கான்றமிர்தேந்திநின்றகற்பகச்சோலையார்க்கு
மீன்றருள்சுரந்தசெல்வத்திராசமாபுரமதாமே.

தேனைத் தலையிலே துவலையாகவுடைய மாலைமுதலியவற்றைப்பூத்து நான்றனவாகியவயிரமாலைமுதலியவற்றைத் தோற்றுவித்து, அமிர்தையேந்திநின்ற கற்பகச் சோலையென்றாரிற் கோர்பெயர் கூற்றது; இதற்குமவையுண்மையின்.

இ - ள். அங்ஙனங்கூறியவர் யார்க்கும் அருளையீன்று செல்வத்தைச்சுரந்த கற்பகச்சோலை; அஃதிராசமாபுரமென்னும் பெயரையுடைத்தாமென்க.

இனித் தான்சுரந்த அருளாலே யார்க்குமறுமையிற் கற்பகச்சோலையையீன்று அச்சோலையிற் செல்வத்தைத் தன்னிடத்தேயுடையது இராசமாபுரமென்க. என்றது: இதில் வாழ்வாரருளைக்கண்டு பிறர்க்கும் அருள்பிறந்து சுவர்க்கமெட்துவரென்றவாறு.

இத்துணையும் நகரின்சிறப்புகூறிற்று. (௧௧௧)

கோயிற்சிறப்பு.

வேறு.

வேகயானைமீளிவேல்வெய்யதானையையகோன்
மாகநீண்மணிம்முடிமாரிவண்கைமாசில்சீ
ரேகவானைவெண்குடையிங்காக்குமன்னவ
னாகநீரநன்னகர்நன்மைதன்னைஞ்செப்புவாம்.

தானையென்றது ஒழிந்தமூன்றுபடையை. ஐய - வியக்கத்தக்க. தேவர்புகழு முடியென்று குலநன்மை கூறினர். சீர் - மிக்கபுகழ். ஏகவானை - பொதுவற வாளுதல்.

இ - ள். யானைமுதலியவற்றையுடையமன்னனது கோயிலின் நன்மையைச் சிறிதுகூறுவாமென்றுரைக்க. (ககஉ)

நீணிலம்வகுத்துநீர்நிரந்துவந்திழிதரச்
சேணிலத்தியற்றியசித்திரச்சுருங்கைசேர்
கோணிலத்துவெய்யவாய்கொடுஞ்சுறத்தடங்கிடங்கு
பூணிலத்துவைத்ததோர்பொற்பினிற்பொலிந்ததே.

இ - ள். நீர் நிரந்துவந்திழியும்படி நீணிலத்தைவெட்டிப் புறம்பில் அகழ்தொடட்டிப்படுத்த வழிசேர்ந்தகிடங்கு நிலமகளுக்குப் பூணிட்டதோர் அழகுபோலப் பொலிந்ததென்க.

சுற * புறனடையாற்கொள்க. சுருங்கை - கரந்தகற்படை. (ககங)

இஞ்சிமாகநெஞ்சுபோழ்ந்தெல்லைகாணவேகலின்
மஞ்சுசூழ்ந்துகொண்டணிந்துமாகநீண்டநாகமு
மஞ்சுநின்னையென்றலிஞண்டுநின்றுநீண்டதன்
குஞ்சிமாண்கொடிக்கையாற்கூவிவிட்டதொத்ததே.

இ - ள். மதிலானது மாகத்தினடுவைப்பிளந்து நாகத்தின் எல்லையைக்காண ஏகுதலின் அதனை மஞ்சு முற்படப்போகாமற்றடுத்துப் பின்பு காலைக்கட்டிக்கொண்டு ஆகாயத்தேயுயர்ந்தநாகமும் நின்னை அஞ்சுமென்றலிற் றன் மேகபதத்தளவிலே நின்று தன்றலையினீண்டகொடிக்கையாலே நம்மைவந்துகாண்கவென்று கூவிவிட்ட தன்மையையொத்தது அவையசைந்தநன்மையென்க

குஞ்சி - கொடிநாட்டுங்குழி; கழையுமாம். (ககச)

முத்தமாலைமுப்புரிமூரிமாமணிக்கத
வொத்தநான்குகோபுரமோங்கிநின்றொளிர்வன
சத்திநெற்றிசூட்டியதாமநீண்மணிவணன்
றத்தொளிமணிமுடித்தாமநாலவபோலுமே.

இ - ள். மாமணிக்கதவையுடைய தம்மிலொத்த நீலமணிக்கோபுரநான்கிலும் நின்றொளிர்வனவாகிய சூலத்தினெற்றியிற்சூட்டியமுப்புரியாகியமுத்தமாலை, தாமத்தையுடைய உலகளந்தமாயோன் முடியில் தாமநாலவனபோலுமென்க.

போன்றவும் பாடம். முப்புரியாகிய முத்தமாலையையுடைய கதவுமாம். தத்துதல் - வீசுதல். (ககரு)

சங்குவிம்முநித்திலஞ்சாந்தொடேந்துபூண்முலைக்
கொங்குவிம்முகோதைதாழ்கூந்தலேந்துசாயலா
ரிங்கிதக்களிப்பினுலெய்தியாடும்பூம்பொழில
செங்கணிந்திரன்னகர்ச்செல்வமென்னதன்னதே.

சஙகுவிம்முநித்திலம் - சங்குசூன்முற்றியீன்றமுத்து. செல்வம் - ஆகுபெயர்.

---

* தொல்காப்பியம், எழுத்ததிகாரம், உயிர்மயங்கியல், ருஉ.

இ - ள். நித்திலத்தைச் சாந்துடனேந்திய முலையிணையுங் கூந்தலிணையுமுடைய சாயலார் காமக்குறிப்போடுகூடியகளிப்பாற்சென்றாடும்பொழில் இந்திரனகரிற்கற்பகச்சோலை என்னதன்மைத்து அன்னதன்மைத்தென்க. (௧௧௬)

வெள்ளியானைமென்பிடிமின்னிலங்குபைம்பொனாற்
றுள்ளுமானொருத்தலுஞ்செம்பொனம்பொன்மான்பிணை
யுள்ளுகாமமுள்சுடவேந்தனுறைவதோர்
பள்ளிமாடமண்டபம்பசுங்கதிர்ப்பவணமே.

இ - ள். வெள்ளியாற்செய்தகளிறும் பைம்பொனாற்செய்தபிடியுஞ் செம்பொனாற்செய்த ஒருத்தலும் அம்பொனாற்செய்தபிணையும் ஒன்றையொன்றுள்ளுங்காமம் வேந்தனுள்ளத்தைவேட்கைமிகுப்ப அச்சோலையில் அவனுறைவதோர்மண்டபத்திற் பள்ளிமாடம் நாகருலகையொக்குமென்க.

இனி வெள்ளியாலேயானையும்பிடியுஞ் செய்தவென்றுமாம். (௧௧௭)

கோழரைமணிமடற்கூந்தனெற்றியேந்திய
மாழையந்திரள்கனிமாமணிமரகதஞ்
சூழ்குலைப்பசுங்கமுகுசூலுபாளைவெண்பொனா
லூழ்திரண்மணிக்கயிறூசலாடவிட்டதே.

இ - ள். பொன்னாற்செய்தபழத்திணையும் மரகதமணியாற்செய்த குலையிணையும் வெள்ளியாற்செய்தபாளையிணையும் ஏந்திய கொழுவிய அரையிணையும் நீலமணியாற்செய்தமடலிணையுமுடைய கூந்தற்கமுகினெற்றியில் ஊசலாடவிட்டகயிறு முத்துவடமென்க. (௧௧௮)

மென்றினைப்பிறங்கலுமிளிர்ந்துவீழருவியுங்
குன்றயன்மணிச்சுனைக்குவளைகண்விழிப்பவு
நின்றுநோக்குமான்பிணைநீலயானைமன்னவன்
கன்றுகாமம்வெஃகியகாமர்காமபூமியே.

காமர்காமபூமி - காமனுக்குவிருப்பஞ்செய்கின்றபூமி. *"காமனைவென்றகண்ணோன்" போல.

இ - ள். நீலயானைமன்னவன் தழும்பியகாமத்தாலே விரும்பியபூமியிடத்துச் செய்குன்றிற் றினையையும், அதினின்றுங்குதித்துவிழுகின்ற அருவியையும், மானும் பிணையும், அதனயலிற்சுனைக்குவளை காப்பாகண்போல விழியாநிற்கவும், உண்பதாக நின்றுநோக்குமென்க.

பிறங்கல் - திரள். இவற்றைச் சித்திரமெனிற் கோயிற்கங்கமாகிய செய்குன்று கூறிற்றிலராவர். (௧௧௯)

தீங்குயின்மணந்துதேன்றுஞ்சவணபோன்செய
வேங்கைநின்றுபொன்னுகுக்கும்வெற்புடுத்தசந்தன
மோங்குபிண்டிசல்லகமூழிநாறுநாகமு
நீங்கநீங்குமின்னுயிர்நினைப்பினின்றிளகுமே.

ஊழ் - ஊழியெனத்திரிந்தது. முறைமைபட அலர்ந்துநாறும்.

---

* திருச்சிற்றம்பலக்கோவையார், ௧௬௪.

இ - ள். குயிலாகியகாளங்கூடித்தேனாகியயாழ்தங்க வண்டுபாட அவற்றிற்குப் பரிசிலாக வேங்கைபொன்னைச்சொரியுமுற்கூறிய செய்குன்றைச் சந்தனமுதலியன சூழ்ந்தன. இக்குன்றையுங்காவையுநீங்க உயிர்நீங்கும்; நினைப்பின் உயிர்தளிர்க்கு மென்க. (௧௨௦)

முத்தம்வாய்புரித்தனமொய்கதிர்ப்பசும்பொனாற்
சித்திரத்தியற்றியசெல்வமல்குபன்மணி
பத்தியிற்குயிற்றிவான்பதித்துவைத்தபோல்வன
வித்திறத்தபந்தெறிந்திளையராடுபூமியே.

இ - ள். இளையர்பந்தாடுபூமி, முத்து விளிம்பிலே அழுத்தப்பட்டன; பொன்னாலே பண்ணப்பட்டன; மணி பத்தியிற்குயிற்றப்பட்டு வானை இவ்வுலகிலேயிருத்தினாற்போல்வனவாகிய இத்திறத்தனவென்க. (௧௨௧)

வைத்தபந்தெடுத்தலுமாலையுட்கரத்தலுங்
கைத்தலத்தினோட்டலுங்கண்ணிநெற்றிதீட்டலும்
பத்தியிற்புடைத்தலும்பையரவினாடலு
மித்திறத்தபந்தினோடின்பமெல்லையில்லையே.

இ - ள். பந்தைக் கையாற்றொடாதேகாலாலேதட்டியெடுத்தலும் கரத்தலும் கையிலேகொள்ளலும் செல்லவோட்டுதலும் கண்ணியையுடையநெற்றியிலே தீட்டுதலும் ஒருகாலைக்கொருகாலுயரப் பத்தியாகப்புடைத்தலும் தாம் நிலையிலேநின்று அரவுபோலப் பரந்துலாவுதலுண்டாம்படி புடைத்தலுமாகிய இக்கூற்றவாகிய அப்பந்தினோடுண்டானவின்பம் முடிவில்லையென்க. (௧௨௨)

கூற்றமன்னகூர்நுதிக்குருதிவான்மருப்பிடைச்
சீற்றமுற்றமன்னர்தஞ்சென்னிபந்தடிப்பன
வூற்றிருந்தமும்மதத்தோடையானைபீடுசால்
காற்றியற்புரவிதேர்கலந்துகௌவைமல்கின்றே.

கூற்றம் - யானைக்குவமை. சீற்றமுற்ற - அரசன் வெகுண்ட. இருந்த - இடைவிடாத.

இ - ள். மருப்பிடையே மன்னர்தலையைப் பந்தடிப்பனவாகிய யானை புரவி தேர் இவைகூடிஒலிமிக்கது அவ்விடமென்க.

இவை அரசனேறுவனவாதலின் உண்ணிற்றலியல்பு. (௧௨௩)

கவ்வையங்கருவிசூழ்ந்துகண்படுக்குமாடமுந்
தெவ்வர்தந்தநீணிதிசேர்ந்தசெய்பொன்மாடமு
மௌவலங்குழலினார்மணிக்கலம்பெய்மாடமு
மிவ்வலந்தவல்லவுமிடங்களெல்லையில்லையே.

இ - ள். மனச்செருக்கால் ஆரவாரமுடைய வீரர்திரள் அரசனதுபகையை மனத்தானோக்கி யாமந்தோறுங்காத்துத் துயில்கொள்ளுமாடமும், திறைகிடக்குமாட

மும், கலமிட்டுவைக்குமாடமுமாகிய இக்கூறப்பட்ட இடங்களும், கூறுதொழிந்த ஆயுதசாலைமுதலிய இடங்களு முடிவில்லையென்க.

கருவி - தொகுதி; ஈண்டு ஆகுபெயர். இனிப் பகைவர்க்குக் கவ்வையைச் செய்தலையுடைய ஆயுதங்கள்சூழ்ந்து நோக்கினோர்கண்ணை அகப்படுக்கும் ஆயுதசாலையு மென்ப. (௧௨௪)

பூத்தகோங்கும்வேங்கையும்பொன்னிணர்செய்கொன்றையுங்
காய்த்துநின்றுகண்டெறாஉங்காமர்வல்லிமாதரார்
கூத்தரங்கபள்ளியுங்கொற்றமன்னமங்கைய
ரேத்தல்சான்றகோயிலுமிடைப்படுத்தியன்றவே.

தமதுகன்னுனது இளையோர்மெய்யைவெவ்விதாக்கி அவர்நெஞ்சிலேநின்று சுடு மாதராரெனச் சினை வினைமுதலோடுமுடிந்தது.

இ - ள். மாதரார்நாடகசாலையும், காவன்மகளிர்அரசற்குவெற்றி நிலைபெறும்படி ஏத்தும் ஸ்ரீகோயிலும், கோங்குமுதலியவற்றை நடுவேயாக்கிப் பண்ணினவென்க.

இதனால் இரண்டுந் தம்மில் இடைவிட்டிருக்குமென்றார். மேலே * "வண்புகழ் மாலடிவந்தனைசெய்தாள்." என்ப. (௧௨௫)

கந்துமாமணித்திரள்கடைந்துசெம்பொனீர்சுவர்
சந்துபோழ்ந்தியற்றிய தட்டுவேய்ந்துவெண்பொனு
விந்திரன்றிருநகருரிமையோடுமிவ்வழி
வந்திருந்தவண்ணமேயண்ணல்கோயில்வண்ணமே.

இ - ள். மாமணித்திரளைத் தூணாகக்கடையப்படுதலானும், பொற்சுவரிலே சந் தனத்தையறுத்துப்பண்ணிவைத்தநெடுங்கையை வெள்ளியாலே வேயப்படுதலானும், அண்ணல் கோயிலின்றன்மை, இந்திரனகர் இவ்வழிவந்திருந்ததன்மையேயாயிருந்த தென்க.

ஏகாரம் - தேற்றம். (௧௨௬)

ஆடலின்னரவமுமங்கைகொட்டிநெருங்குணைப்
பாடலின்னரவமும்பணைமுழவரவமுங்
கூடுகோலந்தீஞ்சுவைக்கோலயாழரவமும்
வாடலில்லவோசையால்வைகலும்வைகின்றே.

கொட்டி - ஒக்கடித்து. ஒழிந்த கருவிகளோகூடுமேழகையுஞ் சுவையைய முடைய நரம்பையுடைய யாழ்.

இ - ள். கூத்தினரவமும் பாட்டினரவமும் முழவினரவமும் யாழினரவமு மாகிய குறைதலில்லாதவோசையாலே அண்ணலுக்கு நாள்தோறு நாள்கழியாநின்ற தென்க.

இனி வைக வாயின், ஓசையோடுசெல்ல நாளுங்கழியாநின்றதென்க. கோயிலி ன்சிறப்புக்கூறினார். (௧௨௭)

* நாமகளிலம்பகம், ௧௧௧.

## சச்சந்தன்சரித்திரம்.

### வேறு.

க. நச்சுநாகத்திறைரழற்சீற்றத்த
னச்சமுற்றடைந்தார்க்கமிர் தன்னவன்
கச்சுலாமுலையார்க்கணங்காகிய
சச்சந்தனெனுந்தாமரைச்செங்கணன்.

இதுமுதல் "கோதை" அளவுமொருதொடர்.

நச்சு - நாகத்திற்கடை. அன்னவன் - தொழிற்பெயர். (கஉ௮)

உ. வண்கையாற்கலிமாற்றிவைவேலினாற்
றிண்டிறற்றெவ்வர்தேர்த்தொகைமாற்றின
னுண்கலைக்கிடனாய்த்திருமாமகள்
கண்களுக்கிடனாங்கடிமார்பனே.

நோக்கியகண்கள் வேறுசெல்லாத புதியமார்பன். (கஉ௯)

ங. கோதைநித்திலஞ்சூழ்குளிர்வெண்குடை
யோதநீருலகொப்பநிழற்றலாற்
றாதையேயவன்றாணிழற்றங்கிய
காதலாற்களிக்கின்றதிவ்வையமே.

கோதைநித்திலம் - உம்மைத்தொகை. ஒப்ப - எல்லார்க்குமொப்ப.

இ - ள். சச்சந்தனென்னுஞ்செங்கணன், அடைந்தார்க்கமிர்தன்னவன், அடையாதார்க்கு உயிர்போமளவுஞ் சென்றுகோபமாறும் நஞ்சுபோலுஞ்சீற்றத்தன், கடிமார்பன், கலைக்கிடனாகிக் கையாலே கலியைமாற்றி வேலாலே தேர்த்திரளைமாற்றினான்; மாற்றிக் குடையாலே ஒப்பநிழற்றலால் உலகிற்குத்தாதையேயாதலின், அவன்றாணிழலிலேதங்கவேண்டி இவ்வுலகம் அவன்மேல்வைத்த காதலாலே களியாநின்றதென்க.

இனித் தாணிழற்றங்கியவையம் அவனுலகில்வைத்தகாதலாலே களிக்கின்றதென்றுமாம். இவற்றால் தெறலும் அளியும் அழகும் கொடையும் வீரமும் கல்வியும் முறைசெய்தலுங் கூறினார். (கங0)

தருமன்றணணளியாற்றனதீகையால்
வருணன்கூற்றுயிர்மாற்றலின்வாமனே
யருமையாலழகிற்கணையைந்துடைத்
திருமகன்றிருமாநிலமன்னனே.

தருமன் - அறக்கடவுள். இதற்குவமையுருபும்விரிக்க.

இ - ள். அம்மன்னன் அமிர்தத்தையொத்தலும் உலகைநிழற்றலுமாகிய தண்ணளியாற் றருமன்; கலிமாற்றின ஈகையால் வருணன்; தேர்த்தொகைமாற்றுமிடத்தாலழற்சீற்றத்தனுயிரைமாற்றுதலிற் கூற்றம்; கலைக்கிடனாமருமையால் வாமன்; மகளிர்க்கு அணங்காகிய அழகாற் காமனென்றுவமைகூறுதற்குக் கொண்டுகூறினார் கூறியது கூறலன்றென்க. (கங௧)

ஏனைமன்னர்தமின்னுயிர்செற்றவேற்
றானைமன்னரிற்றனிமிலேறனான்
றேனைமாரியன்னான்றிசைகாவலன்
வானந்தோய்புகழான்மலிவெய்தினான்.

இ - ள். ஒழிந்த பகைவருயிரைச்செற்ற தம்மரபிலுள்ளாரிற் றன் செருக்கி
னால் ஏறனையான் மொழியாற் றேன்மாரியனையனாகியகாவலன் சுவர்க்கத்தேசெறி
யும்புகழாலே மிகுதல் பெற்றானென்க.

ஐ - அசை. (௧௩௨)

௧. செல்வத்தின்னனைஞ்சேறலிற்றீம்புனன்
மல்லனீர்விதையத்தரசன்மக
பல்லிசேரணங்கிற்கணங்கன்னவள்
வில்லினீள்புருவத்தெறிவேற்கணாள். (௧௩௩)

௨. உருவுஞ்சாயலுமொப்பவுரைப்பதற்
கரியவாயினுமவ்வளைத்தோளிகட்
பெருநகாரிகைபேசுவல்பெண்ணணங்
கரியதேவருமேத்தருநீர்மையாள்.

இவை யிரண்டு மொருதொடர்.

புனலினது வளப்பம்பொருந்திய நீர்மையையுடையவிதையம; தண்ணீரும்
விளைவிக்குநீருமாம். திருவிற்கோர்திருவன்னவள் - இல்பொருள்.

இ - ள். செல்வர்க்கு இன்னாளும் நல்வினைநடத்தலாலே இதற்கேற்ப விதையத்
தரசன்மகள், இவ்வுலகிற்பெண்ணாலணங்குதற்கரிய தேவருமேத்தரு நீர்மையையுடை
யாளாயினாள்; அவ்வேற்கண்ணாளாகிய அணங்கன்னவளுடையவடிவும் மென்மையும்
இத்தன்மையவென்று உவமைகூறுவார்க் கரியவாயினும், அவளிடத்துக் காரிகையைச்
சிறிதுகூறுவேனென்றானென்க.

அது மேற்கூறுகின்றான். (௧௩௪)

வேறு.

எண்ணெயுநானமுமிவைமூழ்கியிருடிருக்கிட்
டொண்ணறுந்துகிற்கிழிபொதிந்துறைகழித்தனபோற்
கண்ணிருண்டுநெறிமல்கிக்கடைகுழன்றகருங்குழல்கள்
வண்ணப்போதருச்சித்துமகிழ்வானாந்தகையவே.

இருண்டு - இருளவென்க. குழல் - மயிர்மாத்திரையாய் ஐவகையையுமுணர்த்
தலிற் பன்மைகூறினார்.

இ - ள். எண்ணெயுநானமுமென்கின்ற இவையிற்றிலேமூழ்கிக் குழன்ற கரிய
குழல்கள், இருளைப்பிடித்து நீளமுறுக்கிஅறல்பட்டப்பிடித்து உறையிலேபொதிந்து
அதனைவாங்கப்பட்டவைபோல நோக்கினார்கண்ணிருளும்படி நெறிமல்கிச் சேடியர்
போதைக்கொண்டு வழிபட்டாலும் மருந்துந் தன்மையவென்க.

கண் - இடமாக்கிக் கொடியகுழலென்றுமாம். குழன்றும் பாடம். (௧௩௫)

குழவிக்கோட்டிளம்பிறையுங்குளிர்மதியுங்கூடினபோ
லழகுகொள்சிறுநுதலுமணிவட்டமதிமுகமுந்
தொழுதாற்குவரங்கொடுக்குந்தொண்டைவாய்தூமுறுவ
லொழுகுபொற்கொடிமூக்குமுருப்பசியையுருக்குமே.

குழவிப்பருவத்து ஒருகலையையுடைத்தாய்ப் பின்பு இளமைப்பருவத்தே நின்ற பிறை. இளமை - ஈண்டுக் குழவிப்பருவமொழிந்ததன்மேற்று. "இளமையுந்நருவ தோ" என்றார்பிறரும். "மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப், பசுவெண் டிங்க டோன்றி யாங்குக், கதுப்பயல விளங்குஞ் சிறுநுதல்" என்றாபிறரும். வட்டமதி முகம் - வட்டத்தையுடைய மதித்தமுகம்; அடையுமாம். தான் றொழப்பட்ட கண வனுக்கு வரங்கொடுக்கும். வளருகின்ற பொலிவினையுடையநீண்ட மூக்கும்.

இ - ள். பிறையுமதியுங் கூடினபோலழகுகொண்டநுதலும் முகமும் வாயும முறுவலும் மூக்கும் உருப்பசியையுருக்குமென்க.

உருக்குதல் - நகாதற்கு அவளும் ஆண்பாலாக விரும்புதல். (௧௬௬)

வண்சிலையைவனப்பழித்துவார்ந்தொழுகிநீலம்பெரு
நுண்கருமைகொண்டொசிந்துநுதலிவர்ந்துபோந்துலாய்க்
கண்கூடாகடைபுடைத்துக்கைவல்லானெழுதியபோற்
பண்பார்ந்தகொடும்புருவம்பழிச்சாணுப்படியவே.

இ - ள். எழுத்தொருமைப்படுதற்குத் தூகிலிகைக்கோலை உதறிக் கைவல்லா னெழுதியவைபோற் றமக்குரியகுணநிறைந்த கொடியபுருவம, வனப்பழித்துத் நாஞ் செல்லுமளவுஞ்சென்று மேற்செல்லாவாய்க் கூரியகருமைகொண்டுவளைந்து நுதலிற் றுஞ்சேறற்குரியவளவுஞ்சென்று போந்துபரந்து தமமிற்கூடாவாதலிற் பழிச்சுதலமை யாததன்மைய வென்க.

இகந்தொழுகவென்பதூஉம் பாடம். (௧௬௭)

சேலனையசில்லரியகடைசிவந்துகருமணியம்
பாலகத்துப்பதித்தன்னபடியவாய்முனிவனையு
மாலுறப்பமகிழ்செய்வமாண்பினஞ்சுமமிர்தமுமே
போல்குணத்தபொருகயற்கண்செவியுறப்போந்தகன்றனவே.

இ - ள். அரியவாய்ச் சிவந்து மாயோனையும் பாற்கடலையுமகத்தே வைத்தாற் போன்றதன்மையவாய் மாலுறப்பனவாய் மகிழ்ச்சிசெய்வனவாய்த் துன்பத்தாலுமி ன்பத்தாலு நஞ்சுமமுதும்போலுங் குணத்தவாகியகண், செவியுறநீண்டு அதற்சேறப அகன்றனவென்க.

கன்னியாதலின் மாலுறப்பவென்றா. மகிழ்செய்வ - கணவனுக்குமகிழ்செய்வ. மாண்பிலாநஞ்சு. கயல்போற் பிறழுங்கண். கருமணியைப்பாலிற் பதித்தாற்பால்நிறங் கெடுமென்றுணர்க. (௧௬௮)

மயிரெறிகத்திரிகையனையவாய்வள்ளைவா
டுயிர்செகுத்துமுன்னென்றிப்பின்பேராதுருவமைந்த
செயிர்மகரகுண்டலமுந்திளைப்பானுவார்காதும்
வயிரவின்முகஞ்சூடிவண்ணம்வீற்றிருந்தனவே.

இ - ள். கத்திரிகையனையவாய் வாடுவள்ளையினழகைக்கெடுத்துப் பின்மறியாது முன்னேபொருந்தி அழகமைந்த குண்டலமுந்தோடும் அசைதலமையாதகாதும் வயிரத்தினொளியையிடத்தேசூடி வீற்றிருந்தனவென்க.

வாட்டாயின் வாட்டினவென்க. காதுமென்ற உம்மை இறந்ததுதழீஇயிற்று.

ஈனாதவிளங்கமுகின்மரகதமணிக்கண்ணு
மானாதேயிருள்பருகுமருமணிகடைந்ததூஉந்
தானாகியிருளொடோர்தாமரைப்பூச்சுமந்தன்ன
கானார்ந்ததிரள்கழுத்துக்கவின்சிறைகொண்டிருந்ததே.

கோட்புகாதகன்னிக்கமுகு வனையிற்குநெய்ப்பிற்கும், மணி திரட்சிக்குநிறத்திற்கும் உவமம். உதையகிரியிற் சிந்தூரஅருவிவீழ்ந்த சிந்தூராகரத்திற்பிறந்து பதினறுசதுர்யுகஞ் சிவப்பேறினமுழுமாணிக்கம் இருளைக்கெடுத்தலின், இருள்பருகு மருமணியென்றார். இருளுந்தாமரையும், மயிர்க்குமுகத்திற்குமுவமம். கான் - மணம்.

இ - ள். கமுகினது மரகதமணிபோலுங்கண்ணும் இருளைக்கெடுக்கு மாணிக்கங் கடைந்ததுவுந்தானாய்ச் சுமந்தன்னகழுத்து அழகுகுடிகொண்டிருந்ததென்க. (கசo)

மணிமகரம்வாய்போழ்ந்துவாழ்முத்தவடஞ்சூழ்ந்தாங்
கணியரக்கார்செம்பஞ்சியணையனையவாடமைத்தோ
டணிகதிர்வளைமுன்கைத்தொகுவிரல்செங்காந்தலை
மணியரும்புமலரங்கைகுலிகமார்வனப்பினவே.

நுணிதல் - தெளிதல். பஞ்சணை - நிறத்திற்கு மென்மைக்குமுவமம். அமை- திரட்சிக்கு நெய்ப்பிற்குமுவமம்.

இ - ள். அமைத்தோள் மகரம்வாயங்காத்தலாலே ஆங்குவாழுமுத்தஞ்சூழப்பட்டுச் செம்பஞ்சணையையனைய. குவிந்தவிரல்கள் காந்தளினழகையுடைய அரும்பையனைய. அகங்கை தாமரைமலரையனைய. இக்கைகள்குலிகமார்ந்தவனப்பினவென்க.

போழ்ந்தவும், வான்முத்தமும் பாடம். (கசக)

தாமச்செப்பிணைமுகட்டுத்தலைகதிர்விடுநீல
மாமணிதாபித்தனபோன்மனம்பருகுகருங்கண்ண
வேமுறவடிபரந்திளம்பிறைவடஞ்சூடி
யாமணங்குகுடியிருந்தஞ்சுணங்குபரந்தனவே.

இ - ள். தாமத்தையுடையமுலையிரண்டுந் தந்தலையிலே நீலமணியையழுத்தினாற்போல நோக்கினார்மனத்தை யுள்ளடக்குங்கரியகண்ணவாய், கண்டார்மயக்கமுற அடிபரந்து, சூடி, தம்மேலுறையும் வீற்றுத்தெய்வமிருப்பிடமாக இருக்கப்பட்டுச் சுணங்குபரந்தனவென்க.

தாமச்செப்பெனவேமுலையாம். இனிப் பூஞ்செப்பாக்கில் இக்கவி சினையிற் கூறுமுதலறிகிளவியாம். ஆமணங்கு - மேல்ஆகக்கடவவருத்தமுமாம். (கசஉ)

அங்கைபோல்வயிறணிந்தவலஞ்சுழியமைகொப்பூழ்
கங்கையின்சுழியலைக்குங்கவின்கொளாதுடங்கிடையை

யுண்டெனத்தமர்மதிப்பர்நோக்கினார்பிறரெல்லா
முண்டில்லையெனவையமல்லதொன்றுணர்வரிதே.

இ - ள். அகங்கைபோலும்வயிற்றை அழகுபெறுத்தின கொப்பூழ் சுழியைவருத்தும். கட்புலனாகாஇடையைத் தமர் பயிறலினுண்டென்றுகருதுவர்; பிறர்அதனை நோக்கினரெல்லாமல்குலுமுலையுமுண்மையினுண்டென்றும் கட்புலனாகாமையினில்லையென்றும் ஐயுறுதலன்றி இரண்டிலொன்று துணிவார்க்கறிதலரிதென்க.

கங்கை குலந்தூய்மைக்குக் கூறினார். (௧௪௩)

மன்னாகவிணைப்படமுந்தோத்தட்டுமதிமயக்கிப்
பொன்னாலவட்டமும்போற்கலையிமைக்குமகலல்குல்
கொன்னிளம்பரிதியுங்குருமுயலின்குருதியும்போன்
றின்னரத்தப்பட்டிசைத்திந்திரற்கும்புகழ்வரிதே.

மன் - பெருமை. இணைப்படம - இரணடுபுறமுமொத்தபடம். கலை - அடை கொன் - விடியற்காலம்; "கொன்வரல்வாடை" போல. உம்மை - சிறபபு.

இ - ள். படமுந் தட்டும் ஆலவட்டமும்போலே வட்டமகன்றவலகுல், பரிதியுங் குருதியும்போலே கட்கினியபட்டுடுக்கப்பட்டு எல்லாரையுமதிமயக்குதலின் இந்திரற்கும் புகழ்தலரிதென்க. (௧௪௪)

வேழவெண்டிரடடக்கைவெருட்டிமற்றிளங்கன்னி
வாழைத்தண்டெனத்திரண்டுவாலரக்குண்செம்பஞ்சி
தோழமைகொண்டெனமென்மையுடையவாயொளிநிகழ்ந்து
மாழைகொண்மணிமகரங்கொளவிவீற்றிருந்தனவே.

வெருட்டி - பெயர். மற்று - வினைமாற்று. செம்பஞ்சி - பஞ்சிமாத்திரை. பொன தன்னிடத்தே அடகினமணி. மகரம் - ஆகுபெயா.

இ - ள். ஒழுக நோக்குதலான் அயிராவதத்தின்கையை வெருட்டபபட்டகுறங்குகள், தண்டெனத்திரண்டு பஞ்சிதன்னுடனே தோழமைகொணடுமென்மைபெற்றதெனத் தாம் மென்மையுடையவாய்த் திகழ்ந்து குறங்குசெறிகட்மி மேலாயிருந்தனவென்க.

திரண்ட பாடமாயிற் பெயராம். (௧௪௫)

பக்கத்தாற்கவிழ்ந்யவாய்மேல்பிறங்காடபாண்டிலா
வொக்கநன்குணராமைபொருந்தியசந்தினவாய்
நெக்குப்பின்கூடாதுநிகரமைந்தமுழந்தாளு
மக்களுக்கில்லாதமாட்சியின்மலிந்தனவே.

இ - ள். மேற்பக்கத்திலே கவிழ்ச்சியையுடையவாய்ப போாதவட்டமாம்படி உள்ளே பொருந்திய சந்தினவாய் நெகிழ்ந்து பின்போகாமல் ஒப்பற்றமுழந்தாளும் மாட்சியினன் மிக்கனவென்க

நன்மை இதற்கொபப வேறொன்றிலுணராதபடி பொருந்தியசந்து. (௧௪௬)

ஆடுசைபிறங்காதுவற்றாதுமயிரகன்று
நீடாதுகுறுகாதுநிகரமைந்தவளவினவாய்ச்

சேடாவநாழிகையிற்புடைதிரண்டுதேனெய்பெய்
வாடாதகாம்பேபோல் கணைக்காலின்வனப்பினவே.

இ - ள். கணைக்கால், தசைபோராதுமாய் வற்றாதுமாய் மயிர்மிக்கு நீடாமற் குறுகாமலொப்பிலாதஅளவினவாய் அம்பறாத்தூணிபோலே திரண்டு காம்புபோல் இனியவனப்பினவென்க.

சேடு – பெருமை. தேவிநிறத்திற்கு உவமை பதுமராகமாயினும் மயிர்கள்அகன் றதனாற் காம்பு உவமையாயிற்று. இனிக்கணைக்காலின் வனப்பு இன்னவென்றுமாம்.

பசும்பொன்செய்கிண்கிணியும்பாடகமும்பாடலைப்ப
நயந்தெரிபொற்சிலம்புமுத்தரிபெய்தகங்க
வியைந்தெழிலார்மணியாமையிளம்பார்ப்பின்கூன்புறம்போ
லசைந்துணர்வுமடிந்தொழியுமடியிணை புகழ்வார்க்கே.

நயந்து - விரும்பி.

இ - ள். அரிபெய்யப்பட்டுக் கிண்கிணியும பாடகமும், தாஙகிக்கிடக்கின்ற இட த்தை வருத்துதலாலே சிலம்பு சிறிதேசிரிப்ப அழகார்ந்த யாமைப்பார்ப்பின்புறம் போலுமடியிணையைப புகழஇயைந்துபுகழ்வார்க்கு உணர்வு துளங்கிக் கெட்டுப்போ மென்க.

* "பார்ப்பும் பிள்ளையும பறப்பவற்றிளமை" †"தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன" என்றார். (௧௪அ)

அரக்கியல்செங்கழுநீரகவிதழ்போலுகிர்சூடிப்
பரப்பின்றி நுதியுயர்ந்துபழிப்பறத்திரண்டுநீண்
டொருக்குறநெருங்கிப்பொன்னொளியாழியகங்கெளவித்
திருக்கவின்கொண்மெல்விரல்கடேனார்க்குந்தகையவே.

இ - ள். திருவினதுவிரலினழகைக்கொண்டவிரல்கள், நுதி பரப்பின்றித் தோன்றித் திரண்டு நீண்டு சேரநெருங்கி மோதிரங்கௌவப்பட்டு அகவிதழ்போலும் உகிர்சூடிப் பூவென்று தேனார்க்குந் தகைமையவென்க.

குலிகமூட்டின இதழ் – செம்பஞ்சு ஊட்டினதற்குவமம். (௧௪௯)

என்போடுநரம்பின்றியிலவம்பூவடாணுக்கி
யின்புறவரம்புயாந்திருநிலமுறப்புல்லி
யொன்பதின்சாணடப்பினுமொருகாதமென்றஞ்சு
மென்பஞ்சிச்சீறடியுமேதக்கவிழைவினவே.

இ - ள். என்புநரம்புமின்றி இலவிதழைக் கெடுத்துக் கட்கினியபுறவெல்லை உயர்ந்து நிலத்தையுறப்புல்லி நடப்பினும் அஞ்சுமடியும் பெருமைதக்க விழைவின வென்க.

ஏழடியென்றல் மரபாயிருக்க ஒருகாதமென்னும் யெழுத்து நோக்கி ஒன்பதின் சாணென்றாரேனும் அடியிமௌவில் ஏழாம். (௧௫௦)

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௪.
† " " " ரு.

இவ்வுருவுநெஞ்சென்னுங்கிழியின்மேலிருந்திலக்கித்
தவ்வுருவுநினைப்பென்னுந்துகிலிகையால்வருத்தித்துக்
கவ்வியதனேக்கினும்கண்விடுத்துக்காதனீர்
செவ்விதிற்றெளித்தாணக்காமப்பூச்சிதறினன்.

இ - ள். கூறிய இவ்வுருவை ஒருப்பட்டிருந்து நெஞ்சென்னும் படத்திலே குறித்து அதனை நினைவென்னுங்கோலாலே உறுப்புவிளங்கவெழுதித் தான் கைக்கொண்டதியானத்தாலே நயனமோக்ஷம் பண்ணி மாமன்மகளாதலின் அன்பென்னு நீரைச்சொரிந்து புணர்ச்சிவேட்கையாகிய அமையாத பூவைச் சிதறினனென்க.

இவன் எழுதி ப்ரதிஷ்டித்தான். இருந்திலேகித்தென்பதும் பாடம். இலக்கு-குறித்துப்பார்த்தல் (௧௫௧)

மெய்பெறுவெழுத்துயிர்க்குமழலைவாயின்முறுவற்
றையலாணெடுந்தடங்கண்வலைப்பட்டுச்சச்சந்த
னையுறுனணங்கெனவேயகத்தடக்கிச்செல்கின்றான்
மொய்யுறுக்களியானைமுழங்கித்தேனிமிர்தாரான்.

எழுத்து வடிவுபெற்றுத் தோற்றும் இளையவார்த்தையையும் முறுவலையுமுடைய தையலாள். மழலை எக்காலத்திற்கும் கூறுப. மொய் - போர்.

இ - ள். அங்ஙனங்குறித்த தாராணகிய சச்சந்தன் விசேடித்துத் தையலாள் கண்வலையிலேஅகப்பட்டுக் கால் நிலந்தோய்தன்முதலியன கண்டுதெளிந்தும் அணங்கென்றேயுட்கொண்டு செல்லாநின்றானென்க. (௧௫௨)

வேறு.

வண்டினமுகபடாமணிந்துவார்மத
முண்டுகுத்திடுகளிற்றுமுழவன்றன்மகள்
பெண்டிர்தம்பெருநலங்கடந்துபெற்றபேர்
விண்டலர்கோதைக்குவிசயையென்பவே.

இ - ள். வண்டினமாகிய முகபடாத்தை யணிந்து மதத்தைத் தானுண்டு சிந்துங்களிற்றுழவன்றன்மகள்பெயர் விசயையென்பர்; அக்கோதைக்கு அப்பெயர் பெண்டிர்நலங்கடந்துபெற்ற காரணப்பெயரென்க.

பெயர் - பேரெனமருவிற்று. (௧௫௩)

அருமணிமரகதத்தங்கணுறிய
வெரிநிறப்பொன்னிதழேந்துதாமரைத்
திருமகளிவளெனத்திலகவெண்குடைப்
பெருமகன்கோயிலுட்பேதைவைகுமே.

இ - ள். இமவானில் மரகதப்பாறையிற் பதுமையென்னுங்கயத்திற் றோற்றிய பொற்றாமரையிற் றிருவென்ன விதையத்தரசன்கோயிலிலே பேதை வைகாநிற்குமென்க.

திலகம் - மேலாதல். திருவுவமம் - வடிவிற்கும் நல்வினையுடையோனிடத்து -ங்கிணையம் பொதுவாயிருத்தற்கும். (௧௫௪)

கலம்புரியகலல்குற்றுயர்தவ்வையர்
சிலம்புரிதிருந்தடிபரவச்செல்பவள்
வலம்புரிசலஞ்சலம்வளை இயதொத்தனள்
குலம்புரிந்தனையதோர்கொடியினீர்மையாள்.

இ - ள். குலம் கொடியினீர்மை புரிந்தனையதோர் நீர்மையாள், மேகலை விரும்பின வல்குலையுடைய ஐகைத்தாயரும் அவர்மக்களாய்த் தனக்கு மூத்தவர்களும் அடிபரவச்செல்பவள், வலம்புரி சலஞ்சலந்தைவளைத்ததன்மையையொத்தாளென்க.

சிலம்புபுரி விகாரம். (கருரு)

இன்னகிற்கொழும்புகையுயிர்க்குமீர்ங்குழன்
மென்மலர்க்கோதைதன்முலைகள்வீங்கலின்
மின்னுருக்குறுமிடைமெலியமெல்லவே
கன்னிதன்றிருநலங்கனிந்ததென்பவே.

மின்னுருக்குறுமிடை - மின்வடிவுகெடுத்தற்குக் காரணமான இடை. நடுக்குறுமென்றும் பாடம்.

இ - ள். குழலையுடைய கோதைதன்முலைகள் இடைமெலிய வீங்குதலாலே அவள் நலம் முதிர்ந்ததென்க. (கருசு)

முந்துநாங்கூறியமுரிசுதானையக்
கந்துகொல்கடாக்களியானைமன்னவன்
பைந்தொடிப்பாசிழைப்பரவையேந்தல்குற்
றந்தைமாட்டிசைத்தனன்றனதுமாற்றமே.

இ - ள் தானையையும் யானையையுமுடைய அச்சச்சந்தன், விசையையுடைய முந்து கூறிய தந்தைமாட்டே தனது மாற்றத்தை இசைப்பித்தானென்க.

அவளைக் கொள்ளவேண்டுமென்னுமாற்றம். (கருஎ)

மருமகன்வலந்ததுமங்கையாக்கமு
மருமறிச்சூழ்ச்சியினமைச்சரெண்ணிய
கருமமுங்கண்டவர்கலத்தற்பான்மையிற்
பெருமகற்சேர்த்தினர்பிணையனாளையே.

ஆக்கம் - இளமையாக்கம்போனின்றது அவள் முதிர்ச்சியுமாம். கருமம் - கோவிந்தனுக்கு இவனுதவியாதல்.

இ - ள். தந்தையுந்தாயும், மருமகன் கூறியதனையும் மங்கை அவனிடத்து அன்பை அமைத்துக்கோடலையும் அமைச்சரெண்ணிய கருமத்தையும்பார்த்து, மைத்துனன்முறையானும் பிணையனாளைப் பெருமகற்குச் சேர்த்தினரென்க.

* பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே" என்பதனானெப்பும்பெருந்திணைப் பாற்படுங்கந்தருவமாமாறும் பெரும்பொருளானுணர்க. (கருஅ)

* தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், கச.

வேறு.

பொனங்கொடியமிர்தனாளும்பொன்னெடுங்குன்றனானு
மனங்கனுக்கிலக்கமாகியம்புகொண்டழுந்தவிள்ளா
ரினந்தமக்கெங்குமில்லாரியைந்தனரென்பமுக்கட்
சினந்திகழ்விடையினானுஞ்செல்வியுஞ்சேர்ந்ததொத்தே.

கொடியென்றார், குன்றுமறையப்படர்ந்து கேடுபிறப்பித்தலின். அழுந்த இலக்கமாய்.

இ - ள். குன்றனானுங் கொடியாகிய அமிர்தனாளும் முன்பு இலக்காய் நின்று பின்பு அவர் விடையினானுஞ் செல்வியுஞ் சேர்ந்ததொத்து விள்ளாராய் ஒருடம்பாயினாரென்க.

காட்சியுநிலையுமுயக்கமுங்கூறி அவற்றிற்கு உவமை மேற்கூறுகின்றார். (௧௫௬)

காதலாற்காமபூமிக்கதிரொளியவருமொத்தார்
மாதருங்களிறனானுமாசுணமகிழ்ச்சிமன்ற
லாதரம்பெருகுகின்றவன்பினாலன்னமொத்துந்
தீதிலார்தினைப்பினாமான்செல்வமேபெரிதுமொத்தார்.

காதல் - எல்லாப்பொருளையும் நுகர்தற்குச்செல்லும்வேட்கை. காமபூமி-தானப்பயனாற் பெறும்போகபூமி. உம்மை - சிறப்பு. ஆதரம் பெருகுமன்பாவது - புணர்வதன்முன்னும் பின்னும் ஒரு தன்மைத்தாய்ச் செயற்கையான் மிகுமன்பு. அன்னம் புணர்ச்சியான் மெய்யுருகு மென்மைக்கு உவமம். பலரும் "துணைபுணரன்னத்தின்றூவி" என்றுபுணர்ச்சியாற் றூவிக்கு மென்மை பிறக்குமென்றார். "ஒத்தும" என்பதனைமுன்னும்பின்னுங்கூட்டுக. இவ்வெச்சத்தைத் தீதிலாரிற் றீதின்மையோடு முடிக்க. தீதிலாத்தினைப்பிற் பாடமாயின் ஆமானையொத்துந் தீதிலாமாதருங் களிறனானுமென்க.

இ - ள். மாதருங் களிறனானும் மகிழ்ச்சியையுடைய முயக்கத்தான் மாசுணத்தையொத்தும், அன்பாலுளதாகிய மென்மையால் அன்னத்தையொத்தும், கண்முதலிய அவயவநுகர்ச்சியான் ஆமானையொத்தும், தீதிலாதவர்கள் இப்புணர்ச்சிக்கு முன்னர்ப் போகபூமியிலுள்ளார் செல்வமே பெரிது மொத்தார்; இப்பொழுது காதலால் அவர்கள் தம்மையுமொத்தாரென்க.

ஆமான் நக்குங்காற்பிறக்கும் இனிமையே ரண்டுவமம். ஏகாரம் - தேற்றம். ()

தன்னமர்காதலானுந்தையலுமணந்தபோழ்திற்
பொன்னனாளமிர்தமாகப்புகழ்வெய்யோன்பருகியிட்டான்
மின்னவிர்பூணினானைவேற்கணார்க்கியற்றப்பட்ட
மன்னியமதுவின்வாங்கிமாதரும்பருகியிட்டாள்.

மகளிர்க்குச் சமைத்த மது. வாங்கி - அவன் காட்டக்கண்டு. பருகியிடுதல்- ஒருசொல்.

இ - ள். காதலானுந்தையலும் முற்கூறியாங்குப் புணர்ந்தபொழுதிலே அவன் பொன்னனாளை அமிர்தமாகப் பருகினான்; அவன் பருகினதன்மையைத் தானுங்கண்டு பூணினானை அவளும் மதுப்போலே பருகினாளென்க.

இதனால் அதரமானமுமல்குற்பானமுங்கூறி மேலிவற்றிற்குவமை கூறுகின்றார்.

பவளவாய்பரவையல்குலென் றிவைபருகும்வேலான்
கவளமார்களிறுபோன்றுங் காதலிகரும்பையொத்தா
டவழ்மதுக்கோதைமாதர் தாமரைப்பூவதாக
வுமிழ்நகைவேலினுனுமொணசிறைமணிவண்டொத்தான்.

இவையென்றது - கரும்பையுந் தாமரைப்பூவையும். கரும்புவமை நெருக்கி நீர் நுகர்தற்கு. பூவதாக - பூவினதுதன்மை எக்காலமுமுண்டாக. இது வேறுபாடின்மையின் வேறுபடவந்த உவமமாயிற்று; எனவே பதுமயோனியாம். வேலினனுமென்றது - களிறுபோலவன்மையுடையோனுமென்றவாறு. உம்மை - சிறப்பு.

இ - ள். வாயுமல்குலு மிவையென்றுட்கொண்டு வேலான் பவளவாயைப் பருகிக் களிற்றையொத்தான்; அப்பொழுது அவள் கரும்பையொத்தாள். அவ்வேலானுமல்குலைப் பருகி மாதர்பூவாயிருக்க நுகர்வதோர வண்டையொத்தானென்க.

செவ்விகுலையாதிருக்க நுகர்வதோர் வண்டு - இல் பொருளுவமை. (கசுஉ)

பளிக்கறைப்பவளப்பாவைபரிசெனத்திகழுஞ்சாயற்
களிக்கயல்பொருவபோன்றுகண்டைசிவந்தகவ்றகண்ணு
ளொளிக்கவின்கொண்டகாமத் தூழுறுகனியையொத்தா
ளளித்தயில்கின்றவேந்தனுஞ்சிறைப்பறவையொத்தான்.

இ - ள், கண்ணாள் கனியையொத்தாள்; அவளுக்கு மேன்மேலும் விருப்பமுண்டாக்கி அயில்கின்ற வேந்தன் வாவலையொத்தானென்க.

பளிக்குப்பாறையை அடுத்த பவளப்பாவை இவளது தன்மையெனத்திகழுஞ் சாயல் - கண்டு ஒளியதுமென்மை, இது செயற்கைநலம். இதற்கடுத்ததுகாட்டும் பளிங்கைப் பவளம் தன்றன்மையாக்கினாற்போல அடுத்தமகளிர்தன்மையணுமரசனை இவளுந்தன்றன்மையேயாக்கிக்கொண்டாளெனக் கதைகருதியநயமுமுண்டு. பொருவபோன்று பொருதெனவிரிக்க. சொட்டகனி. அயிறல் - உண்டல் * "உண்டற் குரிய வல்லாப் பொருளை - யுண்டன போலக் கூறலு மரபே." "தோணலமுண்டு துறக்கப் பட்டோர" என்றார் பிறரும் பழமும் வாவலும் வடுப்படநுகாதற்குவமை.

வே று.

நறுமலர்ப்பிணையலுஞ்சூட்டுஞ்சுண்ணமு
நறுமலர்க்கண்ணியுநாறுசாந்தமு
மறுநிலத்தமிர்தமுமகிலுநாவியு
பெறுநிலம்பிணித்திடப்பெரியர்வைகினா.

பிணையல் - மலர்நெருங்குமாாபின்மாலை. சூட்டு - நெற்றிக்கட்டு. கண்ணி - முடிக்குமாலை. அமிர்தம் - அடிசிலும்பானமு முதலியன. இனி அறுநிலத்தமிர்தம் - அறுசுவையுமாம்; அறுகாலத்திற்குரியபானமுமாம்.

இ - ள். பெரியவா புணர்ச்சியற்றபின் பிணையன்முதலியன தம்மைநுகருமிந்திரியங்களைப்பிணிப்ப வைகினரென்க. (கசுச)

துடித்தலைக்கருங்குழற்சுரும்பண்கோதைத
னடித்தலைச்சிலம்பினோடரவமேகலை

* தொல்காப்பியம், பொருளதிகாரம், பொருளியல், சகூ.

வடித்தலைக்கண்மலர்வளர்த்தநோக்கமோ
டடுத்துலப்பரிதவளுறுநின்பமே.

துடி - ஏலம். வடித்தலைக்கண் - ஒப்பினால் வடுவகிரிடத்தேநிற்குங்கண்.

இ - ள். அவரின்பம், கோதைதன்கண்மலர் ஊடலையுங் கூடலையும்விளைவித்த நோக்கத்தானே அவளூடினகாலத்து அடி அவன்றலையிற்படுதலிற் பிறந்தசிலம்பினரவத்தோடும் கூடினகாலத்துப்பிறந்த மேகலையரவத்தோடும் அடுத்து முடிதலரிதாயிருந்ததென்க.

அவனும் பாடம். (௧௬௫)

இழைவளரிளமுலையெழுதுநுண்ணிடைத்
தழைவளர்மதுமலர்தயங்குபூஞ்சிகைக்
குழைமுகக்கொடியொடுகுருதிவேலினான்
மழைமுகின்மாரியின்வைகுமென்பவே.

பூண்விளங்குதற்குக்காரணமாயமுலை. ஓவியமெழுதுவார் இதன்றன்மைகருதி எழுதுதற்குக்காரணமான இடை. தழையிலேவளர்ந்த. சிகை - முடி. முலைமுதலியவற்றையுடையகொடி - இல்பொருளுவமை.

இ - ள். வேலினான் கொடியோடே மாரிக்காலத்துமழைமுகில்போலே அருள்பொழிந்துதங்குமென்க. (௧௬௬)

படுதிரைப்பவளவாயமுதமாந்தியுங்
கொடிவளர்குவிமுலைத்தடத்துள்வைகியு
மிடியினுங்கொடியினுமயங்கியாவதுங்
கடிமணக்கிழமையோர்கடலின்மிககதே.

இ - ள். மிக்கமணக்கிழமை, அமுதத்தையுண்டும் வைகியும் மாவிடிபோலவும் நூழிற்கொடிபோலவும் உணர்வும் உடம்புமெல்லாமயங்கிக் கடலின்மிக்கதென்க. ()

கப்புரப்பசுந்திரைகதிர்செய்மாமணிச்
செப்பொடுசிலதியரேந்தத்தீவிய
துப்புமிழ்நதலமருங்காமர்வல்லியு
மொப்பரும்பாவைபோன்றுறையுமென்பவே.

கப்புரம் - பாகதம்.

இ - ள். கருப்பூரமுதலியவற்றையுடைய சுருளைச் சேடியர் செப்போடேந்த, அதனைநுகர்ந்து ஐம்பொறிக்குமினிய நுகர்ச்சிகளைக்கணவனுக்குக்கொடுத்துப் புணர்தற்கலமரும்விசயையும் அவனுக்குக்கொல்லிப்பாவைபோற்றங்குமென்க.

உம்மை - சிறப்பு. வேறுகருத்துச்செல்லாமற்றன்னையேகருதுவித்தலிற் பாவையென்றார். இதற்குமுன்பு உலகியன்மணங்கூறி மேற் காமமிகுதியாற்கெடுகின்றமை கூறுகின்றார். (௧௬௮)

மண்ணகங்காவலின்வழுக்கிமன்னவன்
பெண்ணருங்கலத்தொடுபிணைந்தபேரருள்
விண்ணகமிருள்கொளவிளங்குவெண்மதி
யொண்ணிறவுரோணியோடொளித்ததொத்ததே.

இன் - நீக்கப்பொருட்டு. உரோகிணி - விகாரம். அவ்வுரோகிணிகாரணத்தின் இருடிசபித்து மதிதேய்ந்ததோர்கதை.

இ - ள். மன்னவன் மண்ணகம் இருள்கொள்ளும்படிகாவலிற்றப்பிப் பெண்களுக்கருங்கலமானவளுடனே சேர்ந்தகழிகண்ணோட்டம், மதிவிண்ணகமிருள்கொள உரோகிணியோடொளித்த தன்மையையொத்ததென்க. (கசுக)

வேறு.

குங்குமத்தோளினானுங்கொழுங்கயற்கண்ணினாளுந்
தங்கியகாதல்வெள்ளந்தணப்பறப்பருகுநாளுட்
டிங்கள்வெண்குடையினாற்குத்திருவிழுக்குற்றவண்ணம்
பைங்கதிர்மதியிற்றெள்ளிப்பகர்ந்தெடுத்துரைத்துமன்றே.

இ - ள். தோளினானும் கண்ணினாளும் வேட்கைப்பெருக்கத்தின் நீக்கமறப்பருகுநாளிலே, அவனுக்குச்செல்வம் மதிபோலொழுகக்குறைந்த தன்மையைத்தெரிந்து கூறிப் பின்புசீவகன்சரிதமெடுத்துரைக்கலுற்றாமென்றாரென்க.

இதன்கருத்து: இச்செய்யுட்கு அங்கமாகியவருணனைகள்கூறி அதற்குரிய தலைவனைநாட்டுகின்றார் இத்துணையுமவன்தோன்றற்குக்காரணங்கூறி அதற்கு முற்பிறப்பில் அன்னப்பார்ப்பைப்பிரித்ததீவினைவந்து குரவரைப்பிரித்தலுங் கூறவேண்டுதலிற் றிருவிழுக்குற்றமை முற்கூறுகின்றாரென்றுணர்க. திருவிழுக்குறுதலாவது – கட்டியங்காரற்கு அரசளித்தலும் அமைச்சர்சொற் கேளாமையும். (கஎ0)

களிறனையமைச்சர்தம்முட்கட்டியங்காரனென்பா
னொளிறுவாட்டடக்கையானுக்குயிரெனவொழுகுநாளுட்
பிளிறுவார்முரசிற்சாற்றிப்பெருஞ்சிறப்பியற்றிவேந்தன்
வெளிறிலாக்கேள்வியானைவேறுகொண்டிருந்துசொன்னான்.

இ - ள். களிறனான், அமைச்சரில் வெளிறிலாக்கேள்வியையுடைய நிமித்திகனைத் தனக்கு வேறாகக்கொண்டு கட்டியங்காரனென்கின்றவனைத் தனக்குயிரெனக் கொண்டொழுகுநாளிலே, வேந்தன் அத்தடக்கையானுக்கு முடியுங்குடையுமொழிந்த சிறப்புக்களையுண்டாக்கி அதனையுலகறிய முரசாற்சாற்றி இருந்து இக்காரியத்தைக் கூறினானென்க.

மதச்செருக்காற் பாகன்றோட்டியை நீவுமாறுபோலக் காமக்களிப்பாற் றன் அமைச்சர்கூற்றைக்கடந்ததனோக்கிக் களிறனானென்றார். நிமித்திகன்கருமமேகூறுதலுங் கட்டியங்காரன் அரசன்கருத்திற்கேற்பவொழுகுதலும் இரண்டற்குங்காரணம். * "கோதனான்" என்றும், † "சரிமாலைநெஞ்சினான்" என்றும், ‡ "கல்லாமந்திரி" என்றும் மேற்கூறலிற் கட்டியங்காரனை வெளிறிலாக்கேள்வியானெனலாகாது. இனி இகழ்ச்சிக்குறிப்பென்பாருமுளர். (கஎக)

அசைவிலாப்புரவிவெள்ளத்தருஞ்சயன்குலத்துட்டோன்றி
வசையிலாள்வரத்தின்வந்தாள்வான்சுவையமிர்தமன்னாள்

* நாமகளிலம்பகம், உகக. † நாமகளிலம்பகம், உசுரு.

விசையையைப்பிரிதலாற்றேன் வேந்தனீயாகிவைய
மிசைபடக்காத்தல்வேண்டுமிலங்குபூண்மார்பவென்றான்.

அருஞ்சயன் - தேவிபாட்டன். வசையிலாள் - வினையெச்சமுற்று. வேண்டுமென்பது - உம்மீற்றான்வந்ததோரேவல்கண்ணியவியங்கோள்; "வாழ்தல்வேண்டுமிவண்வரைந்தவைகல்" என்றார்பிறரும்.

இ - ள். பூண்மார்பனே, அமுதன்னாள், அருஞ்சயனது அசையிலாக்குலத்துட்டோன்றி வசையின்றி முற்பவத்திலெனது வேண்டுகோளாலேவந்தாள், அவளைப் பிரிதலாற்றேன்; நீ இனி வேந்தனாய் உலகை இசையுண்டாகக் காப்பாயாகவென்றானென்க. (கஎஉ)

அண்ணறானுரைப்பக்கேட்டேயடிகளிற்றெருத்திலிட்ட
வண்ணப்பூந்தவிசுதன்னைநமலிமேலிட்டதொக்கும்
கண்ணகன்ஞாலங்காத்தலெனக்கெனக்கமழுந்தண்வரி
மண்ணகம்வளருந்தோளான்மறுத்துநீமொழியலென்றான்.

தவிசு - கழுத்துமெத்தை. மண்வளர்தற்குக்காரணமாகிய தோளான் - அரசன். மண்ணெழுவனையதோள் பாடமாயிற் பணையனையவெழுவாம். "ஆவுதியணைணி" என்றாற்போல. தோளாயும் பாடம்.

இ - ள். கட்டியங்காரன் தான்கருதியிருந்ததனை அரசன்றானேகூறக்கேட்டு உண்மகிழ்ந்து ஞாலங்காவல் எனக்குத் தவிசை நமலிமேலிட்டதொக்குமென்று மறுப்பத் தோளான் என்காரியமாக நீ மறுத்துமொழியலென்றானென்க.

வேறோரூர்திகூறாதானமலியைக்கூறினான், அவனயிராதுகருதற்கு. (கஎங)

எழுதருபரிதிமார்பனிற்றெனவிசைந்தவோடுந்
தொழுதடிபணிந்துசொல்லுந்துன்னரத்தொலைந்தவேபோய
கழிபெருங்காதலாள்கட்கழிநலம்பெறுகவையம்
பழிபடாவகையிற்காக்கும்பருகம்பூண்பவென்றான்.

ஓடு - உடனிகழ்ச்சி. கழிபெரும் - ஒருபொருளிருசொற் பிரிவில்லாதது

இ - ள். அரசன் என்னிலை இற்றென இசைந்தவளவிலே கட்டியங்காரன் தொழுதுவணங்கிப் பகையென்றுகூறப்படும் பகைவரையெல்லாங்கொன்றவேலோய் நீ நலம்பெறுக யான் பழிபிறவாதபடி வையத்தைககாக்கும் பெரியபாரத்தைப் பூண்பேனென்றானென்க.

தன் நினைவை அவன்காரியம்போற் கூறினான். (கஎச)

வலம்புரிபொறித்தவண்கைமதவலிவிடுப்பவேகிக்
கலந்தனன்சேனைகாவல்கட்டியங்காரனென்ன
வுலந்தருதோளினாய்நீயொருவன்மேற்கொற்றம்வைப்பி
னிலந்திருநீங்குமென்றோர்நிமித்திகனெறியிற்சொன்னான்.

பொறித்தவெனப்பிறவினையாற்கூறினார், அயன்படைத்தலின். மத - விசேடித்த உரிச்சொல். உலம்வளர்க்குந்தோள்.

இ - ள். மதவலி உபசாரமாகக் கையாலேகாட்டிவிடுப்பக் கட்டியங்காரன்போய்ச் சேனையைக்காத்தலைக்கலந்தானென்று கூறக்கேட்டு நிமித்திகனென்னுமமைச்

சன் றோளிஞய், ஒருவன்மேலுனது கொற்றம்வைப்பின் நிலமுந்திருவுநின்னைநீங்கும் இதனைநீயேயோரென்று நீதியாற்கூறினுனென்க. (களரு)

எனக்குயிரென்னப்பட்டானென்னலாற்பிறரையில்லான்
முனைத்திறமுருக்கிமுன்னேமொய்யமர்பலவும்வென்றான்
றனக்கியான்செய்வசெய்தேன்றான்செய்வசெய்கவொன்று
மனத்திஞமொழியவேண்டாவாழியரொழிகவென்றான்.

என்னலாற் பிறரையில்லான் - என்னையொழியப் பிறரையில்லாதான். இன்மை உடைமைக்கு மறுதலை. முன்னே - சிறப்பிக்குமுன்னே. வென்றானெனவே நடத்துதற்குரியனென்றான். நன்மையுந் தீமையுங்கருதிச் செய்வவெனப் பன்மையாற் கூறினன்.

இ - ள். உயிரெனப்பட்டான் பிறரையில்லான் வென்றான்; அவன்றனக்குயான் செய்வனசெய்தேன் அவன்றான் எனக்குச் செய்வனசெய்க; நீ சிறிதும் பொருமை கூறவேண்டா; நீயும் நின்னிலையிலே வாழ்வாயாக; இனி இக்கூற்றினைத்தவிர்வாயாக வென்றானென்க. (களசு)

காவலகுறிப்பன்றேனுங்கருமமீதருளிக்கேண்மோ
நாவலர்சொற்கொண்டார்க்கு நன்கலாற்றீங்குவாரா
பூவலர்கொடியனார்கட்போகமேகழுமிமேலும்
பாவமும்பழியுமுற்றார்பற்பலர்கேளிதென்றான்.

நாவலர் - அமைச்சர். இது உலகியலாற் கூறினன். கழுமி - மயங்கி.

இ - ள். காவல, நாவலர்சொற்கொண்டார்கட்குத் தீங்குவாரா; ஆதலாற் றிருவுள்ளமன்றேனும் அருளிக்கேண்மோ, ஒருவன்மேற் கொற்றம்வையாதிருக்கின்ற இது கருமமென்றான்; அதற்குடம்படாமையின் நின்னையொழியக் கழுமி முன்னும் இம்மையிற்பழியும் மறுமையிற்பாவமுமுற்றார் மிகப்பலர் இதனைக் கேளென்றானென்க.

மேற்கூறுவனவெல்லாம் போகத்தையே நோக்குதலின், இதுவென ஒருமையாற் கூறினன். (களள)

பெரும்பெயர்ப்பிரமனென்னும்பீடிஞற்பெரியநீரா
னரும்பியமுலையினளுக்கணிமுகநான்குதோன்ற
விரும்பியாங்கவனையெய்தான்விண்ணகமிழந்ததன்றித்
திருந்திஞற்கின்றுகாறுஞ்சிறுசொல்லாய்நின்றதன்றே.

பெயர் - புகழ். ஏகாரம் - வினா.

இ - ள். பிரமனென்னுந் தவத்தாற் பெரியநீரான் திலோத்தமைபொருட்டு நான்குமுகந் தோன்றும்படி விரும்பி அவ்விடத்து அவளைப்பெற்றுய் விண்ணகமிழந்ததேயன்றிப் பின் தவத்தாற் பாவந்தீர்ந்தவற்கு இன்றளவும் புறஞ்சொல்லாய் நின்றதல்லவோவென்றானென்க.

முறைசெய்யாமையிற் றன்னிலையிழந்தான். தோற்றியும் பாடம். (களஅ)

கைம்மலர்க்காந்தள்வேலிக்கணமலையரையன்மங்கை
மைம்மலர்க்கோதைபாகங்கொண்டதேமறுவதாகக்

கொய்ம்மலர்க்கொன்றைமாலைக்குளிர்மதிக்கண்ணியாற்குப்
பெய்ம்மலரலங்கன்மார்பபெரும்பழியாயிற்றன்றே.

கைமலர் - கைபோலுமலர். மலைகளுக்கரசன். மைமலர்க்கோதை - நீலமலராற்செய்த கோதை, இறைவி; ஆகுபெயர். மாலை - அடையாளப்பூ. கண்ணி - சூடும்பூ; * "கண்ணியுந்தாருமெண்ணினராண்டே" என்றார்.

இ - ள். இடப்பட்டமாலைமார்பனே, மலைபரையன்மனைவி மேனைபெற்ற கோதையைப் பாகத்தேவைத்ததே மறுவையுடையதொன்றாகக் கொன்றையாற்செய்தமாலையினையும் மதியாகிய கண்ணியினையுமுடைய அரனுக்குப் பழியாயிற்றல்லவோவென்றானென்க. (௧௭௯)

நீணிறவண்ணனன்றுநெடுந்துகில்கவர்ந்துதம்முன்
பானிறவண்ணனேக்கிப்பழியுடைத்தென்றுகண்டாய்
வேனிறத்தானைவேந்தேவிரிபுனற்றொழுனையாற்றுட்
கோனிறவளையினார்க்குக்குருந்தவனொசித்ததென்றான்.

வேனிறம் - வேலினது விளக்கம். கோல் - திரட்சி.

இ - ள். வெந்தே, மாயோன் பலதுகிலைக்கவர்ந்து தம்முனாகிய பானிறவண்ணன் நோக்கிற் பழியுடைத்தென்றுகாண் தொழுனையாற்றிலே கோவியர்க்குக் குருந்தொசித்தது; இது இங்ஙனந் தீதென்றானென்க. (௧௮0)

காமமேகன்றிநின்றகழுதைகண்டருளினாலே
வாமனார்சென்றுகூடிவருந்தினீரென்றுவையத்
தீமஞ்சேர்மாலைபோலவிழித்திடப்பட்டதன்றே
நாமவேற்றடக்கைவேந்தேநாமிதுதெரியினென்றான்.

காமமே - தேற்றம். என்று - என்ன. ஈமம் - சுடுகாடு.

இ - ள். வேந்தே, நாமிக்காமத்தைத் தெரியின், காமமேயடிபட்டு நின்ற ஆண் கழுதையைக்கண்டு அருளாலே புத்தனா பெண்கழுதையாய்ச்சென்றுகூடி இக்காமத்தாலேவருந்தினீரோயென்ன; அது வையத்திலே ஈமத்துமாலைபோல இழித்திடப்பட்டதல்லவோவென்றானென்க. (௧௮௧)

படுபழிமறைக்கலாமோபஞ்சவரன்றுபெற்ற
வடுவுரையாவர்பேர்ப்பார்வாய்ப்பறையறைந்துதூற்றி
யிடுவதேயன்றிப்பின்னுமிழுக்குடைத்தம்மகாம
நடுவுநின்றுலகமோம்பனல்லதேபோலுமென்றான்.

இ - ள். கேட்பாயாக; காமத்தாற் பிறந்த பழியை மறைக்கலாமோ, பஞ்சவர் ஒருத்தியை மனைவியாக்கலிற்பெற்ற வடுவுரையைப் போக்குவார்யார்? அது தூற்றியிடுதலேயன்றி மறுமையிலும் நரகமுதலியவற்றைத் தரும்; ஆதலால் நடுவுநிலையிலே நின்று உலகமோம்புதலே நல்லதுபோலுமென்றானென்க.

போலும் - ஒப்பில்போலி. (௧௮௨)

ஆரறிவிகழ்தல்செல்லாவாயிரஞ்செங்கணானுங்
கூரறிவுடையநீரார்சொற்பொருள்கொண்டுசெல்லும்

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௭௯.

பேரறிவுடையநீயும்பிணையனுட்கவலஞ்செய்யு
மோரறிவுடையையென்றானுருத்திரதத்தனென்பான்.

ஆரறிவிகழ்தல் செல்லா - பெரிய அறிவைப்பிறராலிகழப்படாத. அவலம் - அரசன் கொலையுண்டல்.

இ - ள். அரசன் நிமித்திகன்கூற்றைக்கொள்ளாமைகண்டு, அருகிருந்த உருத்திரதத்தன் இந்திரனும் அமைச்சர்சொற்பொருளைக் குறிக்கொண்டுநடக்கும்; அவனைப்போல நீயுமறிவுடையையாயினும் இப்பொழுது இவன் சொல்லைக் கொள்ளாமையிற் பிணையனுட்கு அவலஞ்செய்யுமோரறிவுடையையாயினையென்றானென்க. (௧௮௩)

அளந்துதாங்கொண்டுகாத்தவருந்தவமுடையநீரார்க்
களந்தனபோகமெல்லாமவரவர்க்கற்றைநாளே
யளந்தனவாழுநாளுமதுவெனக்குரையலென்றான்
விளங்கொளிமணிகள்வேய்ந்துவிடுசுடரிமைக்கும்பூணான்.

போகமுமென்னும் உம்மை கூறிற்றிலர், செஞ்சொலாய் முற்படக்கிளத்தலின்.

இ - ள். பூணான் வரைந்துகாத்த தவமுடையார்க்குக் கருவாய்ப்பதிகின்றபொழுதே போகமெல்லாமளந்தன; அவரவர்க்கு அப்பொழுதேவாழுநாளுமளந்தன; அது எனக்குரையலென்றானென்க.

"நிலந்திருநீங்கும்" எனநிமித்திகன்கூறிய செல்வநிலையாமையையும் உருத்திரதத்தன்கூறியயாக்கைநிலையாமையையம் நிலையாமையென ஒருமையாக்கி, அதுவென்றொருமையாற்கூறினான்.

உரையலென்றான் நிமித்திகனைநோக்கி, அவனுரியனாதலின். (௧௮௪)

மூரித்தேந்தாரினாய்நீமுனியினுமுறுதிநோக்கிப்
பாரித்தேன்மருமநுண்ணூல்வழக்கதுவாதல்கண்டே
வேரித்தேங்கோதைமாதர்விருந்தினக்காகவின்பம்
பூரித்தேந்திளையகொங்கைபுணர்கயான்போவலென்றான்.

இ - ள். தாரினாய், நூல்வழக்கு இடித்துக்கூறலமைச்சர்க்கியல்பென்றமை கண்டு உறுதிநோக்கி இத்துணையுமியல்பாகக்கூறினேன்; இனி மாதர்கொங்கையை நினக்கு எப்பொழுதும்விருந்தாகக்கொண்டுபுணர்க; நீ என்னைமுனியினும்நின் தவறு காணமைற் றுறவிடத்தே போவேனென்றானென்க.

மூரி - பண்புமாத்திரமுணர்த்தாது பெயராதலின் வேற்றுமைத்தொகை. முனியினுமென்பது எதிர்காலமுணர்த்துமெச்சம்; உம்மை - ஐயம். இளையகொங்கையென்று இளமைநிலையாமை கூறினான். அரசன்போவென்னமைற் றானேபோவேனென்றல் நீதியன்மையிற் றுறவுட்கோளாயிற்று. இதனான் "வெளிறிலாக்கேள்வியான்" என்றார். இத்துணையுமொருதொடர். (௧௮௫)

வேறு.

இனமாமென்றுரைப்பினுமேதமெணான்
முனமாகியபான்மைமுளைத்தெழலாற்
புனமாமலர்வேய்நறும்பூங்குழலாண்
மனமாநெறியோடியமன்னவனே.

நினதுவேட்கையும் தேவராதுமுற்கூறிய வேட்கைத்திரளிலே வைத்தெண்ணுவ தோர்வேட்கையாம். குழலாண்மனக்கருத்தாய் நுகருமன்னவன்; நெறியோடியம ன்னவன் - அரசநீதிகெட்டமன்னவன்.

இ - ள். குழலாள் மனமாமன்னவன் முற்பிறப்பிற்றீவினை முளைத்துத்தோன் றுதலாலே இது முற்கூறிய இனத்தேயாமென்று பின்னுங்கூறினுந் தனக்குவருமதை மெண்ணுறையினனென்க. (கஅசு)

கலையார்துகிலேந்தல்குலுங்கதிர்சூழ்
முலையார்தடமும்முனியாதுபடிந்
துலையாத்திருவின்னமிர்துண்டொளிசேர்
மலையார்மணிமார்பன்மகிழ்ந்தனனே.

விசயையது கெடாத இளமைச்செவ்வியை நுகர்ந்து. ஆர்தல் - ஒத்தல்.

இ - ள். மார்பன் அவளல்குலாகிய இன்பக்கடலினும் முலைத்தடத்தினும் வெ றுதேபடிந்து உண்டு வேறுமனக்கவற்சியின்றி மகிழ்ந்தானென்க. (கஅஎ)

விரிமாமணிமாலைவிளங்குமுடித்
திருமாமணிசிந்துதிளைப்பினரா
பெரிமாமணிமார்பனுமேந்திழையு
மருமாமணிநாகரினையினரே.

இ - ள். மார்பனும் ஏந்திழையும் மாடபிறகிடந்த விரிந்தமாமணிமாலையும் மணி போலுமயிர்முடியிற்கிடந்த தெய்வவுந்தியுஞ் சிந்துந் திளைப்பனராய் நாகரைப்போல் ஒன்றுயினரென்க. (கஅஅ)

நறவார்ந்ததொர்நாகிளந்தாமரைவா
யுறவீழ்ந்ததொரொண்மணிபோன்றுரவோ
னறவாக்கியவின்பமமர்ந்தவிருட்
கறைவேற்கணினாள்கனவுற்றனளே.

தேனிறைதலும் மிக்க இளமையுமாறுத தாமரையெனவே பதுமயோனியாம். உரவோனுற - பிள்ளையாரவதரிக்க. அறவு - தொழிற்பெயர்.

இ - ள். அங்ஙனம் நாகரைப்போலமர்ந்த இருட்கண்ணே தாமரைவாய்வீழ்ந்த தோர் முத்துப்போன்று உரவோனுற; அப்பொழுதே இன்பம் அறுதலையாக்கியகன வைக் கறைவேற்கண்ணினாள் கண்டாளென்க. (கஅகு)

வேறு.

பஞ்சியடிப்பவளத்துவர்வாயவ
டுஞ்சுமிடைக்கனமூன்றவைதோன்றலி
னஞ்சிநடுங்கினளாயிழையாயிடை
வெஞ்சுடர்தோன்றிவிடிந்ததையன்றே.

இ - ள். துவர்வாயினையுடையாள் துயிலிடைக்கண்டகனு மூன்று; அவைபின்பு மனத்தே தோன்றலின் அவளஞ்சிநடுங்கினாள் ; அக்காலத்தேவிடிந்ததென்க.

எனவே கடிதிற்பயக்குமாறுயின. இவை பிற்பயக்குங்கனவாதலிற் பின்னும் [illegible] (கசு0)

பண்கெழுமெல்விரலாற்பணைத்தோளிதன்
கண்கழூஉச்செய்துகலைகலந்தாங்கி
விண்பொழிபூமழைவெல்கதிர்நேமிய
வண்புகழ்மாலடிவந்தனைசெய்தாள்.

பண் - ஆகுபெயர்; யாழொடுபயின்றவிரலும் ஆகுபெயர். கழூஉச்செய்து- "நல்லமரூஉச்செய்து" என்பதுபோல நின்றது. விண் - ஆகுபெயர். வினையை வெல்லும் அறவாழி.

இ - ள். பணைந்தோளி கண்கழூவித் தாங்கி அக்கோயிலின் மாலடியை வணங்கினாளென்க.

* "தெய்வமஞ்சல்" என்று மெய்ப்பாட்டியற்சூத்திரம், தன் குலதெய்வத்தை வணங்குதற்கு விதியாமாறுணர்க. (கககூ)

இம்பரிலாநறும்பூவொடுசாந்துகொண்
டெம்பெருமானடிக்கெய்துகென்றேத்தி
வெம்பரிமானெடுந்தேர்மிகுதானையந்
தம்பெருமானடிசார்ந்தனளன்றே.

இ - ள். அவள் இவ்வுலகில் நிகரில்லாதபூவையுஞ் சாந்தையுங்கொண்டு எம்பெருமானே நின்னடிக்கு இவைபொருந்துவனவாகவென்றேத்தித் தன்கணவனடியை வணங்கினாளென்க.

அ - உலகறிபொருளாமேட்டு (ககஉ)

தானமா காதலந்தன்னொடுமாவலி
வானவர்போன்மகிழ்வுற்றபின்வார்நறுந்
தேனெனப்பாலெனச்சில்லமிர்தூற்றெனக்
கானமர்கோதைகனிமொழிகின்றாள்.

தேவர் நோக்கத்தால் மகிழ்ந்தாற்போல இவனும் நோக்கத்தான்மகிழ்ச்சியுற்ற பின். கனவுமூன்றிற்குத் தேன்முதலியமூன்றும் உவமம். பிண்டிவீழ்ந்ததென்னு மொழி இவள்கூறுதலின் இனிதாய்ப் பின் நிற்குவிளைத்தலிற் றேனுவமம்; "ஆர்ந்தோர் வாயிற் றேனும் புளிக்கும்" என்றார் பிறரும். "என் - முத்தணிமாலை" என்ற சொல் குலந்தூய்மைகூறுதலிற் பாலுவமம். இவனுக்கத்திற்கு ஊறுமமிர்துஉவமம்; இவனுக்கம் அமுதுபோல் உயிர்களிக்காத்தலின்.

இ - ள். மாவலி தான்மேவின காதலிதன்னோடே மகிழ்வுற்றபின்பு அவள் தேன்முதலியனவென்னும்படி கனிமொழியாநின்றாளென்க. (ககங)

தொத்தணிபிண்டிதொலைந்தறவீழ்ந்ததெண்
முத்தணிமாலைமுடிக்கிடனாக
வொத்ததன்றாள்வழியேமுளையோங்குபு
வைத்ததுபோலவளர்ந்ததையன்றே.

முத்தணிமாலை - முத்தையொத்தமாலை; அணி - "மின்னணிநுண்ணிடை" போ

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல், உச.

லுவமவுருபு; என்றது வெள்ளியமாலையை. இது குலந்தூய்மை கூறிற்று. * "வெண்டாமரைமலர்த்தடங்கள்போலு - நங்குடி" என்றார்மேலும். முத்தமாலையெனின்மேல் † "நறுமாலை" ‡ "எண்கோதைத்தொகை" என்றல்பொருந்தாது. வளர்ந்ததை - வினைத்திரிசொல்; உரைத்ததைபோல.

இ - ள். ஒருபிண்டி தானணிந்ததொத்துக்களொழுகக்கெட்டுப் பின்புதானுநேராகவீழ்ந்தது; அதன்வழியிலே ஒருமுளை அதனையொத்து எட்டுமாலையையுடையதொரு முடிக்கிருப்பிடனாக நட்டுவைத்தாற்போலே ஓங்காநின்றுவளர்ந்ததெனமொழிந்தாளென்க.

மேலே§ "துளும்புநலத்தாரொடு" என்றலின், முத்தணிமாலையைக் கனவிற்கண்டாள்; அதுகாரணம். இதனுற் சுற்றங்கெட்டபடியும் அரசன்கெட்டபடியுங் கூறினார். அது கதையிற் காண்க. (௧௯௪)

வார்குழைவில்லிடமாமுடிதூக்குபு
கார்கெழுகுன்றனையான்கனவின்னியல்
பார்கெழுநூல்விதியாற்பயன்றான்றெரிந்
தேர்குழையாமலெடுத்துரைக்கின்றான்.

இ - ள். சலியாதவன் கனவின் இயல்பைக் கனுநூலின்விதியாலே பயனைத்தெரிந்துதான்பார்த்து முடிதுளக்கி அவற்றில் நல்லவற்றை யெடுத்து இவளழுகுகெடாமற் கூறாநின்றானென்க.

அது அசோகுமுறிந்ததுகூறாமல் மாலையுமுடியையும் இரண்டெனவாகப் பிரித்தது. (௧௯௫)

நன்முடிநின்மகனாநறுமாலைக
ளன்னவனாலமரப்படுந்தேவியர்
நன்முளைநின்மகனுக்கமதாமெனப்
பின்னதனாற்பயன்பேசலன்விட்டான்.

இ - ள். அவன் அவட்கு முடிநின்மகனும்; நறியபூமாலைகள் அந்நல்வினையுடையோனால் அமரப்படும் தேவிமார்; முளை நின்மகனுக்கமென மூன்றுக்கிக்கூறிப் பின்பு இற்றதனாலுள்ள பயனைப் பேசலனாய்விட்டானென்க.

"குருதிக்கோட்டுக்குஞ்சரநகராம்" போல் முத்தமாலையை மாலையென்னும்பெயர் கருதி நறுமாலையென்றலாகாமையுணர்க, மாலையென்னும்பெயர்பொதுவாகலின். ()

இற்றதனாற்பயனென்னெனவேந்திழை
யுற்றதின்னேயிடையூறெனக்கென்றலு
மற்றுரையாடலனாய்மணிமாநிலத்
தற்றதொர்கோதையிற்பொற்றொடிசோர்ந்தாள்.

உற்றதென இறந்தகாலத்தாற் கூறினான்; தெளிவுபற்றி, "இல்லைகளுமுந்துறு வினை" என்றலின். இன்னே - உதாசீனம்போனின்றது.

* காந்தருவதத்தையாரிலம்பகம், ௫௫.
† நாமகளிலம்பகம், ௪௯௯.
‡ முத்தியிலம்பகம், விசயமாதேவியாரதுறவு, ௯.
§ முத்தியிலம்பகம், பிறவிகளறவுரை, ௪௨.

இ - ள். இற்றதனாற்பயனென்னென்று தேவிகேட்ப, ஏந்திழாய், எனக்கு இங்ஙனே ஓரிடையூறுவந்ததுகாணென்றவளவிலே பின்பு உரையாடலளாய் மணிநிலத்தே தங்கியதோர் கோதைபோலே வீழ்ந்தாளென்க. (௧௯௭)

காவிகடந்தகண்ணீரொடுகாரிகை
யாவிநடந்ததுபோன்றழிமாழ்கப்
பாவியெனுயிர்வருத்துதியோவெனத்
தேவியையாண்டகைசென்றுமெய்சார்ந்தான்.

இ - ள். காரிகை கண்ணீருடனே ஆவிபோனாற்போல அழகுகெடுதலாலே ஆண்டகைசென்று பாவி, என்னுடைய ஆவியை வருத்துகின்றாயோவெனக்கூறி அவளைமெய்யைச்சார்ந்தானென்க.

தேவியை மெய்யையென்ற இரண்டுருபும் * "தெள்ளிது" என்றதனான் முடியும்.()

தணமலர்மார்புறவேதழீஇனானவள்
கண்மலர்த்தாள்கனவின்னியன்மெய்யெனும்
பெண்மையமோபெரிதேமடவாட்கெனப்
பண்ணுரையாற்பரவித்துயர்தீர்த்தான்.

இ - ள். குளிர்ந்த அகன்ற மார்பிலேயறத் தழீயினான்; அதனால் அவள் விழித்தாள், அப்பொழுது நினக்குக் கனவின்தன்மையை மெய்யெனக்கருதும் பெண்டன்மை பெரிதாயிருந்ததெனக்கூறிப் புனைந்துரையாற் பரவித் துயர்தீர்த்தானென்க.

ஏகாரம் - ஈற்றசை. ஓ - வியப்பு. (௧௯௯)

காதலன்காதலினாற்களித்தாய்மலர்க்
கோதையங்கொம்பனையார்தங்குழாந்தொழுக
நாறுகுதாமமணிந்தகில்விம்மிய
போதுகுமெல்லணைப்பூமகள்சேர்ந்தாள்.

இ - ள். பூமகள் காதலன் கொண்டாட்டத்தாலே களித்துச் சேடியர் தொழுத் தாமஞ்சூழ்ந்து அகில் விம்மிய அணையிலே சேர்ந்தாளென்க. (௨௦௦)

பண்கனியப்பருகிப்பயனாடகங்
கண்கனியக்கவர்ந்துண்டுசின்னாள்செல
விண்கனியக்கவின்வித்தியவேற்கணி
மண்கனிப்பான்வளரத்தளர்கின்றாள்.

விண - ஆகுபெயர். வித்திய - பரப்பிய. குழவிப்பருவத்தாலும் அரசநீதியாலும் வீடுபேற்றாலும் மண்ணையுருக்குமவன்.

இ - ள். பண்ணைப்பழுக்கக்கேட்டும் நாடகங்களைக்கண்ணுருகமுகந்துநுகர்ந்தும் இருவர்க்குமிங்ஙனஞ் சிலநாள்சென்றவளவிலே, வேற்கண்ணி பிள்ளைவளர்தலாலே தளராநின்றாளென்க. (௨௦௧)

வேறு.

கரும்பார்தோண்முத்தங்கழன்றுசெவ்வாய்விளர்த்துக்கண்பசலைபூத்தகாமம், விரும்பார்முலைக்கண்கரிந்துதிங்கள்வெண்கதிர்கள்பெய்திருந்த

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமைமயங்கியல், ௫.

பொற்செப்பேபோ, லரும்பால்பரந்துநுசுப்புங்கண்ணின்புலனாயிற்றாய்ந் தவனிச்சமாலை, பெரும்பாரமாய்ப்பெரிதுநைந்துநற்சூழ்சலஞ்சலம்போ னங்கைநலந்தொலைந்ததே.

இ - ள். வயாவிற்கு நங்கையுடையதோள் மெலிந்து வாய்வெளுத்துக் கண் பசலைபூத்தன; பின்பு முதிர்கின்றவளவிற்குக் காமத்தை விரும்புதற்குக் காரணமான முலைக்கண்கருகிப் பால்பரந்து நுசுப்புங்கண்ணினது நுகர்ச்சிப் பொருளாயிற்று; பின்பு முதிர்ந்தவளவிற்கு அனிச்சமாலை பாரமாய்ச் சலஞ்சலம்போல்நைந்து நலந் தொலைந்ததென்க.

உம்மை - சிறப்பு. (உ0உ)

வேறு.

தூம்புடைநெடுங்கைவேழந்துற்றியவெள்ளிலேபோற்
றேம்புடையலங்கன்மார்பிற்றிருமகன்றமியனாக
வோம்படையொன்றுஞ்செப்பாடிருமகளொளித்துநீங்க
வாம்புடைதெரிந்துவேந்தற்கறிவெனுமமைச்சன்சொன்னான்.

வேழம்-வெள்ளிலுக்கு வருவதோர்நோய். குருதிக்கோட்டுக் குஞ்சரநகரம்போல வேழத்திற்குக் கை அடை. தேம்புதலுடைய திருமகன்; தேம்புதல்-கெடுதல்; விகாரம். "புட்டேம்பப்புயன்மாறி" என்றார் பிறரும். தமியனாக - அரசவுரிமையை நீங்க. ஓம்படையொன்றுஞ்செப்பாள் - தான்சிறிதும்பரிகாரங்கூறாளாய். அவன்வஞ்சித்து அரசுவெளவுதலின் ஒளித்து நீங்கவென்றார் ஆம்புடை-பிள்ளையார் பிழைப்பதோர் கூறுபாடு.

இ - ள். திருமகன் வெள்ளில்போலத் தமியனாகத் திருமகணீங்கப் பின்பு அவனுக்குத் தன்னறிவென்னுமமைச்சன் ஆமபுடைதெரிந்து கூறினானென்க. (உ0௩)

காதிவேன்மன்னர்தங்கள்கண்ணெனவைக்கப்பட்ட
நீதிமேற்சேறறேற்றாய்நெறியலாநெறியைச்சேர்ந்து
கோதியல்காமமென்னுமதுவினுட்குளித்தநான்றே
யோதியபொறியற்றாயோரரும்பொறிபுனைவியென்றான்.

இ - ள். அவ்வறிவென்னுமமைச்சன், வேன்மன்னர் ஊனாகிய கண்ணைக் கண்ணென்பாருடனேகாதித் தும்முடைய கண்ணென்றுதுணிந்துவைத்த நீதியிற்செல்லாயாய்த் தீநெறியைச்சேர்ந்து காமமென்னுங்கள்ளிலேயழுந்தின அன்றே நல்வினையற்றாய்; ஆதலால் இனி ஒரெந்திரத்தைப் புனைவியென்றானென்க. (உ0௪)

வேறு.

அந்தரத்தார்மயனேயெனவையுறும்
தந்திரத்தாற்றமநூல்கரைகண்டவன்
வெந்திறலான்பெருந்தச்சனைக்கூவியோ
ரெந்திரவூர்தியியற்றுமினென்றான்.

இ - ள். அரசன், தொழிலோடே நூலைக் கரைகண்டவனாகிய தச்சனைக்கூவி எந்திரமானதோரூர்தியை இயற்றென்றானென்க.

தொழிலால் மயனேயெனத்துணிந்து வடிவால் ஐயமுறுந்தச்சன். இயற்றுமின்-ஒருமைபன்மைமயக்கம். ஊர்தி - ஏறப்படுவது. (உ0ரு)

பல்கிழியும்பயினுந்துகினூலொடு
நல்லரக்கும்மெழுகுந்நலஞ்சான்றன
வல்லனவும்மமைத்தாங்கெழுநாளினுட்
செல்வதொர்மாமயில்செய்தனனன்றே.

கிழி - சீலை. பயின் - பற்றுதற்குரியன. துகினூல்-வெள்ளியநூல்.

இ - ள். நலஞ்சான்றனவாகிய கிழிமுதலியனவற்றையும் ஒழிந்தனவற்றையும் கூட்டி, அவன்கூறியபடியே செல்வதோர்மயிலை ஏழுநாளிலேசெய்தானென்க. ()

பீலிநன்மாமயிலும்பிறிதாக்கிய
கோலநன்மாமயிலுங்கொடுசென்றவன்
ஞாலமெலாமுடையானடிகைதொழு
தாலுமிம்மஞ்ஞையறிந்தருளென்றான்.

இ - ள். மயிலையும் பண்ணினமயிலையுங் கொண்டுசென்றவன் அரசனைவணங்கி இம்மயில்களில் ஆலுமஞ்ஞையை அறிந்தருளென்றானென்க.

பீலி - இரண்டற்கு மேற்றுக. (உ0எ)

நன்னெறிநூலயந்தானன்றுநன்றிது
கொன்னெறியிற்பெரியாயிதுகொள்கென
மின்னெறிபல்கலமேதகப்பெய்ததொர்
பொன்னறைதான்கொடுத்தான்புகழ்வெய்யோன்.

மின்னெறி - மின்னைக்கெடுக்கும்.

இ - ள். வெய்யோன் இம்மயில் நூலினுடைய நீதிதானாயிருந்தது; இது மிக நன்றெனக்கூறித் தான் கொற்றொழிலிற்பெரியாய், இதுகொள்கவென்று பொன் அறையைக் கொடுத்தானென்க.

இன்னூலின் நீதியென்றுமாம். (உ0அ)

ஆடியன்மாமயிலூர்தியையவ்வழி
மாடமுங்காவுமடுத்தொர்சின்னாள்செலப்
பாடலின்மேன்மேற்பயப்பயத்தான்றுரந்
தோடமுறுக்கியுணர்த்தவுணர்ந்தாள்.

இ - ள். ஆடுதலியன்றமயிலாகிய ஊர்தியைத் தேவிதான் பாட்டுப்போலே பையப்பைய மேன்மேற்றுரந்து மாடத்திலுங் காவிலுமடுத்துச் சின்னாள்சென்றவளவிலே ஒருநாள் அங்ஙனங்கற்பித்தவன் விசையுடனேடும்படி முறுக்கியுணர்த்த அவள் அதுவுமுணர்ந்தாளென்க. (உ0கூ)

வேறு.

பண்டவழ்விரலிற்பாவைபொறிவலந்திரிப்பப்பொங்கி
விண்டவழ்மேகம்போழ்ந்துவிசும்பிடைப்பறக்கும்வெய்ய

புண்டவழ்வேற்கட்பாவைபொறியிடந்திரிப்பத்தோகை
கண்டவர்மருளவீழ்ந்துகால்குவித்திருக்குமன்றே.

இ-ள். கண்டவர் மருளும்படி பாவை விரலாலே பொறியை வலத்தேதிரிப்ப அது பொங்கிப் போழ்ந்து பறக்கும்; அவளதனை இடத்தேதிரிப்ப அதுவீழ்ந்து காலைக குவித்திருக்குமென்க.

பகைவர்க்குப் புண்செல்லுதற்குக் காரணமான வேல். கால்பரப்பிற் பொறி கெடும். (௨௧0)

வேறு.

காதிவேல்வலகட்டியங்காரனு
நீதியானிலங்கொண்டபினீதிநூ
லோதினார்தமைவேறுகொண்டோதினான்
கோதுசெய்குணக்கோதினுட்கோதனன்.

காதிவேல்வல - பொருதுவேலைவல்ல. உபமை - இழிவுசிறப்பு. கோதுசெய் குணக்கோது - நூல்கள் பயனின்றாகக்கூறியகுணங்களிற் கோதாவது செய்ந்நன்றிக்கேடு. உட்கோதனன் - அதிலேநிற்கின்ற பயனிலாதோன். இனிப பயனின்மை செய்கின்ற குணத்துக்கோதினை தீக்குணங்கட்குள்ளாகிய செய்ந்நன்றிக்கேடு தன்னை ஒப்பானென்றுமாம்.

இ-ள். கோதனாகிய கட்டியங்காரனும, அரசன் கொடுப்ப நிலத்தைஅடிப்படுத்தியபின்பு தருமநூலோதினாரெல்லாரையும் தனக்குமாறாகாரென்றெண்ணி ஒருமொழி கூறினனென்க. (௨௧௧)

மன்னவன்பகையாயதோர்தெய்வ
மென்னைவந்திடங்கொண்டிராப்பகற்
றுன்னிநின்றுசெகுத்திடுநீயெனு
மென்னையான்செய்வகூறுமினென்னவே

இ-ள். மன்னவன்பகையாயதோர் தெய்வம் என்னை இருப்பிடமாகக்கொண்டுவந்து அத்தெய்வம் இரவும்பகலுநெருங்கிநின்று நீ செகுத்திடு என்னாநிற்கும்; இதற்கு யான் செய்யத்தகுவன யாவை? அவற்றை நீர் கூறுவீராகவென்று கூறினனென்க.

"என்ன" என்பதனை "உட்கினரா" என மேல்வருகின்றதனோடுமுடிக்க.

அருமைமாமணிநாகமழுங்கவோ
ருருமுவீழ்ந்தெனவுட்கினராவயி
கருமங்காழ்த்தமைகண்டவாதம்முளான்
றருமதத்தனென்பானிதுசாற்றினான்.

இ-ள். மணி அழுங்கும்படி நாகத்தின்மேலே இடிவீழ்ந்தாற்போலே அம்மொழியைக்கேட்டு அமைச்சர் உட்கினாராக; அவர்களினுள்ளானுகிய தருமதத்தனென்கின்றவன் கண்டு இதனைப்பலரறியக்கூறினனென்க.

மணிஅரசனுக்கும், நாகம் அமைச்சர்க்கும், செகுத்திடென்றசொல் இடிக்குமுவமை. காழ்த்தமை - சொல்லைத்தணிந்தமை. ஆடவரின்னென்றபாடத்திற்கு அரசனாலாயவனென்க. (௨௧௩)

தவளைக்கிண்கிணித்தாமரைச்சீறடிக்
குவளையேயளவுள்ளகொழுங்கணா
ளவளையேயமிர்தாகவவ்வண்ணலு
முவளாகந்தனதாகவொடுங்கினான்.

இ - ள். அவ்வண்ணலும் சீறடியையுடையகண்ணாளாகிய அவளையே அமுதாகக்கொண்டு அந்தப்புரமொன்றுமே தனக்குரித்தாக ஒழிந்தவற்றின் வேட்கையின்றிச் சுருங்கினானென்றானென்க.

ஏகாரமிரண்டும் தேற்றம். உம்மை - சிறப்பு. உவளகம் - ஒருபக்கமுமாம். ()

விண்ணினோடமிர்தம்விலைச்செல்வது
பெண்ணினின்பம்பெரிதெனத்தாழ்ந்தவ
னெண்ணமின்றியிறங்கியிவ்வையகங்
கண்ணந்தாமரையாளொடுந்தாழ்ந்ததே.

இ - ள். விண்ணும் அமிர்தும் விலைபெறுவதொன்றாயிருக்கும் பெண்மை; அதிலு நினதரசினதின்பம்பெரிதுகாணென்று காரியங்கூறுதலின் நின்னிற்றாழ்ந்த நிமித்திகன் செல்வம் வேண்டுதலின்றித் துறவிலே வீழ்தலாலே இவ்வையகந் திருமகளுடனேகூடி நின்னிடத்தே தங்கிற்று; இனி நினக்கு வேறோர் மனக்கவற்சியின்றென்றானென்க.

நின்னின்பமென்றது அரசனைநோக்கி நிமித்திகன்கூறியது. பெண்ணினின்பமெனப்பெரிதாழ்ந்தவனென்பதும் பாடம். (உ௧௫)

தன்னையாக்கியதார்ப்பொலிவேந்தனைப்
பின்னைவெளவிற்பிறழ்ந்திடும்பூமக
ளன்னவன்வழிச்செல்லினிம்மண்மிசைப்
பின்னைத்தங்குலம்பேர்க்குநரில்லையே.

இ - ள். தன்னை ஆக்கியவேந்தனைப் பின்னைக்கொல்வனாயிற் றன்குலமுந்திருவும் மண்மிசையினின்றும் பிறழும்; அவன்வழியேயொழுகிற் றன்குலத்தையுஞ் செல்வத்தையும் மண்மிசையினின்றும் பெயர்ப்பாரில்லையென்றானென்க.

பூமகள் - திரு. இது உலகியலாற்கூறினான். தார்செழுவேந்தனும் பாடம். ()

திலகநீண்முடித்தேவருமவேந்தரு
முலகமாந்தர்களொப்பவென்றோதுப
குலவுதார்மன்னர்க்கியானிதுகூறுவன்
பலவுமிக்கனர்தேவரிற்பார்த்திவர்.

இ - ள். முடிகளுக்கு மேலாயமுடியையுடையதேவரில் அரசர் பலகுணங்களாலுமிக்காராயினும், உலகிலுள்ளார் தேவரும்வேந்தருமொப்பவென்றுகூறுவர்; அவர் அறியார்; யான் மன்னர்க்குள்ளதோர் விசேடங்கூறுவேன்; அதனைக் கேளென்றானென்க.

கூறலனென்று பாடமாயின் ஒப்புக்கூறேனென்றானென்க. இதுமுதல் "மன்னவன்பகையாயதோர்மாதெய்வம்" என்றதனைக்குறித்துக்கூறுகின்றான். (உ௧௭)

அருளுமேலரசாக்குமன்காயுமேல்
வெருளச்சுட்டிடும்வேந்தெனுமாதெய்வ
மருளியற்றவைவாழ்த்தினும்வையினு
மருளியாக்கலழித்தலங்காபவோ.

மன் - மிகுதி. மருளி இ-பகுதிப்பொருள்விகுதி. மற்று-வினைமாற்று. "தாமினிநோயும்" என்றாற்போல உம்மைமாற்றுக. ஆக்கல் அழித்தல் - காலந்தோன்றாத வினைப்பெயர். ஆப - எதிர்காலத்திற்குரிய பகரத்தோடு அன்பெறாதுவந்த அகரவீற்றுப் பலவறிசொல். ஓகாரம் - எதிர்மறை.

இ - ள். வேந்தெனுந்தெய்வம் அருளுமேல் அரசாக்கும்; காயுமேற் சுட்டிடும். மற்று மயக்கத்தையுடைய அத்தெய்வங்கள் தம்மையொருவன் வாழ்த்துவனாயின் அவனையருளியாக்கலும், தம்மையொருவன் வைவனாயின் அவனை அருளாதழித்தலும் அவைகட்கு அப்பொழுதே ஆகாவேயென்றவாறென்க. (உகஅ)

உறங்குமாயினுமன்னவன்றன்னொளி
கறங்குதெண்டிரைவையகங்காக்குமா
லிறங்குகண்ணிமையார்விழித்தேயிருந்
தறங்கள்வெளவவதன்புறங்காக்கலார்.

இறங்கு கண்ணிமையார் - தெய்வத்தன்மைகுலையுந் தேவரென்றது. மேலே * "எல்லே மூ வைந்துநாள்களுளவென விமைக்குங்கண்ணும" என்பராதலின், கண்ணிமையார் தேவர்க்கோர் பெயர்.

இ - ள். மன்னவன் உறங்குமாயினும், அவனொளி உலகைக்காவாநிற்கும்; தேவர் விழித்தேயிருந்துந் தம்மைநோக்கி உலகத்தார்செய்கின்ற அறங்களை அசுரர் வெளவ அதனைப்பரிகரிக்க மாட்டாரென்றவாறென்க. (உகக)

யாவராயினுநால்வரைப்பின்னிடிற்
றேவரென்பதுதேறுமிவ்வையகங்
காவன்மன்னவர்காய்வனசிந்தியார்
நாவினும்முரையார்நவையஞ்சுவார்.

இ - ள். இழிந்தோராயினும் அவர் பின்னேநால்வரைத் திரியச்சொல்லுவராயின், அவரைப்பால்வரைதெய்வமென்னுந்தன்மையை வையகந்தேறுமாதலான், மன்னவர்களான்வரும் நவையை அஞ்சுவார் அவர் காய்வனவற்றை உவமைகூறுமிடத்துங் கூறார்; நினைப்பதுஞ்செய்யாரென்றவாறென்க. (உஉ0)

தீண்டினார்தமைத்தீச்சுடுமன்னர்தீ
யீண்டுதங்கிளையோடுமெரித்திடும்
வேண்டினின்னமிர்துந்நஞ்சுமாதலான்
மாண்டதன்றுநின்வாய்மொழித்தெய்வமே.

இ - ள். தீ தீண்டினாரையே சுடும்; அதுபோலன்றி மன்னருடைய கோபம் தீங்குசெய்தவர்களைத் திரண்ட சுற்றத்தோடுஞ்சுடும்; அவரது அருள், அவரைவிரும்புவாருண்டாயின் அமுதுபோலுறுதிபயக்கும்; அவரதுசெற்றம் அவரைவிரும்பாதார்க்கு

* முத்தியிலம்பகம், தேவகதித்துன்பம், கக.

நஞ்சுபோற் கரந்துநின்றுகொல்லும்; அங்ஙனமாதலால் நின்றெய்வம் என்றெய்வம் போல் மாண்டதன்றென்றானென்க.

இதனாற் பகைவரையும் நட்டாரையும் தீநட்பையுங்கூறினன். (உஉக)

வேலின்மன்னனைவிண்ணகங்காட்டியிஞ்
ஞாலமாள்வதுநன்றெனக்கென்றியேல்
வாலிதன்றெனக்கூறினன்வான்றுமற்
கோலைவைத்தன்னவொண்டிறலாற்றலான்.

இ - ள். வாள்வலியாலே றுமனுக்கு வல்லவனாயின் வந்துபார்க்கவென்று ஓலை வைத்தாற்போன்ற திறலைடைத்துதலுடைய தருமதத்தன், மன்னனை வேலினால்விண்ணேற்றி, இவ்வுலகையாள்வதுஎனக்குநன்றென்றியேல், அது நினக்கு நன்றன்றென்றானென்க.

இவன் முன்னின்றுகூறிய அருமைநோக்கி ஆற்றலானென்றார். (உஉஉ)

வேறு.

குழற்சிகைக்கோதைசூட்டிக்கொண்டவனிருப்பமற்றோர்
நிழற்றிகழ்வேலினானைநேடியநெடுங்கணாளும்
பிழைப்பிலாட்புறந்தந்தானுங்குரவரைப்பேணல்செய்யா
திழுக்கினாரிவர்கள்கண்டாயிடும்பைநோய்க்கிரைகளாவார்.

இ - ள். இடும்பைநோய்களுக்கிரைகளாவார் தன்கணவனையொழிய வேறொருவனைத் தேடியவளும், தன்னைத்தப்பாத மனைவியை மனத்தாற்கொள்ளாது விட்டவனும், குரவரைப் பேணுதல்செய்யாதே தப்பினருமாகிய இவர்கள்காணென்றானென்க.

தரவு * "செலவினும் வரவினும்" என்னும் பொதுச்சூத்திரத்தான்முடிக்க. குரவா அரசன், உவாத்தியாயன், தாய், தந்தை, தம்முன் எனஐவர். (உஉங)

நட்பிடைக்குய்யம்வைத்தான்பிறர்மனைநலத்தைச்சேர்ந்தான்
கட்டழற்காமத்தீயிற்கன்னியைக்கலக்கினானு
மட்டுயிருடலந்தின்றானமைச்சனுயரசுகொன்றான்
குட்டநோய்நரகந்தன்னுட்குளிப்பவரிவர்கள்கண்டாய்.

இ - ள். நட்பிடத்துவஞ்சித்தவனும், பிறர்மனையாளைச் சேர்ந்தவனும், மிக்க அழல்போலுங் காமத்தீயினாற் கன்னியை அத்தன்மைகுலைத்து வரையாதவனும், உயிரைஅட்டு உடலைத் தின்றவனும், கொன்றானுமாகிய இவர்கள்காண் இம்மையிற்குட்டநோயினும் மறுமையில் நரகத்தினு மழுந்துவரொன்றானென்க.

கலக்குதல் - கைக்கிளை வகையாகிய இராக்கதமென்னு மணத்திற்றப்பியதாம்.

பிறையதுவளரத்தானும்வளர்ந்துடன்பெருகிப்பின்னாட்
குறைபடுமதியந்தேயக்குறுமுபறேய்வதேபோ
லிறைவனைத்தன்னையாக்கியவன்வழியொழுகினென்று
நிறைமதியிருளைப்போழுநெடும்புகழ்விளக்குமென்றான்.

---

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், உஅ.

இ - ள். பிறைவளர அதுதானுமுடனேவளர்ந்துபெருத்துப் பின்பு குறைதலுண்டான மதிதேய்ந்துமுயலுந்தேயுமாறுபோலத் தன்னை இறைவனாக ஆக்கினவன்வழியிலே அவனேமெம்பெருகி அவனேடுந்தேய்ந்தொழுகுவனாயின், அவ்வொழுக்கம் இருளையோட்டுமதிபோலப் பழியையோட்டும்; புகழைவிளக்குமென்றானென்க. (உஉ௫)

கோணிலைதிரிந்துநாழிகுறைபடப்பகல்கண்மிஞ்சி
நீணிலமாரியின்றிவிளைவஃகிப்பசியுநீடிப்
பூண்முலைமகளிர்பொற்பிற்கற்பழிந்தறங்கண்மாறி
யாணையிவ்வுலகுகேடாமரசுகோல்கோடினென்றான்.

இ - ள். அரசன் தானடத்துமுறைமையிற் பிறழ்வனாயின், இவ்வுலகு, கோள் நிற்குநிலைகுலைந்து இராநாழிகைகுறையப் பகற்பொழுதுகள் மிக்கு மாரியின்றாய் நிலம்விளைவுசுருங்கிப் பசிமிக்கு மகளிர்கற்பழிந்து அறச்சாலைகளுமின்றிக் கெடும்; அரசனாணையேயென்றானென்க.

கட்டியங்காரன் கொலைகுறித்ததுவும் அரசனிறைக்கு அரசளித்ததுவு முட்கொண்டு இரண்டுகவியும் பொதுவாகக்கூறினான். எச்சங்கள் செயப்படுபொருளாம்.

தார்ப்பொலிதருமதத்தன்றக்கவாறுரைப்பக்குன்றிற்
கார்த்திகைவிளக்கிட்டன்னகடிகமழ்குவளைப்பைந்தார்
போர்த்ததன்னகலமெல்லாம்பொள்ளெனவியர்த்துப்பொங்கி
நீர்க்கடன்மகரப்பேழ்வாய்மதனன்மற்றிதனைச்சொன்னான்.

குன்றிலே கார்த்திகைவிளக்கிட்டன்னவாக குவளைத்தார்போர்த்த அகலம். மகரவாய்போலும் பெரியவாய்.

இ - ள். வாகைத்தாரார்பொலிந்த தருமதத்தன் அமைச்சர்க்கும் அரசர்க்குந்தக்கபடியைக் கூறினாக; மதனன் தன் அகலமெல்லாங் கடுகவியர்த்துப் பொங்கி இதனைக் கூறினனென்க. (உஉ௭)

தோளினல்வலியராகித்தொக்கவாதலைகள்பாற
வாளினற்பேசினல்லால்வாயினற்பேசறேற்றேன்
காளமேகங்கள்சொல்லிக்கருனையாற்குழைக்குங்கைகள்
வாளமர்நீந்தும்போழ்தின்வழுவழுத்தொழியுமென்றான்.

இ - ள். பகைவரதுதலைசிதற வாளினல்வஞ்சினமுடித்தலல்லது வாயினற் பேசுதலையறியேன்; தாங்கள் காளமேகங்கள்போலிங்ஙனமுழங்கக்கூறுதலாலே, கருனையோடே சோற்றைத்திரட்டுங்கைகள் அமர்க்கடலைநீந்தும்போழ்து மிகவேர்த்து வழுவழுக்குமென்று கூறினனென்க.

தேற்றேன் "தேற்றாய்பெருமநின்பொய்யே" என்றாற்போனின்றது. இக்கவி முன்னிலைப்புறமொழி. (உஉ௮)

நுண்முத்தமேற்றியாங்குமெய்யெலாம்வியர்த்துநொய்தின்
வண்முத்தநிரைகொளெற்றிவார்முரிபுருவமாக்கிக்
கண்ணெரிதவழவண்கைமணிநகுகடகமெற்றா
வெண்ணகைவெகுண்டுநக்குக்கட்டியங்காரன்சொன்னான்.

# முகவுரை.

திரிசிரபுரம்.

ம - ள - ள - ஸ்ரீ, சி. தியாகராசசெட்டியாரவர்கள்

யாழ்ப்பாணம்.

„ சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள்

சென்னை.

„ ம. மகாலிங்கையரவர்கள் „

„ அஷ்டாவதானம், சபாபதிமுதலியாரவர்கள் „

„ திரு. சின்னசாமிபிள்ளையவர்கள் „

„ சோ. சுப்பராய செட்டியாரவர்கள் „

சேலம்

„ இராமசுவாமிமுதலியாரவர்கள் „

உடையூர்

„ சுப்பிரமணியபிள்ளையவர்கள் „

திருநெல்வேலி.

„ சாலிவாடீசுவரவோதுவாரவர்கள் „

„ ஈசுவரமூர்த்திக்கவிராயரவர்கள் „

தூத்துக்குடி.

„ குமாரசாமிபிள்ளையவர்கள் „

சிதம்பரம்.

„ தருமலிங்கசெட்டியாரவர்கள் „

தஞ்சை.

„ மருதமுத்து உபாத்தியாயரவர்கள் „

„ விருஷபதாசமுதலியாரவர்கள் „

கூடலூர்

„ விசயபாலநயினாரவர்கள் „

வீரே.

„ சந்திரநாதசெட்டியாரவர்கள் „

ஆ உரைப்பிரதி க

இவற்றுள் முழுது மில்லாதனவும் விசேடவுரையில்லாதனவுஞ் சில.

## மூலப்பிரதிகள்.

இராமநாதபுரம்.

ம - ள - ள - ஸ்ரீ, பொன்னுசாமித்தேவரவர்கள் பிரதி

சேலம்.

„ இராமசுவாமிமுதலியாரவர்கள் „

வீரே.

„ சந்திரநாதசெட்டியாரவர்கள் „

ஆ மூலப்பிர

வே. சாமிநாதை[illegible]

புராதனமான தமிழ்நூல்களும் உரைகளும் பண்டையவடிவங் குன்
வேண்டுமென்பதே எனது நோக்கமாதலின், பிரதிகளில் இல்லாதவற்
யும், உள்ளவற்றை மாற்றியும், குறைத்தும் மனம்போனவாறே அச்
த்தேனல்லேன். ஒருவகையாகப் பொருள்கொண்டு, பிரதிகளில் இருக்
பதிப்பித்தேன். யானாக ஒன்றுஞ் செய்திலேன். பிரதிகளிற் சிலவிடத்து
ப்பதங்கள் கிரந்தவெழுத்தாலே எழுதப்பட் டிருந்தமையின், அவ்வாறே
த்தேன்.

நூலில் ஆங்காங்குள்ள ஆருகதசமயக் கோட்பாடுகளை வீரூர் ம-ா-ா-ஸ்ரீ
த செட்டியாரவர்கள் எனக்குவிளங்கச் செய்தார்கள். அடிக்கடி யான்
க்கொள்ளும்படி சில ஜைனநூல்களுங் கொடுத்தார்கள்.

லவர்திலகர்களாற் பரிசோதித்தற்குரிய இந்நூலையும் இவ்வுரையையும் என்
விற்கு எட்டியமட்டுமே ஒருவாறு பரிசோதித்து, எழுதுவோரால் நேர்ந்த
க் களைந்து, இயன்றவளவு திருத்தமாகப் பதிப்பித்தேனாதலின், இப்பதிப்பிற்
டும் எழுத்துப்பிழை சொற்பிழை வாக்கியப்பிழை முதலியவற்றையும்,
ள் திருத்தங்களையுந் தயைசெய்து விவேகிகள் தெரிவிப்பார்களாயின், அவர்
நதவிசெய்ததாகவெண்ணி எழுமையுமறவேனாகி அவற்றைப் பின்பு அச்சிற்
துப் பலர்க்கும் பயன்படும்படிசெய்வேன். விளங்காத மேற்கோள்களுள்
இன்னநூலின் இன்னபாகத்துள்ளதென்று காணப்படின், அதனையுந்
குமாறு அவர்களை வேண்டுகின்றேன்.

ப்புத்தகத்தை அச்சிடுவிக்கும்பொழுது யான் பொருட்கவலையடைந்து வருந்
ண்ணம் கும்பகோணம், தஞ்சை, கோட்டூர், திரிசிரபுரம், யாழ்ப்பாணம், சென்
ட்டணம், திருநெல்வேலி, ஊற்றுமலை, சோழன்மாளிகை முதலிய இடங்களி
ள செல்வப்பொருளோடு கல்விப்பொருளும் ஒருங்குடைய கனவான்கள் பலர்
யொப்பஞ்செய்து முற்பணமளித்தார்கள். இக்காலத்தில் அவர்கள்செய்த அவ்வு
யை யான் எக்காலத்தும் மறவாதிருப்பதன்றி அவர்களுக்கு என்னாற் செய்தற்
பிரதியுபகாரம் யாது?

யான் எழுதியனுப்பும் மேற்பிரதிக்கு அச்சுப்பிரதி வேறுபடாவண்ணம், சென்
த் திராவிடரத்நாகர அச்சுக்கூடத்திலிருந்து அவற்றைப் பலமுறை ஒப்புநோக்கிப்
நுதவிசெய்துவந்த தேரழுந்தூர் ப்ரஹ்மஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலா
ரியரையும், திருமானூர் ப்ரஹ்மஸ்ரீ கிருஷ்ணையரையும் ஒருபொழுதும் மற
ன்.

ஒன்றுக்கும் பற்றாத சிறியேனை இம்முயற்சியிற் புகுத்தி நடாத்தி நிறைவேற்றி
ரிய எம்பெருமானது திருவருளையும் குருவருளையும் எக்காலத்துஞ் சிந்தித்து வரு
கின்றேன்.

எனக்குக் கிடைத்த பிரதிகளுள் நச்சினார்க்கினியருரையோடுகூடிய சீவகசிந்
மணிப் பிரதிகளாவன:—

திருவாவடுதுறையாதீனத்து

சுப்பிரமணிய தேசிகமூர்த்திகள் பிரதி

ஷை ஆதீனத்து மஹாவித்துவான்

ஸ்ரீ, மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்

# முகவுரை.

செந்தமிழ் மொழியிற் சிறந்துவிளங்கும் பழைய *காப்பியமைந்தனுள் முந்திய தாகிய இந்தச் சீவகசிந்தாமணி என்பது திருத்தக்கதேவர் என்னுஞ் சைனமுனிவ ரால் இயற்றப்பட்டது. இது பழைய இலக்கியவுரைகளிலும் இலக்கணவுரைக ளிலும் உரையாசிரியர்களால் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டுள்ள பிரமாண நூல்களுள் ஒன்று; முற்காலத்து முதல் இடை கடை என்னும் முச்சங்கத்தும் எழுந் தருளியிருந்து தமிழாராய்ந்த தெய்வப்புலவர்கள் அருளிச்செய்த இலக்கியங்கள் போலவே செந்தமிழ்நடையிற் சிறந்துள்ளது; வடமொழியில் வான்மீகம்போல, எல் லா வணனைகளுந் தன்பால் அமையப் பெற்றிருத்தலின், மகாகாவியமென்று கூறப் பட்டிருத்தலன்றி, பிற்காலத்து அதிமதுரமான காப்பியங்களியற்றிய மகாகவிகள் யார்க்கும் இன்ன இன்னவற்றை இன்ன இன்னவாறு வருணித்துப் பாடுகவென அவ்வான்மீகம்போல வழிகாட்டியதும் இந்நூலே யென்பர்.

இந்நூல் சீவகனென்னும் ஓரரசன் பிறந்ததுமுதல் வீடுபெற்றது இறுதியாக வுள்ள கதையைக் கூறும்.

இந்நூலில், அரசன் அமைச்சரைப் பலமுறை ஆராய்ந்து தெளியல்வேண்டுமென் பதும், பெண்வழிச்சேறல் பெருந்துயர்விளைக்குமென்பதும், தன்னாசிரியன் கட்டளைப் படியே எப்பொழுதும் ஒழுகல்வேண்டுமென்பதும், பகையை வெல்லக்கருதினோர் உரியகாலமும் இடமும் வாய்க்குமளவுந் தன்னெண்ணத்தை வெளிப்படுத்தாதிருத்தல் வேண்டுமென்பதும், பிறவுயிர்களுக்குத் துன்பம்வரின் உடனே தீர்த்தற்கு முயலல் வேண்டுமென்பதும், வருத்தும்படி நேரினுந் தனக்கு ஒருவாற்றானும் பகைவரல்லா தவரைச் சிறிதும் வருத்தலாகாதென்பதும், தந்தைதாயர்சொல்லைத் தலையாகக் கொ ள்ளல்வேண்டுமென்பதும், அறிவும் அன்புமுள்ள துணைவனிருந்தால் தானெண்ணிய வற்றையெல்லாம் எளிதில் முடித்துக் கொள்ளலாமென்பதும், தனக்கு இன்பதுன் பங்கள்வந்தவிடத்து முறையே மகிழ்தலும் வருந்துதலுமின்றி எல்லாம் ஊழ்வினைப் பயனென்றே எண்ணல்வேண்டுமென்பதும், எல்லாவுயிர்களிடத்தும் எப்பொழுதும் அருளுடையனாதல் வேண்டுமென்பதும், சற்பாத்திரமறிந்து தானஞ்செய்தல் வேண் டுமென்பதும், தீவழிச்செல்வோரைக் காணின் இரங்கி உடனே அவரை நல்வழிப் படுத்த முயலல்வேண்டுமென்பதும, நன்றிமறவாதிருத்தல் வேண்டுமென்பதும், இவை போல்வன பிறவும் நன்கு விளங்குகின்றன.

இந்நூலாசிரியர் இச்சரிதத்தை இன்னநூலிலிருந்தெடுத்து 'யாம் பாடுகின் றேம்' என்று கூறாமையின், இதற்கு முதனூல் இன்னதென்று இந்நூலைக்கொண்டு நிச்சயிக்கக் கூடவில்லை. ஆயினும் வடமொழியில் சத்திரசூளாமணி, கத்தியசிந்தா மணி, சீவந்தரநாடகம், சீவந்தரசம்பு என நான்குநூல்கள் உள்ளன. அவைகளெல் லாம் இச் சீவகன்சரிதமே கூறுகின்றன. †மகாபுராணத்தின் ஓர்பாகத்தும், மணிப்பி ரவாளமாகிய ஸ்ரீபுராணத்தின் ஓர்பாகத்தும் இச்சரிதங் கூறப்பட்டுள்ளது. அவற்

* காப்பியமைந்தாவன: சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண் டலகேசி, வளையாபதி என்பன.

† இம் மகாபுராணமும், ஸ்ரீபுராணமும் சைனசமயத்தாரியற்றிய பழைய நூல்கள்.

# முகவுரை.

ற்றும் இதற்குங் கதையிற் சில வேறுபாடுகளுண்டு. அந்நூல்களுள் சத்திரசூளாமணி என்பதை இதற்கு முதனூலென்று சைனர் கூறுகின்றனர். தமிழிற் சிந்தாமணிமாலையென்று ஒரு நூல் வழங்குகின்றது. அது சுத்தத் தமிழ்நடை யுள்ளதன்று.

இந்நூல் முதலிற் கடவுள்வாழ்த்து முதலியனவும் கதையைத் தொகுத்துக் கூறுவதாகிய பதிகமும் முறையே அமையப்பெற்று, பின்னர் நாமகளிலம்பகமுதலிய பதின்மூன்று இலம்பகவுறுப்பாகப் பகுக்கப்பட்டுள்ளது. இதன் செய்யுட்டொகை ௩௧௪௫. திருத்தக்கதேவர் இயற்றிய செய்யுள் இரண்டாயிரத் தெழுநூறேயென்று "முந்நீர்வலம்புரி" என்னுஞ் செய்யுளுரையில் நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலால், மற்றவைகள் பிறரால் செய்யப்பட்டனவென்று தோற்றுகின்றது.

இச் சீவகசிந்தாமணியை உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியருரையுடன் பலபிரதிரூபங்களைக்கொண்டு நன்றாகப் பரிசோதித்து, எழுதுவோரால் நேர்ந்த வழுக்களைமாற்றி, பலர்க்கும் பயன்படும் வண்ணம் அச்சிடுவிக்க முயலும்படி சிலவருடங்களுக்குமுன், சேலம் ம-ா-ா-ஸ்ரீ இராமசுவாமிமுதலியாரவர்கள் பலமுறை வற்புறுத்திக்கூறி, எனக்குத் தம்பாலிருந்த கையெழுத்துப் பிரதியையுங் கொடுத்தார்கள்.

யான் அவ்வாறு செய்தற்கு அநர்கனாயினும், உலோகோபகாரிகளாகிய அவர்கள்சொல்லை மறுத்தற்கஞ்சியும், கல்விமான்களுக்குக் கருவூலம்போலும் இந்நூல் உரையுடனே நின்றுநிலவுதலைக் கருதியும் ஒருவாறு அவ்வேலையைச் செய்யலாமென்று துணிந்து முயன்றுவருகையில், இத்தமிழ்நாட்டிலுள்ள கல்வியறிவொழுக்கங்களான் சான்ற விவேகிகள்பலர் இம்முயற்சி இனிதுபயன்படும்வண்ணம் தம்பாலுள்ள பழைய கையெழுத்துப் பிரதிகளை அன்போடு கொடுத்தார்கள். அவையனைத்தையுங் கைக்கொண்டு ஒப்புநோக்கி வந்தேன்.

அப்பொழுது என்வேண்டுகோளுக்கிரங்கித் [illegible] திருவாவடுதுறை யாதீனத்து ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்திகள் தங்கள் புத்தகசாலையிலிருந்த புத்தகங்களுள் எனக்கு வேண்டியவற்றையும், திருநெல்வேலிமுதலிய பிறவிடங்களிலிருந்து வருவித்த சிலபிரதிகளையுங் கட்டளையிட்டார்கள். இம்முயற்சியில் யான் மனந்தளராவண்ணம் இடையிடையே அவர்கள் செய்துவந்த பேருதவிகள் பல.

எமக்குச் சொல்லவும் [illegible] வேறுபட்டுச் சிலமுறைதிருத்த இந்நூலுரைப் பழையபிரதிகளைப் பலவற்றையும் பலமுறை ஒப்புநோக்கி இடையறாது பரிசோதனை செய்துவந்த பொழுது, கவிகளின் சுத்தவடிவத்தையும் உரையின் சுத்தவடிவத்தையுங் கண்டுபிடித்தற்கும், உரையினுள் விசேடவுரையினைது பொழிப்புரையின்னதென்று பிரித்தற்கும், மேற்கோள்களின் முதலிறுதிகளைத் தெரிந்துகோடற்கும், பொழிப்புரையை மூலத்தோடு இயைத்துப் பார்த்தற்கும், பிழையைப் பிழையென்று நிச்சயித்துப் பரிகரித்தற்கும், [illegible] டற்கும் எடுத்துக்கொண்ட முயற்சியும் அடைந்தவருத்தமும் பல. அப்படி [illegible] சிலவிடத்துள்ள இசைத்தமிழ் நாடகத்தமிழின் பாகுபாடுகளும், மற்றுஞ் சில [illegible] நன்றாக விளங்கவில்லை. அதற்குக்காரணம் அவ்விசைத்தமிழ் நாடகத்தமி[illegible] முதலியவைகள் இக்காலத்துக் கிடையாமையே.

இந்நூலையும் இவ்வுரையையும் பின்னும் இரண்டொருமுறைபரிசோதித்[illegible] விருப்புடையனேனும், இவற்றை விரைவிற் பதிப்பித்துப் பிரகடனஞ்செய்யும்ப[illegible] யாழ்ப்பாணம் ம-ா-ா-ஸ்ரீ சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் பலமுறை தூண்டினமையால் விரைந்து அச்சிடுவிக்கத் துணிந்தேன்.




# திருத்தக்கதேவர் சரித்திரச்சுருக்கம்.

இந்நூலாசிரியராகிய திருத்தக்கதேவர் சோழர்குலத்திலேயுதித்து உரியபிரா பத்தே வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்றுச் சிறிதுகல்விகற்றபின்பு, நல்லாசிரியர் பால் அகத்தியம் தொல்காப்பியமுதலிய இலக்கணநூல்களையும், பழைய சங்கச் செய்யுள்களையும், அக்காலத்துவழங்கிய மறைநூல்களையும் ஐயந்திரிபற ஓதியுண ர்ந்து, இப்படியே வடமொழியிலும் வல்லராய்ப் பின்பு, தாம்புகுந்துள்ள ஆருகதசம திற்குரிய நூல்களெல்லாவற்றையுங் கற்று, அவற்றிலே அதிபாண்டித்திய முடை ராய், அன்பு அருள் வாய்மை அடக்கமுதலிய நற்குணங்களனைத்தும் ஒருங்கே மையப்பெற்று, ஆண்டினிளையராயினும் அறிவின் முதியராய் இளமைப்பருவத்தே றவறம்பூண்டு, தம்மாசிரியரை விட்டுநீங்காது அவர்கருத்தின்வழி ஒழுகுதலே தம நுப் பெரும்பயனக்கொண்டு, அவ்வாறு அன்போடொழுகுவாராயினர். சிலநாட் சென்றபின், ஆசிரியருடன் பாண்டிவளநாட்டிலேயுள்ள மதுராபுரியையடைந்து வ்விடத்தே சிலகாலம் அமர்ந்தனர்

அங்ஙனம் அமருமபோது, திருத்தக்கதேவர், அம் மதுரைப்பதியிலே ஸ்ரீமத் சாமசுந்தரக்கடவுள் திருவருளாற் சங்கப்பலகைபெற்று அதில் வீற்றிருந்து தமிழ் மொழியை வளர்த்தருளுந் தெய்வப்புலவர்கள் மகிமைகளை உணர்ந்து, அவர்களோடு டிப்பழகவிரும்பி, ஆசிரியர்பால் அநுமதிபெற்றுச் சென்று சங்கப்புலவர்களோடு டோறும் பயிலுவாராய்த் தமிழ்மொழியிலுள்ள பழைய செய்யுள்களின் சொற் வை பொருட்சுவைகளை அவர்கள் எடுத்துக்கூறிப் பாராட்டத் தாமின்புற்றும், மும் அவ்வாறே எடுத்துமொழிந்து அவர்களை யின்புறுவித்தும் "தவலருந் தொல் கேள்வித் தன்மை யுடையா - ரிகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ - நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத் - தும்ப ருறைவார் பதி" என்றவாறே அவர்க ளோடும் அளவளாவி அளவில்லாத மகிழ்ச்சியடைந்து, அவர்களால் நன்குமதிக் கப் பட்டிருந்தனர்.

அப்படியிருக்கு நாட்களிலே ஒருநாள், சங்கப்புலவர்கள் திருத்தக்கதேவரை நோக்கி, "நுஞ்சமயத்தாரிற் பாடும்புலவர் பலரும் துறவினை வலியுறுத்திப்பாடத் தெரிந்துகொண்டாரேயன்றிக் காமச்சுவையைப் பாராட்டிப் பாடத் தெரிந்துகொண் டாரல்லர். இக் காலத்து வழங்குங் காமச் சுவையையுடைய நூல்கள் பலவற்றுள் ளும் ஒன்றேனும் நும்மவர் இயற்றியதாகக் காணப் படாமையே அதற்குத் தக்க சான்றும்" என்றுசொல்ல, அதற்குத் திருத்தக்கதேவர், "இன்பச்சுவையைப் பாரா ட்டுதலில் எம்மவர் வெறுப்புற் றிருந்தாரல்லது பாடத் தெரியாதிருந்தாரல்லர்" என் கூற, சங்கப்புலவர்கள், "அப்படியானால் காமச்சுவை முழுதும்விளங்க அமைத் த் தேவரே! ஓர்நூலியற்றுதிர்" என்றார்.

திருத்தக்கதேவர் அங்ஙனம் பாடத்துணிந்து, தம்மாசிரியர்பாற் சென்று ங்கி, நிகழ்ந்ததை விண்ணப்பஞ்செய்ய, ஆசிரியர் அவ்வாறு பாடுதற்கண்ணே மாணாக்கர் வல்லுநராயிருத்தலை நன்குணர்ந்திருந்தாராயினும், மாணாக்கர்கருத் அளந்தறிய ஆலோசித்திருக்கும்பொழுது, அவ்விருவருக்கும் எதிரிலே ஒருந ணது ஓட, அதனைக் கண்ட ஆசிரியர், மாணாக்கரை நோக்கி "இந் நரிச்சாதித் மையை ஆதாரமாகக்கொண்டு உமக்குத் தோற்றியவாறே ஓர் சிறிய நூல் ற்றுதிர்" என்றுசொல்ல, திருத்தக்கதேவர் அதனை ஆதாரமாகக்கொண்டு, யாக நிலையாமை செல்வநிலையாமை முதலியவைகளெல்லாம் வெள்ளிடைமலைபோற் ள்ளிதிற் புலப்படும்வண்ணம் விரைவில் நரிவிருத்தம் என்னும் ஓர் நூலியற்றி ரியருக்குக் காட்ட, ஆசிரியர் பெரிதும் வியப்புற்றுத் தம்மாணாக்கர்கருத்துத் . வின்கண்ணே உறுதிகொண்டிருத்தலைநோக்கிக் கழிபேருவகையுற்று மாணாக்கரைப பார்த்து, "சங்கப்புலவர்கள் கூறியவண்ணங் காமச்சுவை பெரிதும் விளங்கும்விதம் சீவகன்கதையை ஒரு பெருங்காப்பியமாக இயற்றுதி" என்றுகூறி, "அஃது இடையூறின்றி இனிதுமுடிக" என்று அருகக்கடவுளைப் பிரார்த்தித்துச் "செம்பொன்வரைமேல்" என்னுஞ் செய்யுளொன்றியற்றி அதனால் அக்கடவுளைத் துதித்து, "இச்செய்யுளைக் கடவுள்வாழ்த்தாகக் கொண்டு நீ நூலியற்றுதி" என்று அக்கவிை திருத்தக்கதேவருக்கு அளித்தனர்.

திருத்தக்கதேவர் அச்செய்யுளையேற்றுச் சிரமேற்கொண்டு, தாம் "மூவா தலா" என்னுங்கவியாற் சித்தரைத் துதியாநிற்க, அக்கவியை ஆசிரியர் கேட்டு "யா கூறியகவியினும் நீகூறியகவி செவ்விதாயிருத்தலால், அதனை முதலிலே நிறுத்து என்றுசொல்ல, திருத்தக்கதேவர் தம்மாசிரியர் கட்டளையை மறுத்தற்கஞ்சித் தா கூறிய சித்தசரணமாகிய "மூவாமுதலா" என்னுங் கவியை முன்னும், ஆசிரிய கூறிய அருகசரணமாகிய "செம்பொன்வரைமேல்" என்னுங்கவியைப் பின்னுமா வைத்துப் பாடத்தொடங்கி, இந்நூலை எட்டுநாளில் நிறைவேற்றி ஆசிரியர்க்குக் காட்ட, ஆசிரியர்நோக்கிப் பெரிதும் வியந்து புகழ்ந்து, "இந்நூல் நின்றுநிலவுக" என்று ஆசிகூறி "மூந்நீர்வலம்புரி" என்னுங் கவியால் ஓம்படையுரைத்துத் தேவரைநோக்கி, "இனிச் சங்கப்புலவரிடஞ்சென்று அரங்கேற்றிவருதி" என்றனர்.

உடனே திருத்தக்கதேவர் சென்று பாண்டியராசனவைக்களத்திற் சங்கப்புலவர்களை எழுந்தருளுவித்து இந்நூலை வாசித்துக்காட்ட, அவர்கள் கேட்டு, இந்நூல் சொல்வளம் சந்தவின்பம் செய்யுணடைமுதிர்ச்சி காமச்சுவைமுதலியவும் அலங்காரங்களுமுடைத்தாய், எவ்வெச் சாதியார்க்கும் காலம் இடமுதலியவற்றிற்கும் ஏற்ற வருணனைமுதலியன பெற்றிருத்தலைத் தெரிந்து வியப்புற்றுச் சிரந்துளக்கி "இங்ஙனம் பாடுதல் யாவர்க்கும் அரிதரிது" என்றுபுகழ்ந்து நன்குமதித்து மிகப்பாராட்டிப் பெருமகிழ்ச்சியடைந்தனர். அரசனும் அவ்வாறே புகழ்ந்து பெரிதும் பாராட்டினன். மற்றையோரும் மகிழ்ச்சியடைந்தனர்.

அப்படி நிகழ்ந்தபொழுது, ஆங்குள்ளாரிற் சிலர் சந்தேகித்து "இத்திருத்தக்கதேவர் இளமைப்பருவந்தொடங்கித் துறவுபூண்டிருத்தல் மெய்ம்மையாயின், மற்றச் சுவைகள்போலக் காமச்சுவையை இவ்வாறு பாராட்டிப்பாடுதல் இவர்க்கு இயலுவதன்று; இந்நூலின்கண்ணே அச்சுவை அதிகரித்துள்ளது; ஆதலின், இவர் சிற்றின்ப அநுபவமுடையராதல் வேண்டும்" என்று தம்முட்பேசிக் கொண்டனர்.

அதனைத் தேவர்தெரிந்து அவ்வனைவருங் காணும்படி, திரண்ட இரும்பின்கட்டியைத் தழலிற் பழுக்கக்காய்ச்சி "யான் பாலசந்நியாசியாகவிருத்தல் மெய்ம்மையா

இ - ள். கட்டியங்காரன் மெய்யெலாமுத்தழுத்தினாற்போலக்கடிதின்வியர்த்து அவ்வியர்ப்புநிரைத்த நெற்றியிலே புருவமாக்கிக் கண் எரிதவழாநிற்கக் கடகத்தை உடைத்து வெடிசிரிப்பாக வெகுண்டுசிரித்து ஒரு வார்த்தைகூறினானென்க.

நெடியபுருவம். (உஉகூ)

என்னலாற்பிறர்கள்யாரேயின்னவைபொறுக்குநீரா
ருன்னலாற்பிறர்கள்யாரேயும்மவற்குறுதசூழ்வார்
மன்னன்போய்நதுறக்கமாண்டுவானவர்க்கிறைவனாகப்
பொன்னெலாம்விளைந்துபூமிபொலியயான்காப்பலென்றான்.

உற்றவன் - சச்சந்தன். உறுத - பொன்னுலகாளாமல் மண்ணுலகாளுதல். இனி உற்றவன் - கட்டியங்காரனுமாம். விளைந்தபூமியும் பாடம்.

இ - ள். நீ கூறிய கடியசொற்களைப்பொறுப்பார் என்னையொழிய வேறுயார்? அதற்கியானே; தன்னைச்செறிந்தவற்கு உறுதகாரியங்களைச்சூழ்வார் உன்னையொழிய வேறுயார்? அதற்குநீயே; இனிஅமைக; வேந்தன் தேவர்க்கிறைவனாக யான் பூமி யெல்லாம் விளைந்து பொன்பொலியக் காப்பேனென்றானென்க. (உகூ0)

விளைகபொலிகவஃதேயுரைத்திலம்வெகுளவேண்டா
களைகமெழுகமின்னேகாவலற்கூற்றங்கொல்லும்
வளைகயமடந்தைகொல்லுந்தான்செய்தபிழைப்புக்கொல்லு
மளவறுநிதியங்கொல்லுமருள்கொல்லுமமைகவென்றான்.

இ - ள். நீ கூறியவாறே பூமியெல்லாம் விளைக; பொன்னும் பொலிக; நினது நினைவேகூறிற்றிலேம்; அவற்றிற்கு நீ வெகுளவேண்டா; இப்பொழுதேகளைவே மாக எழுவேம்; இதற்குக்காரணம் யாதெனின், காவலனைக்கொல்லுங்கூற்றம் நிலமட ந்தையாய்க்கொல்லும்; பிழைப்பாய்க்கொல்லும்; நிதியாய்க்கொல்லும்; அருளாய்க் கொல்லும். ஆதலால் அவனுக்கு அக்கொலை அமைவதாகவென்றானென்க.

இனி "அஃதேலுரைக்கிலம்" பாடமாயின், நின்கருத்து அதுவாயின் வேறு கூறு கின்றிலேமென்க. இனிக் காவலனுக்கியகூற்றமுங் கயமடந்தைமுதலியனவுங் கட்டி யங்காரனைக் கொல்லுமென்றுட்கொண்டு இனி வார்த்தையமைகவென்றானென்பாரு முளர். "விளைகபொலிக" ஒருவழக்கென்பாருமுளர். (உகூக)

நிலத்தலைத்திருவனுடனிப்பருங்காதல்கூர
முலைத்தலைப்போகமூழ்கிமுக்கிழ்நிலாமுடிகொள்சென்னி
வெலற்கருந்தானைநீத்தவேந்தனைவெறுமைநோக்கிக்
குலத்தொடுங்கோறலெண்ணிக்கொடியவன்கடியசூழ்ந்தான்.

இ - ள். திருவனுளிடத்தே தனதுகாதல்கூருதலின் அவளது முலைப்போகத் தேயழுந்தித் தானையைநீத்த சென்னியையுடைய வேந்தனை வெறுமையைப்பார்த் துப் பிள்ளையுடனேகொல்லக்கருதி அதற்குவேண்டுங்கடியதொழில்களைக் கொடிய வன் சூழ்ந்தானென்க.

நிலத்தலைத்திரு - இல்பொருளுவமை. (உகூஉ)

கோன்றமர்நிகளமூழ்கிக்கோட்டத்துக்குரங்கத்தன்கீ
ழேன்றவன்மாந்தர்க்கெல்லாமிருநிதிமுகந்துநல்கி

பூன்றியநாட்டையெல்லாமொருகுடைநீழல்செய்து
தோன்றினன்குன்றத்துச்சிச்சுடர்ப்பழிவிளக்கிட்டன்றே.

இ - ள். அரசன்சுற்றம் விலங்கிலேமூழ்கிச்சிறையிலேதாழத் தன் கீழ்மையை யேற்றமாந்தர்க்கெல்லாம் நிதியைநல்கி நாட்டையெல்லாங் குடையாணீழல்செய்து ஊன்றுதற்குக் குன்றத்திலிட்டவிளக்குப்போலே பழியாகிய விளக்கையிட்டுத் தோன்றினனென்க.

கீழ் - இடமுமாம். நன்மாந்தர் - இகழ்ச்சி. ஊன்றிய - பெயரெச்சமுமாம். (

பருமித்தகளிறுமாவும்பாந்தியதேரும்பண்ணித்
திருமிக்கசேனைமூதூர்த்தெருவுதோறெங்குமீண்டி
யெரிமொய்த்தவாளும்வில்லுமிலங்கிலைவேலுமேந்திச்
செருமிக்கவேலினன்மன்றிருநகர்வளைந்ததன்றே.

இ - ள். சேனையானது களிறுமுதலியவற்றைப்பண்ணி, வாள்முதலியவற்றை யேந்தி, தெருவுதோறுமீண்டி, வேலினனது நகரையெங்கும் வளைந்ததென்க.

உண்ணிற்குமூர்திகளும் உட்படவளைந்து அந்தப்புரத்தினுட்புகுதாதுநின்றது கண்டு வாயிலோனுணர்த்துகின்றமை மேற்கூறுகின்றார். (உ௲௪)

நீணிலமன்னபோற்றிநெடுமுடிக்குரிசில்போற்றி
பூணணிமார்பபோற்றிபுண்ணியவேந்தேபோற்றி
கோணினைக்குறித்துவந்தான்கட்டியங்காரனென்று [ன்.
சேணிலத்திறைஞ்சிச்சொன்னான் செய்யகோல்வெய்யசொல்லா

போற்றி - பரிகாரம். பூணணிமார்ப - பகைவர் கவசமணிவதற்குக் காரணமான மார்ப; * "அரும்பூணறவெறிந்தாங்கு" என்பாமேலும். "போற்றி" நான்குகூறியது நிலத்திற்கும் குலத்திற்கும் வீரத்திற்கும் தருமத்திற்கும் நின்னையொழிய இல்லையென்றிரங்கினன்.

இ - ள். வெய்யசொல்லைக்கூறுதலுடைய வாயிலோன் போற்றியென்றுகூறி இறைஞ்சிக் கட்டியங்காரன் நின்னைக்கொலைகுறித்து வந்தானென்று கூறினனென்க.
கோண் எனின் மாறுபாடாம். (உ௲௫)

திண்ணிலைக்கதவமெல்லாந்திருந்துதாழுறுக்கவல்லே
பண்ணுகபசும்பொற்றேரும்படுமதக்களிறுமாவுங்
கண்ணகன்புரிசைகாக்குங்காவலரடைகவென்றான்
விண்ணுருமேறுபோன்றுவெடிபடமுழங்குஞ்சொல்லான்.

வல்லேயென்றது எவ்விடத்துங் கூட்டுக. வெடிபட - வெடித்தலுண்டாக.

இ - ள். சொல்லான் கதவமெல்லாந்தாழிடுக; தேர்முதலியவற்றைப்பண்ணுக; புரிசையிலே அதுகாக்குங்காவலரடைகவென்றானென்க.

இது இராசதத்தாற்கூறினன். (உ௲௬)

புலிப்பொறிப்போர்வைநீக்கிப்பொன்னணிந்திலங்குகின்ற
வொலிக்கழன்மன்னருட்குமுருச்சுடர்வாளைநோக்கிக்

* மண்மகளிலம்பகம், கசு௪.

கலிக்கிறையாயநெஞ்சிற்கட்டியங்காரனம்மேல்
வலித்ததுகாண்டுமென்றுவாளெயிறிலங்கநக்கான்.

இ - ள். புலியினது வரியையுடையகவசத்தைத்தவிர்த்து மன்னரஞ்சும்வாளை நோக்கி வலித்ததுகாண்டுமென்று மிகச்சிரித்தானென்க.

இது வீரத்தின்கண் எள்ளுதலாற் பிறந்தநகை. ஊர்திகளின்மையிற்கவசநீக்கினு னென்க. போர்வை - உறையுமென்ப. (உ௬எ)

நங்கைநீநடக்கல்வேண்டுநன்பொருட்கிரங்கல்வேண்டா
கங்குனீயன்றுகண்டகனவெலாம்விளைந்ததென்னக்
கொங்கலர்கோதைமாழ்கிக்குழைமுகம்புடைத்துவீழ்ந்து
செங்கயற்கண்ணிவெய்யதிருமகற்கவலஞ்செய்தாள்.

நன்பொருள் - பிள்ளை. வேண்டுமென்பது ஒருவியங்கோள்; * "ஒஒதல் வேண் டும்" என்றாற்போல. எல்லாமென்றான், பிள்ளையாராக்கங்கருதியுயிர்நிற்றற்கு. தெளி வுபற்றி விளைந்ததென்று இறந்தகாலத்தாற்கூறினான்.

இ - ள். நங்காய், நீ இரங்குதல்வேண்டா; பிள்ளைகாரணத்தாற் போவாயாக; அது என்னெனின் நீ அன்றுகங்குலிற்கண்டகனவெல்லாம் பயன்பட்டதுகாண் என்றுகூற, கயற்கண்ணி கோதைபோலமாழ்கி வீழ்ந்து தன்பிள்ளைக்கு வருத்தஞ் செய்தாளென்க. (உ௬அ)

மல்லலைத்தெழுந்துவீங்கிமலைதிரண்டனையதோளா
னல்லலுற்றழுங்கிவீழ்ந்தவமிர்தமன்னாளையெய்திப்
புல்லிக்கொண்டவலநீக்கிப்பொம்மல்வெம்முலையினாட்குச்
சொல்லுவானிவைகள்சொன்னான்சூழ்கழற்காலினானே.

இ - ள். மற்றொழிலைவருத்தியெழுந்து நீண்டு மலைதிரண்டனையதோளானாகிய கழற்காலினான், அல்லலுற்றுக்கெட்டுவீழ்ந்த அமிர்தமன்னாளைச் சேர்ந்து தழுவி அவ லத்தைநீக்கி அவளுக்கு முன்பு அன்பிற்றலைப்பிரியாதனகூறுகின்றவன் இப்பொழுது அவ்வன்பிற்றலைப்பிரிந்தன கூறினானென்க.

அழுதயின்றார்க்கு நாளுலந்தால் அது வேறுபாடு தோற்றுவிக்குமாறுபோல் இவற்கும் வேறுபாடுதோற்றுவித்தலின் அமுதன்னாளென்றார். (உ௬௯)

சாதலும்பிறத்தலுந்தம்வினைப்பயத்தினாகு
மாதலுமழிவுமெல்லாமவைபொருட்கியல்புகண்டாய்
நோதலும்பரிவுமெல்லாநுண்ணுணர்வின்மையன்றே
பேதைநீபெரிதும்பொல்லாய்பெய்வளைத்தோளியென்றான்.

இ - ள். பேதாய், தோளி, சாதல்தானும் பிறத்தல்தானும் ஆதல்தானும் அழி தல்தானுமெல்லாம் தம்வினைகளின் பயத்தானுண்டாம்; ஆண்டுச் சாதற்கும் அழிதற் கும் நோதலும், பிறத்தற்கும் ஆதற்குமின்புறுதலும், எல்லாம் அறிவின்மையன்றே, நீ இங்ஙனமாதலிற் பெரிதும் அறிவிலியாயிருந்தாய், அவ்வினையுறுதல் பொருட்கு இயல்புகாணென்றானென்க. (உ௭0)

* திருக்குறள், வினைத்தூய்மை, ௧.

தொல்லைநம்பிறவியெண்ணிற்றொடுகடன்மணலுமாற்றா
வெல்லையவற்றுளெல்லாமேநிலம்பிறந்துநீங்கிச்
செல்லுமக்கதிகடம்முட்சேரலஞ்சேர்ந்துநின்ற
வில்லினுளிரண்டுநாளைச்சுற்றமேயிரங்கல்வேண்டா.

அவற்றுட்பிறந்துமெனமாறுக. இரண்டுநாள் - சிறிதுநாளென்னும்பொருட்டு.

இ - ள். நம்முடைய பழையமானிடப்பிறப்பை எண்ணின் வெண்மணலும் உறையிடப்போதாத எல்லையுடைய; அப்பிறவியுளெலலாம்பிறந்தும்வெறுபட்டேம்; இனி இவ்வுடம்பைநீங்கிச் செல்லுங்கதியிலுஞ்சேரேம்; ஆதலின் இப்பொழுது சேர்ந்து நின்ற இரண்டுநாளையுறவை உறவாகக்கருதி அதற்கிரங்கவேண்டாவென்றானென்க.()

வண்டுமொய்த்தரற்றும்பிண்டிவாமனூல்வடித்தநுண்ணூ
லுண்டுவைத்தனையநீயுமுணர்விலாநீரையாகி
விண்டுகண்ணருவிசோரவிம்முயிர்த்தினையையாத
லொண்டொடிதகாதன்றாலொழிகநின்கவலையென்றான்.

இறைவனருளால் வண்டுமொய்த்தது. நூல் - ஆகுபெயர். அனைய - நெஞ்சறி பொருண்மேற்று.

இ - ள். ஒண்டொடி, வாமனாற்சொல்லப்பட்டநூற்பொருளை உணர்ந்து வைத்து அவ்வாறுணர்வுடையநீயும் உணர்வில்லாததன்மையையாய் எனதுமொழியை வெறுபட்டுக் கண்ணீர்வீழ விம்மியுயிர்த்து இத்தன்மையையாதல் தகாது; இவ்வருத்தத்தைத்தவிர்கவென்றானென்க. (உசO)

உரிமைமுன்போக்கியல்லாலொளிமுடிமன்னர்போகார்
கருமமீதெனக்குமூர்தியமைந்ததுகவலவேண்டா
புரிநரம்பிரங்குஞ்சொல்லாய்போவதேபொருண்மற்றென்று
னெரிமுயங்கிலங்குவாட்கையேற்றிளஞ்சிங்கமன்னான்.

இ - ள். வாளைப்பிடித்தகையினையுடைய ஏறுகியசிங்கத்தையொப்பான் நரம்பு இரங்குதற்குக்காரணமானசொல்லாய், மன்னர் உரிமையைமுன்னேபோக்கியல்லது தாம்போகார்; ஆதலால் இப்போக்கு எனக்குங்கருமம்; உனக்குங்கருமம்; ஏறுதற்கு ஊர்தியுஞ்சமைந்தது, இனிக்கவலவேண்டா, போவதேகருமமென்றானென்க.

பிள்ளையாற்கதிபெறுதலும் பகைவெறலுங்கருதி இருவர்க்குங் கருமமென்றான். கயற்சி - இருதலைக்கொள்ளியிடத்தெறும்புபோற் கணவனையும் புதல்வனையுநோக்கிக் கவறுதல். (உசக)

என்புநெக்குருகியுள்ளமொழுகுபுசோரயாத்த
வன்புமிக்கவலித்தாற்றாவாருயிர்க்கிழுதிதனை
யின்பமிக்குடையசீர்த்தியிறைவனைத்தாளைகூறித்
துன்பமில்பறவையூர்திசேர்த்தினன்றுணைவிசேர்ந்தாள்.

உருகி - உருக. அநந்தசுகம்முதலாமில சீர்த்தியையுடைய அருகன். அவனுணை "ஓம் நமோ அர்ஹதாண்" (ஓம்ணமோஅரஹந்தாணம்) என்னுமொழி. துன்பமில்பறவை - தீதற்றபறவை.

இ - ள். என்புருகும்படி உள்ளம் ஒழுகாநின்றுசோரப் பிணித்த அன்புமிகுத

லால் ஆற்ருத உயிர்போலுங்கிழத்தியைப் பறவையாகிய ஊர்தியைச் சேர்த்தினுன்; அத்துணைவியுஞ் செயலற்று இறைவனது ஆணைகூறச் சேர்ந்தாளென்க. (உசச)

வேறு.

நீருடைக்குவளையினெடுங்கணின்றவெம்பனி
வாருடைம்முலைமுகந்நனைப்பமாதர்சென்றபின்
சீருடைக்குரிசிலுஞ்சிவந்தழன்ருேர்தீத்திரள்
பாருடைப்பனிக்கடல்சுடுவதொத்துலம்பினுன்.

உடைம்முலை, மகரவொற்றுவண்ணத்திற்கடுத்தது. பாரை அகத்தடக்கினகடலெ ன்றது ஊழிக்காலத்துநீரை. தானுண்டாக்கினபடையைத் தானழிக்கின்றதன்மை பற்றி நெருப்பும் நீருமுவமைகூறினுர்.

இ - ள். மாதர், நீரருததோர்குவளைபோல வெய்யநீர் இடையருதுநின்றகண் வாருடைகின்ற முலைமுகத்தைநனைப்பப் போனபின்பு, குரிசிலும்நெஞ்சழன்று கோ பித்து மடங்கற்றீ கடலைச்சுடுவதொத்துமுழங்கினுனென்க. (உசரு)

முழைமுகத்திடியரிவளைத்தவன்னமள்ளரிற்
குழைமுகப்புரிசையுட்குரிசிருனகப்பட
விழைமுகத்தெறிபடையிலங்குவாட்கடலிடை
மழைமுகத்தகுஞ்சரம்வாரியுள்வளைத்தவே.

குழைமுகமகளிர்காக்கும்புரிசையெனவே அந்தப்புரமாயிற்று. "ஆடவர் குறுகா வருங்கடி வரைப்பின்" என்ருர்பிறரும். இழைமுகத்தெறிதல் - நூல்பிளக்கவெறிதல். மழை - மதம்.

இ - ள். முழையிடத்தே அரியைவளைத்தகுஞ்சரத்திரள்போல அந்தப்புரத்தே குரிசிலகப்படும்படி வேலையும்வாளையுமுடைய மள்ளராகியகடலினிடையிற்குஞ்சரங் கள் சென்றுவெளியிலேவளைத்தவென்க.

அரியை யானைவளைத்தல் இல்பொருளுவமம். (உசசு)

அயிலினிற்புனைந்தவாளழன்றுருத்துரீஇயுடன்
பயில்கதிர்ப்பருமணிப்பன்மயிர்ச்செய்கேடகம்
வெயிலெனத்திரித்துவிண்வழுக்கிவந்துவீழ்ந்ததோர்
கயிலணிக்கதிர்நகைக்கடவுளொத்துலம்பினுன்.

வினையுலந்துவீழ்ந்ததோர்கடவுள் உவமையாயிற்று; இவனுமிங்ஙனநிற்றலின். கயில் - மூட்டுவாய். நகை - முத்துவடம்.

இ - ள். கூர்மையாற்புனைந்தவாளை, நெஞ்சழன்றுகோபித்துருவி அதனுடனே கேடகத்தையும் ஞாயிற்றைத்திரிக்குமாறுபோலத்திரித்துக் கடவுளையொத்து முழங்கி னுனென்க. (உசஎ)

மாரியிற்கடுங்கணைசொரிந்துமள்ளரார்த்தபின்
வீரியக்குரிசிலும்விலக்கிவெங்கணைமழை
வாரியுட்கடிந்துடனகற்றமற்றவன்படைப்
பேரியற்பெருங்களிறுபின்னிவந்தடைந்தவே.

இ - ள். மள்ளர் கணையை மாரியிற்சொரிந்தார்த்தபின்பு, குரிசிலும் அக்கணையைவிலக்கிச் செண்டுவெளியினின்று நாற்படையையுஞ் சேரக்கெடுத்துப்போகப் பேரணியினின்றபெருங்களிறுகள் செற்றி வந்துசேர்ந்தனவென்க.

பெரிய இயலுதலையுடையகளிறு. (உசஅ)

சீற்றமிக்கமன்னவன்சேர்ந்தகுஞ்சரந்நுதற்
கூற்றருங்குருதிவாள்கோடுறவழுத்தலி
னூற்றுடைநெடுவரையுருமுடன்றிடித்தென
மாற்றரும்மதக்களிறுமத்தகம்பிளந்தவே.

கூற்றரும் - சொல்லற்கரிய. ஊற்று - அசும்பு.

இ - ள். சச்சந்தன், கோடுறத்தன்னைச்சேர்ந்த குஞ்சரங்களின் நுதலிலே வரைக்கண்உருமிடித்தென வாளையழுத்தலின், அக்களிறுகள் மத்தகம்பிளந்தனவென்க.

வேன்மிடைந்தவேலியும்பிளந்துவெங்கண்வீரரை
வான்மயிர்ச்செய்கேடகத்திடித்துவாள்வலையரிந்
தூனுடைக்குருதியுள்ளுழக்குபுதிரிதரத்
தேன்மிடைந்ததாரினான்செங்களஞ்சிறந்ததே.

வேலி - ஆகுபெயராதலிற் பிரித்தென்னாது பிளந்தென்றார். தன்னையொறுத்தவரைப் பரிசையாலிடித்து. வலையென்றார், தப்பாமற்சூழ்தலின்.

இ - ள். பிளந்து இடித்து அரிந்து திரிதலாற் குரிசினான்களஞ் சிறந்ததென்க.

இத்துணையு மிவன்வெற்றியாதலின், இவன்களமென்றார். (உ௫0)

வேறு

க. உப்புடையமுந்நீருடன்றுகரைகொல்வ
தொப்புடையதானையுளொருதனியனாகி
யிப்படியிறைமகனிருங்களிறுநூற
வப்படையுளன்னனுமழன்றுகளிறுந்தி. (உ௫௧)

உ. நீடகமிருந்தநேமிவலனேந்திக்
கேடகமறுப்பநடுவற்றரவுசேர்ந்தாங்
கோடுகதிர்வட்டமெனவொய்யெனவுலம்பிக்
காடுகவர்தீயின்மிகைசீறுபுவெகுண்டான்.

இவையிரண்டுமொருதொடர்.

தனக்குவேலியாகியகரையைக் கடல் தானேகொல்லுகின்றாற்போலத் தமக்குக் காவலாகியஅரசனைப் படைதாமேகொல்லுகின்றதென்றார். ஒருதனி - ஒப்பில்லாத தனி. நீடகமிருந்தநேமி - பகையின்மையின் நெடுநாளுள்ளேயிருந்த சக்கரம். நடுவற்று - பாதியில்லையாய். சீறுதல் - செற்றம்.

இ - ள். இறைவனாகியமகன் தானையுள் தனியனாய்நின்று முற்கூறியவாறே களிற்றைநூற அதற்கு அழன்று கட்டியங்காரனுங் களிற்றையுந்திச் சக்கரத்தையேந்தி அரவுசேர்தலால் நடுவற்றுவிசும்பிலேயோடுகின்றகதிர்வட்டமெனக் கேடகத்தையறுத்தலிற் சச்சந்தன் உலம்பி அவன்மிகையைச்சீறிநின்று தீப்போலவெகுண்டானென்க. (உ௫உ)

க. நெய்ம்முகமணிந்துநிழறங்கியழல்பொங்கி
வைம்முகமணிந்தநுதிவாளழலவீசி
மைம்முகமணிந்தமதயானைதவநூறிக்
கைம்முதறுணிந்துகளிறுழல்வதுநோனான். (உருங)

உ. மாலைநுதிகொண்டுமழைமின்னெனவிமைக்கும்
வேலைவலனேந்திவிரிதாமமழகழியச்
சோலைமயிலார்கடுணைவெம்முலைகடுஞ்சுங்
கோலவரைமார்பினுறுகூற்றெனவெறிந்தான்.

இவையிரண்டுமொருதொடர்.

நுதி - நுனை. கருமையையுடையமுகத்தே பட்டமணிந்தமதயானை. தவ - மிக. முதல் - அடி. விரிதாமம் அழகழிய-இவன்சூடும் வாகைமாலைமேலழகுகெட்டுப்போக. மயிலின்றன்மையாரென்றபன்மையாற் றேவியர்பலராயிற்று. முலைதுஞ்சுமார்பென வேமுன் தனக்கு நிகராக எறிவாரின்மை தோன்றிற்று. "மகளிர் மலைத்த லல்லது மள்ளர் - மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப" என்றார் பிறரும். வேல்வடிவுகொண் டுறுவதோர்கூற்றென. யானைவீழாநிற்க எறிந்தான்.

இ - ள். அங்ஙனம்வெகுண்டு வாளையோச்சி யானையைவெட்டுதலாலே அது கைதுணிந்துவீழாநிற்க, அதனைக் கட்டியங்காரன்பொருனாய் வேலையேந்தி அழகழிய அவன்மார்பிலே கூற்றென எறிந்தானென்க. (உருச)

வேறு.

புண்ணிடங்கொண்டவெஃகம்பறித்தலிற்பொன்னனார்தங்
கண்ணிடங்கொண்டமார்பிற்றடாயினகாதுவெள்வேன்
மண்ணிடங்கொண்டயானைமணிமருப்பிடையிட்டம்ம
விண்ணிடமள்ளர்கொள்ளமிறைக்கொளிதிருத்தினானே.

தடாயினவேல் - பெயரெச்சம். அம்ம - அசை.

இ - ள். மார்பிலே தைத்துநின்றவேல் பறித்தலின் அம்மார்பிலே பொருது வளைந்த அதனைப் பட்டுவீழ்ந்தயானையின்மருப்பிடையிலேயிட்டு மள்ளர் விண்ணிடங் கொள்ளும்படி அவ்வளைவுக்குண்டாகிய விளக்கத்தைப் போக்கினானென்க. (உருரு)

ஏந்தல்வேறிருத்தயானையிரிந்தனவெரிபொற்கண்ணி
நாந்தகவுழவர்நண்ணார்கூற்றெனநடுங்கிமள்ளர்
சாய்ந்தபின்றறுகணாண்மைக்கட்டியங்காரன்வேழங்
காய்ந்தனன்கடுகவுந்திக்கப்பணஞ்சிதறினானே.

இ - ள். ஏந்தல் வேலைத்திருத்துதலாலே மள்ளர் நடுங்கிச்சாய்ந்தபின், யானை இரிந்தன; உழவரானார்; அதுகண்டு கட்டியங்காரன் அவர்களைக்காய்ந்தனனாய் வேழத்தைச்செலுத்திக் கப்பணத்தைச்சிதறினானென்க.

நாந்தகம் - வாள். நண்ணார் - முற்று. கப்பணம் - இரும்பால் ஆனைநெருஞ்சிமுள்ளாகப்பண்ணியது. இதனான் இவன்வேறோர்யானையை ஏறினமையுணர்க. (உருசு)

குன்றமார்பரிந்துவெள்வேற்குடுமிமாமஞ்ஞையூர்ந்து
நின்றமால்புருவம்போலநெரிமுரிபுருவமாக்கிக்

கொன்றவன்வேழம்வீழ்ப்பமற்றுமோர்களிற்றிற்பாய்ந்து
நின்றமாமள்ளர்க்கெல்லாநீண்முடியிலக்கமானான்.

ஊர்தல் - ஈண்டுப் போதன்மேற்று; * "வானூர்மதியம்" போல. மால் புருவம் நெரித்தாற்போல. நீண்முடி - ஆகுபெயர்.

இ - ள். வேலாலே குன்றினதுமார்பைப்பிளந்து மயில் போகப்பட்டுநின்ற முருகனைப்போலப் புருவமாக்கிக் கட்டியங்காரனதுவேழத்தை முன்பு திருத்தின வேலாலேகொன்றுவீழ்ப்ப; அவன் மற்றுமோர்களிற்றிற்பாய்தலாலே மள்ளர்க்கெல்லாம் சச்சந்தன் இலக்காயினானென்க. (உருள)

வேறு.

நஞ்சுபதிகொண்டவளநாகணையினன்ற
னெஞ்சுபதிகொண்டுபடைமூழ்கநிலம்வீச
மஞ்சுதவழ்குன்றனையதோளொசிந்துமாத்தாட்
குஞ்சரங்கணூறிக்கொலைவாளொடித்துநின்றான்.

நாகணையினான் - சச்சந்தன். ஒசிந்து - ஒசிய.

இ - ள். நாகணையினான்றன் நெஞ்சைப் பதியாகக்கொண்டு மள்ளர்படைகள் மூழ்காநிற்க; தானும் குஞ்சரங்களைத் தோளொசியநூறி வாளையொடித்துநின்றா னென்க.

நிலத்திலுள்ளார்க்குக்கொடுக்குந்தோள் - ஆகுபெயர். இனி மதிகொண்ட பாடமாயிற் திருமாலுட்கொண்டசக்கரமென்க. தோளசைந்தும் பாடம். (உருஉ)

ஆரமருளாண்டகையுமன்னவகைவிழும்
வீரரெறிவெம்படைகள்வீழவிமையானாய்ப்
பேரமருளன்றுபெருந்தாதையொடும்பேராப்
போரமருணின்றவிளையோனிற்பொலிவுற்றான்.

விழும - விரும்பும்.

இ - ள். ஆண்டகையும் அமரிலே முற்கூறியவாறே விரும்பும வீரரெறிகின்ற படைகள்வீழ இமையானாய், பாரதத்திற் புறங்கொடாமற் பொருகின்றபோரிலே கன்னனோடேமாறுபட்டுநின்ற அபிமன்னுவைப்போலே பொலிவுற்றானென்க.

இனி நீடும் பாடமாயின் நெடும்பொழுதாம். "நீடுநின்றனன்" என்றார்பிறரும்.

போழ்ந்துகதிர்நேமியொடுவேல்பொருதமூழ்ந்து
தாழ்ந்துதறுகண்ணிணைகடையழலவிழியா
வீழ்ந்துநிலமாமகடன்வெம்முலைஞெமுங்க
வாழ்ந்துபடுவெஞ்சுடரினாண்டகையவிந்தான்.

ஆழ்ந்து - மறைந்து. ஆண்டகைமை - குணப்பண்பு; "ஆண்டகைக்குரவீர்" போல. அவிதல் - குறைதல். "திரைபாடவிய" என்றாற்போல. பண்பியாக்கிப் பட்டானென்னிற், "பாலருவி" என்னுங்கவி வேண்டாவாம். இவன் பகைவர் முக நோக்கி வீழ்ந்தமையிற் பின்னையார் பின்பு பகைவென்றார்.

* நாலடியார், தீவினையச்சம், ரு.

இ - ள். சக்கரத்தோடே வேலும்போழ்ந்து தம்மிற் பொருதழுந்துதலாலே மெய்வலிகுறைந்து தறுகண்மையையுடையகண்கள் அழலவிழித்து முலேனெருமுங்க வீழ்ந்து சுடர்போல் ஆண்டகைமைகுறைந்தானென்க. (உசுO)

வேறு.

தோய்ந்தவிசும்பென்னுந்தொன்னாட்டகந்தொழுதுபுலம்பெய்திமைந்தர்மாழ்க, வேந்துமுலேயாரினைந்திரங்கக்கொடுங்கோலிருள்பரப்பவேயென்பாவ, மாய்ந்தகுருகுலமாமாழ்கடலினுண்முளைத்தவறச்செங்கோலாய்கதிரினை, வேந்தர்பெருமானைச்சச்சந்தனை மந்திரிமாநாக முடன்விழுங்கிற்றன்றே.

கடலாங்குருகுலம் - சிறப்புநிலைக்களமாக முதலொடுமுதலேவந்த மெய்யுவமம். மந்திரிமாநாகம் - கிழக்கிடுபொருணிலைக்களமாக முதலொடுமுதலேவந்த வினையுவமம். தொல்காப்பியனார் சொலலும்பொருளு முடனாராய்தலின்உருவகம் உவமையென்றே கூறினார். செங்கோலையுடையகதிர் - இல்பொருளுவமம். உடன்விழுங்கிற்று - அரசவுரிமையெல்லாம் கொண்டான். நாகத்திற்கேற்ப விழுங்கிற்றென்றார்.

இ - ள். மக்கள்செறிந்த விசும்பென்றுகூறும் ஏமாங்கதத்தே சான்றோர் மயங்க, கற்புடைமகளிரிரங்க, கொடுங்கோலாகிய இருள்பரப்ப, பெருமானைச் சச்சந்தனைக் கடல்போலுங் குருகுலத்தே முளைத்த கதிர்போல்வானை நாகம்போலுமந்திரி விழுங்கினனென்னபாவமென்க.

ஏ - குறிப்புமொழி. இதனால் அவன் ஆண்டகைமை குறைந்ததற்கிரங்கினார்.

பாலருவித்திங்கடோய்முத்தமாலைப்பழிப்பினெடுங்குடைக்கீழ்ப்பாய்பரிமான்றேர்க், கோலருவிவெஞ்சிலையான்கூர்வாளொடுமணிக்கேடகமுமறமுமாற்றி, வாலருவிவாமனடித்தாமரைமலர்சூடிமந்திரமென்சாந்துபூசி,வேலருவிக்கண்ணினார்மெய்காப்போம்பவேந்தன்போய் விண்ணோர்க்குவிருந்தாயினானே.

பாலருவி - பால்போலுங் கிரணம். தோய் - உவமவுருபு; புறனடையாற்கொள்க. வாலருவி - சுக்கிலத்தியானம். வேலருவி-வேலொழுங்கு. கண்ணினார் காவற்றொழிலை எண்டிப் பேணப்போய்.

இ - ள். குடைநிழற்கண்ணே தேர்மீதுநின்று கோல் இடையறாமல் வழங்குஞ்சிலையானாகியவேந்தன், அவை உதவாமையின் வாளுங் கேடகமுமறமுந்துணையாகப் பொருது, அவற்றைப்போக்கி வாமனுடைய அருவியையாடிச் சாந்தைப்பூசி மலரையொத்த அடியைச்சூடிப் போய்த் தேவர்கள்வழிபடுதற்குப் புதியனாயினானென்க.

உயிர்நீங்குகின்றபொழுது தியானம்வந்து உதவுதலின் வீடுபெற்றானென்க. சுவர்க்கமுமாம். (உசுஉ)

செந்தீக்கருந்துளையதீங்குழல்யாழ் தேந்தேமென்னுமணிமுழவமுந், தந்தாங்கிளையார்மெல்விரல்கடீண்டத் தாந்தாமென்றிரங்குந்தண்ணுமைகளு, மந்தீங்கிளவியாளைஞ்நூற்றுவரைவதுறைபோயாடலரம்பையன்ன,

ரெந்தாய்வெறுநிலத்துச்சேர்தியோவென் றினைந்திரங்கிப் பள்ளிபடுத்தார்களே.

செந்தியாற் கருந்துளையவானகுழல். தேந்தேம், தாந்தாம்-அநுகரணம். இளையார் - நிருத்தகீதவாச்சியத்திற்குரியமகளிர். இளவியாளைஞ்ஞூற்றுவரென்றார், அகப்பரிவாரம் ஐஞ்ஞூற்றுவரேயென்றற்கு. மேலும் நால்வரையொழிந்ததோழர் ஐஞ்ஞூற்றுவரும் அகப்பரிவாரமென்றுணர்க. தமக்குரியதுறைகள் முற்றக்கற்று அவையிலே ஆடுதலுடைய அரம்பையன்னார்.

இ - ள். இளையார், குழல் முதலியவற்றை சமத்தேகொண்டுமெந்து விரல்களால் வாசியாநிற்க, ஐஞ்ஞூற்றுவரும் அரம்பையன்னாரும் இரங்கிப் பள்ளிபடுத்தாரென்க. "கோன்றமர் நிகளமூழ்கி" எனவே அடவரின்மையுணர்க. (உசுங)

மடையவிழ்ந்த வெள்ளிலைவேலம்புபாய மணிச்செப்பகங்கடைகின்றவேபோற், றொடையவிழ்ந்தமாலையுமுத்துமதோய்ந்ததுணைமுலையினுள்ளெரங்கின்மூழ்கக்காமன், படையவிழ்ந்தகண்பனிகள்வாரவிம்மாப்பருமுத்தநாமழலைக்கிண்கிணியினார், புடையவிழ்ந்தகூந்தலபுலவுத்தோயப் பொழிமழையுள்மின்னுப்போற்புலம்பினாரே.

தொடை - முறுக்கு. தோய்ந்த - செறிந்த. காமன்படையவிழ்ந்த - காமனம்பதோற்ற. முத்தமாகியநா. புலவு - குருதி; ஆகுபெயர்.

இ - ள். கிண்கிணியினார், மணிச்செப்பை உள்வாயைக்கடைகின்றகருவிகள் அதனுள்ளே அழுந்துமாறுபோல, மூட்டுக்கழன்றவேலும் அம்பும் ஆண்டுப் பரந்துநிடக்கின்றவை முலையினுள்ளேதைத்து அழுந்தும்படி புரளவிழுந்து, பின்பு, பெய்கின்றமேகத்தினுள்ளே மின்தோன்றுமாறுபோலக் கூந்தல் மெய்யைமறைந்து நிலத்தைத்தீண்ட, அதனுள்ளேயிருந்து அழுதாரென்க.

விம்மிப் புலம்பினாரென்க. (உசுச)

க. அரிமானேர்மெல்லணைமேன்மன்னனை மூழ்கிடந்தாங்குபோந்தன்கிடந்தானைத்தான், கரிமாலைநெஞ்சினான் கண்டான்கண்டே கைதொழுதான்கண்ணீர்கலுழ்ந்துகுத்தபி, னெரிமாலையீமத்திழுதார்குடமேனைநூறுமேற்பச்சொரிந்தலறியெம், பெருமானேயெம்மையொளித்தியோவென்னைப்பெரியகண்ணீர்சொரிந்தலறுவார். (உசுரு)

உ. கையார்வளைகள்புடைத் திரங்குவார்கதிர்முலைமே லாரம்பரிந்தலறுவார்,நெய்யார்கருங்குழன்மேன்மாலைசிந்திநிலத்திடுவார்நின்றுதிருவில்வீசு, மையார்கடிப்பிணையும்வார்குழையுங்களைந் திடுவார்கையால்வயிறதுக்குவா, ராயாவோவென்றழுவார்வேந்தன்செய்த கொடுமைகொடிதென்பார்கோல்வளையினார். (உசுசு)

ங. பாணுட்பிறைமருப்பிற் பைங்கண்வேழம்பகுவாயோர்பையணன்மாநாகம்வீழ்ப்பத், தேனார்மலர்ச்சோலைச்செவ்வரையின்மேற்சிறுபிடிகள்போ

லத்துயருழந்துதா, மாஞதடியேம்வந்தவ்வுலகினின்னடியடைதுமென்றழு துபோயினரெங், கோஞர்பறிப்பநல்ம்பூத்தவிக்கொடியினிப்பூவாபிறர்பறி ப்பவே.

இவைமூன்றுமொருதொடர.

(க) கலுழ்ந்து-வழிபாட்டிற்படுதலின் மனந்தன்வழித்தன்றிக் கலங்கி. அழுதது-உவகைக்கலுழ்ச்சி ; * "விளிவில்கொள்கை" என்றதஞன், இதுவும் அழுகைப்பாற் படும். மாலே - இயல்பு. ஈமம் - விறகு. ஏனேநூறு - சந்தனமுதலியன. ஒளித்தி யோ - நின்மெய்யுமெரிநுகர்கின்றதோ.

(உ) கதிரையுடைய ஆரம். திருவில்லேநின்றுவீசுங்குழை. நீலக்கடிப்பிணே - குதம்பைபோல்வதோாபணி. ஓ - இரக்கக்குறிப்பு. கொடிதென்றது - அரசற்குச் செய்யுநீர்க்கடன் மரபுசெய்யாமைநோக்கி

(ங) வாயையும் பையையும் அணேயுமுடையதோர் நாகம். சிறுபிடியெனவே அக்களிறு கூடுதற்குரிய குலத்திற்பிறந்த பிடிகளன்றென்பது பெற்ரும். இக்கொடி யென்ரா, தம்மைப்பிறாபோல. இவர்கள் அரசற்குக் காமமொழிந்த நுகர்ச்சி கொடுத் தற்குரிய மகளிர

இ - ள். மயில்சூழ்ந்துகிடப்ப ஓரரிமான், அணேமேற்கிடந்தாற்போலத் தேவி யர் சூழ்ந்துகிடப்ப வேந்தன்கிடந்தவனேக் கரிந்த இயல்பினேயுடைய நெஞ்சினன்ருன் கண்டான் ; கண்டுகலுழ்ந்து தொழுதான் ; தொழுது கண்ணீருகுத்தபின்பு, அவன் செற்றநீங்கினமைகண்டு, கோல்வளேயினர், ஈமத்தே குடமும் ஏனேயவும் அரசற்குப் பொருந்தச் சொரிந்து அலறி, பின்பு, ஒளித்தியோவென்று நீர்சொரிந்து அலறுவார், இரங்குவார், அலறுவார், இடுவார், களேந்திடுவார், அதுக்குவார், அழுவார், கொடிதென் பாராய்ச் செவ்விய வரைமேல் ஓர்நாகம் வேழத்தைவீழ்ப்ப அது காத்தற்குரிய பிடி கள் துயருழக்குமாறுபோலத் தாம் துயருழந்து, எங்கோஞர் நுகர அவர்க்குக் கொடுத் தநலங்கள் பிறர்க்குக் கொடேம்; இனி அவ்வுலகிலேசென்று அடியடைவேமென்று ஆறுதழுது போயினரென்க. (உசுஎ)

செங்கட்குறுநரியோர்சிங்கவேற்றைச்செகுத்ததாங்கதனிடத்தைச்சேர் ந்தாலொப்ப, வெங்கட்களியானேவேல்வேந்தனேவிறலெரியின்வாய்ப்பெய்த வன்பெயர்ந்துபோய்ப், பைங்கட்களிற்றின்மேற்றன்பெயரிறைற் பறையறை ந்தான்வேன்மாரிபெய்தாலொப்ப,வெங்கணவருமினேந்திரங்கிஞரிருண்மன ன்பூமகளேயெய்திஞனே.

இ - ள். நரி, நிகரில்லாத சிங்கவேற்றைச்செகுத்து அப்பொழுதே அதற்குரிய இடத்தைச் சேர்ந்தால் அச்சிங்கத்தின்ருெழிலேநடத்தாது தன்ருெழிலே நடத்துமாறு போல, இருண்மனத்தாஞகிய விறலவன், வேந்தனேஎரிவாய்ப்பெய்துபோய்ப்பூமகளே எய்திஞன்; அதுவேயன்றித் தன்பெயராலே பறைசாற்றிஞன் ; அதுகேட்டுவேன் மழைபெய்தால் அதற்கு இரங்குமாறுபோல எவ்விடத்தவருமிரங்கிஞரென்க.

அவன்கருத்தால் மகளிர்பெய்தலின் அவன்பெய்தானென்ருர். விறலவனென்க. இது இகழ்ச்சி. இனேந்து - கெட்டு. (உசுஅ)

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல், ரு.

## சீவகன் உற்பத்தி.

### வேறு.

களிமுகச்சுரும்புண்கோதைகயிலெருத்தசைந்துசோர
வளிமுகச்சுடரினில்லாமனத்தொடுமயங்கியிப்பாற்
சுளிமுகக்களிறனான்றன்சொன்னயநெறியிற்போய
கிளிமுகக்கிளவிக்குற்றதிற்றெனக்கிளக்கலுற்றேன்.

களிக்கின்றநெறி. கயில் - ஆகுபெயர். அசைந்துசோர - குலைந்துவீழ. சுளிதல் - கோபித்தல்.

இ - ள். காற்றின்முன்னின்ற சுடர்போல ஒருவழிநில்லா மனத்தோடே எருத்தத்திலே கோதைசோர மயங்கிக் களிறனனது வார்த்தையின்பயனை உட்கொண்டு போன கிளிபோலுங் கிளவிக்கு இப்பாலுற்ற தீங்கு இத்தன்மைத்தென்று கூறுதலுற்றேனென்க. (௨௬௯)

எஃகெனவிலங்குவாட்கணெறிகடலமிர்தமன்ன
ளஃகியமதுகைதன்னலாய்மயிலூருமாகண்
வெஃகியபுகழினான்றன்வென்றிவெம்முரசமார்ப்ப
வெஃகெறிபிணையின்மாழ்கியிறகிமெய்மறந்துசோர்ந்தாள்.

எஃகென - கூர்மைதான் இதன்வடிவென. ஆய்மயில் - வினைகுறைந்த மயில். எஃகெறி - எஃகாலெறிந்த. மாழ்கி—மனமயங்கி. இறகி - மூர்ச்சித்து. இடமை யாறுதலிற் பொறி இடந்திரிந்த வாற்றுமையுணர்க.

இ - ள். அரசனுக்கு வாளின் றன்மையாகிய கண்ணையுடைய அமுதனாள், அவனைநீங்குதலாற் குறைந்தவலியாலே மயிலைச்செலுத்துகின்ற அவ்விசும்பிடத்தே புகழினனது சொடியமுரசார்ப்ப, அதுகேட்டு மாழ்கி மெய்மறந்து இறகிச் சோர்ந்தாளென்க.

வேந்தாந்தன்மையை விரும்பியபுகழினான் (௨௭0)

மோடுடைநகரினீங்கிமுதுமரந்துவன்றியுள்ளம்
பீடுடையவருமுட்கப்பிணம்பலபிறங்கியெங்கும்
காடுடையளவையெல்லாங்கழுகிருந்துறங்குநீழற்
பாடுடைமயிலந்தோகைபயப்பயவீழ்ந்ததன்றே.

பீடுடையவரும் உள்ளமுட்க எங்கும் பிணம்பெருத்து. துவன்றிப் பிறங்கித் தானுடைய எல்லையெல்லாம் கழுகுறங்குநிழலையுடையகாடென்க. பாடு - ஈண்டு இடப்பக்கம். உடை மயில் - உடைகின்ற மயிலெனவினைத்தொகை. பொறிக்கு "ஓடமுறுக்கி" என்னும்வாசகம் முன்னர் உளதாகலின் அதற்கேற்பஉடைகின்றதென்றார். கையாலிடந்திரித்தாற் கடிதின்வீழ்கின்றது ஈண்டுத் தானே இடந்திரிதலிற் பையப் பைய நிலத்திற்கு அண்ணிதாக வீழ்ந்ததென்றார். வீழ்ந்தது - நிகழ்காலத்திற்றோன்றிய இறப்பு.

இ - ள். அங்ஙனம் மூர்ச்சிப்பதன்முன்பு வலத்திலேமுறுக்கினவிசை தானே கைவிட்டபின் இடத்தேபுரிகின்ற தோகைமயில் அந்நகரினின்றுநீங்கிச் சுடுகாட்டினை நேரே வீழ்ந்ததென்க. (௨௭௧)

மஞ்சுசூழ்வதனையொத்துப்பிணப்புகைமலிந்துபேயு
மஞ்சுமம்மயானந்தன்னுளகில்வயிறூர்ந்தகோதை
பஞ்சிமேல்வீழ்வதேபோற்பல்பொறிக்குடுமிநெற்றிக்
குஞ்சிமாமஞ்ஞைவீழ்நதுகால்குவித்திருநததன்றே.

பேயும் உம்மை - சிறப்பு. அகில் - ஆகுபெயர். மேகம் - புகைநிறத்திற்குவமம். குஞ்சி - மயிர்.

இ - ள். அங்ஙனம்வீழ்ந்த அந்தமயில், புகைமலிந்து பேயுமஞ்சுமயானத்தே வீழ்கின்றபொழுது, மாலை பஞ்சின்மேல் வீழ்வதுபோல் மெல்லெனவீழ்ந்து காலைக் குவித்திருந்ததென்க.

இருக்குமென்றும் பாடம். இம்மயிற்பொறியைக் கூனியதுருவாகியதெய்வம் மறைத்துக் கட்டியங்காரனும் கோவிந்தனுந் தேவியைத்தேடாமற்காத்ததென்றுகொள்க. அது பின்பு *"கனியாமொழியாட்குமயிற்குநகாமர்பதிநல்கி" எனச்சேரக் கூறியவாற்றானுமுணர்க. (உஎஉ)

வார்தருநடங்கணீர்தன்வனமுலைநனைப்பவேல்பெ்ற
றாரகடலனையகாடடுளச்சமொன்றானுமுள்ளா
ளோதருமயிலஞ்சாயலிறைவனுக்கிரங்கியேங்கிச்
சோர்துகிறிருத்தநேற்றாடுணைபிரிமகன்றிலொத்தாள்.

வாாதலைந்தருகின்ற. ஏல் - மனவெழுச்சி. ஈனிற்கின்ற நிலையிற்கலக்கத்தாலே பேய்முதலியவற்றிற்குச் சிறிதும் அஞ்சாளாய். யாதுசெய்வலென்றிரங்கி. ஏங்கி- அழுது. தேற்றாள்-தொழிற்பெயர். அன்புமிகுதியாற் கையாறுமுற்படுதலின்இறுகியெனக்கையாறுகூறி, இரங்கியெனக் கவலைகூறி, ஏங்கியென அரற்றுக்கூறி, அச்சமுள்ளாளென அவலங்கூறினார். வருத்தந்தோன்றிநிற்றல்-அவலம். வாய்விட்டழுதல்-அரற்று. யாது செய்வலென்றல் - கவலை. மூர்ச்சித்தல் - கையாறு.

இ - ள். மயிலஞ்சாயல், திருத்தல்தேற்றாதவள், காட்டிலே உணர்வுபெற்று இறைவனுக்கிரங்கிக் கண்ணீர் முலையைநனைப்ப ஏங்கி அச்சமுள்ளாளாய் மகன்றிலையொத்தாளென்க. (உஎங)

உண்டெனவுரையிறகேட்பாருயிருறுபாவமெல்லாங்
கண்டினித்தெளிகவென்றுகாட்டுவாளபோலவாகி
விண்டொடநிவந்தகோயில்விண்ணவாமகளிற்சென்றாள
வெண்டலைபயின்றகாடடுள்விளங்கிழைதமியளானாள்.

இ - ள். விளங்கிழை, கோயிலிலே விண்ணவர்மகள்போல நல்வினையின்வண்ணமாய்நடந்தவள், இப்பொழுது, பல்லுயிர்களுநுகரும்பாவமுண்டென்று நூலிலே கேட்பாரெல்லாம் இனி என்னைக்கண்டு தெளிவீராகவென்று உலகிற்குக் காட்டுவாள்போலத் தான் தீவினையின்வண்ணமாய்க் காட்டிலே தமியளானாளென்க.

மகப்பெறுங்காலத்திற்குத் துணையின்றிவருந்துதலிற் காட்டுவாள்போல வாகியென்றார். (உஎச)

* முத்தியிலம்பகம், விசயமாதேவியாாதுறவு, ரு.

இருள்கெடவிகலியெங்குமணிவிளக்கெரியவேந்தி
யருளுடைமனத்தவாகியணங்கெலாம்வணங்கிநிற்பப்
பொருகடற்பரிதிபோலப்பொன்னனான்பிறந்தபோழ்தே
மருளுடைமாதருற்றமம்மர்நோய்மறைந்ததன்றே.

இ - ள். பெறுதற்கரியோன், மணிவிளக்கு ஏந்தியெரிய அணங்குகள் வணங்கிநிற்பக் கடலிடத்துப் பரிதிபோலப் பிறந்தபொழுதே, மயக்கமுடைய மாதருற்ற வருத்த நோய் மறைந்ததென்க.

*“கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்கு” என்றார்பிறரும். முன் “வெஞ்சுடரினவிந்தான்” எனக்கூறி, அச்சுடர் குழவியாய்த்தோன்றினமைகூறினார். ஞாயிறு தோற்றத்தில் இருளைப்போக்கிப் பின் மதியத்தைக்கெடுக்குமாறுபோல, இவனும் பிறந்தபொழுதே தேவியிருளைப்போக்கிப் பின்பு பகைவெல்லுமென்பது கருத்து. இக்கருத்தாற் †“செய்யோன்செழும்பொற்சரம்” என்றும் †“மதிவீழ்வதுபோலவீழ்ந்தான்” என்றுங்கூறினார். இகலி - விளக்கோடிகலி. ஏந்தி - மிக்கு. இவன் வீடுபெறுவனென்பதுகருதித் தெய்வம்வணங்கிற்று. (உஎரு)

பூங்கழற்குரிசிறந்தபுதல்வனைப்புகன்றுநோக்கித்
தேங்கமழோதிதிங்கள்வெண்கதிர்பொழிவதேபோல்
வீங்கிளமுலைகள்விம்மித்திறந்துபால்பிலிற்றவாற்றாள்
வாங்குபுதிலகஞ்சேர்த்தித்திலகனைத்திருந்தவைத்தாள்.

புதல்வன்பொருட்டு இவளைப்போக்குதலிற் குரிசிறந்தபுதல்வனென்றார். முலைகள் திங்களின்கதிரைத் தாம்பொழிவதுபோலப் பால்சொரியும்பருவத்தளவும் பொறாளாய்ப் பாலை வலியவாங்கியென்க. என்றது மகப்பயந்தோர்க்குப் பயந்தபொழுதே பால்சுரவாதாதலால்.

இ - ள். ஓதி, புதல்வனைநோக்கிப் பிலிற்றுந்துணையும் ஆற்றாளாய் வாங்கித் திருந்தத்திலகமிட்டுத் திலகனைவைத்தாளென்க. (உஎசா)

வேறு.

க. கறைபன்னீராண்டுடன்விடுமின்காமர்சாலைதளிநிறுமின்
சிறைசெய்சிங்கம்போன்மடங்கிச்சேராமன்னர்சினமழுங்க
வுறையுங்கோட்டமுடன்சீமினொண்பொற்குன்றந்தலைதிறந்திட்
டிறைவன்சிறுவன்பிறந்தானென்றேற்பார்க்கூர்தோறுய்த்தீமின். ()

உ. மாடமோங்கும்வளநகருள்வரம்பில்பண்டந்தலைதிறந்திட்
டாடைசெம்பொனணிகலன்கள்யாவும்யாருங்கவர்ந்தெழுநாள்
வீடலின்றிக்கொளப்பெறுவார்விலக்கல்வேண்டாவீழ்ந்தீர்க்குக்
கோடிமூன்றோடரைச்செம்பொன்கோமானல்குமெனவறைமின். ()

ங. அரும்பொற்பூணுமாரமுமிமைப்பக்கணிகளகன்கோயி
லொருங்குதொக்குச்சாதகஞ்செய்தோகையரசர்க்குடன்போக்கிக்

* நாலடியார், சுற்றந்தழால், க. † மண்மகளிலம்பகம், உஉக.

கருங்கைக்களிறுங்கம்பலமுங்காசுங்கவிகள்கொளவீசி
விரும்பப்பிறப்பாய்வினைசெய்தேன்காணவிஃதோபிறக்குமா. ()

ச. வெவ்வாயோரிமுழவாகவிளிந்தாரீமம்விளக்காக
வொவ்வாச்சுடுகாட்டுயரரங்கினிழல்போனுடங்கிப்பேயாட
வெவ்வாய்மருங்குமிருந்திரங்கிக்கூகைகுழறிப்பாராட்ட
விவ்வாறாகிப்பிறப்பதோவிதுவோமன்னர்க்கியல்வேந்தே.

இவைநான்குமொருதொடர்.

(க) கறை - கடமை. பாலகக்கிரகாரிட்டம்பன்னீராண்டளவுமுண்டாகையினலே இதற்குச் சாந்தியாகப் பன்னீராண்டு கடமைகொள்ளாதொழிதல் அரசியல்பென்று பன்னீராண்டென்ருள். இனி அரசர்க்குப் பதினேராண்டிலே உபநயனம்பண்ணிப் பன்னீராண்டிலே இல்லறக்கிழமைபூண்டு அரசவுரிமையெய்துதலியல்பாகலின், பன்னீராண்டும் உலகத்தார்க்குத் தானமாகவிடுதல் இயல்பென்றலுமொன்று. உடன்-சேர. சாலை - அறச்சாலை. தளி - கோயில். நிறுமின் - இவற்றைப்படைமின். மன்னர் சிறைசெய்சிங்கம்போன் மடங்கிச் சினமழுங்கும்படி உறையும. சீமின் - இடித்துத்தூய்மைசெய்மின். புதல்வற்பயந்தாற்சிறைவீடுசெய்தல் பிறிதருடையதனிசுநீங்குதலாம். இறந்திட்டு - இறந்துபோகட்டு. சிறுவன்பிறந்தானென்றமகிழ்ந்தேற்டார்க்கு. உய்த்து-கொண்டுசென்று. இது தானம.

(உ) நகா-கோயில பண்டம்-நெல்லுமுதலியன. யாவும்-பிறவும். எழுபிறப்பினுமுள்ள தீவினை நீங்குதற்கு ஏழுநாள்வீடலின்றிக்கொளப்பெறுவாரென்ருள். எழுபிறப்பாவன "மக்கள் விலங்கு பறவைபூர்வன, நீருட் டிரிவன பருப்பதம் பாதவ, மென விவை யெழுபிறப் பாகு மென்ப" விடல் - விகாரம். வீழ்ந்தீர்க்கு - உயர்ந்ததானத்தைப்பெற விரும்பினீர்க்கு. உடம்பிற்கு மூன்றரைக்கோடிமயிருளவாகலின் ஒருமயிர்க்கொருபொன்ருக மூன்றரைக்கோடிபொன் நல்குமென்ருள். தலைசிறந்தபண்டங்களையும், ஆடைமுதலியவற்றையும், பிறவற்றையும் கொள்ளைகொள்ளப்பெறுவாரையாரும் விலக்குதல்வேண்டாவென்க.

(ஙு) ஒருங்கு-சோ. செய்து-செய்ய. ஒசை-உடைசை. கவிகள் - பெருமங்கலம் பாடுவார். பிறப்பாய் - பிறக்கு நீ. இஃது - இத்தன்மைத்து. ஓ - இரக்கக்குறிப்பு. பிறர்குமா - பிறக்கும்படியென்னும்பொருட்டு. மாறு - மாவெனவிகாரமுமாம்.

(ச) வெவ்வாய்-கொடியவாய். பிறப்பார்க்கொவ்வாச்சுடுகாடு. மருங்கு-பக்கம். ஓரிமுழவாக ஈமம்விளக்காக அரங்கிலேபேயாடவென்க. இவ்வாறென்றது தந்தைவிரும்பும்படி நல்வினையுடையதன்மையை. இதுவென்றது செயலின்றித்தாய்வருந்தும்படி தீவினையுடையதன்மையை.

இ - ள். தேவி, புதல்வனைநோக்கிக் கோமானுனவன் கணிகள் சாதகஞ்செய்ய ஒசைபோக்கி வீசிக் கறைவிடுமின், நிறுமின், சீமின், ஈமின், விலக்கல்வேண்டாஎன அறைமின், வீழ்ந்தீர்க்குநல்குமென அறைமினென்றுவிரும்பப்பிறக்கு நீ ஓ ஓ தீவினைசெய்தேன்காண்டற்காகப் பிறக்கும்படி இத்தன்மைத்தாயிருந்தது; வேந்தே, இவ்விரண்டினும் இவ்வாறாகிப் பிறப்பது மன்னர்க்கியல்போ? பேயாடக் கூகைபாராட்ட இதுவாகிப்பிறப்பது மன்னர்க்கியல்போ? கூறுயென்றுளென்க.

ஓகாரமிரண்டும் வினு. என்றெனவுங் கூறுயென்றுளெனவும் வருவிக்க. ஆகி-இரண்டிடத்திற்குங்கூட்டுக. (உஅ0)

பற்றுமன்னனகர்ப்புறமாற்பாயல்பிணஞ்சூழ்சுடுகாடா
லுற்றாரில்லாத்தமியேனலோதுங்கலாகாத்தூங்கிருளான்
மற்றிஞ்ஞாலமுடையாய்நீவளருமாறுமறியேனு
லெற்றேயிதுகண்டேகாதேயிருத்தியாலெனின்னுயிரே.

இ - ள். இஞ்ஞாலமுடையாய், நீ கிடக்கின்ற இடம் பகைவனிட்டமாயிராநின்றது; நினதுபாயல் சுடுகாடாயிராநின்றது; யானும் உசாவுவதற்கு ஓர்துணையுமில்லாத்தமியேனாயிராநின்றேன்; நின்னைக்கொண்டுபோகக் கருதிற் போகவொண்ணாத இருளாயிராநின்றது; மேல் நீ வளருமாறுமறியேனாயிரானின்றேனென்று பிள்ளையை நோக்கிக்கூறி, இனி இதுவுமிறந்ததே இச்செய்திகண்டும்போகாதேகொடியவுயிரே இராநின்றாய்; இதற்குக்காரணமென்னென்று கூறினாளென்க.

மற்று - வினைமாற்று. (உஅக)

பிறந்தநீயும்பூம்பிண்டிப்பெருமானடிகள்பேரறமும்
புறந்தந்தென்பாற்றுயர்க்கடலைநீந்தும்புணைமற்றாகாக்கால்
சிறந்தாருளரேலுரையாயாற்சிந்தாமணியேகிடந்தியான்
மறங்கூர்நுங்கோன்சொற்செய்தேன்மம்மர்நோயின்வருந்துகோ.

சொல் - ஆகுபெயர். வருந்துகு - வருந்துவேனெனத்தனித்தன்மை

இ - ள். சிந்தாமணியே, நீ ஒன்றுமுரையாமற்கிடவாநின்றாய்; இனி எனது வருத்தநீக்கப்பிறந்த நீயும் பேரறத்தையுடைய அடிகளும் புறந்தந்து என்னிடத்துப பிறந்ததுயர்க்கடலை யானீந்தும்புணையாகாதபொழுது மற்றுநின்னினும் அவனினும் சிறந்தாருளரேல் உரைகின்றிலை; நுங்கோன்கூறிய காரியத்தைச் செய்தயான்வருந்தக்கடவேனோவென்று கூறினாளென்க. (உஅஉ)

அந்தோவிசயைபட்டனகொண்டகங்கைபுறங்கையானுற்போற்
கந்தார்களிற்றுத்தங்கோமான்கழியமயிலோமயிலூர்ந்து
வந்தாற்போலப்புறங்காட்டுள்வந்தாடமியேயெனமரங்கள்
சிந்தித்திரங்கியழுவனபோற்பனிசேர்கண்ணீர்சொரிந்தனவே.

இ - ள். அகங்கைபோய்ப்புறங்கையானகடுமைபோல விசயை கோமான்படாநிற்கப் புறங்காட்டுள்வந்தவள் தனியேபட்ட தீங்குகளைஉட்கொண்டு அந்தோவென்ன இரங்கிஅழுவனபோல மரங்கள் தமக்கடுத்தபனியாகிய கண்ணீரைச் சொரிந்தனவென்க. (உஅங)

அடர்பொற்பைம்பூணரசழியவரும்பொற்புதல்வற்பெற்றிருந்த
விடர்கொணெஞ்சத்திறைவியுமிருங்கண்ஞாலந்திருள்பருகிச்
சுடர்போய்மறையத்துளங்கொளியகுழவிமதிபெற்றகங்குளிர்ந்த
படர்தீரந்தியதுவொத்தாள்பணைசெய்கோட்டுப்படாமுலையாள்.

அடர் - தகடு. உம்மை - சிறப்பு. படர்தீர்ந்தஅதுவென்க. அந்தி - சந்தியாதேவி. பணைசெய் - பிழைத்தலைச்செய்த.

இ - ள். உலகிற்றீங்கினைநீக்கின அரசுபடப் புதல்வனைப்பெற்றிருந்த படாமுலையாளாகிய இறைவியும், சிறிது இடர்தீர்ந்தமையால், இருளைப்பருகிச் சுடர்மறையக் குழவியாகிய மதியைப்பெற்றுச் சிறிதுமனங்குளிர்ந்த அந்தி படர்தீர்ந்த அத்தன்மையையொத்தாளென்க. (உஅச)

வேறு.

தேனமர்கோதைமாதர்திருமகன்றிறத்தையோராள்
யானெவன்செய்வலென்றேயவலியாவிருந்தபோழ்திற்
றானமர்ந்துறையினீங்காச்சண்பகமாலையென்னுங்
கூனியதுருவங்கொண்டோர்தெய்வதங்குறுகிற்றன்றே.

இ - ள். மாதர், திருமகனல்வினையையோராளாய் யான் யாதுசெய்வலென்று வருந்தியிருந்தவளவிலே, ஒரு தெய்வந்தான் இவளிடத்துநின்று நீங்காத சண்பகமாலையென்னுங் கூனியதுவடிவைக்கொண்டு அமர்ந்து குறுகிற்றென்க.

இவன் அரசன்மகளாதலின் ஆண்டுறையும் தெய்வம்வந்தது. தெய்வதம் வடமொழி. (உஅரு)

விம்முறுவிழுமவெந்நோயவளுறைதெய்வஞ்சேரக்
கொம்மெனவுயிர்த்துநெஞ்சிற்கொட்புறுகவலைநீங்க
வெம்மனைதமியையாகியிவ்விடருற்றதெல்லாஞ்
செம்மலர்த்திருவின்பாவாயான்செய்தபாவமென்றாள்.

இ - ள். அவ்விடத்துறையுந்தெய்வமாகிய கூனிசேர, பொருக்கென உயிர்த்து நெஞ்சிற்கவலைநீங்குதலாலே அக்கூனி அன்னாய், பாவாய், நீ இவ்விடருற்றதெல்லாம் யான்செய்ததீவினையாலே, இனி வருத்தநீங்கென்றாளென்க.

தேவியதுவிழுமத்தாலே நோயையுடையதாகியதெய்வம். இன் - அசை. தெய்வம கூனியாய் நிற்றலின் உயர்திணையாற்கூறினார். (உஅசு)

பூவினுட்பிறந்ததோன்றற்புண்ணியனனையநம்பி
நாவினுளுலகமெல்லாநடக்குமொன்றாதுநின்ற
கோவினையடர்க்கவந்துகொண்டுபோமொருவனின்னே
காவியங்கண்ணினாயாமறைவதுகருமமென்றாள்.

தோன்றல் - தலைமை. புண்ணியன் - முருகன். நா - ஆகுபெயர்.

இ - ள். அவள் கண்ணினாய், நம்பிவார்த்தையிலே உலகமெல்லாநடக்கும்; அங்ஙனநடத்தற்குப் பொருந்தாதுநின்ற கட்டியங்காரனைக்கொல்லும்படி இவனை ஒருவன் இப்பொழுதேவந்து கொண்டுபோம்; ஆதலால் யாமறைந்துநிற்பது கருமமென்றாளென்க. (உஅஎ)

க. சின்மணிமழலைநாவிற்கிண்கிணிசிலம்பொடேங்கப்
பன்மணிவிளக்கினீழனம்பியைப்பள்ளிசேர்த்தி
மின்மணிமிளிரத்தேவிமெல்லவேயொதுங்குகின்றா
ணன்மணியீன்றுபுநீர்ச்சலஞ்சலம்புகுவதொத்தாள். (உஅஅ)

உ. ஏதிலாரிடர்பன்னூறுசெய்யினுஞ்செய்தவெல்லாந்
தீதிலவாகவென்றுதிருமுலைப்பான்மடுத்துக்
காதலான்பெயர்சுமந்தகதிர்மணியாழிசேர்த்திக்
கோதைதாழ்குழலினாளைக்கொண்டுபோய்மறையநின்றாள்.

இவையிரண்டுமொருதொடர்.

மணியாகியநா. பன்மணி - உயிர்நீத்தவர்பூண்டமணி. நிழல் - விகாரம். ஏதிலார் - அயலார். தீதிலவாக - நன்றாக்காப்பாக. அவள்முலையைப்பிடித்துக் கூனி கொடுத்தாள். ஆழிசேர்த்திற்று, அறிந்துவளர்த்தற்கு. சேர்த்தவென்க.

இ - ள். கூனி நம்பியைப் பள்ளியிலேசேர்த்துத் தீதிலவாகவென்று முலைப்பாலையெடுத்து ஆழிசேர்த்தினளாக; தேவி, கிண்கிணி சிலம்பொடேங்க மணிமிளிர ஒதுங்குகின்றவள், சலஞ்சலம் மணியையீன்று முந்நீரிலே புகுவதொத்தாள்; அங்ஙனம் போகின்ற அக்குழவினுளைக் கூனி கொண்டுபோய் மறையநின்றாளென்க.

தெய்வம் ஒருபள்ளியைத் தேவியறியாதபடி நிருமித்ததென்றுணர்க. அது பின்பு ஆசிரியன் *"பூந்தவிசினுச்சி" என்பதனானும்பெற்றாம். (உஅகூ)

நல்வினைசெய்திலாதேனம்பிநீதமியையாகிக்
கொல்வினைமாக்கள்சூழக்கிடத்தியோவென்றுவிம்மாப்
புல்லியகொம்புதானோர்கருவிளைபூத்ததேபோ
லொல்கியோர்கொம்புபற்றியொருகணானோக்கிநின்றாள்.

இ - ள். அப்பொழுது அத்தேவி நின்னைப்பெறுதற்கு நல்வினைசெய்து வளர்த்தற்கு நல்வினை செய்யாதேனுடைய நம்பி, நீ தனியையாய்க் கொடியவிலங்குகள் சூழக் கிடத்தியோவென்று அழுது, கொம்பைப்புல்லிய கருவிளைதான் ஒருபூவைப் பூத்ததுபோல ஓர்கொம்பைப்பற்றி ஒதுங்கி ஒருகணானாலே நோக்கிநின்றாளென்க. ()

வேறு.

நாளொடுநடப்பதுவழுக்கிமின்னொடூர்
கோளொடுகுளிர்மதிவந்துவீழ்ந்தெனக்
காளகவுடையினன்கந்துநாமனும்
வாளொடுகனையிருள்வந்துதோன்றினான்.

இ - ள். அவளங்ஙனநிற்க, மதி, நாளொடு நடக்கின்றது, அதனைத்தப்பி மின்னொடுசெல்கின்ற மேகத்துடனே வந்துவீழ்ந்தாற்போல, கந்துக்கடனும் கருமையை இடத்தேயுடைய உடையினனாய்க் கனையிருளிலே வாளொடுவந்து தோன்றினானென்க.

நடப்பது-தொழிற்பெயர். ஊர்கோள் - வினைத்தொகை; ஆகுபெயர். கோள்-பாம்புமாம். இதற்கு உம்மைவிரிக்க. நாமனும் உம்மை - சிறப்பு. (உகூக)

வாள்கடைந்தழுத்தியகண்ணினார்கடந்
தோள்கடைந்தழுத்தியமார்பன்றூங்கிரு
ணீள்சுடர்நிழன்மணிகிழிப்பநோக்கினா
னாள்கடிந்தனங்கியவணங்குகாட்டுளே.

அழுத்தியகண் - அழுத்தினாற்போலுங்கண். தோள்கடைதல் - புல்லுதல்விசேடம். அணங்குகள் ஆளைக்கடிந்து வருத்திய - காடென்றதற்கு அடை.

இ - ள். கண்ணினார்தோளழுத்தியமார்பன், காட்டிலே செறிந்த இருளைச் சுடரையுடைய மணிகிழித்தலாலே பிள்ளையைநோக்கினானென்க. (உகூஉ)

* நாமகளிலம்பகம், கூடுகூ.

அருப்பிளமுலையவர்க்கநங்கனாகிய
மருப்பிளம்பிறைநுதன்மதர்வைவெங்கதிர்
பரப்புகிடந்தெனக்கிடந்தநம்பியை
விருப்புளமிகுதியின்விரைவினெய்தினான்.

அருப்பிளமுலை - அரும்புபோலுமுலை; விகாரம். மருப்பு - கோடு. மதர்வை- மயக்கம். பரப்பு - கதிர் தனதுகிரணங்களைப் பரப்பாநின்று. கிடந்தென- விகாரம்.

இ - ள். பிறைபோலு நுதலையுடைய முலையவர்க்கு அநங்கனாதற்கு இப்பொழுது உதயத்திளஞாயிறு கிடந்ததெனக்கிடந்தநம்பியை, அவன் விருப்பத்தையுடைய மனச்செருக்காலே விரைவோடு சேர்ந்தானென்க. (உகங)

புனைகதிர்த்திருமணிப்பொன்செய்மோதிரம்
வனைமலர்த்தாரினான்மறைத்துவன்கையாற்
றுனைகதிர்முகந்தெனமுகப்பத்தும்மினான்
சினைமறைந்தொருகுரல்சீவவென்றதே.

வனைதல் - கைசெய்தல். துனைகதிர் - இருளைநீக்குதற்கு விரைகின்றகதிர். எல்லாப்புலன்களுக்கும் விருப்பஞ்சேறலின் முகப்பவென்றார். "மன்னெயின்முகவை" என்றார் பிறரும். தும்முதல் - நன்னிமித்தம். சீவ - வேண்டுகோளாகிய வியங்கோட்கண்வந்த வடசொல்.

இ - ள். தாரினான், மோதிரத்தைப் பிறரும் அறிவொனமறைத்தக் கையாலே இளஞாயிற்றை யெடுத்தாற்போல நம்பியையெடுப்ப, அவன்தும்மினான்; அப்பொழுது அத்தெய்வஞ் சினையிலேமறைந்துநின்று சீவிப்பாயாக வென்று ஒருகுரல்வாழ்த்திற்றென்க.

தேவி அச்சந்தாற் றன்னுள்ளேவாழ்த்துதலின் ஒருகுரலென்றார். (உகச)

என்பெழுந்துருகுபுசோரவீண்டிய
வன்பெழுந்தரசனுக்கவலித்தையனை
நன்பழம்பகைதவநூறுவாயென
வின்பழக்கிளவியினிறைஞ்சியேத்தினாள்.

என்புக்குள்ளேயெழுந்து உடலுருகி அவசமாக வளர்ந்த அன்பு. அரசனுக்குப் புத்திரமுகங்காணாநல்வினையின்மைகண்டு வருந்தி. தவ - மிக. இளையறநூறுவாயென்பது கருத்து.

இ - ள். அப்பொழுது தேவி, கந்துகன் பிள்ளையையெடுத்ததுகண்டு பழையஅன்புதோற்றி அவலித்து, பின்பு தெய்வத்தைவணங்கி, ஐயனைப்பகைதவநூறுவாயென வாழ்த்தினாளென்க.

நன் - திசைச்சொல். (உகரு)

ஒழுக்கியலருந்தவத்துடம்புநீங்கினா
ரழிப்பரும்பொன்னுடம்படைந்ததொப்பவே
வழுக்கியபுதல்வனைக்கொழியமாமணி
விழுத்தகுமகனொடும்விரைவினேகினான்.

ஒழுக்கத்திலே இயன்ற தவம்.

இ - ள். கந்துகன், அருந்தவத்தேநின்ற உடம்பைவிட்டவர் மேலான உடம்பைப்பெற்றநிலைமையையொப்ப, தன்புதல்வன் காட்டிலேகிடப்ப, மணிபோலவிழுத்தக்கமகனைக்கொண்டு விரைவோடே ஏகினனென்க.

அழிப்பருமருந்தவமென்க. தவவுடம்பை இவன்புதல்வனுக்கு உவமைகூறினார், அவனாலே சீவகனைப்பெறுதலின். (உகசு)

மின்னடுகனையிருணீந்திமேதகு
பொன்னுடைவளநகர்பொலியப்புக்கபின்
றன்னுடைமதிசுடத்தளருந்தையலுக்
கின்னுடையருண்மொழியினியசெப்பினன்.

பொலிய – துன்பநீங்கி இன்பநிகழ. தன்னுடைமதி - பெண்மதி. இன்மொழி *"புண்ணியற்பெறுதிர்" என்றது. அருளுடைமொழி *"பின்றையுநிகழ்வுண்டு" என்றது. எல்லார்க்கும் அருள்பிறத்தலிற் சிறைகோடலை அருளென்றார்.

இ - ள். அவன் இருளைநீந்தித் தன்மனையிலேபுக்கபின் தையலுக்கு முனிவன் கூறிய இரண்டுமொழியினும் இனியமொழியைக் கூறினனென்க. (உகஎ)

க. பொருந்தியவுலகினுட்புகழ்கண்கூடிய
வருந்ததியகற்றியவாசில்கற்பினாய்
திருந்தியநின்மகன்றீதினீங்கினன்
வருந்தனீயெம்மனைவருகவென்னவே. (உகஅ)

உ. கள்ளலைத்திழிதருங்களிகொள்கோதைத
னுள்ளலைத்தெழுதருமுவகையூர்தர
வள்ளலைவல்விரைந்தெய்தநம்பியை
வெள்ளிலைவேலினன்விரகினீட்டினன்.

இவை யிரண்டுமொருதொடர்.

உலகிற்பொருந்திய புகழெல்லாங்கூடிய அருந்ததிகற்பை அகற்றிய கற்பினாய். ஆசு - குற்றம். திருந்திய - நல்வினைதிருந்திய. வருந்தல் - அல்லீற்றுவியங்கோள். எம்மனை - எம்மில்லாளே. தேன் இதழை யலைத்து இழிதற்குக் காரணமானகளிப்பு. உள்ளலைத்து - தன்னெஞ்சிலேதரங்கித்து. †"இதுமகவழியின்வாழேன்" என்றவளுயிரையு மேற் பொருள்களையுங் கொடுத்தலின் வள்ளலென்றார். விரகு - தேவர் சேர்த்தின திலகத்தை மாற்றினது.

இ - ள். கந்துகன், கற்பினாய், நின்மகன் சாதலினின்றுந்தப்பினனெனச்செப்பினன்; செப்பி இனி வருந்தல்; எம்மில்லாளே, வருகவென, கோதை உவகைபரத்தலால் வள்ளலைமிகவிரைந்தெய்த, வேலினன் நம்பியைவிரகால்நீட்டினனென்க. ()

சுரிமுகவலம்புரிதுவைத்ததூரியம்
விரிமுகவிசும்புறவாய்விட்டார்த்தன
வெரிமுகநித்திலமேந்திச்சேந்தபோற்
கரிமுகமுலையினார்காய்பொன்சிந்தினார்.

* குணமாலையாரிலம்பகம், உஅ०.
† " உஎச.

இ - ள். அப்பொழுது வலம்புரி இசைத்தன; நால்வகைவாச்சியங்களும் ஆர்த்தன; நித்திலமேந்துதலாற் கோபித்தனபோற் கரிந்தமுகத்தையுடைய மூலையினர் எரிமுகத்தேகாய்ந்த பொன்னைக்கொள்ளையூட்டினாரென்க. (௬௦௦)

அழுகுரன்மயங்கியவல்லலாவணத்
தெழுகிளைமகிழ்ந்தெமதரசுவேண்டினான்
கழிபெருங்காதலான்கந்துநாமனென்
றுழிதருபெருநிதியுவப்பநல்கினான்.

அரசன் படுதலால் அழுகுரல். எழுகிளைமகிழ்ந்து - எழுபிறப்புங் கிளையைவிரும்பி; வளர்கின்றகிளையுமாம். உழிதரு - ஓரிடத்துநில்லாது திரியும்.

இ - ள். அதுகேட்டுக் கட்டியங்காரன், அரசனிருப்பிறகுத் தொடர்ந்த பீடிகைத்தெருவிலே இருந்துங் கந்துகன் எமது அரசாட்சியைவிரும்பினானதலான் மிகக் காதலையுடையனென்றுகொண்டு, அவனுவப்ப நிதியைநல்கினானென்க. (௬௦௧)

திருமகற்பெற்றெனச்செம்பொற்குன்றெனப்
பெருநலநிதிதலைதிறந்துபீடிகை
யிருநிலந்திரவலர்க்கார்த்தியின்னணஞ்
செருநிலம்பயப்புறச்செல்வன்செல்லுமே.

பெற்றெனவார்த்தி - எனவெனெச்சம் காரணகாரியப்பொருட்டு; மருந்துதின்றெனப் பிணிநீங்கிற்று என்றாற்போல. குன்றெனப்பெரிய. செருநிலம்பயப்புற-அரசன் போர்செய்த இந்நகர்தன்னிலே சிவகனும்போர்செய்து பிறந்தபயனுறவேண்டி.

இ - ள். செல்வன், திருமகனைப்பெறுதலாலே கட்டியங்காரன் நல்கின பின்பு நிதியைப் பீடிகையஇரவலர்க்கு ஆர்த்தி, அம்மகன் போரிலே தன்பகையைவெல்ல வேண்டி மேலும் இங்ஙனங் கொடைக்கடன்பூண்டொழுகுமென்க.

"அருளிலர்கொடாமைவல்லராகுக" என்றார்பிறரும் ஆழியார்க்குலனுணர்தலின் அதற்குரியதொழிலே கருதினான் கந்துகனும். (௬௦௨)

வேறு.

நல்லுயிர்நீங்கலுநன்மாண்புடையதொர்
புல்லுயிர்தன்னொடுநின்றுழிப்புல்லுயிர்
நல்லுயிர்காட்டிடக்கரப்பக்கலங்கவிழ்த்
தல்லலுற்றாளுற்றதாற்றவுரைப்பாம்.

நல்லுயிர் - சச்சந்தன். புல்லுயிர் - பிள்ளை. கரப்ப - செய்விப்பதன்றொழில். கவிழ்த்த அல்லல் - இது காரணகாரியம், கருவிக்கணடங்கும்; உண்டஎச்சில்போல. உற்றதென்றிறந்தகாலத்தாற்கூறினார், கதையையுட்கொண்டு.

இ - ள். தேவி, தனது நல்லுயிர்நீங்குதலாலே புல்லுயிருடனே நின்றவிடத்து, அதனைக்காட்டிலே விதிமறைத்தலாலே ஒருவன் மரக்கலங்கவிழ்த்தலால் அவனுற்ற வருத்தத்தைத் தான் காட்டிடத்தேஉற்றவள், மேலுற்றதனை முடிவுபோக உரைப்பாமெனத்தேவர் கூறினாரென்க. (௬௦௩)

பொறியறுபாவையிற்பொம்மெனவிம்மி
வெறியுறுகோதைவெறுநிலமெய்த

விறுமுறையெழுச்சியினெய்துவதெல்லா
நெறிமையிற்கூறநினைவினகன்றாள்.

பொறி - எந்திரம். பொம்மென - கடுக. எய்துவதெல்லாமென்றார்; *"ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி-பன்மைக் காகு மிடனுமா ருண்டே." என்றதனால். நெறிமை மை - பகுதிப்பொருள்விகுதி.

இ - ள். கோதை விம்மிப் பாவைபோலே நிலனெய்துதலாலே, கூனி, அந்தத்திலும் ஆதியிலுமெய்துங் காரியத்தையெல்லாம் நெறியாலேகூற, அவள் வருத்தத்தினின்று நீங்கினாளென்க.

கணவால் ஆக்கமுமுளதென்று கருதிய தேவி மனங்கொள்ளும்படி கூனி தன் தெய்வத்தன்மையான் மேல்வருவனகூறலின், அதனையுட்கொண்டு நினைவினகன்றாளென்க. (கூ0ச)

பெருமகற்காக்கம்பிறழ்வின்றிக்கேட்டே
திருமகடானினிச்செய்வதையெல்லா
மொருமனததன்னையுரையெனலோடு
தெருமருதெய்வதஞ்செப்பியதன்றே.

ஏகாரம - ஈற்றசை. செய்வதை - வினைத்திரிசொல். இருவர்க்கும் ஒருமனம். ஓடு - உடனிகழ்ச்சி. தெருமருதெய்வதம் - புதல்வன் அன்னப்பார்ப்பைப் பிரித்த தீவினையை உறுகின்றதன்மையைத் தானோக்கி அதற்கு அவனை வேறோரிடத்து நீக்கித் தேவியைத் தனியேகொண்டுபோகின்றதற்கு வருந்துகின்றதெய்வம். செப்பியது - கணவனையிழந்தார்க்கு நோன்புகடனாதலின் அதற்கியைவதோர்கருமம் தேவிக்குக்கூறிற்று.

இ - ள். மகனுக்கு ஆக்கம் பிறழ்வின்றாகக்கேட்டுத் தேவிதான், இனி யான் செய்யுங்காரியங்களெல்லாம் அன்னாய், உரையாயென்னுதலோடும், தெய்வம் துணிந்துசெப்பிற்றென்க.

அது மேற்கூறுகின்றார். (கூ0ரு)

மணியறைந்தன்னவரியறலைம்பாற்
பணிவருங்கற்பிற்படைமலர்க்கண்ணாய்
துணியிருட்போர்வையிற்றுன்னுபுபோகி
யணிமணற்பேர்யாற்றமரிகைசார்வாம்.

இ - ள். நீலமணியிலே அறலையழுத்தியன்ன ஐம்பாலினையும் உலகெல்லாம் நினதேவலிலே வருதற்குக்காரணமான கற்பினையுமுடையபடைபோலுங் கண்ணாய், இருளாகிய போர்வையிலேமறைந்துபோய், அமரிகையென்னும்பேர்யாற்றில் அணிமணலிலே அயர்வுயிர்ப்பாம்; அதனைத் துணியென்றாளென்க.

பகைநிலத்தை இருளிலே கழிவாமென்றாள். (கூ0சு)

க. அமரிகைக்கோசனையைம்பதுசென்றாற்
குமரிக்கொடிமதிற்கோபுரமூதூர்

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், சுரு.

தமரியலோம்புந்தரணிதிலக
நமரதுமற்றதுநண்ணலமாகி. (கூ0எ)

உ. வண்டார்குவளையவாவியும்பொய்கையுங்
கண்டார்மனங்கவர்காவுங்களுலிய
தண்டாரணியத்துத்தாபதப்பள்ளியொன்
றுண்டாங்கதனுளுறைகுவமென்றாள்.

இவையிரண்டுமொருதொடர்.

ஓசனை - வடசொற்சிதைவு. குமரிமதில். உலகிற்கெல்லாம் தமராமியல்பை நடத்தும். தேவி நோற்றற்குத் தாபதப்பள்ளிவேண்டுதலானும், அரசனையமரினீத்துப் புதல்வனைப்புறங்காட்டினீத்துத் தமரிடத்துச்சேறலாகாமையானும், கூனி நண்ணலமாகியென்றாள். வாவி - ஆற்றிலோடை. பொய்கை - மானிடராக்காதநீர்நிலை. ஆங்கு - உவமவுருபு.

இ - ள். அந்த அமரிகைக்கு ஐம்பதுயோசனைபோனாற் றரணிதிலகமென்னு மூதூர் நமரது, அதனைச்சேரேமாய், மற்றுவாவியும் பொய்கையும் காவுநெருங்கிய தண்டகாரணியமென்கின்றவனத்தே ஒருதாபதப்பள்ளியுண்டு; அதனிடத்தே அவருறைகின்றாற்போல உறைகுவமென்றாளென்க. (கூ0அ)

க. பொருளுடைவாய்மொழிபோற்றினள்கூற
மருளுடைமாதர்மதித்தனளாகி
யருளுடைமாதவரத்திசைமுன்னி
யிருளிடைமின்னினிலங்கிழைசென்றாள்.

இதுமுதல் "தடங்கொடாமரை" ஈறாக ஐந்துமொருதொடர்.

மருளுடைமாதர் - மயக்கந்தீர்ந்தமாதர். கேளிரைக்கண்டால் மிகுந்துன்பமாதலிற் றமரிடைச்சேறலாகாதென்றும் நோற்பலென்றும் யான்கருதியதனையே கூறினளென்று அவளைக்கூறினளாகக் கொண்டமைதோன்ற மதித்தனளாயென்றார். புதல்வற்பயந்தபுனிறுதீராது இராத்திரியிற்சேறலரிதென்றுகருதித் தெய்வம் தன்றெய்வத்தன்மையாற் கொண்டுபோகின்றவிரைவுதோன்ற மின்னினென்றார். (கூ0கூ)

வேறு.

உ. உருவமாமதிவாண்முகத்தோடிய
விருவிலும்மெறிமாமகரக்குழைத்
திருவிலும்மிவைதேமொழிமாதரைப்
பொருவினீர்தர்போககுவபோன்றவே

முன்பு நிறைமதிபோலுமுகத்திலொளி; இப்பொழுதுவருத்தத்தாற்கெட்டகரியவொளி; "இருங்கண்யானை" போல. பொருவில் - வெம்மையாலொப்பில்லாத. அதர் போக்குவ - விளக்கு; ஆகுபெயர். (கூக0)

வேறு.

கூ. சிலம்பிரங்கிப்போற்றிசைப்பத்திருவிற்கைபோய்மெய்காப்ப
விலங்குபொற்கிண்கிணியுங்கலையுமேங்கவெறிவேற்கண்

மலங்கமணிமலர்ந்தபவளக்கொம்புமுழுமெய்யுஞ்
சிலம்பிவலந்ததுபோற்போர்வைபோர்த்துச்செல்லுற்றாள்.

வில்லென்னும்பெயர்பற்றி விற்படை பக்கத்தேகாப்பவென்றார். கண்மலங்க - தனியேபோதற்கஞ்சிச்சுழல; வலம்புரிசலஞ்சலம்வலைஇயதொத்தவளாதலின். மணியைப்பூத்ததோர் பவளக்கொம்பைச் சிலம்பிசூழ்ந்ததுபோல மெய்முழுதும்போர்வையாலேமறைத்து. (கூகக)

ச. பஞ்சியடரனிச்சநெருஞ்சியின்றபழமாலென்
றஞ்சுமலரடிகளரங்கன்னவருங்காட்டிட்,
குஞ்சித்தசைந்தசைந்துகுருதிகான்றுவெய்துயிரா
வஞ்சியிடைநுடங்கமயில்கைவீசிநடந்ததே.

ஈன்றவென்றார், பழத்தின்செருக்கால். அரம்-வாளரம். குஞ்சித்து - குந்தி. வெய்துயிராமயில். நடந்ததே - நடந்ததன்மையே; ஏகாரம் - தேற்றம். பஞ்சியடரையும் அனிச்சத்தையும் நெருஞ்சிப்பழமென்றுகருதிக் குஞ்சித்து அசைந்தசைந்து குருதி கான்று அஞ்சுமலரடியென்க. கைவீசியென்று வருந்தாமைகூறினார். (கூகஉ)

வேறு.

ரு. தடங்கொடாமனைத்தாதுறைதேவியும்
குடங்கைபோலுண்கட்கூனியுங்கூர்ம்பரற்
கடங்களும்மலையுங்கடந்தார்புனல்
லிடங்கொள்யாற்றகமெய்தினரென்பவே.

புனலிடங்கொண்ட - நீரறாத. என்ப - அசை.

இ - ள். கூனி மொழிகளை விரும்பினளாய்க்கூற, அதனை மாதர் மதித்தனளாய் மாதவரிருக்கின்ற அத்திசையைக்கருதிப் போர்வைபோர்த்து அருங்காட்டிலே இடைநுடங்கக் கையைவீசி நடைக்குவருந்தாததோர் மயில்நடந்ததன்மையே மலரடிகளாலே செல்லலுற்றாள்; அப்பொழுது இருவிலும் திருவிலும் மாதனை இரவிடை வழிபோக்கும்விளக்குப்போன்றன; அவ்விளக்கிலே கூனியொழிய வேறொருவரின்மையிற் கண் அலமருதலாற் சிலம்பிசைப்பத் திருவிற்காப்பக் கிண்கிணியுங்கலையும்ஏங்கக் கடங்களுமலையுங்கடந்து அந்த இலங்கிழை மின்போலச்சென்றாள்; இங்ஙனஞ்சென்ற தாதுறைதேவியும் அவளுக்கேற்பச்சென்றகூனியும் பின்னர் யாற்றிடைக்குறையைச் சேர்ந்தாரென்க. (கூகங)

எல்லையெய்தியவாயிரச்செங்கதிர்
மல்லன்மாக்கடற்றோன்றலும்வைகிருட்
டொல்லைநல்வினைமுற்படத்தோன்றிய
வல்லல்வெவ்வினைபோலவகன்றதே

மல்லல - மணிமுதலியவளன்.

இ - ள். எய்தினஅளவிலே, ஒருவர்க்கு நல்வினைவந்துதோன்ற, அதற்குமுன்னே தோன்றிநின்ற தீவினை அகலுமாறுபோல, உலகம் பகற்பொழுதைப்பெறவேண்டிக் கதிர் கடலிற்றோன்றின அளவிலே இருளகன்றதென்க. (கூகச)

நுணங்குநுண்கொடிமின்னொர்மழைமிசை
மணங்கொள்வார்பொழில்வந்துகிடந்தொத்
தணங்குநுண்டுகின்மேலசைந்தாளரோ
நிணங்கொள்வைந்நுதிவேனெடுங்கண்ணினாள்.

மிகவும் நுண்ணிய ஒழுங்குபட்டமின். அணங்கும் - இமைதெரியாதவருந்தும்.

இ - ள். கண்ணினாள், அவ்வாற்றிடைக்குறையிற் பொழிலிலே வந்து, மஞ்சிலே ஒருமின்கிடந்த தன்மையையொத்து, துகிலின்மேலே கிடந்தாளென்க. (௬௧௫)

வைகிற்றெம்மனைவாழியபோழ்தெனக்
கையினாலடிதைவரக்கண்மலர்ந்
தையவோவென்றெழுந்தனளாய்மதி
மொய்கொள்பூமிமுளைப்பதுபோலவே.

தெய்வம் கூனிவடிவாய்நிற்றலிற் றன்றொழிற்கேற்ப அடிதைவந்தது. ஈண்டு அரசனைக் கனவிற்கண்டு அது நனவாகாமையின் ஐயவென்றாள். ஓ - இரக்கக்குறிப்பு. ஆய்மதி - ஒளியற்றமதி. அதுவம் உதயத்தே தோன்றும். மொய்கொள் - அணுச்செறிந்த.

இ - ள். அப்பொழுது கூனி, எம்மன்னாய், வாழ்வாயாக பொழுதுவைகிற்றென்று அடியைத்தடவ, கண்ணைவிழித்து ஐயவோவென்று மதி பூமியிலே முளைத்ததுபோல எழுந்தாளென்க.

முகமெடுத்தற்குவமை. அன்னை, ஈண்டு முறைப்பெயரன்மையின் *“அன்னையென்னை” என்னும் பொருளியற்சூத்திரத்தாற்கொள்க. (௬௧௬)

தூவியஞ்சிறையன்னமுந்தோகையு
மேவிமென்புனமானினமாதியா
நாவிநாறெழின்மேனியைக்கண்டுகண்
டாவித்தாற்றுகிலாதழுதிட்டவே.

இ - ள் அதனைக்கண்டு மானினமுதலாக அன்னமுந்தோகையுமேவி எழின் மேனியைக்கண்டு கொட்டாவிகொண்டு ஆற்றாதழுதிட்டனவே; தமக்கு இவை இயல்பாகக் காலையிற்செய்தனவல்லவென்க.

ஏகாரம் - தேற்றம். (௬௧௭)

கொம்மைவெம்முலைப்போதிற்கொடியனா
ளும்மைநின்றதொருழ்வினையுண்மையா
லிம்மையிவ்விடருற்றனளெய்தினாள்
செம்மைமாதவர்செய்தவப்பள்ளியே.

கொம்மை - பெருமை. செம்மை - செவ்வை.

இ - ள். அவை வருந்தினபின், பால்சுரத்தற்கு வெவ்விதாகிய முலையினையுடைய திருவனாள், முற்பிறப்பிற்செய்த தீவினையுள்ளதாதலால் இப்பிறப்பில் இவ்வருத்தமுற்றாள்; அது நீங்குதலாலே மாதவர் தவஞ்செய்கின்ற பள்ளியைச்சேர்ந்தாளென்க. (௬௧௮)

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், பொருளியல், ௩௨.

வேறு.

வாளுறைநெடுங்கணுளைமாதவமகளிரெல்லாந்
தோளுறப்புல்லுவார்போற்றேக்கெதிர்கொண்டுபுக்குத்
தாளுறுவருத்தமோம்பித்தவநெறிப்படுக்கலுற்று
நாளுறத்திங்களூரநல்லணிநீக்குகின்றார்.

வாளின்றன்மை முன் தங்கியகண்ணை. மாதவஞ்செய்வார்க்குப் புல்லலா காமையிற் புல்லுவார்போலென்றார். வருத்தம் தேவிக்கின்றென்பதுணராது இக் காட்டில்வருவார்க்கு வருத்தமுளதென்று தாங்கருதி யோம்பினார். மேல் தவத்திற் சேறற்கு நெறியாகிய நோன்பை உண்டாக்கலுற்று. கணவனை இழந்ததற்கும் புத ல்வன் வாழ்தற்கும் பொருந்தியநோன்பு. நல்லநாள் வந்துபொருந்த. நாடோறும் திங்கள் ஒருகலையேறாநிற்க.

இ - ள். மகளிரெல்லாந் தொக்குக் கண்ணைப் புல்லுவாரைப்போலெதிர்கொ ண்டுபுக்கு ஓம்பி அவள்கருத்தறிந்து படுக்கலுற்று உற ஊர நீக்குகின்றாரென்க.

தேவி நீக்குகின்றவற்றை அவர்மேலேற்றினார்; ஏவினாரைக்கருத்தாவாக, அரச ரெடுத்த தேவகுலம்போல. (௩௧௯)

திருந்துதகரச்செந்நெருப்பிற்றேன்றேய்த்தமிர்தங்கொளவுயிர்க்குங்
கருங்காழகிலினறும்புகையிற்கழுமிக்கோதைகண்படுக்குந்
திருந்துநானக்குழல்புலம்பத்தேனும்வண்டுமிசைபுலம்ப
வரும்பொன்மாலையலங்கலோடாரம்புலம்பவகற்றினாள்

தகரவிறகாலாக்கினநெருப்பிலே தேன்றேய்த்திட்ட அகிலினது இனிமைகொ ள்ளநாறும்புகையிலே மயங்கிக் கண்படுக்குங்கோதை.

இ - ள். சோதைபுலம்ப, தேனினமும் வண்டினமும் நாதாதாமையின் இசைக்குப்புலம்ப, பொன்னரிமாலையும் நெற்றிமாலையும் தலைக்கோலமாகியமுத்தும் புலம்ப, இவற்றைக் குழலினின்றகற்றினாளென்க. (௩௨0)

திங்களுகிரிற்சொலிப்பதுபோற்றிலகம்விரலிற்றுணீக்கிப்
பைம்பொன்மகரகுண்டலமும்பாவைகழுத்திணணிகலமும்
வெங்கண்வேந்தற்கமிர்தாகிவேற்கட்பாவைபகையாய
வங்கண்முலையினணிமுத்துமரும்பொற்பூணுமகற்றினாள்.

சொலிப்பது - இடப்பது. சிதைப்பதும் பாடம். இன்பத்தால் அவனைக் கெடுத் தலிற் றனக்குப்பகையாயமுலை.

இ - ள். பாவைதான், திலகத்தை விரலாலேநீக்கி, குழையையும் குண்ட லத்தையும் கழுத்தினணிகலங்களையும் முலையினணிந்தமுத்தையும் பூணையு நீக்கினா ளென்க. (௩௨௧)

பஞ்சியணையவேய்மென்றோட்பருவாய்மகரங்கான்றிட்ட
துஞ்சாக்கதிர்கொடோண்முத்தந்தொழுதேனும்மையெனத்துறந்து
வஞ்சிவருத்துதுசுப்பினாள்வளைகையுடைத்துமணிக்காந்த
ளஞ்சச்சிவந்தமெல்விரல்சூழருமபொனாழியகற்றினாள்.

அங்காந்தவாயினையுடைய மகரங்கான்ற மாறுதகதிரையுடைய பலவடஞ்சேர்ந் தமுத்தம். அரசன் நீங்காமல் முயங்குதற்குக்காரணமாய்த் தன்னைக்கெடுத்தலிற் றொழுதேனென்றாள். வளைகழற்றுதல் அரிதாதலிற் கையாலுடைத்தென்றார். மணி- அழகு.

இ - ள். நுசுப்பினாள், நும்மைத் தொழுதேனென்று தோளின்முத்தத்தைத் துறந்து, வளையை உடைத்து, பின்பு, விரலைச்சூழ்ந்த ஆழியையகற்றினளென்க. ()

பூப்பெய்செம்பொற்கோடிகமும்பொன்னாலவட்டமு
மாக்குமணிசெய்தேர்நதட்டுமரவின்பையுமடுமல்குல்
வீக்கிமின்னுங்கலையெல்லாம்வேந்தன்போகியரம்பையரை
நோக்கிநும்மைநோக்கானீர்நோவாதொழிமினெனத்துறந்தாள்.

நோக்கியென்றார், மெய்யுறுபுணர்ச்சியின்றி நோக்கால் நுகர்தலின். நும்மை நோக்கான் - நும்மாலுள்ளபயனை நோக்கான். இது இரண்டன்மருங்கின்நோக்கனைக் கமாதலின் ஏதுவாயிற்று.

இ - ள். தேவி, வேந்தன்போய் அரம்பையரைநுகர்தலாலே நும்மைநோக்கா னாதலால் நீர் என்னைவெறாதே நீங்குவீராகவென்றுசொல்லி, பூந்தட்டையும் ஆல வட்டத்தையுந் தேர்த்தட்டையும் பையையுமடுகின்றவல்குலிலேவீக்கி இன்பத்தை யாக்குங் கலைகளெல்லாவற்றையுந்துறந்தாளென்க.

மணியாலேசெய்தமைச்குந்தேருமாம். (௩௨௩)

பிடிக்கைபோலுந்திரள்குறங்கினணியுநீக்கிப்பிணையன்னா
ளடிக்கிண்கிணியுமஞ்சிலம்பும்விரன்மோதிரத்தோடகற்றியபின்
கொடிப்பூத்துதிர்ந்ததோற்றம்போற்கொள்ளத்தோன்றியணங்கலற
வுடுத்தாள்கற்றோய்நுய்ந்கலிங்கமுரவோன்சிறுவனுயர்கெனவே.

கொடிப்பூத்துதிர்ந்த - ஒற்றுமையாற் சினைவினை முதன்மேலேற்றினார். அலற- வருந்த. கல் - நாசெங்கல். உரவோன் - அறிவுடையோன். உயர்கவென்றார், நோன் பின்பயன் அதுவாகலின்.

இ - ள். பிணையன்னாள், குறங்கிற்செறிந்த அணியையுநீக்கி, கிண்கிணியையுஞ் சிலம்பையுங் காலாழியுடனகற்றியபின்பு, பூத்துதிர்ந்ததோற்றம்போற் றோன்றி, கூனிவருந்தச் சிறுவனுயர்கவென்று கலிங்கத்தையுடுத்தாளென்க.

உரவோன்சிறுவனென்றாள், பகையைவெல்லப்பிறந்தமை கருதி. (௩௨௪)

வேறு.

பாலுடையமிர்தம்பைம்பொற்கலத்திடைப்பாவையன்ன
நூலடுநுசுப்பினல்லாரேந்தவுநேர்ந்துநோக்காச்
சேலடுகண்ணிகாந்தட்டிருமணித்துடுப்புமுன்கை
வாலடகருளிச்செய்பவனத்துறைதெய்வமானாள்.

அமிர்தம் - அடிசில். நேர்ந்தேந்தவும் - இவள் உணவொழிந்தாளென்று வலிய எடுக்கவும். உணவொழிந்தநுகர்ச்சியே நிகழ்ந்தமையின் நோக்காதவென்றார். முன்பு திருமணியையுடையகை. அருளி - அருள. செய்ய - சிவந்த.

இ-ள். உடுத்தபின், நுசுப்பினையுடைய பாவையன்னநல்லார் நேர்ந்து கலத்தே அமிர்தத்தையேந்தவும் நோக்காதகண்ணி, காந்தட்டுடுப்புப்போலுந் தன்கை தானே அடைகையருள அதனைநுகர்ந்து, இல்லுறைதெய்வமன்றி வனத்தேயுறைவதோர் செய்யதெய்வமானாளென்க. (௩௨௫)

மெல்விரன்மெலியக்கொய்தருளநெல்லும்விளைந்தவாம்ப
லல்லியுமுணங்குமுன்றிலணிவிளித்திரியவாமான்
புல்லியகுழவித்திங்கட்பொழிகதிர்க்குப்பைபோலு
நல்லெழிற்கவரியூட்டநம்பியைநினைக்குமன்றே.

மெலியவென்றார், தவமகளிர்கொய்தலின். விளித்திரிய - கந்திக்கெட. குப்பைபோலுமெழிலென்றார், சாமரத்தால்.

இ-ள். நெல்லும் அல்லியும் உணங்குமுன்றிலிலே அணிவிரியும்படி ஆமான்குழவியைப்புல்லியகவரிமா, அதற்கு முலையையூட்டத் தேவி, நம்பி பிறர்முலையை உண்டு வளர்கின்றபடியைநினைக்குமென்க.

* "குஞ்சரம் பெறுமே குழவிப் பெயரக்கொடை" என்றதனுட் கொடையென்றதனன் ஆமான், குழவியுங்கொண்டவாறுணர்க (௩௨௬)

பெண்மைநாண்வனப்புச்சாயல்பெருமடமாதுபேசி
னுண்மையினொருங்குகூடியுருவுகொண்டனையநங்கை
நண்ணியநுங்கட்கெல்லாமடைக்கலமென்றுநாடுங்
கண்ணியகுலனுந்தெய்வங்கரந்துரைத்தெழுந்ததன்றே.

பெண்மை - அமைதித்தன்மை. மடம் - கொளுத்தக்கொண்டுகொண்டதுவிடாமை. மாது - காதல்; உரிச்சொல் ஈறுதிரிந்தது. இவட்குள்ள அமைதித்தன்மை முதலியவற்றைக் கூற நினைத்தேமாயின், அவை தமக்குவிளக்கங்காரணமாகச் சேரக்கூடி ஒருவடிவுகொண்டாற்போலுநங்கை. எல்லாநண்ணியநுங்கட்கு - நற்குணமெல்லாம்பொருந்தியநுமக்கு.

இ - ள். அவ்வளவிலே தெய்வம், நங்கை நுங்கட்கு அடைக்கலம்; இவளைக் காத்தல்வேண்டுமென்றுகூறிப் பின்பு, நாட்டையுங் குலத்தையும் வேறுபெயர்படக் கூறிப் போதற்கொருப்பட்டதென்க. (௩௨௭)

வேறு.

உறுதிசூழ்ந்தவளோடவ்வாயிடை
மறுவில்வெண்குடைமன்னவன்காதலஞ்
சிறுவன்றன்மையைச்சேர்ந்தறிந்திவ்வழிக்
குறுகவும்மெனக்கூனியைப்போக்கினாள்.

ஆயிடை - இராசமாபுரத்திடை. சேடியை வம்மென்று உயர்த்துக்கூறினாள்; தான் நிற்கின்ற தவநிலைக்கேற்ப.

இ - ள். அங்ஙனம் போதற்கொருப்பட்ட தெய்வத்தினெஞ்சம் இவ்விடத்து இவட்கு ஆம் உறுதிகளைச்சூழ்ந்து தானுறைகின்ற இடத்தே சேறலான் அதற்சேற்பத் தெய்வம் தன்றெய்வத்தன்மையாற் றேவிக்கும் அக்கருத்தேபிறப்பிக்கத் தேவி

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௧௧.

யும் ஆயிடைச்சேர்ந்து சிறுவன்செய்தியை அறிந்து இவ்விடத்தே அணித்தாகவும் மென்று அத்தெய்வத்தைப் போகவிட்டாளென்க. (௩௨௮)

நெஞ்சினொத்தினியானையென்னீர்மையால்
வஞ்சித்தேனெனவஞ்சியங்கொம்பனாள்
பஞ்சிமெல்லடிப்பல்கலனார்ப்பச்சென்
றிஞ்சிமாநகர்த்தன்னிடமெய்தினாள்.

நெஞ்சினொத்து - யான்கருதியதேதானுங்கருதி. வஞ்சித்தல் - அறிந்து வருகின் றேனென்றது.

இ - ள். அப்பொழுது கொம்பனாள், இனியானை எனதுதெய்வத்தன்மையாலே வஞ்சித்தேனென்றுவருந்தி, கலனார்ப்பச்சென்று, இராசமாபரத்திற் புறங்காட்டைச் சேர்ந்தாளென்க. (௩௨௯)

தானுந்தன்னுணர்விற்றளர்ந்தாற்றவு
மானினோக்கிவரும்வழிநோக்கிநின்
றூனியம்பலவாசையிற்செல்லுமே
தேனியம்புமொரதேம்பொழிற்பள்ளியே.

மானின் இன், சாரியை.

இ - ள். மானோக்கிதானும், தெய்வமென்றறியாதபெண்ணுணர்வாலே மிகவுந் தளர்ந்து, பள்ளியிடத்தே, அவள்வரும்வழியை நோக்கிநின்று, பலஇரவும்பகலும் இன்றுவருமின்றுவருமென்னும ஆசையிலே நடவாநிற்குமென்க. (௩௩௦)

வேறு.

மட்டவிழ்கோதைதவாளவுண்கண்மயிலன்னாள்
கட்டழலெவ்வங்கைமிகநீக்கிக்களிகூர
விட்டகல்வாற்றாவேட்கையினோடும்பொழுதிப்பாற்
பட்டதையெல்லாம்பல்லவர்கேட்கப்பகர்குற்றேன்.

அழல்போலெவ்வம். அகல்வு - அகற்சி. இன்-சாரியை. பகர்கு - தன்மைச் சொல்.

இ - ள். சுநந்தை பிள்ளையையிழந்ததுன்பத்தைச் சிறிதும் நில்லாதபடிபோக் கிக் களிப்புமிகுதலாலே ஒழிந்தோர்க்கும் பிள்ளையை விட்டுநீங்கமாட்டாத வேட் கைநடக்கின்ற இராப்பொழுதிற்குப்பின்பு பிள்ளையுற்றகாரியங்களையெல்லாம் பலருங் கேட்கும்படி கூறுவேனாகத்தொடங்கினேனென்றாரென்க.

என்றது தம்மாற் சரிதங்கூறுதலரிதாகலின். இனி வேட்கையாற் கடுகக்கழி யும்பொழுதென்றுமாம். (௩௩௧)

கூற்றம்மஞ்சுங்கொன்னுனையெஃகினிளையாறு
மாற்றம்மஞ்சும்மன்னியகற்பின்மடவாளும்
போற்றித்தந்தபுண்ணியர்கூடிப்புகழோனைச்
சீற்றத்துப்பிற்சீவகனென்றேபெயரிட்டார்.

கொன்னுனை - வினைத்தொகை. சொல்லப்புகிற் சொல்லும் அஞ்சக்கற்பு. சீவ கன், சீவித்தலையுடையனென்று தெய்வம் வாழ்த்தினமையின் அப்பெயரேயாயிற்று.

இ - ள். இளையானும் மடவாளும் விரும்பிக்கொண்டுவந்த பார்ப்பார் சான்றோருள்ளிட்டோருங்கூடிச் சிறந்துப்பிறப்புகழோனைச் சீவகனென்றே பெயரிட்டாரென்க. (௩௩உ)

மேகம்மீன்றமின்னனையாடன்மிளிர்பைம்பூ
ணாகம்மீன்றவம்முலையின்பாலமிர்தேந்தப்
போகம்மீன்றபுண்ணியனெய்தகனையேபோன்
மாகம்மீன்றமாமதியன்னான்வளர்கின்றான்.

முலை - எழுவாய். போகமீன்ற - தான் சத்தியுஞ் சிவனுமாய் உலகத்துக்கெல்லாம் போகத்தை உண்டாக்கின. புண்ணியனென்றார், திரிபுரத்தையழித்தும் நஞ்சுண்டும் பல்லுயிர்களையுங்காத்தலின். எய்தகனை - திருமால். கணைவளருமாறுபோல வளருமெனவே, அவன் ஆய்ப்பாடியிலே நந்தகோன்மனையிலே மறையவளர்ந்தது உவமையாம்.

இ - ள். மதியன்னான் மின்னனையாளது ஆகமீன்றமுலை இனியபாலமுதத்தையேந்தப் புண்ணியனெய்தகணை நந்தகோன்மகனாய்வளருமாறுபோலக் கந்துகன்மகனாய் வளர்கின்றானென்க.

மா ஈண்டு அழகு. மதி - பிறை. (௩௩௩)

அம்பொறகொம்பினுமிழையைவர்நலனோம்பப்
பைம்பொற்பூமிப்பல்கதிர்முத்தார்சகடம்முஞ்
செம்பொற்றேரும்வேழமுமூர்ந்துநிதிசிந்தி
நம்பன்செல்லுநாளினுநாளுநலமிக்கே.

ஐவர்: ஆட்டுவாள், ஊட்டுவாள், ஓலுறுந்துவாள், நொடிபயிற்றுவாள், கைத்தாய். நிதிசிந்தி, குழவிப்பருவத்துங் கொடையியல்பு. நாளின் இன் - சாரியை.

இ - ள், நம்பன், ஐவர் எல்லாநலத்தையும்பேணுநிற்க, அவ்விடத்தேசகடத்தையுந் தேரையும் வேழத்தையுந் தன்கையாற்செலுத்திச் சிந்தி நாடோறுநாடோறு நலமிக்குச் செல்லுமென்க. (௩௩௪)

பல்பூம்பொய்கைத்தாமரைபோன்றும்பனிவானத்
தெல்லார்கண்ணுமின்புறவூரும்மதிபோன்றுங்
கொல்லுஞ்சிங்கக்குட்டியும்போன்றிவ்வுலகேத்தச்
செல்லும்மன்னோசீவகன்றெய்வப்பகைவென்றே.

ஒழிந்தோரிற்சிறந்தமையிற் றாமரையுவமம். வானிடத்துத் தேவர்முதலாயினரிடத்தும் இன்பமுறப்பரக்கின்ற மதியாவது அறிவு; அதுதான் ஒருவடிவுகொண்டாற்போன்றும். *"குட்டியும் பறழுங் கூற்றவண் வரையார்" என்றதனுட் கூற்றென்றதனாற் புலிமுதலியவற்றிற்குக் கூறிய இளமைப்பெயர் சிங்கத்திற்குங்கொண்டார். தெய்வப்பகை - வாலசிகிற்சையிற் கூறுகின்றதெய்வப்பகை. ஓ - அசை.

இ-ள். சீவகன் பகையைமிகவும்வென்று உலகேத்தும்படி தாமரைமுதலியனபோன்று செல்லுமென்க. (௩௩௫)

மணியும்முத்தும்மாசறுபொன்னும்பவளம்மு
மணியும்பெய்யும்மாரியினேற்பார்க்கவைநல்கிக்

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், க0.

கணிதம்மில்லாக்கற்பகங்கந்துக்கடனொத்தா
னிணைவேலுண்கணந்தையுமின்பக்கொடியொத்தாள்.

இ - ள். தமக்கு வேண்டும்பொருள்களை வேண்டாமல் ஏற்பார்க்கு அப்பொருள்களைப் பெய்கின்றமாரிபோலே நல்கி ஒரளவிற்படாதகந்துகன், பின்பு, வேண்டியேற்பார்க்கு நல்கிக் கற்பகமொத்தான்; சுநந்தையும் அதன்மேற்படர்ந்த காமவல்லியை யொத்தாளென்க.

கார்வேண்டாமைக்கொடுத்தலுங் கற்பகம் வேண்டக்கொடுத்தலுமியல்பு. நல்கி இல்லாவென்க. நந்தை - தலைக்குறை. இது சௌளத்திற்கு முன்புள்ளகருமங்களிலும் நாடோறுநடத்துங் கருமங்களிலுங் கொடைக்கடனமர்ந்தமைகூறினர்.

சாதிப்பைம்பொன்றன்னொளிவெளவித்தகைகுன்றா
நீதிச்செல்வம்மேன்மேனிந்திநிறைவெய்திப்
போதிச்செல்வம்பூண்டவரேத்தும்பொலிவின்னா
லாதிக்காலந்தந்தணன்காதன்மகனொத்தான்.

சாதிப்பைம்பொன்றன்னொளிவெளவி - இதனால்நிறம்பிறந்தமைகூறினர். நீதிச்செல்வம் - சௌளம். மேன்மேல்நிறைவெய்தி - முறையேநாமகளைப் புணரும்பருவநிறைந்து. அந்தணன்மகன் - ஸ்வாயம்புமனு; இயல்பான அறிவிற்குவமை. இனித் தீர்த்தகரில் ரிஷபஸ்வாமிமகன் பரதராசசக்கரவர்த்தியென்றுமுரைப்ப.

இ - ள் ஒளியைவெளவிச் செல்வநீந்தி நிறைவெய்துதலின் அறிவாகியசெல்வத்தைப் பூண்டவரேத்தும் பொலிவாலே அந்தணன்மகனொத்தானென்க.

க்ஷத்திரியனுக்கு வைதிகம்வேண்டுதலிற் சௌளத்திற்குமுன்புள்ள கன்மமும் சௌளமுங்கூறினமையான் மேலும் உபநயனமுதலியனவும் விரியக்கூறாராயினும் அவ்விடங்களிலே குறிப்பானுணர்க. (௩௩௭)

வேறு.

நனைநதலையுலகின்மிக்கநன்னுதல்மகளிர்தங்கள்
மனந்தளைபரியநின்றமதலைமையாடுகென்றே
பொனங்கொடியிறைஞ்சிநின்றுபூமகள்புலம்பிவைக
வனங்கனுக்கவலஞ்செய்யுமண்ணனைநற்றாயுரைத்தாள்.

மிக்க மகளிராவார்-விறன்மடந்தையும் புகழ்மடந்தையும். தளை - குவிதல். மனத்தினின்ற தளைபரிய - இவனைப்பெறுமாறு நினைந்துவருந்துகின்ற மனத்தினின்றவருத்தநீங்க. நின்றமையாடுக - முறையேநின்ற மையோலைபிடிக்க.

இ - ள். அண்ணல் நற்றாய், கொடிபோல இறைஞ்சிநின்று, மகளிர் தளைபரியத் திருமகள் சிறிதுநாள் தனித்துவைக மதலை மையாடுகவென்றுரைத்தாளென்க.

இது தன்செருழிலாதலிற் கூறினாள். தளைபரியமையாடுகவென்றது, பலநூல்களைக்கற்கவே வெற்றியும்புகழுமுண்டாமென்று. செல்வச்செருக்கின்றி வழிபாட்டோடு கற்றலிற் திருமகள்புலம்பவென்றார். (௩௩௮)

முழவென்னத்திரண்டதிண்டோண்முரிவெஞ்சிலையினானு
மழலெனக்கனலும்வாட்கணவ்வளைத்தோளினாளும்

மழலையாழ்மருட்டுந்தீஞ்சொன்மதலையைமயிலஞ்சாயற்
குழைமுகஞானமென்னுங்குமரியைப்புணர்க்கலுற்றார்.

யாழைமருட்டு மழலைத்தீஞ்சொல். சாயற்குமரி. குழைமுகம் - பூணையுந்தோ ற்றுவித்தது. குழையப்பண்ணுகின்ற முகமுடைய ஞானமென்னுங்குமரி. வேறு தன் கருத்தறிவாரின்றி இவனே தன்கருத்தறியத் தான் அழியாதிருத்தலிற் குமரியெ ன்றார்.

இ - ள். கந்துகனும் சுநந்தையும் மதலையை ஞானமென்னுங்குமரியைப்புண ர்க்கக் கருதினாரென்க.

சாத்தனை நூலைக் கற்பிக்க லுற்றாரென்றாற்போல. (கூகூக)

அரும்பொனுமணியுமுத்துங்காணமுங்குறுணியாகப்
பரந்தெலாப்பிரப்பும்வைத்துப்பைம்பொன்செய்தவிசினுச்சி
யிருந்துபொன்னோலைசெம்பொனூசியாலெழுதியேற்பத்
திருந்துபொற்கண்ணியாற்குச்செல்வியைச்சேர்த்தினாரே.

பரந்த - விகாரம். வைத்து - வைக்க.

இ - ள். அவர்கள், பொன்முதலியன குறுணியென்கின்ற அளவாகப்பரந்த எல் லாப்பிரப்பரிசியையும்வைக்க; உவாத்திமுதலியோர் தவிசின்மேலேயிருந்து கண்ணி யாற்குச் செல்வியை, மகளிரைச்சேர்த்துமாறன்றியே பொன்னோலையிலே அவள்பொ ருந்தும்படி எழுத்தாணியாலெழுதிச் சேர்த்தினாரென்க. (கூசo)

நாமகணலத்தையெல்லாநயந்துடன்பருகிநன்னூ
லேமுதலாயவெல்லாப்படைக்கலத்தொழிலுமுற்றிக
காமனுங்கனியவைத்தபுலங்களைகண்டுகண்ணா
பூமகள்பொலிந்தமார்பன்புவிமிசைத்திலகமொத்தான்.

சொல்லாற கூறுவனவெல்லாம் அடங்குதற்கு எல்லாமென்றார். பருகியெனவே தன்குலத்திற்குரியவேதமுமதிகரிக்கவேண்டுதலின் ஈண்டே உபநயனமுங்கூறினார். இது *" சாமகீதமற்றுமொன்று சாமிநன்குபாடினான்" என்பதனானும் பிறவாற்றானு முணர்க. ஏமுதலாயபடைக்கலத்தொழிலுமுற்றி, எல்லாத் தொழிலு முற்றியென்க. புலம் - ஆகுபெயர்.

இ - ள். மார்பன், நாமகணலத்தையெல்லாம் தான்விரும்பிச் சேரக்கற்று, நா ஞேதிய தனுவேதத்திற்கூறிய அம்புமுதலியபடைக்கலங்களின் றொழில்களையுமெல் லாத்தொழில்களையு முடித்து, காமனுமனமுருகும்படி அந்நூலிற்கூறிவைத்த பாட்டி னையுங் களைகண்டு, மண்மகளுக்கு நெற்றியிலிட்டதிலகத்தையொத்தானென்க.

இசைகூறவே கூத்துமடங்கும். முன் நூல்களைக் கற்றதற்கேற்பத் தொழில்களை க்கற்றா னென்றார். (கூசக)

மின்றெளித்தெழுதியன்னவிளங்குநுண்ணுசுப்பினல்லார
பொன்றெளித்தெழுதியன்னபூம்புறப்பசலைமூழ்கிக்
குன்றொளித்தொழியநின்றகுங்குமத்தோளினாற்குக்
கன்றொளித்தகலவைத்தகறவையிற்கனிந்துநின்றார்.

* சுரமஞ்சரியாரிலம்பகம், சடு.

மின்னைநிலைபெறநிற்கத்தெளிவித்து அதனிடத்தே மகளிர் அவயவங்களை எழுதியன்ன நல்லாரென்க. *"தெளித்தசொற்-றேறியார்க்கு" என்றாற்போல. இனி மின்னைக்கொணர்ந்தெழுதியன்ன நல்லாருமாம். புறம் - தம்மெய்யிடம். ஒளித்தொழிய-ஒளித்துப்போக. கன்றைமறைத்து முலையுண்ணுதபடிவைக்கப்பட்ட கறவை.

இ - ள். தோளினாற்குத் தமது பூம்புறத்திற்றோன்றிய பொன்னைக் கொணர்ந்தெழுதியன்ன பசலையிலே நல்லார்முழுகிக் கறவைபோல வேட்கைசெறிந்துநின்றாரென்க.

இதனாற் குலக்கன்னியரைக்கூறினார். (௬௪௨)

விலைபகர்ந்தல்குல்விற்கும்வேலினும்வெய்யகண்ணார்
முலைமுகந்திளையாமார்பமுனிவிலரெழுதிவாழும்
கலையிகந்தினியசொல்லார்கங்குலும்பகலுமெல்லாஞ்
சிலையிகந்துயர்ந்ததிண்டோட்சீவகற்காற்றியாற்றார்.

அல்குல்விற்குங்கண் - அல்குலைவிற்றற்குக் காரணமானகண்; களவுகுடிகொள்ளுங்கண். இவர்பரத்தையரிற்கன்னியர். மார்பை முலையாலே முகந்து நீங்காதெழுதிவாழும் இனியசொல்லார் - போகநுகரும் பரத்தையர். சிலையிகந்து - சிலைக்குக்கூறுகின்ற நிலையைக்கடந்து.

இ - ள். சீவகற்குக் கண்ணார் சொல்லார் எல்லாரும் இரவும்பகலு மாற்றியாற்றாராயினாரென்க.

இப்பரத்தையரும் சேரிப்பரத்தையருமாம். (௬௪௩)

வான்சுவையமிர்தவெள்ளம்வந்திவட்டொக்கதென்னத்
தான்சுவைக்கொண்டதெல்லாந்தணப்பறக்கொடுத்தபின்றைத
தேன்சுவைத்தாற்றும்பைந்தார்ச்சீவககுமரனென்ற
வூன்சுவைத்தொளிரும்வேலாற்குறுதியொன்றுரைக்கலுற்றான்.

கொண்டதெல்லாம் - ஒருமைபன்மை மயக்கம்.

இ - ள். சீவககுமரனென்றவேலாற்கு ஆசிரியன் தானுகர்ந்தகலைகளை யெல்லாம் நட்டறக்கொடுத்தபின்பு, வானிடத்தமிர்தக்கடல் வந்து நிறைந்ததென்னும்படி ஓர் உறுதிகூறலுற்றானென்க.

தொக்கதென்னக் கொடுத்தபின்றையென்றுமாம். (௬௪௪)

நூனெறிவகையினோக்கி நுண்ணிதினுழைந்துதீமைப்
பானெறிபலவுநீக்கிப்பரிதியங்கடவுளன்ன
கோனெறிதழுவிநின்றகுணத்தொடுபுணரின்மாதோ
நானெறிவகையினின்றநல்லுயிர்க்கமிர்தமென்றான்.

ஆகமங்கூறிய வழியினது கூறுபாட்டாலே நன்மைதீமையை ஆராய்ந்து. கூரியபொருளிடத்தே நெஞ்சுசென்று. தீமைப்பானெறி - துன்மார்க்கம். நிறத்தாலும் இருணீக்கத்தாலும் ஞாயிறுஉவமை. கோன் - அருகன். குணம்-இரத்தினத்திரயம்; அவையாவன: நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம். நானெறி - சதுர்கதி; அவையாவன: நரககதி, விலங்குகதி, மக்கட்கதி, தேவகதி. நல்லுயிர் - பவ்வியசீவன்.

---

* திருக்குறள், பிரிவாற்றாமை, ௪.

இ - ள். அவன் நோக்கி நுழைந்து நீக்கிப் புணரின் நல்லுயிர்க்கு ஆக்கமென்ருனென்க. (௩௪௫)

அறிவினாற்பெரியநீரா ரருவினைகழியநின்ற
நெறியினைக்குறுகியின்பநிறைகடலகத்துநின்ருர்
பொறியெனும்பெயரவைவாய்ப்பொங்கழலரவின்கண்ணே
வெறிபுலங்கன்றிநின்ருர்வேதனைக்கடலுணின்ருர்.

தீவினைகழியநின்றநெறி - சன்மார்க்கம். இன்பநிறைகடல் - அநந்தசுகம். நிறைக்கடல் பாடமாயின் இன்பப்பெருக்கினையுடைய கடலென்க. வேட்கையாகிய நஞ்சையுடைய உடம்பென்னும்பாம்பிடத்திற் பொறியென்னும் பெயரையுடையவாகிய ஐந்துவாயிடத்தே களிப்பைச்செய்கின்றவிடயங்களிலே அடிபட்டுநின்ருர்.

இ - ள். பெரியநீரார் குறுகி இன்பக்கடலகத்தேநின்ருர். கன்றிநின்ருர் துன்பக்கடலிலே நின்ருரென்க. (௩௪௬)

கூற்றுவன்கொடியனுகிக்கொலைத்தொழிற்கருவிசூழ்ந்து
மாற்றரும்வலையைவைத்தான்வைத்ததையறிந்துநாமு
நோற்றவன்வலையைநீங்கிநுகர்ச்சியிலுலகநோக்கி
யாற்றுறப்போதறேற்ருமளியமோபெரியமேகாண்.

கருவி - ஐயும் பித்தும் வளியுமாகிய வாகள். வலை - ஆயுக்கன்மம். இதற்கு முன்பனுபவியாதவுலகம் - வீடு. ஓ ஓ பெரியம் - இகழ்ச்சி.

இ - ள். கூற்றுவன் கொடியனுய்ச் சூழ்ந்த வலையைவீசிவைத்தான்; அதனை அறியத்தக்கநாமும் அறிந்து தவஞ்செய்து தப்பி உலகநோக்கி வழிப்படப்போதலைத் தெளிகிலேம்; பெரியேங்காணென்க. (௩௪௭)

பேரஞரிடும்பையெல்லாம்பிளந்திடும்பிறப்புநீக்கு
மாரமிர்தரிதிற்பெற்ருமதன்பயன்கோடறேற்ரு
மோருமைம்பொறியுமோம்பியுளபகல்கழிந்தபின்றைக்
கூரெரிகவரும்போழ்திற்கூடுமோகுறித்தவெல்லாம்.

இ - ள். இடும்பையெல்லாநீக்குதற்குக் காரணமான பிறப்பறுக்கு மக்கள்யாக்கையைத் தவப்பயனாற்பெற்ரும்; பெற்றுவைத்தும் அதன்பயனைக்கொள்ள அறிகின்றிலேம்; ஐம்பொறிகளையும் ஐம்புலன்களாலே பேணி உள்ளநாள்சென்ருல் எரிகவரும்பொழுது நினைத்த அறமெல்லாம் செய்யக்கூடுமோ ஓர்ந்துபாருமென்க ()

தழங்குரன்முரசிற்சாற்றித்தத்துவந்தழுவல்வேண்டிச்
செழுங்களியாளர்முன்னரிருளறச்செப்பினுலு
முழங்கழனரகின்மூழ்குமுயற்சியராகிநின்ற
கொழுங்களியுணர்வினைக்குணவதங்கொளுத்தலாமோ.

தழங்குகுரல்-விகாரம். செழுங்களி - தரிசனமோகனீயப்பிரகிருதி ஏழும். குணவதம் - விரதம்; இது பகுதிப்பொருள்விகுதி.

இ - ள். எல்லாரும் தத்துவந்தழுவல்வேண்டிக் களியாளர்முன்னே முரசிற்சாறறிச் செப்பினும் அது கொள்ளாதபடி நரகின்மூழ்கும் பாவத்தினை முன்னே உடையராகிநின்ற உணர்வினைக் குணங்கொளுத்தலாமோவென்க. (௩௪௯)

பவளவாய்ச்செறுவுதன்னுணித்திலம்பயிலவித்திக்
குழவிநாறெழுந்துகாளைக்கொழுங்கதிரீன்றுபின்னுட்
கிழவுதான்விளைக்கும்பைங்கூழ்கேட்டிரேம்பிணிசெய்பன்மா
உழவிர்காண்மேயுஞ்சீலவேலியுய்த்திடுமினென்றான்.

பவளவாய் - கருத்தங்கும்பை. நித்திலம்போலுஞ்சுக்கிலம்.

இ - ள். உழவிர்காள், கேட்பீராயிற் பவளவாயாகியசெய்யிலே நித்திலத்தை வித்துதலாலே முளைதோன்றிக் கதிரையீன்று பின்னே தான் மூப்பை விளைக்கும் பயிரை நோயைச்செய்யுந் தீவினைகளாகிய விலங்குகள் மேயும்; அவை மேயாதபடி சீலமாகியவேலியைக் கொண்டுசென்றிடுவீராகவென்றானென்க. (கூ௰)

சூழ்கதிர்மதியமன்னசுடர்மணிப்பூணினானும்
வீழ்தருகதியினீங்கிவிள்ளங்குபொன்னுலகத்துய்க்கு
மூழ்வினைதுரத்தலானுமுணர்வுசென்றெறித்தலானு
மாழ்கடற்புணையினன்னவறிவரன்சரணடைந்தான்.

சீவகனுக்கு மதியுவமை, கலைகணிறைதலால். உம்மை - சிறப்பும்மை. வீழ்தருகதி-நரகத்தேவிழுதற்குக் காரணமான தீவழி. பொன்னெயில்வட்டத்திற்செலுத்து மூழ்வினை - சாதுசரணுவதற்கு முன்செய்த நல்வினை. அத்தவத்தேபயின்றமையால் உணர்வு மீண்டும் அதன்மேற்சென்றுபரத்தலானும்.

இ - ள். அதுகேட்டுப் பூணினானும், ஊழ்வினைசெலுத்துதலானும் உணர்வெறித்தலானும் கதியினீங்கிப் பிறவிக்கடலை நீந்துதற்குத் தெப்பமன்ன அறிவனைச் சரணுக அடைந்தானென்க. (கூ௧)

காட்சிநன்னிலையின்ஞானக்கதிர்மணிக்கதவுசேர்த்திப்
பூட்சிசாலொழுக்கமென்னும்மயிரத்தாழ்கொளுவிப்பொல்லா
மாட்சியில்கதிகளெல்லாமடைத்தபின்வரம்பிலின்பத்
தாட்சியிலுலகமேறத்திறந்தனனலர்ந்ததாரான்.

நிலைபேறுடைமையின் நிலை. பொருள்களைக்காத்தற்குலாவுதலிற் கதவு. காட்சியையும்ஞானத்தையுமவிட்டுநீங்காமற் றகைத்தலிற் றாழ். மாட்சியில்லாத பொல்லாத கதி. கதி-பிறவி; கெடுதலில்லாத தீக்கதி; மாட்சிமையுமாம். ஆட்சியிலுலகம்-இதற்கு முன்பு ஆளாதவுலகம் - வீடு. அலர்ந்த - புகழாற்பரந்த.

இ - ள். தாரான், காட்சியாகியநிலையிலே ஞானமாகியகதவைச் சேர்த்தி ஒழுக்கமாகிய தாழைக்கொளுவிக் கதிகளெல்லாமடைத்தபின் வீட்டுலகத்தேசெல்ல வழி திறந்தானென்க. (கூ௨)

நல்லறத்திறைவனுகிநால்வகைச்சரணமெய்தித்
தொல்லறக்கிழமைபூண்டதொடுகழற்காலினாற்குப்
புல்லறநெறிக்கணின்றுபொருள்வயிற்பிழைத்தவாறு
மில்லறத்தியல்புமெல்லாமிருளறக்கூறியிட்டான்.

நால்வகைச்சரணம்: அருகசரணம், சித்தசரணம், சாதுசரணம், தன்மசரணம். தொல்லறம் - தன்குலத்திற்கெல்லாமுரியவறம். புல்லறநெறிக்கணின்றுபொருள் வயிற்பிழைத்தவாறும் - தீக்கதியினின்றோர்தாம்நடாத்துகின்ற புல்லிய இல்லறத்தி

னெறியிலே நிற்றலால் வீடுபேற்றிற் றப்பியவாறும். இல்லறத்தியல்பும் - வீடுபேறு தப்பாதபடி இல்லறம் நடாத்துமியல்பும். எல்லாம் - ஒழிந்தனவும்.

இ - ள். சரணமெய்திப் பூண்ட காலினனுக்கு உலகம்பிழைத்தபடியையும் நல்லோர்நடாத்துமறத்தியல்பையும் ஒழிந்தவற்றையும் மயக்கமறக்கூறினனென்க.

எரிமுயங்கிலங்குவைவேலிளையவர் குழாத்தினீங்கித்
திருமுயங்கலங்கன்மார்பிற்சீவகற்கொண்டுவேறு
விரிமலர்க்கண்ணிகட்டிவிழைதகவேய்ந்தபோலுந்
தெரிமலர்க்காவுசேர்ந்துபிறப்பினைத்தெருட்டலுற்றான்.

இளையவர் - தம்பிமாருந் தோழன்மாரும். கொண்டு - வேறாகக்கொண்டு.

இ - ள். ஆசிரியன், குழாத்தினின்றுந்தானீங்கி சீவகனைத் தனியேகொண்டு போய், கண்ணிகட்டி விதானித்தபோலுங்காவைச்சேர்ந்து, அவனுக்குப் பிறப்பினைத் தெளிவிக்கலுற்றானென்க. (௩௫௪)

பூவையுங்கிளியுமன்னரொற்றெனப்புணர்க்குஞ்சாதி
யாவையுமின்மையாராய்ந்தந்தளிர்ப்பிண்டிநீழற்
பூவியற்றவிசினுச்சிப்பொலிவினோடிருந்தபோழ்தி
னேவியல்சிலையினானையிப்பொருள்கேண்மோவென்றான்.

இ - ள். ஆசிரியன் பிண்டிநிழலிடத்திட்ட தவிசின்மேல் இருந்தவளவிலே பூவையுங்கிளியுமுதலாகக்கொண்டு வேறும் அரசர் ஒற்றாகவிடுஞ்சாதிகளெல்லாம்இல்லாதபடியை ஆராய்ந்து சிலையினானை இக்கதையைக்கேட்பாயாகவென்றானென்க. ()

வையகமுடையமன்னன்சச்சந்தனவற்குத்தேவி
பைவிரிபசும்பொனல்குற்பைந்தொடிவிசயையென்பாள்
செய்கழன்மன்னன்றேர்ந்துதேவியைப்பொறியிற்போக்கி
மையல்கொணெஞ்சிற்கல்லாமந்திரிவிழுங்கப்பட்டான்.

பொன் - மேகலை. தேர்ந்து-கனவிற்குப்பின்பு இவளைப்போகவிடுமாறுதேர்ந்து. மையல் - தன்னை ஆக்கினவனைக்கொல்லுதல்.

இ - ள். இவ்வையகமுடைய அரசன் சச்சந்தன்; அவனுக்குத்தேவி விசயை; அவன் தேர்ந்து அவளைப்போக்கி மந்திரியாலே கொல்லப்பட்டானென்க. (௩௫௬)

புலம்பொடுதேவிபோகிப்புகற்கருங்காடுநண்ணி
வலம்புரியுலகம்விற்குமாமணியீன்றவண்ணா
மிலங்கிழைசிறுவன்றன்னைப்பயந்துபூந்தவிசினுச்சி
நலம்புரிநங்கைவைத்துநல்லறங்காக்கவென்றாள்.

வலம்புரியுவமைகூறவேதேவிமறைந்தமையுமுணர்த்தினார். இலங்கிழை-தேவி; இது சுட்டு. நலம்புரிநங்கை - அறத்தைவிரும்பிய கூனியாகியதெய்வம். வைத்து - வைக்க. அறம் - நோன்பு.

இ - ள். தேவி, போய் நண்ணி, வலம்புரி மணியையீன்றாற்போலச் சிறுவனைப் பயக்கையினாலே, அவனைத்தெய்வம்தவிசின்மேலேவைக்க, அத்தேவி யான்மேற் செய்கின்ற அறம் நின்னைக்காக்கவென்றுட்கொண்டாளென்க.

இத்தெய்வம் நம்பியைப்பள்ளிசேர்த்தினபொழுதே தேவிகருதியதனை ஆசிரிய னுணர்ந்து ஈண்டுக்கூறினன். எனவே தேவி நோன்பிலேயிருந்தமை சீவகனு ணர்ந்து அது கருமமென்றுட்கொண்டான். பின்பு *"அடிகளுமுளரோ" என்றது இதற்குப்பின்பு தீங்கின்றியிருந்தமைகருதி. (கூருஎ)

வானத்தின்வழுக்கித்திங்கட்கொழுந்துமீன்குழாங்கள்சூழக்
கானத்திற்கிடந்ததேபோற்கடலகமுடையநம்பி
தானத்துமணியுந்தானுமிரட்டுறத்தோன்றினனே
யூனத்திற்றீர்ந்தசீர்த்தியுத்தரட்டாதியானே.

கொழுந்தென்றார், நாடோறும்வளர்தலின். தானத்துமணி - சுடுகாட்டுமணி. ஊனம் - நாளுக்குள்ளதீங்கு.

இ - ள். நம்பி, உத்தரட்டாதிநாட்பிறந்தவன், பிறைமீன்சூழக்கிடந்ததுபோலே மணியுந் தானு மாறுபடத்தோன்றினனென்க. (கூருஅ)

க. அருந்தவன்முழுந்துகூறவலங்கல்வேனுய்கன்சென்று
பொருந்துபுசிறுவனைக்கொண்டுபொலிவொடுசென்றுபோகத்
திருந்தியநம்பியாரத்தும்மினன்றெய்வம்வாழ்த்திற் [டாள்.
றரும்பொனுய்கொள்ளமோவென்றுனலைகடல்விருப்பிற் கொண்

உ. கரியவல்கன்னற்கன்றுபிறப்பினைத்தேற்றியாங்கப்
பெரியவன்யாவனென்னநீயெனப்பேசலோடுஞ்
சொரிமலர்த்தாரும்பூணுமாரமுங்குழையுஞ்சோரத்
திருமலர்க்கண்ணிசிந்தத்தெருமந்துமயர்கிவீழ்ந்தான்.

இவையிரண்டுமொருதொடர்

முனிவன் நிகழும்பொருளெல்லாம் கந்துகற்குக்கூறலின் அது தப்பாதென்று கருதி. கொண்டு - கொள்ள. திருந்திய - நவந்திருந்திய. பொன்னுய் - திருவையுடையாய். கரியவன் - கண்ணன். பெரியவன் - அறிவுபெரியவன். பேசலோடும் - உடனிகழ்ச்சி. தேன்சொரிமலர்

இ - ள். நாய்கன் அவ்வொளியோடியவழியேசென்று பொருந்தாநின்று சிறுவனையெடுக்க; அந்தநம்பி, நன்னிமித்தம்பெற்றேமென்று நாய்கன்மகிழ்ந்துபோம்படி நிறையத்தும்மினன்; அப்பொழுது தெய்வம்வாழ்த்திற்று; அம்மகிழ்ச்சியுடனேபோய் அரும்பொன்னுய், கொள்ளென்றான்; அவளுங்கொண்டாளென்று, ஓர் கதைமுகத் தாலே, கரியவன் கன்னனுக்குப் பிறப்புணர்த்தியாங்கு உணர்த்தினனை; அதுகேட்ட சீவகன் நீகூறியவன்யாரென்றுகேட்ப, நீயெனக்கூறினனாக, தார்முதலியனசோரச் சிந்தக் கலங்கி மூர்ச்சித்துவீழ்ந்தானென்க.

என்றெனவும் உணர்த்தவெனவும் வருவிக்க. அன்புமிகுதியான் மூர்ச்சைமுந் திற்று. (கூசுO)

கற்பகங்கலங்கிவீழ்ந்தவண்ணம்போற்காளைவீழச்
சொற்பகர்புலவன்வல்லேதோன்றலைச்சார்ந்துபுல்லி

* கனகமாலையாரிலம்பகம், கூஉசு.

நற்பலகுழீஇயதம்மானவையறத்தேற்றத்தேறிக்
கற்புனைதிணிதிண்டோளான்கவலைநீர்க்கடலுட்பட்டான்.

இ - ள். காளை, கற்பகமநிலைகுலைந்துவிழுந்ததன்மைபோலவிழுதலாலே சொல் லைவிரகாற்கூறிய ஆசிரியன், அத்தோன்றலை வினையச்சேர்ந்து தழுவிச் சந்தனுதிக் கூட்டாறசெய்த குழம்பாற்றேற்ற, அத்தோளான்தெளிந்து கையாற்றைவிட்டுச் சோகக்கடலிலே விழுந்தானென்க. (௩௬௪)

இனையைநீயாயதெல்லாமெம்மனோர்செய்தபாவ
நினையனிநம்பியென்றுநெடுங்கணீர்துடைத்துநீவிப்
புனையிழைமகளிர்போலப்புலம்பனின்பகைவனின்று
னினைவெலாநீங்குகென்னநெடுந்தகைதேறினனே.

புலம்பல் - அழுதல்; தொழிற்பெயர்.

இ - ள். நம்பி, நீ இனையையாயதெல்லாம் எம்போல்வார்செய்தபாவம்; இனி நின்பகைவன் நின்றுனுதலின், மகளிர்போலப் புலம்பலை நீ நினையலென்று கண் ணீர்துடைத்துப் பின்பு உடம்பினைத்தடவி நினைவுநீங்குகவென்ன, அவன் தெளி ந்தானென்க.

நீர்துடைத்தென்றது அரற்று. நினைவெலாமென்றது அவலம். அவலமுதலிய நான்குங்கூறினர். எம்மனோர்செய்தபாவம் நீங்குகைகாரணமாகவென்றுமாம். ()

மலைப்பகவிடிக்குஞ்சிங்கமடங்கலின்முழங்கிமாநீ
ரலைகடற்றிரையிற்சீறியவனுயிர்பருகலுற்றுச்
சிலையொடுபகழியேந்திக்கூற்றெனச்சிவந்துதோன்று
மிலையுடைக்கண்ணியானையிம்மனம்விலக்கினனே.

இ - ள். அவனுயிரைப்பருகலுற்றுத் திரையின்முழங்கிச் சிங்கக்குட்டிபோலச் சீறி வில்லோடும்பகழியேந்திக் கூற்றெனத்தோன்றுங்கண்ணியானை விலக்கினனெ ன்க.

தந்தையைக்கொன்றவனைக் கொல்லாமைவிலக்கலருமையின், மேற்கூறுகின்ற கூற்றான் விலக்கினமைதோன்ற இன்னணமென்றார். (௩௬௬)

வேண்டுவனம்பியானோர்விழுப்பொருளொன்றுசொல்ல
வாண்டகைக்குரவிர்கொண்மின்யாதுநீர்கருதிற்றென்ன
யாண்டுநேரெல்லையாகவவன்றிறத்தழற்சியின்மை
வேண்டுவலென்றுசொன்னான்வில்வலானதனைநேர்ந்தான்.

வேண்டுவல் - அல்லீற்றுத் தன்மைச்சொல்; சந்தியால் னகரம்வந்தது. இர் ஈறு "கேளிர்வாழியோ" எனநின்றாற்போல இயல்பாய்நின்றது. ஆண்டகைமைகூ றிற்று: கொலையை விலக்குவரோவென்று அஞ்சிக்கற்பித்தமுகத்தான் அரசனென்று ணர்ந்தான். திறம் - குலம். வல்லான்-செய்யுளாய் மறையாகாது வழக்காயுடன்பா டுணர்த்திற்று. இது மேலுங்கொள்க.

இ - ள். நம்பி, யான் ஓரிடும்பையையுடையதோர்காரியத்தை வேண்டுவலென் றுகூற, குரவிர், நீர்கருதிற்று யாது? அதனைக்கொண்மினென்ன, அவன்குலத்தளவில்

ஓர்யாண்டிறுதியளவாக அழற்சியின்மை வேண்டுவலென்று விலக்கிச்சொன்னன்; வில்வல்லானும் நேர்வரியதனை நேர்ந்தானென்க.

கூறவும் பாடம். (ளகசு)

வெவ்வினைவெகுண்டுசாராவிழுநிதியமிர்தமின்னீர
கவ்வியவெஃகினின்றகயக்கமினிலைமைநோக்கி
யவ்வியமகன்றுபொங்குமழல்படுவெகுளிநீக்கி
யிவ்வியலொருவற்குற்றதிற்றெனக்கிளக்கலுற்றான்.

வினையைத் தான் வெகுளுதலாலே, அது சாரப்படாத அமிர்து - இரத்தினத்திரயம். கயக்கம்-கலக்கம். ஔவியமகன்று - மனக்கோட்டமின்றி. இவ்வியலொருவனென்று தன்னைப் பிறன்போற்கூறினான், தன்மேலன்பால்வருந்துவனென்று.

இ - ள். ஆசிரியன், சீவகனுக்கெழுந்த வெய்தானகோபத்தைப்போக்கி, அவனுக்கு அமிர்தம் இரும்புண்டநீர்போலநின்ற நிலையைநோக்கி, ஒருவற்கு வந்ததுன்பத்தை இற்றெனச்செப்பாநின்றானென்க.

தான்மெய்யுணர்தலின் என்னைவிலக்கானென்று இக்கதைகூறுகின்றான். ()

க. வானுறைவெள்ளிவெற்பின்வாரணவாசிமன்ன
னூனுறைபரிதிவெள்வேலுலோகமாபாலனென்பான்
றேனுறைதிருந்துகண்ணிச்சிறுவனுக்கரசுநாட்டிப்
பானிறக்குருகிணையந்துபண்ணவர்படிவங்கொண்டான். (ளகரு)

உ. வெஞ்சினங்குறைந்துநீங்கவிழுத்தவந்தொடங்கிநோற்கும்
வஞ்சமில்கொள்கையாற்குப்பாவம்வந்தடைந்ததாகக்
குஞ்சரமுழுங்குதீயிற்கொள்ளையின்மெலிந்திம்மூதா
மஞ்சுதோய்குன்றமன்னமாடவீட்டகம்புகுந்தான்

இவையிரண்டுமொருதொடர்.

வெள்ளிமலையில் வாரணவாசியென்னுமூரின் மன்னன். பரிதிபோற்பகையாகிய இருளைக்கெடுக்கும்வேல் மா - வியங்கோளசையன்றி இசைநிறைத்து நின்றது, புறனடையால்வந்தது; "ஒக்கல்வாழ்க்கைதட்குமாகாலே" என்றாற்போல. அன்னம்போல் நல்லனகொண்டு. கொள்கை - விரதம்.

இ - ள். மன்னனாகிய உலோகபாலனென்பான், புதல்வனுக்கு அரசைநிறுத்தி ஆய்ந்து தவவேடங்கொண்டான்; கொண்டு தவத்தைத்தொடங்கிச் சினம்போகநோற்குங்கொள்கையாற்குப் பாவம்வந்துசேர்ந்ததாக; யானைத்தீயாலே உணவிடத்தேவருந்தி இவ்வூரின் மாடத்திரளிடத்தேபுகுந்தானென்க. (ளகஎ)

உரைவிளையாமைமைந்தல்கேட்கியவுவந்துநோக்கி
வரைவிளையாடுமார்பன்யாரவன்வாழியென்ன
விரைவிளையாடுந்தாரோயானெனவிரும்பித்தீம்பாற்
றிரைவிளையமிர்தமன்னகட்டுரைசெல்கவென்றான்.

வரைதனக்கு நிகராகக்கருதி விளையாடும். விரைவிளையாடும - விரையுலாவும்.

இ - ள். மைந்தன், கதை முடிவதற்குமுன்னே கேட்டற்கு மகிழ்ந்துநோக்கி, நீ கூறியமார்பன்யார்? அவன்றான் வாழ்வானாகவெனக்கூற, அதுகேட்டுத் தாரோய், அவன்யாரென்று ஆசிரியன்கூற, மேற்கேட்பதாகவிரும்பி, அமுதன்னபுனைந்துரை முடிவுபோகநடப்பதாகவென்றானென்க. ()

பூத்தின்றுபுகன்றுசேதாப்புணர்முலைபொழிந்ததீம்பா
னீத்தறச்செல்லவேவித்தட்டவின்னமிர்தமுண்பான்
பாத்தரும்பசும்பொற்றாலம்பரப்பியபைம்பொற்பூமி
யேத்தருந்தவிசினம்பிதோழரொடேறினானே.

சேதா - பண்புத்தொகை. பால்பெருக்கறுதலாலே அந்நிலையறிந்து அதிலிட்ட அரிசியைப் பால்செல்லவேவப்பண்ணிச் சமைத்த பாலடிசில். ஒடினபொன்.

இ - ள். கந்துகன், அமுதமுண்ணவேண்டித் தாலம்பரப்பியபூமியிலே தவிசின் மேலே தோழரோடேறினானென்க. (கசுக)

புடையிருகுழையுமின்னப்பூந்துகில்செறிந்தவல்கு
னடையறிமகளிரேந்தநல்லமிர்துண்ணும்போழ்து
ளிடைகழிநின்றவென்னைநோக்கிப்போந்தேறுகென்றான்
கடல்கெழுபரிதியன்னபொற்கலமெனக்குமிட்டார்.

நடை - சோறிடுமுறைமை.

இ - ள். மகளிர், இருகுழையுமின்னநிற்க அமுதமேந்த, தான் அதனையுண்ணுங்காலத்தே என்னைப்பார்த்து இங்ஙனேபோந்தேறுவீராகவென்றான்; யானேறின வளவிலே, பொற்கலத்தே எனக்குமமுதமிட்டாரென்க. (கஎ0)

கைகவிநறுநெய்பெய்துகன்னலங்குடங்கள்கொட்டிப்
பெய்பெயென்றுரைப்பயானும்பெருங்கடல்வெள்ளிக்குன்றம்
பெய்துதூர்க்கின்றவண்ணம்விலாப்புடைபெரிதும்வீங்க
வையனதருளினால்யானந்தணர்தொழிலேனானேன்.

வினையின்கண் இருகாலடுக்குதல் இக்காலவழக்கு.

இ - ள். இவற்குக் கை கவித்தற்குக் காரணமான நெய்யைப்பெய்து குடங்களையுமொன்றோடொன்றுசேர்த்திப் பெய்பெய்யென்று கந்துகன்கூற, அவர்சொரிதலின், யானும் வெள்ளிமலையைப்போகட்டுக் கடலைத்தூர்க்கின்றவண்ணம் விலாப்புடை வீங்கத்தூர்த்து உன்னருளாலே அறவோர்தொழிலனானேனென்க.

திருத்தியை யடைந்தேனென்றான். (கஎக)

சுரும்புடையலங்கன்மாலைச்சுநந்தையுநதுணைவன்றானும்
விரும்பினரெதிர்கொண்டோம்பவேழவெந்தீயினீங்கி
யிருந்தனனேமமுந்நீரெறிசுறவுயர்த்ததோன்றற்
கரும்புடைக்காளையன்னாளைநின்வலைப்பட்டென்றான்.

அலங்கன்மாலை - அசையுமாலை. சுறவுயர்த்த - சுறவைமேம்படுத்தின.

இ - ள். தலைமையையுடைய காமனையொத்தகாளாய், நின்வலைப்படுதலாலே, சுநந்தையுந் துணைவனும் விரும்பினராய் வழிபட்டுப்பேண, யானைத்தீயினின்றுநீங்கி யிருந்தேனென்றானென்க.

பின்னர்ப் பசிதோன்றுதிருத்தலின் நீங்கியென்றான். இவன் நோய்தீர்த்தநிலை யை வலையென்றான். இதுவிளக்கிப்போகக் கருதலிற் பட்டென்றான். (௧௭௨)

நிலம்பொறுக்கலாதசெம்பொனீணிதிநுந்தையில்ல
நலம்பொறுக்கலாதபிண்டிநான்முகன்றமர்கட்கெல்லா
முலம்பொறுக்கலாததோளையாதலானுடுபுக்கேன்
கலம்பொறுக்கலாதசாயலவருளுழை நின்னைக்கண்டேன்.

நிதி - திரள். தன் நலம் தான்பொறுக்கமாட்டாத. எல்லாமூர்த்தமும் இவனு தலின் நான்முகனென்றார். * "ஆதிவேதம் பயந்தோய்நீ" † "மலரேந்து சேவடிய மாலென்ப" என்பமேலும்.

இ - ள். தோளாய், நிதியையுடைய நுந்தையில்லம் தமராயின துறந்தவர்க்கெ ல்லா மில்லமாதலான் உள்ளேசென்றேன்; மகளிரிடத்தே நின்னைக் கண்டேனென் றானென்க. (௧௭௩)

ஐயனைக்கண்ணாற்காணவானைத்தீயதாங்கண்ட
பையணுகப்போலவட்கயான்பெரிதுழக்கித
தெய்வமொன்றிலென்றுதேர்வேற்பமிர்துலாயதிமிர்ந்ததேபோய்
மெய்குரன்முரசநாணும்நயங்குரன்முழங்கக்கேட்டேன்.

நாகம் - ஆகுபெயர்.

இ-ள். நின்னைக் கண்டுகண்டேனை; யானைத்தீ, மருந்துகண்டநஞ்சுபோலக் கெடுதலாலே, யான் அருந்தின தெய்வமோவென்றாய்வேற்கு அமிர்தமிமிர்ந்ததே போலுமாம்படமுரசாநாளும் வார்த்தை அறிவிடத்தேமுழங்க, அதனைக் கேட்டே னென்றானென்க.

ஐயனிகளென்பது பாடம். நீயன்றி நம்பின்ற மனையாதலின், இவனைக் காண்ப தற்குமுன்பே குறைந்து இளமையுடைமையின்பொன்றக்கெட்டது. (௧௭௪)

கோட்டுவாங்கிரான் சூழ்ந்துகுலவியதிருவிற்போல
மேட்டொளிரத்தஞ்சூழ்ந்துமுருகுகொப்புளிக்குந்தாரோய்
கேட்டளப்பரியசொல்லுங்கிளரொளிவனப்புநின்னைச்
சேட்டிளஞ்சிங்கமன்னாய்சாற்றுஞ்செய்தவென்றான்.

திங்களை வளைத்திட்ட விற்போல மலைச்சூழ்ந்து தேன்கொப்புளிக்குந்தார். சேடு - பெருமை.

இ - ள். தாரோய், சிங்கமன்னாய், அவனைக்கேட்டளவிடுதற்கரிய வார்த் தையும் வனப்பும நின்னைப் பிறப்பை அறிவித்தனவென்றானென்க. (௧௭௫)

கோளியங்குழுவையன்னகொடுஞ்சிலையுழவன்கேட்டே
தாளியறவங்கடாயாத்தந்தைநீயாகியென்னை
வாளியங்குருவப்பூணோய்படைத்தனைவாழியென்ன
மீளியங்களிறனையான்மெய்ந்நெறிசிறப்பலென்றான்.

கோளியங்கு - கொலைத்தொழிலிலே நடக்கின்ற.

---

* பதுமையாரிலம்பகம், ௭௭. † கனகமாலையாரிலம்பகம், ௫௪.

## இரண்டாவது

# கோவிந்தையாரிலம்பகம்.

ஆரவமேவரிந்தச்சணந்திபோய்
வீரன்றாளிழல்விளங்கநோற்றபின்
மாரிமொக்குளின்மாய்ந்துவிண்டொழச்
சோரவில்கொள்கையான்றோற்றநீங்கினன்.

ஆரவமேவா - ஆசையென்கிறபிறவிமேவா. அச்சணந்தி - ஆரியநந்தி. வீரன்றாள் நிழல் - ஸ்ரீவர்த்தமானஸ்வாமிகள் ஸமவஸரணத்தே. மொக்குளின்மாய்தல் - வீடு பெறுங்கால் திருமேனியுடனே அதிருசியமாகை.

இ - ள். அச்சணந்தி, இவ்விடத்துநின்றும்போய், தாணிழலிலேவிளங்கும்படி வேரறுத்துநோற்றபின்பு, அக்கொள்கையான், விண்டொழ மொக்குளின்மாய்ந்து, பிறவிநீங்கினானென்க. (க)

நம்பனிந்நிலைநாகநன்னகர்ப்
பைம்பொனோடைசூழ்பருமயானையுஞ்
செம்பொனீள்கொடித்தேரும்வாசியும்
வெம்பவூர்ந்துலாம்வேனிலானினே.

இ - ள். நம்பன், இவ்வுலகில் நாகம்போலும்ராசமாபுரத்தே யானைமுதலிய வற்றைக் கண்டார்வரும்படியேறி, வேனிலான்போல மகளிர்க்கு வேட்கைவிளைத்து நடக்குமென்க. (உ)

வேறு.

கலையினதகலமுங்காட்சிக்கின்பமுஞ்
சிலையினதகலமும்வீணைச்செல்வமு
மலையினினகலியமார்பனல்லதிவ்
வுலகினில்லையெனவொருவனாயினான்.

இதனால் சீவகற்குப் பதினையாண்டுசென்றபின் நல்வினையாற்பிறக்கின்ற குணங்கள் கூறுகின்றார். கலையினதகலம் - கல்விகாரணமாகப் பிறப்பதொரு ஞானம். காட்சிக்கின்பம் - அப்பருவத்திலே பிறப்பதோர் அழகு. சிலையினதகலம் - படைக்கலம் பயின்றவாற்றால் அப்பருவத்துப்பிறக்கும் வீரம். வீணை-தாளத்தோடே கண்டத்திலுங்கருவியிலும்பிறக்கும் பாட்டு; இசைநாடகம் காமத்தைவிளைத்தலின், அவற்றாற் பிறக்குங்காமத்தை வீணைசெல்வமென்றார்.

இ - ள். ஞானமும் அழகும் வீரமும் காமமுமாகின்றான் சீவகன்; இவனல்லாது இவ்வுலகில் ஞானமுதலியன இல்லையென்னும்படி தானொருவனேயாயினானென்க.

அரசிற்குச்சிறந்தனஇந்நான்கென்றார். இனிக் கலையினதகலம்-நாமகள்; காட்

சிக்கின்பம்-வீற்றுத்தெய்வம்; சிலையினதகலம் - வீரமகள்; வீணைச்செல்வம் - மாதங்கி. இவாகள் தாம் இவனல்லது வேறியாங்களென்றில்லையென்னும்படியாயிருனென்றுமாம். (௩)

# வே று.

நாமவென்றிவேனகைகொண்மார்பனைக்
காமனேயெனக்கன்னிமங்கையர்
தாமரைக்கணாற்பருகத்தாழ்ந்துலாங்
கோமகன்றிறத்தொன்றுகூறுவாம்.

நகை - முத்துவடம்.

இ - ள் அங்ஙனமொருவனுரியமார்பனை மங்கையர் காமனேயென்று தாழ்ந்து கண்ணாற் பருகும்படி நடக்குமிவனிடத்துப் பிறந்த காரியங்களைக் கூறுவாமென்றாரென்க. (௪)

செல்வம்போகி நின்மேற்றிரைந்துதேனுலா
முல்லைகாரெனப்பூப்பமொய்ந்நிரை
புல்லுகன்றுளிப்பொழிந்துபால்படுங்
கல்லென்சும்மையோர்கடலின்மிக்கதே.

பின்பனிக்கு அழிகின்றமையிற் சிலவான அழகியபோதின்மேலே தேனினம் சாய்ந்துலாவுமுல்லையென்று அடைகூறியது இப்பொழுது காரெனப் பூக்கும்படியாகவென்க. பால்படுஞ்சும்மை - பசுக்கறக்கிறவொலி.

இ - ள். நிரை தான் புல்லுங்கன்றை நினைத்த, முல்லை காரெனப்பூத்த காலே பாலைப்பொழிதலாற் படுமொலி ஒருகடலினுமிக்கதென்க. (௫)

மிக்கநாளினுள்வேய்முழங்கத்
முக்கதேனினோடேற்பொருகினை
யொக்கவாய்நிறைந்தொழுகுன்றின்மேன்
மக்களீண்டினார்மடங்கான்மொய்ம்பினார்.

உக்கதேனுடனே மும்மதமூறுதலாலே களிறெல்லாந் தம்மில் நிறைந்தொழுகுங்குன்று.

இ - ள். இங்ஙனமொலிமிக்கநாளிலே குன்றின்மேல மொய்ம்பினராகிய வேடரெல்லாரும்வந்து தங்களிலே திரண்டாரென்க. (௬)

மன்னவன்னிரைவந்துகண்ணுறு
மின்னநாளினுட்கோடுமெனச்
சொன்னவாயுளேயொருவன்புட்குரான்
முன்னங்கூறினன்முழுதுணர்விஞன்.

இன்னநாள் - இளவேனிற்குரியநாள்.

இ - ள். அங்ஙனமீண்டினவாகள், இத்தன்மைத்தாகிய நாளிலே நிரைவந்து சேரும்; அதனை நாம் கொள்ளுதுமெனக்கூறிய அப்பொழுதே, புட்கூறிய குரலின் குறிப்பை, நிமித்தமெல்லாவற்றினும் அறிவுடையானொருவன் கூறினனென்க.

அது மேற்கூறுகின்றார். (௭)

க. அடைதுநாநிரையடைந்தகாலையே
குடையும்பிச்சமுமொழியக்கோன்படை
யுடையும்பின்னரேயொருவன்றேரினா
லுடைதுஞ்சுடுவிற்றேனுடைந்தவொப்பவே. (அ)

உ. என்றுகூறலுமேழை வேட்டுவீ
ரொன்றுதேரினலொருவன்கூற்றமே
யென்றுகூறினுமொருவனென்செயு
மின்றுகோடுநாமெழுகென்றேகினர்.

இவையிரண்டுமொருதொடர்.

பிச்சம் - பீலியாற்கட்டுவன. சுடுவில் - சுடுவால்; சுடுதலென வினைமேனின்ற வினைப்பெயரன்றி வினைமாத்திரையுணர்த்திநின்றுருபேற்றது. தேனினம்போலக் கெடுதுமெனவே தமக்குப் பாடின்மைகூறினன்.

இ - ள். நாம் நிரையையடிப்போம், அடித்த பொழுதே அரசன்படைவந்து பொருது குடையும் பிச்சமும் அவ்விடத்தேகிடக்கத் தான்கெடும்; அதுகேட்டபின்பு சுடுதலாற் றேனினங்கெட்டாற்போல ஒருவன்றேராற் கெடுவேமென்று நிமித்திகன் கூறினன்; அவன்கூறினவளவிலே அவனை வேட்டுவீரெனஇகழ்ந்து, ஒருவன்கூற்ற மேயென்று உலகங்கூறினும், அவ்வொருவன் ஒருதேரால் ஒன்றுஞ்செய்யாமாட்டா னாகலின், இன்றுகொள்ளக்கடவேம், எழுந்திருப்பீராகவென்றுகூறி நிரைநிற்கிற இடநோக்கிப் போனாரென்க (க)

வண்டுமூசருமுவையமார்ந்தவர்
தொண்டகப்பறைதுடியொடார்த்தெழு
விண்டுதெய்வதம்வணங்கிவெல்கென
மண்டினார்நிரைமணந்தகாலையே.

மூசரு - விகாரம். தொண்டகப்பறை - ஆகோட்பறை. விண்டு - அரசனுடன் பகைத்து.

இ - ள். அங்ஙனமேகினவர், உறவையார்ந்து, பறை துடியோடார்த்தெழ முரு கவேளைவணங்கி, விண்டு, நிரைவந்துகூடினவளவிலே வெல்கவெனக்கூறி, மிக்குச் சென்றாரென்க (கo)

க. புத்தகோட்டுப்போழ்பொன்குடந்துளா
ராய்த்தியர்நலக்காசெறூணனன்
கோத்தநித்திலக்கோதைமார்பினன்
வாய்த்தவந்நிரைவள்ளுவன்சொனான்.

உ. பிள்ளையும்புருந்தழித்ததாதலா
லெள்ளன்மின்னிரையின்றுநீரெனா
வெள்ளிவள்ளியின்விளங்குதோளலா
முள்குமாயரும்மொய்ம்பொடேகினார்.

இவையிரண்டுமொருதொடர்.

சுமந்திருப்பாராகிய ஆய்த்தியா. கோதை - பூமாலை. நித்திலத்தையுடையமார் பினுன் - நந்தகோன். வாய்த்த - தப்பாத. வெள்ளியாற்செய்த வளையிளையுடைய தோள்.

இ - ள். ஆய்த்தியா நலஞ்சேர்தற்கு ஆதிண்டுகுற்றியை யொப்பாளுகிய நந்த கோனுடைய அந்நிரையிலே வாய்த்தநிமித்திகன், நிரைக்குள்ளேபுகுந்து காரிஅழித் ததாகலால் இன்று நீர் நிரையைக் காவலிகழாதொழிமினெனச் சொன்னுன்; அது கேட்டுப் புதுமணவாளப்பிள்ளைகளும் மொய்ம்புடனே காத்தற்கேகினுரென்க. ()

காயமீனெனக்கலந்துகானிரை
மேயவெங்தொழில்வேடரார்த்துடன்
பாயுமாரிபோற்பகழிசிந்தினு
ராயர்மத்தெறிதயிரிறையினா.

இ - ள். ஆகாயமுமீனுமென்னும்படி காட்டிலே கலந்து நிரைமேய்கிற அள விலே வேடரார்த்துப் பரந்தமழைபோலப் பகழியை உடனேசிந்தினுராக, போரிற் காற்றாய் ஆயர் மத்தாற்கடைந்த தயிர்போலச் சிதறினுரென்க. (கஉ)

க. குழலுநவியமுமொழியக்கோவலர்
கழலக்காடுபோய்க்கன்றுதாம்பழிர
துழலைபாய்ந்துலாமுன்றிற்பள்ளியுள்
மழலைத்தீஞ்சொலார்மறுகவாய்விட்டார். (கங)

உ. மத்தம்புல்லியகயிற்றின்மாறுவ
ரத்தலைவிடினித்தலைவிடா
ருய்த்தனரெனவுடைதயிர்ப்புளி
மொய்த்ததோளலார்முழுதுமீண்டினா.

இவையிரண்டுமொருதொடர்.

மற்று - அசை.

இ - ள். அங்ஙனஞ்சிதறினகோவலர், குழலுங்கோடாலியுமங்கேகிடக்கக்காட் டைக்கழலப்போய், இடைச்சேரியில் மகளிர்கின்று சுழலும்படி, அவ்வேடர் கயிறு போல அத்தலையை நெகிழவிட்டாராயின் இத்தலையை நெகிழவிட்டாராதலால், இனி அந்நிரையைக் கொண்டேபோயினுரென வாய்விட்டார், அதுகேட்டுத் தோள்முழு துந் தயிர்ப்புள்ளிசெறிந்தநல்லார் திரண்டாரென்க.

உய்த்தனரென்றிறந்தகாலத்தாற்கூறினுர், தெளிவுபற்றி. (கரு)

## வேறு.

வலைப்படுமானெனமஞ்ஞையெனத்தம்
முலைப்படுமுந்தொடுமொய்குழல்வேய்ந்த
தலைப்படுதண்மலர்மாலைபிணங்க
வலைத்தவயிற்றினராயழுதிட்டார்.

இ - ள். அவர், முத்தோடே குழலிலேவேய்ந்த தலையானமாலைபிணங்கும்படி மயிர்குலைய அலைத்தவயிற்றினராய், வலைப்படுமானென வலைப்படுமயிலெனவருந்தி னுரென்க. (கசு)

எம்மனைமாரினியெம.
நம்மனைமார்களோநோ ாத்தவேழும்
வெம்முனைவேட்டுவ்ருய்முயிர்ப்புரவிகாலாள்
தம்மனைக்கன்றொடுதாம்புலைந்ததேபோல்

இ - ள். அவர், பின்பும் வேட்டுவர் நம்முடையதாமே.
தும் கொண்டுபோயினர்; இனி எமமுடையதாய்மார, எ போருண்டாதற்குக்
வெனக்கூப்பிட்டுக் கன்றோடுபுலம்புதலுற்றாரென்க. 'சையும் முழக்கமு
உயர்வின்கண் அஃறிணையை உயர்திணையாகககூறினர். 'து கடல்; அதில்

ந. பாறைபடுதயிர்பாலொடுநெய்பொரு 'ப வானு
தாறுபடப்பள்ளியாருமாக
மாறுபடமலைந்தாப்படைகெக்ரது ரு)
சேறுபடுமலர்சிந்தவிரைந்தே. (நஅ)

உ. புறவணிபூவிரிபுன்புலம்போகி
நறவணிதாமரைநாட்டகநீந்திச்
சுறவணி சூழ்கிடங்காரெயின்மூது
நிறையணிகோட்சவுத்திட்டனாபூசல்.

ஆய் - வேபோலச் சாதியையுணர்த்திற்று. சேறு - மது. புரவு - முல்லைநிலம்.

இ - ள். கற்போற்றோய்ந்த தயிரும் பாலும் நெய்யுடனேகலந்து ஆறுண்டாம் படி பள்ளியிலே வருத்தநிகழாநிற்க, கெடாதுநின்றஆப்படை மாறுபாடுண்டாகப் பொருது கெட்டது; கெட்டபின்பு, அவர், மலர்சிந்தும்படி விரைந்து புன்புலத்தைப் போய் நாட்டகத்தைநீந்தி மூதூரில் இறையணித்தாகக்கேட்கும்படி நிரையையடித்த பூசலைக் கொண்டுபோய்ப்போகட்டாரென்க.

இட்டனரென்றார், இப்பழியை அரசன்றலையிலே போகடுதலால்; ஒருசொல் ஒமாம். இதனுல் வாயிலோனுச்சிசைத்தமை கூறினர். மூதூரெனவே இது கேட்டறியாதென்பதுகருத்து. (சக)

வேறு.

கொடுமரவெயினரீண்டிக்கோட்டிமிலேறுசூழ்ந்த
படுமணிநிரையைவாரிப்பைந்துகிலருவிநெற்றி
நெடுமலையத்தஞ்சென்றாரென்றுநெய்பொதிந்தபித்தை
வடிமலராயர்பூசல்வளநகர்பரப்பினரே.

துகில்போலருவி. நெய்யைவார்த்த மயிரிலே மலரையுடைய ஆயர்.

இ - ள். மறவர் திரண்டு நிரையைச் சேரக்கைக்கொண்டு மலையில் அருஞ்சுரத்தைப்போயினரென்று பூசலை நகரிலேபரப்பினரென்க.

"பல்லாக் கொண்டாரோல்லா ரென்னும் - பூசல் கேட்டுக் கையது மாற்றி" என்றும் "நிரைகோட் கேட்டுச் செய்தொழிலொழிய" என்றுந் துறைகூறுதலின், இவருங் கேட்டோரெல்லாஞ் சென்றுமீட்பரெனக்கருதி நகரிச்குணர்த்தினர். (உ0)

வேறு.

கார்விளைமேகமன்னகவுளழிகடாத்தவேழம்
போர்விளையிவுளித்திண்டேர்புனைமயிர்ப்புரவிகாலாள்
வார்விளைமுரசம்விம்மவானுலாப்போந்ததேபோல்
நீர்விளைசுரிசங்கார்ப்பநிலநெளிபரந்தவன்றே.

கார்காலத்துண்டான மேகமன்ன கவுண்மறைந்த கடாம். போருண்டாதற்குக் காரணமான குதிரை. வார்விளை - வாருண்டான. யானையும் பரிசையும் முழக்கமு முண்மையின் மேகமுவமை. இனி வானுலாப்போந்ததேபோலுநீராவது கடல்; அதில் விளைந்தசங்குமாம்.

இ - ள். வேழமுந் தேரும் புரவியுங் காலாளுமமுரசம்விம்மச் சங்கமார்ப்ப வானு லாப்போந்ததேபோல் நிலநெளியப் பரந்தவென்க.

நெளிய - விகாரம். (உரு)

காலகம்புடைப்பமுந்நீர்க்கடல்கிளர்ந்தெழுந்ததொப்ப
வேலகமிடைந்ததானைவெந்சினவெயினர்தாக்க
வால்வளையலறவாய்விட்டிரலையுந்துடியுமார்ப்ப
பால்வளைந்திரவுசெற்றுப்பகலொடுமலைந்ததொத்தார்.

மூன்றுநீர்மையையுடைய கடல்; அது முந்கூறினும்.

இ - ள். காற்று உள்ளேயடித்தலாலே கடலெழுந்ததேபோலக் கிளர்ந்து வேன்மிடைந்ததானையும் எயினரும் வளையலற இரலையுந் துடியும வாய்விட்டார்ப்பத் தம்மிற்றாக்குதலாலே கோவிந்து ஒருபக்கத்திலே வந்து வளைந்து இரவும்பகலும் மலைவதொத்தாரென்க.

ஒடு - எண்ணொடு. வேடர் அரசர்க்கெதிர்நிற்றலின் இரவும்பகலு முவமையா யின. வளை தானைக்கும், துத்தரிகொம்புந் துடியும் வேடர்க்கும் நிரனிறை. (உசு)

விற்பழுத்துமிழ்ந்தவெய்யவெந்நுனைப்பகழிமைந்தர்
மற்பழுத்தகன்றமார்பத்திடங்கொண்டுவைகச்செந்நாச்
சொற்பழுத்தவர்க்குமாண்மைசொல்லலாந்தன்மைத்தன்றிக்
கொற்பழுத்தெரியும்வேலார்சொடுஞ்சிலைகுழைவித்தாரே.

பழுதது - குழைந்து. வெய்ய - விரும்பின. மற்பழுத்து - மற்றொழிலிலே முற்றுப்பெற்று. செவ்வியநாவிலே சொல்லெல்லாங்கைவந்தவர்கள். கொற்றொழி லிலே யடிபட்டு. மைந்தரும்வேலாரும் அரசன்படை.

இ - ள். வேடர்கையில்வில் விளைந்துகான்றபகழி மைந்தர்மார்பத்தே தங்குத லாலே கவிகளுக்கும் ஆண்மைகூறலாந் தன்மைத்தன்றாக எரியும்வேலார்அவ்வேடர் வில்லைக்கெடுத்தாரென்க.

இனி வேலார் தமது வில்லைவளைத்தார அவ்வளவிலே வேடர் மைந்தனைவீட் டினரென்றுமாம் (உஎ)

வாட்படையனுங்கவேடர்வன்சிலைவணங்கவாங்கிக்
கோட்புலியினத்தின்மொய்த்தார்கொதிநுனைப்பகழிதம்மால்
வீட்டினார்மைந்தர்தம்மைவிளிந்தமாகவிழ்ந்ததிண்டேர்
பாட்டரும்பகடுவீழ்ந்தபணிவரைகுனிவதொத்தே.

இ - ள். தம்மைக்கெடுத்த வாட்படைகெடும்படி வேடர் வில்லைவளைத்துப் புலியினம்போலெதிர்சென்று மொய்த்தவர்கள், தம்பகழியாலே வீரரானவர்களை வீட்டினார்; அவ்வளவிலே மாவீழ்ந்தன; தேர்கவிழ்ந்தன; வரை குனிவதனையொத்துப் பகடு வீழ்ந்தன வென்க.

மொய்த்தார - தொழிற்பெயர். பட்டு - விகாரம். (உஅ)

வென்றிநாஞ்சேறுமின்னேவெள்ளிடைப்படுத்தென்றெண்ணி
யொன்றியுள்ளாங்குகென்னவொலிகடலுடைந்ததேபோற்
பொன்றவழ்களிறுபாய்மாபுனைமயிர்க்குஞ்சிபிச்ச
மின்றவழ்கொடியொடிட்டுவேற்படையுடைந்தவன்றே.

வேற்படை - காலாள். குஞ்சி - சிற்றணுக்கள்.

இ-ள். படாதமைந்தர், வேடரை வெளியிலே புறப்படவிட்டு யாம் இப்பொழுதே வெற்றிகொள்ளுதுமென்று எல்லாருமெண்ணி அப்படையுடனே பொருந்தித் தள்ளிச் செறிதுகுறைப்பீராகவென்று தம்படைக்குச்சொல்ல, களிறும் மாவும் வேற்படையும் குச்சத்தையும பிச்சத்தையுங் கொடியுடனே போகட்டுக் கடலுடைந்ததுபோலுடைந்தவென்க. (உகூ)

பல்லிரும்சுகிர்ந்தநாரிற்பனிமலர்பயிலப்பெய்த
முல்லையங்கண்ணிசிந்தக்கால்விசைமுறுக்கியாய
ரொல்லெனவொலிப்பவோடிப்படையுடைந்திட்டதென்ன
வல்லலுற்றழுங்கிநெஞ்சிற்கட்டியங்காரனைந்தான்

பல்லாற்கிழித்த நாரிலே பூ நெருங்கவைத்தாகக் கட்டப்பட்ட முல்லைக்கண்ணி.

இ - ள். படைகெட்டவளவிலே ஆயர், கண்ணிசிந்தும்படி கால் விசையுண்டாக முறுக்கி ஓடி ஒல்லெனவொலிப்பப் படையுடைந்ததென்று கூற, அதுகேட்டுக் கட்டியங்காரன் நெஞ்சிலே ஒருவருக்குமுரையாதபடி அதிலேயழுந்தினனென்க.

என்றார்க்குப் பாடமாயின், என்றவருக்கிறைவருந் தானும்மெதிரேவருந்தினனென்க. (௩0)

வம்புகொண்டிருந்தமாதர்வனமுலைமாலைத்தேங்கோரக்
கொம்புகொண்டன்னநல்லார்கொழுங்கயற்றடங்கண்போலு
மம்புகொண்டரசர்மீண்டாராக்கொண்டுமறவர்போனார்
செம்புகொண்டன்னவிஞ்சித்திருநகர்ச்செல்வவென்றார்

செம்பின்றன்மையைக்கொண்டாலொத்த மதில். உலகிற்கன்றி நகரிக்கரசனாகிய ஸ்ரீமானேயென்றார், வெகுண்டு.

இ-ள். நிரைபோனபின்வந்த ஆயர், செல்வனே, மாலையினையுடைய தோர் கொம்பு, கச்சைத் தன்னிடத்தேகொண்டு அடிபரந்த காதலையுடையமுலையைத் தனக்குறுப்பாகக் கொண்டாற்போலு நல்லாருடைய கண்போலத் தப்பாத அம்பையே தாங்கொண்டு அரசர்மீண்டார்; மறவர் ஆவைக் கொண்டுபோனாரென்றாரென்க.

அரசர் - அவன்புதல்வரும் மதனனும். (௩க)

மன்னிரைபெயர்த்துமைந்தர்மைந்தனர்கொள்கவாட்கட்
பொன்னிறைசுடருமேனிப்பூங்கொடியனையபொற்பிற

கன்னியைத்தருதுமென்றுகடிமுரசியம்பக்கொட்டி
நன்னகர்வீதிதோறுநந்தகோனறைவித்தானே

மன்னிறை - பெரியநிறை. பூண்விளங்குதற்குக் காரணமானமேனி.

இ-ள். அதுகேட்டு அரசன்வாளாவிருந்தலின் நந்தகோன், கண்முதலியவற்றை யுடைய கன்னியை மைந்தர்நிரைமீட்டுவந்தவர் கொள்வாராக; யாமுந்தருவேமென நகர்வீதிதோறு மிக்கமுரசை முழங்கக்கொட்டிச் சாற்றுவித்தானென்க.

இரண்டுகுலத்தோருந் தாழ்வுயரங்கருதாதிருத்தற்குக் கொள்கவென்றுந் தருது மென்றுங்கூறினன். படைநான்குமிகப்படைத்துப்பல்லுயிர்க்குமருள்புரிந்தோருண் மையாலும், கன்னியை விரும்புவாருண்மையாலுஞ்சாற்றினன். (௬௨)

வெந்நிற்குறைச்சாபங்கான்றவெந்நுனைப்பகழிமூழ்க
வெதிர்ந்ததுசேனையிட்டங்கூற்றுண்டுபொருதுகொள்ளுங்
கருந்தடங்கண்ணியன்றிக்காயமாறாகவேறு
மருந்பெறலவளுமாகென்றுடவர்தொழுதுவிட்டார்.

மூங்கிலாற்செய்த குதையையுடைய வில்.

இ-ள். அடவர், சேனைத்திரள் வேடரது சாபங்கான்ற பகழிமூழ்குதலாலே கெட்டதாதலால், இவளையன்றி ஆகாயமேயாக செல்வாளொருபெறுதற்கரிய ளுயவமகளுமாக, அவ்வேடராகியகூற்றோடு பொருதுகொள்ளுங் கோவைவல்லாரில் லையென்று தொழுதுவிட்டாரென்க.

இது சொல்லெச்சம். (௬௩)

சாரவிரிகினனும்மேற்றாமுகர்நெஞ்சினேற்கத்
தேர்பரிகடாவித்தேந்தாஞ்சீவகனருளிற்போகித்
தாரபொற்புரவிவட்டந்தான்புகக்காட்டுகின்றா
கூர்பரிவுற்றதெல்லாமொருமகனுணர்த்தினானே.

இ-ள். வேசன், பின்னையோர்க்குமகளிர்மேலே காமுகர் நெஞ்சு ஏகுமாறு போல முடுக்கித்தேரைச் செலவிலேசடாவிப் பின்பு, புரவியை வட்டத்தேசெல்லக் காட்டுகின்றவனுக்கு, அவனருளாலே ஒருமகன்போய்வந்து ஊர் பரிவுற்றதெல்லா முணர்த்தினானென்க.

வட்டம் - வாளி. இனி ஒருமகன் தோபரிகடாவிப் போய் வந்தென்றுமாம். இதன்பின், *"என்றவன்" †"சேட்டிளம்" எனவிரண்டுகவிகூறுவாருமுளர்; அவை பயிலவழங்கா. (௬௪)

* என்றவனுரைப்பக்கேட்டேயெரிமணிக்கடகக்கையா
லொன்றியதோழாகைம்மேலெறிந்துநக்குணர்வின்மிக்கான்
சென்றவற்கோகையாகச்சிறப்பொடுசெம்பொன்சிந்தி
நன்றிதேபோல்வதில்லைநாந்தொறுமீட்டுமென்றான்.

† சேட்டிளம்பருதிபோலுந்திருமகிழ்மாலைமார்பன்
கேட்டலுங்கனன்றுவல்லேகிளரொளிநந்ததிண்டேர்
நீட்டமில்செய்கைதம்மாற்பண்ணெனவிணைந்துசொன்னான்
றீட்டரும்பருதியன்னசீவகசாமியன்றே.

## வேறு.

தன்பான்மனையாளயலான்றலைக்கண்டுபின்னு
மின்பாலடிசிற்கிவர்கின்றகைப்பேடிபோலா
நன்பால்பசுவேதுறந்தார்பெண்டிர்பாலர்பார்ப்பா
ரென்பாரையோம்பேனெனிற்யானவனாவனென்றான்.

தன்பகுதியாய்த்தங்கிய வீரமகளை. போலாவென்றபாடம் செய்யாவென்னு மெச்சப்பொருட்கண்வந்த உவமைச்சொல். நன்பால் - நல்லொழுக்கம். *"சிலவ யினான்" என்றதனாற் றிணைவிராய் எண்ணி உயர்திணையான் முடிந்தன.

இ - ள். நல்லொழுக்கம், பசு, துறந்தார், பெண்டிர், பாலர், பார்ப்பாரென்பா ரை ஓம்பேனெனின்யான், தன்வீரத்தை அயலாரிடத்தேகண்டு பொறுத்தான் அவ் மகனன்மையிற் பேடியையொத்துப் பின்னுமபாலடிசிலுண்டற்கு மேற்கொள்கின்ற ஒழுக்கத்தையுடைய கட்டியங்காரனாவேனென்றானென்க.

இது உட்கோள். இனிப் போலாமென மகரவீறாக்கிப் பேடிபோலாமவனாக வென்றுமாம். போலாவென்றது எச்சப்பொருளுணர்த்தினமையின் ஒப்பில்போலி யாகாமையுணர்க. (௬௫)

போர்ப்பண்ணமைத்துநுகம்பூட்டிப்புரவிபண்ணித்
தேர்ப்பண்ணமைத்துச்சிலைகோலிப்பகழியாய்ந்து
கார்க்கொண்முழுமின்னினிமிர்ந்தாய்கலிமாக்குளம்பிற்
பார்க்கண்ணெழுந்ததுகளாற்பகன்மாய்ந்ததன்றே.

பண்ணமைத்தல் - சமைத்தல்.

இ - ள். புரவியைப்பண்ணிநுகத்தேபூட்டித் தேரைப்பண்ணமைத்துப் பின் தன்னைப் போருக்கிடாகப்பண்ணமைத்துக் கோலி ஆய்ந்து மின்போலத் தேரைச் செலுத்தினான்; அப்பொழுது குதிரைக்குரத்தாற் பாரிடத்தெழுந்த புழுதியாலேபகற் பொழுதுகெட்டதென்க.

கொண்மூ - விகாரம். (௬௬)

இழுதொன்றுவாட்கணிளையாரிளையார்கணோக்கிற்
பழுதின்றிமூழ்கும்பகழித்தொழில்வல்லனாளை
முழுதொன்றுதிண்டேர்முகஞ்செய்தவன்மைந்தனோடேற்கும்
பொழுதன்றுபோதுமெனப்புன்மொழிந்தான்மொழிந்தான்.

இ - ள். முன்பு நிமித்தங்கூறினவன் அத்தேரைக்கண்டு, தோன்றின அவன் மகளிர் காமுகரிடத்து நோக்குகின்றநோக்குப்போலத் தப்பின்றுகத்தைக்கும் அம் பாற்செய்யுந் தொழிலைவல்லகாளை ; தேரொன்றே திசைமுழுதும் முகஞ்செய்தற்குக் காரணமானவன்றன்னுடனே யாம் இப்பொழுது போரை எதிர்கொள்ளும் பருவ மன்று; போகக்கடவேமென்று கூறினானென்க. (௬௭)

மோட்டும்முதுநீர்முதலைக்குவலியதுண்டேற்
காட்டுண்ணமக்குவலியாரையுங்காண்டுமென்றே

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், ௫௧-ம் சூ - நச்சினார்க்கினியருரையிற் காண்க.

யேட்டைப்பசியினிரைகவ்வியநாகமேபோல்
வேட்டங்கிரையைவிடலின்றிவிரைந்ததன்றே.

இ-ள். அப்பொழுது வேட்டுவச்சாதி, முதுநீரிடத்துப் பெரிய முதலைக்கு வலிய தொன்றுண்டாயின் நமக்குக் காட்டிடத்து வலியாரையும்காண்டுமென்றுகூறி, இரைக் கிடைந்தபசியால் இரையைக்கவ்வியநாகம்போல் அந்நிரையைக்கைவிடுதலின்றாய்ப் போரிற்கு விரைந்ததென்க. (கூஅ)

வேறு.

கடற்படையனுங்கவெல்றகானவரென்னுங்கூற்றத்
திடைப்படாதோடிப்போமினுய்யவென்றிரலைவாய்வைத்
தெடுத்தனர்விளியுஞ்சங்கும்விளியும்பறையுங்கோடுங்
கடந்திடைமுழங்கக்காருங்கடலுமொத்தெழுந்தவன்றே.

இ-ள். அங்ஙனம்விரைந்தவர், அரசன்படைகெடும்படி வென்ற வேடரென் னுங் கூற்றத்திடையில் அகப்படாதே பிழைக்க ஓடிப்போங்களென்று வார்த்தை கூறித் துத்தரிக்கொம்பையூதிக் கொக்கரிப்பையுஞ் சீழ்க்கையுமெழுப்பினர். அதற் கெதிரே பிள்ளையாருடையசங்கும் பறையும் கொம்பும் காட்டிலேமுழங்க இரண்டுப டையினொலியும் காரையுங் கடலையுமொத்தெழுந்தவென்க.

"வில்லுடை யிளையர் கல்லிடு பெடுத்த" என்றார்பிறரும். (கூக)

கைவிசை முறுக்கிவீசுங்கொள்ளியுங்கறங்குமேய்ப்பச்
செய்கழற்குரிசிறின்றேர்விசையொடுதிசைகளெல்லா
மையெனவளைப்பவீரரார்த்தனரவருமார்த்தார்
மொய்யமர்நாட்செய்தையன்முதல்விளையாடினனே.

விசையுண்டாகமுறுக்கி. ஐயன-விரைய. பின்புசெய்யு மொய்யமருக்குமுத லைநாட்கொண்டு என்றது தான்செய்யுந்தொழில் நிகழ்த்துவதற்குமுன்பே அதனைத் தொடங்கிவைத்தல். இது தம்மிற்றம்படைவகுத்துவிளையாடுந் தன்மைத்தென்று விளையாடினனென்றார். தனக்கு அவர்நிகரன்மையானும், அரசாட்சியின்மையிற் பகை யின்மையானும், தனதருளும் வீரமுமேம்படுத்துதற்குச் சென்றமையலானும், அவரை யஞ்சப்பண்ணிநிரைமீட்டானென்பதே தேவர்கருத்து; அது மேற்காண்க.

இ-ள். அவரெதிர்த்தலிற் குரிசில் தேர் கொள்ளிவட்டத்தையுங் காற்றாடியையு மொப்பவிசையோடேவளையாநிற்க, தன்வீரரார்த்தார்; அதுகேட்டு வேடருமார்த்தார்; அப்பொழுது ஐயன் நாட்செய்து விளையாடினனென்க. (சு0)

ஆழியானூர்திப்புள்ளினஞ்சிறகொலியினாக
மாழ்கிப்பையவிந்தவண்ணம்வள்ளறேர்முழக்கினானுஞ்
சூழ்துகண்மயக்கத்தானும்புளிஞருள்சுருங்கிச்சேக்கைக்
கோழிபோற்குறைந்துநெஞ்சினறமெனமறமும்விட்டார்.

இ-ள். திருமாலேறப்படுவதாகிய கருடனது சிறகொலியினாலே பாம்புமயங் கிப் படமொடுங்கினாற்போல, வள்ளறேரொலியாலும் தம்மைச்சூழ்ந்த துகளின்மயக் கத்தாலும் வேடர், மனவெழுச்சிசுருங்கி, வலைப்பட்டகோழிபோலேசெயல்குறைந்து

தமதுநெஞ்சின் அறம்புகுதாமல் கைவிட்டாற்போல ஈண்டு மறத்தையுங்கைவிட்டா ரென்க.

அவருயிரைக்கொடுத்தலின் வள்ளலென்றார். பொராதே சேரொலியாலே அஞ்சுவித்து நிரைமீட்கின்றான். (சக)

புள்ளொன்றேசொல்லுமெய்ப்புறுத்தலைவேட்பபொய்த்தால்
வெள்ளந்தேர்வளைந்தநம்மைவெற்றிபெற்கரிதுவெய்தா
வுள்ளம்போற்போதுமோரடுப்பெடுத்துய்யவென்று
வள்ளன்மேலப்புமாரிபரப்பொடுசிதறினாரே.

இ-ள். அங்ஙனமறமவிட்டவேடர், ஆந்தை ஒருதேர்வரவுமென்று சொல்லாநின்றதென்று நமக்குச்சொல்லி இந்தப்புள்நலமுடன் கிளிந்தாராய்ந்தப்பிறன், நம்மைத் தேர் வெள்ளமாகவளைந்தனவாகலான் இவ்விடத்து நிரைகோடலரிது; இனி ஈய்சமதாக ஒருகாலுற்றுப்பொருது தள்ளி உய்யப்போமபடி ஒருவருள்ளம்போலே எல்லாருஞ் செல்லக்கடவேமென்றுகூறிச் சென்று, வள்ளல்மேலே அப்புமாரியைச் சிதறினாரென்க.

நீ நினைந்தாற்போலப் போவேமென்றுமாம். (சஉ)

மால்வரைதொடுத்துவீழ்ந்தமணிநெடுமாரிதன்னைக்
கால்நிரைத்தெழுந்துபாறக்கல்லெனவெடுத்ததேபோல்
மேனிரைத்தெழுந்தவேடர்வெங்கணைப்புமாரி
கோனிரைத்துமிழும்வில்லாற்கோமகன்விலக்கினானே.

மால் - பெருமை. மலையிற்றொடுத்தென்றார், மாலைமழையென்றற்காக.

இ - ள். மாரிதன்னைக் காற்று, கல்லென இரைத்தெழுந்து சிதறவடித்த தன்மைபோல, தன்மேனிரைத்தெழுந்த வேடருடைய அம்பாகியமழையை, கோமகன் தன்கைவில்லாற் றான்சொரிகின்ற கோலைநிரைத்து விலக்கினானென்க.

காற்றுத் தான்வேண்டியதிசையே மழையைப்போக்குமாறுபோல, சீவகனும் தன்விசையால் அவரம்பை மீளவிட்டதென்க.

“நாமுறக் கணைக்காற் றெடுத்த கன்னைகள் மாசைவாத” என்றார்பிறரும் இச் சொற்றகோமகனென்றார். (சங)

காணவரிரியவில்வாய்க்கடுங்கணைதொடுத்தலோடு
மாநிரைபெயர்ந்தவாயரார்த்தனர்நிரந்தனின்றே
டானொன்றுமுடங்கிற்றொன்றுநிமிர்ந்ததுசரம்பெய்மாரி
போனின்றவெம்பமற்றப்பொருவருசிலையினார்க்கே.

அங்ஙனந்தொடுத்த தொடைவிசேடங்களை இனிப்பொரவரிசென்று குறைந்து நிரையைக்கைவிடுதலால், தொடுத்தலோடுநிரைபெயர்ந்தவென்றார்.

இ - ள். தனது வில்வாய்க்கடுங்கணையை அங்ஙனந்தொடுத்ததொடையுடனே நிரைமீண்டன; அதுகண்டு ஆயரார்த்தனர்; அதன்பின்பு, நிரையைவிட்டுக் குயிர்த்த கானவரிரியும்படியாகத் தனதுவில்லோடானொன்றுமுடங்கிற்று, ஒன்றுநிமிர்ந்தது. அப்பொழுது அவ்வேடர்க்கு அம்புகள் பெய்மாரிபோலத் தாரையாய்நின்றவென்க.

இது நிரைமீட்ட பின்பு, அவ்வேடர்திரள் குலைந்துபோம்படி யெய்த நிலைமை கூறிற்று. கொல்லாதிருத்தலின் மழைபோலென்றார். (சச)

௫. விண்ணகத்துளர்கொன்மற்றிவ்வென்றிவேற்குரிசிலொப்பார்
மண்ணகத்திவர்களொவ்வார்மழகளிறனையதோன்றல்
பண்ணகந்துறையுஞ்சொல்லார்நன்னலம்பருகவேண்டி
யணணலேத்தவத்திற்றந்தார்யார்கொலோவளியரென்பார்.

மற்று - வினைமாற்று. தோன்றலை மண்ணிடத்து இம்மக்களொவ்வாராதலாற் பின்னை இக்குரிசிலையொப்பார்விண்ணகத்துளரோ? அஃதறிகின்றிலேமென்பாரும்; இவ்வுலகின்மகளிர் ஈங்கில்லாததொருநலத்தைநுகரவேண்டி இவ்வண்ணலைத் தாஞ் செய்த தவத்தாற்றந்தவர் தேவரோ மக்களோ அவர்யாவராயினும் எல்லாராலு மளிக்கத்தக்காரென்பாரும். (௫௯)

௬. வட்டுடைப்பொலிந்ததானைவள்ளலைக்கண்டபோழ்தே
பட்டுடைசூழ்ந்தகாசுபஞ்சிமெல்லடியைச்சூழ
வட்டரக்கனையசெவ்வாயணிநலங்கருகிக்காமக்
கட்டழலெறிப்பநின்றார்கைவளைகழல நின்றார்.

வட்டுடை - முழந்தாளளவாகவிரநிக்குமுடைவிசேடம். காசு - புறத்தின் மேகலை. அட்ட அரக்கு.

இ - ள். மயிலினல்லார், அமுதமன்னார், அல்குலாராகிய இவர்கள் என்பாரு மென்பாருமாய், வள்ளலைக்கண்டபொழுதே காமத்தீயெரிய வாய்கருகிநின்றவர்கள் பின்பு, மேகலைகழல வளைகழல நின்றாரென்க. (௬0)

வார்செலச்செல்லவிம்மும்வரிமுலைமகளிர்நோக்கி
யேர்செலச்செல்லவேத்தித்தொழுதுதோடேக்கவிப்பாற்
பார்செலச்செல்லச்சிந்திப்பைந்தொடிசொரிந்தநம்பன்
றேர்செலச்செல்லும்வீதிபீர்செலச்செல்லுமன்றே

வார்செலச்செல்ல - கச்சுமேலேபோகப்போக. இப்பால் - பின்பு. நிலத்திலே செல்லும்படி செல்லும்படி சிதறிச் சொரிந்தன; தொடி பலவாதலிற்கூறினார். செல்லுமென்பது நிகழ்காலமேயுணர்த்தும்.

இ - ள். நம்பன்றேர்செல்லுதலாலே யிப்பாலுள்ளமகளிர், மறையுமளவுநோக் கிநின்று, அழகுபோகாநிற்கப் போகாநிற்க வேத்தித்தொழுது தோளைகாற்ற, அத்தோள்கள் செருகிக் காத்தற்குரிய தொடிகளையுஞ்சொரிந்தன. பின்பு அவனதுதேர், செல்கின்றவீதியின் மகளிர்க்குப் பசப்புப்பரக்கத் தான்செல்லாநிற்குமென்க.

"நீப்பி னீங்காது வரின்வளை யமைந்து தோட்பழி மறைக்கு முதவிப் போக்கில் பொலந்தொடி" என்பர். முன் வளைகழலநின்றார்க்கு வருத்தமிகுதியாற் றொடியுங்கழன்றனவென்க. (௬௧)

வாண்முகத்தலர்ந்தபோலுமழைமலர்த்தடங்கண்கோட்டித்
தோண்முதற்பசலைதீரத்தோன்றலைப்பருகுவார்போ
ணுண்முதற்பாசந்தட்பநடுங்கினார்நிற்பநில்லான்
கோணமுகப்புலியோடொப்பான்கொழுநிதிப்புரிசைபுக்கான்.

ஒளியையுடையமுகத்தே பூத்தமலர்போலுங் குளிர்ந்தகண். புரிசை - தன்மனையைச்சூழ்ந்த மதில்.

இ - ள். அங்ஙனம்பசந்தவர் தந்தோளிற்பசலைதீரும்படி தோன்றலைப் பருகு வார்போலே கண்ணாலேவலைந்துப்பார்த்து நடுங்கினராய் நாணுகியமுதற்றளைதடுத்த லாலே செல்லமாட்டாதுநிற்ப, தான் நில்லானுய்க் கொல்லுமுகத்தையுடைய புலி போல்வான் புரிசைக்குள்ளே புகானென்க. (சுஉ)

பொன்னுகம்புரவிபூட்டுவிட்டுடன்பந்திபுக்க
மன்னுகவென்றியென்றுமணிவள்ளநிறையவாக்கி
யின்மதுப்பலியும்பூவுஞ்சாந்தமும்விளக்குமேந்தி
மின்னுகுசெம்பொற்கொட்டில்விளங்குதேர்புக்கதன்றே.

வந்தி - ஏந்த.

இ - ள். புரவி நுகம்பூட்டுதலைவிட்டுப் பந்தியிலேபுக்கன. பின்பு தேருக்கு மதுவை வட்டினிறையவார்த்து, அம்மதுவாகியபலிமுதலியவற்றை வென்றிமன் னுகவென்றேந்த, அத்தேர் மகிழ்ந்து கொட்டிலிலேபுக்கதென்க. (சுகூ)

இட்டவுத்தரியமெல்லென்றிடை சுவல்வருத்தவொல்கி
யட்டமங்கலமுமேந்தியாயிரத்தெண்மரீண்டிப்
பட்டமுங்குழையுமின்னப்பல்கலனொலிப்பச்சூழ்ந்து
மட்டவிழ்கோதைமார்பின்மைந்தனைக்கொண்டுபுக்கார்.

ஒல்கி - எதிர்கொண்டு.

இ - ள். ஆயிரத்தெண்மரீண்டி, எட்டு மங்கலத்தையுமேந்தி, மின்ன ஒலிப்ப உத்தரியமிடையையும் சுவலையும்வருத்த எதிர்கொண்டு, சூழ்ந்து, மைந்தனை உள் ளேகொண்டுபுக்காரென்க.

"சாமரை தீபந் தமனியப் பொற்குடங் - காமர் சயலி னிணைமுதலாத் - தேமருவு கண்ணாடி தோட்டி கதலிகை வெண்முரசு - மெண்ணிய மங்கலமோ ரெட்டு."

தாயுயர்மிக்கதந்தைதவத்தெதிர்கொண்டுபுக்கு
காய்கதிர்மணிசெய்வெள்வேற்காளையைக்காவலோமபி
யாய்கதிர்முழுமைப்பூணுரிரசெங்கநுைய்நன்
சேயுயருலகமெய்தியவனதோசெல்வமுற்றுர்.

பிள்ளை உயர்ச்சிமிகுதிக்குக் காரணமானதந்தை: "சான்றோ னாக்குத றந்தைக் குக் கடனே" என்றார் பிறரும். காய்தல் - எறித்தல்.

இ - ள். தாயுந் தந்தையும் பிள்ளையையெதிர்கொண்டுபுக்கு, ஆலத்தி முதலிய வற்றாலேபரிகரித்து, உலகைப் பெற்றலொத்ததோர் செல்வத்தைத் தாமுற்றாரென்க.

க. தகைமதியெழிலைவாட்டுந்தாமரைப்பூவினங்கட்
புகைநுதியபூலவாட்கட்பொன்னொணுப்பல்லநீண்ட
வகைமலிவனைசெய்மார்பின்வள்ளலைக்கண்டோரர்த
தொகைமலிதொறுவையாளுந்தோன்றன்மற்றின்னகூறும. (சுசு)

உ. கேட்டிதுமறக்கநம்பிகேண்முதற்கேடுசூழ்ந்த
நாட்டிறைவிசயையென்னுநாறுபூங்கொம்பனாள்

கொம்படுநுசுப்பினாளைக்குறையிரந்துழந்துநின்ற
நம்படைதம்முளெல்லாநகைமுகமழிந்துநின்றேன்.

இ - ள். மூலையினுளாகிய என்மகனேைக்கம் எல்லார்க்கும் அம்பைத் தோளடியிலேசெல்லவலித்து நெஞ்சிலே அழுத்தியதன்மையொத்தலாலே, அந்நுசுப்பினாளைப் பெறவேண்டுமென்று வருந்திநின்ற நம் ஆயரிடத்தெல்லாம் முகச்செவ்வியின்றி மறுத்துநின்றேனென்க.

தான்மகட்கொடுத்தலின்நம்படையென்றான். சீவகன்விரும்பிக்கோடற்கு மகளை இங்ஙனஞ் சிறப்பித்துக்கூறினான். (எ௦)

பாடகஞ்சுமந்தசெம்பொற்சிலம்படிப்பரவையல்குற்
சூடகமணிந்தமுன்கைச்சுடர்மணிப்பூணினாளை
யாடகச்செம்பொற்பாவையேழுடன்றருவனைய
வாடமில்வதுவைகூடிமணமகனாகவென்றான்.

இ - ள். ஐயனே, அடிமுதலியவற்றையுடைய கோவிந்தையைப் பாவையேழுடனேதருவேன். குறைவற்றமணம்பொருந்திமணமகனாவாயாகவென்றானென்க.

இது இன்னவாகியமொழியைக்கேளென்றது. என்றானென்பதனை, 'அகன்றுநின்றேன்' என்பதனோடுங்கூட்டுக. (எக)

வேறு.

க. வெண்ணெய்போன்றூறினியவண்மேம்பால்போறீஞ்சொல்ல
ளுண்ணவுருக்கியவாநெய்போன்மேனியள்
வண்ணவனமுலைமாதர்மடநோக்கி
கண்ணுங்கருவிளம்போதிரண்டேகண்டாய்.

இதுமுதல் "குலநினையல்" அளவுமொருதொடர்.

உண்டற்குமேவும்பால்; ஈற்றுமிசையுகரமெய்யொடுங்கெட்டது. உண்ண - நீய. உம்மை - சிறப்பும்மை. (எஉ)

உ. சேதாநறுநெய்யுந்தீம்பால்சுமைத்தயிரும்
பாதாலமெல்லாநிறைத்திடுவன்பைந்தாரோய்
போதார்புனைகோதைசூட்டுன்னடிநதியை
யாதாவதெல்லாமறிந்தருளியென்றான்.

சுமைத்தயிர் - அடைத்தயிர். யாதாவது - இத்தால்வருந்தீங்கென். (எங)

ங. குலநினையனம்பிகொழுங்கயற்கண்வள்ளி
நலனுகர்ந்தானன்றேநறுந்தார்முருக
னிலமகட்குக்கேள்வனுநீணிரைநப்பின்னை
யிலவலர்வாயின்னமிர்தமெய்தினனன்றே.

நப்பின்னை - அவள்பெயர். ந - சிறப்புப்பொருளுணர்த்துவதோரிடைச்சொல், நச்செள்ளை, நப்பாலத்தன், நக்கீரன் என்றாற்போல. நம்பின்னை - விகாரமுமாம்.

இ - ள். பைந்தாரோய், நம்பி, முலையினையுங்காதலினையுமுடையமடனோக்கி, வெண்ணெய்போற்குழைந்தினியள்; சொல்லள்; மேனியள். அவையன்றி அவள் கண்களும்பூவிரண்டேகாண்; அவளை வரைந்தால் யாது ஆவது? யாமறிய முருகன் வள்ளிநலநுகர்ந்தானன்றே, திருமால்பின்னையைப் புணர்ந்தானன்றே, ஆதலாற் குலத்திற்றாழ்வுகருதாதொழிக; இனி யான்கூறினவெல்லாந் திருவுள்ளம்பற்றி நின் னடிச்சியைக் கோதைசூட்டுவாயாக; சூட்டுமிடத்துக் கலியாணஞ்செய்தற்குச் சிறி யேனல்லேன்; நெய்யும்பாலுந்தயிரும் பாதாளமெல்லாம் நிறைப்பேனென்றானென்க.

மணமகளைகவென்றவிடத்து முகச்செவ்விகாணாமையிற் பின் இது கூறி உடம் படுத்தினான். (௭௪)

'டாற்றூ'.

கன்னியர்குலத்தின்மிக்கார்கதிர்முலைக்கன்னிமார்ப
முன்னினர்முயங்கினல்லான்முறிமிடைபடலைமாலைப்
பொன்னிழைமகளிரொவ்வாதவரைமுன்புணர்தல்செல்லா
ரின்னதான்முறைமைமாந்தர்க்கெனமனத்தெண்ணினானே.

இ - ள். நங்குலத்தோர, வகைமாலையினையும் இழையினையுமுடைய மகளிரை வரையுமிடத்து, கன்னியரிற் குலத்தின்மிக்காருடைய அழியாத மார்பத்தை எதிர்ப் பட்டாராய்முயங்கினல்லது, தங்குலத்திற்கொவ்வாதாரை முற்படவரையார்; அதுவு மன்றித் தேவரையொழிய மக்கட்கு முறைமை இத்தன்மையாயிருந்ததெனக் கரு திப் பின்பு, தன்மனத்தே பதுமுகனுக்குக் கொடுப்பதாகவெண்ணினானென்க. (௭௫)

கோட்டிளங்களிறுபோல்வானந்தகோன்முகத்தைநோக்கி
மோட்டிளமுலையினாணின்மடமகளெனக்குமாமான்
சூட்டொடுகண்ணியன்றேயெய்செய்வானிவைகள்சொல்லி
நீட்டித்தல்குணமோவென்றுநெஞ்சகங்குளிர்ப்பச்சொன்னான்.

சூட்டொடு கண்ணியன்றேயென்றது - இத்தன்மையன்றிச் சூட்டுந்தன்மை யோடுகூடிய கண்ணியல்லவோவென்றும் நெற்றிச்சூட்டுங்கண்ணியுமல்லவோவெ ன்றுமிரண்டுபொருளுணர்த்தும்; உணர்த்தவே மார்பிற்குமாலையிடுகவென்றும், தலைக்கு மாலைசூட்டுகவென்றும் பெரும்பான்மையும் வழக்குநடத்தலின், தலைமேல் வைக்கப் படும் கண்ணியென்றுரைக நந்தகோன்கருதினானும். நெற்றிச்சூட்டு ஆடவர்க்காகாத தன்மையும், கண்ணி ஆடவர்க்காந்தன்மையும்போல, தன்குலத்திற்காகாமையிற் சூட்டின்றமையும், பதுமுகன்குலத்திற்குச் சிறிதுபொருந்துதலிற் கண்ணியின்றன் மையுமுடையளென்று சீவகன்கருதினானும்; கோபாலரிலும் வாணிகஞ்செய்வாரு ளராதலின்.

இ - ள். களிறுபோல்வான், நந்தகோன்முகனைப்பார்த்து, முலையினாளாகிய நின்மகள் மாமான், எனக்குச் சூட்டொடுகண்ணியல்லவோ, இவைகள்சொல்லி நீட் டித்தல் செய்வானேன், இதுகுணமோவென்று, நெஞ்சிடமகுளிரும்படிகூறினா னென்க.

இனி மாமான், எனக்குச் சூட்டொடுகண்ணியன்றேயென்றது : தனக்காகாமை யிற்புலாலும், பதுமுகற்காதலிற்பூவுமாகக் கருதினானென்றுமாம். இனி ஆமான்சூட் டுமோம். இனிமா வடசொல்லாக்கி ஆகாதென்றுமுரைப்பர். (௭௬)

தேன்சொரிமுல்லைக்கண்ணிச்செந்துவராடையாயர்
கோன்பெரிதுவந்துபோகிக்குடைதயிர்குழுமப்புக்கு
மான்கறிகற்றகூரைமௌவல்சூழ்மயிலைப்பந்தர்க்
கான்சொரிமுல்லைத்தாரான்கடிவினைமுடிகவென்றான்.

துவருட்டினவாடை. தயிர்முழங்கப்புகுதல் நன்னிமித்தம். கறிகற்ற - கடித்தல் கற்ற. மௌவல் - மல்லிகைவிசேடம். மயிலை - இருவாட்சி. கடிவினை - சமாவர்த்தநம்.

இ - ள். முல்லைத்தாரானாகிய ஆயர்கோன் உவந்துபோய்ப் புக்குப் பந்தரிலே கடிவினை முடிவதாகவென்றானென்க. (எஎ)

கனிவளர்கிளவிகாமர்சிறுநுதல்புருவங்காமன்
குனிவளர்சிலையைக்கொன்றகுவளைக்கண்கயலைக்கொன்ற
வினியுயிரல்லராயரெனச்சிலம்பார்ந்ததந்து
பனிவரைகோதைமாதர்பாவையைப்பரவிவைத்தார்.

குனிவு - விகாரம்.

இ - ள். மாதர், கனிந்தமைதோற்றுகின்ற கிளவியையுடையாளுடைய நுதலும் புருவமும் சிலையைக்கெடுத்தன; கண் கயலைக் கெடுத்தன. இப்பருவங்கண்டு ஆயர் உயிர்கொண்டிருப்பாரல்லரென்று சிலம்பொலியார்க்கப் பாவையைத்தந்து, பரவி வைத்தாரென்க. (எஅ)

நாழியுளிழுதுநாகான்கன்றுதின்றொழிந்தபுற்றேய்ப்ப
தாழிதோறுந்தொழும்பொன்றுடன்பூக்கவென்று
தாழிருங்குழற்றோய்நெய்தலைப்பெய்துவார்ந்து
மூழைநீர்சொரிந்துமொய்கொளாய்ச்சியராட்டினாரே.

இ - ள். ஆய்ச்சியர், குழலினுக்குப் பசுவுந்தொழுவும்போலே வழிதோறும் பெருமன்கணைநுஞ் சேரப்பிறப்பவென்று வாழ்த்தி, நாழிக்குள்ளிருந்த நெய்யைப் பூதை நாகிய பசுவின்கன்று தின்றொழிந்த புல்லாய்ப் போதாநின்ற அப்பாவையைத் தலையிலே வார்த்து, மூழையாலே நீர்சொரிந்தாட்டினாரென்க. (எகூ)

நெய்விலைப்பசும்பொற்றோடுநிழனமணிக்குழையுநீவி
மைவிரிகுழலினாளையங்கலக்கடிப்புச்சேர்த்திப்
பெய்தனாரிணையன்மாலையோரிலைச்சாந்துபூசிச்
செய்தனர்சிறுபுன்கோலந்தொழுத்தியர்திகைத்துநின்றார்.

இ - ள். கருமைவிரிந்தகுழலினாளை, நெய்விலையாலுண்டான பொற்றோட்டையுங்குழையையுநீக்கி மங்கலமான்கடிப்பிணையையிட்டு மாலையையிட்டனராய் ஓரிலையிலிடுவித்துவந்தசந்தனத்தையும்பூசிக் கோலஞ்செய்தார்; அதுகண்டு ஆய்ச்சியர் திகைத்துநின்றாரென்க. (அ0)

ஏறுகோண்முழங்கவாயர்பெருந்துக்கொண்டேகிழுதார்ச்
சாறெங்குமயரப்புக்குநந்தகோன்றன்கையேந்தி
வீறுயர்கலசநன்னீர்சொரிந்தனன்வீரனேற்றான்
பாறுகொள்பரிதிவைவேற்பதுமுககுமரற்கென்றே.

வீறு - வேறொன்றிற்கில்லா அழகு.

இ - ள். ஆயர், ஏறுகோட்பறைமுழங்காநிற்க அவனையெடுத்துக்கொண்டு மூதூரெங்குஞ் சாறயர ஏகிப் பின்பு கந்துகன்மனையிலேபுகுதலின், நந்தகோன் தன் கையிலே கலசத்தையேந்தி நீரைச்சொரிந்தான்; வீரனும் பதுமுகனுக்கென்றுகூறியேற்றானென்க.

மணஞ்செய்தமைகூறினார். (௮௧)

நலத்தகையவட்குநாகானுயிரத்திரட்டிநன்பொ
னிலக்கணப்பாவையேழுங்கொடுத்தனன்போகவிப்பா
லலைத்ததுகாமன்சேனையருநுனையம்புமூழ்க
முலைக்குவட்டிடைப்பட்டாற்றான்முத்துகமுயங்கினானே.

நலத்தகை - நன்மையையுடைய அழகு. காமன்சேனை - கண்ணும்முலையும்.

இ - ள். கோவிந்தைக்குப் பசு இரண்டாயிரமும், பொற்பாவை ஏழுங் கொடுத்தனனாய் நந்தகோன்போக, இவ்விடத்தே பதுமுகனைக் காமன்சேனை வருத்திற்று; அவ்வளவிலே அவனம்பு தைத்தலாலே ஆற்றானாய் முலைச்சிகரங்களுக்கு நடுவே முத்துகவீழ்ந்து முயங்கினானென்க. (௮௨)

வேறு.

கள்வாய்விரிந்தகழுநீர்பிணைந்தன்னவாகி
வெள்வேன்மிளிர்ந்தநெடுங்கண்விரைநாறுகோதை
முள்வாயெயிறூறமுதம்முனியாதுமாந்திக்
கொள்ளாதவின்பக்கடற்பட்டனன்கோதைவேலான்.

கள்வாய்விரிந்த - தேன் வாயிலேபரந்த.

இ - ள். வேலான், இன்பத்தைச்செய்தலின் அலர்கின்றகழுநீரிரண்டு சேர்ந்தாற்போன்றதன்மையவாய்த் துன்பத்தைச்செய்தலின் வேல்போற்பிறழ்ந்த கண்ணினையுடைய மணந்தோற்றுகின்ற கோதையுடைய எயிற்றின்மாறாத அமுதத்தை வெறாமலுண்டு, கரைபுரண்ட இன்பக்கடலிலே அழுந்தினானென்க. (௮௩)

தீம்பாற்கடலைத்திரைபொங்கக்கடைந்துதேவர்
தாம்பாற்படுத்தவமிர்தோதடமாலைவேய்த்தோ
ளாம்பாற்குடவர்மகளோவென்றரிவைநைய
வோம்பாவொழுக்கத்துணர்வொன்றிலனாயினானே.

திரை கடைகிறகாலத்துப் பிறந்தது. தாம், ஆம்பால் இரண்டும் விகாரம். இனி ஆம்பால் - பெரும்பாலுமாம்.

இ - ள். இவள் தேவர் கடலைக்கடைந்து தம்மிடத்தே அகப்படுத்த அமுதமோ! அன்றி அழகியபாலையுடைய இடையர்மகளோ! என்று நயப்புரைத்துப் பின்னும் பரிகரிக்கவொண்ணாத புணர்ச்சியொழுக்கத்திலே மாலையினையுந்தோளினையுமுடைய அரிவை அவசமாகத் தானும் அறிவு மயங்கினானென்க.

இவ்விலம்பகம் வீரமகளைச் சேர்ந்தமைகூறிற்று. (௮௪)

கோவிந்தையாரிலம்பகம் முற்றிற்று.

ஆ கவி ௪௯௨.

மூன்றாவது

# காந்தருவதத்தையாரிலம்பகம்.

க. இங்கிவர்களிவ்வாறிருந்தினிதுவாழச்
சங்குதருநீணிதியபஞ்சசலவுடைநாய்கன்
பொங்குதிரைமீதுபொருமால்களிறுபோன்றோர்
வங்கமொடுபோகிநனிவந்துதரலுற்றான்.

இவ்விடத்தே பிள்ளையாருஞ் சுற்றமுமிராக்கு இனிதாக வாழாநிற்க; நாய்கன் பரிவுதீர்ந்து மட்டவிழ்கோதையோடே மனையிலே மகிழ்ந்து புக்கானெனக் கூட்டி, *"கட்டழல்" என்னுங் கவியோடு மொருதொடராக்குக. இதற்குக் காரணமென்னையோவெனின், ஆசிரியன் †"ஆண்டுமோரிரவிலே" என்றுகூறிய பின்பு, சுதஞ்சணனும் ‡"பன்னிருமதியின்" என்றும் §"ஒருமதியின்" என்றுங் கூறினமையால், ஆசிரியன் முந்நூற்றறுபத்தைந்து நாளையாண்டானை சௌரமானபட்சம் பற்றிக் கூறினானென்றும், தேவன் மதியினென்று மதியைக் கருதிக் கூறினமையிற் சாந்திரமான பட்சம்பற்றிக் கூறினானென்று முணர்க. அங்ஙனங்கூறுகின்ற பொழுது ஆசிரியன் மாசித்திங்களில் மூன்றாந்தெய்தியில் அபரபட்சத்துத் தசமியிலே கூறினானென்றும், தேவன் பங்குனித்திங்களிலே நாலாந்தெய்தியில் அபரபட்சத்துச் சதுர்த்தசியிலே கூறினானென்றுங்கொள்க. எனவே ஆசிரியன் யாண்டென்றது முந்நூற்றறுபத்தைந்து நாளாதலானும், தேவன் பன்னிருமதியென்றது மாசித்திங்களிலே தொடங்கிய பங்குனிப்பிறைமுதலாக மேல்வருகின்ற மாசியிற் பங்குனிப் பிறையளவும் பன்னிருமதியாதலானும், இருவரும் இரண்டுதிங்களிற் கூறினேனும் ஒருநாளென்பது பெற்றாம். சௌரமான பட்சத்தாலே ஐந்து நாளேறுகின்றதாகலின், ஆசிரியன்கூறியது அம்மாசியில் உவாவின் முன்கழிந்த தசமியிலெனக்கொள்க. இது ||"நாளெக்கிடக்கு" என்னுங் கவியானுமுணர்க. மாசித்திங்களில் ஆறாந்தெய்தி அமாவாசைமுதல் பங்குனித்திங்களில் ஐந்தாந்தெய்திவரை சாந்திரமான பட்சத்தாற் பங்குனியாகையாலே மண்டபமெடுத்தலும் விவாகங்களு முரியவாயின. இவ்விடத்தில் சௌரமானபட்சத்தான் மாசித்திங்கள் கொள்ளார்; சாந்திரமான பட்சமே சிறந்ததாகலின். இங்ஙனமிருவருங் கூறுகின்றகாவிடையில் நடந்தசரிதமாகிய நிரைமீட்டதூஉம், தத்தையையுங் குணமாலையையும் வரைதலும், சிறைவிடுத்தது நிகழ்ந்தன மாசியிலும் பங்குனியிலே சிறிதுநாளிலு மென்பதுணர்தற்கு மேலே ¶"பங்குனிப்பருவஞ்செய்தான்" என்றார். மேலே தோழர் பிள்ளையார்க்குத் தத்தையை ஓலை கொடுத்ததிலே **"ஐந்துமதியெல்லையிளையாண்டுடையனாகி" எனவே இவ்வோலை யெழுதுவதற்கு முன்னே எழுதிங்கள்சென்

* காந்தருவதத்தையாரிலம்பகம், கக. † நாமகளிலம்பகம், ௬௬௪.
‡ பதுமையாரிலம்பகம், ௫௫. § பதுமையாரிலம்பகம், ௫௬.
|| காந்தருவதத்தையாரிலம்பகம், ௬௮. ¶ குணமாலையாரிலம்பகம், க.
** கனகமாலையாரிலம்பகம், ௬௭.

றனவென்றாராதலின் இராசமாபுரத்தே முப்பத்தைந்துநாளும், * "இங்ஙன மிரண்டு திங்களேகலும்" என்றும் † "கழிந்தனவிரண்டுதிங்கள்" என்றுங் கூறுதலாற் பதுமையாரிடத்துங் கேமசரியாரிடத்தும்பங்குனிமுதலாக நான்குதிங்களும், இவ்வோலையெழுதுதற்குமுன்னே கனகமாலையாரிடத்து இரண்டுதிங்களும், ஆக வெழுதிங்களுஞ் சென்றனவென்று தேவர் திங்களைப்பகுத்துக் கூறுதலின், ஈண்டு ஸ்ரீதத்தனுக்கு "அணங்கனாரோடாடுமதிகழிந்தபின்றை" என்றல் பொருந்தாதென்பது பற்றி, முன் நிகழ்ந்ததோர் கதை தேவர்கூறுகின்றாரென்று பொருளுரைத்தல் வேண்டிற்றென்று கொள்க.

"சங்குதரு" முதலாக "மடவார்கள்கடனென்றெழுந்து போந்தான்" இறுதியொருதொடர்.

உடைநாய்கன் - வினைத்தொகை; சங்கமென்னும் இலக்கத்தை மேன்மேலே தருகிற பெரியபொருள் மிகவுங்கெட்டநாய்கன். ‡ "கலத்தினுங் காலினுந் தருவன ரீட்டக் - குலத்திற் குன்றாச் செல்வர்" என்று இளங்கோவடிகளுங் கூறினமையின், பொருளுடையவன்றான் இருந்துபொருளதேடுதலும் பொருளில்லாதவன்றான் கலத்திற்சென்று பொருள்தேடுதலும் வேண்டுதலின், இவனையும "ஒர்வங்கமொடுபோகி நிதிவந்துதரலுற்றான்" என்றும், "ஊனமெனுமின்றியினிதோடு கவிதென்றான்" என்றும், ஒருவங்கமே யுளதாகத் தேவர்கூறினமையாற் பொருளின்றித் தான் செல்கின்றானென்றுணர்க. பொருமால் களிறுபோன்று பொங்குதிரைமீதே ஒருவங்கத்தோடு போய்வந்து நிதிதரலுற்றானென்க. (க)

உ. மின்னெழுதுசாயன்மிகுபூட்பதுமைகேள்வன்
கொன்னெழுதுவேலியவதத்தன்குளிர்தூங்குந்
தன்வழியகாளைசீதத்தனவன்றன்போற்
பொன்னெழுகுன்றினுறைபோர்ப்புலியொடொப்பான்.

மின்னெழுகுசாயல் - ஒளிபரக்குஞ்சாயல். சாயலினையும் பூணினையுமுடைய பதுமைகேள்வன். பதுமை - ஸ்ரீதத்தன்மனையாள். கொன்னெழுகுவேல் - அச்சம்பரக்கின்றவேல். குளிர் - திசைச்சொல்; குளிருமென்னும் வினைசொல் குளிரெனத் தொழின்மேனின்றது; இருப்பென்றவாறு; செப்புப்போல. இப்பொழுது மனையிடத்திருப்புச்செறியும் யவதத்தன்வழியில் ஸ்ரீதத்தன். அ - அசைச்சொல். அவன்றன்போற்காளை - தந்தையையொக்குங்காளை. பொன் அசும்பாகவொழுகுங் குன்றிலே தங்கும் புலியோடொப்பான். (உ)

ங. இம்மியனநுண்பொருள்களீட்டிநிதியாக்கிக்
கம்மியருமூர்வர்களிறேடைநுதல்சூட்டி
யம்மிமிதந்தாழ்ந்துசுரைவீழ்ந்ததயஞ்சால்கென்
றும்மைவினைநொந்துபுலந்தாடலுணர்வன்றே.

இம்மி - மத்தங்காய்ப்புல்லரிசி; குறைந்ததோரெண்ணுமாம். பிறர் தொழில் செய்வாருஞ் சிறியபொருளைத்தேடிப் பெரியபொருளாக்கி, அதனானே களிற்றினுதலி

* பதுமையாரிலம்பகம், கககச. † கேமசரியாரிலம்பகம், அ௫.
‡ சிலப்பதிகாரம், மனையறம்படுத்தகாதை.

லே பட்டத்தைக்கட்டி, அதனையேறுவர். இதனால் நெடுங்காலமாகப் பொருள்தேடு மாறு கூறினான். ஆழ்தற்குரியஅம்மி மிதந்து மிதத்தற்குரியசுரை ஆழ்ந்து வீழ்ந்த தென்றது உயர்ந்தோர் வாழாதே தாழ்ந்தோர்வாழ்ந்ததனை. (௩)

௪. உள்ளமுடையான்முயற்சிசெய்யவொருநாளே
வெள்ளநிதிவீழும்விளையாததனினில்லை
தொள்ளையுணர்வின்னவர்கள்சொல்லின்மடிகிற்பி
னெள்ளினர்கட்கேக்கழுத்தம்போலவினிதன்றே.

முயலுமுள்ளமுடையான். வருந்தாமலொருநாளே வெள்ளமென்னு மெண்ணை யுடைய பெரும்பொருடிரளும். இதனால் ஒருநாளை முயற்சியிலும் வருமென்றான், முயற்சியின்பெருமைகூறுதலின். இனி நல்வினைவந்துதவுவதொருநாளிலே யென் றுமாம். ஏக்கழுத்தம் - தலையெடுப்பு; *"ஏ பெற்றாகும்" என்றாற்போல. (௪)

௫. செய்கபொருள்யாருஞ்செறுவாரைச்செறுகிற்கு
மெஃகுபிறிதில்லையிருந்தேயுயிரையுண்ணு
மையமிலையின்பமறனோடவையுமாக்கும்
பொய்யில்பொருளேபொருள்மற்றல்லபிறபொருளே.

செறுவார் - செறப்படுவார். மற்று - அசைநிலை.' எவையுமென்றும் பாடம். ()

௬. தூங்குசிறைவாவலுறைதொன்மரங்களென்ன
வோங்குகுலநையவதனுட்பிறந்தவீரர்
தாங்கல்கடனாகுந்தலைசாய்க்கவருதீச்சொ
னீங்கன்மடவார்கள்கடனென்றெழுந்துபோந்தான்.

வாவலுறையுமரம் - ஆல். என்ன - ஆல் தான்கெட விழுது தாங்கினாற்போல. தீச்சொல் - இவன்பிறந்து இக்குலங்கெட்டதென்னுஞ்சொல். நீங்கல் - தாங்காது போதல்.

இ - ள். ஸ்ரீதத்தன், காளை, புலியோடொப்பான், பதுமைகேள்வன், அவன் நிதி யங்கெட்டநாய்கனுதலால், தான்போய்ப் பொருடரக்கருதினான்; அங்ஙனங்கருதிக் கம்மியருங் களிறேறுவராதலான்முயற்சியேநன்றென்று கருதாதே வாழாதார் வாழக் காண்டலின் முயற்சிவேண்டா, அறமேயமையுமென்றுகருதி முற்பிறப்பில் நல்வினை செய்யப்பெற்றிலே மென்றுநொந்து அம்முயற்சியை வெறுத்தக் கலாய்த்திருத்தல் ஒருவர்க்கறிவன்று; அதுவேயுமன்றி உள்ளமுடையான் முயற்சியைச்செய்ய ஒரு நாளே நிதிதிரளும்; அந்நிதியாலே எல்லாத்துப்புரவுகளுமுளவாம்; அங்ஙனமெ ல்லாமாகின்ற முயற்சியைவிட்டுப் புனைபட்ட உணர்வினவர்கள் வருவது இடைத்தங் காதென்னுஞ் சொல்லான் மடிந்திருப்பின், அவ்விருப்புப் பகைவர்க்கு ஒரு தலை யெடுப்புப் பெற்றாற்போல இனிதாயிருக்கும்; அங்ஙனம் அவர் தலையெடாதபடி எல்லாரும் பொருளைத்தேடுக; தேடினாற் பகைவரைக்கொல்லும்படை அதனையொ ழியஇல்லை; தான் அவ்விடத்திருந்தேயும் பகைவரைக்கொல்லும், அதுவன்றித் தா னுளவாக இன்பத்திற் கையமில்லையாதலின், அறத்தோடே முற்கூறிய வற்றையு முண்டாக்கு மெய்யாகியபொருளே நன்குமதிக்கும் பொருள்; ஒழிந்த பொருள் நன்கு மதிக்கும் பொருளல்லவாதலின், இப்பொருளைக்கொண்டு தங்குலமைநிறவளவிலே

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரியியல், அ.

ஆலமரத்தின் வீழ்போலத் தீச்சொற்பிறவாமைத் தங்குலத்தைத்தாங்கல் அதனுட் பிறந்தவருடைய கடனாகும்; தங்குலத்தைத்தாங்காதுபோதல் பேதையாது கடனாகு மாதலான், யானுமுயன்று பொருள்தேடி என்குலத்தைத்தாங்குவேனென்று கூறி எழுந்திருந்து பண்டசாலையேறப்போந்தானென்க.

இவையெல்லாம் தன் பொருட்குறைபாட்டாற் கூறினான். (சு)

மோதுபடுபண்டமுனியாதுபெரிதேற்றி
மாதுபடுநோக்கினவர்வாட்கண்வடுவுற்ற
தாதுபடுதார்கெழியதங்குவரைமார்பன்
கோதுபடலில்லகுறிக்கொண்டெழுந்துபோந்தான்.

மாதுபடு - பெருமைபட்ட. வடுவுற்றவாட்கண்டங்குமார்பு - வடுவகிரையொத்த கண் தங்குமார்பு; வரைபோலுமார்பு; தார்கெழியமார்பு. கண்ணெளிமழுங்குதற்குக் காரணமான தாருமாம்.

இ - ள். மார்பன் பண்டத்தைப்பெரிதாகவேற்றிக் குற்றமற்ற நன்முகூர்த்தத் தையுங் கைக்கொண்டு பண்டசாலையினின்றுங் கடற்கரையேறப் போந்தானென்க. ()

வானமுறநீண்டபுகழ்மாரிமழைவள்ள
ற்றானமெனவேண்டுநர்கள்வேண்டுவனநல்கி
நானமிகநாறுகமழ்குஞ்சியவனேறி
யூனமெனுமின்றியினிதோடுகவிதென்றான்.

மாரிமழை - மாரிகாலத்துமழை. கமழ் குஞ்சி - இயல்பானமணங் கமழ்குஞ்சி.

இ - ள். குஞ்சியவனாகியவள்ளல் தானமென்றொரு பெயரையிட்டு வேண்டு வார் வேண்டுவனகொடுத்து மரக்கலத்தேறித் தெய்வத்தைநோக்கி இக்கலம் தீங்கு சிறிதுமின்றி நன்றாகவோடுவதாக வென்றானென்க.

எனவே முன்பு பலகலங்களுந் தீங்குற்றனவென்பது பெற்றாம். (அ)

ஆடுகொடியுச்சியணிகூம்பினுயர்பாய்மேல்
நீடுபடச்செய்நிரையரேத்தவிமிழ்முந்நீர்க்
கோடுபறையார்ப்பக்கொழுந்தாட்பவளங்கொல்லா
வோடுகளிறொப்பவினிதோடியதையன்றே.

இ - ள். கொடியணிந்தகூம்பிலே மூன்றுபாய் காறறுமுகக்கும்படி குழையக் கட்டுதலாலே முந்நீர்ப்பிறந்த சங்கும்பறையும் முழங்காநிற்கப் பவளக்கொடியை யறுத்து, ஓடுகின்றகளிறுபோலக் கம்மகாரர் கொண்டாடும்படி நன்றாக வோடிற்றென்க.

இதனாற் காற்றுமுகந்த பொழுது ஓடினவிசைகூறினார். (கூ)

திரைகடருஞ்சங்குகலந்தாக்கித்திரண்முத்தங்
கரைகடலுட்காலக்கனைபின்னொழியமுந்நீர்
வரைகிடந்துகீண்டதெனக்கீறிவளர்தீவி
னிரையிடறிப்பாய்ந்திரியவேகியதைமாதோ.

முந்நீரை ஒருமலை நில்லாதே கிடந்து கிழித்ததென்னும்படிகிழித்து. இது இல்பொருளுவமை.

இ - ள். அக்கலம் சங்குதன்னைத் தாக்குதலாலே அச்சங்கு ஒலிக்கிறகடலிலே முத்தைச்சொரிய அம்முந்நீரைக்கீறித் தீவினைழுங்கையிடறிக்குதித்துத் தன்மேலிருந்தெய்த அம்புபின்னேவீழக் கிழியப்போயிற்றென்க.

இதனாற் கடுகினவிசைகூறினார். (க0)

மின்னுமிளிர்பூங்கொடியுமென்மலருமொப்பா
ரன்னமொடுந்தோகைநடைசாயலமிர்தன்னார்
துன்னியினிதாகவுறைதுப்புரவின்மிக்க
நன்மையுடைநன்பொன்விளைதீபமடைந்ததே.

இ - ள். விளக்கத்தான் மின்னையும், நுடக்கத்தாற் கொடியையும், மென்மையான் மலரையுமொப்பார்; நடையுஞ்சாயலுமன்னத்தையுமயிலையுமொப்பார்; இத்தன்மையாரினிதாகவிருக்கிற துப்புரவுகளாலேமிக்கநன்மையுடையதீபத்தை அக்கலஞ் சேர்ந்ததென்க. (கக)

வேறு.

க. தீவினுளிழிந்துதேந்தார்ச்செம்மலுந்திருமுத்தாரங்
கோவினைக்குறிப்பிற்கண்டுகொடுத்தருள்சுமந்துசெம்பொற்
பூவினுள்ளவளையன்னபொங்கிளமுலையினார்த
நாவினுளமிர்தங்கேட்டுநாடகநயந்துமின்னாள்.

இதுமுதல் "ஆடகம்" அளவுமொருதொடர்.

திருமகள்சேருமாரம் ; "கறைபோய்வின்முத்தம்" என்றாற்போல. உம்மைத் தொகையுமாம்; முத்துவடமுமாம். சுமந்தென்றார், மிகுதிதோன்ற. உள்ளவள்- உண்டானவள் ; ஒருசொல். (கஉ)

உ. புணர்ந்தவர்பிரிதலாற்றாப்போகமீன்றளிக்குஞ்சாய
லணங்கினுக்கணங்கனாரோடாறுமதிகழித்தபின்றைக்
கொணர்ந்தனபண்டம்விற்றுக்கொழுநிதிக்குப்பையெல்லா
முணர்ந்துதன்மதலையேற்றிப்பொருட்படுத்தூர்க்குமீள்வான்.

தெய்வங்களுக்குந் தாந்தெய்வமன்னார். எல்லாமுணர்ந்தென்றார், சரக்கின்பெருமையாலுணரவரிதாகலின். (கங)

ங. அரசனைக்காண்டுமென்றுற்றவர்களைவிடுத்துநன்னா
ளிரேவதியியாழுவோரையிருஞ்சிலைமுளைப்பவேறிக்
கரைகடலழுவநீந்திக்காற்றினுங்கடுகியைஞ்ஞூ
றுரையுடைக்காதமோடியோசனையெல்லைசார்ந்தே.

ஏறி - ஏற. கரைசிறகடலழுவம் - கரையற்றணிதான கடற்பரப்பு. சார்ந்து- சார. இனி இரண்டெச்சமுந் திரியாமன் மரக்கலத்தின்றொழில் மக்கண்மேலேற்றுப; மரக்கலமோடிற்றென்றாற்போல. (கச)

ச. களித்தலைமயங்கியிப்பாலிருத்தலுங்கலந்தோர்காற்றிற்
றுளித்தலைமுகில்களீண்டித்தூங்கிருண்மயங்கிமாறு
விளிப்பதுபோலமின்னிவெடிபடமுழங்கிக்கூற்று
மொளித்துலைந்தொழியவெம்பியுரறினின்றிடிப்பாய்கள்.

முற்படக் கூற்றுமுலைக்கொளித்துப் போம்படி வெம்பி வெடித்தல் படமுழங்கிப் பின்னைச் சிறிதேமுழங்கிநின்றிடிப்ப. (௧௫)

௫. எண்டிசைவளியுமீண்டியெதிரெதிர்கலாவிப்பவ்வங்
கொண்டுமேலெழுவதொப்பக்குளிறிநின்றதிர்ந்துமேகந்
தண்டுளிபளிக்குக்கோல்போற்றாரையாய்ச்சொரிந்துதெய்வங்
கொண்டதோர்செற்றம்போலுங்குலுங்கன்மினென்றுகூறும்.

சொரிந்து - சொரிய. (௧௬)

௬. இடுக்கண்வந்துற்றகாலையெரிகின்றவிளக்குப்போல
நடுக்கமொன்றானுமின்றிநகுகதாநக்கபோழ்தவ்
விடுக்கணையரியுமெஃகாமிருந்தழுதியாவருய்ந்தார்
வடுப்படுத்தென்னையாண்மைவருபவந்துறுங்களன்றே.

எரிகின்ற விளக்குப்போல நடுங்கு நடுக்கம். கள் - அசை. (௧௭)

௭. ஆடகச்செம்பொற்கிண்ணத்தேந்தியவலங்கற்றெண்ணீர்
கூடகங்கொண்டவாழ்நாளுலந்ததேற்கொல்லும்பவ்வத்
தூடகம்புக்குமுந்நீரழுந்தினுமுய்வர்நல்லார்
பாடகம்போலச்சூழ்ந்தபழவினைப்பயத்தினென்றான்.

அலங்கற்றெண்ணீர் - துளங்குகிறதெண்ணீர். கூடகங்கொண்ட - உடம்புள்ளேகொண்ட. மகளிர்காலிற்பாடகம் ஒருகம்பியாய்ப் பலமுடக்காலே போக்கும் வரவுமுண்டானாற்போலத் தோன்றிக் காலைவிடாதே கிடந்தாற்போலப் பழவினையெனவொன்றேயாயது நல்வினைதீவினையெனவிரண்டுபோற் றோன்றி இவனைச் சூழ்ந்துகிடக்குமென்க. இனிப் பாடு பக்கமாக்கி மகளிரிடத்துநெஞ்சுபோலே சூழ்ந்தவென்றுமாம். நல்லாருய்வரென்றுமாம்.

இ - ள். செம்மலும் தீவினுள்ளே யிழிந்து ஆரங்கொடுத்து அரசனை அவன் குறிப்புடனேகண்டு அவன்றலையளியைச்சுமந்து திருவையொத்தமகளிரது பாட்டைக் கேட்டு அவர்களுடைகத்தையும் விரும்பி, சிலநாட்கூடினவர்கள் பலநாளாகப்பிரிய வொண்ணாததொருபோகத்தை யுண்டாக்கிக்கொடுக்கும் அவ்வணங்களுடனே அங்ஙன மாறுதிங்கள்சென்றபின்பு நிதிக்குப்பை யெல்லாம் உணர்ந்து அதனை மரக்கலத்தேயேற்றி அங்குள்ளகாரியத்தை யொருப்படுத்தித் தன்னூர்க்குவரவேண்டி, மீண்டு மரசனைக்கண்டு தான்செறிந்தவர்களைப்போக்கி நன்னாளாகிய இரேவதியிலே வியாழவோரையிலே தற உதயமாக மரக்கலத்தையேற; அஃது அழுவத்தைக்கடந்து கடுகி ஐஞ்ஞூறென்கிற வார்த்தையையுடைய காதத்தையோடித் தான்போனகரை ஓரோசனையெல்லையெனச் சேருதலாலே, தாம் களியிடத்தே பொருந்தியிருந்தவளவிலே இவ்விடத்திலே இருள்போன்றெங்கும்பரந்து ஒருகாற்றாலே முகில்களீண்டி எத்திசையுங்கலந்து கெடுப்பதுபோல மின்னியிடியாநிற்க; அதனைக்கண்டு சிலமொழி கூறும் நாய்கன்: எண்டிசையிற்காற்றுமீண்டி ஒருகாற்றுக்கெதிரே ஒருகாற்றுக் கலந்து கடலைக்கொண்டு மேலேயெழுமுழியிறுதியையொவ்வாநிற்க மேகமும் நின்றதிர்ந்து துளியைச்சொரியும்படி நம்முடனே தெய்வங்கொண்டதொரு செற்றம்போலேயிருந்தது, இதற்கு நீங்களசையாதொழிமினென்றுகூறி, பின்னுங் கட்புலனும்படி இடுக்கண்வந்துற்றபொழுது நடுக்கஞ்சிறிதுமின்றித் தாம் நகுவாராக; அங்ஙன

நக்கபொழுது அவ்விடுக்கணையறியும்வாளாம்; அங்ஙனநகாதிருந்தழுது பிழைத்தா ரொருவருமில்லை; ஆதலாலழுவேண்டா; வருந்நீங்கும் நன்றும் வந்தேசேரும்; அவை வந்துசேருமிடத்தும் பாடகம்போலச் சூழ்ந்த பழவினையினல்வினைப் பயத்தாலே வாழுநாளுலந்ததில்லையாயிற் கடலுட்கு நடுவுட்கு அந்தடுக்கடலிலே அழுந்தினும் பிழைப்பர்; தீவினைப்பயத்தாலே வாழுநாளுலந்தாராயின் உயிர்க்குக்காவலாகிய சிறிதுதண்ணீருங் கட்புலனாகாமற் சொல்லுமாதலால் ஈண்டாண்மையை வடுப்படுத்திப் பெறுவதென்னையென்றுனென்க. (கஅ)

வினையதுவிளைவின்வந்தவீவருந்துன்பமுன்னீர்க்
கனைகடலழுவநீந்திக்கண்களிற்றிரங்கல்வேண்டா
நனைமலர்ப்பிண்டிநாதனலங்கிளர்பாதமூல
நினையுமினீவிரெல்லாநீங்குமினச்சமென்றான்.

இ - ள். தீவினையின் பயனுகிவந்த துன்பமாகிய பழையநீரையுடைய கடற்பரப்பைநீந்திக் கண்கலுழ்ந்து வருந்தல்வேண்டா; நீவிரெல்லாம் நாதன்பாதமூலத்தை நினைமின்; அச்சநீங்குமினென்றுனென்க.

பாதமாகிய துன்பநீக்குதற்குக்காரணமாயதனை. கலம்பெறுதலும் அவர்வருத்தமுமாக விவற்குத்தோற்றியதன்றி அவர்க்கிவையின்மை "நாடகநாங்களூற்றது" என்றதனும் பிறவாற்றுனுமுணர்க. (கக)

பருமித்தகளிறனும்பையெனக்கவிழ்ந்துநிற்பக்
குருமித்துமதலைபொங்கிக்கூம்பிறப்பாய்ந்துவல்லே
நிருமித்தவகையிலோடிநீர்நிறைந்தாழ்ந்தபோது
வுருமிடித்திட்டதொப்பவுள்ளவரொருங்குமாய்ந்தார்.

இ - ள். பன்னிணகளிறனும் மெல்லெனத்தலைசாய்த்துநிற்ப; மதலை முழங்கிப் பொங்கித் தரணினைத்தகூம்பிலே யோடிக் கூம்புமுறியப்பாய்ந்து நீர் நிறைந்து உருமிடித்த தன்மையையொப்ப அழுந்தினபொழுதிலே அங்குள்ளவரெல்லாஞ்சேர மறைந்தாரென்க. (உ0)

வேறு.

ஓம்பிப்படைத்தபொருளும்முறுகாதலாரும்
வேம்புற்றமுந்நீர்விழுங்கவ்விளையாதுநின்றான்
கூம்பிற்றதுண்டந்தழுவிக்கிடந்தான்சொழித்துத்
தேம்பெற்றபைந்தாரவனைத்திரையுய்த்ததன்றே.

இ - ள். பாவம்வராமற் பரிகரித்துத் தேடினபொருளையுங் காதலாரையுமுவர்த்தலுற்றநீர்விழுங்காநிற்கக் கலங்காமனின்றவன் துண்டந்தழுவிக்கிடந்தான்; அத்தாரவனைத் திரை கொழித்துக் கரையிலேசெலுத்திற்றென்க. (உக)

நாவாயிழந்துநடுவாருமிலியாமநீந்திப்
போவாய்தமியேபொருளைப்பொருளென்றுகொண்டாய்
வீவாயெனமுன்படையாய்படைத்தாய்வினையென்
பாவாயெனப்போய்ப்படுவெண்மணற்றிட்டைசேர்ந்தான்.

இ - ள். வினையே, முன் படைக்கிறபொழுதே பொருளைப்பொருளென்று கொ

ண்டநீ வீவாயெனப்படையாயாய், நாவாயிழந்து ஆருமில்லாத நடுஇயாமத்தேகடலை நீந்தித் தனியேபோவாயெனப் படைத்தாய், நீ இனி எத்தைச்செய்யாயென்று கூறிப் போய்க் கொழிக்கின்றமணற்றிட்டையிலே சேர்ந்தானென்க.

எனவென்பதை இரண்டிடத்துங்கூட்டுக. (௨௨)

வேறு.

பொரியனைஞாழலும்புன்னையும்பூத்து
வரிதருவண்டொடுதேனினமார்க்குந்
திருவிரிபூம்பொழிற்செவ்வனஞ்சேர்ந்தாங்
கருவரைமார்பனவலித்திருந்தான்.

இ - ள். மார்பன் ஞாழலும்புன்னையும்பூத்தலால் இசையைத்தருகின்றவண்டுந் தேனுமார்க்கின்ற பொழிலிலே நேரே சென்றுசேர்ந்து வருந்தியிருந்தானென்க.

அம் - அசை. (௨௩)

ஓடுந்திரைகளுதைப்பவுருண்டுருண்
டாடுமலவனையன்னமருள்செய
நீடியநெய்தலங்கானனெடுந்தகை
வாடியிருந்தான்வருகலநோக்கா.

இ - ள். நெடுந்தகை நெய்தனிலத்திற் கானலிலே அலவனை அன்னம் அருளுத லாலே, அது தனக்கு நன்னிமித்தமாகக்கருதி நாம்போம்படி இவ்விடத்து வருங் கலமுளதோவென்றுநோக்கி அதுகாணாமையின வருந்தியிருந்தானென்க.

அன்னங்கொல்லாதிருந்ததன்மை தான்பற்றுக்கோடாக வாழ்வானைக் காலானு தைத்துத் தன்முன்னே தள்ளவும் போக்கற்றுப்பின்னும் அதனிடத்தே செல்லாநின்ற தென்றுநோக்கி அதற்கருளினாற்போலே யிருந்ததென்க. (௨௪)

ஆளியமொய்ம்பனிருந்தவப்பூம்பொழிற்
றாள்வலியானொர்மகனைத்தலைப்பட்டுக்
கேளிரெனக்குற்றகேண்மினீரெனத்
தோள்வலிமிக்கான்றொடர்ந்துரைக்கின்றான்.

இ - ள். ஆளி மொய்ம்பனாகிய அத்தோள்வலிமிக்கான் தானிருந்த அப்பொழி லிலே முயற்சிவலியான் ஒருமகனைச்சென்றுபொருந்திக் கேளிரே, எனக்குற்றவருத் தத்தை நீர் கேண்மினென்றிடைவிடாதுகூறுகின்றானென்க.

அதனை மொழிந்தானென்பதனோடு முடிக்க. தான் வழிப்போவானைப் போலே வந்தான். அ - அசை. (௨௫)

கருங்கடற்போயிற்றுங்காற்றிற்கவிழ்ந்து
திருந்தியதம்பொருடீதுற்றவாறு
மரும்புணைசார்வாவவனுய்ந்தவாறு
மிருந்தவற்கெல்லாமெடுத்துமொழிந்தான்.

இ - ள். பொருளின்மையினதுதேடுதற்குக்கடலிற்போனசெய்தியும், நல்வழி யாற்றேடிய தன்பொருள் காற்றாற்கலங்கவிழ்தலாலே தீதுற்றபடியும், தெப்பஞ்சார்

வாகத் தானுய்ந்தபடியு மெல்லாந் தானிருந்து அத்தரனுக்கு உயர்த்துக் கூறினு னென்க. (௨௬)

மானுமரனுமிரங்கமதவழி
தானுற்றதுன்பந்தரனுக்குரைத்தபின்
றேனுமமிழ்துந்திளைத்தாங்கினியன
வூனமில்கட்டுரைக்குள்ளங்குளிர்ந்தான்.

இ - ள். ஸ்ரீதத்தன் மானுமரனுமிரங்கும்படி தானுற்றதுன்பத்தை அங்ஙனந் தரனுக்குரைத்தபின்பு, அவன்யானிழந்ததற்கெல்லாம் நின்னைப்பெற்றேனேயென்று கூறியவுரைக்கு அத்தரன் உள்ளங்குளிர்ந்தானென்க.

இவனைப்பெறுதல்கருதுதலின் ஊனமிலுரையாயிற்று. திளைத்தல் - அருந்தொழுகுதல். உரைத்தலினென்றபாடத்திற்குத் தரன்கூறியதற்கு ஸ்ரீதத்தன் மகிழ்ந்தானென்க. (௨௭)

விஞ்சைகள்வல்லேன்விளிந்தநின்றோழரொ
டெஞ்சியவான்பொருளெல்லாமிமைப்பினுள்
வஞ்சமொன்றின்றிமறித்தேதருகுவ
னெஞ்சிற்குறைந்துநினையன்மினென்றான்.

இ - ள். விஞ்சை பலவும்வல்லேனாதலாற் கெட்டநின்றோழருடனே நின்னை நீங்கிய நீதியாலுண்டான பொருளெல்லாம் ஒருமாத்திரையில் வஞ்சனைசிறிதின்றாகக் கெடுதியைநீக்கித்தருவேன். இனி நீயிர்கெட்டநெஞ்சிற்பலகானினையாதொழிவீராக வென்றானென்க.

நினையன்மின் - ஒருவரைக்கூறும்பன்மை. (௨௮)

உரையகங்கொள்ளவுணர்த்தினனாகி
வரையகமேறவலிமினமென்று
விரைசெலல்வெம்பரிமேழகமேற்றிக்
குரைகழன்மைந்தனைக்கொண்டுபறந்தான்.

இ - ள். தருவேனென்றவுரையை மனங்கொள்ளும்படி மைந்தனையுணர்த்தினனாய் இவ்வரையிடத்தே யேறும்படி துணிவீராகவென்றுகூறித் தானிருமித்தபரிபோலுஞ் செலவினையுடைய மேழகத்தையேற்றித் தான்கொண்டு பறந்தானென்க.

அம் - அசை. (௨௯)

விசும்பிவர்மேகம்விரைவினர்போழ்ந்து
பசும்புயற்றுளிபக்கநனைப்ப
நயந்தனர்போகிநறுமலர்ச்சோலை
யசும்பிவர்சாரலருவரைசார்ந்தார்.

இ - ள். பசும்புயற்றுளி பக்கத்தைநனைப்ப அதனைநயந்தனராய் அம்மேகத்தைப்பிளந்து விரைவினராய்ப்போய்ச் சோலையினையுஞ் சாரலினையுமுடைய மலையைச்சேர்ந்தாரென்க.

அசும்பு - நீர்ப்பொசிவு. (௩௦)

கண்டாலினியனகாண்டற்கரியன
தண்டாமரையவடாழ்ந்தகையன

கொண்டான்கொழுங்கனிகோட்டிடைத்தூங்குவ
வுண்டாளமிழ்தொத்துடம்புகுளிர்ந்தான்.

இ - ள். அவன் அம்மலையிலே உலகிற்காண்டற்கரியனவாய்க் கண்டாற் கட்கினியனவாய்த் திருவிரும்புந் தன்மையவாய்க் கோட்டிடையிலே அமிர்தொத்துத் தூங்குவனவாகிய கனியைக்கொண்டான்; கொண்டு உண்டான்; உண்டு உடம்பு குளிர்ந்தானென்க. (ருக)

மழைதவழ்சோலைமலைமிசைநீண்ட
குழைதவழ்குங்குமங்கோழரைநாகந்
தழைதவழ்சந்தனச்சோலையினோக்கி
யிழைதவழ்மார்பனினிதினுவந்தான்.

நான்கடியுந் தவழ்தல் - பரத்தல்.

இ - ள். இழையொளிபரத்தற்குக் காரணமான மார்பன் நீண்ட அம்மலைமிசையிற் குங்குமத்தையும் நாகத்தையுஞ் சந்தனச்சோலையோடே நோக்கிக் கட்கினிமையினாலே மனமகிழ்ந்தானென்க. (ருஉ)

கோதையருவிக்குளிர்வரைமேனின்று
காதங்கடந்தபின்கன்னிக்கொடிமதி
றாதனுறைவதொர்நன்னகருண்டாங்குப்
போதுமெழுகெனப்போயினர்சார்ந்தார்.

இ - ள். மாலைபோலுமருவியையுடைய அம்மலையிலே தான் நின்று இம்மலையிலே காதங்கடந்தபின்பு நாதனுறைவதொரு கொடிமதினகருண்டு; ஆங்குப் போகக்கடவோம்; அதற்கெழுந்திருப்பாயாகவெனக்கூற; அவரும்போயினராய் அந்நகரைச் சேர்ந்தாரென்க.

முன் வரையளவென்றிருந்தவனை, இது கூறியெழுகென்றான். நகர் - ஸ்ரீகோயிலென்று கருதினன். (ருங)

வேறு.

மேகமேமிடைந்துதாழ்விருள்கொண்டவெள்ளிக்குன்றம
மாகத்துவிளங்கித்தோன்றும்வனப்புநாம்வகுக்கலுற்று
றாகந்தான்கரியதொன்றுகிழ்நின்றுநடுங்கககவ்விப்
பாகமேவிழுங்கப்பட்டபான்மதிபோன்றதன்றே.

இ - ள். தாழ்வரையெல்லாம் மேகமே நெருங்கியிருத்தலாலே ஒன்றுபாதியிருட்சிகொண்டவெள்ளிமலை ஆகாயத்தேதோன்றுகின்ற வழகை நாம்வகுத்துக்கூறத்தொடங்கினால் கரியதொருநாகந்தான் கீழேநின்று அதுவருந்தும்படிமுதற்கவ்விப்பின்பு ஒன்றுபாதியேவிழுங்கப்பட்ட மதிபோன்றதென்றுகூறலாம் வேறரிதென்க.

ஏகாரம் - தேற்றேகாரம். (ருச)

துளங்குபொன்னகரின்றன்மைசொல்லலாஞ்சிறிதோர்தேவன்
விளங்குபொன்னுலகத்துள்ளதுப்புரவிடங்களெல்லா
மளந்துகொண்டின்பம்பூரித்தணிநகராக்கிமேலா
விளங்கதிர்ப்பரிதிசூட்டியியற்றியதென்னலாமே.

பரிதி - வட்டம்; ஆகுபெயர்; என்றது: பொன்மதிலை "அத்தேர்ப் பரிதி சுமந்த யானை" என்றார் பிறரும்.

இ - ள். நகரின்றன்மை நமக்குச் சிறிது கூறலாம்; எங்ஙனமென்னின் ஒரு தேவன் அம்மதிபோலு மலைத்தலையிலே ஞாயிறுபோலு மதிலைச்சூட்டி அதனுள்ளே நகராக்கி அந்நகரிடங்களெல்லாம் பொன்னுலகில் இன்பத்தையுடைய நுகர்பொருள் களையாராய்ந்து கொண்டு நிறைத்து இங்ஙனஞ்செய்ததோர் நகரியென்று கூறலா மென்றாரென்க. (௬௫)

வேறு.

பொங்கியாயிரந்தாமரைபூத்தபோற்
செங்கணாயிரஞ்சேர்ந்தவன்பொன்னகர்
கொங்குதோய்குழலாரொடுங்குன்றின்மேற்
றங்குகின்றதுபோற்றகைசான்றதே.

தாமரை மிக்கு ஆயிரம்பூவைப் பூத்தனபோலுங் கண்கள்.

இ - ள். அங்ஙனங்கூறலின் அந்நகர் இந்திரனமராபதி தெய்வமகளிரோடே வந்து வெள்ளிமலைமேற் றங்குகின்றதன்மைபோல அழகமைந்ததென்க. (௬௬)

கிடங்குசூழ்மதிற்கேழ்கிளாபூகொடி
மடங்கனோக்கியர்வாண்முகம்போலுமென்
றுடனாறுவெண்மதியுள்ளுரத்தம
குடங்கையாற்கொம்மைகொட்டுவபோன்றவே.

இ - ள். மதிலிற்கொடி மதியைத்தீண்டுகின்ற பொழுது இம்மதி மகளிர் முகத்தையொக்கும்; இதற்கு நாம் அருளவேண்டுமென்றுகருதி அவையெல்லாஞ் சேர அம்மதியின் மனங்குளிரும்படி தம்முடையகுடங்கைகளாலே நீ முகத்தையொப்பை நல்லைநல்லை யென்று அதன்புறத்தே தட்டுவனபோலே யிருந்தனவென்க. (௬௭)

திருவமேகலைதெள்ளரிக்கிண்கிணி
பரவையாழ்குழற்பண்ணமைமென்முழா
வுருவம்பாருடையாரென்றுளிர்க
ரரவம்வாய்திறந்தார்ப்பதுபோன்றதே.

அ - அசை.

இ - ள். மேகலை கிண்கிணி பேரியாழ் பண்ணையுடையகுழல் முழாவென்கின்ற இவற்றினரவமெங்ஙனமிருந்ததென்னின், இவ்வுலகில் என்னிற்காட்டிலுருவுடையார் யாரென்று நகர்தான் வாய்விட்டார்க்குந் தன்மைபோலேயிருந்ததென்க. (௬௮)

செம்பொன்மாடங்கள்சென்னியமுழுகிய
வம்பொற்றிண்ணிலையாய்மணித்தூவிகள்
வெம்புநீள்சுடர்வீழ்ந்துசுடுதலிற்
பைம்பொற்கொப்புளம்பரந்தனபோன்றவே.

இ - ள். தந்தலையிலழுத்திய மணித்தூவிகளையுடைய மாடங்கள் ஞாயிறு தாழ்ந்து சுடுதலினாலே பொன்உருகிக் கொப்புள் பரந்தனபோன்றனவென்க.

பொன்றாற் றிண்ணிய நிலையுண்டாகக் கட்டினதூவி. (௬௯)

உருளிமாமதியோட்டொழித்தோங்கிய
வெருளிமாடங்கண்மேற் றுயிலெய்தலின்
மருளின்மான்பிணைநோக்கினல்லார்முகத்
தருளினுலமூலாற் றுவபோன்றவே.

இ - ள். மதியைச் செலவைத்தவிர்த்து மேலேயோங்கிய வெருட்சியையுடைய மாடங்களின்மேலே ஞாயிற்றின்றேர்பூண்டமாக்கள் துயிலைப்பெறுதலாலே அவை நல்லார் முகத்திலருளால் தம்வெம்மையை ஆற்றுவனபோன்றவெனக.

உருள் வெருள் இ - பகுதிப்பொருள் விகுதி. சோதிடநூலாரிங்ஙனங்கூறுப. (௬௦)

அசும்புபொன்வரையாய்மணிப்பூண்களும்
பசும்பொன் மாலையும்பட்டுழிப்பட்டவை
நயந்துகொள்பவரின்மையினன்னகர்
விசும்புபூத்ததுபோன்றனவீதியே.

இ - ள். பொன் இடையறுதொழுகுகின்ற வரையிற்பிறந்த மணியாற்செய்த பூண்களும் மாலையும் விழுந்த விடத்தேகிடக்கின்றவற்றை எடுப்பாரின்மையின், அந் நகர்வீதி ஆகாயம் மீனைப்பூத்த தன்மையையொத்தனவெனக. (௬௧)

தேக்கணின்னகிறேனொடுகூட்டமைத்
தாக்கப்பட்டவளவில்கொழும்புகை
வீக்கிமாடந்திறந்திடமெல்லவே
யூக்கிவாய்விட்டுயிர்ப்பனபோன்றவே.

இ - ள். நெய்யையிடத்தேயுடைய நாற்றமினிய அகிலையும் ஒழிந்தகூட்டை யுந்தேனோடேபிசைந்திட்டுண்டாக்கினபுகையை மாடங்களிற்சாளரங்களையடைத்து நிறைத்து அவற்றைத்திறக்க; அம்மாடம் புகையைப்பொறுக்கமாட்டாது வலிய வாயங்காந்து மெல்லெனக்காலுவனபோன்றனவெனக.

“கூட்டாவன:” நேர்கட்டி செந்தே னிரியாசங் கற்பூர - மார மகிலுறுப்போ னைந்து. நிரியாசம் - பிசின். அது குங்குலியமுதலியன. (௬௨)

தப்பில்வாய்மொழித்தானவர்வைகிய
வொப்பின்மாநகரொண்மைமற்றியாதெனிற்
கற்பத்திந்திரன்காமுறுமாமணிச்
செப்புவாய்திறந்தன்னதொர்செம்மற்றே.

இ - ள். தானவா தங்கியநகரின்விளக்கம் பின்னை எங்ஙனமிருந்ததென்னில் இக்கற்பத்துக்குரிய இந்திரன்விரும்பிய பூண்தங்குமணிச்செப்பை வாய்திறந்தாற்போ லுஞ்செம்மற்றெனக. (௬௩)

வேறு.

நன்னகர்நோக்கிநாய்கனுகங்கொல்புகுந்ததென்னப்
பொன்னகர்பொலியப்புக்குப்பொங்குமாமழைகடங்கு
மின்னவிர்செம்பொன்மாடத்திருவருமிழிந்துபுக்குப்
பின்னவன்விருந்துபேணிப்பேசினன்பிறங்குதாரான்.

மழைதங்குமிருவரென்றது தரன்கதியாற்றங்குதலும் ஸ்ரீதத்தன் கொடையாற் றங்குதலும். இனி வெள்ளிமலை மேகபதத்துக்கு மேலென்றுரேனு மேகமெங்குமுள தென்று மழைதங்குமாடமென்றுமாம்.

இ - ள். நாய்கன் நகரைநோக்கி நரம்புகுந்தது நாகமோவென்றுசருதும்படி பொன்னகரிலேபுக்குப் பின்பு இருவருமிழிந்து தானுடையமனையிலே செல்லுதலா லே அவன்விருந்திட்டுப் பின்பு அத்தரனொருமொழி கூறினனென்க. (சச)

க. மாடியந்தானைமன்னர்மாமணிநாகமாகக்
கேடில்சீர்க்கலுழனுயகலுழவேகற்குத்தேவி
தோடலர்கோதைநொல்சீர்த்தாரணிசுரும்புண்கண்ணி
யாடவரறிவுபோழுமணிமுலையணங்கினன்னாள். (சரு)

உ. விண்ணகம்விளங்கவெண்கோட்டிளம்பிறைமுளைத்ததேபோற்
பண்ணகத்தினியசொல்லாள்பாவையைப்பயந்தவன்றே
யெண்ணிடமின்றிமன்னரிம்மலையிறைகொண்டீண்டி
யண்ணலங்களிற்றினுச்சிபெருங்கலவெறுக்கையீந்தார்.

இவையிரண்டு மொருதொடர்.

மாடியம் - உடம்புக்கீடு.

இ - ள். மன்னர்நாகமாகத் தான் அவர்களுக்குக் கருடனாகியகலுழவேகற்குத் தேவியாகியதாரணி, அணங்கினன்னாளுமாய், இனியசொல்லாளுமாயிருக்கிறபாவை யை விண்ணிடத்தே பிறைதோன்றினாற்போல எல்லாரும்வணங்கும்படி பெற்றஅற் றைநாளே எண்ணிட இடமின்றாக இம்மலையில் மன்னரெல்லாமீண்டித் தங்குதல்கொ ண்டு களிற்றினுச்சியிலே கலமாகியசெல்வத்தைக்கொடுத்தாரென்க.

அன்றே பேசினாரென்க. (சசு)

மந்திரத்தரசன்வல்லேநிமித்திகன்வருகவென்ன
வந்தரத்தோடுகோளிற்சாதகமவனுஞ்செய்தா
னிந்திரதிருவிலேய்ப்பக்குலவியபுருவத்தாட்கு
வந்தடைபான்மைமண்மேலிராசமாபுரத்ததென்றான்.

மந்திரம் - ஆகுபெயர்.

இ - ள். விச்சாதரலோகத்தின்கணரசன், கணி, கடுகச் சாதகஞ்செய்துவருக வென்றவனுக்கு அவனுங் கோளாலேயெண்ணிச் சாதகஞ்செய்தான்; அங்ஙனஞ்செய் தவன் தத்தைக்குவந்துசேரு நல்வினைப்பயனெல்லாம் மண்மேலிராசமாபுரத்தே வந் துசேருமென்று கூறினனென்க. (சஎ)

அவனுரைதெளிந்துவேந்தனுசையுளரசர்நிற்பக்
கவனங்கொள்புரவிக்கொட்பிற்காதலுங்கரந்துவைத்தா
னவனதேகருதிற்றுங்கொலன்றுகொலறியலாகா
விவணதுமறிதுமென்றுகோயிலுக்கேகினானே.

இ - ள். அரசர் எமக்குத்தருமென்னுமாசையிலேநிற்ப; கணி தான்கூறியவுரை யைத்தெளிந்து அங்கேகொடுக்குமென்று நிற்ப, வேந்தன் இடமும்வலமும் பாய்கின்ற கதிவிசேடத்தைக்கொண்ட குதிரையினதுமனத்திற் சுழற்சிபோலே தன்காதலையு

மிரண்டிடத்துக்குமேற்பக்கூறி மறைத்துவைத்தானாதலால், அவன்கருதியகாரியம் அக்கணி கூறியதேயாயிருக்கின்றதோ, அன்றி அரசர்கருதியதேயோ, இரண்டிதற் குமுன்னறியமுடியா, இனி நீவந்தபடியாலே இப்பொழுது அவன்கருதியதும்விள ங்கவறியக்கடவேமென்றுகூறிப் பின்பு ஸ்ரீதத்தனையுங்கொண்டு கோயிலுக்கேகினு னென்க.

அதுவும் - விகாரம். அரசனதுகருத்துந் தெள்ளிதினுணரலாகாமையின் இவற்கு ஈண்டுமுண்மைகூறாது காரியமுடிந்தபோகின்றபொழுது கூறினன். (சஅ)

க. பால்பரந்தனையபட்டார்பூவணைபசும்பொற்கட்டிற்
கால்பரந்திருந்தவெங்கட்கதிர்முலைகச்சின்வீக்கி
வேல்பரந்தனையகண்ணார்வெணமதிக்கதிர்பெய்கற்றை
போலிவர்கவரிவீசமன்னவனிருந்தபோழ்தின்.

"பால்" "என்வரவு" இரண்டுமொருதொடர்.

பாலாவிபரந்தன்னபட்டு. கச்சாற்கட்டி அடிபரந்து தளராதிருந்த முலையினை யுடைய. வேல் கொலையிலேபரந்தாற்போலுங்கண்ணார். மதியின்கதிர்களைச் சொரிந்த போலுங்கவரி. (சக)

௨. என்வரவிசைக்கவென்னவாயிலோனிசைப்பவேகி
மன்னர்தமுடிகள்வேய்ந்தவயிரம்போழ்ந்துழுதுசேந்த
பொன்னவிர்கழல்கொளபாதம்பொழிமழைத்தடக்கைகூப்ப
வின்னுமைமுகமன்கூறித்தானத்தினிருக்கவென்றான்.

என்வரவு - ஸ்ரீதத்தனைக்கொண்டுவந்த வரவு. பிளந்துழுதலாலே சிவந்த.

இ - ள். அங்ஙனமேகினதான் கண்ணார்கவரிவீசக் கட்டிலிற் பூவணையிலே மன்னவனிருந்தவளவிலே, என்வரவிசைக்கவென்ன, வாயிலோனுமிசைப்ப, ஸ்ரீதத் தன்போய்ப் பாதத்தைவணங்க, மன்னவனுபசாரங்கூறி, அரசிருத்தற்குரிய இடத் தேயிருக்கவென்றானென்க. (ருo)

முதிர்பெயன்முரிவானமுழங்கிவாய்விட்டதொப்ப
வதிர்குரன்முரசநாணவமிர்துபெய்மாரியேய்ப்பக்
கதிர்விரிபூணினாற்குத்தந்தைதாய்தாரங்காதன்
மதுரமாமக்கள்சுற்றம்வினவிமற்றிதுவுஞ்சொன்னான்.

வான் அச்சத்திற்கும், முரசு முழக்கத்திற்கும், மாரி கேட்டற்கினிமைக்கு முவமை.

இ - ள். அங்ஙனங்கூறியவரசன் ஒப்ப நாண ஏய்ப்ப அவனுடையதந்தைமுத லியவர்களைவினவிப் பின்பு அந்த ஸ்ரீதத்தனுக்கிதுவுங்கூறினனென்க.

அது மேற்கூறுகின்றார். (ருக)

இன்றையதன்றுகேண்மையெமர்நுமரெழுவர்காறு
நின்றதுகிழமைநீங்காவச்சிரயாப்பினாழா
லன்றியுமநுமொன்றேயரசன்யான்வணிகனீயெ
யென்றிரண்டில்லைகண்டாயிதுநினதில்லமென்றான்.

வச்சிரத்தாற் றலையிலிட்ட எழுத்து. *"வச்சிரநுதியினிட்ட - வெழுத்தனான்" என்ப மேலும்.

* கேமசரியாரிலம்பகம், கஉக.

இ - ள். கேண்மை இன்றுளதாயதன்று; வச்சிரயாப்பினீங்காத விதியினாலே எமரெழுவர் நுமரெழுவரளவு மேழுகிழமையும்போல ஏற்றிழிவின்றி நின்றது அக் கேண்மை; அன்றியுஞ் சமயமுமொன்றேயாதலின், யானரசன் நீவணிகனென்று இரண்டெனாதியில்லைகாண், இது நின்மனைகாணென்றானென்க.

கிழமை - உரிமையுமாம். (ருஉ)

க. மந்திரமன்னன்சொன்னீர்மாரியால்வற்றிநின்ற
சந்தனந்தளிர்த்ததேபோற்சீதத்தன்றளிர்த்துநோக்கி
யெந்தைக்குத்தந்தைசொன்னானின்னணமென்றுகேட்ப
முந்தைதான்கேட்டவாறேமுழுதெடுத்தியம்புகின்றான். (ருஙா)

உ. வெள்ளிவேதண்டத்தங்கண் வீவிறென்சேடிப்பாலிற்
கள்ளவிழ்கைதைவேலிக்காசில்காந்தாரநாட்டுப்
புள்ளணிகிடங்கின்விச்சாலோகமாநகரிற்போகா
வெள்ளிவேற்கலுழவேகன்வேதண்டவேந்தர்வேந்தன். (ருச)

ந. சஙகுடைந்தனையவெண்டாமரைமலர்த்தடங்கள்போலு
நங்குடித்தெய்வங்கண்டீர்நமரங்காளறிமினென்னக்
கொங்குடைமுல்லைக்கொய்போதிருவடங்கிடந்தமார்ப
விங்கடிபிழைப்பதன்றாலெங்குலமென்றுசொன்னான்.

இவைமூன்று மொருதொடர்.

தடங்களிலே உடைந்ததன்மையவாகிய மலரும் சங்கும்போலு நங்குடி. இது தூய்மைக்குவமை; இனிச் சங்கு கெட்டாலுநிறங்கெடாததுபோலக் கெட்டாலுந் தன் றன்மைகெடாதகுடியுமாம்; *"நத்தம்போற்கேடும்" என்ப. அரசமுல்லையுங் காவன் முல்லையுங்கருதி இருவடமென்றது.

இ - ள். மாரியின்மையின் வற்றிநின்றசந்தனம் அதுபெற்றுத் தளிர்த்தாற்போல மன்னனதுசொன்னீராலே ஸ்ரீதத்தன்றளிர்த்து மன்னனைநோக்கி, யான்கேட்டிருப்ப என்னுடையதந்தைக்கு அவன்றன்னுடையதந்தை தான் முன்புகேட்டிருந்தபடியே இன்னணமென்று முழுதெடுத்தியம்புகின்றவன், நமரங்காள், வேதண்டமலையில் தென்சேடிக்கூற்றிற் காந்தாரநாட்டில் விச்சாதரலோகமகாநகரியி னின்றுநீங்காதகரு டவேகன்வேந்தன், அவன் நங்குடித்தெய்வங்காணும்; அதனையறிந்திருப்பீராகவென் றுசொன்னானதலால், மார்பனே! எங்குலம் இவ்விடத்து உன்னடியைப்பிழைப்பதன் றாயிருந்ததென்றுசொன்னானென்க.

மன்னனைநோக்கிப் பிழைப்பதன்றாலெங்குல மென்றுசொன்னா னெனக்கூட் டுக. தந்தை இயம்புகின்றவன் நமரங்காளறிமினெனச்சொன்னானென்றது, மந்திர மென்னுங்கவியிற் சொன்னானென்றதனை. தந்தை - பாட்டன். (ருரு)

க. பெருந்தகைக்குரிசிறோழன்பெருவிலைக்கடகமுன்கை
திருந்துபுவணங்கப்பற்றிச்சென்றுதன்னுரிமைகாட்டப்
பொருந்துபொற்பவோம்பிப்பொன்னிழைசுடரநின்ற
கருங்கண்ணிதிறத்துவேறாக்கட்டுரைபயிற்றுகின்றான். (ருசா)

---

* திருக்குறள், புகழ், ரு.

உ. எரிமணிப்பளிக்குமாடத்தெழுந்ததோர்காமவல்லி
யருமணிக்கொடிகொன்மின்கொலமரர்கோனெழுதிவைத்த
வொருமணிகுயின்றபாவையொன்றுகொலென்றுநாய்கன்
றிருமணிக்கொடியையோரான்றெருமரமன்னன்சொன்னான்.

இவையிரண்டு மொருதொடர்.

திருந்துபு - மனந்திருந்தாநின்று. ஓம்பி - ஓம்ப. திறம் - குலம். கின்றான் - எதிர் காலமுணர்த்திய நிகழ்காலம். வல்லியாகியமணிக்கொடி. இந்திரன்தன்மனத்தே எழுதிவைத்த ஒப்பில்லாதமணியென்று மணிக்குவிசேடங்கூறுக. மணியைப்பூத்த கொடி-தத்தை.

இ - ள். அதுகேட்டுக் குரிசில் தோழன்றொழாநிற்க, அவன்முன்கையைப் பிடித்துச்சென்று தன்னுரிமையைக்காட்டினனாக, அவளும் மனம்பொருந்தாநின்றுபசரியா நிற்ப, நாய்கன் அவ்விடத்துநின்ற மணிக்கொடியை அச்சநிகழ்ந்தமையான் மகளென் றோரானாய்க் கொடியோ மின்னோ மணியாற்செய்தபாவையோவென்றுசுழலாநிற்க, அவனுக்கு மன்னன் அக்கருங்கண்ணியைத் தன்குலமன்றி ஸ்ரீதத்தன் குலமாகவே மேற்றொட்டுங் கூறுதலைப்பயிற்றுகின்றவன் ஒருகாரியஞ்சொன்னானென்க.

அது "நின்மகளிவள்," "ஆணையிராமின்" என்றவற்றாற்கொள்க. (ருஎ)

க. தூசுலாய்க்கிடந்தவல்குற்றுப்புறழ்தொண்டைச்செவ்வாய்
வாசவான்குழலின்மின்போல்வருமுலைச்சாந்துநக்கி
யூசல்பாய்ந்தாடிக்காதிற்குண்டலமிலங்கநின்றாள்
காசில்யாழ்க்கணங்கொடெய்வக்காந்தர்வதத்தையென்பாள். ()

உ. விளங்கினாளுலகமெல்லாம்வீணையின்வனப்பினாலே
யளந்துணர்வரியநங்கைக்கருமணிமுகிழ்த்தவேபோ
லிளங்கதிர்முலையுமாகத்திடங்கொண்டுபரந்தமின்னிற்
றுளங்குநுண்ணுசுப்புந்தோன்றாதுருவருவென்னவுண்டே. ()

ந. நின்மகளிவளைநீயேநின்பதிகொண்டுபோகி
யின்னிசைபொருதுவெல்வான்யாவனேயானுமாக
வன்னவற்குரியளென்னவடிப்பணிசெய்வலென்றான்
றன்னமர்தேவிகேட்டுத்தத்தைக்கேதக்கதென்றாள்.

இவைமூன்றுமொருதொடர்.

உலாய் - சூழ்ந்து. நாணுவிறைஞ்சிநிற்றலிற் குண்டலஞ் சாந்தைத்தீண்டிப் போக்குவரவுடைத்தாயசைந்திலங்கநின்றாள். யாழ்விச்சைத்தொகுதி கொண்டதெய்வம் - மாதங்கி. குணங்களளந்துணர்வரிய. போகி - போகவெனவியங்கோளுமாம். யாவன் - மூன்றுவருணத்திலும்யாவன்; "இறைவராதிமூவகைக்குலத்து ளார்க்கும்" என்றார் மேலும். தன்னிலிழிந்தவணிகனையுங்கூட்டினான், அக்குலத்திற் றான்செய்தநல்வினையி னிலைமையையெய்துவித்தலின். உரியளெனவே கொடைப்பொருட்டாம். அடிமைப் பணி - விகாரமாம்.

இ - ள். அல்குன்முதலியவற்றையுடையதோர் மின்போல நாணிநின்றவள் தெய்வமாகியகாந்தருவதத்தையென்னும்பெயரையுடையாள்; அவடான் வீணையாலும்

வனப்பினாலுமுலகமெல்லாம்விளங்கினன்; அவட்கு அதுவுமன்றி முலையுமணிமுகிழ்த்த போற்றோன்றிப் பின்பு ஆகத்தேபரந்தன; முன்பு மின்போற்றுளங்குநுசுப்பும் இப் பொழுது உண்டு இல்லையென்ன ஐயநிகழ. உண்டாயிற்று; இத்தன்மையுடைய நின் மகளாகியவிவளை நீயே நின்பதியேறக்கொண்டுபோய் இசையாற்பொருதுவெல்வான் யாவனாயினுமாக, அங்ஙனம்வென்றவனுக்குக்கொடுப்பாயென்று கூறினனாக; நாய்க னும்அடிமைப் பணிசெய்வேனென்றான்; அதனைத் தாரணிகேட்டு இவ்விதிவு இவ ளுக்கேதக்கதென்று வெறுத்துக்கூறினளென்க. (கூ0)

க. முனிவரும்போகபூமிப்போகமுட்டாதுபெற்றுந்
தனியவராகிவாழ்தல்சாதுயரதனினில்லை
கனிபடுகிளவியார்தங்காதலன்கவானிற்றுஞ்சிற்
பனியிருவிசும்பிற்றேவர்பான்மையிற்றென்றுசொன்னான். (கூக)

உ. நூற்படுபுலவன்சொன்னநுண்பொருணுழைந்துயானும்
வேற்கடற்றானைவேந்தர்வீழ்ந்திரந்தாலுநேரேன்
சேற்கடைமதர்வைநோக்கிற்சில்லரித்தடங்கணங்கை
பாற்படுகாலம்வந்தாற்பான்மையார்விலக்குகிற்பார்.

இவையிரண்டு மொருதொடர்.

வேற்றானை. சேலின்கடைபோன்ற கடையினையும் நோக்கினையும் அரியினையு முடையகண்.

இ - ள். அதுகேட்டு மன்னன் இனிமைதோன்றினகிளவியார் வெறுத்தற்கரிய இப்போகபூமியிற் போகத்தைக் குறையாமற்பெற்றுவைத்தும் தனித்துவாழ்கின்ற தொழிலதனிற்காட்டில் அவர்க்கிறந்துபடும் வருத்தம்வேறில்லை; அவர் தங்கணவன் குறங்கிலே துஞ்சப்பெறின், அவ்வின்பம் தேவரின்பத்தின் பகுதியையுடைத்து; அதனைஅறிந்துவைத்து நங்கை இந்நாளளவுஞ் சாந்துயரெய்திநிற்கவும் ஒருவன்பகுதி யிலே படுங்காலம் வாராமையினாலே யானுஞ் சோதிடநூலிலே யுளனாகிய கணிகூறிய பொருளிலே சென்று மன்னரிரந்தாலு நேரேனாயினேன்; ஈண்டு அவள் ஒருவன்பாற் படுங்காலம்வந்தால் அவ்விதி யாவரானும் விலக்கலரிதாதலின், அதற்குநேர்ந்தே னென்று சொன்னானென்க.

வாராமையினென்றும், ஆதலினதற்கு நேர்ந்தேனென்றும் வருவித்துரைக்க. ()

படைப்பருங்கற்பினுடன்பாவையைப்பரிவுநீக்கிக்
கொடைக்குரிப்பாலவெல்லாங்கொடுத்தபின்கூற்றுமுட்கும்
விடைப்பருந்தானைவேந்தன்வேண்டுபவெறுப்பகல்கித்
தொடுத்தலர்கோதைவீணைபதிக்கிதுசொல்லினனே.

கணவன்கருத்தே தன்கருத்தாகலிற் பிறர்படைத்தற்கரிய கற்பாயிற்று. உரிப் பால - வினைத்தொகை. வேறுபடுத்தற்கரியதானை.

இ - ள். அதுகேட்டதாரணி தத்தையைத் தம்மைநீங்குதலாற் பிறந்த பரிவை நீக்கித் தான்கொடுத்தற்குரியனவெல்லாங்கொடுத்தபின்பு, வேந்தனும் அவள்வேண்டு வனவெல்லாமிகக்கொடுத்து வீணைபதியென்னும் பேடிக்கு இதனைக்கூறினனென்க.

அது மேற்கூறுகின்றார். (கூக)

உடம்பினோடுயிரிற்பின்னியொருவயினீங்கல்செல்லா
நெடுங்கணுந்தோளும்போலுநேரிழையரிவைநீநின்
றடங்கண்ணிதனிமைநீங்கத்தந்தையுந்தாயுமாக
வடங்கலரட்டவேலானாணையிராமினென்றான்.

உதவியாற் கண்ணுந்தோளும்போலு மரிவாய். ஆக - வியங்கோள்; எச்சமாக்கி ஒருமைபன்மைமயக்கமுமென்ப.

இ - ள். உடம்பினோடுயிர் பின்னுமாறுபோற்பின்னி ஒன்றாய் ஓரிடத்துமிவனை நீங்காத அரிவாய், நின் தடங்கண்ணி எம்மைப்பிரிந்ததனிமை போம்படி இவளுக்குத் தந்தையுந் தாயுமாவாயாக; அங்ஙனமாய்ப் பின் இருவீருநம்முடைய ஆணையைவிட்டு ஸ்ரீதத்தனது ஆணையையுடையீராவீராக வென்றானென்க. (கசச)

அருமணிவயிரம்வேய்ந்தவருங்கலப்பேழையைஞ்னூ
றெரிமணிசெம்பொனார்ந்தவிராயிரம்பவளப்பேழை
திருமணிப்பூணினாற்குச்சினந்தலைமழுங்கலின்றிக்
குருமணிமுடியிற்றேய்த்ததரன்றமர்கொள்கவென்றான்.

பூணினாற்குப் பகைவர்மேற்செற்றம் தலைகெடுதலின்றாகலின் அவர்முடியின் மணியை அவனடியிலேதேய்ப்பித்த தரன்.

இ - ள். மன்னன் அருங்கலம்வைத்தற்குச் சமைத்த மணியாகிய வயிரம் வேய்ந்தபெட்டி ஐஞ்னூறும், மணியும்பொன்னுமார்ந்த யவனதேசத்திற் பெட்டி இரண்டாயிரமும், தரனுடைய சுற்றமும் நீ கொள்வாயாகவென்றானென்க. (கசரு)

பல்வினைப்பவளப்பாய்காற்பருமணியிழிகைவம்பார்
கல்லகில்விம்முகட்டிற்றவிசொடுநிலைக்கண்ணாடி
மெல்லியதூபமுட்டிமேதகுநானச்செப்போ
டல்லவுங்கொள்கவென்றானலங்குடைநிணங்கொள்வேலான்.

இ - ள். வேலான் பரந்தகாலினையும் கைச்சுரிகையினையுமுடைய கச்சார்ந்த கட்டிலும் தவிசும் கண்ணாடியும் இந்தளமும் செப்பும் ஒழிந்தனவும் நீகொள்கவென்றானென்க.

ஒடு - எண்ணொடு. (கசசு)

விளக்கழலுறுத்தபோலும்விசியுறுபோர்வைத்தீந்தேன்
றுளக்கறவொழுகியன்னதுய்யறத்திரண்டதிண்கோல்
கொளத்தகுதிவவுத்திங்கட்கோணிரைத்தனையபோல
வளப்பருஞ்சுவைகொணல்யாழாயிரமமைகவென்றான்.

இ - ள். இனிமைகொண்ட நல்யாழாயிரம், விளக்கை யழலைச்சேர்த்தினாற்போலுநிறத்தவாய்த் தெரியாமற்போர்த்த போர்வையினையுந் தேனசைவற வொழுகினாற் போன்ற சிம்பறத்திரண்ட நரம்பு தன்னிடத்தேகொள்ளத்தக்க வார்க்கட்டினையுமுடையவாய்க் கோணிரைத்தனைய என்னாட்டிங்களைப்போல அமைகவென்றானென்க.

கோள்நிரைத்ததிங்கள் பத்தரிற்றலைச் சூழமுடுக்கின ஆணிக்குவமம். " விளக்கழலுருவின் விசியுறு பச்சை - யுருக்கி யன்ன பொருத்தறு போர்வை - கொடித்திரி வன்ன கொண்டபெடு திவவிற் - கடிப்பகை யனைத்துங் கெளவிப் போகாது-குரலோர்த்

றத் தொடுத்த சுகிர்புரி நரம்பின் - றனைவாய் ஞர்ந்த நரப்புமை யாவி - என்னுட் டிங்கள் வடிவிற் ருகி" என்றார் பிறரும். (௬௭)

அரக்கெறி குவளைவாட்கண் வலைத்தோளி னுளைப்
பரப்பமைகாதற்றுயர் பற்பல்காற்புல்லிக்கொண்டு
திருப்புறக்கொடுத்தசெமபொற்றாமரைபோன்றுகோயில்
புரிக்குழன்மடந்தைபோகப்புலம்பொடுமடிந்ததன்றே.

* "தொடர லிறுதி தம்முற் ரும்வரின், லகரம் றகரவொற் றாகலு முரித்தே" என்பதனாற் பற்பல்காலென்றார். கொண்டு - கொள்ள.

இ - ள். தமரைப்பிரிதற்கு அழுதுசிவத்தலின் இங்குலிகமூட்டின குவளைபோலுங் கண்ணையுடைய தத்தையைத் தாயர் பற்பல்காற்றழுவிக்கொள்ள அம்மடந்தை போகையினாலே கோயில் திருமகளைப்போகவிட்ட தாமரைபோன்று புலம்பொடு மடிந்ததென்க.

† "ஒழியாது" என்றதனால் இரண்டாவதுவிரித்துத் தாரணியையும் அல்லாத தாயரையும் புல்லிக்கொண்டு போகவென்றுமாம். (௬௮)

காம்புபொன்செய்தபிச்சங்கதிர்மணிக்குடையோடேந்தித்
தாம்பலர்கவரிவீசக்கிண்கிணிததும்பநாகப்
பாம்புபைதத்தனைபவல்குற்பல்கலைமிழற்றவேகி
யாம்பனாறமுதச்செவ்வாயரசனைத்தொழுதுநின்றாள்.

ஏந்தி - ஏந்த.

இ - ள். ஆம்பல்போல மணக்கின்ற செவ்வாயினையுடையாள் பலர்தாம் பிச்சத்தையுங் குடையையுமேந்தக் கவரிவீசத் ததும்ப மிழற்றத் தாயரிடத்துநின்றும்போந்து அரசனைக் கண்டபொழுதே கையாற்றொழுது நின்றாளென்க.

பலர்தாங் கவரியைவீச வென்றுமாம். நாறுதல் - தோற்றுதலுமாம். (௬௯)

அடிக்கலமாற்றவேகியரும்பெறற்றந்தைபாத
முடிக்கலஞ்சொரியச்சென்னியிறைஞ்சலுமுரிந்துமின்னுக்
கொடிப்பலநுடங்கியாங்குத்தோழியர்குழாத்துநிற்ப
வடுத்தனன்புல்லிவேந்தனாற்றுகிலாதுசொன்னான்.

மின்னுக்கொடியெனப் பொருட்பெயர்க்கும் உகரமும் வல்லெழுத்தும் பெறுதல் இலேசாற்கொள்க. புல்லி - புல்ல.

இ - ள். தத்தை அங்ஙனந்தொழுதுநின்ற இடத்தினின்றும் சிலம்புமுதலியன வொலிப்பச்சென்று தந்தைபாதத்தே சென்னியான் முரிந்துவணங்கின அளவிலே, அவனாற்றுகிலாதே பல்காற்புல்ல, அவள்போய் மின்னுக்கொடி பலவுநுடங்கியாங்கு நுடங்குந்தோழியர் திரளிடத்தேநிற்க; வேந்தனொருமொழி கூறினானென்க. (௭௰)

வலம்புரியின்றமுத்தமன்மிசையவர்கட்கல்லால்
வலம்புரிபயத்தையெய்தாதனையரேமகளிரென்ன

---

* தொல்காப்பியம், எழுத்ததிகாரம், உயிர்மயங்கியல், ௪௨.

† ,, ,, ,, தொகைமரபு, ௩௯.

நலம்புரிந்தனையகாதற்றேவிதன்னவைவையநீங்கக்
குலம்புரிந்தனையகுன்றிற்கதிபதிகூறினானே.

குலம் வடிவுகொண்டனைய அதிபதி.

இ - ள். நலம் வடிவுகொண்டனையதேவி தனதுவருத்தத்தை நீங்கும்படி வலம்புரியீன்றமுத்தம்மண்மிசையவர்கட்குப் பயன்கொடுப்பதன்றி அதனால்வலம்புரிபயனை யெய்தாது ; மகளிருந் தாயருக்கு அத்தன்மையரே யென்றுகூறினானென்க. (௭௧)

இன்சுவையாழொடன்னமிளங்கிளிமழலைமஞ்ஞை
பொன்புனையூகமந்திபொறிமயிர்ப்புறவம்பொன்னார்
மென்புனமருளிநோக்கின்மானினமாதியாகத்
தன்புறஞ்சூழப்போகித்தளிரியல்விமானம்புக்காள்.

உம்மைவிரிக்க. மழலையிளங்கிளி. வளர்த்தலிற் பூணணிந்த கருங்குரங்கு. மந்தி - பெண்பெயர்; *"குரங்கு முசுவு மூகமு மந்தி." என்றார். புறா - சித்திரப் புறா. மருண்ட இனியநோக்கு.

இ - ள். தளிரியல் மானினமுதலாக எண்ணிய வெல்லாம் தன்பக்கத்தேசூழ்ந்து செல்லப்போய் விமானத்தைச்சேர்ந்தாளென்க. (௭௨)

வேறு.

வெற்றிவேன்மணிமுடிக், கொற்றவன்றொருமக
ளற்றமில்பெரும்படைச், சுற்றமோடியங்கினாள்.

இ - ள். வெற்றியையுடைய வேலினையும் முடியினையுமுடைய கொற்றவன் மகள் இடைவிடாதபடையாகிய சுற்றத்தோடே போயினாளென்க.

அதனெல்லை மேற் கூறுகின்றார். (௭௩)

கண்ணயற்களிப்பன, வண்ணல்யானையாயிரம்
விண்ணகத்தியங்குதே, ரெண்ணவற்றிரட்டியே.

இ - ள். கண்ணருகே மதமுடையனவாகியயானை ஆயிரம் ; தேரினுடையஎண் இரண்டாயிரமென்க. (௭௪)

விற்படைவிலக்குவ, பொற்புடைப்புரவியு
முற்படக்கிளந்தவற்றி, னற்புடையநாற்றியே.

இ - ள். அம்பைத் தன்விசையாலே விலக்குவனவாகிய பக்கலாயுடைய குதிரையும் முற்கூறியயானையி னான்மடங்கு நற்பக்கத்தனவென்க. (௭௫)

பாறுடைப்பரிதிவேல், வீறுடையிளையரு
மாறிரட்டியாயியர், கூறுதற்கரியரே.

பாற்றினஞ்சூழ்ந்த வேல். வீறு - தம்வீரம்பிறர்க்கின்மை.

இ - ள். பரிதிபோற்பகைவரைக் கெடுக்கும் வேலையுடைய இளையரும் பன்னீராயிரம்பெயர் ; அவர்தாம் பகைவர் வஞ்சினங்கூறுதற்கரியரென்க. (௭௬)

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௬௭.

மாகநீள்விசும்பிடை, மேகநின்றிடித்தலி
ளுகநின்றதிர்ந்தவர்க், கேகலாவதில்லையே.

மாகம் - திக்கு; மஞ்சுமாம். அதிர்ந்து - அதிர.

இ - ள். விசும்பிலே மேகமழைபெய்தற்கிடித்தலின் அதனைத் தன்பகையானை யாகக்கருதி யானைகள்போகாது நின்றதிர்தலாலே அவர்க்குப்போகலாவதோருபாய மில்லையாயிற்றென்க. (எஎ)

வெஞ்சினவெகுளியிற், குஞ்சரமுழங்கலின்
மஞ்சுதம்வயிறழிந், தஞ்சிநீருகுத்தவே.

இ - ள். குஞ்சரம் அங்ஙனம் வெகுளியோடே முழங்குதலால் அதுகேட்டு மேகமஞ்சிக் கருக்கலங்கி நீரையுகுத்தனபோன்றனவென்க.

இடித்தமேகம் பின்பு பெய்தது. (எஅ)

வேழமும்மதத்தொடு, தாழ்புயல்கலந்துட
ளூழ்கடலகம்புறம், வீழ்தரவிரைந்ததே.

புயல் - ஆகுபெயர். கலந்து - கலக்க.

இ - ள். கடல்நடுவு கரைக்குப்புறம்பேவிழும்படி மும்மதங்களோடே புயலு குத்தநீருங் கடலிடத்தே கலத்தலாலே மேகத்தாலு நாகத்தாலுந் தகைவின்றி விமா னம்படையுடனே மரக்கலமிருக்கின்றவிடத்தே விரைந்துசென்றதென்க. (எகூ)

மல்லன்மாக்கடலிடைக், கல்லெனக்கலங்கவிழ்த்
தல்லலுற்றழுங்கிய, செல்வனுற்றசெப்புவாம்.

இ - ள். கடலிடத்தே கலங்கவிழ்த்து வருத்தமுற்றுக்கெட்டஸ்ரீதத்தன்பெற்ற இலாபம் இனிக் கூறுவாமென்க. (அ0)

க. பானிறப்பனிவரை, மேனிறமிகுத்தன
நீனிறநிழன்மணி, தானிறைத்தகமெலாம்.

"பானிற" முதல் "பீழை" அளவுமொருதொடர்.

வெள்ளிமலையில்நிறமிகுத்தனவென்றது, நீலமொழிந்த மணிகளை. நீலநிறத்தை யுடையஒளிமணி. (அக)

உ. வஞ்சமின்மனத்தின, னெஞ்சகம்புகன்றுக
விஞ்சையம்பெருமகன், வஞ்சமென்றுணர்த்தினன்.

மனத்தினன் - ஸ்ரீதத்தன். உவந்து உவகையொழுக. பெருமகன் - தரன். ()

ங. நங்கைதன்னலத்தினன், மங்குல்வெள்ளிமால்வரை
யெங்குமன்னரீண்டினர், சங்குவிம்முதானையார்.

மங்குல் - மேகம். மால்வரையில் மன்னர் தானையார் எவ்விடத்துமீண்டினர்()

ச. ஈரலங்கலேந்துவே, லாரலங்கன்மார்பினன்
கார்கலந்தகைக்கணி, சீர்கலந்துசெப்பினன்.

ஈரும்வேல். மார்பினன் - அரசன். (அஉ)

ரு. மாதர்வாழ்வுமண்ணதே, யாதலாலலங்கலங்
தாதவிழ்ந்தமார்பநின், காதலன்கடலுளான்.

அவிழ்தற்குக்காரணமானமார்பு. அழைப்பியென்பது சொல்லெச்சம். (அரு)

சு. என்றுகூறவென்னையே, துன்றுகாதற்றோழனைச்
சென்றுநீகொணர்கென, வன்றுவந்தவண்ணமே.

அழைப்பியென்றெனமுன்னேகூட்டுக. (அசு)

எ. துன்பமுற்றவர்க்கலா, லின்பமில்லையாதலி
னன்பமற்றியானுனைத், துன்பத்தாற்றடக்கினேன்.

தடக்கினேன் - பிணித்தேன். (அஎ)

அ. பீழைசெய்துபெற்றனன், வாழியென்றுமாக்கட
லாழ்வித்திட்டவம்பியைத், தோழர்ச்சுட்டிக்காட்டினன்.

பீழை - துன்பம். ஸ்ரீதத்தனுக்குஆழ்வித்தானுகப்பண்ணின. சுட்டி - இதுகலம் இவர்தோழரென்றுசுட்டி.

இ - ள். விஞ்சையம்பெருமகன்நங்கைநலத்தாலே மன்னரீண்டினார், அதுகண்டு மார்பினுனுடைய கனி மாதர்வாழ்வு மண்ணிடத்தேயாதலால் அவளைக்கொண்டு போதற்கு மார்பனே, நின்றோழன் கடலிடத்தான், அவனைஅழைப்பியென்று சீர் கலந்து செப்பினன்; அதுகேட்டு மன்னன் நீ சென்று என்காதற்றோழனைக் கொண ாகவென என்னையேநோக்கிக்கூற; யான்அன்றுவந்தசெய்தி ஒருவஞ்சனைகாணென்று கூறி, அவ்வஞ்சனையை, அன்பனே, துன்பமுற்றார்க்கல்லது இன்பமில்லையென்று உலகுகூறலின், யான் நின்னையொழிந்தோர்க்கின்பஞ்செய்து நின்னையொருவனையுந் துன்பத்தாற் பிணித்தேனென்றுணர்த்தினன்; உணர்த்தி யான் அங்ஙனம் பீழை செய்து நின்நட்பைப்பெற்றேன்; இனி நீ வாழ்வாயாகவென்று முகமன்கூறி மறைத்த அம்பியினகமெல்லாம் நிறமிகுத்தனவற்றையுமணிகளையு நிறைத்து, வஞ்ச மின்மனத்தினன் அகம்புகன்றுருகும்படி, அவ்வம்பியையுந் தோழனையுங்காட்டின னென்க.

எனவே இலாபமேகூறினன். காரியங்கடைப்படுதலின் ஈண்டு உண்மை கூறினன். "வெற்றிவேல்" முதல் இத்துணையுங் குறளடிநான்காய்வந்த கொச்சக வொருபோகு; "நெய்யோடுதீயொக்கச், செய்யானைச்சோவார்க்குப், பொய்யாத வுள் ளமே, மெய்யாதல்வேண்டும்." என்றாற்போல யாப்பின்வேறுபட்டன. (அஅ)

வேறு.

தேன்மருமாரிபோன்றுதிவ்வியகிளவிதம்மா
லூன்மருகுருதிவேலானுள்ளகங்குளிர்ந்துவிஞ்சைக்
கோன்மருதுன்பமற்றென்குலத்தொடுமுடிகவென்றான்
கான்றுவில்வயிரம்வீசுங்கனமணிக்குழையினானே.

தேனைச்சொரிவதோர்மாரி. ஊன்சொரிவதோர்குருதி.

இ - ள். வயிரம் ஒளியைக் கான்றுபரப்புங் குழையினனாகியவேலான்றனது இனியமொழியாலே குளிர்ந்து, கலுழவேகன்றந்த இத்தன்மையவானதுன்பம் என் குலமுள்ளளவுநடப்பதாகவென்று உவந்துகூறினனென்க. (அக)

தோடலர்தெரியலான்றன்றோழனைக்கண்டுகாத
லூடலர்ந்தெழுந்துபொங்கவுருவத்தார்குழையப்புல்லிப்
பாடிரும்பௌவமுந்நீர்ப்பட்டதுபகர்தலோடு
நாடகாங்களுற்றதென்றுகையெறிந்துநக்கார்.

இ - ள். ஸ்ரீதத்தன் தோழனைக்கண்டு காதல்நெஞ்சிலேவிரிந்தெழுந்து மிகுதலாலே தார்குழையத்தழுவி முந்நீர்ப்பௌவத்திலே தானுற்றதெல்லாங் கூறியவனவிலே, நாங்கள்கண்டது நாடகம்; இதுகண்டிலேமென்று கைதட்டிச் சிரித்தாரென்க. இவர்க்கிங்ஙனநிருமித்தான். (க0)

கட்டழற்கதியபுண்ணிற்கருவனையருவியாரம்
பட்டதுபோன்றுநாய்கன்பரிவுதீர்ந்தினியர்சூழ
மட்டவிழ்கோதையோடுமண்கணைமுழவமூதூர்க்
கட்டவிழ்தாரினன்றன்கடிமனைமகிழ்ந்துபுக்கான்.

இ - ள். முகையவிழ்ந்ததாரானுகிய நாய்கன் அழலாற் கதுவியபுண்ணிலே அருவியுமாரமும் பட்டதுபோன்று பரிவுதீர்ந்து, தனக்கினியவரொல்லாருந் தன்னைச் சூழ மகிழ்ந்து தத்தையோடே இராசமாபுரத்திற் றன்மனையிலே புக்கானென்க.

கதுவிய - விகாரம். (கக)

பெருமனைகுறுகலோடும்பிறையெனவிலங்கித்தோன்றுந்
திருநுதன்மனைவிசெம்பொற்கொடியெனவிறைஞ்சிநிற்ப
வருமுலைபொதிர்ப்பவாங்கிவண்டினமிரியப்புல்லிக்
கதிர்நகைமுறுவன்மாதர்கண்ணுறுகவலைதீர்த்தான்.

இ - ள். தன்மனைவியிருக்கின்ற இடத்தைச்சேர்ந்தவளவிலே அவளிறைஞ்சி நிற்ப; தன்மேல்வண்டினங்கெடும்படி அவளையணைத்து முலை புடைக்கொள்ளும்படி தழுவி, எயிற்றினையும் மகிழ்ச்சியையுமுடைய அம்மாதரிடத்து நின்ற வருத்தத்தைத் தீர்த்தானென்க. (க௨)

சந்திரகாந்தமென்னுந்தண்மணிநிலத்தினங்கண்
வெந்தெரிபசும்பொன்வெள்ளிபளிங்கொடுபவளம்பாய்த்திக்
கந்தெரிமணியிற்செய்தகன்னியாமாடமெய்திப்
பைந்தொடிப்பாவையொன்றும்பரிவிலள்வைகினாளே.

இ - ள். பாவை, சந்திரகாந்தமென்னு மணியாற்செய்த நிலத்திடத்தே ஒட வைத்து விளங்குகின்ற பொன்னாற்சுவரமைத்து மணியாற்கந்துநாட்டிப் பளிக்குக் கையலகோடே பவளத்தைப் பூட்டாகப்பரப்பி வெள்ளியாலே வேய்ந்துசெய்த கன்னியாமாடத்தைச்சேர்ந்து சிறிதும் வருத்தமின்றிவைகினாளென்க. (கங)

பாசிழைபரவையல்குற்பசுங்கதிர்க்கலாபம்வீங்கக்
காசுகண்பரியவைகிக்கடன்றலைகழிந்தபின்னாத்
தூசணிபரவையல்குற்றுளங்குநுன்னுசுப்பிற்பாவை
மாசறுவரவுந்தந்தைவலித்ததுமறியச்சொன்னான்.

இ - ள். பதுமையதல்குற் கலாபம்விம்முதலால் அதின்மணிகளற்று விழும்படி

புணர்ந்து, அவளிடத்து நிகழ்ந்த முறைமையெல்லாம் அவ்விடத்தேகழிந்தபின்பு, தந்தையது குற்றமற்றவரவையும் அவடந்தை யாழ்வென்றானுக்குக் கொடுக்கவென்று துணிந்ததனையும் அவளறியக் கூறினனென்க. (கச)

வல்லிணைமலர்ந்தகோதைவாயொருப்பட்டுநேரத்
தெண்கடலமிர்தம்பெய்தசெப்பெனச்செறிந்துவீங்கிப்
பெண்டிருமாண்மைவெஃகிப்பேதுறுமுலையினாளைக்
கண்டவர்மருளநாளைக்கடிவினைமுடித்துமென்றான்.

செறிந்து - நெருங்கி. மகளிருமுட்படநுகர்தற்கு ஆண்மையைவிரும்பி மயங்குதற்குக் காரணமான முலை.

இ - ள். அது கேட்டபதுமை நெஞ்சாலே துணிந்துடன்படுதலாலே ஸ்ரீதத்தனும் நாளை முலையினாளைக் கடிவினைமுடிப்பேமென்றானென்க.

கட்டியங்காரனுடன்படவே கடிவினைமுடிதலின், அவனை நாளையுடன்படுவிப்பேனெனத்துணிந்து கூறினான். (கரு)

மால்வரைவயிறுபோழ்ந்துவல்லவர்மதியிற்றந்த
பால்வரைமணியும்பொன்னும்பற்பலகொண்டுபுக்குக்
கால்பொருகழலினானுங்காவலற்கண்டுசொன்னான்
வேல்பொருதானையானும்வேண்டுவவிதியினேர்ந்தான்.

இ - ள். ஸ்ரீதத்தனும் நூல்வல்லவர் தமதறிவாலே வரையின் வயிற்றைப் பிளந்துதந்த, பாலாலே நன்மையாராய்ந்துகொண்டமணியும் பொன்னும் பலபல கொண்டுபுக்கு அரசனைக்கண்டு தன்குறையைக்கூறினான்; அரசனும் அவன்விரும்பினவற்றை விதியாலே உடன்பட்டானென்க.

குறை - மண்டபஞ்சமைத்தலும் மூன்றுவருணத்தாரும் வரச்சாற்றுதலு முதலியன. சுயம்வரத்திற்கு அரசர் உடன்படவேவேண்டுதலின் விதியினென்றார். (கசு)

## வேறு.

மையன்மதயானைநிரைமன்னன்மகிழ்ந்தானப்
பொய்யில்புகழ்நாய்கன்மதவொளியினொடுபோகி
நொய்தின்மனையெய்தியிதுசெய்கெனநொடித்தான்
மொய்கொண்முலைபாயமுகைவிண்டலர்ந்ததாரான்.

மையல் - செல்வச்செருக்கு.

இ - ள். பாய்கையினலலர்ந்ததாரானாகியநாய்கன் மன்னன்மகிழ்ந்தவளவிலே மிக்கவொளியோடேபோய் மனையைச்சேர்ந்து இத்தொழிலைக்கடிதாகச்செய்கவென்று கூறினனென்க.

அது மேற்கூறுகின்றார். (கஎ)

நானக்கிடங்காடைநகர்நாகத்திடைநன்பொன்
வானக்கிடுமாட்சியதொர்மண்டபஞ்செய்கென்ன
மீனத்திடைநாள்கிழமைவெள்ளிசயபக்கங்
காணத்திடைவேங்கையெழுக்கண்ணினர்களன்றே.

இ - ள். கானக்கிடங்கையுடையாகவுடைய நகராகியசுவர்க்கத்தினுடுவே பொன்னையுடைய வானைச்சிரித்திடும் அழகினையுடையதோர் மண்டபத்தைச்செய்கவென்று கூறினுைக; கணிகள் வெள்ளிக்கிழமையுந் திருதியையும்பெற்ற உத்தரட்டாதிநாள் சிங்கவுதையமாக முகூர்த்தங்குறித்தாரென்க.

கானம் - புழுகு; குளித்தலிற்புழுகுடைத்தாயிற்று. வானைத்தீண்டுமென்றுமாம். பூரட்டாதியின் நாலாங்காலும் உத்தரட்டாதியும்இரேவதியு மீனராசியாதலால் உத்தரட்டாதிநடுநாளாதலின் மீனத்திடைநாளென்றார். திருதியை, அட்டமி, திரயோதசிஎன்பவற்றிற் றிருதியைசிறத்தலிற் சயபக்கமென்றார். மேடத்தின்முற்கூறு மேடராசியின்கூறு; இரண்டாங்கூறு சிங்கராசியின்கூறு; மூன்றாங்கூறு தனுராசியின்கூறு; ஆதலால் மேடத்தினடுக் கூற்றைச் சிங்கத்தின்உதையமாகவிதித்தார். இது கூறிற்று, சிங்கத்தேபிருகஸ்பதியாதலின். வெள்ளிமுதல் வியாழமீறாகக் கிழமையேழாயவாறும், உத்தரட்டாதிமுதல்உரோகிணியீறாக நாள்ஆறாயவாறுங்கூடுமாறென்னையெனின், இத்திங்களிற் சதயமுதல் ஆயிலியத்தளவுஞ் சந்திரன்வர்த்தித்துவருதலின் வியாழக்கிழமைக்கு உரோகிணிகூடிற்று. இதனுனே மேல் *"ஒண்ணிறவுரோணியூர்ந்தவொளிமதியொண்பொனுட்சி" என்று வியாழக்கிழமையினுஞ் சிறிதுநாழிகை உரோகிணியாகக்கூறினர். (௯௮)

நட்புப்பகையுட்கினெடுநன்பொன்விளைகழனி
பட்டினெடுபஞ்சுதுகில்பைம்பொனெடுகாண
மட்டசுவைவல்சியினெடியாதுமொழியாம
லொட்டிப்பதினுயிரவரும்றுமுயல்கின்றார்.

பொன்இட்டால்விளையுமென்றுஅக்கழனியின்சிறப்புகூறிற்று; பொன்உண்டாதற்குக்காரணமானகழனியுமாம். பஞ்சு - படாம். ஒடு - எண்ணொடு. காணம் - பழங்காசு. வல்சி - பகற்சோறு. உருபுவிரிக்க.

இ - ள். பதினுயிரம்பெயர் கழனிமுதலியவற்றையும் ஏனையவற்றையும் ஒழியாமலறுதியிட்டுத் தம்மிற்கூடியும் மாறுபட்டும் இவனுக்கஞ்சுதலுடனே கடிதின்முடிக்குங்கருத்தினராய் முயலாநின்றாரென்க. (௯௯)

வண்டுபடுதேறனறவ்வாய்விடுபுபருகிக்
கண்டதொழிற்கணிச்சிகளிற்கயம்படநன்கிடித்தாங்
கெண்டிசையுமேற்பப்படுத்தேற்றியதன்மேலாற்
கண்டுருகுநன்பொனிலங்காமுறுவபுனைந்தார்.

இ - ள். அவர்கள் தேறலையுநறவையும்வாய்விடுதலோடேபருகித் தொழில்செய்தற்கென்றுகண்டகூந்தாலிகளாலே ஆழம்படவெட்டிப் பின்பு அவ்விடத்தே எண்டிசையும்பொருந்தும்படி தலமிசைத்துயர்த்தி அதன்மேலே இஃதுயரத்திற்களவென்றறிந்து காமுறுவனவாகியபொன்னுலேநிலத்தைப்புனைந்தாரென்க.

வாய்விடுதல் - வஞ்சினம்; ஆரவாரமுமாம். ஒடு - உடனிகழ்ச்சி. (௬௦௦)

பொன்செய்குடங்கோத்தனையவெருத்திற்பொலிபொற்றூண்
மின்செய்பசும்பொன்னிலத்துவீறுபெறநாட்டி
மன்பவளமேனவின்றுபளிக்கலகுபரப்பி
நன்செய்வெளிவேய்ந்துசுவர்தமனியத்தினமைத்தார்.

---

* காந்தருவதத்தையாரிலம்பகம், ௧௨௮.

மன் - பெருமை. கவின்று - கயில. வெள்ளி - விகாரம்.

இ - ள். அப்பொன்னிலத்தே தங்கழுத்திற்குடதாடியாலே பொற்குடத்தைக் கோத்தாலொத்ததூணைப் பெருமைபெற நாட்டி, மேலே பவளமாகிய உத்தர முதலியனபயில அவற்றின்மேலே பளிக்குக்கையலகாலே கைபரப்பி, வெள்ளியாலே வேய்ந்து, சுவரைப்பொன்னானமைத்தாரென்க.

குடதாடி - தூணுக்கும் உத்தரத்துக்குநடுவேவைக்கப்பட்டது. (௧௦௧)

பாவையவளிருக்குமிடம்பளிக்குச்சுவரியற்றிக்
கோவைகுளிர்முத்தினியல்கோதையொடுகொழும்பொன்
மாலையொடுமாலைதலைமணந்துவரநாற்றி
யாலையமிதோவியர்கட்கென்னவணியமைத்தார்.

இ - ள். பாவையாகிய அவளிருக்குமிடத்தைப் பளிங்காலேசுவர்செய்து முத்தினியல்கோவையோடே பூமாலையும் பொன்மாலையுடனே மாணிக்கமாலைமுதலியனவுந் தம்மிற் றலையொத்துவர நாலப்பண்ணி, இவ்விடம் சித்திரகாரர்கட் கிருப்பிடமென்னும்படி சித்திரத்தையெழுதினாரென்க.

இவை சித்திரத்தின்மாலை. ஒவியஙகட்கும பாடம். (௧௦௨)

ஆயிதழபொன்னலங்கல்காலசைப்பவொல்கி
வாயருகுவந்தொசிந்துமறியமழைமின்போற்
சேயவர்க்குந்தோன்றியதொர்திலகமெனுந்தகைத்தாய்ப்
பாயதிரைமுத்தமணம்பரந்துபயின்றுளதே.

இ - ள். அழகியஇதழையுடைய பொன்னாற்செய்த தூக்குமாலைகள் காற்றசைத்தலாலே ஒதுங்கி விளிம்பருகே வந்துசாய்ந்து மீளுதலாலே மின்போற்றோன்றப்பட்ட மண்டபந்தான் மண்டபங்களுக்குத் திலகமென்னுந் தகைமைத்தாய் முத்தமாகிய மணல் எங்குநெருங்கிப் பரந்துள தென்க.

இதனாற்புறம்புகூறினார். (௧௦௩)

காமர்களிறும்பிடியுங்கன்றுங்கலைமானுந்
தாமரையவாவிகளும்புள்ளுந்தகைநலத்தி
னேமுறுவபாவையினொடியக்கிநிலையெழுதி
யாமொரையங்காண்பவர்க்கிதகம்புறமிதெனவே.

கலையுமானும். இயக்கிநிலையெழுதி - அதிதெய்வமாக இயக்கியதுநிலையையுமெழுதி. இயக்கநிலை பாடமாயின் இவை இயக்கமுநிலையுமாகவெழுதி யென்க. எழுதி- எழுத.

இ - ள். பாவையோடே களிறுமுதலியவற்றைப் பளிக்குச்சுவரிலேயெழுத அச்சுவரின்பாடத்தால் வந்துகாண்பார்க்கு அகமிது புறமிதுவெனத் தெரியாததோரையங்கழாநின்றதென்க. (௧௦௪)

உழந்தவருநோக்கிமகிழ்தூங்கவொளிவாய்ந்து
விழுங்குமெனப்பறவைகளும்பிறவிலங்குமடையா
முழங்குதிரைவேலியினில்லையெனமொய்கொண்
டெழுந்துகொடியாடுமிதவ்வெழினகரினியல்பே.

இ - ள். பலநாள் இதிலேபழகின சித்திரகாரரும்பார்த்து வியந்து மகிழ்ச்சிசெறியும்படிஒருவிளக்கம்வாய்ந்து, இதிலெழுதின பறவைக்கும்விலங்குக்கும் பகையாகிய பறவைகளும் விலங்குகளும் இவை நம்மைவிழுங்குமென்றஞ்சி அடையாவாக, உலகினிற் றனக்குநிகரில்லையென்னும்படி கொடியாடாநிற்கும் அம்மண்டபத்தினியல்பு இத்தன்மைத்தென்க. (கoறு)

ஓடுமுகில்கீறியொளிர்திங்கள்சிகைவைத்தே
மாடமதுவார்சடையவள்ளலையுமொக்கு
நாடிமுகநான்கதனினான்முகனையொக்கு
நேடிநிமிர்தன்மையினிவேயரியையுமொக்கும்.

இன் - அசை.

இ - ள். அந்தமாடமாகிய அது முகிலைக்கிழித்துப் பிறையைத் தலையிலேவைத்தவாலே அரனையொக்கும்; முகநான்காகியஅதனானே எங்குநாடுதலாலே அயனையொக்கும்; மேலெல்லையைத்தேடி நிமிர்ந்ததன்மையாலே அரியையுமொக்குமென்க.

நாடி - நாசியென்பாருமுளர். (கoசு)

கண்டவர்கள்காமுறலிற்காமனையுமொக்குங்
கொண்டுலகமேத்தலினக்கொற்றவனையொக்கும்
வண்டெரியலாரமுலைமாதர்மகிழமுத
முண்டவர்களெவ்வகையரவ்வகையதொன்றே.

இ - ள். அது காமுறலிற் காமனையொக்கும்; உலகங்கொண்டேத்தலிற் சச்சந்தனையுமொக்கும்; அதுவன்றி மாதராகியஅமுதத்தையுண்டவர்கள் எத்தன்மையர் அத்தன்மையதொன்றென்க.

நீங்கலாகாமைகூறினார். (கoஎ)

வேறு.

முகிற்றலைமதியமன்னமுழுமணிமாடத்திட்ட
வகிற்புகைதவழ்ந்துவானத்தருவிசும்பறுத்துநீண்டு
பகற்கதிர்பரப்பிற்றூகிப்பஞ்சவர்விமானமுட்டிப்
புகற்கருமமரர்கற்பம்புக்கயர்வுயிர்த்ததன்றே.

இ - ள். மதிபோன்ற நிறைமணிகளையுடைய முகிற்றலை மாடத்திட்டபுகை தவழ்ந்துசென்று வானத்து மேகத்தையூடுருவி நீண்டு பகலைச்செய்கின்றகதிரிடத்தே பரத்தலையுடைத்தாய் ஜ்யோதிஷ்கரதுவிமானத்தைமுட்டி அமரர் கற்பத்தையும்புக்கு அயர்வுயிர்த்ததென்க.

கற்பம் - இருத்தற்குக்கற்பித்தவிடம். (கoஅ)

வேறு.

க. அரசனதருளினொடைகன்மனையவனெய்தி
யுளாசெலல்வகையினொடுலகமுமறிவுற
முரசதிரிமிழிசைமுதுநகரறைகென
வினாசெலவிளையனைவியவரின்விடவே. (கoகூ)

உ. விடுகணைவிசையொடுவெருவருதகையவர்
படுபணையவருறைபதியதுகுறுகி
நெடுமதியகடுறநிழறவழ்கொடியுயர்
கடிநகரிடுமுரசறைமினமெனவே. (கக0)

ங. மங்கலவணியினர்மலர்கதிர்மதியன
புங்கவனறநெறிபொலிவொடுமலிகென
வங்கதிர்மணிநகையலமருமுலைவளர்
கொங்கணிகுழலவள்கோடணையறைவாம். (ககக)

வேறு.

ச. வான்றருவளத்ததாகிவையகம்பிணியிற்றீர்க
தேன்றருகிளவியாருங்கற்பினிற்றிரிதலின்றி
யூன்றுகவுழிதோறுமுலகினுண்மாந்தரெல்லா
மீன்றவர்வயத்தராகியில்லறம்புணர்கநாளும். (ககஉ)

ரு. தவம்புரிந்தடக்கிநோற்குந்தத்துவர்த்தலைப்பட்டோம்பிப்
பவம்பரிகெமக்குமென்றுபணிந்தவருவப்பவீமி
னவம்புரிந்துடம்புநீங்காதருந்தவமுயன்மின்யாருஞ்
சிவம்புரிநெறியைச்சேரச்செப்புமிப்பொருளுங்கேண்மின். ()

சு. அம்மலரணிச்சத்தம்போதல்லியோடணியினொந்து
விம்முறுநுசுப்புநையவீற்றிருந்தணங்குசேர்ந்த
வெம்முலைப்பரவையல்குன்மிடைமணிக்கலாபம்வேய்த்தோட்
செம்மலர்த்திருவின்சாயற்றேமொழிதத்தையென்பாள். (ககச)

எ. மற்றவடந்தைநாய்கன்வண்கைச்சீதத்தனென்பான்
கொற்றவன்குலத்தின்வந்தான்கூறியபொருளிதாகு
முற்றவமுடையளாகிமூரிநூற்கலைகளெல்லாங்
கற்றவள்கனங்கொளல்யாழனங்கனைக்கனிக்குநீராள். (ககரு)

அ. தீந்தொடைமகரவீணைத்தெள்விளியெடுப்பித்தேற்றிப்
பூந்தொடியரிவைதன்னிற்புலமிகுத்துடையநம்பிக்
கீந்திடுமிறைவராகிமூவகைக்குலத்துளார்க்கும்
வேந்தடுகுருதிவேற்கணவிளங்கிழைதாதையென்றான். (ககசு)

கூ. மண்ணகமடந்தையாகமார்புறமுயங்கிநின்ற
வண்ணலையாதியாகவருங்கடிநகரைவாழ்த்தி
விண்ணகமுழக்கினேய்ப்பவீதிதோறெருக்கியெங்கும்
கண்ணொளிர்கடிப்பினோச்சிக்கடிமுரசறைந்தகாலை.

இவையொன்பதுமொருதொடர்.

க. உரைசெலல்வகை - மூற்கூறிச்சாற்றுமுறைமை; புகழுமாம். கண்ணடுக்குத

லால் இமிழ்கின்ற ஓசையையுடையமுரசு. வியவர் - ஏவல்செய்வார்; வியந்தோன் போல. என்றது - முரசறைவிப்பானை.

உ. தகையவர் - அவ்வியவர். பதியாகிய அதனை. அம் - அசை.

௩. மங்கலவணி - வெள்ளணி. எவ்வுயிர்க்குந் தண்ணளிசெய்தலின்மதியுவமை. நகை - முத்து. மணியுநகையும். முலைவளர்கின்றதத்தை.

௪. கற்பினின், இன் - அசை.

௫. தவத்திலேமிக்கு ஐம்புலனுமடக்கினோர்க்குந் தத்துவவுணர்வினோரை எதிர்ப்பட்டு எமக்கும் பிறப்பறுகவென்றுவணங்கி ஓம்பி அவருவப்பனவற்றை நமின். யாவருமுடம்பு அவமேபுரிந்து நீங்காமல் அவ்வுடம்பால் நன்மைபுரிந்த வீட்டைச் சேரும்படி அருந்தவத்தை முயன்மின்.

௬. அனிச்சப்போதை அழுகியமலர்களின் அல்லியோடே அணியின் கொந்து வருந்து நுசுப்புநோம்படி வீற்றிருந்து வீற்றுத்தெய்வஞ்சேர்ந்த முலைமுதலியவற்றை யுடைய தேமொழி - பெயர்.

௭. மற்று - வினைமாற்று. கலுழவேகன் குலத்தோடேபோந்தான். இசை நூலிற் கூறியகலைகள். யாழாலேகாமனையுமுருக்குநீரான்.

௮. தொடை - நரம்பு. பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டி யாழ் என்னும் நான்கினும் பத்தொன்பதுநரம்புகட்டின மகரயாழ் இவன்வாசிக்கின்ற தென்பதுதோன்ற மகரவீணையென்றார். "ஒன்று பிருபது மொன்பதும் பத்துட னே - நின்ற பதினாறும் பின்னேழும், குன்றாத - நால்வகை யாழுக்கு நன்னரம்பு சொன்முறையே - மேல்வகைய நூலோர் விதி." முறையே - உக - கக - கசு - எ என்க. விளி - ஓசை. எடுப்பி - எழுப்பி. அரசர் அந்தணர் வணிகரென்னு மூவகைக்குலத்துளாரிலுமென்க ; உருபுமயக்கம். இவள்தான் அரசகுலமாதலின் முற் கூறினார்.

௯. தன்மார்பிலேயுற. எருக்கி - தாக்கி. எங்கும் - எவ்விடத்தும்.

இ - ள். அங்ஙனமண்டபஞ்சமைத்தவளவிலே ஸ்ரீதத்தன் அவ்விடத்தரசனுக்கு அறிவித்து அவனருளோடே தன்மனையைச்சேர்ந்து உலகமுமறிவுறும்படி இந்நகரி லே உரைநடத்தலின்கூறுபாட்டோடே முரசை அறைவார்களாகவெனக்கூறித் தன்வினையாளை வியவரிடத்தேவிட ; அவ்வியவருங் கணைபோலும் விசையுடன் சென்று முரசறைவாருறைபதியதனைக்குறுகி முரசறைமினெனக்கூற ; அது கேட்டு அவருங் குழலவளுடைய யாழ்வாசினையை அறைவாமெனக்கூறி அணியி னராய்ப் புங்கவனறநெறிவளர்ச்சியோடேமிகுக ; ஊழிதோறும் இவ்வையகம் மழை தருவளத்தையுடைத்தாய்ப் பிணியினின்றுநீங்குக ; கிளவியாரும் கற்பினிற்றிரியாது நிலைபெறுக ; மாந்தரெல்லாம் இருமுதுகுரவர் சொற்கேட்டு நாளும் இல்லறம்புணர்க வென உலகைவாழ்த்திப் பின்பு, கட்டியங்காரன்முதலாக நகரையும்வாழ்த்தி, நீங் கள் தானஞ்செய்மின் ; தவஞ்செய்மின் ; யான்செப்புகின்ற இக்காரியத்தையுங்கேண் மின் ; தேமொழி தத்தையென்பாள் ; அவள்தந்தையாகிய நாய்கன் ஸ்ரீதத்தனென் பான் ; குலத்தின்வந்தானுதலால் அவன்கூறியகாரியமிதுவாகும் ; அஃதியாதெனின் கற்றவள் நீரான் விளங்கிழை அவள்தாதையாகிய கலுழவேகன் மூவகைக்குலத்து ளாரிலும் மகரயாழினது விளியையெடுப்பி மிகுத்து எல்லார்க்குந் தெளிவித்து அவ்வரிவையிற்காட்டில் அறிவுடையநம்பிக்கு அவளைக்கொடுமென்றுகூறினனென்று

வீதிதோறுங் கடிப்பிணைச்சித் தாக்கி எங்கும் முழக்கினேய்ப்ப முரசறைந்தபொழு திலே யென்க. (ககஎ)

வணக்கருந்தானைமன்னர்மத்தகம்பிளந்துவாய்த்த
நிணக்கொழுங்குருதிவாட்கைநிலம்புடைபெயர்க்குமாற்ற
லணைப்பருங்களிகொள்வேழத்தத்தினபுரத்துவேந்தன்
கணைக்கவினழித்தவுண்கட்கன்னியைக்கருதிவந்தான்.

நிணத்தையுடையகுருதி.

இ - ள். மன்னருடைய வேழத்தினது மத்தகத்தைப்பிளந்து தப்பாத வாளையு டையு கையினையும், மெய்வலியினையுமுடைய அத்தினபுரத்தினரசன் கன்னியைக் கொள்ளக்கருதி வந்தானென்க. (ககஅ)

சிதைப்பருஞ்சீற்றத்துப்பிற்செய்கழனரலவீக்கி
மதக்களிறடர்த்துக்குன்றமணிவட்டினுருட்டுமாற்றற்
கதக்களியொளிறுவைவேற்காம்பிலிக்காவன்மன்னன்
பதைப்பரும்பருமயானைப்பாலமாகுமரன்வந்தான்.

கதக்களியாற் பகைக்கஞ்சிப் பதைத்தோடுதலரியயானை. பாலமா, மா - ஈண்டு வியங்கோளன்றி இசை நிறைத்தது.

இ - ள். பகைவராற் சிதைத்தற்கரியதுப்பாலே வீரக்கழலைக்கட்டிக் களிற்றை யடர்த்துக்குன்றைவட்டுப்போலுருட்டுமெய்வலியினையும், வேலினையும், யானையினையு முடைய காம்பிலி நாட்டுக்கு மன்னனாகிய பாலகுமரன் வந்தானென்க. (ககசு)

இலைபொரவெழுதியன்னவெரிமணிக்கடகமுன்கைச்
சிலைபொரத்திரண்டதிண்டோட்சில்லரிச்சிலம்பினார்த
முலைபொரவுடைந்ததண்டார்மொய்ம்மதுத்துளிப்பவந்தான்
மலைபொரவரியமார்பின்வாரணவாசிமன்னன்.

இ - ள். இட்ட இலைத்தொழில் இருந்த நெருங்க எழுதினாற் போன்ற முன்கை யினையும், தோளினையும்; மலையொத்தற்கரிய மார்பினையுமுடையமன்னன் முலை பொருதலாலலர்ந்த தாரின்மதுத்துளிப்பவந்தானென்க. (கஉ0)

கதிர்முடிமன்னர்சூழ்ந்துகைதொழுதிறைஞ்சிமாலைத்
திருமுடிவயிரவில்லாற்சேவடிதிளைப்பவேத்தி
யருமுடியணிந்தகொற்றத்தவந்தியன்முரசமார்ப்ப
வொருபிடிநுசுப்பினாளையுள்ளுபுவந்துவிட்டான்.

ஏத்தி - ஏத்த.

இ - ள். மன்னர் சூழ்ந்து கையாற்றொழுது தமதுமுடியின் வயிரத்தினதொளி யாலே அவன்சேவடி ஒளிஇடையறாதிருக்கும்படி இறைஞ்சியேத்த, முடியணிந்த அவந்தியன் ஆர்ப்ப ஒருபிடியினடங்கு நுசுப்பினாளைக் கொள்ளக்கருதி வந்து விட்டா னென்க. (கஉக)

வெள்ளணியணிந்தனான்றேவேந்தர்தம்முடியிற்கொண்ட
கள்ளணிமாலைமோந்துகனைகழலிலங்குநோன்றாட்

புள்ளணிகொடியினானிற்போர்பலதொலைத்தவாற்ற
லள்ளிலையணிந்தவைவேலயோத்தியரிறையும்வந்தான்.

வெள்ளணி - பிறந்த நாளிலொப்பனை. அள்ளுதல் - செறிதல்.

இ - ள். ஒப்பனையையணிந்தவன்றே மாலையைமோந்து கழலிலங்கு காலினையுங் கருடக்கொடியோனைப்போலப் பல போரைத்தொலைத்த ஆற்றலையும் வேலினையுமுடைய அயோத்தியர்க்கிறையும் வந்தானென்க. (கஉஉ)

நீணிதிவணிகரீறுநிலமிசையவர்களெல்லாம்
வீணையிற்பொருதுவெல்வான்விரைவினர்துவன்றிமூதூர்க்
கோணமுமறுகுமெல்லாங்குச்செனநிரைத்தம்மாந்தர்
மாண்மதுநசையின்மொய்த்தமதுகரவீட்டமொத்தார்.

இ - ள். கடிமுரசறைந்தகாலையிலே வணிகரீறாக நிலமிசையவர்களாகியவிவர்களும் ஒழிந்த அரசரும் அந்தணருமெல்லாரும் வீணையிற் பொருதுவெல்ல வேண்டி விரைவினராய் நெருங்கி மூதூரிற் குறுந்தெருவிலும் நெடுந்தெருவிலும்பாவாற்றியென நிரைத்தலாலே, அம்மாந்தர் மதுநசையான் மொய்த்த தேனீயின் திரட்சியையொத்தாரென்க.

மதுகரம்வருந்தத் தேனை ஒருவன் கொண்டுபோமாறுபோல் இவர்வருந்தச் சீவகன் கொண்டுபோதல் கருதிற்று. (கஉங)

க. உருக்கமைந்தெரியுஞ்செம்பொனேரைவில்லகலமாகத்
திருக்குழன்மடந்தைசெல்லத்திருநிலந்திருத்திப்பின்னர்
விரைத்தகுநானநீரால்வெண்ணிறப்பொடியைமாற்றிப்
பரப்பினர்படுவண்டார்ப்பப்பன்மலர்பக்கமெல்லாம். (கஉச)

உ. விலைவரம்பறிதலில்லாவெண்டுகிலடுத்துவீதி
யலர்தலையனிச்சத்தம்போதைம்முழவகலமாகப்
பலபடப்பரப்பிப்பாவைமெல்லடிப்பரிவுதீர
நிலவரைத்தன்னனானீநிதியினல்வறுமைசெய்தான்.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். மடந்தைசெல்லும்படி வீதியிற் றிருநிலத்தை ஒட்டமைந்தெரியும் பொன்னாலே ஓரைந்து விற்கிடையகலமாக எங்குந்திருத்திப் பின்பு நாற்றத்திற்குத் தக்க புழுகாலும் பனிநீராலும் எழுந்தபொடியைமாற்றிப்பக்கமெல்லாம் வண்டார்க்கும்படி மலரைப்பரப்பினர்; அங்ஙனம்பரப்பிப் பாவையதடியிற் பரிவுதீரும்படி அப்பொன்னிலத்தே வெண்டுகிலைப் பலபட அடுத்து அதன்மேலே அனிச்சப்பூவை ஐம்முழவகலமாகப் பரப்புதலாலே, நிலத்தெல்லையிற் றன்னையொப்பாரை நிதியாலே மிடியராக்கினனென்க.

அடுத்து - சேர்த்து. (கஉரு)

மண்டலநிறைந்தமாசின்மதிப்புடைவியாழம்போன்றோர்
குண்டலமிலங்கநின்றகொடியினைக்குறுகித்தோழி

விண்டலர்கோதைவிம்மும்விரைக்குழலொருபால்வீழப்
பண்டியன்மணங்களெல்லாம்பரிவறப்பணிந்துசொன்னாள்.

இ - ள். வட்டநிறைந்த மறுவில்லாத மதியின்பக்கத்துநின்ற வியாழம்போன்று முகத்தருகே ஒருகுண்டலமிலங்கும்படிநின்ற கொடியினை வீணாபதி தொழுதுகுறுகி விரைக்குழலைக்கோதி அவட்குநாணால் வரும்பரிவறப் பண்டு உலகிலியலு மணங்களை யெல்லாந் தாழ்ந்துகூறினாளென்க.

விரைக்குழல் - விகாரம். (௧௨௬)

எரிமணிநெற்றிவேய்ந்தவிளம்பிறையிதுகொலென்னப்
புரிமணிசுமந்தபொற்பூண்பொறுக்கலாநுசுப்பிற்பாவை
திருமணிவீணைக்குன்றத்திழிந்ததீம்பாலைநீத்தத்
தருமுடியரசராழ்வரம்மனைபறிவலென்றாள்.

புரி - முத்துவடம். பாலையாவன - செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கொடிப்பாலை, மேற்செம்பாலை, விளரிப்பாலை எனவேழும். அம்மனை- தாய்; * "அன்னை யென்னை யென்றலு முளவே, தொன்னெறி முறைமை சொல்லி னுமெழுத்தினுந், தோன்ற மரபின வென்மனார் புலவர்." இதுவிதி.

இ - ள். வீணாபதி இது மணியை இரண்டுதலையினுமழுத்தியதோர் பிறையோ வென்ன முத்துவடங்கள் இரண்டுதலையினு மணியைச்சுமந்த பூணைப்பொறுக்கலா நுசுப்பிற்பாவாய், அம்மனாய், நினது மகரயாழாகிய மலையினின்றுங் குதித்த பாலை யென்கின்ற பண்ணாகிய நீர்ப்பெருக்கத்திலே அரசராழுந்துவர்; அதனை யானறிவே னென்றாளென்க.

இதனால் வருவதுகூறினாள். (௧௨௭)

௧. மண்ணனிடமலியவெங்குமாந்தரும்வந்துதொக்கா
ரொண்ணிறவுரோணியூர்ந்தவொளிமதியொண்பொனுட்சித்
தெண்ணிறவிசும்பினின்றதெளிமதிமுகத்துநங்கை
கண்ணியவீணைவாட்போர்க்கலாமின்றுகாண்டுமென்றே (௧௨அ)

௨. பசுங்கதிர்க்கடவுள்யோகம்பழிப்பறநுனித்துவல்லான்
விசும்பிவர்கடவுளொப்பான்விருச்சிகனறிந்துகூற
வசும்புதேனலங்கலம்பாலரிவையோடாய்ந்துநாய்கன்
விசும்புபோன்மாந்தராரவிழுந்திதிசிதறினனே.

இவையிரண்டுமொருதொடர்.

ஈண்டு - பாடமாயிற் றம்மிற் றிரண்டென்க. கண்ணிய - உலகமதித்த. விருச் சிகன் - கணி; காரணப்பெயர். அசும்புதேன் - இடையறாதொழுகுந்தேன்.

இ - ள். சந்திராபரணமென்னுநூலிற் கூர்த்துவல்லான் பிருகஸ்பதியையொப் பானாகியவிருச்சிகன்றான் அறிந்து, மாந்தரும் வந்து மண்ணகநிறைய எங்குந்தொக்கா ராதலின், உரோகிணியூர்ந்த மதியையுடையவியாழக்கிழமையிலே நங்கையது வீணை

* தொல்காப்பியம், பொருளதிகாரம், பொருளியல், ௫௨.

யாகிய வாட்போரின்மாறுபாட்டைக் காண்பேமென்று ஸ்ரீதத்தனுக்குக்கூற; அவனும் பதுமையுடனே இருடைத்துமுறைறமையை ஆராய்ந்து விழுதிமை மாந்தரா ரும்படி மழைபோலச்சிதறினனென்க (கஉக)

வாசநெய்வண்டுமூசமாந்தளிர்விரல்கள்சேப்பப்
பூசிவெள்ளிலோத்திரத்தின்பூம்பொருக்கைத்தசாந்தின்
காசறுகுவளைக்காமரகவிதழ்பயிலமட்டித்
தாசறத்திமிர்ந்துமாதரணிநலந்திகழ்வித்தாரே.

இ-ள். மாதர் மெய்யிலே வண்டுமூச விரல்சிவப்ப நெய்யைப்பூசி, வெள்ளிலோத்திரத்தினது பூவுலர்தலையைத்தகுழம்பாலேகுற்றமறத்திமிர்ந்து நலத்தைவிளக்கினரென்க.

குவளையினது உள்ளிதழின் தடிப்பதெனப்பூசித்திமிர்ந்தென்க. (கஉ௩)

கங்கையின்களிற்றினுச்சிக்கதிர்மணிக்குடத்திற்றந்த
மங்கலவாசநன்னீர்மணிநிறங்கழீஇயதொப்ப
நங்கையைநயப்பவெல்லாம்விரைபொடுதுவருஞ்சேர்த்தி
யங்கரவல்குலாளையாட்டினாரரம்பையன்னார்.

இ-ள். அரம்பையன்னார் மணியையொப்பமிட்டதன்மையொப்ப, நங்கையை நயக்கப்படுவனவாகிய ஓமாலிகைகளெல்லாவற்றையும் விரையையுந் துவரையுஞ் சேர்த்திப் பின்பு, அவளைக் களிற்றினுச்சியிலே குடத்தாற்றந்த மங்கலமாகிய கங்கையினீராலேயாட்டினரென்க.

ஓமாலிகைகளாவன - " இலவங்கம்பச்சிலைகச்சோலமிருவேரிமலையிருவேரிவகுளப்பூச்சுரபுன்னைப்பூ ஏலந்தக்கோலமதர்வரிசிசாதிக்காய்நாகணமஞ்சட்டிநறும்பிசின்குக்குலுமாஞ்சில் கண்டில்வெண்ணெய்திம்பூ கன்னரிவேரடவிக்கச்சோலமரத்தைதசரளம்புழுகுசட்டங்கோட்டமாரிபக்கோட்டந்தகர மதிமதுரமுத்தக்காசுவாய்ந்தவிலாமிச்சஞ்சயிலேகநாகப்பூச்சண்பகமொட்டென்றுமுழுதுணர்ந்தோரோதியமுப்பத்திரண்டேவிதிவகையோமாலிகை." நயப்ப - பெயர். "சந்தனமகிலெலாமி கருப்பூரங் கத்தூரி - குங்கும மென்றிவை யைந்தும் விரையே," "நாற்பான் மரமா நாவ திரிபலைவன்கருங் காலி பத்துத் துவரே." எனவிவை. (கஉக)

வெள்ளணிமழையின்மின்போல்வெண்டுகிற்கலாபம்வீக்கிக்
கண்ணிறமுலையுந்தோளுஞ்சந்தனத்தேய்வைகோட்டித்
தெண்ணிறச்சிலம்புசெம்பொற்கிண்கிணிபாதஞ்சேர்த்திப்
பண்ணிறச்சுரும்புசூழும்பனிமுல்லைச்சூட்டும்வேய்ந்தார்.

இ-ள். வெண்மேகத்தினுட்கிடந்த மின்னுப்போற் றுகிலுக்குள்ளே கலாபத்தைவீக்கி, கண்ணையுநிறத்தையுமுடைய முலையினுந் தோளினுஞ் சந்தனக்குழம்பைப்பூசி, சிலம்பையுங் கிண்கிணியையும் பாதத்தேசேர்த்தி, பண்ணையுநிறத்தையுமுடைய சுரும்புசூழுமுல்லைச்சூட்டைக் கற்பிற்குத் தலையிலே சூட்டினரென்க. (கஉ௫)

எரிமணிச்சுண்ணமின்னுமிருஞ்சிலைமுத்தஞ்சேர்த்தித்
திருமணிமுலையினெற்றிச்சிறுபுறஞ்செறியத்திட்டிப்

புரிமணியாகத்தைதாவிரனுதிகொண்டுபூசி
விரிமணிவியப்பமேனியொளிவிட்டுவிளங்கிற்றன்றே.

புரி - வடம். பூசி - பூச.

இ - ள். அவர் வானவிற்போலுமுத்துவடத்தை முலைத்தலையிலே சேர்த்தி, மணிச்சுண்ணத்தை முதுகிலேசெறியத்தீட்டி, அதனை ஆகத்தே விரனுதியைக்கொண்டு ஐதாகப்பூச மேனிதான் மணிவியக்கும்படி விளங்கிற்றென்க. (௬௩௩)

அருங்கயம்விசும்பிற்பார்க்குமணிச்சிறுசிரலையஞ்சி
யிருங்கயந்துறந்துதிங்களிடங்கொண்டுகிடந்தநீல
நெருங்கியமணிவிற்காப்பநீண்டுலாய்ப்பிறழ்வசெங்கேழ்க்
கருங்கயலல்லகண்ணேயெனக்கரிபோக்கினரே.

இ - ள். நீண்டுலாய்ப்பிறழ்கின்றவிவை ஆழ்ந்தகயத்தை விசும்பிலேநின்று பார்த்துத் தன்னையெடுக்குஞ் சிச்சிலிக்கஞ்சி அதனைத்துறந்து நீலமணியாகிய நெருங்கிய விற்காப்பத் திங்களை இடங்கொண்டுகிடந்த கயலல்ல கண்ணேயென்று பிறர்கருதும்படி மையையெழுதினரென்க.

சான்றுபோலவுந்தோன்ற. கிடந்தென்றும் பாடம். (௬௩௪)

பொருந்துபொற்றூண்கணுன்கிற்பொலிந்துநூற்புலவர்செங்கா
வருந்தியும்புகழ்தலாகாமரகதமணிசெய்கூடத்
திருந்திளையார்கள்கோலமிந்திரனிருமித்தாற்போற்
றிருந்தச்செய்ததற்பினங்கைதிருவிற்கோர்திலகமொத்தாள்.

இ - ள். தூணுன்காற்பொலிந்து நூற்புலவர்புகழ்தலாகாத மணியாற்செய்த ஒப்பித்தற்குப் பொருந்துங்கூடத்தே ஒப்பிக்குமகளிரிருந்து கோலத்தை இந்திரன் நிருமித்தாற்போற்செய்தபின் நங்கை திருமகட்கிட்டதோர் திலகத்தையொத்தாளென்க ()

மண்கனைமுழவம்விம்மவரிவளைதுவைப்பவள்வார்க்
கண்கனைந்திடியின்வெம்பிக்கடலெனமுரசமார்ப்ப
விண்கனிந்துருகுநீர்மைவெள்வளைத்தோளிபோந்தாள்
பண்கனிந்துருகுநல்யாழ்ப்படைபொருதுடைக்கலுற்றே.

மண் - மார்ச்சனை. பண்முற்றுப்பெறுதலிற் கேட்டோர் நெஞ்சுருகுதற்குக் காரணமான யாழ்.

இ - ள். தேவர் நெஞ்சுநெகிழ்ந்துருகுந் தன்மையையுடைய வளைத்தோளி யாழையுடைய மூன்றுவருணத்துப்படையையுங் கெடுத்தலுற்று முழவுவிம்ம வளையொலிப்ப வள்வார்முரசங் கண்ணொலித்து இடியின்வெம்பிக் கடலெனவார்ப்பப் போந்தாளென்க. (௬௩௫)

பரந்தொளியுமிழும்பைம்பொற்கண்ணடிபதாகைதோட்டி
விரிந்திருண்மேயுஞ்செம்பொன்விளக்குவெண்முரசசும்பஞ்
சுரந்தவெண்மதியைச்சூன்றுகதிர்கொண்டுதொகுத்தபோலும்
பொருந்துபொற்கதிர்பெய்கற்றைபுணர்கயல்போந்தவன்றே.

கண்ணாடி - விகாரம். ஒளிபரந்து இருளைக்கெடுக்கும்விளக்கு. அமுதைச்சாந்த மதியைச்சூன்று இரணங்களைவாங்கிக்கொண்டு சேர்த்தபோலுங் கற்றை; பொற்காம் பாற் கதிரைப்பெய்கின்ற கற்றை. புணர்கயல் - இரட்டைக்கயல்.

இ - ள். கண்ணாடிமுதலிய அட்டமங்கலங்களாகிய இவை முன்னேபோந்தனவென்க. (கருள)

வென்றவனகலம்பூட்டவிளங்கொளிமணிசெய்செப்பி
னின்றெரிபசும்பொன்மாலைபோந்தது நெறியிற்பின்ன
ரொன்றியமணிசெய்நல்யாழ்போந்தனவுருவமாலை
தின்றுதேனிசைகள்பாடத்திருநகர்சுடரவன்றே.

தின்று - உள்ளடக்கி. யாழினதுருவை மாலை மறைத்துக்கிடத்தலின் அம்மாலையிற் றேன்பாட. தேன் மாலையைத்தின்றென்று மிகுதியாற்கூறுவாருமுளர்.

இ - ள். உலகுநடக்குநெறியாலே வென்றவனகலத்தேபூட்டுதற்குச் செப்பிலே பொன்மாலைபோந்தது ; அதன்பின்னே பாட விளங்க யாழ்போந்தனவென்க.

தின்றுதேன்றிசைகள்பாடவென்றும் பாடம். (கருஅ)

வேறு.

ஆரந்துயல்வரவந்துகில்சோர்தர
வீரம்படக்கையைமெய்வழிவீசித்
தேரைநடப்பனபோற்குறள்சிந்தரொ
டோருநடந்தனவொண்டொடிமுன்னே.

இ - ள். குறள் சிந்துடனே ஆரமசையத் துகில்நெகிழாநிற்க வீரமுண்டாக விலாப்புடைக்குள்ளே கையைவீசித் தேரைகள் நடக்குமவைபோல ஒண்டொடி முன்னேநடந்தனவென்க. (கருக)

வட்டச்சூறையர்வார்முலைக்கச்சினர்
பட்டுவீக்கியவல்குலர்பல்கணை
விட்டதூணியர்வில்லினர்வாளின
ரொட்டியாயிரத்தோரெண்மர்முன்னினார்.

இ - ள். வட்டமானபனிச்சையர் வாராற்கட்டினகச்சினர் சேலைகட்டினவல்குலர் தூணியர் வில்லினர் வாளினராய் வஞ்சினங்கூறி ஆயிரத்தெண்மர் முற்படச் சென்றாரென்க. (கசo)

வம்புவீக்கிவருமுலையுட்கரந்
தம்பினெய்யவராணுடைத்தானையர்
பைம்பொற்கேடகம்வாளொடுபற்றுபு
செம்பொற்பாவையைச்சேவித்துமுன்னினார்.

இ - ள். ஓடுங்கால் அம்பினுங்கடியவர் வருமுலையுட்கரந்து கச்சுவீக்கி ஆணுடையாக வுடுத்ததானையராய்க் கேடகத்தையும் வாளையும்பிடித்துப் பாவையைச்சேவித்து முற்படச்சென்றாரென்க.

இங்ஙனஞ்சேவித்தல் மகளிர்க்கியல்பு. (கசக)

க. ஆணையாணையகலுமினீரென
வேணுக்கோலின்மிடைந்தவரொற்றலி
னாணையின்றெமதேயென்றணிநகர்
காணுங்காதலிற்கண்ணெருக்குற்றவே. (௧௪௨)

உ. கண்ணினோடுபிறந்ததுகாரிகை
வண்ணங்காண்டற்கன்றோவென்றவைதலர்
விண்ணுமண்ணும்விருந்துசெய்தாலொப்ப
வெண்ணினெண்ணிடமின்றிநெருங்கினர்.

இவை யிரண்டுமொருதொடர்.

இ - ள். காவற்குரியவர்கள் மிடைந்தவரை முற்படவைத்து அவர் நீங்காமையின் ஆணையே அகன்மினெனக்கூறி ஒற்றுதலால், அவர் விண்ணில்விச்சாதரரும் மண்ணி லுள்ளாரும் எள்ளிடவிடமின்றி நெருங்கினர்; காரிகைவண்ணங்காண்டற்கன்றோ, ஆதலான், விசாரித்துப்பார்க்கில் யாமுங் கண்ணினோடு பிறந்தது வண்ணங்காண்டற் காயிருக்குமெனக்கூறிப், பின்னும் எங்கட்கு நீர் விருந்துசெய்தாற்போல இன்றுஎம் முடைய ஆணையே ஆணையாக்கொண்மினெனவுங்கூறி நகரிலுள்ளார் காதலாற் காணுங் கண்கள் நெருக்குற்றவென்க.

வேணுக்கோல் - மூங்கிற்பிளிச்சு. சிலசொல்வருவிக்க. (௧௪௩)

வே று.

க. இனஞ்சேராவாகியிளையாருயிரின்மேலெண்ணங்கொள்வான்
புனஞ்சேர்கொடிமுல்லைபூம்பவளத்துள்புக்குப்பூத்தபோலும்
வனஞ்சேர்துவர்ச்செவ்வாய்வாளெயிறுங்கண்மலரும்வளையலாகாக்
கனஞ்சேர்கதிர்முலையுங்கண்டார்கள்வீட்டுலகங்காணார்போலும். (௧௪௪)

உ. மீன்சேர்குழாமனையமேகலையும்வெம்முலையுங்கூற்றங்கூற்ற
மூன்சேருயிருய்யக்கொண்டோடிப்போமின்களுணாத்தேமென்று
கான்சேர்கமழ்கோதைகாறொடர்ந்தகைவிடாதரற்றுகின்ற
தேன்சேர்திருவடிமேற்கிண்கிணிபொன்னுவதற்கேதக்கவென்பார். ()

௩. கள்வாய்ப்பெயப்பட்டமாலைக்கருங்குழல்கள்கண்டார்நைய
வுள்வாய்ப்பெயப்பட்டவொள்மதுச்செப்போரிணைமெல்லாகமின்ற
புள்வாய்மணிமழலைப்பொற்சிலம்பினிக்கொடியையீன்றாள்போலுங்
கொள்வானுலகுக்கோர்கூற்றீன்றாளம்மவோகொடியவாறே. (௧௪௬)

வே று.

ச. செய்யதாமரைமேற்றிருவேகொலோ
வெய்யநோக்கின்விச்சாதரியேகொலோ
மையில்வானவர்தம்மகளேகொலென்
றையமுற்றலர்தார்மன்னர்கூறினர்.

இவை நான்குமொருதொடர்.

க. முல்லை இளையாருயிரிடத்தறிவைக்கொள்ள வேண்டித் தம்மினத்தைச்சேராவாய்ப் பவளத்துள்ளே புக்குப் பூத்தபோலுஞ் செவ்வாயையும் எயிற்றையுங் கண்மலரையும் பண்ணமுடியாதமுலையையுங் காணுதவர்கள் போலேயிருந்தது முன்பு வீட்டுலகத்தைக் கண்டவர்களென்பாரும். இவையிற்றைக்கண்டவர்கள் பின்னை இவையே காண்பார்களென்று கூறினுரென்றுமாம். செவ்வாய் - பெயர்மாத்திரை.

உ. முலையும் உம்மை - சிறப்பு. கூற்றங்கூற்றம்-விரைவு. ஊன்சேருயிர்-மானிடயாக்கை. பூவென்று தேனினஞ்சேருமடி. ஆகவதற்கே ஏகாரம் - எதிர்மறை.

கோதைபோல் வானிடத்தே கட்டப்பட்டு, முலையும் கூற்றங்கூற்றம்; நமதுயிர் ஊன்சேருயிராதலின் அதனைப் பிழைக்கக் கொண்டோடிப்போங்கள், எம் மேற்றாழ்வறவுரைத்தேமென்று மாறுதரற்றுகின்ற திருவடிமேற் கிண்கிணியுமக்குலின்மேகலையும் பொன்னுவதற்கோ தக்க; இவளிடத்தே தங்குதற்குத் தக்கனவல்லவோவென்பாரும்.

ங. மாலைக்கருங்குழலும் பாடம். பன்மை - ஐம்பாற்பகுதி. விருப்பமாகிய மதுவைநெஞ்சுகளிலே பெயப்பட்டசெப்பாவது முலை; மதுப்பெய்தசெப்புமாம். மணியாகியநாவால் அன்னத்தின்வாய்போல மழலைவார்த்தைகூறுஞ்சிலம்பு. கொள்வான்-உயிரைக்கொள்ளுதற்கு.

கேட்பீராக ஆகமீன்றசெப்பிணையையுங் கள்வாய்மாலை வேயப்பட்டகுழல்களையுங் கண்டார்வருந்தும்படி இக்கொடியை யீன்றவள்போலேயிருந்தது முன்பு உலகத்திற்குக் கூற்றுவனையீன்றவள்; ஒ ஒருத்தி கொடியபடி என்னென்பாருமென்க. பெண்ணுமாணுமிவ்வாறுபெறுதலின் ஒவென்ருர்.

ச. கொல் - ஐயம். ஒகாரம் - அசை. வெய்ய – கொடிய.

இ - ள். மன்னர் என்பாரும் என்பாரும என்பாருமாய்ப் பின்னுந் திருவோ விச்சாதரியோ மகளோவென்றையுற்றுக்கூறினுரென்க. (கசஎ)

வீணைவென்றிவள்வெம்முலைப்பூந்தட
மாணைதோய்வதல்லாற்பிறன்வெல்லுமேற்
கோணைப்போருட்குளிக்குவமன்றெனின்
மாணநற்றவஞ்செய்குவமென்மரும்.

இ - ள். இவள் முலைத்தடத்தை யாழைவென்று தோயவதன்றி ஒருவன் வலியிற்கொள்ளக்கருதின் ஆணையே போரிற்குளிக்குவம்; இவடான்வெல்லின் இவளைப் பெறுதற்கு நல்வினையுண்டாம்படி தவஞ்செய்குவமென்பாருமென்க.

ஆணை - வஞ்சினம். (கசஅ)

குளிகச்செப்பெனக்கொம்மைவருமுலை
நளியுமெம்மையென்பார்நல்லகண்களால்
வளியவாங்கியெய்தாளெம்மைவாழ்கலே
மெலியவாவிவிடுக்குமற்றென்மரும்.

மெலிய - விகாரம்.

இ - ள். மூலையெம்மைவருத்தும்; இனி வாழ்கவேமென்பாரும்; கிராம்பவகித்துக் கண்ணுகியஅம்பாலேயெம்மையெய்தான், அதனாற்றேய்ந்தஆவிபோமென்பாருமென்க. ()

ஊட்டியன்னவுருக்கரக்காரடி
நீட்டிமென்மலர்மேல்வந்துநின்னலங்
காட்டியெம்மைக்கொன்றுயெனக்கைதொழு
தோட்டைநெஞ்சினராயுழல்வார்களும்.

இ - ள். இயல்பானசிவப்பால் அரக்கூட்டியன்ன நிறத்தோடுபொருந்திய அடி நீட்டப்பொருததனை நீட்டி வந்து நலத்தைக்காட்டி வருத்தினுயென்றுகூறித் தொழுது அறைபோயநெஞ்சினராய் வருந்துவார்களுமென்க. (௧௫0)

வே று.

திங்கண்மதிமுகத்தசேலும்பவளமுஞ்சிலையுமுத்துங்
கொங்குண்குழலாண்மெல்லாகத்தகோங்கரும்புங்கொழிப்பில்பொன்னு
மங்கைகுழியாவரக்கீந்தசெந்தளிர்நெய்தோய்த்தபோலு
மங்கைமலரடியுந்தாமரையேயாமறியேமணங்கேயென்பார்.

பிறையையுடையதொருமதி - இல்பொருளுவமை ; திங்கள்மதித்த முகமுமாம். முகத்த ஆகத்தவென்னும் பெயர்கள் அவ்வுறுப்புகளையுணர்த்தும்.

இ - ள். குழலாளது முகத்திடத்தனவாகியகண்ணும் புருவமும் வாயும் எயிறும், சேல்முதலியவற்றையொக்கும்; ஆகத்திடத்தனவாகியமுலையுஞ் சுணங்கும், அரும்பையும் ஒட்டற்றபொன்னையுமொக்கும்; அகங்கை குழியாவாய்த் தளிர் நெய் தோய்த்தவற்றையொக்கும்; மங்கையடியுந் தாமரைமலரையொக்கும்; இவை வருத்தும்வருத்தமொன்றுமே இத்தன்மைத்தென்று யாம்அறியாதிருக்கின்றேமென்பாருமென்க.

இவற்றில்நம்மைவருத்துகின்றது இதுவென்று யாமறியேமென்றுமாம். அணங்கேயென்னுமேகாரம் தேற்றம். (௧௫௧)

பொன்மகரம்வாய்போழ்ந்தமுத்தநூற்றேள்யாப்பிற்பொலிந்தவாறு
மின்மகரங்கூத்தாடிவில்லிட்டிருங்குழைகீழ்விளங்குமாறு
மன்மகரவெல்கொடியான்மால்கொள்ளக்கால்கொண்டமுலையினானை
யென்னரம்பையென்னுவாறென்பாரிமைக்குங்கணிவையோவென்பார்.

மகரம் தன்வாயங்காத்தலிற் றேன்றியமுத்து. மகரம் அசைதலால் ஒளியை வீசிவிளங்குகிறபடியும். மன் - பெருமை.

இ - ள். முலையினானை அரம்பையென்னுதபடி மாறுபட்டு இம்முத்துவடம் தோட்கட்டிற்பொலிந்தவாறும், இக்குழை காதிலிலங்குமாறு மென்னென்பாரும், கண்ணிமைக்கு மென்பார்க்கு இம்மானிடமகளிர்கண்களோ இக்கண்களென்பாருமென்க.

ஓகாரம் எதிர்மறை. இப்பூண்கள் கந்தருவர்செய்தனவாகலின், இவள் தெய்வ

மன்றென்று தெளிவித்தவென்றும், கண் இமையாநிற்கவும் மானிடரில் விசேடமுண் டென்றுங் கூறினர். இது *"வண்டே யிழையே வள்ளி பூவே" என்னுஞ்சூத்திரவிதி.

கோள்வயிரநீளருவிக்குன்றிவர்ந்தசெஞ்சுடர்போற்கொலைவேன்மன்னர்
நீள்வயிரவெண்மருப்பினிலக்களிற்றின்மேனிரைத்தார்பொங்கத்
தோள்வயிரந்தோன்றத்தொழுவாரழுதுநைவார்தொக்கோர்கோடி
வாள்வயிரம்விற்குமடநோக்கியார்கொலோபெறுவாரென்பார்.

கோட்பாட்டையுடையவயிரம். நீள்வயிரம் - ஆகுபெயராற் கொள்க. நிரைத் தார் - வாகைத்தார், யாழ்வென்று சூடுதலின். பொங்க - மிகுத்துக்காட்ட. தோள்வ யிரந்தோன்ற - தோள்வலி உலகெங்கும்பரக்க. இவளைப்பெறவே எல்லாவாற்றானுந் தோள்வலியுண்டாமென்றார். அது †"திருமகளிவளைச்சேர்ந்தான்" என்னுங் கவி யானுமுணர்க. தொழுவார்க்கிவர்ந்த செஞ்சுடரென்க. அழுதுநைவாரென்றது அவ லம். ‡"இளிவே யிழவே" என்னுஞ்சூத்திரத்தில், அசைவாவது பழையதன்மை கெட்டு வேறொருவாறாய் வருந்துதலாதலின், இவருமத்தன்மையெய்தி அவலமுற்றா ரென்க. இது தம் அசைவிற் றோன்றிய அவலம். கோடி - அநேகர். வாள் தனது செற்றத்தைக் கைவிடுதற்குக் காரணமானநோக்கி. ஒருவனென்று துணியலாகாமை யிற் பன்மையாற்கூறினர்.

இ - ள். மன்னர் குன்றிலே தொழுவார்க்கிவர்ந்தசுடர்போலே இருந்து அழுது நைவாராய்த் தொக்கு ஓர்கோடியாயிருந்தவர்களிவிம்மடநோக்கியைத் தார்பொங்கத் தோள்வயிரந்தோன்றப் பெறவிருக்கின்ற நல்வினையுடையார் யாரென்பாருமென்க. ()

பைம்பொனிமிரகொடிபாவைவனப்பென்னுந்தளிரையீன்று
செம்பொன்மலர்ந்திளையரார்கண்ணென்னுஞ்சீர்மணிவண்டுழலச்சில்லென்
றம்பொற்சிலம்பரற்றவன்னம்போன்மெல்லவேயொதுங்கியம்பூஞ்
செம்பொற்புரிசையடைந்தாள்செந்தாமரைமேற்றிருவொடொப்பாள்.

வனப்பென்னுந்தளிரையீன்று பொன்னைப்பூத்துக் கண்ணென்னும் வண்டுழலும் படி பொன்றாய்வளர்ந்ததோர் கொடியென்றொருபெயர். ஒடு - எண்ணொடு.

இ - ள். அலர்தார்மன்னர் அங்ஙனங்கூறிப் பின்பு, அவரும் ஒழிந்தோரும் என் மரும் உழல்வார்களும் என்பாருமாகாநிற்ப; கொடியையும் பாவையையுந் திருவையு மொப்பாள் சிலம்பரற்ற அன்னம்போல நடந்துசென்று புரிசையைச் சேர்ந்தா ளென்க. (கஙச)

பட்டியல்றகலட்டத்திரைவளைத்துப்பல்மலர்நன்மாலைநாற்றி
விட்டகலாச்சாந்தினிலமெழுகிமென்மலர்கள்சிதறித்தூம
மிட்டிளையரேத்தவிமையார்மடமகள்போலிருந்துநல்யாழ்
தொட்டெழீஇப்பண்ணெறிந்தாள்கின்னரருமெய்ம்மறந்துசோர்ந்தாரன்றே

நாற்றம் விட்டகலாத. தூமம் - ஆகுபெயர்.

* தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், ச.
† காந்தருவதத்தையாரிலம்பகம், உ௱உ.
‡ தொல்காப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல், ரு.

இ - ள். பல்வண்ணத்திரையைவளைத்து காற்றி மெழுகிச்சித்திறி அகிலைப்புகைத்து இளையரேத்தாநிற்க; இமையார் மடமகள்போலேஇருந்து யாழையெடுத்துப்பண்ணை யெழுப்பி நரம்பைத்தெறித்தாள்; அப்பொழுது கின்னரருஞ்சோர்ந்தாரென்க.

யாழ்மண்டபத்தேயிருந்து அவைப்பரிசாரமாகப் பாடுகின்றமை கூறுகின்றார். கண்டத்திரை - கண்டமாகியதிரை. (கருரு)

வேறு.

புல்காஞ்சித்தாதுதன்புறம்புதையக்கிளியெனக்கண
டன்புகொண்மடப்பெடையலம்வந்தாங்ககல்வதனை
யென்புருகுகுரலழைஇயிருஞ்சிறகர்குலைத்துதிர்த்துத்
தன்பெடையைக்குயிறழுவத்தலைவந்ததிளவேனில்.

இ - ள். தாதிலே தன்புறம்புதைதலாலே பெடை அதனைக்கண்டு கிளியென்ற லம்வந்து அவ்விடத்துநின்றும் போகின்றவதனைத் தன்குரலாலே யழைத்துச் சிறகை யசைத்துத் தாதை உதிர்த்துக் குயில் பெடையைத் தழுவும்படி இளவேனில் அவ்வி டத்தேவந்ததென்க. (கருசு)

தண்காஞ்சித்தாதாடித்தன்னிறங்கரந்ததனைக்
கண்டாளுமடப்பெடைகிளியெனப்போய்க்கையகல
நுண்டேவியிளஞ்சேவனேக்கோடுவிளிபயிற்றித்
தன்சிறகாற்பெடைதழுவத்தலைவந்ததிளவேனில்.

இ - ள். தாதையளைந்து தன்னிறங்கரந்த சேவலைக்கண்டு அமையாத பெடை கிளியெனக்கருதிக் கைவிட்டுநீங்குதலாலே சேவல் இங்கிதமான நோக்கோடே அழைத்தலைப் பல்காலிகழ்த்திப் பெடையைச் சிறகாற்றழுவும்படி இளவேனிலவ்வி டத்தேவந்ததென்க. (கருஎ)

குறுத்தாட்குயிற்சேவல்கொழுங்காஞ்சித்தாதாடி
வெறுத்தாங்கேமடப்பெடைவிழைவகன்றூடப்பதனை
மறுத்தாங்கேசிறகுளர்ந்துமகிழ்வானுக்கொளத்தேற்றி
யுறுப்பினலடிபணியவிறுத்தந்ததிளவேனில்.

இ - ள். சேவல் தாதையாடுதலாலே பெடை கிளியென்று அப்பொழுதேவெ றுத்து வேட்கைநீங்கிப்போகின்றதனைப் போக்கைத்தவிர்த்து உளர்ந்து தேற்றித்தலை யால்வணங்கும்படி வேனில் அவ்விடத்தேவந்ததென்க.

பங்குனியிலும் சிறிதுவேனில் தோன்றுதலின் இதுகூறினர். வேட்கைவிளை கின்ற பருவத்தாளாதலின் இதுகூறினள். இம்மூன்றும் ஒருபொருண்மேல் மூன்ற டுக்கித் தாழம்பட்ட ஓசைபெற்று வந்த கொச்சகவொருபோகு. ஒருபோகென்பது பண்புத்தொகைப்புறத் தன்மொழி. இது * "தரவின்றாகி" என்னுஞ் சூத்திரவிதி. இசைநூலோர் முகநிலைமுரிவென்பனவற்றில் நிலையென்ப இதனை. (கருஅ)

வேறு.

தளையவிழ்கோதைபாடித்தானமர்ந்திருப்பத்தோழி
விளைமதுக்கண்ணிவீணைபதியெனும்பேடிவேற்க

* தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், கசுக.

வரிளையவள்பாடவீரரெழால்வகைதொடங்கலன்றேல்
வளையவளொழாவின்மைந்தர்பாடுகவல்லையென்றாள்.

இ - ள். கோதை அவைப்பரிசாரத்தைப்பாடி யாழ்வாசித்தற்குச் சமைந்திரா நிற்க; அவடோழியாகிய வீணாபதியென்னும்பேடி இளையவள்பாட வீரரெல்லாருமதற் கேற்ப யாழின் கூறுபாட்டையெல்லாம் வாசிக்கத்தொடங்குக; அதற்கிசையீரா யின், வளையவளது யாழ்வாசினைபோலே மைந்தர் விரையப் பாடுவீராகவென்று ளென்க.

தொடங்கல் - அல்லீற்றுவியங்கோள். *"இற்றெனக்கிளத்தல்" போல. இதற்கு உத்தரங்கூறலாற்றாது அவளுடனே நகையாடுகின்றார். (கஙக)

வே று.

வேயேதிரண்மென்றோள்வில்லேகொடும்புருவம்
வாயேவளர்பவளமாந்தளிரேமாமேனி
நோயேமுலைசுமப்பதென்றார்க்கருகிருந்தா
ரேயேயிவளொருத்திபேடியோவென்று
ரெரிமணிப்பூண்மேகலையாள்பேடியோவென்றார்.

இ - ள். தோள் வேயே; புருவம் வில்லே; வாய் பவளமே; மேனி தளிரே; இவை இத்தன்மையவாகவும் முலைகண்டிலேம்; இவட்கு முலைசுமத்தல் நோயோவெ ன்றையுற்று வினவினார்க்கு அருகிருந்தவரும் முலைகாணாமையால் என்னே என்னே இவளொருத்தி பேடியோவென்றையுற்றார்; அதுகேட்டுச் சிலர் தத்தையுடன் வந்தா ளென்று யாங் கேட்டிருந்தபேடி இவளோவென்றாரென்க. (ககல)

பலிகொண்டுபேராதபாசமிவள்கண்
ணொலிகொண்டுயிருண்ணுங்கூற்றமென்றெல்லே
கலிகொண்டுதேவர்முலைகரந்துவைத்தா
ரிலைகொண்டபூணினீரென்றெழினிசேர்ந்தா
ளிலங்குபொற்கிண்கிணியாணக்கெழினிசேர்ந்தாள்.

கொண்டு - கொள்ள. ஒலி - தழைத்தல். "ஒலித்தெங்கு" போல. எல்லே- வெளியே. கலி - ஆரவாரம்.

இ - ள். அவள் அதுகேட்டுப் பூணினீர், பிரமனூர் படைக்கின்றபொழுதேஇவ ள்கண் உயிர்ப்பலிகொள்ளுதலாலே தன்கொலைத்தொழிலின் மீளாத காலபாசம்; இவ டான் எல்லேசென்று உயிரையுண்ணுங்கூற்றமென்றுகருதி எனக்கு முலையை மறை த்துவைத்தா ரென்றுகூறிப்போய்த் திரையைச்சேர்ந்தாள்; அக்கலியைபுட்கொண்டு தத்தையும் நக்கு இருந்தவிடத்தி னின்றும் வந்து திரையைச்சேர்ந்தாளென்க.

"கடாமுங்குருதியுங் கால்வீழ்த்தபச்சைப்-படாமும் புலித்தோலுஞ்சாத்தும்பரம- னிடாமுண்ட நெற்றியானெஞ்ஞான்றுங் கங்கை - விடாமுண்டவார்சடையான் வெ ண்ணீறணிந்தோன் - மெய்யுறுகோயில்லை வேறோர்பிறப்பில்லை - யையுறுநெஞ்சில்லை யாகாததொன்றில்லை" "எனநான்கடிச்செய்யுள் முடியவும் ஈற்றடி யிரண்டு மிக்கு வேறுபடவந்த கொச்சகமென்றுகூறி, ஒழிந்தனவும் பிறவேறுபாட்டான் வருவனவும்

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், கக.

வந்துழிக்காண்க", என்றமையின் இக்கவியிரண்டுமே ஒரோவோரடிமிக்கு வேறுபட வந்த கொச்சகவொருபோகாம். (கசுக)

வேறு.

நுண்டுகிலகலல்குனெரித்தவெம்முலை
யுண்டிவணுசுப்பெனவுரைப்பினல்லது
கண்டறிகிலாவிடைக்காமவல்லியாழ்
கொண்டவர்குழாத்திடைக்கொடியினெல்கினள்.

இ - ள். அல்குலுமுலையு மிவட்கு இடையுண்டெனக் கூறுமதுவொழிந்து கட்புலனுகாத இடையையுடைய தத்தை யாழையெடுத்துத் தோழியர்குழாத்திடையே கொடியைப்போல ஒதுங்கினளென்க.

இதனல் திரையருகினின்றும் யாழ்வாசிக்கின்றவிடத்து ஏறப்போகின்றாளென்றார். நொசித்தமுலை - நோக்கினார் நெஞ்சைவருத்தினமுலை. (கசுஉ)

பளிக்கொளிமணிச்சுவரெழினிபையவே
கிளிச்சொலினினியவாணீக்கக்கிண்கிணி
யொளிக்குமின்றாடவருயிர்களென்னநொந
தளித்தவையிரங்கச்சென்றணையினேறினள்.

இ - ள். அவள், கிளிச்சொல்விற்காட்டில் இனியசொல்லையுடையார பளிங்காகிய ஒளிமணியாற்செய்த சுவரை மறையவீழ்த்த திரையைப் பையவே நீக்காநிற்க, கிண்கிணி இன்று ஆடவருயிரெல்லாம்போமென்றுநொந்து அருள்பண்ணி அவையிரங்க நடந்துசென்று அணையிலே யேறினளென்க. (கசுௗ)

உறைகழிந்திலங்குவாளுடற்றுங்கண்ணிணை
மறையொளிமணிச்சுவரிடையிட்டித்தலை
யிறைவளையாழ்தழீஇயிருப்பவத்தலைக்
கறைகெழுவேலினாகண்ணிதிந்தவே.

இ - ள். கண்ணிணைள் தன்னைமறைத்தற்குச் சமைத்த பளிக்குச்சுவரை நடுவேயிட்டு வளைந்தயாழைக் கையாலேதழீஇ உள்ளேயிருப்ப, அவளைக்கண்டு புறத்திருந்த வேலினார்கணணி காமத்தியாற்றீந்தனவென்க.

பளிங்கிற்கு இரண்டுபுறத்தோருந் தோன்றுவா. இறை - ஆகுபெயா. "பதுமம் வீரஞ் சிங்கம் பிரமரம் - பாத விலக்கண மஞ்சாநு மண்டிதம - விதியுறு பங்கோற் பவஞ்சுக மண்டித - மேலோா விரும்பு மெய்யா சனமே;" இவ்வொன்பதினும்இவள் பதுமாசனத்தேயிருந்தாள்; "நேரிருந்து கால்டிகண் மாற்றிக் குதிமேலாப் - பாரிருத்தல் பத்மாசனம்." *"ஒன்பான் விருத்தியுட் டலைச்சண் விருத்தி - நன்பா லமைந்த விருக்கையள்" என்றார் பிறரும். (கசுச)

சிலைத்தொழிற்சிறுநுதறெய்வப்பாவைபோற்
கலைத்தொழில்படவெழீஇப்பாடினள்கனிந்
திலைப்பொழில்குரங்கினவீன்றதூண்டளிா
நிலத்திடைப்பறவைமெய்ம்மறந்துவீழ்ந்தவே.

---

* சிலப்பதிகாரம், வேனிற்காதை.

ஏறிட்டவிற்போலு நுதல். தெய்வத்தாற்செய்த கொல்லிப்பாவை; "பூதம்புனைந்த புதியியல் பாவை" என்றார்பிறரும். கலைத்தொழிலாவன: *"பண்ணல்பரிவட்டணையாராய்த றைவரல்-கண்ணிய செலவுவிளையாட்டுக் கையூழ்-நன்ணிய குறும்போக்கு" என்றவெட்டும். பண்ணல் - பாடநினைத்த பண்ணுக்கு இணை கிளை பகை நட்பானநரம்புகள் பெயருந் தன்மைமாத்திரையறிந்து வீக்குதல். பரிவட்டணை - அவ்வீக்கினநரம்பை அகவிரலாலும் புறவிரலாலும் கரணஞ்செய்து தடவிப்பார்த்தல். ஆராய்தல் - ஆரோகணஅவரோகணவகையால் இசையைத் தெரிவது. அநுச்ருதியேற்றுதல், தைவரல். ஆளத்தியிலே நிரம்பப்பாடுதல், செலவு. பாடநினைத்த வண்ணத்திற்சந்தத்தைவிடுதல், விளையாட்டு. வண்ணத்திற்செய்தபாடலெல்லாம் இன்பமாகப்பாடுதல், கையூழ். குடகச்செலவுந்துள்ளற்செலவும் பாடுதல், குறும்போக்கு.

இ - ள். சிறுநுதல் பாவைபோலிருந்து யாழைவாசித்து அதற்கேற்பப் பாடினளாக; பொழில் உருகிவளைந்தன; தூண்தளிராயீன்றன; கின்னரமிதுனங்கள் மெய்ம்மறந்து வீழ்ந்தனவென்க. (௧௬௫)

கருங்கொடிப்புருவமேறாகயனெடுங்கண்ணுமாடா
வருங்கடிமிடறும்விம்மாதணிமணியெயிறுந்தோன்றா
விருங்கடற்பவளச்செவ்வாய்திறந்திவள்பாடினாளோ
நரம்பொடுவீணைநாவினவின்றதோவென்றுநைந்தார்.

கொடி - ஒழுங்கு. கடி - விளக்கம்.

இ - ள். அரசர்முதலாயினார் புருவம்ஏறா; கண்ணும்ஆடா; மிடறும் வீங்காது; எயிறுந் தோன்றா; ஆதலான் இவள்வாய்திறந்து பாடினளோ! அன்றி யாழ்தான் தனக்குரிய நரம்போடே சாரீரவீணைக்குரிய நாவாலும்பாடிற்றோவென்று வருந்தினரென்க.

இது பதினொருவகையிலும் உள்ளாளப்பாட்டு. பாடுங்கால் இடை பிங்கலையை இயக்கமறுத்து மூலாதாரமுதல் பிரமரந்திரமளவு மியக்கமாக்கி நடுவுதொழில் வரப் பாடுதலென்றறிக: "உள்ளாளம் விந்துவுட னாத மொலியுருட்டுத் - தள்ளாத தூக்கெடுத்த றன்படுத்தன்-மெள்ளக்-கருதி நலிதல்கம் பித்தல் குடில-மொருபதின்மே லொன்றென் றுரை." "கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா - பல்லனவும் வாய்தோன்றா பற்றெரியா - வெண்ணிலிவை - கள்ளார் நறுந்தெரியற் கைதவனேகேட் தருவ - ருள்ளாளப் பாட லுணர்." (௧௬௬)

வேறு.

இசைத்திறத்தங்கனேயனையகீர்மையார்
வசைத்திறமிலாதவர்வான்பொன்யாழெழீஇ
விசைத்தவர்பாடலின்வெருவிப்புள்ளொலா
மசிப்பபோன்றிருவிசும்படைந்தவென்பவே.

இ - ள். முன் மெய்ம்மறந்து வீழ்ந்தபுள்ளெல்லாம் காமனையொத்த சீராரிய வசையிலாதோர் யாழைவாசித்து உச்சத்தேபாடுதலின், அதற்குவெருவி அவரைச் சிரிப்பனபோல விசும்பைச் சேர்ந்தனவென்க.

அசிப்ப - வடசொற்றிரிபு. (௧௬௭)

---

* சிலப்பதிகாரம், கானல்வரி.

மாதர்யாழ்தடவரவந்தமைந்தர்கைக்
கீதத்தான்மீண்டனகேள்விக்கின்னரம்
போதரப்பாடினாள்புகுந்தபோயின
தாதலர்தாரினார்தாங்கள்பாடவே.

இ - ள். மாதர் யாழைவாசித்தலாலே வந்த அறிவையுடைய கின்னரம் மைந்தர் யாழ்வாசினையாலே மீண்டுபோயின; அவை உள்ளேவந்து புகுதும்படி கண்டத்தாற் பாடினாள்; அப்பொழுது புகுந்தன; தாரினார் தாம் கண்டத்தாற்பாட மீண்டும் அவை போயினவென்க. (௧௬௮)

சுரும்பெழுந்திருந்துணுந்தொங்கல்வார்குழ
லரும்பெறலவட்கிசையரசர்தோற்றபி
னரம்புறுதெள்விளிநவின்றநான்மறை
வரம்பெறுநெறியவர்மலைதன்மேயினார்.

"எழுந்திருந் துண்ணு நறுந்தா தூதும், தும்பிகையாடு வட்டிற்றோன்றும்" என்றார்பிறரும். வரம் - வேண்டுவகோடல்.

இ - ள். குழலையுடைய பெறுதற்கரியவட்கு அரசர் இசையைத் தோற்றபின்பு நரம்போடுசேர்ந்த பாட்டிலே பயின்ற அந்தணர் வாசித்தலைப் பொருந்தினாரென்க.

சுரும்பெறிந்திருந்தென்றும் பாடம். (௧௬௯)

திருமலர்க்கமலத்தங்கட்டேனினமுரல்வதொப்ப
விரிமலர்க்கோதைபாடவெழால்வகைவீராதோற்று
ரெரிமலர்ப்பவளச்செவ்வாயின்னரம்புளரமைந்தர்
புரிநரம்பிசைகொள்பாடலுடைந்தனர்பொன்னனாட்கே.

இ - ள். கோதை தாமரைப்பூவிலே தேனினம் பாடுந்தன்மையை யொப்பக் கண்டத்தாற்பாட அந்தணர் அதற்கேற்ப யாழைவாசித்தலைத் தோற்றார்; முருக்கிதழ் போலுஞ் செவ்வாயினையுடையாள் நரம்பைத்தடவ மைந்தர் அந்நரம்பினிசையைக் கொண்ட கண்டப்பாடலை அவட்குத்தோற்றாரென்க.

* "அந்த ணாளர்க் கரசு வரைவின்றே." என்றதனால் வீரரென்றார். (௧௭௦)

வாலரக்கெறிந்தகாந்தண்மணியரும்பனையவாகிக்
கோல்பொரச்சிவந்தகோலக்குவிவிரன்மடந்தைவீணை
நூல்பொரப்புகுந்தநுண்ணூல்வணிகருந்தொலைந்துமாதோ
கால்பொரக்கரிந்தகாமர்பங்கயப்பழனமொத்தார்.

இ - ள். நரம்பைத் தடவுதலாலேஅரத்தமூட்டின அரும்பையனையவாகிச் சிவந்த விரலையுடைய மடந்தைக்கு யாழை இசைநூலோடே வாசிக்கத்தொடங்கின பூணுநூலையுடையவணிகருந்தோற்றுக் கரிந்ததாமரைப் பழனத்தையொத்தாரென்க.(௧௭௧)

தேனுயர்மகரவீணைத்தீஞ்சுவையிவளைவெல்வான்
வானுயர்மதுகைவாட்டும்வார்சிலையகங்கனாகு

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௮௨.

மூனுயர் நுதிகொள்வேலீ ரொழியினிக்கில்லையென்றான்
காளுயரலங்கன்மாலைக் கட்டியங்காரனன்றே.

தேனின்மிக்கவார்சிலை.

இ - ள். கட்டியங்காரன் இவனைத் தசைமிக்க முனைகொண்டவேலினீர், மகர யாழின் இனிமையைவெல்வான் வானிலுள்ளாரது அறிவைக்கெடுக்குங் காமனுமி ருக்கும்; இவ்வுலகினில்லையல்லவோ, ஆதலின் இவ்வியாழ்வாசினை இனி ஒழிவதாக வென்றானென்க. (கஎஉ)

க. மறுமுயற்கிவர்ந்தவேகமாசுணமடையப்பட்ட
நிறைமதிபோன்றுமன்னரொளிகுறைந்துருகிநைய
வறுபகல்கழிந்தபின்றையந்நகர்க்காதிநாய்கன்
சிறுவனேர்சிங்கவேற்றைசீவகசாமியென்பான். (கஎங)

உ. தம்பியுந்தோழன்மாருந்தானுமற்றெண்ணிச்சூழ்ந்து
வெம்பியவினைப்போருட்செல்குவம்யாமுமின்னே
தும்பறப்புத்திசேனசொல்லிதுகுரவர்க்கென்னக்
கந்துகற்கவனுஞ்சொன்னனவனிதுவிளம்பினனே.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். முயலைக்காத்தற்பொருட்டாகத தன்னிடத்தே மறுப்பரந்த நிறைமதி தன்னை அடையப்பட்ட மாசுணத்தினது வேகத்தாலே ஒளிகுறையு மாறுபோன்று மன்னர் ஒளிகுறைந்துநையாநிற்க ஆறுநாள்சென்றபின்பு, நாய்கன்சிறுவன் ஏற்றை சீவகசாமியென்பான் அவன் தானுந் தம்பியுந் தோழன்மாருமாகவிருந்து அரசர் முத லாயினர் சூழ்ந்து மாறுபட்டயாழப்போரிலே இத்திரள்குலைவதற்குமுன்னே யாமுஞ் செல்வேமென்றெண்ணி இககாரியத்தைப் புத்திசேனனே, நீசென்று கன்னியிடத்து வேட்கையாற்செல்கின்றானல்லன்; கல்விதோற்றுவித்தற்குச் செல்கின்றானென்று கொள்ளும்படி குரவர்க்குக் கூறென்றுகூறக் கந்துகனுக்குப் புத்திசேனனுங் கூறினா னாக, கந்துகன் இவ்வார்த்தையைக் கூறினானென்க.

அதுமேற கூறுகின்றார். ஆறுநாள் ஒருமரபு. தும்பற - சிம்பற. (கஎச)

"ஐயன்" முதல் "இன்னன்" என்னுமளவுமொருதொடர்.

க. ஐயனுக்கமைந்தநீராரறுபத்துநால்வரம்பொன்
வையகத்தமிர்தமன்னார்வாக்கமையாவையொப்பா
ரெய்தியவிளமைமிக்காரியைந்தனரென்றுமின்னுங்
கையமைசிலையினாற்குக்கநதுகனிதுவுங்கூறும். (கஎரு)

உ. மறைவல்லாற்குரைக்கும்போழ்திற்கோயிலுணின்றுமாலைப்
பிறைவெல்லுநுதலினாேர்பெண்கொடிவந்துகூத்த
லுறைசெலநீக்கிப்பைந்தாரொண்மணிக்குவளைநீட்ட
நறைவெல்லுநாகமாலைநோக்கொடுபூக்கொண்டானே.

இவையிரண்டுமொருதொடர்.

அறுபத்துநால்வரென்றது கலைகளை. வாக்கு - திருத்தம். சிலேயினன்-சீவகன். இதுவுங்கூறும் - உலகம் இவன் மிகுதிப்பாடுகூறும். உம்மை - சிறப்பு. மிகுதியாவது உலகமேத்துதலானுங் கல்லேந்தி நீக்குதலானு நிரைமீட்டலானு முளதாய மிகுதி. இதற்குக் கட்டியங்காரன் பொறாததே குறையென்றான். இது மேலே "விலங்கல்" என்னுங் கவிமுதலியவற்றாற்காண்க. நுதலினளாகிய பெண்கொடி. மாலையென்றதற்கேற்ப நகைநகைகூறினார். நோக்கு - நோக்கமேனுக்கம்.

இ - ள். இன்பத்தால் அமுதன்னராய் நீங்கலாகாமையிற் கொல்லியம்பாவையன்னராய் மூப்பிலாதாராயமைந்தநீரார்அறுபத்துநால்வரையனுக்கு முன்பேயிவையைந்தாராதலால் யாழ்வாசிக்கச் சேறற்குக் குறையில்லையென்றுவிளம்பினன்; விளம்பிப்பின்னுங் கந்துகன் சிலேயினனுக்கு ஆண்டுச்சேறற்கு உலகங்கூறுமிகுதியாற் சிறிது குறையுண்டென்று மறைவல்லார்க்குக் கூறுகின்றகாலத்தே கோயிலினின்றும் ஒரு பெண்கொடிவந்து கூந்தலாகிய உறையை அகலநீக்கித் தாளினையுடைய மணிபோலுங்குவளையைநீட்ட அதனை மயிரிலே வைத்த பூவென்றிகழாதே இவளை வரவிட்ட நாகமாலை குறிப்பாலே ஒருகாரிய முண்டென்று கருதிப் பூவைக்கைக்கொண்டானென்க.

என்றென்பதிரண்டிடத்துங்கூட்டுக. (கஎசு)

க. நல்லவனேக்காய்கன்றேர்ந்துபூங்குவளைப்போதி
னல்லியுட்கிடந்தவோலைதாளதுசலாகையாதல்
சொல்லுமென்றாய்ந்துகொண்டுதுகிலிகைக்கணக்குநோக்கி
வல்லிதிற்சலாகைசுற்றியோலையைவாசிக்கின்றான். (கஎஎ)

உ. நம்பனைநகரினீக்கிச்சேமத்தால்வைக்கதீயுட்
செம்பொன்போற்பெரிதுஞ்சேர்ந்துசெகுத்திடலுற்றுநின்றான்
வெம்பினன்காரியுண்டிக்கடவுளிற்கனன்றுவேந்த
னிம்பரின்றெனக்குச்சொன்னனிதுபட்டதடிகளொன்றாள் ()

ந. ஓலையையவட்குநீட்டியொண்மணிக்குழையுழுதது
மாலையும்படுசொலொழிவம்மெனமறையநல்கி
வேலைநெய்பெய்ததிங்கள்விரவியபெயரிறைக்கு
மேலைநாட்பட்டதொன்றுவிளம்புவல்கேளிதென்றான். (கஎகூ)

இவைமூன்றுமொருதொடர்.

இ - ள். அப்பூவைவாங்கினநாய்கன் நாகமாலை குறிப்பை விசாரித்துப பின்பு குவளைப்போதினது தாள்தானே தனதல்லியுட்கிடந்த ஓலையைச் சுற்றிவாசித்தற்குச் சலாகையாதலைச் சொல்லாநின்றதென் றாராய்ந்துகொண்டு துகிலிகைக் கணக்காலெழுதின எழுத்தைப்பார்த்துத் தாளாகியசலாகையிலே வரி ஏற்றிழிவு படாதபடி சுற்றி ஓலையைவாசிக்கின்றவன், வேந்தன் தீயுட்பொன்போலவெம்பினன்; அங்ஙனம் வெம்பி நஞ்சையுண்ட கடவுள்போல எரிந்து இன்று இப்பொழுதெனக்குச் சொல்லுவதுஞ் செய்தானுதலாற் செகுத்திடலுற்றேநின்றான். இனி நம்பனை நகரினின்றும் போக்கி ஒருசேமத்திடத்தேவைக்கவென்று வாசித்தானென்க.

வாசிக்கின்றான் - பெயர். சேமத்தால் - உருபுமயக்கம். காரி - நஞ்சு. இக்கவியில் "இதுபட்டதடிகளென்றாள்" என்னுமிடத்து "அடிகளென்றாள்" என்பதனை

மேல்நாட்டப்பட்டதொன்று விளம்புவலடிகளென்றுளென அதனோடு கூட்டி, ஓலை கொண்டுவந்தவள் வார்த்தையாக்குக. "கேளிதென்றான்" என்பதனை அது கேட்ட கந்துகன் திங்கள்விரவியபெயரினாற்கு இவள்கூறுகின்ற விதனை நீ கேளென்றானெ ன்க. "இன்னன்" என்னுங்கவியிற் சூழ்ச்சிதன்னுளாளென்பதன்பின்னே இது பட்டதென்றாளென்று ஓலைகொண்டுவந்தவள் கந்துகன் சிறைப்புறமாகப் புத்திசேன னுக்குச் செய்திகூறினாளாக்கி முடித்து "ஓலையை" என்னுங்கவியின் "மறையகல்கி" என்பதளவாக அதன்பின்னே கூட்டிப் "படையமைத்தெழுமின்" என்பதனை அதன் பின்னேகூட்டுக. "என்றாள்" இரண்டிடத்துங்கூட்டுக. இங்ஙனங்கூறாது "இதுப ட்டதடிகள்" என்று கந்துகனுக்கவள்கூற அவன்புத்திசேனனுக்குக் கூறினனெ ன்றுகூறிற் புதல்வன் செய்தியைத் தந்தைகூறு முறையாற்கூறாதுஇடக்கர்முதலி யகூற்றாற்கூறினனாகத் தேவர்கூறாரென்றுணர்க. வேலைபோல செய்யை யோமம் பண்ணிய. திங்கள் - மதி; மதியெனவே புத்திசேனனும். "தீத்தீண்டு கையார்" என் றது வேங்கையையுணர்த்தினாற்போல. (கஎக)

கடியரங்கணிந்தமூதூர்க்கடல்கிளர்ந்தனையதொப்ப
நடையறிபுலவரீண்டிநாடகங்காண்பான்
குடையுடையவனோடெண்ணிச்சீவகற்கொணர்மினென்னத்
தொடையல்சூழ்வேலினானுந்தோழருங்காணச்சென்றார்.

கடி - விளக்கம்; விளக்கமாவது எழுகோலகலத்தினையும், எண்கோல் நீளத்தினை யும், ஒருகோல் குறட்டுயரத்தினையும், வாய்தலிரண்டினையு முடைத்தாதல். அணிந்து- பார்ப்பனப்பூதமுதலிய நால்வகைப்பூதங்களையும ஒழிந்தவற்றையுமியற்றி. "கூறிய மரபிற் குறியொடு புணர்ந்த - வாடுநர்க் கியற்று மரங்கி னெற்றிமிசை - வழுவில் பூத நான்கு முறைப்பட - வெழுதினரியற்ற வியல்புணர்ந்தோரே." நடையறிபுலவராவார் இயலாசிரியனும், ஆடலாசிரியனும், யாழாசிரியனும், இசையாசிரியனும், குழலோ னும், தண்ணுமைமுதல்வனுமுதலாயினோர். ஈண்டு இவர்தன்மை யுணர்ப்பிற்பெருகும். "கூத்தின் வகையுங் குறைவற நோக்கி - னேத்து வகையா னிருவகைப் படுமே." "அவைதாம் - சாந்திக் கூத்தே விநோதக் கூத்தென் - றாய்ந்துற வகுத்தன னகத்தி யன் முனே," "சாந்திக் கூத்தே தலைவ னின்ப - மேந்தி நின் றாடிய வீரிரு நடமவை- சொக்க மெய்யே யவிநய நாடக - மென்றிப் பாற்படு மென்மனார் புலவர்." சொக்கமா வது-சுத்தநிருத்தம்; அது நூற்றெட்டுக்கரணமுடைத்து. மெய்க்கூத்தாவது - தேசி, வடுகு, சிங்களம்; இவைமெய்த்தொழிற் கூத்தாதலிற் காரணப்பெயர்; சாத்துவிகம், இராசதம், தாமதமென்னு மகச்சுவைபற்றியாடுதலின் அகமார்க்கமெனப்படும்: "அக த்தொழிற் சுவையா னகமெனப் படுமே." அவிநயமாவது-கதைதழுவாதே பாட்டுக்க ளின் பொருடோன்றக் கைகாட்டி யவிநயிப்பது. நாடகமாவது - கதைதழுவிவருங் கூத்து. ஈண்டுக் காண்கின்ற அது நாடகம்.

இ - ள். மூதூரில் நடையறிபுலவர் கடல்கிளர்ந்தனையதொப்ப ஈண்டி நாடகங் காண்டற்கு அரங்கையணிந்து அரசனோடெண்ணுதலாலே சீவகற்கொணர்மினென்ன வேலினானுந் தோழருங்காணச்சென்றாரென்று ஓலைகொண்டுவந்தவள் புத்திசேனனு க்குச்செய்திகூறுகின்றாளென்க.

இதுமுதல் ஓலைகொண்டுவந்தவன் கூற்று. * "செலவினும்" என்னும் பொதுவிதி யாற் சென்றுரென்றான். (கஅ௦)

நிலமறிந்தணிகலையன்சீவகனெறியினென்ன
நலநுதற்பட்டங்கட்டிநகைமுடிக்கோதைசூட்டி
யலர்முலைக்குருதிச்சாந்துமாரமும்பூணுஞ்சேர்த்திக்
குலவியகுருதிப்பட்டிற்கலைநலங்கொளுத்தியிட்டான்.

இ - ள். நடையறிபுலவர் ஐயனாகியசீவகன், நூனெறியால் அணிவாயாகவெ னக்கூற; அவனுங் கட்டிச் சூட்டிச் சேர்த்திச் செம்பட்டோடே கலையினலத்தைப் பொருத்தியிட்டானென்க.

வளர்கின்றமுலையெனவே பன்னிரண்டாமாண்டாயிற்று. "வட்டணையுந் தூசியு மண்டலமும் பண்ணமைய - வெட்டட னீரிரண்டாண் டெய்தியபின் - கட்டளைய- கீதக் குறிப்பு மலங்கார முங்கிளரச் - சோதித் தரங்கேறச் சூழ்." குருதிச்சாந்து- குங்குமச்சாந்து. (கஅக)

திருவிலைசொரிந்துமின்னுங்குண்டலஞ்செம்பொனோலை
யுருவுகொண்மதியமன்னவொளிமுகஞ்சுடரவாக்கிப்
பரியகஞ்சிலம்புசெம்பொற்கிண்கிணிபாதஞ்சேர்த்தி
யரிவையையரம்பைநாணவணிந்தனனநங்கனன்னான்.

இ - ள். அநங்கனன்னான் குண்டலத்தையுமோலையையு நிறைமதிபோலு முகம் விளங்கும்படி யாக்கி, காற்சரிமுதலியவற்றைப் பாதத்தேசேர்த்தி, அரம்பை நாண அரிவையையணிந்தானென்க.

ஆக்குதல் - சமைத்தல். இவளைத்தீண்டவும் வேட்கைநிகழாமையின், அநங்க னென்றார். "சிலைவலான்போலுஞ் செறிவினான்" என்றார் பிறரும். அவன்றீண் டுதலிற் றனக்குவேட்கைநிகழவும் அவற்கு வேட்கைநிகழாமைகண்டு இவளும் இனிக் கூத்தினான் இவனைப்பிணிப்பேமென்றுட்கொண்டு ஆடுகின்றாளாம். ஈண்டு இவட்கு வேட்கையின்றேல் "ஆடவர்மனங்கள்" என்னுங்கவியிற் றோழியை விட்டாளென் றல் பொருந்தாதாம்; இதனானே இவள் நடிக்கின்ற நாடகம் ஒருவன்மேலே ஒருத்தி வேட்கையுற்றதோர் கதையேயாம். (கஅஉ)

தோற்பொலிமுழவும்யாழுந்துளைபயில்குழலுமேங்கக்
காற்கொசிகொம்புபோலப்போந்துகைத்தலங்கள்காட்டி
மேற்படவெருவிநோக்கித்தானையைவிட்டிட்டொல்கித்[லாம்.
தோற்றினன்முகஞ்செய்கோலந்துளக்கினண்மனத்தையெல்

மார்ச்சனைமுதலியவு முளதாய் "இடக்கணிளியாய் வலக்கண்குரலாய்-நடப்பது தோலியற் கருவியாகும்" என்ற ஓசையுமுடைத்தாய், கஞ்சத்தாற் செய்த தென்பது தோன்றப் பொலிதல்கூறினார். "கருங்காலி செங்காலி வேம்புபலாக் கஞ்ச - நெருங வியசீர்க்குரா மன்னும் - பொருந்தவே - யூனமிலவா யுயர் நிலத்திற் றோன்றிலா- மானின்விழிமடவாய்வைப்பு." துளைபயில்குழல் - துளையிடத்தே வாச்சியமும்யாழ் ப்பாடலுங்கண்டப்பாடலும் பயிலப்பட்ட முதல் வங்கியமும் வழிவங்கியமும். "ஓங்கிய

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், உஅ.

மூங்கி லுயர்சந்து வெண்கலமும் - பாங்குடைச்செங் காலி கருங்காலி - பூங்குழலைக் கண்ணுவந்த கழைக்கிவைக ளாமென்றார் - மண்முழுது நாலுணர்ந்தோர் மற்று." எங்க-இவைமூன்றும் கூடியிசைப்ப, இவை ஆமந்திரிகையாம். "குழல்வழி நின்றெழீஇத்தண்ணுமைப் பின்னர் - முழவியம்பலாமந்திரிகை." போந்து - வலக்கால்முன் மிதித்தேறி வலத்தூணைச் சேர்ந்து, கைத்தலங்காட்டுதல்-கமலவர்த்தனே. மேற்பட வெருவிநோக்கி - தெய்வத்தைநோக்குதலின் மேலேயெழவெருவிப்பார்த்து. தானே-கரந்துவரலெழினி. "வழுவில் கேள்வி நன்னூ லுணர்ந்தோர் - எழினி தானே மூன்றென மொழிப." "அவைதாம்-ஒருமுக வெழினியும் பொருமுக வெழினியுங்-கரந்துவரலெழினியுமெனமூவகையே;" இராசதானியிலும், அரங்கிலும், கோலமறைத்துவருமிடத்திலு மிட்டனிரைகள். முகஞ்செய் கோலம் - கூத்திற்கு முகமாகிய தோற்றம்.

இ - ள். முழவுமுதலியனவேங்கக்கொம்புபோலப்போந்து விட்டிட்டுக்காட்டி நோக்கி ஒல்கிக் கோலத்தே தோற்றினன்; அப்பொழுதே பார்ப்பவர் மனத்தையெல்லாந் துளக்கினளென்க. (கஅங)

தெண்மட்டுத்துவலைமாலைதேனொடுதுளிப்பத்திங்க
ளுண்ணட்டகுவளைபோலுமுருவக்கண்வெருவியாட
வில்விட்டுக்கடவுள்வீழநுடங்கினபுருவநெஞ்சம்
பண்விட்டதிருந்துகாணும்பன்மணிக்கழலினார்க்கே.

ஆடுகின்றவிசையாலே மாலை மதுத்துவலையைத் தேனினத்தோடேதுளிப்ப. திங்களோடே நட்புப்பண்ணினகுவளை.

இ - ள். துளிப்பக் கண் நடிப்பிற்கேற்பப்பிறழ்ந்தாட அதற்கேற்பப் புருவமசைந்தன; அப்பொழுது இருந்துகாண்பார்க்கு நெஞ்சு நிலைகுலைந்ததென்க. (கஅச)

செங்கதிர்ச்சிலம்புசெம்பொற்கிண்கிணிசிலம்பக்கோதை
பொங்கப்பொன்னோலைவட்டம்பொழிந்துமின்னுகுப்பப்போ
குங்குமச்சாந்துமேய்ந்துகுண்டலந்திருவில்வீச [ர்த்த
வங்கதிராரமின்னவரிவைகூத்தாடுகின்றாள்.

இ - ள். அரிவை சிலம்புமுதலியனசிலம்பக் கோதைவிசையா லெழுந்துகிற்ப ஓலை மின்னை வட்டமாகச் சொரிந்துசிந்தக் குண்டலம மேனியைமறைத்த சாந்தைத் தீண்டிவீச ஆரம்மின்ன ஆடாநின்றாளென்க. (கஅரு)

மருங்குலுமொன்றுதாய்க்குமொருமகளாதலோர்ந்து
பிரும்பினுலியன்றநெஞ்சத்திவர்களோவிருந்துகாண்க
வரங்கின்மேலிவளைத்தந்ததாய்கொலோகயத்தியன்றேற்
சுரும்புசூழ்கண்ணிசூட்டியவர்கொலோகயவர்சொல்லீர்.

இ - ள். இடையுமொன்றே வேறு சேமவிடையுமில்லை; இதுமுரித்தாற் றாய்க்குமொருபிள்ளையுமே வேறில்லை, அதனையறிந்தும் அருளின்றாக இரும்பாற் செய்த நெஞ்சினையுடைய இக்கொடியோரிருந்து காண்க; இவரிது முடிவுபோகக் காண்டலின்றும் அரங்கின்மேல் இவளை விட்ட தாய் கொடியளோ? அன்றாயிற் கண்ணிசூட்டியவர் கொடியரோ? இருவரினுங் கொடியவரைக் கூறிக்காணீரென்பாருமென்க.

இவர்களோ, ஓ - இரக்கக்குறிப்பு. (கஅசு)

## வேறு.

அகிலார்புகையலாற்சாந்தணியாள்பூச்சாரச்செல்லாள்செல்லிற்
பகலேபகைவளர்த்தபாவைசிறுநுசுப்பொன்றுண்டேபாவ
மிகலைந்திளமுலைமேற்சாந்தெழுதிமுத்தணிந்துபூவுஞ்சூட்ட
முகிலேந்துமின்மருங்குன்மொய்குழற்றாயிதுகண்டுமுளளேபாவம்.

உண்டே, ஏகாரம் - எதிர்மறை. ஒருபாவமிருந்தபடி.

இ - ள். இவள்அகிற்புகையணிதலன்றிச் சந்தனமுமணியாள்; பூவின் அருகுஞ் செல்லாள்; சென்றாளாயின் அதனைத்தாங்குதற்கு முலையாகிய பகையை வெளியாகச் சுமந்துவளர்த்த நுசுப்பென்பதொன்று பாவைக்கில்லை; இத்தன்மையறிந்தும் இவடாயானவள் இடையுடனே மாறுபடுதலைமேற்கொண்டமுலைமேலே எழுதி அணிந்து சூட்ட இதனைக்கண்டும் உயிருடனேயிருந்தாள்; என்னே! ஈதொருபாவ மிருந்தபடி, என்னென்பாருமென்க. (கஅஎ)

தேந்தாமஞ்செம்பவளத்தாமஞ்செம்பொனெரிதாமமின்னுத்திரடாமங்க
டாந்தாமெனத்தாழ்ந்தபொன்மேகலைத்தாமவரங்கின்மேற்றாதார்முல்லைப்
பூந்தாமக்கொம்பாடக்கண்டாரெல்லாம்புனமயிலேயன்னமேபொன்னங்கொ
யாந்தாமரைமகளேயல்லளாயினமரர்மகளென்பாருமாயினரே. [ம்பே

பூமாலைதாம், பவளத்தாமந்தாம், பொற்றாமந்தாம், மணித்தாமந்தாமென்று கண்டார் கூறும்படி அவ்விடத்தேபொருந்திய மேகலையையுடைய தாமமென்று தோரிய மடந்தையர்க்கு வெளிப்படையாக்கி அவர்களையுடைய அரங்கின்மேலே கொம்பு போல்வாள் ஆடவென்க. தோரியமடந்தையர் - ஒத்துப்பாடுவோர்.

இ - ள். மயிலேயாம், அன்னமேயாம், பொன்னங்கொம்பேயாம், திருமகளேயாம் அல்லளாகிற் றேவர்மகளேயாமென்பாருமென்க.

என்பாருமென்பதனை முன்னும்பின்னுங் கூட்டுக. ஆயினரென்பதனை "நெய் பருகி" என்னுங்கவியிற் பின்னேகூட்டுக. முல்லை கற்பிற்குச் சூட்டிற்று. "தானுடைமுல்லையெல்லாம்" என்பமேலும். இனிஇவையே மாலையென்று கண்டார் வியக்கும்படி பூமாலைமுதலியதாழ்ந்த தாமவரங்கின்மேலே மேகலையையு முல்லைத் தாமத்தையுமுடைய கொம்புபோல்வாளாடவென்றுமாம். (கஅஅ)

கொடியார்குளிர்முத்தஞ்சூட்டிவைத்தார்கொல்வரனேகுங்குமச்சேறூட்டினார்க, ளடிசார்ந்துவாழ்வாரையம்முலைகடாமே யழித்திடுமேற்றாமேயழித்திடுகவென், றொடியாதமாத்திரையாலுண்டேநுசுப்பிருந்து காண்பாருமுளரோசெங்க, ணெடியான்மகன்சிலையுமம்பும்வைத்த நிழன்மதியோவாண் முகமோநோக்கிக்காணீர்.

இ - ள். நம்மைக்கொல்லுவதற்கே சூட்டுவதுஞ்செய்தார் ஆட்டுவதுஞ் செய்தாராதலாற் கொடியராயிருந்தார்; என்றுந் தங்காற்கீழ்வாழ்வார் சிலரை உலகத் தாமேயழிக்குமாயின் அம்முலைகளுந்தாமே நம்மையழிக்கவமையுமென்று கருதித் தாம்முறி

யாதமாத்திரையாலே இடையுமுண்டென்னுமளவாயிருந்தது, இப்பாதகத்[illegible]வைத்தும் இருந்தகாண்பாருமுளராயிருந்தாரென்பாரும், காமனதவில்[illegible] வைத்ததொருமதியோ! முகமோ! நோக்கிக்காணீரென்பாருமென்க. ([illegible])

நெய்பருகிநீண்டவிருட்கற்றைபோலுங் குழற்கற்றைகண்டுநிறை[illegible]குவார், மைபருகிநீண்டுமதர்த்தவுள்கண்வாளேறுபெற்றுனைவார் மாநாகத்தின், பைபருகுமல்குலிலயம்பற்றிப் பதனமைத்தபாவைநிருத்தநோக்கி, மெய்யுருகிக்கண்ணுருகி நெஞ்சுருகிக்காம வெயில்வெண்ணெய்ப்பாவை போன்மெலிகின்றாரோ.

கற்றை - பாரம். கண்ணாகியவாளேறு. படத்தின்றன்மையைக் கைக்கொள்ளுமல்குல். கூத்திற் றாளவறுதியைத் தொடங்கிக் காலமைத்தகூத்து. கண்ணுருகுதல் - நீர்வார்தல். மெலிதல் - உடம்புநுணுகுதல். (ககO)

வே று.

ஆடவர்மனங்களென்னுமரங்கின்மேலநங்கமாலை
யாடினுண்முறுவலென்னுந்தோழியையயன்காண
வோடரிநெடுங்கணென்னுமோலையையெழுதிவிட்டாள்
வாடியவாறுநோயுமுரைத்துவாகொடியனளே.

கொடியனள் - சுட்டு.

இ - ள். அநங்கமாலை மனமென்னுமரங்கின்மேலேயாடினள்; ஆடியவள் தன்மேனிவாடியவாறும் நோயுமுரைத்துக் கண்ணென்னுமோலையை யெழுதி அதனை முறுவலென்னுந் தோழிகையிலே கொடுத்துச் சீவகனைக்காணப்போக விட்டாளென்க.

தன் கூத்தினல் அவற்கு 'வேட்கைநிகழ்ந்ததோவென்றறிதற்கு நோக்குகின்றவள் தான்குறித்தன கொள்வானாகநோக்ினமையை உருவகமாகக்கூறினர். அதனை அவன்கொள்ளாமைகண்டு நாடகமகளாதலிற் றன்னெஞ்சுவருந்தாதபடி அதனைத் தேற்றுகின்றாளாக மேலிற்கவிகூறுகின்றார். மாதவி *"மாலைவாராராயினுமாமிழை-காலைகாண்குவம்" என்றாற்போல. (ககக)

க. வளமலரணியப்பெற்றேன்வால்வளைதிருத்தப்பெற்றேன்
களனெனக்கரையுமல்குல்கையினாற்றீண்டப்பெற்றே
னிளமுலைசுமந்துபெற்றவருத்தமுமின்றுதீர்ந்தே
னுளமெலிமகளிரெய்துமின்பமுமின்றுபெற்றேன். (ககஉ)

உ. என்றவளரசன்றன்னைநோக்கலளிவன்கணார்வஞ்
சென்றமைகுறிப்பிற்றேறிக்கூத்தெலாமிறந்தபின்றை
நின்றதுமனத்திற்செற்றநீங்கித்தன்கோயில்புக்கான்
மன்றலர்மடந்தைதன்னைவலிதிற்கொண்டொலிகொடாரான்.

இவையிரண்டுமொருதொடர்.

* சிலப்பதிகாரம், வேனிற்காதை.

கைமுடிக்கோலைதருட்டுதலின் மலரணியப்பெற்றேனென்றாள். வினிருத்தல் கண்டுக் கூறவே ஆண்டணிதல் பெற்றும். மேகலைக்குக் களனென்னு மோசையியல்பு. பட்டிற்கலை கலங்கொளுத்துதலின் அல்குறீண்டப்பெற்றேனென்றாள். குருநிச்சாந்துமுதலியன சேர்த்துதலின் முலைசுமந்து பெற்றவருத்தமுந் தீர்ந்தேனென்றாள். பரியகமுதலியன பாதத்தேசேர்த்துதலிற் றான்விரும்பி ஊடற்காலத்திற் காறீண்டி ஊடதீர்த்தற்குரியமகளிர் பெறுமின்பமும் பெற்றேனென்றாள்.

இ - ள். தன்னை அவன் விரும்பாமையுணர்தலிற் றான் இவையெல்லாம் இவன் நிகழ்த்தப்பெற்றேன்; இனி யான் பெறாத தேதென்றுட்கொண்டு தன்மனத்தைத்தேற்றிப் பின்பும் அவள் அரசன்றன்னைநோக்காளாயினாள்; ஆதலாற் கட்டியங்காரன் கூத்தெல்லாமுடிந்தபின்னை இவனிடத்து அவட்கு ஆர்வநிகழ்ந்தமையை அவடன்குறிப்பாற்றெரிந்து அம்மடந்தையைவலிதிற்கொண்டுநீங்கித் தன்கோயிலிலே புக்கான்; புக்கபின் அவன் மனத்தே இவனைக் கொல்லவேண்டுஞ் செற்ற நின்றதென்க. (கககூ)

தேனுடைந்தொழுகுஞ்செவ்வித்தாமரைப்போதுபுல்லி
யூனுடையுருவக்காக்கையிதழுகக்குடைந்திட்டாங்குக்
கானுடைமாலைதன்னைக்கட்டியங்காரன்சூழ்ந்து
தானுடைமுல்லையெல்லாந்தாதுகப்பறித்திட்டானே.

முகைவிரிந்து தேனொழுகும். ஊனுடைந்தவுருவம் - வினைத்தொகை; ஊனையுடைக்குமுருவமுமாம். மாலைக்கேற்பக் கான்கூறினார். சீவகனையே கூடுவனென்றலின், முல்லை - கற்பு. முல்லைக்கேற்பத் தாதுகூறினார்.

இ - ள். அங்ஙனஞ் செற்றநிகழாநிற்கக் கட்டியங்காரன் மாலையைப் போகாமற்றடுத்துப்பிணைத்திலிருக்குங்காக்கை போதைப்புல்லிக் குடைந்தாற்போலத் தானுடைய முல்லையெல்லாம் பறித்தானென்க.

இதனாற் புணருநெறியறியாமைகூறினார். (ககச)

கலையினிற்கன்னிநீக்கித்தாமரைக்கள்கடம்மாள்
முலையினிலெழுதிச்செவ்வாய்பயந்ததேன்பருகிமூழ்குஞ்
சிலைவலாய்புல்லுநம்பிசீவகசாமியோவென்
றலைகடற்புலம்பினோவாதரற்றுமாலணங்கினன்னாள்.

சிலைவலாயெனவே இத்துன்ப நீக்குதற்குரியாயென்றாள். ஓ - இரக்கக்குறிப்பு.

இ - ள். அவன் அங்ஙனம்புணர்ந்தவளவிலே அணங்கினன்னாள் மேகலையிட்டுத்து அழிவின்மைநீக்கிக் கண்ணால் முலையிலேயெழுதிப் பருகி இங்ஙனம் முறைமையறிந்துமூழ்குஞ் சிலைவலாய், நம்பி, சாமி, நீ வந்துபுல்லுவாயாகவென்று கடலொலிபோல அரற்றாநிற்குமென்க.

உருவுவெளிப்படுதலிற் புல்லென்றாள். (ககரு)

பிறனலமாற்றக்கேட்டும்பீடினுற்கனிந்தகாம
நறுமலரணிந்தமாலைநாற்றத்தோர்கான்குகாத

முறைகடந்தறிதலில்லானென்றொடிக்குருகிப்பின்னுந்
திறனலதமர்க்குச்செப்புந்தீயுமிழ்ந்திலங்கும்வேலான்

இ - ள். வேலான் பீடினற்கனிந்த காமமாகிய நறுமலராலே பண்ணினை பெண்ணாகிய மாலையினது நாற்றத்திற்கு ஒருகாற்காதவழியளவும் அனுகவந்தறியாதவன் ஒண்டொடி தன்னருகேயிருந்து வேறொருவனன்மையை அங்ஙனங்கூறக்கேட்டும் பின்னும் அவட்குருகித் தன்அமைச்சர்க்கு நெறியல்லாமொழிகளைக் கூறாநிற்கு மென்க.

அவைமேற்கூறுகின்றார். (௨௨௬)

வேறு.

விலங்கலன்னவேகவேழநான்குவெல்லுமாற்றலன்
கலங்கலந்திலங்குமார்பிற்கந்துகன்மகனென
நலங்கலந்துரைக்குமாலிந்நன்னகர்க்குமன்னனே
வுலங்கலந்ததோளினீருரைமினீவிரென்னவே.

இ - ள். தோளினீர், கந்துகன்மகன் ஆற்றலனென்று உலகமெல்லாங்கூடி அவனலத்தைக் கூறாநிற்கும். இந்நகர்க்கு இவனேபெருமான், நீங்கள் கூறுவீராகவென்று நிற்கவென்க.

கோபத்தாலிங்ஙனங்கூறினான். மார்பின்மகன். (௨௨௭)

மட்டவிழ்ந்ததாரினனிம்மாநகர்க்குளாயிரர்
தொட்டெடுக்கலாவுலம்மோர்தோளினேந்தியாடினு
னொட்டிநாகமோரிரண்டெடுக்கலாதகல்லினை
விட்டலர்ந்தபோதுபோலவேந்தலேந்திநீக்கினான்.

தொட்டு - தீண்டி. ஒட்டி - வஞ்சினங்கூறி.

இ - ள். தாரினன் உலமேந்தியாடினான்; பின் அந்தவேந்தல் யானையாலெடுத்தலாற்றாத ஓரிரண்டு கல்லினையும் இரண்டுகையிலும் போதுபோலேந்தி நீக்கினானென்க. (௨௨௮)

வெஞ்சிலையின்வேடர்வெள்ளவப்புமாரிதூவலி
னெஞ்சலின்றிநம்படையிருமுறையுடைந்தபின்
மஞ்சுசூழ்கணைமழைபொழிந்துமாநிரைபெயர்த்
தஞ்சிலோதியார்புனைந்தசெஞ்சொன்மாலைசூடினான்.

இ - ள். வேடர் சிலையாலே வெள்ளமாம்படி அப்புமாரியை ஒழிவின்றுகத்தலவின் நம்படை இருகாலுடைந்தபின், மஞ்சுசூழ்மழைபோலக் கணையைப்பொழிந்து நிரையைப்பெயர்த்துப் புகழ்மாலையைச்சூடினானென்க. (௨௨௯)

தீம்பயறியன்றசோறுசெப்பினாயிரம்மிடா
நீங்கலாநறுநெய்வெள்ளங்கன்னலாயிரங்குட
மேந்துவித்துநாமிசையவந்துதந்துநீக்கினா
னந்குநாம்பசித்தசைந்தகாலையன்றவண்ணலே.

இ - ள். சொல்லின் அவ்வண்ணல் அன்றுஅவ்விடத்தே நாம் பசித்திளைத்தபொழுதிலே பருப்புச்சோறாயிரமிடாவும் நீங்கலாத நறுநெய்வெள்ளமுங் கன்னலும்

ஆயிரமாயிரங் குடம் எந்தவித்துவந்து நாமுண்ணும்படிதந்து பசியைப்போக்கினு னென்க. (௨00)

இன்னனென்னவின்புற்றனிழந்தனன்னரசென
வென்னைவெளவும்வாயிறுனென்னுஞ்சூழ்ச்சிதன்னுளா
னன்னதாலிறபவறிந்துகூத்திகூறிஞ
ளின்னதாற்படையமைத்தெழுமினென்றியம்பினன்.

இ - ள். அவன்வலியனுமாய் நமக்குதவியுஞ் செய்தானென்றவர் கூற; அதற்கு மகிழானாய் இவர்கருத்தாலும் அவன்வலியாலும் இனி அரசுமிழந்தேனல்லனோ வென்றுட்கொண்டு இவனைக் கொல்லும்வழிதானெங்ஙனேயென்னுஞ் சூழ்ச்சிதன்னி டத்தேநின்றானென்க.

அன்னதால் - அவன்கருத்தப்படியாயிருத்தலே; ஆதல் - விகாரம். இன்னது - இக்காரியமித்தன்மைத்தாயிருந்தது. என்றது, தோற்றவர்களுங் கட்டியங்காரனும் பகைப்பார்போலே யிருந்ததென்றவாறு.

அவன் விளம்பியதியாதென்னின், ஐயனுக்கு முன்பே அறுபத்துநால்வரியைந் தாராதலிற் றாழ்வில்லையென்றுவிளம்பினன்; விளம்பிப் பின்னும் கந்துகன்அச்சிலையி னுக்கு ஆண்டுச்சேறற்குச் சிறிதுதாழ்வுண்டென்று மறைவல்லாற்கு உரைக்கும்பொ ழுதிலே பெண்கொடிவந்துருவளைநீட்ட அதனைக்கொண்டான்; கொண்டு வாசிக்கின்ற வன்சேமத்தேவைக்கவென்றுவாசித்தான்; வாசித்து ஓலைகொண்டு வந்தவளைப்பார்க்க அவள் மேலைநாட்பட்டதொன்று விளம்புவலடிகளென்றாள்; அதுகேட்ட கந்துகன் திங்கள் விரவியபெயரினற்கு இவள்கூறுகின்ற இதனை நீகேளென்றான்; அப்பொ ழுது புத்திசேனன் கேட்டிருப்பத் தான் கண்டசெய்தி கூறுகின்றாள்; சீவகற்கொண ர்மினென்னவேலினனுந் தோழருங்காணச்சென்றார்; அப்பொழுது அவருஞ்சீவகன ணிகவென்ன; அவனுங் கொளுத்தியிட்டான்; கொளுத்தி அரிவையை யணிந்தான்; அணிந்தபின்பு அவள் காண்பார் மனத்தையெல்லாம் முற்படத்துளக்கினாள். துளக் கினபின்பு அவர் நெஞ்சம் பண்விட்டது அங்ஙனம்பண்விடும்படி கூத்தாடாநின்றாள் அங்ஙனந் தாமவரங்கின்மேலே கொம்பாடக் கண்டாரெல்லாம் கயவர் சொல்லீரெ ன்பாரும் பாவமென்பாரும் அமரர்மகளே யென்பாரும், காண்பாருமுளரோ யென் பாரும், நோக்கிக்காணீரென்பாரும், நிறைகலங்குவாரும், நைவாரும், மெலிகின்றாரு மாயினர்; அங்ஙனமாம்படி அநங்கமாலை அவர்மனமென்னுமரங்கின்மேலே ஆடி னள்; ஆடி ஓலையை ஐயன்காண விட்டாள்; விட்டும் அவனுக்கு விருப்பங் காணமை யின் இவைபெற்றேன் யான் பெறாத தேதென்றுட்கொண்டு தன்மனத்தைத்தேற்றி அரசனைநோக்காளாயினள்; ஆதலாற் றானான் வலிதிற்கொண்டு நீங்கிக் கோயில்புக் கான்; புக்கபின்னு மனத்தேசெற்றநின்றது. அதுநிற்க மாலையைச்சூழ்ந்து பறித்தி ட்டான்; அங்ஙனம் பறித்தவளவிலே அவள் ஓவாதரற்றும்; அங்ஙனம் பிறனலமரற் றக்கேட்டும் உருகித் தமர்க்குத் திறனலசெப்பாநிற்கும்; அங்ஙனஞ் செப்புகின்றவன் உரைமின் நீவிரென்னுநிற்க; அவரும் ஆடினன், நீக்கினன், சூடினன், நீக்கினனு தலானின்னனென்ன, அதற்கின்புற்றாய் என்னரசுமிழந்தேனென் றுட்கொண்டு இவனைக் கொல்லுமாறெங்ஙனேயென்னுஞ் சூழ்ச்சிதன்னிடத்தே நின்றான்; இதுபட் டதென்றாள்; அதனையுணர்ந்துகந்துகனும் ஓலையைநீட்டி அவட்குமாலைக்காலத்திலும்

அங்குப்பிறந்த சொல்லேற்றிவாவெனக்கூறிக் குழைமுதலியனவற்றை மறையகல்கி அவளைப்போக்கிப் புத்திசேனனைநோக்கி அவன்கருத்தன்னதாதலே ஐயமறவுணர்ந்து நாகமாலை கூறினாள்; அது யான் ஓலை வாசகத்தே விளங்கினேன்; இனிக் காரியமின்னதாயிருந்ததாதலாற் படையமைத்துப் போவீராகவென்றியம்பினனென்க.

செய்திகூறுகின்றான் இதுபட்டதென்றானென்க. (உ0௬)

வேறு.

தாதைதானுரைத்தவெல்லாந்தன்னுயிர்த்தோழன்கூறக்
கோதைமுத்தணிந்தமார்பன்கூரெயிறிலங்கநக்காங்
கேதமொன்றில்லைசேறுமென்றலுமிலங்குவாட்கைப்
போதுலாங்கண்ணிமைந்தர்போர்ப்புலிக்குழாத்திற்சூழ்ந்தார்.

இ - ள். மார்பன், கந்துகன்கூறியகாரியங்களையுஞ் சேடி கூறியவற்றையுந் தோழன் கூறக்கேட்டு, நக்கு அவ்விடத்து நமக்கு வருவதோர் தீங்கு சிறிதுமில்லை சேறு மென்ற வளவிலே, தோழர் அதற்குடன்பட்டுப் புலித்திரள்போலச் சூழ்ந்தாரென்க.

சேடிகூற்றிற்கு நக்கான், கந்துகன்கூற்றிற்கு ஏதமின்றென்றான். உலாம்-அலமரும். (உ0௭)

க. கண்ணுதற்கடவுள்சீறக்கனலெரிகுளித்தகாமன்
மண்மிசைத்தோன்றியன்னவகைநலமுடையகாளை
தெண்மணிபாரமார்பன்றிருநுதன்மகளிர்நெஞ்சத்
துண்ணிறைபருகும்வண்டாருருவமைதிருவின்மிக்கான். (உ0௮)

உ. கருநெறிபயின்றகுஞ்சிக்காரகில்கமழவூட்டி
வரிநிறவண்ணமாலைவலம்படமிலைச்சிவாளார்
திருநிறமுகத்திற்கேற்பச்செம்பொனோரோலைசேர்த்தி
யெரிநிறக்குழையோர்காதிற்கிருளறச்சுடரவைத்தான். (உ0௯)

௩. தென்வரைப்பொதியிற்றந்தசந்தனத்தேய்வைதேங்கொண்
மன்வரையகலத்தப்பிவலம்புரியாரந்தாங்கி
மின்விரித்தனையதொத்துவிலைவரம்பறியலாகா
வின்னுரைக்கலிங்கமேற்பமருங்குலுக்கெழுதிவைத்தான். (உ௧0)

௪. இரும்புறக்கழுவியெஃகினிருளறவடிக்கப்பட்ட
வரும்பெறற்சுரிகையம்பூங்கச்சிடைக்கோத்துவாங்கிப்
பெருந்தகைக்குரிசில்கொண்டுபெருவலஞ்சுடரவீக்கித
திருந்திழைமகளிர்வெஃகுந்தேவிளங்குமாறனைத்தான்.

இவைநான்குமொருதொடர்.

க. திருவின்மிக்கான் - பெயருமாம்.

உ. வலம் - இடம். வண்டினது பாட்டின் நிறத்தையுடையமாலையைக்குஞ்சியிடத்தே வண்ணம்பெறச்சூடி.

௩. தெற்கிடத்துவரைகளுக்கு எல்லையாகிய பொதியில்; வரைப்பொதியில்-இருபெயரொட்டாகாது. மன் - பெருமை. மின்னை அகலவிரித்ததன்மையை யொத்து. நுரைபோலுங் கலிங்கம்.

௪. கழுவி - வட்டாகவுருக்கி. அதனாலே இருளறப்பண்ணப்பட்ட சுரிகை யைக்கையாற் பிடித்துக் கச்சை இடையிலே கோத்துவாங்கி வெற்றிவிளங்க வீக்கி யென்க. "சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடை" என்றார்பிறரும். தேவா கிய குமரன்.

இ - ள். கடவுள்சீறுதலின் எரியிலே மூழ்கிய காமன் மீண்டுந் தோன்றினா லொத்த அவயவஅழகையுடைய காளை, தாரினையும் ஆரத்தினையுமுடைய மார்பன், குரிசில், அவன் குஞ்சியிலே புகையையூட்டி மாலையைமிலைச்சி முகத்திற்கேற்ப ஓ ரோலையை ஒருகாதிற்குச் சேர்த்தி ஒருகுழையை யொருகாதிற்கிட்டான்; இட்டுக் குழம்பை அகலத்தேயப்பித் தாங்கிக் கலிங்கத்தை எழுதினாற்போல வுடுத்தான்; உடு த்துச் சுரிகையைவீக்கி மகளிர் நெஞ்சினிறையை வாங்குதற்குக் காரணமான செயற் கையழகுபொருந்தின இச்செல்வத்தான் மிக்கான்; அப்பொழுது முருகனையொத்தா னென்க. (௨௦௬)

வரைவிழித்திமைப்பதொக்கும்வாலொளியாரமார்பின்
விரைவழித்திளையரெல்லாம்விழுமணிக்கலங்கடாங்கி
நுரைகிழித்தனையநொய்ம்மைநுண்டுகின்மருங்குல்சேர்த்தி
யுரைகிழித்துணருமொப்பினோவியப்பாவையொத்தார்.

இ - ள். இளையரெல்லாம் மார்பிலே விரையைப்பூசிக் கலங்களையணிந்து துகி லையுடுத்து வாக்காற்புகழ்தலரிதாய் மனத்தாலுணருமொப்பாற் பாவையை யொத்தா ரென்க.

இமைத்துவிழிப்பதென்றார், அசைவின்கட் பாடஞ்செய்தலின். பாவை-இரு பாற்கும் பொதுவாதல் *"கைபுனைபாவையெல்லாங் கதிர்முலையாக்கினான்" என்ற தனானுங்கொள்க. (௨௦௭)

அரக்குநீரெறியப்பட்டவஞ்சனக்குன்றமன்ன
திருக்கிளரோடைசூழ்ந்தசெம்புகர்நெற்றித்தாகி
யுருக்கியூனுண்ணும்வேகத்துறுபுலியனையனாக
மருக்கனோர்குன்றஞ்சேர்ந்தாங்கண்ணறானேறினானே.

ஊனை யுருக்கி.

இ - ள். செம்புகர் நெற்றித்தாதலின், அரக்குநீரெறியப்பட்ட குன்றமன்ன நாகத்தை, அருக்கன் ஒருமலையைச் சேர்ந்தாற்போலப் புலியன்ன அண்ணறானேறி னானென்க. (௨௦௮)

விடுகணைவிசையின்வெய்யவிளங்கொளிவுளித்திண்டேர்
கடுநடைக்கவரிநெற்றிக்காலியற்புரவிகாய்ந்து
வடிநுனையொளிறுமாலைவாட்படைமறவர்சூழ
அடுதிரைச்சங்கமார்ப்பவணிநகர்முன்னினானே.

* குணமாலையாரிலம்பகம், ௬௭.

காய்ந்துவடித்த நுனையொளிறுகின்ற வாளாகியபடை. கரையை யடுகின்ற திரை. மங்கலத்திற்குச் சங்குகூறினார்.

இ - ள். தேர்முதலியன சூழ ஆர்ப்பச் சென்று யாழ்மண்டபத்தை யணுகினு னென்க. (உ0க)

தோற்றனண்மடந்தைநல்யாழ்தோன்றலுக்கென்றுநிற்பார்
நோற்றனணங்கைமைந்தனினலனுகர்தற்கென்பார்
கோற்றொடிமகளிர்செம்பொற்கோதையுங்குழையுமின்ன
வேற்றனசொல்லிநிற்பாரெங்கணுமாயினாரோ.

இ - ள். மகளிர்கோதையுங்குழையுமின்னநிற்க, மடந்தை தோன்றலுக்கு யாழைத்தோற்றாளென்பார்; நங்கை மைந்தனலனுகர்தற்கு நோற்றாளென்பார்; தம் மனத்துக்கேற்றனசொல்லி நிற்பாராயினாரெவ்விடத்துமென்க.

இவன்கல்வி யுணர்தலிற் றெளிவுபற்றித் தோற்றன ளென்று இறப்பாற் கூறினார். (உகo)

வே று.

சுறாநிறக்கொடுங்குழைசுழன்றெருத்தலைதர
வறாமலர்த்தெரியலானமூன்றுநோக்கியையெனப்
பொறாமனப்பொலிவெனுமணிக்கைமத்திகையினா
லறாவிவந்துதோன்றினானநங்கனன்னவண்ணலே.

மனம்பொலிவு - விகாரம்.

இ - ள். செற்றமறாதகட்டியங்காரன் தனது மகரக்குழையசைந்து கழுத்திலேவிழும்படி எரிந்துபார்த்து வியவாநிற்க, அவனது பொறாதமனத்தை அண்ணல் தனதுபொலிவென்கின்ற மத்திகையாலே அடித்து வந்து தோன்றினானென்க.

எனவே பொலிவு அவன்மனத்தைக் கேடுசெய்ததென்க. மத்திகையென்றலின், கையிலிருக்குமென்று அடைகூறினார். (உகக)

குனிகொள்பாகவெண்மதிக்கூரிரும்புதானுறீப்
பனிகொண்மால்வரையெனப்படுமதக்களிறிரீஇ
யினிதிழிந்திளையரேத்தவின்னகிற்கொழும்புகை
முனியவுண்டகுஞ்சியான்முரண்கொண்மாடமுன்னினான்.

குனிவு - விகாரம். பனி கடாத்திற்குவமம். முனிய - வெறுக்க.

இ - ள். குஞ்சியான் வளைவுகொண்டவெண்மதிப்பாகம்போலுந் தோட்டியை யழுத்திக் களிற்றையிருத்தி இளையரினிதாக வேத்த இழிந்து யாழான் மாறுபாடுகொண்ட மாடத்தே சேர்ந்தானென்க. (உகஉ)

புதிதினிட்டபூந்தவிசினுச்சிமேனடந்தவட்
புதிதினிட்டமெல்லணைப்பொலிந்தவண்ணம்போகுயர்
மதியமேறிவெஞ்சுடர்வெம்மைநீங்கமன்னிய
வுதயமென்னுமால்வரையுவந்திருந்ததொத்ததே.

இன் - அசை. போகுயர் மதி - உயர்ந்தமதி. மலையு மதியமுஞ் சுடரும், மண்பத்திற்கும் அணைக்குஞ் சீவகனுக்குமுவமம்.

இ - ள். அவ்விடத்துப்புதிதாகவிட்ட தவிசின்மேலேநடந்துசென்று புதிதாக விட்ட வட்டஅணைமேற்பொலிவுபெற்றிருந்ததன்மை வெஞ்சுடர் மதியத்தையேறித் தன்னிடத்துமன்னியவெம்மைநீங்கும்படி உதயவரையிலே உவந்திருந்ததன்மையையொத்ததென்க. (௨௧௩)

முருகுவிம்முகோதையார்மொய்யலங்கல்வண்டுபோற்
பருகுவானிவணலம்பாரித்திட்டவிந்நக
ருருகுமைங்கணையொழித்துருவினையகாமனார்
கருதிவந்ததென்றுதங்கள்கண்கொண்டுநோக்கினார்.

இ - ள். உருவினால் வியப்பையுடையகாமனார் இவனலம்பரந்த இந்த நகர்க்கண்ணே இவனலத்தை அலங்கலை வண்டுபெருகு மாறுபோலப் பருகுவான் கருதி ஐங்கணையையொழித்துவந்த தொருதன்மையென்றுநினைத்துக் கோதையார் தங் கண்களைக்கொண்டு அவனைநோக்கினாரென்க.

ஐங்கணை இரண்டு: "அந்த ணரவிந்த மாம்பூ வசோகப்பூப்-பைந்தளிர் முல்லை பனிநீல - மைந்துமே-வீரவேன் மைந்தனையும் வேனெடுங்கண் மாதனையு-மாரவேளெய்யு மலர்." இவை திரவிய பாணம். இங்கிதம், மதநம், வசீகரணம், மோகனம், சந்தாபம்; இவை பாவபாணம். (௨௧௪)

௧. முனைத்திறத்துமிக்கசீர்முனைவர்தம்முனைவனார்
வனப்புமிக்கவர்களின்வனப்புமிக்கினியனா
நினைத்திருந்தியற்றியநிருமிதமகனிவன்
கனைத்துவண்டுளர்ந்ததார்க்காளைசீவகன்னரோ.

இதுமுதல் "இனைய" அளவுமொருதொடர்.

தவக்கூற்றின்மிக்க இருடிகடம்முனைவனாவான் - அயன். இவனென்பதனை மார்போடுகூட்டுக. உளர்ந்த - சிதறின. (௨௧௫)

௨. பொன்னைவிட்டசாயலாள்புணர்முலைத்தடத்தினால்
மின்னைவிட்டிலங்குபூண்விரைசெய்மார்பமோலையா
வென்னைபட்டவாறரோவெழுதிங்கையாட்கொள்வான்
மன்னும்வந்துபட்டனன்மணிசெய்வீணைவாரியே.

திருவைக்கடந்த. மன்னும் - மிகவும்; தப்பாமலென்றவாறு. வாரி-அகப்படுத்துமிடம். என்றென வருவிக்க. (௨௧௬)

௩. இனையகூறிமற்றவட்டோழிமாருமின்புற
வினையலாம்படித்தலாவடிவிற்கெல்லையாகிய
கனைவண்டோதிகைதொழுங்கடவுள்கண்ணிற்கண்டவ
ரினையதென்னதெய்தினாரினையதன்னதாயினார்.

தோழிமாரும், உம்மை-சிறப்பு. எழுதலாந்தன்மையுடைத்தல்லாத. ஓதி-தத்தை. கடவுள் - காமன்.

இ - ள். அயன், தான்படைத்தவனப்புமிக்கவரெல்லாரினும் வனப்புமிக்குக் கட்கினியனாக ஒருவனை யான் படைக்கவேண்டுமென்று நெடுநாணினைத்திருந்து நிருமித்தாலியற்றியமகன் இச்சீவகன்; இவன் விரைசெய்மார்ப மோலையாகக்கொண்டு சாயலாளாகிய நங்கைதன் முலைத்தடத்தினாலே யெழுதி அடிமைகொள்ளும்படிவினை வாரியிலே வந்து தப்பாமலகப்பட்டான்; ஈதொருநல்வினையுண்டாயவாறெங்ஙனமிருந்ததென்று இத்தன்மையவான மொழிகளைக்கூறி அவடோழிமாருமின்புறாநிற்க, ஒழிந்தோருங் காமனைக்கண்ணாற்கண்டவர் எவ்வளவெவ்வளவாகிய இன்பத்தையுற்றார் அவ்வளவவ்வளவாகிய வின்பத்தின் வடிவு தாமாயினாரென்க.

ஒருவனைப் படைக்கவேண்டுமென்றெனவும், கொண்டெனவும், ஈதொருநல்வினையெனவும், ஒழிந்தோருமெனவும் வருவிக்க. (௨௧௭)

வேறு.

௧. குட்டநீர்க்குவளையெல்லாங்கூடிமுன்னிற்றலாற்றாக்
கட்டழகுடையகண்ணாணிறையெனுஞ்சிறையைக்கைபோ
யிட்டகாண்வேலியுந்திக்கடலெனவெழுந்தவேட்கை
விட்டெரிகொளுவநின்றாளெரியுறுமெழுகினின்றாள். (௨௧௮)

௨. நலத்தைமத்தாகநாட்டிநல்வலியிளமைவாராக்
குலப்பிறப்பென்னுங்கையாற்கோலப்பாசங்கொளுத்திக்
கலக்கியின்காமம்பொங்கக்கடைந்திடுகின்றகாளை
யிலைப்பொலியலங்கன்மார்பமியைவதென்றாருங்கொல்லோ. ()

௩. தீங்கரும்பெருத்திற்றூங்கியீயின்றியிருந்ததீந்தே
னுங்கணாற்பருகியிட்டுநலனுணப்பட்டநம்பி
பூங்குழைமகளிர்முன்னர்ப்புலம்பனீநெஞ்சேயென்றாள்
வீங்கியகாமம்வென்றார்விளைத்தவின்பத்தோடொப்பாள். ()

௪. கண்ணெனும்வலையினுள்ளான்கையகப்பட்டிருந்தான்
பெண்ணெனுமுழலைபாயும்பெருவனப்புடையநம்பி
யெண்ணின்மற்றியாவனாங்கொலென்னிதிற்படுத்தவேந்த
லொண்ணிறவுருவச்செந்தீயுருவுகொண்டனையவேலான். ()

௫. யாவனேயானுமாகவருநிறைக்கதவநீக்கிக்
காவலென்னெஞ்சமென்னுங்கன்னிமாடம்புகுந்து
நோவவென்னுள்ளம்யாத்தாய்நின்னையுமாலையாலே
தேவரிற்செறியயாப்பன்சிறிதிடைப்படுகவென்றாள். ()

௬. கழித்தவேலேறுபெற்றகடத்திடைப்பிணையின்மாழ்கி
விழித்துவெய்துயிர்த்துமெல்லநடுங்கித்தன்றோழிகூந்த

விமூக்கிவண்டிரியச்சேர்ந்தோர்கொடிப்புல்லுங்கொடியிற்புல்லி
யெழிற்றகைமார்பற்கின்யாழிதுவுய்த்துக்கொடுமோவென்றாள்.

இவையாறுமொருதொடர்.

க. குட்டம் - ஆழம். கடலெனத்தரங்கித்தெழுந்த வேட்கையாகிய எரிகொழு ந்துபட்டெரியநின்றாள். இது கைம்மிகலென்னு மெய்ப்பாடு.

உ. தனதுவடிவழகை மத்தாகநாட்டி வலியுமிளமையும் அம்மத்தினதிரண்டு தலையினும் பூட்டும் வாராகக்கொண்டு ஒப்பனையழகாகிய கடைகயிற்றை அம்மத்தி லேபூட்டித் தாய்குலனுந் தந்தைகுலனுமென்கின்ற கைகளாலே காமமென்கின்றகட லைப் பொங்கும்படிகலக்கிக் கடைந்திடுகின்ற காளையது மார்பமியையுநல்வினை எந்நா ளிலே யுண்டாவதென்றையமுற்று மற்றைநாளில் விடியற்காலத்தே இயையுமென்ப தனைத் தனதுஞானத்தாலுணர்ந்தாளென்க. என்றாகுமென்பது விளைவென்னுமெய் ப்பாடு.

ங. கரும்பிற்றூங்கியென்றெளிமைகூறினாள். இதற்குமுன்பு ஒருமகளிரும் இவ னைநுகராதிருந்தமையுணர்ந்து ஈயின்றியிருந்த தீந்தேனென்றாள்; எனவே பிரமசரிய ங்கூறினார். நாங்கண்ணாலேநலத்தை உள்ளடக்கி நுகரப்பட்டநம்பி. புலம்பலென் பது - சிதைவுபிறர்க்கின்மையென்னுமெய்ப்பாடு. இன்பம்-சுவர்க்கத்தின்பம்.

ச. ஞானக்கண்ணென்கின்ற வலையைவீசிக்குலமுதலியவெல்லா நோக்கும்படி அவ்வலையினுள்ளேயிருந்தான். "இருகண்ணும்புதைத்துவைக்கும்" என்றாற்போல. அஞ்ஞானத்தாலெல்லாமுணர்தலிற் கையகப்பட்டிருந்தா னென்றாள். தன்மேல் வேட்கைசெல்லாமையிற் பெண்ணெனுமுழலைபாயுமென்றாள்; யாழ்வென்றபின்னல் லது அவற்குவேட்கைநிகழாமை மேலேகாண்க. யாவனுங்கொல் - தேவனோ மக னோ. இதுஐயமென்னுமெய்ப்பாடு. *"சிறந்துழி யையஞ் சிறந்த தென்ப - விழிந் துழி யிழிபே சுட்ட லான" என்பதனாற் றலைவிக்கையநிகழாதேனும் ஈண்டுக் களவ ன்மையானுந் தனதுஞானத்தால் ஐயந்தீர்தல்வன்மையானு மையநிகழ்ந்தது. மக்க ளாற் றன்னை வருத்தலாகாமை முன்னே காண்டலின், என்னை யிவ்வருத்தத்திலே அகப்படுத்தின ஏந்தலென்றாள். இதனால் ஐயநிகழ்ந்தது. உருவச்செந்தீ, உருவம்- அடை. தீவேலின் வடிவைக்கொண்டாற்போலும்வேலான்.

ரு. தேவனாயினுமாக, மகனாயினுமாக. இது ஆராய்ச்சியென்னு மெய்ப்பாடு. காவலாகிய நிறைக்கதவைத்திறந்து. யாத்தாய் - எதிர்பெய்து பரிதலென்னுமெய்ப் பாடு. மாலை - எனதியல்பாலே; மேன் மாலையாற் பிணித்தலுந்தோன்ற. தேவரிற் செறியயாப்பன் - தேவனைப்போலே இமையாநாட்டமாக நோக்கும்படி செறியப் பிணிப்பேன்.

சு. உறைகழித்தவேலேற்றை மருமத்தே தப்பாமற்பெற்ற கடத்திடைப்பிணை யென்றார், பரிகாரமின்மையான். மாழ்கி விழித்து உயிர்த்தெனவே இடுக்கண்மெய் ப்பாடு. நடுங்கி - நடுக்கமெய்ப்பாடு. மெல்லவுழக்கி யென்பது பாடமாயின் அவ்வி டத்து நீங்கியென்க. தன்தோழிகூந்தலில் வண்டுகெடும்படி அவளைச்சேர்ந்து. இது கையாறென்னுமெய்ப்பாடு. எழிற்றகைமார்பனுக்கு இனியயாழ் இந்தயாழாயினும் அவன் கல்வியறிதற்குப் பலயாழையுஞ் செலுத்திப் பின்பு இந்தயாழைக் கொடுப்பா யாக வென்றாளென்க.

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், ங.

இ - ள். மிக்க அழகுடைய கண்ணுள், இன்பத்தோடொப்பான், அவன் வேலான்வனப்புடையநம்பி, யென்னிற்படுத்தவேந்தல், இவன் ஆராய்ந்தால் யாவனுங்கொலெனவையுற்று யாவனேயாயினுமாக நமதுஞானக்கண்ணிடத்தான்; அதனால் யானோக்கின விடத்துக் கையகப்பட்டேயிருந்தான்; அங்ஙனமிருந்து கடைந்திடுகின்ற காளையது மார்பு இயைவதென்றுவதுகொல்லோவென்றையுற்று நோக்கி அக்காலஞ்சிறிது நீட்டித்தலின் அதற்காற்றாது சிறையைக் கைபோய் நாண்வேலியைப்பாய்ந்து காமத்தீயெரியநின்றாள்; அப்பொழுது எரியுறுமெழுகினின்றாள்; அங்ஙனநின்றுமாழ்கி விழித்துஉயிர்த்து நடுங்கி - மெல்லத் தோழிமேலேவீழ்ந்து அவளைப்புல்லி அங்ஙனங்கையாறுற்றவிடத்துத் தன்மனத்துநின்ற தலைவனைநோக்கி நீக்கி மாடம் புகுந்து யானோம்படி என்னுள்ளத்தைப் பிணித்தாய் நின்னையும் பிணிப்பேன் சிறிதுபொழுது கழிக்கவென்றாள்; என்றபின்பு தன்னெஞ்சினைநோக்கி நெஞ்சே, நலனுண்ணப்பட்ட நம்பி ஈயின்றி யிருந்ததீந்தேனுதலான் மகளிர்முன்னே புலம்பாதொழிக வென்றாற்றுவித்துத் தேற்றிப் பின்பு தோழியைநோக்கி இனியயாழிது வுய்த்துக் கொடுமோவென்றாளென்க. (உஉ௩)

வேறு.

க. தடங்கணாள் பணியினாற்றானவ்வீணையொன்றினை
நெடுங்கணாளெழினியைநீக்கியுய்த்துநீட்டினாண்
மடங்கலன்னமொய்ம்பினான்வருகவென்றுகொண்டுதன்
கிடந்தஞானத்தெல்லையைக்கிளக்கலுற்றுநோக்கினான். (உஉச)

வேறு.

உ. சுரந்துவானஞ்சூல்முதிர்ந்துமெய்ந்நொந்தீன்றதுளியேபோற்
பரந்தகேள்வித்துறைபோயபைந்தார்மார்பன்பசும்பொன்யாழ்
நரம்புதேனார்த்தெனத்தீண்டிநல்லாள்வீணைபொல்லாமை
யிருந்தமுலையாணின்றாளைநோக்கியிசையினிதுசொல்லான். ()

௩. நீர்நின்றிளகிற்றிதுவேண்டாநீரின்வந்ததிதுபோக
வார்நின்றிளகுமுலையினாய்வாட்புண்ணுற்றதிதுகடக்க
வோருமுருமேறிதுவுண்டதொழிகவொண்பொனுகுகொடியே
சீர்சால்கணிகைசிறுவன்போற்சிறப்பின்றம்மவிதுவென்றான். ()

ச. கல்சேர்பூண்கொள்கதிர்முலையாய்காமத்தீயால்வெந்தவர்போற்
கொல்லையுழவர்சுடப்பட்டுக்குரங்கிவெந்ததிதுகளிறு
புல்லமுரிந்ததெனப்போக்கித்தூமமார்ந்ததுகிலுமையு
ணல்யாழ்நீட்டவதுகொண்டுநங்கைநலத்ததிதுவென்றான்.

இவைநான்குமொருதொடர்.

க. நெடுங்கண்ணாள்தானென்க. அவ்வீணை - தத்தை முற்கூறிய வீணை. எழினி - உறை.

உ. வானம் சூன்முற்றி மெய்ந்நொந்து சுரந்தீன்றபெருமழை எத்துறையுஞ்சென்று பயன்பட்டாற்போலப் பரந்தநூற்கேள்விகளெல்லாம் முற்றக்கற்றுப் பயன்படு மார்பன். எழாதுஉள்ளடங்கியமுலை. பொல்லாமை இதுவென்றானென்க. பொல்

லாங்கு பலவற்றையுஞ் சாதியொருமையான், இதுவென்றான். நரம்பினிசையாற் பிறந்தபொல்லாமையாவன: "செம்பகை யார்ப்புக் கூட மதிர்வு." "செம்பகை யென்பது பண்ணோடொரா - வின்பமி லோசை யென்மனார்புலவர்." "ஆர்ப்பெனப் படுவ தளவிறந் திசைக்கும்." "கூட மென்பது குறியுற விளங்கின் - வாய்வதின் வாராது மழுங்கியிசைப் பதுவே." "அதிர்வெனப் படுவ திழுமென லின்றிச் - சிதறி யுரைக்கு ருச்சரிப் பிசையே." இவை மரக்குற்றத்தாற்பிறக்கும். "நீரிலே நிற்ற லழுகுதல் வேத னிலமயங்கும் - பாரிலே நிற்ற விடிவீழ்த னேய்மரப் பாற்படல்கோ- ணேரிலே செம்பகை யார்ப்பொடு கூட மதிர்வுநிற்றல் - சேரினோர் பண்க ணிறைம யக் கம்படுஞ் சிற்றிடையே."

௩. இளகிற்று - மெல்கிற்று. கட்டஆதாரமின்மையின் வாரிளகுமுலை. புண் ணுறுதல் - வெட்டுப்பட்டு நிற்றல். கணிகைசிறுவன்போலென்றது, நிலமயங்கின விடத்தே நிற்றலின். வேண்டா, போக, நடக்க, ஒழிகவென்றன இகழ்ச்சி.

௪. கல்சேர் முலையாய் - இகழ்ச்சி. குரங்கி - தாழ்ந்து. இதுவென்பதிரண்ட ற்குங் கூட்டுக. நங்கைநலத்தது - நங்கை குலமுதலிய நலத்தைத் தானுமுடைத்து. அந்நலமாவன: "சொல்லிய கொன்றை கருங்காலி மென்முருக்கு - நல்ல குமிழுந் தணக்குடனே - மெல்லியலா - யுத்தம மான .மரங்க ளிவையென்றார் - வித்தக யாழோர் விதி." "தனமரச் சமநிலத்துத் தண்காற்று நான்கு-முளதா யொருங்கூன மின்றி - யளவு - முதிரா திளகாது மூன்றாங்கூ றுய - வதுவாகில் வீணதண் டாம்." "கோடே பத்த ராணி நரம்பே - மாடக மெனவரும் வகையின தாகும்." "பதுமங் கழல்குடந் தாடியொ டுள்ளிபண் பூண்டுநின்ற - விதியமர் தண்டு குடையே குடுமி மெய்க் கோட்டுறுப்பு - மதியமர் போதிகை புட்டின் முகஞ்சுவர் மன்னெருத்தம்-விதி யமர் பத்தர்க் குறுப்பென் றுரைத்தனர் மின்னிடையே" எனவிவையும் பிறவும்.

இ - ள். தத்தையதேவலாலே அவ்வீணாபதிதான் அவ்வெழினியையுடைய வீணையொன்றினையும் நீக்கிவைத்து ஒழிந்தவீணைகளைச் செலுத்திக்கொடுத்தாள்; அப் பொழுது மொய்ம்பினனும் இங்ஙனேவருகவென்றுகூறி அவற்றைக் கைக்கொண்டு தனது பரந்துகிடந்த ஞானத்தினளவை அறிவிக்கலுற்றுநோக்கினான்; நோக்கி அம் மார்பன் அவற்றின் நரம்பைத் தேனார்த்தெனத்தெறித்து அவற்றினிசையாலேஅவள் வீணைகளின் பொல்லாமையிதுவென்று வீணாபதி நின்றவனைநோக்கிச் சொன்னான்; எங்ஙனமெனின் முலையினாய், இந்தமரம் மெல்கிற்றாதலின் இவ்வியாழ்வேண்டா; இந் தமரம் அழுகினதாதலால் இவ்வியாழ்போக; இந்தமரம் புண்ணுற்றதாதலால் இவ்வி யாழ்நடப்பதாக; இந்தமரம் உருமேறுண்டதாதலால் இவ்வியாழொழிவதாக; இந்த மரம் சிறப்பின்றாதலால் இவ்வியாழொழிவதாகவென்று சொன்னான்; அங்ஙனங் கூறிப் பின்னுங் கதிர்முலையாய், இம்மரம் வெந்தது; இம்மரம் முரிந்ததென்று ஒழிந்த யாழ்களையும் போக்குதலால் நல்லயாழை நீட்ட, அதனைவாங்கிக்கொண்டு நங்கைநல த்ததிதுவென்றானென்க. (௨௨௭)

வேறு.

இருநிலமடந்தையீன்றதிருவிசும்பென்னுங்கைத்தாய்
திருநலமின்னுப்பொன்னாண்முகின்முலைமாரித்தீம்பா
லொருநலங்கவினியூட்டவுண்டுநோய்நான்குநீங்கி
யருநிலங்கவினிவாள்வாயரிந்திதுவந்ததென்றான்.

ஈன்றது-பெயர்.

இ - ள். மண்மகளினப்பட்டமரம் விசும்பென்னுஞ் செவிலித்தாய் அழகியகல த்தையுடைய மின்னாகிய பொன்னணியையுடைய முகிலாகியமுலையின் மாரியாகிய இனியபாலை முழுவலன்போடே ஊட்ட உண்டு நோய்நீங்கி வளர்ந்து வாளின்வாயா லரிந்துவந்தது இவ்வியாழென்றானென்க.

சினைவினைமுதலொடு முடிந்தது. நற்றாயன்புசெவிலிக்குப்பிறந்து வளர்த்தமை தோன்ற ஒருநலமென்றார். நான்காவன: வெயிலுங் காற்றுநீருநிழலுமிகுதல். (உஉஅ)

தீங்தொடைநரம்பின்றீமைசிறிதலாப்பொழுதுமோதிப்
பூங்தொடையரிவைகாணப்புரிநெகிழ்த்துரோமங்காட்டத்
தேங்கமழோதிதோற்றாள்செல்வனுக்கென்னமைந்தன்
வாங்குபுநபுலன்கையுள்வார்புரிநரம்புகொண்டான்.

இ - ள். மைந்தன் நரம்பின்றீமையை நெடும்பொழுதெல்லா மாராய்ந்து கூறி அதற்கேற்ப அரிவைகாணும்படி முறுக்கையுடைத்து அதிற்கிடந்தமயிரைக் காட்டு தலின், அவையுள்ளோர் ஒதி இனிச் செல்வனுக்குத் தோற்றாளென்னாநிற்க ; அவன் நபுலன்கையினரம்பை வாங்கிக்கொண்டானென்க.

தனக்குச் சேமமாகவந்தவற்றில் நரம்பையேவாங்கினன்; யாழ்நன்றாதலின். கந் துகன் படையமைத்தெழுமினென்றதனால் நந்தட்டனும் பதுமுகன்முதலாயினாரும் போர்க்கோலத்தோடும் புறத்துநின்றாரென்பதுதோன்ற நபுலன்கையில் நரம்பிருந்த தென்றார். அது மேற் "பண்ணியல்யானைமேலான்பதுமுகன்" என்பதனானுணர்க. "கொடும்புரி மயிர்தும்பு முறுக்கிவை நான்கு - நடுங்கா மரபிற் பகையென மொழிப" என்றார். (உஉகூ)

பணிவரும்பைம்பொற்பத்தர்பல்வினைப்பவளவாணி
மணிகடைமருப்பின்வாளார்மாடகவயிரத்தீங்தே
னணிபெறவொழுகியன்னவமிழ்துறழ்நரம்பினல்யாழ்
கணிபுகழ்காளைகொண்டுகடலகம்வணக்கலுற்றான்.

வாசித்தற்றொழிலிலேவரும். வயிரமாடகம் - நால்விரலளவான பாலிகைவடி வாய் நரம்பை வலித்தல் மெலித்தல் செய்யுங்கருவி. *" இடக்கை நால்விரன் மாடகந் தழீஇ" என்றார்பிறரும். பொன்முதலியன அழகிற்கிட்டன.

இ - ள். நூல்போனவன் புகழப்படுங்காளை பத்தர்முதலியவற்றையுடையயா ழைக்கொண்டு உலகினை வணக்கலுற்றானென்க. (உ௩௦)

குரல்குரலாகப்பண்ணிக்கோதைதாழ்குஞ்சியான்றன்
விரல்கவர்ந்தெடுத்தகீதமிடறெனத்தெளிதறேற்றார்
சுரரொடுமக்கள்வீழ்ந்தார்சோர்ந்தனமாவும்புள்ளு
முருகினமரமுங்கல்லுமோர்த்தெழீஇப்பாடுகின்றான்.

இ - ள். குஞ்சியான் செம்பாலையைப் பண்ணித் தன்விரலாலே கவர்ந்தெடுத்த

---

* சிலப்பதிகாரம், வேனிற்காதை.

பாட்டைக் கண்டமென்றுகருதிக் கருவியென்று தெளிதலையறியாராய்த் தேவருமக்க ளுந் தம்மில் வாசியின்றி வீழ்ந்தார்; கின்னரமும் அசுணமுஞ் சோர்ந்தன; மரமுங் கல்லுமுருகின; அங்ஙனம் வாசித்தநிலையைக்குறித்து அதற்கேற்ப ஆளாபஞ் செய்து பாடாநின்றனென்க.

"ஆழியு மாரும்போற் கீறி யதனருகே - யூழி யொரோவொன் றுடன்கீறி- வாழி - யெருதாதி கீழ்த்திசைகொண் டீராறு மெண்ணிக் - கருதாய் நிலக்கயிற்றைக் கண்டு." இப்பாலைத் திரிவிலே பத்தொன்பது நரம்பையுடைய மகரயாழ் குரல் குர லாமாறுகாண்க. (உ௬க)

வேறு.

க. கன்னிநாகங்கலங்கமலங்கி
மின்னுமிரங்குமழையென்கோயான்
மின்னுமழையின்மெலியுமரிவை
பொன்னுண்பொருதமுலையென்கோயான். (உ௬உ)

உ. கருவிவானங்கான்றபுயலி
னருவியாற்றுமலையென்கோயா
னருவியாற்றுமலைகண்டழுங்கு
மருவார்சாயன்மனமென்கோயான். (உ௬௩)

௩. வானமீனினரும்பிமலர்ந்து
கானம்பூத்தகாரென்கோயான்
கானம்பூத்தகார்கண்டழுங்குந்
தேனார்கோதைபரிந்தென்கோயான்.

இவைமூன்று மொருதொடர்.

இம்மூன்றுகவியுங் கூதிர்ப்பருவங் குறித்துப் பிரியக்கருதியதலைவற்குத் தோழி அதற்குமுன்னிகழ்கின்ற காரின்றன்மையும், அது தலைவியை வருத்துந் தன்மையும் யான்கூறவேண்டுமோ, நீயேயறியன்றோவெனக்கூறிச் செலவழுங்குவித்தனவாக் குக. இளவேனினிகழ்ச்சிக்கண்ணே கார்கூறவேண்டிற்று; யாழ்வென்ற பின்னல் லது தன்மனத்தில் வேட்கைதோன்றாதாதலின், அதனைக்கூறவே வேட்கைதோன் றிற்றாகப் புலப்படுமென்பதுகருதி.

க. இ - ள். யான் கன்னியாகியபாம்பு மலங்கிக் கலங்கும்படி மழைமின்னா நிற்கும் இரங்காநிற்குமென்கோ; யான் முலையினையுடைய அரிவை அம்மழையான் மெலியுமென்கோவென்க.

உ. இ - ள். யான் புயலால் அருவியாற்றுமலையென்கோ; யான் அதனைக் கண்டு மருவுதனிறைந்தசாயல் மனமழுங்குமென்கோவென்க.

௩. இ - ள். யான் காரினாலே கானம்பூத்தனவென்கோ; யான் அதனைக்கண்டு கோதைபோல்வாள் பரிந்தழுங்குமென்கோவென்க.

இத்தாழிசைக்கொச்சகவொருபோகுகள் கந்தருவமார்க்கத்தான் இடைமடக் கின. இது மேல்வருவனவற்றிற்கு மொக்கும். (உ௬௪)

வேறு.

அண்ணலியாழ்நரம்பையாய்ந்துமணிவிரறவழ்ந்தவாறும்
பண்ணியவிலயம்பற்றிப்பாடியவனப்புநோக்கி
விண்ணவர்வீணைவீழ்த்தார்விஞ்சையர்கனிந்துசோர்ந்தார்
மண்ணவர்மருளின்மாய்ந்தார்சித்தருமனத்துள்வைத்தார்.

இ - ள். தலைவனதுவிரல் நரம்பையாய்ந்து வாசித்தபடியும், அதிற் றான் பண்ணிய செலவைக்குறிக்கொண்டு மிடற்றாற்பாடிய வனப்பையுமுட்கொண்டு கின்னரர் வீணையைக்கைவிட்டார்; விஞ்சையர் நெஞ்சுருகி மெய்சோர்ந்தார்; மக்கள் தாமறியாதது கேட்டமயக்கத்தாலே அறிவுகெட்டார்; இருடிகளும் இதுவும் பேரின்பமாயிருந்ததென்றுட்கொண்டாரென்க.

இதனான் முன்பியாழ்வாசித்த தன்மையையும், அதற்கேற்பப் பாடினதன்மையையுங் கேட்டோர் வியந்தபடி கூறினார். (உ௬௫)

வீழ்மணிவண்டுபாய்ந்துமிதித்திடக்கிழிந்தமாலை
சூழ்மணிக்கோட்டுவீணைச்சுகிர்புரிநரம்புநம்பி
யூழ்மணிமிடறுமொன்றாய்ப்பணிசெய்தவாறுநோக்கித்
தாழ்மணித்தாமமார்பிற்கின்னரர்சாம்பினாரே.

இ - ள். மதுவைவிரும்பிய வண்டு குதித்து மிதித்தலால் அலர்ந்தமாலையினையுங் கோட்டினையுமுடைய வீணையிற் சீவிமுறுக்கின நரம்பும் நம்பிமிடறுமொன்றாய் ஏவல்செய்தபடியையுட்கொண்டு கின்னரர் மேனிவாடினாரென்க.

இதனாற் கருவியுங்கண்டமும் உடனிகழ்த்தினமையைக் கேட்டோர் வியந்தபடி கூறினார். (உ௬௬)

விண்ணவர்வியப்பவிஞ்சைவீரர்கள்விரும்பியேத்த
மண்ணவர்மகிழவான்கட்பறவைமெய்ம்மறந்துசோர
வண்ணறானாணப்பாடினானரசரெல்லாம்
பண்ணமைத்தெழுதப்பட்டபாவைபோலாயினாரே.

இ - ள். அண்ணறான், வியப்ப ஏத்த மகிழச் சோர நாணப் பாடினான்; அது கேட்ட அரசரெல்லாம் எழுதும்படிசமைத்து எழுதப்பட்ட பாவைபோலாயினாரென்க.

இதனாற் கருவியைநீக்கி மிடற்றாற் பாடக்கேட்டோர் வியந்தபடிகூறினார். ()

வேறு.

க. பருந்துமதனிழலும்பாட்டுமெழாலுந்
திருந்துதார்ச்சீவகற்கேசேர்ந்தனவென்றெண்ணி
விருந்தாகயாழ்பண்ணிவீணைதான்றோற்பா
னிருந்தாளிளமயில்போலேந்திலைவேற்கண்ணாள். (உ௬௭)

உ. கோதைபுறந்தாழக்குண்டலமும்பொற்றோடுங்
காதினொளிர்ந்திலங்கக்காமர்நுதல்வியர்ப்ப

மாதரொருத்தமிடங்கோட்டிமாமதுர
கீதங்கிடையிலாள்பாடத்தொடங்கினாள்.

இவையிரண்டுமொருதொடர்.

க. பருந்து பறக்குமிடத்து முறையேயுயர்ந்து அந்நிலத்தின்கண் நின்றுயர்ந்து பின்னும் அம்முறையே மேன்மேலுயர்கின்றாற்போலப் பாடவேண்டுதலின், அஃது உவமையாயிற்று. "சிச்சிலி பூனை குடமுழக்கஞ் செம்மைத்தா - முச்சிமலை நீர்வி ழூக்கா டொண்பருந்து - பச்சைநிற - வேயினிலை வீழ்ச்சியுடன் வெங்கா னிழற்ப றவை - யேயுங்கா லோசை யியல்பு" என்றார். விருந்தாகச்சேர்ந்தனவென்றாள், இதற்குமுன்பு பிறரிடத்தில்லாது, இவனிடத்தேகாண்டலின். வீணையென்றது யாழையும்பாட்டையும். மயில் காரினைக்கருதியிருந்தாற்போல இவளும் புணருநா ளினைக்கருதியிருத்தலின், மயில்போலென்றார். இளமயில், இளமை - குணம்.

உ. உட்கும் நாணும் ஒருங்குவருதலின், நுதல்வியர்ப்பவென்றார். அது தன்னை அவனோக்கியவழிப் பிறந்தமெய்ப்பாடு; அது *"புகுமுகம் புரிதல் பொறி நுதல் வியர்த்தல்" என்னுஞ் சூத்திரத்தானுணர்க. காதலையுடைய எருத்தம். கிடை - ஒப்பு.

இ - ள். மயில்போலிருந்தாள், கண்ணாள், அவள்தான் யாழையும் பாட்டையும் யான்றோற்றற்குப் பருந்தும் அதனிழலும்போற் பாட்டும் யாழ்வாசினையுஞ் சீவகற்கே விருந்தாகச்சேர்ந்தனவென்றுகருதி யாழைப்பண்ணி வாசித்து மதுரகீதத்தில் அவனையொத்திலளாய்க் கோதைதாழ இலங்க வியாப்பக் கோட்டி அம்மதுர கீதத்தைப் பாடத்தொடங்கினாளென்க. (உ௩௯)

யாளென்றும், அம்மதுரகீதமென்றும்வருவிக்க.

வேறு.

க. இலையாரெரிமணிப்பூணேந்துமுலையுஞ்
சிலையார்திருநுதலுஞ்செம்பசலைமூழ்க
மலையாரிலங்கருவிவாள்போலமின்னுங்
கலையார்தீஞ்சொல்லினாய்காணார்கொல்கேள்வர். (உ௪0)

உ. பிறையார்திருநுதலும்பேரமருண்கண்ணும்
பொறையார்வனமுலையும்பூம்பசலைமூழ்க
நிறைவாளிலங்கருவிநீள்வரைமேன்மின்னுங்
கறைவேலுண்கண்ணினாய்காணார்கொல்கேள்வர். (உ௪க)

௩. அரும்பேர்வனமுலையுமாடமைமென்றோளுந்
திருந்தேர்பிறைநுதலுஞ்செம்பசலைமூழ்க
நெருங்கார்மணியருவிநீள்வரைமேன்மின்னுங்
கரும்பார்தீஞ்சொல்லினாய்காணார்கொல்கேள்வர்.

இவைமூன்று மொருதொடர்.

இம்மூன்றுதாழிசைக்கொச்சகமும் இளவேனில்வருகின்றமைகண்டு ஆற்றாளா யதலைவி தோழிக்குரைத்தனவாகக்கூறினாள், வேட்கையுஞ் சிறிதுபுலப்பட்டுநிற்றலின்.

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல், க௩.

க. இ - ள். இசைக்கலைநிறைந்தசொல்லினுய், முலையும் நுதலும் பசலையிலே மூழ்கும்படி ஒளிநிறைந்த வாள்போலிலங்குமருவி மலைமேலேமின்னும்; இதனைக் கேள்வர் காணுரோவெங்க.

உ. இ - ள். கண்ணினுய், நுதன்முதலியன பசலையிலேமூழ்கும்படி ஒளிநிறைந்த வாள்போலிலங்குமருவி மலைமேலேமின்னும்; இதனைக் கேள்வர் காணுரோவெங்க.

௩. இ - ள். சொல்லினுய், முலைமுதலியன பசலையிலேமூழ்கும்படி முத்துவடம்போலுமருவி மலைமேலேமின்னும்; இதனைக் கேள்வர் காணுரோவெங்க.

அருவிதெளிந்ததெனவே காலம்வேனிலாயிற்று. (உ௪உ)

வேறு.

பண்ணொன்றுபாடலதுவொன்றுபல்வலைக்கை
மண்ணொன்றுமெல்விரலும்வாணரம்பின்மேனடவா
விண்ணின்றியங்கிமிடறுநடுநடுங்கி
யெண்ணின்றிமாதரிசைதோற்றிருந்தனளே.

அதுவொன்றென்றது அவன்பாடினபாட்டையும் யாழையும். மண்ணுதல் - பண்ணுதல்; "ஆவுதிமண்ணி" என்றார்பிறரும். விரலுமென்ற உம்மை எச்சவும்மையாதலிற் பாட்டுமென்றுகொள்க. விண்ணென்றது முற்கூறிய உள்ளாளத்திற்குரிய மூலாதாரந்தொடங்கிப் பிரமரந்திரத்தளவுநின்றவெளியை. நடுநடுங்கியென்றது கம்பிதப்பாட்டை; "எடுத்தல்பாட் டுச்சமா மெனபடுத்தன் மந்தந் - தடுத்து நலிதல் சமமாம் - தொடுத்தியன்ற - தள்ளாத கம்பிதந் தானடுக்க னற்குடில - முள்வாங்கிப் பாட லுணர்." எனவே உள்ளாளத்திலே கம்பிதங்கலத்தலிற் குறையாயிற்று.

இ - ள். அங்ஙனம்பாடத்தொடங்கினவள் பாடினபாட்டும் அதற்கேற்றயாழும் ஒருதிறமாயிருந்தன; அவன்பாடினபாட்டும் யாழும் வேறோர்திறமாயிருந்தன. பின்பு உடனிகழ்ச்சியில் யாழைப்பண்ணி வாசித்தலைப்பொருந்தும் பல்வலைக்கையின்விரலும் அதற்கேற்கும்பாட்டுக்களும் நரம்புடன்நடவாவாயின; பின்பு கருவியொழிந்தபாட்டும் விண்ணிலேநின்றியங்கி அக்காலத்தே கம்பித்தலைச்சேர்தலாலே வாதிற்கெடுத்தகீதத்திற் சிறிதுகுறைந்து மாதர் இசைதோற்றுளென்க.

"சிலைத்தொழில்" "கருங்கொடி" என்னுங்கவிகளாற் றெய்வத்தன்மையான பாட்டுடையளென்றுகூறிவைத்து ஈண்டுக் கற்றடிப்படுத்தாதாரைக் கூறுமாறுபோல "விருந்தாகயாழ்பண்ணி" என்றதற்கு யாழ் பண்ணுமுறைமையன்றியென்றும், "பண்ணொன்றுபாடலதுவொன்று" என்றதற்கு யாழுமிடறும்வேறுபட்டதென்றும், "விண்ணின்றியங்கி" என்றதற்கு அந்தரவோசையென்றுங்கூறுதல் தேவர்கருத்தன்மையுணர்க. காமத்தாற்கலங்கி இவள் தோற்றுளென்னிற் சீவகற்கு இசைவென்றியின்மையுமுணர்க. (உ௪௩)

மையார்நெடுங்கண்ணுண்மாமணியாழ்தானுடைந்து
நையாநடுநடுங்காநனிநாணமீதூராப்
பொய்யாதோர்குன்றெடுப்பாள்போன்மெலிந்துபொன்மாலை
பெய்பூங்கழலாற்குப்பெண்ணரசியேந்தினளே.

நொந்தாளென்குதல் - இழவென்னுமெய்ப்பாடு, வெற்றியையிழத்தலின். நாணுள்ளம் பிறர்க்குவெளிப்படநிகழ்தலின், நாணென்னுமெய்ப்பாடு. தோல்விதோன்றமாலையிடுதலின், மேல் இளிவரவென்னுமெய்ப்பாடு.

இ - ள். கண்ணுளாகியபெண்ணரசிதான் அங்ஙனம்யாழ்தோற்றலின் நமக்குத் தோல்வியுளதாயிற்றென்றுநைந்து நிலைதளர்ந்து அவையிற்செல்லவேண்டுதலின் நாணமீதூர்தலான் மெய்யாகவே ஒருகுன்றையெடுப்பாள்போலே குறைந்து பொன்மாலையைக் கழலாற்கேந்தினுளென்க. (உசச)

மெல்லென்சிலம்பரற்றமேகலைகண் மின்னுமிழ
நல்லபெடையன்னநாணவடியொதுங்கி
யொல்லென்னுயர்தவமேசெய்ம்மினுலகத்தீ
ரெல்லீருமென்பாள்போலேந்தன்மேல்வீழ்த்தனளே.

இ - ள். அங்ஙனமேந்தினவள் அரற்ற உமிழ நாண அடியானடந்துசென்று உலகினுள்ளீரெல்லீரும் ஒல்லென்னுமோசைபடப்புகழ்கின்ற உயர்தவமே செய்மினென்று கூறுவாளைப்போல ஏந்தல்கழுத்திலே அதனைவீழ்த்தாளென்க.

குன்றென்றதற்கேற்ப வீழ்த்தனளென்றார். இங்ஙனமெய்துதற்குத் தவஞ்செய்யுங்கருத்து எல்லார்க்கும் இவள்பிறப்பித்தலின், என்பாள்போலென்றார். ஒல்லென்-வெளியாகவென்றுமாம். (உசரு)

வேறு.

நாகத்துப்படங்கொளல்குலங்கிளர்செம்பொன்மாலை
மேகத்துப்பிறந்தோர்மின்னுமணிவரைவீழ்ந்ததேபோ
லாகத்துப்பூட்டிமைந்தனடிதொழுதிறைஞ்சிநின்றாள்
போகத்துநெறியைக்காட்டும்பூமகள்புணர்ந்ததொப்பாள்.

இ - ள். போகத்தின்வழியைக்காட்டுந் திருவந்துகூடிய தன்மையையொப்பாள் அல்குலவள் ஒருமின் மேகத்தேபிறந்து மணிவரையிலே வீழ்ந்ததுபோலே பொன்மாலையைக் கணவனாகத்தேபூட்டி அவனைத்தொழுது நின்றாளென்க.

மாலை அவனது முடிகூடாத கருநெறிபயின்ற குஞ்சி எருத்தத்தலைந்துகிடந்ததன்மேலே முதல்வீழ்ந்து பின்பு கழுத்திலேவிழுந்தமைதோன்ற மேகமுவமைகூறினார். வீழ்வது பாடமாயிற் காலமயக்கம். (உசசு)

செம்மலரடியுநோக்கித்திருமணியல்குனோக்கி
வெம்முலைத்தடமுநோக்கிவிரிமதிமுகமுநோக்கி
விம்மிதப்பட்டுமாதோவிழுங்குவான்போலவாகி
மைம்மலர்த்தடங்கணங்கைமரைமலர்த்தேவியென்றான்.

இ - ள். அங்ஙனநின்றமையான் விம்மிதப்பட்டு விழுங்குவான்போலேயாய்ப் பின்பு குறித்துநோக்கி ஐயநீக்குதற்குரியகருவிகளாகிய அடிமுதலியவற்றைக்கண்டு ஐயநீங்கியும் நுகர்தற்குரியமாதனைத் திருவென்றேகருதினனென்க.

அவை நிலந்தீண்டியும், ஆடைமாசேறியும், மாலைவாடியும், கண்ணிமைத்தும் ஐயநீக்கும். விம்மிதம்-வியப்பு; அஃதாவதுபிறர்கட்டோன்றிய புதுமையாற்பிறந்த

மருட்கையென்னுமெய்ப்பாடு. இது, தனக்கே பான்மையாயினமையிற் றன்கண் மறைந்து நின்ற வேட்கை புலப்பட்டு மனத்தினையுங்கண்ணினையும் அடிதொட்டுமுடி காறுஞ் செலுத்தினமைகூறிற்று. இவன் இங்ஙனங்கருதி வீணையொழிந்தயர்தலா கிய கையாறுற்றிருந்தமை மேலே "தார்ப்பொலிமார்பனேர்ந்து" என்றதனானு ணர்க. (௨௪௭)

கோதையுந்தோடுமின்னக்குண்டலந்திருவில்வீச
மாதரம்பாவைநாணிமழைமினினொசிந்துநிற்பக்
காதலந்தோழிமார்கள்கருங்கயற்கண்ணினாளை
யேதமொன்றின்றிப்பூம்பட்டெந்திரவெழினிவீழ்த்தார்.

தோட்டினொளி கோதையிலேயெறிப்பநிற்றலிற் கோதையுந்தோடுமின்னவென் றார்.

இ - ள். பாவை அவையிலேநிற்றலினாணி மின்ன வீச நிலநோக்கி மின்போ லுடங்கிநிற்க ; தோழியர் அவட்கு நாணத்தால்வரும் இறந்துபாடின்றாகச் சூழவீழ்வ தோர்திரையை வீழ்த்தாரென்க.

கண்ணினாளை - உருபுமயக்கம். (௨௪௮)

வெள்ளிலைவேற்கணாளைச்சீவகன்வீணைவென்றா
னொள்ளியனென்றுமாந்தருவாக்கடன்மெலியவார்ப்பக்
கள்ளராம்புலியையேறுகாணியகாவன்மன்ன
னுள்ளகம்புழுங்கிமாதோவுரைத்தனன்மன்னர்க்கெல்லாம்.

இ - ள். சீவகன் தத்தையை யாழும்பாட்டும்வென்றான் நல்லனென்று மாந் தரார்ப்ப அதுபொறாதே கட்டியங்காரன் மனம்புழுங்கி அரசரைக்கொண்டு சீவ கனைப்போர்காணவேண்டி அரசர்க்கெல்லாஞ் சில தீமொழிகளைக் கூறினானென்க. அது மேற்கூறுகின்றார். ஒள்ளியன் - இசைச்சொல். (௨௪௯)

வடதிசைக்குன்றமன்னவான்குலமாகுசெய்தீர்
விடுகதிர்ப்பரிதிமுன்வர்மின்மினிவிளக்கமொத்தீர்
வடுவுரையென்றுமாயும்வாளமரஞ்சினீரேல்
முடிதுறந்தளியிர்போகிமுனிவனம்புகுமினென்றான்.

இ - ள். வணிகன்மகனை யரசன்கோடலன்றி அரசன்மகளை வணிகனுக்கு நீங் கள் கொடுக்கின்றமையான், மேருப்போல் நிலைகுலையாத நுங்குலத்திற்கெல்லாம் வடுவுண்டாக்கிக்கொண்டீர் ; இதுவுமன்றி இவன்முன்னர் நுமதொளியுங்குறைந் தீர் ; இவ்வடுவுரை ஒருகாலத்தும் மாயாது. இதனை மாய்விக்கும்வாட்போரை யஞ் சினீராயின், அளிக்கத்தக்கீர், அரசைவிட்டுப்போய் முனிகளாய்க் காட்டிலே சென் மினென்றானென்க.

கலுழவேகனும் அரசனாதலான் இவனைநோக்கி நுங்குலமென்றான். (௨௫௦)

முல்லைப்பூம்பந்துதன்னைமும்மதக்களிற்றுவேலிக்
கொல்லைப்பூங்குன்றஞ்செய்தீர்குங்குமக்குழங்கன்மாலை
மல்லுப்பூத்தகன்றமார்பீர்புகழெனும்போர்வைபோர்த்துச்
செல்வப்பூமகளுநாளையலறுமழச்செல்லுமென்றான்.

இ - ள். அதுவேயன்றிப் பின்னும் மார்பினையுடையீர், கையாற்பிசைந்துபோகடுவதோர் முல்லைப்பந்தைக் களிற்றைறவேலியாகவுடைய கொல்லையிற் குன்றாக்கினீர், இனி நும்முடைய நிலமகளும் புகழாகிய போர்வையைப்போர்த்து நாளை அவனிடத்தே செல்லுமென்றானென்க.

நீர் போரிற்கஞ்சிக் கலுழவேகன்மகளைக்கொடுக்கின்றமையின், யானினைத்ததளவாய் என்கீழ்வாழ்கின்றவனை எனக்கு நிலைகுலைத்தலரிதாக்கினீரென்றானென்க. ()

திருமகளிவளைச்சேர்ந்தான்றெண்டிரையாடைவேலி
யிருநிலமகட்குஞ்செம்பொனேமிக்குமிறைவனாகுஞ்
செருநிலத்திவனைவென்றீர்திருவினுக்குரியிரென்றான்
கருமனநச்சுவெஞ்சொற்கட்டியங்காரனன்றே.

இ - ள். கொடியமனத்தினையும் நஞ்சாகிய கடுஞ்சொல்லினையுமுடைய கட்டியங்காரன், இவளிலக்கணமிருந்தபடியாற் றிருமகளாகியவிவளைச் சேர்ந்தவனொருவன் தெண்டிரைவேலியை ஆடையாகவுடைய நிலமகட்குஞ் சக்கரவாளத்திற்கும் இறைவனுமாதலாற் போரிடத்து இவனைவென்று இவளைப்பெற்றீர், இப்பெருஞ்செல்வத்தை நுகர்தற்குரியீராவீரென்றானென்க. (உருஉ)

அணிச்சப்பூங்கோதைசூட்டினம்மனையோவென்றஞ்சிப்
பணிக்குநுண்ணுசுப்பிற்பாவையொருத்திநாம்பலரென்றெண்ணித்
துனித்துநீர்துளங்கல்வேண்டாதூமணிச்சிவிறிநீர்தூய்த்
தனிக்கயத்துழக்கிவென்றீர்தையலைச்சார்மினென்றான்.

இ - ள். இவனைவென்றாலும் பாவையொருத்தி நாம் பலராதலால் இவளைப்பெறுதற்குப் பின்னும் நம்மிற் போர்செய்யவேண்டுமென்றுகருதி வெறுத்து மனந்துளங்கல்வேண்டா, நுமதுயிர்போகாதபடி கயத்திலே சிவிறியாலே நீரைத்தூயித் தனித்தனியே பொருது வென்றவர்கள் அவளைச் சேரக்கடவீரென்றானென்க.

துணியலாகாமையிற் பன்மையாற்கூறினான். அம்மனையோ - அம்மேயோ. ()

வெந்திறலாளன்கூறவேகமோடுரறிமன்னர்
பந்தணிவிரலினுடன்படாமுலைப்போகம்வேண்டிக்
கந்தெனத்திரண்டதிண்டோட்கந்துகன்சிறுவன்காயு
மைந்தலையரவின்சீற்றத்தாரழல்குளிக்கலுற்றார்.

இ - ள். அங்ஙனங் கட்டியங்காரன்கூற, அதுகேட்டு மன்னர் தத்தையது முலைப்போகத்தைவிரும்பிக் கோபத்தோடேமுழங்கிக் கந்துகன்பிள்ளையாகிய ஐந்தலைநாகத்தினது கோபத்தினையுடைய நஞ்சிலே அழுந்துதலுற்றாரென்க.

தானும் நந்தட்டனுமொருதலையும், பதுமுகனொழிந்த தோழர்மூவருட மூன்றுதலையும், நபுலனும்விபுலனுமொருதலையுமாகப் படைவகுத்தெழுதலின், ஐந்தலையரவென்றார். அது "சதுமுகமாகச்சேனைநமர்தலைப்பெய்க" என்பதனானுணர்க. (உருச)

பண்ணியல்யானைமேலான்பதுமுகன்பரவைத்தானை
கண்ணியதுணர்ந்துகல்லாக்கட்டியங்காரனெஞ்சி

னெண்ணியதெண்ணிமன்னரிகன்மலேந்தெழுந்தபோழ்திற்
றண்ணியசிறியவெய்யதழுற்சொலாற்சாற்றுகின்றான்.

இ - ள். பண்ணிலேபயின்ற யானைமேலானுகிய பதுமுகன் அரசர் தானை போர்குறித்தமையுமறிந்து கட்டியங்காரன் கள்ளராற்புலியைய வேறுகாண எண்ணிய தனையுமெண்ணி, அரசர் இகலிலே மாறுபட்டெழுந்தவளவிலே தண்ணிய சிறிய வெய்யவாகியசொற்களாலுந் தழல்போலுஞ்சொல்லாலுஞ் சாற்றுகின்றானென்க.

அவை சாம பேத தான தண்டம். சாமம் - இனிதாகக்கூறல்; அது குளிர்ந் திருத்தலிற் றண்ணியவென்றார். பேதம் - மென்மையானும் வன்மையானுமனத்தி னைப்பேதித்தல்; அது பொய்யுமெய்யுங்கூறிப்பேதித்தலிற் சிறியவென்றார். தானம்- பகைவர்மனமகிழக்கொடுத்தல் ; அஃது அவர்விரும்பப்படுதலின் வெய்யவெனவிருப் பத்தாற்கூறினார் ; "நின்வெய்யனுயினேன்" என்றாற்போல. தண்டம் - பின்பு அவ ராகாமலழித்தேவிடுதல் ; அது தழல்போலிருத்தலிற் றழலென்றார். (உ௫௫)

இசையினிலிவட்குத்தோற்றும்யானையால்வேறுமென்னி
னிசைவதொன்றன்றுகண்டீரிதனையானிரந்துசொன்னேன்
வசையுடைத்தரசர்க்கெல்லாம்வழிமுறைவந்தவாறே
திசைமுகம்படர்கவல்லேதீத்தொட்டாற்சுடுவதன்றே.

இ - ள். இவட்கிசையாற்றோற்றநாம் இசைக்குவணங்கும்யானையால் வெல் லுதுமென்று கருதிற் பொருந்துவதொன்றன்று ; அதுவும் வசையுடைத்துக்கண்டீர்; அதுவேயுமன்றித் தீண்டினாற்சுடுவதன்றே தீயென்பது ; இப்பிறர்மனையயக்கின்ற தீவி னையாகியதீ நினைப்பினுஞ் சுடுவதொன்றுகண்டீர்; ஆதலால் இங்ஙனம் பழியும்பாவமு மாய் நீரேயறிதற்குரிய ; இக்காரியத்தினை நமக்குமாறாகியயான் இரந்துகொண்டு நுங்கட்கெல்லாங் கூறினேன்; இனி அடைவே வந்தவழியே திக்கிடங்களிலே கடுகப் போவீராகவென்றானென்க.

விலங்கினதறிவும் நமக்கின்றென்றான். யானை நாதத்திற் றோற்றுதலின், அத ற்கு வணங்குதலியல்பு. (உ௫௬)

தோளினுன்மிடைந்துபுல்லுந்தொன்மைவாயமிர்தம்வேட்டோர்
வாளினன்மலேந்துகொள்ளின்வாழ்கநுங்கலேயுமாதோ
கோளுலாஞ்சிங்கமன்னன்கொடியினைவெய்தப்பெற்றீர்
தாளினுனெய்யீராகித்தரணிதாவிடுமினென்றான்.

இ - ள். இன்பத்தைவேட்டோர் தோளாற் புல்லிப்பெறுகின்றவமிர்தத்தை நீர் வாளாற்பொருது வலிதிற்கொள்ளின் நுங்கலை நூறும்புகுவதாக ; அதுவுமன்றிச் சிங்கமன்னன் ஒருமகளைப் புணர நமதுகல்வினையாற் றரணியைப்புணரப்பெற்று நின்றீர். இனி முடியாதமுயற்சியான் நொய்யீராகி அதனாற்பிறக்கின்றவருத்தத்தைக் கைவிடுவீராகவென்றானென்க.

தா-ஈண்டுவருத்தம். இவை இரண்டுகவியுஞ் சாமம். வலிந்துகொள்கின்ற இரா க்கதம் *"முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே" என்பதனான் ஒருதலைக்காம

* தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், கச.

மாகிய கைக்கிளையாய் அது புணர்ச்சிக்குச் சிறப்பின்மையுணர்ந்திலீராதலின், நீர்கற்ற இயலுங் கெடுகவென்றான். (உ௫எ)

நாறுமும்மதத்தினுலேநாகத்தையிரிக்குநாக
மாறியசினத்ததன்றியதிங்கத்தின்கவளங்கொண்டால்.
வேறுநீர்கினைந்துகாணீர்யாவர்க்கும்விடுக்கலாகா
தூறித்தேனொழுகுங்கோதைநம்பிக்குமன்னனென்றான்.

இ - ள். தன்மதத்தாலே ஒழிந்தநாகங்களைக் கெடுப்பதொருநாகம் மிக்கசினத்தையுடைத்தாய் அதிமதுரத்தின்குளகைக் கையிலேகொண்டால் அக்குளகை யாவர்க்கும் விடுவித்தலரிது; கோதை நம்பிக்கும் அக்குளகின்றன்மையள்; இதனைத் தனித்து ஆராய்ந்துகாணீரென்றானென்க.

குளகுபோன் மதத்தைவிளைப்பள் இவளுமாதலான், விடுத்தலரிதென்றான். ()

இளவளநாகுபுல்லியினத்திடையேறுநின்றா
லுளவளங்கருதியூக்கலுழப்பெருதுடையதாமே
தளவளமுகைகொள்பல்லாட்சீவகன்றழுவிநின்றாற்
கொளவுளெந்தெழுவதல்லாற்கூடுதனுங்கட்காமோ.

இ - ள். அழகையுடைய இளநாகைப்புல்லித் தன்னினத்திலே ஏறுநின்றால் அதற்குள்ள அழகைத் தானுகரக்கருதி முயறலே உழுமெருது உடையதாமோ, அதுபோலத் தத்தையைச் சீவகன்றழுவிநின்றாற் கோடற்கு வருந்திப்போவதல்லது நங்கட்குக் கூடுதல்கூடுமோவென்றானென்க.

ஏறுபோல் எருதுநுகராமையின், அதனோடுரசனையுவமித்தான். (உ௫௯)

எழுந்துவிண்படருஞ்சிங்கம்பெட்டைமேல்வந்துநின்றான்
மழுங்கமேற்சென்றுபாய்தல்மறப்புலிதனக்குமாமோ
கொழுங்கயற்கண்ணினாளைச்சீவககுமரன்சூழ்ந்தா
லழுங்கச்சென்றணைதல்பேய்காளநங்கட்குமாவதுண்டோ.

இ - ள். பேய்காள், சிங்கம் பெட்டைமேலே மேவிநின்றால் மேற்சென்று அதுகெடும்படிபாய்தல் புலிக்குங்கூடாதாகலின் நீர்கருதுகின்றதும் அத்தன்மைத்து; இனி அதுவுமன்றித் தத்தையைச் சீவகன்றழுவிநின்றாற் காமனுக்கும் அவ்விடத்தாவதொருகாரியமில்லையென்றானென்க.

இதனால் உழப்பெருதென்றதற்கு வெறுத்தமைகண்டு உயர்த்துக்கூறியும் விடுவித்தலரிதென்றான். *"ஒட்டகங் குதிரை கழுதை மரையிவை-பெட்டை யென்னும் பெயர்க்கொடைக் குரிய." இதனுட் கொடையென்றதனாற் சிங்கத்துக்கும் பெட்டைகொண்டவாறுகாண்க. தண்டித்துவிடுக்கவேண்டுதலிற் பேயென்றான். (உ௬0)

மத்திரிப்புடையநாகம்வாய்வழிகடாத்ததாகி
யுத்தமப்பிடிக்கணின்றாலுடம்படுதல்களிபக்காமே

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல் ௬உ.

பத்தினிப்பாவைநம்பிசீவகன்பாலளாஞ
லத்திறங்கருதியூக்கலர்சிர்காணுங்கட்காமோ.

இ - ள். அரசிர்காள், செற்றத்தையுடைய நாகம் மதத்ததாய்ப் பிடிக்கணின் ருல் அதனைக் கெடுத்தல் யானைக்கன்றிற்குக் கூடுமோ, அதுபோலப்பாவை சீவகன் பாலளாஞல் அவளைப்பெறுந்திறத்தை நீர்கருதிமுயறல் நுமக்குக்கூடுமோ வென்ருனென்க.

அரசராதலின் இவளைப்பெறுதற்குரியீராயினுங் கலைகளானும் ஆண்மைமுதலிய வற்ருனுங் குறைபாடுடைமையிற் பெறலரிதென்ருன். (உகக)

தூமத்தாற்கெழீஇயகோதைதோட்டுணைபிரித்தல்விண்மேற்
ருமத்தாற்கெழீஇயமார்பனிந்திரன்றனக்குமாகா
தேமுற்றீரின்னுங்கேண்மினிரதியைப்புணர்துமென்று
காமத்தாற்கழுமினுர்கருக்காமனிற்பிரிக்கலாமே.

இ - ள். மயக்கமுற்றீர், கோதையது தோட்டுணையாகிய சீவகனைப்பிரித்தல் இந்திரனுக்குங்கூடாது; இங்ஙனம் இவனைப்பிரித்தலேயன்றி இன்னமுங்கேண்மின், இரதியைக்கூடுவேமென்று வேட்கையாற்பொருந்தினுர்க்கு அவளைக் காமனிடத்துநின்றும் பிரித்தல்கூடுமோவென்ருனென்க.

தெய்வத்தாலும் பிரித்தலரிதென்றுகூறிப் பின் இவடன்னைப் பிரித்தனுமரிதென் ருன். இவையைந்துகவியும் பேதம். (உகஉ)

எம்மைநீர்வெல்லப்பெற்றீர்வென்றபினிருந்தவேந்த
னும்மையும்வேறுசெய்துநும்முளேபொருதுவீந்தால்
வெம்மைசெய்துலகமெல்லாமாண்டிடவிளைக்குநீதி
யம்மமற்றதனையோரீரவன்கருத்தன்னதென்ருன்.

இ - ள். நீர் எம்மை ஒருவாற்ருன் வெல்லப்பெற்றீராகப்பாரும்; அங்ஙனம் வென்றபின்பு கட்டியங்காரன் நும்மையும் பகைப்பித்து நும்மிலே நீர் பொருதுபட்டால் நும்முலகெல்லாந் தானுளுதற்கோர்முறைமை யுண்டாக்காநிற்கும்; அதனைஎன்னையொழிய வேறேஆராய்ந்துபாரீர். இவன்கருத்துமுன்புமத்தன்மைத்து; காணுங்களென்ருனென்க.

அம்ம - அசை. அரசருலகினைக் கட்டியங்காரன்கொள்ளாமல் அவரேபெறும்படி கூறினமையாற் ருனம். (உகங)

சொற்றிறலன்றிமன்னீர்தொக்குநிர்காண்மினெங்கள்
விற்றிறலென்றுவில்வாய்வெங்கணைதொடுத்துவாங்கிக்
கற்றிரள்கழிந்துமண்ணுட்காந்ததுகுளிப்பவெய்திட்
டிற்றெமர்கல்வியென்ருனிடியுருமேற்றெடோப்பான்.

இ - ள். உருமேற்ருெடொப்பான் மன்னீர், எங்கள் சொல்வன்மையன்றி வில்வன்மையுந் திரண்டு நீர் காண்பீராகவென்றுகூறி வில்வாயிலே கணையைத்தொடுத்து நிரம்பவாங்குதலாலே தன்னுள்ளேகரந்த அவ்வம்பு கற்றிரளைக்கழிந்து மண்ணுட்குளிப்பவெய்து எமர்கள்கல்வியெல்லாம் இத்தன்மைத்தென்ருனென்க. ()

ஆழியங்கழனிதன்னுளம்பொடுகணையமீவித்திச்
சூழ்குடர்ப்பிணங்கண்மல்கவிளைத்தபின்றெழுதிப்பல்பேய்க்
கூழ்படுகுருதிநெய்யினிறைச்சிச்சோறூட்டிவென்றி
விழ்தரவேட்டுநின்றுரெய்துபவெகுளல்வேண்டா.

இ - ள். சக்கரயூகமாக வகுத்த படையாகிய விளைநிலத்தே அம்பையுந் தண்டாயுத்தையும் விதையாகவிதைத்துப் பிணமாகியநெல்லை விளைவித்தபின்பு குருதியாகியநெய்யுடனே இறைச்சியாகிய *கூழ்படுசோற்றைப் பல்பேய்க்கூட்டி விசயமகள்விரும்பும்படி களம்வேட்டுநின்றவர்கள் இவளைப்பெறுகின்றார்கள்; ஒருபயனின்றி வெகுளல்வேண்டாவென்றானென்க.

இவையிரண்டுந் தண்டம். (உசுரு)

போர்ப்பறைமுழங்கியெங்கும்பொருவளிபுடைக்கப்பட்ட
கார்க்கடல்போன்றுசேனைகலக்கமோடுரறியார்ப்பத்
தார்ப்பொலிமார்பனோர்ந்துதன்கையில்வீணைநீக்கி
வார்ப்பொலிமுலையினுட்குவாய்திறந்திதனைச்சொன்னான்.

இ - ள். காற்றடித்த கடல்போல் எங்கும் பறைமுழங்கிச் சேனையார்ப்ப அதனை மார்பனோர்ந்து நீக்கித் தத்தைக்கு இதனை வாய்விட்டுக்கூறினானென்க.

கலக்கம் - முன்னின்றநிலைகுலைதல். உரறி-முழங்கி. கையாறுற்றிருந்தவன் ஆரவாரமுண்டென்று செவிகொடுத்துணர்ந்தான். வீரத்தாற் காமங்கெட்டதென்று இரண்டன்சிறப்புங்கூறினார். (உசுசு)

வேறு.

தேய்ந்துநுண்ணிடைநைந்துகச்செப்பினைக்
காய்ந்தவெம்முலையாய்நினகண்களைபோ
லாய்ந்தவம்பினுக்காரிரையாகிய
வேந்தர்வேண்டிநின்றார்விம்மனீயென்றான்.

இ - ள். இடை குறைந்துகெடும்படி செப்பினைக்கெடுத்தமுலையாய், நின்னுடைய கண்கள்போற் றப்பாதென்றாய்ந்த அம்பிற்கு இரையாவதற்கு வேந்தர் விரும்பினின்றார்; நீ வருந்தாதொழிக வென்றானென்க. (உசுஎ)

அண்ணல்கூறலுமம்மனையோவெனாத்
துண்ணெனெஞ்சினளாய்த்துடித்தாயிழை
கண்ணினீர்முலைபாயக்கலங்கினாள்
வண்ணமாக்கவின்சொல்லொடுமாய்ந்ததே.

இ - ள். தலைவன் அதனைக்கூறினாகை, ஆயிழை அம்மேயோவென்னாத் துணுக்கென்றநெஞ்சினளாய் மெய்ந்நடுங்கி அழுது கலங்கினாள்; அப்பொழுது அவளது கவின், அவன் கூறியகூற்றுடனே பொன்றக்கெட்டதென்க. (உசுஅ)

மேவிநம்பிக்குவெம்பகையாக்கிய
பாவியேனுயிர்பாழுடலிற்றுவிட்

டாவியோகடவாயென்றழுதுதன்
காவிவாட்கண்கலங்கவதுக்கினாள்.

இ - ள். உறவாயிருந்து நம்பிக்குக் கடியபகையை விளைவித்த பாவியேனது உயிரே, நீ பாழுடலைக்கைவிட்டுப் போகின்றிலை; இங்ஙனம்போகாதநீயும் ஓராவி யோவென்றழுது தன்கண்கலங்க அடித்துக்கொண்டாளென்க.

பாவியேனது பாழுடலும் பாடம். (உசக)

பாழிநம்படைமேலதிப்பாரெலா
நூழிலாட்டிநுடக்கிக்குடித்திடும்
வாழிநங்கைகண்டாயென்றுவாட்கணீர்
தோழிதூத்துகிற்றோகையினீக்கினாள்.

இ - ள். தோழி நங்காய், வலியையுடைய நம்படை மேலேநின்றது; இஃது இவர்களேயன்றி இப்பாரிலுள்ளோரெல்லாரையுங்கொன்றுகுவித்து ஒன்றாகக்கரைத் துக்குடித்துவிடுங்காணென்றுகூறிக் கண்ணீரை முன்றானையாலே துடைத்தா ளென்க. (உஎ0)

எங்கள்பெண்மையுமீர்மலர்த்தார்மன்னர்
தங்களாண்மையுஞ்சால்வதுகாண்டுமென்
றிங்குவார்முரலுங்கலையேந்தல்கு
னங்கைவாட்படைநங்கையைச்சூழ்ந்ததே.

தங்குகின்றநீண்ட கலை.

இ - ள். நங்கைவாட்படை எங்கள்பெண்டன்மையிலும் மன்னராண்டன்மை யிலும் அமைவதொன்று காணக்கடவேமென்றுகூறி நங்கையைச் சூழ்ந்ததென்க. ()

வேறு.

கூன்களுங்குறளுமஞ்சிக்குடர்வெந்துகொழும்பொற்பேழை
தான்கொளப்பாயவோடிச்சாந்துக்கோய்புகியசெல்வ
தேன்கொள்பூமாலைசூடித்தாமமாய்த்திரண்டுநிற்ப
வான்பளிங்குருவத்தூணேமறைபவுமாயவன்றே.

இ - ள். படையெழுச்சிகண்டு கூன்களுங் குறளுமஞ்சி வெந்து பொற்பெட்டி தான் றங்களை உள்ளடக்கிக் கொள்வதாகக்கருதிஅதனுள்ளே பாய்கைக்குஞ் சாந் திருந்த பரணிகளிலே புகுகைக்கும் ஓடிச்செல்வனவும், சூடித் திரண்டுநிற்பனவும், உருவத்தையுடைய பளிக்குத்தூணிலே மறைவனவுமாயினவென்க. (உஎஉ)

இங்கிதநிலைமைநோக்கிமுறுவலித்தெரிபொன்மார்ப
னங்கையைக்காக்கும்வண்ணநகாநின்றுமொழிந்துபேழ்வாய்ச்
சிங்கந்தான்கடியதாங்கோர்செழுஞ்சிங்கமுழக்கிற்சீறிப்
பொங்கிமேற்செல்வதேபோற்பொலங்கழனரலச்சென்றான்.

இங்கிதம் - குறிப்பின்றன்மை; அவை படையெழுச்சியும் அதற்கிவை யஞ்சி னமையும். இங்கிதநிலைமையும் பாடம். செழுமை - கொழுப்பு.

இ - ள். பொன்மார்பன் நிலைமைநோக்கி முறுவலித்து நங்கையைப் பதுமுகன்காப்பானாகத் தான்கருதி அதனை யவனுக்கு நகாநின்றுகூறிக் கடியதோர்சிங்கந்தான் அவ்விடத்திற் சிங்கங்களின்முழக்காலே சீறிக் கோபித்து அவற்றின்மேற் செல்வதுபோலே கழல்நரலப் பதுமுகனிற்கின்றவிடத்தே சென்றானென்க. (உஎங)

பதுமுககுமரன்மற்றிப்பாவையைக்காவலோம்பி
மதுமுகமாலைநெற்றிமதகளிறுந்திநிற்ப
நுதிமுகவாளும்வில்லுநுண்ணிலைவேலுமேந்திச்
சதுமுகமாகச்சேனைநமர்தலைப்பெய்கவென்றான்.

இ - ள். பதுமுகன் வேறாக இப்பாவையைக் காத்தலைப்பேணிக் களிற்றை மண்டபத்தின் வாயிலளவுஞ் செலுத்தி அதிலேநிற்க; நம்முடைய சுற்றத்தார் வாள் முதலியவற்றையேந்தி நஞ்சேனையை நான்குகையாக அவர்வகுத்தவிடத்தே நிறுத்துகவென்றானென்க.

பதுமுகனையொழிந்த தோழர்மூவரு மூன்றுகையும், நபுலவிபுலரொருகையுமாக நான்குகை. (உஎச)

வட்டுடைமருங்குல்சேர்த்திவாளிருபுடையும்வீக்கித்
தட்டுடைபொலிந்ததிண்டேர்தனஞ்சயன்போலவேறிக்
கட்டளைப்புரவிசூழ்ந்துகால்புடைகாப்பவேவி
யட்டுயிர்பருகுங்கூற்றங்கோளெழுந்தனையதொத்தான்.

இ - ள். அவனையங்ஙனமேவித் தான் சேர்த்தி வீக்கித் தேரையேறிப் பண்ணினையுடைய புரவியைப் பக்கத்தேசூழ்ந்து கால்காப்பச்சிலரையேவிக் கூற்றங் கொல்லுகைக்கெழுந்த தன்மையையொத்தானென்க.

வாள் - உடைவாள். (உஎரு)

புள்ளிரைப்பன்னபொற்றார்ப்புரவிதேரிரவிபோலா
வுள்ளுருத்தெழுந்துபொங்கியுடல்சினங்கடவநோக்கி
முள்ளெயிறிலங்கநக்குமுடிக்குழாமன்னர்கேட்பக்
கள்ளவிழலங்கன்மார்பன்கார்மழைமுழக்கிற்சொன்னான்.

புள்ளிரைப்பன்ன - பறவையின்ஒலியையொத்த.

இ - ள். அம்மார்பன் தேரிலே இரவிபோலேயிருந்து சினம் வெவ்விதாய்மனத்தேதோற்றி மிக்கு உடம்பினைச் செலுத்தாநிற்க மன்னரைநோக்கி மிகநக்கு அவர் கேட்ப மழைமுழக்கம்போலே கூறினானென்க. (உஎசு)

முருகுலாமுல்லைமாலைமூப்பிலாமுலையினார்நும்
மருகுலாம்புலவிநோக்கத்தமிர்தமின்றுகுப்பகொல்லோ
கருதலாம்படியதன்றிக்கலதியம்பிவையுங்காய்ந்த
பொருதுலாம்புகழைவேட்டிவ்வெஃகமும்புகைந்ததென்றான்.

இ - ள். போர்செய்தலானுண்டாம் புகழைவிரும்பி நினைக்கலாம்படியதன்றாகக் கேட்டினைச்செய்தலுடைய அம்பாகியவிவையுங் காய்ந்தன; இவ்வெஃகமும்

புகைந்தன; ஆதலான் முலையினார் நீர் யாழ்வாசிக்கப்போந்திரென்பதனால் தம்மிடத்தேபிறந்த புலவிநோக்கத்தாற் பின்பு தாம்பெறுகின்ற புணர்ச்சியின்பத்தைப் பாழேயுகுப்பர்கொல்லோவென்றானென்க.

அமிர்தமென்றுகுப்பவென்றும் பாடம். (௨௭௭)

வாணிகமொன்றுந்தேற்றாய்முதலொடுங்கேடுவந்தா
லூணிகந்தீட்டப்பட்டவூதியவொழுக்கினெஞ்சத்
தேணிகந்திலேசுநோக்கியிருமுதல்கெடாமைகொள்வர்
சேணிகந்துய்யப்போநின்செறிதொடியொழியவென்றார்.

இ-ள். ஊணைக்கைவிட்டுத் திரட்டப்பட்ட முதலோடே ஊதியத்திற்கு மொருகேடுவந்தால் அவ்விரண்டினும் ஊதியமாகிய நடப்பின்மேலே நெஞ்சத்துநடக்கின்ற திண்மையைக் கைவிட்டு இரண்டையுமிழப்பதின் முதல்பெறுகையும் ஊதியமென்றுபார்த்துப் பெரியமுதல் கெடாதபடி அதனைக்கொள்வர் நின்குலத்தோர்; நீயும் அதுசெய்யாது போர்குறித்தெழுதலின் நினக்குரிய வாணிகமொன்றுமறியாய்; இனி நின்செறிதொடியாகியவூதியத்தைக் கைவிட்டு நின்னுடம்பாகிய முதலைக் கொண்டு பிழைக்கப்போவென்றாரென்க.

தேற்றாய் - "தேற்றாய்பெரும" என்றதுபோனின்றது. (௨௭௮)

தம்முடைப்பண்டந்தன்னைக்கொடுத்தவருடைமைகோட
லெம்முடையவர்கள்வாழ்க்கையெமக்குமஃதொக்குமன்றே
யம்முடையரசிர்க்கெல்லாமென்கையுளம்புதந்து
நும்முடைத்திருவுந்தேசுநோக்குமின்கொள்வலென்றான்.

இ-ள். அதுகேட்டுத் தம்முடையபண்டத்தைப் பிறர்க்குக்கொடுத்து அவர்களுடைமைகளை வாங்கிக்கோடல் எங்குலத்தோர்வாழ்வாதலின் அஃதெமக்குமொக்குமல்லவோ, இனி யான் நுங்கட்கெல்லாம் என்கையிலம்பைத்தந்து நும்முடைய வீரஸ்ரீயையும் புகழையும் இப்பொழுதே கொள்வேன்; வல்லீராயின் அவற்றைக் காப்பீராகவென்றானென்க. (௨௭௯)

மட்டுலாந்தாரினாய்நின்வனப்பினோடிளமைகல்வி
கெட்டுலாய்ச்சிலம்புசெம்பொற்கிண்கிணிமகளிர்கோங்க
மொட்டுலாமுலைகள்பாய்ந்தவகலத்துச்சரங்கண்மூழ்கப்
பட்டுலாய்க்கிடக்கலுற்றாயென்சொலாய்பாவியென்றார்.

இ-ள். தாரினாய், சிலம்புமுதலியவற்றையுடைய மகளிரது கோங்கரும்பு தோற்றுப்போமுலைகள் உலாய்ப்பாய்ந்த அகலத்தே சரங்களுலாய்ப்பாய்கையினாலே பட்டு நின்வனப்புமுதலியன கெட்டுக் கீழ்க்கிடக்கலுற்ற பாவி, நீ எதுசொல்லாயென்றாரென்க.

இஃது அரசர்கூற்று. (௨௮௦)

எரிசுடாப்பரிதிமுன்னரிருளெனவுடைந்துநீங்கப்
பொருபடைமன்னர்நுங்கள்புறக்கொடைகண்டுமற்றிம்
முருகுடைக்குழலினோடன்முகிழ்முலைகலப்பலன்றே
லிருசுடர்வழங்குமவையத்தென்பெயர்கெடுகவென்றான்.

இ - ள். பரிதிமுன்னர் இருள்கெடுமாறுபோல நீர் எனதுதோற்றங்கண்டுபோக நமதுபுறங்கண்டு பின்பு குழலினாளை மூலையைக்கலப்பேன்; அதுசெய்திலேனாயின் என்புகழ் ஞாயிறுந்திங்களும்வழங்குகின்ற உலகெங்குநடவாது கெடுவதாகவென்றானென்க.

இது சீவகன்வஞ்சினம். இது முன் இளமைமுதலியவற்றை அவ்வரசர்கொன்று கூறலின், அக்கொலை பொருளாகப்பிறந்த வெகுளியென்னுமெய்ப்பாடு. இது "நகுதக்கனரே" என்னும்புறப்பாட்டினுட்கண்டுகொள்க. (உஅக)

## வேறு.

ஆண்மரவாளிலத்தப்புவேல்செய்முட்
காண்வருகாட்டினக்களிற்றுநீள்வரை
நீணிலவேந்தெனும்வேழப்பேரினம்
பூண்முலைப்பிடிக்கவாய்ப்போர்செய்குற்றவே.

இ - ள். ஆளாகியமரத்தையுடைய வாளாகியநிலத்தே அம்புவேலாற்செய்த விடுமுள்ளையுடைய எல்லாருங் காண்டலுடையகாட்டில் இனக்களிறாகியவரைமேலே வேந்தராகியவேழத்திரள் தத்தையென்கின்றபிடிக்கவாவிப் போர்செய்தலுற்றனவென்க.

பூண்முலை — வெளிப்படை. (உஅஉ)

தாழிருந்தடக்கையுமருப்புந்தம்பியர்
தோழர்தன்றாள்களாச்சொரியுமும்மத
மாழ்கடற்சுற்றமாவழன்றுசீவக
வேழுயர்போதகமினத்தொடேற்றதே.

இ - ள். இசையேழினாலுமுயர்ந்த சீவகனாகியயானை, கை நந்தட்டனாக மருப்பு சுபுலவிபுலராகத் தோழர்நால்வருந் தாளாக மும்மதந் தேருங் குதிரையுங் காலாளுமாக அரசராகிய ஆனைத்திரளுடனே போர்செய்யத்தொடங்கிற்றென்க.

தன்னையானையாக உருவகங்கூறலிற் கடற்சுற்றம் அதனையொழிந்தமூன்றுபடையுமாம். யானைக்கு உத்தம இலக்கணம் ஏழுமுழவுயரம். இவன்வீணைவென்றமையின், ஏழுயர்போதகமென்றார். (உஅந)

குடையுடைவேந்தெனுங்குழாங்கொணுகமும்
கொடியெனும்பிடியுடைக்குமரவேழமும்
வெடிபடுபோர்த்தொழில்காணவிஞ்சைய
ரிடியுடையினமழைநெற்றியேறினார்.

இ - ள். வேந்தராகியயானைகளுந் தத்தையாகியபிடியையுடைய சீவககுமரனாகிய யானையுந் தம்மிற் பகைத்தலுண்டாகிய போர்த்தொழிலைக்காண்டற்கு விஞ்சையர் மழைநெற்றியிலேயேறினாரென்க.

வெடி - முழக்கமுமாம். (உஅச)

கரைபொருகடலொடுகார்கணும்றென
முரசொலிவேரிவளைமுழங்கியார்த்தன

வரசருமமர்மலைந்தரணம்வீசினர்
குராகடம்றூனைபோர்க்கோலஞ்செய்தவே.

இ - ள். கடலொலியோடே வான்முழக்கஞ்சேர்ந்ததென்னும்படி முரசும் வளையும் முழங்கி ஆர்த்தன; அப்பொழுது அரசரும் போரை யேறிட்டுக்கொண்டு கவசத்தையணிந்தார்; அவர்தானையும் போர்க்கோலங்கொண்டனவென்க. (உ௮௫)

தெய்வதம்வணங்குபுசெம்பொன்வாயுளிட்
டெய்கணைப்படுமழைசிதறியெங்கணு
மொய்யமர்மலைந்தனர்முருகுவிம்முதார்ச்
செய்கழற்சீவகன்வாழ்கவென்னவே.

இ - ள். சீவகன்றோழருஞ் சீவகன்வாழ்கவென்று கூறுநிற்கத் தெய்வத்தை வணங்கிப் பாடுகுறித்துப் பொற்றகடு தம்வாயுளிட்டு எவ்விடமும் பெய்கின்றமழை போலக் கணையைச்சிதறுவதாகப் போரை மேற்கொண்டாரென்க.

சிதறவென்க. (உ௮௬)

கலந்ததுபெரும்படைகணைபெய்மாரிதூ
யிலங்கினவாட்குழாமிவுளியேற்றன
விலங்கினதேர்த்தொகைவேழங்காய்ந்தன
சிலம்பினவியமரந்தெழித்தசங்கமே.

இ - ள். அரசர்பெரும்படை கணையைப் பெய்மாரிபோலத்தூவி யிதனோடு கலந்தது ; அப்பொழுது இரண்டுபடையில் வாட்குழாமும் இலங்கின; குதிரையும் ஒன்றையொன்றேற்றன; தேரும் ஒன்றையொன்றுதடுத்தன; வேழமும் ஒன்றை யொன்றுகாய்ந்தன; இயமரமும் இயம்பின; சங்கும் ஒலித்தனவென்க.

இதனால் இரண்டுபடையுங் கலந்தபடி கூறினர். (உ௮௭)

சுற்றணிகொடுஞ்சிலைமேகந்தூவிய
முற்றணிபிறையெயிற்றம்புமூழ்கலி
னற்றுவீழ்குழைமுகமலர்ந்ததாமரை
மற்றவைசொரிவதோர்மாரியொத்தவே.

இ - ள். சிலையாகியமேகந்தூவிய பிரம்பவலித்தல்பொருந்தின அம்புமூழ்குத லால், அற்றுவீழ்கின்ற முகமாகியவவை மலர்ந்த தாமரைப்பூவைச் சொரிவதோர்மாரி யையொத்தனவென்க.

மற்று - அசை. (உ௮௮)

மறப்படைபசித்தனவயிறின்றூர்கெனக்
குறைத்தனர்குஞ்சரங்கூந்தன்மாத்துணித்
திறக்கினரோடுதேர்மைந்தரின்னுயிர்
துறக்கம்போய்ப்புகுகெனத்துணியதூறினர்.

இ - ள். மறப்படை முன்பு வயிறுபசித்தன, அவை இன்று வயிறு நிறைகவெ ன்றுகூறிக் குஞ்சரத்தைக்குறைத்தார்; மாவைத்துணித்துத் தேரை யிறக்கினார்; இன் னுயிர்போய்த் துறக்கம்புகுகெனத் துணியவீசினரென்க. (உ௮௯)

## வேறு.

க. ஆற்றுவீர்வம்மினெம்மோடாண்மைமேம்படீஇயவென்பா
ரேற்றவர்மார்பத்தல்லாலிரும்புமேல்விடாதுநிற்பார்
கூற்றம்போற்கொடியயானைக்கோடுழுதகன்றமார்பங்
கீற்றுப்பட்டழகிதாகக்கிடக்கெனக்கொடுத்துநிற்பார். (உகூ0)

உ. கழித்துவாண்மாலையாடிக்காட்டுவார்கண்கள்செந்தீ
விழித்துமேற்சென்றவேழம்வேலினால்விலக்கிநிற்பார்
தெழித்துத்தேர்க்கயிறுவாளாலரிந்திட்டுப்புரவிபோக்கிப்
பழிப்பிலகொணர்ந்துபூட்டுபாகநீயென்றுநிற்பார். (உகூக)

ங. ஐங்கதிக்கலினப்பாய்மாச்சிறிதுபோர்களையீதென்பார்
வெங்கதிர்வேலிற்சுட்டிவேந்தெதிர்கொண்டுநிற்பார்
நங்கைகல்லியாணநன்றேநமக்கெனநக்குநிற்பார்
சிங்கமும்புலியும்போன்றார்சீவகன்றோழன்மாரே. (உகூஉ)

ச. ஒருங்கவன்பிறந்தஞான்றேபிறந்தவருதயத்துச்சி
யிரும்பினாற்பின்னியன்னவெறுழ்வலிமுழவுத்தோளார்
விரும்புவார்வேழவேற்போர்நூற்றுவர்நூற்றுக்கோடிக்
கிருந்தனம்வருகவென்பாரின்னணமாயினாரே.

இவைநான்குமொருதொடர்.

க. எம்முடனே நமதாண்மை மேம்படுத்துதற்குப் போரிற்காற்றுவீர் வாருங்களென்பார்; எதிர்ந்தவர்மார்பிலல்லாது எதிராதார்மார்பில் இரும்பினைக் கைவிடாது நிற்பார்; யானைக்கோடுழுது கீற்றுப்பட்டுக் கிடக்கவென்று மார்பை யானைகுத்தக் கொடுத்துநிற்பாரென்க.

உ. உறையைக்கழித்து வாட்கூத்தாடிக்காட்டுவார். செந்தீவிழித்து - நெருப்புப்புறப்படவிழித்து. பாகனைக் கோபித்துக் கயிற்றையறுத்துப் போக்கிப் பாகனே, நீ நல்லபுரவிகளைக் கொணர்ந்து பூட்டென்றுநிற்பார்.

ங. ஐங்கதி: "விக்கிதம் வற்கிதம் வெல்லு முபகண்ட - மத்திமஞ் சாரியோ டைந்து." கலினம் - கடிவாளம். பாய்மாப்போர் சிறிது இதனைக் களை. வேந்தனை இவனெனக்கு இவனெனக்கென்று வேலாலேசுட்டி எதிர்கொண்டுநிற்பார். நன்றென்றது, பூசல்பெற்றவுவகையால்.

ச. உதயத்துச்சியை யிரும்பினாற்கட்டினாலொத்த தோள். எறுழ்வலி-மிக்க வலி. வேழத்தோடே வேலாலேபொருதலை விரும்புவார். நூற்றுக்கோடிபடைக்குப் போர்செய்யவிருந்தேம்.

இ-ள். சீவகன்றோழன்மார், அவன்பிறந்த அன்றே கூடப்பிறந்தவர், தோளார், விரும்புவார், வருகவென்பார், அவர்கடாம் இப்போரில் இன்னணமாயினார்; அஃது எங்ஙனேயென்னில் என்பார், விடாதுநிற்பார், கொடுத்துநிற்பார், காட்டுவார், வில

க்கிநிற்பார், பூட்டென்றுநிற்பார், கனையென்பார், எதிர்கொண்டுநிற்பார், நக்குநிற்பாராய்ச் சிங்கத்தையும் புலியையுமொத்தாரென்க.

இவை நான்குகையிலுநின்ற படைத்தலைவரல்லாத தோழர் பொருதபடி கூறின். (உகங)

கூட்டுறமுறுக்கிவிட்டகுயமகன்றிகிரிபோல
வாட்டிறற்றேவதத்தன்கலினமாமாலைவெள்வே
லீட்டம்போழ்ந்தியானைநெற்றியிருங்குளம்பழுத்திமன்னர்
சூட்டொடுகண்ணிசூளாமணிசிந்தித்திரியுமன்றே.

இக்கவிமுதல் நான்குகவியாற் படைத்தலைவராய்நின்ற தோழர்மூவரும் நபுலவிபுலரும் பொருதபடி கூறுகின்றார்.

கூட்டு - மட்டிரள். உற - அதுவந்து சேருதலாலேமுறுக்கிவிட்ட. "திரித்துவிட்ட பசுமட் குருஉத்திரள்" என்றார்பிறரும். இனி உசவுறவென்றுமாம்; அதுகரியுமெண்ணெயும். சூட்டு - போர்ப்பூ. சூளாமணி - முடியின்மணி.

இ - ள். தேவதத்தனதுமா போழ்ந்து அழுத்திச் சிந்தித் திகிரிபோற் றிரியுமென்க. (உகச)

பாய்ந்ததுகலினமாவோபறவையோவென்னவுட்கி
வேந்தர்தம்வயிறுவேவநபுலமாவிபுலரென்பார்
காய்ந்துதம்புரவிக்காமர்குளம்பினுற்களிற்றினோடை
தேய்த்துகச்சேர்த்திமாலைத்திருமுடித்திலகங்கொண்டார்.

மா - முற்கூறியவாறேகொள்க.

இ - ள். நபுலவிபுலரென்று கூறுகின்றவர்கள் தம்புரவியினது குளம்பாலே பட்டந்தேய்ந்துகும்படி களிற்றினுதலிலே மாவோபறவையோ பாய்ந்ததென்ன அப்புரவியைச்சேர்த்தி, அவற்றின்மேலிருந்தவேந்தர் உட்கி வயிறுவேம்படி அவர் முடியிற் சூட்டுமணிகளை வாங்கிக்கொண்டாரென்க. (உகரு)

காயத்தின்குழம்புதீட்டிக்காரிரும்பெறியமேகந்
தோயுமுள்ளிலவின்கூன்காய்சினைதொறுமுதிர்வவேபோன்
மாயங்கொன்மறவர்மாலைப்பைந்தலையுதிர்நதசெங்கட்
சேயனன்றிருவின்பேரான்செழுஞ்சிலைப்பகழியாலே.

இ - ள். இரும்பிலே பெருங்காயத்தினது குழம்பைப்பூசி அதனாலே யில்வினை வெட்ட அதன்காய் உதிர்வனபோலே முருகனையொப்பான் ஸ்ரீதத்தன் வில்விற்றோன்றிய பகழியாலே மறவருடைய செவ்விமாலைத்தலைகளுதிர்ந்தன; இது மாயமோவென்க. (உகசு)

நீணிறப்பௌவமேய்ந்துசூன்முற்றிநீலமேகம்
வானிறவிசும்பினின்றமாரியின்மறைவலாளன்
போனிறப்புத்திசேனன்பொன்னணிபகழிசிந்தி
வேணிறமன்னர்சேனைகூற்றிற்குவிருந்துசெய்தான்.

பொன்னிறம் - போனிறமெனவிகாரம். போர்நிறம் பாடமாயிற் போரொளி யாம். நிறவேலையுடையமன்னர்.

இ - ள். பௌவத்தைமேய்ந்து சூன்முற்றுதலாலே நீலமேகம் விசும்பிலே மா ரு துநின்ற காலமழைபோலே அந்தணனாகியபுத்திசேனன் பகழியைச்சிந்திச் சேனை யைக் கூற்றிற்கு விருந்தாக்கினனென்க. (உகஎ)

வே று.

வீரவேலுடம்பெலாஞ்சூழவெம்புலால்
சோருஞ்செங்குருதியுண்மைந்தர்தோன்றுவா
ரோருமேலொண்மணிச்சூட்டுவைக்கிய
வாரமேயமைந்ததேர்க்குழிசியாயினர்.

இ - ள். புலாலையுடைத்தாய்ச் சோருங்குருதி விட்டுச்சொரியாது உள்ளேநிற் கின்றமைந்தர் வேல் உடம்பெலாஞ்சூழத் தோன்றுவார், சூட்டு மேல்வைத்தற்குப் பலவாருந்தைத்துநிறைந்த தேர்க்குறடாயினரென்க.

ஒரும் - அசை. (உகஅ)

பொன்னனாள்புணர்முலைப்போகம்வேண்டிய
மன்னரோடிளையவாமறலிவாளம
ரின்னணமித்தலைமயங்கவத்தலைக்
கொன்னவில்வேலினனிலைமைகூறுவாம்.

இ - ள். தத்தையது முலைப்போகத்தைவிரும்பிய மன்னரோடே தோழர் மாறு படுதலாலே வாட்போர் இப்படி இவ்விடத்தேமயங்காநிற்க, எண்டுவாராது ஆண்டு நின்றவேலினன்றன்மை யினிக்கூறுவாமென்க. (உகக)

தம்பியைச்சீவகனோக்கிச்சாமரை
வெம்பரிமான்செவிவீரமந்திர
மிம்பர்நம்மிடர்கெடவிரண்டும்வல்லையாய்
நம்பிநீமொழிகெனநயந்துகூறினன்.

சாமரையினையுஞ் செலவினையுமுடைய மான். இரண்டும் - பறப்பிக்குமதுவும, வேண்டுமிடத்தே நிறுத்துயிக்குமதுவும்.

இ - ள். சீவகன் தம்பியைநோக்கி இவ்விடத்தில் நமதிடர்கெடும்படி வீரமந்திர மிரண்டையும் நீகற்று மானினது செவியிலே மொழிவாயாகவென்றுசொல்லி அவற் றை அவனுக்கு விரும்பிக் கூறினனென்க. (௩00)

வே று.

மந்திரங்கேட்டுநான்கும்வானெட்டிப்புகுவவேபோ
லந்தரத்திவர்ந்தவாழிக்காணிலம்விட்டமாலைச்
சுந்தரச்சுண்ணமேனிமகளிர்தங்கண்ணுளிட்ட
மைந்தருமிரும்புமொவ்வாவான்புலங்காவல்கொண்டார்.

மந்திரம் - காண்டமந்திரம். வான்புலம் - உண்மையறிவு. அதுவே யெல்லா வெற்றியுந்தருவதென்று உட்கொண்டு.

இ - ள். அம்மந்திரத்தை நந்தட்டன்கூறக்கேட்டு நான்கு புரவியும் அந்தரத்தே பாய்ந்தன; வட்டத்தையுடைய உருள் நிலத்தைவிட்டன; அழகான் மகளிர் தங்கண்ணில் வைத்துக்கொண்டிருக்கின்ற சிவகனும் நந்தட்டனும் வான்புலத்தை யிரும்புமொவ்வாத காவலாகக் கைக்கொண்டாரென்க.

காவல் - கவசம். (௬0௧)

வடிகயிறுய்ந்துமுட்கோல்வலக்கையாற்றூங்கிவென்றி
முடிகெனப்புரவிமுள்ளாலுறுத்தினன்மொழிதரேற்றேன்
கடுகியவண்ணமாவின்றூரொலிகாமர்பொற்றேர்
படையதுசெவியுங்கண்ணும்பற்றிநின்றிட்டவன்றே.

இ - ள். குதிரையைத் தொழிலிலேபயிற்றும் வாய்க்கயிற்றை யாய்ந்து தாறுகோலையெடுத்து நமக்கு வெற்றியுண்டாவதாகவென்று புரவியை அம்முள்ளாலே யுறுத்திச் செலுத்தினன்; அவைகடுகியதன்மையைச் சொல்லுதலறியேன்; மாவின்றூரொலி படையினதுசெவியிலுந் தேர் அதன்கண்ணிலும் விடாதே நின்றவென்க. ()

அண்ணறேர்பறவையென்பாரருவமேயுருவமென்பார்
மண்ணதேவானதென்பார்மனத்ததேமுகத்ததென்பார்
கண்ணதேசெவியதென்பார்கலங்கநூல்கழியநோக்கிப்
பண்ணியவீதிபற்றிமண்டலம்பயிற்றினனே.

என்பாரை யெங்குங்கூட்டுக. அருவமென்றது, எங்குங்கலத்தலின்.

இ - ள். தலைவன்றேரைச் சிலர் இப்படிக் கூறுவார் இப்படிக் கூறுவாராய்க் கலங்காநிற்க; நூலைக் கூர்க்கப்பார்த்து அதிற்பண்ணின வீதியைத்தொடங்கி மண்டலமென்கின்ற கதியைப் பயிற்றினனென்க. (௬0௬)

அகில்கொண்டகொள்ளிவட்டமாருயிர்மேயுநேமி
முகில்கொண்டமின்னுந்தோம்பமுறுகியவிசையிற்றூகி
யிகல்கொண்டவிகலைத்தானேவிழுங்கியசிறகர்தோற்றிப்
பகல்கொண்டுபறக்குந்தேராற்காளை தன்பைம்பொற்றேரே.

இ - ள். காளைதன்றேர் அகில் தன்னிடத்தேகொண்ட கொள்ளிவட்டமும் காலசக்கரமும் மின்னுந் தோற்கும்படி கடுகியவிசையிற்றூகி மாறுபாடுகொண்ட போரினைத் தானேவிழுங்குதற்கு ஓர்சிறகுதோற்றிப் பகலைக்கொண்டு பறப்பதோர்தேராயிருந்ததென்க.

அகில்கூறிற்று, நெய்யாலொளிமிகுத்தலின். வீதிக்குமின்னும், ஒழிந்தன வட்டத்திற்குமுவமை. (௬0௭)

காலற்றவயிரமாலைவெண்குடைகவிழ்ந்தபிச்ச
மேலற்றகவசம்வீழ்ந்தசாமரையற்றவின்ஞாண்
மாலுற்றமன்னர்தங்கண்மனங்கையற்றொழிந்தவள்ளல்
கோலொற்றக்குனிந்தவாறேசிலைகுனிந்தொழிந்ததன்றே.

வள்ளலென்றார், கடுகக்கொல்லாதே யவனை யஞ்சுவித்தலின்.

இ - ள். வள்ளல் கோலெடுத்தற்கு வில் ஒருகால்வளைந்தபடியே முழுக்க வளைந் தேநின்றது; அப்பொழுது மாலைவெண்குடைகள் காம்பற்றன; பிச்சம் கவிழ்ந்தன; கவசம் அற்றன; சாமரை வீழ்ந்தன; வில் நாணற்றன; இவைகண்டு மன்னர்மனம் செயலற்றுக் குறைந்தனவென்க. (௩0ரு)

நுங்களை வீணைவென்ற நூபுரவடியினுடன்
வெங்களித்தடங்கண்கண்டீர்விருந்தெதிர்கொண்மினென்று
வங்களியரசர்க்கெல்லாமோரொன்றுமிரண்டுமாகச்
செங்களிப்பகழியொப்பித்துள்ளவாறூட்டினானே.

இ - ள். இவை பகழியன்று; உங்களை யாழ்வென்ற தத்தையது கண்காணுங் கள், நீங்கள் விருந்தாய்வந்து இவற்றை யெதிர்கொண்மினென்றுகூறி அரசர்க்கெல் லாம் ஒன்றுமிரண்டுமாகப் பகழியை விழுக்காடிட்டுத் தரங்களிலே யழுத்தினா னென்க.

விருந்தென்றதற்கு ஊட்டியென்றார். இதனால் மனங்குறைந்தும் போகாது நின்றவர்க்கு அவள்கண்ணைப் பெறுமாறு இங்ஙனமல்லதில்லையென்றுகூறி அவனை நோவித்தபடி கூறினார். (௩0௬)

நன்மனவேந்தர் தங்கணகைமணிமார்பநக்கிப்
புன்மனவேந்தர் தங்கள்பொன்னணிகவசங்கீறி
யின்னுயிர்கவர்ந்துதீமையினிக்கொள்ளுமுடம்பினாலுந்
துன்னன்மினென்பவேபோற்சுடுசரம்பரந்தவன்றே.

தீமை - பிறர்மனைநயத்தல்.

இ - ள். நன்மனவேந்தர்தம் நகையாகிய பிறர்மனைநயத்தலை இனிக்கொள்ளு முடம்பிலுந் துன்னன்மினென்பனபோலச் சுடுசரங்கள் இப்புன்மனவேந்தருடைய கவசத்தைக்கீறி மணிமார்பைத்தீண்டி இன்னுயிரைக்கவர்ந்து பரந்தனவென்க.

குடிப்பிறந்து பழிநாணுவார்க்கு நகையென்றார். இதனால் நொந்தும் போகாத வர்களிலே சிலருயிரைப்போக்கினமை கூறினார். (௩0௭)

மீனெறிதூண்டில்போன்றவெஞ்சிலைநாண்களற்ற
தேனெறிகுன்றமொத்ததிண்கச்சைதுணிந்தவேழ
மானெறிகாட்டுந்திண்டேர்கயிறற்றுமறியவேந்த
ரூனெறியாழியேந்தியொய்யெனவுலம்பியார்த்தார்.

இ - ள். அவரேறினதேர்கள் கயிறற்றுமறியாநிற்க; அவரேறினவேழங்கள் கச் சை துணிந்தவை குன்றமொத்தன; அவர்கையில் நாணற்றசிலைகள் தூண்டில்போன் றன; இவைகண்டும் வேந்தர் பகைவர்மேலெறியும் ஆழியையேந்தி விரையமுழங்கி யார்த்தாரென்க.

ஊன்-ஆகுபெயர். இதனாற் படாதுநின்ற அவனை யஞ்சுவிக்க அவர் பின்னும் போர்குறித்தெழுந்தமை கூறினார். (௩0௮)

ஆர்ப்பெதிர்மாரிபெய்யுமணிநெடுங்குன்றம்போலப்
போர்க்கெதிர்ந்தவருமார்த்தாரார்த்ததும்பூண்டவல்விற்
கார்க்கெதிர்மேகம்போலக்கணைமழைகான்றதிப்பா
லீர்த்ததுகுருதிவெள்ளமிறைச்சிக்குன்றாக்கினானே.

இ - ள். மாரிபெய்யுங்குன்று எதிரொலியெழுமாறுபோல அரசராரவாரத்திற் கெதிரே சீவகன்படையிலுள்ளாருமார்த்தார், அங்ஙனம் இரண்டுமார்த்தவளவிலே சீவகனது கொலைத்தொழிலைப்பூண்ட வில் மேகத்தின்மழைபோல் அம்பைக்கான்றது; அதனாற்பிறந்தகுருதிவெள்ளம் முன்பு அற்றுவீழ்ந்தவற்றைக் களத்திற்குப் புறம்பேயிழுத்தது; முடிவில் அவனை யிறைச்சிக்குன்றாக்கி விட்டானென்க.

இதனால் அவர்படை பட்டபடி கூறினார். (கூ0க)

மன்னர்கள்வெகுண்டுவிட்ட மறப்படையழுவமாரி
கொன்னுனையெஃகினீக்கிக்குனிந்துவிற்பகழிகான்ற
மின்னவிரிலங்குமொள்வாள்விழித்துயிர்விழுங்கவின்ன
தன்மையாற்றானைநீந்தித்தான்விளையாடுகின்றான்.

இ - ள். அங்ஙனமார்த்தவரசர்விட்ட படையாகிய பெருமழையை இமையாதே விழித்துப்பார்த்து அம்பினெருக்கத்தாலே நீக்கி வில் குனிந்துகான்றபகழி வாள் இவையிரண்டுந் தானையினுயிரைவிழுங்கும்படி தான் இம்முறையாலே படைக்கடலை நீந்தி விளையாடாநின்றானென்க. (கூக0)

வேழவெண்கோட்டுமெல்கோறின்றுகூன்குருதிவாளா
லாழநாவழித்துநெய்த்தோர்கொப்புளித்தழிந்தமாவின்
சூழ்குடர்க்கண்ணிசூடிநிணத்துகிலுடுத்துவெள்ளென்
பூழ்பெறவணிந்துசூற்பேயாடக்கண்டுவந்துநக்கான்.

மெல்கோல் - வினைத்தொகை.

இ - ள். அங்ஙனம் விளையாடுகின்றவன், சூற்பேய்கள் கோடாகியகோலாலே பற்சிவிவளைந்தவாளாகிய நாவழியாலே நாவழித்துக் குருதியாகிய நீரைக்கொப்புளித்துக் குடராகியகண்ணியைச்சூடி நிணமாகிய துகிலையுடுத்து என்பாகியபூணை முறைபெறவணிந்து ஆடக்கண்டு நக்கானென்க. (கூகக)

வெளிற்றுடற்குருதிவெள்ளநிலையிதுவென்பவேபோற்
களிற்றுகிர்ப்பிறழ்பற்பேய்கள்கைகளையுச்சிக்கூப்பி
யளித்தவைபாடியாடக்குறுநரிநக்குவேழம்
விளித்தனகழுகும்பாறும்விலாவிற்றுக்கிடந்தவன்றே.

இ - ள். அவன் நக்கவளவிலே களிற்றுகிர்போலு முறைகுலைந்தபற்களையுடைய பேய்கள் அளிக்கத்தக்கவைபாடி யுதிரநீங்கினபிணத்தையுடைய குருதிப்பெருக்கை யிதுநிலையென்றுகாட்டுவனபோலே கைகளைத் தந்தலைமேலே கூப்பியாட, வேழங்களைத்தின்ற நரிகள் கூப்பிட்டவை அதனைக்கண்டு நக்குக் கூப்பிட்டாற்போன்றன; அதனைத்தின்று செருக்கிக்கிடந்த கழுகும்பாறும் அதற்குச்சிரித்து விலாமுறிந்துகிடந்தன போன்றனவென்க. (கூகஉ)

கடல்விளையமிர்தங்கண்டபோழ்தினெய்களிந்ததீஞ்சோற்
றடிசிலஞ்சுவைமிக்காங்குமண்ணலங்குமரனென்று
ருடலின்மேற்றிரியுந்திண்டேர்கண்டலுமைந்தர்நெஞ்சத்
திடல்பிளந்திட்டவெஃகஞ்சுமந்தமர்த்திறத்தின்மிக்கார்.

மிக்காங்கும், உம்மை - இசைநிறை.

இ - ள். உப்பினைக்கண்டகாலத்தில் அடிசில் ஒழிந்தசுவைகள் மிக்காற்போலப் பகைவருடலின்மேலே திரிகின்ற குமரன்றேரைக்கண்டவளவிலே தோழர் பகைவரது நெஞ்சாகியதிடலைப் பிளந்துபோகட்டவேலையெடுத்துப் போர்த்திறத்தே மிக்காரென்க.

இதனால் சீவகனைக்கண்டபின் றோழர்களிப்புமிக்கமை கூறினார். (௩௧௩)

கடாந்திறந்திட்டுவானிற்களகளமுழங்கும்வேழம்
படாந்திறந்தூழித்தீயிற்பதுமுகன்காட்டியிட்டான்
றடாம்பிறைமருப்புத்திண்கையபரகாத்திரங்கடம்மாற்
கொடாம்பிறகுமரிப்போருட்பிறர்க்கெனக்கொன்றதன்றே.

வரகாத்திரமென்பதனைத்தலையென்றும், அவரகாத்திரமென்பதனைக்காலென்றும் வடநூலார் கூறுவராதலிற், றேவர் அதனைச்சிதைத்து அபரகாத்திரமென்றார்; ஐராவதம்-ஐராபதமென்றாற்போல. எனவே அபரகாத்திரமென்றது கால்களை. இனிப் பின்கால் முன்காலென்பாருமுளர். பிற - இடைச்சொல்.

இ - ள். பதுமுகன் வான்போலக் கடாந்திறந்திட்டுக் களகளவென்னு மோசைபடமுழங்குகின்ற வேழத்தை ஊழித்தீப்போலக்கொண்டுவந்து காட்டினான்; அது வளைந்த பிறைபோலுமருப்புக் கை கால்களென்கின்றவற்றாலே தத்தைகாரணத்தாற் பிறந்த போரிற் பிறர்க்குக் கொலைத்தொழிலைக் கோடேமென்றுகொன்றதென்க.

கன்னிப்போருமாம். இக்கவிமுதற் றத்தையைக்காத்துநின்ற பதுமுகன் பகைவர் தலைசாய்ந்தமைகண்டு பொருகின்றமைகூறினார். (௩௧௪)

மருப்பினால்வேழம்வீழ்ச்சமன்னனைவாலிற்சீறி
முருக்கித்தேர்தடக்கைதன்னான்முழங்கிப்பாய்மாக்கள்காலி
னெரித்திடாக்கண்ணுட்டீயாற்சுட்டுநீறாக்கிநெய்த்தோ
ரொருக்குப்பேய்பாடியாடவுறுசிலையுடன்றுகொண்டான்.

இ-ள். அஃது எங்ஙனங்கொன்றதென்னின் மருப்பாலே வேழத்தைவீழ்த்து, வாலினான் மன்னனைச்சீறி, கையினாற் றேரைமுறித்து, காலான் மாவைநெரித்து, கண்ணிற் கோபத்தீயான் நெய்த்தோரை நீறாக்கிக்கொன்றது; அதன்கொலையோடே யவனுங் கொல்லக்கருதிப் பேய் பாடியாடும்படி சிலையை வாங்கிக்கொண்டானென்க. ()

வேறு.

க. கொண்டான்பகழிதொடுத்தான்சிலைகால்குனிந்த
தொண்டேர்மிசையுமுருவக்களிற்றுச்சிமேலும்

வண்டார்ப்புரவிநிறத்தும்மறமன்னர்மேலுங்
கண்டான்சொரிந்தான்கணைமாரிகலந்ததன்றே. (௬௧௬)

உ. பைம்பொற்புளகப்பருமக்களியானையீட்டஞ்
செய்பொன்னெடுந்தேர்த்தொகைமாக்கடற்றானைவெள்ள
நம்பன்சிலைவாய்நடக்குங்கணைமிச்சிலல்லா
லம்பொன்மணிப்பூணரசும்மிலையென்றுநக்கான்.

இவையிரண்டுமொருதொடர்.

கணைமாரி - *"மன்னர்கள்வெகுண்டு" என்னுங் கவியிற்கூறிய கணைமாரி. புளகம் - யானையின்பருமத்திற்றைத்த கண்ணுடி. மாக்கடல் - புரவிக்கடல்.

இ - ள். வில்லைக்கொண்டவன் அம்பைத்தொடுத்தான்; அப்பொழுது அது கால் வளைந்துகான்ற அவ்வம்பை மிசையிலும், உச்சிமேலும், நிறத்தும், மேலுமழுந்துவதாகச் சொரிந்தான்; அங்ஙனம் சொரிந்தவன் முன்பொருகின்ற சீவகன் வேறொரு முகத்தேநின்றெய்கின்ற கணைமாரிஇதனோடு கலந்ததனைக்கண்டான்; கண்டு இம்மாரியால் யானையீட்டந் தேர்த்தொகை கடல்வெள்ளமென்கின்றவையும் அரசும் நம்பன் கணைமிச்சிலல்லால் இல்லையாயிருந்தவென்று வியந்து யாம் இனி யெங்ஙனம்பொருவேமென்று கருதி நக்கானென்க.

இனி நான்குபடையிலுந் தான்சொரிந்தான் சொரிந்தபின்பு அவன் கணைமாரி முன்பேகலந்ததனைக்கண்டானென்றுமாம். இதற்கு முன்பே அம்பாற்குறைந்தபடை மேற்றைத்தஅம்பினைக் கையுணர்ந்ததென்க. (௬௧௭)

வேறு.

ஒருவனேசிலையுமொன்றேயுடையதோர்களிற்றின்மேலா
னருவரைமார்பிறசென்றதறிந்திலனெஃகமின்னும்
பொருவரோமன்னரென்றான்பொருசிலைமடக்கியிட்டார்
வருகளியானைமீட்டார்வாட்படைவாங்கிக்கொண்டார்.

இ - ள். இங்ஙனநக்கபதுமுகன் றன் றுணையுமிலன், தனக்குச்சேமவில்லுமில்லை, ஒருகளிற்றின் மேலான், இவன்றன் பகைவரெறிந்தவேல் மார்பிற்றைத்தது மறிந்திலன்; பின்னுமேற்சென்று மன்னர்பொருவரோவென்றிகழ்ந்தான்; இவன் நொந்தானென்று போர்செய்ய வாள்வாங்கிக்கொண்டமன்னரெல்லாம் இதுகேட்டு மேல்வருகின்றயானையை மீட்டார்; அதுகண்டு சீவகனுந் தோழருமினி இவனை யெய்யவேண்டுவதில்லையென்று தங்கையில்வில்லைமடக்கியிட்டாரென்க.

இன்னும் - எல்லாருங் கணைமிச்சிலாய பின்னும். (௬௧௮)

செங்கண்மாறெழிக்கப்பட்டவலம்புரித்துருவங்கொண்ட
சங்குவாய்வைத்துநம்பன்றெழித்தலுந்தறுகணுளி
பொங்கியமுழக்கின்வேழப்பேரினம்புலம்பினாற்போற்
றங்குதார்மன்னரெல்லாந்தளர்ந்துகண்சாம்பினாரே.

துருவம் - ஒப்பு.

---

* காந்தருவதத்தையாரிலம்பகம், ௬௧0

இ - ள். கண்ணன் பாரதப்போரிலே முழக்கினவலம்புரியின் ஒப்பைக்கொண்டசங்கை வாய்வைத்து நம்பன்முழக்கினனாக; அதுகேட்டு யாளிமுழக்கினாலே வேழத்திரள் வருந்தினாற்போல மன்னர்குறைந்துகண்ணொளிமழுங்கினரென்க.

அவரஞ்சினமைகண்டு சங்குவாய்வைத்தான். (௬கக)

அருவரைநாகஞ்சுற்றியாழியான்கடையவன்று
கருவரைகுடையப்பட்டகடலெனக்கலங்கிவேந்தர்
திருவரைமார்பன்றிண்டேர்மஞ்ஞையேமுருகன்முனென்
றொருவரோடொருவர்கூடாவண்ணமேயுடையலுற்றார்.

கருமை - பெருமை.

இ - ள். ஆழியான் மந்தரத்திலே பாம்பைச்சுற்றிக்கடைதலாலே அம்மலை கலக்கினகடலென்னும்படி வேந்தர்கலங்கி, மார்பன்றேர் மயிலேயென்றும், அவன் முன் முருகனேயென்றுங்கருதி, ஒருவரோடொருவர் கூடாததன்மையாலே கெடுதன்மிக்காரென்க.

அவன் பலகைகளாற் படைவழங்கினாற்போல விவனும் படைவழங்குதலாலும் வடிவாலுமுருகனே. (௬உ0)

முளிமரக்காடுமேய்ந்தமுழங்கழல்போன்றுமைந்தன்
றெளிநலக்குமரர்கூற்றிற்றெழித்தனர்பகழிசிந்தி
யொளிநலவுப்புக்குன்றமூர்புனற்குடைந்ததேபோற்
களிநலமன்னர்தங்கள்கடற்படையுடைந்ததன்றே.

இ - ள். காட்டைமேய்ந்தவழல்போலப் போரிற றெளிந்துநின்ற நலத்தையுடையமைந்தனுங் குமரரும் மன்னர்கெடுகின்றமைகண்டு கூற்றுப்போல வார்த்தார்; அதுகேட்டு அவர்படையுங் கையிலம்பையும்போகட்டு உப்புமலை ஓடுநீர்க்குடைந்தாற்போல வுடைந்ததென்க. (௬உக)

உறுபடைமன்னர்தம்மையுடற்றியொன்றானுமின்றிச்
சிறுபடையவர்கள்வென்றுசெகுப்பவோவென்னவெண்டா
செறியெயிற்றாளிவேழப்பேரினஞ்செகுத்ததன்றே
யுறுபுலியொன்றுதானேகலையினமுடற்றிற்றன்றே.

இ - ள். சிறுபடையாளர் மிக்கபடையினையுடைய வரசரை வருத்தித் தமக்கு ஓரேதமுமின்றி வென்று போக்குபவோ வென்று உலகத்தீர்! கருதவேண்டா; விலங்கேயாயினும் யாளி வேழத்திரளைக்கெடுத்ததன்றே! புலியொன்றுதானே கலைத்திரளைக் கெடுத்ததன்றே! இவற்றைக்கண்டு தெளிவீராகவென்றாரென்க.

பின்னிரண்டடியும் எடுத்துக்காட்டுவமை. இதுவுமேலிற்கவியும் உலகந்தேறுதற்குத் தேவர்கூறினார். (௬உஉ)

நல்லவைபுரியுமாந்தர்நாந்தகம்பிழைத்துவீழா
தல்லவைபுரியுமாந்தர்க்கத்திரமொன்றும்வாயா
வெல்வதேகுணத்தின்மிக்கார்வெற்றிலேவிடினும்வேலா
யில்லையேவென்றிதீமையிடங்கொண்டமனத்தினார்க்கே.

இருவர்க்கும் வெற்றிதோல்வியுளவாயகாரணங்கூறினர். அல்லவைபுரியுமாந்தர்க்கு நல்லவைபுரியுமாந்தர்-தமக்குத் தீங்குசெய்யவிரும்புவார்க்கு நன்மைசெய்ய விரும்புவார். என்றது: தத்தையை வலிதிற்கோடற்கு ஒருப்பட்டவர்க்குப் பதுமுகன் உறுதிகூறியதனை; அது "எம்மைநீர்வெல்லப்பெற்றீர்" என்னுங்கவி. குணத்தின்மிக்காரென்று நல்லவைபுரிவார்க்குவேறோர்பெயர்கூறினர்; அதுசுட்டு. தீமை-பிறர்மனைநயத்தல்.

இ - ள். ஒருவனையொருவர் வெல்லுந்தன்மையைக் கேட்கின்றீராயின், அல்லவைபுரிவார்க்கு நல்லவைபுரிவார் கையில்வாள் தப்பிவிழாது, அவர்க்கு அதுவுமிகை; வெற்றிவேலையையிடினும் அதுதான் வேலாய்விழும். தீமையிடங்கொண்டமனத்தினர்க்கு அத்திரம்பெறினுஞ் சிறிதும் பயன் கொடா; ஆதலால் அத்தீயோர்க்கு ஒருகாலும் வென்றியேயில்லையேன்றாரென்க.

இனி வேறும் பொருடருமேனும் அதற்கியைபின்று. (௯௨௯)

குழையுடைமுகத்தினள்கட்கோணைப்போர்செய்தமன்னர்
மழையிடைமின்னினேய்தாமறைந்தனர்விஞ்சைவேந்தர்
முழையிடைச்சிங்கமன்னன்மொய்யமரேத்தியார்த்தார்
விழவுடைவீதிமூதூர்விருப்பொடுமலிந்ததன்றே.

இ - ள். தத்தைகாரணமாக மாறுபாட்டையுடைய போரைச்செய்தமன்னர் மின்போலப் புக்கவிடமறியாமற் கடுகப்போனர்; மேகத்தினின்ற விச்சாதரர் சிங்கமன்னனமனா யேத்தியார்த்தார்; மூதூர் இவனைக் காண்டல்விருப்பத்தோடேமிக்கதென்க.

முழை - இல்லறம்பூண்டதற்குக்கூறிற்று. (௯௨௪)

பார்மிசையுலகமேத்தும்படுகளங்கண்டுபெற்றா
போர்முகக்களிற்றுவெண்கோடுழுதசெஞ்சால்கொண்மார்பிற்
சீர்முகத்தோழர்சூழச்சீவகன்றிருவின்சாயல்
வார்முகமுலையினாளைமனைவயிற்கொண்டுபுக்கான்.

இ - ள். சீவகன், யானைக்கோடுழுத சாலைக்கொண்ட மார்பிற்றோழர் சூழ்ந்து செல்லப் பாரில் உயர்ந்தோரேத்துங் களத்தைக்கண்டு வேள்விமுடித்துத் தத்தையைத் தன்மனையிலே கொண்டுபுக்கானென்க. (௯௨௫)

நெய்க்கிழிவைக்கப்பட்டார்நெய்ப்பத்தற்கிடத்தப்பட்டார்
புக்குழியெஃகநாடியிரும்பினாற்போழப்பட்டார்
மைக்கிழிந்தொழுகுங்கண்ணீர்மாநிலத்துகுக்கப்பட்டார்
கைக்கிழிகொடுக்கப்பட்டார்கலம்பலநல்கப்பட்டார்.

இ - ள். நெய்வைக்கப்பட்டாரும், கிடத்தப்பட்டாரும், எஃகம்புக்குழி நாடியிரும்பாலறுத்துவாங்கப்பட்டாரும் சீவகனாற் கலம்பல நல்கப்பட்டார்; சுற்றமழும்படி பட்டாரெல்லாருங் கைக்கிழிகொடுக்கப்பட்டாரென்க. (௯௨௬)

முதுமரப்பொந்துபோலமுழுமெய்யும்புண்களுற்றார்க்
கிதுமருந்தென்னநல்லாரிழுதுசேர்கவளம்வைத்துப்

பதுமுகன்பரவைமார்பினெய்க்கிழிபயிலச்சேர்த்தி
நுதிமயிர்த்துகிற்குப்பாயம்புகுகெனநோக்கினானே.

வைத்து - வைப்ப.

இ - ள். மரப்பொந்துபோலப் புண்ணுற்றார்க்கு மருத்துவர் இதுமருந்தென்று கவளம்வையாநிற்க, தான் பதுமுகன்மார்பிலே கிழியைச்சேர்த்திக் காற்றுப்படாதபடி யுள்ளே சீலையடைசின எலிமயிர்ப்படத்தாற்செய்த சட்டையிலே புகுகவென்றுகூறிப் பரிகரித்தானென்க.

நல்லானிழுதும் பாடம். (௬௨௭)

பார்கெழுபைம்பொன்றன்னாற்பன்னவனுருவமாக்கி
யூர்கெழுவிழவுசெய்தாங்குறுபொருளுவப்பநல்கித்
தார்கெழுமின்னுவீசித்தனிவடந்திளைக்குமார்பன்
போர்கெழுகளத்துப்பாவம்புலம்பொடுபோக்கினானே.

இ - ள். வடம் மின்னுவீசித் திளைக்குந் தார்கெழுமார்பன் பாரிற்பிறந்த பொன்னாலுருவமாக்கிச் செய்து தானமும்பண்ணிப் பாவத்தையும் புலம்பையும் போக்கினானென்க.

செற்றவர்ச்செகுத்தல் அறமேயாயினும், இவர் ஆதியாய பகையன்மையிற் பாவமென்றார். புலம்பு - என்னகாரியத்தைச்செய்தேமென்னுமவெறுப்பு. (௬௨அ)

செய்தவப்பாவமெல்லாந்தீர்த்திடுந்தீர்த்தன்பாத
மெய்தியசேடங்கூவித்திறைஞ்சுபுதொழுதுவாழ்த்தி
மையறுமணியிற்செய்தவலம்புரியதனீர்கொண்டான்
வையகமளிக்கநீண்டவலம்புரித்தடக்கையானே.

பலபிறப்பிற்செய்தபாவத்தைத் தீர்க்குந்தீர்த்தன். கூவுவித்து-விகாரம். வலம்புரி கையிற்கிடத்தல் உத்தமவிலக்கணம்.

இ - ள். தடக்கையான் தீர்த்தன்பாதமெய்திய சேடத்தையும் வலம்புரியசனிற் றீர்த்தநீரையுங் கூவுவித்துத் தொழுது துதித்து அவற்றைக்கொண்டானென்க.

வேறு.

கருமணியழுத்தியகாமர்செங்கதிர்த்
திருமணிச்செப்பெனச்செறிந்தவெம்முலை
யருமணியலம்வருமம்பொற்கொம்பனாள்
பெருமணக்கிழமையாம்பேசுகின்றதே.

இ - ள். நீலமணியையழுத்தின மாணிக்கச்செப்பெனச் செறிந்த, மணியலம் வருமுலையினையுடைய கொம்பனாளிடத்துச் சீவகற்கு முற்பட்டமணமாகின்றவுரிமை இனிக் கூறுகின்றதென்றாரென்க.

பெருமணமாங்கிழமையென்றுமாறுக. மேல் மணமாதற்குக் காரணமாகின்ற வுரிமையென்றது சமாவர்த்தநத்தை. (௬௩0)

நான்குநூறுயிரங்குடத்துநல்லன
வான்மயிர்பானெயோடழுகிதாநிறைத்
தூன்றிகழ்வேலினன்வேள்விக்கூர்மருள்
கோன்றொறுக்காவலன்கொண்டுமுன்னினன்.

இதுமுதல் சமாவர்த்தநம் நடவாநிற்கப் பச்சைபுகுந்தபடி கூறுகின்றார்.

இ - ள். இடையனுகியதொறுக்காவலன் வேலினனது ஊர்மருள்வேள்விக்குக் குடத்திலே தயிரும் பாலும் நெய்யுநிறைத்துக் கொண்டு முன்னினனென்க.

இனி இழந்தேமென்றூரார்மருளுஞ் சச்சந்தன்றொறுக்காவலனுமாம். (௬௧)

வளைநிறவார்செநெலரிசிப்பண்டியோ
டளவறுசருக்கரைப்பண்டியார்ந்தன
பிளவியல்பயறுபெய்பண்டியுப்புநீர்
விளைவமைபண்டியின்வெறுத்ததாங்கொர்பால்.

நீர்விளைவமையுப்பு.

இ - ள். சங்குநிறத்தையுடைய அரிசிப்பண்டியும், சருக்கரைபபணடியுநிறைந் தன; பருப்புப்பெய்தபண்டியும் உப்பமைந்தபண்டியோடே செறிந்தது; அம்மனையி லொருபக்கமெல்லாமென்க. (௬௨)

சினைத்துணர்முழவனபலவின்றீங்கனி
கனைத்துவண்டுழல்வனவாழைமாங்கனி
யெனைத்துளகிழங்குகாய்குருகொடேந்திய
சனத்திறைற்றகைத்திடம்பெறுதுதானொபால்.

இ - ள். பலவின்சினையிற் கொத்தினையுடைய முழவன்னகனியுஞ் செறிந்து வண்டுழல்வனவாகிய வாழைக்கனியும் மாங்கனியுங் கிழங்குங் காயுங் குருகும் எவ்வ ளவுள அவ்வளவெல்லாமேந்திய சனங்களாலேநெருங்கி யொருபக்கந்தான் இடம் பெறுதென்க. (௬௩)

மரகதமணிப்பசுங்காய்கொள்வான்குலை
கவர்பழுக்காய்க்குலைகனியக்காவுறீஇ
யிலைதருமெல்லிலைக்காவுமேந்திய
வுவரியாய்ச்சொரிந்திடம்பெறுதுதானொபால்.

இ - ள். பசுங்காய்க்குலையையும் பழுக்காய்க்குலையையும் பரத்தலைத்தரும வெற்றிலைப்படலிகையையும் முற்றக்காவிவந்து சொரிதலாலே வெள்ளமாய் ஒருபக் கந்தான் இடம்பெறுதென்க.

ஏந்திய - உயர்ந்த; வேண்டியவும் பாடம். (௬௪)

சண்பகந்தமகந்தமாலமல்லிகை
தண்கழுநீரொடுகுவளைதாமரை
வண்டினமிசைகொளவாசப்பூச்சுமை
கொண்டவர்குழாம்பொலிவுற்றதாங்கோர்பால்.

இ - ள். சண்பகமுந் தமாலக்கொழுந்தும் பச்சிலையும் மல்லிகையுங் கழுநீருங் குவளையுந் தாமரையுமாகியவாசப்பூச்சுமையை வண்டினம் மேலேமொய்க்கக் கொண்டவாதிரள் அவ்விடத்தொருபக்கம் பொலிவுற்றதென்க. (௬௬௫)

ஆர்கெழுகுறடுசூட்டாழிபோன்றவன்
சீர்கெழுவளமனைதிளைந்துமாசனங்
கார்கெழுகடலெனக்கலந்தவல்லதூஉம்
பார்கெழுபழுமரப்பறவையொத்தவே.

அச்சுக்கோக்குங்குறடு மாளிகைக்கும், நடுவுபோக்குமார் அத்தெருவுகளுக்கும், விளிம்பிற்சூட்டு மதிலுக்குமுவமை.

இ - ள். அவனுடையவூரைபோன்று சீர்கெழுமின வளமனையிலே மாசன நெருங்கி யொலியாற்கடலெனக்கலந்தன; அஃதொழிந்தும் அம்மாசனம் பயன்கொள்ளு முறைமையாற் பழுமரத்திற் பறவையுமொத்தவென்க.

மனையைச்சூழப் பச்சைநிரைத்தலின், ஆழிபோன்றென்றுமாம். (௬௬௬)

௧. கையுறையெழுநினர்கைந்நொந்தேடறுத்
தையெனவிருப்பமற்றன்னதாதலான்
வையகமருங்கினின்வாழ்நர்மற்றிவன்
செய்தவநமக்கிசைகென்னச்சென்றதே. (௬௬௭)

௨. வாலரிகழுவியவண்ணச்செம்புனல்
காலியலிவுளியுங்களிறுமாழ்ந்தவட்
கோலநீர்க்குவளையுமரையும்பூத்துவண
டாலிவண்குருகுபாய்தடங்களானவே. (௬௬௮)

௩. உடுப்பனதுகில்களுமுணாக்குநானமுந்
தொடுத்தனமாலையுங்குழையுஞ்சாந்தமுங்
கொடுப்பவர்கொள்பவர்வீழ்த்தபல்கல
மடுத்துவிண்பூத்ததோரழகின்மிக்கதே. (௬௬௯)

௪. கலங்கழுமரவமுங்கருனையாக்குவார்
சிலம்பொலியரவமுமிச்சில்சீப்பவ
ரிலங்குபொற்கிண்கிணியிரங்குமோசையு
முலம்புமாலுவர்க்கடலொலியின்மிக்கவே.

இவைநான்குமொருதொடர்.

௧. மற்று - அசை. மற்றிவன்செய்தவம்-வேறாகவிவன்செய்கின்றசமாவர்த்தனம்; விரதங்கோடலிற் றவமென்றார்.

௨. வாலரி, வாலசி இரண்டொடும் விகாரம். ஆழ்ந்து - ஆழ.

௩. உடுப்பன, தொடுத்தனவென்பனவற்றிற்கு ஆகியவெனவிரிக்க. அடுத்து- நெருங்கி.

௪. உலம்பு - கடற்கு அடை.

இ - ள். வந்தபச்சையெழுதி முதலிட்டவர்கள் கைநொந்து பட்டோலைகளைக் கிழித்து ஐயெனவிளைப்பாறியிருப்பார்கள்; பச்சை அங்ஙன மிகுதலின், அதற்கேற்பச் சோறுசமைத்தற்கு அரிசிகழுவியகழுநீர் இவுளியுங் களிறுமழுந்தும்படி குவளையுந் தாமரையும்பூத்து வண்டொலிக்கப்பட்டுக் குருகுபாயுந்தடங்களாயின; அங்ஙனஞ் சோறு மிகச்சமைத்தபின்பு கருனையாக்குவார் சிலம்பொலியினரவமும் உண்டற்குக் கலங்கழுவுகின்றவரவமும் எச்சில்சீப்பார்கிண்கிணியிரங்குமோசையுங் கடலொலியினுமிக்கன; இங்ஙனமுண்டபின்பு துகிலு நானமு மாலையுங் குழையுஞ் சந்தனமும் அடுத்துக்கொடுப்பார்வாங்குவார் வீழ்த்தகலம் விண் மீனைப்பூத்ததோரழகினு மிக்கது; இங்ஙனநிகழாநிற்க இவன்செய்கின்ற சமாவர்த்தநம் உலகில்வாழ்வாரெல்லாம் நமக்கும் இது கூடுவதாகவென்று கருதும்படி நடந்ததென்க. (௬௪0)

வேறு.

மூழிவாய்முல்லைமாலைமுருகுலாங்குழலினளு
மூழிவாய்த்தீயொடொக்குமொளிறுவாட்டடக்கையானு
மாழிவாய்விரலிற்காமனம்பொடுசிலைகையேந்தத்
தாழிவாய்க்குவளைவாட்கட்டையலார்பரவச்சார்ந்தார்.

மூழி வாய் - பூவிடுபெட்டி. ஆழி - மோதிரம்; விரற்சரடுமாம்.

இ - ள். குழலினளுந் தடக்கையானுங் காமன் அம்போடுசிலையைக் கைவிரலாலேந்தாநிற்கத் தையலார்பரவாநிற்க ஓராசனத்தே சேரவிருந்தாரென்க. (௬௪௧)

இன்னியமுழங்கியார்ப்பவீண்டெரிதிகழவேதந்
துன்னினர்பலாசிற்செய்ததுடுப்பினெய்சொரிந்துவேட்ப
மின்னியல்கலசநன்னீர்சொரிந்தனன்வீரனேற்றான்
முன்னுபுவிளங்குவெள்ளிமுளைத்தெழுமுருகனன்னான்.

துன்னினர் - தனக்குச்செறிந்தவந்தணர். மின்னியல் - ஒளிவிடுகின்ற.

இ - ள். முருகனன்னான் இன்னியமாராநிற்க முன்னுநின்று, துன்னினர் பலாசாற்செய்ததுடுப்பின் நெய்யை மிக்கெழுகின்ற தீவளரும்படி வேதமந்திரத்தாற்றான்சொரிந்து ஓமம்பண்ணாநிற்க, வெள்ளிமுளைத்தவளவிலே ஸ்ரீதத்தன் நீரைச்சொரிந்தான்; அப்பொழுது இவனும் அதனையேற்றானென்க.

அரசர்க்கும்வணிகர்க்கும் மந்திரத்திலுந் தந்திரத்திலுஞ் சிறிதுவேறுபாடுளதேனுந் தான் இரண்டுகுலத்திற்குமுரிய சடங்குநிகழ்த்துதற்குரியனாதலிற் பிறர்க்குத் தெரியாமற் றன்குலத்திற்கேற்ற சடங்கு தானேநிகழ்த்தினனென்பதூஉம், பிறர்க்குத் தெரியுமவற்றிற்குப் பிராயச்சித்தத்தைக் கருதினனென்பதூஉந்தோன்ற முன்னுபு என்றார். முன்னுதல் - கருதுதல். (௬௪௨)

இட்டவுத்தரியமின்னுமெரிமணிப்பருமுத்தார
மட்டவிழ்கோதைவெய்யவருமுலைதாங்கலாற்றா
நெட்டிருங்குழலினாடனேர்வளைமுன்கைபற்றிக்
கட்டழல்வலங்கொண்டாய்பொற்கட்டிலேறினானே.

நெட்டிருங்குழல் - நெடு பண்புதொகுமொழியாதலிற் புணர்க்கப்படாதாயிற்று. நேர்வளை - ஒத்தவளை.

இ - ள். உத்தரீயமுதலியவற்றைச் சுமத்தலாற்றாத தத்தையது முன்கையைத் தான்பற்றி யழலைவலங்கொண்டு கட்டிலிலேயேறினானென்க. (௩௪௩)

மந்திரத்தரசன்காதன்மாதரம்பாவைதன்னைக்
கந்துகன்சிறுவன்வேட்டகடிவினைநொடியின்மற்றோ
ரந்தரவிசும்பிற்றேவர்க்கதிபதியாயகோமா
னிந்திரன்றனக்குமாகாதென்பதுநடந்ததன்றே.

அந்தரவிசும்பில் - விசும்பாகியவந்தரத்தில்; நடுவாகிய விசும்புமாம்.

இ - ள். கலுழவேகன்மகளைக் கந்துகன்மகன் வேட்ட மணவினையைக்கூறின் இந்திரனுக்குங் கூடாதென்று கூறுகின்றகூற்று நடந்ததென்க. (௩௪௪)

அடிமனைபவளமாகவரும்பொனாலலகுசேர்த்தி
முடிமணியழுத்திச்செய்தமூரிக்காழ்நெற்றிமூழ்கக்
கடிமலர்மாலைநாற்றிக்கம்பலவிதானங்கோலி
யிடுபுகைமஞ்சிற்சூழமணவறையியற்றினாரே.

இ - ள். சுற்றுச்சுவர் பவளப்பலகையானிறைத்துத் தலையிலே மணியழுத்திப்பண்ணின தூணைநாட்டி அதன்மேலே பொன்னாற்செய்த கையலகைச்சேர்த்தி அத்தூணினெற்றிமறையும்படி படாமாகியமேற்கட்டியைக்கட்டி மாலையைநாற்றிப் புகை மஞ்சுபோலேசூழ மணவறையையியற்றினாரென்க. (௩௪௫)

ஐந்துமூன்றடுத்தசெல்வத்தமளிமூன்றியற்றிப்பூம்பட்
டெந்திரவெழினிவாங்கியின்முகவாசச்செப்புஞ்
சந்தனச்சாந்தச்செப்புந்தண்மலர்மாலைபெய்த
விந்திரநீலச்செப்புமிளையவரேந்தினாரே.

ஐந்தாயவொன்று மும்மூன்றாகப்படுத்த. ஐந்தாவன: "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேண - மறுதூவி சையையோ டைந்து." இருவருந்துயில்கோடற்கிரண்டும் போகநுகர்தற்கொன்றும் வேண்டுதலின், அமளிமூன்றாயின. இனிமுகவாசமாவன "தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கங் - கற்பூரஞ் சாதியோ டைந்து." இவற்றோடு சருக்கரையுந் தேனுங்கூட்டுப. இது முதற்கவுட்கொண்டு பின்பு பாகுகவுட் கொள்ளவேண்டுதலின், வாசச்செப்பென்றபெயர் சிறப்பினாற்பெற்றபெயர்.

இ - ள். இளையவர் இயற்றி மசகவரியையவளைத்துச் செப்புக்களை யேந்தினாரென்க. (௩௪௬)

க. கடைந்துபெய்மணிக்கைச்செம்பொற்காசறுதட்டிற்சூழ்ந்து
மிடைந்துபெய்மணிக்கட்பீலிமின்னுசாந்தாற்றிபொன்னு
ரடைந்துவீசாலவட்டமரிவையரேந்தியாற்றத்
தடங்கண்கள்குவளைபூப்பத்தையலோடாடுமன்றே. (௬௪௭)

உ. பஞ்சுசூழ்பரவையல்குற்பசுங்கதிர்க்கலாபம்வீங்கச்
செஞ்தளிர்க்கோதைசோரக்கிண்கிணிசிலம்பேங்க
மைந்தருட்காமனன்னான்மகளிருட்டிருவனானை
யந்தரத்தமரர்பெற்றவமிர்தெனப்பருகினானே. (௬௪௮)

௩. இளமுலைமணிக்கண்சேப்பவெழுதுவிற்புருவமேறக்
கிளைநரம்பனையதீஞ்சொற்பவளவாய்திகழத்தேன்சோர
வளமலர்க்கோதைதன்னைவாய்விடான்குழையப்புல்லி
யளமரலிலாதவின்பக்கடலகத்தழுந்தினானே.

இவைமூன்றுமொருதொடர்.

கடைந்திட்டமணிக்கையினையுஞ் செம்பொற்றட்டினையுந் தன்னைச்சூழ்ந்து மிடையப்பெய்த பீலியையுமுடைய சாந்தாற்றி - சிற்றாலவட்டம். ஆடும் - புணரும். பஞ்சு - ஆகுபெயர். வீங்க - இன்பமிகுதியால் உடம்புபூரித்தலிற் கலாபமிறுக. மகளிரிடத்துக் கண்டார்விரும்பப்படுந் தன்மையைப் போல்வானை; *திருவளர் தாமரை'' போல. பருகுதல்-ஈண்டதரபானமுமல்குற்பானமும். எழுதினாலொத்த விற்போன்றபுருவம். தேன்சோர்கோதையென்று காமச்செவ்விகூறினார். அளமரல் - அலமரல்.

இ - ள். அங்ஙனம் இளையவரேந்திய நுப்புரவுகளை நுகர்ந்து, காமனன்னான், திருவன்னானை இளமுலைமணிக்கண்சிவப்பக் குழையப்புல்லி, அக்கோதைதன்னைக் கிளையென்னுநரம்புபோலுஞ்சொல்லையுடைய பவளவாய்திகழ வல்குலிற்கலாபம் வீங்க, அவ்விரண்டினையும்வாய்விடானாய் அமிர்தெனப்பருகினான்; அங்ஙனம்பருகி, அத்தையலோடே கோதைசோர ஏங்கப் புருவமேறக் கண்கள் குவளைபூப்பஆடும்; அங்ஙனமாடுதலிற்பிறந்த வியர்நீங்கும்படி சாந்தாற்றியையும் பொன்னாராலவட்டத்தையும் அரிவையரேந்தித் தம்மையடைந்தாற்றும்படி இன்பக்கடலகத்தேயழுந்தினானென்க.

புணர்ச்சியிறுதிக்கண் அவசத்தான் முலையிடைத்துயிலுந்துயிலை இன்பக்கடலென்றார். இனிக் கரணவிசேடமாக்கிச் செவ்வனே பொருளுரைப்பாருமுளர்; அது பொருந்துமேனுமுணர்க. (௬௪௯)

இன்னணமொழுகுநாளுளிளமரக்காவுகாண்பான்
பொன்னணிமார்பன்சென்றுபுகுதலுமொருவன்றோன்றித்
துன்னியோரோலைநீட்டித்தொழுதனன்பெயர்ந்துநிற்ப
மன்னியகுரிசில்கொண்டுமரபினானோக்குகின்றான்.

* திருச்சிற்றம்பலக்கோவையார், க.

இ - ள். இவ்வாறு நடக்கின்றநாளிலே திருத்தங்கியமார்பன் பொழிலைக் காணவேண்டிச் சென்றுபுகுந்தானாக, ஒரு விச்சாதரன்றோன்றி யணுகி யோலையை நீட்டித் தொழுதனனாய் மீண்டுபோயிற்க, அவன் அதனைவாங்கிக்கொண்டு வழி பாட்டோடே வாசியாநின்றானென்க. (கூ௰)

வேறு.

உருமுக்கதிர்வேற்கலுழனோலையுலகென்னும்
பருமைக்குருப்பளிங்கிற்புகழ்ப்பஞ்சிமுழுதடுத்த
திருமிக்குடைச்செல்வன்றிறற்சாமிகனிகாண்க
வருமையறனின்பம்பொருளாகெனவிடுத்தேன்.

உருமுப்போன்றவேல். உலகென்னும்பளிங்கிலே புகழாகியபஞ்சி யோரிடமு மொழியாமற் பரந்த இச்செல்வத்தினை முற்பிறப்பிற் றவமிகுதியாலே யுடையனாகிய செல்வன்.

இ - ள். கலுழனோலை செல்வனாகியசாமி காண்பானாக. இது வரவிட்டேன், அறமு மின்பமும் பொருளுந் தனக்கின்னும் மிகவுண்டாகவேண்டுமென்று கருதி யென்க.

தேவனாதலிற் கூறினான் விடுத்தேன் - விகாரம். (கூ௧)

தத்தையொடுவீணைமன்னர்தாம்பொருதுதோற்ப
மொய்த்தகலைநம்பிமுகிழ்முலையையிசைவெல்ல
வைத்தகதிர்வேலின்வலியாற்குரியளென்னச்
சித்தங்கரிந்தாங்குக்கொடியான்செருவிளைத்தான்

இ - ள். மன்னர்தாந் தத்தையோடே வீணையாற்பொருது தோற்கத் தான் அவளை யிசையாலே வெல்லக் கட்டியங்காரன் அதுபொறாதே சித்தங்கரிந்து வேலாற்போர்செய்து வென்றார்க்கு இவளுரியளெனச்சொல்லி யவ்விடத்தே யொரு போரைவிளைத்தானென்க.

வையெனக் குறிப்புணர்நின்ற வுரிச்சொல் வைத்தவென வினைமேற் றன் மெய்தமொழிற்று. முண்முனைபோலக் கூர்த்த வேலென்க. (கூ௨)

தேன்முழங்குதார்க்குரிசில்செம்பொனெடுந்தேர்மேல்
வான்முழங்குவெஞ்சிலையின்வாளிமழைதூவி
யூன்முழங்குவெங்குருதிவேழமுடனாழ்க
வேன்முழங்குதானைவிளையாடியதுங்கேட்டேன்.

இ - ள். அவன் விளைத்தபொழுதிலே குரிசில் தேர்மேலேநின்று சிலையாகிய மேகத்தாலே யம்பாகியமழையைத் தூவுதலாலே யுடம்பிற்றோன்றிய குருதியாகிய வெள்ளத்திலே வேழங்கள் சேரவழுந்தும்படி தானையோடேநின்று விளையாடியது வுந் தான்கூறக்கேட்டேனென்க.

தூவி - தூவ. சிலையென்வாளியும் பாடம். (கூ௩)

வந்துதரன்கூறியவிவ்வாய்மொழியுமன்றி
முந்துவரன்மொழிந்தபொருண்முற்றும்வகைநாடிப்
பந்துபுடைபாணியெனப்பாயுங்கலிமான்றே
ரெந்தைதிறமுன்னமுணர்ந்தின்னணம்விடுத்தேன்.

வாய்மொழியென்றார், நிமித்திகன் கூறக்கேட்டிருந்தகாரியம் இப்பொழுது முற்றினசெய்தியைத் தரன்கூறுதலின். வரன் - அச்சணந்தியடிகள்.

இ - ள். எந்தைதிறத்தில் அத்தரன்கூறியமொழியும், அன்றி வரன்மொழிந்த காரியமும, முடியுங்கூறுபாட்டையும் முன்பேகுறிப்பாலேநாடியுணர்ந்து இனி யாஞ் சேறல் கருமமன்றென்று கருதித் தத்தையை ஸ்ரீதத்தனுடனே வரவிட்டே னென்க.

கலுழவேகன்வந்தாற் சீவகசரிதையொன்றுமின்றும். (௬௫௪)

எள்ளுநர்களாசாயவெனதோளிரண்டுநோக்கி
வெள்ளிமலைமுழுதுங்கொடியெடுத்ததிகலேததிக்
கள்செய்மலர்மார்பனுறுகாப்பிகழ்தலின்றி
யுள்ளுபொருளொம்முணர்த்தியன்றியுளவேண்டா.

இ - ள். என்னுடைய தோளிரணடையுநோக்கி யிகழ்ந்திருக்கும் பகைவர் சாயும்படி தான்பொருதபோரையேத்தி மலைமுழுதுங்கொடியெடுத்ததாதலாற் றனது வெற்றியுந்தோல்வியு மெனவேயாதலின், இனி மலர்மார்பன் மிக்ககாவலை யிகழ்த லின்றித் தானினைத்திருக்கின்றகாரியங்களும எம்மையறிவித்தல்லது மேனினைக்க வும்வேண்டாவென்க. (௬௫௫)

ஆம்பொருள்களாகுமதுயார்க்குமழிக்கொண்ணுப்
போம்பொருள்கள்போகுமதுபொறியின்வகைவண்ணந்
தேம்புனலைநீர்க்கடலுஞ்சென்றுதரலின்றே
வீங்குபுனல்யாறுமழைவேண்டியறியாதே.

அதுவென்றொருமையாற்சுட்டினார், அழிக்கவொண்ணாத்தன்மையைக்கூறலின். ஆம்பொருள்களாகும் போம்பொருள்கள்போகும்; அவையிரண்டும் யார்க்குமழித் தலாகாத்தன்மை யிருவினையின்கூறாகியவியல்பு. அங்ஙனமாதலிற் றானுங் கட்டி டியங்காரனுக்கத்திற்குஞ் சச்சந்தனழிவிற்கும் வருந்தாதொழிகவென்க. தேம்பு னலை நீர்க்கடலுஞ்சென்றுதரலின்று - உப்புநீரையுடையகடலும் உலகத்தேவந்து இனியநீரைத்தருதல் ஒருகாலத்துமில்லை. என்றது: தீயகுணத்தையுடையோர் பிறர்க்கு இனிமைசெய்யவறியாரென்றவாறு. எனவே கட்டியங்காரன் எக்காலமு நமக்குத் தீங்குசெய்வனென்றும், இககுணத்தாலவனுக்குக் கேடெய்திலையுமென்றுங் கூறினன். *"யார்கண்ணு மிகந்துசெய் திசைகெட்டா னிறுதிபோல் - வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலின்" என்றார் பிறரும். வீங்குபுனல்யாறுமழை வேண்டியறியாது - மேகம் யாற்றுக்கு மிக்கநீரைக் கொடுக்க விரும்பியறியாது;

* கலித்தொகை, முதலாவதுபாலை, ௪0.

என்றது : உவர்த்தநீரை நன்னீராக்கி யாற்றிற்குக் கொடுப்பேனென்னுங்கருத்தின்மை மேகத்திற்கியல்பென்றவாறு. எனவே நற்குணமுடையோர் எக்காலத்தும் பிறர்க் கினிமைசெய்வாராதலிற் றான் எக்காலத்தும் பிறர்க்கு இனியவைசெய்கவென் றானும்.

இ - ள். அழிக்கொண்ணாது அது பொறியின்வகைவண்ணம்; அதுவேயுமன் றிக் கடலுந் தரவின்று; மழையும் வேண்டியதறியாதென்று வாசித்தானென்க.

இனி "எள்ளுநர்கள்" என்னுங்கவியளவும் ஓலைப்பாசுரமாக்கி, அதுகேட்ட சீவகன்கூறுகின்றானுக்குவாருமுளர். இதற்கு இகலேத்திக் கொடியெடுத்ததென்று அவன்வியந்ததற்குத் தான்வென்றானைக்கூறாது ஆக்கமுங்கேடும் பொறியின்வகை யென்றானுக்குக; ஆக்கத்திற்குமழிவிற்கும் ஆற்றிலேயுவமைகொள்க; கடல்வேண் டாதிருக்கப் புனல் தானேபோனது போம்பொருட்கும், யாறு மேகத்தைவேண் டாதிருக்கப் புனறானேநிறைகை ஆம்பொருட்குமுவமை. சென்றுதால் - போய்க் கொண்டுவருதல். (௯௬௬)

மன்பெரியமாமனடி மகிழ்ந்துதிசைவணங்கி
யன்பினகலாதவனை விடுத்தலர்ந்தகோதைக்
கின்பநிலத்தியன்றபொருளிவையிவைநுங்கோமான்
றந்தவெனச்சொல்லிநனிசாமிகொடுத்தானே.

இ - ள். சாமி மிகப்பெரியமாமனடியைத் திசைநோக்கிவணங்கி அன்பினால் நீங்காதுநின்றதரனைப்போகவிட்டுத் தத்தைக்கு நுங்கோமான்றந்த இன்பநிலத்திற்கு நனியியன்றபொருள் இவையிவையெனச்சொல்லிக் கொடுத்தானென்க.

இன்பநிலம் - அனுபவிக்குந்துறைகள். அடிவீழ்ந்தும் பாடம். (௯௬௭)

குங்குமமுஞ்சந்தனமுங்கூட்டியிடுகொடியா
வெங்கணிளமுலையின்மிசையெழுதிவிளையாடிக்
கொங்குண்மலர்க்கோதையொடுகுரிசில்செலும்வழிநா
ளங்கணகர்ப்பட்டபொருளாகியதுமொழிவாம்.

இ - ள். குரிசில் கோதையுடையமுலைமேலே யெழுதுகொடியாகவெழுதி; அவளோடேவிளையாடிச் செல்லும்பின்னாட்களிலே நகரியிற்பிறந்த நீர்விளையாட்டும், பிள்ளையாரிடத்தாகியதன்மையு மினிக் கூறுவேமென்றாரென்க.

என்றது - அதுகாரணத்தாற் பிள்ளையாரிடத்துப் பிறந்தசெய்திகளை. பொருளா கியதென்பது ஒருசொல்லுமாம். (௯௬௮)

காந்தருவதத்தையாரிலம்பக முற்றிற்று.

ஆ கவி ௮௬0

நான்காவது

# குணமாலையாரிலம்பகம்.

காசறுதுறவின்மிக்ககடவுளார்சிந்தைபோல
மாசறுவிசும்பின்வெய்யோன்வடதிசையயணமுன்னி
யாசறநடக்குநாளுளலங்கணைக்கிழவன்வைகிப்
பாசறைப்பரிவுதீர்க்கும்பங்குனிப்பருவஞ்செய்தான்.

அயனமென்பது அயணமெனப் பாகதத்தாற்கூறினார், செய்யுட்சொல்லென்று. வைகி - வைக. கூதிர்தொடங்கிப் பாடிவீட்டிலிருந்து இளவேனிற்கண் இன்ப நுகர்தற்கு மீள்வாராதலிற் பாசறைப்பரிவுதீர்க்குமென்றார்.

இ - ள். வெய்யோன், வடதிசைச்செலவைக்கருதி யிருடிகள்சிந்தைபோல மாசற்றவிசும்பிலே குற்றமறநடக்குநாள்களிற் பின்பனிநீங்கும் பங்குனித்திங்களிலே காமன்றங்கும்படி யிளவேனிலைப்பிறப்பித்தானென்க.

*"தலைவந்திளவேனில்" என முன் னிகழ்கின்றதாகக்கூறியகாலத்தே யீண்டு நீர்விளையாட்டுநிகழ்கின்றதென்பார் அக்காலத்தைச்சிறப்பித்துக்கூறுகின்றார். (க)

தோடணிமகளிர்போன்றதுணைமலர்க்கொம்பர்கொம்பி
னாடவர்போலவண்டுமடைந்தனவளியிற்கொல்கி
யூடியமகளிர்போலவொசிந்தனவூடறீர்க்குஞ்
சேடரிற்சென்றுபுல்லிச்சிறுபுறந்தழீஇயதும்பி.

இ - ள். பூவையணிந்தமகளிரையொத்த கொம்பு; அவரிடத்து ஆடவரடையு மாறுபோல அக்கொம்புகளிலேவண்டுசேருமடைந்தன; அவ்வாடவரிடத்தொல்கியூடியமகளிரைப்போலே அவ்வண்டினக்கணத்திற்கு அக்கொம்புகள் ஒருபக்கத்தேதாழ்ந்தன; அவர்சிறுபுறத்தைத்தழுவி யூடலைத்தீர்த்து எதிர்முகமாக்கும்பெரியோரைப் போலத் தும்பிகள்சென்று அங்ஙனமுயர்ந்த சிறுபுறத்தைத்தழுவி ஒக்கநிறுத்தின வென்க.

சிறுபுறம் - உயர்ந்தபக்கம். †"சொல்லியகிளவி யறிவார்க்குரிய" என்றலின், அறிவிற்பெரியோரைச் சேடரென்றார் அளியிற்கு - பிறர்க்கும் இவ்வாறரு ளுளதாமென்று புலவிநுணுக்கங்கூறிற்றுமாம். (உ)

வேறு.

நானமண்ணியநன்மணமங்கையர்
மேனிபோற்றிணிதாய்வினைநாறிய

* தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், கரு.

† காந்தருவதத்தையாரிலம்பகம், கருரு.

கானநகாழகமலகமழகணணய
வேனிலாற்குவிருந்தெதிர்கொண்டதே.

இ-ள். அங்ஙனம்பூத்தலின் மணஞ்செய்த மகளிர்மேனிபோல் இனிதாய் விளைநாறியகானம் அக்காமனுக்கு விருந்திடுதலை மேற்கொண்டதென்க. (௩)

கொம்பரின்குயில்கூய்க்குடைவாவியுட்
டும்பிவண்டொடுதூவழியாழ்செய
வெம்புவேட்கைவிரும்பியவேனில்வந்
தும்பர்நீடுறக்கத்தியல்பொத்ததே.

இ-ள். கொம்பிலே குயில்கூவ எல்லாருங் குடைந்துவிளையாடும்வாவியிலே தும்பியும்வண்டுந் தூவழியென்கின்ற பண்ணையுடைய யாழைக்காட்ட எரிகின்ற காமத்தைவிரும்புதற்குக் காரணமான வேனில்வருதலாலே நகரிமேலாகிய துறக்கத்தின்றன்மையை யொத்ததென்க.

கூய் - கூவ. (௪)

நாகநாண்மலர்நாறுகடிநக
ரேகவின்பத்திராசபுரத்தவர்
மாகநந்துமணங்கமழ்யாற்றயற்
போகமேவினர்பூமரக்காவினே.

இ-ள். இணையிலாவின்பத்தையுடைய நகராகிய இராசமாபுரத்தார் யாற்றயலின் மாகநந்திய மணங்கமழ்பூமரக்காவிற் போகத்தை மனத்தாலே பொருந்தினரென்க.

பொழிலுள் நுகர்ச்சியை முன்புகருதிப் பின்பு நீர்விளையாடக்கருதுகின்றமை கூறுகின்றார். (௫)

முழவங்கண்டுயிலாதமுதுநகர்
விழவுநீர்விளையாட்டுவிருப்பினாற்
றொழுவிற்றோன்றியதோமறுகேவலக்
கிழவன்மூதெயில்போற்கிளர்வுற்றதே.

இ-ள். இல்வாழ்க்கையாலுண்டான குற்றமற்ற கேவலமடந்தையையுடைய கிழவனது பொன்னெயில்வட்டம்போன் முதியநகரி நீர்விழவாகிய விளையாட்டில விருப்பாலே போகலுற்றதென்க.

இனி மூதெயிலுக்குத் திருநாளுக்குப் போவாரைப்போலவென்றுமாம். (௬)

வள்ளநீரரமங்கையரங்கையா
லுள்ளங்கூரத்திமிர்ந்துகுத்திட்டசாந்
தள்ளலாயடியானையிழுக்கின
வெள்ளநீர்வளைவெள்ளமுரன்றவே.

இ - ள். அரமங்கையரைப்போல்வார் தமதுமனங் களிப்புமிகும்படி அங் கையாலே திமிர்ந்து உகுத்தசாந்து பனிநீர் சேறாய் யானையடியிழுக்கின; கடலிற் பிறந்த சங்குகளும் வெள்ளமென்னு மெண்ணாக முழங்கினவென்க. (எ)

க. நீந்துநித்திலவூர்திநிழன்மருப்
பேந்துகஞ்சிகைவையமிளவெயிற்
போந்துகாய்பொற்சிவிகைநற்போதகங்
கூந்தன்மாலைக்குமரிப்பிடிக்குழாம். (அ)

உ. ஏறுவாரொலியேற்றுமினேனெனக்
கூறுவாரொல்தோடுகுலைந்துவீழ்ந்
தாறினார்ப்பொலியஞ்சிலம்பின்னெலி
மாறுகொண்டதோர்மாக்கடலொத்தவே.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். மாந்தர்நெருக்கத்தைக் கடந்துபோகின்றமுத்தின்பந்தர், மருப்பாற் செய்த உருவுதிரையையுடைய கொல்லாவண்டி, ஒளிபுறப்பட்டு இளவெயிலைக் கெடுக்கும் பொற்சிவிகை, போதகம், பிடித்திரளென்கின்றவிவற்றைத் தாமேயேறு வாரொலி, கூடப்போகின்ற திரள்குலைந்து அவர்களைக் கூடுதற்குவிரும்பிநின்று ஏறவிடுமினென்று கூறுவாரொலி, ஆரப்பொலி, சிலம்பொலி, இவ்வோசை நெறி யாலே கடலோடு மாறுகொண்டதோர் கடலொத்தவென்க.

கடத்தற்கருமையின், நீந்துமென்றார். (௯)

பொன்செய்வேய்த்தலைப்பூமருமண்டல
மின்செய்வெண்குடைபிச்சமிடைந்தொளி
யென்செய்கோவென்றிரிந்ததிறைநிலா
மன்செய்மாணகர்வட்டமிட்டிட்டதே.

இ - ள். பொன்னாற்செய்த காம்பிடத்தில்வட்டக்குடை, வெண்குடை, பீலிக் குடை, இவைநெருங்குதலின், ஞாயிற்றினொளி இனி யானென்செய்வேனென்று கெட்டது; அப்பொழுது பூண்களினொளி நகரெல்லையளவும் வட்டமாக விட்டெ றித்ததென்க.

மன் - பெருமை. (௧௦)

திருந்துசாமரைவீசுவதெண்கடன்
முரிந்தமொய்திரைபோன்றவகிற்புகை
புரிந்ததாமங்களாகவப்பூந்துகள்
விரிந்துவானின்விதானித்ததொத்ததே.

இ - ள். அகிற்புகை முறுக்கினமாலைகளையொவ்வாநிற்கச் சாமரைவீசுவன முரிந்ததிரையையொத்தன; அப்பொழுது தூவினபூந்துகள் பரந்து வானிலே யொரு மேற்கட்டி கட்டினதன்மையையொத்ததென்க. (௧௧)

சோலைசூழ்வரைத்தூங்கருவித்திரண்
மாலையூர்திகள்வையமிவற்றிடைச்
சீலக்கஞ்சிநற்போதகஞ்செல்வன
நீலமேகநிரைத்தனபோன்றவே.

இ - ள். சோலைமறைத்த மலையினின்றுந் தூங்குமருவித்திரள்போலு முத்த மாலையையுடைய பீலிவேய்ந்தவூர்திகள் கொல்லாவண்டி இவற்றிற்குநடுவே பாகன் பயிற்றின நிலைக்கஞ்சி யானைகள்செல்வன மேகநிரைத்தனபோன்றவென்க. (௧௨)

௧. வழங்குவங்கக்கலிங்கக்கட்கமு
மழுங்குமாந்தர்க்கணிகலப்பேழையுந்
தழங்குவெம்மதுத்தண்டுந்தலைத்தலைக்
குழங்கன்மாலையுங்கொண்டுவிரைந்தவே. (௧௩)

உ. வாசவெண்ணெயுமவண்டிமிர்சாந்தமும்
பூசுசுண்ணமும்பூணுமடிசிலுங்
காசில்போகக்கலப்பையுங்கொண்டவர்
மாசின்மாசனம்வாயின்மடுத்தவே.

இவையிரண்டுமொருதொடர்.

மரக்கலத்தில்வந்த கலிங்கமுங் கலமுமென்க.

இ - ள். மாசனம் பிறர்க்குக்கொடுக்கும் புடைவைப்பெட்டிகளையும, அணிகலங்கெடுத்தலையுடையார்க்குக் கொடுத்தற்கு அணிகலப்பெட்டிகளையும், மதுப்பெய்து முழங்குகின்ற மூங்கிற்குழாய்களையும், மாலையையும் இடந்தோறு மிடந்தோறுங் கொண்டு, எண்ணெய்முதலியவற்றையும் போகத்திற்குரிய யாழ்முதலியவற்றையு மிட்ட பெட்டிகளையுங்கொண்டு, விரைந்து அந்நகரின்வாயிலிலே நெருங்கின வென்க. (௧௪)

பாடலோசையும்பணைஞெலியோசையு
மாடலோசையுமார்ப்பொலியோசையு
மோடையானையுரற்றொலியோசையு
மூடுபோயுயர்வானுலகுற்றவே.

இ - ள். அப்பொழுது, பாடுதலாற்பிறந்தவோசையும், யாழ்வாசித்தலாற் பிறந்தவோசையும், ஆடுதலாற்பிறந்த இயங்களினோசையும், ஆரவாரமொலிக்கின்றவோசையும், யானைபிளிறுகின்ற முழக்கினாற்பிறந்தவோசையுந் தம்மிற்கலந்துபோய் வானுலகைச்சேர்ந்தவென்க. (௧௫)

பூக்கணீர்விளையாடியபொன்னுல
கோக்கநீள்விசும்பூடறுத்தொய்யென
வீக்கமாநகர்வீழ்ந்ததுபோன்மவண்
மாக்கண்மாக்கடல்வெள்ளமடுத்ததே.

இ - ள். பொன்னுலகு பூக்களையுடைய நீரிலேவிளையாடவேண்டி விசும்பையூடறுத்துவந்து நிலத்திலே விரையவீழ்ந்த தன்மைபோலே மாக்களாகியபெரியகடல்

மாநகரில் வாயிலைக்கடந்து செல்கின்ற அவ்விடத்தில் வெள்ளத்தைநோக்கி முகஞ் செய்ததென்க. (கசு)

மின்னுவாட்டடங்கண்ணியாவெம்முலை
துன்னுவாட்டந்தணிந்ததலிற்றாநிறத்
தன்னவாட்டத்தணிமலர்ப்பூம்பொழி
லென்னவாட்டமுமின்றிச்சென்றெய்தினா

மின்போலுமிடையை மின்னென்றார். வாட்டமும், உம்மை - இசைநிறை.

இ - ள். வெம்முலைநெருங்குதலால் நமக்குவருகின்ற வருத்தத்தினை வாட்டடங்கண்ணியருடைய மின்போலுமிடைபொறுத்தலின்; அவர் ஊர்திகளினின்று மிழிந்து வாட்டமின்றி நடந்துசென்று இஃது அன்னங்களின் விளையாட்டினை யுடையதொரு பொழிலென்றுகூறும்படி அப்பொழிலைச்சேர்ந்தாரென்க.

என்னவெய்தினரென்க. இனி என்னவாட்டமுமெனக்கூட்டிக் கண்ணியர் தம்முலைநெருங்குதலிற் றமக்குப்பிறந்தவாட்டத்தினைத் தாம்பொறுத்தலின் மேல் ஒருவாட்டமுமின்றி அன்னவிளையாட்டையுடையதொருபொழிலிலே யெய்தின ரென்றுமாம். (கஎ)

அள்ளுடைக்குவளைக்கயநீடிய
களளுடைக்கழுநீர்ப்புனற்பட்டமும்
புள்ளுடைக்கனியிற்பொலிசோலையு
முள்ளுடைப்பொலிவிற்றொருபாலெலாம்.

அள்ளிக்கொள்ளுந்தன்மையையுடைய கயம். நீடியபுனற்பட்டம் - நீராரு ஓடை. கனியாற் பொலிந்த புள்ளுடைச்சோலை. இஃது ஆற்றங்கரை

இ - ள். அப்பொழிலில் ஒருபாலெல்லாம் கயத்தையும் பட்டத்தையுஞ் சோலை யையுமுள்ளேயுடைத்தான பொலிவிற்றென்க. (கஅ)

செம்புறக்கனிவாழையுந்தேன்சொரி
கொம்புறப்பழுத்திட்டனகோழரை
வம்புறக்கனிமாவொடுவார்சுளைப்
பைம்புறப்பலவிற்றொருபாலெலாம.

இ - ள். ஒருபாலெல்லாம் சிவந்தபுறத்தையுடைத்தாய்க் கனிகின்ற வாழையி னையும், கொழுவிய அரையினையுடைத்தாய்ப் புதுமையுறக்கனிகின்ற மாவினையும், கொம்புறப் பழுத்துத் தேன்சொரி சுளையை யிட்டனவாகிய பைம்புறப் பலவினையு முடைத்தென்க. (கக)

கள்ளவானரமுங்கன்னியூகமுந்
துள்ளுமானொடுவேழத்தொகுதியும்
வெள்ளையன்னமுந்தோகையும்வேய்ந்தவ
ணுள்ளுமாந்தரையுள்ளம்புகற்றுமே.

இ-ள். அப்பொழிலிடம், வானரத்தையுங் கருங்குரங்கையும் மானையும் வேழத்திரளையும் அன்னத்தையும் மயிலையுமணிந்து, துணையைநினைப்பாரை நெஞ்சைவிரும்பப்பண்ணுமென்க. (உ௦)

கோக்கணங்கொதித்தேந்தியவேலென
நோக்கணங்கனையார்நுகர்வேய்தலிற்
றூக்கனங்குறையுந்தடந்தாமரைப்
பூக்கணம்பொழிற்படடதுபோன்றதே.

இ-ள். அங்ஙனம் புகற்றுதலின், வேலெனநோக்குகின்ற நோக்கினையுடைய அணங்கனையார் கணவரிடத்து நுகர்ச்சியால் அவயவங்கள் செவ்விபெறுதலின், அவருறைவிடம் எல்லாரிடத்தினு ஞ்சென்றுசேருந் திருத்தங்குந் தாமரைப்பூக்கணம் ஓடையையொழிய ஒருபொழிலிலேயுண்டான தன்மையையொத்ததென்க.

முகமுதலியன தாமரைக்குவமை. நோக்கால் அணங்கனையாருமாம். (உ௧)

கூறப்பட்டவக்கொய்ம்மலர்க்காவக
மூறித்தேன்றுளித்தொண்மதுவார்மணநாறிநாண்மலர்வெண்மணற்றூய்நிழ
றேறித்தெண்கயம்புக்கதுபோன்றதே.

இ-ள். முற்கூறிய காவினுள்ளாகியவிடம் வைத்ததேனூறித் துளித்தபூவினின்றும் வார்கின்ற மதுமணநாறி மணலதாய் நிழல்தெளிந்து இக்குளிர்ச்சியாலே கயத்திலேபுக்கிருந்தாற்போன்றிருந்ததென்க. (உஉ)

காவிற்கண்டத்திரைவளைத்தாயிடை
மேவிவின்னவர்மங்கையர்போன்றுதம்
பூவையுங்கிளியும்மிழற்றப்புகுந்
தாவியந்துகிலாரமர்ந்தார்களே.

இ-ள். பாலாவிபோலுந் துகிலையுடைய குணமாலையும், சுரமஞ்சரியும், அந்தவுள்ளாகியகாவிலே திரையைவளைத்து அதினுள்ளே மிழற்றப்புகுந்து அரமங்கையர் போன்று மேவியிருந்தாரென்க. (உ௩)

க. பௌவநீர்ப்பவளக்கொடிபோல்பவள்
மௌவலங்குழலாள்சுரமஞ்சரி
கொவ்வையங்கனிவாய்க்குணமாலையோ
டெவ்வந்தீர்ந்திருந்தாளிதுகூறினாள். (உ௪)

உ. தூமஞ்சூடியதூத்துகிலேந்தல்குற்
றூமஞ்சூடியவேற்மடங்கண்ணிணை
ணமஞ்சூடியநல்லுதனீட்டினாள்
காமஞ்சூடியகண்ணெளிர்சுண்ணமே.

இவையிரண்டுமொருதொடர்.

க. எவ்வந்தீர்ந்திருந்தாள் - முன்பு ஒருவெறுப்புமின்றியிருந்தவள்.

உ. அல்குலினையுடைய கண்ணினாள் - குணமாலை.

இ - ள். அங்ஙனமிருந்தகாலத்தே குணமாலைபெயரைச் சுமந்த மாலையென்னுஞ்சேடி எல்லாரும் விரும்புந்தன்மையை மேற்கொண்ட சுண்ணத்தை நீட்டினாள்; அதுகண்டு கொடிபோல்பவள் குழலாள் சுரமஞ்சரி அவள் குணமாலையுடனே இவ்வார்த்தையைக் கூறினாளென்க.

அது மேற்கூறுகின்றார். (உரு)

சுண்ணமென்பதொர்பேர்கொடுசோர்குழல்
வண்ணமாலைநுசுப்புவருந்துவா
னெண்ணிவந்தனகூறிவையோவென
நண்ணிமாலையைநக்கனளொன்பவே.

இ - ள். குழலினையும் நுசுப்பினையுமுடைய மாலாய்! இவை சுண்ணமென்பதொருபெயரை யேறிட்டுக்கொண்டு நின்னை வருத்துவான்கருதி வந்தனவோவென்றனாகி அவளைத்தான் நக்காள்; நக்குச் சொல்லின் என்னுடையசுண்ணங்களைச் சொல்லாயெனச் சொன்னாளென்க. (உசு)

பைம்பொனீணுலகன்றியிப்பார்மிசை
யிம்பரென்சுண்ணமேய்ப்பவுளவெனிற்
செம்பொற்பாவையன்னாய்செப்புநீயெனக்
கொம்பனாளுங்கொதித்திதுகூறினாள்.

இ - ள். அதுகேட்டகுணமாலை பாவையன்னாய், தேவருலகினன்றி இவ்வுலகில் இவ்விடத்து என் சுண்ணத்தையொப்பன வேறுசிலசுண்ணமுளவென்றறிவோர் கூறின், நீயும் இப்பொழுது நின் சுண்ணத்தையும் இதற்கொக்குமென்று கூறுவாயாக வென்றுகூற, அதுபொழுதே சுரமஞ்சரியுங் கொதித்து இதனைக்கூறினாளென்க.

அது மேற்கூறுகின்றார். (உஎ)

சுண்ணந்தோற்றனந்தீம்புனலாடல
மெண்ணில்கோடிபொன்னீதும்வென்றாற்கென
வண்ணவார்குழலேழையர்தம்முளே
கண்ணற்றார்கமழ்சுண்ணத்தினென்பவே.

தோற்றனம் - வினையெச்சமுற்று.

இ - ள். சுண்ணந்தோற்றுப் புனலாடவுங்கடவேமல்லேம்; மாற்றற்ற பொன்கோடியென்னு மிலக்கத்தை அருகனுக்குக்கொடுக்கக்கடவேமென்று கூறினாள்; அங்ஙனங்கூறவே ஏழையரிருவருஞ் சுண்ணங்காரணத்தால் நட்புக்குலைந்தாரென்க. ()

வேறு.

மல்லிகைமாலைமணங்கமழ்வார்குழல்
கொல்லியல்வேனெடுங்கண்ணியர்கூடிச்

சொல்லிசைமேம்படுசுண்ணவுறழ்ச்சியுள்
வெல்வதுகூறெனவேண்டிவிடுத்தார்.

கொல் - சொற்றொழில்.

இ - ள். மாலையினையுங் குழலினையுமுடைய இருவருங்கூடிச் சுண்ணத்தினது மாறுபாட்டிலே வெல்லுமது நமக்குச் சொல்லும் புகழ்மேம்படும் வெற்றியென்றுஅவ் வெற்றியைவிரும்பி அவற்றைக்காட்டுதற்குப் போகவிட்டாரென்க. (உகூ)

இட்டிடையாரிருமங்கையரேந்துபொற்
றட்டிடையந்துகின்மூடியதன்பினர்
நெட்டிடைநீந்துபுசென்றனர்தாமரை
மொட்டனமென்முலைமொய்குழலாரே.

இட்டிடையார் - குணமாலையும், சுரமஞ்சரியும். இருமங்கையர் - கனகபதாகை யும், மாலையும. மொய்குழலார் - சேடியர்.

இ - ள். இட்டிடையாருடைய மொய்குழலார சுண்ணத்தினைத் தட்டிலேயிட் டுத் துகிலான்மூடிக்கொண்டுசெல்ல, அதன்பின்னே இருமங்கையரும் இவைகாட்டு தற்குக் கூடச்சென்றாரென்க. (௩0)

வேறு.

சீர்தங்குசெம்பொற்கொடிமல்லிகைமாலைசேர்ந்து
வார்தங்குபைம்பொற்கழன்மைந்தர்கைக்காட்டமைந்த
ரோதங்குசுண்ணமிவற்றின்னலம்வேண்டின்வெட்போர்க்
கார்தங்குவண்கைக்கழற்சீவகற்காண்மினென்றார்.

சீர்தங்கு - அடை. செம்பொற்கொடி-கனகபதாகை. மாலையென்னும் பெயாக கேற்ப மல்லிகையடைகூறிற்றா.

இ - ள். கொடியுமாலையுஞ்சேர்ந்து மைந்தர்கையிலே அவற்றைக்காட்டஅவா கூறுவாா: இவ்விரண்டும் நல்லசுண்ணம, இவற்றின் நன்மை அறியவிரும்பிற் போரி னையுங் கையினையுங் கழலினையுமுடைய சீவகனைக் காண்பீராகவென்றாரென்க.

வாண்மின்னுவன்கைவடிநூற்கடற்கேள்விமைந்தர்
தாண்மின்னுவீங்குகழலான்றனைச்சூழமற்றப்
பூண்மின்னுமார்பன்பொலிந்தாங்கிருந்தான்விசும்பிற்
கோண்மின்னுமீன்சூழ்குளிர்மாமதித்தோற்றமொத்தே.

வாள்மின்னுதற்குக் காரணமான கை. மைந்தர் - தோழரும் நபுலவிபுலரும். வீங்குகழல் - விகாரம். கழலான் - நந்தட்டன். அப்பூண்மின்னு மார்பனென்றது முன்னிற்கவியில் அவர் கூறியசீவகனை.

இ - ள். அப்பூண்மின்னுமாபன் அவர்செல்கின்றபொழுது, மைந்தர் கழலான்

இவர்கள் தன்னைச்சூழ அப்பொழிலிடத்தே பொலிவுபெற்று விசும்பிலே கோண்மீனும் மின்னுமீனுஞ்சூழப்பட்ட மதித்தோற்ற மொத்திருந்தானென்க.

ஞாயிறுபோல்வானைக் கலைதோற்று விப்பதகா இருத்தலின், ஈண்டு மதியை உவமைகூறினார். "பன்மீ னடுவட் பான்மதி போல - வின்னகை யாயமோ டிருந் தோற் குறுகி" என்றார் பிறரும். இராகு கேதுக்களையொழிந்த எழுகோளுஞ்சூழப் பட்ட தொருமதி இல்பொருளுவமை. தோழர்நால்வருந் தம்பிமார்மூவருங் கோண் மீனுக்குவமை. இனி ஞாயிறுந்திங்களுந் தனக்குவமையாதலின், ஒழிந்த வேழுகோ ளுமாம். மின்னுமீனுக்கு ஒழிந்ததோழருவமை. இனிக் கழலாணுகிய மார்பனென் பாருமுளர். (௬௨)

வேறு.

க. காளைசீவகன்கட்டியங்காரனைத்
தோளையீர்ந்திடவேதுணிவுற்றநல்
வாளைவவ்வியகண்ணியர்வார்கழற்
றாளையேத்துபுதங்குறைசெப்பினார். (௬௩)

உ. சுண்ணநல்லனசூழ்ந்தறிந்தெங்களுக்
கண்ணல்கூறடியேங்குறையென்றலுங்
கண்ணிற்கண்டிவைநல்லகருங்குழல்
வண்ணமாலையினீரெனக்கூறினான்.

இவையிரண்டுமொருதொடர்.

செய்ந்நன்றியறிந்து கைம்மாறுசெய்யககருதலும, பகைவர்செய்த தீங்குகுறித்து அவர்க்குத் தீங்குசெய்யக்கருதுதலும அரசநீதியென்பதுதோன்றத் தோளையீர்ந்திட வே துணிவுற்றவாளென்றார். * "ஆதியாயவரும்பகைநாட்டுதல்" என்றாரமேலும்.

இ - ள். கண்ணியர் அவன்றாளை ஏத்தாநின்று அண்ணலே, இச்சுண்ணங் களைச்சூழ்ந்தறிந்து இவற்றில் நல்லனவற்றை எங்கட்குக்கூறென்று தங்குறை செப் பினார்; அங்ஙனம் அடியேங்குறையிதுவென்று அவாகூறினவளவிலே கண்ணாலே பாாத்து மாலையினீர், இவை நல்லனவெனக் கூறினானென்க.

இவைநல்லவென்றது, குணமாலைசுண்ணத்தை. அவாக்கு இரண்டும் நன்றெ ன்றாற்போலிருந்தது. பலவுங்கூடவிடித்தலின், இவையெனப்பன்மையாற் கூறி னான். (௬௪)

க. மற்றிம்மாநகர்மாந்தாகளியாவரு
முற்றுணாறியுங்கண்டுமுணாந்திவை
பொற்றசுண்ணமெனப்புகழ்ந்தார்நம்பி
கற்றதும்மவர்தங்களொடேகொலோ. (௬௫)

உ. ஐயனேயறியும்மெனவந்தனம்
பொய்யதன்றிப்புலமைநுணுக்கிநீ

* விமலையாரிலம்பகம், ௬உ.

கொய்திற்றோர்ந்துரை நூற்கடலென்றுதங்
கையினாற்றொழுதார்கமழ்கோதையார்.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். கோதையார் நின்னையொழிய மக்களெல்லாருந் தீண்டியும் மோந்தும் நோக்கியுமாராய்ந்து வேறுபாடுகூறாது இவை நல்லசுண்ணமென்று புகழ்ந்துவிட்டார்; நீகற்றதும் அவர்தங்களுடனன்றே, ஆதலின் நூற்கடலே, இவற்றின்வேறுபாடு சீவகனேயறியுமென்று பிறர்கூறக்கேட்டுவந்தேம், அவர்கூறியவார்த்தை மெய்யாம்படி நின்னறிவைக் கூரிதாக்கி ஆராய்ந்து கடிதாகவுரையென்றுதொழுதாரென்க.

நாறியெனவே மோந்துணர்ந்ததாம். (௩௬)

நல்லசுண்ணமிவையிவற்றிற்சிறி
தல்லசுண்ணமதற்கென்னையென்றிரேற்
புல்லுகோடையபொற்புடைப்பூஞ்சுண்ண
மல்லசீதஞ்செய்காலத்தினையவே.

இ - ள். இவை நல்லசுண்ணம், இச்சுண்ணம் இவற்றிற் சிறிதுநல்லவல்ல; அதற்குக் காரணமெங்ஙனேயென்று கேட்பீராயின், பொற்புடைச்சுண்ணமானவை கோடையிலிடித்தவை, நல்லவல்லாதவை மாரியிலிடித்தவையென்றானென்க. ()

வாரம்பட்டுழித்தீயவுநல்லவாந்
தீரக்காய்ந்துழிநல்லவுந்தீயவா
மோரும்வையத்தியற்கையன்றோவென
வீரவேனெடுங்கண்ணிவிளம்பினாள்.

இ - ள். கனகபதாகை, ஒருவர்மேல் அன்புற்றகாலத்து அவர்செய்யுந் தீங்குகளும் நல்லனவாம்; அன்பின்றியிருந்தகாலத்து அவர்செய்யுநன்மைகளுந் தீயவாம்; இஃது உலகத்தியல்பன்றோ, இதனை நும்மிலே ஓர்ந்துபாருமென்றுகூறிப் பின்னும் ஒருமொழிவிளம்பினாளென்க. (௩௮)

உள்ளங்கொள்ளவுணர்த்தியபின்னலால்
வள்ளனீங்கப்பெறாய்வளைத்தேனெனக்
கள்செய்கோதையினாய்கரிபோக்கினாற்
றெள்ளிநெஞ்சிற்றெளிகெனச்செப்பினான்.

இ - ள். வள்ளலே, என்னெஞ்சு நீகூறிய தீங்குகளைக் கைக்கொள்ளும்படியறிவித்தபின்னரல்லது போகப்பெறாய்; நின்னை யான்றடுத்தேனென்று அவள் கூறினாள்; அதுகேட்டு அவனுங் கோதையினாய், சான்றாலுணர்த்தினால் நெஞ்சாலே ஆராய்ந்துதெளிகவென்று கூறினானென்க.

போக்குதல் "நூலாற்போக்கினான்" என்றாற்போல் உணர்த்தன்மேற்று. (௩௯)

கண்ணின்மாந்தருங்கண்ணிமையார்களு
மெண்ணின்னின்சொலிகந்தறிவாரிலே

நண்ணுநீஞ்சொனவின்மபுள்ளாதியா
வண்ணனீக்கினஃதொட்டுவெல்யானென்றாள்.

இ - ள். அண்ணலே, எண்ணின், நின்சொல்லை மக்களினுந் தேவரினுங் கடந்தறிவாரில்லை, ஆதலின், அவர்களையொழியத் தம்மினத்தில் ஒன்றையொன் றழைத்தசொல்லையறிந்து அதிலேபயின்ற பறவைமுதலாக இதனைத் நீதென்றுநீக்கு மாயின், அதனைப்பொருந்துவேனென்றாளென்க. (௪0)

காவில்வாழ்பவர்நால்வருளர்கரி
போவர்பொன்னனையாயெனக்கைதொழு
தேவலெம்பெருமான்சொன்னவாறென்றாள்
கோவைகித்திலயென்முலைக்கொம்பனாள்.

நால்வரென்று உயர்திணையாற்கூறுதல் *"ஒருவனைக்கூறும்" என்னுஞ்சூத்திரத்து ஒன்றெனமுடித்தலாற்கொள்க.

இ - ள். அங்ஙனமுடன்படுதலிற் சீவகனும் பொன்னனையாய், காவிலேவாழ்வன நான்குசாதியுள, அவை நடுவாயுணர்த்துமெனக்கூற, கொம்பனாள் எம்பெருமானருளிச்செய்தபடியாமென்றாளென்க.

"ஏவன்முரணும்" என்றாற்போல. (௪௧)

க. மங்கைநல்லவர்கண்ணுமனமும்போன்
றெங்குமோடியிடறுஞ்சுரும்புகாள்
வண்டுகாண்மகிழ்தேனினங்காள்மது
வுண்டுதேக்கிடுமொண்மிஞிறீட்டங்காள். (௪௨)

உ. சோலைமஞ்ஞைசுரமைதன்சுண்ணமு
மாலையென்னுமடமயில்சுண்ணமுஞ்
சாலநல்லனதம்முளுமிக்கன
கோலமாகக்கொண்டுண்மினெனச்சொன்னான்.

இவையிரண்டுமொருதொடர்.

கண்ணுமனமும்போன்று சேர்ந்து எங்குங் கடிதாகவோடித் தட்டித்திரியுஞ் சுரும்புகாள் மிஞிறுகாளென்க. இது நிரனிறை; இவை எல்லாமணத்திலுஞ்செல்லும். மதுவுண்டு மகிழ்கின்றவண்டுகாள் மதுவுண்டுதேக்கிடுகின்றதேன்காளென்க; இவை நல்லமணத்தேசெல்லும். சுரும்புமுதலியன கூறும்பாஷையைச் சீவகனுணர்ந்திருத்தலின், அதனாலவற்றை யழைத்தானென்றுணர்க; விக்கிரமாதித்தன் எறும்பின்பாஷையறிந்தானென்று கதைகூறுகின்றமையின். "தாதுண் டும்பி போது முரன்றாங்கு" என்றும், † "இரங்கிசை மிஞிறொடு தும்பிதா தூத" என்றுங்கூறுதலிற் றும்பியதுகிளையாம் இந்நான்குமென்க. ‡ "நண்டுந் தும்பியு நான்

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், ௨௭.

† கலித்தொகை, முதலாவது பாலை, ௯௨.

‡ தொல், பொருளதிகாரம், மரபியல், ௯௧.

கறி 'வினவே - பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" என்று தம்பிக்குச் செவியி ன்றெனவே இவற்றிற்குஞ் செவியின்ருமாதலாலே வருத்தமிகுதியான் இவற்றை நோக்கி வாளாகூறியதன்றி வேறன்று; இவைவந்து கரிபோதலில; கேள்வியில் லனவருதலென்னை! என்பதுகடா அதற்குவிடை: ஆசிரியர் நண்டுந்தும்பியுமென்று தும்பியைப்பின்வைத்தது மேல் வருஞ்சூத்திரத்தின் "மாவு மாக்களு மையறி வென்ப" என்ற ஐயறிவு இதற்கு மேறுதற்கென்றுணர்க; இதனை வாராததனல் வந்ததுமுடித்தலென்னுந் தந்திரவுத்தியாற்கொள்கவென்று ஆண்டு உரைகூறிப்போந் தாம்; அதுவே யாசிரியர்கருத்தென்பது சான்றோருணர்ந்தன்றே *"பூத்த பொங் கர்த் துணையொடு வதிந்த - தாதுண் பறவை பேதுற லஞ்சி - மணிநா வார்த்த மாண்வினைத் தேரின்" என்று அப்பொருடோன்றக்கூறியதென்றுணர்க. இக்கருத் தான் இவருஞ் செவியுணர்வுண்டென்றுகூறினர்.

இ - ள். அவர் அங்ஙனங்கூறுமளவிற் சுரும்புகாள், மிஞிறீட்டங்காள், வண் டுகாள், தேன்காள், நீர்வம்மினெனவிளித்து வந்தபின்னர் அவற்றைநோக்கிச் சுர மஞ்சரிசுண்ணமுங் குணமாலைசுண்ணமும் மிகவுநல்லனவாயினும் இவற்றில் நல் லனவற்றை நன்ருகக்கொண்டுண்மினென்று கூறினனென்க.

இங்ஙனங்கூருநு தான்கற்ற விஞ்சையினுணையாற் கேள்வியுணர்வு பிறப்பித் தானெனின், அவை கரிபோதலாகாவாம்; "எண்ணினின்சொலிகந்தறிவாரிலை" என்றலின். வெருதிருத்தற்கு இருவரையுமயிலென்ருன். (சுரு)

வண்ணவார்சிலைவள்ளல்கொண்டாயிடை
விண்ணிற்றூவியிட்டான்வந்துவீழ்ந்தன
சுண்ணமங்கைசுரமையமாலைய
வண்ணவண்டொடுதேன்கவர்ந்துண்டவே.

இ - ள். அங்ஙனங்கூறியவள்ளல் இரண்டனையுமிரண்டுகையிலுங்கொண்டு ஆகாசத்தே தூவினுகை, அப்பொழுது அவற்றின் மேற்சென்றசுரும்புமிஞிறும் இவை தீயவென்றுண்ணுதுபோதலின், சுரமைசுண்ணம் நிலத்தேவீழ்ந்தன. மாலை சுண்ணத்தை அவற்றின்மேற்சென்ற வண்டுந்தேனும் விரும்பியுண்டனவென்க.

தூவியிட்டான் - ஒருசொல். சுரும்புமிஞிறுமொருகுணத்தவாதலிற் சேர்ந்து ஒருகையைநோக்கின. மற்றையன ஒருகுணத்தவாதலிற் சேர்ந்து மற்றைக்கை யைநோக்கின. உண்ணுமல்வந்தவற்றிற்கு வையாமல் இவையுண்டலிற் கடிதுண் டனவென்பதுதோன்றக் கவர்ந்தென்ருர். (சுசு)

தத்துநீர்ப்பவளத்துறைநித்திலம்
வைத்தபோன்முறுவற்றுவர்வாயினீ
ரொத்ததோவெனநோக்கிநுங்கைமார்க்
குய்த்துரைம்மினிவ்வண்ணமெனச்சொனுன்.

பவளத்தே உறைவன சிலநித்திலத்தைக் கொண்டுவந்து வைத்தாற்போலும் வாயினீரென்க. வேட்கைநிகழாதவிடத்து மகளிராயினுரைச் சிறப்பித்துக்கூறல் இயல்பென்பதுதோன்ற இருவரையுஞ் சிறப்பித்துக்கூறினன். தானேக்கியநோக்

* அகநானூறு, களிற்றியானைநிரை, ச.

கந்தானே யான்கூறியநடுவுநிலைமை நமக்குப்பொருந்திற்றேவென்றுகூறும்படியாக அவர்களைப் பார்த்தானென்க.

இ - ள். அங்ஙனமவையுண்டபின்பு அவன் நோக்கி வாயினீர், நங்கைமார்க்கு யான் றேற்றினமுறைமையை மனங்கொள்ளும்படி கூறுவீரென்றானென்க. (௬௫)

நீலநன்குதெளித்துநிறங்கொளீஇக்
கோலமாகவெழுதியபோற்குலாய்
ஞாலம்விற்கும்புருவத்துநங்கைகண்
போலும்வேலவனேபுகழ்ந்தேனென்றாள்.

இ - ள். நீலமணியைக்கரைத்து நிறங்கொளுத்தி எழுதினாற்போல வளைந்து உலகைத் தமக்குவிலையாகவிற்கும் புருவத்தினையுடைய சுரமஞ்சரிகண்போற் றப்பாதவேலவனே, நீதேற்றினமுறைமையை யானுடம்பட்டுப்புகழ்ந்தேனென்றாளென்க.

இஃது இவற்கு வேட்கைநிகழ்வதுகருத்தாகக் கூறினாள்; அது மேல் *"என் மனத்தினுள்ளன" என்பதனானுணர்க. (௬௬)

வேறு.

சோலையஞ்சுரும்பிற்சுண்ணந்தேற்றியதோன்றறன்னை
வேலையம்படுத்தகண்ணார்தொழுதனர்விரைந்துபோகி
மாலைக்குவென்றிகூறமழையிடிப்புண்டோர்நாக
மாலையத்தழுங்கியாங்குமஞ்சரியவலமுற்றாள்.

சுரும்புண்ணுதுபோகவே அதன்றீங்குவெளிப்படலின், அதனாற்றேற்றியவென்றார். இது வெதிரேகம். மிஞிற்றிற்சுரும்புசிறத்தலின், அதனைக்கூறினார். முன்னும் அதுநோக்கியன்றே கண்சென்றுழிச்செல்கின்ற மனத்தோடே அதனையுவமித்தது. முன்னர் வண்டுந்தேனுமுண்டவென்றது அநுவயம்.

இ - ள். சுரும்பாற்றேற்றியதோன்றலை வேலைவென்றையப்படுத்தினகண்ணார் தொழுதனராய் விரைந்துபோய்க் குணமாலைக்குவென்றிகூற, அதுகேட்டுச் சுரமஞ்சரி ஒருநாகமிடிப்புண்டு தானுறைகின்றவிடத்தே வருந்துகின்றாற்போல வருத்தமுற்றாளென்க.

ஆலயமென்றது கன்னியாமாடத்திருத்தற்கு. (௬௭)

வேறு.

திங்களங்கதிர்செற்றுழக்கப்பட்ட
பங்கயப்படுவொத்துளைபாவாய்
நங்கையென்னொடுநீயாய்நனியொல்லே
யிங்கணென்றடிவீழ்ந்திரந்திட்டாள்.

இ - ள். திங்களின்கதிருழக்கப்பட்ட தாமரைமடுவையொத்து இவ்விடத்தே மிகவும்வருந்துகின்றபாவாய், நங்காய், கடுக என்னுடனே முன்புபோலே நகையாடி யுரையாயென்றிரந்தாள் குணமாலையென்க.

ஒத்துளை - ஒத்தாயென்றுமாம். (௬௮)

*. சுரமஞ்சரியாரிலம்பகம், கஉ.

மாற்றமொன் றுரையாண் மழைவள்ளலென்
னேற்றசுண்ணத்தையேற்பிலவென்றசொற்
றேற்றுவந்தென்சிலம்படிகைதொழ
நோற்பனேற்றனைநீயெனவேகினாள்.

இ-ள். நின்மேல்விருப்பினால் எனது நல்லசுண்ணத்தைத் தீதென்ற வாசியறியாதான் இனி என்னையும்விரும்பித் தானேவந்து அக்காலத்துச் சொல்லுஞ்சொல்லுட்படத் தோற்றுச்சொல்லி என்னடியைத் தொழும்படி நோற்பேன்; அவன் நின்னைவிரும்புதற்கு நீ முன்னேநோற்றாயென்று தன்குறிப்புக்கூறும்படி குணமாலையைநோக்கி அவளுரையாயென்றதற்குத் தானுரையாளாயேகினாளென்க.

இஃது உட்கோள். *"பெருமையு முரனு மாடூஉ மேன" என்பதனாற் றன் வேட்கைமறைத்தாள். †"தீண்டிலேனாயினுய்யேன் - சீறடி பரவவந்தேனருளென த்தொழுதுசேர்ந்து" எனமேற்கூறலின், ஈண்டுச் சொற்றோற்றடிதொழவென்றுகருதினாளென்றார். இக்கருத்து அங்ஙனமுடிக்கின்ற ஊழால் இவட்குநிகழ்ந்தது. (சக)

கன்னிமாநகர்க்கன்னியர்சூழ்தரக்
கன்னிமாடமடையக்கடிமலர்க்
கன்னிநீலக்கட்கன்னிநற்றாய்க்கவள்
கன்னிக்குற்றதுகன்னியர்கூறினார்.

இ-ள். அங்ஙனமேகிய புதிய நீலமலர்போலுங்கண்ணினையுடைய கன்னி, கன்னியர் சூழச்சென்று அழிவில்லாதநகரிற் கன்னிமாடத்தைச் சேர்ந்தாளாக, அவள் நற்றாயாகிய சுமதி நீராடாதுவருதற்குக் காரணங்கேட்டவட்கு அக்கன்னிக்குப்பிறந்த வருத்தத்தைச் சூழ்ந்துநின்ற அக்கன்னியர்கூறினாரென்க.

அவள்நற்றாய்க்கென்க. (ருo)

க. கண்கள்கொண்டகலப்பினவாயினும்
பெண்கள்கொண்டவிட்டாபிறசெற்றமென்
றொண்கணாளவடாயவடந்தைக்குப்
பண்கொடேமொழியாற்பயக்கூறினாள். (ருக)

உ. விண்ணிற்றிங்கள்விலக்குதன்மேயினா
ரெண்ணநும்மகளெண்ணமற்றியாதெனிற்
கண்ணினாடவர்க்காணினுங்கேட்பினு
முண்ணலேனினியென்றுரையாடினாள். (ருஉ)

கூ. இன்றுநீர்விளையாட்டினுளேந்திழை
தொன்றுசுண்ணத்திற்றோன்றியவேறுபா
டின்றெனாவிக்கொர்கூற்றமெனவையா
நின்றுநீலக்கணித்திலஞ்சிந்தினாள்.

இவைமூன்றுமொருதொடர்.

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், எ.
† சுரமஞ்சரியாரிலம்பகம், சுக.

க. பெண்கள் - சாதிப்பன்மையுணர்த்திற்று.

உ. மற்று - அசை.

ரு. தொன்றுவேறுபாடு - ஊழினால்வந்தவேறுபாடு.

இ - ள். ஒண்கணுளாகிய அவளுடையதாய், கண்கள் ஒன்றன்குறிப்பினை ஒன்று தப்பாமற்கொண்டகலப்பினவாயினும் வேறாகப் பெண்கள் தம்மனத்திற்கொண்ட செற்றங்களைவிடாவென்று தானுட்கொண்டு அவடந்தை குபேரதத்தனுக்கு நம்மகளெண்ணம் விண்ணிலேதிரியுந்திங்களைத் திரியாமல் விலக்குதலைமேவினளெண்ணமாயிருந்தது; அஃது இயாதெனின், ஆடவரைக் கண்ணாற்காணினும் அவர் பெயரைச் செவியாற்கேட்பினும் உண்ணேனென்று வஞ்சினங்கூறினளாதலால். இன்று நீர்விளையாட்டிலே ஏந்திழை சுண்ணத்தாற்றோற்றிய தொன்றுவேறுபாடு இன்று என்னுயிர்க்குக் கூற்றமென்று நையாநின்று தேமொழியாலே மனங்கொள்ள வறிவித்தாள்; அங்ஙனமறிவித்து அழுதாளென்க. (௫௩)

வேறு.

பட்டதெனங்கைக்கென்னப்பாசிழைப்பசும்பொனல்குன்
மட்டவிழ்கோதைசுண்ணமாலையோடிகலித்தோற்றாள்
கட்டவிழ்கண்ணிநம்பிசீவகன்றிறத்திற்காய்ந்தா
ளெட்டுந்தேனலங்கன்மார்பவதுபட்டதறிமோவென்றாள்.

இ - ள். அதுகேட்டு நங்கைக்கு இங்ஙனம்வருந்துதற்குப் பிறந்ததென்னென்று குபேரதத்தன்கேட்பச் சுமதிகூறுவாள்: அலங்கன்மார்பனே, சுரமஞ்சரி குணமாலையுடனே இகலிச் சுண்ணந்தோற்றாள்; தோற்றவடான் அதனைத்தேற்றின நம்பி சீவகன் றிறத்தாலே ஆடவரைக் காய்ந்தாள்; பிறந்தகாரியமது, அதனையறிவாயாகவென்றாளென்க. (௫௪)

வேறு.

பள்ளிகொள்களிறுபோலப்பரிவுவிட்டுயிர்த்தென்பாவை
யுள்ளியபொருண்மற்றஃதேலோபெரிதுவப்பக்கேட்டேன்
வள்ளிதழ்க்கோதைமற்றுநகரொடுங்கடியுமேனும்
வெள்ளநீணிதியினின்னேவேண்டியவிளைப்பலென்றான்.

மற்று - வினைமாற்று. ஓ - மகிழ்ச்சிக்குறிப்பு.

இ - ள். அதுகேட்டவன் துயில்கொள்ளும்யானைபோல வருத்தந்தோன்ற வுயிர்த்தனனாய் என்பாவைநினைத்தகாரியம் வேறொன்றன்றி அத்தன்மையாயின் மிகப் பெரிதும் மனமகிழக்கேட்டேன்; அக்கோதை தெருவினன்றி நகரினுமுட்பட ஆளைக் கடியினும் வெள்ளமென்னு மெண்ணையுடைய நிதியாலே அவள் விரும்பியவற்றை இப்பொழுதே முடிப்பேனென்றானென்க. (௫௫)

இன்னதோர்காலத்தின்னானொருமகளின்னதொன்றிற
கின்னதோரிடத்தினெல்லையாட்கடிந்தொழுகினாள்போ
லின்னதோர்நகரினென்றாங்கென்பெயர்நிற்கவேண்டு
மின்னதோராரந்தம்மோவென்றுகொண்டேகினானே.

இதனால் அதுவேயன்றிப் புகழுநிறுத்துவேனென்கின்றான். போல் - ஒப்பில் போலி. *"ஆங்க வுரையசை" †"ஒப்பில் போலியு மப்பொருட் டாகும்" என்றதனால் உரையசையின் பொருளுணர்த்துமாயிற்று. ஆங்கென்றது அரசனிடத்தை.

இ - ள். இத்தன்மைத்தானதொருகாலத்தே ஒருவணிகனுடைய ஒப்பில்லாத மகள் இத்தன்மையதொருகாரியத்திற்கு ஒருதெருவினிடத்தினெல்லையின் ஆடவர் வாராமற் கடிந்தொழுகினாள்போலே இத்தன்மைத்தான நகரிலேயென்று என்புகழ் நிற்கவேண்டும்; விலையில்லாததோராரத்தைத் தருவாயாகவென்றுகூறி அதனை வாங்கிக்கொண்டு ஆங்கேகினானென்க.

"நல்லெயி லுழந்த செல்வர்த மின்னன்" என்றார் பிறரும். (ருசு)

வையகமூன்றும்விற்குமாமணியாரமேந்திச்
செய்கழன்மன்னற்குய்த்துத்தன்குறைசெப்பலோடு
மையெனமன்னனேவவாள்வழக்கற்றதென்ப
கைபுனைபாவையெல்லாங்கதிர்முலையாக்கினானே.

இ - ள். ஆரமேந்திக் கொண்டுசென்று மன்னனுக்குக்கொடுத்துத் தன்காரியத்தைச்சொன்னளவில், அவன் அதற்குறையில்லையென்றுகூறுதலிற் றெருவில் ஆள்வழங்குதலற்றது; அப்பொழுது அம்மாடத்தில் ஆண்பாவைகளெல்லாமழித்துப் பெண்பாவையாக்கினானென்க. (ருஎ)

வேறு.

சென்றுகாலங்குறுகினுஞ்சீவகன்
பொன்றுஞ்சாகம்பொருந்திற்பொருந்துக
வன்றியென்னிறையாரழிப்பாரென
வொன்றுசிந்தையளாகியொடுங்கினாள்.

இ - ள். வாழ்நாள் தன்னெல்லையைச் சென்றுகுறுகிற்றாயினும் என்னைக் கூடுமாயிற் சீவகனது திருத்தங்குமார்பங் கூடுவதாக, அவனையொழிய என்னிறையை யழிப்பாரில்லையென்று ஒருமனத்தையுடையளாயிருந்தாளென்க (ருஅ)

இன்பக்காரணமாம்விளையாட்டினுட்
டுன்பக்காரணமாய்நட்புறப்பித்திடு
மென்பதேநினைந்தீர்மலர்மாலைத
னன்பினாலவலித்தழுதிட்டாள்.

உள்ளென்றது இருவர்மனமும் ஒன்றாய்நடக்கின்ற கடுநட்பினை.

இ - ள். குணமாலை, இன்பத்துக்குக்காரணமாங் கடுநட்புத்தானே பகைக்குங் காரணமாய் ஒருவிளையாட்டினால் நட்பினைத்துறப்பிக்குமென்கின்ற பழவார்த்தையையேநினைந்து வருந்தியழுதாளென்க.

அது கடுநட்புப்பகைகாட்டுமென்னுமொழி. இனி விளையாட்டினுள் அவ்விளையாட்டுத்தானே துன்பக்காரணமாய் இன்பத்தைத் துறப்பிக்குமென்ற பழமொழியுமாம். அது விளையாட்டே சலமாமென்னும் பழமொழி. (ருக)

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், இடையியல், உக.

† " " " ருO.

தன்னைந்தீம்புனலாடியதண்மலர்
வண்ணவார்தளிர்ப்பிண்டியினடிக்
கெண்ணியாயிரமேந்துபொற்றமரை
வண்ணமாமலரேற்றிவணங்கினாள்.

இந்நட்பினைப்பிரித்த தீவினைநீங்கும்வழி யிதுவென்றெண்ணி.

இ-ள். அங்ஙனம்வருந்தினவள் புனலாட்டுவேண்டி எண்ணிப் பிண்டியினடிக்கு ஆயிரம்பொற்றமரையையும் ஒழிந்தமலரினையுமேற்றி வணங்கினாளென்க.

புனலாட்டப்போகின்றவள் இப்பிரிவிற்குப் பிராயச்சித்தம்பண்ணினாள். (௬0)

ஆசைமாக்களொடந்தணர்கொள்கென
மாசைமாக்கடன்மன்னவனுடலின்
மீசைநீள்விசும்பிற்றலைச்சென்றதோ
ரோசையாற்சனமொண்ணிதியுண்டதே.

மாசை - பொன். ஆடுதல் - பிறத்தல். மிசை - மீசையெனவிகாரம். *"உண்டற் குரிய வல்லாப் பொருளை-யுண்டன போலக் கூறலு மரபே" என்றதனால் உண்டதென்றார்; "குணனுணப்பட்டோர" என்றாற்போல.

இ-ள். மாக்களோடு அந்தணரும் கொள்வாராகவென்று மன்னவன் பெரியதொருகடலாகப் பொன்னிலே பிறத்தலின், அச்சனம் விசும்பிடத்திலே சென்றதோரோசையோடே அந்நிதியத்தைக் கைக்கொண்டதென்க.

இனிப் பொன்னாகிய பெரியகடலை யாளுதலினென்றுமாம். ஆளுதல் - தானமிடுதல். (௬௧)

மகரவெல்கொடிமைந்தனைவாட்டிய
சிகரச்செவ்வரைத்தீங்கிழப்பொன்னெயி
ளிகரினேமிதனீணகர்க்காகென
நகரநாலிருகோடிநயந்ததே.

இ-ள். நகரிலுள்ளார காமனைவாட்டிய † நேமிஸ்வாமிகளுடைய பொன் மதிலையுடைத்தாகிய செவ்வரைபோலும் ஸ்ரீகோயிலுக்கு ஆவதாகவென்றுசொல்லி எட்டுக்கோடிபொன்னை நீராடுதானமாகக் கொடுத்தாரென்க.

இனிக் காமனைவாட்டிய பொன்னெயிலையுடைய நேமீசுவரருமாம். அளித்ததும் பாடம். (௬௨)

வேறு.

உவாமுதலிரவலர்க்குடைமையுய்த்தலா
லவான்றுதற்கூப்பியகனகமாழையாற்
றவாவினையடைகனைதயங்குசிந்தைநீ
ரவாவெனுமுடைகடலடைக்கப்பட்டதே.

* தொல்காப்பியம், பொருளதிகாரம், பொருளியல், ௧௯.
† ௨௨-வது தீர்த்தகரர்.

இ - ள். இரவலர்க்குப் பொன்னையொழிய யானைமுதலிய வுடைமைகளை முற்படக்கொடுத்தவர்கள் பின்பும் அவ்விரவலர் காலடியிலே குவித்த பொற்கட்டியாலே அவருடைய கெடாத தீவினையாலுண்டாகிய சிந்தாகுலமென்னு நீராலேஅடைகளை யுடைந்த ஆசையென்னுங்கடல் அடைக்கப்பட்டதென்க. (௬௩)

வே று.

சீரரவச்சிலம்பேந்துமென்சீறடி
யாரரவக்கழலாடவரோடும்
போரரவக்களம்போன்றுபொன்னார்புன
னீரரவம்விளைத்தார்நிகரில்லார்.

உவமவுருபு வினையெச்சமும் பெயரெச்சமுமாயேநிற்றலின், போன்று போலவெனத்திரிந்தது. புனலென்றது யாற்றினை; ஆகுபெயர்.

இ - ள். பொன்னிறைந்தயாறு களத்தையொக்கும்படி நிகரில்லாராகிய சிலம்பேந்தின சீறடியையுடையார் அரவக்கழலாடவரோடுங்கூட நீரரவத்தைவிளைத்தாரென்க. (௬௪)

கார்விளையாடியமின்னனையார்கதிர்
வார்விளையாடியமென்முலைமைந்தர்
தார்விளையாட்டொடுதங்குபொங்கிய
நீர்விளையாட்டணிநின்றதையன்றே.

இ - ள். மைந்தர்தாரோடே, காரிலேநுடங்கிய மின்னையொப்பாருடையகச்சணாவிய முலைவிளையாட்டு நிலைபெறாநின்று மிக்க நீர்விளையாட்டினழகு இடைவிடாதுநின்றதென்க. (௬௫)

வே று.

விடாக்களிவண்டுணவிரிந்தகோதையா
படாக்களியிளமுலைபாயவிண்டதார்க்
கடாக்களிற்றெறூழ்வலிக்காளைசீவக
னடாக்களியவர்தொழில்காணவேகினான்.

காளை - நந்தட்டன்.

இ - ள். களிவண்டு விடாதேயுண்ணும்படி விரிந்த கோதையருடைய படாமுலைபாய்தலால் விண்ட தாரையுடைய சீவகன் ஒழுக்கக்கேடு பண்ணாத களிப்பையுடையவர் விளையாடுந்தொழிலைக் காணும்படியாகக் காளை அவ்விடத்தினின்றும் போனானென்க.

என்றது: சுண்ணந்தேறுகின்ற காலத்திருந்த நந்தட்டன், சீவகன் நீர்விளையாட்டின் விநோதங்காணப்போதற்குத் தானுந் தனக்குக் கூடுமவர்களுமாக வேறுபோயினானென்றவாறு. இவன்போகவே விநோதத்திற்குக்கூடும் புத்திசேனனும் ஒழிந்தோருஞ் சீவகனைக் கூடினாராம். இக்கவியை "இவையின்னனவும் பிறவும்" என்னுங்கவியோடே முடிக்க. (௬௬)

வேறு.

ஒன்றேயுயிரையுடையீரொருவிப்போமினிவள்க
ணன்றேகூற்றமாகியருளாதாவிபோழ்வ
தென்றேகலையுஞ்சிலம்புமிரங்கவினவண்டார்ப்பப்
பொன்றேய்கொடியின்னடந்துபுனல்சேர்பவளைக்காண்மின்.

இதுமுதல் அங்ஙனம் வேறுபோயினர் தம்மிற்கூறுகின்றனவாம்.

இ - ள். இவள்கண்ணல்லவோ கூற்றமாகி உயிரைப் போக்குகின்றதாதலாற் சேமவுயிரின்றி ஒருயிரையுடையீர், நீங்கிப்போமினென்றே கலையுஞ்சிலம்புமிரங்க வண்டார்ப்பக் காமவல்லிபோல நடந்துசென்று புனலைச்சேர்பவளைக் காண்மினென்க. (௬௭)

அழல்செய்தடத்துண்மலர்ந்தவலங்கன்மாலையதனை
நிழல்செய்நீர்கொண்டேர்ப்பநெடுங்கண்ணிணையினோக்கிக்
குழையும்பூணுநாணுங்கொழுநனுவப்பவணிகென்
றிழைகொள்புனலுக்கீயுமிளையோணிலைமைகாண்மின்.

கொழுநன் - வருணன்.

இ - ள். அழலையுடையதடத்திலேமலர்ந்த அசைகின்ற பொன்னரிமாலையைத் தெளிந்தநீர் தானேகொண்டுபோக அதனைநோக்கி நின்கொழுநன் நின்னை விரும்பும்படி பூண்பாயாகவென்று குழைமுதலியவற்றையும் புனலுக்குக்கொடுக்கும் இளையோள்தன்மையைக் காண்மினென்க. (௬௮)

கோலநெடுங்கண்மகளிர்கூந்தல்பரப்பியிருப்பப்
பீலிமஞ்ஞைநோக்கிப்பேடைமயிலென்றெண்ணி
யாலிச்சென்றுபுல்லியன்மைகண்டுநாணிச்
சோலைநோக்கிநடக்குந்தோகைவண்ணங்காண்மின்.

இ - ள். மகளிர் பீலிமஞ்ஞையினுடலைக்கண்டு தங்கூந்தலை உலரும்படி பரப்பியிருப்ப, அதன்பெடை அவரைத் தன்றோகைமயிலென்று கருதிச் சென்று புல்லி அல்லாமைகண்டு நாணி நடவாநிற்கும்; இங்ஙனமயக்கும்படியிருந்த தோகைபோல் வாள்வடிவைக் காண்மினென்க.

இதுபுல்லவிருத்தலிற் றோகையென்றார். இனி நாணவெனத்திரித்து, மகளிர் கூந்தலைப்பரப்பியிருப்பப் பேடைமயில் அவர்களை நோக்கித் தன்பீலிமஞ்ஞையென் றெண்ணிப் புல்லி அல்லாமைதனைக்கண்டுநாண, அதுகண்டு தன்பெடை தன்னை யறிந்து புணரும்படி சோலையைநோக்கிப்போகின்ற தோகையின்வண்ணத்தைக் காண்மினென்றுமாம். (௬௯)

மின்றெப்புடையபைம்பூணீருள்வீழ்க்கா
ளன்னப்பெடையேதொழுதேனன்னைகொடியள்கண்டா
யென்னையடிமைவேண்டினுடித்தாவென்றிறைஞ்சிப்
பொன்னங்கொம்பினின்றாள்பொலிவின்வண்ணங்காண்மின்.

இது தோழிவார்த்தை. அன்னப்பெடையென்றது தலைவியை. அன்னை-தோழிதாய். என்று - என்ன.

இ - ள். பூண்வீழக்காணுளாய்ப் பெடையே, தொழுதேன் தாய்கொடியளாதலான், என்னையடிமையாக வேண்டின் நீராடித்தாவென்று அவள்கூற, அதற்குநாணி இறைஞ்சிநின்றாள்; அவ்வண்ணத்தைக் காண்மினென்க.

ஈரசைதலிற் கணடிலள். (எ0)

தூமங்கமழுங்கோதைதொடுத்ததுயரிமுலையாத்
தேமென்கீதம்பாலாச்சுரந்துதிறத்தினூட்டிக்
காமக்குழவிவளர்ப்பக்கணவன்புனலுணீங்கிப்
பூமென்பொழிலுக்கிவாவான்புகம்சிகாண்மினினிதே.

காமக்குழவி - காமத்தையுடைய இளமைச்செவ்வி, அது காமமாகிய பிள்ளையை வளர்ப்ப அவன்வாயிலாகச் சென்றானென்றாற்போலவு நின்றது.

இ - ள். கோதைபோல்வாள் தொடுத்தநரம்பு முலையாக, அவற்றிற் றோற்றிய கீதம் பாலாகச் சுரந்தூட்டிக் காமக்குழவியைவளர்ப்ப, அதுகேட்டுக் கணவன்புனலினின்றுநீங்கிப் புணர்ச்சிவேட்கையாற் பொழிற்குப்போகின்றான் விருப்பம் இனிது காண்மினென்க.

இதனால் முன்னே குளித்தேறிக் கூட்டத்தினைக்குறித்தீ யாழ்வாசித்தமை கூறினர். (எக)

கடலமபவளம்மணையிற்கனபொற்கயிற்றிற்காய்பொன
மடலங்கமுகினூசன்மடந்தையாடநுடங்கி
நடலைந்நடுவின்மகளிர்நூக்கப்பரிந்தகாசு
விடலில்விசும்பின்மின்போன்மின்னிவீழ்வகாண்மின்.

இ - ள். கனத்த பவளப்பலகையிற்கோத்த பொற்கயிற்றாற் கமுகிலிட்டவூசலை மடந்தை நுடங்கியாடும்படி பொய்யான இடையினையுடைய மகளிர்நூக்க, அவர் கைதீண்டியற்றகாசு விசும்பினின்றும் விடுதலின்றி வீழ்கின்ற மின்போல மின்னி வீழ்கின்றவற்றைக் காண்மினென்க. (எஉ)

நானநீரிற்கலந்துநலங்கொளபூம்பட்டொளிப்ப
மேனிதோன்றவிளங்கிவெளிப்பட்டதற்குநாணி
மானமகளிர்போலமணிமேகலைகள்பேசாத்
தானந்தழுவிக்கிடப்பச்செல்வோடன்மைகாண்மின்.

இ - ள். பூம்பட்டு நானத்தையுடைய குளிக்கின்ற நீராலேநனைந்து உடம்பிலே யொடுங்குதலிற் றோன்றவிளங்கித் தம்மேனி வெளிப்பட்டதற்குநாணி மானத்தையுடைய மகளிரைப்போல மேகலைகள் பேசாதே யல்குலைத்தழுவிக்கிடப்பப் போகின்றவள் தன்மையைக் காண்மினென்க.

நனைதலிற் பேசாதபடி பட்டழுந்திற்று. (எ௩)

தீம்பாற்பசியினிருந்தசெவ்வாய்ச்சிறுபைங்கிளித
னோம்புதாய்நீர்குடையவொழிக்கும்வண்ணநாடிப்
பாம்பாலென்னவெருவிப்பைம்பொற்றோடுகழலக்
காம்பேர்தோளிநடுங்கிக்கரைசேர்பவளைக்காண்மின்.

இ - ள். பசியாற் பாலுண்டற்கிருந்தகிளி தன்னைப்பரிகரிக்கின்றதாய் தன்பசியை யறியாது நீர்குடைதலாலே, அவளைத் தவிர்க்குந்தன்மையிதுவென்றுநாடிப் பாம்பென்ன, அக்காம்பேர்தோளி அதற்கு வெருவி நடுங்கித் தோடுகழலவந்து கரைசேர்பவளைக்காண்மினென்க. (எச)

துணையிற்றோகைமஞ்ஞையீயற்கிவரும்வகைபோன்
மணியார்வளைசேர்முன்கைவலனுமிடனும்போக்கி
யிணையிற்றோழிமார்களிறுமாலிடையென்றிரங்க

இ - ள். பேடையில்லாதமீலிமயில் சுற்றிப்பறக்கின்ற ஈயலைப்பிடித்தற்கு அவற்றின்மேற்செல்லுங்கூறுபாடுபோலத் தோழிமாரிரங்கும்படி கோதை கையிற் பந்தை இடத்திலும்வலத்திலும்போக்கி அவற்றின்மேற்சென்றாடும் அவளைக்காண் மினென்க. (எரு)

திருவிற்சாயலொருத்திசேர்ந்தகோலங்காண்பான்
குருதித்துகிலின்னுறையைக்கொழும்பொன்விரலினீக்கி
யரவமுற்றும்விழுங்கியுமிழும்பொழுதின்மதிபோன்
றுருவக்கண்ணடிகாண்மின்றோன்றும்வகையே.

இ - ள். திருப்போலுஞ் சாயலையுடையாளொருத்தி தான்கொண்டகோலத்தினைக் காணவேண்டிக் கண்ணடிக்கிட்ட செம்பட்டுறையை விரலாலே நீக்காநிற்க, அக்கண்ணடி செம்பாம்பு முழுதும்விழுங்கிக் காலுங்காலத்து மதியையொத்துத்தோன்றும் வகையைக் காண்மினென்க.

பொன் - ஆழி. நீக்கி - நீக்க. (எசு)

பலகைசெம்பொனாகப்பளிக்குநாயாப்பரப்பி
யலவனாடும்வகைபோலரும்பொற்கவறங்குருளக்
குலவும்பவளவுழக்கிற்கோதைபுரளப்பாடி
யிலவம்போதேர்செவ்வாயிளையோர்பொருவார்க்காண்மின்.

பாடி-தாயங்கூறி; போகட்டென்றுமாம்; அது மலைநாட்டார்வழக்கு. உழக்கு - பிடித்துப்போகடாமற் கவறிட்டு உருட்டுமுழக்கு.

இ - ள். இளையோர் பொன்னாலேபலகையாகப் பளிங்காலேநாயாகச் செய்தவற்றைப்பரப்பிப் பாடிக் கோதையசையும்படி அலவனாடும் வகைபோலே உருண்டகவறு தன்னிடத்தேயுருளும்படியாகப் பண்ணின பவளவுழக்காலே பொருவாரைக் காண்மினென்க. (எஎ)

தீம்பாலடிசிலமிர்தஞ்செம்பொன்வண்ணப்புழுக்க
லாம்பாலக்காரடலையண்பனீரூறமிர்தந்
தாம்பாலவரைநாடித்தந்தூட்டயர்வார்சொரிய
வோம்பாநறுநெய்வெள்ளமொழுகும்வண்ணங்காண்மின்.

அமிர்தம் - இலையொழிந்தசோறு. வண்ணப்புழுக்கல் - பருப்புச்சோறு. ஆம்பால் - இவற்றிற்கெல்லாங் கூடுதற்குரியபால். அக்காரடலை - அக்காரத்தினையடப்பட்டது; அக்காரம் - சருக்கரை. அடிப்பல் நீரூறமிர்தம் - புளிங்கறி.

இ - ள். ஊட்டயர்வார் தாம் உண்ணும்பகுதியிலுள்ளோரை நாடித்தந்து அவர்களுக்குப் பாலடிசின்முதலியவற்றைச்சொரிதலின் அவற்றையுண்டற்குவார்த்தநெய் வெள்ளமாயொழுகுந் தன்மையைக் காண்மினென்க.

அக்காரையாக அடப்பட்டதுமாம். (எஅ)

அள்ளற்சேற்றுளலவனடைந்தாங்கனையமெய்யிற்
கள்செய்கடலுளிளமைக்கூம்பிற்கடிசெய்மாலைத்
துள்ளுதூமக்கயிற்றிற்பாய்செய்துயரிநிறீஇய
முள்ளுகாற்றுவுழலுங்காமக்கலனுங்காண்மின்.

கள்செய்கடல் - கள்ளுண்டார் தன்மையைச்செய்கின்ற நீர்விளையாடுகின்றதிரள். கடல் - ஆகுபெயர். * "அடாக்களியவர்" என்றார் முன்னும்.

இ - ள். இளமையாகிய கூம்பிற்கட்டின மாலையாகிய கயிற்றோடுசேர்ந்த தூமமாகியபாயைவிரித்து அதனையுயர்த்து நிதியமே நினைக்கப்படுகின்றகாற்றாகக் கொண்டு கள்செய்கடலிலே மெய்யுடனேயோடுங் காமக்கலத்தையுங் காண்மினென்க.

கலம் - மரத்தை. (எகூ)

தாய்தன்கையின்மெல்லத்தண்ணென்குறங்கினெறிய
வாய்பொன்னமளித்துஞ்சுமணியார்குழவிபோலத்
தோயுந்திரைகளலைப்பத்தோடார்கமலப்பள்ளி
மேயவகையிற்றுஞ்சும்வெள்ளையன்னங்காண்மின்.

இ - ள். தாய் தன்கையினாலே குறங்கிலே மெல்லத்தட்ட அவ்வசைவால் அமளியிலேதுயிலுங் குழவியைப்போலச் செறியுந்திரைகள்வந்தசைப்பக் கமலப்பள்ளியிலே மனம்பொருந்தினவகையிலே துயிலுமன்னத்தைக் காண்மினென்க.

காரன்னமுண்மையின், வெள்ளையன்னம் இனஞ்சுட்டினபண்பு. (அ0)

நீலத்துகிலிற்கிடந்தநிழலார்தழலம்மணிகள்
கோலச்சுடர்விட்டுமிழக்குமரியன்னங்குறுகிச்
சாலநெருங்கிப்பூத்ததடந்தாமரைப்பூவென்ன
வாலிச்சுடர்கள்கௌவிமுழங்கும்வண்ணங்காண்மின்.

* குணமாலையாரிலம்பகம், கூகூ.

இ - ள். நீலத்துகிலிற்கிடந்தமணிகள் சுடராமிகக்காலுதலின் அறியாதவன்னம் தாமரைப்பூவென்றுகருதி ஆலிச்சென்றுகுறுகி அதன்சுடர்களைக்கவ்வி அவையகப்படாமையினால் வருந்துந்தன்மையைக் காண்மினென்க.

துகிலுக்கு இலையுவமை. (அக)

வடிக்கண்மகளிர்வைத்தமரகதநன்மணிக
ளொடிக்கச்சுடர்விட்டுமிழவுழையம்பிணையொன்றணுகிக்
கொடிப்புல்லென்றுகறிப்பானுவிற்குலவிவளைப்பத்
தொடிக்கட்பூவைநோக்கிநகுமாறெளிதோகாண்மின்.

இ - ள். மகளிர்வைத்தமரகதமணிகள் கையாலொடிக்கலாம்படி சுடரை விட்டுக்காலுதலின் உழைமான்பிணையானதொன்று அதனை அறுகம்புல்லென்றுகருதி அணுகிக் கறித்தற்குத் தான் கழுத்தைவளைத்து நாவாலேவளையாநிற்க, அதனைத் தொடிபோல் வட்டமான கண்ணையுடையபூவைநோக்கி நகுமாறு எளிதாயிருந்ததனைக் காண்மினென்க.

ஓ - வியப்பு. (அஉ)

இவையின்னனவும்பிறவுமெரிபொன்னாரமார்பன்
கவிஞர்மதியினகன்றுகாட்சிக்கினியவிழவிற்
சுவையின்மிகுதியுடையசோர்வில்பொருளொன்றதுதா
னவையினகலநோக்கிநயந்தவண்ணமொழிவாம்.

மதியின், இன் - நீக்கம். சோர்வில்பொருள் - * பஞ்சநமஸ்காரம். ஒன்று - ஒருசீவன். நவையினகல - நாயுடம்புநீங்க. நோக்கி - நோக்க.

இ - ள். அங்ஙனம் வெவ்வேறுபோயினாரெல்லாருங் காண்மினென்றுகூறும்படி இத்தன்மையவான இவையும்பிறவும் கவிகளாற்புகழவரியவாய்க் காண்டற்கினிய நீர்விழவிலே ஆரமார்பன் ஒன்று நவையினகலும்படி சோர்வில்பொருளால் நோக்க, அதுதான் அப்பொருளால் விரும்பினதன்மையைக் கூறுவாமென்றுரைக்க. (அ௩)

வேறு

க. அந்தணாக்காக்கியசோற்றுக்குவாலினை
வந்தொருநாய்நதுவிற்றதுகண்டவ
ருய்ந்தினிப்போதியெனக்கனன்றோடினர்
சிந்தையினின்றெளிர்தீயனநீரார் (அ௪)

உ. கல்லொடுவென்றடிகையினர்காற்றினும்
வல்விரைந்தோடிவளைத்தனராகிக்
கொல்வதுமேயினர்கொன்றிடுகூற்றினும்
வல்வினையார்வலைப்பட்டதையன்றே. (அ௫)

* பஞ்சநமஸ்காரம்—ஐந்துமந்திரம்

ஙு. வேள்வியினுண்டிவிலக்கியநீவிர்க
ளாளெனக்கென்றதறைவதுமோரார்
தாளிறமூர்க்கரதுக்கலிற்றன்றெறை
நீள்கயம்பாய்ந்ததுநீந்துதலோடும்.

இவைமூன்றுமொறுதொடர்.

க. ஓடினர் - ஓடி. அக்கினிசித்தரென்று கூறுவாராதலிற் றம்முடையசிந்தை யிலே விடாதுநின்று விளங்குகின்ற தீப்போன்றநீராரெனக் கொடுமைகூறினர்.

உ. பட்டதை, ஐ - பகுதிப்பொருள்விகுதி.

ஙு. ஆளென்றுகதறுகின்றவோசை இப்பிறப்பில் என்னுண்டியை விலக்கின நீங்கள் மறுபிறப்பில் எனக்காளாவீரென்முற்போன்றிருக்கச் சாற்றுநிற்கின்றதன் மையையுமோராராய், விலக்கினர் விலக்குண்டவர்க்கு அடிமையாய்ப் பிறப்பரென் பதுணராராதலின்.

இ - ள். தீயனநீராராகிய அந்தணர்க்காக்கிய சோற்றுத்திரளை ஒருநாய்வந்து கவ்விற்று; அவரதுகண்டு இனிப் பிழைத்துப்போவையென்றுகூறி ஓடியெடுத்த கல்லையுந்தடியையுங் கையிலேயுடையராய்க்கனன்று காற்றினுங் கடுகவிரைந்தோடி, அது நீள்கயத்தைப் பாய்ந்துநீந்தினவளவிலே வளைத்தனராகி அம்மூர்க்கர் அறை வதுமோராராய்த் தாளிறவடித்தலின், அது வல்வினையார்வலையிலே அகப்பட்டே விட்டது; அதனைப் பின்னருங் கொன்றிடுகூற்றிற்காட்டிற் கொல்லுந்தன்மையை மேவினரென்க. (அகூ)

வேறு.

மட்குடமல்லனமதியின்வெள்ளிய
கட்குடக்கன்னியரிருவரோடுடன்
றுட்கெனயாவருநடுங்கத்தூய்மையி
லுட்குடைக்களிமகனொருவன்றோன்றினன்.

மட்குடமல்லனவாகியகட்குடம்; கள்ளின்கடுமைபொறுத்தற்கு வெள்ளியாற் சமைத்தகுடம்.

இ - ள். களிமகனொருவன் கட்குடஞ்சுமந்த கன்னியராகிய மனைவியரிருவ ருடனே யாவருந்துணுக்கெனத் தோன்றினனென்க. (அஎ)

தோன்றியபுல்செய்வேலவற்குத்தூமது
வான்றிகழ்கொடியனார்வெள்ளிவட்டகை
யூன்றிவாய்மடுப்பவோர்முறையுட்டிங்கதிர்
கான்றிடுகதிர்மதியிரண்டுபோன்றவே.

இ - ள். அங்ஙனந்தோன்றிய அவற்கு மின்னுக்கொடிபோலுமனைவியரிருவ ரும் வெள்ளிவட்டகையை வாயிலேயழுத்தித் தூமதுவைக்கொடுப்ப, அத்தன்மை ஒருமுறையிலே கதிரைச்சொரிகின்ற மதியிரண்டையொத்தனவென்க.

இஃது இல்பொருளுவமை.. (அஅ)

வேறு.

அழலம்பூநறவார்ந்தழலூர்தரச்
சுழலுங்கண்ணினன்சோர்தருமாலையன்
கழலன்காழகம்வீக்கியகச்சையன்
மழலைச்சொற்களின்வைதிவைகூறினான்.

இ - ள். தீம்பூவாலாக்கின நறவை அங்ஙனமருந்துதலாலே வெம்மைபரக்கும்படி சுழலுங்கண்ணினனாய் மாலையினனாய்க் கழலனாய் வீக்கினகருங்கச்சையனாய் மழலைச்சொற்களாலே வைது மேல் இவ்வார்த்தையைக்கூறினானென்க. ()

புடைத்தென்னையினைப்போன்றுவித்தீருயிர்.
கடுக்கப்பேர்த்தனிர்தம்மின்கலாய்க்குறிற்
றடக்கைமீளிமைதாங்குமினன்றெனி
னுடைப்பென்கட்குடமென்றுரையாடினான்.

இ - ள். என்னையயடித்து உயிரைப்போக்கினீர் அவ்வுயிரை மீட்டனிராய்த் தருவீராக, அதுசெய்யாது கலாய்க்கநினைக்கின், என்கையில்வலியைத் தாங்குவீராக, அவ்விரண்டுமெல்லவாயின், கட்குடத்தை யுடைப்பேனென்றுகூறினானென்க.

கட்குடமுடைத்தல் - சங்கேதம். கடுக, கலாய்க்க - விகாரம். (கூ0)

வேறு.

நல்வினையொன்றுமிலாதவனான்மறை
வல்லவர்தம்மைவருத்தலின்வல்லே
செல்சுடர்வேல்வலசீவகசாமிசென்
றல்லலகற்றியருந்துயர்தீர்த்தான்.

இ - ள். நல்வினையொன்றுஞ் செய்தறியாதவன் அந்தணரைவருத்தலின் அதுகண்டு கீர்த்தியால் எங்குஞ்செல்கின்ற வேலைவல்லசீவகன் வல்லேசென்று அக்களிமகன் நாயிழுந்தவல்லலை முதற்போக்கிப் பின்பு அந்தணர்படுகின்றதுயரை நீக்கினானென்க. (கூக)

மீண்டவரேகுதலும்விடையன்னவ
னீண்டியதோழரொடெய்தினனாகி
மாண்டவெயிற்றெகினம்மறமில்லது
காண்டலுங்கட்கினியான்கலுழ்ந்திட்டான்.

இ - ள். அவ்விருதிறத்தோரும் மீண்டுபோனவளவிலே கட்கினியானாகிய விடையன்னவன் தோழருடனேயணுகினனாய் நாய் நெஞ்சின்மறமில்லாததனைக் கண்டவளவிலே அருளான் அழுதானென்க.

அருளான், இவனை விடையென்றார். இவன் வினோதமொழிந்துநிற்றலிற் றோழர்வந்து திரண்டமைதோன்ற ஈண்டியவென்றார். எனவே தம்பியர்வந்தமையும் பெறுதும். (கூஉ)

நாயுடம்பிட்டிவணந்தியபேரொளிக்
காய்கதிர்மண்டலம்போன்றொளிகால்வதோர்
சேயுடம்பெய்துவைசெல்கதிமந்திர
நீயுட்டம்பட்டுநினைமதியென்றான்.

நந்திய - வளர்ந்த.

இ - ள். யான்கூறுகின்றமந்திரத்தை நீயொருப்பட்டு நினைவாயாக; நினைத்தால் இவ்விடத்தே நாயுடம்பைப்போகட்டுச் செல்கதியிற் றிங்கள்போலொளிகால்வதோர் பெரியவுடம்பைப் பெறுவையென்றானென்க. (கூரு)

என்றலுந்தன்செவியோர்த்திருகண்களுஞ்
சென்றுகுநீரொடுசெம்மலைநோக்கி
யொன்றுபுவால்குழைத்துள்ளுவப்பெய்தலுங்
குன்றனையான்பதங்கூறவலித்தான்.

இ - ள். என்றுகூறினவளவிலே தன்செவியாலேகேட்டுவிசாரித்து இருகண்ணும் வடிந்துவீழ்கின்றநீருடனே தலைவனைநோக்கி மனமொருப்பட்டு அதுதோன்ற வால்குழைத்து மகிழ்ந்தவளவிலே, சலியாதவன் இது காலமென்றறிந்து மந்திரத்தைக் கூறத்துணிந்தானென்க. (கூசு)

வேறு.

க. நற்செய்கையொன்றுமில்லார்நாளுலக்கின்றபோழ்தின்
முற்செய்தவினையினீங்கிநல்வினைவிளைக்கும்வித்து
மற்செய்துவீங்குதோளான்மந்திரமைந்துமாதோ
தற்செய்கைதளிர்ப்பத்தாழ்ந்தாங்கதன்செவிச்செப்புகின்றான். ()

உ. உறுதிமுன்செய்ததின்றியொழுகினேனென்றுநெஞ்சின்
மறுகனீபற்றொடார்வம்விட்டிடுமோணவச்சத்
திறுகனீயிறைவன்சொன்னவைம்பதவமிர்தமுண்டாற்
பெறுதிநற்கதியையென்றுபெருநவையகற்றினானே. (கூசு)

ங. மனத்திடைச்செறும்புநீக்கிமறவலையாகியைந்து
நினைத்திடுநின்கணின்றநீணிறவினையினீங்கி
யெனைப்பகலேறும்வில்லாவின்பமேபயக்குமென்றாற்
கனைப்பதவமிர்தநெஞ்சினையின்றுவிட்டகன்றதன்றே.

இவைமூன்றுமொருதொடர்.

க. நீங்கி - நீங்க.

உ. மறுகல் - சுழலாதேகொள். பற்று - உள்ளதன்மேற்று. ஆர்வம் - பெறக்கடவதன்மேற்று. விட்டிடு -.ஒருசொல். இறுகல் - நிலைபெறுதேகொள்.

ங. செறும்பு - செற்றம். நீணிறவினை - கரியபாவவினை.

இ - ள். அங்ஙனந்துணிந்ததோளான் இம்மையில் நற்செய்கையொன்றுமிலாதார் வாழ்நாள்கழிகின்றகாலத்து ஈண்டு அவர்செய்த தீவினையினின்றுநீங்க முற்செய்த நல்வினையை விளைக்கும்வித்தாகியமந்திரமைந்தையும் அவ்விடத்தே தாழ்ந்து அதன்செவியிலே செப்புகின்றவன் அம்மந்திரத்தின்செய்கைதழைக்கும்படியாக அதனை நின்மனத்திடைச்செறும்பை முதனீக்கிப் பின்பு இதற்குமுன்செய்த உறுதியின்றியேயொழுகினேனென்றுமறுகல்; பற்றையும் ஆர்வத்தையும்விடு; இறுகலென்று பெருநவையகற்றினன். அங்ஙனமகற்றி இறைவன்சொன்ன அமுதத்தையுண்டால் நின்கணின்ற நீனிறவினையினீங்கி நற்கதியைப்பெறுதி, அக்கதிதான் உள்ளநாளெல்லாம் நீங்காதவின்பத்தையேதருமாதலான் மறவலையாகி இவ்வைந்தினையும் நினைத்திடென்று உபதேசித்தாற்கு அதுவும் ஐந்தூதமாகிய அமிர்தத்தை நெஞ்சாலேயுண்டு இவ்வுடம்பைவிட்டுப்போயிற்றென்க. (கூஎ)

வேறு.

பாணிமுகமெனும்பான்மையி
னோடியாங்கொருயர்வரையுச்சிமேற்
கூடிக்கோலங்குயிற்றிப்படங்களைந்
தாடுகூத்தரினையெனத்தோன்றினன்.

பரமாகமத்திற்கூறப்பட்ட உயிர்போமுகங்களிற் பாணிமுகமென்னுங் கதியாலேபோகை. பாணி - கை; கைம்முகமாவது சுட்டுவிரலும் பெருவிரலுநீங்கினவிடம். அதுபோல முதல் நேரேயோடிப் பின் விலங்கியோடுதலாம்.

இ - ள். ஓடி வரையுச்சிமேலேபொருந்திக் கூத்தரைப்போலே கோலமெல்லாங்குயிற்றப்பட்டு வியக்கத்தோன்றினனென்க.

வெள்ளிமலையாதலின், உயர்வரையென்றார். (கூஅ)

ஞாயில்சூடியநன்னெடும்பொன்னகர்க்
கோயில்வட்டமெல்லாங்கொங்குசூழ்குழல்
வேயினன்னமென்றோளியர்தோன்றியங்
காயினார்பரியாளமடைந்ததே.

ஞாயில் - ஆகுபெயர்.

இ - ள். பொன்னகரிற் கோயிலுள்ளவரைப்பெல்லாம் மென்றோளியர்தோன்றித் தேவியராயினர்; அவ்விடத்தே ஒழிந்த பரிவாரமுஞ்சேர்ந்ததென்க.

பரியாளம் - பாகதம். (கூகூ)

மிடைந்தமாமணிமேகலையேந்தல்குற்
றடங்கொள்வெம்முலைத்தாமரைவாண்முகத்
தடைந்தசாயலரம்பையர்தம்முறை
மடங்கலேறனையான்மகிழ்வெய்தினன்.

இ - ள். சிங்கவேற்றையொப்பான் அல்குலையும் முலையையும முகத்தையுஞ்சேர்ந்த சாயலையுமுடைய அரம்பையரிடத்தே மகிழ்ச்சியைப் பொருந்தினனென்க. ()

வேறு.

கற்றவைம்பதங்கணீராக்கருவினைகழுவப்பட்டு
மற்றவன்றேவனாகிவானிடுசிலையிற்றோன்றி
யிற்றதனுடம்புமின்னுவிடரொழித்தினியனாகி
யுற்றவனிலையுமெல்லாமோதியினுணர்ந்துகண்டான்.

நூல்கள் இந்திரவில் இன்னவாறுதோன்றுமென்று அதுதோன்றுமுறைமை கூறுவாகலின், அங்ஙனந்தோன்றுகின்றதேவர்க்கு அஃதுவமையாயிற்று. இக்கருத் தானன்றே *"வானிடு வில்லின் வரவறியா" என்றார்பிறரும். ஓதி- †அவதிஞானம்.

இ - ள். அவன்றான் கற்றபஞ்சநமஸ்காரமுநீராகத் தீவினைகழுவப்பட்டுச் சிலை போலத்தோன்றித் தேவனாகிப் போகட்டவுடம்பையும், இடரைக்கெடுத்துத் தனக் கினியனாய்த் தன்னைச்சேர்ந்த சீவகனிலையையுமெல்லாம் ஓதியாற் கண்டுணர்ந்தா னென்க.

இற்றவவ்வுடம்பும, உற்றவனிலைமையும் பாடம். (௧0௧)

வேறு.

இரும்பினீர்மைகெடுத்தெரிதீநிறத்
தரும்பொனாக்கியவாருயிர்த்தோழனை
விரும்பிவிண்ணிறுத்தொய்யெனத்தோன்றினான்
சுரும்புண்கண்ணிச்சுதஞ்சணனென்பவே.

இ - ள். அங்ஙனமுணர்ந்தவன் இழிந்தநிலையைக்கெடுத்து உயர்ந்தநிலையாக் கியதோழனைக் காட்சியைவிரும்பி விண்ணைக்கடந்து முன்னேவந்து கடுகத்தோன்றி னான்; அவன்பெயர் சுதஞ்சணனென்றுகூறுவரென்றாரென்க.

விண்ணறுத்தும், சுதஞ்சணனும் பாடம். (௧0௨)

ஓசனைநறும்புகைகமழவொண்ணிலா
வீசியகதிர்பரந்திமைக்குமேனியன்
மாசறுமணிமுடியிடைந்தமாலையன்
பூசுறுபருதியிற்பொலிந்துதோன்றினான்.

நறும்புகை ஓர் ஓசனைகமழாநிற்க இமைக்குமேனி; நிலாவைவீசியமதிபோலே விளங்குமேனியன் - சுதஞ்சணன். அவனுடைய முடிவந்துசேர்ந்த இயல்பினையு டையான் - சீவகன். என்றது இவனாசாரியனாதலிற் கண்டபொழுதே முடிதாளக் கினான். மேல் ‡"எந்தை" என்றும், §"அண்ணலேந்தி" என்றும், ||"காய்கதிர்

* நாலடியார், கடவுள்வாழ்த்து.

† அவதிஞானம் = நினைத்தால்தோன்றுவது.

‡ குணமாலையாரிலம்பகம், ௧0௫.

§ ,, ,, ௬0௮.

|| பதுமையாரிலம்பகம், ௬.

சுமந்து" என்றும், *"உரிமைதன்னுன் - ஆட்டி" என்றும், †"எரிபொனீண்முடி கவித்தனன்பவித்திரற்கெழுதே" என்றும், ‡"தாளாரவேத்தி" என்றும், §"களிப் புற்றான்" என்றுங்கூறுதலின், இதுவேகருத்தாம். பூசுறுபரிதியின் - கைசெய்த பரிதிபோல.

இ - ள். மேனியனது முடிமிடைந்தசீவகன் அப்பொழுது பரிதிபோலத் தோன்றினனென்க.

விளக்கத்தானும், மதியைத்தோற்றுவித்தலானும், பரிதியுவமை. இனி மேனி யனைய் மாலையனைய்ப் பரிதியிடத்தே தோன்றினனென்பாருமுளர். (௧0௩)

வேறு.

குன்றெனத்திரண்டதோளான்குறுகலுநகுமரனேக்கி
நின்றவனெடுங்கணென்றுமிமைப்பிலநிழலில்யாக்கை
யன்றியுங்கண்ணிவாடாதமரனேயென்றுதேறி
நன்றவன்வரவுகேட்பானம்பிநீயாரையென்றான்.

இ - ள். சுதஞ்சணனங்ஙனங்குறுகினவளவிலே சீவகனேக்கி முன்னின்றவ னுடையயாக்கை நிழலில்யாக்கையாயிருந்தது; அன்றியுங் கண்ணுஞ் சிறிதும் இமைத்தவில்லை; கண்ணியும் வாடாதென்று தேவனுதலைத்தேறி, அவன்வரவுநன்றாகக் கேட்கவேண்டி; நம்பி, நீயாரென்றானென்க.

யாரை, ஐ - அசை. அமரனேயாதறேறியும் பாடம். (௧0௪)

குங்குமக்குவட்டின்வீங்கிக்கோலம்வீற்றிருந்ததோளா
யிங்குநின்னருளிற்போகியியக்கருளிறைவனுகிச்
சங்கவெண்மலையின்மற்றுச்சந்திரோதயத்தினுச்சி
யங்கியானுறைவலெந்தையறிகமற்றென்றுசொன்னான்.

இன் - உவமப்பொருள். சங்கவெண்மலை - மலையின்பெயர். மற்று இரண்டும் அசை.

இ - ள். தோளாய், எந்தாய், யான் நின்னருளால் இங்குநின்றும்போய் அங்கே இயக்கருளிறைவனுகி மலையினுச்சியிற்சந்திரோதயமென்னு நகரிலே யிருப்பேன். அந்நிலைமை அறிவாயாகவென்று தேவன்கூறினனென்க. (௧0௫)

என்றவனுரைப்பக்கேட்டேவிமயமுநிகர்க்கலாற்றாப்
பொன்றருமாரிவண்கைப்புரவலன்புகன்றுநோக்கி
வென்றவருலகம்பெற்றவேந்துடையின்பமெல்லா
மின்றெனக்கெதிர்ந்ததென்றானெரியுமிழ்ந்திலங்கும்வேலான்.

* பதுமையாரிலம்பகம், ௪.
† பூமகளிலம்பகம், ௪0.
‡ முத்தியிலம்பகம், சீவகன்றுறவு, உ௧.
§ ,, கேவலோற்பத்தி, உ௪.

இ - ள். என்று அவன்கூறக்கேட்டு, இமயமுமொக்கமாட்டாத பெரியபொன்னை மாரிபோல எல்லார்க்குங்கொடுக்கும் வண்கையையுடைய புரவலனாகியவேலான் விரும்பிப்பார்த்து, சித்திக்ஷேத்திரத்தைப் பெற்ற சித்தபரமேஷ்டிகளுடைய இன்பமெல்லாம் இன்று எனக்குவந்ததென்றானென்க. (க௱௬)

சூடுறுகழலினாற்குச்சுதஞ்சணனிதனைச்சொன்னான்
பாடல்வண்டரற்றும்பிண்டிப்பகவனதிறைமைபோல
மூடியிவ்வுலகமெல்லாநின்னடித்தருவலின்னே
யாடியுட்பாவைபோனீயணங்கியதணங்கவென்றான்.

இ - ள். பகைவர்சூடுதலுறுங் கழலினாற்குச் சுதஞ்சணன் இதனைச்சொன்னான்; அது யாதெனிற் பகவனதிறைமைத்தன்மை இவ்வுலகெல்லாம் அகப்படுத்தினாற் போல நினதிறைமைத்தன்மையாலே உலகெல்லாமகப்படுத்தி அதிற்பல்லுயிருங் கண்ணாடியிற்பாவைபோல நீவருந்தியதொழிலுக்கு வருந்தும்படியாக நின்னடியிடத்தே தருவேனென்று சொன்னானென்க.

உள் - இடம். "மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே" என்றார்பிறரும். (க௱௭)

வாளொடுவயவரீண்டிவாரணத்தொழுவின்முற்றி
மீளிமைசெய்யின்வெய்யநண்பநின்னினைப்பதல்லா
னாளொடுபக்கநைந்துவீழினும்வீழ்தலில்லாக்
கோளுடைக்கிழமையொப்பாய்குறைவிலன்பிறவினென்றான்.

இ - ள். நாளோடு பக்கங்களுங்கெட்டுவீழினும் வீழுந்தன்மையில்லாத கோள்களினுடைய உரிமையோடொத்த உரிமையையுடையாய், வயவரீண்டி யானைத்தொழுவோடே யென்னைவளைத்து மீளிமைசெய்தாராயின், யான் விரும்பிய நண்பனே, நின்னை நினைப்பதல்லது பிறவாற்றான் ஒன்றுங்குறைவிலேனென்றானென்க.

அருமைநோக்கிச் செய்யினென்றான். அங்ஙனம் மேல்வருகின்ற ஊழ் இக்கருத்தினைப் பிறப்பித்துநின்றது. முற்றியெனவே சிறைகோடலன்றிக் கட்டுதலின்மையுணர்க. (க௱௮)

இன்னிழலிவரும்பூணினிருவிசும்பிவர்தலுற்றுப்
பொன்னெழுவனையதோளாம்புல்லிக்கொண்டினியகூறி
நின்னிழல்போலநீங்கேனிடர்வரினினைக்கவென்று
மின்னெழூஉப்பறப்பதொத்துவிசும்பிவர்ந்தமரன்சென்றான்.

இ - ள். சுதஞ்சணன் விசும்பிலேபோகக்கருதிச் சீவகனைப்புல்லிக்கொண்டு யான் நின்னிழல்போல நின்னை நீங்கேன் நினக்கு ஓரிடர்வந்ததாகில் என்னை நினைப்பாயாகவென்று பின்னும் இனியசொற்களைக்கூறி மின் மாயாதுபறக்கு நிலைபோலே அவன் விசும்பிலே உயர்ந்து பறந்துபோனானென்க. (க௱௯)

சொல்லியநன்மையில்லாச்சுணங்கனிவ்வுடம்புநீங்கி
யெல்லொளித்தேவனாகிப்பிறக்குமோவென்னவேண்டா
கொல்லுலையகத்திட்டூதிக்கூரிரும்பிரதங்குத்த
வெல்லையிற்செம்பொனாகியெரிநிறம்பெற்றதன்றே.

கூர்ப்பு - மிகுதி; எனறது, பொன்னுதற்கு வேண்டுஞ்செயகைகளை முன்னே யுடைய இரும்பென்றவாறு.

இ - ள். தானமுதலிய நன்மைகள் இம்மையிற்செய்யாத சுணங்கன் இவ்வு டம்பை நீங்கி இதற்குமுன்னர் நல்வினைவந்துதவி ஒருவனுபதேசித்த மந்திரத்தாற் றேவனாய்ப் பிறக்குமோவென்று உலகத்தார் கருதவேண்டா; உலையிலேயிட்டூதி உரு கினமுகத்து இரதத்தைக்குத்த, அதுமாற்றற்றபொன்னாய் விளங்குநிறத்தைப் பெற்ற தல்லவோ, இதுவும் அத்தன்மைத்தென்று கருதுகவென்றானென்க.

இது சொல்லெச்சம். முன் "பெருநவையகற்றினான்" என்றது உருகுகின்ற முகத்திற்குவமை. (கக0)

வேறு.

எரிமாலைவேனுதியினிறக்கிககாமனடிகணையாற்
றிருமாலைவெம்முலைமேற்றிளைக்குந்தேவர்திருவுறுக
வருமாலையெண்வினையுமகற்றியின்பக்கடலாக்கித்
தருமாலையல்லதியான்றலையிற்றாழ்ந்துபணிவேனே.

இ - ள். எரியொழுங்குபோலும் வேலின்முனைகளான் இரணியன் இராவ ணன் முதலாயினாரைக்கொன்று பின் காமனுக்குத்தோற்று அவனெய்தகணையாலே முலைமேற்றிளைக்குந் தேவர்களெல்லாம் ஸ்ரீமான்களாக, நீக்குதற்கரிய எண்வினைக ளையுநீக்கி வீட்டின்பத்தையுண்டாக்கித்தரும் அருகனையல்லது யான் தலையாற்றாழ்ந்து வணங்குவேனோவென்றானென்க.

* எண்வினையாவனவற்றை, † "எண்மாகவிழ்ந்தனர்" எனத் துறவிற்கூறுவர் விரிய. (கககக)

ஒன்றாயவூக்கவேர்பூட்டியாக்கைச்செறுவுழுது
நன்றாயநல்விரதச்செந்நெல்வித்தியொழுக்கநீர்
குன்றாமற்றாங்கொடுத்தைம்பொறியின்வேலிகாத்தோம்பின்
வென்றார்தம்வீட்டின்பம்விளைக்கும்விண்ணோருலகின்றே.

வென்றார் - சித்தபரமேஷ்டிகள்.

இ - ள். பகிராத முயற்சியாகிய ஏரைப்பூட்டி, உடம்பாகியசெய்யைத் தவத் தாலேவருந்துவித்து, விரதமாகிய செந்நெல்லை விதைத்து, ‡ சாரித்திரமாகியநீரை வற் றாமற்பாய்த்தி, ஐம்பொறியாகியவேலியைப் புலனாகியபசுக்கள் பிரியாதபடிகாத்துப் பரிகரிப்பின், அந்நிலை முதற் சுவர்க்கத்தினைத்தந்து, பின் வீட்டினைவிளைக்குமென்றா னென்க.

இன்-சாரிஸ்ய. "சொல்லிய" முதலியமூன்றுகவியுஞ் சீவகன் றோழனைநோக்கிக் கூறினான். (ககஉ)

---

* எண்வினையாவன: ஞானவரணீயம், தரிசனவரணீயம், வேதநீயம், மோக நீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், அந்தராயம்எனவிவை.

† முத்தியிலம்பகம், கேவலோற்பத்தி, கரு.

‡ சாரித்திரம் - நல்லொழுக்கம்.

வேறு.

இத்தலையிவர்களேகவிமயகடடரவுசுற்றி
யத்தலையலறமுந்நீர்கடைந்தவாரவமொப்ப
மைத்தலைநெடுங்கண்ணாருமைந்தருமறலியாட
மொய்த்திளவன்னமார்க்குமோட்டிரும்பொய்கைபுக்கார்.

இனிப் பொய்கைகளில் விளையாடுதல்கூறுகின்றார். அத்தலை - அக்காலத்து.

இ - ள. சீவகனுந் தோழரும் இவ்விடத்துநின்றும் போகாநிற்க, நகரின்மகளிருமைந்தரும் அக்காலத்தே இமயத்தைநட்டுப் பாம்பைச்சுற்றி முந்நீரலறக்கடைந்த வராரவாரத்தையொப்ப மாறுபட்டாடுதற்குப் பொய்கையிலேபுக்காரென்க.

மந்தரத்தின்றொழிலை இமயத்துக்கேற்றினார், அது மலையாயனுதலின். *"இமயவில்வாங்கிய" என்றார்பிறரும். (ககங)

கலங்தெழுதிரைநுண்ணுடைக்கடிக்கயமடந்தைகாம
ரிலங்குபொற்கலாபத்தல்குலிருகரைப்பரப்புமாக
வலர்ந்ததண்கமலத்தம்போதணிதக்கமுகத்திற்கேற்ப
நலங்கெழுகுவளைவாட்கணன்னுதனலத்தையுண்டார்.

இ - ள். இருகரைப்பரப்புமல்குலாக, அதிலேகலங்தெழுகின்ற திரையாகிய நுண்ணிய ஆடையினையுங் கமலப்போதாகிய முகத்திற்கேற்ப அழகுதக்க குவளையாகிய வாட்கண்ணினையுமுடைய கயமடந்தையாகிய நன்னுதனலத்தை நுகர்ந்தாரென்க.

ஏற்பவென்னுமெச்சந் தக்கவென்னும் வினைக்குறிப்புக்கொண்டது. (ககச)

தண்ணுமைமுழவமொந்தைதகுணிச்சம்பிறவுமோசை
யெண்ணியவிரலோடங்கைபுறங்கையினிசையவாக்கித்
திண்ணிதிற்றெறித்துமோவாகொட்டியுங்குடைந்துமாடி
யொண்ணுதன்மகளிர்தம்மோடுயர்மிசையவர்களொத்தார்.

இ - ள். ஆடவர் ஓவாராய்த் தண்ணுமைமுதலியவற்றினோசைகளையும் பிறவுமெண்ணியவாச்சியங்களினோசைகளையும் விரலினாலும் அகங்கையினாலும் புறங்கையினாலுந் தெறித்துங் கொட்டியுங் குடைந்தும் இசையும்படி நீரிலே பிறப்பித்து மகளிர்தம்மோடாடித் தேவரையொத்தாரென்க. (ககரு)

சிவிறியின்மாறுதூயுங்குங்குமமெறிந்துந்தேங்கொ
ளுவறுநீருழக்கியோட்டியுடைபுறங்கண்டுநக்குத்
தவறெனத்தாமம்பூட்டித்தருதிறைகொண்டுமின்பத்
திவறினார்காமவெள்ளத்தேதத்தருந்தன்மையாரே.

சிவிறி - நெடுந்துருத்தி. தருதிறை - இடக்கர்.

இ - ள். ஏத்தருந்தன்மையார் உவறுநீரிலே தூவியும் எறிந்தும் உழக்கி ஓட்டி முதுகுகண்டுநக்கு அஞ்சினுயென்றுபூட்டித் திறைகொண்டும், பின்னுங் காமவெள்ளத் தின்பத்தேமிக்காரென்க. (ககசு)

* கலித்தொகை, இரண்டாவது குறிஞ்சி, உ.

சாந்தகநிறைந்ததோணிதண்மலர்மாலைத்தோணி
பூந்துகிலார்ந்ததோணிபுனைகலம்பெய்ததோணி
கூந்தன்மாமகளிர்மைந்தர்கொண்டுகொண்டெறியவோடித்
தாந்திரைக்கலங்கள்போலத்தாக்குபுதிரியுமன்றே.

இ - ள். சாந்துமுதலியவற்றை மகளிருமைந்தருங்கொண்டு ஓடியெறிகையி னாலே, அவற்றையுடைய தோணிகடாங் கடலிற்கலங்கள்போலே தம்மிற்றாக்கித் திரியுமென்க. (கசஎ)

கலிவளர்களிறுகைந்நீர்சொரிவபோன்முத்தமாலை
பொலிவொடுதிவண்டுபொங்கிப்பூஞ்சிகையலம்வந்தாடக்
குலிகநீர்நிறைந்தபந்திற்கொம்பனூரோச்சமைந்தர்
மெலிவுகண்டுவந்துமாதோவிருப்பொடுமறலினாரே.

பொங்கி - பொங்க.

இ - ள். கொம்பன்னார் களிறு கையாலே நீரைச்சொரிவனபோலே முத்தமாலைபொங்கப் பின்னினமயிரசைய மட்டத்துருத்தியினீரையோச்சுதலின் ஆடவர்வருத்தங்கண்டு உவந்து பின்னும் விருப்புடன்மாறுபட்டாரென்க. (கசஅ)

வண்ணவொண்சுண்ணப்பட்டுமாலையுஞ்சாந்துமேந்தி
யெண்ணருந்திறத்துமைந்தரெதிரெதிரெறியவோடி
விண்ணிடைநுடங்குமின்னுமீன்களும்பொருவபோல
மண்ணிடையமரர்கொண்டமன்றலொத்திறந்ததன்றே.

ஓடி - இளைத்து.

இ - ள். விண்ணிலே மின்னும் மீன்களுந் தம்மிற்பொருவபோலே மைந்தர் மகளிரெதிரேயெதிரே சுண்ணமுதலியவற்றையேந்தி யெறிய, அவ்விருதிறத்தோரு மிளைத்தபின்னர் அமரர் மண்ணிடைக்கொண்டமணத்தையொத்து மணநிகழ்ந்து நீர் விளையாட்டுக்கழிந்ததென்க. (கசகூ)

வேறு.

உரைத்தவெண்ணெயுமொண்ணறுஞ்சுண்ணமு
மரைத்தசாந்தமுநானமுமாலையு
நுரைத்துகோன்சிறைவண்டொடுதேனின
மிரைத்துநீர்கொழித்தின்பமிறந்ததே.

இ - ள். நீர் சுண்ணமுதலியன நுரைத்து வண்டுந்தேனுமிரைத்துக் கொழித்து இனிமைமிக்கதென்க.

எச்சங்கள் செயப்படுபொருளன. (கடுo)

வேறு.

கத்திகைக்கண்ணிநெற்றிக்கைதொழுகடவுளன்ன
வித்தகவிளையரெல்லாம்விழுமணிக்கலங்கடாங்கி

முத்தணிந்தாவியூட்டிமூகிழ்முலைகச்சின்வீக்கிப்
பித்திகைப்பிணையல்சூழ்ந்துபெண்கொடிபொலிந்தவன்றே.

கத்திகை - குருக்கத்தி. தாங்கி - தாங்க.

இ - ள். குருக்கத்திக்கண்ணியணிந்த நெற்றியையுடைய முருகனையொத்த இளையரெல்லாங் கலன்களைத்தாங்கப் பெண்கொடிகளெல்லாம் ஊட்டி அணிந்து வீக்கிச் சூழ்ந்து பொலிந்தனவென்க. (கஉக)

திருந்துபொற்றேருஞ்செம்பொற்சிவிகையுமிடைந்துதெற்றிக்
கருங்கயக்களிறுமாவுங்காலியற்பிடியுமீண்டி
நெருங்குபுமள்ளர்தொக்குநெடுவரைதொடுத்தவெள்ளங்
கருங்கடற்கிவர்ந்தவண்ணங்கடிநகர்க்கெழுந்தவன்றே.

இ - ள். அவர்களேறுதலின் நெருங்காநின்று மள்ளர்செறிய வரையினின்றும் இடையறாதுவீழ்கின்றவெள்ளங் கடற்குப்போனாற்போலே தேருஞ் சிவிகையும் பிணங்கிச்செறிந்து பெரியகளிறும் பிடியும் மாவுமீண்டி நகர்க்குப்போயினவென்க.()

வேறு.

கடலெனக்காற்றெனக்கடுங்கட்கூற்றென
வுடல்சினவுருமெனவூழித்தீயெனத்
தொடர்பிணிவெளின்முதன்முருக்கித்தோன்றிய
தடலருங்கடாக்களிற்றசனிவேகமே.

இ - ள். அவ்வளவிலே கடாகக்களிறாகிய அசனிவேகங் காலிற்சங்கிலிபிணித்த மரத்தையுங் கம்பத்தையுமடியிலேமுறித்து முழக்காற்கடலெனக் கடுமையாற்காற்றெனக் கொடுமையாற்கூற்றெனக் கோபத்தாலிடியெனச் சேரக்கோறலின் ஊழித்தீயெனத் தோன்றிற்றென்க. (கஉ௫)

*வேறு.

பொருதிழியருவிபோன்றுபொழிகருகடாத்ததாகிக்
குருதிகொண்மருப்பிற்றாகிக்குஞ்சரஞ்சிதைந்ததென்னக்
கருதியதிசைகளெல்லாங்கண்மிசைக்கரந்தமாந்தர்
பரிதியின்முன்னர்த்தோன்றாமறைந்தபன்மீன்களொத்தார்.

மிசை - இடம்.

இ - ள். அக்குஞ்சரம் கடாத்ததாய் மருப்பிற்றாய்த் தன்றன்மைகெட்டதென்றாக; அதன் கண்கருதிய திசைமிசையெல்லாந்தோன்றாமற் கரந்தமக்கள் ஞாயிற்றின்முன் றோன்றாவாய் மறைந்த மீன்களையொத்தாரென்க.

இது போகாமல் நின்றநிலையிலே மறைந்ததற்குவமை. (கஉ௬)

க. கருந்தடங்கண்ணிதன்மேற்காமுகருள்ளம்போல
விருங்களிறெய்தவோடச்சிவிகைவிட்டிளையரேக

வரும்பெறலவட்குத்தோழியாடவரில்லையோவென்
றொருங்குகையுச்சிக்கூப்பிக்களிற்றெதிரிறைஞ்சிநின்றாள். (௧உ௫)

உ. என்னைக்கொன்றிவள்கணோடுமெல்லையினொருவன்றோன்றி
யின்னுயிரிவளைக்காக்குமன்றெனிலென்கண்மாய்ந்தாற்
பின்னைத்தானாவதாகவென்றெண்ணிப்பிணைகொணோக்கி
மின்னும்போனுடங்கிநின்றாள்வீதைதபொற்கொம்பொப்பாள்.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். அங்ஙனம் மறைதலையறியாத குணமாலை, தன்மேலே காமுகர்நெஞ் சோடுமாறுபோலக் களிறணுகச்சென்றதாக, இளையர் சிவிகையைவிட்டுப்போக, அப் பொழுது அந்தப் பிணைகொணோக்கியாகிய பொற்கொம்பொப்பாள் அஞ்சி மின்போ லேநுடங்கிநின்றாள்; அதுகண்டு அவட்குத்தோழியாகிய மாலை என்னைக்கொன்று இவளிடத்தே ஓடுமெல்லையில் ஒருவீரன்றோன்றி இவளையுயிரைக்காக்கும்; காத்தில னாயின் யானிறந்தாற் பின்னை ஆவதாகவென்று தன்னெஞ்சிலேநினைத்து இரண்டு கையினையுந் தலைமேலேவைத்து இவ்விடத்தில் ஆண்மக்களில்லையோவென்று கூப் பிட்டுக் களிறு எதிரேசென்றணுகினவளவிலே அஞ்சிக் கவிழ்ந்துநின்றாளென்க.

மேல் அங்ஙனம்வருகின்றவூழ் இவளுக்கு அக்கருத்தினைப்பிறப்பித்தது. ஒருவ னென்றது உட்கோளாதலிற் பின்னுடவரென்றாள். இக்கருத்தானன்றே மேலும் *"நெடுங்கணாற்கவர்ந்த கள்வி-யஞ்சனத்துவலையாடி நடுங்கினாள்" என்றும், †"நாட் டமுநடுக்கமும்" என்றுங் கூறுகின்றதென்க. (௧உ௬)

மணியிருதலையுஞ்சேர்த்திவான்பொனினியன்றநாணா
லணியிருங்குஞ்சியேறக்கட்டியிட்டலங்கல்சூழ்ந்து
தணிவருந்தோழர்சூழத்தாழ்குழைதிருவில்வீசப்
பணிவருங்குரிசில்செல்வான்பாவையதிடரைக்கண்டான்.

இ - ள். பிறராற் சூழ்வித்தலரியகுரிசில், இரண்டுதலையினும் மணியழுத்திப் பொன்னாற்செய்தகயிற்றாலே குழலையேறக்கட்டி அலங்கலை யதன்மேலே சூழ்ந்து அன்புகுறைதலரிய தோழர்சூழ வீசச் செல்கின்றவன் குணமாலையது வருத்தத்தைக் கண்டானென்க.

கட்டியிட்டு - ஒருசொல். குழலையேறக்கட்டியும் பாடம். (௧உ௭)

பெண்ணுயிரவலநோக்கிப்பெருந்தகைவாழ்விற்சாத
லெண்ணினனெண்ணிநொய்தாவினமலர்மாலைசுற்றா
வண்ணப்பொற்கடகமேற்றாவார்கச்சிற்றானைவீக்கா
வண்ணலங்களிற்றைவையாவார்த்துமேலோடினானே.

---

* குணமாலையாரிலம்பகம், ௧௪௪.
† ,, ,, ௧௫௫.

இ - ள். பெருந்தகை பெண்ணுயிர் சாதலைநோக்கி இவ்விடரை நீக்காதுபோய் வாழ்கின்றவாழ்விற்காட்டிற் சாதல் அவலமில்லையென்றெண்ணினன்; எண்ணிக் கடிதாகச் சுற்றி ஏற்றி வீக்கி அதனைவைது ஆர்த்து அதன்மேலே ஓடினனென்க.

*"வேழநான்குவெல்லுமாற்றலன்" ஆதலின் இக்களிறு அடர்க்க வெளிதாயினும் அடர்த்தாற் கட்டியங்காரற்கும் நமக்கும் இன்னும் வேறுபாடுபிறக்குமென்றறிந்தவன் பின்னும் இதனைக்கண்டு போதலின் அவ்வேறுபாடின்றென்றெண்ணினனென்க. ()

குண்டலக்குமரன்கொண்டுகுன்றின்மேல்வீழுமின்போ
லொண்டிறற்களிற்றினெற்றியெறிந்துதோடொலித்துவீழ
மண்டலமுத்துந்தாருமாலையுங்குழலும்பொங்க
விண்டலர்கண்ணிசிந்தமின்னிற்சென்றெய்தினானே.

இ - ள். அங்ஙனமோடினகுமரன் தான்செல்வதற்குமுன்னே களிறிறைஞ் சாதபடி சாதிற்குண்டலத்தைவாங்கிக்கொண்டு தோடொலித்துவீழும்படி மலைமேலே வீழுமின்போலே அதின்மத்தகத்தேயெறிந்து வட்டமானமுத்துவடமுந் தாரும்நெற்றிமாலையுங் குழலும் பொங்கக் கண்ணிசிந்த மின்போற்சென்றெய்தினனென்க

எறிந்தவிசையிற் றானேவீழ்ந்ததென்க. (கஉகு)

படம்விரிநாகஞ்செற்றுப்பாய்தருகலுழன்போல
மடவரலவளைச்செற்றுமதக்களிறிறைஞ்சும்போழ்திற்
குடவரைநெற்றிபாய்ந்தகோளரிபோன்றுவேழத்
துடல்சினங்கடவக்குப்புற்றுருமெனவுரறியார்த்தான்.

இ - ள். அங்ஙனமெய்தினவன் விரிகின்றபடத்தையுடைய நாகத்தைச் செற்றுப் பாய்கின்ற கருடனைப்போலே முன்புநின்ற மாலையென்னுஞ்சேடியைச்செறுத்துக் களிறிறைஞ்சுகின்ற வளவிலே அத்தகிரிநெற்றியிலே பாய்ந்தசிங்கத்தையொத்து அவ்வேழத்தினுடல் சினத்தைச்செலுத்தும்படி அதின்மத்தகத்தினடுவே குதித்துஇடியென முழங்கியார்த்தானென்க.

குடவரை - புகருக்குவமை. (கஙஏ)

கூற்றெனமுழங்கிக்கையாற்கோட்டிடைப்புடைப்பக்காய்ந்து
காற்றெனவுரறிநாகங்கடாஞ்செய்துகனலிற்சீறி
யாற்றலங்குமரன்றன்மேலடுகளிறோடவஞ்சான்
கோற்றொடிப்பாவைதன்னைக்கொண்டுயப்போமினென்றான்.

இ - ள். அவன் அங்ஙனமுழங்கி நாகத்தைக் கோட்டிடையிலே கையாலே கூற்றெனப்புடைத்தலின் அக்களிறு காய்ந்து முழங்கிமதஞ்சொரிந்து சீறிஅக்குமரன் மேலே காற்றெனவோட அஞ்சானுய்க் குணமாலையைப் பிழைக்கக் கொண்டு போமினென்றானென்க.

சேடிமேலுங் குணமாலைமேலுஞ் செல்கின்றதென்று அஞ்சினவன் தன்னைநோக்கினமையின் அஞ்சானுயினன். தலைமைபற்றிக் குணமாலையைக் கொண்டுபோமினென்றான். (கஙக)

---

* காந்தருவதத்தையாரிலம்பகம், ககஎ.

மதியினுக்கிவர்ந்தவேகமாமணிநாகம்வல்லே
பதியமைபரிதிதன்மேற்படம்விரித்தோடியாங்குப்
பொதியவிழ்கோதைதன்மேற்பொருகளிறகன்றுபொற்றூர்க்
கதியமைதோளினானைக்கையகப்படுத்ததன்றே.

இ - ள். மதியைக் கையகப்படுத்தற்கு விரும்பிய கரும்பாம்பு போகின்றஞாயிற்றின்மேலே விரைந்தோடினாற்போலக் குணமாலைமேற்சென்ற பொருகளிறு அவளைக்கைவிட்டுச் சீவகனைக் கைக்குள்ளே யகப்படுத்திற்றென்க.

இருப்புத்தவிர்ந்தபரிதி; * "அமைந்ததினிநின்றூழில்" என்றதுபோல. கதியமைதேரினானையும் பாடம். (௩௩௨)

கையகப்படுத்தலோடுங்கார்மழை மின்னினொய்தா
மொய்கொளப்பிறழ்ந்துமுத்தார்மருப்பிடைக்குளித்துக்காற்கீ
ழையெனவடங்கிவல்லானுடியமணிவட்டேய்ப்பச்
செய்கழற்குரிசிலாங்கேகரந்துசேணகற்றினானே.

இ - ள். அங்ஙனங் கையாலகப்படுத்திக்கொண்டவளவிலே அது போர்தொடங்காநிற்கக் குரிசில் மழைமின்னினுங் கடுக வுடம்பு புரிந்து மருப்பிடையிலே புகுந்து காற்கீழே வட்டுப்போலவடங்கித் தான்கரந்துபோய்க் களிற்றை அப்பொழுதேசேணிலேயகற்றினானென்க.

வல்லான்-பாய்ச்சுக்காட்டுவான். தானகலுதலின், அதனையகற்றினானாயினன்.()

வேறு.

மல்லனீர்மணிவண்ணனைப்பண்டொர்நாட
கொல்லவோடியகுஞ்சரம்போன்றதச்
செல்வன்போன்றனன்சீவகன்றெய்வம்போற்
பில்குமும்மதவேழம்பெயர்ந்ததே.

இ - ள். இக்குஞ்சரம் இவன்மேற்செல்லுகின்றபொழுது முன்னொருநாளிலே கண்ணனைக் கொல்லவோடிய குஞ்சரத்தையொத்தது; அப்பொழுது அச்சீவகனும் அக்கண்ணனையொத்தான். பின்னர் அக்களிறுகிய தெய்வத்தைக் கண்ணன் கொல்லாதுவிட அது பெயர்ந்து தன்னிலையிலே போயினாற்போல இவனுங்கொல்லாது விடுதலின், இவ்வேழமும் பெயர்ந்து தன்னிலையிலே போயிற்றென்க.

பகையன்மையின் இவ்விலங்கிற்கு முயிரளித்தான். கண்ணன் தனக்குப்பகையாதலிற் கொன்றான். ஈண்டு அதனைக்கொல்லாதுவிட்டானாயின் அதுபோலுமெனப பிற்கூறியது இல்பொருளுவமை. தெய்வம் யானையாய் வருதலிற் றெய்வமென்றார்.()

வேறு.

ஒருகையிருமருப்புமும்மதத்தவோங்கெழிற்குன்றனையவேழந்
திருகுகனைகழற்காற்சீவகன்வென்றிளையாட்குடைந்துதேனார்
முருகுகமழலங்கன்முத்திலங்குமார்பினனைஞ்ஞூற்றுநால்வ
ரருகுகழல்பரவத்தனியேபோயுய்யானமடைந்தானன்றே.

---

* கலித்தொகை, மூன்றாவது மருதக்கலி, ௬௭.

இ - ள். கைமுதலியவற்றையுடைய குன்றனையவேழத்தைச் சீவகன்வென்று குணமாலைக்கறிவுமுதலியன தோற்றலின், ஐஞ்ஞூற்றுநால்வர் கழல்பரவாநிற்கவுந் தனியேபோய்ப் பொழிலிலேசேர்ந்தானென்க.

தத்தையறியலாகாதென்று பொழிலைச்சேர்ந்தான். (கரு௫)

வேறு.

மணிசெய்கந்துபோன்மருளாவீங்கிய
திணிபொற்றோளினான்செல்லனீக்கிய
வணிபொற்கொம்பினையழுங்கலென்றுதன்
றணிவில்காதலார்தாங்கொண்டேகினார்.

இ - ள். கற்றென்றுமருளும்படி கந்துபோல்வீங்கிய தோளினாலே வருத்த நீக்கப்பட்ட குணமாலையைக் குறைவில்லாத காதலையுடையார்தாம் அழுங்கலென்று கொண்டேகினாரென்க.

இவள்வேட்கை வருத்தத்தை யானைக்குவருந்தினாளாக உட்கொண்டாராய் அழுங்கலென்றார். (கருசு)

முழங்குதெண்டிரைமூரிநீணிதி
வழங்கநீண்டகைவணிகர்க்கேறனான்
விழுங்குகாதலான்வேற்கட்பாவைதாய்
குழைந்தகோதையைக்கண்டுகூறினாள்.

பாவையுடையதாய் - விநயமாமாலையென்னும்பெயரையுணர்த்திற்று, பாவை பெயர் குணமாலையாதலின். வருத்தந்தோன்றக் குழைந்தகோதையென்றார்.

இ - ள். கடல்போல நிதியைவழங்குதலின் நீண்டகையையுடைய குபேரமித்திரன் விழுங்குமாறுபோன்ற காதலையுடைய விநயமாமாலை தன்மகளைக்கண்டு ஒருமொழிகூறினாளென்க. (கருஎ)

நெய்பெய்நீளெரிநெற்றிமூழ்கிய
கைசெய்மாலைபோற்கரிந்துபொன்னிற
மையவந்ததென்னங்கைக்கின்றென
வுய்தல்வேட்கையாலுரைத்தலோம்பினார்.

இ - ள். எரியினெற்றியிலே அழுத்திய மாலைபோலப் பொன்னிறங்கரிந்து நையும்படி நங்கைக்கு இன்றுவந்த வருத்தமென்னென்று கூறினாள்; அதுகேட்ட தோழிமாரும் அவளிறந்துபடாதிருக்கவேண்டுதலின், யானை கொல்லப்புகுந்ததென் றுரைத்தலை யோம்பினாரென்க. (கருஅ)

முருகுவிண்டுலாமுல்லைக்கத்திகைப்
பருகிவண்டுலாம்பல்குழலினாள்
வருகவென்றுதாய்வாட்கணீர்துடைத்
தருகுநுண்ணிடையொசியப்புல்லினாள்.

இ - ள். அவர் கூறாமையின் அதனை யறியாததாய் முல்லைத்தொடை யலர்ந்து பரக்கின்ற முருகைப்பருகி வண்டுலாங்குழலினாளை வருகவென்று கண்ணீரைத்துடைத்து இடைவருந்தப் புல்லினாளென்க. (௧௩௯)

கடம்புசூடியகன்னிமாலைபோற்
றொடர்ந்துகைவிடாத்தோழிமாரொடுங்
குடங்கையுண்கணாள்கொண்டபண்ணையு
ளடைந்ததுன்பமென்றறிவினாடினாள்.

இவரும் கன்னியராதலிற் கன்னிமாலையென்றார். கண்ணிமாலைபாடமாயிற் கட்டினாற்போலுமாலையாம்.

இ - ள். கடம்புபூத்த மாலைபோலே தொடர்ப்பட்டுக் கைவிடாத தோழிமாருடனே உண்கணாள்கொண்ட விளையாட்டின்மிகுதியான்வந்த வருத்தமேயென்று தன்னறிவாலே நாடினாளென்க. (௧௪0)

கம்மப்பல்கலங்களைந்துகண்டெறாஉம்
விம்மப்பல்கலநொய்யமெய்யணிந்
தம்மென்மாலையுமடைச்சிக்குங்குமங்
கொம்மைமட்டித்தார்கொடியனாளையே.

இ - ள். தாய் அங்ஙனமிருந்தவளவிலே கோலஞ்செய்கின்றவர்கள் கொடியனாளை அரியதொழில்களையுடைய பேரணிகலங்களைவாங்கிக் கண்ணையொளிகெடுக்கு நொய்யகலங்களை மெய்யிலே விம்மவணிந்து கழுநீர்மாலையையுஞ்சேர்த்திக் குங்குமத்தையும் முலையிலேபூசினாரென்க.

உடம்புநுணுகுகின்றமையுணர்ந்து விம்மவணிந்தார். புறத்தேகோலஞ்செய்ய அகத்தே சிதைவுபிறத்தலின், இதுபுறஞ்செயச்சிதைத்தலென்னுமெய்ப்பாடு. (௧௪௧)

அம்பொன்வள்ளத்துளமிர்தமேந்துமெங்
கொம்பினவ்வையைக்கொணர்மின்சென்றெனப்
பைம்பொனல்குலைப்பயிரும்பைங்கிளி
செம்பொற்கொம்பினெம்பாவைசெல்கென்றாள்.

வஞ்சிக்கொம்பின்றன்மையையுடையதாய் - குணமாலை. பைம்பொனல்குலை- நின்னை; என்றது குணமாலையை.

இ - ள். விநயமாமாலை பொற்கொம்பின்றன்மையுடைய எம்பாவாய், எனக்கு வள்ளத்தே பாலையேந்தும் எம் அவ்வையைச் சென்றுகொணர்மினென்றுகூறி நின்னைப்பைங்கிளியழையாநிற்கும்; இனி அதுவருந்தாதபடி ஆண்டுச் செல்லென்றுகூறினாளென்க. (௧௪௨)

வேறு.

நிறத்தெறிந்துபறித்தநிணங்கொள்வேற்
றிறத்தனைத்தவௌவியசேயரிக்கண்ணினாள்

பிறப்புணர்ந்தவாபோற்றமர்பேச்செலாம
வெறுத்தியாவையுமேவலளாயினுள்.

சிறிதுபொழுதுநின்று பறித்தவேல்.

இ-ள். கன்னிநாள் பிறப்புத்தீதென்றறிந்து பற்றற்றுரைப்போலே தமர்பேசைசயெல்லாங் கைவிட்டு உணவுமுதலியவற்றையும் பொருந்தாளாயினளென்க.

வெறுத்தென்னுந்துணையும் புலம்பித்தோன்றலென்னுமெய்ப்பாடு, செய்தகோலந் துணையொடு கழியப்பெருதேயழிந்து சுற்றத்திடையுந் தனியேதோற்றுதலின். மேவலளெனவே இன்பத்தைவெறுத்தலும், பசியடநிற்றலும மெய்ப்பாடு. (௧௪௩)

குமரிமாடகர்க்கோதையங்கொம்பனு
டமரினீங்கியசெவ்வியுட்டாமரை
யமரர்மேவரநதோன்றியவண்ணல்போற்
குமரனுக்கியகாதலிற்கூறினுள்.

இ-ள். கொம்பனாள் கன்னிமாடத்தே தமரத்தைத்தானீங்கியகாலத்தே தேவர்வேண்டத் தாமரையிற்றோன்றியமுருகனைப்போலுங் குமாரனுக்காக்கிய காதலாலே சிலசொற்கூறினுளென்க. (௧௪௪)

கலத்தற்காலங்கல்லூரிநற்கொட்டிலா
முலைந்தடத்திடைமொய்யெருக்குப்பையா
விலக்கமென்னுயிராவெய்துகற்குமா
லலைக்கும்வெஞ்சரமைந்துடையானரோ.

இ-ள். கொடியசரமைந்தய ஐந்தாகவெய்யவெடுத்தகாமன் எனபெருதவின் எனதுமுலைத்தடத்திடை எருக்குப்பையாக, எனதுயிர் இலக்காகவெய்து என்னையலையாநிற்கும்; ஆதலால் கல்லூரியையுடைய விற்பயிற்றுநர்தானத்தே தான்விற்றொழிலைத் தொடங்குகின்றகாலமாகநினைத்துக் கற்கின்றதொழிலை நடத்தாநின்றுனென்க.

கற்பார் எருவிலும் இலக்கிலுமெய்து கற்பராதலின். இதமடந்தபவுரைத்தலென்னுமெய்ப்பாடு, அறிவுமடநீங்கிக் காமப்பொருட்கண்ணே யறிவுதோன்றநிற்றலின். (௧௪௫)

பூமியும்பொறையாற்றருந்தன்மையால்
வேமெனெஞ்சமும்வேள்விமுளரிபோற்
றுமமார்பனைச்சீவகசாமியைக்
காமனைக்கடிதேதம்மின்றேவிர்காள.

இ-ள். என்னெஞ்சமும் வேள்வியிலிட்ட தாமரைப்பூப்போலே பூமியுமுட்படப் பொறையைச் செலுத்துதற்கரியதொரு தன்மையாலே வேவாநிற்கும்; ஆதலான் மார்பனைச் சாமியைக் காமனைத் தேவிர்காள், கடிதாகவழைத்துத் தருமினென்றுளென்க.

வேமென்னுந்துணையுங் காதல் கைம்மிகல், காமங்கையிகந்தழிதலுமாதலின் "உள்ளினுள்ளம் வேமே" என்பது உதாரணம். தமமினென்பது தூதுமுனி

வின்மைப்பாற்படும். *"கானலுங் கழறுது" என்னும்பாட்டு உதாரணம். அறனளித் துரைத்தலுமாம். (கசசு)

க. கையினாற்சொலக்கண்களிற்கேட்டிடு
மொய்கொள்சிந்தையின்மூங்கையுமாயினேன்
செய்தவம்புரியாச்சிறியார்கள்போ
லுய்யலாவதோர்வாயிலுண்டாங்கொலோ. (கசஎ)

உ. கண்ணும்வாளற்றனகவினசோருமாற்
புண்ணும்போன்றுபுலம்புமென்னெஞ்சரோ
வெண்ணில்காமமெரிப்பினுமேற்செலாப்
பெண்ணின்மிக்கதுபெண்ணலதில்லையே. (கசஅ)

௩. சோலைவேய்மருள்சூழ்வளைத்தோளிதன்
வேலைமாக்கடல்வேட்கைமிக்கூர்தலி
னோலைதாழ்பெண்ணைமாமடலூர்தலைக்
காலைவேற்றடங்கண்ணிகருதினாள்.

இவைமூன்றுமொருதொடர்.

க. பிறர்க்குக் கூறலாகாமற் குறைகளெல்லாஞ் செறிதலைகொண்டசிந்தையான் மூங்கையாயினேனென்றாள். இது சிந்தைவுபிறர்க்கின்மை, புறத்தார்க்குப் புலனாகாமை நெஞ்சினைநிறுத்தலின். சிறியார் - அறிவிலாதார். வாயில் - கூட்டுவார்.

உ. கண்ணும்வாளற்ற-அவனுருவுவெளிப்படுதலின் அதனையேநோக்கிவேறொரு பொருளினைநோக்காமையிற் காண்டற்றொழிலின்றுதலின் வாளற்றவென்றாள். இஃது எதிர்பெய்துபரிதல். வினைசோருதல் - உடம்புநனிசுருங்கல் நெஞ்சும் புண் போன்றுபுலம்பும். இதுமுதற் கலக்கம், கூறத்தகாதனகூறலின். அதுதலைவிக்காயின், "பிறங்கிரு முந்நீர் வறுமண லாகப்-புறங்காலிற் போகவிறைப்பேன்" என்றாற் போல்வனவும், தலைவற்காயின், மடலேறுதன் முதலியகூறலுமாம். மேற்செலா-நடக்கமாட்டாத.

* அகநானூறு, கஎ௦: கானலுங் கழறாது கழியுங் கூறாது—தேனிமிர் நறுமலர்ப் புன்னையு மொழியா—தொருநின் னல்லது பிறிதியாது மிலனே—யிருங்கழி மலர்ந்த கண்போ னெய்தற்—கமழிதழ் நாற்ற மமிழ்தென நசைஇத்—தண்டா தூதிய வண்டினங் களிசிறந்து—பறவை கிளைமுரல் துறைவனை நீயே—சொல்லல் வேண்டுமா லலவ பல்காற்—கைதையம் படுசினை யெவ்வமொ டசாஅங்—கடற் சிறு காக்கை காமர் பெடையொடு—கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்—வெள்ளிறாக் கனவு நள்ளென் யாமத்து—நின்றுறு விழுமங் களைந்தோள்—தன்னுறு விழும நீந்துமோ வெனவே.

என்பது தலைமகள் காமமிக்க கழிபடர் கிளவியாற் கூறியது. மதுரைக்கள்ளிற் கடையத்தன்வெண்ணாகன்.

௯. சோலைவேய் - பசுமைக்கு. ஊர்தலை - உலகத்தில் ஆடவரூருந்தன்மையை.

இ - ள். வளைத்தோளி கண்ணி தன்வேட்கை கடனீர்போல மிக்குப்பரத்தலிற் றவஞ்செய்யாதாளைப்போல மூங்கையுமாயினேன்; கண்ணும்வாளற்ற; வளையுஞ்சோரும்; நெஞ்சம் புலம்பும்; இங்ஙனம் எல்லையில்லாதகாமம் முழுக்கநின்று சுட்டாலும் பெண்ணைமாமடலூர்தலை மேற்செல்லாத பேதைச்சாதியிற்காட்டிற் கொடுமை மிக்கது பெண்ணல்லதில்லையாயிருந்ததென்றுகூறி இக்காலத்தே பிழைக்கலாவதொரு வாயிலுண்டாமோவென்று கருதினாளென்க.

ஈண்டுக்கூறியது புலனெறிவழக்கமல்லாத காந்தருவமாய் அசுரத்தின்பாற் படுங்கைக்கிளையாதலின், மெய்ப்பாட்டுப்பொருள்களை முறையிற்கூறாது மயங்கக்கூறினாரென்றுகொள்க. (௧௪௯)

உய்யுமாறுரையுன்னையலாலிலேன்
செய்யவாய்க்கிளியேசிறந்தாயென
நையனங்கையிந்நாட்டகத்துண்டெனிற்
றையலாய்சமழா துரையென்றதே.

தாய்தந்தையிலுஞ் சிறந்தாயென்றாள், அவர்க்குக்கூறலாகாதவை கூறுதலின்.

இ - ள். அங்ஙனங்கருதினவள் அருகிருந்தகிளியைக்கண்டு கிளியே, சிறந்தாய, உன்னையொழிய வேறொருவாயிலை யானுடையேனல்லேன்; இனி யானுய்யும்படி வாயிலையுரையாயென்றாளாக, அக்கிளியும் நங்காய், நீ நையாதேகொள்ளென முற் கூறிப் பின்னும் தையலாய், அவன் இந்நாட்டிலேயுண்டாயின் வருந்தாதேயுரைப்பாயாகவென்றதென்க. (௧௫0)

தெளிகயம்மலர்மேலுறைதேவியி
னொளியுஞ்சாயலுமொப்புமையில்லவள்
களிகொள்காமத்திற்கையறவெய்தித்தன்
கிளியைத்தூதுவிட்டாள்கிளக்கென்பவே.

கயம் - பதுமையென்னுங்கயம்.

இ - ள். தேவியிற்காட்டில் ஒளியுஞ்சாயலும் வேறொப்பிலாதவள் காமத்தாலே செயலறவெய்தித் தன்வருத்தத்தை வெளியாகக்கூறித் தன்பிள்ளையைத் தூதாகப் போகவிட்டாளென்க. (௧௫௧)

பூணொடேந்தியவெம்முலைப்பொன்னனா
ணாணுந்தன்குலனுநலங்கீழ்ப்பட
வீணைவித்தகற்காணியவிண்படர்ந்
தாணப்பைங்கிளியாண்டுப்பறந்ததே.

தானேந்தியபூணுடனே விருப்பஞ்செய்கின்றமுலை.

இ - ள். நேயத்தையுடையபைங்கிளி பொன்னனாளது நாணுங் குலனும் நன்மைகுறையும்படி அவள்வேட்கையறிவித்தற்கு யாழ்வென்றுகொண்ட தத்தையை விரும்பினவனைக் காணவேண்டி விண்ணிலேசென்று அவனிருக்கின்றவிடத்தே பறந்ததென்க. (௧௫௨)

வேறு.

கூட்டினான்மணிபலதெளித்துக்கொண்டவன்
நீட்டினான்கிழிமிசைத்திலகவாணுதல்
வேட்டமால்களிற்றிடைவெருவிநின்றதோர்
நாட்டமுநடுக்கமுநங்கைவண்ணமே.

இ - ள். பலமணிகளையுங் கரைத்துக்கொண்டு பலநிறத்து வண்ணங்களையுங்கூட்டினான்; அங்ஙனங்கூட்டினவன் கிழிமேலே குணமாலை யானையின்முன்னர் அஞ்சிநின்ற நடுக்கத்தையுந் தன்னைநோக்கினநோக்கினையும் அவடன்செயலாகவேநீட்டினானென்க.

இக்கருத்தானன்றே "நீலநெடுங்கணாற்கவர்ந்தகள்வி - நடுங்கினாள்" என்கின்றான். (௧௫௩)

நெகிழ்ந்துசேர்பூந்துகினோக்கிநோக்கியே
மகிழ்ந்துவீழ்மணிக்குழன்மாலைகாறுடு
முகிழ்ந்துவீங்கிளமுலைமுத்தந்தைவரும்
புகழ்ந்துதன்றோள்களிற்புல்லுமெல்லவே.

நோக்கி-இதுநோக்கனோக்கம். நோக்கியே-இதுபொறியானோக்குநோக்கம்.

இ - ள். அங்ஙனமெழுதினவன் நெகிழ்ந்துவீழ்கின்ற துகிலொன்றையுந் திருத்தலாகாதென்று மனத்தாற்குறித்து அதனைப் பார்த்துநின்றேமகிழ்ந்து குழன் முதலியவற்றைத் திருத்தத் தொடும்; முகிழ்ந்துவீங்கிளமுலையின்முத்தத்தையுஞ் செவ்விதாக இடத்தொடும்; புகழ்ந்து தன் றோள்களின்மேலே மெல்லப்புல்லுமென்க.

வெருவிநின்ற நடுக்கமெழுதலிற் குலைந்தனவற்றை மயக்கத்தாற் றிருத்தத்தேடினானென்க. மாலை - அவள்பெயருமாம். மணிக்குரன்மாலையும் பாடம். (௧௫௪)

படைமலர்நெடுங்கணாள்பரவையேந்தல்குன்
மிடைமணிமேகலைநோற்றவெங்தொழிற்
புடைதிரள்வனமுலைப்பூணுநோற்றன
வடிமலர்த்தாமரைச்சிலம்புநோற்றவே.

இ-ள். படையுமலரும்போன்ற கண்ணாளுடையவல்குலிலே மிடைந்த மேகலை நோற்றன; கொடியதொழிலையுடைய முலையிற் பூண்களுநோற்றன; அடித்தாமரையிற் சிலம்புகளுநோற்றன; யானேநோலாதேனென்றானென்க.

இதுகுறிப்பெச்சம். அடிமலர் - ஒருசொல். (௧௫௫)

மின்னணங்குறுமிடைமேவர்சாயலுக்
கின்னணமிறைமகன்புலம்பயாவதுந்
தன்னணங்குறுமொழித்தத்தைதத்தையை
மன்னணங்குறலொடுமகிழ்ந்துகண்டதே.

மேவரு - விகாரம். யாவதுமென்றது - அறிவுமுதலியகுணங்களை.

இ - ள். இறைமகன் குணமாலைக்கு இன்னணம்புலம்பக்கண்டு அவன் அங் ஙனம் மிகவருத்தத்தையுறுதலினாலே முடிந்ததென்றுமகிழ்ந்து தன்னுடைய குண மாலையதுவருத்தமுற்றமொழியை அறிவிக்கலுற்றகிளி அதற்கிடையீடாகக் காந்தரு வதத்தை வருகின்றநிலையைக்கண்டதென்க.

மன் - மிகுதி. எல்லாவழியானும் பெறுதற்குரியவன்வருந்துதலின், இறைம கன்புலம்பவென்றார். (௩௫௬)

ஆடுபாம்பெனப்புடையகன்றவல்குன்மேற்
சூடியகலைப்புறஞ்சூழ்ந்தபூந்துகி
லோடியவெரிவளைத்துருவவெண்புகை
கூடிமற்றதன்புறங்குலாயகொள்கையதே.

இ - ள். பாம்பெனவகன்றவல்குன்மேற்சூடின மேகலையைப் புறத்தேசூழ்ந்த துகில் வளையவோடின உருவத்தையுடைய எரியை வெண்புகைகூடிவளைத்து அதின் புறத்தே நிலைபெற்றதன்மைத்தென்க.

பாம்பு - அல்குற்கேயுவமையாதலின் அடுத்துவாலுவமையன்று, * "அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே" என்றார். மற்று - அசை. †"மான்குலாங்குணத்தி னால்" என்றார்பின்னும். (௩௫௭)

கொன்வளர்குவிமுலைக்கோட்டிற்றாழ்ந்தன
மின்வளர்திரள்வடம்விளங்குபைங்கதி
ரின்வளரிளம்பிறையெழுதப்பட்டன
பொன்வளர்செப்பின்மேற்பொலிந்தபோன்றவே.

கொன் - பெருமை.

இ - ள். முலைக்கோட்டிலே திரள்வடங்கள் கிடந்தன, எழுதப்பட்டனவாகிய பொன்வளர்ந்த செப்பின்மேலே கதிரையுடைய இனிமைவளர்ந்த பிறை பொலிந் தனபோன்றவென்க. (௩௫௮)

குண்டலமொருபுடைகுலாவிவில்விட
விண்டலர்ந்தொருபுடைதோடுமிழ்செய
மண்டலநிறைந்ததோர்மதியமன்னதே
யொண்டொடிதிருமுகத்துருவமாடசியே.

இ - ள். ஒண்டொடிமுகத்தினுருவத்தினழகு ஒருபுடையிலே குண்டலம் மின்வி விட, ஒருபுடையிலே தோடு ஒளியைவீச வட்டநிறைந்ததொரு மதியமுண்டாயின் அதனையொக்குமென்க. (௩௫௯)

பூணிறமுலையவள்பொருவில்பூநுதன்
மாணிறக்கருங்குழன்மருங்கிற்போக்கிய
நாணிறங்குகதிர்ப்பட்டநல்லொளி
வாணிறமின்னிருள்வளைத்ததொத்ததே.

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், உவமவியல், ௩௩.

† மண்மகளிலம்பகம், ௬௩௨.

இ - ள். பூணையும் நிறத்தையுமுடைய முலையினையுடையாளது குழலின்பக்கத்தின் நாடோறும் நிறமிகுகின்ற பிறைபோலுநுதலிலேகட்டிய நல்லொளிப் பட்டமானது பிறையைச்சேர்ந்தவிருளை மின்வளைத்த தன்மையையொத்ததென்க. (௧௬௦)

கடிகமழ்பூஞ்சிகைக்காமர்மல்லிகை
வடிவுடைமாலைகாஞெடார்ந்துவாய்ந்தது
நடுவொசிந்தொல்கியநாறுமாமலர்க்
கொடியின்மேற்குயில்குனிந்திருந்ததொத்ததே.

இ - ள். மல்லிகைமாலை தன்னிடத்தேகட்டப்பட்டுப் பூமுடிவாய்ந்தது, நடுவு வளைந்துநுடங்கிய பூங்கொடியின்மேலே குயில்வளைந்திருந்த தன்மையை யொத்ததென்க. (௧௬௧)

சிலம்பொடுமேகலைமிழற்றத்தேனினம்
மலங்கலுண்டியாழ்செயுமம்பொற்பூங்கொடி
நலம்படநன்னடைகற்றதொக்குமிவ்
விலங்கரித்தடங்கணளியாவளாங்கொலோ.

இ - ள். இவள் நடை, தேனினமுண்டுபாடும் பொற்பூங்கொடி சிலம்பும் மேகலையுமொலிப்ப நடைகற்றதன்மையையொக்கும்; இவள் யார்கொலென்றையுற்றதுகிளியென்க.

இஃது இல்பொருளுவமை. (௧௬௨)

யாவளேயாயினுமாகமற்றிவண்
மேவியபொருளொடுமீண்டபின்னலா
லேவலாழ்சேர்கலேனென்றுபைங்கிளி
பூவலர்சண்பகம்பொருந்திற்றென்பவே.

இ - ள். பைங்கிளி இவள் யாவளாயினுமாக இதனாற்பெற்றதென், இவடான் மேவியகாரியத்தைமுடித்து மீண்டபின்னல்லது யான் குணமாலையசேவலாற் சேரக்கடவேனல்லேனென்று சண்பகத்தைப்பொருந்திற்றென்க.

ஏ வல்லவனென்றுமாம். (௧௬௩)

மதுக்களிநெடுங்கணாள்வான்பொற்கிண்கிணி
யொதுக்கிடைமிழற்றச்சென்றெய்தியூன்கவர்
கதக்களிவேலினாற்கண்டுகாமநீர்ப்
புதுத்தளிரனையவள்புலந்துநோக்கினாள்.

இ - ள். மதுவினதுகளிப்பைத் தன்னிடத்தேயுடையதத்தை கிண்கிணி நடையிடத்தே யொலிப்பச் சென்றணுகி ஊனைக்கவரும் வேலினானைக்கண்டு காமத்தாற் புலக்கையினாலே புதுநீரிற் றளிரையொக்கநடுங்கினவள் பின்பு படத்தைக் குறித்துப் பார்த்தாளென்க.

"கொல்புனற் றளிரி னடுங்குவ ணின்றே" என்றாற்போல. இனிக் காமநீரால் வளர்ந்த தளிருமாம். (௧௬௪)

௧. இதுவெனவுருவெனவியக்கியென்றலும்
புதிதிதுபூந்துகில்குழல்கள்சோர்தலால்

மதுவிரிகோதையம்மாலைநின்மன
மதுமுறைமையியக்கவினியக்கியாகுமே. (கசுரு)

௨. முளைத்தெழுமதியமுத்தரும்பியாங்கென
விளைத்ததுதிருமுகம்வியர்ப்புவெஞ்சிலை
வளைத்தனபுருவமுமுரிந்தவல்லியே
கிளைக்கழுநீர்க்கணுஞ்சிவப்பிற்கேழ்த்தவே.

இவையிரண்டுமொருதொடர்.

இயக்கி தெய்வமாதலின் இதுவென்றார். எனவென்பதனைப்பிரித்து முன்னே கூட்டுக. கிளைக்கழுநீர் - அலர்ந்தபூவிற்குக் கிளையாகியகழுநீர்.

இ - ள். இவ்வுருவென்னவுருவென்று தத்தைகேட்ப, அவன் இயக்கியென்று வளவிலே, துகிலுங்குழலுஞ்சோர எழுதலின், இது புதியதோரியக்கி, நீபொய்கூறினுமல்லை; அக்குணமாலை நின்மனமாகியவதனை முறையே ஆற்றாமைமிகும்படி இயக்குதலின் இயக்கியாமென்றாளாக, மதியம் முத்தையரும்பியாங்கு வல்லே திருமுகம் வியர்ப்பினைவிளைத்தது; புருவமுமேறிவளைந்தன; கண்ணும் நீர்க்கீழுரும்பினது சிவப்பினுஞ்சிவந்தனவென்க. (கசுசு)

பாவைநீபுலவியுணீடல்பாவியேற்
காவியொன்றிரண்டுடம்பல்லதூற்றுநீர்க்
கூவல்வாய்வெண்மணல்குறுகச்செல்லுமே
மேவிப்பூங்கங்கையுள்விழைந்தவன்னமே.

இ - ள். அதுகண்டு பாவாய், இருவர்க்குமுடம்பிரண்டல்லது பாவியேற்குநின் னுயிரே என்னுயிராயிருக்கும்; இது நந்தன்மை; இனிக் கங்கையிலேமேவி அதனை விரும்பிய வன்னம் மணலூற்றுநீரிலே அணுகச்செல்லாதே, அதனை நீயறிதியாதலால் புலவியினீடலென்றானென்க.

கூவலிற்செல்லாதெனவே கங்கையைநிகர்க்கும் யாற்றிலே செல்லுமென்பதாயிற்று; எனவே குணமாலைமரபுங்கூறி அவளைவரைதலும் முறைமையென்று கூறினனும். (கசுஎ)

பேரினும்பெண்டிரைப்பொறாதுசீறுவா
ணேர்முகப்பாவையைநோக்கிநெய்சொரி
கூரழல்போல்வதோர்புலவிகூர்ந்ததே
யார்வுறுகணவன்மாட்டமிர்தின்சாயற்கே.

இ - ள். வேறொருபெண்டிரைப் பெயர்சொல்லவும்பொறாதே சீறுகின்றவள் அந்நனங்கூறியசொற்பொருளுணர்ந்து, குணமாலையை யெதிர்முகமாகநோக்கி அவள் வடிவின்மிகுதிகண்டமையாற் கணவனிடத்தே சாயலுக்கு அழல்போல்வதோர் புலவிமிக்கதென்க.

* அமர்பாவை பாடமாயிற் றனக்குமாறாகியபாவையை நேரேநோக்கியென்க. ()

* மரப்பாவையென்றும், மலர்ப்பாவையென்றும், அமர்ப்பாவையென்றும் பிரதிபேதபாடங்களுண்டு.

புலந்தவள்கொடியெனநுடங்கிப்பொன்னரிச்
சிலம்பொடுமேகலைமிழற்றச்சென்னிமே
லலங்கல்வாயடிமலரணிந்துகுன்றல
மிலங்கப்போந்தினமலர்சிதறியேகினாள்.

இ - ள். அங்ஙனம்புலந்தவள் கோபத்தாலே கொடியைப்போலேநுடங்கி அவன் றலைமேற்கிடந்த மாலையிடத்தே சிலம்பும் மேகலையுமிழற்றும்படி தன்னடித்தாமரையைச்சூட்டி அவ்விடத்தினின்றும்பெயர்ந்து பின்பு மலரைச்சிதறித் தன்மனையிலே யேகினாளென்க. (கசுகூ)

துனிப்புறுகிளவியாற்றுனோவியேகலு
மினிப்பிறர்க்கிடமிலையெழுவலீங்கெனக்
கனிப்புறுசொல்லளை இப்பறந்துகாளைதன்
பனிக்கதிர்ப்பகைமலர்ப்பாதஞ்சேர்ந்ததே.

இ - ள். அவன்கூறியவெறுப்புற்றவார்த்தையோடே தத்தைபோயினாளாக, கிளி இவளுடனீங்காதுபோதலின் இவ்விடத்துப் பிறர்க்கிடமில்லை; இனி யிவ்விடத்தினின்றுமெழுந்திருப்பேனென்று இனிமையுற்றசொல்லைத் தன்னிலேகூறிப் பறந்துசென்று காளைதன்னுடைய மதியாகியபகையையுடைய தாமரைபோலும் பாதத்தை வணங்கிற்றென்க. (கள0)

வாழ்கநின்கழலடிமைந்தவென்னவே
தோழியர்சுவாகதம்போதுகீங்கெனச்
சூழ்மணிமோதிரஞ்சுடர்ந்துவில்விட
யாழறிவித்தகனங்கைநீட்டினான்.

இ - ள். கிளி அங்ஙனம்வணங்கி மைந்தனே, நின்னடி வாழ்வதாகவென்ன, வித்தகன் எந்தோழியர்நல்வரவே? இவ்விடத்தேபோதுகவென்றுகூறி மோதிர மொளிவீசும்படி கையைநீட்டினானென்க.

அடிவாழ்கவென்றன்முறைமை. குணமாலையையுஞ் சுரமஞ்சரியையுங்குறித்துத் தோழியரென்றான். ஆவென்றுபாடமோதி வியந்து தோழி சுகமேவந்ததேயென்றுமாம். (களக)

பொன்னியல்குரும்பையிற்பொலிந்தவெம்முலைக்
கன்னியர் தூதொடுகாமர்பைங்கிளி
முன்னமேவந்தெனமுறுவனோக்கமோ
டென்னைகொல்வரவெனவினியசெப்பினான்.

இ - ள். கன்னியர்வார்த்தையுடனே கிளிவந்ததென்று உட்கொண்டு மகிழ்ச்சி கொண்டநோக்குடனே என்குறிப்பே நின்வரவு யாதனைக்கருதியோவென்று இனிய கூறினானென்க.

என்முன்னமேயென்றான், பின்பும் *" ஆற்றாதேனுற்ற - விடுந்தசிறுகிளி" என்கின்றமையின். வந்ததென - விகாரம். (களஉ)

* குணமாலையாரிலம்பகம், கக்க.

மையலங்களிற்ருெடுபொருதவண்புக
மையனைச்செவ்விகண்டறிந்துவம்மெனப்
பையரவல்குலெம்பாவைதூதொடு
கையிலங்கெஃகினுய்காணவந்ததே.

இ-ள். அதுகேட்டு எஃகினுய் எம்பாவை களிற்ருெடுபொருதவையனைக கண்டு அவன்செவ்வியறிந்துவாவெனக்கூறிய வார்த்தையுடனே யான்வந்தது நின் செவ்விகாண்டற்கென்றதென்க.

செவ்வியறிதல் - வேட்கையுண்டில்லையென்றறிதல். (௪௭௩)

வேறு.

வெஞ்சினவேழமுண்டவெள்ளிலின்வெறியமாக
நெஞ்சமுநிறையுநீலநெடுங்கணுற்கவர்ந்தகள்வி
யஞ்சனத்துவலையாடிநடுங்கினுணிலைமையென்னை
பைஞ்சிறைத்தத்தையென்னப்பசுங்கிளிமொழியுமன்றே.

இ-ள். தத்தாய், கொடியவேழமென்னுநோயுண்ட விளாம்பழம்போலே வெறுவியேமாம்படி நெஞ்சையுநிறையையும் பிறரறியாமற்கண்ணிணுற்கவர்ந்தகள்வி நடு[illegible]ஞள்; அவளதுதன்மை எங்ஙனேயென்று அவன்கேட்க அக்கிளி அவடன்மையைக்கூறுமென்க.

வேழம் - தேரைபோயிற்றென்ருற்போல்வதோர்நோயென்க. இனி யானையுண்டது வெறுவிதாமென்றுமுரைப்ப. ஈண்டு நாட்டமுநடுக்கமும் வருத்தினமை கூறினான். (௪௭௪)

வேறு.

க. பூவணையமளிமேற்சேக்கும்பொன்செயதூண்
பாவைதான்பொருநதுபுநிற்கும்பற்பல்கா
லாவியாவழலெனவுயிர்க்குமையென
மேவிப்பூநிலமிசையிருக்குமெல்லவே. (௪௭௫)

உ. பணித்தருகோலமும்பந்தும்பார்ப்புறுன்
மணிக்கழங்காடலன்மாமைதான்விளர்த்
தணித்தகையாழினேடமிர்தம்விட்டொரீஇத
துணைப்பெருமலர்க்கணிற்றுயிலுநீங்கினுள். (௪௭௬)

௩. திருந்துவேற்சீவகசாமியோவெனுங்
கருங்கடல்வெள்ளவினைகரல்பமேவாவெனும்
வருந்தினேன்மாபுறப்புல்லுவங்கேனும
பொருந்துபூங்கொம்பனபொருவின்சாயலே.

இவைமூன்றுமொருதொடர்.

இ - ள். பாவைதான் பிறரைத்தாழ்விக்கத்தக்க கோலத்தையும் பந்தையும்பாராளாய் ஆடாளாய் விளர்த்து யாழையுமுணவையும்விட்டுநீங்கி உறக்கத்தையுங்கைவிட்டாள்; இத்தன்மையேயன்றி உயிருநீங்குமோவென்றுகருதிப் பூம்படுக்கையாகிய நெருப்பிலே கிடந்துபார்க்கும்; அதினும் உயிர்நீங்காமையிற் றூணைப் பற்றுக்கோடாகப் பொருந்திநின்றும்பார்க்கும்; வருத்தக்குறிப்புத்தோன்ற ஐயெனக்கூறிப்போய்ப் பல்காலாவித்து நெட்டுயிர்ப்புக்கொள்ளாநிற்கும்; பின்பு அதுவுமன்றி நிலமிசை மெல்லவிருக்கும்;அங்ஙனமிருந்து பிறர்க்குவமைகூறுதற்கினிய சாயலையுடையாள் சீவகசாமி, வளைகழலவமையுமோவென்னும்; நின்னுருவம் வெளிப்பட்டதனைப் பல்காலுஞ் சென்றுபுல்லி அதுதன்னெதிர்புல்லாமையின் யான் புல்லிவருந்தினேன்,இனி நீதான் வந்து மார்புறுமபடி புல்லென்னும்; அதுகாணாமையின் ஒவென்று வருந்துமென்க.

உயிரைக்காத்தவருத்தம் இன்றுடம்பைக் காத்தற்கென்றுகருதி வளைகழல்பவோவென்றாள். அழலெழவும் பாடம். (கஎஎ)

கன்னியருற்றநோய்கண்ணனார்க்குமஃ
தின்னதென்றுரையலர்நாணினாதலான்
மன்னும்யானுணரலேன்மாதருற்றநோய்
துன்னிநீயறிதியோதோன்றலென்றதே.

இ - ள். அங்ஙனம்பகர்ந்த கிளிதான் கன்னியர் தாமுற்ற காமநோயை நாணாலே கண்ணனார்க்கும் இத்தன்மைத்தென்று உரையாராதலின், அவளுமெனக்குரையாள்; இனி யான் மக்களினன்மையின் மாதருற்றநோயைத் துன்னிமிகவுமறியேன்; தோன்றலே, நீ அஃதறிதியோ? கூறென்றதென்க. (கஎஅ)

வேறு

புள்ளின்வாயுரைகேட்டலும்பொன்செய்வே
லெள்ளிநீண்டகண்ணுழைநிறத்தின்னுரை
புள்ளினுருழைக்கண்டதொத்தானரோ
வள்ளன்மாததடிந்தானன்னமாண்பினான்.

இ - ள். குணமாலைதிறத்தில் இனியவுரைகளைக் கிளியின்வாயில் வார்த்தையாலே கேட்டவளவிலே, வள்ளல் முருகனையொத்தமாண்பினான் பெறுதற்கரிதாக நினைத்தார்சிலரைத் தன்னிடத்தே வரக்கண்ட தன்மையை யொத்தானென்க. (கஎகூ)

சொன்மருந்துதந்தாய்சொல்லுநின்மனத்
தென்னமர்ந்ததுரைத்துக்கொணீயென
வின்னிமிர்ந்தகிளிவீங்கெழிற்றோள்வா
கின்மருந்திவைவேண்டுவலென்றதே.

இ - ள். குணமாலைசொல்லுஞ் சொல்லாகியமருந்தினை யானுற்றும்படி தந்தநீ நின்மனத்திற்குப்பொருந்தியதியாது? அதனையுரைத்துக்கொளென்றானாக, கிளிகின்னைப்போல வார்த்தையாலாற்றுள்; அவட்கு நின்றோளே இனியமருந்து, இவை யான்பரிசிலாகவேண்டுவேனென்றதென்க. (கஅ0)

பொற்குன்றுயினும்பூம்பழனங்கள்சூழ்
நெற்குன்றும்பதிநேரினுந்தன்னையான்
கற்குன்றேந்தியதோளிணைக்கண்ணுறீஇச்
சொற்குன்றுபுணர்கேன்சொல்லுபோவென்றான்.

இ-ள். அதுகேட்டவன் அவள்சுற்றத்தார் பொருளையுமூரையுந் தரவேண்டு மென்னினும் யான் அவற்றைக்கொடுத்துத் தோளிணையைச் சேர்த்தித் தன்னைப் புணர்வேன்; இச்சொற் சலியாது, சென்றுசொல், நீபோவென்றானென்க.

கற்குன்றேந்திய தோள், *"கொடுஞ்சிலையான்" எனத் தன்னைவியத்தல் குற்ற மெனின், †"கிழவி முன்னர்த் தற்புகழ் கிளவி - கிழவோன் வினைவயி னுரிய வென்ப" என்பதன் கருத்தாற் குற்றமன்று. வினையாவது செயப்படுபொருள். பொருளுமூருங்கொடுத்துப் புல்லுவேனென்னுங் கடைப்பிடியாகிய செயப்படுபொருளும் ஆள்வினைக்குச்சிறப்புடைமையின், யானேபுணர்வேனென்னுமாள்வினைக்கருத்தாற் றன்னைப்புகழ்ந்துரைக்கவே,அதுபற்றுக்கோடாக ஆற்றுவாளென்பது பயனும். இது கைக்கிளையாதலின், முன்னரன்றியும்புகழ்ந்தான். புறத்திணையில் ‡"தலைத்தா னெடுமொழி தன்னொடு புணர்த்தலும்" தலைவற்குரித்து. (க௬க)

சேலைவென்றகண்ணாட்கிவைசெப்பரி
தோலையொன்றெழுதிப்பணிநீயெனா
மாலைமார்பன்கொடுப்பத்தினைக்குரா
லோலையோடுகொண்டோங்கிப்பறந்ததே.

இ-ள். அதுகேட்டகிளி கண்ணாள்வருத்தந்தீரும்படி அவட்கு இவையெல்லாங் கூறுதலரிது; அதுவுமன்றி நின்வருத்தம் உண்மையென்றுணரும்படி திருமுகத்தையுந் திருவாழியையுந் தந்தருளென்றுகூற; அவனும் பிறரயிராமற் றினைக்கதிரில வைத்த ஓலையோடே ஆழியையுங் கொடுப்ப, அக்கிளி அவற்றைக்கொண்டு உயர்ந்து பறந்ததென்க.

ஒன்றென்றது ஆழியை, மேல் "காமமோதிரந்தொட்டு" என்பர். (க௬உ)

திருந்துகோதைச்சிகழிகைச்சீறடி
மருந்தின்சாயன்மணங்கமழ்மேனியாள்
பொருந்துபூம்பொய்கைப்போர்வையைப்போர்த்துடன
கருங்கட்பாவைகவின்பெறவைகினாள்.

மருந்து - அமுது; இதற்கு அமிர்தன்னசாயலுக்குரைத்ததுரைக்க.

இ-ள். கோதைமுதலியவற்றையுடையதத்தை அங்ஙனமேகினையள் பொய்

* குணமாலையாரிலம்பகம், க௬க.
† தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், ௬௦.
‡ ,, ,, புறத்திணையியல், ௫.

கைவடிவாக எழுதினபடாத்தை மெய்ம்முழுது மறையப்போர்த்துக் கோபத்தாலே விழித்துக் கிடந்தாளென்க.

பொய்கைபோலுங் கண்ணீர்ப்போர்வையுமாம். (கஅங)

மறங்கொள்வெங்கதிர்வேலவன்வாரகழல்
கறங்கவேகித்தன்காதலியூடலை
யுறைந்தவொண்மலர்ச்சென்னியினீக்கினா
னிறைந்தவின்பநெடுங்கணிக்கென்பவே.

இ - ள். கிளிபோனபின் வருத்தந்தீர்ந்து வேலவன் தத்தையதுமனையேறப் போய் அவளூடலை மலருறைந்த தன்றலையினாலே வணங்கி நீக்கினான், அப்பொழுது அவளுக்கு இன்பநிறைந்ததென்க. (கஅச)

வேறு.

தன்றுணைவிகோட்டியினீங்கித்தனியிடம்பார்த்
தின்றுணையைச்சேர்வானிருந்ததுகொல்போந்ததுகொல்
சென்றதுகொல்சேர்ந்ததுகொல்செவ்வியறிந்துருகு
மென்றுணைவிமாற்றமிஃதென்றதுகொல்பாவம்.

அக்கிளி செல்கின்றபொழுது குணமாலை கருதினதன்மை கூறுகின்றார்.

இ - ள். கிளி சென்றதோ, சென்று இன்றுணைவனைத் தன்றுணைவியுந்தானு மிருக்கின்ற இருப்பினின்றுநீங்கித் தனியானவிடத்தைப்பார்த்துச் சேரக்கருதியிருந்ததோ, அக்கோட்டியைப்பொறாதே போந்ததோ, பொறுத்துப்போய்ச் சேர்ந்ததோ, சேர்ந்து இது காலமென்றறிந்து நினக்குத் துணைவியாகின்ற குணமாலைவார்த்தை யிஃது, அவடான் காமத்தீயானுருகும், இதற்கு நீசெய்யக்கருதுகின்றதென்னெனக் கூறிற்றோ, என்னோ இஃதொருபாவமிருந்தபடி என்னென்றுகருதினாளென்க.

என்பிள்ளையும்யானும்பட்டது என்னென்றாள். (கஅரு)

வேறு.

செந்தார்ப்பசுங்கிளியார்சென்றார்க்கோரின்னுரைதான்
றந்தாரேற்றந்தாரென்னின்னுயிர்தாந்தாராரே
லந்தோகுணமாலைக்காதகாதென்றுலக
நொந்தாங்கழுமயன்றுநோற்றானுமெய்துவனே.

செந்தார் - கழுத்திலிட்டவரை. கிளியார், ஒன்றெனமுடித்தலாற்கொள்க.

இ - ள். கிளியார்போனவருக்கு அவர்தாம் இனியதொருவார்த்தையைத்தாஞ் சொன்னாராயிற் கிளியார்க்குமுகமன்கூறினாரன்று; என்னுயிரைத்தந்தார்; அவ அந்தோ! அங்ஙனங்கூறாராயின் அவ்விடத்து யான் சுரமஞ்சரியைப்போலேமுயன் தவஞ்செய்தாயினும் பின்பெய்துவேனோ, ஆ! குணமாலைக்கு இவ்விறந்துபாடு தக தென்று, உலகநொந்தழும்படி இறந்துபாட்டை யெய்துவேனன்றோவென்று கரு னாளென்க.

எய்துவெனே, ஏகாரம்-எதிர்மறை. அந்தோ, ஆ இவையிரக்கக்குறிப்பு. (கஅக

சென்றார்வரையகருமஞ்செருவேலான்
பொன்றாங்கணியகலம்புல்லப்பொருந்துமேற்
குன்றாதுகூடுகெனவெண்முத்தவார்மணன்மே
லன்றாங்கணியிழையாளாழியிழைத்தாளே.

இ - ள். அங்ஙனங்கருதினவணியிழையாள் காரியத்தின்முடிவு காரியங்கொள் வப்போனாறிவினளவாயிருக்கும்; என்கிளிபேதையென்பது யானறிவேனன்றோ, இனி அதன்வரவுபார்த்திராதே * கூடலிழைத்துப்பார்ப்பேனென்றுகருதி, வேலா னகலம் என்னைத் தழுவக்கூடுமாயிற் குன்றாதேகூடுவாயாகவென்றுகூறி முத்தாகிய மணலிலே அதனைப் போகவிட்ட வன்றே யப்பொழுதே கூடலுக்குவட்டத்தை யிழைத்தாளென்க. (௧௮௭)

பாகவார்வாங்கிப்பழுதாகிற்பாவியேற்
கேகுமாலாவியெனநினைப்பப்பைங்கிளியார்
மாகமேநோக்கிமடவாளேயவ்விருந்தா
ளாகும்யான்சேர்வலெனச்சென்றடைந்ததே.

இ - ள். அங்ஙனமிழைத்தவள் அவ்வாழியுட்கீறுகின்றகீற்றிலே ஒருகீற்றிற் பாதியைக்கீறி இதுகூடாதாயிற் கிளிநல்வரவாய்வந்ததேனும் அதுகேளாதே எனக் குயிர்போகாநிற்குமேயென்றுகருதி அதனைவிட்டுக் கிளியின்வரவைநினைந்திருந்தாளா கப் பைங்கிளி யடைந்ததென்க.

அடைந்தபடி மாகமேநோக்கி அவ்விடத்திருந்தாள்யார்? இங்ஙனமிருப்பார் வேறின்மையிற் குணமாலையேயாகும்; இனி யான்சோவேனென்றணுகிற்று. தான் போனபின்புள்ள வேறுபாட்டாலேயுற்று வருத்தமிகுதிகண்டு தெளிந்தது. (௧௮௮)

கண்டாளெணடிதுயிர்த்தாள்கைதொழுதாள்கையகத்தே
கொண்டாடினேக்குராஅன்சூடினாடாழ்குழன்மே
லுண்டார்ப்பசுங்கிளியைநோவகட்டொடுக்கி
வண்டாரான்செவ்விவாய்க்கேட்டாடல்மெய்ம்மகிழ்ந்தாள்.

இ - ள். அணுகினவக்கிளியைக்கண்டாள்; கண்டு இஃது என்கூறுகின்றதோ வென்று உயிர்த்தாள்; உயிர்த்துத் தினைக்கதிராக்கண்டு அதிலேயோலையுண்டென்று கருதித்தொழுதாள்; தொழுது முற்கொடுத்தவாழியினைக் கையினுள்ளேமறையக் கொண்டாள்; கொண்டு அது பிற்கொடுத்ததிருமுகத்தைத் தலைமேலேசூடினாள்; சூடி அக்கிளியை நோம்படி வயிற்றிலேயணைத்துக்கொண்டாள்; கொண்டு தாரான் வருத்தத்தை அதுகூறக்கேட்டாள்; கேட்டு உடம்புகுளிர்ந்தாளென்க.

வயிற்றிலேயணைத்தலியல்பு. (௧௮௯)

தீம்பாலமிர்தூட்டிச்செம்பொன்மணிக்கூட்டிற்
காம்பேர்பணைத்தோளிமென்பமலைகண்படுப்பித்
தாம்பான்மணிகாமமோதிரந்தொட்டையென்னத்
தேம்பாவெழுத்தோலைசெவ்வனேநோக்கினாள்.

இ - ள். பெருந்தோளிதான் அவனோடே ஆம்பகுதியினையுடைய சீவகனென்னும்பெயரைப்பொறித்த மோதிரத்தையிட்டுப் பறவையைப் பாலமிர்தூட்டிக் கூட்டிலேதுயில்கொள்ளுவித்து அவன்றனெழுத்தையுடையவோலையை விரைய எதிர்முகமாகநோக்கி வாசித்தாளென்க.

தேம்பாமைக்குக் காரணமாகிய வோலை (௧௧௦)

கொடுஞ்சிலையானோலைகுணமாலைகாண்க
வடுந்துயரமுள்சுடவெந்தாற்றாதேனுற்ற
விடுந்தசிறுகிளியால்விம்மனோய்தீர்ந்தே
னெடுங்கணுடானுநினைவகல்வாளாக.

இதற்குப் பொற்குன்றென்னுங்கவியிலேகூறினும். இன்னரோலை இன்னார் காண்கவென்றல் முறைமை.

இ - ள். சீவகனோலையைக் குணமாலைகாண்பாளாக, காமநோய்சுடுதலாலே வெந்து ஆற்றாதயான் ஆற்றும்படி தான்வரவிட்டகிளியாலே மிக்கவருத்தந்தீர்ந்தேன்; நெடுங்கணுளாகிய தானும் வருத்தமிகாதொழிவாளாகவென்க. (௧௧௧)

ஈட்டஞ்சானீணிதியுமீர்ங்குவளைப்பைந்தடஞ்சூழ்
மோட்டுவளஞ்சுரக்குமூருமுழுதீந்து
வேட்டார்க்குவேட்டனவேபோன்றினியவேய்மென்றோட்
பூட்டார்சிலைநுதலாட்புல்லாதொழிபேனே.

இ - ள். அறத்தான் ஈட்டமமைந்த பெரும்பொருட்டிரளையும், பெருவளத்தைக்கொடுக்குமூரினையுங் குரவர்கருதினபடியேகொடுத்து, சிலைநுதலாளைத் தோளைப் புல்லாதொழியேனென்க.

இரண்டாமுருபிங்ஙனம்வருதல் "தெள்ளிது" என்பதனாற்கொள்க. அரிய பொருள்களைவேட்டார்க்கு அவைபெற்றாற்போலினிய தோள். (௧௧௨)

௧. குங்குமஞ்சேர்வெம்முலைமேற்கொய்தார்வடுப்பொறிப்பச்
செங்கயற்கண்வெம்பனியாற்சிந்தையெரியவித்து
மங்கைமகிழவுறையேனேல்வாளமருட்
பங்கப்பட்டார்மேற்படைநினைந்தேனுகென்றான். (௧௧௩)

௨. நூல்புடைத்தாற்போழ்கிடந்தவித்தகஞ்சேர்நுண்வரிகள்
பான்மடுத்துத்தீங்தேன்பருகுவாள்போனோக்கிச்
சேல்படுத்தகண்ணீர்சுமந்தளை இமெய்ம்மகிழ்ந்து
மால்படுத்தான்மார்பின்மணந்தாளேபோன்மகிழ்ந்தாள்.

இவையிரண்டுமொருதொடர்.

வெம்பனியென்றான், புணர்ந்தாலன்றி முயக்கத்தளவால் உண்ணிறைவெப்ப முழுதுந் தீராதென்று. பங்கப்படுதல் - இமைத்தல் முதலியன. ஆகென்றான் - தொழிற்பெயர்.

இ - ள். என்மாலை தன்முலைமேலே வடுவாயழுந்தும்படி யான்முயங்குதலிற் பிறந்த உவகைக்கண்ணீராலே சிறிதுதணிந்தகாமத்தீயையவித்துத் தான் என்னன் புடைமைக்குமகிழும்படி உறைந்திலேனாயிற் போரில் அஞ்சினார்மேலே படைவிட நினைந்தேனாகக்கடவேனென்றெழுதினவனுடைய நூலெற்றினாற்போலச் செவ்வி தாய்க்கிடந்த உறுப்புக்கள்சேர்ந்த வரிகளைப் பாலிலே தேனைவார்த்துப் பருகுவாள் போலே இனிமையுற்று வாசித்து உவகையளைஇக் கண்ணீர்சுமந்து உடம்பு குளிர்ந்து மயக்கத்தையுண்டாக்கினவன்மார்பிலே கூடினாள்போலே இனிமையுற்றா ளென்க.

சேல்படுத்த - சேலைத்தோற்பித்த. (கக௪)

பாலவியும்பூவும்புகையும்பசுசாந்துங்
காலவியாப்பொன்விளக்குந்தந்தும்மைக்கைதொழுவேன்
கோலவியாவெஞ்சிலையான்சொற்குன்றாளெனவே
நூலவையார்போனீங்கணோக்குமினேயென்றாள்.

காற்றலவியாவிளக்கு - மணிவிளக்கு; வெளிப்படை. அம்பு இடைவிடாம லெய்கின்றவில். நீங்களென்றது எழுத்துக்களை; அவற்றின்றன்மையும் வடிவும் ஆசிரியர்க்கல்லது உணரலாகாமையின், நூலின்விளங்கக்கூறிற்றிலரேனுஞ் சமய நூல்களிற் கூறுதலின், அவ்வெழுத்துக்கள் தெய்வமென்றேகொள்க.

இ - ள். சிலையான் நும்மை நீங்காதொற்றுமைப்படக்கூறிய சொற்குன்றா னாயினும் நீங்கள் தருமநூலோதினார்களை நோக்குமாறுபோல அச்சொல் இடையூ றின்றி யாகவென்றேகருதி நோக்குமின்; நும்மை யானும் பாலவிமுதலியவற்றைத் தந்து கைதொழுவேனென்றாளென்க. (ககரு)

வே று.

க. மௌவலங்குழலினாளை மதியுடம்படுக்கலுற்றாச்
செவ்வியுட்செவிலிசொல்லுஞ்சிலையிவர்நுதலினாய்நின்
னவ்வைக்குமூத்தமாமனொருமகற்கின்றுன்றாதை
நவ்வியம்பிணைகொணோக்கிநகைமுகவிருந்துசெய்தான். (ககசு)

உ. பண்டியாற்பண்டிசெம்பொன்பல்வளைபரியமாக
கொண்டுவந்தடிமைசெய்வான்குறையுறுகின்றதன்றிக்
கண்டவர்கடக்கலாற்றாக்கிழிமிசையுருவுதீட்டி
வண்டிமிர்கோதைநின்னைவழிபடுநாளுமென்றாள்.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். அவ்வளவிலே குணமாலையை மதியையறிவுறலுற்று அதற்கேற்ப வார்த்தைசொல்லுஞ்செவிலி, சிலைபோல்விளங்குநுதலினாய், நோக்கி, நின்றாய்க்கு மூத்ததமையன் நினக்குமாமனானவனுடைய ஒப்பிலாதமகனுக்கு இன்று உன்றாதை நகைமுகமாகிய விருந்தையிட்டான்; அவ்வுடன்பாட்டாலே வளையையுடைய கோதாய், நின்மைத்துனன் நினக்கு முலைவிலையாக வண்டியாலே ஒருவண்டிப்பொன் கொண்டுவந்து நினக்கு ஏவல்செய்தற்கு இன்று குறையுற்றுநிற்கின்றதேயன்றிக்

கடக்கலாற்று நின்னுருவைக் கிழிமிசைத்தீட்டி நின்னை வழிபடுவதுஞ்செய்யுமென்றாளென்க.

விருந்துசெய்தானென்பது குறைக்குடன்பட்டானென்பதாம். (௧௯௭)

மைத்துனன்வனப்பின்மிக்கான்வளர்நிதிக்கிழவன்காளை
யுத்தமனுனதுநாமமல்லதொன்றுரைத்தறேற்றா
னித்திறத்திவன்கணின்னையெண்ணினாரென்னமேலாடுந்
தத்தையங்கிளவிகையாற்செவிமுதலடைச்சிச்சொன்னாள்.

இ - ள். என்று பின்னும் நின்னைக்கோடற்குரியன், அழகின்மிக்கான், பொருளுடையன், இளையன், நற்குணமுடையன், நின்பெயரல்லது வேறொருபெயரைக் கூறவறியான், இக்கூறுபாட்டையுடையவனிடத்தே நின்னைக் கொடுக்கவெண்ணினாரென்றவளவிலே குணமாலை கையாலே செவியைப்புதைத்து ஒருவார்த்தைகூறினாளென்க. (௧௯௮)

மணிமதக்களிறுவென்றான்வருத்தச்சொற்கூலியாக
வணிமதக்களிறனானுக்கடிப்பணிசெய்வதல்லாற்
றுணிவதென்சுடுசொல்வாளாற்செவிமுதலீரலென்றாள்
பணிவரும்பவளப்பாவைபரிவுகொண்டனையதொப்பாள்.

இ - ள். பவளப்பாவை வருத்தங்கொண்டதன்மையையொப்பாள் கட்டுமணியையுடைய களிற்றைவென்றவன் "கொண்டுய்யப்போமின்" என்றசொல்லிற்குக் கூலியாக அவற்குத் தாழ்ந்து ஏவல்செய்வதன்றி வேறுகொடுக்கத் துணிதற்குக் காரணமென்? இங்ஙனஞ் சுடுசொல்லாகிய வாளாலே செவியிடத்தை யீராதேகொள்ளென்றாளென்க.

அடிச்செருப்பாவதலலாலென்றும் பாடம். (௧௯௯)

கந்துகப்புடையிற்பொங்குங்கலினமாவல்லன்காளைக்
கெந்தையும்யாயுநேராராய்விடினிறத்தலொன்றே
சிந்தனைபிறிதொன்றாகிச்செய்தவமுயறலொன்றே
வந்ததானாளையென்றாள்வடுவெனக்கிடந்தகண்ணாள்.

கந்துகப்புடையில் - பந்தினதுபுடைத்தல்போல. ஆகி - ஆக. குரவர்நினைவு வேறாய்ப்போகத் தான் இவனைப்பெறுதற்குத் தவஞ்செய்தல்.

இ - ள். பின்னும் வடுப்போலுங்கண்ணாள் காளைக்கு எந்தையும்யாயும் நேராராயின் இறந்துபடுதலொன்று, தவமுயறலொன்று, இவ்விரண்டினுளொன்று நாளை நமக்கு வந்துற்றதென்றழுதாளென்க. (௨௦௦)

தேனெய்போன்றினியசொல்லாள்சிறுமுதுக்குறைமைகேட்டே
யூனைநைந்துருகிக்கைத்தாயுண்ணிறையுவகைபொங்க
வானெய்பாற்கிவர்ந்ததொத்ததேழ்கலென்பாவையென்று
தானையாற்றடங்கணீரைத்துடைத்துமெய்தழீஇக்கொண்டாள்.

ஊனை, ஐ - அசை.

இ - ள். செவிலி குணமாலையது சிறுமையிலே பேரறிவுடைமையைக் கேட்டு உவகை யூனைந்துருகிப் பொங்குகையினாலே நின்கருத்துப் பசுவினைப் பார்க்கு விரும் பியதன்மையையொத்தது. இனிப் பாவாய்! அழேற்கவென்று தானையாலே கண்ணீரைத்துடைத்துத் தழுவிக்கொண்டாளென்க.

பார்க்கவர்ந்ததும் பாடம். (௨௦௧)

துகண்மனத்தின்றிநோற்றதொல்வினைப்பயத்தினன்றே
தகணிலாக்கேள்வியான்கட்டங்கியதென்றுபின்னு
மகண்மனங்குளிர்ப்பககூறிமறுவலும்புல்லிக்கொண்டாள்
ககன்மனைத்தாய்க்குச்சொன்னாளவளுந்தன்கேட்குச்சொன்னாள்.

இ - ள். மனத்திலழுக்கின்றாய்நோற்ற நல்வினைப்பயத்தானன்றே தட்டற்ற கேள்வியானிடத்தே நின்மனந் தங்கியதென்று குளிரச்சொல்லி இருகாலாவதும் புல்லிக்கொண்டு அவ்விடத்தில் நற்றாய்க்கு அறத்தொடுநின்றாள்; அவளுந் தன்கணவனுக்கு அறத்தொடுநின்றாளென்க. (௨௦௨)

வினையமாமாலைகேள்வன்குபேரமித்திரற்குச்சொல்ல
வனையதேபட்டதென்றாலையனோநங்கைக்கொத்தான்
வனையவேபட்டபோலுமணிமருண்முலையினாளைப்
புனையவேபட்டபொற்றார்ப்புண்ணியற்கீதுமென்றான்.

வினையமாமாலை - நற்றாய்பெயர். அனையதே - அப்படியே, பெரியதொருகாரியமே; ஏகாரம் - வினா. என்றால் - ஒருவார்த்தைப்பாடு.

இ - ள். நற்றாய் தன்கேள்வனாகிய குபேரமித்திரற்குக்கூற, அவனும அவள் மனத்திற்பட்டது அனையதே? என்றாற் குணமாலைக்கொத்தான் சீவகனே, அவளை அவனுக்குக் கொடுப்பேமென்றானென்க. (௨௦௩)

வேறு.

கற்றார்மற்றுங்கட்டுரைவல்லார்கவியென்னு
நற்றேர்மேலார்நால்வரைவிட்டாற்கவர்சென்றார்
சுற்றார்வல்விற்சூடுறுசெம்பொற்கழலுய்கன்
பொற்றார்மார்பீர்போதுமினென்றாங்கெதிர்கொண்டான்.

இம்மூன்றுகலையும் வல்லார் நால்வர். என்னும் - என்றுலகங்கூறும். நான்கனுருபு அதற்குடம்படுதற்பாற்படும்.

இ - ள். குபேரமித்திரன் இவர்களைத் தேர்மேலாராகப் போகவிட்டார்க்கு அவரும்போனார்; அப்பொழுது கந்துகன் மார்பீர்! இங்ஙனம் போதுகவென்று வாயிலிலேசென்று எதிர்கொண்டானென்க. (௨௦௪)

க. [illegible]தாநின்றதீமுகவேலான்மணிச்செப்பி
னீந்தான்கொண்டாரின்முகவாசமெரிசெம்பொன்
காந்தாநின்றகம்பகமன்னீர்வரப்பெற்றேன்
சேர்ந்தேனின்றேனிடெனநாய்சுற்கவர்சொன்னார். (௨௦௫)

உ. யாமகளீ துநீர்மகட்கொண்மினெனயாருந்
தாமகணேராராயினுந்தண்ணெனவரைமார்பிற்
பூமகள்வைகும்புண்ணியப்பொற்குன்றனையானுக்
கியாமகணேர்ந்தேமின்றெனநாய்கற்கவர்சொன்னார்.

இவையிரண்டுமொருதொடர்.

க. சீந்தாநின்ற - கோபியர்நின்ற. வேலான்-கந்துகன். விகாரமாக்கிச் சிந்தாநின்றவென்றுமாம். நாய்கற்கு - கந்துகற்கு. அவர் - வந்தநால்வரும்.
உ. தம்மகள் - விகாரம். நாய்கற்கு - உமக்கு. அவர் - குபேரமித்திரர்.

இ - ள். வேலான் வெற்றிலையைச் செப்பிலேயீந்தான்; அவரும் அதனைக்கொண்டார்; கொண்டபின்பு கற்பகமன்னீர், நீர்வரப்பெற்றேனாதலின், இன்றே வீட்டைப் பெற்றேனென்று கந்துகன் முகமன்கூற, அதுகேட்டவவர் யாமகளைத்தருவேமென்றும், நீர்மகளைக்கொண்மினென்றும் வாய்விட்டுக்கூறி யாவருந் தம்மகளைக் கொடுக்க நேராராயினும், இன்று புதிதாகச் சீவகற்கு யாம் மகட்கொடை நேர்ந்தேமென்று உமக்குக் குபேரமித்திரர் கூறினாரென்று கந்துகற்குக் கூறினாரென்க.

அவர்கூறினபடியைத் தேவர்கூறினார். (உ0கூ)

சுற்றார்வல்விற்சூடுறுசெம்பொற்கழலாற்குக்
குற்றேவல்செய் துங்காளையும்யானுங்கொடியாளை
மற்சேர்தோளான்றன்மருமானுக்கருள்செய்யப்
பெற்றேனென்னப்பேசினன்வாசங்கமழ்தாரான்.

இ - ள். அதுகேட்டகந்துகன் குபேரமித்திரன் குணமாலையைச சீவகற்குக் கொடுக்கப்பெற்றேனாதலின், அவனுக்குச் சீவகனும்யானுங் குற்றேவல் செய்யக்கடவேமென்று தாழ்ந்துகூறினானென்க.

அவன் முனே மகட்கொடைநேர்தலானுங் கொள்வார் தாழவே வேண்டுதலானு மிங்ஙனங்கூறினான். (உ0எ)

விடைசூழேற்றின்வெல்புகழான்றம்மிகுதாதை
கடல்சூழ்வையங்கைப்படுத்தாம்போன்றிதுகூறச்
சுடர்சூழ்கோட்டகுஞ்சரமவென்றவைகையும்மப்
படாசூழ்நெஞ்சிறபாவைதன்பண்புமவர்சொன்னார்.

விடைசூழென்றது தோழரைக்கருதி.

இ - ள். ஏற்றினையொத்த சீவகன்றந்தை உலகைக் கைக்கொண்டான் போல மகிழ்ந்து தாழ்ந்து கூறுதலின், வந்தவர்கள் இவன் அகக்களிற்றை வென்றபடியும் அதனாற் பாவைகொண்ட குணத்தினையும் விளங்கக்கூறினாரென்க.

பண்பு - நேராராயின் இறந்துபடுதல், தவஞ்செய்தலென்றது. (உ0அ)

மறையாவேள்விமந்திரச்செந்திக்கொடியேபோற
குறையாக்கற்பிற்சீவகன்றாயுங்கொலைவேற்கட்

பொறையொன்றாற்றப்போதணிபொற்கொம்பனையாளை
நறையார்கோதைநன்றெனவின்புற்றெதிர்கொண்டாள்.

வேதவேள்வியிற்றீ; மந்திரங்கூறுந்தீ. கொடி-ஒழுங்கு. ஆற்ற-நண்டுவினையெச்சம். இல்லறமென்கின்ற பொறையொன்றுமேநடத்தியணிந்தகொம்பு - இல்பொருளுவமை. கொம்பனையாள் - வினையமாமாலை. நறையார்கோதை - குணமாலை.

இ - ள். செந்தீக்கொடியேபோலுஞ்சுநந்தையும் யான்கருதியவிதனைத் தான் முற்படமுடித்ததன்மை நன்றென்றுகூறிக் கொம்பனையாளையின்புற்றுப் பின்பு கொலைவேற்கண் ணறையார்கோதையை விரும்பினளென்க. (உ0க)

பொற்கச்சார்த்தபூணணிபொம்மன்முலையாளை
யற்கச்செய்தயாப்பினராகியவண்வந்தார்
பொற்பக்கூறிப்போகுதுமென்றார்க்கெழுகென்றார்
வற்கமிட்டவண்பரிமாவின்னவர்சென்றார்.

இ - ள். அவண்வந்தார் குணமாலையைச் சீவகனிடத்தேயடையும்படிபண்ணி னயாப்பினராய்ப் பின்பு மணஞ்செய்யும்பொழுதையும் பொலிவுபெறும்படிகூறிப் போவேமென்றார்க்கு அவர்களும் போகவென்றார்; அவரும் பண்முற்றுப்பெற்ற மாவின்மேலேசென்றாரென்க.

முகூர்த்தந் தப்பாமன்முடித்தற்குக கடிதிற்சென்றார். (உக0)

வேறு.

மடந்தைதிறத்தினியையம்மகட்கூறிவந்தார்
விடந்தைத்தவேலாற்றுரைத்தார்க்கவன்மெய்ம்மகிழ்ந்தா
னுடங்குங்கொடிப்போல்பவணூபுரமார்ப்பவந்து
தடங்கண்ணவடாயதுகேட்டலுந்தக்கதென்றாள்.

தைத்த - உள்ளேகிடக்கிற. நுடங்குகின்றகொடிப்போல்பவள் - சுநந்தை. அது - தன்னைக்கூறியமொழி.

இ - ள். குணமாலைதிறத்தாலே அவாகளியையும்படி மகளைக்கொடுப்பதாகப் பேசிவந்தவர்கள் குபேரமித்திரற்குக்குற்றேவல்செய்துமென்றதனையுரைத்தார்க்கு அவன் மகிழ்ந்தான். நூபுரமார்ப்பவந்து கொடிபோல்பவள்கூறியமொழியைக குணமாலைதாய்கேட்டலும் அவளுக்கு அது தக்கதென்றாளென்க. (உகக)

திருவிற்கணைமைந்தன்றிசைபத்துமறிந்ததொல்சீ
ருருவிற்கணைமைந்தாற்கணைமைந்தாளெனயாருமொட்டப்
பெருநூல்கணிபிற்கணிபேசியபேதினாளாற்
பருகற்கமைந்தவமிர்தின்படர்தீர்க்கலுற்றார்.

இ - ள். குணமாலைக்குச் சீவகனமைந்தான், சீவகனுக்குக் குணமாலையமைந் தாளென்று எல்லாருமிசையும்படி பெருநூலையுடைய கணிகூறிய மயக்கமில்லாத நாளிலே குணமாலையது வருத்தத்தைத் தீர்க்கலுற்றாரென்க. (உகஉ)

கனைகொன்றிரங்குங்கடலிற்கலிகொண்டுகல்லென்
முரசங்கறங்கமுழவிம்மவெண்சங்கமார்ப்பப்
பிரசங்கலங்கிற்றெனமாந்தர்பிணங்கவேட்டான்
வினைசென்றடைந்தகுழலாளையவ்வேனிலானே.

அவ்வேனிலான்-நுதல்விழிக்கழியாதகாமன்.

இ - ள். அவ்வேனிலான் கடல்போல ஆரவாரங்கொண்டு இயங்களெல்லாமியம்ப மாந்தர்தேனினங்கலங்கிற்றெனநெருங்கக் குழலாளை வேட்டானென்க. (உகங)

மழைமொக்குளன்னவருமென்முலைமாதர்நல்லா
ரிழைமுற்றணிந்தாரெழுநூற்றுவர்கோடிசெம்பொன்
கழைமுற்றுந்தீந்தேன்கரும்பார்வயலைந்துமூதூர்
குழைமுற்றுகாதின்மணிக்கொம்பொடுநோய்கனீந்தான்.

தீந்தேன்முற்றினகரும்பின்கழை; கழை - கோல்; * "தீங்கட் கரும்பின் கழை வாங்கும்" என்ப.

இ - ள். குழைசூழ்ந்தகாதினையுடையகொம்பை நீர்வார்த்துக்கொடுக்கின்றபொழுதே இளையமகளிரெழுநூற்றுவரையும் முற்றுமிழையணிந்தாரெழுநூற்றுவரையுங் கோடிசெம்பொன்னையும் ஐந்தூரையுங்கொடுத்தானென்க. (உகச)

வேறு.

பண்ணார்கிளவிப்பவளம்புரைசெவ்வாய்க்
கண்ணார்கதிர்மென்முலைக்காம்படுமென்றோள்
விண்ணோருலகின்னொடுமிந்நிலத்தில்லாப்
பெண்ணாரமிர்தேயவன்பெற்றவமிர்தே.

இ - ள். அவன்பெற்றவமிர்து தேவருலகத்தினும் இந்நிலவுலகத்தினுமில்லாததொரு கிளவிமுதலியவற்றையுடைய பெண்டன்மையார்ந்த அமிர்தேயென்க ()

தேதாவெனவண்டொடுதேன்வரிசெயயப்
போதார்குழலாள்புணர்மென்முலைபாயத்
தாதார்கமழ்தார்மதுவிண்டுதுளிப்ப
வீதாமவரெய்தியவின்பமதே.

தேதா - ஆளத்தி. வரி - பாட்டு. அவர்-தேவர்.

இ - ள். தேன் வரிசெய்ய அவன்றார் மதுத்துளிக்கும்படி குழலாள் முலைபாய்ந்தெய்திய இந்தவின்பம் அவரெய்தினவின்பமென்க. (உகசு)

முந்நீர்ப்பவளத்துறைநித்திலமுதத
மந்நீரமிர்தீன்றுகொடுப்பவமர்ந்தான்
மைந்நீர்நெடுங்கண்புருவங்கண்மலங்கப்
பொன்னாரரிக்கிணகிணிபூசலிடவே.

* கலித்தொகை, இரண்டாவதுகுறிஞ்சிக்கலி, ச.

இ - ள். கடலிற்பிறந்த பவளத்தேயுறைகின்ற நித்திலம்போலுமெயிறு அக் கடலிற்பிறந்தவமிர்தத்தைத் தானீன்றுகொடுப்பக் கண்கள்புருவங்களிவைபிறழக் கிண்கிணியொலிப்பப் புணர்ச்சியைப்பொருந்தினனென்க.

அயின்றானபாடமாயிற் பானமும்புணர்ச்சியுமுடனிகழ்ச்சியாம். (உ௧௭)

கம்பார்களியானைகலக்கமலங்கி
யம்பேரரிவாணெடுங்கண்புதைத்தஞ்சிக்
கொம்பேகுழைவாயெனக்கேகுழைந்திட்டாய்
வம்பேயிதுவையகத்தார்வழக்கன்றே.

கம்பமார் - விகாரம்.

இ - ள். கொம்பே! யானைகலக்குதலிற்கலங்கிக் கண்ணைப்புதைத்து அஞ்சிக் குழைகின்றநீ பொதுநோக்கத்தான் இவனிறந்துபடுவனென்றருளேக்கினைத்தந்தா யாதலின் எனக்கேவருந்தினாய், இங்ஙனஞ்செய்தல் உலகத்தார்வழக்கன்று; புதிய தொருவழக்கென்று நயப்புக்கூறினனென்க.

தாம்வலைவார் பிறர்க்கூற்றங்கோலாகாரென்பதுலகவழக்கு. நீசெய்தது அது வன்று. "நீலநெடுங்கணுற்கவர்ந்தகள்வி" என்பது பொதுநோக்கு. (உ௧௮)

பூவார்புனலாட்டினுட்பூஞ்சுண்ணம்
பாவாய்பணைத்தோட்சுரமஞ்சரிதோற்றாள்
காவாதவள்கண்ணறச்சொல்லியவெஞ்சொ
லேவோவமிர்தோவெனக்கின்றிதுசொல்லாய்.

இ - ள். பணைத்தோட்சுரமஞ்சரி புனலாட்டில்நறுஞ்சுண்ணந்தோற்றவள் வார்த்தைபரிகரியாது அவள் வாளாதே கண்ணறச்சொல்லிய வெவ்வியசொல் இன்று எனக்குத் துன்பமாயிற்றோ? இன்பமாயிற்றோ? நீயிதனைக்கூறாய், இன்பமேயாயிற் றன்றோவென்றானென்க.

காவாதவார்த்தை "கூறிலையோ" என்றவார்த்தை. அவள்சொல்லியசொல் இன்புமாயிற்றென்றான், "சுண்ணந்தோற்றனநீம்புனலாடலம்" என்றவள்கூறவே வென்றவர்புனலாடவேவேண்டுதலின் இவள்புனலாட்டயர்ந்து வருகின்றநேரத்துத் தான்களிற்றிடையுதவி எதிர்ப்பட்டதனால் இவ்வின்பம்பெறுதலின். தான் "கண ணிற்கண்டிவைநல்ல" என்றும், "சாலநல்லன" என்றும், "உய்த்துணாமின்" என்றுங்கூறுதலின், வாய்காவாது கூறினனென்றல் பொருந்தாது. ஓவாவமிர் தம் பாடம். (உ௧௯)

௧. நற்றோளவள்சுண்ணநலஞ்சொலுவா
னுற்றீர்மறந்தீர்மனத்துள்ளுறைகின்றாள்
செற்றாலரிதாம்சென்மின்போமின்றீண்டா
தெற்றேயறியாதவொரேழையெனோயான். (உ௨0)

உ. தாமங்கமழ்பூந்துகில்சோரவசையாத்
தாமம்பரிந்தாடுதண்சாந்தந்திமிர்ந்திட்

டேமன்சிலையானுதலேறநெருக்காக்
காமன்கணையேர்கண்சிவந்துபுலந்தாள்.

இவையிரண்டுமொருதொடர்.

சென்மினெனத் தீண்டவிற் றீண்டாதேபோமினென்றாள். பணைத்தோளென்றதனாலும், தோற்றாளென்றதனாலும் ஊடுகின்றாள்.

இ - ள். நும்முடைய நற்றோளவளது சுண்ணத்தையே நலஞ்சொல்லக்கருதினீர், எனதுநல்வினையாலே அதனைமறந்தீர், அவள் நும்மனத்தேயுறைகின்றாளாதலாற் கோபித்தாற் கோபந்தீர்த்தலரிது ; இனி இவ்விடத்தினின்றுஞ் சென்மின், என்னே! யான் நுமக்குவருகின்ற ஏதத்திற்கு வருந்தாத ஏழையேனோ, இனி என்னையருளித் தீண்டாதேபோமினென்று துகிலையிறுகவுடுத்துப் பரிந்து திமிர்ந்து ஏவினையுடைய காமன்சிலைபோலும்புருவத்தை நுதலிலேயேறநெருக்கிக் கண்சிவந்து புலந்தாளென்க. (உ௨௧)

மின்னேரிடையாளடிவீழ்ந்துமிரந்துஞ்
சொன்னீரவளழ்பழலுட்சொரிந்தாற்ற
வந்நீரனகண்புடைவிட்டகன்றின்ப
மன்னூர்ந்துமதர்ப்பொடுநோக்கினண்மாதோ.

இ - ள். அவன் அதுகண்டு குணமாலையடியிலேவீழ்ந்தும் இரந்துகொண்டுஞ் சொல்லாகியநீரை அவளன்பாலுண்டாகியதீயிலேசொரிந்து அவித்தானாக, இன்பம் மனத்தே மிகநிறைதலின், வருத்தத்தைக் கைவிட்டகன்று கண்களின்மதர்ப்போடே புடையிலே நோக்கினாளென்க.

கடைக்கணித்துப் பார்த்தாளென்க. (உ௨௨)

இன்னீரெரிமாமணிப்பூண்கிடந்தீன்ற
மின்னாரிளமென்முலைவேய்மருண்மென்றோட்
பொன்னார்கொடியேபுகழ்திற்புகழ்ஞால
நின்வாணெடுங்கண்விலையாகுநிகர்த்தே.

நிகர்த்தே, ஏகாரம்-எதிர்மறை.

இ - ள். பூணுண்டாக்கின ஒளியசைகின்ற முலையினையுந் தோளினையுமுடைய கொடியே! யான்புகழநினைக்கின், ஞாலம் நின்கண்ணிற்கு நிகர்த்து விலையாகுமே? ஆகாதாதலாற் புகழ்தலரிதென்றானென்க. (உ௨௩)

தோளாற்றழுவித்துவர்த்தொண்டையஞ்செவ்வாய்
மீளாமணிமேகலைமின்னின்மிளிர
வாளார்மணிப்பூணவன்மாதரம்பாவைதன்னை
நாளாற்பெற்றநல்லமிர்தென்னநயந்தான்.

இ - ள். பூணவன் பாவைதன்னைத் தோளாலேதழுவி மேகலை மின்போற்பிறழாநிற்க அவள்செவ்வாயை நாட்காலத்திலேபெற்ற மீளாவமிர்தென்னப் பருகினானென்க.

மீளாவமிர்து - கருடன் வாங்கிக்கொண்டுவாராவமிர்து. நயத்தல் - பருகுதன் மேற்று. (உஉச)

வேறு.

சித்திரமணிக்குழைதிளைக்கும்வாண்முகத்
தொத்தொளிர்பவளவாயோவக்கைவினைத்
தத்தரிநெடுங்கணுடன்றொடாடுகோள்
வித்தகற்குற்றதுவிளம்புகின்றதே.

இ - ள். குழைதிளைக்குமுகத்தினையும் பவளத்தையொத்துவிளங்குகின்ற வாயினையுஞ் சித்திரம்போன்ற ஒப்பனையுமுடைய குணமாலைதன்னுடனே இங்ஙனம் புணருகின்றநாளிலே, வித்தகனுக்குற்றதொரு தீவினையினைக் கூறுகின்றதென்க.

ஓகைவீணையவும் பாடம். (உஉரு)

வேறு.

அரும்பெறற்குரிசிற்கண்ஞான்றேடியநாகநாணிக்
கரும்பெறிகடிகையோடுநெய்ம்மலிகவளங்கொள்ளா
திரும்புசெய்குழவித்திங்கண் மருப்பிடைத்தடக்கைநாற்றிச்
சுரும்பொடுவண்டுபாடச்சுளிவொடுநின்றதன்றே.

இ - ள். நீர்விளையாட்டினன்று குரிசிலுக்குத்தோற்றயானை நாணிக் கருப்பங் கடிகையுங் கவளமுங்கொள்ளாதாய்க் கிம்புரியிட்டஇளையதிங்கள்போலுமருப்பிடையிலே கையைநாற்றி மதஞ்செறித்தலின், உண்ணப்பெறுதே சுரும்பும்வண்டும்பாடக் கோபத்தோடே நின்றதென்க. (உஉசு)

பகைபுறக்கொடுத்தவேந்திற்பரிவொடுபகடுநிற்பத்
தகைநிறக்குழைகடாழ்ந்துசாந்தின்வாயாக்கிமின்னைப்
புகைநிறத்துகிலிற்பொன்னுண்டியல்வரப்போந்துவேந்தன்
மிகைநிறக்களிற்றைநோக்கிவேழமென்னுற்றதென்றான்.

இ - ள். பகடு பகைக்குமுதுகிட்டவேந்துபோலே பரிவொடுநிற்றலின், அது கேட்டு வேந்தன்போந்து குழைகள் சாந்திடத்தே தீண்டி மின்னைத் துகிலிலேபொன் ஞாணைசையக் குனிந்து களிற்றைநோக்கி யானையுற்றவருத்தமென்னென்று பாகனை வினாயினனென்க. (உஉஎ)

கொற்றவன்குறிப்புநோக்கிக்குஞ்சரப்பாகன்கூறு
மிற்றெனவுரைத்தறேற்மேனிறைவநின்னருளினுங்கொல்
செற்றமிக்குடைமையாற்கொல்சீவகனின்னநாளான்
மற்றிதற்குடற்சிசெய்யமதமிதுசெறித்ததென்றான்.

குறிப்புநோக்கியென்றார், சீவகனைக் குறைகூறலாகாதென்று கருதினவன் அரசன்கோபநோக்கிப் பேணிக்கூறுதலின்.

இ - ள். அரசன்குறிப்பைநோக்கிக் கூறுகின்ற யானைப்பாகன் இறைவனே! நின்னுடன்பாட்டினாலேயோ, இதனோடே அவ்விடத்துச் செற்றமுடைமையினாலே யோ, சீவகன் நீர்விளையாட்டினன்று இதற்குக் கோபத்தைமிக்குச்செய்ய இது மதஞ் செறித்தது ; இதுதான் யானும் விளங்க வுணர்தலைத் தெளியேனென்றானென்க.

மற்று-வினைமாற்று; பெண்ணுயிரைப்பிழைப்பித்தது இதற்குடற்சியாதலின். ()

ஈண்டழற்குட்டம்போலவெரியெழத்திருகிநோக்கிக்
கோண்டருகுறும்பர்வெம்போர்க்கோக்குழாம்வென்றதுள்ளி
மாண்டதில்செய்கைசூழ்ந்தவாணிகன்மகனைவல்லே
யாண்டிறங்களைவெனோடிப்பற்றுபுதம்மினென்றான்.

இ - ள். அதுகேட்டவரசன் தீத்திரள்போலக் கோபித்து மதனனைநோக்கி, வேடருடனே போர்செய்துவென்றதனையுங் காந்தருவதத்தையாழ்வாசினையிலேவந்துகூடின இராசாக்களை வென்றதனையுநினைத்து என்னுடனும் போர்த்தொழிலைக்கருதின செட்டிமகனை இப்பொழுதே அவனாண்மைக்கூற்றைப்போக்குவேன்; ஓடிக் கைக்கொண்டு தாருமென்றானென்க.

அரசனேவல்செய்யவேண்டுதலின், பற்றுபுதம்மினென்றுகூறவே அவர்கட்டினாரென்றல் பொருந்தாமையுணாக. (௨௪௯)

கன்றியவெகுளிவேந்தன்கால்வலியிளையர்காய்ந்து
கொன்றுயிர்கொணரவோடுங்கொழுங்குடர்க்கண்ணிமாலை
யொன்றியவுதிரச்செச்சையொண்ணிணமீக்கொடானைத்
தென்றிசைக்கிறைவன்றூதிற்செம்மலைச்சென்றுசேர்ந்தார்.

இ - ள். கொன்றுயிர் கொணரவோடுகின்ற குடராகியகண்ணியையும் மாலையையும் உதிரச்சட்டையையும் நிணமாகிய மேலேயுடுத்தபுடைவையினையுமுடைய யமன்றூதர்போலே வேந்தனிளையர் காய்ந்து சென்று செம்மலைச்சேர்ந்தாரென்க.

அவன்மனையைச் சூழ்ந்தார. (௨௫௦)

சண்பகமாலைவேய்ந்துசந்தனம்பளிதந்தீற்றி
விண்புகநாறுசாந்தின்விழுமுலைக்காமவல்லி
கொண்டெழுந்துருவுகாட்டிமுகத்திடைக்குளித்துத்தோண்மேல்
வண்டளிரீன்றுசுட்டிவாணுதல்பூப்பவைத்தான்.

இ - ள். சண்பகமாலையைச்சூட்டிச் சந்தனத்தையுங கருப்பூரத்தையுமவேதித்து நாறுகின்றகுழம்பாலே முலையை அடியாகத்தொடங்கி யெழுந்து காமவல்லி தனது வடிவைக்காட்டித் தோண்மேலேதளிரையீன்று முகத்திடையிலே மறைந்துபோய் நுதலிலே சுட்டியாகப் பூக்கும்படி வைத்தானென்க. (௨௫௧)

பண்ணடிவீழ்ந்தீஞ்சொற்பாவைநின்வனப்பிற்கெல்லாங்
கண்ணடிகருங்கணென்னுமம்பறாத்தூணிதன்னுட்

புண்ணுடைமார்பத்தோ வாதெய்தியாலெங்குப்பெற்றாய்
பெண்ணுடைப்பேதையென்றோர்நாண்முற்றும்பிதற்றினானே.

கண்ணாடி-விகாரம்.

இ - ள். வனப்பிற்கெல்லாங் கண்ணாடியாகியபாவாய்! நின்கண்ணென்னும் அம்பறாத்தூணியில் நோக்கங்களாகிய அம்பினாலே பழையபுண்ணையுடைய நெஞ்சிடத்தே மாறாமலெய்யாநின்றாய், பேதாய்! இங்ஙனம் அம்புமாறாததோர் தூணியை எவ்விடத்தேபெற்றாயென்று ஒருநாண்முழுதும் பிதற்றினானென்க.

எல்லார்க்கும் அழகு இத்தன்மைத்தென்றுணர்த்துதலிற கண்ணாடி யுவமையாயிற்று. மார்பத்துழையென்று அத்திற்கு உழையைவிரிப்பவே இடப்பொருளுணர்த்தி அதற்குச் சேர்ந்தநெஞ்சினையுணர்த்தும், "அரசனுழையிருந்தான்" போல. பிதற்றினானென்றது அவசத்தால். (௨௬௨)

திங்கள்சேர்முடியினானுஞ்செல்வியும்போன்றுசெம்பொ
னிங்குவார்கழலினானுங்கோதையுமிருந்தபோழ்திற்
சிங்கவேறெள்ளிச்சூழ்ந்தசிறுநரிக்குழாத்திற்சூழ்ந்தா
ரங்கதுகண்டதாதியையனுக்கின்னதென்றாள்.

இ - ள். உருத்திரனுமுமையும்போலே கழலினானுங் கோதையும் ஒன்றாயிருந்தவளவிலே சிங்கவேற்றையிகழ்ந்துசூழ்ந்த நரிக்குழாம்போலே அவர்கள் மனையைச் சூழ்ந்தார்; அதுகண்டசேடி சீவகனுக்கு இங்ஙனஞ்சூழ்ந்தாரென்றாளென்க. (௨௬௩)

என்றவளுரைப்பக்கேட்டேயிடிபடமுழங்கிச்செந்தீ
நின்றெரிவதனையொத்துநீணுழைச்சிங்கவேறு
தன்றுணைப்பெட்டையோடுதான்புறப்பட்டதொத்தான்
குன்றிரண்டிருந்தபோலுங்குங்குமக்குவவுத்தோளான்.

இ - ள். தோளான் என்றவள்கூறக்கேட்டுத் தீ வெடித்தலுண்டாகமுழங்கி எரியுந்தன்மையையொத்து மனைவியோடேமணவறையினின்றும் புறப்பட்டவன் சிங்கவேறு தன்றுணையாகிய பெட்டையோடே முழையினின்றும் புறப்பட்ட தன்மையை யொத்தானென்க.

பெட்டையென்றதற்கு "எழுந்துவிண்படரும்" என்னுங் கவியிலேகூறினாம். இவ்விரண்டுகவியினுஞ் சீவகற்குச் சிங்கவேறுவமையும், பகைவர்க்கு நரியுவமையுமாகக் கூறினமையின், அவராற் கட்டலாகாமையுணர்க. (௨௬௪)

பொன்னரிமாலைதாழப்போதவிழ்கூந்தல்மேலிந்திப்
பன்னருமாலையாற்குப்பட்டதையெவன்கொலென்னப்
பின்னருமாலையோராள்பெருகுடுக்குற்றுநின்றாண்
மன்னருமாலைநாகமழையிடிப்புண்டதொத்தாள்.

இ - ள் குணமாலை இவன்வலிமையையோராளாய் ஆராய்தற்கரிய இயல்பினையுடையாற்குப்பிறந்த துன்பம் யாதுதானென்று யானைமுன்னர்நின்றநடுக்கமேயன்றிப் பின்னருங் கூந்தலை மாலைதாழவேந்திப் பெரியநடுக்கமுற்றுநின்றவள் மக்கட்டிரளில

நிலைபெறுதற்கரிய இயல்பினையுடையனாகும் இடிப்புண்டு மக்கட்டிரளிலே நின்றதன்மையை யொத்தானென்க. (உ௩௫)

கடுகியவிளையர்நோக்குங்கண்ணியபொருளுமெண்ணி
யடுசிலையழலவேந்தியாருயிர்பருகற்கொத்த
விடுகணைதெரிந்துதானைவீக்கறவிசித்துவெய்தாத்
தொடுகழனரலவீக்கிச்சொல்லுமின்வந்ததென்றான்.

இ - ள். அரசனேவுதலிற்கடுகிவந்த இளையர்குறிப்பினையும், அவ்வரசன் யானையைக்கண்டு ஆண்டு அங்களையக் கருதிய காரியத்தையுந் தானெண்ணித் தானையை யினி இறுகாதென்னும்படி விசித்துக் கழலைவீக்கிச் சிலையையேந்திக் கணையைத்தெரிந்து வந்தகாரியஞ் சொல்லுமினென்றானென்க. (உ௩௬)

க. அடிநிழற்றருகவென்றெம்மானைவேந்தருளிச்செய்தான்
வடிமலர்த்தாரினாய்நீவருகெனவானினுச்சி
யிடியுருமேற்றிற்சீறியிருநிலஞ்சுடுதற்கொத்த
கடிமதின்மூன்றுமெய்தகடவுளிற்கனன்றுசொன்னான். (உ௩௭)

உ. வாளிழுக்குற்றகண்ணாள்வருமுலைநயந்துவேந்தன்
கோளிழுக்குற்றபின்னைக்கோத்தொழினடாத்துகின்றா
னாளிழுக்குற்றுவீழ்வதின்றுகொனந்ததிண்டேர்
தோளிழுக்குற்றமொய்ம்பபண்ணெனச்சொல்லினானே.

இவையிரண்டுமொருதொடர்.

இளையர் தம்மரசனைக்கூறலின், அடிநிழலென்றார்.

இ - ள். "சச்சந்தன்கொலையுண்டபின்பு என்னையொழிய அநங்கமாலைமுலையையும்விரும்பி அரசர்தொழிலையுநடாத்துகின்ற சீவகன்வாழ்நாள் மாளுகின்றதின்று போலேயிருந்தது; அவனைக் கைக்கொண்டுவருக" என்று எம்வேந்தருளிச்செய்தான்; தாரினாய்! நீயவனடிநிழலேறப்போதுகவென்று அவாரணையிட்டுக்கூற, அதுகேட்டு இடிக்கின்றவுருமேறுபோலமுழங்கி நிலத்தைப் பறந்துதிரிந்துசுடுதற்குப்பொருந்தின முப்புரத்தையுமெய்த கடவுளைப்போலேகோபித்து ஒருவார்த்தைசொன்னான். அது யாதெனின், நந்தனே! மொய்ம்பனே! இனிக் கட்டியங்காரன் தோளிழுக்குற்ற; நீபோய்த் தேனைப்பண்ணென்றுசொன்னானென்க.

வடிமலர்த்தாரினாயெனப் புகழ்ந்து பின்னர் வருகவென இரந்துகூறினமையானும் அவர் கட்டவந்தவரன்மையுணாக. *"இந்நகர்க்குமன்னனே" எனமுற்கூறிய தனை ஈண்டுக்கூறினானென்க. பிறர் தோளிழுககுறுதற்குக் காரணமாகிய மொய்ம்ப வென்றுமாம். இனி ஒருதொடராக்காதே விசயைமுலையைவிரும்பி வேந்தன்பட்ட பின்பு கோத்தொழிலைநடாத்துகின்றகட்டியங்காரன் நாளிழுக்குற்றுவீழ்வதின்றோ வென்று கண்டார்கூறும்படி இவன்சொன்னானென்றுமாம். (உ௩௮)

வேந்தொடுமாறுகோடல்விளிகுற்றார்தொழிலதாகுங்
காய்ந்திடுவெகுளிநீக்கிகைகட்டியிவனையுய்த்தா

* காந்தருவதத்தையாரிலம்பகம், ககள.

லாய்ந்தடுமழற்சினீங்குமதுபொருளென்றுநல்ல
சார்ந்துடைமார்பன்றாதைதன்மனத்திழைக்கின்றானே.

இ - ள். நந்தட்டன்போனபின்பு கந்துகன் இவன்படைக்கோலத்தைக்கண்டு அரசனுடனேமாறுபடுதல் கெடுதலுற்றார்தொழிலாம், யாம் அதுசெய்யாது இவன் வெகுளியைநீக்கிக் கையைப்போர்த்தொழில்செய்யாதபடி விலக்கி இவனை இவர்களோடே போகவிட்டால் இவன்செய்தவற்றை நன்றாயாராய்ந்து இவனைவருத்தும் வெகுளியைத் தானீங்கும்; அதுவே காரியமென்று தன்மனத்தே சூழாநின்றானென்க.

கைகட்டுதலைப் பாம்பைவாயைக்கட்டிற்றென்றாற்போலக்கொள்க. துறவின்கண்ணே சீவகன் அறங்கேட்டபின்னர்த் * "தொல்லையெம்பிறவியுந்தொகுத்தபாவமும்-வல்லையேபணிமினமடிகள்" என்று சாரணரைக்கேட்க, அவரும் பாவங்கூறுகின்றவர் "தாமரைத்-தடமுறைவீர்க்கிவைதடங்களல்லவே-வடமுலையெனநடாய்வருடிப்பாலமிர்-தூட்டினீர்இயோம்பினீர்" என்று முலைமேலேயணைத்துக்கொண்டு வளர்த்தார்களென்றுகூறி, பவணமாதேவன் தன்மகன் அசோதரனைநோக்கிக் கூறுகின்றானாகத் தாங்கூறுகின்றகாலத்தும் "கிளைப்பிரிவருஞ்சிறையிரண்டுங்கேட்டியேல்" என்றும்; "பூவைகிளிதோகைபுணரன்னமொடுபன்மா-யாவையவைதங்கிளையினீங்கியழுவாங்கிக்-காவல்செய்துவைத்தவர்கடங்கிளையினீங்கிப்-போவர்" என்றுங்காவல்செய்துவைத்தாரென்றுங்கூறினமையானும், "மன்னுபிரித்தாய்பிரிந்தாய்சிறைவைத்ததனாற்-பொன்னாரமார்பசிறைப்பட்டனைபோலும்" என்றுதாங்கூறினமையானும், சாரணர்பாவங்கூறுகின்றவிடத்து அன்னப்பார்ப்பைக்கட்டினாரென்றுகூறாமையின், ஈண்டுக் கட்டுண்ணவேண்டும்பாவம் ஆண்டின்மையுணர்க. பிறருமிச்சமயத்தார் † "சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா" என்றதனானுமுணர்க. அன்றியும், தசகுமாரசரிதத்துள் அன்னப்பார்ப்பை நூலிட்டுக் காலைக்கட்டினபாவத்தாற் பின்புவெள்ளிவிலங்குகாலிற்கிடந்ததென்று ஆசாரியர்கூறியவாற்றானுமுணர்க. அன்றியும் அரசன் கைக்கொண்டுவரச்சொன்னவனை அவரும் அவன்கூறியவாறே கைக்கொண்டுபோயினாரென்னவேவேண்டுதலானும், அவர் அவனை ‡ "வடிமலர்த்தாரினாய்நீவருகென"ப்புகழ்ந்திரந்துகொண்டமையானும், "சிங்கவேறெள்ளிச்சூழ்ந்தசிறுநரிக்குழாத்திற்சூழ்ந்தார்" என்றும், "அடுபுலிகண்டமானினாற்றலவாயினார்" என்றும், "மின்னிலங்கெயிற்றுவேழம்வெழுத்தாற்புடைத்து" என்னுங்கவியில் "என்னையிக்கிருமிகொன்று" என்றுங்கூறியிருத்தலானும், "நூபுரந்திருத்திச்சேர்ந்தநுதிவிரனொந்த" என்றதற்குத் தோளையன்றி விரலைக்கட்டினாரென்றுங்கூறவேண்டுதலானும், ஆசிரியன்கூற்றும் குரவர்கூற்றும் மனத்தைப் போர்செய்யாமற்பிணித்தலின், இளையர் காவல்செய்து கொண்டுபோயினாரென்றலே தேவர்க்குக் கருத்தென்றுணர்க. "ஊன்பிறங்கொளிறும்வேலானோர்த்துத்தனுவாத்திசொல்லாற்-றான்புறங்கட்டப்பட்டு" என்றும், "ஈன்றதாய்தந்தைவேண்டவிவ்விடருற்றதென்றாற்-றேன்றலுக்கானமை குன்றாதென்றசொல்லிமிழிற்பூட்டி" என்றுந் தேவர் மனத்தை யிறுகப்பிணித்தமைதோன்றக் கட்டியென்றும்பூட்டியென்றுஞ் செய்யுள்செய்தமைபற்றி, கந்தியாரும் இடையி

* இதுமுதலியவற்றை, முத்தியிலம்பகத்தில், பிறவிகளறவுரையிற்காண்க.
† நாலடியார், பழவினை, ௧௦.
‡ இதுமுதலியவற்றைக் குணமாலையாரிலம்பகத்திற்காண்க.

டையேபாடியிட்டசெய்யுட்களினும்அப்பொருடரக் கட்டியென்றுசெய்யுள்செய்தாரெ ன்றுணர்க. அன்றியுஞ் சிறைசெய்தலென்னுஞ்சொற்குக் காவலிடுதலேபொருளா மென்று தேவர்தாமே காவல்செய்துவைத்தவர்களென்று கூறியவாற்றானும், கட்ட லென்னுஞ்சொற்கு மனத்தையிறுகப்பிணித்தலென்று தாமே பொருள்கூறியவாற் றானுமுணர்க. (உ௯௯)

ஊன்பிறங்கொளிறும்வேலானோர்த்துத்தனுவாத்திசொல்லாற்
றான்புறங்கட்டப்பட்டுத்தன்சினந்தணிந்துநிற்பத்
தேன்பிறங்கலங்கன்மாலைச்சுநந்தையுந்துணைவன்றானுங்
கோன்புறங்காப்பச்சேறல்குணமெனக்கூறினாரே.

புறந்தான் - புறப்பொருளாகிய வீரந்தான்.

இ - ள். அங்ஙனங்கோபித்தவேலான் தான் ஆசாரியனுக்குநேர்ந்த நிலைமை யையோர்ந்து அவன்சொல்லாலே வீரந்தான்பிணிப்புண்ணப்பட்டுத் தன்சினமாறி நின்றவளவிலே அவற்கு அங்ஙனமிழைக்கின்றகந்துகனுஞ் சுநந்தையும் அரசன் காப்பவொழுகுதல் நமக்குக் குணமாவதென்றுகூறினாரென்க.

முன்னர் அகப்பொருளேநிகழ்த்தினவன் பகைவரைக்கண்டு புறப்பொருணிகழ் த்தக்கருதியதனை ஆசிரியன்கூற்றுவிலக்கிற்றென்றார். அச்சொல் அரியதொன்றனை விலக்கிற்று. (௩௦௦)

ஈன்றதாய்தந்தைவேண்டவிவ்விடருற்றதென்றாற்
றோன்றலுக்காண்மைகுன்றுதென்றசொலிமிழிற்பூட்டி
மூன்றனைத்துலகமெல்லாமுட்டினுமுருக்குமாற்றல்
வான்றருமாரிவண்கைமதவலிபிணிக்கப்பட்டான்.

இன்-உவமப்பொரு.

இ - ள். மூன்றாகியவுலகமனைத்தும் வந்துமுட்டினும் அவற்றையெல்லாங் கெடுக்குமாற்றலையும் வண்கையினையுமுடைய மதவலி, இவ்விடருற்றது பெற்றதாயுந் தந்தையும் வேண்டிக்கொள்ளவாயிருந்ததென்று உலகங்கூறினால் நினக்காண்மை குன்றுதென்று அவர் கூறியசொல்லாலே கயிறுபோலேபூட்டிப் பிணிக்கப்பட்டா னென்க.

அச்சொல் கயிற்றாற்பிணித்தாற்போல மனத்தைப்பிணித்தது. ஈண்டு இவர் கட் டிற்றிலரெனவே இளையரான் மேற்கட்டலாகாமையுமுணர்க. (௩௦௧)

வேறு.

குழலுடைச்சிகழிகைக்குமரன்றோளினைக்
கழலுடையிளையவர்கச்சின்வீக்கலி
னழலுடைக்கடவுளையரவுசேர்ந்தென
விழவுடைமுதுநகர்விலாவிக்கின்றதே.

இ - ள். குழற்சியையுடைத்தாகிய முடியினையுடைய குமரன்றோள்களைக் குர வர் அங்ஙனங் கச்சிட்டுக்கட்டினாற்போலப் போர்த்தொழில்செய்யாதபடி விலக்கி

ஞர்களாக, அந்தவிளையவர் ஞாயிற்றை அரவுசேர்ந்ததென்னச்சேர்தலின், நகரமழிநின்றதென்க.

இன் - பொரு. பாம்பு ஞாயிற்றை ஒளிகுறையும்படி மறைத்தாற்போல இவரும் இவனொளிகுறையும்படி சிறையாகக் கைக்கொண்டாரென்க. மனத்தையிறுகப்பிணிக்கவே தோளைப் போர்த்தொழிலைவிலக்கிற்றும். (உசஉ)

வேறு.

தோளார்முத்துந்தொன்முலைக்கோட்டுத்துயன்முத்தும்
வாளாருண்கண்வந்திழிமுத்துமிவைசிந்தக்
காளாய்நம்பிசீவகசாமியெனநற்றாய்
மீளாத்துன்பக்கடன்மின்னின்மிசைவீழ்ந்தாள்.

தொன்மையைத் தோளின்முத்தோடும் முலையின்முத்தோடுங்கூட்டுக. மீளா - மீண்டு. துன்பமாகியகடலென்றூ, அழுகின்றமக்கட்டொகுதியை.

இ - ள். சுநந்தை காரியத்தின்மேற்சென்ற கருத்துமீண்டு அன்புதோற்றுதலிற் காளாய்! நம்பி! சீவகசாமியெனக்கூறிப் பழையமுத்துக்களுங் கண்ணுகிய கடலிற்படுகின்ற புதியமுத்துக்களுமாகியவிவைசிந்தக் கடலின்மேலே மின்போல வீழ்ந்தாளென்க. (உசங)

பாலாராவிப்பைந்துகிலேந்திப்படநாகம்
போலாமல்குற்பொற்றொடிபூங்கட்குணமாலை
யேலாதேலாதெம்பெருமானுக்கிஃதென்று
நூலார்கோதைதுங்கெரிவாய்ப்பட்டதுவொத்தாள்.

இ - ள். துகிலையேந்தி நாகத்தினதுபடம்போலே வளருமல்குலையுடைய பொற்றொடியாகிய குணமாலை என்னுயிரைத்தந்த நமக்கு அதனால் இத்தீங்குவருதல் ஏலாதேலாதென்றுகூறி மாலை எரியிடத்தே வீழ்ந்ததனையொத்தாளென்க.

துங்குதல் - விழுங்குதல். (உசச)

வேறு.

எரிதவழ்குன்றததுச்சியிரும்பொறிக்கலாபமஞ்ஞை
யிரிவனபோன்றுமாடத்தில்லுறைதெய்வமன்னார்
பரிவுறுமனத்தினோடிப்பட்டதையுணர்ந்துபொற்றா
ரரியுற்ழ்மொய்ம்பவோவென்றுகுலப்பூசல்செய்தார்.

இ - ள். மஞ்ஞை நெருப்புப்பறக்கின்றமலையிற் கெட்டோடுவனவற்றையொத்த தெய்வமன்னார் வருத்தமுற்றமனத்தாலே மாடத்தேயோடி உணர்ந்து மொய்ம்பனே! ஓவென்று வருத்தத்தையுடைய ஆரவாரத்தைச்செய்தாரென்க. (உசரு)

கங்கையின்கழியிற்பட்டகாமருபிணையின்மாழ்கி
யங்கலர்க்குற்றதுள்ளியவலநீராழ்ந்துநின்ற

குங்குமக்கொடியோடேந்திக்கோலம்வீற்றிருந்தகொம்மைப்
பொங்கிளமுலையினார்க்குப்புரவலனிதனைச்சொன்னான்.

இ - ள். புரவலன் அவ்விடத்துச் சுநந்தை முதலாயினார்க்குற்ற துயரத்தை நினைத்துப் பிணையின்மாழ்கி யவலநீரிலேயழுந்துகின்ற முலையினார்க்கு இதனைக்கூறினானென்க.

முலையினார் - புறத்துமகளிர். வந்தவிளையனைக் கொல்லாதுவிடுதலிற் புரவலனென்றார். (உ௬௬)

௧. கட்டுயிலனந்தர்போலக்கதிகளுட்டோன்றுமாறும
விட்டுயிர்போகுமாறும்வீடுபெற்றுயருமாறு
முட்படவுணர்ந்தயானேயுள்குழைந்துருகல்செல்லே
னெட்பகவனைத்துமார்வமேதமேயிரங்கல்வேண்டா. (உ௬௭)

உ. நன்மணியிழந்தநாகர்நல்லிளம்படியர்போல
வின்மணியிழந்துசாம்பியிருநிலமிவர்களெய்த
மின்னணிமதியங்கோள்வாய்விசும்பிடைநடப்பதேபோற்
கன்மணியுமிழும்பூணான்கடைபலநடந்துசென்றான்.

இவையிரண்டுமொருதொடர்.

உ. படியார் - படிவத்தையுடையார்.

இ - ள். பூணான் மணியையிழந்த நாகர்மகளிரைப்போலே சுற்றத்தார் சீவகனை யிழந்து கெடுநிலத்தைச்சேர, அதுகண்டு கண்ணுறக்கமும் உணர்ச்சியும்போலே உயிர்போம்படியும் பிறக்கும்படியும் வீடுபெறும்படியுநெஞ்சிலேயுறும்படி உணர்ந்த யான் உருகுதலிற்செல்லேன்; எள்ளில் ஓர் பாதியளவும் பொருள்கண்மேலே வேட்கைநிகழ்தல் ஒருவர்க்கு ஏதமேசெய்யுமாதலின், அவ்வாறாவத்தான் இரங்கல்வேண்டா வெனக்கூறிக் கடைபலகடந்து விசும்பிடையிற கோள்களினிடத்தேயுறையும் ஒளி யணிந்தமதியம் அதனைக்கைவிட்டு நிலத்தேநடப்பதுபோலப் போந்தானென்க.

கோள் - பரிவேடம்பபுமாம். வந்தவர்கள்சூழ நடுவேபோவதற்குவமை. பிடியரும பாடம். (உ௬௮)

வேறு.

வெந்தனம்மனம்மெனவெள்ளைநோக்கின்முள்ளெயிற்
றந்துவர்ப்பவளவாயம்மழலையின்சொலார்
பந்துபாவைபைங்கழங்குபைம்பொன்முற்றில்சிற்றிலுண்
ணொந்துவைத்துநூபுரம்மொலிப்பவோடிநோக்கினார்.

வெள்ளைநோக்கு - உள்ளேயொன்றுகொள்ளாதநோக்கு. முற்றில் - சிறுசுளகு.

இ - ள். நோக்குமுதலியவற்றையுடையபேதையர் தம்மைக்கண்டார் இவர் கண்மனம் வெந்தனவென்றுகூறும்படி நொந்து பந்துமுதலியவற்றைச் சிற்றிலிலே வைத்து ஓடி நோக்கினாரென்க. (உ௬௯)

மல்லிகைம்மலிந்தமாலைசோரவார்ந்தகுண்டலம்
வில்விலங்கமின்னுக்கோட்டவீணைவிட்டுவெய்துரா
யொல்லெனச்சிலம்பாற்றவீதிமல்கவோடினார்
சில்சுணங்கிளம்முலைச்செழுமலர்த்தடங்கணார்.

இ - ள். முலையினையுடைய மலர்த்தடங்கண்ணார் மாலைசோரக் குண்டலம் ஒளியைவீசக் கோட்டவாகியயாழைக்கைவிட்டுப் பரந்து சிலம்பரற்ற வீதிநிறையும்படி யோடினாரென்க. (உ௬0)

நெய்த்தலைக்கருமகுழனிழன்றெருத்தலைத்தர
முத்தலைத்திளம்முலைமுகஞ்சிவந்தலம்வரக்
கைத்தலங்கடுத்தடித்தபந்துநீக்கிவந்தவண்
மைத்தலைநெடுந்தடங்கண்மங்கையர்மயங்கினார்.

நெய் - புழுகு கடுத்து - கடுக.

இ - ள் மங்கையர் குழல்ஒளியைவீசிக் கழுத்திலேயலைய முலைமுகஞ்சிவக்க முத்தலைத்தசையக் கைகடுக்க விசையோடேயடித்த பந்தைநீக்கி அவ்விடத்தேவந்து மயங்கினாரென்க. (உ௬௧)

கோதைகொண்டபூஞ்சிகைக்கொம்மைகொண்டவெம்முலை
மாதுகொண்டசாயலம்மடந்தையாமனங்கசிந்
தோதமுத்துகுப்பபோலுண்கண்வெம்பனியுகுத்
தியாதுசெய்கமையவென்றன்புமிக்கரற்றினார்.

இ - ள். முடிமுதலியவற்றையுடைய மடந்தையர் மனமுருகிக் கடலின்முத்தச்சிந்துவனபோலே கண்ணீரையுகுத்து, ஐயனே! யாங்கள் யாதுசெய்வேமென்று அவற்கு அன்புற்று அழுதாரென்க. (உ௬௨)

செம்பொனோலைவீழவுஞ்செய்கலங்கள்சிந்தவு
மம்பொன்மாலையோடசைந்தவிழ்ந்துகூந்தல்சோரவு
நம்பனுற்றதென்னெனாநாடகம்மடந்தையர்
வெம்பிவீதியோடினார்மின்னினன்னதுண்மையார்.

இ - ள். மின்னினையொத்த நுண்மையாராகிய நாடகமடந்தையர், நம்பனுற்ற தென்னென்று வெம்பி வீழவுஞ் சிந்தவுங் கூந்தல் மாலையோடே அவிழ்ந்து அசைந்து சோரவும் வீதியிலே யோடினாரென்க. (உ௬௩)

பூவலர்ந்ததாரினன்பொற்புவாடுமாயிடிற்
போவுடம்புவாழுயிர்பொன்றுநீயுமின்றெனா
வீகலந்தமஞ்ஞைபோல்வேனெடுங்கணீர்மல்க
வாகுலத்தரிவையரவ்வயிறதுக்கினர்.

இ - ள். கேடுகலந்தமயில்போலே ஆகுலத்தையுடைய அரிவையர் கண்ணீர

மல்காநிற்கத் தாரிஞன் பொற்புக்கெடுமாயின், வாழுயிரே! நீபோவாயாக; உடம்பே! நீயுமின்று பொன்றுவாயாகவென்றுகூறி வயிற்றிலே யடித்துக்கொண்டாரென்க. ()

தேன்மலிந்தகோதைமாலைசெய்கலம்முகுத்துராய்க்
கான்மலிந்தகாமவல்லியென்னவன்னராயரோ
பான்மலிந்தவெம்முலைப்பைந்துகிலரிவையர்
நூன்மலிந்தநுண்ணுசுப்புநோவவந்துநோக்கிஞர்.

இ - ள். பானிறைந்தமுலையினையுந் துகிலினையுமுடையவரிவையர் கோதை நெற்றிமாலை கலம் இவற்றைச்சிந்திப் பரந்து காற்றுமிக்க காமவல்லிபோலே அசைந்து நூல் பெருத்ததென்றற்குக்காரணமான நுசுப்புநோம்படி வந்து நோக்கிஞரென்க. (உ௫௫)

மாதரார்கள்கற்பினுக்குடைந்தமாமணிக்கலைத்
தீதிலாரநாற்பெய்வார்சிதர்ந்துபோகச்சிந்துவார்
போதுலாமலங்கலான்முன்போந்துபூந்தெரிவைய
ராதகாதெனக்கலங்கியவ்வயிறதுக்கிஞர்.

இ - ள். முத்துக்கோக்கக்கற்ற கல்விசகுத்தோற்ற மாதராாகள் கையில் ஆரங்களைவாங்கிக் கோப்பாராகிய தெரிவையர் அவற்றைச் சிதறிப்போம்படி சிந்துவாராய் அலங்கலான்முன்னேபோந்து, ஆ! உனக்கு இதுதகாதெனக்கூறிக் கலங்கி வயிற்றிலேயடித்துக்கொண்டாரென்க. (உ௫௬)

வட்டிகைமணிப்பலகைவண்ணநுண்டுகிலிகை
யிட்டிடைநுடங்கநொந்திரியலுற்றமஞ்ஞையிற
கட்டழலுயிர்ப்பின்வெந்துகண்ணிநீந்துபொன்னுக
மட்டவிழ்ந்தகோதையார்கள்வந்துவாயில்பற்றிஞர்.

இ - ள். நொந்துகெடுதலுற்றமயில்போலே கோதையார்கள் சுனைத்தவண்ணத்தையும் எழுதுகோலினையும் வட்டிகைப்பலகையிலேபோகட்டு அழல்போன்ற நெட்டுயிர்ப்பாலேவெந்து கண்ணி நீயப் பூண்கள் சிந்தாநிற்க இடைநுடங்கவந்து வாயிலைப் பிடித்தாரென்க.

இது கற்புடைமகளிரைசகூறிறறு. (உ௫௭)

## வேறு.

வினையதுவிளைவுகாண்மினென்றுகைவிதிர்த்துநிற்பா
ரினையனுய்த்தெளியச்சென்றாலிடிக்குங்கொலிவனையென்பார்
புனைநலமழுகுகல்விபொன்றுமாவின்றென்பார்
வனைகலத்திகிரிபோலமழுகுமெம்மனங்களென்பார்.

இ - ள். தீவினையினதுவிளைவைக் காண்மினென்று கைநடுங்கிநிற்பார், தன் வீராகையிலே இவனகப்பட்டுப்போந்தன்மையனுய்த் தன்மனந்தெளியச்சென்ருல் இவனைக்கொல்லுமோவென்பார்; கொல்லுமாயின், இவனோடே செயற்கையழகும்

யை விடுவிக்கவல்ல தோளுக்கு இவர் கைக்கொண்டுபோகின்ற இதனைக் கண்டு பொறுத்துப்போதல் தகாதெனக் கூறுதலாலே மூதூர் மலையாலே கடலைக்கலக்கினாற் போலேகலங்கி யாகுலமயங்கிற்றென்க.

நிரைமீட்டதோளென்றார், ஆண்டுக் கொல்லாமைவென்றாற்போல ஈண்டுங் கொல்லாமல் வெல்லவல்லவனென்பதுகருதி. (௨௬௨)

க. இங்ஙனமிவர்களேகவெரியகம்விளைக்கப்பட்ட
வெங்கணைவிடலைதாதைவியனகரவலமெய்தி
யங்கவருகுத்தகண்ணீரடித்துகளவிப்பநோக்கிப
பொங்கமருழக்கும்வேலான்புலம்புகொண்டழேற்கவென்றான். ()

௨. மின்னினான்மலையையீரதுவேறிருகூறுசெய்வான்
றன்னினான்றளங்கினல்லாற்றளங்கலம்மலையிறகுண்டே
யன்னதேதுணிந்தநீதியருநவைநமனுமாற்றா
னென்னைநேர்நின்றுவாழ்தலிருநிலத்தாவதுண்டே. (௨௬௪)

௩. வளைகடல்வலையிற்சூழ்ந்துமால்வரைவேலிகோலி
யுளையரிபடுக்கலுற்றான்படுப்பினும்படுக்கமற்றென்
கிளையழவென்னைவாள்வாயக்கீண்டிடலுற்றுநின்றான்
றளையவிழ்கண்ணிசிந்தத்தப்றலைநிலத்ததன்றே.

இவைமூன்றுமொருதொடர்.

க. எரியையுள்ளேவிளைத்தவெங்கணை. தாதையினகர் - கந்துகன்வீடு, எனவே குணமாலைவாயிலினின்றும் போந்தான்

௨. என்னை. ஐ - இடைச்சொல்.

௩. உளை-கழுத்தின்மயிர். கடலாகியவலையாற்சூழ்ந்து மலையாகியவேலியைக கோலி அரியைப் படுக்கலுற்றானொருவன் அகப்படுப்பினும் அகப்படுக்க. அவற்றானும் என்னை யகப்படுத்தலரிது, அதுவுமிவர்க்கில்லை. இதனானும் சிறைசெய்தானென்று உணர்க. அன்றேயென்பதே பாடம்

இ - ள். இப்படியே இவர்கள்போகாநிற்க, கந்துகன்மனையிலுள்ளார் வருத்த முற்று அவ்விடத்து அவருகுத்தகண்ணீர் போகின்றவிடத்தடியிற்றுகளையவித்தலாலே, வேலான் அவர்களைநோக்கி, என்கிளையழும்படி என்னை வாளாற்கொல்லுதலுற்று முடியாததற்குமுயன்றுநின்றான்றலையன்றே சிலநாள்சென்றாற் கண்ணிசிந்த நிலத்திடத்தேவீழ்வதென்றுட்கொண்டு, மலையை மின்னினாலேயறுத்து இருகூறாகவேறுசெய் தற்குப் பொருந்தினவன் றானிலைகுலைதலன்றி அம்மலைக்குநிலைகுலைதலில்லை, அவன் றுணிந்தநீதியுமன்னதே; நமனும என்முன்னே பகைத்துநின்று உயிர்வாழ்தலாற்றா னாதலின், நிலத்திலுள்ளார் என்முன்னேநின்று உயிர்வாழ்தலுளதாந்தன்மையில்லை. அரியைப்படுப்பினும்படுக்க, யான் அத்தன்மையேனுமல்லேன்; ஆகலான், நீங்கள் புலம்புகொண்டு அழாதொழிமினென்றானென்க.

சிலநாள்சென்றால் - ஓராண்டுசென்றால். (௨௬௫)

நீரகம்பொதிந்தமேகநீனிறநெடுநல்யானைப்
போர்முகத்தழலும்வாட்கைப்பொன்னெடுங்குன்றமன்ன
னூர்கலியாணர்மூதூரழுதுபின்செல்லச்செல்வான்
சீருறுசிலம்பினூலாற்சிமிழ்ப்புண்டசிங்கமொத்தான்.

இ - ள். கரியமேகம்போன்ற நீலநிறத்தையுடைய களிற்றையும் வாட்கையி னையுமுடைய குன்றமன்னன் அவர்களை அழிற்கவென்றுகூறி, ஊரிலுள்ளாரழுது பின்னேபோக வீரர்க்குநடுவேபோகின்றவன் சிலந்திவாய்நீராலுண்டான நூலால் அகப்படுத்திக்கொண்ட சிங்கத்தை யொத்தானென்க.

நூல் வீரர்க்குவமை. *"புலன்மறைந்து - வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று" என் றாற்போலக் கொள்க. (௨௯௬)

மன்னர்தம்மெகுளிவெந்திமணிமுகில்நாளமின்னிப்
பொன்மழைபொழியினந்துமன்றெனிற்புனைந்துபோகநி
துன்னினார்தம்மையெல்லாஞ்சுட்டிமென்றுசெம்பொன்
பன்னிருகோடியுய்த்துக்கந்துநன்பணிந்துசொன்னான்.

இ - ள். இவாகளிங்ஙனம்போகாநிற்கக் கந்துகன், அரசாமெகுளியாகியதீ மணியாகியமுகில் பழுகசென்கின்றன்னமின்னிப் பொன்னாகியமழையைப்பெய்யின் விளியும்; அம்முகில் அங்ஙனம்பெய்யாதாயிற் பொடிகித் தன்னைநெருங்கினரெல்லா ரையுஞ் சுடுமென்றுகருதிப் பன்னிருகோடிபசம்பொன்னைக்குவித்துத் தாழ்ந்து கூறினானென்க.

இப்பொழுது வீரத்தைச் சிட்து தாழ்க்கூறினானென்க (௨௯௭)

மன்னவவருளிக்கேணேபோமடந்தையோர்கொடியைமூதூர்
நின்மதக்களிறுகொல்லநினைக்கதுவடுவென்றெண்ணாது
யென்மகனதனைநீக்கியின்னுயிரவளைக்காத்தா
னின்னதேகுற்றமாயிற்குணமினியாதுவேந்தே

இ - ள். அரசனே! அருள்பண்ணிக்கேட்பாயாக; மடந்தையாகிய கொடி போல்வாளைப் பெண்கொலைபிறந்தறியாவிவ்வூரிலே நின்களிறுகொல்லாநிற்க, நினக்கு அதுவடுவாமென்றெண்ணி நின்கீழ்வாழ்கின்றவென்மகன் அக்கொலையைநீக்கி அவளை யுயிரைக்காத்தான்; இவ்வடுநீக்கியதே குற்றமாய் முடியுமாயின், வேந்தே! இனி நன்மையென்கின்றது யாது? கூறுவாயாகவென்றானென்க. (௨௯௮)

௧. நாண்மெய்க்கொண்டேட்டப்பட்டார்நடுக்குறுமங்கையைநீக்க
லாண்மக்கள்கடனென்றெண்ணியறிவின்மைதுணிந்தகுற்றம்
பூண்மெய்க்கொண்டகன்றமார்பபொறுமதியென்றுமன்னு
நீண்மைக்கணின்றுவந்தநிதியெலாந்தருவலென்றான். (௨௯௬)

௨. வாழியரிறைவதேற்றான்மாநிலம்பெயாத்தநாளை
யேழைதான்பொறுக்கவென்னப்பிறங்கிணரலங்கம்மாலை

* திருக்குறள், கூடாவொழுக்கம், ௪.

சூழ்கதிராரம்வீழ்நூல்பரிந்தறநிமிர்ந்துதிண்டோ
ளூழ்பிணைந்துருமிற்சீறியுடல்சினங்கடவச்சொன்னான்.

இவையிரண்டுமொருதொடர்.

௧. ஆண்மக்களென்றது அரசரை, உயிரைக்காத்தலும் அழித்தலுமவர் தொழிலாதலின்.

௨. பிழை - விகாரம். வீழ்ந்தமாலை கட்டின நூல்பரிந்து முத்தாரமுமறவென்க. கையோடுகை தோளிலேறக் கட்டி. பெயர்த்தமாநிரையென்றெண்ணியென முன்னேகூட்டுக. அது நமக்கு அறமுமாய் அரசுக்கு வடுவுநீக்கிற்று; அத்தன்மைத்திதுவென்றெண்ணி.

இ - ள். தான் முற்கூறியதற்குமுகமாகாமைகண்டு, மார்பனே! மகளிர்நடுக்கத்தைநீக்குதல் ஆண்மக்கள்கடனென்று தேற்றானுய்த் தான்பெயர்த்தமாநிரையென்றெண்ணி அறிவின்மையினாலே உயிரைக்காக்கத்துணிந்தகுற்றத்தைப் பொறுப்பாயென்றான்; என்று பின்னுஞ் செவ்விபெறாமையின், எனக்குத் தொன்றுதொட்டு வந்தபொருளெல்லாந்தருவேன்; இறைவனே! காளையதுபிழையை எனக்காகப் பொறுப்பாயாகவென்றானாக; நிரைமீட்டதென்றதனாற் கோபமிக்குப் பரிந்து அறநிமிர்ந்து தோள்பிணைந்து சீறி உடல்சினங்கடவாநிற்க ஒருவார்த்தைகூறினானென்க. (௨௭0)

ஆய்களிற்றசனிவேகமதன்மருப்பூசியாகச்
சீவகனகன்றமார்பமோலையாத்திசைகள்கேட்பக்
காய்பவன்கள்வரென்னவெழுதுவித்திடுவலின்னே
நீபரிவொழிந்துபோய்நின்னகம்புகுநினையலென்றான்.

இ - ள். சீவகன் யான்காயப்படுபவனாதலின், இவன்வென்ற அரசரும் வெள்ளிமலையுங்கேட்கும்படி கள்வரைக்கொல்லுமாறுபோலே அவனால்வருந்திய அசனிவேகமாகிய அதன்மருப்பு எழுத்தாணியாக அவனகன்றமார்பமே ஓலையாக எழுதுவிப்பேன்; நீவருத்தமொழிந்துபோய் நின்னகத்தேசெல்; இதனை நினையாதேகொள்ளென்றுகூறினானென்க.

கொல்லுதலை எழுதுவிப்பேனென்றான், இதனாற் றனக்குப் புகழ்நெடுங்கால நிற்குமென்றுகருதி. (௨௭௧)

நஞ்சனானுரைப்பக்கேட்டேநாயகனுநடுங்கியுள்ளம்
வெஞ்சினவேழமுண்டவிளங்கனிபோன்றுநீங்கி
யெஞ்சினான்போலநின்றானேத்தருந்தவத்தின்மிக்க
வஞ்சமில்கொள்கையான்சொலமிர்தினாலுயிர்ப்புற்றானே.

இ - ள். கட்டியங்காரனங்ஙனங்கூறக்கேட்டுக் கந்துகன் உள்ளநடுங்கிக் கனிபோன்று வெறுவிதாக அறிவுமுதலியனநீங்கி இறந்தான்போலநின்றான்; நின்றவன் இருடி முன்கூறியசொல்லாகிய அமுதாலே யாற்றினானென்க. (௨௭௨)

மின்னிலங்கெஃகினானைப்பெறுகலான்றந்தைமீண்டு
தன்னிலங்குறுகலோடுந்தாயழுதரற்றுகின்றா

ளெங்கிலையையற்கென்னையாவதுங்கவலவேண்டா
பொன்னலங்கொடியனையோர்பொருளுரைகேளிதென்றான்.

இ - ள். கந்துகன் சீவகனை அரசனிடத்துப்பெறானாய் மீண்டு தன்மனையை யணுகினவளவிலே, தாய்அரற்றுகின்றவள் ஐயற்குநிலையேதென்றுகேட்க, நலத்தை யுடைய பொற்கொடியன்னாய்! நீ சிறிதும்வருந்தவேண்டா, ஈதொருகாரியத்தை யுடைய வார்த்தையைக் கேளென்றானென்க.

பழையநிலையிலேயோ சிறையிலேயோவென்றாள். (௨௭௩)

மதுமடைதிறந்துதீந்தேன்வார்தருகோதைநீமுன்
செதுமகப்பலவும்பெற்றுச்சிந்தைகூர்மனத்தையாகி
யிதுமகவழியின்வாழேனிறப்பல்யானென்னுமாங்கட்
கதுமெனக்கடவுடோன்றிக்கடைமுகங்குறுகவந்தான்

இ - ள். இனிய தேனின்றுக்கு மடைதிறந்து மதுவொழுகுகின்ற கோதை போல்வாய்! நீ முன்சாபிள்ளைபலவும்பெற்றுச் சிந்தனைமிக்க மனத்தினையுடையையா யிருந்து, இந்தமகவழியுமாயின், யானுயிர்வாழேன்; இறந்துபடுவேனென்றவளவிலே, ஒருகடவுள் கடுகத்தோன்றித் தலைவாயிலைக் குறுகவந்தானென்க. (௨௭௪)

கறவைகாண்கன்றின்வெஃகிக்கண்படிப்பணிந்துகாமர்
நறவயாவுயிர்க்குமாலைநாற்றியவிடத்துவேற்றி
யறவியாற்காறுமூன்றுமமைந்தநாலமிர்தமேந்திப்
பறவைதாதுண்டவண்ணம்பட்டினிப்பரிவுதீர்ந்தான்

அறவியார்க்கு - அறத்திலேநின்றவர்க்கு. ஆறுமூன்றுமமைந்தவமிர்து - ஒன்பதுவகையுமமைந்த வமிர்து. ஒன்பதுவகை - நவபுண்ணியக்கிரமம். நாலமிர்தாவன உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன.

இ - ள். அவனைக் கறவையைக் காண்கின்ற கன்றுபோலே விரும்பிக் கண்படிப் பணிந்து மாலைநாற்றியவிடத்தே வைத்து அவற்கு அமிர்தத்தை யேந்தினேனாக, வண்டு தாதுண்டாற்போலேயுண்டு பட்டினியாலுள்ள வருத்தத்தைத் தீர்ந்தா னென்க. (௨௭௫)

ஆய்மணிப்பவளத்திண்ணையரும்பெறற்காதற்றங்கட்
டேமணிவாசநன்னீர்துளங்குபொற்கலத்துளேற்று
வேய்மணித்தோளிநிற்பவிழுத்தவனியமமுற்றி
வாய்மணிமுறுவறோன்றவுந்தனைவிதியிற்செய்தேன்.

முற்றி - முற்ற.

இ - ள். மணியழுத்தின பவளத்திண்ணையிலிருந்து கரகத்துநீரை நிலத்தில வீழாமற் கலத்திலேயேற்றுநீநிற்க அவன் நியமங்களைமுற்றினனாக, யான் குறைகூறு தற்கு முத்துப்போலுமுறுவறோன்றும்படி நகைத்து வணங்குமுறையாலே வணங்கி னேனென்றானென்க. (௨௭௬)

ஆறெலாங்கடலுள்வைகுமருநதவத்திறைவனூலுள
வேறெலாப்பொருளும்வைகும்விழுத்தவவறிதிநீயே
யூறிலாவுணர்விளுக்கியுணாமதியெவன்கொன்மக்கட்
பேறிலாளல்லள்பெற்றவுயிர்சென்றுபிறக்குமென்றேன்.

இ - ள். வணங்கி விழுத்தவனே! இவள் மக்கட்பேறில்லாதாளல்லள்; பெற்ற மக்களுயிர் மற்றோரிடத்தே சென்றுபிறக்கும்; இனிப் பிள்ளை யெத்தன்மைத்து; அதன்றன்மையை, ஆறெலாங் கடலுள்வைகுமாறுபோலே இறைவனூலிலே வேறு வேறுபட்ட எல்லாப்பொருளும்வைகும்; அப்பொருளெல்லாம் நீயேயறிதியாதலிற் கணிதநிலையுந் தெரியாமலில்லை; நின்னுணர்வாலேபார்த்து உரைப்பாயாகவென்றே னென்றானென்க.

மக்களைப் பின்னுங்கூட்டுக. இறக்குமென்னமாட்டாது கூறினான். (உஎஎ)

வம்பவிழ்கோதைதந்தவான்றுவர்க்காயைவீழ்த்தோர்
செம்பழுக்காயைவாங்கித்திருநிலத்தெடுத்துக்கொண்டாங்
கம்பழநீண்டவாட்கணலமருமணிசெயம்பூங்
கொம்படுநுசுப்பினைக்குத்தந்தனென்பேணிக்கொண்டாய்.

வீழ்த்து - வீழ்ப்ப

இ - ள். அங்ஙனங்கூறியகாலத்தே, கோதாய்! யான்றந்ததுவர்க்காயை நீவீழ்ப்ப, அவனைவழிபட்டநிலத்தே கிடந்ததொரு பழுக்காயை வளைந்து எடுத்து நுசுப்பினைக்குத் தந்தேன்; நீயதனைப் பின்பு பேணிக்கொண்டாயென்க. (உஎஅ)

க. பெற்றவந்நிமித்தத்தாலும்பிறந்தசொல்வகையினாலு
மற்றமின்மணியையங்கைக்கொண்டவாகண்டுகாட்டக்
கற்பகங்காமவல்லியனையநீகேண்மினென்று
முற்றுபுகனிந்தசொல்லான்முனிவரன்மொழியுமன்றே. (உஎகூ)

உ. ஒன்றுநீர்கவலல்வேண்டாவுலகெலாமாளுஞ்சீர்த்திப
பொன்றிகழுருவினானோர்புண்ணியற்பெறுதிரென்ன
நின்றநீயுவந்துநீங்கநிகழ்பொருளனைக்குச்செப்பிப்
பின்றையுநிகழ்வதுண்டுபேசுவல்கேளிதென்றான்.

இவையிரண்டுமொருதொடர்.

நிமித்தம்-துவர்க்காயைவீழ்ப்பப்பழுக்காயைக்கொடுத்தது. பிறந்தசொல்வகை யாவது இறக்குமென்னாது சென்றுபிறக்குமென்றதனாற் போமதுவும் பிறக்குமதுவுஞ் சொல்லியது. பெறுதிரென்றது சுநந்தைக்குப் பிள்ளைபெறுவையென்றாற்போலி ருந்தது. அவர்கூறியது வளர்க்கப்பெறுவீரென்று.

இ - ள். இறைவனை அங்கையிலேகொண்டிருக்கின்றவன் நிமித்தத்தாலுஞ் சொல்லாலுந் தாங்கண்டு நமக்கறிவிக்கவேண்டி நீர்கேண்மினென்று காரியமுற் றுப்பெற்று இனியசொல்லாலேமொழியும் அம்முனிகளுக்குவாறனவன், நீர்சிறிதும்

வருந்தவேண்டா; உலகமெல்லாம் ஆள்வானொருபுண்ணியனைப்பெறுவீரென்றுகூற, அதுகேட்டு நீஉவந்துபோனயாக, பிறப்புத்தொடங்கி அவற்குத் துறவளவுநிகழுகின்றுயபொருள்களை எனக்குக்கூறிப் பின்புநிகழ்வதோர்துன்பமுண்டு, அத்துன்பத்தைக் கூறுகின்றேன் கேளென்றானென்க.

கொண்டவர்முனிவரனென்றது ஒருமைப்பன்மைமயக்கம். (உ௪0)

நிலவுறழ்பூணினானைநெடுநகரிரங்கக்கையாத்
தலைபலசெய்துகொல்வானருளிலான்கொண்டபோழ்திற்
குலவியபுகழினானைக்கொண்டுபோமியக்கனஞ்சல்
சிலபகல்கழிந்துகாண்டிசிந்தியீதென்றுசொன்னான்.

இ-ள். நீங்கள் அலபலசெய்து பூணினானைக கையைத் தொழில்செய்யாதபடி பண்ணுதலாலே, அருளிலான் அவனைக்கொல்லக்கருதி நகரிரங்கும்படி கைக்கொண்டகாலத்தே அவனை ஓரியக்கன்கொண்டுபோம், போனால் எட்டுத்திங்கள் சென்றாற் காண்மை; இவ்வார்த்தையை அக்காலத்தே சிந்தியென்று சொன்னானதலின், நீயும் அஞ்சாதேகொள்ளென்றானென்க. (உ௪க)

வசையறநிறைந்தகற்பின்மாலையுமாமிதானுந்
தசையறவுருகிவெந்துதம்முயிர்நீங்குமாங்க
ணசைதவன்சொற்கணென்னுநோன்புணைதழுவிநெஞ்சிற்
கசிவெனுங்கடலைநீந்திக்கரையெனுங்காலைகண்டார்.

இ-ள். குணமாலையுஞ் சுநந்தையுமுருகி வெந்து உயிர்நீங்குகின்றவளவிலே அதுகேட்டு நுண்ணிய தவத்தையுடையவன் வார்த்தையென்னுநோன்புணையைத் தழுவி வருத்தமென்கின்ற கடலைநீந்தி எட்டுத்திங்களென்கின்ற காலையாகிய கரையைக் கண்டாரென்க. (உ௪உ)

திருக்குழன்மகளிரானையச்சீவகசாமிதிண்டோள்
வரிக்கச்சிற்பிணிக்கப்பட்டான்மன்னனாலென்னக்கேட்டே
தருக்குடைவேழம்வாளார்ஞாட்பனுட்டைகமைசான்ற
மருப்புடனிழந்ததொத்தார்மன்னுயிர்த்தோழன்மாரே.

இ-ள். மன்னவன் கைக்கொண்டுவரச்சொல்லுதலால் சீவகன் தன்றோளை இருமுதுகுரவராலே கச்சிட்டுக்கட்டினாற்போலத் தொழில்செய்யாதபடி பண்ணப்பட்டானென்று சிலர்கூறக்கேட்டு அவன்றோழர் யானை போரிலே மருப்பைச் சோவிழந்த தன்மையையொத்தாரென்க. (உ௪௩)

நட்டவற்குற்றகேட்டேபதுமுகனக்குமற்றோர்
குட்டியைத்தின்னலாமேகோட்புலிபுறத்ததாகக்
கட்டியங்காரனென்னுங்கழுதைநம்புலியைப்பாய
வொட்டியிஃதுணரலாமேயுரையல்லையறிகவென்றான்.

இ-ள். தானட்புப்பண்ணின சீவகனுக்குப் பிறந்ததுன்பத்தைக்கேட்டுப் பதுமுகன் நக்குப் புலி புறத்ததாக அதன்குட்டியைவேறொன்றினாற் றின்னலாமோ,

அதுபோல யாமுளேமாக அவனுலென்செய்யலாம்; அதுவேயுமன்றிக் கட்டியங் காரனென்னுங்கழுதை நம்புலியைப்பாய்தற்கு யாமும்பொருந்தி இவ்வார்த்தையை மெய்யென்றுணர்தலாகாதென்று திரளைநோக்கிக்கூறிப் பின்பு ஒற்றுப்போகின்றவனைநோக்கி ஆண்டுப்பிறக்கின்ற வார்த்தையைக் கடுகவறிவாயாக வென்ருனென்க.

மற்று - வினைமாற்று. தான்பாதுகாத்தற்ருெழிலுடைமையிற் குட்டியென்ருன். அது *"மடங்கலாற்றற்பதுமுகன்காக்கவென்ன" என்பதனுலுமுணர்க. இனிப் புலியென்றது சுதஞ்சணனைக் கருதியென்றுமுரைப்ப. (உ௮௪)

சிலையொடுசெல்வனிஸ்ருற்றேவரும்வணக்கலாற்ருர்
முலையுடைத்தாயொடெண்ணித்தந்தையிக்கொடுமைசெய்தான்
கலைவல்லீரின்னுங்கேண்மினின்வதென்றுரைக்குமாங்கண்
விரைவொடுசென்றவொற்ருள்விளைந்தவாபேசுகின்ருன்.

இ - ள். அவன்போனபின்பு, பதுமுகன் கலைவல்லீர்! ஆண்டுப் பிறந்தசெய்தியித்தன்மைத்து; யாதெனிற் சீவகன் சிலையோடுநின்ருற் றேவரும் அவனைத் தாழ்வித்தலாற்ருராதலின், அவனைத்தாழ்வித்தலரிது; இக்கொடுமைசெய்தான் நற்ருயோடெண்ணித் தந்தையே, இன்னமுமொற்றன்வந்தாலுங் கேண்மினென்று உரைக்கின்றவளவிலே ஓடிவந்தவொற்றன் செய்தி சொல்லாநின்ருனென்க. (உ௮௫)

இட்டிவேல்குந்தங்கூர்வாளிருஞ்சிலையிருப்புச்சுற்ருர்
வெட்டிலைச்சூலம்வெய்யமுளைத்தண்டுநெருங்கவேந்தி
யெட்டெலாத்திசையுமீண்டியெழாயிரத்திரட்டிமள்ளர்
கட்டழற்கதிரையூர்கோவலனைத்தவாவளைத்துக்கொண்டார்.

ஈட்டி - விகாரம் இருப்புச்சுற்று - பூண். முளைத்தண்டு - முளையினையுடைய தண்டாயுதம்.

இ - ள். பதினாலாயிரமள்ளர் ஈட்டிமுதலியனவற்றை நெருங்கவேந்தி எட்டாகிய எல்லாத்திசைகளினுமீண்டிக் கதிரைப் பரிவேடிப்புவளைத்தாற்போல வளைத்துக்கொண்டாரென்க. (உ௮௬)

பிடியொடுநின்றவேழம்பெருவளைப்புண்டவண்ணம்
வடிமலர்க்கோதையோடும்வளைத்தலின்மைந்தன்சீறி
விடுகணைசிலையொடேந்திவெருவரத்தோன்றலோடு
மடுபுலிகண்டமான்போலாறலவாயினரே.

இ - ள். பிடியோடுநின்ற பெருவேழம் வளைப்புண்டாற்போலே குணமாலையோடேகூட மனையிடத்தேவளைத்தலாலே மைந்தன்சீறிக் கணையைச் சிலையுடனேயேந்தித் தோன்றினவளவிலே அம்மள்ளர் புலியைக்கண்ட மான்போலே வழியல்லா வழிகளிலேபோனரென்க. (உ௮௭)

௧. சூழ்கழன்மள்ளர்பாறச்சூழ்ச்சியிற்றந்தைபுல்லி
வீழ்தருகண்ணடம்மோய்விளங்குதோள்பிணிப்பமற்றென்

* விமலையாரிலம்பகம், அ,

றேழுளைவடுச்செய்திட்டேனென்றுதான்றுளங்கிநின்று
னூழ்திரைப்பாம்புசேர்ந்தவொளிமிகுபரிதியொத்தான். (௨௪௮)

உ. ஒற்றன்வந்துரைப்பக்கேட்டேயொத்ததேயென்சொலென்னுச்
சுற்றினார்முகத்தைநோக்கிச்சூழிமால்யானையன்ன
னூற்றவிவ்விடரைத்தீர்க்குமுபாயநீருரைமினென்றான்
பொற்றிரட்குன்றம்போலப்பொலிவுகொண்டிருந்ததோளான்.

இவையிரண்டுமொருதொடர்.

க. வருத்தத்தாற்கழன்று நீர் வீழுகின்றகண்களுளாகிய தமமோய் - தாய, தந்தை. புல்லி - அணுகி.

உ. சூழி - முகபடாம். தோளான் - பதுமுகன

இ - ள். மள்ளர் அங்ஙனங்கெட்டார்களாக, இதுகாரியமன்றென்றுகருதித் தந்தைதாயிவர்கள் புல்லி விளங்குதோளைச் சூழ்ச்சியாலே போர்த்தொழில்செய்யாதபடிசெய்ய, அவன் இவர்கள் வேண்டிக்கோடலின், எனக்குவடுவில்லை; என்றேழர்க்கு வடுவுண்டாக்கினேனென்று கலங்கிநின்றான்; அப்பொழுது மள்ளர் சென்று கைக்கொள்ளுதலாற் பாம்புமறைத்த பரிதியையொத்தானென்று ஒற்றன வந்துகூறக்கேட்டு என்சொல் ஒத்ததோவென்றுகூறிப் பதுமுகன் தன்னைச்சூழ்ந்து நின்றவர்கண்முகத்தைநோக்கிச் சீவகனுக்குற்ற இவ்விடரைத் தீர்க்குமுபாயத்தை நீங்கள் உரைமினென்றானென்க

ஊழித்திரைப்பரிதி. இனி மொய்யிளங்குதோள்பாடமாயின், தம்மென்பது ஒருமைப்பன்மைமயக்கமாம். திரைப்பரப்புச்சேர்ந்தவும் பாடம். (௨௪௯)

நிறைத்திங்களொளியொடொப்பான்புத்திசேனினைந்துசொல்லு
மறைத்திங்கணகரைவல்லேசுடுதுநாஞ்சுடுதலோடு
மிறைக்குற்றேல்செய்தல்ன்றியெரியின்வாய்ச்சனங்களீங்கச்
சிறைக்குற்றநீக்கிச்செற்றுஞ்செகுத்துக்கொண்டெழுதுமென்றான்

இ - ள். நிறைந்த திங்களொளியோடொப்பானாகிய புத்திசேனன் நினைந்து சொல்லும்; நாம் இப்பொழுதேமறைந்து நகரைச்சுடுவோம், சுட்டவளவிலே சனங்கள் இறைக்குக் குற்றேவல்செய்தலின்றி எரியையவித்தற்கு நீங்கினார்களாக மதனனைக்கொன்று சீவகனுக்குச் சிறையாகிய குற்றத்தைநீக்கிக் கொண்டுபோவோமென்றானென்க

இவன் அந்தணனாதலின் முறைகூறினான் ௨௫௰

காலத்தீக்கணைமேயக்கடியரண்கடந்தவம்பிற்
சாலத்தீச்சவரர்கோலஞ்செய்துநம்மறவரீண்டிக்
கோலத்தீவேலினானைக்கோயிலுள்வளைப்பவிப்பா
லாலத்தீயிடங்கடோறுமாகுலஞ்செய்துமென்றான்.

இக்கவிமுதல் பதுமுகன்கூற்று.

இ - ள். நீகூறியவாறே வினையமைத்திப்பாலுந்தியாலை ளைமுழுதுஞ்சுடாதே முப்புரத்தைக்கடந்த அம்புபோலே சிலவிடங்களைவிட்டுச்சுட நம்மறவரீண்டிச் சீ

வேடர்கோலத்தைச்செய்து கட்டியங்காரனைக் கோயிலிலேவளைத்துக்கொள்ள இப்பகுதியிலே ஆலையிற்பாகடுந் தீயையுமுடையநாடெங்கும் அழிக்கக்கடவோமென்றானென்க.

*"உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண் - டெய்யவல் லானுக்கே யுந்தீ பற" என்றாற்போல. (உ௯௧)

சிறைப்புறங்காத்துச்செல்லுமதனனைத்தெருவில்வீழப்
பிறைத்தலையம்பிற்சென்னிபெருநிலத்திடுவலிட்டான்
மறுக்குற்றுமள்ளர்நீங்கமைந்தனைக்கொண்டுபோகி
யறைத்தொழிலார்க்குஞ்செல்லாவருமிளைபுகுமினென்றான்.

இ-ள். அங்ஙனஞ்செய்தால் யான் அம்பாலே சிறையைப் பாதுகாத்துத் தெருவிலேசெல்லுமதனனைத் தலையை நிலத்தேவீழவிடுவேன்; இட்டால் மறுகுதலுற்று மள்ளர்நீங்கினவளவிலே சீவகனைக்கொண்டுபோய்க் கீழறுக்குந்தொழிலுடைய அமைச்சர்க்கும் நினைக்கவொண்ணாத காவற்காட்டிலே செல்லுமினென்றானென்க.()

மாறவர்மலைப்பினுங்கேவாட்கடாக்கொண்டுநொய்தா
வேற்றலகேற்றிநும்பின்விரைதர்வேனுலகிற்கெல்லா
மாற்றியநட்புவல்லேவலிப்புறீஇயிடுமினென்றான்
கூற்றங்கள்பலவுந்தொக்ககூற்றதநிற்கூறமொப்பான்.

கூற்றங்கள்பலவுந்திரண்டகூறுபாட்டிலே விசேடித்துக்கூற்றத்தையொப்பான்; "முத்தரக்கூற்றம்" என்றாற்போல. தோழரிற் பதுமுகனுக்கு விசேடமுண்டென்றார். இனிக் கூற்றத்தில் உவமைகூறுமிடத்துப் பலகூற்றங்களாலேபண்ணினதொரு கூற்றமொப்பானென்றுமாம்.

இ-ள். கூற்றமொப்பான அங்ஙனஞ்செய்தாற பகைவர்மலைந்ததுண்டாயின் வாளாளாலேகடாவிட்டு வல்லே விரைந்துலகேற்றி நும்பின்னேகடுகவருவேன்; நீங்கள் நடத்தியநட்பை உலகெல்லாம் நிலைபெறுத்தியிடுமினென்றானென்க. (உ௯௩)

காலனைசசூழ்ந்தநோயபோனபுலமாவிபுலர்சூழ
வேலனையோர்திநந்தன்வெருவரத்தோன்றலோடு
மாலைதன்றாதைதானுமககளும்வந்துகூடிப
பாலவர்பிறருமீண்டிபபாய்புலியினத்திற்சூழ்ந்தார்.

இ-ள். காலன் ஏவினவிடத்தேசேறறகு அவனைசசூழநதநோய்போல மாவின்மேலே நபுலவிபுலர்சூழ்ந்துவர நந்தட்டன்றோன்றினவளவிலே அவனுடனே குபேரமித்திரனும் அவன்மக்களுந் தமபகுதியினுள்ளாரொழிந்தவரும் ஈண்டிவந்து தோழருடனேகூடி. எல்லாரும் புலியினமபோலே பதுமுகனைச்சூழ்ந்தாரென்க.

நபுலவிபுலா - கபிலபரணாபோலககொள்க. (உ௯௪)

* திருவாசகம், திருவுந்தியார், ௪.

மட்டுவாயவிழ்ந்ததண்டார்த்தாமரைநாமன்சொன்ன
கட்டமைநீதிதன்மேற்காப்பமைந்திவர்கணிற்பப்
பட்டுலாய்க்கிடந்தசெம்பொற்கலையணிபரவையல்கு
லிட்டிடைப்பவளச்செவ்வாய்த்தத்தையுமிதனைக்கேட்டாள்.

இ - ள். பதுமுகன்கூறிய வகுப்பமைந்தமுறையிலே இவர்கள்காவலமைந்து நிற்ப, அல்குன்முதலியவற்றையுடைய தத்தையும் இச்செய்தியைக்கேட்டாளென்க.()

மணியியல்வனச்செப்பின்மங்கலத்துகிலைவாங்கிக்
கணைபுனைகண்ணியேற்பவுடுத்தபின்செம்பொற்செப்பிற்
பிணையலுநறியசேர்த்திப்பெருவிலையாரந்தாங்கித்
துணைவனுக்குற்றதுன்பஞ்சொல்லியதொடங்கினாளே.

இ - ள். அதுகேட்டகன்னி தியானத்துக்கேற்ப வெண்டுகிலையுடுத்தபின்பு நறியமாலைகளையுமணிந்து முத்தாரத்தையுந்தாங்கிக் கணவனுக்குற்ற வருத்தத்தைத் தீர்த்தற்குத் தியானத்தைத் தொடங்கினாளென்க. (௨௧௬)

பொன்னணிமணிசெயோடைநீரின்வெண்சாந்துபூசித்
தன்னுடைவிஞ்சையெல்லாந்தளிரியலோதலோடு
மின்னடுவாளும்வேலுங்கல்லொடுதியுங்காற்று
மன்னுடனேந்தித்தெய்வமாதனைச்சூழ்ந்தவன்றே

இ - ள். அங்ஙனந்தொடங்கியதளிரியல் மடலிலிருந்தசாந்தைப பன்னீருடனேபூசித் தன்னுடையமந்திரங்களெல்லாவற்றையுமோதினவளவிலே இவள்வழிபாட்டிற்கு விரும்பிவருந்தெய்வங்கள் வாள் வேல் முதலியவற்றை மிகுதியுடனேயேந்திவந்து அவளைச்சூழ்ந்தவென்க.

இதனானும், பின் "விண்ணோர்களைவாழ்த்தி" என்றதனானும் ஈண்டு விஞ்சைய வாராமையுமுணர்க. சாந்துபூத்த - தன்னுடைவிஞ்சையம் பாடம். (௨௧௭)

வேறு.

ஆய்மின்னும்பணைவெம்முலைப்பாடமைத்தோளினாள்
வீரனுற்றதுயர்மின்னெனநீக்கியமெல்லவே
நேரமன்னும்வருகென்றுநின்றாணினைந்தாளரோ
பாருண்மன்னும்பழிபண்பனுக்கின்றுவிளைந்ததே

இ - ள். முலையினையுடையதோளினாள், தன்கணவனுக்குற்றதுயரை மின்போற் கடிதுமறையும்படிநீக்குதற்கு இவ்வாயிலிலே மிகவுமணுகவருவார்களாக வென்றுநின்றவள், பண்பனுக்கு இன்றுவிளைந்ததொரு பாரிலேமன்னுகின்றபழியை மெல்லவே நினைந்தாளென்க.

அது மேற்கூறுகின்றார். (௨௧௮)

மன்னன்செய்தசிறைமாகடலுட்குளித்தாழ்வுழித்
தன்னையெய்திச்சிறைமீட்டனன்மனையாளொளி

னென்னையாவதிவனுற்றலுங்கல்வியுமென்றுடன்
கொன்னும்வையங்கொழிக்கும்பழிக்கென்செய்கோதெய்வமே.

சிறையெனவே கட்டில்லாமையுணர்க. என்னை, ஐ - அசை. ஆவது - ஒரு மைப்பன்மைமயக்கம். கொன்னும் - பெரிதும்.

இ - ள். அரசன்செய்தசிறையிலே தான் முழுகியழுந்துகின்றவளவிலே தன் மனையாள் தன்னைச்சேர்ந்து சிறையைநீக்கிறுளென்றால் இவனுற்றலுங் கல்வியும் என்னுககடவனவென்றுகூறி உலகமெடுத்துச்சொல்லும்பழிக்குத் தெய்வமே யான் என்செய்வேனென்று நினைந்தானென்க. (உ௧௧)

௧. செல்வனுற்றசிறைசெய்யவணீக்குமென்றும்பழி
யில்லையாயின்னவள்பானெனும்வேற்றுமையில்லையே
சொல்லின்வெள்ளிம்மலேதோடவிழ்தாமரைப்பொன்மல
ரெல்லையாகும்பொதுப்பெண்ணவள்யான்குலமங்கையே. ()

௨. ஆவதாகப்புகழும்பழியும்மெழுநாளவை
தேவர்மாட்டும்முாமககளுளில்வழித்தேர்கலே
ளேமெனெஞ்சம்மெனநோக்கிநின்றான்சிறைப்பட்டதன்
காவற்கன்றிற்புனிற்றுவனகார்மயிற்சாயலே.

இவையிரண்டுமொருதொடர்.

திருப்பார்க்கத் தீங்கெலாநீங்குமென்று உலகங்கூறுதலிற் றுனும் அதனைற்கூறு கின்றாள். ஏகாரம் - தேற்றேகாரம். காவற்கன்று - தன்காவலையுடையகன்று.

இ - ள். செல்வனுற்றசிறையைத் திருமகணீக்குமென்றுகூறியவதனுற் பழி யில்லையாய்முடியுமாயின், அவளென்றும் யானென்றும்வேறுபாடில்லையே, வேறு பாடுசொல்லின், எனக்கெல்லே வெள்ளிமலையாகும்; அவளுக்கெல்லே தாமரைப் பொன்மலராகும். அவள் பொதுமகள்; யான்குலமங்கை. அதனுலும்பழியில்லை யாம். அதுவுமன்றி ஈண்டுப் புகழும்பழியுமானதாக; அவை தோன்றுநாட் டேவர் பக்கலுந்தோன்றும்; மக்களில்அவையில்லாதவிடங் கண்டறியேன்; இவையெல்லாம் நினைக்குங்காலமுமன்று; என்னெஞ்சமுநோமெனக்கூறி மயிற்சாயல் ஒருசிறைப் பட்ட தன்கன்றிடத்துப் புனிற்றுநோக்குதலொத்த நோக்கினைநோக்கிநின்றாளென்க.

ஆ விடுவிக்கநோக்கிநின்றாற்போலேநின்றாள். இது பயனுவமம். (௩௦௧)

வேறு.

௧. மாநகர்சுடுதலொன்றோமதனையழித்தலொன்றோ
வானிகரில்லாமைந்தர்கருதியததுவுநிற்க
வேய்நிகரில்லதோளிவிஞ்சையால்விடுத்துக்கொள்ளப்
போயுயிர்வாழ்தல்வேண்டேனெனப்பொருள்சிந்திக்கின்றான்.()

௨. கச்சறநிமிர்ந்துமாந்தர்கடாவிடுகளிறுபோல
வுச்சியுமருங்கும்பற்றிப்பிளந்துயிர்பருகிக்கோலமா

வச்சுறவழன்றுசீறியாட்டினம்புக்கதொப்பக்
குச்சௌநிரைத்தயானைக்குழாமிரித்திடுவெலென்றான்.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். வானுநிகரில்லாமைந்தர்கருதியது: ஒன்று மாநகரைச்சுடுதல்; ஒன்று மதனனைக்கொல்லுதலாயிருக்கும். அதுவுந்தாழ்வில்லை; தத்தை தன்விஞ்சையால் என்னைவிடுவித்துக்கொள்ள யான்பிழைத்துப்போய்ப் பின்பு உயிர்வாழ்தலைவேண்டேனென்றுகருதிக் காரியத்தை நினைக்கின்றவன், தன்வயிற்றிற்கட்டின கச்சறும்படி நிமிர்ந்து மாந்தரை உச்சியையுமருங்கையும்பற்றிப்பிளந்து உயிரைக்கடாவிடுகளிறுபோலே மதனனைக்கொன்று புலிசீறி ஆட்டினத்தேபுக்கதொப்பப் பாவாற்றியென்னும்படி நெருங்கவலைத்த யானைத்திரளையுங் கெடுத்திடுவேனென்று கருதினானென்க.

ஆசிரியற்குநேர்ந்ததற்குத் தாழ்வாகாதென்று இத்திரளைக் கொல்லக்கருதினான். ஆய்ந்கரும் பாடம். (௩0௩)

மின்னிலங்கெயிற்றுவேழம்வேழத்தாற்புடைத்துத்திண்டோ
பொன்னிலங்கிவுளித்தேராற்புடைத்துவெங்குருதிபொங்க
வின்னுயிரவனையுண்ணுமெல்லைநாள்வந்ததில்லை
யென்னையிக்கிருமிகொன்றென்றேழுணைநினைப்பலென்றான்.

இ - ள். அங்ஙனங் கருதினவன் பின்பு குருதிபொங்கும்படி வேழத்தை வேழத்தாலேபுடைத்துத் திண்டேரைப் பொன்னிலங்கு இவுளித்தேராலேபுடைத்து நம்பகைவனுயிரையுண்ணுநாளெல்லை வந்ததில்லை; இக்கிருமிகளைக்கொன்ற பெறும் பயன்யாது? என்றேழுணைநினைப்பேனென்று நினைத்தானென்க.

மக்களாகியகருத்தின்மையிற் கிருமியென்றான் (௩0௪)

தோழனுந்தேவிமார்தங்குழாத்துளான்றுளும்புமுங்கீ
ரேழ்தருபரிதிதன்மேலிளம்பிறைகிடந்ததேபோற்
றாழ்தகைபாரமார்பிற்சீவகன்குணங்கடம்மை
யாழெழீஇப்பாடக்கேட்டோராம்பையைச்சேர்ந்திருந்தான்

எழுதருமிளங்கதிர்மேலே இளம்பிறைகிடந்தாற்போலத் தங்கின முத்தாரமார்பினையுடைய சீவகன்

இ - ள். சுதஞ்சணனுந் தேவிமாதிரளிலே யிருக்கின்றவன் ஓரரம்பையைச் சேர்ந்து சீவகன்குணங்களைப் பாடக் கேட்டிருந்தானென்க. (௩0௫)

வேறு.

வயிரம்வேய்ந்தமணிநீண்முடிவாலொளிவானவன்
செயிரிற்றீர்ந்தசெழுந்தாமரைக்கண்ணிடனுடனு
முயிரனானைநினைந்தானுற்றதோதியினேக்கினன்
மயிலனார்க்குப்படினவைத்தவன்மால்விசும்பேறினன்.

இ - ள். வயிரமணிவேய்ந்தமுடியினையும், வெள்ளைநிறத்தினையுமுடைய தேவனது குற்றத்தைதீங்கினகண் இடனுடினவ்வளவிலே, இதனாலெனக்குத்தீங்குவருமோவென்றுநோக்காதே முதற் சீவகனைநினைந்தான்; நினைந்து அவனுற்றதுன்பத்தையறிந்தான்; அறிந்து தேவிமார்க்குத் தன்னுருவைநிருமித்துவைத்துத் தன்னூர்தியாகிய மேகத்திலே யேறினனென்க.

ஒதி - அவதிஞானம். ஓலக்கங்குலையாமற் படிவம்வைத்தானென்க. படிவம்-விகாரம். (௩0௬)

இடியுமின்னும்முழக்கும்மிவற்றுனுலகந்நிறைந்
தொடியுமூழியிவணின்றுறுகால்வரைகீழ்ந்தென
நடலைநோக்கிக்கதிர்நாணுவதொப்பமறைந்தபின்
கடலையேந்திநிலத்திட்டெனமாரிகலந்ததே.

நிறைந்து - நிறைய. கீழ்ந்து - கீழ.

இ - ள். அவ்வூர்தி உறுகால் வரையைப்பிளக்க இடியும் மின்னும் முழக்குமென்கின்றவற்றாலே தானிறைதலின், இந்நடலையைநோக்கி நம்மையொழிய ஊழிநிகழ்ந்ததென்று நாணுந்தன்மையையொப்பக் கதிர்மறைந்தபின்பு உலகமுடியும் ஊழியின்று இப்பொழுதென்னும்படி கடலையெடுத்து நிலத்தேபோகட்டாற்போலே பின்பு மழைகலந்ததென்க. (௩0௭)

விண்ணுமண்ணும்மறியாதுவிலங்கொடுமாந்தர்தங்
கண்ணும்வாயும்மிழந்தாங்கடல்கொண்டதுகாணெனப்
பெண்ணுமாணும்மிரங்கப்பெருமான்மகன்சாமியை
யண்ணலேந்தியகலம்புல்லிக்கொண்டெழுந்தேகினான்.

இழந்து - இழப்ப. ஆங்கடல் - மேல் ஊழிக்காலத்துவரும்கடல். பெருமான்-சச்சந்தன்.

இ - ள். அம்மழையாலே விலங்குமக்களும் விண்ணுமண்ணுமறியாதே கண்ணும்வாயுமிழக்கும்படி ஆங்கடல்கொண்டதனைக் காண்பீராகவெனக்கூறிப் பெண்ணுமாணுமிரங்கச் சுதஞ்சணன்வந்து சாமியையெடுத்து மார்பிலேதழுவிக்கொண்டு மேனோக்கிப் போனானென்க.

விலங்குகள்மேயாமையின், வாயிழந்தன. "மாமேயன்மறப்ப" என்றார் பிறரும். (௩0௮)

குன்றுண்டோங்குதிரடோளவற்கொண்டெழுந்தேகலு
நன்றுண்டாகவெனநன்னுதல்வாழ்த்தினள்வாழ்த்தலு
மொன்றுண்டாயிற்றவளுள்ளழிநோயுறுகாளையை
யென்றுண்டாங்கொலினிக்கட்படுநாளெனுஞ்சிந்தையே.

இ - ள். சீவகனை அவன் கொண்டுபோகின்றவளவிலே, தத்தை நன்றுண்டாகவென்று வாழ்த்தினாள்; வாழ்த்தினவளவிலே, அவளுக்கு இவனைக்காணுங்காலம் என்நாளிலேயுண்டாங்கொலென்னும் நினைவாகிய உள்ளழிநோயொன்றுண்டாயிற்றென்க.

உண்டு - உவமவாசகம். நாளென்றது காலத்தையுணர்த்தும். (௩0௯)

சந்தமாலைத்தொகைதாழ்ந்துசாந்தங்கமழ்பூமியுள்
வந்தவிண்ணோர்களை வாழ்த்தியேத்திம்மலர்மாலைதூ
யெந்தைமார்களெழுகென்னவேகவிடுத்தாள்குரல்
சிந்தைசெய்யுஞ்சிறகர்க்கிளிதோற்குமந்தீஞ்சொலாள்.

சந்தம் - நிறம். குரலென்னுநரம்பு தான் இத்தன்மைபெறவேண்டுமென்று கருதுஞ் சொல்லாள்.

இ - ள். தான்வழிபட்டபூமியிலே அவ்வழிபாட்டிற்குவந்த தெய்வங்களை மாலையைத்தூவிவாழ்த்தித் தோத்திரங்களைக்கூறி, எந்தைமார்கள்! போவீராகவென்று போகவிட்டாளென்க.

தான்வழிபட்டதெய்வங்கள் செய்துமுடிக்கின்றகாரியம் பிறரான்முடிதலின், அவரைப் போகவென்றாள். (௩௧0)

வேறு.

௧. மலைதந்தொகையானைமன்னன்மைத்துனன்மதனனென்பான்
கொலைத்தொகைவேலினானைக்கொல்லியகொண்டுபோந்தா
னலைத்தகையவனைக்காணானஞ்சுயிர்த்தஞ்சிநோக்கிச்
சிலைத்தொழிற்றடக்கைமன்னற்கிற்றெனச்செப்புகின்றான். (௩௧௧)

௨. மன்னனாற்சிறப்பட்டமைந்தனைக்கொல்லப்போந்தா
மென்னினிச்சொல்லிச்சேறுமென்செய்தும்யாங்களொல்லா
மின்னதுபட்டதென்றாலெரிவிளககுறுககுநம்மைத்
துன்னுபுசூழ்ந்துதோன்றச்சொல்லுமின்செய்வதென்றான்

* இவையிரண்டுமொருதொடர்

இ - ள் மன்னன்மைத்துனனாகிய மதனனென்பான், சீவகனை அரசன்கொல்லுகைக்குத் தான் கைக்கொண்டுபோந்தவன், அவனைக்காணாமல் அஞ்சி நோக்கி மன்னற்கு இத்தன்மைத்தென்றுகூறுகின்றவன், அரசனாற்சிறப்புபட்டசீவகனை அவன்கொல்லும்படி கைக்கொண்டுபோந்தநாஞ் சென்று யாங்கள்பட்டதுன்பமெல்லாம் இத்தன்மைத்தென்றுகூறின், நம்மை நடைவிளககெரிக்கும்; இனி யென்சொல்லிச் செல்வேம்; மேலென்செய்யக்கடவேம், செய்யுங்காரியத்தை எல்லாருநெஞ்சிலேவிசாரித்துத் தோன்றச் சொல்லுங்களென்றானென்க. (௩௧௨)

வாழ்வதோருபாயநாடிமதியுடம்படுவல்லே
சூழ்வினையாளராங்களொருவனைத்தொடர்ந்துபற்றிப்
போழ்படப்பிளந்துவாளிற்புரட்டியிட்டரியக்கண்டே
யாழ்கலமாந்தர்போலவணிநகரழுங்கிற்றன்றே.

இ - ள். சூழ்வினையாளர் தாம் உயிர்வாழ்வதோருபாயத்தைநாடி மதியொருப்பட்டு அவ்விடத்தே ஒருவனைத் தொடர்ந்துபற்றி வகிர்படப்பிளந்து வடிவுதெரியாதபடி புரட்டியிட்டுவைத்து வாளாலரிய அதனைக்கண்டு தாழ்ந்துபடு மரக்கலத்தின் மாந்தரைப்போல நகரழுங்கிற்றென்க. (௩௧௩)

காய்சினவெகுளிவேந்தேகளிற்ருெடும்பொருதகாளை
மாசனம்பெரிதுமொய்த்துமழையினேடிருளுங்காற்றும்
பேசிற்முன்பெரிதுந்தோன்றப்பிழைத்துய்யப்போதலஞ்சி
வாசங்கொடாரிஞனைமார்புபோழ்ந்துருட்டியிட்டேம்.

மொய்த்து - மொய்ப்ப.

இ - ள். அவரங்ஙனஞ்செய்து அரசனிடத்தேசென்று, வேந்தே! யாங்கள் செய்கின்ற பொருதற்றொழிலை நீகண்டிலை; பகைவன்சுற்றம் பெரிதுமொய்த்தவளவிலே, மழையோடே இருளுங்காற்றும் மிகத்தோன்றுதலாலே எங்களைத்தப்பி அவனுய்யப்போதற்கஞ்சி நீயானைக்கிடும்படி கொணராதே அவன்மார்பைப் பிளந்து தள்ளிப்போகட்டேமென்ருரென்க. (௩௧௪)

அருளவலியாண்மைகல்வியழகறிவிளமையூக்கந
திருமலியீகைபோகந்திண்புகழ்நண்புசுற்ற
மொருவரிவ்வுலகில்யாரேசீவகனொக்குநீரார்
பெரிதரிதிவனைக்கொன்ருய்பெறுகெனச்சிறப்புச்செய்தான்.

வலி - மெய்வலி. ஆண்மை - ஆளுந்தன்மை. அறிவு - இயல்பானவறிவு. திருமலியீகை - செல்வமிகுகின்றகொடை. போகம்-எல்லாவற்றினும் நுகரவல்லனுதல். யாரே, ஏகாரம் எதிர்மறை.

இ - ள். அருண்முதலியவற்றிற்குச் சீவகனையொக்குநீரார் ஒருவருமில்லை; இவ்வுலகின்கண்ணே இவனைக்கொல்லுதல் மிகவுமரிது; இத்தன்மையானைக்கொன்றநீ இவற்றைப்பெறுவாயாகவென்று மதனனுக்குச் சிறப்புச்செய்தானென்க. (௩௧௫)

குணமாலையாரிலம்பக முற்றிற்று.

ஆ கவி ககசரு

## ஐந்தாவது.

# பதுமையாரிலம்பகம்.

வீட்டருஞ்சிறையிற்றேவன்விடுத்துயக்கொள்ளப்பட்ட
கோட்டமில்குணத்தினான்போயென்செய்கின்றான்கொலென்னிற்
கூட்டரக்கெறிந்தபஞ்சிற்கூடியபளிங்கிற்றோன்றுந்
தீட்டரும்படிவமன்னான்றிறங்கிளந்துரைத்துமன்றே.

வீட்டருஞ்சிறை - எல்லாவழியானும் போக்குதலரியசிறை. இந்நிலையினும் ஆசிரியனுக்குநேர்ந்தமொழிதப்பாமையிற் கோட்டமில்குணமென்றார். கூட்டரக்கெறிந்தபஞ்சு - செவ்வரக்கூட்டினபஞ்சு, பளிங்கைக்கூடியபஞ்சாலே அப்பளிங்கிடத்தேதோன்றும் படிவத்தையொப்பான் - சீவகன்.

இ - ள். தன்னையுய்யக்கொண்டகுணத்தினனைச் சிறையினின்றும்விடுவித்துக் கொண்டுபோய்த் தேவன் என்செய்கின்றானென்றுகேட்பீராயின், அவன்செய்கின்றநிலைமைதன்னை முறைபடக்கிளந்து பின்னர்ப் படிவமன்னான்றிறத்தை யுரைக்கக்கடவேமென்று தேவர் கூறினாரென்க.

*"வண்டளிர" என்னுங்கவியளவும் தேவன்செய்தி கூறினார். (க)

விலங்கிவில்லுமிழும்பூணான்விழுச்சிறைப்பட்டபோழ்து
மலங்கலந்தாரினான்வந்தருஞ்சிறைவிடுத்தபோழ்தும்
புலம்பலுமகிழ்வுநெஞ்சிற்பொலிதலுமின்றிப்பொன்னார்ந்
துலங்கலந்துயர்ந்ததோளானூழ்வினையென்றுவிட்டான்.

விழுச்சிறை - அன்னத்தைச் சிறைசெய்தலிற் சீரியசிறை

இ - ள். தோளான் கட்டியங்காரன்சிறையிலகப்பட்டபொழுதுந் தேவன்விடுவித்தபொழுதும் புலம்பலும் மகிழவும்நெஞ்சிற்றோன்றுதலின்றி இரண்டையும் ஊழ்வினையென்றே கருதிவிட்டானென்க.

பொலிதலும், உம்மை - சிறப்பு. சிறைப்பட்டகாலத்தும் இவன் கொண்டுபோனகாலத்தும் அவன்மனமிருந்தபடிகூறினார். இதனானே சாரணரும் "சிறைப்பட்டனைபோழ்தும்" என்றார். (உ)

வானரமுகளநாகமலர்துதைந்தொழுகவஞ்சித்
தேனிரைத்தெழுந்துதிங்களிறுவெனச்சென்றுமொய்க்குங்
கானமாருவிக்குன்றிற்காய்கதிர்சுமந்தோர்திங்கண்
மேனிமிர்ந்தேறியாங்குத்தேவன்வெற்பேறினானே.

---

* பதுமையாரிலம்பகம், சுo.

நாகமலர் தம்மிலேநெருங்கித் தேனொழுகும்படி வானரம்பாய்தலின், அவ்வி டத்திருந்த தேனினமஞ்சிப்போய்த் திங்களை இருளென்றுகருதி மொய்க்கும்வெற்பு- சந்திரோதயம்.

இ - ள். திங்கள் இளஞாயிற்றைச்சுமந்து ஒருவெள்ளிக்குன்றிலே யேறினாற் போலே தேவன் சீவகனைக்கொண்டு தன்வேற்பிலே யேறினனென்க. (௩)

திங்களைத்தெளித்திட்டன்னபாற்கடற்றிரைசெய்தெண்ணீர்
வெங்கள்விட்டலர்ந்தகண்ணிவிண்ணவனுரிமைதன்னுன்
மங்கலவகையினாட்டிமணியணிகலங்கள்சேர்த்திப்
பங்கயநெடுங்கணானைப்பவித்திரகுமரனென்றான்.

நீரொன்றமையிற் றிரைகூறினார்.

இ - ள். விண்ணவன் தாமரைக்கண்ணானைத் தெண்ணீராலே உரிமையோடே கூடநின்றாட்டி மங்கலவகையின் மணிக்கலங்களையுஞ்சேர்த்திச் சுத்தகுமரனென்று கூறினனென்க. (௪)

சிறைப்பாவம் நீங்கினமைபற்றிப் பவித்திரகுமரனென்றான்.

பொன்னணிகாம்புசெய்தபொழிகதிர்த்திங்கள்போலும்
பின்னியமுத்தமாலைப்பிணையறாக்குடையினீழற்
கன்னியர்கவரிவீசக்கனமணிக்குழைவில்வீச
வின்னிசைக்கூத்துநோக்கியிருந்தனன்றிலகமன்னன்.

பொற்காம்பு செறித்ததொருதிங்கள் - இல்பொருளுவமை.

இ - ள். திலகமொத்தவன் சல்லியுந் தூக்குமாகவிட்ட முத்தமாலையையுடைய திங்கள்போலுங் குடைநிழலிலே கவரிவீச அதனெதிரே குழை யொளியைவீச இசையோடுகூடியகூத்தைத் தான்பார்த்து இருத்தற்குத்தக்க இருப்பிலே யிருந்தா னென்க (௫)

இருமலர்க்குவளையுண்கணிமைப்பிலாப்பயத்தைப்பெற்ற
வரிமலர்த்தாரினான்றனைமுகண்டளியவென்னுதை
திருமலர்க்கோதையைம்பாற்றேவியர்தொடாபுகேட்ப
வெரிமணிப்பூணினானுமின்னணமியம்பினானே.

இருமை - கருமை.

இ - ள். தேவியர் எங்கண்கள் அளிக்கத்தக்க தாரினானைக் கண்டு இமையாதிருந்தபயனை இன்றுபெற்றனவென்று முகமன்கூறி, இவனுடன் நட்பு எங்ஙனமுண்டாயிற்றென்று தேவனைக்கேட்ப, அவனும் இப்படிக் கூறினனென்க.

ஞமலியாகியபிறப்பை மறையாமற்கூறலின், இன்னணமென்றார். (௬)

வேறு.

பிணிக்குலத்தகவயிற்பிறந்தநோய்கெடுந்
தணித்தகையுடம்பெனக்கருளிநோக்கினான்

கணிப்பருங்குணத்தொகைக்காளையென்றனன்
மணிக்கலத்தகத்தமிர் தனையமாண்பினன்.

பிணிக்குலம் - நோய்த்திரள்; எனவே விலங்காயிற்று. அந்நோய்க்கெல்லாம் அகமென்றது நாயை. *"எரிநீரவேநரகமந்நரகத்துன்பத் - தொருநீரவே விலங்கு தானுடைய துன்பம்" என்றார் மேலும். அணித்தகை - அழகைத் தகைக்கின்ற. கணிப்பு - அளவு. மணிக்கலத்தமுதென்றார், வடிவிற்குத்தக்க கலங்காதகுணமுண் டாதலின்.

இ - ள். அமிர்தனையமாணபினன், விலங்குகளில் நாயாகிய பிறவியிடத்தே பிறந்த நோயைக்கெடுத்து இவ்வுடம்பினையெனக்கருளி இங்ஙனம்பார்த்தான், இக் காளை காணுங்களென்றானென்க. (எ)

கடற்சுறவுயரியகாளையன்னவ
னடற்கரும்பகைகெடுத்தகன்றநீணில
மடத்தகையவளொடும்வதுவைநாட்டிநாங்
கொடுக்குவமெனத்தெய்வமகளிர்கூறினர்.

இ - ள். காமனையொத்தவன் பகையைக் கெடுத்து அவற்கு நிலமாகிய மடத்த கையவளைக் கலியாணஞ்செய்து கொடுக்குவமென்று தெய்வமகளிர்கூறினரென்க.

ஒடு - உருபுமயக்கம் உம்மை - அசை. நிலமகளொடு திருமகளுமாம். (அ)

செருநிலததவனுயிர்செகுத்துமற்றெனக்
கிருநிலமியைவதற்கெண்ணல்வேண்டுமோ
திருநிலக்கிழமையுந்தேவர்தேயமுந்
தருநிலத்தெமக்கெனிற்றருகுந்தன்மையீர்.

இ - ள். போர்நிலத்தே யானே அவனுயிரைப்போக்குவேன். எனக்கு நிலங் கூடுகின்ற இவ்வெளியகாரியத்திற்குப் போகபூமியையுந் தேவர்தேயத்தையும் எமக்கு நிலத்தே தாருமென்றால் அங்ஙனந் தரவல்ல தன்மையீர்! எண்ணல்வேண்டுமோ வெனச் சீவகன் கூறினனென்க.

தரும, தருகும் இரண்டும்விகாரம். தருமிடத்து எமக்கே யுரித்தாகவென்று மாம். (௯)

க. மண்மிசைக்கிடந்தனமலையுங்கானமு
நணணுதற்கரியனநாடும்பொய்கையுங்
கண்மனங்குளிர்ப்பனவாறுங்காண்பதற்
கெண்ணமென்றுளதெனக்கிலங்குபூணினாய். (௧0)

உ. ஊற்றுநீர்க்கூவலுளுறையுமீனனார்
வேற்றுநாடடதன்சுவைவிடுத்தன்மேயினார்

* முத்தியிலம்பகம், விலங்குகதித்துன்பம், க.

போற்றுநீபோவல்யானென்றுகூறினும்
காற்றினதமைதியங்கறியக்கூறினான்.

இவையிரண்டுமொருதொடர்.

அரியனவாகிய குளிர்ப்பனவாகியவென்க.

இ - ள். பூணினாய்! நிலத்திடத்தே மலைமுலியனவெல்லாங் கிடந்தன; அவற்றைச் சென்றுகாண்டற்கு எனக்கு ஒரெண்ணமுண்டு; அவைகாணாதே கூவலில் உறையுமீன்போலே தாம்பிறந்த ஊரிலே திரிந்தேவிடுகின்றவர்கள் வேற்றுநாட்டு நுகர்ச்சியினுடைய இன்பத்தைக் கைவிடுதலைப்பொருந்தினாராதலின், யான் அவற்றைக்காண்டற்குப்போவேன். நீ இவ்விடத்தே பேணிக்கொண்டிருவென்று கூறினவனுக்கு வழியினதுசெய்தியை அவ்விடத்தே தெரியுமபடி கூறினானென்க.

அது - நுகர்ச்சி. சுவையதனையென்றுமாம். இவன் கூட வாராதபடி போற்றென்றான். (௧௧)

வேறு.

இம்மலைக்கிரண்டுகாதமிறந்தபினிருண்டுதோன்று
மம்மலையரணபாதமென்பதன்றுள்வாய்த்தோன்றுந்
தம்வினைகழுவுகின்றார்சாரணர்தரணிகாவல்
வெம்மையினகன்றுபோந்துவிழைவறத்துறந்துவிட்டார்.

இ - ள். இம்மலைக்கு இருகாதமிறந்தபின் இருண்டுதோன்றுமம்மலையை அரணபாதமென்றுபெயர்கூறுவர்; அதன்றுள்வாயிலே வந்திருந்து தோன்றுகின்ற இருவினையையுங் கழுவுகின்றாராகிய சாரணர் வீட்டைவிரும்புதலிற் றரணிகாவலைத் துறந்துபோந்து பின் பற்றறத் துறந்துவிட்டவர்களென்க

அரணபாதம் - * ஸ்ரீ கோயிலுள்ளமலை. (௧௨)

சிந்தையிற்பரிதியன்னார்சேவடியிறைஞ்சலோடும்
வெந்திறலியக்கிதோன்றிவிருந்தெதிர்கொண்டுபேணித்
தந்தவாமிர்தமூட்டவுண்டவட்பிரிந்தகாலைச்
சந்துடைச்சாரல்சேறிதரணிமேற்றிலகமன்னாய்.

இ - ள். தரணிக்குத்திலகமன்னாய்! மலங்களைக்கெடுக்கின்ற சிந்தையாலே இருளகற்றும் பரிதிபோல்வாரடியை இறைஞ்சினவளவிலே, இயக்கிதோன்றி எதிர்கொண்டு அமிர்தத்தைத்தந்து பேணி விருந்தூட்ட உண்டு, அவளைப் பிரிந்தகாலத்தே அவ்வரணபாதத்தின் சாரலிலே செல்வாயாகவென்க.

அமிர்தம் - நுகரப்படுவன. (௧௩)

வேறு.

அங்குநின்றகன்றபின்னையங்காவதம்
வெங்களிவிடுமதவேழப்பேரினந்
தங்கியகாடதுதனிச்செல்வாரிலை
கங்கையின்கரையதுகடலிற்றோன்றுமே.

* ஸ்ரீகோயில் - ஜிநாலயம்.

இ - ள். அங்குநின்றும்போனபின்பு இருபத்தைங்காதவழி வேழத்திரடங்கிய கடல்போற்றோன்றுங்காடு கங்கையின்கரையிடத்தது; அதனைத் தனியேபோவாரி ல்லையென்க.

இவ்வியானைகூறிற்று, அவனறஞ்செய்ததனுக்கி. *" பஞ்சவர்போலநின்றபகட் டினப்பரிவுதீர்த்தான்" என்ப. (௧௪)

புனலெரிதவழ்ந்தெனப்பூத்ததாமரை
வனமதுவானைவாளைபாய்வன
மனமகிழ்பெருந்தடம்வலத்திட்டேகுதி
யினமலர்த்தாரினுயிரண்டுகாதமே.

இ - ள். தாரினுய்! தாமரையையுடைய வாளைபாய்வனவாகிய தடங்களை வலத் திட்டு அவ்வியானைதிரியும்வனத்தே இருகாதமேகுவாயாகவென்க. (௧௫)

காந்தியமணியொடுவயிரம்பொன்கலந்
தேந்தனின்றோளனவிரண்டுகுன்றுபோய்ப்
பூந்துகின்மகளிரிற்பொலிந்துபோர்த்ததோர்
பேந்தருபேய்வனம்பெரியகாண்டியே.

ஏந்தல் - தொழிற்பெயர். பெரிய அச்சந்தரும்பேய்.

இ - ள். அங்ஙனம் இருகாதம்போய் மணிமுதலியவற்றைக் கலந்து ஏந்துதலை யுடைய நின்றோளென்னும்படி வளர்ந்த இரண்டுகுன்றைக்கடந்து, பேய்கள் மக ளிரைப் போலே பொலிவுபெற்று மனத்தை மறைத்ததொரு காட்டைக் காண் பையென்க. (௧௬)

இளவெயின்மணிவரையெறித்திட்டன்னதோ
ரளவருகுங்குமத்தகன்றமார்பினுய்
களவினினணிநலங்கவர்ந்தகள்வவென்
றுளர்மணிக்கொம்பனாருருகிநைபவே.

உளர்தல் - அசைதல்.

இ - ள். வெயில் வரையிலே யெறித்த தன்மையைப் போல்வதோர் மார்பினுய்! நின்னை அவர்கள்கண்டு கள்வனேயென்றுகூறி உருகி நைவார்களென்க. (௧௭)

பழங்குழைந்தனையதோர்மெலிவிற்பையென
முழங்கழல்வேட்கையின்முறுகியூர்தரத்
தழும்பதமிதுவெனச்சார்ந்துபுல்லலும்
பிழிந்துயிருண்டிடும்பேய்களாபவே.

இ - ள். வேட்கையினுலே, நெகிழ்ந்த பழங்குழைந்தனையதோர் மேனிமெலி வோடே மிக்கணுகுதலின், முயங்குங்காலையிதுவென்று புல்லினவளவிலே பேய்க ளாவர்; அவரைப் புல்லற்கவென்க. (௧௮)

* பதுமையாரிலம்பகம், ௭௨.

வேறு.

கண்டபேய்நகரினீங்கிக்காவதங்கடந்துதோன்றும்
வெண்டலைப்புணரிவீசிக்கிடந்தபொற்றீவிற்றாகிக்
கொண்டலைப்பரியசெந்நெல்கொடிக்கரும்புடுத்தவேலி
துண்டுகிணுழைந்தவல்குற்பவளமொத்தினியதொன்றே.

கடந்து - கடப்ப. தீவிற்றாகி - தீவின்றன்மைத்தாய்.

இ - ள். கண்ட பேய்நகரினின்றும்போய்க் காதங்கடந்தவளவிலே இனிய தொரு நாடு தோன்றுமென்க.

ஒழுங்கினையுடைய கரும்புசூழ்ந்த வேலியிடத்து அறுத்துத் தொலைத்தற்கரிய செந்நெல் அல்குலிற் றுகிலுக்குள்ளே நுழைந்துகிடந்த பவளமேகலையையுமொத்து, திரைசூழ்ந்துகிடந்ததொரு பொற்றீவினையுமொத்துத் தோன்றுமென்க. (௧௯)

படுமழைபருவம்பொய்யாப்பல்லவதேயமென்னுந்
தடமலர்க்குவளைப்பட்டடந்தழுவியயாணர்நன்னா
டிடைநெறியசைவுதீரவிருந்தபின்னாகலுற்றாற்
கடநெறிகடத்தற்கின்னாக்கல்லதரத்தமுண்டே.

இ - ள். பல்லவதேயமென்னு நாட்டிடைநகரியிலே வழிவருத்தந்தீர இருதிங்க ளிருந்து அவ்விடத்தினின்றும் போதலுற்ற காலத்துக் காட்டுவழி கடந்துபோதற் குப் பொல்லாததொரு கல்வழியுண்டு; அதன்றன்மையைக் கேளென்க.

இதனாற் பதுமையைக்கோடலுங் கூறினன். (௨0)

வேறு.

௧. துதிகொண்டனவெம்பரனுண்ணிலைவேம்
பதிகொண்டெரிந்தனபோன்றனவாம்
விதிகண்டவரல்லதுமீதுசெலார்
வதிகொண்டதோர்வெவ்வழல்வாயசொலின்வேம். (௨௧)

௨. குழவிப்பிடிகுஞ்சரமாழ்குமெனத்
தழுவிச்சுடுவெவ்வழலுற்றுங்குவன
கெழுவிப்பெடைபைக்கிளர்சேவமயீஇத்
தொழுதிச்சிறகிற்றுயராற்றுவன (௨௨)

௩. கலையின்பிணைகன்றிடுமென்றுகசிந்
திலையின்னிழலவ்வயினின்மையினா
னிலையின்னிழற்றானதுநின்றுகொடுத்
துலையும்வெயினின்றுருகும்மரவோய். (௨௩)

௪. கடநாகமதங்கலந்துக்கநிலத்
துடைநாணெனமின்னெனவொண்மணியம்
படநாகமழன்றுபதைத்துவரும்
மடனுமயலார்மனம்வைப்பதுவே.

இவைநான்குமொருதொடர்.

இ - ள். உரவோய்! அந்தவழியில் வேல்பதிதல்கொண்டு பரந்தனவற்றையொத்து நுதிகொண்டனவாகிய பரலுளவாயிருக்கும்; அது தன்னிடத்திற்கொண்டதொரு வெம்மையைச் சொல்லின் வாய்தான் வேம்; ஆயினுஞ் சிறிது கூறுவேன். குஞ்சரங் குழவியையுடைய பிடி மயங்குமென்றுகருதி அழலைத்தாங்குவனவும், சேவல் பெடையைப் பொருந்தித் தழுவித் தந்திரட்சியையுடைய சிறகாற் காத்துத் துயராற்றுவனவுமாய் வெயிலிலேநின்று உலையாநிற்கும். கலை பிணை நிழலின்மையின் உருகுமென்று கசிந்து அக்கலை தானின்று தன்னிலையிற்பிறந்தநிழலை அதற்குக்கொடுத்துத் தானுருகாநிற்கும்; படநாகம் ஈரமாகநினைத்து யானையின்மதம் வெம்மை மிகுதியாலே நீரல்லாதநீருடனே கலந்து கோசத்தாலேயுக்க நிலத்தில் வந்துவீழ்ந்து அதன்வெம்மைபொறாதே முறுக்குவிட்ட கயிறெனு மின்னெனப் பதைத்துப் போகாநிற்கும். இந்தவழியைப்போய் இறக்கக்கடவையென்று விதியாலே விதித்துவிடப்பட்டவர்களல்லது மேற்போகாராதலான், அவ்விடத்திற்குப் புதியரானவர் போகவென்று கருதுதல் அறியாமையாம். நீயும் அவ்வழியின்மனம்வையாதே கொள்ளென்க.

௧. வதி - வழி. விதியைப் புறங்கண்ட தபோதனா மேலேயெழப் பறந்து போவதல்லது வேறுபோகாரென்றுமாம்.

௩. இன்பிணை - இனியபிணை.

௪. மதங்கள்கலந்தநிலத்தென்றும் பாடம். (௨௪)

நெறியிற்றளர்வார்தமநெஞ்சுருகிப்
பொறியிற்றளர்வார்புரிவார்சடையா
ரறிமற்றவர்தாபதரவ்வழியார்
கறைமுற்றியகாமருவேலவனே.

இ - ள். வேலவனே! சிலதாபதர் சன்மார்க்கநெறியைத் தப்பியிருப்பாருமாய்த் தந்நெஞ்சுருகி இந்திரியங்களிற் றளர்வருமாய்ச் சடையாருமாய் அவ்விடத்தேயிருப்பார்; அவர்களைக்கண்டு அவர்தன்மையை யறிந்துபோவென்க. (௨௫)

௧. குலைவாழைபழுத்தகொழும்பழனு
நிலைமாத்தனதேமுறுதீங்கனியும்
பலவின்றனவள்ளுடைமுள்ளமிர்து
மலையாற்றயல்யாவுமடுத்துளவே. (௨௬)

௨. வளர்பம்பொனும்வாளொளிநீண்மணியு
மொளிர்கின்றனவோசனைநீணிலமுங்

தளர்வொன்றிலர்தாபதர்தாம்விழையுங்
குளிர்கொண்டதொர்சித்திரகூடமதே.

இவையிரண்டுமொருதொடர்.

க. குலைவாழை - பெயர். அள்ளுடை - செறிதலையுடைய. யாவும் - மரம் ஏனையவும்.

உ. வாளொளி - பெரியவொளி. நிலமும், உம்மை முற்றும்மை.

இ - ள். மலைக்கும் யாற்றிற்கும் அயலே வாழைபழுத்தபழமும், மாவிடத்தன வாகிய நிலைமையானகனிகளும், பலவீன்றனவாகிய தேமுறுபழமும், ஏனையவும் நெருங்கியுளவாதலாற் றாபதர்தாம் உணவிற்றளர்வொன்றிலராய் விழையும் ஒளிர் கின்றனவாகிய பொன்னுமணியுநீண்ட ஒரோசனையெல்லையாகிய நிலமுங் குளிர்ச்சி கொள்ளப்பட்டது; அம்மலைதான் சித்திரகூடமென்னும் பெயரையுடைத்தென்க.

தாம்விளையுமென்பதூஉம் பாடம். (உ௭)

முழவின்னிசைமூரிமுழங்கருவி
கழையின்றுணிசந்தொடுகல்லலைவீர்த
திழியும்வயிரத்தொடினம்மணிகொண்
டழியும்புனலஞ்சனமாநதியே.

இ - ள். கழையின்றுணியைச் சந்தோடேயீர்த்து வயிரத்தோடே மணியை யுங்கொண்டு அச்சித்திரகூடத்தினின்றும் இழியுமருவியம்புனல் மிகப்பெருகும்யாறு அஞ்சனமாநதியென்னும் பெயரையுடைத்தென்க.

அழியும் - பெருகும். (உ௮)

இதுபள்ளியிடம்பனிமால்வரைதா
னதுதெள்ளறல்யாறுவைதேமரமாக்
கதிதள்ளியிராதுகடைப்பிடிநீ
மதிதள்ளியிடும்வழைசூழ்பொழிலே.

அவ்விடத்தேயிருந்து இதுபள்ளியென்று ஓரிடத்தைக்காட்டிக்கூறி அதுமுத லாக முன்கூறியவற்றைக் கூறிட்டுச் சுட்டிக்காட்டினான். உவையென்றது ஒழி ந்தவிரண்டுபக்கத்தையும்.

இ - ள். இஃது அந்தப்பள்ளி; இதற்கிடப்பக்கம் அந்தமலைதான்; வலப்பக்கம் அந்தயாறு; முன்னும்பின்னுந் தேமாமரமும் வழைசூழ்பொழிலும். இவ்விடம்இன்ப த்தாலறிவைக்கெடுக்கும்; நீ போக்கைத்தவிர்ந்திராதே காரியத்தைக் கண்டப் பிடித் துப் போவென்றானென்க. (உ௯)

வேறு.

வருந்துநீரமையம்மாதவர்பள்ளியுட்
குருந்தமேறியகூரரும்பார்முல்லை
பொருந்துகேள்வரைப்புல்லியபொன்னனார்
மருங்குபோன்றணிமரக்கவின்கொண்டதே.

அணிமருங்கு - ஒப்பித்தவடிவு. மாக்கவின் - மிக்கவழகு.

இ - ள். பயனின்றித் தவத்தான் வருந்துந்தன்மையை யுடைய அத்தாபதர் பள்ளியிற் குருந்தத்தையேறிய அரும்பார்ந்தமுல்லை தம்மனம்பொருந்திய கணவ னைத்தழுவிய மகளிர்வடிவுபோலே மிக்கவழகினைக்கொண்டதென்க.

இது நின்னைக் கடைப்பிடித்துப் போகவிடுமென்பது கருத்து. (௩௦)

குரவநீடியகொன்றையங்கானல்வாய்
வரகுவாளிற்றெருலைச்சுநர்பாடலி
னரவவண்டொடுதேனினம்யாழ்செயும்
பரவைமாநிலம்பன்னிருகாதமே.

இ - ள். அம்மலையை விட்டிழிந்தாற் கொன்றைக்காட்டிடத்திற் பரப்பை யுடைய விளைநிலம் பன்னிருகாதவழியாயிருக்குமென்க.

வரகை அரிவாளாலறுப்பார் பாடுதலின், அம்மிடற்றுப்பாடலுக்கேற்ப வண்டுந் தேனும் யாழைக் காட்டுநிலமென்க. (௩௧)

ஆங்கவெல்லையிகந்தடுதேறலும்
பூங்கட்பொற்குடமுந்நிறைத்தீண்டிய
* வோங்குகம்பலத்தின்னிசைசூழ்வயற்
றூங்குசீர்த்தக்கநாட்டணிகாண்டியே.

இ - ள். அந்தக் கடத்தினெல்லையைக் கடந்துபோய்ப் பின்பு தக்கநாட்டினழ கைக் காண்பாயென்க.

அடுநறவும் பூவாலாக்கினமதுவும் பொற்குடங்களிலே நிறைத்தலாலே அதனை யுண்டு பாடுகின்ற இன்னிசையீண்டிய கம்பலத்தைச்சூழ்ந்த வயலினையுஞ் சீரினையு முடையநாடென்க. "ஓங்கியமிடறு" என்றார். கம்பலை - உரிச்சொல்; ஈறுதிரி ந்தது. (௩௨)

வேறு.

பாளைவாய்க்கமுகினெற்றிப்படுபழமுதிரவிண்டு
நீள்கழைக்கரும்பினெற்றிநெய்முதிர்தொடையல்கீறி
வாளைவாயுறைப்பநக்கிவராலொடுமறலுமென்ப
காளைநீகடந்துசெல்லுங்காமருகவின்கொளூடே.

இ - ள். காளாய்! நீ காட்டைக்கடந்துசெல்லுமந்நாடு கமுகினெற்றியிலுண் டாகிய பழம் விண்டு உதிர்தலின், இறால்கிழிந்து அதிற்றேன் தம்வாயிலே துளிப்ப அதனை வாளை வராலோடேகூடநக்கித் தம்மின் மாறுபடாநிற்குமென்க.

நெய் - தேன். என்ப - அசை. (௩௩)

வேறு.

அங்கதன்மனதிடங்கடந்துபோம்வழிப்
பொங்குபூஞ்சண்பகப்போதுபோர்த்துரா

* ஏங்குகம்பலத்தென்றும் பாடபேதமுண்டு.

யங்கநாட்டரிவையர்கூந்தனாறித்தே
னெங்குமொய்த்திழிவதோர்யாறுதோன்றுமே.

இ - ள். அவ்விடத்தில் அந்நாட்டினுடைய இடத்தைக் கடந்துபோங்காலத்து ஓர்யாறு அங்குத் தோன்றுமென்க.

போதுபோர்த்துப் பரந்து அந்நாட்டின்மகளிர் கூந்தல்போலேநாறித் தேன்மொய்க்கப்பட்டிழிவதோர் யாறென்க. கடந்தெனவே கேமசரியைக் கொள்கின்றதுங் கூறினாம். (௩௪)

க. மின்னுடைமணிபலவரன்றிமேதகு
தன்னுடைநலம்பகிர்ந்துலகமூட்டலிற்
பொன்னுடைக்கலையல்குற்கணிகைப்பூம்புனன்
மன்னுடைவேலினாய்வல்லைநீந்தினால். (௩௫)

உ. யானைவெண்மருப்பினைவியற்றியாவது
மானமாக்கவரிவெண்மயிரின்வேய்ந்தன
தேனெய்யூன்கிழங்குகாய்பழங்கள்செற்றிய
கானவர்குரம்பைசூழ்காடுதோன்றுமே.

இவை யிரண்டுமொருதொடர்.

இ - ள். அரசர்கெடுதற்குக் காரணமாகியவேலினாய்! மணிகளையரித்துத தன்னுடையநலத்தைக்கூறுபடுத்தி யுலகத்தையூட்டலிற்கணிகையாகிய புனலை விரையநீந்தினால், யானைக்கொம்பாலே கால் வளைமுதலியவெல்லாமியற்றி மானமாவாகிய கவரியின்மயிராலே வேய்ந்தனவாகிய குரம்பைகள்சூழ்ந்த காடு தோன்றுமென்க.

யாவதும் - எல்லாம். தேன்முதலியன செற்றியகுரம்பை. (௩௬)

கடுந்துடிக்குரலொடுகளையுங்கட்குரா
னெடுங்கைமான்குரன்மணியருவிவீழ்குரா
லடும்புலிக்குரலொடுமயங்கியஞ்சிய
விடும்பைமான்குரல்விளியெங்குமிக்கவே.

இ - ள். அக்காடெங்கும் மிக்கவாகிய ஓசை. துடிக்குரலும், கள் அரிக்குங் குரலும், யானையின்குரலும், அருவிவீழ்குரலும், புலிக்குரலாலஞ்சி மயங்கிய மான்குரலும், சீழ்க்கையுமென்க. (௩௭)

பொன்னணித்திகிரியஞ்செல்வன்பொற்புடைக்
கன்னியமகளிரிற்காண்டற்கரியன
நன்மணிப்பூரித்தனவாவிநான்குள
கன்னவிறோளினாய்காட்டிடையவ்வே.

அ - அசை.

இ - ள். தோளினாய்! சக்கரவர்த்தியுடைய கன்னியராகிய மகளிரைப்போலே காண்டற்கரியனவாகிய வாவிகள் நான்குள; அவற்றின்வேறுபாடு கேளென்க.

பூரித்தன - விகாரம். காட்டிடத்தனவாகிய வாவி. (௩௮)

அருங்கலச்சேயிதழார்ந்தவாவியொன்
றிரும்பெரிபொன்செயுமிரதநீரதொன்
றெருங்குநோய்தீர்ப்பதொன்றமிர்தமல்லதொன்
றரும்பவிழ்குவளைநீர்வாவியாகுமே.

இ - ள். அந்த வாவிகளிற் பொற்றாமரைநிறைந்ததொன்று; இரதமாகிய நீரதொன்று; எல்லாநோயையுந்தீர்ப்பதொன்று; அமிர்தமொன்று. ஆதலிற் குவளை நீர்வாவியல்லது நமக்கு நுகர்தற்காகாதென்க.

ஏகாரம் - எதிர்மறை. இனி நோய்தீர்ப்பதாகிய அமிர்தமொன்று, அல்லதொன்று என்றது நஞ்சினை; நீர்வாவி யமிர்தமல்லாததொன்றென்றது நச்சுப்பொய்கை யென்றவாறு. (௩௯)

கையடுசிலையினர்காட்டுள்வாழ்பவர்
பையுடையாக்கையர்பாவமூர்த்திய
ரையெனத்தோன்றுவர்தோன்றியாளழித்
துய்வதையரிதெனவுடலங்கொள்பவே.

இ - ள். அவற்றைக்காத்துக் காட்டுள்வாழ்வார், சிலையினராய்த் தோற்பை யணிந்தயாக்கையராய் விரையத்தோன்றுவர்; அங்ஙனந்தோன்றி அவற்றைக்கோடற் குச்சென்ற பாவமூர்த்தியைப் பிழைத்தலரிதெனக்கூறி ஆளழித்து உடலைக்கொள் வரென்க.

பையுள் - விகாரம். (௪0)

அண்ணன்மேலரிவையர்கண்ணின்மொய்த்தவண்
மண்ணின்மேன்மாந்தர்கண்மொய்க்கும்வாவியை
யெண்ணமொன்றின்றியேயிடத்திட்டேகினற்
றுன்னெனச்சிலையவர்தொழுதுகாண்பவே.

இ - ள். நின்னிடத்து மகளிர் கண் மொய்க்குமாறுபோல மாந்தர்கள் அவ்வி டத்தை மொய்க்கும்வாவியை இடத்திட்டு அவற்றைக்கொள்ளவேண்டுமென்னு நினைவு சிறிதுமின்றியேபோனால் அச்சிலையவர் இவன் நல்வினையுடையனென்று நூணுக் கென மொய்த்துத் தொழுது காண்பரென்க.

இதனால் அவற்றிற்கிடமேபோவென்றான். (௪௧)

பாடல்வண்டியாழ்செயும்பசும்பொற்கிண்கிணித்
தோடலர்கோதையின்றுளும்புமேகலை
யாடியகூத்திதனைசைந்தசாயல்போன்
றூடுபோக்கினியதங்கோரைங்காதமே.

இ - ள். அவ்விடத்து வண்டு யாழ்செய்யும் ஓரைங்காதமுங் கிண்கிணிமுதலி யவற்றையுடைய கூத்திசாயல்போலே ஊடுபோக்கினியதொன்றாய் அகப்பட்டார் நீங் குதலரிதாயிருக்குமென்க. (௪௨)

கோதைவீழ்ந்ததுவெனமுல்லைகத்திகைப்
போதுவேய்ந்தினம்லர்பொழிந்துகற்புடை
மாதரார்மனமெனக்கிடந்தசெந்நெறி
தாதின்மேன்டந்ததோர்தன்மைத்தென்பவே.

இ - ள். அவ்விடத்தே மாலைவீழ்ந்ததென்னும்படி முல்லையோடே கத்திகைப் போது மறைக்கப்பட்டு ஒழிந்த இனமலர்கள் தேனைப்பொழியப்பட்டுக் கற்புடை மகளிர் மனமெனக்கிடந்த செவ்வியநெறி நிலத்தினன்றித் தாதின்மேலே நடந்த தொரு தன்மைத்தென்க. (௬௩)

மணியியற்பாலிகையனையமாச்சுனை
யணிமணிநீண்மலரணிந்ததாயிடை
யிணைமலர்ப்படலிகைபோலுமீர்ம்பொழில்
கிணையுமிழ்சிலையினாய்கண்டுசேறியே.

இ - ள். சிலையினாய்! பாலிகையொத்தசுனை மலராலணியப்பட்டது; அதனையும், பூந்தட்டுப்போலும்பொழிலையும், கண்ணாலேகண்டு அவ்வழியைச் செல்வாயாக வென்க.

இடை - வழி. ஒன்றையு நுகராதேகொள்ளென்றான். (௬௪)

இலைப்பொலிபூண்முலையெரிபொன்மேகலைக்
குலத்தலைமகளிர்தங்கற்பிற்றிண்ணிய
வலைத்துவீழருவிகளார்க்குஞ்சோலைசூழ்
வலத்ததுவனகிரிமதியிற்றோன்றுமே.

அருவிகளார்க்கும் வனகிரி.

இ - ள். முலையினையும் மேகலையினையுமுடைய மகளிர்கற்புப்போற் றிண்ணிய வனகிரி நினக்கு வலத்தது; அருவியாலுங் குளிர்ச்சியாலு மதிபோற்றோன்று மென்க. (௬௫)

கரியவன்றிருமுடிகவிழ்த்தசேவடிப்
பெரியவன்றிருமொழிபிறழ்தலின்றியே
மரியவருறைதலின்மதனகீதமே
திரிதரப்பிறந்ததோர்சிலம்பிற்றென்பவே.

இ - ள். அஃது இந்திரன் றலையைச்சாய்த்த சேவடியினையுடைய பெரியவ னருளிச்செய்த ஆகமத்தைத் தப்புதலின்றி அதிலே மருவின இருடிகளுறைதலிற் காமனது கீதமொன்றுமே அவ்விடத்தினீங்க இயல்பானுள்ள ஓசைகளெல்லாம் பிறந்ததொரு பக்கமலையை யுடையதென்க. (௬௬)

ஏற்றருமணிவளையிறந்துபோனபின்
மாற்றருமணநெறிமகளிர்நெஞ்சமே
போற்பலகவர்களும்பட்டதாயிடை
யாற்றல்சால்செந்நெறியறியக்கூறுவாம்.

மாற்றருநெஞ்சம்-வசப்படுத்தவொண்ணுதநெஞ்சம். கவர்ப்பு-பலவாதல்; விகாரம்.

இ - ள். ஏறுமிடமரிய இவ்வரையைக் கடந்துபோயபின்பு புணர்ச்சிநெறியை யுடைய பரத்தையரது நெஞ்சம்போல வழி பலகவர்ப்புக்களுமுண்டாயிற்றாதலின், அவ்வழியிடத்துச் செல்லுதலமைந்த செந்நெறியை யறியக்கூறுவேம்; அதுகே ளென்க. (சஎ)

சுரும்புசூழ்குவளையோர்சுனையுண்டச்சுனை
மருங்கிலோர்மணிச்சிலாவட்டமுண்டவண்
விரும்பிவள்ளிழிமிர்வதோர்வேங்கைவேங்கையின்
மருங்கிலோர்செந்நெறிவகுக்கப்பட்டதே.

இ - ள். ஒருசுனையுண்டு; அச்சுனைமருங்கிலே ஒருசிலாவட்டமுண்டு; அதன் அருகே ஒருவேங்கையுண்டு, அவ்வேங்கையின்பக்கத்தே ஒரு செவ்வியவழியுண்டு, அது யான்கூறப்பட்ட வழியென்க. (சஅ)

வேறு.

கைம்மலர்த்தனையகாந்தட்கடிமலர்நாறுகான
மொய்ம்மலர்க்குவளைக்கண்ணிமொய்ம்பநீமுழுதுநீந்தி
மைம்மலர்த்திலங்குவெள்வேன்மத்திமதேயமாளுங்
கொய்ம்மலர்த்தாரினானைக்கண்ணுறுகுணமதென்றான்.

இ - ள். மொய்ம்பனே! இவ்வுடையாளங்களைக் குறிக்கொண்டு கானத்தை முழுதுங்கடந்துபோய்க் கூர்மைமிக்குவிளங்குமவேலையுடைய மத்திமதேயத்தையா ளுமரசனை எதிர்ப்படுதி; அது நினக்கு ஊதியமான் இயல்பாகவுள்ளதொன்றென்று வழிசொன்னானென்க.

குணம் - பண்பு (சக)

மண்ணகங்காவன்மன்னன்மாதரம்பாவைமாசி
லொண்ணுதன்மகளைத்தந்தீங்குறைகெனவொழுகுநாளுள்
வெண்மதியிழந்தமீன்போற்புல்லெனவெய்திநின்ற
வண்ணணின்றோழரெல்லாமவ்வழியடைவரென்றான்.

இ - ள். மணகாவலனாகியவேந்தன் பாவையாகியதன்மகளை நினக்குத் தந்து இவ்விடத்தேயுறைகவென்றுகூற, நீயும் அங்ஙனநடக்குநாளிலே வருந்திநின்ற நந் தட்டனும் நின்றோழரும எல்லாம அவ்விடத்தேவந்து நின்னைச் சேர்வரென்றா னென்க. (ருo)

வேறு.

நெட்டிடைநெறிகளுநிகரில்கானமு
முட்டிடைமுடுக்கருமொய்கொள்குன்றமு
நட்புடையிடங்களுநாடும்பொய்கையு
முட்படவுரைத்தனனுறுதிநோக்கினான்.

இ - ள். தூரிய இடத்தையுடையவழிகளும், கானமும், போக்கில்லாத அரு

வழிகளும், குன்றமும், உறவுகொள்ளுமிடங்களும், நாடும், பொய்கைகளும் முன்னே தோன்றக்கூறினனாய்ப் பின்பு அவனுக்குமந்திரங்களைக்கூற நினைந்தானென்க.()

செல்கதிமந்திரஞ்செவியிற்செப்பிய
மல்லலங்குமரனைவாழ்நாட்டவே
வல்லவன்மந்திரமூன்றுங்கொள்கெனச்
சொல்லினனவற்றதுதொழிலுந்தோன்றவே.

இ-ள். நற்கதியிற்சேரு மந்திரத்தைத் தனக்குச்செப்பியகுமரனை வாழ்நாட்டவே வல்லவன் அவன் கருத்தன்மையின், அதனைத்தவிர்ந்து இம்மந்திரமூன்றையுங் குறிக்கொளென்று அவற்றினுடைய தந்திரமுந் தோன்றக்கூறினனென்க. ()

கடுந்தொடைக்கவர்கணைக்காமன்காமுறப்
படுங்குரறருமிதுபாம்புமல்லவுங்
கடுந்திறனோய்களுங்கெடுக்கும்வேண்டிய
வுடம்பிதுதருமெனவுரைக்கூறினான்.

இ-ள். இது காமன்விரும்பப்படுஞ் சரீரத்தைத்தரும்; இது பாம்பின்விடத்தையும், ஒழிந்தமண்டலிமுதலியவற்றின் விடங்களையும், கடுந்திறல்களையும், நோய்களையுங்கெடுக்கும், இது வேண்டிய உடம்பைத்தருமென்று அவற்றின் வேறுபாடறியக் கூறினனென்க.

காற்று நெருப்பு நீர் முதலியவற்றைக் கடுந்திறலென்றான். (௩௩)

வேறு.

கந்தருகளிறுகொல்லுங்கருவரையுழுவையன்னான்
மந்திரமூன்றுமோதிவானவிற்புரையும்பைந்தா
ரிந்திரன்றன்னைநோக்கியியக்கியர்குழாத்தைநோக்கிச்
சிந்தையிற்செல்வலென்றான்றேவனுஞ்செலவுநேர்ந்தான்.

இ-ள். புலியன்னான் மந்திரமூன்றையும்படித்துச் சுதஞ்சணனையும்பார்த்து அவன்றேவியர்திரளையும்பார்த்து மனம்போலே வருந்தாமற்கடிது செல்வேனென்றான்; தேவனும் அவன்போக்கை உடன்பட்டானென்க.

இதனாற் றாரகமனமுங் கலைகளிற்றென்றுதலின், அது வல்லனென்பதும் பெற்றாம். செல்வமிகுகியான் இந்திரனென்றார். (௩௪)

மனைப்பெருங்கிழத்திமாசின்மலைமகடன்னையான்சென்
றெனைத்தொருமதியினுங்கொலெய்துவதென்றுநெஞ்சி
னினைத்தலுந்தோழனக்குநிழலுமிழ்ந்திலங்குசெம்பொற்
பனைத்திரண்டனையதோளாய்பன்னிருமதியினென்றான்.

வெள்ளிமலையிற் றோன்றிவந்த மனைப்பெருங்கிழத்திதன்னை, மாசிலாத மகடன்னை.

இ-ள். தந்தையையுங் குணமாலையையும் எவ்வளவிற்றொருதிங்களிலே

யான்சென்றுகூடுந் தன்மையுண்டாமென்று நினைத்தவளவிலே, அதனையறிந்து தோழன் நக்கு, தோளாய்! நீ யெய்துவது பன்னிரண்டாமதியிலேயென்று கூறினானென்க.

கொல் - அசை. இன் ஏழனுருபாதல் புறனடையாற்கொள்க. சீவகன் பன்னிருமதிக்குள்ளே இராசமாபுரத்தேசென்று குணமாலையையெய்தினானேனும் மனக்கவற்சியின்றி நிலைபெறவிருந்தெய்தாமையின், அதனைத்தேவன்கூறானாயினான். இனித்தத்தையையேநினைந்தானென்னிற் குணமாலையை வரைந்ததற்குநிகழ்ந்த ஊடறீர்த்துப் புணராமையின், அவளையேநினைந்தானென்க. (௫௫)

ஆறிருமதியினெய்தியரட்டனையடர்த்துமற்றன்
வீறுயர்முடியுஞ்சூடிவிழுநிலக்கிழமைபூண்டு
சாறயர்ந்திறைவற்பேணிச்சார்பறுத்துயர்தியென்று
கூறினன்கதிர்கள்பொங்குங்குளிர்மணிமுடியினானே.

அரட்டன் - குறும்பன்.

இ - ள். முடியினான் பின்னும் பன்னிரண்டாந்திங்களிலே இராசமாபுரத்தைச் சேர்ந்து கட்டியங்காரனையுங்கொன்று உனக்குத் தோன்றுபட்டுவந்த முடியையுஞ் சூடி நிலத்திற்குமுரிமைபூண்டு விழாக்கொண்டாடி இறைவனைவழிபட்டுப் பிறப்பறுத்து வீடுபெறுவையென்று கூறினானென்க.

இது தேவியர்முன்னாதலின், வெளியானகாரியங்கள்கூறினான். (௫௬)

சொற்றிறற்சூழ்ச்சிமிக்கசுதஞ்சணன்சுருங்கநாடி
விற்றிறற்குரிசிற்கெல்லாம்வேறுவேறுரைப்பக்கேட்டே
சுற்றியதோழிமாரைவிடுத்தனன்றொழுதுநின்றான்
கற்பகமரமுஞ்செம்பொன்மாரியுங்கடிந்தகையான்.

இ - ள். சொல்வலியையுடைய சுதஞ்சணன் மறைபொருளல்லாதவற்றை வேறாகநாடி அங்ஙனஞ்சுருங்கக்கூறிப் பின்பு குரிசிலுக்கு மறைபொருளாகிய சூழ்ச்சிமிக்கனவெல்லாம் வேறாகக்கொண்டிருந்து கூறக்கேட்டு அவன் பின்பு சுதஞ்சணனைத் தொழுது சூழ்ந்துநின்ற தோழிமாரைவிடுத்து நின்றானென்க.

ஆசாரியனாதலிற் றொழுதானென்க. இனிப் போக்கொருப்படுதலின், வழிபடுதெய்வத்தைத் தொழுதானென்றலுமாம். (௫௭)

வேறு.

சேட்டிளஞ்செழுங்கயல்காப்பச்செய்துவிற்
பூட்டிமேல்வைத்தனபுருவப்பூமக
ளொட்டிருந்திருநுதற்றிலகமேயென
மோட்டிருங்கதிர்திரைமுளைத்ததென்பவே.

இ - ள். அங்ஙனநின்றானைக் கயல்களைக்காக்கப்பண்ணி வில்லைப் பூட்டி மேல் வைத்தாற்போலும் புருவத்தினையுங் கண்ணினையுமுடைய நிலமகள் நுதலிலிட்ட திலகமென்னும்படி ஞாயிறு கடலிலேமுளைத்ததென்க. (௫௮)

இ - ள். பெரியோர்தங்கேட்டிடத்து அறிவில்லாத கீழ்மக்கள் நகுமாறுபோலே முல்லை வேங்கைக்கண்ணே நின்று நக்கு அப்பொழுதே எயிற்றின்றன்மை கெட்டன; அதுகண்டு நன்மக்களைப்போலே காந்தள், அந்தோ! இது தகாதென்று கைகவித்துவிலக்கின; அவ்வளவிலே சுற்றத்தாரைப்போலே மாவுமயில்களுந் தோன்றி நடுங்கினவென்க. (௬௨)

கொல்லையகடணைந்துகுறும்புசேர்ந்துதமியாரை
முல்லைமுறுவலித்துநகுதிர்போலுமினிநும்மைப்
பல்லையுகுத்திடுவமென்றுபைம்போதலர்சிந்தித்
தொல்லைநிறங்கருகித்தும்பிபாய்ந்துதுகைத்தனவே.

இ - ள். தும்பி, முல்லைகாள்! நீங்கள் கொல்லையினடுவையணைந்து வேங்கையாகிய அரசனைச்சேர்ந்து தமியாரை நும்முள்ளே சிறிதேநகைத்துப் பின்பு பிறரறியச் சிரியாநின்றீரபோலேயிருந்தீர். இங்ஙனநகுநும்மைப் பல்லையுகுத்திடுவேமென்று போதினுமலரினுமுள்ள தேனைச்சிந்தித் தாங்கருகித் துகைத்தனவென்க.

போது - அலர்கின்றமுகை. இயல்பாகக் கருகினவேனும் இவ்வருத்தத்திற்குக் கருகியென்முர். தும்பியார்ந்தென்றும் பாடம். (௬௩)

தோடேந்துபூங்கோதைவேண்டேங்கூந்தறீண்டேலெம்மிற்
பீடேந்தரிவையரிற்பெயாகென்றூடுமடவார்போற்
கோடேந்துகுஞ்சரங்கடெருட்டநகூடாபிடிநிற்குங்
காடேந்துபூஞ்சாரல்கடந்தான்காலிற்கழலானே.

இ - ள். நீதருகின்ற கோதையை யாங்கள்வேண்டேம், ஆதலிற் கூந்தலைத் தீண்டாதேகொள்; வழிமாறினாய்; இஃதெம்முடையவில்லம்; நீசெல்லும் பரத்தையரில்லேறப்போவாயாகவென்று ஊடுமடவாரைப்போலே களிறுகளூடறீக்க, ஊடறீராதே பிடிகள் நிற்குஞ்சாரலைக் காலாலே கழலான் போனானென்க.

இதற்குமுன் காலால் வழிநடவாமையிற் றேவர்கூறுரா (௬௪)

வேறு.

சாமகமூட்டப்பட்டகாரிருட்டுணியுமொப்பா
னூழையுடும்புபற்றிப்பறித்துமார்பொடுங்கியுள்ளான்
வாழ்மயிர்க்கரடியொப்பான்வாய் நகிலையறிதலில்லான்
மேழகக்குரலினானோர்வேட்டுவன்றலைப்பட்டானே.

இ - ள். ஓர்வேட்டுவன் கருமையூட்டப்பட்டதோர் இருட்டுணியையுமொப்பான்; பறித்தலான் மார்பு உள்ளேயொடுங்கியுள்ளான்; கரடியொப்பான், வெற்றிலையென்றுங்கண்டறியாதவன், மேழகம்போலுங்குரலினனாய் எதிர்ப்பட்டானென்க.

வாண்மயிரும், ஏழகமுமொருவகைப்பாடம். (௬௫)

கொடிமுதிர்கிழங்குதீந்தேன்கொழுந்தடிநறவோடேந்திப்
பிடிமுதிர்முலையினுடல்றழைத்துகிற்பெண்ணணிநேனுடுங்

தொடுமணைத்தோலன்வில்லன்மரவுரியுடையன்றோன்ற
வடிநுனைவேலினான்கண்டெம்மலையுறைவதென்றான்.

இ - ள். அவன், கொடிமுதிர்ந்த கிழங்குமுதலியவற்றைக் கள்ளுடனேயேந்தி, முதிர்ந்தமுலையினளாகிய பிடிபோலுந்தன்பெண்ணுடனே, செருப்பினனாய் வில்லினனாய் உடையினனாய் அணுகத் தோன்றினனாக, வேலினான்கண்டு இருப்பது எம்மலையினென்றுகேட்டானென்க. (௬௬)

மாலைவெள்ளருவிசூடிமற்றிதாதோன்றுகின்ற
சோலைசூழ்வரையினெற்றிச்சூழ்கிளிசுமக்கலாற்றா
மாலையந்தினைகள்காய்க்கும்வண்புனமதற்குத்தென்மேன்
மூலையங்குவட்டுள்வாழுங்குறவருட்டலைவனென்றான்.

மற்று - அசை. இதா - திசைச்சொல்.

இ - ள். அருவிசூடி *இதாதோன்றுகின்ற மலைத்தலையிலே ஒழுங்குபட்ட தினைகள் கிளியெடுக்கவொண்ணாதவாகக் காய்ப்பதொருபுனம்; அதற்குத் தென்மேலை மூலையிற் குவட்டில வாழ்வாரில்வைத்து யான்தலைவனென்றானென்க. (௬௭)

ஊழினீருண்பதென்னென்றானைத்தலுமுவந்துநோக்கி
மோழலம்பன்றியோடுமுளவுமாக்காதியட்ட
போழ்தினைப்புழுக்கதேனெய்பொழிந்துகப்பெய்துமாந்தித்
தோழயாம்பெரிதுமுண்டுந்தோண்டிக்கள்ளிதனையென்றான்.

இ - ள். முறையால் நீர் உண்பதென்னென்றுகேட்டபின், உவந்துபார்த்துத் தோழ! ஆண்பன்றியோடே எய்ப்பன்றியையுங் கொன்றுசமைத்த புழுக்கலைத் தேனை மிகவார்த்துத்தின்று பின்பு நெல்லாலாக்கின கள்ளாகியவிதனையும் உண்பேமென்றானென்க. (௬௮)

ஊனொடுதேனுங்கள்ளுமுண்டுயிர்கொன்றபாவத்
தீனராய்ப்பிறந்ததிங்கணினியிவையொழியினென்னக்
கானில்வாழ்குறவன்சொல்லுங்கள்ளொடூன்றேன்கைவிட்டா
லேனையெம்முடம்புவாட்டலெவன்பிழைத்துங்கொலென்றான்.

இ - ள். முற்பவத்தில் ஊன்முதலியவற்றையுண்டு உயிரையுங்கொன்ற பாவத்தாலே இவ்விடத்து எயினராய்ப்பிறந்தது; இனியிவற்றைக் கைவிடுமினென்றுகூற, கானக்குறவன் பலருநன்றென்றுகூறுங் கள்முதலியவற்றைக் கைவிட்டால் யாங்கள் எங்ஙனம்பிழைப்பேம்; எம்முடம்பை நீவாட்டவேண்டா, ஒழிந்தவுடம்புகளை வாட்டுவாயாகவென்று சொன்னானென்க. (௬௯)

ஊன்சுவைத்துடம்புவீக்கிநரகத்திலுறைதனன்றோ
வூன்றினாதுடம்புவாட்டித்தேவராயுறைதனன்றோ
வூன்றியிவ்விரண்டனுள்ளுமுறுதிநீயுரைத்திடென்ன
வூன்றினாதொழிந்துபுத்தேளாவதேயுறுதியென்றான்.

இ - ள். ஊனைச்சுவைத்து வீக்கி நரகத்திலுறைதல் நன்றோ? ஊனைத்தின்னா

* இந்தாவென்று சிலபிரதிகளிலுள்ளது.

தே வாட்டித் தேவராயுறைதல்நன்றே? கடைப்பிடித்து இவ்விரண்டனுள்ளும் நல்லது நீகூறென்ன, ஊனைத்தவிர்ந்து தேவனாதலே யுறுதியென்றானென்க. (௭0)

உறுதிநீயுணர்ந்துசொன்னாயுயர்கதிச்சேறியேடா
குறுகினாயின்பவெள்ளங்கிழங்குணக்காட்டுளின்றே
யிறைவனூற்காட்சிகொல்லாவொழுக்கொடூன்றுறத்தல்கண்டா
யிறுதிக்கணின்பந்தூங்குமிருங்கனியிவைகொளென்றான்.

இ-ள். நீஉறுதியுணர்ந்துகூறினாயாதலின், ஏடா! இனி உயர்கதியிலேபோவை; இறைவனூலிற் காணப்படுவன கொல்லாவிரதத்தோடே ஊன்றுறத்தலுங்காண்; ஆதலிற் காட்டிற்கிழங்கையுண்ணவே இன்றே இன்பவெள்ளத்தைச் சேர்ந்தாய்; இவ்வொழுக்கம் நினக்கு இறுதிக்கட்பேரின்பஞ்செறியுங் கனியாயிருக்கும்; குறிக்கொளென்றானென்க. (௭௧)

என்றலுந்தேனுமூனும்பிழியலுமிறுகநீக்கிச்
சென்றடிதொழுதுசெல்கென்றேம்பெய்நீள்குன்றமென்று
குன்றுறைகுறவன்போகக்கூரெரிவளைக்கப்பட்ட
பஞ்சவர்போலநின்றபகட்டினப்பரிவுதீர்த்தான்.

இ-ள். என்றுகூறினவளவிலே, வேடன் தேன்முதலியவற்றைக்கைவிட்டுக் குறுகச்சென்றுவணங்கி, என்குன்றமேசெல்வேனென்றுகூறி அவன்போனதை; அரக்குமாளிகையிலே நெருப்பாலேசூழப்பட்ட தருமன்முதலாயினாரைப்போலே காட்டுத்தீயால் வளைக்கப்பட்டுநின்ற யானைத்திரளின்வருத்தத்தை மழையைப்பெய்வித்து நீக்கினானென்க.

தேவன்மலைக்கும், அரணபாதத்திற்குநடுவே, இவ்விரண்டறமுஞ்செய்தான். ()

வேறு.

இலங்கொளிமரகதமிடறியின்மணி
கலந்துபொன்னசும்புகான்றொழுகிமானினஞ்
சிலம்புபாய்வருடையோடுகளுஞ்சென்னிநீள்
விலங்கல்சென்றெய்தினான்விலங்கன்மார்பினான்.

இ-ள். மணிகலந்து அசும்புகானுதலாற் சிலம்பிலே பரந்தொழுகப்பட்டு, மானினம் மரகதத்தையிடறி வருடையோடுகளுஞ் சென்னியையுடைய அரணபாதத்தை விலங்கல் போலுமார்பினான் எய்தினானென்க. (௭௩)

அந்தரவகடுதொட்டணவுநீள்புகழ்
வெந்தெரிபசும்பொனின்விழையும்வெல்லொளி
மந்திரவாய்மொழிமறுவின்மாதவ
ரிந்திரர்தொழுமடியினிதினெய்தினான்.

இ-ள். விசும்பினடுவைத்தீண்டி மேனோக்கிச்செல்வதோர் பொன்னினொளியை வெல்லும் ஒளியினையும் மந்திரத்தைவிழையும், வாய்மொழியினையும், நீள்புகழினையுமுடைய மாதவரடியை வருந்தாமற் சேர்ந்தானென்க.

இதனால் தாள்வரையில் இருடிகளை முதலில் வணங்கினானென்றார். (௭௪)

வேறு.

முனிவருமுயன்றுவான்கண்மூப்பிகந்திரியவின்பக்
கனிகவர்கணனுமேத்தக்காதிகண்ணரிந்தகாசி
றனிமுதிர்கடவுள்கோயிறன்வலங்கொண்டுசெல்வான்
குனிதிரைமுளைத்தவெய்யோன்குன்றுசூழ்வதனையொத்தான்.

இ - ள். முனிவரும், வானிடத்துத்தமக்குவருகின்ற மூப்புக் கைவிட்டுக்கெடும்படியாக அவ்விடத்து இன்பக்கனியைநுகரும் தேவரும், முயன்றேத்தக் காதிகண்ணரிந்த கடவுள்கோயிலை வலங்கொண்டுசெல்கின்றவன் இளஞாயிறு மேருவைச்சூழ்ந்த தன்மையை யொததானென்க.

காதிகண்ணரிந்த - உபாதிகளைத் தன்னிடத்துநில்லாதப்படி வேரறுத்த. (எ௫)

தண்கயக்குற்றபோதுந்தாழ்சினையிளிந்தவீயும்
வண்கொடிக்கொய்தபூவும்வார்ந்துமட்டுயிர்ப்பவேந்தித்
திண்புகழறிவன்பாதந்திருந்துகைத்தலத்திலேற்றிப்
பண்புகொள்குணங்கொள்கீதம்பாணியிற்பாடுகின்றான்.

இ - ள். கயத்திற்பறித்தபோதையுங் கொம்பிலினுங்கின வீயையுங் கொடியிற் கொய்தபூவையும் மதுவுயிராநிற்கவேந்திக் கைத்தலத்தாலே பாதத்தேயேற்றி இயல்புகொண்டகுணங்களைத் தன்னிடத்தேகொண்டபாட்டைத் தாளத்தோடேபாடாநின்றானென்க. (எ௬)

வேறு.

ஆதிவேதம்பயந்தோய்நீயலர்பெய்ம்மாரியமைந்தோய்நீ
நீதிநெறியையுணர்ந்தோய்நீநிகரில்காட்சிக்கிறையோய்நீ
நாதனென்னப்படுவோய்நீநவைசெய்பிறவிக்கடலகத்துன்
பாதகமலந்தொழுவேங்கள்பசையாப்பவிழப்பணியாயே.

கொலைமுதலியனவில்லாதவேதம். நீதிநெறி - சன்மார்க்கம். காட்சி - ஞானம்.

இ - ள். இவையெல்லாஞ்செய்தாய் நீயாதலின், நின்னடியைத் தொழுவேமுடைய பிறவிக்கடலகத்துப் பற்றாகியதொடர்ச்சிநீங்கும்படி திருவுள்ளம்பற்றாயென்றானென்க. (எஎ)

இன்னாப்பிறவியிகந்தோய்நீயிணையிலின்பமுடையோய்நீ
மன்னுவுலகமறுத்தோய்நீவரம்பில்காட்சிக்கிறையோய்நீ
பொன்னாரிஞ்சிப்புகழ்வேந்தேபொறியின்வேட்கைக்கடலழுந்தி
யொன்னாவினையினுழல்வேங்களுயப்போம்வண்ணமுரையாயே.

இன்பம் - அநந்தசுகம். மன்னுவுலகம் - சுவர்க்கம். மறுத்தல் - அதிற்போகத்தைத்தவிர்த்தல்.

இ - ள். பொன்னெயில்வட்டத்தில்வேந்தே! இத்தன்மையையாகியநீ ஐம்பொறியாலே வேட்கைக்கடலிலேயழுந்திப் பொருந்தாததீவினையாலே வருந்துவேம் உய்யப்போந்தன்மையை அருளிச்செய்யாயென்றானென்க. (எ௮)

உலகமூன்றுமுடையோய்நீயொண்பொனிஞ்சியெயிலோய்நீ
திலகமாயதிறலோய்நீதேவரேத்தப்படுவோய்நீ
யலகையில்லாக்குணக்கடலேயாருமறியப்படாயாதி
கொலையிலாழிவலனுயர்த்தகுளிர்முக்குடையினிழலோய்நீ.

திறல் - அநந்தவீரியம்.

இ-ள். இவற்றையுடையையாகிய நிழலோய்! அறவாழியை வலனுயர்த்த எண்ணிறந்தகுணக்கடலே! நீ எல்லாருமறியப்படுவாயாகவென்றானென்க.

படாய் - செய்யாயென்னுஞ்சொல் செய்யென்கிளவியாய்நின்றது. இத்தேவபாணிக் கொச்சகவொருபோகு மூன்றாலும் இறைவனைப்பாடினான். (௭௯)

வே று.

அடியுலகமேத்தியலர்மாரிதூவ
முடியுலகமூர்த்தியுறநிமிர்ந்தோன்யாரே
முடியுலகமூர்த்தியுறநிமிர்ந்தோன்மூன்று
கடிமதிலுங்கட்டழித்தகாவலனீயன்றே.

இ-ள். அடியை யுலகமேத்திப் பூமழைபெய்ய முடிந்தவுலகத்தின்மூர்த்தியை யுறும்படி முத்தியையடைந்தவன் யார்தான்? அங்ஙனமடைந்தோன் காமம் வெகுளி மயக்கமென்கின்ற மூன்றுமதிலையுங் காவலழித்த நீயேயன்றே யென்றானென்க. ()

முரணவியவென்றுலகமூன்றினையுமூன்றிற்
றரணிமேற்றந்தளித்ததத்துவன்றான்யாரே
தரணிமேற்றந்தளித்தான்றண்மதிபோனேமி
யரணுலகிற்காயவறிவரனீயன்றே.

இ-ள். மூன்றுமதிலையுமழித்து அங்கபூர்வமாதியென்கின்ற மூன்றாகமத்தாலும் உலகமூன்றின்றன்மையையுந் தரணிமேலே தந்து வெளிப்படக்கூறின தத்துவன் யார்தான்? அங்ஙனங்கூறினவன் மதிபோலும் அறவாழியையுடைய உலகிற்கு அரணாய அறிவுக்குவரனாயுள்ள நீயேயன்றே யென்றானென்க. (௮௧)

தீரா வினைதீர்த்துத்தீர்த்தந்தெரிந்துய்த்து
வாராக்கதியுரைத்தவாமன்றான்யாரே
வாராக்கதியுரைத்தவாமன்மலர்ததைந்த
காரார்பூம்பிண்டிக்கடவுணீயன்றே.

இ-ள். தீவினையைப்போக்கி ஆகமத்தையருளிச்செய்து மேல்வருதலில்லாத வீட்டினையுரைத்த வாமன்யார்தான்? அங்ஙனமுரைத்தவாமன் நீயேயன்றேயென்றானென்க.

இவைமூன்றாலும் சாரணரைப்பாடினான். பா முற்கூறியவே; கந்தருவமார்க்கத்தால் இடைமடக்கின. (௮௨)

வேறு.

அம்மலைச்சினகரம்வணங்கிப்பண்ணவர்
பொன்மலர்ச்சேவடிபுகழ்ந்தபின்னரோ
வெம்மலைத்தெய்வதம்விருந்துசெய்தபின்
செம்மல்போய்ப்பல்லவதேயநண்ணினான்.

சினகரம் - ஜிநக்ருஹம்.

இ - ள். அவ்வரணபாதத்தில் ஸ்ரீ கோயிலைவணங்கி அவ்விடத்திற் சாரணருடைய அடியைப்புகழ்ந்தபின்பாக, இயக்கிவிருந்துசெய்தபின்பு, தலைவன் சாரலைப் போய்ப் பல்லவதேயத்தை நண்ணினானென்க. (௪௩)

அரியலார்ந்தமர்த்தலினளந்தர்நோக்குடைக்
கரியவாய்நெடியகட்கடைசிமங்கையர்
வரிவரால்பிறழ்வயற்குவளைகட்பவ
ரிருவரைவினாய்நகர்நெறியின்முன்னினான்.

இ - ள். மதுவையுண்டுபொருதலின், மயங்கியநோக்குடைய கொடியவாய் நெடியகண்ணையுடைய கடைசிமங்கையர் குவளையைக் களைபறிப்பாரிருவரை வழி கேட்டு அந்தநெறியாலே நகரையணுகினானென்க.

இருவரும் ஒக்கக்கூறுதலின், அவ்வழியே போனான். (௪௪)

அன்னமுமகன்றிலுமணிந்துதாமரைப்
பன்மலர்க்கிடங்குசூழ்பசும்பொற்பாம்புரிக்
கன்னிமூதெயில்கடலுடுத்தநகாரிகை
பொன்னணிந்திருந்தெனப்பொலிந்துதோன்றுமே.

மகன்றில் - ஒருபுள். பாம்புரி - கீழே புறப்படப் படுத்தது.

இ - ள். அங்ஙனம் முன்னினபொழுது அன்னமும் மகன்றிலுமணியப்பட்டுக் கிடங்குசூழ்ந்த பாம்புரியையுடையமூதெயில் கடலை உடையாகவுடுத்த நிலமகள் பூணணிந்திருந்த தன்மைத்தெனப் பொலிந்து தோன்றுநிற்குமென்க. (௪௫)

அகிற்றுகொழும்புகைமாடத்தாய்பொனின்
முகிற்றலைவிலங்கியமொய்கொணீள்கொடிப்
பகற்றலைவிலங்குசந்திராபம்பான்மையி
னிகற்றலைவிலங்குவேற்காளையெய்தினான்.

பொன்னின்கொடி; முகில் அவ்விடத்தினின்றும் விலங்குதற்குக் காரணமான கொடி.

இ - ள். அகிலுண்டாக்கின புகையையுடைய மாடத்திற்கொடி பகலை யிடத்தே சென்றுவிலக்குஞ் சந்திராபமென்னுநகரைக் காளை பான்மையினெய்தினானென்க.

முகிற்றலைவிலங்கிய மாடத்திற்கொடியுமாம். (௪௬)

மலரணிமணிக்குடமண்ணுநீரொடு
பலர்நலம்பழிச்சுபுபரவவேகினா

னலர்கதிர்கரும்பிளைமடுப்பவாய்நக
ருலகளந்தானெனவுள்புக்கானரோ.

அலர்கதிர் - எழுகின்றஞாயிறு. கரும்பிளை - கரியபிள்ளை. இவன் வடக்கு நோக்கிச்செல்கின்றபொழுது மேற்கிருந்தகொடி ஞாயிற்றின்மேற்செல்லவே கொடி வலமாம்.

இ - ள். கொடிவலம்பெற்று உலகளந்தானென்னும்படி நகரினுள் புக்கவன் தன்னைப் பின்பு அரசன்பரிவாரத்தார்பலரும் மணிக்குடத்தின் மண்ணுநீராலே யாட்டிப் பரவும்படி புக்கானென்க.

அது * "மழகளிற்றெருத்திற்றந்த மணிக்குடமண்ணுநீரா - லழகனைமண்ணுப் பெய்தாங்கு" என்பதனானுணர்க. இந்நிமித்தத்தின்பயன் அது. இனி நாட்டிற்கும் ஊரிற்குநிமித்தமென்று வைத்து இரண்டுநிமித்தமென்பாருமுளர். (அஎ)

வேறு

சந்தனக்காவுசூழ்ந்துசண்பகமலர்ந்தசோலை
வந்துவீழ்மாலைநாற்றிமணியரங்கணிந்துவானத்
திந்திரகுமரன்போலவிறைமகனிருந்துகாண
வந்தரமகளிரன்னார்நாடகமியற்றுகின்றார்.

இ - ள். அவன்சென்றவளவிலே மகளிரன்னார் பலருங்கூடிக் காவைசசூழ்ந்து சண்பகமலர்ந்த சோலையில் அரங்கை நிலத்தேவந்துவீழும் மாலையைநாற்றி யணிந்து குமரன்போலே இறைமகனிருந்துகாண நாடகத்தை நடத்தாநின்றாரென்க. (அஅ)

குழலெடுத்தியாத்துமட்டார்கோதையிற்பொலிந்துமின்னு
மழலவிர்செம்பொற்பட்டங்குண்டலமாரந்தாங்கி
நிழலவிரல்குற்காசுசிலம்பொடுசிலம்பநீடோ
ரழகிகூத்தாடுகின்றாளரங்கின்மேலரம்பையன்னாள்.

இ - ள். அரம்பையையொப்பாளாகிய அழகி குழலையெடுத்துக்கட்டி மாலையா லேபொலிவுபெற்றுப் பின்பு பட்டமுதலியவற்றைத்தாங்கிக் காசு சிலம்போடே சிலம்ப அரங்கின்மேலே கூத்தாடாநின்றாளென்க.

"வாடிய வண்டளிரன்ன மேனி - யாடியன் மகளிரமைதி கூறி - னெறியி னீங்கிய நெடிய ரல்லோர் - குறியிற் குறைந்த குறிய ரல்லோர் - பாற்பட வில் லாப் பருமை யில்லோர்" என்னுஞ்சூத்திரத்திற்கூறிய நிலைகளுடனே ஆசிரியனிட் டவழகுகிடத்தலின், அழகியென்றார். (அக)

தண்ணுமைமுழவம்வீணைகுழலொடுகுயிலதண்பூங்
கண்ணெடுபுருவங்கைகால்கலையல்குனுசுப்புக்காம
ரொண்ணுதல்கொண்டவாடற்றொட்டிமையுருவநோக்கி
வெண்ணெய்தீயுற்றவண்ணமாடவர்மெலிகின்றாரே.

* பதுமையாரிலம்பகம், கஅ.

இ - ள். அங்ஙனமாடுகின்ற ஒண்ணுதலையுடையாள் தண்ணுமைமுதலியன வாசியாநிற்கக் கண்முதலியவற்றாற்கொண்ட கூத்தினதொழிலைவடிவைநோக்கி ஆடவர் வெண்ணெய் தீயுற்றாற்போல மெலியாநின்றாரென்க. (௯௦)

பாடலொடியைந்தவாடல்பண்ணமைகருவிமூன்றும்
கூடுபுசிவணிநின்றுகுழைந்திழைந்தமிர்தமூற
வோடரிநெடுங்கணம்பாலுளங்கிழிந்துருவவெய்யா
வீடமைபசும்பொற்சாந்தமிலயமாவாடுகின்றாள்.

இ - ள். அவள் பின்னும் பாட்டோடே பொருந்திய கூத்தும் வாச்சியமுமாகிய இம்மூன்றுங் கூடிப் பொருந்திநின்று மெல்கிக் கலந்து இனிமைமிகக் கண்ணுலெய்து இடுதலமைந்த சாந்தமழிய ஆடாநின்றாளென்க.

சாந்தம், அவள்பெயராக்கி அதற்கேற்பவுமுரைப்ப. (௯௧)

வாணுதற்பட்டமின்னவார்குழைதிருவில்வீசப்
பூண்முலைபிறழப்பொற்றோடிடவயினிலங்கவொல்கி
மாணிழைவளைக்கைதம்மால்வட்டணைபோக்குகின்றாள்
காண்வருகுவளைக்கண்ணாற்காளைமேனோக்கினாளே.

இ - ள். மாணிழை, பட்டமின்னக் குழைவீசப் பூண் முலையிலேபிறழத் தோடு நுடங்க ஒல்கிக் கையாலே வட்டணை போக்குகின்றவள் கண்ணாலே காளைமேலே பார்த்தாளென்க.

கைவட்டணையாவன: அபவேட்டிதம், உபவேட்டிதம், வியாவர்த்திதம், பரிவர்த்திதம். இவை பிறைக்கையாம். "தற்சனி முதலாப் பிடித்த லகம்வரி-னத்தொழி லாகு மபவேட் டிதமே." "தற்சனி முதலா விடுத்தல் புறம் வர - வுய்த்த லாகு முப வேட் டிதமே." . "கனிட்ட முதலாப் பிடித்த லகம்வர - விடுத்த லாகும் வியாவர்த் திதமே." "கனிட்ட முதலா விடுத்தல் புறம்வரப்-படுத்த லாகும் பரிவர்த் திதமே." "ஆன்ற வபவேட் டிதமுப வேட்டிதந் - தோன்றும் வியாவர்த் திதத்தோடு - மூன் றும்-பரிவர்த் திதமு மெனப்பகர்ந்தா ரித்தை - யுரிமைப் பிறைக்கையா லூர்.(௯௨)

நோக்கினாணெடுங்கணென்னுங்குடங்கையானுணடுகொண்டு
வாக்கமையுருவின்மிக்கான்வனப்பினைப்பருகவிப்பா
லாக்கியவிலயநீங்கிற்றணங்கனாணெடுங்கண்பில்கி
வீக்குவார்முலையினெற்றிவெண்முத்தஞ்சொரிந்தவன்றே.

இ - ள். பார்த்தவள் கண்ணென்னுங் குடங்கையாலே முகந்துகொண்டு கவிக ளாற் புகழ்தலாகா வடிவின்மிக்கானழகைப் பருகுதலாலே, இவ்விடத்துக் கண்முத லியவற்றாலாக்கிய தாளவறுதிகள் நீங்கின. பின்பு இமையாமைநோக்கி நின்றதனாற் கரித்து அவள்கண்கள் சிறுதுவலையைவீசி முலைத்தலையிலே நீரைச் சொரிந்தன வென்க.

இது பெருமைபற்றிய மருட்கையென்னுமெய்ப்பாடு; கண்கரித்து நீர்வீழ்தலின், அழுகையென்னு மெய்ப்பாடாகாது. (௯௩)

செருக்கயனெடுங்கணாளத்திருமகன்காண்டலஞ்சி
நெருக்கித்தன்முலையின்மின்னுநிழன்மணிவடத்தைமாதர்

பொருக்குநூல்பரிந்துசிந்தாப்பூவெலாங்கரிந்துவாடத்
தரிக்கிலாள்காமச்செந்தீத்தலைக்கொளச்சாம்பினாளே.

பொருக்கு - பொருவுக்கு; நிலக்குப்போல. அந்நூலெனச் சுட்டுக.

இ - ள். பொருகின்ற கயல்போலுங் கண்ணாள் தன்கண்ணினை உலோகபாலன் காண்டற்கஞ்சி அதற்கொப்புக்கு முத்துவடத்தைத் தன்முலையினாலே நெருக்கி அந்நூலை யறுத்துச்சிந்தி அம்மாதர் பூவெல்லாம் வாடும்படி காமத்தீத் தலைக்கொள்ளுத லாலே தரிக்கிலாளாய்க் கெட்டாளென்க. (௬௪)

கன்னிமைகனிந்துமுற்றிக்காமுறக்கமழுங்காமத்
தின்னறுங்கனியைத்துய்ப்பானேந்தலேபிறர்களில்லை
பொன்னினாலுடையுங்கற்பென்றுரைத்தவர்பொய்யைச்சொன்னா
ரின்னிசையிவற்கலாலென்னெஞ்சிடமில்லையென்றாள்.

இ - ள். இவற்கல்லது என்னெஞ்சு இடமில்லையாயிருந்தது, ஆதலிற் கன்னித்தன்மையோடே முற்றிக்கனிந்து சமழுங் காமமாகியபழத்தை நுகர்வானிவனே, வேறிதற்குரியாரில்லை, இத்தன்மை கூறாதே பரத்தையர்க்குக் கற்புப் பொருளான் உடையுமென்று கூறினவர் பொய்கூறினாரென்று கருதினாளென்க. (௬௫)

கருஞ்சிறைப்பறவையூர்திக்காமருகாளைதான்கொ
லிருஞ்சுறவுயர்த்ததோன்றலேத்தருங்குரிசிறான்கொ
லரும்பெறற்குமரனென்றாங்கறிவயர்வுற்றுநின்றா
டிருந்திழையணங்குமென்றோட்டேசிகப்பாவையன்னாள்.

இ - ள். தேசிகப்பாவை அத்தன்மையானவள், குமரன் மயிலூர்தியையுடைய முருகனோ? சுறவையுயர்த்த விளக்கத்தையுடைய காமன்றானோ? என்று அறிவுவருத்தமுற்று நின்றாளென்க.

தேசிகப்பாவை - அவள்பெயர். அத்தன்மையாளென்றது - அவள்கல்விமுதலிய வற்றைச்சுட்டிற்று. பாவையொப்பாள் பாடமாயின், உவமைகூறியது இவட்குப் பெயரன்மையுணர்க. (௬௬)

போதெனக்கிடந்தவாட்கண்புடைபெயர்ந்திமைத்தல்செல்லா
தியாதிவள்கண்டதென்றாங்கரசனுமமர்ந்துநோக்கி
மீதுவண்டரற்றுங்கண்ணிவிடலையைத்தானுங்கண்டான்
காதலிற்களித்ததுள்ளங்காளையைக்கொணர்மினென்றான்.

இ - ள். இவள்கண் புடைபெயர்ந்திமைக்கின்றதில்லை; கண்டவுருவம் யாதென்று அவ்விடத்தே அரசனும் பொருந்திப்பார்த்துத் தானும் அவ்விடலையைக்கண்டான்; அப்பொழுதே அவன்மேல்விருப்பத்தாலே நெஞ்சுகளித்தது; அதனாலே காளையை இங்ஙனங் கொண்டுவாருங்களென்றானென்க. (௬௭)

வேறு.

கைவளர்கரும்புடைக்கடவுளாமெனி
னெய்கணைசிலையியினோடிலன்கணியில்லையான்

மெய்வகையியக்கருள்வேந்தனுகுமென்
றையமுற்றெவர்களுமமர்ந்துநோக்கினர்.

கை - ஒழுக்கம்.

இ - ள். இல்வாழ்க்கைவளர்தற்குக் காரணமான கரும்பையுடைய காமனு மென்றுகருதிற் கணையும்வில்லுமிவனிடத்தின்மையின், இவன் அவனல்லன்; வடிவின்வகையைப் பார்த்தால் இயக்கருள் வேந்தனுமென்று ஐயப்பட்டு எல்லோரும் அப்பொழுது பொருந்திப் பார்த்தாரென்க. (௬அ)

வேறு.

மந்திரமறந்துவீழ்ந்துமாநிலத்தியங்குகின்ற
வந்தரகுமரனென்றுங்கியாவருமமர்ந்துநோக்கி
யிந்திரதிருவற்குய்த்தார்க்கிறைவனுமெதிர்கொண்டோம்பி
மைந்தனைமகிழ்வகூறிமைத்துனத்தோழனென்றான்.

அந்தரகுமரன் - தேவரிலொருசாதி.

இ - ள். அங்ஙனமையமுற்றுப் பின்னும், மந்திரத்தைமறத்தலாலே மாநிலத்தேவீழ்ந்து இயங்குகின்ற குமரனென்று யாவரும் அவ்விடத்தே பொருந்திப்பார்த்து இந்திரன்றிருப்போன்ற திருவையுடையவன்கண்ணே செலுத்தினர்க்கு அவனுமெதிர்கொண்டு பேணி அவனை மகிழ்வனவற்றைக் கூறி, நீயெனக்கு விளையாடு முறைமையையுடைய தோழனென்றானென்க.

இளவரசாதலின், இறைவனென்றார். (௬௬)

போதவிழ்தெரியலானும்பூங்கழற்காலினானுங்
காதலினொருவராகிக்கலந்துடனிருந்தபோழ்தி
னூதுவண்டுடுத்தமாலையுணர்வுபெற்றிலயந்தாங்கிப்
போதுகண்டனையவாட்கட்புருவத்தாற்கலக்குகின்றாள்.

வண்டுடுத்தமாலை - வண்டுசூழ்ந்த தேசிகப்பாவை.

இ - ள். உலோகபாலனுஞ் சீவகனுங் காதலாலிருவருமொருவராகி இருந்தவளவிலே, அவள் இனிப் பெற்றேமென்று உணர்ச்சிபெற்று, நீங்கின இலயத்தைத் தப்பாமற்றாங்கி, கண்ணாலும் புருவத்தாலுங் கலக்காநின்றாளென்க. (௭00)

க. தேனுகுக்கின்றகண்ணித்திருமகளாடவிப்பா
லூனுகுக்கின்றவைவேலொருமகனுருமிற்றோன்றி
வானுகுக்கின்றமீன்போன்மணிபரந்திமைக்குமார்பிற்
கானுகுக்கின்றபைந்தார்க்காவலற்றொழுதுசொன்னான்.

இதுமுதலாகப் "பதுமை" என்னுங்கவியளவுமொருதொடர்.

உருமிற்சொன்னானென்க; பாம்புகடித்ததென்றலின், உருமுவமையாயிற்று. ()

உ. கொய்தகைப்பொதியிற்சோலைக்குழுவியமுல்லைமௌவல்
செய்யசந்திமயச்சாரங்கருப்புரக்கனறுநீம்பூக்

கைதருமணியிற்றெண்ணீர்மதுக்கலந்தூட்டிமாலை
பெய்தொளிமறைத்துநங்கைபிறையெனவளர்க்கின்றாளே.

கன்றென்பதனை எல்லாவற்றிற்குமேற்றுக. குழவிய, அ - அசை. *"பிள்ளை குழவி கன்றே போத்தெனக் - கொள்ளவு மமையு மோரறி வுயிர்க்கே. இரண்டு மலையினும் இவளுணை யறிவித்தற்குக் கூறினார். பிறை - சந்திரன். (௧௦௨)

௩. பவளங்கொள்கோடுநாட்டிப்பைம்பொனல்வேலிகோலித்
தவழ்கதிர்முத்தம்பாய்த்தித்தன்கையாற்றீண்டிநன்னாட்
புகழ்கொடிநங்கைதன்பேர்பொறித்ததோர்கன்னிமூல்லை
யகழ்கடற்றானைவேந்தேயணியெயிறீன்றதன்றே. (௧௦௩)

௪. வம்பலர்கோதைசிந்தமயிலெனவொருத்தியோடிக்
கொம்பலர்நங்கைபூத்தாள்பொலிகெனக்குனிந்தவிந்தீ
றம்பலர்கண்ணியாரதிதியறைந்தோகைபோக்கிக்
கம்பலம்போர்த்தபோலுங்கடிமலர்க்காவுபுக்காள். (௧௦௪)

௫. நறவிரிசோலையாடிநாண்மலர்க்குரவம்பாவை
நிறையப்பூத்தணிந்துவண்டுந்தேன்களுநிழன்றுபாட
விறைவளைத்தோளிமற்றென்றோழியீதென்றுசேர்ந்து
பெறலரும்பாவைகொள்வாள்பெரியதோணீட்டினாளே.

அணிந்து - அணிய. நிழன்று - நிழல்செய்து; "எரோர்க்கு நிழன்ற கோலினை" என்றார் பிறரும். (௧௦௫)

௬. நங்கைதன்முகத்தைநோக்கிநகைமதியிதுவென்றெண்ணி
யங்குறையரவுநீண்டியவ்வையோவென்றுபோகக்
கொங்கலர்கோதைநங்கையடிகளோவென்றுகொம்பேர்
செங்கயற்கண்ணிதோழிதிருமகட்சென்றுசேர்ந்தாள்.

நகைமதியெனவே மறுவின்மையுணர்த்திற்று. குறையரவு - வினைத்தொகை; காலநீட்டித்தாற் பாம்புகுறைந்து ஒருகோழிப்பறவை நீளம் பறந்து செலலுமென்று கூறி, அதனைக் குக்குடசர்ப்பமென்ப. அது †"அரிகுரற்கோழி நாமத்தரவிவட்கடித்த தாக" என்றதனானுமுணர்க. தடுத்ததனைவெட்டுதல் பாம்பிற் கியல்பாதலின், முகத்தை நோக்கினபாம்பு அணுகினகையிலே தீண்டிற்றென்றுணர்க. நங்கையடிகள் - பதுமை தாய். ஏர் - ஒக்கும். (௧௦௬)

௭. அடிகளுக்கிறைஞ்சியையனடிகளைத்தொழுதுநங்கை
யடிகளைப்புல்லியாரத்தழுவிக்கொண்டவ்வைமாரைக்
கொடியனுயென்னைநாளுநினையெனத்தழுவிக்கொண்டு
மிடைமின்னினிலத்தைச்சேர்ந்தாள்வேந்தமற்றருளுகென்றான்

அடிகளுக்கு - உருபுமயக்கம். இங்ஙனந் தானிகழ்த்தப்பெருமையிற் றனக் காக நிகழ்ந்ததென்றாளாயிற்று. (௧௦௭)

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௨௪.
† கனகமாலையாரிலம்பகம், ௧௬௮.

அ. பதுமையைப்பாம்புதீண்டிற்றென்றலும்பையுளெய்திக்
கொதிநுனைவேலினுயிங்கிருக்கெனக்குரிசிலேகிக்
கதுமெனச்சென்றுநோக்கிக்காய்சினங்கடிதற்கொத்த
மதிமிகுத்தவலநீக்குமந்திரம்பலவுஞ்செய்தான்.

எகி - ஏக.

இ - ள். இங்ஙனந்தேசிகப்பாவையாடாநிற்க, இப்பால் வேலினையுடைய ஒருமகன்றான்றி மார்பினையுந்தாரினையுமுடைய உலோகபாலனைத்தொழுது பதுமையைப் பாம்புதீண்டிற்றென்று உருமிற்சொன்னான், சொன்னவளவிலே உலோகபாலன் வருத்தமுற்றுச் சீவகனைநோக்கி, வேலினாய்! நீ இவ்விடத்தே யிருக்கவென்றுகூறி, அவ்விடத்தினின்றும் போகாநிற்கின்றவளவிலே, பாம்புகடித்தவாறு என்னையென்று வினவினாற்கு வேந்தே! நங்கை பொதியிற்சோலையிற் குழவியாகிய முல்லையினையும் மௌவலினையுஞ் சந்தனத்தையும் இமயச்சாரற் கருப்பூரத்தையுந் தீம்பூவையுஞ் சந்திரகாந்தக்கல்லினின்றுந்தோற்றின நீரைத் தேனைக்கலந்தூட்டி மாலையை மூட்டாகப்பெய்து வெயிலைமறைத்துப் பிறையெனவளர்க்கின்றவள், அவற்றிலேவிசேடித்துப் பவளத்தைக் கொள்கொம்பாகநாட்டிப் பொன்னாலேவேலிகோலி முத்தைமணலாகப்பரப்பித் தன்கையாலேதீண்டி நல்லநாளிலே திலோத்தமைதன் பெயரிட்டுவளர்த்ததொரு கன்னியாகியமுல்லை எயிறுபோலே அரும்பிற்று; அதனைக் கண்டு ஒருத்தி கோதைசிந்தவோடிக் கொம்பே! நங்கை யலர்பூத்தாள்; பொலிகவென்றாளாக, அம்பைத்தோற்றுவிக்கின்றகண்ணி, நிதியை எல்லாருமாரும்படி காற்றிக்கொடுத்து, இவ்வுவகையைப் பலர்க்குஞ்சொல்லப்போகவிட்டுக் காவிலே சென்றாள்; அவள்சென்று சோலையிலேவிளையாடிக் குரவம் பாவையை வண்டுந் தேன்களுநிழன்றுபாடும்படி நிறையப்பூத்தணிய, அதனைக்கண்டு இஃது என்றோழியென்றுசேர்ந்து அதனைக்கொய்தற்குத் தோளைநீட்டினாள். நீட்டினவளவிலே அழகிய குறைந்தவரவம் அவள்முகத்தைப்பார்த்து நாந்தீண்டுதற்குரிய மறுச்சேர்மதியன்றி இது நகையினையுடையதோர் மடமாயிருந்தது; நாந்தீண்டத்தகாதென்றெண்ணி அந்தக்கையிலே தீண்டுதலாலே அம்மேயோவென்னமீண்டாளாக, அவடோழி கோதாய்! திலோத்தமையார் வந்தாரோவென்று வினவிச்சென்று அவளைச் சேர்ந்தாள்; சேர்ந்தவளைநோக்கிக் கொடியனாய்! தனபதியைவணங்கி யுலோகபாலனடிகளைத்தொழுது திலோத்தமையாரைப்புல்லி ஒழிந்ததாய்மாரைத்தழுவிக்கொண்டு நாளுமென்னை நினையெனக்கூறி மின்னைமிடைந்ததோர் மின்போற்றழுவிக்கொண்டு பின்பு நிலத்தேவீழ்ந்தாள்; வேந்தனே! இதனைத் திருவுள்ளம்பற்றென்று சொன்னான்; அதுகேட்டுக் கடுகச்சென்று பார்த்து விடத்தின்வேகத்தைப்போக்குதற்குப் பொருந்தின மந்திரத்தைத் தன்மதியாலே மிகுத்துக்கூறி இவ்வவலத்தைத் தீர்த்தற்குரிய பலமருந்துகளையுஞ் செய்தானென்க.

இங்ஙனம் மாட்டுறுப்பாகக்கூறாது செவ்வனேகூறிற் பாம்புகடித்தமை கடுகக் கூறிற்றாகாமையுணர்க. (க௦அ)

வள்ளறான்வல்லவெல்லாமாட்டினன்மற்றுமாங்க
ணுள்ளவரொன்றலாதசெயச்செயவூறுகேளா
தள்ளிலைப்பூணினானுக்காவியுண்டில்லையென்ன
வெள்ளெயிற்றரவுகான்றவேகமிக்கிட்டதன்றே.

ஊறு - விடத்திற்கு இடையூறாய மந்திரமும் மருந்தும்.

இ - ள். உலோகபாலன் முன்வல்ல விஞ்சைகளெல்லாவற்றையுஞ் செலுத்தினன்; வேறும் அவ்விடத்துள்ளாரெல்லாரும் பலவூறுக்களையுஞ் செய்யச்செய்ய, அவற்றைக் கேளாதே அவளுக்கு உயிர் உண்டு இல்லையென்னும்படி அரவுகான்ற நஞ்சு மிக்கதென்க. (௧௦௯)

பைங்கதிர்மதியமென்றுபகையடுவெகுளிநாக
நங்கையைச்செற்றதீங்குத்தீர்த்துநீர்கொண்மினுடும்
வங்கமாநிதியுநல்கிமகட்டருமணிசெய்மான்றே
ரெங்களுக்கிறைவனென்றுங்கடிமுரசெருக்கினனே.

இ - ள். மறுச்சேர்மதியாகிய பகையையடுகின்ற வெகுளியையுடையநாகம், இது நாந்தீண்டுமதன்றி மறுவில்லாததொரு மதியாயிருந்ததென்றெண்ணுதலாலே, நங்கையைக் கையிலேகடித்தது; இவ்விடத்துத் தீர்த்தவர்கட்குத் தனபதி நாட்டையுநிதியையுந்தந்து மகளையுந்தருமாதலின், இதனைத் தீர்த்து நீர் இவற்றைக்கொண்மினென்று உலோகபாலன் முரசறைவித்தானென்க. (௧௧௦)

௧. மன்டலிமற்றிதென்பாரிராசமாநாகமென்பார்
கொண்டதுநாகமென்பார்குளைவளிபித்தோடையிற்
பிண்டித்துப்பெருகிற்றென்பார்பெருநவையறுக்கும்விஞ்சை
யெண்டவப்பலவுஞ்செய்தாமென்றுகேளாதென்பார். (௧௧௧)

௨. சினையைந்தும்விடுதுமென்பார்தீற்றுதுஞ்சிருங்கியென்பார்
குளைபுனலிடுதுமென்பார்கொந்தழலுறுத்துமென்பா
ரினையெனவருந்தக்கவ்வியென்புறக்கடித்ததென்பா
ருளையன்மினுதிரநீங்கிற்றுய்யலணங்கையென்பார்.

இவையிரண்டுமொருதொடர்.

௧. மற்று - வினைமாற்று. இது சீதமண்டலியென்பார்; இது கருவழலையென்பார்; கடித்தது நாகமென்பார்; வளியும் பித்தும் ஐயிற்காட்டிற் றிரண்டுபெருகின; இனி யுயிர்மீளாதென்பார், இவ்விஞ்சை பெரியநவையறுக்குமென்றுகருதி எண்ணிறக்கப் பலவுஞ்செய்தேம்; அவற்றை இதுகேட்டதில்லையென்பாரென்க. என்று - ஏற்றுக்கொண்டென்றுமாம். இராசமாமந்தமும் பாடம்.

௨. சினையைந்து - கையிரண்டுங் காலிரண்டும் நெற்றியுமாகவைந்து. தீற்றுதல் - பூசுதல். சிருங்கி - ஒருமருந்து; சுக்குமாம். சிங்கி, பாடமாயிற் கற்கடகசிங்கியென்க. புனலிடுகின்றது உயிருண்மையறிதற்கும், நஞ்சுநீங்குதற்கும். அழலுறுத்தல் - உயிருண்மையறிதற்கு.

இ - ள். தீர்க்கவந்தவர்கள் என்பார் என்பாராயினரென்க. (௧௧௨)

கையொடுநண்டங்கோப்பார்கனைசுடருறுப்பின்வைப்பார்
தெய்வதம்பரவியெல்லாத்திசைதொறுந்தொழுதுநிற்பா
ருய்வகையின்றியின்னேயுலகுடன்கவிழுமென்பார்
மையலங்கோயின்மாக்கண்மடைதிறந்திட்டதொத்தார்.

இ - ள். கையையுங்கண்டத்தையுமுழலேகோப்பார், மருமங்களிலே விளக்கை யெரிப்பார், தொழுதுநிற்பார், இதுகாரணத்தான் அரசனிறந்தபடின் உலகு இன்னே கவிழுமென்பாராய், மாக்கள் ஆரவாரத்தாலே, மடைதிறந்த தன்மையை யொத்தா ரென்க.

மக்கட்குரியமனனின்றி அறிவுகெட்டமையின், ஐயறிவுடையாரென்று மாக்க ளென்றார். (௧௧௩)

வெங்தெரிசெம்பொற்பூவும்விளங்குபொன்னூலும்பெற்றார்
மந்திரமறையும்வல்லாரெழாயிரர்மறுவில்வாய்மை
யந்தரத்தறுவைவைப்பாரந்தணரங்கைகொட்டிப்
பைங்தொடிப்பாவையின்னேபரிவொழிந்தெழுகவென்பார்.

இ - ள். பொன்னாலேபூவுநூலும்பெற்றார், மந்திரமுமறையும்வல்லார், மறுவில் லாத மந்திரத்தாலே விசும்பிலேபுடைவையைநிறுத்துவாராகிய அந்தணர் ஏழாயிரம் பேர் கையைத்தட்டி, பாவை இப்பொழுதே வருத்தந்தீர்ந்து எழுவாளாகவென்பா ரென்க. (௧௧௪)

பாம்பெழப்பாம்புகொண்டாற்பகவற்குமரிதுதீர்த்த
றேம்பிழிகோதைக்கின்றுபிறந்தநாடெளிமினென்று
காம்பழிபிச்சமாகக்கணியெடுத்துரைப்பக்கல்லென்
றாம்பழிகுளத்திற்கண்ணீர்துகணிலதநிழிந்ததன்றே.

பாம்பு - இராகு.

இ - ள். பாம்பு உதிக்கின்றவளவிலே பாம்புதீண்டினால் இறைவற்குந் தீர்த்த லரிது, ஈண்டுக்கோதைக்குப் பாம்பெழப் பாம்புகொண்டதின்று; பாம்பு தீண்டுகின்ற காலத்துப் பிறந்தநாளுமின்று; உதயாரூடக்கவிப்புக்களிற்கவிப்பாகத் தெளியுங்களெ ன்று கணி நூலையெடுத்துக் கூறக்கேட்டுக் கையாறுநீங்கி யழுதாரென்க.

இன்றென்பது மறைப்பொருளுணர்த்திய வினைக்குறிப்பு. காம்பழிபிச்சம்-கவிப் பிற்குவெளிப்படை. ஞாயிற்றின்விமானம் பீலியாற்செய்யப்படுதலின், அதனைப் பீலி யாற்செய்யப்படும்பிச்சமென்றார். எனவே ஞாயிறு நடுவே கவிப்பாக நின்றதென்ற வாறாயிற்று. இதனாற்பயன்: அக்காலத்திற்றெய்வம் மாயோனாதலின், அவன் கருடனு டனே உலகைப்பார்க்கின்றமையின், அக்கருடன்பார்வையால் நஞ்சுநீங்குதலாம். ()

நங்கைக்கின்றிறத்தலில்லைநரபதிநீயுங்கேண்மோ
கொங்கலர்கோங்கினெற்றிக்குவிமுகிழ்முகட்டிளங்கட்
டங்குதேனரவயாழிற்றானிருந்தாங்தைபாடு
மிங்குநம்மிடரைத்தீர்ப்பானிளையவனுளன்மற்றென்றான்.

யாழ் - மிதுனராசி. மற்று - அசை.

இ - ள். மிதுனராசியிலே தேனரவந்தங்குங் கொங்கலர்கோங்கினெற்றியின் அரும்பின்றலையிடத்தே ஆந்தைதானிருந்துபாடும்; இதனை நரபதி! நீயுங் கேட்பா யாக; இதனாலே நம்மிடரைத்தீர்ப்பானோரிளையவனிங்குளன்; இன்று நங்கைக்கு இறத்தலில்லை யென்றானென்க. (௧௧௬)

பன்மணிக்கடகஞ்சிந்தப்பருப்புடைப்பவளத்தூண்மேன்
முன்னவன்சிறுவன்வண்கைபுடைத்துமாழாந்துசொன்னா
னின்னுமொன்றுண்டுசூழ்ச்சியென்னொடங்கிருந்தநம்பி
தன்னைக்கூய்க்கொணர்மினென்றான்றரவந்தாங்கவனுங்கண்டான்

இ - ள். தனபதிதன்மகன் உலோகபாலன், கடகஞ்சிந்தும்படி தூண்மேலே கையைப்புடைத்து மயங்கி ஒருவார்த்தைகூறினன்: இன்னுமொருசூழ்ச்சியுண்டு; என்னோடங்கிருந்த இளையவனை அழைத்துக்கொண்டு வாருமினென்றுகூறினன்; அவர்களுங் கொண்டுவர, அவ்விடத்தேவந்து அவனும் இந்நிலையைக்கண்டானென்க. (௧௧௭)

பறவைமாநாகம்வீழ்ந்துபலவுடன்பதைப்பபோன்றுஞ்
சிறகுறப்பரப்பிமஞ்ஞைசெருக்குபுகிடந்தபோன்றுங்
கறவைகன்றிழந்தபோன்றுங்கிடந்தழுகின்றகண்ணா
ரிறைவளையவரைநோக்கியென்கொடிதுற்றதென்றான்.

பறவைமாநாகம் - குக்குடசர்ப்பம்; ஈண்டுப் பெண்பாலாகிய கூனுங்குறளு முவமப்பொருள். மயில் தோழியர்க்கும், கறவை செவிலியர்க்குமுவமை.

இ - ள். அங்ஙனங்கண்டவன் நாகங்கள் பதைப்பனபோன்றும், மயில்கள் மயங்கிக்கிடந்தனபோன்றும், கறவை கன்றிழந்தனபோன்றுமழுகின்ற கண்ணாராகிய வளையவரைநோக்கி, என்னே! இவருற்றது கொடிதாயிருந்ததென்றானென்க. (௧௧௮)

ஊறுகொள்சிங்கம்போலவுயக்கமோடிருந்தநம்பி
கூறினன்சொற்றவேந்தன்கொழுநிதிநிலத்துமற்றுன்
வீறுயர்புகழைவித்திக்கேண்மையைவிளைத்தியின்னே
நாறுபூங்கொம்பனாளைநோக்கெனநம்பிசொன்னான்.

இ - ள். அதுகேட்டு வருத்தத்தோடிருந்த உலோகபாலன் சீவகனைப்பார்த்து, நீ வேந்தனாகியநிலத்தே புகழைவித்தி உறவைவிளைக்கவல்லையாதலின், கொம்பனாளை இன்னே நோக்கெனக்கூறினன்; அதுகேட்டசீவகனும் ஒருவார்த்தைசொன்னானென்க.

விளைத்தி - படுத்தலோசையாக்குக. (௧௧௯)

புற்றிடைவெகுளிநாகம்போக்கறக்கொண்டதேனு
மற்றிடையூறுசெய்வான்வானவர்வலித்ததேனும்
பொற்றொடிக்கிறத்தலில்லைபுலம்புகொண்டழேற்கவென்றான்.
கற்றடிப்படுத்தவிஞ்சைக்காமருகாமனன்னான்.

இ - ள். விஞ்சையையுடைய அந்தச்சீவகன் நாகம் மீட்சியில்லையாம்படி கடித்ததாயினும், வேறிடையூறுசெய்தற்குத் தேவர்சூழ்ந்தநிலையாயினும், இவட்கு இறந்துபாடில்லை; நீயழாதேகொள்ளென்று கூறினனென்க.

காமனன்னனென்றது இவற்கோர்பெயர். (௧௨௦)

பொழிந்துநஞ்சுகுத்தலச்சமிறைபெருவெகுளிபோகங்
கழிந்துமீதாடல்காலம்பிழைப்பெனவெட்டிஞகும்
பிழிந்துயிருண்ணுந்தட்டமதட்டமாம்பிளிற்றினும்ப
ரொழிந்தெயிறானஞ்செப்புங்கோளெனமற்றுஞ்சொன்ஞன்.

உகுத்தல் - தன்றுற்பொறுத்தலருமையின், ஒன்றினைக் கௌவி நஞ்சைக் கான்றுகுத்தல். இறை - இறையென்றுகருதுதல். போகம் - இழைதல். கழிந்துமீதாடல் - மனக்களிகூர்ந்துநின்றுடுதல். பிழைப்பு - பிறர் தனக்குச்செய்தபிழையைக் கருதுதல். இவையெட்டுமெதன்குணம். தட்டம் - ஊஷ்டா; இது மேல்வாய்ப்பல். அதட்டம் - அயொஷ்டா; இது கீழ்வாய்ப்பல். பிளிறல் - பிலிற்றல். உம்பர்- மேல். கொள்ளுதல் - கோளெனவிகாரம்.

இ - ள். உகுத்தன்முதலிய எட்டுக்காரணத்தாலே கடித்தலுளதாம்; அங்ஙனங் கடித்தால் எயிறுகளுக்குமேலாந் தட்டம் அதட்டமென்கின்ற எயிறுகளிலுண்டான நஞ்சைக் கடித்தவாயிலேகாலுமாயிற் பிழிந்துயிருண்ணும்; அவற்றையொழிந்த எயிறுகளிலுண்டானநஞ்சைக் கடித்தவாயிலேகாலுமாயின் வருத்தஞ்செய்யுமென்று கூறிப் பின்னும் அதனிலக்கணங்களிலே சிலகூறிஞனென்க.

காலமொழிந்தவேழும் அகாலமாம். (௧௨௧)

அந்தணனுறுமான்பாலவியினையலர்ந்தகாலை
நந்தியாவட்டநாறுநகைமுடியரசனுயிற்
றந்தியாமுறைப்பிற்ருழைத்தடமலர்வணிகனுறும்
பந்தியாப்பமுப்புநாறிற்சூத்திரன்பாலதென்றான்.

இ - ள். *விஷஹாஹஸமென்னு நூலினைக்கொண்டுவந்துகூறின், ஆன்பாலவியினைநாறுமாயின், அஃது அந்தணன்பாலதாம்; அலர்ந்தகாலத்தினந்தியாவட்டத்தை நாறுமாயின், அஃது அரசன் பாலதாம்; தாழைமலா நாறுமாயின், அது வணிகன் பாலதாம்; மற்றொன்றுங்கூடாத அரிதாரநாறுமாயின், அது சூத்திரன் பாலதாமென்று கூறிஞனென்க. (௧௨௨)

கன்னியைக்கடித்தநாகங்கன்னியேகன்னிநோக்க
மன்னதேயரசர்சாதிமூன்றெயிறழுந்தியாழ்ந்த
கொன்னுமாநாகங்கொண்டாற்கொப்புளாம்விரலிற்றேய்த்தான்
மன்னியதெண்மட்டாயின்மண்டலிப்பாலதென்றான்.

குக்குடசர்ப்பமாதலின், அதற்குக் கேடில்லையென்றுகருதிக் கன்னியே யென்றான்.

இ - ள். கடித்தவாயை விரலாற்றேய்த்தால், அது மாநாகங்கொண்டதாயிற் கொப்புள் கொள்ளும்; தெண்மட்டுப்போல் நீர்பாயுமாயின், மண்டலிப்பகுதியாம்; இது கொப்புள்கோடலின், இவளைக்கடித்தபாம்பு கன்னியே, சாதி அரசர்சாதியே, தைத்தழுந்தினபல் யமதூதியொழிந்த காளி, காளாத்திரி, யமனென்னுமூன்றுமே, உதயமுங் கன்னியே, ஆதலின், இஃது அன்னதேயென்றானென்க.

அன்னதேயென்றது தான் முன்னிறத்தலில்லையென்றதனை. (௧௨௩)

* சித்தராரூடமென்றும் பிரதிவேறுபாடுண்டு.

குன்றிரண்டனையதோளான்கொழுமலர்க்குவளைப்போதங்
கொன்றிரண்டுருவமோதியுறக்கிடைமயிலனுடன்
சென்றிருண்டமைந்தகோலச்சிகழிகையழுத்திச்செல்வ
னின்றிரண்டுருவமோதிநேர்முகநோக்கினானே.

மலர் - முதற்கு அடை. ஒன்றுமிரண்டுமென உம்மைத்தொகை. உரு - உருவ மென ஈறுதிரிந்தது. உறக்கந்திடத்து மயில்.

இ - ள். தோளான் குவளைப்போதை அங்கே மூன்றுருவோதித் தான்சென்று மயிலனுடன் முடியிலேயழுத்தி, அவன் பெயர்ந்து நின்று பின்னுமிரண்டுருவோதி முகத்தை நேரேநோக்கினானென்க.

முகம் - தியானம். இவன் ஐந்துருவோதினமையின், இவன்கூறியமந்திரம் பஞ்சநமஸ்காரமாம். (கஉச)

நெடுந்தகைநின்றுநோக்கநீள்கடற்பிறந்தகோலக்
கடுங்கதிர்க்கனலிகோப்பக்காரிருளுடைந்ததேபோ
லுடம்பிடைநஞ்சுநீங்கிற்றொண்டொடியுருவமார்ந்து
குடங்கையினெடியகண்ணாற்குமரன்மேனோக்கினாளே.

இ - ள். அந்நெடுந்தகை நின்று தியானித்து நோக்குதலின், கனலியெதிர்க்க இருளுடைந்தாற்போலே உடம்பில் நஞ்சுநீங்கிற்று; அதுநீங்கினபின்பு அவள்வடிவை அவன் கண்ணால்நுகராநிற்க, அவ்வொண்டொடி தன்கண்களாலே குமரன்மேலே நோக்கினாளென்க.

ஆர்ந்து - ஆர. (கஉரு)

நோக்கினாணிறையுநாணுமாமையுங்கவினுநொய்திற
போக்கினாள்வளையும்போர்த்தாள்பொன்னிறப்பசலைமூழ்கிற்
றாக்கினாளநங்கனப்புத்தூணியையமருளாறு
தோக்கியமுருகன்வைவேலோரிரண்டனையகண்ணாள்.

முருகன் அமருளமையாது ஓக்கிய ஒருவேல் இரண்டானலனையகண்; *"அஞ்சுடர் நெடுவே லொன்றுநின் முகத்துச் - செங்கடை மழைக்க ணிரண்டா யீத்தனன்" என்றார்பிறரும்.

இ - ள் அங்ஙனம்பார்த்தகண்ணாள் நிறைமுதலியவற்றையும் வளையையும் முன்பு நொய்திற்போக்கினாள்; போக்கினபின்பு, பசலையைப் போர்த்துக்கொண்டாள்; அப்பொழுது தன்னுள்ளே அம்பெலாமுழுகின; முழுகினபின்பு அவ்வடிவாலே காமற்கு ஓர் அப்புத்தூணியை யுண்டாக்கினாளென்க. (கஉசு)

வேறு.

ஆட்சியைம்பொறியாளனுடம்பெனும்
பூட்சிநீள்கொடிப்புற்றினகத்துறை

* சிலப்பதிகாரம், மலையுடம்படுத்துகாதை ரு.

வாட்கணோக்கெனும்மைவெயிற்றராழல்
வேட்கைநாகத்தின்மீட்டுங்கொளப்பட்டாள்.

வாட்கண் - உவமத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; இது பதுமைக்கு ஒருபெயர்.

இ-ள். தாம் ஏவல்கொள்ளுந் தொழிலையுடைய ஐம்பொறியை ஆளுதலையுடையானது உடம்பென்னும் புற்றிடத்தேயுறைகின்ற வேட்கையாகியநாகத்தினது நோக்கென்னும் எயிற்றினஞ்சாலே, வாட்கண்ணினையுடையாள் மீட்டுங் கொள்ளப் பட்டாளென்க.

மேற்கோளாகிய கொடிவளரப்பட்டபுற்றென்க. *"நாட்ட மிரண்டு மறிவுடம் படுத்தற்குக் - கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்" என்றதனால் இருவருமெதிர்நோக்கியவிடத்துக் கூட்டுங் குறிப்புரைநிகழ்ந்தும் இயற்கைப்புணர்ச்சிநிகழாமையின், அவட்குநிகழ்ந்த முன்னிற்கவியிற்கூறிய வருத்தத்திற்கு இவன் வேட்கைநோக்கமே காரணமென்றறிவிக்க இக்கவியிற்கூறினார். இந்நோக்கமின்றேல் இவட்கு இது நிகழாதென்க. "பெருமையு முரனு மாடூஉ மேன" என்பதனான் இவற்கு வருத்தம் புலப்படாதாயிற்று. (௧௨௭)

மாழ்கிவெய்துயிர்த்தாண்மடவாளெனத்
தோழிமார்களுந்தாயருந்தொக்குடன்
சூழியானையன்னாய்தொடிநஞ்சறும்
வாழியென்றனர்வம்பலர்கோதையார்.

இ-ள். கோதையாராகிய தோழியருஞ்செவிலியரும், மடவாள் மயங்கியுயிர்த்தாள். இனி இதுவேட்கையென்றேகருதிச் சேரத்திரண்டு யானையன்னாய்! வாழ்வாயாக; நீதீண்டித் தீர்ப்பையாயின், நஞ்சறுமென்றாரென்க.

அன்னான், †"தொழிலிற் கூறு மானெ னிறுதி" யின்கூறாய் ஆயேற்றது. (௧௨அ)

கண்ணிற்காணினுங்கட்டுரைகேட்பினு
நண்ணித்தீண்டினுநல்லுயிர்நிற்குமென்
றெண்ணியேந்திழைதன்னையுடம்பெலாந்
தண்ணெனச்சாந்தம்வைத்தாலொப்பத்தைவந்தான்.

இ-ள். அதுகேட்டுக் காதலித்தோரைக்காணினுங் கேட்பினும் தீண்டினும், நல்லுயிர்நிற்கும், அதுநமக்குமொக்குமென்றெண்ணிச் சாந்தம்பூசினாற்போலே குளிரும்படி ஏந்திழைதன்னை உடம்பெல்லாந் தைவந்தானென்க. (௧௨௯)

மற்றுமாதர்தன்வாட்டடங்கண்களா
லுற்றநோக்கமுறுதவொர்நோக்கினிற்
சுற்றிவள்ளலைச்சோர்வின்றியாத்திட்டா
ளற்றமில்லமிர்தாகியவஞ்சொலாள்.

* தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், ரு.
† ,, சொல்லதிகாரம், விளிமரபு, ௧௬.

இ - ள். அமிர்தமாகிய அஞ்சொலாள், தன்கண்களாலே தான் அவற்கன்புற்ற நோக்கத்தைப் பிறர் அயிராததொருநோக்காலே வள்ளலைச்சுற்றித் தப்பாமற்கட்டினாளென்க.

மாதர் - காதல். அற்றமிலமிர்து - ஒருவன் கைப்படாவமிர்து. (க௯0)

வேறு.

க. விஞ்சையர்வீரனென்பார்விண்ணவர்குமரனென்பா
ரெஞ்சியவுயிரைமீட்டானிவனலாலில்லையென்பார
மஞ்சுசூழிஞ்சிமூதூர்மாமுடிக்குரிசிலானை
நஞ்சுசூழ்வேலினாற்கேநங்கையைக்கொடுக்குமென்பார்.

போனவுயிரை மீட்டான் இவனல்லது வேறொருவனில்லை; இவ்வூரையுடைய தனபதி நாளை யிவற்கே நங்கையைக்கொடுக்குமென்பாரென்க. (க௯க)

உ. விளங்கொளிவிசும்பின்வெண்கோட்டிளம்பிறைசூழ்ந்தமின்போ
லவாங்கெழுவடத்தைச்சூழ்ந்துவான்பொனுண்டிளைப்பச்சேந்[ல்
விளங்கதிர்முலைகடமமாலிவனைமார்பெழுதிவைகிற்
றுளங்குபெண்பிறப்புந்தோழியினிதெனச்சொல்லிநிற்பார்.

விசும்பிலே இளையபிறையைச் சூழ்ந்தமின்போலே முத்துவடத்தைச் சூழ்ந்து பொன்னுணைசைதலாலே சிவந்த இளையமுலைகளாலே இவனைமாரபையெழுதி வைகப் பெறின், நிலைநில்லாத பெண்பிறப்பும் நன்றென்று சொல்லி நிற்பாரென்க.

இவனைமார்பெழுதியென்றார், கொடிதென்றதனால். (க௯உ)

௩. அருந்தவஞ்செய்துவந்தவாயிழைமகளிரியார்கொல்
பெருந்தகைமார்பிற்றுஞ்சிப்பெண்மையாற்பிணிக்குநீரார்
கருங்கணின்யாமுங்கண்டாங்காமனையென்றுசொல்லித்
திருந்தொளிமுறுவறசெவ்வாய்த்தீஞ்சொலார்மயங்கினாரே.

இவைமூன்றுமொருதொடர்.

இ - ள். தீஞ்சொலார் என்பார், என்பார, சொல்லிநிற்பாராய், யாமுங் காமனைக்கண்ணாலே கண்டேம; இங்ஙனமன்றி இவன்மார்பிலே தங்கிப் பிணிக்குநீராராய் அருந்தவஞ்செய்துவந்த மகளிர் யார்கொலென்றுசொல்லி மயங்கினாரென்க. ()

பன்மலர்ப்படலைக்கண்ணிக்குமரனைப்பாவைநல்லார்
மன்னவன்பணியின்வாழ்த்திவாசநெய்பூசிநன்னீர்
துன்னிவராட்டிச்செம்பொற்செப்பினுடடுகிலுஞ்சாந்து
மின்னாறும்புகையும்பூவுங்கலத்தொடுமேந்தினாரே.

இ - ள். தனபதியேவலாலே, நல்லார் குமரனைத் துன்னினராய் நெய்பூசி நன்னீராலாட்டி வாழ்த்தித் துகின்முதலியவற்றை யேந்தினாரென்க. (க௯ச)

ஏந்தியவேம்பத்தாங்கியெரிமணிக்கொட்டைநெற்றி
வாய்ந்தபொன்குயிற்றிச்செய்தமரவடியூர்ந்துபோகி
யாய்ந்தநன்மாலைவேய்ந்தவரும்பெறற்கூடஞ்சேர்ந்தான்
பூந்தொடிமகளிர்போற்றிப்பொற்கலம்பரப்பினாரே.

இ - ள். அவர்களேந்தியவற்றைப் பொருந்தமெய்ப்படுத்து மணிக்கொட்டையை நெற்றியிலேயழுத்திப் பொன்னாற்செய்த மரவடியைத்தொட்டுப்போய்க் கூடத்தைச்சேர்ந்தான்; அப்பொழுது மகளிர் கலத்தைப் பரப்பினாரென்க. (௩௯௫)

கன்னியர்கரகநீராற்றுமனைசூழீஇயதொப்பப்
பொன்னடிகழீஇயபின்றைப்புரிந்துவாய்நன்குபூசி
யின்மலர்த்தவிசினுச்சியிருந்தமிர்தினிதிற்கொண்டான்
மின்விரிந்திலங்கும்பைம்பூண்வேற்கணார்வேனிலானே.

இ - ள். கன்னியர் நீராலே பொன்னடியைக் கழுவினபின்பு, வேனிலான் விரும்பி வாய்பூசித் தவிசின்மேலிருந்து அடிசிலை முற்பட இனியவற்றோடேயுண்டானென்க.

* "நீராடிக் கால்கழுவி வாய்பூசி" என்றும், † "கைப்பன வெல்லாங் கடைதலை தித்திப்ப" என்றும், ஆசாரக்கோவையிற்கூறினார். (௩௯௬)

வாசநற்பொடியுநீருங்காட்டிடக்கொண்டுவாய்ப்பப்
பூசறுத்தங்கைநீரைமும்முறைகுடித்துமுக்காற்
காசறத்துடைத்தபின்றைக்கைவிரலுறுப்புத்தீட்டித்
தூசினாலங்கைநீவியிருந்தனன்றோற்றமிக்கான்.

இ - ள். மிக்கவன் பொடியையுநீரையும் அவர்கள் காட்டுதலின், அவற்றைக் கைக்கொண்டு பூசுந்தொழிலைமுடித்து அங்கையிற்கொண்டநீரை முக்காற்குடித்து வாயை முக்காற்றுடைத்து விரலைக் கண்முதலியவுறுப்புக்களிலே நீண்டுவித்துத் துடைத்திருந்தானென்க.

தூசு - ஒலியல். ‡ "முக்காற் குடித்துத் துடைத்து முகத்துறுப் - பொத்த வகையால் விரலுறுத்தி வாய்பூசல்" என்றார் பிறரும். (௩௯௭)

சீர்கொளச்செய்தசெம்பொனடைப்பையுட்பாகுசெல்ல
வார்கழற்குரிசில்கொண்டுகவுளடுத்திருந்தவாங்கட்
போர்கொள்வேன்மன்னனெல்லாக்கலைகளும்புகன்றுகேட்டு
நீர்கொண்மாக்கடலணற்குநிகரில்லைநிலத்தினென்றான்.

இ - ள். பொன்னாற்செய்த அடைப்பையிற் பாக்கும்வெற்றிலையுஞ்செல்ல, குரிசில் அதனைவாங்கிக்கொண்டு தின்றிருந்தவளவிலே, தனபதி, இவன் கலைகளையெல்லாம் விரும்பிக்கேட்டு, இவற்கு நிலத்தில் நிகரில்லையென்றானென்க. (௩௯௮)

---

* ௧௧. † ௨௬. ‡ ஆசாரக்கோவை, ௨௮.

வேறு.

பரிதிபட்டதுபன்மணிநீள்விளக்
கெரியவிட்டனரின்னியமார்த்தன
வரியபொங்கணையம்மெனமளிமேற்
குரிசிலேறினன்கூர்ந்ததுசிந்தையே.

இ - ள். அவ்வளவிலே ஞாயிறுபட்டது; மணியும் விளக்கும் எரியும்படியிட்டனர்; பல்லியங்களுமார்த்தன; தனித்தார்க்குப் பொறுத்தற்கரிய படுக்கைமேலே குரிசிலேறினான்; அப்பொழுது வருத்தமிக்கதென்க. (௧௩௯)

பூங்கணவ்வயினோக்கம்பொறாதபோல்
வீங்கிவெம்மைகொண்டேந்தினவெம்முலை
யீங்கிதென்னெனவிட்டிடைநைந்தது
பாங்கிலாரிற்பரந்துளதல்குலே.

இ - ள். அவள்கண்கள் அவ்விடத்து யானோக்கினநோக்கத்தைப்பொறாதே நிலநோக்கி என்னைவருத்தினாற்போலே, முலைகளும் வீங்கிக் கொடுமைகொண்டு ஏந்தி வருத்தின; இவ்விடத்திற் பொறுமையென்னேயென்று இடைநைந்தது; •பிறரிடுக்கண்கண்டு மகிழ்வாரைப்போலே அல்குல் பரந்ததென்க.

பரந்துளது - ஒருசொல். இனிக் கண்கள்தமக்கு முற்பட்டு வருத்தியதற்குப் பொறாதனபோலே பின்பு முலைகளும் வருத்தினவென்றுமாம். (௧௪0)

முருகுவார்குழலாள்முகிழ்மென்முலை
பெருகுநீர்மையிற்பேதுறவெய்திநின்
றுருகுநுண்ணிடையோவியப்பாவைத
னருகுநோக்கமென்னுயிரலைக்குமே.

இ - ள். குழலாள் ஓவியப்பாவை, அவள் முலைகளும், அவை பெருகுந்தன்மையாலேவருந்துமிடையும், குறிக்கொண்டுநோக்காதநோக்கமும் வருத்துமளவன்றி என்னுயிரைக் கெடுக்குமளவாக்காநின்றனவென்க. (௧௪௧)

புகையவாவியபூந்துகிலந்தல்குல்
வகையவாமணிமேகலைவார்மது
முகையவாவியமொய்குழல்பாவியேன்
பகையவாய்ப்படர்நோய்பயக்கின்றவே.

இ - ள். முகைவிரும்பின மொய்குழலையுடையாளதேந்தல்குலிற் பூந்துகிலும், மேகலையும், பாவியேற்குப் பகையாந்தன்மையையுடையவாய், நோயைப் பயவாகின்றனவென்க.

அல்குலைமறைத்தலின், அவை பகையாயின. (௧௪௨)

போதுலாஞ்சிலையோபொருவேற்கணோ
மாதுலாமொழியோமடநோக்கமோ

யாதுநானறியேனணங்கன்னவர்
காதலாற்கடைகின்றதுகாமமே.

சிலை - காமன்வில்.

இ - ள். அணங்கன்னவளுடைய நுதலோ, கண்ணோ, நோக்கமோ, மொழியோ, காதலாலே காமத்தைமிகப்பண்ணுகின்றது இவற்றில் இன்னதென்று யான் சிறிதும் அறிகின்றிலேனென்றானென்க.

இதனால் உறுப்புக்களெல்லாம் ஒக்கவருத்தினவென்றான். மொழியோவென்றதனான், மொழியுங்கேட்டானென்பது பெற்றாம். அன்றி "அடிகளுக்கிறைஞ்சி" என்னுங் கவியிற்கூற்றைத் தானும் பின்புகேட்டலின், மொழியோவென்றானென்றலுமொன்று. (௧௪௩)

௧. அண்ணலவ்வழியாழ்துயர்நோயுற
வண்ணமாமலர்க்கோதையுமவ்வழி
வெண்ணெய்வெங்கனன்மீமிசைவைத்தொத்
துண்ணோயாவுருகாவுளளாயினாள்.

இதுமுதலாகப் "பூமென்சேக்கை" அளவுமொருதொடர்.

அழுந்துதலுறுகின்ற வருத்தநோய் உறாநிற்க. (௧௪௪)

௨. பெயன்மழைப்பிறழுங்கொடிமின்னிடைக்
கயன்மணிக்கணினல்லவர்கைதொழப்
பயனிழைத்தமென்பள்ளியுட்பைந்தொடி
மயனிழைத்தவம்பாவையின்வைகினாள்.

ஒழுங்குபட்டமின்போன்ற இடையினையும் கண்ணிணையுமுடைய நல்லவர்கை தொழ. துணையுடையோர்க்குப் பயனுண்டாகப் பண்ணின பள்ளி. (௧௪௫)

௩. வணங்குநோன்சிலைவார்கணைக்காமனே
மணங்கொள்பூமிசைமைவரைமைந்தனே
நிணங்தெனெஞ்சநிறைகொண்டகள்வனை
யணங்குகாளறியேனுரையீர்களே.

எல்லாரும் மனங்குழைதற்குக் காரணமான சிலை. பூமிசைத்தோன்றிய முருகன்; குறிஞ்சிநிலத்திற்குத் தெய்வமாகிய முருகன். நிணந்து - பிணித்து. பெரும்பான்மையுந் தெய்வத்தன்மையுடைமையின், மகனேவென்றிலள். உரையீர்களே, ஏகாரம் - வினா. (௧௪௬)

௪. கடைகந்தன்னதன்காமருவீங்குதோ
ளடையப்புல்லினன்போன்றணிவெம்முலை
யுடையவாகத்துறுதுயர்மீட்டவ
னிடையதாகுமெனாருமிலாவியே.

* ஆகத்தணிந்த வெம்முலையுற்ற பசப்புடையும்படிதன்றோளாலே புல்லினன்போ

ன்று தடவி மீட்டவனென்க. இடை - இடம். போகாமணிறுத்துவார் ஒருவருமில்லாத வுயிர். (௧௪௭)

௫. இறுதியில்லமிர்தெய்துநீண்டியன்
றறிவினுடியவம்மலைமத்தமா
நெறியினின்றுகடைந்திடப்பட்டநீர்
மறுகுமாக்கடல்போன்றதென்னெஞ்சமே.

சாதலில்லாமைக்குக் காரணமான அமிர்தத்தை யெய்துந் தேவர்கள் திரண்டு தம்மறிவாலே யதனையாராயவேண்டி அன்று மந்தரமத்தாகநின்று நெறியிற்கடைந்திடப்பட்ட நீர்மறுகுங் கடலென்க. (௧௪௮)

௬. நகைவெண்டிங்களுநார்மடலன்றிலுந்
தகைவெள்ளேற்றணற்றாழ்மணியோசையும்
பகைகொணமாலையும்மைபயுள்செய்யாம்பலும்
புகையில்பொங்கழல்போழ்சுடுகின்றவே.

நாரையுடையமடல். கழுத்திலேதங்கிய மணி. ஆம்பல்-ஆம்பற்பண்ணையுடைய குழல். புகையில்லாவழல் - இல்பொருளுவமை. (௧௪௯)

௭. பூமென்சேக்கையுணூற்றியபூந்திரட்
டாமம்வாட்டுந்தகையவுயிர்ப்பளைஇக்
காமர்பேதைதன்கண்டருகாமநோ
யாமத்தெல்லையொர்யாண்டொத்திறந்ததே.

பூந்தாமம்; திரளையுடைய தாமத்தைவாட்டுந் தகையவாகிய நெட்டுயிர்ப்புக்கலந்து. யாமம் - இரவு.

இ - ள். அண்ணல் அங்ஙனநோயுறுநிற்ப, கோதையும் நல்லவர்கைதொழச் சென்று அவ்வழிப் பள்ளியிலே தெய்வத்தச்சனியற்றிய பைந்தொடிப்பாவைபோலே வைகினாள்; அங்ஙனம்வைகினவளவிலே, திங்கண்முதலியன அழல்போற்சுடாநின்றன; அதனால், எனதுநெஞ்சங் கடல்போல மறுகாநின்றது; இங்ஙனமறுகும்படி யென்னெஞ்சை நிணந்து நிறையைக்கொண்டகள்வனை, யான் காமனோ முருகனோவென்றையமுற்று இன்னனென்றறிகின்றிலேன்; இல்லுறைதெய்வங்காள்! நீங்களுமறையீர்களோ? உரைத்திலிராயினும், என் ஆருயிலாவி, துயர்மீட்டவன் இன்னுமருளுவனோவென்று அவனிடத்தேயாகாநின்றதென்று தெய்வத்தைநோக்கிக்கூறி, உயிர்ப்பளைஇ வெண்ணெயை நெருப்பின்மேலேவைத்த தன்மையையொத்து நெஞ்சுருகிப் பின்னும், அவனவ்விடத்தேயாதலின், இறந்துபடாளாயினாள்; அங்ஙனமிருந்த பேதைக்குத் தன்கண்டந்தநோயாலே இராப்பொழுதினெல்லை ஓர் யாண்டையொத்துக் கழிந்ததென்க. (௧௫0)

௧. மாதியாழ்மழலைம்மொழிமாதரா
டாதியவ்வையுந்தன்னமர்தோழியும்
போதுவேய்குழற்பொன்னவிர்சாயலுக்
கியாதுநாஞ்செயற்பாலதென்றெண்ணினார். (௧௫௧)

உ. அழுதுநுண்ணிடைநையவலர்முலை
முழுதுங்குங்குமமுத்தொடணிந்தபின்
றொழுதுகோதையுங்கண்ணியுஞ்சூட்டினா
ரெழுதுகொம்பனையாரிளையாளையே. (கரு௨)

௩. வேந்துகாயினும்வெள்வளையாயமோ
டேந்துபூம்பொழிலெய்தியங்காடுத
லாய்ந்ததென்றுகொண்டம்மயில்போற்குழீஇப்
போந்ததாயம்பொழிலும்பொலிந்ததே.

இவைமூன்றுமொருதொடர்.

க. காதலையுடைய யாழ்போலு மொழியினையுடைய பதுமை.

உ. நுண்ணிடை - பதுமை. இளையாளென்றது அவளென்னுஞ்சுட்டு. கொம்பனையார் - செவிலியுந்தோழியும்.

௩. நெருநற் பாம்புதீண்டினபொழிலிலே போகவிட்டதென்று தனபதி கோபிக்கினும். ஆய்ந்தது - ஆராயப்பட்ட காரியம்.

இ - ள். அவ்விரா அங்ஙனநீங்கிற்றாக, நுண்ணிடையினையுடையாள் அழுது நையாநிற்க, அம்மாதராள்தாதியாகிய தாயுந் தோழியும்இவள்வருத்தத்திற்கு யாஞ்செய்யத்தகுங் காரியம் யாதென்றெண்ணினார்; எண்ணி அவனையெதிர்ப்பட்ட இடத்தைக் காண்டலும் அவனைக்கண்டாற்போறலின், வேந்துகாயினும் இவள் பொழிலிலே சென்று அவ்விடத்தே விளையாடுதலே காரியமென்றுட்கொண்டு, கொம்பனையார் அவ்விளையாளை முலைமுழுதுங் குங்குமத்தையும் முத்தையுமணிந்தபின்பு கோதையையுங் கண்ணியையுஞ்சூட்டினார்; சூட்டி அப்பொழிலிலே போவென்றுகூற, ஆயமும் மயில் போற்றிரண்டுவந்து தொழுது கூடப்போந்தது; பொழிலும் அப்பொழுது பொலிவு பெற்றதென்க.

அழுதென்றதற்குப் பாம்புகடித்தவிடத்தே போகவிடாநின்றேமென்றழுதாரென்றுமுரைப்ப. (கரு௩)

க. அலங்கலுன்றொடுப்பாரலர்பூக்கொய்வார்
சிலம்புசென்றெதிர்கூவுநர்செய்சுனை
கலங்கப்பாய்ந்தாடுநர்காதலி
னிலங்குபாவையிருமணஞ்சேர்த்துவார். (கருச)

உ. தூசுலாநெடுந்தோகையினல்லவ
ரூசலாடுநரொண்கழங்காடுநர்
பாசமாகியபந்துகொண்டாடுந
ராகியெத்திசையும்மமர்ந்தார்களே.

இவையிரண்டுமொருதொடர்.

க. பாவைகளை வாழ்க்கைப்படுத்துவார்.

உ. தூசிலேயசைகின்றகொய்சகத்தையுடையஆயத்தார். பாசம் - அன்பு.

இ - ள். அவ்வாயத்தார் தொடுப்பார், கொய்வார், கூவுவார், ஆடுவார், சேர்த்துவார், ஊசன்முதலியனவாடுவோராகி எத்திசைகளிலும்போய் அமர்ந்தாரென்க. (௩௯௫)

முருகுவிம்மியமொய்குழலேழைத
னுருகுநோக்கமுளங்கிழித்துள்சுட
வரிவையாடியகாவகங்காணிய
வெரிகொள்வேலவனேகினனென்பவே.

இ - ள். வேலவன், பதுமை தனதுநினைவுமிக்கு வருந்திப்பார்த்தபார்வை நெஞ்சைச்சுடுதலின், அவளையெதிர்ப்பட்ட இடத்தைக்காண்டலும் அவளைக்கண்டாற்போறலின், அவளாடிய காவிடத்தைக் காண்டற்கு ஏகினனென்க. (௩௯௬)

மயிலினோடலுமந்தியினூடலுங்
குயிலின்பாடலுங்கூடிமலிந்தவண்
வெயிலினீங்கியவெண்மணற்றண்ணிழல்
பயிலுமாதவிப்பந்தரொன்றெய்தினான்.

இ - ள். அங்ஙனமேகினவன், அவ்விடத்து மயிலினூடன்முதலியன கூடி மிக்கு வெயிலினின்றுநீங்கிய வெண்மணற்றண்ணிழல்பயிலும் மாதவிப்பந்தரொன்றைச் சேர்ந்தானென்க.

மாதவி - குருக்கத்தி. (௩௯௭)

காதுசேர்ந்தகடிப்பிணைகையது
தாதுமல்கியதண்கழுநீர்மல
ரோதநித்திலவட்டமொராபொன்செய்நாண
கோதைவெம்முலைமேற்கொண்டகோலமே.

இ - ள். கோதையது காதைச்சேர்ந்தன கடிப்பிணை; அவள்கையது கழுநீர்மலர்; அவள் முலையிடத்தன முத்துவடமும்பொன்னாணும்; இஃது அவள்மேற்கொண்டஒப்பனையென்க.

இதனால் அவளொப்பனையைத் தேவர்வியந்துகூறினார். காமநோயினால் நொய்தாக வொப்பித்தார். (௩௯௮)

விண்புதைப்பனவெண்மலர்வேய்ந்துளா
கண்புதைப்பனநாறிரும்பூம்பொழில்
சண்பகத்தணிகோதைநின்றுடனி
நண்பனைநினைபாகறுமேனியே.

இ - ள். சண்பகத்தினது கோதையையொத்த நறுமேனியையுடையாள், அக்கோலத்தோடே நண்பனைநினைத்துப் பொழிலிலே தனியே நின்றாளென்க.

விண்ணை மறைப்பனவாகிய பொழில்; மலராலே வேயப்பட்டு உள்ளிடங்கண்ணைமறைப்பனவாகிய பொழில். அஃது அவன்சேர்ந்த மாதவிப்பொழில். அணி-உவமவுருபு. (௩௯௯)

கறந்தபாலினுட்காசிறுமணி
நிறங்கிளர்ந்துதன்னீர்மைகெட்டாங்கவண்
மறைந்தமாதவிமாமைநிழற்றலிற்
சிறந்தசெல்வனுஞ்சிந்தையினேக்கினன்.

கிளர்ந்து - கிளர. மாதவி - ஆகுபெயர்.

இ - ள். பாலினுள்ளே நீலமணிநிறங்கிளர அது தன்னீர்மைகெட்டாற்போலே, அவள் மறைந்துநின்ற மாதவிப்பூவின்மேலே மாமைநிறம் ஒளியிடுதலிற் சீவகனும் விசாரத்தோடே பார்த்தானென்க.

இவ்வொளி யாதென்று கருதினன். (கசுO)

வரையின்மங்கைகொல்வாங்கிருந்தூங்குநீர்த
திரையின்செல்விகொமேமலர்ப்பாவைகொ
லுரையின்சாயலியக்கிகொல்யார்கொலிவ்
விரைசெய்கோலத்துவெள்வளைத்தோளியே.

வளைந்தநீர்; பெரிய அசைகின்றநீர்.

இ - ள். இவ்வளைத்தோளி வரையரமகளோ, நீரரமகளோ, திருமகளோ, இயக்கியோ, யார்தானென்று ஐயமுற்றனென்க.

பதுமை முன்புகண்டவளாயினும், வேட்கைமிகுதியான் ஐயநிகழ்ந்தது. ()

மாலைவாடினவாட்கணிமைத்தன
காலும்பூமியைத்தோய்ந்தனகாரிகைப்
பாலின்றீஞ்சொற்பதுமையிந்நின்றவள்
சோலைவேய்மருள்சூழ்வளைத்தோளியே.

இ - ள். வாடின, இமைத்தன, தோய்ந்தன; ஆதலால், இவ்விடத்தினின்றவள் வளைத்தோளியாகிய அழகினையுடைய பதுமையென்றுதெரிந்து தேறினனென்க. (கசுஉ)

தேவர்பண்ணியதீந்தொடையின்சுவை
மேவர்தென்றமிழ்மெய்ப்பொருளாதலிற்
கோவத்தன்னமென்சீறடிக்கொம்பனாள்
பூவர்சோலைபுகுவலென்றெணணினன்.

தீந்தொடை - யாழ். மேவருதமிழ் - நாடகவழக்கும், உலகியல்வழக்கும்பொருந்துதல்வரும்அகப்பொருள். மெய்ப்பொருளென்றது முதற்கந்தருவமன்றிச் சுட்டியொருவர்பெயர்கொள்ளப்பட்டு ஐந்துநிலம்பெற்ற கந்தருவமாகியஉலகியல்வழக்கான இயற்கைப்புணர்ச்சியை. பூவர், அர் - பகுதிப்பொருள்விகுதி.

இ - ள். அங்ஙனந்தேறினவன், யாழையுடைய கந்தருவர்பண்ணிய இனிய மணந் தமிழிற்பொருள்; அதுவும் நமக்காமாதலிற் கொம்பனாணிற்கின்ற பூவையுடைய சோலையிலே யானுஞ்சென்று இயற்கைப்புணர்ச்சி புணர்வேனென்றெண்ணினனென்க.

முதற்கந்தருவமன்மையின், எண்ணினனென்றார். (கசுரு)

அல்லிசேரணங்கன்னவட்காயிடைப்
புல்லிநின்றமெய்ந்நாண்புறப்பட்டது
கல்செய்தோளவன்காமருபேருணர்
வெல்லைநீங்கிற்றியைந்தனரென்பவே.

இ-ள். அவன்அங்ஙனமெண்ணிச்சென்றபொழுது அணங்கன்னவட்கு நாணம் நீங்கிற்று; தோளவனுணர்வு அவனெல்லையைக்கடந்தது; அப்பொழுது இருவருங் கூடினரென்க. (௧௬௪)

களித்தகண்ணிணைகாம்பெனவீங்குதோட்
டெளித்தவெள்வளைசேர்ந்ததுமாமையுந்
தளித்தசுண்ணஞ்சிதைந்தனகுங்கும
மளித்தபூம்பட்டணிந்துதிகழ்ந்ததே.

இ-ள். அப்பொழுது கண்ணிணை களித்தன; தோளில் வளைகளுமொலித்தன; போனமாமைநிறமும் வந்துசேர்ந்தது; பூசினசுண்ணமுங் குங்குமமுமழிந்தன; இவனால் அருள்பண்ணப்பட்ட பட்டும் அணியப்பட்டு விளங்கிற்றென்க.

இவள் புணர்ச்சியைக்கைவிட்டுப் பட்டணிந்தாளாதலின், நின்றதென்றார். ()

குவளையேய்ந்தகொடுங்குழைகூந்தலுட்
டிவளும்வாழியசெம்பொறிவண்டுகா
ளிவளகூரெயிறீனுந்தகையவோ
தவளமெல்லினர்த்தண்கொடிமுல்லையே

வாழிய - அசை.

இ-ள். இவள்கூந்தலிலே துவளும்வண்டுகாள்! முல்லைகள் இவளுடைய எயிற்றையீனுந் தகைமையையுடையவோ, உளவேற் கூறுமினென்றானென்க. (௧௬௫)

பொன்றுஞ்சாகத்துப்பூந்தண்கள்போழ்ந்தபு
ணின்றிப்பூண்கொளிமுலைச்சாந்தலா
லன்றித்தீர்ப்பனயாவையுமில்லையே
யென்றுமாதரெழினலமேத்தினான்.

இ-ள். நீதங்கியமார்பிலே நின்றுதுகள்களாகியவேல் முன்பேபட்டு உருவிக் கிடந்த பழம்புண்களை இன்று இந்தமுலையிற்சாந்தல்லது மாறுபட்டுத்தீர்ப்பன வேறொன்றுமில்லையென்றுகூறி யேத்தினானென்க.

இவையிரண்டும் நயப்பு. பொன்னென்றது பதுமையை. ஆகம் - நெஞ்சு. இனித் தலைவிமுன்னுதலிற் பொன்றுஞ்சாகமென்று தன்னைப்புகழ்தலுமாம். (௧௬௭)

௧. கண்ணிவேய்ந்துகருங்குழல்கைசெய்து
வண்ணமாலைநடுச்சிகையுள்வளைஇச்
செண்ணவஞ்சிலம்பேறுதுகளவித்
தண்ணலின்புறத்தாற்றலினாற்றினாள். (௧௬௮)

உ. திங்களும்மறுவும்மெனச்சேர்ந்தது
நங்களன்பெனநாட்டிவலிப்புறீஇ
யிங்கொளித்திடுவேனுமரெய்தினர்
கொங்கொளிக்குழலாயெனக்கூறினன்.

இவையிரண்டுமொருதொடர்.

க. நுண்ணிய தொழிலையுடைய சிலம்பினேறின பூந்தாமைதயுந் துடைத்து.

உ. நங்கள், கள்-அசை. நாட்டி-பிரிவென்பதொன்றுண்டென்று நிலைபெறுத்தி. வலிப்புறீஇ - பிரிந்தும் பிரிவிலேமென்று தெளியும்படி நெஞ்சைவற்புறுத்தி.

இ - ள். அண்ணல் வேய்ந்து, மாலையைக் கொண்டைக்குநடுவே வளையமாக வைத்துக் குழலைக்கைசெய்து, துகளவித்து, இன்புறுத்தி, நம்மன்பு திங்களுமறுவு மென்னும்படி சேர்ந்ததென்றுகூறி நாட்டி, வலிப்புறீஇ ஆற்றுவித்தலின், ஆற்றினாள்; அங்ஙனம் ஆற்றினபின்பு குழலாய்! நமரெய்தினர்; அவர்காணாதபடி இங்கே யொளிப்பேனென்று கூறினனென்க.

உடன்றேய்ந்து உடன்வளர்தலின், மறுவுவமை. (௧௬௯)

மழையிடைக்குளித்திட்டதோர்வான்மினிற்
றழையிடைக்குளித்தான்றகைவேலினா
னிழையிடைக்குளித்தேந்தியவெம்முலை
வழையிடைக்குளித்தார்வந்துதோன்றினர்.

இ - ள். மழையிடத்தே மறைந்தமின்போற் கடிதாக வேலினான் தழையிடத்தேமறைந்தான்; அப்பொழுது பூணிடத்தே மறைந்தேந்தின முலையினையுடைய மறைந்தவாயத்தார் வந்து தோன்றினரென்க. (௧௭௦)

மின்னொர்பூம்பொழின்மேதகச்செல்வதொத்
தன்னநாணவசைந்துசிலம்படி
மென்மெலம்மலர்மேன்மிதித்தேகினா
ணன்னலம்மவற்கேவைத்தநங்கையே.

இ - ள். அன்பொன்றுமே அவனுக்கு உதவியாகவைத்த நங்கைதான் ஏகினாளென்க.

முற்பிறப்பே தொடங்கி அன்புவைத்தவளென்றுமாம். ஒருபொழிலிலே மின் பெருமைதகச் செல்லுந்தன்மையையொத்து அடியாலேமிதித்து, அசைந்து, அன்ன நாண வேகினாளென்க. மென்மெலமலர்மேலென்றும் பாடம். (௧௭௧)

திங்கள்சூழ்ந்தபன்மீனெனச்சென்றெய்தி
நங்கைதவ்வையுந்தோழியுநண்ணினா
ரங்கவாயமடிப்பணிசெய்தபின்
றங்கள்காதலினற்றகைபாடினார்.

இ - ள். திங்களைச்சூழ்ந்த மீனென்னும்படி சென்றெய்தி அவ்விடத்தே ஆயம்

ஏவல்செய்தபின்பு அவள்செவிலியுந்தோழியுஞ் சென்றணுகினர். இங்ஙனம் எல்லாருஞ்சேர்ந்து அவளை நலம்பாராட்டினரென்க.

தௌவை - செவிலிக்கு மூத்தவள். பாம்புதீண்டின பொழிலாதலிற் காவலாக வந்தாரென்க. (கஎஉ)

தழையுங்கண்ணியுந்தண்ணறுமாலையும
விழைவசேர்த்துபுமெல்லெனவேகினா
முழையுண்மூரிமுழங்கரியேறனான்
பழையநண்பனைப்பண்புளியெய்தினான்.

இ - ள். அவர்கள் தழை முதலியனவற்றில் அவள் விரும்புவனவற்றைச்சேர்த்தி அவளைக்கொண்டுபோனார்; போனபின்பு சீவகனும் அவள்குணங்களைநினைத்து அந்நினைவோடே உலோகபாலனைச் சென்றெய்தினானென்க.

பண்ப - கூட்டத்திற்பொற்ற குணங்கள். (கஎங)

வேறு.

பூமியைப்பாடற்கொத்தபொறியினானாதலானு
மாமகளுயிரைமீட்டவலத்தினானாதலானு
நேமியான்சிறுவனன்னநெடுந்தகைநேருமாயி
னாமவற்காகிதாங்நங்கையைக்கொடுத்துமென்றான்.

இ - ள். அவர்கள்அங்ஙனமிருக்கின்றவளவிலே, தனபதி மதிதரனைநோக்கி, பதுமையையுயிரைத்தந்த வெற்றியையுடையனாதலானும், உலகை யாளுதற்குப்பொருந்தின உத்தமவிலக்கணத்தையுடை யனாதலானும், காமனையொத்த நெடுந்தகை யுடன்படுவனாயின், நமக்குநன்றாக நாம பதுமையை அவனுக்குக் கொடுக்கக்கடவேமென்று கூறினானென்க. (கஎச)

மதிதரனென்னுமாசின்மந்திரிசொல்லக்கேட்டே
யுதிதரவுணர்வல்லானுமொப்பினுமுருவினானும்
விதிதரவந்ததொன்றேவிளங்குபூண்முலையினாளைக்
கொதிதருவேலினாற்கேகொடுப்பதுகருமமென்றான்.

ஒப்பு * "பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ - டுருவு நிறுத்த காம வாயி-ணிறையே யருளே யுணர்வொடு திருவென - முறையுறக் கிளந்த வொப்பினது வகையே" என்பன. உரு - உட்கு. அது விடந்தீர்த்தாற்குக் கொடுப்பேமென்ற மொழி பிறழாமற் காக்கவேண்டுமென்னுமச்சம்.

இ - ள். தனபதி அங்ஙனங்கூறக்கேட்டு, மதிதரனென்னுமமைச்சன் ஒப்பானும், உருவானும் பதுமையை வேலினாற்குக் கொடுப்பதேகருமம், இது யானும் முன்பே நினையாநிற்பேன், இதுதான் விதிதரவந்ததொன்றேயென்றானென்க. (கஎரு)

உள்விரித்திதனையெல்லாமுரைகளென்மொழிந்துவிட்டான்
வெளிறிட்டெரியுச்சென்றுங்குரைத்தலுங்குமரன்றேறி

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல், உரு.

வெள்ளிலேயணிந்தவேலான்வேண்டியதாகவென்று
னள்ளிலேவேல்கொண்மன்னற்கமைச்சனஃதமைந்ததென்றான்.

இ - ள். அதுகேட்டதனபதி மதிதரனைநோக்கி இக்காரியத்தையெல்லாம் உள் விரித்து அவனுக்குத் தெள்ளிதினுரைப்பாயாகவென்று கூறிவிட்டான்; அவனுஞ்சென்று அப்படியே தெரியவுரைத்தவளவிலே, சீவகனும் தேறித் தனபதிவிரும்பியகாரியம் அங்ஙனமாகவென்றான்; அதுகேட்டவமைச்சனுந் தனபதிக்கு அக்காரியமப்படியே முடிந்ததென்றானென்க. (௩௭௬)

க. பொன்றியவுயிரைமீட்டான்பூஞ்சிகைப்போதுவேய்ந்தா
னன்றியுமாமெய்தீண்டியளித்தனனழகின்மிக்கா
ளென்றியமகளிர்தாமேயுற்றவர்க்குரியரென்று
வென்றிகொள்வேலினுற்கேபான்மையும்விளைந்ததன்றே.(௩௭௭)

உ. கோப்பெருந்தேவிகொற்றகோமகனிவைகளுடி
யாப்புடைத்தையற்கின்றேநங்கையையமைகவென்னத்
தூப்புரிமுத்தமாலைதொடக்கொடுதூக்கியெங்கும்
பூப்புரிந்தணிந்துகோயில்புதுவதுபுனைந்ததன்றே.

இவையிரண்டுமொருதொடர.

இ - ள். தனபதியுந் திலோத்தமையும் உலோகபாலனுந் தம்மிற்கூடி, அழகின் மிக்கான்; உயிரைமீட்டானுதலான், நாமும் நிதியுநல்கி மகட்டருமென்றவவை தாமே வந்தொன்றிய; அன்றியும் போதுவேய்ந்தானுதலானும் தீண்டினானுதலானும் "உற்றார்க்குரியர்பொற்றொடிமகளிர" என்றுகூறியபான்மையும் வேலினாற்கேவிளைந்ததல்லவோவென்று இவைகளைநாடி, பதுமையை யவனுக்கு இப்பொழுதேகொடுத்தலுடைத்து; நீர் மணத்திற்குவேண்டுவனவமைக்கவென்று உழையரைநோக்கிக்கூறினாராக; முத்தமாலையைச் சல்லியுந்தூக்குமாகநாற்றி எங்கும் பூவைவிரும்பியணிந்து ஒரு கோயில் புதிதாகப் புனையப்பட்டதென்க. (௩௭அ)

கணிபுனைந்துரைத்தநாளாற்கண்ணரியகோயிறன்னுண்
மணிபுனைமகளிர்நல்லார்மங்கலமரபுகூறி
யணியுடைக்கமலமன்னவங்கைசோமுன்கைதன்மேற்
றுணிவுடைக்காப்புக்கட்டிச்சுற்றுபுதொழுதுகாத்தார்.

இ - ள். கணிகூறியநாளிலே, நன்றென்றுகருதிய கோயிலிலே, நல்லார் மங்கலமரபுகூறி முன்கையிடத்தே இருவர்க்குங் காப்பைக்கட்ட, மகளிர் தொழுது சுற்றிப் புறப்படாமற் காத்தாரென்க.

கட்டி - கட்ட. (௩௭௯)

மழகளிற்றெருத்திற்றந்தமணிக்குடமண்ணுநீரா
லழகனைமண்ணுப்பெய்தாங்கருங்கடிக்கொத்தகோலந்
தொழுதகத்தோன்றச்செய்தார்தூமணிப்பாவையன்னார்
விழுமணிக்கொடியனாளும்விண்ணவர்மடந்தையொத்தாள்.

இ - ள். மணிப்பாவையன்னவர் அழகனைக் களிற்றினெருத்திற்றந்த நீராலே குளிப்பாட்டி அவ்விடத்தே கலியாணத்திற்கொத்த ஒப்பனையை நன்குமதிக்கும்படி தோன்ற ஒப்பித்தார்; அவ்வொப்பனையாலே கொடியன்னாருந் தேவர்மகளை யொத்தா ரென்க. (௧௮௦)

வேறு.

கயற்கணாளையுங்காமனன்னானையு
மியற்றினார்மணமேதகுந்தன்மையார்
மயற்கையில்லவர்மன்றலின்மன்னிய
வியற்கையன்புடையாரிணையந்தார்களே.

இ - ள். தனபதிமுதலாயினார் பதுமையையுஞ் சீவகனையும் மணத்தைமுடித்தார்; முடித்தபின்பு அவர் தம்மிற்கூடினாரென்க.

கந்தருவமணம்போலே முன்பேமன்னிய இயற்கைப்புணர்ச்சியாலுள்ளவன்பை யுடையாரென்க. கூடியபடி மேற்கூறுகின்றார். (௧௮௧)

வாளும்வேலுமலைந்தரியார்ந்தகண்
ணாளும்மார்கழன்மைந்தனுமாயிடைத்
தோளுந்தாளும்பிணைந்துருவொன்றெய்தி
நாளுநாகர்நுகர்ச்சிநலத்தரோ.

இ - ள். கண்ணாளுமைந்தனும் அவ்விடத்தே, தோளுந்தோளும், தாளுந்தாளும் பிணைதலின், ஒருவடிவைப்பெற்று, நாகர் நாடோறுநுகர்கின்ற நுகர்ச்சியின்பத்தை யுடையராயினாரென்க. (௧௮௨)

௧. தணிக்குந்தாமரையாணலந்தன்னையும்
பிணிக்கும்பீடினியென்செயும்பேதைதன்
மணிக்கண்வெம்முலைதாம்பொரவாயவிழ்ந்
தணிக்கந்தன்னவன்றாரங்குடைந்ததே. (௧௮௩)

௨. பரிந்தமாலைபறைந்தனகுங்கும
கரிந்தகண்ணரிகலந்தமகிழ்ச்சியு
ளெரிந்தமேகலையார்த்தனவஞ்சிலம்
பிரிந்தவன்னிளையார்விளையாடவே.

இவையிரண்டுமொருதொடர்

௧. எல்லாரழகையுந்தோற்பிக்குந் திருவினழகைப் பிணிக்குமபீடு இருவர்க்கும்பொது. வாயவிழ்தல் - அரும்புவாயவிழ்தலும், அவ்விடத்தினின்றுநிலைகுலைதலுமாம்; தார் - மாலையுந்தூசியுமாம்; சிலேடையால்.

௨. கரிந்த - கலவியாற்கரிந்தன. கலத்தல் - முயக்கம்.

இ - ள். அங்ஙனங் கலந்தமகிழ்ச்சியாலே யிளையார் விளையாடாநிற்க, பேதை தன்முலையாகிய யானை போர்செய்தலின், நிலைகுலையாதவன் தார் நெகிழ்ந்து அவ்விடத்தேயுடைந்தது; அப்பொழுது அவன்மார்பிலே முத்தமாலைகளற்றன; குங்குமமழிந்

தன; தலையிற்கண்ணிகரிந்தன. அவைபொருது பின்பு அவன்போர்செய்தலான், மேகலைகளற்றன; சிலம்புகளாற்றூதார்த்தன; வண்டுகளிரிந்தன; இனித்திருமகளைப் பிணிக்குமிவர் பீடு மேலென்செய்யும்; அவை நம்மாற்கூறுதற்கரியவென்றாரென்க. (௧௮௪)

கொழுமெனின்னகிற்கூட்டுறும்மென்புகை
கழுமுசேக்கையுட்காலையுமாலையுந்
தழுவுகாதறனைப்பிலாசெல்பவே
யெழுமையுமியைந்தெய்தியவன்பினார்.

இ - ள். எழுபிறப்பும் பொருந்திப்பெற்ற அன்பினார், தழுவுகாதலாலே நெய்த்த அகிற்புகைதிரண்டசேக்கையிலே, காலையுமாலையுமுட்பட நீக்கமில்லாராய், அங்ஙன நடத்துவரென்க.

மென்புகை - மெல்லியபுகை. கூட்டு - கட்டிமுதலியன. (௧௮௫)

நாறியுஞ்சுவைத்துநரம்பின்னிசை
கூறியுங்குளிர்நாடகநோக்கியு
மூறின்வெம்முலையாலுழப்பட்டுமவ்
வேறனன்னவகும்வைகலுமென்பவே.

இ - ள். அங்ஙனங் காலையுமாலையுந் தீண்டத்தக இனிய முலையாலுழப்பட்டிருக்கவும், அவ்வேறனன் பின்னும் வேட்கையினைத்தற்காகத் தன்மேனியிலே நறியனநாறப்பட்டும், நாவிற்கினியன நுகர்ந்தும், இசையைக்கொண்டாடியும், நாடகங்களை நோக்கியும் நாடோறுந் தங்குமென்க. (௧௮௬)

வேறு

விரிகதிர்விளங்குபன்மீன்கதிரொடுமிடைந்துதிங்க
டெரிகதிர்திரட்டிவல்லான்றெரிந்துகோத்தணிந்தபோலுஞ்
சொரிகதிர்முத்தமின்னுந்துணைமுலைத்தடத்தில்வீழ்ந்தான்
புரிகதிர்ப்பொன்செய்மாலைபுனைநுதிப்புலவுவேலான்.

மிடைந்து - மிடைய. அணிந்த - பெயர். புரிகதிர் - மிக்ககதிர். கதிர்விளங்கு மீன்களின்கதிரோடே மிடையும்படி திங்களின்கதிரைத் திரட்டி வல்லவன் கோத்தணிந்தனவற்றை யொக்குங் கதிரையுடைய முத்தமின்னு முலையென்க.

இ - ள். வேலான், அங்ஙனந் துப்புரவுகளெல்லாநுகர்ந்தபின்னும் முலைத்தடத்தே வீழ்ந்தேவிட்டானென்க. (௧௮௭)

வேறு.

எழின்மாலையென்னுயிரையான்கண்டேனித்துணையேமுலையிற்றாங்கிக்
குழன்மாலைக்கொம்பாகிக்கூரெயிறுநாப்போழ்தலஞ்சியஞ்சி
யுழன்மாலைத்தீங்கிளவியொன்றிரண்டுதான்மிழற்றுமொருநாட்காறு
நிழன்மாலைவேனனீண்டகண்ணைநெய்தோய்ந்தகளிரேமேனி.

எழின்மாலையென்னுயிர் - அழகையியல்பாகவுடைய வென்னுயிர்.

இ - ள். யாவருங்காணுதவுயிரை யான்கண்டேன்; அதன்றன்மைகூறுமளவில் இவ்வளவே கூறலாவது: முலையினையுடைத்தாய், நீண்டகண்ணினையுந் தளிரையொக்குமேனியையுங் குழலையுமாலையையுமுடையதோர் கொம்பாய், கூரெயிறுபோழ்தற்கு அஞ்சி யஞ்சி யுழலுமியல்பையுடைய தனதுநாத்தான் ஒருநாளளவும் ஒன்றிரண்டு கிளவியை மிழற்றுமென்க.

சினைவினையோடு முடிந்தது. இது நயப்பு. (கஅஅ)

மாநீர்மணிமுகிலின்மின்னுக்கொடிநுசுப்பின்மயிலஞ்சாய
லேநீரிருபுருவமேறியிடைமுரிந்துநுடங்கப்புல்லித்
தூநீர்மலர்மார்பன்றொன்னலந்தான்பருகித்துளும்புந்தேறற்
றேனீர்மலர்மாலைதேன்றுளித்துமட்டுயிர்ப்பச்சூட்டினானே.

இன் - ஏழனுருபாதல் புறனடையாற் கொள்க. ஏநீரிருபுருவம் - மேற் றன்னைப் புணர்ச்சியிலே ஏவுகின்ற புருவம். மட்டுத்தேறலெனமாறிக் காமபானத்தின் றெளிவென்க. தேனினத்தையுடைய நீர்ப்பூவாற்செய்த மாலை.

இ - ள். முகிலிடத்து மின்போலு நுசுப்பினையுடைய சாயல், துளும்புமட்டுத் தேறலைப்பருகுதலாலே தூயநீர்மையையுடைய மலர்ந்தமார்பன்றான் அவடொன்னலத்தைப் புருவமேறிநுடங்கும்படி புல்லி, பின்னும் மாலையைத் தேன்றுளித்துயிர்க்கும்படி சூட்டினானென்க.

உயிர்த்தல் - சுமைபோக்குதல் (கஅகூ)

வேறு.

தேனடைந்திருந்தகண்ணித்தெண்மட்டுத்துவலைமாலை
யூனடைந்திருந்தவேற்கணொண்டொடியுருவவீணை
தானடைந்திருந்தகாவிற்பாடினானிமைதீர்வான்
கூனடைந்திருந்ததிங்கட்குளிர்முத்தமுலையினாளே.

இ - ள். கண்ணியையும் மாலையையுங் கண்ணினையுந் தொடியையுமுடைய தேசிகப்பாவை, தான் பொருந்தியிருந்தபொழிலிலே தனிமைதீர்தற்கு வீணையைப் பாடினாளென்க.

தேன் - தேனினம். கூன் - வளைவு. (ககூ0)

வாரதளிர்தழைந்துபோதுமல்கிவண்டுறங்குங்காவிற்
சீர்கெழுகுரிசில்புக்கான்றேசிகப்பாவையெனனுங்
கார்கெழுமின்னுவென்றநுடங்கிடைக்கமழ்தண்கோதை
யேர்கெழுமயிலனாளையிடைவயினெதிர்ப்பட்டானே.

இ - ள். குரிசில் காவிலே புக்கான்; புக்கவன் தேசிகப்பாவையென்றுபெயர் கூறுமிடையினையுங் கோதையினையுமுடைய பரத்தையை அவ்விடத்தே கண்டானென்க. (ககூக)

சிலம்பெனும்வண்டுபாடமேகலைத்தேன்களார்ப்ப
நலங்கவின்போதுபூத்தபூங்கொடிநடுங்கிநாணக்

கலந்தனன்காமமாலேகலேயினதியல்பிற்கூட்டப்
புலம்புபோய்ச்சாயலென்னும்புதுத்தளிரீன்றதன்றே.

இ-ள். அவயவவழகுஞ் சமுதாயசோபையுமாகிய பூவைப்பூத்த பூங்கொடி நாணும்படி சென்றுசேர்ந்தான்; சேர்ந்தவன் காமமாகியமாலையைக் கந்தருவழணங் கூறிய நூலினியல்பாலே, பாட ஆர்ப்பச் சேர்த்தினுகை; அக்கொடி தனிமைநீங்கித் தளிரையீன்றதென்க. (ககஉ)

சாந்திடைக்குளித்தவெங்கட்பணைமுலைத்தாமமாலைப்
பூந்தொடியரிவைபொய்கைப்பூமகளனையபொற்பின்
வேந்தடுகுருதிவேற்கண்விளங்கிழையிவர்களுளு
மாய்ந்தடிபரவவைகுமரிவையர்க்கநங்கனன்னன்.

தாமம் - ஒழுங்கு. முலையினையும் மாலையினையும் பூமகளனையபொற்பினையுமுடைய வரிவை - பதுமை. வேந்து - தனபதி. அடுகின்றவேற்கண்ணையுடைய விளங்கிழை - திலோத்தமை.

இ-ள். அநங்கனன்னன் வேந்து, விளங்கிழையென்ற இவர்கள் நாளுமாய்ந்து தன்னைப்பரவுதலாலே தான் அரிவையடியிலே தங்காநிற்குமென்க.

பதுமையையும், பரத்தையையும் ஒக்கக் கூறலாகாமையுணாக. (ககங)

இங்ஙனமிரண்டுதிங்களேகலுமேகவேலா
னங்ஙனம்புணர்ந்தவன்பினவண்முலைப்போகநீக்கி
யெங்ஙனமெழுந்ததுள்ளமிருளிடையேகலுற்றான்
றங்கியபொறியினுக்கந்தனக்கோர்தேராகநின்றான்.

இ-ள். இங்ஙனம் இரண்டுதிங்கள் சென்றவளவிலே, வேலான் தங்கிய நல்வினையினுக்கந் தேராகநின்றவன், அங்ஙனமுழுவலான்வந்த அன்பினையுடையவள் முலைப்போகத்தைநீக்கி இருளிடையேகலுற்றான்; அதற்கு உள்ளம் எங்ஙனமெழுந்த தென்க.

கொண்டுபோதலின், நல்வினை தேராயிற்று. பிரிவிற்குத் தேவர்வருந்தினர். ()

தயங்கிணர்க்கோதைநன்மேற்றண்ணெனவைத்தமென்றோள்
வயங்கிணர்மலிந்ததாரான்வருந்துறுவகையினீக்கி
நயங்கிளருடம்புநீங்கிநல்லுயிர்போவதேபோ
லியங்கிடையறுத்தகங்குலிருளிடையேகினனே.

வகை - அவளை யவசமாக்குதல். நல்லுயிர் - ஆன்மா; அது கனவிடைப்போய் நுகர்ந்து மீண்டும் அவ்வுடம்பின்கண்வருமாறுபோல, இவனும் பலவையுநுகர்ந்து பின்பு கூடுவெனென்றுணர்க. இனி உடம்பு நல்லுயிரை நீங்கினாற்போலென்று முரைப்ப.

இ-ள். தாரான், தன்மேலே பதுமைவைத்தகையை அவள்வருந்தாதபடிநீக்கிக் கங்குலிலே நல்லுயிர்போந்தன்மைபோலே இயக்கத்தைநடுவறுத்த இருளிடத்தே யேகினனென்க. (ககரு)

வேறு.

நீணிறக்குழனேர்வளைத்தோளியைத்
தானுமக்கிடைநீத்தலுந்தன்பினே
வேணிறக்கண்விழித்தனளென்பவே
பாணிறத்துகிற்பையரவல்குலாள்.

இ-ள். பதுமையைச் சீவகன் உறக்கத்திடத்தே பிரிந்தானாக, தான்பிரிந்த பின்னே அவள் கண்விழித்தாளென்க. (௧௧௬)

ஆக்கையுள்ளுறையாவியெடுத்தவண்
யாக்கைநாடியயர்வதுபோலவுஞ்
சேக்கைநாடித்தன்சேவலைக்காணிய
பூக்கணாடுமோர்புள்ளுமொத்தாளரோ.

யாக்கைநாடி - பிணித்தலைத்தேடி.

இ-ள். அங்ஙனம்விழித்தவள் முயங்குதலைத்தேடிக் காணாமையின், உடம்பு தான் தன்னுள்ளே உறைகின்ற உயிரைக்கெடுத்து வருந்துவதொன்றுண்டாயின், அதனைப்போலவும் வருந்தி, அவனிருப்பிடங்களைத் தேடுகின்றபொழுது தன்சேவலைக்காணவேண்டிச் சேக்கையிலே தேடி அங்குக்காணாமையின், அது தங்கும் பூக்களைத் தேடுமன்னத்தையும் ஒத்தாளென்க. (௧௧௭)

புல்லும்போழ்தினும்பூணுறுதேமெனை
மல்லற்காளையைவைதுமிழற்றுவா
யில்லினீக்கமுரைத்திலைநீயெனச்
செல்வப்பைங்கிளிதன்னையுஞ்சீறினாள்.

இ-ள். நீ எனக்கன்புடையானைப்போலே, என்னை யவன் விரும்பிப் புல்லுகின்றகாலத்தே நம்முயக்கமிறுகில் இவட்குநோமெனக் காளையைவைது எனது மென்மையின் வளப்பத்தைக் கூறிப்போதுகின்றாய், இல்லினின்றும் அவனீங்குகின்றநீக்கத்தை எனக்குரைத்திலையென்று தன் கிளிதன்னையுஞ் சீறினாளென்க.

பூணுமுத்திலென்றுமாம் (௧௧௮)

ஓவியக்கொடியோபபருந்தன்மையெம்
பாவைபேதுறபபாயலினீங்கிநீ
போவதோபொருளென்றிலைநீயென
பூவையோடும்புலம்பிமிழற்றினாள்.

பாயலினின்றுமென்பதோரிடைச்சொல் ஐந்தாவதற்குவிரிக்க.

இ-ள். எம்பாவை பேதுறும்படி நீ பாயலினின்றுநீங்கிப்போவது காரியமோ வென்று கூறிற்றிலையென்று ஒப்பருந்தன்மையையுடைய ஓவியக்கொடி பூவையோடு வருந்திக் கூறினாளென்க.

பாவையென்றது - பட்டாங்குகூறுதற்கண்வந்தது; *"அம்பலம்போற் - கோலத்தினாள்பொருட்டாக" என்றாற்போல. (௧௧௯)

---

* திருச்சிற்றம்பலக்கோவையார், உ௭.

தன்னொப்பாரையில்லானைத்தலைச்சென்றெம்
பொன்னொப்பாளொடும்போகெனப்போகடாய்
துன்னித்தந்திலைநீயெனத்தூச்சிறை
யன்னப்பேடையொடாற்றக்கழறினாள்.

போகவிடாய் - விகாரம்.

இ - ள். நீ அவனிடத்தேசென்று எம்பொன்னொப்பாளொடுங் கூடப்போவா யாக வென்றுகூறி ஒப்பிலானைப் போகவிடாயாய் என்னிடத்தே கொண்டுவந்திலை யென்று அன்னப்பேடையோடே மிகக் கழறினாளென்க. (௨௦௰)

மையில்வாணெடுங்கண்வளராதன
மெய்யெலாமுடையாய்மெய்ம்மைகாண்டிநீ
யையன்சென்றுழிக்கூறுகென்றாய்மயில்
கையினாற்றொழுதாள்கயற்கண்ணினாள்.

கண் - பீலிக்கண். கண்ணென்பதற்கேற்ப வாளென அடைகூறினார்.

இ - ள். துயிலாதனவாகிய கண்களை மெய்யெங்குமுடையாய்; நீயுண்மைகாண்பை; ஐயன்சென்றவிடத்தைக் கூறென்று மயிலைக் கயற்கண்ணாள் கையாற்றொழுதாளென்க.

தனக்குத்தோற்றுத் துயிலாத கண்களுடைமையின், அவனைக் காட்டுமென்று தொழுதாள். (௨௦௧)

வளர்த்தசெம்மையைவாலியையான்பொருள்
விளக்குவாய்விளக்கேவிளக்காயிவ
ணளித்தகாதலொடாடுமென்னாருயி
ரொளித்ததெங்கெனவொண்சுடர்நண்ணினாள்.

பிள்ளைகளுக்கு விளக்கங்காவலாகயிடுதலின், எங்களைவளர்த்த மனக்கோட்டமின்மையுடையையென்றாள். வாலியை - தூயை.

இ - ள். விளக்கே! நல்லபொருள்களைக் கண்ணிற்குக்காட்டுவாய், நீதான் செம்மையை, வாலியையாதலான், நடந்துதிரியுமென்னுயிர் எவ்விடத்தே யொளித்தது; அதனை யெனக்குவிளக்காயென்று விளக்கைச் சேர்ந்தாளென்க. (௨௦௨)

பருகிப்பாயிருணிற்பினாறெனக்
கருகியவ்விருள்கான்றுநின்மெய்யெலா
மெரியநின்றுநடுங்குகின்றாயெனக்
குரியதொன்றுரைக்கிற்றியென்றாடினாள்.

விளக்காமையின், அதனை இழித்துக்கூறுகின்றாள்.

இ - ள். அவாவின்மிகுதியால் அறுதென்றுபாராதே இருளைப்பருகி, அவ்விருள் வயிற்றிலேநிற்கின் அறுதென்றுகருதி, அதனை முகங்கருகிக்கான்று பின்னுந் தங்கிற்றுளதேல் அதுவருத்துமோவென்று நின்னுடம்பெல்லாமெரியாநிற்க நடுங்குகின்றநீ எனக்குரியதோர் காரியத்தை யுரைப்பையென்று வெறுத்தாளென்க.

உரைக்கிற்றி - இகழ்ச்சி. (௨௦௩)

கோடிநுண்டுகிலுங்குழையுநினைக்
காடுசாந்தமுமல்லவுநல்குவேன்
மாடமேநெடியாய்மழைதோய்ந்துளாய்
நாடிநண்பனைநண்ணுகநன்றரோ.

மாடத்திற் கொடிகளிலே கோடியும், அவைநாட்டுதற்குப்பண்ணுந்துளைகளும், சுதையுமென்க. கோடிப்புடைவையும், மகரக்குழையும், சந்தனமும்போல் ஒரு பொருள் தோன்றிற்று.

இ - ள். மாடமே! எப்பொருள்களையுங்காணவல்லாய், ஈரமுடையாய், நினக்கு இவற்றைத்தருவேன்; நண்பனை நாடி நணுகுவாயாக; அது நினக்கு நன்றென்று ளென்க.

அவனும் பலதருவனென்றாள். (உ0ச)

ஆடகக்கொழும்பொன்வரைமார்பனைக்
கூடப்புல்லிவையாக்குற்றமுண்டென
நீடெரித்திரணீண்மணித்தூணொடு
சூடகத்திரடோளணிவாட்டினாள்.

இ - ள். பொன்வரைபோலுமார்பனைக் கூடும்படி தழுவிவையாதகுற்றம் நுமக் குண்டென்றுகூறி எரித்திரள்போலு மணித்தூணோடேயெற்றிச் சூடகத்தையுந் தோளணியையும் போக்கினாளென்க. (உ0ரு)

கொலைகொள்வேலவன்கூடலனேகினா
னிலைகொள்பூணுமக்கென்செயுமீங்கென
மலைகொள்சந்தனம்வாய்மெழுக்கிட்டதம்
முலைகொள்பேரணிமுற்றிழைசிந்தினாள்.

இ - ள். முற்றிழை, வேலவன் கூடலனாயேகினான்; இப்பூண் இவ்விடத்து நமக்கு என்னபயனைத்தருமென்றுகூறித் தன்முலைகொண்ட பேரணிகளைச் சிந்தினாளென்க. (உ0சு)

அருங்கலக்கொடியன்னவனேகினா
னிருந்திவ்வாகத்தென்செய்வீர்நீரென
மருங்குனோவவளர்ந்தவனமுலைக்
கருங்கண்சேந்துகலங்கவதுக்கினாள்.

இ - ள். நமக்கு அருங்கலத்தையும், எழுதுகொடியையுமொத்து நீங்காதவ னேகினான்; இனி நீர் இவ்வாகத்தேயிருந்து என்னகாரியத்தைச்செய்வீரென்று அழ கிய முலையிற் கரியகண் சிவந்துகலங்கும்படி அடித்துக்கொண்டாளென்க.

அருங்கலக்கொடி அதுக்கினாளென்றுமாம். அதற்கு அன்னவன்சுட்டாம். (உ0எ)

மஞ்சுசூழ்வரைமார்பனைக்காணிய
துஞ்சலோம்புமினென்னவுந்துஞ்சினீ

ரஞ்சனத்தொடுமையணிமின்னென
நெஞ்சினீணெடுங்கண்மலர்சீறினள்.

இ - ள். வரைமார்பனே நீர் எப்பொழுதுங் காண்டற்குத் துயிலாதேகொள்ளு மென்று யான்கூறவுந் துயின்றீர்; இனி யஞ்சனத்தையும் மையையும் அணிமினணி மினென்று கண்ணை நெஞ்சாலே சீறினளென்க.

அணிமின் - குறிப்பு. பின்னும் அவைகாட்டவேண்டுதலின், அவைகேளாமற் சீறினள். (உ0அ)

அரக்குண்டாமரையன்னதன்கண்மலர்
விருத்திமாதர்விலக்கவெரீஇக்கொலோ
வருத்தமுற்றனளென்றுகொன்மேகலை
குரற்கொடாதுகுலுங்கிக்குறைந்ததே.

விருத்தி - சீவிதம்.

இ - ள். மாதர் அழுதுசிவந்த கண்மலரினஞ்சனத்தையும் மையையும்விலக் குதலாலே நமக்கும் ஏதம்வருமென்றுவெருவியோ, இவடான் வருந்தினளென்றோ, மேகலை அசைந்து ஆரவாரியாதே ஓசையடங்கியதென்க.

குலுங்கல் - அசைதல். மெய்யசையாமல் அவசமானபடிகூறினார். (உ0௯)

வேறு.

துனிவாயினதுன்னுபுசெய்தறியேன்
றனியேனொருபெண்ணுயிரென்னொடுதா
னினியானியனேயுளனேயுரையீர்
பனியார்மலர்மேற்படுவண்டினமே.

இ - ள். மெல்லியவண்டினமே! யான் நும்மைப்போற் றனித்தறியேன்; அவ னைப்பொருந்திநின்று அவற்கு வெறுப்பானவை செய்தறியேன், ஆதலிற் றான் என்னொடினியவன்; ஆதலான், உரைத்தீரென்று நும்மைவெறான்; நீட்டித்துரைப் பிற் போகின்றவுயிர்தானும் ஒருபெண்ணுயிர், இதுகண்டிருத்தல் பாதகம்; இதுபோ வதற்கு முன்பே, இவ்விடங்களிலேயுளனோ? ஊறுயினன், அவ்விடத்தை யுரையீ ரென்றாளென்க.

உளனே, ஏகாரம் - வினா. (உ௧0)

நிரைவீழருவிந்திமிர்பொன்சொரியும்
வரையேபுனலேவழையேதழையே
விரையார்பொழிலேவிரிவெண்ணிலவே
யுரையீருயிர்காவலனுள்வழியே.

அருவிநிரையையுடைய மாற்றுள்ள பொன்விளங்கும்வரை - செய்குன்று.

இ - ள். வரைமுதலியவற்றைவிளித்து உயிர்காவலனிருக்கின்றவிடத்தை உரையீரென்றாளென்க. (உ௧௧)

எரிபொன்னுலகின்னுறைவீ ரிதனைத்
தெரிவீர்தெரிவில்சிறுமானிடரிற்
பரிவொன்றிலிராற்படர்நோய்மிகுமா
லரிதாலுயிர்காப்பமரீ ரருளீர்.

இ - ள். அமரீர்! நீர் பொன்னுலகிலேயிருப்பீராதலின், அவன்போனவழியைத் தெரிந்திருப்பீர்; அங்ஙனந்தெரிந்திருப்பவுந் தெரிவில்லாத மானிடரைப்போலே அருளிலிராயிராநின்றீர்; எனக்கு நோய்மிகாநின்றது; அதனால் உயிர்காத்தல் இனியரிது; இதனைக் காக்கும்படி அவனை யருளீரென்றாளென்க. (௨௧௨)

புணர்வின்னினியபுலவிப்பொழுது
கணவன்னகலின்னுயிர்கையகலு
முணர்வீரமரர்மகளீ ரருளிக்
கொணர்வீர்கொடியேனுயிரைக்கொணர்வீர்.

இ - ள். அமரர்மகளீர்! கொடியேனுயிரைத்தருவீராக; அதுதருமாறெங்ஙனே யென்னின், புணர்ச்சியிற்காட்டிலினிய புலவிக்காலத்துங் கணவனீங்கில் உயிர்நீங்குதலையறிவீராதலின், அருளி அவனைக் கொண்டுவாருங்களென்றாளென்க. (௨௧௩)

நகைமாமணிமாலைநடைக்கொடிநின்
வகைமாமணிமேகலையாயினதே
லகையாதெனதாவிதழைக்குமெனத்
தகைபாடவலாய்தளர்கோதளர்கோ.

இதுமுதல் எதிர்பெய்துபரிதல்.

இ - ள். மாலையினையுடைய நடந்துதிரியுங்கொடியே! எனதாவி நின்மேகலையாயிற்றாயின், தாழாதே தளிர்க்குமென்று நலத்தை தப்பாரரட்டவல்லவனே! தளர்கோ தளர்கோவென்றாளென்க.

ஒகாரம் - எதிர்மறை. இறந்துபடுவேனென்பதுகருத்து. தளர்கு - தன்வினையுரைக்குந் தன்மைச்சொல். வல்லாய் - பொய்யுரைக்க வல்லாய். (௨௧௪)

பூனைதார்பொரநொந்துபொதிர்த்தவெனா
வினையாரெரிபூண்முலைகண்குளிர
வுனகண்மலரா லுழுதோம்பவலாய்
நினையாதுநெடுந்தகைநீத்தனையே.

இ - ள். மாலைபட்டழுந்த அதுபொறாதே நொந்து வீங்கினவென்றுகூறி, முலை தமதுகண்குளிரும்படி உன்னுடையகண்மலராலேயுழுது பொய்யை மெய்யாகப் பரிகரிக்கவல்லவனே! நெடுந்தகாய்! இதனை மெய்யென்றுகருதினவள் யாம்பிரிந்தால் ஆற்றாளென்று நினையாதே நீத்தாய்; இனி ஆற்றும்வகை கூறென்றாளென்க.

வருத்த தாசிப்படைபொருதலின், நொந்து புடைக்கொண்டனவென்றுகருதிக் கண்குளிர வோம்பவல்லாயென்றும் ஒருபொருள் தோன்றிற்று. (௨௧௫)

அருடேர்வழிநின்றறனேமொழிவாய்
பொருடேர்புலனெய்தியபூங்கழலா

யிருடேர்வழிநின் றினேவேற்கருளா
யுருடேருயர்கொற்றவன்மைத்துனனே.

கொற்றவனும், மைத்துனனுமென உம்மைத்தொகை. ஏகாரம் - ஈற்றசை.

இ - ள். கழலாய்! தனபதியும், உலோகபாலனும் நின்னுடனருளிருக்கும் படியை ஆராயுமிடத்து, அவர்கள் தத்துவத்தையாராயுமறிவைப் பெறவேண்டிநின்று அவர்க்கு அறனேமொழிகின்றநீ இருள்செறிந்தவிடத்தேநின்று வருந்துகின்றவெனக்கு அருளுகின்றிலே; ஆதலான், நினக்கு முற்படச் சொல்லுதலெளிதாய்ச் சொல்லிய வண்ணஞ்செய்தல் அரிதாயிருந்ததென்றாளென்க. (உகசு)

மிகவாயதோர்மீளிமைசெய்தனனோ
வுகவாவுனதுள்ளமுவர்த்ததுவோ
விகவாவிடரென்வயினீத்திடநீ
தகவாதகவல்லதுசெய்தனையே.

* "உகப்பே யுயர்தல்" நீத்திட - பெருக்கிட.

இ - ள். இடர்தான் பிறரிடத்துச்செல்லாதே என்னிடத்தேமிகுத்திடுதற்கு யான் அறிவின்மையின் மிகவுமாயதோர் வன்மைசெய்தேனோ? அன்றி நின்னுள்ளந் தான் ஒருகாலன்புமிக்குப் பின்பு உவர்த்ததோ? கூறுவாயாகவென்றாள். அவ்வெளிப் பட்டவுருவங் கூறாதுநிற்றலின், அதனைநோக்கி, நீ தகவல்லாததுசெய்துநின்றாய்; இனித் தகும்படி வந்து முயங்குவாயாக வென்றாளென்க.

விடந்தீர்த்து உயிரைத்தந்தவன் முன்னின்று முயக்கந்தராது இறந்துபடுவித்த லைத் தகவல்லதென்றாள். தகவா - பெயருமாம். (உகஎ)

குளிர்துன்னியபொன்னிலமேகுதலாற்
றளரன்னநடையவடாங்கலளா
யொளிர்பொன்னரிமாலையொசிந்திநனே
மிளிர்மின்னெனமின்னிலமெய்தினளே.

பொன்னரிமாலை - பெயர்.

இ - ள். பொன்னரிமாலை, அவ்வுருவம் வந்துமுயங்காதுநிற்றலிற் றன்மேனி யிற் காமத்தீயாறிக் குளிர்ச்சிநெருங்கவேண்டி முயங்குதற்குப் பொன்னிலத்தே அவ டான்சேறலின், அப்பொழுது அவசத்தாலே தளர்ந்தவன்னம்போலுநடையைத் தாங்க மாட்டாளாய் ஒசிந்து இந்நிலத்தே பிறழுமின்னென்ன நிலத்தே வீழ்ந்தாளென்க.

மீநிலமும் பாடம். (உகஅ)

தழுமாவலிமைந்தவெனத்தளரா
வெழுமேழடியூக்கிநடந்துசெலா
விழுமீநிலமெய்திமிளிர்ந்துருகா
வழுமாலவலித்தவணங்கிழையே.

அங்ஙனம்வீழவுந் தழுவாமையின், மாவலிமைந்தவென்றாள். ஏழடிச்சென்றது ஒருமரபு.

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரியியல், ௬.

இ - ள். அவ்வணங்கிழை, அவலித்துப் பின்னும் முயங்குதற்குத் தளராவெழும்; எழுந்து ஏழடியளவு நடந்துசெல்லா, மாவலிமைந்தனே! என்றுகூறித் தழுவும்; ஆண்டு அவ்வுருவம் பற்றுக்கோடாகாமையின், வீழும்; வீழ்ந்து நிலத்தையெய்திப் புரண்டு உருகியழுமென்க.

மீநிலம் - மேலாநிலம். (உகக)

வேறு.

கரப்புநீர்க்கங்கையங்கட்கடிமலர்க்கமலப்பள்ளித்
திருத்தகுதிரைகடாக்கச்சேப்புழிச்சேவனீங்கப்
பரற்மலேமுரம்பிற்சின்னீர்வறுஞ்சுனேப்பற்றுவிட்ட
வரத்தவாய்ப்பவளச்செந்தாட்பெடையன்னமழுவதொத்தாள்.

கங்கைக்குநடுவிற் பாதாளகங்கை; சடையிற் கரத்தலுமாம்.

இ - ள். தான்சேவலேக்கூடுதலாலே முன்பு தானிருந்த பாலேநிலத்திற்சுனேயிற் பற்றைவிட்ட பெடையன்னம், கங்கையின் அழகிய கள்ளேயுடைய கமலப்பள்ளியிலே திரைகளலேத்துத்துயிற்றச் சேவலோடுதுயில்கின்றவளவிலே, அதுநீங்குதலால் அச்சுனேயில் இருந்தழுவதுண்டாயின், அதனேயொத்தாளென்க.

அவனேக்கூடியபின்பு தந்தையில்லங் கங்கையாய், அவனீங்குதலால் அச்சுனேயின்றன்மைத்தாயிற்று. அன்னஞ்சுனேயிற்றங்குதல் - இல்பொருளுவமை. (உஉ0)

மெழுகினற்புனேந்தபாவைவெய்துறுத்தாங்குமோவா
தழுதுநைந்துருகுகின்றவாயிடைத்தோழிதுன்னிக்
கெழீஇயினள்கேள்விநல்யாழ்க்கிளேநரம்பனேயசொல்லாள்
கழிபெருங்கவலேநீங்கக்காரணநீரசொன்னள்.

ஆங்கும், உம்மை - இசைநிறை.

இ - ள். அங்ஙனம் ஓவாதழுது மெழுகாற்செய்தபாவையைத் தீயுறுத்தாற்போல நைந்துருகுகின்ற அக்காலத்தே, கெழீஇயினளாகிய தோழி துன்னி, நரம்பனேயசொல்லாள் கவலேநீங்கியிருக்கும்படி, காரணமான தன்மையையுடையனவற்றைக் கூறினளென்க.

காமமும், இருவினேநிலேயாமையுமுதலியவற்றைக் காரணநீரவென்முர். பிரிவுணர்த்தி ஆற்றுவித்துப் பிரியாமையின், இங்ஙனமாற்றுவிக்கின்முள். (உஉக)

தெள்ளறல்யாறுபாய்ந்ததிரைதவழ்கடலின்வெஃகி
யள்ளூறவளிந்தகாமமகமுறப்பிணித்ததேனு
முள்ளூறவெந்தசெம்பொனுற்றநீர்ப்புள்ளியற்முற்
கள்ளூறமலர்ந்தகோதாய்காதலர்காதலென்முள்.

இ - ள். கோதாய்! உலகிற் காதலித்தோர் காதலிருக்குமபடிகேள்; நுகருந்தன்மையுறும்படி பழுத்தகாமங் கடலிற்காட்டின்மிக்கு ஆடவர்நெஞ்சை யிறுகப்பிணித்ததேனுந் தோன்முதிருக்கவேண்டினல் உருகினபொன்னிலுற்ற நீர்ப்புள்ளிபோலத் தோன்முதாமென்முளென்க.

அற்று - அத்தன்மைத்து. (உஉஉ)

ஓடரியொழுகிநீண்டவொளிமலர்நெடுங்கணாைக்
கூடரியுழுவைபோலமுயக்கிடைக்குழையப்புல்லி
யாடவரழுந்திவீழ்ந்தும்பிரிவிடையழுங்கல்செல்லார்
பீடழிந்துருகும்பெண்ணிற்பேதையரில்லையென்றாள்.

இ - ள். அத்தன்மைத்தாகிய காமத்தையுடைய ஆடவர் கண்ணாை முயக்கிடத்தே வருந்தும்படி புல்லி அழுந்திவீழ்ந்தும் பிரிவிடத்து அரியுமுழுவையும்போலே வருந்தார்; அத்தன்மையின்றியே பிரிவிடத்துவருந்தும் பெண்ணிற்காட்டிற் பேதையார் உலகத்து இல்லைகாணென்றாளென்க.

இப்பேதைமைவிளைக்கின்றமை மேற்கூறுகின்றாள். கூடுதல் - பெடையோடு கூடுதல். (௨௨௩)

பேதைமையென்னும்வித்திற்பிறந்துபின்வினைகளென்னும்
வேதனைமரங்கணுறிவேட்கைவேர்வீழ்த்துமுற்றிக்
காதலுங்களிப்புமென்னுங்கவடுவிட்டவலம்பூத்து
மாதுயரிம்பைகாய்த்துமரணமேகனியுமென்றாள்.

இ - ள். அறியாமையென்கின்ற வித்திடமாகத் தீவினையென்னும் வேதனைமரங்கள் பிறந்து, தோற்றி, ஆசையென்கின்றவேரை வீழவிட்டு, தான்முற்றி, பெறாததன்மேற்செல்லுங்காதலும் பெற்றதன்மேற்செல்லுங் களிப்புமென்னுங் கவடுகளை விட்டு, அவலத்தைப்பூத்து, கவலையைக்காய்த்து, மரணத்தைத்தருகின்ற கையாற்றினை இவ்வுடம்புநுகரும்படி பழுத்துத்தந்து, பின்னும் அங்ஙனங்காய்த்தற்கு அம்மரந்தான் நிற்குமென்றாளென்க.

பழுத்தல் - உடம்புபோதல். தீவினைநிற்றலின், நிற்குமென்றது. ஏகாரம் - தேற்றம். (௨௨௪)

தேன்சென்றநெறியுந்தெண்ணீர்ச்சிறுதிரைப்போர்வைபோர்த்து
மீன்சென்றநெறியும்போலவிழித்திமைப்பவர்க்குத்தோன்றா
மான்சென்றநோக்கின்மாதேமாய்ந்துபோமக்கள்யாக்கை
யூன்சென்றுதேயச்சிந்தித்துகுவதோதகுவதென்றாள்.

விழித்திமைப்பவர் - மக்கள். ஒகாரம் - எதிர்மறை.

இ - ள். மாதே! மக்கள்யாக்கை, தேனினஞ்சென்றவழியும் மீன்போனவழியும் போலப் போனவழியுமக்கட்குத்தோன்றாவாய் மாய்ந்துபோம்; அங்ஙனம்போவதனை வேதனையாற் றேயவருத்திக் கெடுவது நமக்குத் தகாதென்றாளென்க. (௨௨௫)

க. பிரிந்தவற்கிரங்கிப்பேதுற்றழுதகங்கண்ணினீர்கள்
சொரிந்தவைதொகுத்துநோக்கிற்றொடுகடல்வெள்ளமாற்றா
முரிந்தநம்பிறவிமேனுமுற்றிழையின்னுநோக்காய்
பரிந்தழுவதற்குப்பாவாயடியிட்டவாறுகண்டாய். (௨௨௬)

௨. அன்பினினவலித்தாற்றாதழுவதுமெளிதுநங்க
ளன்பினிலைவிநீங்கவிறுவதுமெளிதுசேர்ந்த

துன்பத்தாற்றுகைக்கப்பட்டார்துகைத்தவத்துன்பந்தாங்கி
யின்பமென்றிருத்தல்போலுமரியதில்லுலகிலென்றாள்.

*இவையிரண்டுமொருதொடர்,

இ-ள். முற்றிழாய்! இன்னும் யான்கூறுகின்றதனை நெஞ்சாலேநோக்காய்; மேனாளிற்கெட்ட நம்பிறவிகளிலே இப்பொழுதுபிரிந்தவனேகணவனாக, அவற்கே யழுதகண்ணீர்கள் சொரிந்தனவற்றைக் குவித்துப்பார்த்தாற் கடலினீர் உறையிடவு மாற்றாது; அங்ஙனங்கழிந்தநாளேயன்றிப் பாவாய்! இது மேலும் அழுதற்குத்தொடங்கினபடிகாண்; ஆதலின், அங்ஙனமழுதலுமெளிது; நம்முடம்பின் உயிர்போம்படி யிறத்தலுமெளிது; தங்காதலர் சேர்ந்துபிரிந்ததனாற்பிறந்த துன்பத்தாலே வருத்தப் பட்டமகளிர் அங்ஙனம்வருத்தின அவ்வருத்தத்தைப்பொறுத்து இது நமக்கின்பமென்று கருதியிருத்தல்போலே இவ்வுலகில் அரியகாரியமில்லை; இதனை நீயுநிகழ்த்த வேண்டாவோவென்றாளென்க.

கள் - அசை. போலும் - ஒப்பில்போலி. (உ௨எ)

க. மயற்கையிம்மக்கள்யோனிப்பிறத்தலும்பிறந்துவந்தீங்
கியற்கையேபிரிவுசாதலிமைப்பிடைப்படாததொன்றாங்
கயற்கணினளவுங்கொள்ளார்கவற்சியுட்கவற்சிகொண்டார்
செயற்கையம்பிறவிநச்சுக்கடலகத்தழுந்துகின்றார். (உ௨அ)

உ. இளமையின்மூப்புஞ்செல்வத்திடும்பையும்புணர்ச்சிப்போழ்திற்
கிளைநரிற்பிரிவுநோயில்காலத்துநோயுநோக்கி
விளைமதுக்கமழுங்கோதைவேலினும்வெய்யகண்ணாய்
களைதுயரவலம்வேண்டாகண்ணிமைப்பளவுமென்றாள்.

இவையிரண்டுமொருதொடர்.

மயற்கை - துரால். கயற்கணினளவும் - கயல்போலுங் கண்ணிற்றோன்றும் ஒருமாத்திரையளவும்.

இ-ள். அங்ஙனமாற்றவேண்டுதலிற் பலபிறப்பிலும்பிறந்துவந்து இம்மக்கள் யோனியிற் பிறத்தலும் மயற்கை; அப்பிறவிக்குப் பிரிவுஞ்சாதலும் இமைப்பளவும் இடையீடுபடாததொன்றாதலான், ஒருமாத்திரையுங் கவற்சிகொள்ளார்; இயற்கை யேயென்றுகொள்வார். அன்றி உள்ளேகவற்சிகொண்டார், பற்றுள்ளத்தாலுளதாம் பிறவியாகிய நச்சுக்கடலிலே யழுந்தாநின்றார்; ஆதலாற் கண்ணாய்! நீ இளமையிலே மூப்புவருமென்றும், செல்வத்தே மிடிவருமென்றும், புணர்ச்சிக்காலத்தே பிரிவுவருமென்றும், நோயில்காலத்தே நோய்வருமென்றுநோக்கி, உயிருடன்றங்குமளவுந் துயரைக்களைவாயாக; இவ்வவலம் வேண்டாவென்றாளென்க. (உ௨௯)

க. முத்திலங்காகந்தோய்ந்தமொய்ம்மலர்த்தாரினானங்
கைத்தலத்தகன்றபந்திற்கைப்படுங்கவலவேண்டா
பொத்திலத்துறையுமாந்தைபுணர்ந்திருந்துரைக்கும்பொன்னே
நித்திலமுறுவலுண்டானீங்கினானல்லன்கண்டாய். (உ௩௦)

உ. வடிமலர்க்காவினன்றுவண்டளிர்ப்பிண்டிநீழன்
மூடிபொருள்பறவைகூறமுற்றிழைநின்னைநோக்கிக்
கடியதோர்கௌவைசெய்யுங்கட்டெயிற்றரவினென்றேன் [ள்
கொடியனைப்பிழைப்புக்கூறேன்குழையலென்றெடுத்துக்கொண்டா

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். பொன்னே! யான் நெடுநாள் எங்ஙனமாற்றுவேனென்று கவலவேண்டா; நித்திலமுறுவலுண்டான் நம்மைத்துறந்தானல்லன்; காரியத்தால் நீங்கினன்; அதற்குக்காரணமென்னெனின், பொங்தாகிய இல்விலேயுறையும் ஆந்தை பேடுஞ் சேவலுங்கூடியிருந்து அவன்வரவைக்கூறாநிற்கும். அதனால் அவன் நங்கையிலகன்றபக்து நங்கையிலே வருமாறுபோலே அகப்படுவேன்; முற்றிழாய்! யான் ஒருகாலத்தும் பிழைப்புக்கூறேன்; அது நீயேயறிவாய்; அன்று காவிலே பிண்டிநிழலிலே அப்பறவை முடியுங்காரியத்தைக்கூறுதலின், நின்னைநோக்கி, இஃது அரவினாலே கௌவைசெய்யுமென்று கூறினேனாதலால். கொடியனாய்! இதனையுநீதெளிந்து இனிக்குழையாதேகொள்ளென்றுகூறி, அவளை யெடுத்துக்கொண்டாளென்க. (உகூக)

அலங்கலுங்குழலுந்தோழியங்கையினடைச்சியம்பூம்
பொலங்கலக்கொடியனுடன்கண்பொழிகலுழியொற்றிக்
கலந்தகினறுமல்குற்கவான்மிசைக்கொண்டிருந்தாள்
புலர்ந்ததுபொழுதுநல்லாணெஞ்சமும்புலர்ந்ததன்றே.

இ - ள். அங்ஙனமெடுத்த தோழி, கையாலே கொடியன்னாள் அலங்கலையுங் குழலையுஞ்சொருகிக் கண்ணீரையுந்துடைத்து அல்குலையுங்குறங்கின்மேலே கொண்டிருந்தாள்; அப்பொழுது இரவும்விடிந்தது; அவள் நெஞ்சுந் தெளிந்ததென்க. (உகூஉ)

பண்கனிந்தினியபாடற்படுநரம்பிளகியாங்குக்
கண்கனிந்தினியகாமச்செவ்வியுட்காளைநீங்கத்
தெண்பனியனையகண்ணீர்ச்சேயிழைதாயரெல்லாந்
தண்பனிமுருக்கப்பட்டதாமரைக்காடுபோன்றார்.

இ - ள். பண்முற்றுப்பெற்று இனியபாட்டையுடைய ஒலிக்கின்றநரம்பு பாடற்கண்ணே நெகிழ்ந்தாற்போலே மெய்யிடங்குழைந்து இனிய காமச்செவ்வியிலே சேயிழையைக் காளைநீங்கினானதலின், அவள்தாயரெல்லாரும் பனிமுருக்கினதாமரைக்காடுபோலே முகங்கருகினாரென்க. (உகூகூ)

க. சில்லரிச்சிலம்புசூழ்ந்தசீறடித்திருவினற்றாய்
முல்லையங்குழலினாய்நின்முலைமுதற்கொழுநன்மேனாட்
சொல்லியுமறிவதுண்டோவெனக்குழைந்துருகிநைந்து
மெல்லியல்கங்குற்சொல்லிற்றிற்றெனமிழற்றுகின்றாள். (உகூச)

வேறு.

உ. வினைக்குஞ்செய்பொருட்கும்வெயில்வெஞ்சுர
நினைத்துநீங்குதலாண்கடனீங்கினும்

கனைத்துவண்டுணுங்கோதையர்தங்கடம்
மனைக்கண்வைகுதன்மாண்பொடெனச்சொனான். (௨௬௫)

௩. விரைசெய்தாமரைமேல்விளையாடிய
வரைசவன்னமமர்ந்துளவாயினு
நிரைசெய்நீலநினைப்பிலவென்றனன்
வரைசெய்கோலமணங்கமழ்மார்பினான்.

இவைமூன்றுமொருதொடர்.

இ - ள். பதுமையுடையநற்றாய், குழலினாய்! நின்முலைக்கு முதல்வனாகியகணவன் முன்னாட் பிரிவுதோன்றச். சொல்லியுமறிவதுண்டோவென்று வினாவ; அவள் நெகிழ்ந்துருகிக்கெட்டு, கங்குலில் அவன்கூறியது இத்தன்மைத்தென்றுகூறுகின்றவள், தம்மனைவியைநினைந்து வருந்தியும் பின்னும் போர்த்தொழிற்கும் பொருட்கும் வெஞ்சுரத்தைப்போதல் ஆண்மக்கள் தொழில்; அவர் அங்ஙனநீங்கினால் மனைவியர் தந்தொழில் இறந்துபடாதே மனையிடத்திலிருத்தலென்றுகூறினான்; அங்ஙனங்கூறி, வரைபோலுமார்பினான், தாமரைமேல் விளையாடியவன்னம் ஆண்டு நீலம்பயின்றுள வாயினும் அந்நீலத்தை நினையாவென்றுங் கூறினானென்றாளென்க.

நீலம் - பரத்தை. எனவே குலமகளிரையே இனிநுகர்வேனென்றான். அரசவன்னம் - அரசவாழ்க்கைபோல அக்குச்சாரியை கொடுத்துச் செய்கைசெய்து, *"அம்மரபொழுகும்,, என்றமிகையான்முடிக்க. (௨௬௬)

பொன்விளைத்தபுணர்முலையாள்சொல
வின்னளிக்குரல்கேட்டவசுணமா
வன்னளாய்மகிழ்வெய்துவித்தாளரோ
மின்வளைத்தனமேகலையல்குலாள்.

பொன் - பசப்பு. அசுணமா - இசையறிவதோர்விலங்கு. 'அசுணங் கொல்பவர் கைபோன்றும்" என்றார்.

இ - ள். திலோத்தமை, பதுமையங்ஙனங்கூறக்கேட்டு இனிய அளிக்கத்தக்க குரல்நரம்பைக்கேட்ட அசுணமாப்போலே தான்மகிழ்ச்சியுற்று அவனை மகிழ்ச்சியெய்துவித்தாளென்க.

அது மேற்கூறுகின்றார். (௨௬௭)

அன்னந்தானவன்றாமரைப்போதுநீ
நின்னைநீங்கினனீங்கலன்காதலா
னின்னதாலவன்கூறிற்றெனச்சொனாள்
மன்னனாருயிர்மாபெருந்தேவியே.

இ - ள். தனபதியதுயிராகியதேவி, அவன்கூற்று இத்தன்மைத்தாயிருந்தது; எங்ஙனேயென்னின், அன்னமவன்; தாமரைப்பூநீ; நின்னைக்காரியமிருந்தபடியால்

* தொல்காப்பியம், எழுத்ததிகாரம், குற்றியலுகரப்புணரியல், ௧௨.

இப்பொழுது நீங்கினன்; காதலிருந்தபடியால் முழுக்கநீங்கானென மகிழ்வெய்தக் கூறினளென்க.

இவளிறந்துபடுவளென்று நீலங்கூறிற்றிலள். நின்னினீங்கினனென்றும் பாடம்.

வேறு.

சொரிபனிமுருக்கநைந்துசுடர்முகம்பெற்றபோதே
பரிவுறுநலத்தவன்றேபங்கயமன்னதேபோல்
*வரிவளைத்தோளிகேள்வன்வருமெனவலித்தசொல்லாற்
றிருநலம்பிறந்துசொன்னாடேனினுமினியசொல்லாள்.

இ - ள். பங்கயம், பனிகெடுத்தலிற்கெட்டு, ஞாயிறுதோன்று நிலைமையைப் பெற்றபொழுதே அன்புறுநலத்தையுடையவன்றே, அதுபோலச் சொல்லாளாகிய வளைத்தோளி, தன்கேள்வன்வருமெனத் தாய்கூறியகூற்றாலே நலம்பிறந்து, தன்னுள்ளே ஒருமொழிகூறினளென்க. (௨௩௯)

நஞ்சினையமிர்தமென்றுநுங்கினுமமுதமாகா
தஞ்சிறைக்கலாபமஞ்ஞைநுயனைங்காவடட்டதேனு
மஞ்சிறைக்கலுழனுகுமாட்சியொன்றானுமின்றே
வஞ்சனுக்கினையநீரேன்வாடுவதென்னையென்றாள்.

அவன்கூடியபின்பு நீங்குந்தன்மையைத் தானுடைமையிற் றன்னை நஞ்சென்றாள்; நீக்கமிலின்பந் தருதலிற பிறனை அமுதென்றாள். அட்டதென்றது பாம்பு பல்லுயிரையும் வருந்துந்தன்மையை மயில் கொன்று அஞ்சுவித்ததனை, *"செய்ந்நன்றி கொன்ற மகற்கு, என்றாற்போல.

இ - ள். அவன் தனக்குக் கட்கினிமைமாத்திரையால் நஞ்சை அமுதமென்று உட்கொண்டு நுகர்ந்தானாயினும், அந்நஞ்சு நஞ்சேயாய்விடும்; அதுவுமன்றி மயில் அரவைத் தனக்குள்ளேயாக்கிக்கொண்டு தன்னையேநோக்கும்படி அஞ்சுவித்ததாயினும், கருடனைப்போலச் சேணிடையினு நினைப்பித்து அஞ்சுவிக்கவல்லமாட்சி சிறிது மதற்கில்லை; வஞ்சனுக்கு நஞ்சுமயிலும்போலு நீர்மையையுடைய யான், அமுதமுங் கருடனும் போலு மகளிரைப்போலே வருந்துவதென்னென்றாளென்க.

இதனாற் றன்வீறின்மையையும், பிரிவின்கண் வருந்துந்தன்மையின்மையையுங் கூறினள். (௨௪௰)

வேறு.

பொய்கையுட்கமலத்தங்கட்புள்ளொலுமுரசமார்ப்ப
வெய்யவன்கதிர்களென்னும்விளங்கொளித்தடக்கைநீட்டி
மைபிருட்போர்வைநீக்கிமண்ணகமடந்தைகோலம்
பையவேபரந்துநோக்கிப்பனிவரைநெற்றிசேர்ந்தான்.

இ - ள். அவ்வளவிலே, வெய்யோன், பையவே பரந்து மண்ணகமடந்தைகோலத்தை மனத்தாலேநோக்கிக் கமலத்திலே வண்டுகளென்னும் பள்ளியெழுச்சிமுரச

* திருக்குறள், செய்ந்நன்றி யறிதல், ௧௦.

ஆரவாரியாநிற்பத் தன்கதிர்களென்னுங் கையைநீட்டி அம்மண்மடந்தையதிருளாகிய போர்வையைநீக்கி உதயகிரியினெற்றியிலே சேர்ந்தானென்க. (௨௪௧)

செவ்வழியாழினூறுந்தீஞ்சொலாட்குற்றதெல்லா
மவ்வழியரசற்குய்த்தாக்கரசனுமவலமெய்தி
யெவ்வழியானுநாடியிமைப்பினதெல்லையுள்ளே
யிவ்வழித்தம்மினென்றானிவுளித்தேர்த்தானையானே.

இ - ள். மகரயாழைப்போல் இனிமையூறுஞ் சொல்லாளாகிய பதுமைக்குப் பிறந்த வருத்தமெல்லாந் தாயையானுகிய தனபதிக்கறிவித்தாக்கு அவனும் வருந்தி, எவ்விடத்தேயாயினும் அவனைத்தேடி ஒருகணத்தெல்லைகளுக்குள்ளே இவ்விடத்தே தாருங்க ளென்றானென்க. (௨௪௨)

வேறு.

மின்னுளேபிறந்ததோர்மின்னின்மேதகத்
தன்னுளேபிறந்ததோர்வடிவுதாங்குபு
முன்னினான்வடதிசைமுகஞ்செய்தென்பவே
பொன்னுளேபிறந்தபொன்னனையபொற்பினான்.

பொன்னிலே பிறந்தபொன் - நடலைத்தபொன்.

இ - ள். பொற்பினான், தன்னைத்தேடிவந்தா ரறியாதபடி, மின்மேகமாக அதற்குள்ளேபிறந்த மின்போலே தன்னிடத்திலே தோற்றினதோர புதுவடிவைத் தாங்கி வடதிசையைநோக்கிப் போகக் கருதினானென்க.

கடுமைக்கும், வடிவிற்கும் மின் உவமை. இஃது இல்பொருளுவமை. இதனாற் றாரகமனங் கூறினார். (௨௪௩)

வீக்கினான்முனைபகழலைமென்றுகில்
ஆக்கினானிருதுணியாக்கிநற்பல்கல
நீக்கினானொருமகற்கருளிநீணெறி
யூக்கினானுவவுறுமதியினொண்மையான

இ - ள். மதிபோனிறைந்த கலைகளையுடையான் முன்பு ஒலிக்கும்படி கழலை கட்டினவன், இப்பொழுது கடிதிற்போவதற்கு நொய்தாகத் துகிலை இருதுணியாக்கினான்; ஆக்கிப் பூண்களை எதிர்ந்தானொருவற்கு அருளிக்கொடுத்தான்; கொடுத்து நெறியைப்போதற்கு முயன்றானென்க. (௨௪௪)

வேறு.

வேந்தனால்விடுக்கப்பட்டார்விடலையைக்கண்டுசொன்னா
ரேந்தலேபெரிதுமொக்குமிளமையும்வடிவுமிஃதே
போந்ததும்போயகங்குல்போம்வழிக்கண்டதுண்டேல்
யாந்தலைப்படுதுமையனறியினீங்குரைக்கவென்றார்.

இ - ள். அரசனாற்போக விடப்பட்டவர்கள் சீவகனைக்கண்டு ஒருவார்த்தை கூறினார்: இளமையும்வடிவும் இத்தன்மைத்தேயாதலான், நின்னையே யவன்பெரிது மொக்கும்; போந்ததும் போனவிரவிலே, போகின்றவிடத்து யாங்களவனைக் கண்ட துண்டாகில் அப்பொழுதேசென்று தலைப்படுவேம்; அதுபெற்றிலேமாதலின், ஐயன் இவ்விடத்தே அவனைக்கண்டறியின் உரைப்பாயாக வென்றாரென்க. (௨௪௫)

நெய்கனிந்திருண்டவைம்பானெடுங்கணாள்காதலானை
யையிருதிங்களெல்லையகப்படக்காண்பீரிப்பாற்
பொய்யுரையன்றுகாணீர்போமினம்போகிநுங்கண்
மையலங்களிற்றுவேந்தன்மைந்தனுக்குரைமினென்றான்.

அவர் கூறுமொழியவும், மேல் தான்கூறுகின்றமொழி உண்மையென்று அவ ருணர்ந்து போதற்கும் சோதிடத்தால் அறிந்து கூறுவாரைப்போலே, நெடுங்கணாள் காதலானை என்றான்.

இ - ள். காதலானை ஒன்பதாந்திங்களிலே காண்பீர்; இப்பாற்காணீர்; யான் கூறியது பொய்யுரையன்று; இனிப்போமின்; போய் நுங்கள்வேந்தனுக்கும் மைந்த னுக்கும் உரைப்பீராக வென்றானென்க.

யான்கூறிய நாளுக்குள்ளே காண்பீரென்க. அம் - அசை. ஐயிருதிங்களெ ல்லையகப்படவென்றது - பத்தாகிய எல்லைக்குள்ளே ஒருதிங்கள் குறையவென்றது. எனவே ஒன்பதாந் திங்களாயிற்று. (௨௪௬)

பதுமையாரிலம்பக முற்றிற்று.



ஆக கவி ௧௪௧௩.

# ஆறாவது

# கேமசரியாரிலம்பகம்.

வானின்வழங்கும்வண்மை நயமணிசெய்யாரமார்பிற்
றேனும்வழங்கும்பைந்தார்விசயைசிறுவன்றேங்கொ
ணானம்வழங்குங்கோதைதை நயவெய்யவாய
கானம்வழங்கன்மேவிக்காலினேகினனே

தேனும், உம்மை - இசைநிறை.

இ-ள். கையினையும் மார்பினையுந் தாரினையுமுடைய சிறுவன், பதுமைவருந்தக் கானத்தே போதலைப்பொருந்தி, ஊர்திகளின்றிக் காலாலேகினனென்க.

அருஞ்சயன்குலத்தில் விசயைசிறுவன் இங்ஙனம் போவதேயென்றிரங்கி, விசயைசிறுவனென்றார். (க)

சிலைகொணாணிற்றீராத்திருநதுகற்பின்னவர்தம்
மிலைகொள்பூந்தாருழுதவின்பவருத்தநீங்க
முலைகொள்கண்கள் கண்ணினெழுதிழுழ்கும்மொய்ம்பன்
மலைகொள் கானம்முன்னிமகிழ்வேபோடேகுகின்றான்.

நாணிற்றீராக்கற்பு - நாண் தான்கெடுமளவும் ஒருவாக்கிற்புரிந்த முறுக்குடையாமையின், அதுபோலுந் தீராக்கற்பு.

இ-ள். கற்பினவர்தம் இன்பவருத்தநீங்க முலை தம்மிடத்தே கொண்ட கண்களைத் தன்கண்ணினெழுதி மூழ்கும்மொய்ம்பன் கானத்தைப்பொருந்தி வெறுப்பற்றுப் போகாநின்றானென்க.

வருத்தம் - புணர்ச்சியாலுண்டான அவசம். (உ)

கனிநொள்வாழைக்காட்டிட்கருமைமெழுகியவைபோன்
றினியவல்லாமுகத்தமுசுவுங்குரங்குமிரியத
துனிவுதீரநோக்கித்தோன்றல்செல்லுமுனனும்
பனிவெண்டிரைசூழ்கடல்போற்பழுவந்தோன்றிற்றவணே

கரியமையை மெழுகிவைத்தவைபோலு முகத்தவாகிய முசு. முன்னல், ஆல்- அசை. பழுவம் - முன்கூறிய கல்லதரத்தம்.

இ-ள். வாழைக்காட்டின் முசுவுங்குரங்கும் தன்னைக்கண்டு இரிதலின், அவை துனிவுதீரும்படி அருளிப்பார்த்துத் தலைவன்போம் அவ்விடத்தின் முன்னே கடல்போலே ஒருகாடுதோன்றிற்றென்க. (௩)

பருகுவாரிற்புல்லிப்பயங்கண்மாறத்துறக்கும்
முருகுவிம்முகுழலார்போலமொய்கொடும்பி
யுருவப்பூங்கொம்பொசியப்புல்லித்தீந்தேன்பருகி
யருகுவாய்விட்டார்ப்பவண்ணன்மெல்லச்சென்றான்.

இ - ள். நீரைப் பருகுவாரைப்போலேபுல்லிக் கைப்பொருளறுதலாலே அவரைத்துறக்கும் பரத்தையரைப்போலே, தும்பி தேனுள்ளகாலத்துக் கொம்பொசியப்புல்லி அதனைப் பருகி அதுவறிதாக அக்கொம்பைவிட்டுத் தூற்றுவனபோல ஆர்ப்ப, அதனைக்கண்டு தலைவன் சென்றானென்க.

அப்பழுவத்திற்போகாதே சித்திரகூடத்தைநோக்கிப் போனானென்க. (௪)

செல்வர்மனத்தினோங்கித்திருவின்மாந்தர்நெஞ்சி
னெல்லையிருளிற்றாகிப்பூந்தாதினிதினொழுகிக்
கொல்லும்மரவின்மயங்கிச்சிறியார்கொண்டதொடர்பிற்
செல்லச்செல்லவஃகுநெறிசேர்சிலம்புசேர்ந்தான்.

இ - ள். திருமிக்கார்மனம்போலே மேனோக்கி, செல்வமில்லாதார் நெஞ்சுபோலே பகலேஇருளையுடைத்தாய், பூந்தாது இனிதுபோலே ஒழுகி, பாம்புபோலேதலைகரந்து, கீழ்மக்கள் நட்புப்போலே செல்லச்செல்லக் குறையும் வழிபொருந்திய மலையைச் சேர்ந்தானென்க.

"யானைக்கயிற்றிற்புறத்தன" என்றும், "எடுத்துநிறுத்தன்ன" என்றுங்கூறுதலின், வழியை யோங்கியென்றார். இனிதுபோலெனவே துன்பமேயுணர்த்திற்று. * "மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச், சண்பக நிறைத்த தாதுசேர் பொங்கர், பொய்யறைப் படுத்துப் போற்றா மாக்கட்குக், கையறு துன்பங் காட்டினுங் காட்டும்" என்றார்பிறரும். மாவின்மயங்கியென்றுபாடமோதிப் புலிமுதலியவற்றான் மயங்கியென்றுமுரைப்ப. (௫)

சுனைகள்கண்களாகச்சூழ்ந்தகுவளையிமையா
வனையலாகாவுருவநோக்கிமைந்தற்கிரங்கி
யினைவபோலும்வரையின்னருவியினிதினாடி
நனைகொள்போதுவேய்ந்துநாதற்பாடுகின்றான்.

இ - ள். தன்னைச்சூழ்ந்தகுவளை கண்களாகவிழித்து மைந்தனுருவத்தைநோக்கி அவற்கிரங்கி யழுவனபோலும் அருவியையுடையவரையிற் சுனைகளிலே யாடி நனையைத் தம்மிடத்தேகொண்ட போதாலே திருவடிகளைமறைத்து நாதனைப் பாடாநின்றானென்க. (௬)

வேறு.

செய்தானிருவினையின்பயத்தைச்சேருஞ்சென்றென்றி
யெய்தானதன்பயத்தைப்பிறனேதுய்த்தலியல்பென்றி
கொய்தாமந்தாழ்ந்தொசிந்தகுளிர்பூம்பிண்டிக்கோமானே
யிஃதேநின்சொலியல்பென்றாலடியேனின்னைத்தொழுதேனே.

* சிலப்பதிகாரம், நாடுகாண்காதை.

இ - ள். இருவினையையுஞ் செய்தவொருவன் அவ்வினையின்பயனை அனுபவிக்குஞ் சென்றென்று கூறாநின்றாய்: ஆன்மாவொன்றாதலின், அவனனுபவிப்பனென்றாய்; பிறப்புவேற்றுமையாற் செய்தவனாய்நின்று எய்தான், பிறனுமாய்த் துய்ப்பனென்றாய். கோமானே! நின்வார்த்தை இரண்டுபட்டிருத்தலின், நினக்கஞ்சித் தொழுதேனென்றானென்க. (எ)

உண்டேதனதியல்பினுணருங்காலையுயிரென்றி
யுண்டாயவவ்வுயிரேபிறிதினில்லையெனவுரைத்தி
வண்டார்த்துநாற்காதம்வணமாலைசுமந்தொசிந்து
கொண்டேந்துபூம்பிண்டிக்கோமானின்னைத்தொழுதேனே.

இ - ள். உணருங்காலத்து உயிர் தனதியல்பால் உண்டேயென்றுகூறாநின்றாய், உண்டாய அந்தவுயிர்தானே பிறிதொன்றினியல்பான் இல்லையெனவுரையாநின்றாய், ஆதலிற் கோமானே! நின்னைத் தொழுதேனென்றானென்க.

ஒருபொருளிலே யுண்டுமில்லையுங்கூறினார். உயிர் ஒருவனிடத்துண்டு, தூணியில்லை. தூணிலிலலாமையும் இவ்வுயிர்க்கேற்றுக. இதனால் உயிர்தனக்கே உண்டுமில்லையுந்தங்கின. இத்தன்மைவேறுபாட்டால் அங்கில்லை. (அ)

காதலாலெண்வினையுங்கழிபவென்றியக்காத
லாதலாலெண்வினையுமழியாவென்றுமறைதியாற்
போதுலாய்த்தேன்றுளித்துப்பொழிந்துவண்டிவண்டுலாங்
கோதைதாழ்பூம்பிண்டிக்கோமானின்னைத்தொழுதேனே.

இ - ள். இறைவன்மேலேவைத்த காதலாலே எண்வினையுங் கழிவனவென்று கூறாநின்றாய், அக்காதல் மற்றொரு பாவகாரியங்களிலேவைத்தால், எண்வினையு நீங்காவென்றுஞ் சாற்றாநின்றாய்; ஆதலாற் கோமானே! நின்னைத்தொழுதேனென்றானென்க.

இவை இருபுறவாழ்த்து. நூறவிலே "எண்மர்கவிழ்ந்தனர்" என்பதனாலுணர்க. இவை தேவபாணிக் காழிசைக் கொச்சகவொருபோகு (௯)

வேறு

இனிதினிங்ஙனமேத்திவலங்கொண்டு
முனிவர்சித்திரகூடமுன்னுதெனத்
தனிதினேகுபுதாபதர்வாழ்வதோர்
பனிகொள்பூம்பொழிற்பள்ளிகண்டானரோ.

இ - ள். இங்ஙனம் இடற்றினினிமையோடே யேத்தி வலஞ்செய்துவிட்டு முனிவருடைய சித்திரகூடம் முன்னிடத்ததென்று தேவன்கூறுதலின், அதனை இப்பொழுதுகுறித்துத் தனியேபோகாநின்று அப்பள்ளியைக் கண்டானென்க.

சித்திரகூடம் - பள்ளியின்பெயர். தனித்து - விகாரம்; இன்னும், அரோவும் அசை. (௧௦)

புல்லுமல்லியும்போகுயர்நீள்கழை
நெல்லுநீர்விளைநேழலுந்தோரையு

மல்லதீம்பழங்காய்கிழங்காதியா
நல்லவேநுகர்வார்பள்ளிநண்ணினன்.

போகுயர்நீள்கழைநெல் - வளர்ந்தமூங்கிலரிசி; ஆகுபெயர். நீராலேவிளைந்த கேழல் - குளநெல். தோரை - ஒருநெல்.

இ - ள். ஊனைநுகராதே புன் முதலியவற்றையும், அவையல்லவாகிய பழம் காய் கிழங்குமுதலாக நல்லவற்றையுமே நுகர்வார் தவப்பள்ளியைநண்ணினனென்க. (௧௧)

௧. அரியகொள்கைபராரமுலைந்திடை
மருவிவீடுவிளைக்குறுமாட்சியர்
விரியவேதம்விளம்பியநாவினர்
தெரிவிறீத்தொழிற்சிந்தையின்மேயினார். (௧௨)

௨. வள்ளியின்னமிர்தும்வரைவாழையின்
றெள்ளுதீங்கனியுஞ்சிலதந்தபின்
வெள்ளமாரியனுப்விருந்தார்கென
வுள்ளமாட்சியினருவந்தோம்பினார்.

இவையிரண்டுமொருதொடர்.

அரியகொள்கையாவன: நாலிருவழக்கிற்றாபதபக்கம்; "நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச் - சோர்சடை தாழச் சுடரோம்பி - யூரடையார்-கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல் - வானகத் துய்க்கும் வழி." என்பனவும், நின்றனவுமாம்.

இ - ள். கொள்கையராய்ப் பஞ்சாக்கினிக்குநடுவே மருவி மாட்சியையுடையராய் நாவினராய்க் காமவேட்கையையுடைய சிந்தையோடேபொருந்தினவர், வள்ளிக்கிழங்கையுங் கனியையுங்கொடுத்த பின்பு, பலர்க்கும் பயன்படுகின்றவனே! இனி யுண்பாயாகவென்றுகூறி நெஞ்சமழகையுடையவர்கள் உவந்து பேணினாரென்க. (௧௩)

பாங்கின்மாதவாபால்மதிபோன்றிவன்
வீங்குகல்வியன்மெய்ப்பொருட்கேள்விய
னுங்குநாமுமளக்குவமென்றுதம்
மோங்குகட்டுரையொன்றிரண்டோதினார்.

பாங்கு - நல்லவிடம். "பாங்கர்ப்பல்லி" என்ப.

இ - ள். அங்ஙனம்பேணினபின்பு மாதவர் இவன் மதிபோலேஎல்லாக்கலையுநிறைந்தகல்வியன், தத்துவத்தின்கேள்வியன், அப்படியானஅவ்விடத்து நாமும் இவனையறியக்கடவேமென்று தங்கட்டுரை ஒன்றிரண்டைக் கூறினாரென்க. (௧௪)

ஐயர்கூறலுமண்ணலுங்கூறுவான்
சையம்பூண்டுசமுத்திரநீந்துவா
னுய்யுமேற்றொடர்ப்பாட்டிலிங்கியாவையு
மெய்தினார்களுமுய்பவென்றோதினான்.

இ - ள். அவர்கூறுகின்றவளவிலே சீவகனுங்கூறுகின்றவன், கல்லைக்கழுத்தி லேகட்டிக் கடலைநீந்துகின்றவன் பிழைப்பனாயிற் காமநுகர்ச்சியோடே இவ்விடத்து விரதங்களை யெய்தினவர்களும் பிழைப்பரென்று நூல்களையெடுத்தோதினானென்க.

இவர் மனைவியரோடேதுறத்தலிற் றொடர்ப்பாடென்றான். (௧௫)

வீடுவேண்டிவிழூச்சடைநீட்டன்மெய்ம்
மூடுகூறையின்மூடுதல்வெண்டலை
யோடுகோடலுடுத்தலென்றின்னவை
பீடிலாப்பிறவிக்குவித்தென்பவே.

இ - ள். அங்ஙனமோதினவன் வீடுபெறவிரும்பிச் சடையைக்கட்டுதல், சீவரம் போர்த்தல், கபாலமேந்துதல், வேதாந்தியாதலென்றுகூறிய இத்தன்மையன பிறவிக் குவித்தென்று தத்துவமுணர்ந்தோர் கூறுவரென்றுமோதினனென்க. (௧௬)

ஏமமன்னெறியெங்நெறியன்னெறி
தூய்மையின்னெறியாமுந்துணிகுவங்
காமன்றாதைநெறியின்கட்காளைநீ
தீமையுண்டெனிற்செப்பெனச்செப்பினான்.

இ - ள். யாஙகள் நிற்கின்றவழி நல்வழி; இஃதொழிந்தன நீகூறியவாறே தூய் மையில்லாதவழி; அது யாமுந்தெளிந்திருப்பேம்; திருமால்கூறிய இவ்வழியிடத்திற் றீங்குண்டாயிற் காளாய்! நீசொல்லென்றுஅவர்கூற, அவனுஞ்சொன்னானென்க. ()

வேறு.

௧. தூங்குறிக்கிடந்துகாயும்பழங்களுந்துய்ப்பநில்லா
பாங்கலாவினைகளென்றார்பகவனாரெங்கட்கென்னி
னோங்குநீண்மரத்திற்றூங்குமொண்சிறையொடுங்கல்வாவல்
பாங்கிற்பழங்கடுய்ப்பப்பழவினைபரியுமன்றே. (௧௭)

௨. அல்லியும்புல்லுமூண்டாங்காரழலைந்திநின்று
சொல்லியவகையினோற்பதுணியும்வெவ்வினைகளென்னிற்
கல்லுண்டுகடியவெம்புங்கானுறைபுறவமெல்லாம்
புல்லியவினைகள்வென்றுபுறக்கொடைகாணுமன்றே. (௧௮)

௩. நீட்டியசடையமாகிநீர்மூழ்கிநிலத்திற்சேர்ந்து
வாட்டியவுடம்பின்யாங்கள்வரகதிவிளைத்துமென்னிற்
காட்டிடைக்கரடிபோகிக்கயமூழ்கிக்காட்டினின்று
வீட்டினைவிளைக்கவேண்டும்வெளிற்றுரைவிடுமினென்றான்.

இவைமூன்றுமொருதொடர்.

இ - ள். எங்களுக்குப் பகவனார் உறியிலேகிடந்து இவற்றைநுகரத் தீவினைகள் நில்லாவென்று கூறினாரென்று கூறுவீராயின்; மரத்திற் பக்கத்தே தூங்கும்வாவல்

பழங்களை நுகர அதற்கும் இருவினைகழியுமல்லவோ. அதுவுமன்றி, இவற்றையுண்டு அழலிடையிலேநின்று பகவனார்கூறிய வகையிலேநோற்க வெவ்வினைகள் அறுமென்னின்; கல்லையுண்டு வெம்புங் கடியகானிலே உறைபுறவுகளெல்லாம் இருவினையை வென்று முதுகுகாணுமல்லவோ. அதுவுமன்றி, சடையமாய் மூழ்கிச் சேர்ந்து வாட்டியவுடம்பாலே யாங்கள் மேலானகதியை விளைப்போமென்னின்; காட்டிற் கரடி காட்டினின்றும்போய்க் கயத்திலேமூழ்கி வீட்டினைப்பெறவேண்டும்; ஆதலால் நும்பயனில்லாதவுரையைத் தவிர்வீராகவென்றானென்க. (௨0)

க. கலைவளர்கிளவியார்தங்காமர்மென்சேக்கைநீங்கி
யிலைவளர்குரம்பையங்கணிருநிலஞ்சேக்கையாக
முலைவளராகந்தோயமுழுவினைமுரியுமாயின்
மலைவளர்குறவர்க்கம்மாவினைகளுமாயுமன்றே. (௨க)

௨. வெண்ணிறத்துகிலினங்கண்வீழ்ந்துமாசாகிநின்ற
வொண்ணிறவுதிரந்தன்னையுதிரத்தாலொழிக்கலாமே
பண்ணிறக்கிளவியார்தம்பசையினாற்பிறந்தபாவங்
கண்ணிறமுலையினார்தங்கலவியாற்கழிக்கலாமே. (௨௨)

௩. நுண்டுகில்வேதலஞ்சிநெருப்பகம்பொதிந்துநோக்கிக்
கொண்டுபோய்மறையவைத்தாற்கொந்தழல்சுடாதுமாமே
கண்டத்தினுவியார்தங்கடிமனைதுறந்துகாடுட்
பண்டைச்செய்தொழிலிற்பாவம்பறைக்குற்றாற்பறைக்கலாமே. ()

௪. நோய்முதிர்குரங்குபோலநுகர்ச்சிநீர்நோக்கல்வேண்டா
காய்முதிர்கனியினாழ்த்துவீழுமிவ்வியாக்கையின்னே
வேய்முதிர்வனத்தின்வென்றானுருவொடுவிளங்கநோற்றுப்
போய்முதிர்துறக்கத்தின்பம்பருகுநல்புரிமினென்றான்.

இவைநான்குமொருதொடர்.

௩. சுடாதும், உம்மை-இசைநிறை. கண்டத்திலேபுழுகையுடையார். இனிக் கண்டத்தினுவியாரென்பதற்குக் கட்டிமுதலிய உறுப்பாற்புகைத்த அகிற்புகையை யுடையாரென்று முரைப்ப. "பேருறுப்பாகியகண்டப்புகை" என்றார் வளையாபதியிலும்.

இ-ள். சேக்கையினின்றுநீங்கிக் குரம்பையிலே நிலஞ்சேக்கையாகக் கிளவியார்தம் ஆகத்தைத்தோய இருவினைகெடுமாயின், குறவர்க்கும் அந்தப் பெரிய வினைகளுங்கெடுமல்லவோ. அதுவுமன்றி, வெண்டுகிலிலே வீழ்ந்து மாசாகிநின்ற உதிரத்தை உதிரத்தாலே போக்கவொண்ணாது. அதுபோலக் கிளவியார்தம் பற்றினாலே பிறந்தபாவத்தை அவர்கூட்டத்தாலே போக்கவொண்ணாது. அதுவுமன்றி, துகில் வேதற்கஞ்சிப் பின்னும் நெருப்பை உள்ளேபொதிந்து வைத்தால் அதுசுடுமல்லவோ. அதுபோல நாவியார்தம் மனையைத்துறந்து அகல அவரை நெஞ்சாலேநோக்கிக் காட்டிலே கொண்டுபோய்வைத்து, முன்புசெய்த தொழிலிற்பிறந்த பாவத்தைப் போக்கலுற்றாற் போக்கவொண்ணாது. ஆதலால் நீர் குரங்குபோலே காமநுகர்ச்சியைநோக்

கல்வேண்டா; இவ்வியாக்கை கனியினூழ்த்துவீழும்; அதற்குமுன்னே இவ்வனத்தே காமனைவென்றான் வேடத்தோடேநின்று நோற்றுப் போய்ச் சுவர்க்கத்தின்பத்தை நுகர்தலை விரும்புமினென்றானென்க.

ஏகாரமெல்லாம் எதிர்மறை. கண்ணையுடைய நிறத்தழலை. (௨௪)

மெய்வகைதெரிதன்ஞானம்விளங்கியபொருள்கடம்மைப்
பொய்வகையின்றித்தேறல்காட்சியைம்பொறியும்வாட்டி
யுய்வகையுயிரைத்தேயாதொழுகுதலொழுக்கமூன்று
மிவ்வகைநிறைந்தபோழ்தேயிருவினைகழியுமென்றான்.

இ-ள். ஞானமாவது உண்மையறிதல்; காட்சியாவது அங்ஙனமறிந்தபொருள்களைப் பொய்யின்றாகத்தெளிதல்; ஒழுக்கமாவது ஐம்பொறிகளையும் ஐம்புலன்களிற் செல்லாமற்கெடுத்து உயிரைக்கெடாதே அவ்வுயிருய்யும்வகை யொழுகுதல். இம்மூன்றும் இப்படிநிறைந்தபொழுதே இருவினையுங் கெடுமென்றானென்க. (௨௫)

குன்றனுரைப்பக்கேட்டேபாகத்தார்குடும்பநீக்கி
யின்றுகண்விடுக்கப்பட்டேம்யாமெனவெழுந்துபோகி
வென்றவனெறியைச்சேர்ந்துவீட்டுநன்னெறியைப்பெற்றார்
சென்றதுபரிதிவட்டஞ்செம்மலுமசைவுதீர்ந்தான்.

இ-ள். சலிப்பில்லாதவன் கூறக்கேட்டு நல்வினைவந்தடையும் பருவத்தினையுடையார் தம்மனைவியரைத்துறந்து, யாம் இன்று நின்னாலே அறிவுண்டாக்கப்பட்டேமென்று கூறிப்போய் இறைவன்வழியைச்சேர்ந்து வீட்டுக்குச்செல்லும் நல்வழியைப் பெற்றார்; அவ்வளவிலே ஞாயிறு பட்டது; தலைவனும் இளைப்புத் தீர்ந்தானென்க.

வட்டமென்றது - நாடோறும் வட்டமாயவருதலை. (௨௬)

வேறு

அசைவுதீர்ந்திருந்தோங்கியகாலையே
வசையினீங்கினார்வழிகாட்டலிற்
றிசையுமாறுந்தெரிந்துகொண்டேகினான்
மிசையுமில்லதோர்மெய்ப்பொறியாக்கையான்.

நீங்கியினார், இன் - அசை.

இ-ள். உடம்பிற்குக்கூறுகின்ற இலக்கணத்தையுடைத்தாய்த் தேவருலகினுமில்லாததோர் யாக்கையான், அங்ஙனமிளைப்பாறிப் பொழுதுவிடிந்தவளவிலே குற்றத்தினின்று நீங்கினார் வழிகாட்டலிற் றிசையையும் ஆற்றையுந் தெளிந்துகொண்டு போனானென்க. (௨௭)

வேறு.

படம்புனைந்தெழுதியவடிவிற்பங்கயத்
தடம்பலதழீஇயதுதக்கநாடது

வடங்கெழுவருமுலைமகளிர்மாமைபோன்
றிடம்பெரிதினியதனெல்லையெய்தினான்.

இ - ள். புனைந்தெழுதிய படத்தின்வடிவுபோலப் பங்கயத்தடந் தழுவப்பட்டது; தன்னிடம் மகளிர்மாமைபோலே நுகர்வார்க்குப் பெரிதுமினியது; அதுதான் தக்கநாடென்னும் பெயரையுடையது. அதனெல்லையைச் சேர்ந்தானென்க. (உஅ)

தேங்கயத்தணிமலர்தெகிழ்ந்தநாற்றமும்
பூங்குழன்மடந்தையர்புனைந்தசாந்தமு
மாங்கெலாமகிற்புகையளாயவாசமுந்
தாங்கலாற்றக்கநாடாயதென்பவே.

இ - ள். இனிய கயத்தின்மலர் வாய்விட்ட நாற்றத்தையும், சந்தனத்தையும், அகிற்புகை கலந்தநாற்றத்தையும், அவ்விடமெல்லாந் தரித்தலிற் றக்கநாடென்னும் பெயர்த்தாயிற்றென்க.

இவைதங்குதலிற் றக்கநாடு. (உகூ)

க. சண்பகநறுமலர்மாலைநாறுசாந்
தொண்பழுக்காயினோடுருவமெல்லிலை
யுண்பதமியாவர்க்குமுனையில்லது
வண்புகழ்நாட்டதுவண்ணமின்னதே. (௩௦)

உ. கரும்பணிவளவயற்காமர்தாமரை
வரம்பணைந்ததனுதற்கிடந்தவார்செநெ
லரங்கணிநாடகமகளிராய்நுதற்
சுரும்புசூழிலம்பகத்தோற்றமொத்ததே.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். அந்நாட்டுவயலிற் றாமரை சாய்ந்து வரம்பைச்சேர, அதனுதலிலே கிடந்த செந்நெல், மகளிர் நுதலிற் றிலகக்கோலத்தை யொத்தது; அங்ஙனஞ்சிறந்த நாட்டது புகழின்வண்ணம் எக்காலமும் இத்தன்மைத்தென்க.

அணைந்து - அணைய. சுருமபுசூழ்தாமரையென்க; சுரும்பு - மயிர்க்குவமை. சண்பகமாலைமுதலியன யாவர்க்குங்குறைவின்மையிற் பிறந்தபுகழென்க. (௩க)

வண்டுவாழ்கொடுந்துறைக்கன்னிவாளைமே
னண்டுகிருற்றெனநடுங்கிநாணினல்
விண்டொளித்தூண்டுறந்தொடுங்கும்வீழ்புனல்
கொண்டபூங்கிடங்கணிநகரங்கூறுவாம்.

இ - ள். ஒருகன்னி, தன்மேலே உகிருற்றென நாணத்தாலேநடுங்கி அவ்விடத்தைக்கைவிட்டுப்போய் ஒளித்து ஊணைத்துறந்து ஒடுங்குமாறுபோலே, வளைந்ததுறையில்! வாளை தன்மேலே நண்டுகிருற்றென நடுங்கியொடுங்கும் ஆழ்ந்தபுனலைத் தன்னிடத்தேகொண்ட கிடங்குசூழ்ந்தநகரி இனிக் கூறுவேமென்றாரென்க. (௩உ)

அகழ்கிடங்கந்துகிலார்ந்தபாம்புரி
புகழ்தருமேகலைஞாயில்பூண்முலை
திகழ்மணிக்கோபுரந்திங்கள்வாண்முகஞ்
சிகழிகைநெடுங்கொடிசெல்விக்கென்பவே.

இ - ள். மதிலாகியசெல்விக்கு அகழ்ந்த அழகியகிடங்கு துகில்; பாம்புரி மேகலை; ஞாயில் முலை; கோபுரந் திங்களையொத்தமுகம்; நெடுங்கொடி சிகழிகையென்க.()

நாட்டியமணிவரைகடைந்துநல்லமிர்
தூட்டினுமதனைவிட்டுறைநரின்மையா
லீட்டியவளநிதியிறைகொண்மாநகர்
சூட்டுவைத்தனையதச்சுடர்பொனிஞ்சியே.

இ - ள். அந்தப்பொன்னிஞ்சி மந்தரமென்று பேர்நாட்டியவரையாலே கடலைக்கடைந்து அமிர்தத்தையூட்டினும் அந்நகரைவிட்டுப்போய் உறைவாரின்மையின், இந்நகர் நகர்களுக்குத் தலையென்று சூட்டுவைத்தாலொத்ததென்க.

இனி அகரம் பண்டறிசுட்டாக்கி அம்மணிவரையைநாட்டியென்றும், உறைநரின்மையின் நிதிதங்குமென்றுமாம். (௬௪)

எறிசுறவிளையவரேந்துபூங்கொடி
மறிதிரைவரைபுரைமாடமரக்கலம்
பெறலருந்திருவனாரமிர்தம்பேரொலி
யறைகடல்வளநகராயதென்பவே.

இ - ள். பேரொலிவளநகர், வீரர் சுறவாக, கொடி மறிதிரையாக, மாடம் மரக்கலமாக, மகளிர் அமுதாக அறைகடலாயிற்றென்க.

இத்தொடர் வேறுபடவந்த உவமவிசேடமாம். (௬௫)

வேறு.

மதியகடுரிஞ்சுஞ்சென்னிமாடநீண்மறுகுதோறும்
பொதியவிழ்மாலைவீழ்ந்துபொன்செய்நன்கலன்கள்சிந்தி
நிதியறைதிறந்துநோக்கியன்னதோர்நீர்மையெய்திப்
புதியவர்க்கியங்கலாகாப்பொற்பொடுபொலிந்ததன்றே.

மயிர்முடிகுலைதலின், முத்தமாலைவீழ்ந்தது.

இ - ள். அந்நகரிற் றெருவெங்கும் மாலைவீழ்ந்து பேரணிகலங்கள் சிந்துதலாலே, நிதியறையைத் திறந்துபார்த்தாலொத்ததோர் தன்மைபெற்று, அச்சஞ்செய்தலிற் புதியவர்க்கு இயங்கலாகாத அழகோடே பொலிந்ததென்க. (௬௬)

வேறு.

கேமமாபுரமெனுங்கேடினல்லிசைப்
பூமிமேற்றிலகம்வைத்தனையபொன்னகர்த்

தாமநீணெடுங்குடைத்தரணிகாவல
னுமம்வேனரபதிதேவனென்பவே.

இ - ள். உலகிற்குத் திலகமிட்டாலொத்த கேமமாபுரமென்னும் பெயரை யுடைய பொன்னகரில், இசையையுங் குடையையுமுடைய அரசன்பெயர் நரபதி தேவனென்று கூறுவாரென்க. (௩எ)

க. அங்ககர்க்கரசனேயனையவாண்டகை
மெய்ந்நிகரிலாதவன்வேதவாணிகன்
கைந்நிகரமைந்தவேற்கமழுங்கண்ணியன்
மைந்நிகர்மழைக்கணார்மருட்டவைகுவான். (௩அ)

வேறு.

உ. வார்சிலைவடிப்பவீங்கிவரையெனத்திரண்டதோளான்
சோர்புயன்றுலைத்தவண்கைச்சுபத்திரன்மனைவிபெற்ற
சீர்நலங்கடந்தகேமசரியெனத்திசைகளெல்லாம்
பேர்நலம்பொறித்தபெண்மைப்பெருவிளக்காகிநின்றாள்.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். அங்ககரிக்கு அரசனையொத்த வாண்டகை வடிவொப்பில்லாதவன், வேதத்தையுடையவாணிகன், கைக்கு ஒப்பமைந்தவேலினையுந் தாரினையுமுடையான், மகளிர்மயக்க அவ்வின்பத்தேதங்குவான், வில்லைப் பயிற்றுதலாற் பெருத்துத் திரண்டதோளான், சுபத்திரன். அவன்மனைவி நிப்புதிபெற்ற கேமசரி, திசையெல்லாந் தன்பெயரையும் அழகையுமெழுதினதொரு பெண்மையுடைய விளக்கெனவாகி நின்றாளென்க.

ஆகியெனவே நுகரும்பருவத்தாளென்றார். (௩௯)

மாசிலாள்பிறந்தஞான்றேமதிவலான்விரிநூலினெண்ணிக்
காசிலாள்கண்டபோழ்தேகதுமெனநாணப்பட்டான்
றாசுலாமல்குலாட்குத்துணைவனும்புணர்மினென்று
பேசினானன்றுகொண்டுபெருவிருந்தோம்புகின்றான்.

இ - ள். அம்மாசிலாள் பிறந்தபொழுதே, கணி நூலாலேயெண்ணி, இவள் கண்டபொழுதே நாணப்பட்டவன் இவட்குக்கணவனும்; அவற்குக்கொடுங்களென்று கூறினன்; அன்றுதொடங்கிச் சுபத்திரனும் இவள் அவனைக்காண்டற்கு ஆடவர்க்கு விருந்திடுதலைப் பேணுநின்றானென்க.

தன்கணவரல்லாதார் இவட்குஆடவராய்த் தோன்றாரென்பது தோன்றப் பலரையும் நோக்குகின்றவளை மாசிலாளென்றும், காசிலாளென்றும் பெயர்கூறினார். (௪0)

தாழ்தருபைம்பொன்மாலைத்தடமலர்த்தாமமாலை
வீழ்தருமணிசெய்மாலையிவற்றிடைமின்னினின்று
சூழ்வளைத்தோளிசெம்பொற்றூணையேபொருந்திநோக்கு
மூழ்படுகாதலானையொருபிடிநுசுப்பினாளே.

தாமம் - ஒழுங்கு.

இ - ள். அவன் விருந்தோம்புமிடத்தே, ஒருபிடியிலடங்கு நுசுப்பினாளாகிய தோளி, பொன்மாலை பூமாலை விரும்பு மணிமாலையென்கின்ற இவற்றிடையே தூணைச் சார்ந்து, மின்போலேநின்று, தனக்குத் தொன்றுபட்டுவருகின்ற காதலானை, அவர்களினுளனோவென்று நோக்குமென்க. (௪௧)

சேயிழைகணவனாகுந்திருமகன்பிறக்குநாளு
மாயிரத்தெட்டுநேர்ந்தவாரமிர்தடிசிலூட்டி
யேயினவகையினாலேயாறிரண்டெல்லையாண்டு
போயினவென்பமற்றப்பூங்கொடிச்சாயலாட்கே.

ஊட்டி - ஊட்ட.

இ - ள். சுபத்திரன் கணிகூறியவகையாலே கேமசரிக்குக்கணவனாகிய திருமகன் தோன்றுதற்பொருட்டு நாடோறும் அமுதுபோலுமடிசிலை விருந்திற்கு ஊட்டாநிற்க, அவட்குப் பன்னிரண்டாகிய எல்லையை யுடைய யாண்டுகள் கழிந்தனவென்க.

* "எந்திறத்தவலங்கொள்ளல்" என்றாற்போல. (௪௨)

முருக்கிதழ்குலிகமூட்டிவைத்தனமுறுவற்செவ்வாய்த்
திருக்கவினிறைந்தவெங்கட்பணைமுலைத்தேம்பெய்கோதை
புரிக்குழற்பொன்செய்பைம்பூட்புனையிழைகோலநோக்கித்
தரிக்கிலாதுருகிநையுந்தடமலர்க்கோதைநற்றாய்.

இ - ள். முறுவன் முதலியவற்றையுடைய திருவினது கவினிறைந்த புனையிழை கோலமுதிர்ச்சியை அவள்தாய்நோக்கி உருகி நையாநிற்குமென்க. (௪௩)

மாவடுமருட்டுநோக்கின்மதிமுகமழைக்கண்மாசில்
பூவொடுபுரையுஞ்சாயல்புனைநலந்தனித்துவைக
வேவடுபிணையினோக்கியிறைவளைகழலநின்ற
தாய்படுந்துயரமெல்லாந்தாரவனீக்கினானே.

மருட்டுநோக்கு - நோக்கினைமருட்டுநோக்கு.

இ - ள். மதிமுகத்திலே மானைவருத்து நோக்கினையுடையவாகிய கண்ணினை யுடைய கேமசரி தனித்துவைகுதலின், ஏவுண்ட மான்பிணைபோலே நோக்கி வருந்தின தாய்பட்டவருத்தத்தையெல்லாஞ் சுபத்திரன் நீக்கினானென்க. (௪௪)

போதுவாய்திறந்தபோதேபூம்பொறிவண்டுசேர்ந்தாங்
கூதுமேமகளிர்க்கொத்தபோகமுமன்னதொன்றே
யாதுநீகவலவேண்டாவாரழகுடையநம்பி
காதலான்றவத்தின்மிக்கான்கண்ணுறுநாளையென்றான்.

ஊதுமே, ஏகாரம் - வினா. ஒன்றே, ஏகாரம் - தேற்றம்.

---

* புறநானூறு, ௨௫௪.

இ - ள். பூநெகிழ்ந்தபோதே வண்டுநுகருமல்லவோ? அத்தன்மையதொன்றே மகளிர்க்குப் பொருந்தின நுகர்ச்சியும்; ஆதலின், நம்பி, இவள்காதலிக்கப் படுவான், இவளை நுகர்தற்குத்தவஞ்செய்தவன் காளைத் தானேவந்தெதிர்ப்படும்; இனி நீ சிறிதும் வருந்தவேண்டாவென்று ஆற்றுவித்தானென்க. (சுரு)

வேறு.

பொன்னிலதெழுந்ததோர்பொருவில்பூங்கொடி
மின்னுவிட்டெரிவதோர்நலத்தவ்வீங்கிருள்
பின்னிவிட்டனகுழற்பெருங்கட்பேதையூர்
துன்னினன்றுடிகழற்குரிசிலென்பவே.

இ - ள். அவ்வளவிலே குரிசில், இருளைப் பின்னிவிட்டாலன்ன குழலையுங் கண்ணிணையுமுடைய காமவல்லிபோல் ஒளி விட்டுவிளங்குவதோர் நலத்தினளாகிய பேதையூரைச் சேர்ந்தானென்க. (சுசு)

மல்லிகைமணங்கமழ்மாலைவார்குழற்
சில்சுணங்கிளமுலைச்சிறுமிதந்தையுஞ்
செல்வனைத்திருநகர்ச்சேட்பட்டானரோ
பல்கதிர்மணியொளிபரந்தபூணினான்.

இ - ள். பூணினனாகிய மாலைமுதலியவற்றையுடைய மடந்தைதந்தையும், அங்ஙனந் துன்னின சீவகனை எதிர்ப்பட்டானென்க. (சுஎ)

தென்றிசைமுளைத்ததோர்கோலச்செஞ்சுட
ரொன்றிமற்றுத்தரம்வருவதொத்தவண்
மன்றல்கொண்மார்பினன்வந்தொராலநீழ
னல்றுவந்திருந்தனனுதற்சிந்தியா.

இ - ள். அவ்வளவிலே, தென்றிசையிலே முளைத்ததொருஞாயிறு நிலத்தேநடந்து வடதிசையிலே வருந்தன்மையையொத்து, மார்பினன், வடக்குநோக்கி வந்து மந்திரத்தியானஞ்செய்து, அவ்விடத்தே ஓரால் நிழலிலே மகிழ்ந்திருந்தானென்க.

சீவகன் வேற்றுநாட்டின் சுவைகளை அறிந்து நுகரவேண்டுமென்றதற்குத் தேவனும் இவற்கு ஊழ்வகையான் உறவுகொண்டு நுகர்ச்சியை யெய்துமிடங்களை நாடி ஆண்டுச்சேறற்கு வழிகூறலின், வடதிசையிற் போதல் உளதாயிற்றென்றுணர்க. விசயமாதேவியாரைக் கண்டாற்பின்பு இராசமாபுரத்தை நோக்குவனென்றுணர்க.()

க. குடைகவித்தனையதுங்காலமாமுடி
யடியிணையாமையின்வடிவுகொண்டன
புடைதிரள்விலாவும்வில்வளைந்தபொற்பின
கடிகமழ்தாமரைகண்ணின்வண்ணமே. (சுகூ)

உ. குறங்கணிமயிரொடுகோலமார்ந்தன
பிறங்கியவுறுப்பின்மேற்பெரியநோக்கின

கறங்கிசைமணிமுழாவெருத்தங்காண்டகு
மறங்கெழுபெரும்புலிவாயின்வண்ணமே. (௫0)

௩. வரையகன்மார்பிடைவரையுமூன்றுள
புரைதபுபொன்புரைநாவுமுள்ளுடைத்
தருவரைத்தோள்களுமமரர்கோன்களிற்
றுருவுகொடடக்கையின்வடிவுகொண்டவே. (௫௧)

௪. இலங்குபொன்*னிருவரையனையவேந்தலுக்
கலங்கிதழ்த்தாமரைக்கொட்டையன்னதாய்
வலஞ்சுழிந்தமைவரகுழிந்தவாய்ப்பொடு
நலங்கிளர்நாபியுமினிதுநாறுமே. (௫௨)

௫. தடித்திறைதிரண்டுதம்மளவிற்கேற்றசூற்
கெடிற்றழகழிப்பனகிளர்பொற்றோரைய
கடிப்பரைநுழைவறக்கதிர்த்தகைவிர
லடுத்தமூக்கருமணிவயிரத்தோட்டியே. (௫௩)

௬. வார்ந்திலங்கெயிறணிபவளமாண்டவாய்
ஆர்ந்தபூவங்கையுமடியுந்தாமரை
தேர்ந்தனன்றிருமகள்கணவனுமெனத
தீர்ந்தனன்சொல்லலைஇத்தேர்சொண்டேறினான்.

இவையாறுமொருதொடர்.

இ - ள். அங்ஙனமெதிரப்பட்ட சுபத்திரன், பொன்னாகிய பெரிய மலையையொத்த தலைவனுக்கு முடியும் உச்சிசிறிதுயர்ந்து முறைமைப்படத் தாழ்ந்து சுற்றொத்தலிற் குடைப்புறத்தையொக்கும்; கண் தாமரையையொக்கும்; முகத்திற்குப்பொருந்தின மூக்கும் வயிரத்தோட்டியையொக்கும்; சிறுகி வளைந்திருத்தலின் வாயின்வடிவும் புலியின்வாயை யொக்கும்; எயிறணிந்த அவ்வாய்தான் வார்ந்து நிறத்தாற் பவளத்தையொக்கும்; குற்றமற்றபொன்னையொக்குநாவுஞ் சருச்சரையையுடைத்தாயிருக்கும், தோட்கட்டுங் குடமுழாவையொக்கும்; ஒழுகநோக்குதலிற் றோள்களும் ஐராவதத்தின் கையையொக்கும்; அகங்கையும ஆர்ந்த தாமரைப் பூவையொக்கும்; தடித்து இறைதிரண்டு தோரையவாய் வெள்சிறுகடுகும் நுழையாதபடி நெருங்கின கைவிரலுந் தம்மளவிற்கேற்ற சூற்கெடிற்றையொக்கும்; வரைபோலுமார்பிலே உத்தமவிலக்கணமாகிய மூன்றுவரையுமுள; விலாவும் வில்லுப்போல் வளைந்த பொற்பினையுடைய; நாபியும் விளங்குகின்ற இதழையுடைய தாமரைக்கொட்டையையொத்ததாய் வலத்தேசுழிந்து பொருந்துதல்வரக் குழிந்த வாய்ப்போடே நன்றாகத் தோன்றும்; குறங்குந் தாமணிந்தமயிரோடே கோலமார்ந்தனவாகிய ஒழிந்த பெருத்தஉறுப்புக்களிற் காட்டிற் பெருத்தவழகையுடைய; புறவடியிரண்டும் ஆமையின்வடிவைக் கொண்டன; உள்ளடியுந் தாமரையையொக்கும். ஆதலான், இவன் றிருமாலாமென்று தன்னிலேயாராய்ந்தான். அங்ஙனமாராய்ந்து சொல்லலைஇ அவனன்றென்று ஐயந்தீர்ந்தனனாய்த் தேரிலே கொண்டேறினானென்க.

---

* இறுவரையென்று பலபிரதிகளிலுமுள்ளது.

"ஆரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற் - செம்பொறி வாங்கிய மொய்ம்பு" என்றார் முருகாற்றுப் படையிலும். தோரை - மூங்கிலரிசி; வரிக்குவமை. (௫௪)

தேரிவரூர்ந்தனர்செல்லவத்தலைக்
கூருகிர்விடுத்ததோர்கோலமாலையைப்
பேரிசைவீணையிற்சூட்டிப்பெண்கொடிக்
காரிகையுலகுணர்கடவுட்பாடுமே.

இ - ள். இவர்கள் தேரையேறினராய்ச்செல்லாநிற்க, மனையிடத்தே பெண் கொடியாகிய காரிகை, அரும்பை வலியவலர்த்திக்கட்டின கழுநீர் மாலையை வீணையி லேசூட்டி வாசித்துக் கடவுளைப்பாடாநிற்குமென்க. (௫௫)

வேறு.

வீங்கோதவண்ணன்விரைததும்புபூம்பிண்டி
தேங்கோதமுக்குடைக்கீழ்த்தேவர்பெருமானைத்
தேவர்பெருமானைத்தேனார்மலர்சிதறி
நாவினவிற்றாதார்வீட்டுலகநண்ணாரே.

கடல்வண்ணன் - நேமிஸ்வாமிகள்.

இ - ள். கடல்வண்ணனைத் தேங்கோதம்போலத் தேன்றதும்பும் பூம்பிண்டி யிடத்தே முக்குடையின்கீழிருக்கின்ற தேவர்பெருமானை மலரைத்தூவித் துதியாதார் வீட்டைச் சேராரென்றுளென்க, (௫௬)

அடல்வண்ணவைம்பொறியுமட்டியாந்தார்கோமான்
கடல்வண்ணன்முக்குடைக்கீழ்க்காசின்றுணர்ந்தான்
காசின்றுணர்ந்தான்கமலமலரடியை
மாசின்றிப்பாடாதார்வானுலகநண்ணாரே.

இ - ள். உயிர்க்கிழவனை வருத்துதலியல்பாகவுடைய ஐம்பொறியையும்வென்ற இருடிகள் தலைவன், கடல்வண்ணன், உணர்ந்தான், அவனது திருவடியை நெஞ்சிலழுக் கின்றித் துதியாதார் வீட்டைச்சேராரென்றுளென்க (௫௭)

பூத்தொழியாப்பிண்டிக்கீழ்ப்பொங்கோதவண்ணனை
நாத்தழும்பவேத்தாதார்வீட்டுலகநண்ணாரே
வீட்டுலகநண்ணார்வினைக்கள்வராறலைப்ப
வோட்டிடும்பெண்குணனுங்கோட்பட்டுயிராவே.

பூத்தொழியா - பூத்துமாறாத.

இ - ள். கடல்வண்ணனை நாத்தழும்புபடி ஏத்தாதார் வீட்டைச்சேரார்; அங்ஙனம் வீடுபெறாதார் பின்பு வினையாகியகள்வர் வழிபறித்தலாலே எண்குணனும் அவர் கைக்கொள்ளப்பட்டு வருந்தி நெட்டுயிர்ப்புக்கொண்டு ஓடுவரென்றுளென்க.

எண்குணம்-அநந்தஞானாதிகுணங்கள். இவனைவணங்காதார்க்கு நுகரப்பெறுமை யாலுளதாம் பற்று ஒழிவின்றாய்வருவதன்றி நுகர்ச்சியெய்திப் பற்றற்று வீடுபெறுதல்

கூடாதாயிருந்ததென்பது கருத்து. முன்புவணங்காமையின், இவ்வருத்தமுற்றேமெ ன்றாள். இவை படர்க்கையாதலிற் பொருள்வேறுபட்டு முற்கூறியவைபோன்ற கொச்சகம். (௫அ)

வேறு.

முத்துமிழுமுந்நீர்மணிவண்ணனைமூன்றுலகும்
பத்திமையாற்பாடப்படுவான்றாள்பாடக்கேட்
டொத்தரம்பையன்னாளுவந்தவளொடொப்பானோர்
வித்தகனையின்னேபெறுகவெனவுரைத்தாள்.

இ - ள். நிப்புதி, மூன்றுலகும் பாடப்படுவானாகிய கடல்போலும் மணிவண்ண ன்றாளைக் கேமசரிபாடக்கேட்டு மகிழ்ந்து அவள்கருத்துந் தன்கருத்து மொத்தலில், தான் ஒரு வித்தகனை இப்பொழுதே இவள் பெறவேண்டுமென்று இறைவனைப் பராயினாளென்க. (௫௯)

வேறு.

நிலந்தினக்கிடந்தநன்னிதியந்நீணகப்
புலமபறப்பொலிவொடுபுக்ககாலையே
யிலங்குபூங்கொடியனவேழைநோக்கமு
முலங்கொடோளுறுவல்நோக்குமொத்தவே

மண்டினக்கிடந்தநிதி.

இ - ள். அறத்தாற்றேடின பொருளையுடைய அயன் அம்மனையிலே அவர்கள் வருத்தந்திரும்பிட சென்று புக்கவளவிலே, கேமசரிநோக்கமும் பிள்ளையார்நோக்க மும் ஒப்பநோக்கினவென்க. (௬0)

வேறு

கண்ணுறக்காளையைக்கண்டலுங்கைவளை
மண்ணுறத்தோயந்தடிவீழ்ந்தனமாமையு
முண்ணிறைநாணுமுடைந்தனவேட்கையு
மொண்ணிறத்திவிளைத்தாளுருக்குற்றாள்.

இ - ள். காளையை அங்ஙனமெதிர்ப்படக்கண்டாளாக, நாற்றின கையில்வளை கள் காலடியிடத்தே மண்ணுறச் செறிந்து வீழ்ந்தன; மாமையும் நிறையும் நாணுங் கெட்டன; வேட்கையுந் தீப்போல் விளைவித்துக்கொண்டாள், அத்தீயாலே தான் உருக்குண்டாளென்க. (௬௧)

வாக்கணங்கார்மணிவீணைவல்லாற்கவ
ணோக்கணங்காய்மனநோய்செயநொந்தவன்
வீக்கணங்கார்முலைவேய்நெடுந்தோளியோர்
தாக்கணங்கோமகளோவெனத்தாழ்ந்தான்.

இ - ள். திருத்தத்தையுடைய தெய்வத்தன்மைநிறைந்தஅழகிய யாழைவல்லவ னுக்கு அவள் நோக்கம் வருத்தமாய் மனத்தை நோய்செய்தலாலே யவனொந்து கச்

சுக்கட்டின வருத்தநிறைந்த முலையினையுந் தோளினையுமுடைய கேமசரியைத் திருவோ மகளோ வென்றையுற்றுக் குறைந்தானென்க. (௬௨)

நல்வளத்தாமரைநாணியவாண்முகக்
கொல்வளர்வேற்கணினுள்குழைந்தாளெனச்
சொல்வளர்த்தாரவடோழியாசோர்குழன்
மல்வளர்மார்பனைவந்துவளைந்தார்.

கொற்றொழிலே கிடந்தவேல்.

இ - ள். சோர்குழலையும் முகத்தையுமுடைய வேற்கண்ணினுள் இவனைக்கண்டு வருந்தினுளென்று அவள்தோழிமார் இச்சொல்லைப்பரப்பினார்; அதுகேட்டு எல்லாரும்வந்து சீவகனைச் சூழ்ந்தாரென்க. (௬௩)

நினைப்பருநீணிறைநிப்புதிசோர்ந்தாங்
கினத்திடையேறனையானெழிலொக்கிப்
புனக்கொடிபொற்பொடுபுண்ணியநம்பி
வனப்பினையேகண்டுவாட்கணகன்றாள்.

நிப்புதி - நிஸ்ப்ருதி.

இ - ள். நிப்புதி அவ்விடத்தேவந்து கேமசரியழகோடே ஏறனையானெழிலையும் ஒக்குமோவென்றுநோக்கிப் பின்பு நம்பியது அழகுமிகுதியாலே அதனையே பார்த்து உடம்பெல்லாங் கண்ணானாளென்க.

வாட்கண்ணினையுடையாள் மீண்டுபோனாளென்றுமாம். (௬௪)

வள்ளலைவாசநெய்பூசிமணிக்குடத்
தெள்ளறனீர்சொரிந்தாட்டினர்தேம்புகை
யுள்ளுறவுண்டகலிங்கமுடுத்தபின்
கள்ளவிழ்கண்ணிகலத்தொடணிந்தார்.

இ - ள். வள்ளலை நெய்யைப்பூசி நீரைச்சொரிந்தாட்டினார்; பின்பு அவன்றான் கலிங்கத்தை யுடுத்தான்; உடுத்த பின்பு, அவர் கண்ணியையுங் கலத்தையுமணிந்தாரென்க. (௬௫)

மங்கலவெள்ளைவழித்துமுத்தீர்த்தபின்
கொங்கலர்கோதையர்கொண்டகமெய்தி
யங்கதிர்ப்பொற்கலத்தாரமிர்தேந்தினர்
செங்கயற்கண்ணியர்சீரினயின்றான்.

இ - ள். கோதையா உண்கின்றவிடத்தைச் சந்தனத்தாலே மெழுகி முத்தாலே கோலமிட்டபின்பு, தன்னைக்கொண்டு புகுந்து பொற்கலத்திலே அடிசிலேந்தினார்; தானும் அவர்புகழ்ச்சியுடனே யுண்டானென்க. (௬௬)

வேறு.

பத்தியிற்குயிற்றியபைம்பொற்றின்னைமேற
சித்திரத்தவிசினுட்செல்வன்சீர்பெற

நித்திலமணியுறழ்கரகநீரி
லத்துறைவிடுத்தனனலர்ந்ததாரினன்.

இ - ள். சாரிறைகியசெல்வன் அங்ஙனமுண்டபின்பு பொன்னாற் பத்தியோடு செய்த திண்ணையிடத்தே தவிசின்மேலே யுறைந்து கரகத்தின் நித்திலமணிபோலு நீராலே பூசுதற்குரிய தொழில்களையெல்லாம் முடித்துவிட்டானென்க. (சுஎ)

இளிந்தகாய்கமழ்திரைவாசமீண்டியோர்
பளிங்குபோழ்ந்தருகுபொன்பதித்தபத்தியின்
விளிம்புமுத்தழுத்தியயவனக்கைவினைத்
தெளிந்தபொன்னடைப்பையுட்பாகுசென்றவே.

இ - ள். ஒருமுழுப்பளிங்கை யறுத்து அதன்பக்கத்தே பத்தியாகப் பொன்னிடப்பட்டனவற்றிலே இணுங்கினகாயுந் திரையுஞ்சென்றன. திரை - வெற்றிலை. இன் - அசை. இவை உபகரித்தெடுத்துக் காட்டப்பட்டன. யவனத்திற்றச்சர் பொன்னாற்செய்து விளிம்பு முத்தழுத்திய கைவினையையுடைய அடைப்பையிலே பாக்கும் வெற்றிலையு முகவாசமுமீண்டிச்சென்றன இவை தின்றற்குச்சென்றன.

இனி ஒன்றாக வுரைப்பாருமுளர். (சுஅ)

பாசிலைசுருட்டுபுகறித்துப்பல்வினைத்
தேசிகம்படத்துடைத்துமிழ்ந்துதேங்கமழ்
வாசம்வாய்க்கொண்டனன்மணிசெய்குண்டலம்
வீசிவில்விலங்கிவிட்டுமிழவெம்பவே.

தேசு - தேசிகமெனத்திரிந்தது.

இ - ள். குண்டலமசைந்து ஒளியைக் குறுக்கிட்டுக்காலும்படி வெற்றிலையைச் சுருட்டிக் கறித்து அதிற்குறையாலே பல்வினை ஒளியுண்டாகத்துடைத்து அதனையுமிழ்ந்தபின்பு வெற்றிலையைத் தின்றானென்க. (சுகூ)

க. பண்ணுலாங்கிளவிதன்பரவைவேந்தல்குல்
வண்ணமேகலையிவைவாய்ந்தபூந்துகி
லுண்ணிலாய்ப்பசுங்கதிருமிழ்வபாவியேன்
கண்ணையுமனத்தையுங்காலகொண்டிட்டவே.

“பண்ணுலாம்” என்பதுமுதல் “கலைத்தொகை” ஈறாக ஒன்பதுமொருதொடர்.

இ - ள். பண்ணொத்த கிளவிதன்னுடைய வல்குலும் மேகலையுந் துகிலுமாகிய இவை, பாவியேன் கண்ணையும மனத்தையுந் தமக்கிருப்பிடமாகக் கொண்டு விட்டன வென்க.

துகிலுக்குள்ளே நிலைபெற்றுநின்று ஒளியுமிழ்வனவாகிய மேகலை. (எ0)

உ. கடிகமழ்குழலிறைற்கடிமெய்யெலா
நடுவொசிநோன்சிலைப்புருவகதாற்புடைத்
தடுமலர்நெடுங்கணுலாவிபோழ்ந்திடாக்
கொடியவளிளமுலைகொல்லுங்கொல்லுமே.

இ - ள். சிலையாகிய புருவத்தாலேயடித்து மலரையடுங் கண்ணாகியவாளாலே உயிரைப்போக்காதகொடியவள், என்மெய்யையெல்லாந் தன்குழலாகிய கயிற்றாலே கட்ட, முலையாகியயானை என்னுயிரைக் கொல்லுங்கொல்லுமென்க.

சிலை ஒற்று; "உயிரும்புள்ளியுமிறுதியாகி" என்னுஞ் சூத்திரத்தின். முலைதான் வருத்தலுடைமையிற் றானும்வினைமுதலாம். கட்டி - கட்டவென்க. (எக)

௩. கடியனகச்சிறைற்கட்டபபட்டன
கொடியனகுங்குமங்கொட்டப்பட்டன
வடிநிலம்பரந்துமுத்தணிந்தவெம்முலை
யிடைநிலஞ்செகுப்பனவென்னைசெயா.

இ - ள். இயல்பாகமணமுடையவாய்க் கச்சிறைற்கட்டப்பட்டனவாய் எழுது கொடியையுடையனவாய்க் குங்குமமிடப்பட்டனவாய் அடிபரந்து முத்தணிந்த முலை, தம்மைச்சுமந்திருக்கின்ற இடையைக்கெடுப்பன; என்னைப்பெற்றால் எல்லாஞ்செய்யுமல்லவோவென்க.

உலகிற் றொழிலாற்கடியவர்கள் கட்டுண்ணப்படுவரென்றும், மனங்கொடியவர்கள் ஒன்றாற் புடையுண்ணப்படுவரென்றும் ஒருபொருடோன்றிற்று. (எஉ)

௪. கரியவுள்வெறியனகட்டப்பட்டன
புரிவொடுபுறத்திடப்பட்டப்பூங்குழல்
தெரியின்மற்றென்செயாசெய்யநீண்டன
பெரியகண்போலவும்பேதுசெய்யுமே.

இ - ள். கரியனவாய் உள்ளேமணத்தையுடையனவாய்க் கட்டிமுடிக்கப்பட்டனவாய்க் கடைகுழலுதலுடனே எருத்தத்தே கிடத்தப்பட்டகுழல், செய்யனவாய் நீண்டனவாகிய கண்வருத்துமாறுபோலவும் வருத்தாநிற்கும்; ஆராய்ந்துபார்த்தால் எல்லாஞ்செய்ய வல்லனவென்க.

கொடியனவாய் உள்ளே களளின்மயக்குடையனவாய்க் கட்டுண்ணப்பட்டன வாய் எப்பொழுதுந் திருகுதலுடனே தம்மிடத்தினின்றுங் கீழ்ப்போந்துகிடக்கும் படி புறத்திடப்பட்டனவாயென்றும் ஒருபொருடோன்றிற்று. உள்வெறுவியன வுமாம். (எ௩)

௫. காதன்மைகண்ணுளேயடக்கிக்கண்ணெனுந்
தூதினாற்றுணிபொருளுணர்த்தித்தான்றமர்க்
கேதின்மைபடக்கரந்திட்டவாட்கணேக்
கோதநீரமுதமுமுலகும்விற்குமே.

இ - ள். வாட்கண்ணியையுடையாள் தன்வேட்கையெல்லாந் தன்கண்ணுள் ளேகிடத்தி அக்கண்ணென்கின்றதூதாலே தான்றுணிந்தபொருளை எனக்கறிவித் துச் சுற்றத்தார்க்கு அவ்வேட்கைதோன்றாதபடி மறைத்தநோக்கம் அமுதத்தையு முலகையுந் தனக்குவிலையாகவிற்குமென்க.

தன்னுளேயென்பதூஉம் பாடம். (எ௪)

வேறு.

கூ. மிகுகொடாமுத்தஞ்சூட்டிமீளிமைதீர்த்துமின்னு
நகுகொடாமணிகணல்லதெளித்துக்கொண்டெழுதிநன்பொன்
முகபடாம்வைப்பவாட்செற்றழன்றுகண்கரிந்தமுல்லைத்
தொகுகடாங்கோதைவெய்யதுணைமணிமுலைகடாமே.

பன்னீராண்டுஞ்சென்று முலைமுதிர்தலிற் கண்கருகினவென்றார். மீளிமை - கொங்கையின்வலி.

இ - ள். முல்லைப்பூவினது திரண்ட தேன்பரக்குங்கோதையுடையமுலைகள் தாம், ஒழிந்தவற்றிற்குக்கொடாத மிகுகின்ற மீளிமையைத்தீர்த்து முத்தஞ்சூட்டி மின் றம்மையிகழாத நல்லமணிகளைக் களைத்துக்கொண்டெழுதி நல்ல பொற்சச் சாகிய முகபடாத்தையும்வைப்ப, இவ்விடையீட்டாலே வெளியேநின்றுகொல்ல மாட்டாதே உள்ளேநின்று ஆளைச்செறுத்துநோக்கி நெஞ்சழன்று கண்கருகின வென்க. (எரு)

எ. தேன்கறிகற்றகூழைச்செண்பகமாலைவேற்க
ணூன்கறிகற்றகாலனெண்மணித்தடக்கைவைவேல்
கூன்பிறைநுதலோர்கூற்றநங்குளிமுலைநமன்கைப்பாசம்
யான்பிறனளியன்வாழ்வானசைப்பட்டிருக்கின்றேனே.

கறிகற்ற - மேயக்கற்ற. வேற்கண் - கண்ணென்னுமாத்திரை. *"கருங்கண்ணன்" போல. பிணியால் உடம்பைவாட்டலின், ஊனைமேயக்கற்றவென்றார்.

இ - ள். சண்பகமாலைதன்கண் காலன்கையில்வேல்; நுதல் நிகரில்லாத அவன்றான்; முலை அவன்கையிற்பாசம்; இங்ஙனமாகவும் யான் உயிர்வாழ்தற்கு ஆசைப்பட்டிராநின்றேனாதலின், யான்பிறனேயென்க.

ஏகாரம் - தேற்றம். மக்களிலல்லேனென்பது. காலன் - கூற்று. கூற்று, நமனென்பன சுட்டுப்பெயர். இனிக் காலன்-கூற்றத்திற்கு ஏவல்செய்யுமவனுமாம். ()

வேறு.

அ. திருவிற்குயகற்பகத்தெரியல்மாலையா
ருருவிற்குவிளக்கமாமொன்பொற்பூங்கொடீ
முருகுற்றுமநங்காற்குமெனக்குமொய்சடை
யொருவற்கும்பகைபுரியாலொருத்திணையமே.

†"மெல்லெழுத் துறழு மொழியுமா ருளவே" என்னும பொதுவிதியாற் குளந்தாது குளத்தாதுபோல்வனவற்றை முடித்த தன்மையின், அவை குளங்களை, குளக்களைபோல உறழும்வழக்கினவல்லவென்பதறிவித்தற்குச் "செல்வழி யறிதல் வழக்கத் தான" என்றுகூறினமையிற் சண்பகங்கோடென முடித்ததூஉம் பொதுவிதியன்றிச் சிறப்பின்றாதலாற் றேவர் அவ்வாறு கற்பகத்தெரியலென்றமையுணர்க.

* திருச்சிற்றம்பலக்கோவையார், ருகூ.
† தொல்காப்பியம், எழுத்ததிகாரம், புள்ளிமயங்கியல், கஎ.

இ - ள். கற்பகத்திற் றெரிதலையுடைய மாலையார்ந்ததோர் உருவிற்கு விளக்க மாம் பூங்கொடி, திருவிற்கும், முருகற்கும், அநங்கனுக்கும், எனக்கும், இறைவற் கும் பகைத்தியாயிராநின்றாள்; ஒருத்தி வடிவிருக்கும்படி யென்னென்க.

அழகையும், வேலையும், வில்லையும், அறிவையும், பிறையையும் வாங்குதலிற் பகையென்றான். திருவிற்கோரென்பதூஉம் பாடம். இனிப் பூங்கொடியொருத்தி திருவிற்கும், முருகற்கும், அநங்கனுக்கும், இறைவற்கும் வடிவேபகைத்தியாயிராநின் றாள்; எனக்கும் அவ்வாறன்றி உயிர்க்கே பகைத்தியாயிராநின்றாளென்றுமாம். (எஎ)

கூ. கலைத்தொகைநலம்பலகடந்தகாளைதா
னலத்தகையவணலநினைப்பநாய்கனு
மலைத்தொகைமதந்தவழ்யானைமன்னவ
னிலத்தவர்க்கறிவுறநெறியிற்செப்பினான்.

அரசன் செறிந்திருத்தலின், அவனுக்கும பரிவாரத்திற்கும் மணத்தையறிவி த்தான்.

இ - ள். காளைதான், களங்கொண்டிட்டன வென்பதுமுதலியவற்றையெல்லாங் கூறித் தன்மேல் அன்பின்றகைமையையுடையவள் நலத்தைநினைக்க, சுபத்திரனும் அறிவித்தானென்க.

கேமசரிவருத்தம் "கண்ணுற" "நல்வள" என்பனவற்றிற் கூறினார். (எஅ)

இடியுமிழெறிதிரைமுழக்கிற்பல்லியங்
கொடியணிவியனகர்க்குழுமியார்த்தெழக
கடிமணமியற்றினர்கடவுணாளினால்
வடிமலர்க்கோதையைமைந்தற்கென்பவே.

இ - ள். நகரிலே, இடியுமிழ்ந்த முழக்குப்போலவுந் திரைமுழக்குப்போலவும் பல்லியந்திரண்டார்த்தெழாநிற்க, நல்லநாளிலே கோதையை மைந்தனுக்கு வாழ்க் கைப்படுத்தினாரென்க. (எகூ)

மணிக்குடமழுத்திவைத்தனையதோளினன்
கணிக்கிடங்கொடாநலங்கதிர்த்தகாரிகை
யணிக்கிடனாகியவரிவைதன்னொடும்
பிணித்திடைகொடாதவன்பெற்றவின்பமே.

வடிவிற்குக் கூறிய நூல்வல்லவற்கும் புகழவிடங்கொடாத நலம். பிணித்து- பிணிக்க.

இ - ள். தோளினனலத்தை அரிவையதுகாரிகைதன்னோடும் அவரங்ஙனம் பிணித்தலின், அவன்பெற்றவின்பம் இடைவிடாதாயிற்றென்க. (அ0)

பூந்துகில்பொருதிரைபொம்மல்வெம்முலை
யேந்தியமணிவரையிரக்கநீர்த்தரங்
காய்ந்தவன்றோளிணைநாகமாகவைத்
தீந்ததக்கடலவற்கமுதமென்பவே.

இ - ள். துகில் பொருதிரையாக, பெருமையையுடைய ஏந்தியமுலை வரையாக, தனதருள் நீரினசைவாக, வலியதோளிரண்டும் பாம்பாகவைத்து அவன்கடைதலின், அக்காமக்கடல் அவற்கு அமுதத்தைக் கொடுத்ததென்க.

இவற்றான் முயக்கமும், அதரபானமுங் கூறினர். அவன்காட்டக் காண்டலின், அவற்கென அவன்மேலேற்றினர். (அக)

சந்தனச்சேற்றிடைத்தாமவார்குழற்
பைந்தொடிபடாமுலைகுளிர்ப்பப்பாய்தலின்
மைந்தனதார்குழைந்துடையவாய்திறந்
தஞ்சிலம்பணியல்குற்கலையொடார்த்தவே.

இ - ள். மைந்தனுடையதார அவன்றன்மார்பிற் சேற்றிடையிலே யுடையும்படி பைந்தொடிமுலை குளிர்ப்பப்பாய்தலின், வாய்விட்டுச் சிலம்புங்கலையும் ஆர்த்தனவென்க.

அவள் முயங்கினபின்பு புணர்ச்சித்தொழிலை நிகழ்த்தினனவனென்க. யானை பாய்தலின், தூசி சேற்றிலே யுடைந்ததென்றும், அதற்குச் சிலரார்த்தாரென்றும் ஒருபொருள் தோன்றிற்று. (அஉ)

வேறு.

கோதையுங்குழலும்பொங்கக்குவிமுலைக்குங்குமமாலைப்
போதுகப்பொருதுநானும்பொருகடன்முத்துமூழ்கக்
காதலுங்களிப்புமிக்குக்கங்குலும்பகலும்விள்ளார்
சாதலும்பிறப்புமில்லாத்தன்மைபெற்றவர்களொத்தார்.

இ - ள். அவன்றொழிற்களைக்கண்டு அவளுந் தன்கோதையுங் குழலும்பொங்க, முலையின்மாலையிற போதுசிந்த, பொன்னாணும் முத்தும் ஒன்றிலே யொன்றுமூழ்கப் புணர்ச்சித்தொழிலை நிகழ்த்தலின், இருவருங் காதலுங் களிப்புமிக்கு விள்ளாராய்த் தேவரை யொத்தாரென்க. (அ௩)

புனைமலர்த்தாரினானும்போதணிகொம்பனாளு
நனைமலர்க்காவுமந்தண்வாவியுநல்லவாடிச்
சுனைமலர்க்குவளைகுற்றுச்சூழ்மலர்க்கண்ணிகட்டி
வினைநலநுகர்ந்துசெல்வார்விதியினான்மிக்கநீரார்.

இ - ள். ஊழினால் அன்புமிக்காராகிய தாரினானுங் கொம்பனாளுங் காவினும் வாவியினும் ஆடிக் குற்றுக் கட்டி இங்ஙனம் நல்வினையின்பயத்தைநுகர்ந்து செல்லாநிற்பரென்க. (அ௪)

பொழிந்துகுகாதல்பூண்டுபுல்லுகைவிடாதுசெல்லக்
கழிந்தனவிரண்டுதிங்கள்காளையுமற்றோர்நாளாற்
பிழிந்துகொள்வனையபெண்மைப்பெய்வளைத்தோளிதன்னோ
டழிந்துவீழருவிக்குன்றினுய்மலர்க்காவுபுக்கான்.

இ - ள். நிறைந்து புறந்தோன்றுகின்ற காதலைப் பூண்டு இங்ஙனமுயக்கத்தைக்

கைவிடாது ஒழுகாநிற்க, இரண்டுதிங்கள்சென்றன; அவ்வளவிலே,மற்றைத்திங்களில் ஒருநாளிலே, காளையும் வடித்துக்கொண்டாற்போலும் பெண்மையினையுடைய தோழிதன்னோடே காவிலே சென்றுபுக்கானென்க. (௮௫)

காஞ்சனக்கமுகுகாய்பொற்கனிக்குலைவாழைசூழ்ந்து
பூஞ்சினைநாகந்தீம்பூமரக்கருப்பூரச்சோலை
மாஞ்சினைமயில்களாடச்சண்பகமலர்கள்சிந்துந்
தீஞ்சுனையருவிக்குன்றஞ்சீர்பெறவேறினானே.

இ-ள். பொன்போலுங் குலைக்கமுகும், பொன்போலுங் கனியையுடைய வாழையுஞ் சூழப்பட்டுத் தன்னிடத்தே நாகத்தையுந் தீம்பூமரத்தையுமுடைய கருப்பூரச்சோலையில் மாஞ்சினையிலே மயில்களாடச் சண்பகமலர் சிந்தும் இனியசுனையையுடைய குன்றத்தை யேறினானென்க. (௮௬)

தினைவிளையேனற்செவ்வாய்ச்சிறுகிளிமாதரோப்பப்
புனைவளைத்தோளிசொல்லைக்கிளியெனக்கிள்ளைபோகா
நனைவிளைகோதைநாணிப்பொன்னரிமாலையோச்சக்
கனைகழற்குரிசினண்ணிக்கவர்கிளியோப்பினானே.

இ-ள். அம்மலையிற் றினைவிளைந்தபுனத்திற் கிளியை மாதரோட்ட, அக்கிளி யவள்சொல்லைத் தன்னினத்தின்சொல்லென்றுகருதிப் போகாவாக, அவள் அதற்கு நாணிப் பொன்னரிமாலையை யோச்சினாளாக, பின்னும்போகாமைகண்டு அவள் கருத்துமுடித்தற்குக் குரிசில், அக்கிளியையணுகி யோட்டினானென்க.

இவன் நீங்கல்வன்மைகண்டு புலவிகூர்ந்ததனைத் தீர்த்தபடி மேற்கூறுகின்றார் ()

கொந்தழல்வேற்கணாலென்னாவிகூட்டுண்டகொம்பே
செந்தழையலங்கலேந்திச்சீறடிபரவவந்தே
னுய்ந்துழைப்பணிசெய்வேனோவுடம்பொழித்தேகுவேனோ
பைந்தழையல்குற்பாவாய்பணியெனப்பரவினானே.

இ-ள். எரிகின்ற அழலையுடைய வேற்கண்ணாலே என்னுயிரைத் திறை கொண்டகொம்பே! தழையையும் மாலையையுமேந்தி நின்னடியைப்பரவவந்தேன், பாவாய்! இனி உயிருடனிருந்து நின்னேவல்செய்யக்கடவேனோ? இறந்துபடக்கட வேனோ? இரண்டிலொன்றை அருளிச்செய்யென்று பரவினானென்க. (௮௭)

வீணையுங்குழலும்பாலுமமுதமுங்கரும்புந்தேனும்
பாணியாழ்கனியும்வென்றபைங்கிளிமழலைத்தீஞ்சொல்
வாணிகமகளிர்தாமேவாணிகம்வல்லரென்னாப்
பூண்முலைபொதிர்ப்பப்புல்லிப்புனைநலம்பருகினானே.

பாணியாழ் - பாட்டையுடைய யாழுமென்க. இவன் இறந்துபடுவேனோவென் றதற்குக் குறுமுறுவல்கொண்டு ஒருமொழிகொடுப்பவே ஊடறீர்ந்ததாதலின், அச் சொல்லை மழலைத்தீஞ்சொலென்றுமகிழ்ந்தான். அம்மொழி கூறலாகாமையிற் கூறிற் றிலர்.

இ - ள். வீணைமுதலியவற்றைவென்ற சொல்லினையுடைய வாணிகமகளிர் தாம் முதல்கெட ஊதியஞ்செய்யாரேயென்று வியந்து புல்லிப் பருகினனென்க.

முதல் - தன்னுயிர். ஊதியம் - ஊடல். (அக)

திங்களங்குழவிசெவ்வானிடைக்கிடந்திமைப்பதேபோற்
குங்குமமார்பிற்பூண்டகுளிர்கதிராரமின்ன
மங்கையோடிருந்தபோழ்தோர்மணிவண்டுகண்டுசொன்னான்
கங்குலுநீங்கலுற்றுக்கமழ்மலரணிந்ததாரான்.

இ - ள். தாரான் பிறை செக்கர்வானிலே கிடந்து விளங்குவதுபோலே தனது குங்குமமார்பிலேதங்கிய ஆரம்விளங்கும்படி நீங்கி மங்கையுடனிருந்தவளவிலே, வந்ததொரு வண்டைக்கண்டு, இரவு பிரியக்கருதி ஒருவார்த்தைகூறினனென்க. (கூ0)

மணிவண்டிம்மாதர்கொங்கைமதுவுணவந்தபோழ்தங்
கிணைவண்டங்கிறந்துபாடின்றிருக்குமேயிரங்கலின்றாய்த்
துணைவண்டுதுஞ்சினீயுந்துஞ்சுவையென்றுநின்கட்
பணிகொண்டதின்மையாற்றான்பரிவொடுமிருக்குமன்றே.

மணிவண்டு - அண்மைவிளி. இருக்குமே, ஏகாரம் - வினா.

இ - ள். வண்டே! நீமதுவுண்ணவந்தபொழுது, நின்பெடை அவ்விடத்தே இறந்துபாடின்றாய் வருத்தமுமின்றாயிருக்குமோ? இங்ஙனேயன்றோ: தானிறந்துபடிற் றுணைவண்டாகியநீயும் இறந்துபடுவையென்றுட்கொண்டு இறந்துபடாதே உன்னிடத்தே உரியதொருதொழிலை அடியிலே தன்னிடத்துக்கொள்ளாமையால் அன்புடனே ஆற்றியிருக்குமல்லவோவெனச் சொன்னானென்க.

பணியென்றது - மகளிரிருந்து இல்லறத்தைநிகழ்த்துதற்கு வேண்டுவனதேடி வருதல் ஆடவர்க்குப் பணியாதலே. (கூக)

குழவியாய்ப்பிறந்துவெய்யோன்குமரனாய்முறுகியிப்பால்
விழைவுதீர்கிழவனாகிவிழுக்கதிருலந்துவீழ
மழலைவண்டுழலக்கமல்லிகையலங்கல்சூட்டிக்
குழல்புரைகிளவியோடுங்கொழும்புகையமளிசேர்ந்தான்.

இ - ள். வெய்யோன், முன்புகுழவியாய்ப்பிறந்து பின்பு குமரனாய்வெம்மைமிக்கு மீளும்பகுதியிற் கிழவனாய்க் கதிருலந்துபடுதலின், சீவகன் வண்டுழலும்படியலர்ந்த அலங்கலைச்சூட்டிக கிளவியோடே அமளியைச் சேர்ந்தானென்க.

உம்மை - இசைநிறை. (கூ௨)

திருத்துயில்பெற்றமார்பன்றிருந்துதாருழக்கவின்ப
வருத்தமுற்றசைந்தகோதைவாளொளித்தடங்கணிலம்
பொருத்தலும்பொன்னனாளைப்புறக்கணித்தெழுந்துபோகிப்
பருச்சுடர்ப்பவளநோன்றாழ்ப்பன்மணிக்கவுசேர்ந்தான்.

இ - ள். அம்மார்பன் மாலையுழக்குதலாலே இன்பத்தாற்பிறந்த வருத்தத்தை

யுற்று இளைத்தகோதை தன்கண்ணாகியநீலத்தைக் குவித்தவளவிலே, அவன் அவளைத் திரியப்பார்த்து எழுந்திருந்துபோய்ப் பவளத்தாழையுடைய மணிக்கதவைச்சேர்ந்தா னென்க.

துயிறல் - தங்குதல். (கஙு)

அல்லியுட்பாவையன்னாளறிவுறுவகையினேற்றி
மெல்லவேதிறந்துநீக்கிமின்னுவிட்டிலங்குபைம்பூட்
கொல்சினமடங்கலன்னான்கொழுநிதிமாடநீந்திப்
பல்கதிர்ப்பரிதிபோலப்பாயிருளேகினானே.

இ - ள். மடங்கலன்னான், திருவையொப்பாள் திறக்கின்றவோசை கேட்டறியாதபடி முற்பட நிலையோடே கதவைத்தள்ளி மெல்லத்திறந்து பின்பு முடியத் திறந்து நீந்திப் பரிதிபோலே இருளிலேபோனானென்க. (கச)

தாளுடைத்தடங்கொள்செவ்வித்தாமரைப்போதுபோலும்
வாளுடைமுகத்தினுடன்வருமுலைத்தடத்தின்வைகி
நாளினும்பெருகுகின்றநகைமதியனையகாதற்
கேள்வனைக்கனவிற்காணாள்கிளர்மணிப்பூணினாளே.

இ - ள். அவன் அங்ஙனம் போகின்றவளவிலே, பூணினளாகிய தாமரைப் போதுபோலுமுகத்தினள், தன்முலைத்தடத்தேதங்கி நாடோறும்வளருகின்ற பிறையையொத்த காதலையுடைய கணவன்றன்னைக் கனவிலே காணாளாயினாளென்க.

கனாக்காண்கின்றவள் அவன்போகக்கண்டாளென்க. (கரு)

அரந்தினப்பிறந்தபைம்பொனரும்பியமுலையினாளைக்
கரந்தவன்கங்குனீங்கக்கதிர்வளையணங்குமென்றோள்
வரந்தருதெய்வமன்னாள்வைகிருளனந்தமேறிப்
பரந்தெலாத்திசையுநோக்கிப்பையவேபரிவுகொண்டாள்.

அராவுதலாற்பிறந்த பொடியாகியபொன் - சுணங்கு.

இ - ள். முலையினாளையொளித்து அவன் அங்ஙனம்போகாநிற்க, அவள் கனவாலேவிழித்து அனந்தறீர்ந்து விடியற்காலத்திருளிலே எல்லாத்திசையும் பரந்து பார்த்து முறைமைப்பட வருத்தங்கொண்டாளென்க.

வளைவருந்துந்தோள். கணவற்கு நினைத்தனகொடுத்தலின், வரந்தருதெய்வம். ()

திருமணிகுயின்றசெம்பொற்றிருந்துபூங்கொம்பனாடன்
கருமணிப்பாவையன்னான்கரந்துழிக்காண்டல்செல்லா
ளெரிமணிவிளக்கமாடத்திருளறுகாறுமோடி
யருமணியிழந்தோர்நாகமலமருகின்றதொத்தாள்.

இ - ள். மணியாற்செய்த கொம்பனாள், தன்கண்ணிற் கருமணியிற் பாவையை யொப்பான் மறைந்தவிடத்தைக்காணாளாய், மணிவிளக்கத்தையுடைய மாடத்தில் விளக்கொளியுள்ளவளவுந்தேடி, நாகந் தன்கண்ணாகிய மணியையிழந்து வருந்துவதனை யொத்தாளென்க. (கஎ)

வேறு.

யாண்டையாயையவஞ்சினெனுருயி
ரீண்டுடம்பொழித்தேகவலிக்குமா
னீண்டதோளவனேநிறையானிலேன்
றீண்டுவந்தெனத்தேனின்மிழற்றினாள்.

ஒளிக்கக்கண்டுகொளென்று முன்பும் விளையாடுவாராதலின், இப்பொழுதும் அதுவாகநினைந்து யாண்டையாயென்றும், அஞ்சினேனென்றுங்கூறினாள். நீண்ட தோள் - உத்தமவிலக்கணம்.

இ-ள். ஐயனே! நீயெவ்விடத்தேநிற்கின்றாய்; யானஞ்சினேன்; இனிநீதா னேவாவென வாராதிருத்தலின், தோளவனே! உயிர் இப்பொழுது உடம்பினைக் கைவிட்டுப்போகத் துணியாநின்றது, ஆதலின், நிறையழிந்தேன்; இனித் தீண்டுவந் தென மிழற்றினாளென்க.

தீண்டுவந்தென்றாள், கண்டேன் சீதையை யென்றாற்போல. (௬௮)

கனிகொள்காமங்கலந்துயிரொன்றலி
னினியர்மங்கையரென்பதுகூறுவாய்
பனிகொண்மாமதிபோற்பசப்பூரயான்
றனியளாவதுதக்கதுவோசொலாய்.

இ-ள். மங்கையர், அன்புகனிதல்கொண்ட வேட்கை தம்மிற்பொருந்தி உயிர் ஒன்றுபடுமிடத்து இனியராயிருப்பர்; அத்தன்மையில்லாதவிடத்து இனியரல்ல ரென்பது முன்புகூறுகின்றநீ யாம் இங்ஙனம் ஒன்றியொழுகுகின்றநாளிலே பனி மூடியமதிபோற் பசக்கும்படி யான்றனிப்பது நினக்குத் தக்கதோ? கூறாயென்றா ளென்க. (௬௯)

கழலுநெஞ்சொடுவளைசோருமாற்
சுழலுங்கண்களுஞ்சுடுறுபொன்னென
வழலுமேனியுமாற்றலேனையவோ
நிழலினீப்பருங்காதலுநீத்தியோ.

இ-ள். ஐயனே! போகின்றதொரு நெஞ்சோடே வளையும்போகாநின்றது; கண்களும் பாராநின்றன; மேனியும் உருகுகின்ற பொன்னென அழலாநின்றது; ஆதலின், ஆற்றலேன்; யானிங்ஙனமாகவும், நீ நிழல்போல நீத்தற்கரிய காதலையுங் கைவிடுதியோவென்றாளென்க.

ஐயவோ, ஓ-இரக்கக்குறிப்பு. நீத்தியோ - ஓகாரம் - வினா. (௪௦௦)

திருந்துமல்லிகைத்தேங்கமழ்மாலையான்
புரிந்துசூடினும்பூங்கொடிநுண்ணிடை
வருந்துமான்மடவாயெனும்வஞ்சநீ
கரிந்தியாளையக்காண்டலும்வல்லையோ.

இ-ள். மல்லிகைமாலையை யான் விரும்பிச்சூடினும், இடைமுரியுமென்றறி

யாதபேதாய்! நினது நுண்ணிடை வருந்தாநிற்குமேயென்றுகூறும் பொய்யைவல் லாய்! யான் கருகினையக் காணுதலும் வல்லேனோ? என்றாளென்க.

ஓகாரம் - வினா. (சுoக)

தொண்டைவாயிவடொய்யில்வனமுலை
கண்டுதேவர்கனிபவென்றேத்துவாய்
வண்டுகூறியவண்ணமறிந்திலேன்
விண்டுதேன்றுளிக்கும்விரைத்தாரினாய்.

இ - ள். வாயினையும் முலையினையுமுடைய இவளைப்படைத்தபொழுது, அய னார்தாங் கண்டு, உலகைப்படைத்தநாமே அதனையழிப்பதோருருவையும் படைத்தோ மேயென்று வருந்துவரென்று முன்னிலைப்புறமொழிகூறிப் புகழாநின்றவனே! தாரி னாய்! நீ வண்டைக்கூறியதன்மையை யானறிந்திலேன்; அறியின், இங்ஙனம் விடே னென்றாளென்க.

தேவரென்றது ஒருவரைக்கூறும்பன்மை. *"மண்மேற - றேவரென் றேயிறு மாந்து" என்றாபிறரும். இனி இவள்வாயையும் முலையையுங்கண்டு தெய்வமகளிர் வருந்துவரென்றுமாம். (சுoஉ)

வேறு.

முலைவைத்ததடத்திடைமூழ்கலுற்
றலைவைத்துநிலத்தடிதைவருவாய்
சிலைவித்தகனேதெருளேனருளா
யுலைவித்தனையென்னுயிர்காவலனே.

முலைவைத்ததடம்-யாம்பிறந்தவிடமுஞ் சிறிதுகிடக்கவேண்டுமென்று முலைதான் அருள்பண்ணிவைத்த தடம். இது கொண்டுகூறிற்று; †"எஞ்சுற்றமென்றிரங்காதாக மெல்லாங்கவர்ந்திருந்து" என்பமேலும். இருவரும் முன்புஉறுதிருத்தலின்மையின், உறிலெனவே முன்பு ஊடறீர்த்துக்கூடநினைக்கிலென்பதுபெற்றாம். நின்வளைவெல் லாம் வருத்தமாயிற்றென்பதுதோன்றச் சிலைவித்தகனேயென்றாள். எவனென்னும் வினா என்னெனநின்றது.

இ - ள். சிலைவித்தகனே! உயிர்காவலனே! நீகூறிய தடத்திடையிலே ஊடறீர் த்துக் கூடநினைக்கிற் றலையை நிலத்தேவைத்து அடியைத்தடவுகின்றநீ இப்பொழுது, சலிப்பித்தாய்; இதற்குக்காரணந் தெளிகின்றிலேன்; இதற்குக்காரணமென்? அருளிச் செய்யாயென்றாளென்க.

வைத்தநிலம் பாடமாயின், காலைவாங்கினால் அந்நிலத்தில் அடியைத்தைவருவா யென்க. (சுoங)

கடனித்திலம்வைத்தகதிர்முலையின்
னிடமெத்துணையத்துணையும்மெழுதி

* திருவாசகம், திருச்சதகம், ச.
† இலக்கணையாரிலம்பகம், கஉரு.

யுடனொத்துறைவா னுறைவாரலனேன்
மடனொத்துளதென் னுயிர்வாழ்வதுவே.

எழுதி - எழுத.

இ - ள். வடமணிந்தமுலையினுலே தன்மாரபிடமெவ்வளவுண்டு அவ்வளவும் யானெழுத, என்னுடனேயொத்துறைகின்றவன் இனி என்னிடத்தேவாரானுயின், என்னுயிர்வாழுநிலைமை முற்பட்ட அறியாமையையொக்குமென்றுளென்க.

அது வண்டைக்கூறியதனைத் தானறியாதிருந்தது. ஒத்துளது-ஒருசொல். முலையெங்குந் தொய்யிலெழுதி யுறைவானென்றுமாம். (௧௦௪)

பெறுமன்பினளென்பதுபேசினலா
லுறுமன்பினளென்றறிவாரிலையா
லிறுமென்பொடினைந்துநைவேற்கருளி
நறுமென்கமழ்தாரவனேநணுகாய்.

கமழ்தார் - பெயர்மாத்திரை.

இ - ள். நறிய தாரவனே! நீ நிசழ்த்தின நிலைமைகண்டு, என்சுற்றத்தார் இவள் நாடோறும் பெறுமன்பினளென்பது பேசினன்றித் தேயுமன்பினளென்று கூறுவாரில்லை; உருகுமென்போடு நைவேற்கு இன்னுமருளி நணுகாயென்றுளென்க. (௧௦௫)

நுனைசீறடிநோவநடந்துசெலே
லெனநாவியகத்துறைவாயெனுநீ
புனைதாரவனேபொயுரைத்தனையா
லினையேனுழியத்தனியேகினையே.

இ - ள். தாரவனே! இப்பொழுது தீவினையையுடைய யானிருப்ப நீதனியே யேகினையாதலின், முன்பு எனதாவியகத்தேயுறைவாய்! நின்னுடைய சீறடிநோவ நடந்துதிரியாதேகொள்ளென்று கூறுநீ பொய்யை யுரைத்தாயென்றுளென்க. (௧௦௬)

பருமுத்துறையும்பணைவெம்முலைநின்
றிருமுத்தகலந்திளையாதமையா
வெரிமொய்த்தலலும்மிகல்வேலெரிபுண்
மருமத்தனலும்வகைசெய்தனையே.

அவன் முத்துவடந்தங்கும் பெருத்த விரும்பியமுலையென்று, அவற்றைப் பின் பிரிதல்வன்மையின், அவன்கருத்துவேறுக எண்ணிக்கூறினுள்: முத்து - கண்ணீர், பனை- பிழைத்தல், வெம்மை - காமத்தீயாலெவெவ்விதாதல்; கண்ணீர்தங்கும் யான்பிழைக்கும் வெவ்வியமுலையென்று.

இ - ள். நீகூறுகின்றபொழுதே பின்பு இவையுளவாமெனக் கருதிக் கூறிய முலைகள், தம்முன்னேநின்று நின்னகலம் முயக்கத்தைக்கொடாதேநிற்றலின், அதனை முயங்காமையாலாற்றுகின்றனவில்லை; ஆதலின், நீமருமத்திடத்து முன்பே தீப்பட்ட தொருபுண்ணிலே காய்ந்தவேல் நின்றெரியுந்தன்மையைச் செய்தாயென்றுளென்க.

முன்னர் முயங்கிப் பிரிந்தபிரிவு புண்ணிற்கும், இப்பொழுது முன்னின்றுமுயக்கங்கொடாதநிலை வேலிற்குமுவமை. இத்துணையும் எதிர்பெய்துபரிதல். *"உடம்பு முயிரும் வாடியக் காலும்" என்னுஞ் சூத்திரவிதியான், மூலையை யிங்ஙனங் கூறினாள். (௧௦௭)

புனமாமயிலேபொழிலேபுனலே
வனமார்வரையேவரையேதினையே
யினமாமணிசூழெரிபூணவனைத்
துனையான்பெறுகோதொழுதேனுரையீர்.

இ - ள். மயின்முதலியவற்றைவிளிதது நும்மைத்தொழுதேன்; இனி யான் பூணவனை இன்னுஞ் சேரப்பெறுவேனோ? பெறுவேனாயின், அவனிருக்கின்றவிடத்தைக் கூறீரென்றாளென்க. (௧௦௮)

கொடுவெஞ்சிலைவாய்க்கணையிற்கொடிதாய்
கடுநாளிரவின்னவைதான்மிகுமா
னெடுவெண்ணிலவின்னிமிர்தேர்பரியா
தடுமால்வழிநின்றறனேயருளாய்.

தேர் - நிலவினையுடைய மதி; அது வட்டத்தாற் றேருருள்போறலிற் றேரென்றான்.

இ - ள். கணையிலுங்கொடிதாய் இரவுசெய்கின்ற வருத்தந்தான் மிகாநின்றது; மதி பிரிந்திருத்தற்கு இரங்காதே தானுமடாநின்றது; இவ்வளவுக்கு என்கூற்றிலே நின்று, அறக்கடவுளே! அருளாயென்றாளென்க. (௧௦௯)

கயலாலிவையென்றுகவிழ்ந்துகிடந்
தயலேனறியாமையுரைத்தவெலா
மியலாததுவோவினியேற்கினியீ
ருயலாவதுகண்மலர்காணுரையீர்.

கிடந்து - கிடக்க. அவசமாக்கித் தன்னைக்கூடாமையின், அயலேனென்றாள். உரைத்ததனைப் பொன்னுரைத்த தென்றாற்போல அவன்செய்த தொழிலென்று கொள்க. அது சொல்லிற்றெல்லாமென்றாற்போலவுநின்றது. இனியீர் - இகழ்ச்சிக் குறிப்பு.

இ - ள். அவன் இக்கண்கள் கயலாயிருந்தனவென்று நும்மைப்புகழ்தலின், அதற்கு நீரன்புற்றுக்கிடக்க, அயலேனாகிய யானறியாமல் நுமக்குக்கூறியதெல்லாம் பிரிவையோ? கண்ணிற்சிறந்த உறுப்பில்லையென்று நும்மிடத்து இனியேனாகிய வெனக்கு இனியீராயிருந்தீர்; நும்மை அவன் புலால்நாறுகின்ற கயலென்றுபுகழப் போக்குடன்பட்டீர், யான் கண்மலர்காளென்கின்றேன்; இனிஉய்யலாம்வழி யுரையீரென்றாளென்க. (௧௧௦)

நெறிநீர்வளையுநிழனித்திலமும்
பொறிநீரபுனைந்தெழுதிப்புகழும்

* தொல்காப்பியம், பொருளதிகாரம், பொருளியல், ௧.

வெறிதாரவனெவ்வழியேகினனீ
ரறிவீருரையீரமர்தோளிணைகாள்.

நெறித்தநீர் - கடல்.

இ-ள். அவனிணைவையமர்ந்த தோளிணைகாள்! பொறித்தாற்போலுந் தன் மையவாக வளையையுமுத்தையுமணிந்து கரும்பையுமெழுதி உம்மைப்புகழும் மணத்தையுடைய தாரவன் எவ்விடத்தேபோயினான்; முயக்கைநெகிழ்ந்துபோகவிட்டநீர் அவன் போனவிடமறிவீர்; நும்மை இன்னும் யான்புகழ்தற்கு அவ்விடத்தைக் கூறீ ரென்றாளென்க. (ககக)

இழுதார்சுடர்வேலிளையானகலத்
துழுதீருடன்வெம்முலைகாள்வயிரத்
தொழுவாய்விடையைத்தொடர்கிற்றிலிரென்
றழுதாடடமாகவணங்கிழையே.

ஒரிடத்தும் பற்றின்றி யிருத்தலின், விடை. முறித்தறகாகாமையின், வயிரத் தொழுவென்றாள்.

இ-ள். அணங்கிழை, முலைகாள்! இளையானகலத்தே சேரச் சிலநாளுழுதநீர். அவ்வுழவின்பயனை முறறபெறாவிடமளவும் போகாதபடி அவனைத் தொழுவாய்ப் பிணித்திலீர், நுமக்கும் அஃதரிதாயிற்று, இனி யான்செய்வதென்னென்று தடமாக அழுதாளென்க. (ககஉ)

தகைவாடியதன்னிழல்கண்ணுகுநீர்
வகைவாடிவருந்தியழுவதுகண்
டகையேலமர்தோழியமேலவரோ
பகையாபவரென்றனள்பான்மொழியே.

இ-ள். பான்மொழி, தானழுத கண்ணீரிலேதோற்றின தன் அழகுகெட்ட நிழல் வாடி வருந்தி அழுவதனைக்கண்டு, எனக்கு அன்பமர்ந்ததோழி! நீவருந்தாதே கொள், அழுவதுஞ்செய்யாதேகொள், முடிவில் அவர் நமக்குப் பகையாவரோவென்று ஆற்றுவித்தாளென்க.

ஓகாரம் - எதிர்மறை. இனிப பளிங்கிற்றோற்றிய நிழலுமாம். (ககங)

வெறிமாலைகள்வீழ்ந்துநிலம்புதைய்ப்
பொறிமாலைபுனைநிழல்காணலளாய்
நெறிநாடியபோயினணீடிலளாகண்
டெறிவால்வளைகொண்டுவருமினியே.

பொறிமாலை-விதியையியல்பாகவுடையாள்; பெயர்.

இ-ள். தன் தலையின்மாலைகள்வீழ்ந்து கண்ணீரையுடைய நிலமறைதலின், பொறிமாலை, அந்நிழலாகிய தோழியைக்காணாளாய் அவள் அவன்போனவழியைத் தேடுதற்குப்போனாள்; நீட்டிப்பதுஞ்செய்தாள்; இனி யவனைக்கண்டு வளையைக் கொண்டு வருவளென்றாளென்க.

எனவே அவனைத் தான் கொண்டுவருமென்றாளாம். (ககச)

மடமாமயிலேகுயிலேமழலை
நடைமாணனமேகலமார்கிளியே
யுடனாடுமெனையனையென்றுருகாத்
தொடையாழ்மழலைம்மொழிசோர்ந்தனளே.

கலமார் மழலைக்கிளி.

இ - ள். யாழ்போலு மழலைமொழியை யுடையாள், மயில் முதலியவற்றை யிளித்து, என்னுடனேவிளையாடும் என்னையனையென்றவளவிலே உருகி, அவற்றிற்குக் கூறுகின்ற காரியத்தை மறந்தாளென்க.

ஐயனையென்னும் இரண்டாமுருபிற்குத் தேடுமினென்னும் வினைவருவிக்க. ()

வேறு.

க. மல்லுறையலங்கன்மார்பன்பிரிவெனுமெரியுள்வீழ்ந்து
கல்லுறைநாகுவேய்த்தோட்கதிர்மணிமுறுவற்செவ்வாய்
வில்லுறைபுருவமாதர்வெந்தனள்கிடப்பமின்றே
யில்லுறைதெய்வநோக்கியிரங்கிநின்றுரைக்குமன்றே. (கககூ)

உ. புண்ணவாம்புலவுவாட்கைப்பொலன்கழற்புனைந்தபைந்தார்க்
கண்ணவாம்வனப்பிணனைக்காமனேகண்டபோழ்தும்
பண்ணவாம்பவளச்செவ்வாய்ப்படாமுலைப்பரவையல்குற்
பெண்ணவாநிற்குமென்றாற்பிணையனுட்குய்தலுண்டோ. (ககள)

ங. கட்டத்திடைக்கவளந்தேனெய்கனியைத்தோய்த்தினியதுற்றத்
தடக்கையாற்கொடுத்துப்புல்லுந்தவழ்மதக்களிறுநீங்க
மடப்பிடிக்குய்தலுண்டோவாலடிக்குஞ்சிசூட்டுங்
கொடைக்கையான்பிரிந்தபின்னைக்கோதையாட்குய்தலுண்டோ.

இவைமூன்றுமொருதொடர்.

காமனே, ஏகாரம்-பிரிநிலை. புண்ணையவாவும் வாள். பெண்ணவாயும் பாடம்.

இ - ள். மலையிடத்தேநின்ற இளைய வேய்போலுந் தோண்முதலியவற்றை யுடைய மாதர் கணவன்பிரிவாகிய எரிக்குள்ளேவீழ்ந்து வெந்தனளாய்க் கிடந்த வளவிலே, அவளைநோக்கி வருந்திநின்றுகூறுமில்லுறைதெய்வம், கைமுதலியவற்றை யுடைய கண்ணவாவும்வனப்பினனைக் காமனேயுட்படக் கண்டபொழுதும் அவற்கு வாய்முதலியவற்றையுடைய பெண்டன்மையை யெய்துவதோராசை நெஞ்சிலேநிற்கு மென்றால் இவட்குப் பிழைத்தலுண்டோ, தேனெய்யைக் கனியைத்தோய்த்தலா லே யினியவாகிய கவளத்தைத் துற்றும்படி கையாலேகொடுத்துப் புல்லுங் களிறு நீங்கப் பிடிக்குக் கடத்திடை உய்யுந்தன்மையுண்டாமோ, அதுபோல ஊடறீர்த் துப் புணரும் கொடைக்கையான் பிரிந்தபின்பு கோதையவட்குப் பிழைக்குந்தன் மையுண்டாமோ வென்றுகூறிற்றென்க. (ககஅ)

முயங்கினன்சொன்னவண்டாய்முகிழ்முலைத்தெய்வஞ்சேர
வியங்குவாளுணர்ந்துகேள்வற்கூனமும்பரிவுமஞ்சி

யியக்குவானின்றவாவிதாங்கினளென்பபோலும்
லயங்குபொன்னின்றநீலமாமணிமுலையினாளே.

ஊனம்-பழி. பரிவு-இறந்துபாடு. பொன்-பசப்பு.

இ - ள். தெய்வம், நினதிறந்துபாடு நின்கேள்வற்கு ஊனமும்பரிவுமாமென்று கூறுவனபோலும் முயங்கினான்கூறிய வண்டாய்ச்சேர்தலின், முலையினாள், வருந்துகின்றவள், அதனைக்கண்டு உணர்ந்து அஞ்சிப் போதற்கு ஒருப்பட்டுநின்றவாவியைப் போகாமற் றாங்கினாளென்க.

அவன் "துணைவண்டுதுஞ்சினீயுந்துஞ்சுவை" என்றதனைநினைந்து ஆற்றினாள். தன் றெய்வத்தன்மையால் அதனைத் தெய்வநினைப்பித்தது. (௪௧௯)

வஞ்சவாய்க்காமன்சொன்னமணிநிறவண்டுகாணீர்
துஞ்சுவேன்றுயரந்தீரத்தொழுதகுதெய்வமாவீர்
மஞ்சுதோய்செம்பொன்மாடத்தென்மனைதன்னுளென்றாள்
பஞ்சிமேன்மிதிக்கும்போதும்பனிக்குஞ்சீறடியினாளே.

துணைவண்டையும் நெஞ்சாலேகருதி, வண்டுகாளென்றாள்.

இ - ள். சீறடியினாள், காமன்சொன்னவண்டுகாள்! நீங்கள் இறந்துபடுவேனது துயரந்தீரும்படி என்மனைதன்னுட் டெய்வமாவீராகவென்றாளென்க.

நம்மால் இறந்துபாடுநீங்கினேன்; இனி இரங்காதநும்மைக்கண்டு இரக்கமுந்தீரும்படி இல்லுறைதெய்வமாயிருப்பீரென்றாள், "இருக்குமேயிரங்கலின்றாய்" என்றாதலின். இது தெய்வத்தன்மையாற் கூறுவித்தது தெய்வம். (௪௨௦)

நொந்தெடுக்கலாதுவீங்குதும்வனமுலைநுசுப்பிற்றேய்ந்தோர்
பந்தெடுக்கலாதநங்கைபால்கடைவெண்ணெய்ப்பாவை
வெந்துடன்வெயிலுற்றாற்போன்மெலிந்துகவினுங்கும்வெள்ளி
வந்துவானிட்டசுட்டிவனப்பொடுமுளைத்ததன்றே.

வீங்குமுலையை யெடுக்கமாட்டாது நொந்து தேய்ந்து வருந்துநுசுப்பாலே பந்தெடுக்கலாத நங்கையென்று அவளியல்புகூறினார். வருந்துமென வருவிக்க. இனி நுசுப்புப்போற் றேய்ந்தென்றுமாம.

இ - ள். நங்கை, ஈண்டு வெண்ணெய்ப்பாவை வெயிலுற்று உடனேவெந்தாற் போலேயுருகாநிற்க, வானுக்கிட்டசுட்டிபோலே வெள்ளிவந்து முளைத்ததென்க.

இறந்துபாடுநீங்கி வருந்தினாள். (௪௨௧)

எரிநுதியுற்றமாவினிளந்தளிர்போன்றுமாழ்கிப்
புரிநரம்பிசையிற்றள்ளிப்புள்கணுற்றழுதலாலே
யரிகுரற்கொண்டபூசலகத்தவர்க்கிசைப்பவீண்டித்
திருவிரிகோதைநற்றாய்வித்துதிசேர்ந்துசொன்னாள்.

ஈண்டி - ஈண்ட.

இ - ள். எரியைச்சேர்ந்த தளிர்போலே மயங்கித் தன்மிடற்றை நரம்போ

சையினின்று நீக்கி வருத்தமுற் றழுதலாலே, அவ்வோசை அகத்திலுள்ளார்க்கு இசைப்ப, அவர்திரண்டவளவிலே அவணற்றாயாகிய நிப்புதியனாகி ஒருமொழிகூறி னாளென்க. (௩௨௨)

விழுத்திணைப்பிறந்துமிக்கவேட்கைவேரரிந்துமெய்ந்நின்
றிழுக்கமொன்றானுமின்றியெய்தியதவத்தின்வந்து
வழுக்குதலின்றிவிண்ணோன்வச்சிரநுதியினிட்ட
வெழுத்தனான்றந்தவின்பமின்னுநீபெறுதியென்றாள்.

அயன் வச்சிரத்தாலிட்டவெழுத்துப்போலே தப்பாதவன்.

இ - ள். உயர்ந்தகுடியிலேபிறந்து உண்மையிலேநின்று சன்மார்க்கநெறியிற் றப்பொன்று மின்றி வேட்கையாகிய பிறவியின்வேரையரிந்து நாம் முன்செய்த தவத்தினாலே யெழுத்தன்னான்வந்து தந்தவின்பத்தை வழுக்குதலின்றி இன்னும் நீ யேபெறுவையென்றாளென்க. (௩௨௩)

பிறங்கினகெடுங்கள்யாவும்புணர்ந்தவர்பிரிவர்பேசி
னிறங்குபுவீழுமேலாயோங்கியவெண்ணில்யோனிப்
பிறந்தவர்சாவர்செத்தார்பிறப்பவேயென்னநோக்கிக்
கறங்கிசைவண்டுபாடுங்கோதைநீகவலலென்றாள்.

இ - ள். கோதாய்! மேலாய்வளர்ந்தன தாழ்ந்துவிழும்; பிறந்தவரெல்லாருஞ் சாவர்; செத்தாரெல்லாரும்பிறப்பர்; இன்னுங்கூறின், மிக்கவனப்புக்களெல்லாம் ஒருகாற்கெடும்; அங்ஙனங்கெட்டாலும் பிரிந்தவர்களெல்லாரும் புணர்வரேயென்று பார்த்து நீ கவலாதேகொள்ளென்றாளென்க.

பிறங்கினகள்யாவுமெனவும், பிரிந்தவர்புணர்வரெனவுமாறுக. (௩௨௪)

எரிதலைக்கொண்டகாமத்தின்பநீர்ப்புள்ளியற்றாம்
பிரிவின்கட்பிறந்ததுன்பம்பெருகடலனையதொன்றா
லுருகிநைந்துடம்புநீங்கினிம்மையோடும்மையின்றி
யிருதலைப்பயனுமெய்தாரென்றியாங்கேட்டுமன்றே.

இ - ள். காமத்திடத்துப் புணர்ச்சியாற் பெறுமின்பம் நீர்த்துளியையொத் திருக்கும்; பிரிவாற்பிறந்ததுன்பம் பெரிய கடலையொப்பதொன்றாயிருக்கும்; ஆதலின், இப்பிரிவாலே பெறுதற்கரிய மக்கள்யாக்கைநீங்குமாயின், இம்மையினும் மறுமை யினுஞ் செய்துகொள்ளுநன்மையின்றி, இரண்டிடத்துப் பெறும்பயனையும் பெறா ரென்று உணர்ந்தார்கூறக் கேட்டிருப்போமல்லவோ? ஆதலின், இதுதகாதுகாணென் றாளென்க. (௩௨௫)

மன்னுநீர்மொக்குளொக்குமானிடரிளமையின்ப
மின்னினொத்திறக்குஞ்செல்வம்வெயிலுறுபனியினீங்கு
மின்னிசையிரங்குநல்லியாழினியினுமினியசொல்லா
யன்னதால்வினையினாக்கமழுங்குதற்கெல்லையென்றாள்.

இ - ள். இனியசொல்லாய்! மக்களிளமை மிகவும் நீர்மொக்குளையொக்கும்; அவரின்பம் மின்னொத்துத் தோன்றிமாயும்; அவர்செல்வம் வெயிலைகண்டபனி போல்நீங்கும்; ஆதலிற் றீவினையிறுக்கம் அப்படிவலிதாயிருக்கும்; இதற்குவருந்திப் பெறுவதென்னையென்று ஆற்றுவித்தாளென்க.

இசையொலிக்கும்யாழின் இளியென்னுநரம்பு (கஉசு)

பஞ்சிறைகொண்டபைம்பொற்கலைபுறஞ்சூழ்ந்துவைத்து
நஞ்சிறைகொண்டநாகப்படம்பழித்தகன்றவல்குல்
வெஞ்சிறைப்படாளியாகவிழுமுலைத்தடத்துவைகத்
தஞ்சிறைப்படுக்கலாதார்தம்பரிவொழிகவென்றாள்

பஞ்சு - ஆகுபெயர்

இ - ள். நஞ்சுகுடிகொண்ட பாம்பினது படத்தைப்பழித்து அகன்ற துகில் தங்கின பைம்பொற்கலையையுடைய வல்குலாலே புறத்தே காவலிட்டுவைத்து முலைத் தடந்தான் ஒருசிறைக்கோட்டமாக அம்முலைத்தடத்தேதங்கும்படி தமபாலே யகப் படுத்தமாட்டாதமகளிர் தம்முடைய வருத்தத்தைத் தவிர்வாராகவென்றாளென்க.

இது கேமசரி தன்னிலேகூறியாறறினாள். தாய்கூற்றுமென்பா. (கஉஎ)

வாசமிக்குடைய நாரமல்வண்டினுக்குரைத்தமாற்றம்
பாசத்தாலாக்கப்பட்டவாவியளல்லதெல்லாம்
பேசினோர்பிணையல்மாலைபிசைந்திடப்பட்டதொத்தா
ளேசலாம்பரவையல்குற்றாமணிப்பாவையன்னாள்

இ - ள். மணிபபாவையன்னாள் வாசமுடையதாரான் வண்டினுககுக்கூறிய வார்த்தையாகிய பிணிப்பாலே அன்புமிக்குண்டாக்கப்பட்ட உயிரொன்றையுமு டையவள் அவ்வுயிரொழிய உடம்புமுழுவதும நாஞ்சொல்லிற பிசைந்துபோகட்ட தொரு கட்டுநிலையுடைய மாலையையொத்தாளென்க.

அல்லதெல்லாம் மாலையையொத்தாளெனச் சினை வினைமுதலொடு முடிந்தது. எல்லாமென்றது ஒருபொருளின் பலவிடங்குறித்துநிற்றல் *"பல்வழி" என்றதனாற் கொள்க. (கஉஅ)

பையரவிழுங்கப்பட்டபசுங்கதிர்மதியமொத்து
மெய்யெரிதுயரின்மூழ்கவிரிர்விதிர்த்துருகிநையு
மையிருங்குழலினுடன்மைந்தனைவலையிற்சூழ்ந்து
கையரிக்கொண்டுபோனான்காளையுங்காலிற்செல்வான்.

அரவு - விகாரம்.

இ - ள். பாம்புதீண்டின மதியையொத்துப் பசந்து மெய் எரியுந்துயரத்திலே

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், பெயரியல், ௬உ.

மூழ்கும்படி நடுங்கி நெஞ்சுருகி மையுங்குழலினள், தன்கணவனை வலைபோலே கை யரிக்கொண்டுதேடியுங் கண்டிலள்; அவனுங் காலாலேநடந்துபோனானென்க.

காற்றுப்போலேயென்றுமாம். (கஉக)

காழகச்சேற்றுட்டீம்பால்கதிர்மணிக்குடத்தினேந்தி
வீழ்தரச்சொரிவதேபோல்விளங்கொளித்திங்கட்புத்தேள்
சூழிருட்டொழுதிமூழ்கத்தீங்கதிர்சொரிந்துநல்லார்
மாழைகொண்முகத்திற்றோன்றிவிளைகடன்முளைத்ததன்றே.

இ - ள். பாலைப் பளிக்குக்குடத்தேயெடுத்துக் கருஞ்சேற்றிலேவீழும்படி சொரியுந்தன்மைபோலே திங்களாகியதெய்வந் தன்கதிரை யிருளிலேகுளிக்கும்படி சொரிந்து மகளிருடைய பசத்தல்கொண்ட முகம்போலேதோன்றி முளைத்ததென்க.

மாழை - பொன். விடியற்காலத்தெழுந்த நிலவு இருளைக்கெடுத்தலாற்றாமையின், இங்ஙனங்கூறினார் (கஙo)

ஏறனாற்கிருளைநீக்கக்கைவிளக்கேந்தியாங்கு
வீறுயர்மதியந்தோன்றவினைவொடுபோயபின்றை
மாறிலாப்பரிதிவெய்யோன்வருதிரைமுளைத்தவாங்க
ணாறுசெலொருவற்கண்ணலணிகலமருளலுற்றான்.

இ - ள். ஏறனாற்குக் கைவிளக்கெடுத்தாற்போல வழி யிருளைக்கைவிடும்படி மதிதோன்றுதலாலே போய பின்பு, நிகரில்லாதஞாயிற்றினது வட்டங் கடலிலே முளைத்தவளவிலே, தலைவன் வழிப்போவானொருவனுக்கு அணிகலங்களைக் கொடுக்க லுற்றானென்க. (கஙக)

வேறு.

எவ்வூரீரெப்பதிக்குபபோந்தீர்நும்மனைவியர்தாமெனைவர்மக்க
ளொவ்வாதார்தாமெனைவரொப்பார்மற்றெனைவர்நீருரைமினென்றா
னிவ்வூரேனிப்பதிக்குப்போந்தேனென்மனைவியருநால்வர்மக்க
ளொவ்வாதார்தாமில்லையொப்பானொருவனெனவுரைத்தான்சான்றோன்.

இ - ள். எவ்வூரிலேயிருப்பீர், எவ்வூர்க்குவந்தீர், நும்மனைவியர்எத்துணைவர், பிள்ளைகள் ஒழுக்கமுடையாரொத்துணைவர், ஒழுக்கமில்லாதார எத்துணைவரொன்று வினவியினவனுக்கு, இப்பொழுது இவ்வுடம்பினிடத்தேன், இவ்வுடம்பெடுத்தற்குப் போந்தேன், எனதுமனைவியரும் நால்வர், மக்கள் ஒவ்வாதாரில்லை, ஒப்பானொருவனுளனென்று உணர்வுடையான்கூறினானென்க. (கஙஉ)

ஒப்பானொருமகனேநால்வரொருவயிற்றுடபிறந்தானென்ன
நக்கான்பெருஞ்சான்றோர்நம்பிபோல்யாருலகினினியாரென்ன
மிக்கானுரைப்பதுவுமிக்கதேபோலுமால்வினவிக்கேட்பான்
றக்காய்குறித்ததுரையென்றான்றானுரைப்பக்கேட்கின்றானே.

இ - ள். ஒப்பானாகிய அவ்வொருமகன் றானே நான்குதாய்மாரது ஒருவயிற்றிலே பிறந்தானென்று அங்ஙனங்கூறினானாக, இவனைப்போல் உலகில் இனியார்யாவரென்றுகூறி அறிவில்லாதவன்றான் நக்கான்; நக்குப் பின்னும் அறிவுமிக்கவன்கூறிய வார்த்தையும் மிக்கதுபோலேயிராநின்றது; யான் கடாவிக்கேட்பேனென்றுகருதி, தக்காய்! நீநினைத்ததனைக்கூறென்றான்; அவனுரைப்பத் தான் கேளாநின்றானென்க.()

நற்றானஞ்சீலநடுங்காத்தவமறிவர்சிறப்பிந்நான்கும்
மற்றாங்குச்சொன்னமனைவியரிந்நால்வரவர்வயிற்றுட்டோன்றி
யுற்றானொருமகனேமேற்கதிக்குக்கொண்டுபோமுரவோன்றன்னைப்
பெற்றார்மகப்பெற்றாரல்லாதார்பிறர்மக்கள்பிறரேகண்டீர்.

இ - ள். தானஞ் சீலந் தவம் இறைவர்பூசனையென்றுசொல்லிய இந்நான்கும் முன்கூறியமனைவியர்; இந்நால்வர்வயிற்றினும்பிறந்து பயன்றருவானாகிய நல்வினையென்கின்றமகனே மேற்கதிக்குக் கொண்டுபோமுரவோன்; அவனைப்பெற்றாரே மகப்பெற்றார்; அல்லாதார் மகப்பெற்றாரல்லர்; பெற்றமகவும் அவர்மகவல்லக்கண்டீரென்றானென்க. (௧௬௪)

படநாகந்தோலுரித்தாற்போற்றுறந்துகண்டவர்மெய்பணிப்பநோற்றிட்
டடைநவைம்பொறியும்வென்றார்க்குவந்தீதறானமாகுந்
திடனைகத்தீந்தேனுந்தெண்மட்டூனுயிர்க்கொலைமீண்டிநிற்றற்
கிடனாகாதமுனுமிவைதுறந்தசீலமேற்றார்மிக்கார்.

இ - ள். படநாகந் தோலுரித்தாற்போலே அகமும்புறமுந் தூயவாகத்துறந்து நோற்றுத் தம்வயத்தனவாக ஐம்பொறியையும் வென்றார்க்கு உவந்துகொடுத்தல் தானமாம்; தேன்முதலியவற்றைக் கடைகைக்குறநதல் சீலமாமென்று மிக்கவர்கூறினரென்றானென்க.

நாகந் தோலுரிக்கும்போழ்தை நடுங்கங்காலும். (௧௬௫)

ஓவாதிரண்டுவெட்டமியும்பட்டினிவிட்டொழுக்கங்காத்த
றுவாததவமென்றார்தன்மதிபோன்முக்குடைக்கீழ்த்தாதைபாதம்
பூவேபுகைசாந்தஞ்சுண்ணம்விளக்கிவற்றாற்புனைதனுநா
மேவாவினைபிறவும்பூசனையென்றீண்டியநூல்களைகண்டாரே.

ஏவா - சொல்லி.

இ - ள். அறமீண்டிய ஆகமத்தைக்கண்ட இருடிகள் தாதைபாதத்தே நாடோறும் பூமுதலியவற்றாற்பூசனைதலையும், இவையொழிந்த பிறவற்றாற்பூசனைதலையும் பூசனையென்றோதி, இரண்டுவாயிலும் அட்டமியிலும் பட்டினிவிட்டு ஓவாது ஒழுக்கங்காத்தலைக் கெடாத தவமென்றாரென்க. (௧௬௬)

இந்நால்வர்துணைவியராகத்தன்மகனிவனுவுடையார்போகிப்
பொன்னாரமார்பிற்புரந்தரராய்ப்பூமிமுழுதுமாண்டு

மன்னுமுக்குடைக்கீழ்வாமன்சிறப்பியற்றிவரம்பிலின்பம்
பின்னுவிளைவித்துப்பிறவாவுலகெய்தல்பேசலாமே.

இ - ள். இந்நால்வருந் துணைவியராக இவன்மகனாகவுடையார் சுவர்க்கத்தே போய் இந்திரராய் அவ்விடத்தையாண்டு பின்பு சக்கரவர்த்தியாய்ப் பூமிமுழுதையு மாண்டு வாமனுக்குப் பூசைகணடத்தி அருகந்தாவத்தையைவிளைவித்துப் பின்பு வீடு பெறுதல் உண்மையென்றே கூறலாமென்றானென்க. (௧௩௭)

மட்டார்பூம்பிண்டிவளங்கெழுமுக்குடைக்கீழ்மாலேகண்டீர்
முட்டாதவின்பக்கதிதிறக்குந்தாளுடையமூர்த்திபாத
மெட்டானும்பத்தானுமில்லாதார்க்கிவ்வுலகிலின்பம்போல
வொட்டாவேகண்டீர்வினையவனைத்தேறினார்க்குணாந்தீரன்றே.

பாதம் - அடி.

இ - ள். இன்பக்கதியைத்திறக்குந் தாளாகியபாதத்தையுடைய மூர்த்தி முக்குடைக்கீழ் மாலே காண்; அவனைத்தேறினார்க்கு, பொருள் பத்தெட்டுக்கூட இல்லாதார்க்கு இவ்வுலகத்தின்பங் கூடாத வாறுபோல வினைகூடா; இத்தன்மையை யுணாந் தீரல்லவோ வென்றானென்க.

ஆனும், உம்மையும் அசை. உணாந்தீா-ஒருவனைக்கூறும்பன்மை. (௧௩௮)

வேற்றுவரில்லாநுமரூாங்கேசெல்லினுமவெகுண்டீாபோல
வாற்றுணக்கொள்ளாதடிபுறந்துவைப்பீரேயல்லாபோலும்
கூற்றங்கொண்டோடத்தமியேபோய்நெறிங்கடசெல்லும்போழ்தி
னாற்றுணக்கொள்ளீரழகலாலறிவொன்றுமிலீரேபோலும்.

ஏகாரம், போலும் அசை. ஊன்-வழுணு பாதல புறஞ்சேயாற்கொள்க.

இ - ள். அயலாரில்லாத சுற்றத்தாரூர்க்கே போயினும் அவருடனேவெகுண்டு ஆண்டுச்செலலாதீர்போலப் பொதிசோறு கைக்கொள்ளாமற் புறந்து ஓரடியிட்டீர், இத்தன்மையீர்! கூற்றம் நும்மைக்கட்டிக்கொண்டோட நுமரில்லாதவூர்க்குத் தனியேபோம்பொழுது உண்ணுமுணுக்குப் பொதிசோறு இப்பொழுதே தேடிக் கொள்கின்றிலீர்; ஆதலின், அழகன்றி அறிவொன்று முடையிரல்லிரபோலே யிராந்தீரென்றானென்க. (௧௩௯)

அளவுதுகாமமடுநறவுநெய்யொழுகு மூனுமபின்று
விளைவதுதீவினையேகண்டீரினையவும் கடைவிடுமின்றென்றால
றளையவிழ்கோதையாள்தாமஞ்சேர்வெம்முலைபோல்வீங்கித் தண்சேந்
துளையவுறுதியுரைப்பனையோபாவமுரைாரேகாண்

இ - ள். அருந்துவதாகிய காமத்தாலும் கள்ளாலும் ஊனாலும் பின்புவிளைவது தீவினையேகாணுங்கள், இவைமூன்றையுங் கைவிடுங்களென்று பிறர்க்குக் கூறினால், இங்ஙனந் தாம்வருந்தக் காரியங்கூறுவானை முலைபோற்பொருமிக கோபித்து உணாரர்காண், ஒ! இஃதொருபாவமிருந்தபடி யென்னென்றானென்க. (௧௪௦)

இழுதன்னவெண்ணிணத்தசெந்தடிக்கேயேட்டைப்பட்டிரும்பிற்போர்த்த
பழுதெல்லனும்வன்மனத்தாரோட்டைமரச்செவியர்கேளார்பால்போன்
றொழுகியமுதூறுநல்லறத்தையோர்கிலாரூன்செய்கோட்டக்
கழுகுண்ணவள்ளூரமேசுமந்துபுள்ளிற்கேபுறஞ்செய்கின்றார்.

ஓட்டையென்றார், உட்கொள்ளாமையின். ஊன்செய்கோட்டம் - ஊனாற்செய்தவுடம்பு. வள்ளூரம் - ஊன்.

இ - ள். நினைத்தவாகிய தசையைப்பெறவேண்டுமென்றேயிளைத்து அவ்வள்ளூரமேசுமந்து கோட்டக்குப்புறஞ்செய்கின்றார், ஓர்கிலராய்க் கழுகுண்ணும்படி அக்கழுகிற்கே புறஞ்செய்கின்றார்; இதனை யிங்ஙனம் பழுதெண்ணும் இரும்பாற் போர்த்த வன்மனத்தார ஓட்டைமரச்செவியராய் அறத்தைக் கேளாரென்றானென்க. (௧௪௧)

கையாற்பொதித்துணையேகாட்டக்கயற்கண்ணாளதனைக்காட்டா
ளையாவிளாம்பழமேயென்கின்றீராங்கதற்குப்பருவமன்றென்
செய்கோவெனச்சிறந்தாள்போற்சிறவாக்கட்டுரையாற்குறித்தவெல்லாம்
பொய்யேபொருளாயாமுன்னேகொடுத்துண்டல்புரிமின்கண்டீர்.

இ - ள். மொழியின்றிக் கையாலே பொருட்டிரளினளவைக் காட்டினாக, இளையாளாகிய மனைவி அதனைக்காட்டாளாய் அவற்குச் சிறந்தாள்போலே ஐயனே! விளாம்பழமே வேண்டுமென்னாநின்றீர், அதுதருதற்கு விக்குள்வந்தடுத்தலிற் பருவமன்று; என்செய்வேனென்றுகூறி, ஆயகவன் மாறுக்காட்டியவெல்லாவற்றிற்கும் அவள்கட்டுரையாலே பொய்யே பொருள் கூறுவதற்குமுன்னே பிறர்க்குக் கொடுத்துண்டலை விரும்புவீராகவென்றானென்க

பன்மை - சாதிப்பன்மை. (௧௪௨)

வேறு.

பனிமதிபொழிகதிர்பருகுமாம்பல்போல்
முனிமதிமுகத்தியர்முறுவனம்பினா
துனிவளர்கதிகளுட்டோன்றிநாடகங்
கனியநின்றாடுவர்கடையில்காலமே.

இ - ள். மதியைமுனிகின்ற முகத்தியருடைய அமமதியின்கதிரை உள்ளடக்குவதோராம்பல்போலு முறுவலையுடைய வாயை நச்சினார், முடிவில்லாத காலமெல்லாந் தீக்கதிகளிலே தோன்றி வெவ்வேறியாக்கைகொண்டு முற்றத்திரிவரென்றானென்க. (௧௪௩)

நிழனிமிர்நெடுமதிநிகரிறீங்கதிர்
பழனவெண்டாமரைபனிக்குமாறுபோற்
குழனிமிர்கிளவியார்கோலமஞ்சினார்
தொழுநிமிர்ந்தமரராய்த்துமக்கமாள்வரே.

இ - ள். ஒளிமிக்க பெரிய மதியின்கதிருக்குத் தாமரையஞ்சுமாறுபோலே இள

வியார் கோலத்திற்கஞ்சினர் பலருந்தொழும்படி மிக்குத் தேவராய்ச் சுவர்க்கத்தை யாளுவரென்றானென்க. (௧௪௪)

வேறு.

இன்னவாறுறுதிகூறியெரிமணிவயிரமார்ந்த
பொன்னவிர்கலங்களெல்லாம்பொலிவொடுபுகன்றுநீட்டிச்
சென்மினீரென்றுகூறவலங்கொண்டுதொழுதுசென்றான்
வின்மரீஇநீண்டதோளான்வெயிற்கடநீந்தலுற்றான்.

இ-ள். அங்ஙனம் அணிகலமருளலுற்றவன், இங்ஙனம் அவனுக்கு உறுதியைக்கூறிக் கலன்களைவிரும்பிக்கொடுத்து நீர்போமென்றுகூற, அவனும் வலங்கொண்டு தொழுதுபோயினன்; போயினபின்பு, தோளான் கடத்தைப்போகலுற்றானென்க. (௧௪௫)

கேமசரியாரிலம்பகமுற்றிற்று.



ஆ கவி ௧௬௫௬௬.



ஏழாவது

# கனகமாலையாரிலம்பகம்.

இரங்குமேகலையல்குலின்கனித்தொண்டையந்துவர்வா
யரங்கக்கூத்திகணன்பின்மனையவட்டுறந்துசெல்பவர்போற்
பரந்ததீம்புனன்மருதம்பற்றுவிட்டினமயிலகவு
மரங்கொல்யானையின்மதநாறருஞ்சுரமவன்செலற்கெழுந்தான்.

இ-ள். அல்குலையும் வாயையுமுடைய பரத்தைமேலன்பாலே மனையாளைத் துறந்துசெல்வாரைப்போலே மருதநிலத்தைவிட்டு, அகவும் நாறுஞ் சுரத்தைப் போதற்கு அவனெழுந்தானென்க.

பயின்றபாம்பையும் பாகனையுங்கோறலின், பரத்தைக்கு, மயிலையும் ஆனையையுமுடையகாடு உவமிக்கும்பொருளாயிற்று. சுரம் - அவன்கூறிய கானவர் குரம்பைசூழ்காடு. (க)

கலவமாமயிலெருத்திற்கடிமலரவிழ்ந்தனகாயா
வுலகமன்னவன்றிருநாளொளிமுடியணிந்துநின்றவாபோற்
பலவும்பூத்தனகோங்கம்பைந்துகின்முடியணிந்தவர்பின்
னுலவுகாஞ்சுகியவர்போற்பூத்தனமரவமங்கொருங்கே.

இ-ள். காயா மயிலின் கழுத்துப் போலே மலர்விரிந்தன; கோங்கம்பலவுஞ் சக்கரவர்த்தி முடிசூடுநாளிலே முடிசூடிச் சேவிக்கும் அரசரைப்போலேபூத்தன; மரவம் மயிர்க்கட்டுக்கட்டி அவ்வரசர்பின்னேதிரியுஞ் சட்டையையுடைய மிலேச்சரைப்போலே சேரப்பூத்தனவென்க. (உ)

ஓங்குமால்வரைவரையாடுழக்கலினுடைந்துகுபெருந்தேன்
றூங்குசந்தனந்தளரத்தழுவிவீழ்வனதகைசா
லாங்கண்மாலுலகளப்பானாழிசங்கமொடேந்தி
தேங்கொண்மார்பிடைத்திளைக்குஞ்செம்பொனாரமொத்தனவே.

இ-ள். வரையாடுழக்குதலின், இறாலுடைந்து வரையினின்றொழுகும் பெருந்தேன் விழுகின்றபொழுது தம்மைத்தாங்கின சந்தனந்தளரும்படி அம்மலையைத்தழுவி வீழ்வன, மால் உலகையெப்பொழுதுமளப்பான் ஆழியைச் சங்குடனேயேந்தி அவன் மார்பிடத்தே அசையுமாரமொத்தனவென்க.

தேன்வீழ்வன ஒத்தன. அங்கண் - விகாரம். தேம்-கட்கினிமை. வரைதாங்கின சந்தனமுமாம். (௩)

வீழ்ந்துவெண்மழைதவழும்விண்ணுறுபெருவரைபெரும்பாம்
பூழ்ந்துதோலுரிப்பனபோலொத்தமற்றவற்றருவி
தாழ்ந்துவீழ்ந்தவைமுழவிற்றதும்பினமதுகரம்பாடச்
சூழ்ந்துமாமயிலாடிநாடகந்துளக்குறுத்தனவே.

இ - ள். மஞ்சுபடிந்துதவழுமலை, பெரும்பாம்பு ஊழ்ந்து தோலுரிப்பனபோலே யாய், அம்மஞ்சுபோனபின்பு அப்பாம்பையொத்தன; அம்மலையில் அருவிவீழ்ந்தவை முழவுபோலேமுழங்கின; அதுகேட்டு மயில்கள்,வண்டுகள்பாட வளைந்தாடிப் பிறராடு நாடகங்களை வருத்தமுறுத்தினவென்க. (ச)

கருவிதேனெனத்தூங்குங்கதிரணியிறுங்கொடுதினைசூழ்
பொருவில்யானையின்பழுப்போற்பொங்குகாய்க்குலையவரை
யருவியைவனங்கரும்புமடக்கருங்கவைக்கதிர்வரகு
முருவவெட்பயறுழுந்துமல்லவுமெல்லையின்றுளவே.

இ - ள். கைத்தாளமும், தேனிறாலுமென்னும்படி தூங்குங் கதிரணிந்தவிறுங் கையும், தினையுஞ் சூழ்ந்த யானையின் விலாவெலும்புபோலுங் காயையுடைத் தாகிய குலையையுடைய அவரையும், அருவியால்விளைந்த ஐவனநெல்லும, கரும்பும், கடாவிட்டுக்குவித்தற்கரிய வரகும், எள்ளும், பயறும், உழுந்தும், ஒழிந்தவனைவகளும் எல்லையின்றியுளவென்க.

கருவித்தேன் பாடமாயின், தொகுதித்தேனென்க. (ரு)

யானைவெண்மருப்புலக்கையறையுரலைவனமிடித்த
தேனெய்வாசவற்குவவித்தீங்கனிவாழையின்பழனு
மூனையுண்டவருருகும்பசுந்தினைப்பிண்டியுமொருங்கே
மானிஞேக்கியர்நோக்கிவழிதொறுமீவதவ்வழியே.

கனிவாழை - ஓர்பெயா. ஊனை, ஐ - அசை.

இ - ள். அவனொருப்பட்ட அத்தன்மையையுடைய அவ்விடம், மானிஞேக்கி யர்,ஐவனநெல்லை மருப்புலக்கையாலேபாறையாகியவுரலிலே யிடித்த அவலையும், தேனையும், பழத்தையும், உண்டவருனுருகும் பிண்டியையும் ஒருங்கேகுவித்து இளைத்த வரைநோக்கி வழிகடோறும் ஈயுந்தன்மையையுடைத்தென்க.

பாசவல் - விகாரம். (சு)

க. குறிஞ்சியெல்லையினீங்கிக்கொடிமுல்லைமகண்மொழிந்தாடச்
செறிந்தபொன்னிதழ்ப்பைந்தார்க்கொன்றையஞ்செல்வற்குக்குர
மறிந்துபாவையைக்கொடுப்பத்தோன்றியஞ்சுடரேந்த [வெ
நிறைந்தபூங்குருந்துகுதேனீர்பெய்தார்த்தனசுரும்பே. (எ)

உ. அரக்குண்பஞ்சிகடிரட்டியருமணிமரகதப்பலகைப்
பரப்பியிட்டனபோலக்கோபங்கள்பயிர்மிசைப்பரவ

வுரைத்தமென்றயிர்ப்பித்தைக்கோவலர்தீங்குழலுல்வ
நிரைக்கண்மாமணிகறங்கநீணிலங்கடந்தனனெடியோன்.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். முல்லைக்கொடி மகட்பேசிச்செல்லுதலின், அதனையறிந்து குரவந் தன் பாவையைப் பொன்னிதழாகிய தாரையுடைய கொன்றையாகிய செல்வனுக்குக் கொடாநிற்க, தோன்றி விளக்கெடுக்க, சுரும்புகள் குருந்தினின்றுகுந் தேனாகியநீரை வார்த்து ஆரவாரித்தன; அவையாரவாரித்தவளவிலே, செம்பஞ்சையுருட்டி மரகதப் பலகையிலேபரப்பினாற்போலே கோபங்கள் பயிர்மேலேபரவாநிற்க, தயிரைவார்த்த மயிரினையுடைய கோவலரூதுங் குழலோசைபரக்க, ஆநிரைக்கண்பூண்ட மணிகறங்க நெடியோன் குறிஞ்சி நிலத்தெல்லையினின்றுநீங்கி முல்லைநிலத்தைக் கடந்தானென்க.

முல்லைக்கொடி யிரண்டினும்படர்ந்தது. நடுவேநின்ற குருந்திற் சுரும்பெழ, அஃதசைந்து தேனைச்சொரிந்ததனாற் சுரும்பைப் பாவைக்குத் தந்தையாக்கினார். கோபம்பரவவெனவே கார்காலமாம். (௮)

வள்ளிவாரியகுழியின்வாராபொன்னும்வயிரமுமிமைக்குஞ்
சுள்ளிவேலியினீங்கித்துறக்கம்புக்கிடுமெனச்சூழ்ந்து
வெள்ளிவெண்டிரள்விசித்துநிலத்தொடுதறிபுடைத்தவைபோற்
றுள்ளிவீழ்தரருவிவனகிரிதோன்றியதவணே.

இ - ள். பக்கத்திற்போகாதபடி வேலியாகவிட்ட மராமரத்தின் வேலியினின் றுந் தப்பி மேலே துறக்கத்தே போமென்றுநினைத்து வெள்ளிக்கம்பிகளைத் தலையிலே பூட்டி வலித்து நிலத்தோடே தறியைப்புடைத்துக் கட்டினாற்போலே நாற்றிசையும் விழும் அருவியையுடைய வனகிரி யவ்விடத்தே தோன்றிற்றென்க.

வள்ளிக்கிழங்கு அகழ்ந்தகுழியிலே பொன்னும் வயிரமு மிமைக்கும் வனகிரி யென்க. (௯)

அவ்வனத்தான்செலுமுன்னாலணிமலர்ப்பூம்பொழிலதனுள்
வண்ணமாச்சுனைமாநீர்மணிதெளித்தனையதுததும்பித்
தண்ணென்றாமரைகழுநீர்நீலந்தாதவிழாம்ப
லெண்ணில்பன்மலர்கஞலியினவண்டுபாண்முரன்றுளதே.

ஆல் - அசை

இ - ள். அவ்வனகிரிக்குமுன்னே தலைவன்செல்லுகின்ற பொழிலுக்குள்ளே பளிங்கைக்கரைத்தனையதாகிய நீர்நிறைந்து அதிலே தாமரைமுதலிய பூநெருங்கி வண்டு பாண்சாதிபோலே பாடப்பட்டு ஒருசுனை யுளதாயிற்றென்க. (௧0)

வேறு.

கானத்தினேகுகின்றான்கடிபொழிற்கவின்கண்டெய்தித்
தானத்திலிருத்தலோடுந்தையலாளொருத்திதானே
வானத்தினிழிந்துவந்தவானவர்மகளுமொப்பா
ளானமும்பூவுஞ்சாந்துநாறவந்தருகுநின்றாள்.

கானத்தினேகுகின்றானென்று பெயர்கூறவே வனசரிதனென்னும் வடமொழிப்பெயரையும், தானமெனவே இருடிகளுறைவிடமென்பதனையுமுணர்த்திற்று.

இ - ள். சீவகன் கடிபொழிலிலேசென்றிருந்தவளவிலே, வானவர்மகளுமொப்பாளாகிய தையலாளொருத்தி, அத்தானத்தினுறைவாரேர் வனசரிதன்கவினைக் கண்டு, நானமுதலியநாறத் தானேவந்து அருகேநின்றாளென்க.

இங்ஙனங்கூறாது சீவகன்கவினைக்கண்டு அவளெய்தினாளென்றுகூறின், மேல் இவற்கு இவள்வேட்கைவிளைத்தலின், இவன் நெஞ்சு தன்றன்மைதிரிந்ததனை இவன் தேற்றினானென்றுகூறுவர்; அங்ஙனங்கூறவே மனோவாக்குக்காயமென்னும் மூன்றினாற்செய்துகொள்ளும் பாவங்களிற் சிறந்த மனத்தாற்செய்துகொள்ளும்பாவஞ் சீவகற்கெய்திற்றாமாதலானும், உழுவலன்போடுதோன்றிய மகளிரிடத்தல்லது இவற்கு வேட்கைநிகழாதென்பது இத்தொடர்நிலைச்செய்யுட்குக் கருத்தாதலானும், அது மாறுபடக்கூறிற்றாமென்றுணர்க. (கக)

குறிஞ்சிப்பூங்கோதைபோலுங்குங்குமமுலையினாட
னிறைந்தபொற்கலாபந்தோன்றநெடுந்துகில்விளிம்பொன்றேந்திச்
செறிந்ததோரமலரைக்கிள்ளித்தெறித்திடாச்சிறியநோக்கா
நறும்புகைத்தூதுவிட்டுநகைமுகங்கோட்டிநின்றாள்.

குறிஞ்சிப்பூ - குங்குமத்திற்குவமை. தோன்ற, சிறிதேயுடைநெகிழ்தலாலே. ஒன்று - ஒருகை. ஒருகையாலே அத்துகிலின்விளிம்பைத்தாங்கி மற்றைக்கையாலே விநோதந்தோன்றத்தெறித்து. சிறியநோக்கா - கடைக்கணித்துப்பார்த்து. காற்றுவாக்கிலேநின்று புகையைத்தூதுவிட்டு. கோட்டி-சாய்த்து.

இ - ள். முலையினாள், ஏந்தித் தெறித்து நோக்கி விட்டுக் கோட்டிநின்றாளென்க. (கஉ)

அணிகலவரவத்தாலுமமிழ்துறழ்நாற்றத்தாலும்
பணிவருஞ்சிங்கநோக்கிற்பணையெருத்துறழநோக்கி
மணிமலர்நாகஞ்சார்ந்துவழையொடுமரவநீழற்
றுணிவருஞ்சாயனின்றாடோன்றறன்கண்ணிற்கண்டான்.

இ - ள். தோன்றல் அரவத்தாலும் நாற்றத்தாலும் அத்திசையைச் சிங்கநோக்குப்போலே கழுத்துமாறுபடப்பார்த்து வழையோடுகூடிய மரவத்தினிழலிலே நாகத்தைச்சார்ந்து அங்ஙனநின்றாளாகிய அச்சாயலைக் கண்ணாலேகண்டானென்க.

நெஞ்சானேக்கிற்றிலன். துணிவருஞ்சாயல் - தெய்வமோ அல்லளோவென்று துணிவரியசாயல். (கந)

கண்டவன்கண்ணினேக்கநடுங்கித்தன்காதிற்றாழ்ந்த
குண்டலஞ்சுடரவொல்கிக்கொடிநடுக்குற்றதொப்ப
நுண்டுகிற்போர்வைசோரநுழைமழைமின்னினிழ்ப
வெண்டிசைமருங்குநோக்கியக்கொலிவண்மற்றென்றான்.

இ - ள். அங்ஙனங்கண்டவன் நெஞ்சானன்றிப் பொறியானேக்குதலின், வேட்

கையின்மைகண்டு, கொடிநகெக்குற்றதொப்பநடுங்கி யொல்கி மஞ்சிலேநுழையுமின் போலே போர்வைசோர அதனுள்ளே மறைந்துநிற்ப, இவளுடன் கூடவந்தாருள ரோவென்று எண்டிசையிடத்தையுநோக்கி, இங்ஙனந் தனியேவருதலின், இவள் ஓர் இயக்கிபோலே யிருந்தாளென்று கருதினானென்க. (கச)

என்னைத்தினியக்கியென்றேயிருப்பமற்றெழுதலாகா
வண்ணப்பூங்கண்களம்பாவானுதற்புருவம்வில்லா
வுண்ணிறையுடையவெய்வானுருவச்சாதகதத்துக்கேற்பப்
பெண்ணலங்கிடந்தபேதைபெண்ணலங்கனியநின்றாள்..

வடிவுகூறுமிலக்கணத்திற்கிசையப் பெண்ணலங்கிடந்தபேதை.

இ - ள். அவன் றன்கருத்திலே இயக்கியென்றேயிருப்ப, பேதை, பின்னர் இவன்நிறைகெடும்படி கண்களம்பாக நுதலிற்புருவம் வில்லாகக்கொண்டு எய்யவேண் டித் தன்பெண்ணலம் முற்றுப்பெறநின்றாளென்க. (கரு)

முறுவன்முன்சிறியதோற்றமுகைநெரித்தனையவுண்கட்
குறுநெறிபயின்றகூந்தல்குறும்பல்காலாவிகொள்ளாச்
சிறுநுதற்புருவமேற்றாச்சேர்துகிற்றானைசோர
வறியுநராவிபோழுமங்கனையனையுமெய்தாள்.

இ - ள். அரும்பையலரத்திறந்தலொத்த கண்ணினையுடைய கூந்தல், அணுகிப் பல்காலாவிகொண்டு மேற்போர்த்த துகிலோடே யுடுத்ததானையு நெகிழாநிற்க, அக்கா மன்றானெய்வதற்கு முன்னகச் சிறியவாக முறுவலையுந் தோற்றுவித்துப் புருவமாகிய வில்லைவளித்துக் காமனெய்யும் ஐந்தம்பையுந் தானெய்தாளென்க.

அறியுநராவிபோழுமம்பெனவே இவனெஞ்சு தன்றன்மை திரிகின்றமை பெ ற்றாம் (கசா)

வடிபயிளவனையகண்ணாள்வல்லவனெழுதப்பட்ட
படத்திடைபபாவைபோன்றாள்நோக்கினளாகிநிற்ப
வடிப்பொலிந்தாகருஞ்செம்பொனணிமணிக்கழலினனம்
மடத்தகைகுறிப்புநோக்கிமனத்திதுசிந்திக்கின்றான்.

* பவதத்தனைக் கழலினனென்னொரு பெயராற் றேவர்கூறினார்.

இ - ள். பாவையழியுமளவும ஒருகருத்தாய்நின்று அழியுமாறுபோலே கன் னாள் இவனைக்கூடுவதோர் கருத்தினளாய்நிற்ப, பவதத்தனுடைய அம்மடத்தகைகரு த்தை அவ்வனசரிதன்றானறிந்து மனத்தே இதனை நினையாநின்றானென்க.

என்றது - தன்றன்மைதிரிந்தநெஞ்சினைத் தேற்றாநின்றானென்றவாறு. அது மேற்கூறுகின்றார். (கள)

வேறு.

கடிமாலைசூடிக்கருப்பூரமுக்கித்
தொடைமாலைமென்முலையார்தோடோய்ந்தமைந்தர்

* பவதத்தன் - இவள்கணவன்.

கடைமாலைமற்றவரேகண்புதைப்பச்செல்லு
நடைமாலைத்திவ்வுலகநன்றரோநெஞ்சே.

இ - ள். நெஞ்சே! சூடி முக்கி மூலையாரைக்கூடினமைந்தர், பின்பு சிலநாளி லே யவர் கண்புதைத்துக் கொள்ளும்படி செல்கின்ற ஒழுக்கத்தை இவ்வுலகம் இயல் பாகவுடைத்து; இவ்வியல்பு நன்றாயிருந்ததென்றானென்க.

அவரென்றது சாதிபற்றி. (கஅ)

நாவியகலமெழுதிநறுநுதலா
ராவிதளிர்ப்பவவர்தோண்மேற்றுஞ்சினோர்
தூவியழிபுள்ளிற்றோன்றித்துயருழப்பக்
காவிநெடுங்கண்புதைத்தாங்ககல்வர்நெஞ்சே.

இ - ள். நெஞ்சே! புழுகை அகலத்தேபூசி நுதலாராவி தழைக்கும்படி அவர் தோண்மேலே தங்கினவர், இளமைசென்றபின்பு கடைமயிர்கழிந்த பறவைபோலே தோன்றி வருந்துதலாலே அவர் கண்ணைப்புதைத்து அவ்விடத்தினின்றும் அகல்வ ரென்றானென்க.

இதனால் இருதலையுமொத்த அன்பின்றிறங்கூறினார். (கக)

இன்புகையார்ந்தவிழுதார்மென்பள்ளிமே
லன்புருகுநல்லாரவர்தோண்மேற்றுஞ்சினோர்
தம்புலன்கள்குன்றித்தளாரத்தங்காதலா
ரன்புருகுகண்புதைத்தாங்ககல்வர்நெஞ்சே.

இழுதார்மென்பள்ளி - யிழுதுபோலே மென்மைநிறைந்தபள்ளி; * "வெண் ணெய்போன்றூறினியள்" என்றார் முன்பும். இழுதாரின்புகையுமாம்

இ - ள். நெஞ்சே! பள்ளிமேலே அன்பாலுருகு நல்லாராகிய அவர்தோண்மே லேதங்கினோர், மூப்பாற் றம்புலன்கள் குறைந்து தளாதலாலே, அம்மகளிர் தங்கண் ணைப் புதைத்து அகல்வரென்றானென்க.

இதனாற் புலன்குறையுமென்றார். இவள் விரும்பப்பெற்றேமேயென்று புணர் ந்தார்க்குப் பின்வருவது இதுகாணென்றான். (உ0)

வேறு.

என்பினைநரம்பிற்பின்னியுதிரந்தோய்த்திறைச்சிமெத்திப்
புன்புறந்தோலைப்போர்த்துமயிர்புறம்பொலியவேய்ந்திட்
டொன்பதுவாயிலாக்கியூன்பயில்குரம்பைசெய்தான்
மன்பெருந்தச்சனல்லன்மயங்கினார்மருளவென்றான்.

இ - ள். நெஞ்சே! தச்சன் உதிரத்தைத்தோய்த்து நரம்பாலேயென்பினைக்கட் டித் தசையையப்பிப் புன்புறமறையத் தோலைப்போர்த்து அப்புறம் பொலிவுபெறும்

* கோவிந்தையாரிலம்பகம், எஉ.

படி மயிராலேவேய்ந்து ஒன்பதுவாயிலாக்கி நன்றென்றுமயங்கினார்மருளக் குரம்பை செய்தான்; ஆதலான், மிகவும் நல்லனாயிருந்தானென்றானென்க. (௨௧)

வினைப்பெருந்தச்சனல்லன்மெய்ம்மைநாநோக்கலுற்று
லெனக்குறற்றுக்கிடந்ததென்றுங்கிருகணும்புதைத்துவைக்கு
நினைப்பினும்பெரியரென்னானீந்திறாகலைகளென்னான்
மனத்தையுங்குழையச்செத்துமாண்பினன்மாதோவெனறான்.

இ - ள். நெஞ்சே! படைக்குந்தொழிலையுடையதச்சன், உடம்பினுண்மையை நாம் பார்க்கத்தேடினால் அப்பொழுது எனக்கு உறுகோளாய்க்கிடந்ததென்று பார்க்கும்படி ஞானக்கண்ணையும் ஊனக்கண்ணையும் மறைத்துவையாநிற்கும்; அதுவுமன்றி இயல்பானவறிவுமிக்காரென்றாய்க் கல்விமிக்காரென்றாய் எல்லாருள்ளங்களையுந் தளரும்படி செத்தும் மாண்பினனாதலான், நல்லனாயிருந்தானென்றானென்க. ()

௧. என்றவனிருப்பமாதரெவ்வாவிசைப்பினல்லா
தொன்றுமற்றுருகல்செல்லானொற்றெடுத்தோதுகின்றாண்
மன்றலந்தோழிமாருள்வனத்திடைப்பணையாடக்
குன்றிடைக்குளிக்குமின்போற்குழாமழைமுகட்டிற்செல்வான். (௨௩)

௨. மயிலினமிரியலாங்கோர்மடமயிறழுவிக்கொண்ட
வெயிலிளஞ்செல்வன்போலவிஞ்சையனொற்கொண்டேகத்
துயிலியற்கற்பினாடன்றுணைவிகண்டிடுவித்திட்டா
னயிலியல்காட்டுள்வீழ்ந்தேனநங்கமாவிணையென்பேன். (௨௪)

௩. தாயிலாக்குழவிபோலச்சாதுயரெய்துகின்றேன்
வேயுலாந்தோளினார்தம்விழுத்துணைக்கேள்வநிற்கண்
டாயினேன்றுறக்கம்பெறறேனளித்தருளாதுவிட்டாற்
றீயினுளமிர்தம்பெய்தாங்கென்னுயிர்செகுப்பலென்றாள்.

இவைமூன்றுமொருதொடர்.

இ - ள். என்று நெஞ்சினைத்தேற்றி அவனிருந்தவளவிலே, மாதர் யான்வந்தபடிகூறினல்லது சிறிதும் அருளானென்றுகருதிக் கேட்கக் கூறுகின்றவள், தோளினார்க்குத் துணையாகியகேள்வனே! மலையிடத்தேதங்குமின்போல் மழைமேலேசெல்வானாகியவிஞ்சையன், வனத்திடையில்ல மணத்தையுடைய என்றோழிமாருள்ளே யான்விளையாடாநிற்க, மயிற்றிரள்கெட அதற்குள்ளே ஒருமயிலையெடுத்துக்கொண்ட இளஞாயிறுபோலே என்னைக் கொண்டுபோனாகை, தங்கிய கற்பினாளாகிய அவன்றுணைவி என்னைக்கண்டு போகவிடுத்தாள்; இக்கொடியகாட்டிலே வீழ்ந்தேன்; யான் அநங்கமாவிணையென்று பெயர்கூறப்படுவேன்; நின்னைக்காண்பதற்குமுன் தாயிலாக்குழவிபோலத் துயரெய்துகின்றயான் நின்னைக்கண்டு துறக்கம்பெற்றேனாயினேன். இனி என்னையருள்பண்ணி நோக்கி அருளாதேவிட்டாற் றீயினுள்ளே அமிர்தத்தைப் பெய்தாற்போலே என்னுயிரைக் காமத்தீயினுள்ளே பெய்து கெடுப்பேனென்றாளென்க.

மயிலுவமை - தோழிமாரஞ்சியோடியதற்கு. உலாம்-உவமைச்சொல். சந்நியாசியன்மையிற் றோளினார்துணைவவென்றாள். (௨௫)

மணியெழுவனையதோளும்வரையெனவகன்றமார்புந்
தணிவருங்கயத்துட்பூத்ததாமரையனையகண்ணும்
பணிவரும்பரிதியன்னமுகமுமென்றயர்ந்துகாமப்
பிணியெழுந்தவழிக்கின்றபேதைநீகேளிதென்றான்.

தணிவு-வற்றுதல். பணிவு-தாழ்வு.

இ - ள். தோளும், மார்பும், கண்ணும், முகமும்வருத்துமென்று மயங்கிக் காம நோய்தோன்றி வருந்துகின்றபேதாய்! நீ யிங்ஙனங்கருதின இவ்வுடம்பின்றன்மையைக் கேளென்றானென்க. (உ௬)

போதொடுநானமூழ்கிப்பூம்புகைதவழ்ந்துமுல்லைக்
கோதைகண்படுக்குங்கூந்தல்குறைவளிபித்தோடையே
யேதஞ்செய்மலங்களெய்த்தோரிறைச்சியென்பீருண்மூளை
கோதஞ்செய்குடர்கள்புன்றோல்வழும்பொடுநரம்பிதென்றான்.

இ - ள். நானத்தேமூழ்கிப் புகைதவழப்பட்டுப் போதோடே கோதைதுயில் கொள்ளுங் கூந்தால்! இவ்வுடம்பு ஏதஞ்செய்கின்றவளியையும், பித்தையும், ஐயையும், பொருந்தினமலங்களையும், குருதியையும், தசையையும், என்பையும், ஈரலையும், மூளையையும், பொல்லாங்குசெய்யுங் குடாகளையும், தோலையும், நரம்பையும், வழும்பையுமுடைத்தாயிருக்குமென்று கூறினானென்க.

பூமுதலியவற்றாற் கூந்தல் நன்றாயிற்றென்றான். (உ௭)

விழுக்கொடுவெண்ணஞ்சல்லாவுகிர்மயிருமிழ்கட்பீளை
புழுப்பயில்யாக்கைபொல்லாத்தடிதடிகிடந்தபோழ்தின்
விழித்தியார்நோக்குகிற்பார்பிள்ளையார்கண்ணுட்காக்கை
கொழிப்பரும்பொன்னிற்றோன்றுங்கொள்கைத்தாம் கொடியேயென்றான்.

வெண்ணஞ்சு-மூளைவிசேடம்; நிணமுமாம். அல்லா-இவையொழிந்த. கண்ணுமிழ்பீளை. பிள்ளையார் - கரிக்குருவியார். கரிக்குருவியார்கண்ணுக்குக் காக்கைபொன்னைத்துத்தோன்றுமென்னும் பழமொழி.

இ - ள். கொடியே! விழுக்குமுதலியவற்றையுடைய புழுப்பயில்கின்ற இவ்வுடம்பு வேறுபட்டுக் கிடந்தபொழுது விழித்துப்பார்ப்பார ஒருவருமில்லை; இஃது அங்ஙனம் வேறுபடாமையின், விளைகின்றகாமத்தாலே காக்கை கரிக்குருவிக்குப் பொன்போற்றோன்றுங்கொள்கையையுடைதாயிறுக்காமென்றானென்க. (உ௮)

உருவமென்றுரைத்தியாயினிறைந்ததோற்றுருத்திதன்னைப்
புருவமுங்கண்ணுமூக்கும்புலப்படவெழுதிவைத்தாம்
கருதுவதங்கொன்றுண்டோகாப்பியக்கவிகள்காம
வெரியெழவிகற்பித்திட்டாரிறைச்சிப்போரிதனையென்றான்.

இ - ள். உள்ளொழியப் புறத்தின்வடிவு நன்றென்றுரைத்தியாயின், முற்கூறியவெல்லாம்நிறைந்ததொரு தோற்றுருத்தியைப் புருவமுதலியன நன்றாகவெழுதிவைத்தால் நன்றென்றுகருதுவதோர் பொருளில்லையே, ஆதலின், இறைச்சித்திரளாகிய

விதனைக் காப்பியஞ்செய்யுங்கவிகள் மக்கட்குக் காமத்தீயெழும்படி வேறுபடுத்தினார்கள்காணென்றானென்க.

இவை யிவட்குத்தெளிவுநிகழுமென்றுகூறினான். இவர்களிங்ஙனிற்பப் பவதத்தன் கூறிவருந்துகின்றமை மேற்கூறுகின்றார். (உகூ)

வேறு.

க. காதன்மாமன்மடமகளேகருங்குழன்மேல்வண்டிருப்பினு
மேதமுற்றுமுரியுநுசுப்பென்றுன்னியல்பேத்துவே
னேதம்போலவுடன்றுடன்றுவையநீயொண்டாமரைக
கோதைபோல்வாயொளித்தொழிதல்கொம்பேகுணனாகுமே ()

உ. வண்ணத்திங்கண்மதிமுகத்தவாளோகருங்கயல்களோ
வுண்ணுங்கூற்றோவொளிவேலோபோதோவுணர்கலேனாற்
பண்ணின்றீஞ்சொலாய்படாமுலைப்பாவாய்கொடியேயாங்கி
னுண்ணுந்தேனேயமிர்தேயென்னின்னுயிரேயெங்கணையோ.(௩க)

௩. இலவம்போதேரெழிற்றகைசீறடிகளஞ்சியொல்கிப்
புலவன்சித்திரித்தபொற்சிலம்புநகப்பூநிலத்துமே
லுலவும்போழ்துமென்னுவிமலர்மேன்மிதித்தொதுங்குவாய்
கலவமஞ்ஞையனையாய்கட்காதலொழிகல்லேனால்.

இவைமூன்றுமொருதொடர்

இ-ள். காதலையுடைய என்மாமன்மகளே! திருவையொப்பாய்! கொம்பே! தீஞ்சொல்லாய்! பாவாய்! கொடியே! தேனே! அமிர்தே! இனியவுயிரே! சீறடியொல்கிச் சிலம்பொலிப்பப் பூநிலத்துலவும்பொழுதும் அந்நிலத்திலன்றி என்மனமாகிய மலர்மேலேநடப்பாய்! நினது திங்கள்மதித்த முகத்திலுள்ளன வாளோ, கயலோ, கூற்றோ, வேலோ, போதோவென்றும், வண்டிருப்பினும் இடைமுரியுமென்றும் நின்னியல்பையேத்துவேன்; அந்தப்பூவிலே மிதித்துத்திரிகின்றநீ நான் கடல்போன் மறுகி கையும்படி மறைந்துநீங்குதல் நினக்குக் குணமாமோ, இதற்குக் காரணமென்? அஃதுணர்கிலேன்; நின்னிடத்துக் காதலையுநீக்கமாட்டேன்; இனி நீ யெவ்விடத்தாய்? கூறென்றானென்க.

ஓ-வியப்பு. ஏ-ஒப்பு. புலவன்-பொன்செய்கொல்லன். என்னென்பது வினா. ()

பணிசெயாயத்துப்பந்தாடுகின்றாயைக்கண்டுமாழ்கிப்
பிணிசெய்நோயேன்யான்கிடப்பப்பிறர்வாயதுகேட்டலுந்
துணிகபோதுமெனவிடுத்தாய்போந்தேன்றுயருழப்பநீ
மணிசெய்மேகலையாய்மாற்றந்தாராய்மறைந்தொழிதியோ.

இ-ள். ஆயத்தே பந்தாடுகின்ற நின்னைக்கண்டு மயங்கிப் பிணித்தலைச்செய்யு நோயேனாய்க்கிடக்க, அந்நோயைப் பிறர்கூறக்கேட்டவளவிலே, யாமுடன்போகக் கடவேம்; அதனைத்தான்றுணிகவென்றுகூறிவரவிட்டாய்; அக்கூற்றாலேபோந்தயான்

வருந்தும்படி, மேகலையாய்! மறுமாற்றஞ்சொல்லாயாய் மறைந்து போகின்றாயோ வென்றானென்க. (௫௩)

இயக்கிநின்னேடிணையொக்குமென்றுநலஞ்செகுப்பான்
மயக்கிக்கொண்டுபோய்வைத்தாயென்மாதனைத்தந்தருளுநீ
நயப்பவெல்லாந்தருவலெனத்தொழுதுநல்லியானைதன்
வயப்பிடிகெடுத்துமாழாந்ததொத்துமதிமயங்கினான்.

இயக்கி - விளி.

இ - ள். அங்ஙனங்கூறி, இயக்கி! என்மாதனை நின்னேடிணைத்தற்கண்ணேப் பளென்றுகருதி அவனலத்தைக்கெடுத்தற்கு அறிவைக் கலக்கிக் கொண்டு போய் மறைத்துவைத்தாய்; நீ யவளைத்தந்தருளுவாயாக; தந்தால் நீவிரும்பினவெல்லாந் தருவேனென்று வணங்கி, யானை தன் வலியபிடியைக்கெடுத்து மயங்கினாற்போல மயங்கினானென்க. (௫௪)

மல்லற்றொல்வளத்துமத்திமநன்னாட்டுவண்டாமரை
புல்லும்பேரூர்ப்புகழ்த்தத்தன்காதற்சினதத்தைக்குஞ்
செல்வநாமற்குஞ்சித்திரமாமாலைக்குஞ்சுற்றத்தார்க்கு
மல்லல்செய்தேனவட்சென்றாலென்னுரைக்கேனென்செய்கேனே.

இ - ள். வளப்பத்தை யுடைய செல்வத்தை யுடைத்தாகிய மத்திமதேசத்திற் பதுமபுரத்தில்,என்றந்தை கீர்த்திதத்தனுக்கும், என்றாய் சினதத்தைக்கும், என்மாமன் ஸ்ரீமானுக்கும், என்மாமி சித்திரமாமாலைக்கும், ஒழிந்தசுற்றத்தார்க்கும் வருத்தஞ்செய்தேன்; யான் அவ்விடத்தேசென்றால் என்னுரைப்பேன்; இனி யிவ்விடத்து யான் என்செய்வேனென்றானென்க. (௫௫)

உண்ணுநீர்வேட்டனைசேந்தேனெனவுரைப்பக்காட்டுளுழி
நண்ணிப்பொய்கைதலைப்பட்டுநற்றாமரையிலையினுட்
பண்ணிநீர்கொண்டுவந்தேன்பபாழுலைப்பாவாயென்
றண்ணலாற்றாதழுதழுதுவெந்துருகிநைகின்றானே.

இ - ள். தலைவன், பாவாய்! நீ தண்ணீர்வேட்டு இளைத்தேனெனக்கூறுதலாலே, காட்டிலே பொய்கையைநாடிக் கிடைத்து அரவணநண்ணித் தாமரையிலையைக்கோலி அதனுள்ளே தண்ணீர்கொண்டுவந்தேன்; நின்னைக்காணேடிலேனென்றுகூறி யழுது உருகி நையாநின்றானென்க. (௫௬)

குழைகொள்வாண்முகத்துக்கோல்வளைபைக்காணான்குழைந்தழுகி
வழகன்சொல்லுமணிசெய்கோதைகாமமுங்கண்டுங்கேட்டு (ன்ற
முழவுத்தோளான்முறுவலித்தீங்கேயிருநீயெய
திழையச்சொல்லியிளையாணிளையானையெய்தினானே.

தோளான் - இவர்கள்செய்தியைக் கண்டிருந்தசீவகன். இழையச்சொல்லியென்றது - தாமுறையிடத்தேவந்தார்க்குத் தாநுகர்வனவற்றைக்கொடுத்துப் பேணிவிடுத்தல் வனசரிதர்க்கியல்பாதலின், சீவகன் போக்கொருப்பட்டமைகண்டு, அவ்வனசரிதனும் யானுகர்வனவற்றை நீயுநுகர்ந்து வழிவரல்வருத்தந் தீர்ந்து ஏகுவாயாகவென்

ளுற்கு, அவனுந் தனக்குவருத்தமின்மையை அவன்மனம்பொருந்தச் சொல்லியென்றவாறு. ஈங்கேயிருவென்றது - எப்பொழுதும் இப்படியே மனத்தைச் சென்றவிடத்தே செல்லவிடாதே விலக்கியிருக்கவென்றவாறு. ஆங்கு - உவமவுருபாயினமையின், ஈங்கும் உவமவுருபாம்; புறனடையால். இவ்விடத்தேயிருவென்று உபசாரமுமாம். சீவகன் அவனையிங்கேயிருவென்று பொருந்தக்கூறல் அவற்கு இயையாமையுணர்க.

இ - ள். சீவகன், கோல்வளையைக்காணாய் அழுகின்ற பவதத்தன்கூற்றைக் கேட்டும், அநங்கமாவீணை வனசரிதன்மேல் நிகழ்த்தின காமத்தைக்கண்டும் நக்கு, வனசரிதனுபசாரத்திற்கு இயையச்சொல்லி யவனை யிப்படியே நீ யெக்காலமுமிருவென்றுகூறி. அவன் பவதத்தனைச் சேர்ந்தானென்க. (௩௭)

என்னைசேளீரென்னுற்றீரென்னபெயரீரென்றாற்குப்
பொன்னங்குன்றிற்பொலிந்ததோணம்பியொருபொற்பூங்கொடி
யென்னுநீராளையீங்கேகெடுத்தேனென்பாவத்தாற்
பன்னூற்கேள்வியுடையேன்யான்பவதத்தனென்பேனென்றான்.

இ ஈறு - ஒகாரம்பெறுதலேயன்றி யீ பெறுதலும், *"ஏனைப் புள்ளி யீறுவிளி கொள்ளா" என்பதனாற்கொள்க.

இ - ள். கேளீர்! நீர் என்னவருத்தமுற்றீர்? அதற்குக்காரணமென்னை? என்ன பெயரையுடையீர்? என்று கேட்டசீவகற்கு, நம்பி! இவ்விடத்தே யென்பாவத்தாலே வல்லிபோல்வாளைக் கெடுத்தேன்; யான் நூற்கேள்வியுடையேன், பவதத்தனென்று பெயர்கூறப்படுவேனென்றானென்க. (௩௮)

வேறு.

கைப்பொருள்கொடுத்துங்கற்றல்கற்றபின் கண்ணுமாகு
மெய்ப்பொருள்விளக்குநெஞ்சின்மெலிவிற்கோர்துணையுமாகும்
பொய்ப்பொருள்பிறகள்பொன்னும்புகழுமாந்துணைவியாக்கு
மிப்பொருளெய்திநின்றீரிரங்குவதென்னையென்றான்

கற்றல் - அல்லீற்றுவியங்கோள், "இற்றெனக்கிளத்தல்" போல.

இ - ள். தனக்கு இடுக்கண்வந்தால் உதவும் பொருளைக்கொடுத்துங் கற்க; கற்றபின்பு ஞானக்கண்ணுமுண்டாகும்; அதுதத்துவத்தினைவிளக்கும்; வருத்தத்திற்கு உதவியுமாம்; ஆதலின், இதனையொழிந்தபொருள்கள் பொருளல்ல; இதனான் மீண்டும் பொருள்களுண்டாம்; கீர்த்திமகளையுமுண்டாக்கும்; இப்பொருளைப் பெற்று நின்றநீர் அறியாமல் வருந்துதற்குக் காரணமென்னென்றானென்க

புகழுந் துணைவியுமென்றுமாம் (௩௯)

அன்புநூலாகவின்சொலாத்தொடுத்தமைந்தகாத
லின்பஞ்செய்காமச்சாந்திற்கைபுனைந்தேற்றமாலை
நன்பகற்சூட்டிவிள்ளாதொழுகினுநங்கைமார்க்குப்
பின்செலும்பிறர்களுள்ளம்பிணையனார்க்கடியதன்றே.

---

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், விளிமரபு, கஉ.

இ - ள். அன்புநூலாக இன்சொல்லாகியபூவைவைத்துக் கட்டிக் காதலாகிய சாந்தாலே கைபுனைந்து ஏற்றவின்பஞ்செய்கின்ற காமமாலையை நங்கைமார்க்குப் பகற்பொழுதுஞ்சூட்டி நீங்காதிருப்பினும் அவர்க்குக் கண்ணுமனமும் பிறர்பின்செல்லும்; அஃது அடியிலேயுள்ளதன்றேயென்றானென்க.

பகல் - வெளியுமாம். (௪௰)

பெண்ணெனப்படுவகேண்மோபீடிலபிறப்புநோக்கா
வுண்ணிறையுடையவல்லவோராயிரமனத்தவாகு
மெண்ணிப்பத்தங்கையிட்டாலிந்திரன்மகளுமாங்கே
வெண்ணெய்க்குன்றெரியுற்றாற்போன்மெலிந்துபின்னிற்குமன்றே.

இ - ள். பெண்ணென்று கூறப்படுவனவற்றினியல்பைக் கேட்பாயாக, மனவலியுடையவல்ல; குடிப்பிறப்புக்கெடுமென்று பாரா; நிறையுடையவல்ல, ஆயிரமுகமாக வெழுமனத்தவாம்; பத்துப்பொருளை அகங்கையிலேயிட்டாற் பொருட்குறைபாடில்லா இந்திரன்மகளேயாயினும் உருகி அவர்பின்னேநிற்குமென்றானென்க. ()

சாமெனிற்சாதனோதறன்னவன்றணந்தகாலைப்
பூமனும்புனைதலின்றிப்பொற்புடன்புலம்பவைகிக்
காமனையென்றுஞ்சொல்லார்கணவற்கைதொழுதுவாழ்வார்
தேமலர்த்திருவோடொப்பார்சேர்ந்தவன்செல்லறீர்ப்பார்.

இ - ள். கணவன் சாகிற்சாக; நோவின்நோக; அவன் நீங்கினால் மிகவும் பூவும் புனைதலின்றி யழகுடனேதனிப்பத்தங்கிக் காமனென்றுபெயருங்கூறாராய்க் கணவனையேவணங்கிவாழ்வார், அவனுக்குத் திருவோடொப்பார்; செல்லறீர்ப்பாரென்றானென்க.

வாழ்வாரென்னுமெழுவாய்க்கு ஒப்பார் தீர்ப்பாரென்னுமிரண்டுபெயரும், *"பெயர்கொள வருதல்" என்பதனாற் பயனிலையாயின.! ஐ-அசை. இதனாற் கற்புடைமகளிரியல்புகூறினான். (௪௨)

அன்னணின்றோழியையாவவென்னைக்கண்டகண்ணாற்
பின்னைத்தான்பிறரைநோக்காப்பெருமடமாதுதன்னை
யென்னையானிழந்துவாழுமாறெனவிரங்கினானுக்
கன்னளோவென்றுநக்கானணிமணிமுழவுத்தோளான்.

இ - ள். ஐயா! நின்றோழி, கணவற்கைதொழுது வாழுவாரோடொப்பவள்; அவள்தான் என்னைப்பார்த்தகண்ணாற் பிறரைப்பாராதமாது; அவளையிழந்தும் யான் வாழுமாறெங்ஙனேயென்று வருந்தினவனுக்குத் தோளான் அன்னளோவென்று நக்கானென்க.

அன்னளோவென்றது யான்கூறியவற்றாலுந் தெளிவுநிகழாமல் இவனை வருத்துந்தன்மையளோவென்றவாறு. நகை பிறரிளமைபற்றிநிகழ்ந்தது. இனி யாம் இவனிடுக்கணுக்கு உதவியானோமென்று மனமகிழ்ந்தானென்றுமாம். (௪௩)

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமையியல், ௫.

வேறு.

இனையவேண்டாவிம்மந்திரத்தையோதிநீயொருவில்லேவா
வனையவெல்லைசென்றாலியக்கிகொணர்ந்தருளுநீ
புனைசெய்கோல்வளையைக்கைப்படுதியென்றாங்கவன்போதலு
மனையமாதனைக்கண்டாங்கடிபுல்லிவீழ்ந்தரற்றினான்

மந்திரம் - மகளிரைவசீகரிப்பதொருமந்திரம்.

இ - ள். நீவருந்தவேண்டா, இம்மந்திரத்தையோதி ஒருவில்லினது அம்பு சென்றவளவையொத்த எல்லையைப்போனால், அவ்விடத்தே இயக்கிகொண்டுவந்து தரும்; அவளைக்காண்பையென்றுகூறி அவன்போனவளவிலே, இவனுஞ்சென்று அங்ஙனமெலிந்து பின்னிற்குந் தன்மையையுடைய மாதனை அவ்விடத்தேகண்டு வீழ்ந்து அடியைப்புல்லி யரற்றினானென்க.

தான்கண்டமைகூறிற்றிலன்; இவன்றான் நம்மையுந் தீங்குகருதுவனென்று. )

பட்டதெல்லாம்பரியாதுரைத்தானவளுங்கேட்டாள்
விட்டாளார்வம்வனசரிவன்மேன்மைந்துறவினான்
மட்டார்கோதைமனைதுறந்தாள்மைந்தனுமங்கைமேலே
பொட்டிவிள்ளாவாவத்தனாகியுருவமோதினான்.

இ - ள். அங்ஙனமாற்றினமைந்தனுந் தானுற்றவெல்லாவற்றையும் வருந்தாதேகூறினான், கோதை, அடியிலே மனையைத்துறந்துபோந்தவள், அவளும் இவன் விள்ளாவாவத்தனாய் இவளைப்பெறவேண்டுமென்று ஒட்டி அம்மந்திரத்தைப் பலவுருவையோதினானாகையாலே, அவற்றைக்கேட்டாள்; கேட்டு இவன்மேலன்பு வலியுற்றபடியாலே, அவ்வனசரிதன்மேற்சென்ற வேட்கையை விட்டாளென்க.

அவன்கணாவமெனமாறுக அம்மந்திரம் அவள்நெஞ்சை இங்ஙனம் பிணித்ததென்றுணர்க (௪௫)

வேறு.

மெழுகுசெயபடம்வீழ்முகின்மத்தகத்
தொழுகும்வெள்ளருவித்திரளோடைசூழ்ந்
திழுகுபொன்மதத்தின்வரைக்குஞ்சரந்
தொழுதுவேய்முதற்பாசங்கொண்டேறினான்

இ - ள். படிந்தமுகிலாகிய மெழுகுசெயபடத்தையும், ஒழுகும் வெள்ளருவித்திரளாகிய மத்தகத்தோடையினையும், ஏறுவார்காலைச் சூழ்ந்துகிடந்து உரிஞ்சும் பொன்னாகிய மதத்தையுமுடைய வரையாகியயானையைத்தொழுது மூங்கில்வேராகிய புரோசைக்கயிற்றைப்பிடித்து அம்மூங்கிற்கவையிலே அடியிட்டேறினானென்க.

ஸ்ரீகோயிலைத்தொழுதான். யானையேறுவாருந் தொழுதல் இயல்பு. (௪௬)

நிரைத்ததீவினைநீங்கநெடுங்கணார்
வரைக்கணேறலின்வாலரிப்பொற்சிலம்

புனைத்துமின்னிருண்மேற்கிடந்தாலுமொத்
தனைத்தலத்தகமார்ந்ததொர்பாலெலாம்.

இ-ள். இடைவிடாத தீவினைபோம்படி தொழுதற்கு மகளிர் வரையிலேறுதலாலே, அவரடியிற்சிலம்பு உரைக்கப்பட்டு ஒருபாலெல்லாம், மின் இருண்மேற்கிடந்த தன்மையையுமொத்து, அவரடி ஒக்கமிதிக்கப்பட்டு ஒருபாலெல்லாஞ் செம்பஞ்சு மார்ந்ததென்க.

அனைத்த அலத்தகமென விகாரமுமாம். (௪௭)

சாந்துங்கோதையுந்தண்ணறுஞ்சுண்ணமு
மாய்ந்தபூம்புகையும்மவியுஞ்சுமந்
தேந்துபொன்விளக்கேந்தியிடம்பெறு
மோந்தர்சும்மைமலிந்ததொர்பாலெலாம்

இ-ள். சந்தனமுதலியவற்றைச்சுமந்து உயர்ந்த பொன்னாற்செய்த விளக்கையுமேந்தி இடம்பெறாத மக்களாரவாரம் ஒருபாலெல்லாமிக்கதென்க (௪௮)

துறந்தமன்னவர் தூமுடிதோள்வளை
நிறங்கொளாரம்பைம்பூணிழற்குண்டலம்
பிறங்குவெங்கதிர்மின்னொடும்பின்னிவீழ்ந்
துறங்குகின்றனபோன்றதொர்பாலெலாம்.

இ-ள். துறந்தவரசர் தம்முடைய முடிமுதலியணகிடந்தவொருபாலெல்லாம், கதிரும் மின்னும் பின்னிவீழ்ந்து உறங்குகின்றனபோன்றதென்க

ஈண்டுத் துறப்பதற்குமுன் உண்டான உடைமையாம். (௪௯)

கருவித்தேன்மலைகையுறக்கீண்டுடன்
மருவிப்பைங்கறிவாரிப்பழந்தழீஇ
வெருவிநாகம்பிளிறறவிரைந்துரா
யருவிநின்றதிரும்மொருபாலெலாம்

இ-ள். கைத்தாளம்போலுந்தேனிறால், அன்முகவின்கையுறுதலாலே சேரக்கிழிந்து விரைந்து பரந்து மிளகைவாரிப் பழத்தைத்தழுவி நாகம்வெருவிக் கூப்பிடும்படி யொருபாலெல்லாம் அருவியாய்நின்றதிருமென்க. (௫0)

வெங்கதிர்க்கடவுள்வியன்றேர்வரைத்
தங்குசந்தனக்கோட்டிடைப்பட்டெனப்
பொங்குமான்குளம்பிற்குடைபொற்றுநன்
மங்குலாய்த்திசையாவையுமல்கின்றே.

இ-ள். வரையிற்றங்கிய சந்தனக்கோட்டிடையிலே ஞாயிற்றின் றேரகப்பட்டதாக, அத்தேரிற்பூண்டமான் தம்மடியையூன்றி அதனைக் கொண்டுபோகின்றபொழுது, குளம்பாலேகுடைந்ததுகள் திசைகளெல்லாம் இருளாகநிறைந்ததென்க.

ஆய் - ஆக. (௫௧)

சுனையநீலமுஞ்சுள்ளியுஞ்சூழ்மலர்
நனையநாகமுங்கோங்கமுநாறிணர்ச்
சினையசண்பகம்வேங்கையொடேற்றுபு
முனைவன்மேற்றுதிமுற்றெடுத்தோதினான்.

சுனையிடத்தனவாகியநீலம். சூழ்மலர்ச்சுள்ளி - மராமரம். நாறிணர்க்கோங்கம்.

இ - ள். நீலப்பூமுதலியவற்றை வேங்கைப்பூவோடே திருவடிமேலேயேற்றி முனைவன்மேலுள்ள துதிகளை முழுக்கவெடுத்துத் துதித்தானென்க.

மிடறுள்ளவளவும் எடுத்தென்றுமாம். (௫௨)

வேறு.

முனிமைமுகடாயமூவாமுதல்வன்
றனிமைத்தலைமைதனதுதானென்ப
தனிமைத்தலைமைதனதுதானென்றாற்
பனிமலர்தூய்நின்றுபழிச்சாவாறென்னே.

முனிமை - குணப்பண்பு.

இ - ள். முனித்தன்மைக்குமேலாகிய ஒப்பில்லாததலைமை முதல்வன்றனதே யென்பர்; அங்ஙனங்கூறுதலான், அவனை யுலகம் பழிச்சாதிருக்கின்றது அறியாமை யன்றேவென்றானென்க. (௫௩)

மலரேந்துசேவடியமாலென்பமாலா
லலரேந்தியஞ்சலிசெய்தஞ்சபபடுவா
னலரேந்தியஞ்சலிசெய்தஞ்சப்படுமே
லிலரேயலரெனினுமேத்தாவாறென்னே.

சேவடிய, அ - அசை, சுட்டுமாம்.

இ - ள். மலர்தானேந்திய அடியையுடைய மால், இந்திரனால்வணங்கி மதிக்கப் படுவானென்பர்; அங்ஙனமாயின், உலகத்தார் மலரிலரெனினும் ஏத்தாதிருக்கின்றது அறியாமையன்றேவென்றானென்க. (௫௪)

களிசேர்கணையுடையகாமனையுங்காய்ந்த
வளிசேரறவாழியண்ணலிவனென்ப
ரளிசேரறவாழியண்ணலிவனேல்
விளியாக்குணத்துதிநாம்வித்தாவாறென்னே.

இ - ள். காமனைவென்ற அருள்பொருந்திய அறவாழியையுடைய தலைவன் இவனேயென்பர்; அங்ஙனங்கூறின், நாம் துதிகளைப்பரப்பாதிருத்தல் அறியாமையன் றேவென்றானென்க.

அரியுமயனுமரனும் இவனேயென்பதுகருத்து. பா - முற்கூறியவற்றோடொக்கும். (௫௫)

வேறு.

இன்னணமேத்தியிறைவனடிதொழு
தன்னமுறங்குமணிவரைமேனின்று
பொன்னங்கழலானிழிந்துபொழிமழை
மின்னினடந்துமிகுசுரஞ்சென்றான்.

இ - ள். கழலான் இப்படியேத்தித் தொழுது வரையிடத்துநின்றுமிழிந்து நடந்து சுரத்தை மின்போலே கடிதுசென்றானென்க.

சுரம் - பாலை. இதனானும் தாரசமனம் வல்லனென்றார். (௫௬)

மாலைக்கதிர்வேன்மலங்கமணிமலர்க்
கோலைவிடுகணுங்கொடியிடை
யேலங்கமழ்குழலேழையவரன்ன
வாலைக்கரும்பினகநாடணைந்தான்.

இ - ள். வேல்கெடுதலிற் றானும் போர்வேலொடில் வருகவென்று மலர்க்கு ஓலைவிடுங் கண்ணிணையும் இடையிணையுங் குழலிணையுமுடைய மகளிரைப்போலே ஐம்புலனுக்கும் வேண்டும்பொருளையுடைய மத்திமதேசத்தைச் சேர்ந்தானென்க.

அகம் - மருதம்; "அகநாடு புக்கவ ரருப்பம் வௌவி" யென்றார். (௫௭)

வேறு.

வழைச்சறுசாடிமட்டயின்றுமள்ளர்தங்
களைக்கரும்பெறிந்துகண்ணுடைக்குமெந்திர
மழைக்குரலெனமயிலகவவார்செநெற்
புழைக்கடைப்புனலலைத்தொழுகும்பொற்பிற்றே.

இ - ள். மள்ளர் இளமையற்றமட்டையுண்டு கரும்பைக்குறுகத்தறித்து மழைக் குரலென்றுமயிலகவச் சாறுகொள்ளுமாலையிற்சாறு செந்நெற்செறுவிற் கடைமடையாலே புனலையலைத்தொழுகும் பொற்பினையுடைத்து அந்நாடென்க.

எந்திரமொழுகுமென்று இடத்தினிகழ்பொருளின்றொழில் இடத்திற்கேற்றின வாகுபெயர். (௫௮)

தாமரைமலர்தலையடுத்துத்தன்கமழ்
தூமலர்க்குவளைகாலடுத்துத்தோலடிக்
காமருபெடைதழீஇயன்னங்கண்கொளுந்
தேமலர்த்தடந்தழீஇத்திசைகண்மல்கின்றே.

இ - ள். அந்நாடு, அன்னந் தாமரைமலரைத் தலையணையாகச்சேர்த்துக் குவளையைக் காலணையாகச்சேர்த்து என்பில்லாதவடியையுடையபெடையைத்தழுவிக் கண்டுயில்கொள்ளுந்தடங்கள் திசைகளெல்லாந்தழுவி நீர்மல்காநின்றதென்க. (௫௯)

கண்பயிலிளங்கமுகெருத்திற்காய்பரீஇக்
கொண்டிளமந்திகளெறியக்கோட்டிடைத்

திண்கனிமுசுக்கலைசிதறுந்தேம்பொழின்
மண்டமர்கடந்தவன்மகிழ்வொடேகினான்.

இ - ள். அமரைக் கடந்தவன் கோட்டிடையிலே மந்திகளிருந்து கமுகின்காயைவாங்கிக்கொண்டு எறியக் கலை தோற்றுக் கனியைச் சிதறும் பொழிலை மகிழ்ச்சியோடே போனானென்க.

இஃது அந்நாட்டின் நகரைச்சூழ்ந்த பொழில். (௬௦)

களிறுமறைக்குஞ்செந்நெற்கழனிநாட்டிடை
யொளிறுவேனரபதிநகரமொய்யெனப்
பிளிறுவார்முரசார்ப்பப்பெய்கழல்
வெளிறிலாக்கேள்வியான்விருப்பொடெய்தினான்.

இ - ள். களிறுமறைகின்ற செந்நெற்றிரையுடைத்தாகிய கழனியையுடைய நாட்டிடத்தில் நரபதிநகரைக் குற்றமற்றகேள்வியான் முரசார்க்கின்றகாலத்திலே விருப்பத்தோடே சேர்ந்தானென்க

முரசு - நன்னிமித்தம். (௬௧)

புறநகர்மணமகனொருவன்போதர்வா
னிறைமகன்வினவினனென்னபேரதே
துறைவளர்நாடொடுநகருஞ்சொல்லென
வறிகவென்றலரிவாய்கமழக்கூறினான்.

இ - ள். இறைமகன், கலமிழியுந்துறைமிக்க நாடும் நகரமும் என்னபெயரையுடைத்து; சொல்லென்று வாய்விட்டு அலரிப்பூக்கமழ வினவினன்; அதுகேட்டுப் புறநகரினின்றும் போதருவானாகிய மணமகனொருவன் அப்பெயர்களை யறிகவென்று கூறினானென்க. (௬௨)

௧. மத்திமதேசமாநாடுமற்றிந்நாட்
டெத்திசைநிதியமுமிறைகொண்டில்லவர்க்
குய்த்துவப்பக்கொடுப்பவரேமமாபுர
மித்திசைக்கையநீபுதியைபோன்மென. (௬௩)

௨. அன்னதேயென்றலுமடிசிற்காலமா
லென்னொடுபேசினாய்தவிர்மற்றீங்கெனப்
பொன்னகர்புக்கபின்னறிவல்போவென்றுதன்
வின்மரீஇவாங்கியவீங்குதோளினான்.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். நாடு மத்திமதேசமென்னும் பெயரையுடைத்தாம்; இந்நாட்டில் எத்திசைநிதியமு மிறைகொள்ளுதலால் இல்லவர்க்கு உய்த்துங்கொடுப்பவரூர் ஏமமாபுரமென்னும் பெயரையுடைத்தாம்; ஐயனே! நீயித்திசைக்குப் புதியைபோலுமென்றவன்கூற, அங்ஙனம்புதியேனென்று சீவகன்கூறுதலின், அவன் என்னுடனேவார்த்தைகூறினாய்; அதனால் நட்பிற்குத்தாழ்வில்லை; அடிசிற்காலமுமாயிருந்தது; இவ்விடத்

தே தங்கென்றுகூற, தோளினான் நகரிலேசென்றபின்பு பாரப்பேன்; இப்பொழுது போவென்றானென்க.

அறிவல் - மறுத்தற்பொருட்டாய் இறைபயந்தது. வில்லைப் பயின்றுவளைத்த.()

புணர்மருப்பியானையின்புயல்கொண்மும்மத
மணமகள்கதுப்பெனநாறுமாநகர்த்
துணைமலர்க்கண்ணியுஞ்செம்பொன்மாலையு
மிணைமலர்த்தாரினானிடறியேகினான்.

இ - ள். தாரினான், பிணையலையும் மாலையினையுமிடறி, யானையினது மழை போலும்மும்மதங் கதுப்பெனநாறுநகரிலே யேகினானென்க.

இடறி - நிகழ்காலமுணர்த்திற்று. (௬௫)

வண்டுகொப்புளித்துணுமாலைமார்பினைக்
கண்டுவப்பளித்தவர்கடைக்கணேக்கற
மண்டபப்பளிக்கறைமருங்கொர்மாநிழல்
கொண்டவற்களித்தகோர்குளிர்கொள்பொய்கையே

இ - ள். தங்கண்கள் மாலைமார்பினைப்பார்த்து மனத்துக்கு மகிழ்ச்சிகொடுக்கப் பட்டமகளிருடைய அக்கடைக்கண்கள் பின்பு தன்னைக்காட்சியின்றி யேக்கறும்படி போய் மாநிழலை யிருப்பிடமாகக்கொண்டவற்கு ஒருபொய்கை வருத்தத்தைக்கெடுத் ததென்க.

ஏக்கற - இளைத்திடைய. மண்டபம்போலும் பளிக்கறை. (௬௬)

வேறு.

வண்சிறைப்பவளச்செவ்வாய்ப்பெடையன்னமடன்மகூரத்
தண்கயநீருட்கண்டதன்னிழல்பிறிதென்றெண்ணிக்
கண்டனைகள்வமற்றுன்காதலிதன்னைநீர்க்கீழ்ப்
பண்டையமல்லம்வேண்டாபடுக்கவென்றூடிற்றன்றே

இ - ள். சிறையினையும் வாயினையுமுடைய பெடையன்னம், அறியாமைமிகுத லாலே நீரிலேகண்ட தன்னிழலை வேறோர்பெடையென்றுகருதி, கள்வனே! நின் காதலிதன்னை நீரின்கீழேகண்டேம்; இனி முன்புபோற் றேற்றத்தேறேம்; அகப் படுக்கவேண்டாவென்று ஊடிற்றென்க. (௬௭)

செயிர்ப்பொடுசிவந்துநோக்கிச்சேவலினகலச்சேவ
லயிர்ப்பதெனின்னையல்லாலறியலேனன்றிமூக்கி
னுயிர்ப்பதுன்பணியினாலேயூடனீயென்றுபல்காற்
பயிர்ப்பறச்சிறகாற்புல்லிப்பணிந்துபாண்செய்ததன்றே.

இ - ள். அங்ஙனமூடிய பேடை குற்றத்தோடே கோபித்துநோக்கிச் சேவலி னின்றுநீங்க, சேவல், யான் நின்னையன்றி வேறொன்றறியேன்; என்னையயிர்ப்ப தென்? அதுவுமன்றி யானுயிர்தாங்கியிருப்பது நின்னேவலாலே; ஆதலின், நீயூடாதே

கொள்ளென்று மனங்கொள்ளாதிருக்கின்றமைநீங்கப் பல்காற்புல்லி வணங்கித் தாழ்ச்சிசெய்ததென்க. (௬௮)

கலையுணர்மகளிர்நெஞ்சிற்காமத்திற்கனிந்தவூட
னிலையுணர்மைந்தர்நீக்கிநெறியினாற்புணர்ந்ததொப்ப
வலர்மிசைப்பெடையினூடலன்புநோன்சேவனீக்கிக்
குலவியபுணர்ச்சிநோக்கிக்குன்றனான்சிந்திக்கின்றான்.

கலை - மகளிர்க்குரியவாக மணிமேகலையிற்கூறிய * கலைகள்; காரணமுமாம். கனிந்த - பழுத்த.

இ - ள். மகளிர்நெஞ்சில் ஊடலைத்தீர்க்குமுறைமையையறிந்தமைந்தர் தீர்த்துப் புணர்ந்ததன்மையையொப்ப, சேவல் பெடையினூடலைநீக்கித் தாழ்ந்தபுணர்ச்சியைநோக்கி முன்புசலியாதவன் இப்பொழுது நினையாநின்றானென்க. (௬௯)

தன்னையாண்முகத்தைநோக்கிற்றான்முலைமுகத்தைநோக்கும்
பின்னையான்பலவும்பேசிற்றானொன்றுமிழற்றும்பைம்பூட்
பொன்னவாஞ்சுணங்குபோர்த்தபொங்கிளமுலையினாளென்
முன்னையாள்போன்றுதத்தைமுகத்துளேதோன்றுகின்றாள்.

இ - ள். அவளூடறீர்த்தற்கு யான் றன்னைமுகத்தைப்பார்த்தாற் றான் எதிர் நோக்கின் ஊடறீருமென்றிறைஞ்சிநிற்கும்; பின்பு யான் ஊடறீரப்பலவுங்கூறின், அவற்றைக்கெடுத்துத் தான் ஒருமொழியை மெல்லக்கூறும்; இத்தன்மையையுடைய முலையினளாகிய தத்தை முன்னையாள்போன்று என்முகத்துள்ளே தோன்றாநின்றாளென்க.

அவாம் - விரும்பும், ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங்கெட்டது. குணமாலையாற் றத்தைக்குநிகழ்ந்த வூடறீர்த்ததனை நினைந்தான்; ஒழிந்தோர்க்கு அங்ஙனநிகழ்ந்த வூடலின்மையின். முன்னரூடினநிலைமையாகவே தோற்றுதலின், முன்னையாளென்றான். (௭௦)

வேறு.

௧ பரிவுற்றுப்பயனின்றியும்பாவைமார்
முரிவுற்றார்களிப்பூர்ச்சனைசெய்பவாற்
பிரிவிற்றோன்றியபேரன்பெனப்படு
மெரியின்மூழ்கியிறந்துபடுங்கொலோ.

இதுமுதல் மூன்றுகவியுமொருதொடர்.

பாவைமாரன்புற்றால் ஒருபயனின்றியும் வருத்தமுற்றார்போல நெட்டுயிர்ப்புக் கொள்வார்கள்; ஈண்டு அதுவன்றிப் பிரிவாதலின், அப்பிரிவாற்றோன்றிய அன்பென்னுநெருப்பிலேயழுந்தி யிறந்துபடுமோவென்க. இவ்வாறு அருள் பிறர்க்காகு மென்றாற்போலக் கருதுதல் பரிவு. (௭௧)

* இவற்றை, மணிமேகலையில் இரண்டாவது ஊரலருரைத்த காதையிற் காண்க.

௨. வாளியம்பனவாட்டடங்கண்ணிதன்
றோளுமென்முலைப்பாரமுந்தொன்னலம்
நாளுநாளினுநைந்துநைந்துள்சுடப்
பூளைமெல்லணைமேற்புரளுங்கொலோ.

வாளியம்பு - கயலம்பு. பூளைமெல்லணையென்றான், பூளைமுதலியவற்றாற் சமைத்தலின். தடங்கண்ணி உள்சுடுதலாலே தோளுமுலையுந் தன்றொன்னலமு நாடோறுநாடோறுங் கெட்டுப் புரளுமோவென்க. முன்பு என்றோளாகிய அணைமேற்றுயின்றாள் இப்பொழுது தீயாகியவணையிலே புரளுமோவென்றானென்க. (௭௨)

௩. உருகிவாடியொன்றூற்றதுகொல்லெனக்
கருகிவாடியகாமருகோதைத
னிருகணீருமிடைமுலைசோர்ந்துக்
குருகுபாயதடமாகவழுங்கொலோ.

யான்போந்தபின்பு அவனுற்றதென்னென்றுநினைந்து உருகிவாடுதலாலே கருகிவாடியதோர்கோதைபோல்வாள் தன்முலையிடை தடமாம்படி தன்னிருகண்ணினீரும் வடிந்துவீழ அழுமோவென்க. "கருங்கால வெண்குருகு மேயும் - பெருங்குளமாயிற்றென் னிடைமுலை நிறைந்தே" என்றார்பிறரும்.

இ - ள். இங்ஙனந்தோன்றின இவள் இறந்துபட்டாளோ, புரளுமோ, அழுமோ, என்செய்கின்றாளென்றானென்க. (௭௩)

வண்டுமொய்ப்பயில்கோதையையாமுதற்
கண்டஞான்றுதன்கண்ணெனுங்கைகளான்
மொண்டுகொண்டுபருகியநோக்கமொன்
றுண்டென்னாவியுருக்கியிடுமதே.

இ - ள். யான்பயின்றகோதை கூட்டத்திற்குமுன்பே கண்டவன்று தன்கண்ணென்னுங்கைகளாலே முகந்துகொண்டுபருகிய என்னுயிரையுருக்குவதோர் நோக்கமுண்டு; அஃதுஇப்பொழுதும் உருக்காநின்றதென்றானென்க

பருகியநோக்கமென்க. இஃது அவளுடனுடன்றோன்றியதேயன்றித் தலைநாட் டோன்றியவாறுந் தோன்றினமை கூறிற்று. (௭௪)

காதலாளுடலுள்ளுயிர்கைவிடி
னேதமென்னுயிரெய்தியிறக்குமற்
றாதலாலழிவொன்றிலளல்லதூஉம்
மாதர்விஞ்சையும்வல்லளுமல்லளோ.

இ - ள். யாம் இருதலைப்புள்ளின் ஓருயிரேமாதலிற் காதலாளுயிர்நீங்கில் என்னுயிரும் ஏதமெய்திநீங்கும்; இதுநீங்காமையின், அவளும் இறந்துபட்டிலள்; இதுவும் அறிதற்கோருபாயம்; அல்லதிலும் விஞ்சையும்வல்லளல்லளோ? அதனாற் பன்னிருமதியினென்று தேவன்கூறியவதனையும் பிறபான்மைகளையுமுணர்ந்து ஆற்றுவளென்றானென்க.

இ - ள். ஏறனுன் வேட்கை மேலிடுதலாலே, வருத்தமுற்ற மாய்த்தலையுடைய உள்ளத்தைக்கெடுத்து அப்பொய்கையினலத்தைநுகர்ந்து மீட்டும் அவ்விடத்தேயிருந் தானென்க.

வருத்தத்திற்குக் காரணமாகின்றவிடத்து இருத்தலருமைதோன்ற, மீட்டுமென்ருர். (எஅ)

வேறு.

க. நேராநேருநீணிதிதுஞ்சுந்நிறைகோயி
லாராமெவமபோராய*தடமித்தன்னரசற்கு
னாரார்கற்பினுளிளவேயதோணளினைக்குஞ்
சீராறறேன்றிசசெல்வமொடெலலாந்திருத்தக்கான். (எசு)

உ. விண்டாரத்தேய்க்கும்வெம்பரிமான்றோவிசயன்னென்
றுண்டாய்நின்றுன்றன்புகழூழியுலகேதத
வண்டாரசோலைவாரமணநாறப்புகுகின்றுன
கண்டான்சேர்ந்தான்காளையைக்கல்விக்கடலானே.

இவையிரணடுமொருதொடா.

இ - ள். அரசனுகிய தடமித்தனுக்கும், நசையாரந்தகற்பினையுந் தோளினையு முடைய நளினைக்குந் தலைமையோடேபிறந்து, செலவத்தோடே கல்விமுதலியன வெல்லாம் அழகுதக்கவன், விசயனென்று பெயர்கூறப்பட்டு உலகமெல்லாந் தன்பு கழ் ஊழிக்காலமுண்டாக வேத்தநின்றவன், பகைவர்தரு நிறைதங்கும் கோயிலிற்சோ லையிலே தன் மணநாறச்செல்கின்றவன் கல்விக்கடலானுகிய காளையைக் கணடான், கண்டு சேர்ந்தானென்க.

மணநாறுதலாற கண்டானென்றுமாம். (அ0)

இந்நாட்டிவ்வூரிவ்விடமெய்தாரிவண்வாழ்வா
ரெந்நாட்டெவ்வூரெப்பெயராய்நீயுரையென்றாற
கந்நாட்டவ்வூரப்பெயரல்லாப்பெயர்சொன்னுன்
பொய்ந்நாடேயுமபொய்யலவாற்றாற்புகழ்வெய்யோன்.

இவண் - இவ்வுலகில். என்றது தனக்குநடக்குமிடத்தை.

இ - ள். அங்ஙனஞ்சேர்ந்தவன் இவ்வுலகில் இந்நாட்டில் இவ்வூரில்வாழ்வார இவ்விடத்தைச்சேரார்; ஆதலின், இவன் இவ்விடத்தானல்லனென்று உட்கொண்டு நீ எந்நாட்டில் எவ்வூரில் எப்பெயரையுடையாய்? உரையென்றுவினவினற்கு, புகழ் வெய்யோன்றுன் சொல்லாற் பொய்யாகநாட்டிக்கொள்ளப்பட்டதாயினும் பொரு ளாற் பொய்யல்லாததோர் வழியாலே ஏமாங்கதமென்னுநாட்டில் இராசமாபுரத்திற் சீவகனென்னும்பெயரையன்றிப் பொருளான் அப்பெயரேயாகக் கூறினனென்க.

எனவே மறைந்தொழுகுகின்றமை பெற்ரும். (அக)

* த்ருடமித்ரனென்னும் வடமொழிப்பெயர் தடமித்தனென்ருயிற்று.

வாமான்றிண்டேர்வள்ளலுமுள்ளம்மிகைகொண்டெங்
கோமாற்குப்பெண்கொள்பயன்மிக்கான்கொலைவேலா
னேமாறில்லாவிந்திரனேயும்மிவனொவ்வான்
போமாறாய்வென்பொற்பொடுகூட்டும்வகையென்றான்.

வாமான் - தாவுமான். கோமாற்கு - உருபுமயக்கம். இந்திரனும், உம்மை- சிறப்பு; ஏகாரம் - பிரிநிலை.

இ - ள். எத்தொழிலில நிகரில்லாதவிந்திரனும் இவனையொவ்வானாதலின், இக்கொலைவேலான் யாங்கொள்ளும் பயன்மிக்கவனென்று வள்ளலுந் தன்னறிவின் மிகையாலே குறிக்கொண்டு எங்கோமானிடத்தே யிவன் நெஞ்சாலே சென்றுகூடுங் கூற்றாலே செலுத்துவேன்; அங்ஙனஞ்செலுத்துதற்கு இவனெஞ்சுபோம்வழியை ஆராய்ந்துபார்ப்பேனென்று கருதினானென்க. (௮௨)

பூங்கழலானைப்புண்ணியநம்பிமுகநோக்கி
யீங்கிதுநின்னாடிப்பதிநின்னூரிதுநின்னில்
வீங்கியதிண்டோள்வெல்புகழாய்நின்கிளையென்றாற்
காங்கதுவெல்லாமண்ணலுநேர்ந்தாங்கடைகென்றான்.

இவனைப்பெறுதி பயந்தலின், விசயனைப் புண்ணியநம்பியென்றார்.

இ - ள். விசயன் சீவகன்முகத்தைப்பார்த்து, வெல்புகழாய்! இங்ஙனநட்புக் கொண்டவிடத்து இந்நாடு நின்னுடையநாடு, இவ்வூர் நின்னுடையவூர்; இந்த இல் நின்னுடையவில்; யாங்களெல்லாம் நின்னுடையசுற்றமென்று உறவுகூறினானுக்கு, அவ்விடத்துக்கூறிய உபசாரத்தினது பன்மையெல்லாவற்றையும் அண்ணலும் அப் பொழுது உடன்பட்டு இனி யிவை மொழியற்கவென்றானென்க. (௮௩)

வேறு

மன்பால்வஞ்சிறுவனுங்கோமாங்கனியுண்ணலுமாறு
மின்னவிர்கணையிறப்பல்காற்பிழைப்பதுமீண்டுநிற்பப்
பொன்னவிர்கழலானைப்பொருசிலைகணையின்வாங்கி
யின்னமிதாவுகின்றவிருங்கனியறவெய்திட்டான்.

இ - ள். விசயன் அவ்விடத்தே ஒருமாங்கனியையுண்ணக்கருதியதுவருதற் குக் கணையாலேபிழைப்பவெய்து அக்கருத்துமீண்டுநின்றானாக, சீவகன் வில்லை அம் படனேவாங்கி அக்கனியை யறும்படியெய்தானென்க. (௮௪)

எய்தவம்பக்கணையுமாவினிருங்கனியதுவும்பூமிக்
கெய்தவச்சிலையினெல்லையணுகலுமேந்தனோக்கி
யெய்தவவ்விடத்துநின்றேயெய்தவத்தடக்கைகொண்டாற்
கெய்தச்சென்றையனாரத்தழுவிக்கொண்டிதனைச்சொன்னான்.

இ - ள். தானெய்த அவ்வம்பும், மாவினதுகனியாகியவதுவுந் தானெய்த அவ் வில்லினதுயரத்திலே பூமிக்கணுகினவளவிலே, ஏந்தல்பார்த்து எய்தவவ்விடத்தே

ருள

நின்று எய்தவக்கையிலேவாங்கிக்கொண்டவனுக்கு விசயன் அணுகச்சென்று தழுவிக்கொண்டு இதனைக் கூறினனென்க. (அரு)

வண்சிலைகொண்டவாறும்வார்கணைதொடுத்தவாறுங்
கண்களைவைத்தவாறுங்கல்செய்தோளிருந்தவாறுந்
திண்சரம்விட்டவாறுஞ்சென்றுகோல்பாய்ந்தவாறுங்
கண்டெலாம்வியந்துநோக்கிவில்லுடைக்கடவுளென்றான்.

இ-ள். முட்டிவிசேடமான படியையும், நிலைவிசேடமாகநின்று கணையைத் தொடுத்தபடியையும், இலக்கடைந்தபடியையும், தோள்பிறழாமற்கிடந்தபடியையும், அம்புவிட்ட நொய்ம்மையையும், கோல காம்பையறுத்துக் கூடவந்தபடியையும் எல்லாங்கண்டு அதிசயித்து அவனைப்பார்த்து நீ வில்லைப்படைத்த கடவுளென்றானென்க. (அசு)

மராமரமேழுமெய்தவாங்குரவிற்றடக்கைவல்வி
லிராமனைவல்லனென்பதிசையலாற்கண்டதில்லை
யொராமனமிவற்கணின்றியுவக்குமாசெய்வலென்று
நூராமலாதகாவுநீங்கிக்கோயிலேகொண்டுபுக்கான.

இ-ள். வில்லைத் தேவிபொருட்டுவளைத்த கையினையுடைய இராமனை மராமரமேழும் உருவவெய்த வலிய விற்றொழிலைவல்லனென்பது வார்த்தையன்றிக் கண்டதில்லை, இதுகண்டேன்; இனி நீங்கிப்போமுள்ளம இவனிடத்தின்றாக இவனுவக்குமாறு செய்வேனென்று உட்கொண்டு, தான் காவினின்றுநீங்கி அவனைக் கோயிலிலே கொண்டுபுக்கானென்க. (அஎ)

வழிவரல்வருத்தமோம்பிவயிரப்பூணணிந்தமார்ப
னழிகவுள்யானைவேந்தற்கவற்றிறமறியச்சொன்னான்
மொழியெதிர்விரும்பிமன்னவன்றனிவிறடக்கையாற்குக்
கழிபெருகமன்கூறிக்காதலன்காளையென்றான்.

இ-ள். விசயன், வழிவருதலாலுண்டானவருத்தத்தை உணவுமுதலியவற்றாலேதீர்த்துத் தடமித்தனுக்கு அவன்கூறுபாடெல்லாமறியக்கூறினான்; அவனும் அக்கூற்றையெதிரேவிரும்பிச் சீவகனுக்கு மிகப்பெரிய உபசாரங்களைக்கூறி, காளாய் நின்மேற் காதலையுடையேமென்றானென்க (அஅ)

கிலுத்தங்கூர்ப்பரங்கண்ணுமிரண்டினுட்கிலுத்தஞ்சார்ந்து
நலத்தகுவிரல்களைந்திணிமபர்மேவிரல்விளிம்பு
சிலைத்தழும்பியானைத்தோல்தாற்றுனைசிறுமீனொத்த
விலக்கணக்கிடக்கைகண்டேபேவினுக்கரசனென்றான்.

கிலுத்தம் - முன்கைச்சந்து. கூர்ப்பரம் - முழங்கைக்குமுன். யானைத்தோல் காழ்ப்பேறினபடிக்கும், அதிலே நூற்றையுடைந்தது வெண்மைக்கும், சிறுமீன் தழும்பின்வடிவிற்குமுவமை.

இ-ள். அவன் பின்னுங் கிலுத்தங் கூர்ப்பரமென்றவிரண்டிலும் முன்கைச்சந்தைச்சேர்ந்து உத்தமவிலக்கணத்தையுடைய விரல்களைந்திற்கருகே யானைத்தோலின்

நூற்றுவரையுஞ் சிறுமீனையுமொத்த மூவிரலினீளத்தையுடைய சிலைத்தழும்பாகிய இலக்கணத்தினது கிடக்கையைக்கண்டே விற்றொழிலுக்கு அரசனென்றானென்க. ()

அண்ணலஞ்சிலைவலாருளமோகவாசானிற்பின்னை
விண்ணகத்துவெளிவெற்பின்விஞ்சையருலகினல்லால்
மண்ணகத்தில்லையென்பாரவாயினைமடங்கவந்தான்
புண்ணகத்துறையும்வேலானெனப்புகழ்ந்தரசன்சொன்னான்.

அமோகவாசான் - அமோகாசாரியன். இன் - உருபுமயக்கம். இன்னும், ஐயும் அசை.

இ - ள். பின்னுந் தலைமையையுடைய வில்வல்லாரிற் றரோணசாரியனுக்குப் பின்பு விஞ்சையருலகினல்லது மண்ணிடத்து வில்வல்லாரில்லையென்பார் வாய்மடங்கும்படி வேலான் றோன்றினானென்று புகழ்ந்து, அரசன் பின்னும் ஒருமொழிகூறினானென்க.

அது மேற்கூறுகின்றார். (௯௦)

விற்றொழிற்றனம்பிசேற்றான்விருந்தினனிவனுமன்றி
மற்றுமோர்நால்வருள்ளார்மாண்பினுள்வளர்ந்ததில்லை
கொற்றநீகொடுக்கவேண்டுங்குறையெனக்குரிசினேர்ந்தா
னற்றைநாளாதியாகவவர்களும்பயிற்றுகின்றார்.

இ - ள். விசயன் விற்றொழிலையறியான்; அதற்குப் புதியன், இவனுமன்றி வேறுமொருநால்வருளர்; அவருங் கல்விமாட்சியோடு வளர்ந்ததில்லை, இவர்களுக்குக் கல்வி நீகொடுக்கவேண்டும்; இஃது எமக்குக் காரியமெனச்சொன்னதனை, அதற்குச் சீவகனு நேர்ந்தான்; நேர்ந்தபின்பு அற்றைநாள்முதலாக அவர்களும் அக்கல்வியைப் பயிற்றுகின்றாரென்க (௯௧)

வேறு.

கழலிற்செருப்பாயடிகட்டல்லக்காதற்கூர
நிழலினீங்காரினைத்தனநினைப்பளவானாக்கி
யழலிற்சாராதகலாதொழுகவொருநாளவன்போகிப்
பொழிலின்மிக்கதளிர்ப்புக்கான்மணமகளிர்போற்பொலிந்ததே.

இ - ள். அங்ஙனம் பயிற்றுகின்றவர்கள், செருப்புப்போலே யடிகளைப்பொருந்திக் காதல்மிகுதலாலே நிழல்போல நீங்காராய், அவனினைத்தனவற்றை ஒருகணத்தின்முடித்துத் தீப்போலே யணுகாது அகலாதொழுகாநிற்க, அவன் ஒருநாளிலே போய்ப் பொழில்களில் நன்மைமிக்கதொன்றைச்சேர்ந்தான்; அதுவும் பலமணத்தான் மணமகளிரைப்போலப் பொலிந்ததென்க.

"ஒண்ணுதல் மகளிர் கழலொடு மறுகும் - விண்ணுயர் தோங்கிய கடற்றவும்" என்றார் பிறரும். (௯௨)

பாசிப்பாசத்துப்பைம்பொன்னிரைத்தாலிபூத்தவேங்கை
மாசில்வெண்டுகிலைநீர்தோய்த்துமேற்போர்த்தவண்ணமேபோற்
காசின்மட்டொழுகப்பூத்தவழிஞ்சில்கண்ணார்கவின்கொண்டன
பேசிற்செந்தலையவெள்கறையபுன்கம்பொரியணிந்தவே.

இ-ள். வேங்கை பச்சைக்கயிற்றிலே நிரைத்த பொற்றாலிபோலேபூத்தன; அழிஞ்சில் வெண்டுகிலை நீரைத்தோய்த்து மேலேபோர்த்தாற்போலே தேனொழுகும் படிபூத்தன; புன்கு செந்தலைய வெண்கறையவாகிய பொரிபோலேபூத்தன; இவற்றைக்கூறில் இவைதாங் கண்ணிற்கார்ந்ததோர் கவின்கொண்டனவென்க.

வெள்ளைமறுவை யுடையனவென்க. (௯௩)

கோடுதையாக்குழிசியோடாரஞ்சோலக்குயிற்றிய
வோடுதேர்க்கான்மலர்ந்தவகுளமுயர்சண்பகங்
கூடுகோழிக்கொழுமுளையரும்பினவங்கோசிக
வாடைபூத்தனபாதிரிவெண்கடம்புபந்தணிந்தவே.

குறட்டோடே யாரகளழுந்தத் தைத்துச்செய்த தேருருளை; மேற்கூட்டுவையாத தேருருளை.

இ-ள். மகிழ் தேருருளைபோலேபூத்தன. சண்பகங் கோழியிடத்தேகூடின முள்ளுப்போலேயரும்பின, பாதிரி கோசிகப்பட்டுப்போலே பூத்தன; வெண்கடம்பு பந்தணிந்தனவென்க. (௯௪)

வெருகுவேட்பசிரிப்பனபோன்முகைத்தமுல்லைமெய்ப்பவா
ளரவுபைத்தாவித்தாங்கன்னகாந்தளவிழ்ந்தலர்ந்தன
குரவங்கொண்டகுறும்பூழ்போறகொழுங்கான்முகைசுமந்தன
குருதிக்கூரெயிறுகூத்தியர்கட்கொண்டகொடித்தளவமே

இ-ள். முல்லை வெருகுவிரும்பச்சிரிப்பனபோலே யரும்பின; குருதிககாந்தள் பாம்பு படத்தைவிரித்துக் கொட்டாவிகொண்டாலன்னவாக முகைநெகிழ்ந்து பின்பு அலர்ந்தன; குரவங் கையிலேபிடித்த குறும்பூழின் கால்போலே கொழுவிய முகையைச்சுமந்தன; * தளவங் கூத்தியரிடத்துக் கூரெயிறுபோலேயரும்பினவென்க.

கொடுமைதோன்றக் குருதிகூறினார். (௯௫)

சொன்னநன்மலருமல்லனவும்வீழ்ப்பலவின்சுளைகளு
நன்மைநூலினயந்தோன்றநன்பொன்விரலினூசியினாற்
பன்மணியுமுத்தும்பவளமும்மைம்பொன்னுங்கோத்தாலொப்ப
வென்னவமரருமருளத்தொடுத்தானினமாலையே.

இ-ள். மாலைகட்டுமாறுகூறிய நூலினயந்தோன்றத் தேவருமருள மணிமுதலியனவற்றைக்கோத்தாற்போலே முற்கூறியமலர்களையும் ஒழிந்தவற்றையுஞ் சுளையையுங்கொண்டு விரனூசியாலே ஒருவகைமாலையைக் கட்டினானென்க. (௯௬)

ஊனுண்சிங்கக்குழவியெயிற்றேரொளியெயிற்றினான்
றேனுண்போதிற்பிணையலும்பந்தும்புனைந்துதேனார்ந்த
நானந்தோய்த்துநறுங்கலவைநாறுமதந்தெளித்தபின்
பானுமஞ்சொல்லாளோர்படிவிலண்டார்ப்பவந்திறைஞ்சினாள்.

இ-ள். சிங்கக்குழவியின் எயிற்றையொக்குமெயிற்றினான், அவ்வகைமாலை

---

* தளவம் - செம்முல்லை. இதனைக் குறிஞ்சிப்பாட்டினாயிற்காண்க.

யொழியப் போதாலே ஒருமாலையையும் பந்தையும் பின்னுங்கட்டி யிவற்றை யினி மைநிறைந்தபுழுகைத்தோய்த்து அவற்றினரும்புகளுக்குச் சந்தனத்தோடுகூடிய பனிநீரையும் புழுகையுந்தெளித்தபின்பு, பாலைப்போலத்தீவிதாகிய கூரிய சொல்லையுடையாள் ஒருதொழில்செய்யுங்குறளி வந்துவணங்கினாளென்க.

ஓலைப்பாசுரமான மாலையைப் பிறரயிராதபடி யிவையுங் கூடக்கட்டினான். * "குஞ்சரம் பெறுமே குழவிப பெயாககொடை" என்றதனுட்கொடையென்றதனாற் சிங்கங் குழவியுங்கொண்டவாறுகாணக. (௬௭)

நெடியவாட்கண்கள்வாயாவிமைப்பெனுஞ்சொல்லின்மற்றெங்
கொடியிற்கொத்தவிவையென்றாணம்பியுங்கொள்கவென்றான்
வடுவும்வேலுமலருங்கயலும்வலைப்படுத்தகண்
ணடியஞ்சிலம்பினாட்குய்த்திறைஞ்சிக்காட்டவவள்கொண்டாள்.

இ - ள் அப்படிவி தன்கண்கள்வாயாக இமைப்பென்னுஞ்சொல்லாலே இம்மாலைகளும் பந்தும கனகமாலைக்குப்பொருந்தினவென்றாள்; சீவகனுங்கொள்கவென்று கொடுத்தான்; கொடுத்தபின்பு அவளை வணங்கி அவற்றைக்கொண்டுபோய் வடுமுதலியவற்றைக்கெடுத்த கண்ணிணையும் அடியிலேசிலம்பையுமுடையாளுக்குக் காட்ட, அவளும் வாங்கிக்கொண்டாளென்க.

படிவிகுறிப்பறிந்து கொடுத்தான். (௬அ)

க. கொண்டுகோதைநமலரெழுத்துமெல்விரலின்மேற்றாங்கிநோக்கும்
வண்டுசேர்ந்தகுழலாள்வருமுலைகளபாயவண்டார்
விண்டுதேன்றுளிப்பவேற்றடங்கண்டாமாடுநாடகங்
கண்டுவாழாதவர்வாழ்க்கையெல்லாஞ்சவரர்வாழ்க்கையே. (௬௯)

உ. ஆம்பறூமரக்காம்பவளவாயாரமுதன்னார்
பாம்புபைத்தாங்கனையபவளப்படவரவல்குலார்
தாமபலருமருட்டவகிறவழுந்தண்பூவணைக்
காம்புமென்றோளாவின்வளரவைகல்கல்ப்பென்பவே. (௪00)

௩. ஆகந்தானோமணிப்பலகையாகமுலைக்கருயாரப்
போகக்கேற்றபுனைபவளவல்குல் நல்கழகமாக
வேகவின்பக்காமக்கவறுடலிசைவதன்மே
லாகநோற்றிட்டடங்கலாண்மைக்கழகென்பவே.

இவைமூன்றுமொருதொடர்.

இ - ள். அம்மாலையைவாங்கிக்கொண்டு விரன்மேலேதாங்கி மலராகியவெழுத்தைவாசிக்குங்குழலாள், அரக்காம்பல்போல நாறும்பவளவாயார், அமுதன்னார், பாம்பின்படமனைய வல்குலாராகிய மகளிர்தாம் பலருமாடுநாடகங்களைக்கண்டு வாழாதவர் வாழும்வாழ்வெல்லாம் மக்கட்பிறப்பிற்பிறந்தும் நன்குநுகராத வேடரதுவாழ்வாயிருக்கும்; அதுவேயன்றி அவளைக்கலக்குமிடத்து வேற்றடங்கண்டாம் பாம்புபைத்தாங்கு மருட்ட வளவியதார் தேன்றுளிக்கும்படி வருமுலைகள்பாய அவர்தோள் கவின்வளர

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், கக.

அணையிலேதங்குதல் கலப்பென்றுகூறுவர்; அங்ஙனங்கலந்து தனதாகம்பலகையாக அவர்முலைகள்காயாக வல்குல் சூதுபொருமிடமாக இணையில்லாதவின்பத்தையுடைய காமமாகியகவறுடல் கூடாதாயின், இவையெல்லாம் மேலுண்டாம்படி தவஞ்செய் தடங்குதல் ஆண்மைக்கழகென்றுகூறுவாரென்று வாசித்தாளென்க.

குழலாள்வாசித்தாளென்க விடமேறினாற்போலே மருட்ட நாடகம்-அவாவெ கரிக்கிறநிலைமை. (௧௬௦௧)

வேறு.

பின்னிவிட்டபிடித்தடக்கையிரண்டுபோன்றிரண்டருகா
கன்னிக்கலிங்கமகிலார்ந்துகவவிக்கிடந்தகுறங்கினாள்
மின்னுக்குழையும்பொற்றோடுமிளிரவெருத்தமிடங்கோட்டி
யென்னுமிமையாணிணைத்திருந்தாளியக்கியிருந்தவெழிலொத்தாள்

இ - ள். முறைமைப்படநோக்கி யிடைவெளியின்றி யிருத்தலிற பிடியினுடைய சேர்த்துவிட்ட கையிரண்டையொத்துத் தாந்திரள்வதுஞ்செய்து கணவன் றீண்டாத கலிங்கம் விரும்பிக்கிடந்த குறங்கினாள், அங்ஙனம்வாசித்துக் குழையுந் தோடும்பிறழக் கழுத்தையிடத்தேசாய்த்துச் சிறிதுமிமையாளாய அவனிடத்துப் புணர்ச்சியை நினைந்திருந்தவள இயக்கியிருந்த வடிவையொத்தாளென்க.

இயக்கியுந் தனக்குமேலாமிறைவனைத் தியானித்து இமையாதிருப்பா ளென் றுணர்க. (௧௬௦௨)

கொடுவெஞ்சிலையைக்கோளையமைத்துக்கொதிநீரப்பகழிகொளவாங்கி
கடுவெங்குறவனெய்யப்பட்டகன்னிப்பிணையினிலைகலங்கித் [க்
தொடிதோளடப்பத்தோடேம்பத்துணைவெம்முலைகளபசப்பூர
நெடுமாத்தோகைமென்சாயனெஞ்சிற்கிவ்வாறுரைக்கின்றாள்.

இ - ள். அங்ஙனமிருந்த பெரிய மயில்போலுஞ் சாயலையுடையாள் வில்லை நாணேறிட்டு அம்பைநிரம்பவலித்துக் குறவனெய்யப்பட்ட கன்னிபபிணையினிலையைத் தப்பித் தொடி தோளில் நின்றும் விழும்படி தோண்மெலியாநிறக, முலைகள் பசப்பூரா நிற்க நெஞ்சிற்கு இப்படிக் கூறாநின்றாளென்க.

நிலையைத் தப்புதல்-இறந்துபாடு நீங்குதல். மாலையைத் தன்சேடிகொண்டுவருதலின், அவற்கு நிகழ்ந்தவேட்கைதன்னிடத்தேயென்றுகருதி இறந்துபாடுநீங்கினாள். பிணைபோலென்றால் மேல்வருத்தமின்றி யிறந்துபாடுதோன்றுமாப. (௧௬௦௩)

ஒன்றேயெயிற்றதொருபெரும்பேயுலகம்விழுங்கவங்காந்து
நின்றாற்போலநிழலுமிழ்ந்துநெடுவெணடிங்களெயிறிலங்க
வின்றேகுருதிவானவாயகங்காந்தென்னைவிழுங்குவா
னன்றேவந்ததிம்மாலையளியேனாவியாதாங்கொல்.

ஏ - அசை.

இ - ள். ஒரெயிற்றையுடையதொரு பெரும்பேய் உலகததை விழுங்கும்படி வாயையங்காந்து நின்றாற்போலே இம்மாலை திங்களாகியவெயிறு நிழலுமிழ்ந்திலங

மகளிருடைய பொல்லாங்கைப்பார்த்து நகுவார் நகப்படும் பொல்லாங்கின் வடிவாயி னேன்; இங்ஙனமாகியதமியேன் மாலைபுனையாக யாமமாகிய கடலைநீந்துவேன்; நீந் துதலரிதென்றாளென்க.

அவன்கையாற் புனைதலின் அதுகொண்டுநீந்தலாமோவென நினைத்து அதனை மறுத்தாள். (௧௦௭)

செம்பொற்கடம்பன்செவ்வேலுங்காமன்சிலையிற்றொடுத்தலர்ந்த
வம்பும்வென்றவரிநெடுங்கண்ணம்மாமதிவாண்முகத்தினாள்
கொம்புபூத்துமுருகுலாய்த்தேன்கொப்புளித்துநின்றதோர்
வெம்புவெந்தீயிடைப்பட்டதொத்தாளவிரைசெய்கோதையே.

இ - ள். முருகன்வேலையுங் காமனம்பையும்வென்ற கண்ணினையுடைய முகத் தினளாகிய கோதை, பூத்தலான் மணந்தங்கித் தேனைக்கொப்புளித்து நின்றதோர் கொம்பு தீயிடைப்பட்ட தொத்தாளென்க. (௧௦௮)

வேறு.

மணிநிறமாமைசாயல்வளைபொடுவண்டுசூழ
மணிநிறப்போர்வையாயவருப்பெறனுனும்விற்றுப்
பணிநலம்புதியதுண்டான்பன்மலாமாலைகொண்டேன்
பிணிநிறப்புறஞ்சொலென்னும்பெருமிஞிறார்ப்பவென்றாள்.

இ - ள். நீலமணிபோலும் மாமையினையும், மென்மையையும், வளையையும், மக ளிர்க்குப் போர்வையாகிய நாணையுங்கொடுத்து எல்லாருந்தாழ்கின்ற என்னலத்தைப் புதுமையையுண்டானது வண்டுசூழுமாலையை, நோயைநிறமாகவுடைய புறஞ்சொ லென்னும் மிஞிறார்ப்பக் கொண்டேனென்றாளென்க. (௧௦௯)

காதலான்காதல்போலவகன்றுநீண்டலர்ந்தவாட்கட்
போதுலாங்கோதைமாதர்புனைந்தலர்தொடுத்தமாலை
யாதலாலலரதாகாதொழியுமேயழுங்கலென்று
மாதுலாமழலைச்செவ்வாய்மடக்கிளிமொழிந்ததன்றே.

இ - ள். நின்கணவனது காதல்போலே அகன்று நீண்டு மலர்ந்த கண்ணையுங் கோதையையுமுடைய மாதரே! இஃது அலரானபுனைந்து தொடுத்த மாலையாதலின், அலரிடத்ததாகாதேபோமோ, இனி வருந்தாதொழியென்று கிளி யாற்றுவித்த தென்க. (௧௧௦)

வேறு

என்னையுள்ளம்பிணித்தென்னலங்கவர்ந்தவீர்ந்தாரினான்
றன்னையானும்பிணிப்பேனெனத்தணமணிச்செப்பினுள்
மன்னுமாலைதொடுத்தவனுக்குய்த்திடெனத்தொழுதுகொண்
டன்னமென்னவொதுங்கிச்சிலம்பார்ப்பச்சென்றணுகினாள்.

இ - ள். என்மனத்தை யிறுகப்பிணித்து என்னலத்தையுங்கொண்ட தாரினான் றன்னை யானும் அங்ஙனம் பிணிப்பேனென்று கருதி, மற்றைநாள் தன்செப்பின்

மாலையை யநங்கவிலாசினி கையிலேகொடுத்துக் கொண்டுபோய் அவனுக்குக்கொடு வென, அவளுந் தொழுது வாங்கிக்கொண்டு சென்று அவனையணுகினாளென்க.(௧௧௧)

அணுகிமுன்னின்றவநங்கவிலாசினியங்கைகூப்பிப்
பிணையனீட்டப்பெருந்தகையஃதேலான்முகநோக்கலுந்
துணையிறோகையென்னங்கைக்குத்தொங்கறொடுப்பாயுநீ
மணிசெய்மென்றோண்மருந்துநீயாருயிருநீயேயென்றாள்.

இ-ள். அங்ஙனமணுகி முன்னேநின்ற அநங்கவிலாசினி தொழுது மாலையைக்கொடுக்க, அதனை யவன்வாங்காதே அவளைப்பார்த்தவளவிலே, அவளும் ஒப்பில்லாதமயிலாகிய என்னங்கைக்குத தொங்கல் தொடுப்பாயுநீயே, தோண்மெலிவுக்கு மருந்தும் நீயே; உயிருநீயே; ஆதலின், இதனை வாங்கிக்கொள்ளென்றாளென்க.(௧௧௨)

வேறு

மன்னர்கோயிலுறைவார்பொறிசெறித்தமாண்பினரே
யென்னவஞ்சினீயென்றவணோக்கநாட்கஃதன்றுகோதா
பின்னகொள்கையெற்கேலாதென்னவிலங்கெயிற்றினா
ளன்னமன்னநடையினாடான்வருந்துமெனநேர்ந்தான்.

இ-ள். அதுகேட்டவன் அரசர்கோயிலிற்றங்குவார் ஐம்பொறியையு மடக்குவாரே; இதுதகாதுகாணென்றானாக, நீயஞ்சினாயென்று அவனையிகழ்ந்தவளுக்கு, அவன் பின்னும் கோதாய்! அதுவன்று; ஆசிரியனாய் நிற்கின்ற தன்மையேனுக்கு இதுபொருந்தாதுகாணென்றானாக, அவளுங் கனகமாலை யிறந்துபடும் இதுவாங்காதொழியினென்றுகூற, அதற்கஞ்சி நேர்ந்தானென்க. (௧௧௩)

நல்கமார்ந்தகொழுந்தாமரையன்னவண்கைநீட்டி
யொல்லையேற்றானிஃதூழ்வினையாலுள்ளஞ்சுடுமாலென்ன
விலைகொள்பைம்பூணிளமுலையாள்போகிக்கனகமாலை
மெல்லியவெம்பிநைகின்றாளுய்யும்வகைதொடங்கினாள்.

இ-ள். அங்ஙனநேர்ந்து தாமரையன்ன கையைநீட்டி மாலையைவாங்கினான்; வாங்கி உழுவலன்பாலே இதுதான் என்னுள்ளத்தைச் சுடாநின்றதென்றானாக, அது கேட்டபின், அநங்கவிலாசினிபோய, கனகமாலைவருந்துகின்றவள் பிழைக்குமுபாயத்தைச் செய்யத்தொடங்கினாளென்க. (௧௧௪)

நீர்செய்காந்தமணிகூந்தளம்பாவைநீண்டழகிய
வோர்செய்சாந்திற்கழுநீர்விரையொழிபூக்கள்கோத்த
வார்செய்தண்டாமரைவளையமைவரையின்வெள்ளருவிநீர்
சீர்செய்கோமகளைச்சேர்த்தினள்சீதஞ்செய்யாதுடைந்தனவே.

இ-ள். சாந்தோடே சந்திரகாந்தக்கல்லையும், நீண்டு அழகிய கூந்தளம்பாவையையும், கழுநீரையும், ஒழிந்தபூக்களையும், கோத்த நெடிய தாமரைவளையத்தையும், அருவி நீரையும் கோமகளையணிவித்தாள்; அவை குளிர்ச்சிசெய்யாதே கொதித்தனவென்க.

கூந்தளம்பாவை - பூவிசேடம். (௧௧௫)

பல்வத்தங்கட்பிறந்துபனிபெயர்க்குந்தண் ணூற்றதாகி
யெவ்வமன்னர்படவுலகம்விற்குமருமணியினைச்
செவ்வனூலிற்சித்திரிக்கப்பட்டதனைச்சேர்த்திப்பின்னு
மவ்வாறுங்குழலாட்குமற்றுமிவைகளுடினுள்.

ஊறு - பரிசம்.

இ - ள். கடலிலேபிறந்து பனியைக்கெடுக்கும் குளிர்ந்த ஊற்றையுடையதாய் மன்னர் வருத்தமுறும்படி உலகைவிற்குமுத்தை நூலிற்கோக்கப்பட்டதனைப் பின்னு மணிந்து குழலாட்கு வேறும் இப்பரிகாரங்களை நாடினுளென்க. (கககூ)

களிசெய்கோசிகநீர்விழக் கடிமாலைமேற்றொடர்ந்துகீழ்
நளிசெய்தண்பூஞ்சலசயனமாக்கிநன்னீர்பிலிற்றும்வாய்
குளிர்கொள்சாந்தாற்றிபொன்னாலவட்டங்கொண்டேந்திவீசச்
சளிகொள்சந்தக்கொழுஞ்சாந்தமாகமுழுதுமெழுகினும்.

இ - ள். மேலேகட்டி நீரைத்தாங்கிநின்ற கஞ்சிதோய்த்த கோசிகப்பட்டின்நீர் மாலையாலே வந்துவிழும்படி மாலையைச் சூழக்கட்டிக் கீழேசெறிவுசெய்த பூவையுடைய நீரிலே படுக்கையாக்கி நீரைப்பிலிற்றும்வாயையுடைய சாந்தாற்றி ஆலவட்டமென்கின்றவற்றை ஏந்திக்கொண்டு வீசாநிற்க, குளிர்கொண்ட சந்தனக்குழம்பைப் பூசினுளென்க. (ககள)

கொம்மைவெம்முலையிற்சாந்தங்குளிர்செயாதாவிவாட்ட
வம்மென்மாலைமுகங்கரியநீர்துளும்பநின்றுநீடி
வெம்மைமிக்கதுவீரன்றொடுத்தவிளங்குமாலை
பொம்மலோதிக்குத்தானேதுணையாம்புணையாயிறறே.

இ - ள். இளையமுலையிற் சந்தனங் கொதித்து உயிரைக்கெடுக்க, சுநதினமாலை கருக, கீழ்நின்றநீர் வெம்மையாற்கொதித்தெழ நீட்டித்துநின்று வெம்மைமிக்கது; அப்பொழுது வீரன்கட்டினமாலைதானே ஓதிக்குத் துணையாவதோர் தெப்பமாயிற றென்க. (ககஅ)

வாசநீலங்கழுநீர்குவளைபடைசாற்றிவந்
தோசனைக்கணுடையுநெடுங்கடகனகமாலை
தாசிதூதாகத்தாமம்புணையாகச்செல்லுநாளுட
காசில்கல்விக்கடலைநகரைகண்டார்காளைமாரே

இ - ள். நீலப்பூமுதலியன போராகூறிவந்து ஓரோசனைநீளத்தே யுடையும் நெடுங்கண்ணையுடைய கனகமாலை, தனக்கு அநங்கவிலாசினிதூதாக, மாலைதெப்பமாக நடக்கின்றநாளிலே, விசயன்முதலாயினர் கல்விக்கடலைக் கரைகண்டாரென்க ()

வேறு

பொருசரஞ்சலாகைவெய்யபுகன்றனர்துரக்குமாறும்
வருகணைவிலக்குமாறும்வாரமர்நீந்துமாறுங்
கருவியுட்கரக்குமாறுங்கணைபுறங்காணுமாறும்
விரியமற்றவர்க்குக்காட்டவிற்றிருந்தவருங்கற்றார்.

இ - ள். வெய்யசரத்தையும் இருப்புநாராசத்தையும் விரும்பியெய்யுமாறும், தம் மேல்வருமம்பை அம்பாலேவிலக்குமாறும், அமரிலே கொள்ளுநிலமறிந்துகொள்ளு மாறும், எய்தாற் கருவியாலேமறைத்துச் சேமஞ்செய்யுமாறும், சேர்ந்தாற் பகைவர் கணை புறமாக்கித் தங்கணைசெலுத்துமாறும் அவர்க்குவிரியக்காட்ட, அவரும் வருத்த மின்றிக் கற்றாரென்க.

எனவே "தொடையும் விலக்குஞ் செலவுஞ் சேமமுந் - தவிர்த்துவினை செயனு மெனவை வினையாம்" இவற்றை வடநூலார்பஞ்சகிருத்தியமென்பர்; இவை தலைமை பற்றி வில்லையேகூறினவேனும் படைக்கலங்கட்கெல்லாம் பொது. (கஉ0)

வேலுடைத்தடக்கையார்கள்வேழமேற்சென்றபோழ்திற்
காலிடைக்கரக்குமாறுங்கையிடைத்திரியுமாறும்
வாலிடைமறியுமாறுமருப்பிடைக்குளிக்குமாறு
நூலிடைகிடந்தவாறேநுனித்தவன்கொடுக்கக்கொண்டார்.

இ - ள். தம்மேலே வேழஞ்சென்றபொழுது அதன்காலிடையிலேபுகுந்து மறை யும்படியையும், அது கையாலேவளைத்தபொழுது அதன்கைக்கு நடுவே யுடம்பு பிறழும்படியையும், அது தாலவட்டத்தாலே வீசினால் அதுபடாதபடி போய் அதன் காலிடையிற்புகுதும்படியையும், அது கோறற்கிறங்கினாற் கொம்பிரண்டிற்குநடுவே யாம்படியையுங் கூரிதாகக்கற்றவன், அத்தொழிலை அந்நூலிற்கிடந்தபடியேகற்பிக்க, அத்தடக்கையார்களுங் கற்றாரென்க.

இது தனித்து யானையுடன் போர்செய்யுமாறுகூறிற்று. (கஉக)

கொடிநெடுந்தேரின்போருங்குஞ்சரங்குறித்தபோருங்
கடுநடைப்புரவிப்போருங்கரப்பறக்கற்றுமுற்றி
யிடனறிந்திலங்கும்வைவாளிருஞ்சிலைகுந்தமூன்று
முடனறிந்தும்பரார்க்குமுணைப்பருந்தகையரானார்.

இ - ள். தேரால் பொரக்கருதின போரையும், குஞ்சரத்தாற் பொரக்கருதின போரையும், புரவியாற்பொரக்கருதின போரையும் வெளியாகக்கற்றுத் தழும்பி யிருந்து, இவ்வூர்திகளிலிருந்தாலொன்றற்கொன்றுமாறறிந்து வினைசெய்யுமிடமறிந்து, செலுத்தும்பொழுது இலங்கும வில்லும், எறிகோலும், வாளுமென்கின்ற மூன்றை யுஞ் சேரவறிந்து, மேலாயநிலத்திறத்தேவர்க்கும்புகழ்தற்கரிய தகையராயினாரென்க.()

தானையுளன்றிநின்றதனியிடமொற்றிமன்னா
தானைமேற்சென்றபோழ்தும்வென்றியிற்றளர்தலின்றித்
தானையையுடைக்கும்வெம்போர்தந்தருக்கினாமைந்தரொன்று
தானைசூழ்மன்னற்குய்த்தார்மன்னனுந்தருகவென்றான்.

இ - ள். தாம் படையினுளன்றித் தனியேநின்றவிடத்தையெய்த்துப் பகைவர் படை மேற்சென்றகாலத்தும் வெற்றியிற்றளருந்தன்மையின்றி அப்படையைக்கெடுக் கும் போர்த்தொழிலிலே பிள்ளைகள் மிகுத்தாரென்று தடமித்தனுக்குச்சொன்னார்; அவனும் யாங்காணும்படி அவரைக் கொணர்கவென்றானென்க. (கஉஙு)

கலைகளும் வடிவுமுத்லியனவும் உடையவனொருவனென்றலின், இவனேயா யிற்று. (௧௩௦)

வாருலாமுலையினாட்கும்வரிசிலைத்தடக்கையாற்குஞ்
சீருலாங்கோலஞ்செய்தார்செப்பினார்வதுவைநன்னாட்
பாரெலாமறியநின்றுபடாமுரசார்ப்பத்தீவேட்
டேருலாங்கோதையின்பத்திளநலம்பருகுகின்றான்.

இ - ள். முலையினாட்குந் தடக்கையாற்கும மணஞ்செய்யு நாட் செப்பினார்; செப்பி மணக்கோலஞ்செய்தார்; செய்தபின்பு ஒலியவியா முரசார்ப்பத் தீயிலே யாகுதிபண்ணி அவன் அக்கோதைநலத்தைப் பருகாநின்றானென்க. (௧௩௧)

மோட்டிளங்குரும்பையன்னமுலைக்கடாக்களிறுமுத்தஞ்
சூட்டியவோடைபொங்கநாணெனுந்தோட்டிமாற்றி
யாட்டியசாந்தமென்னுமுகபடாமழித்துவெம்போ
ரோட்டறவோட்டிப்பைந்தாருழக்கியிட்டுவந்தவன்றே.

பெரிய இளங்குரும்பை வடிவிற்குவமை.

இ - ள். அவன் பருகுகின்றபொழுது அவன்முலையாகியயானைகள், சூட்டிய முத்தமாலையாகிய பட்டமசையாநிற்க நாணென்னுந் தோட்டியைக்கெடுத்துச் சாந்த மென்னு முகபடாத்தையழித்து விரும்பினமுயக்கத்தில் உறுதலிடமில்லையென்னும் படி மார்பிடமெங்குமுறுவித்து மாலையையுழக்கிப்போகட்டு மகிழ்ந்தனவென்க.

கொடியபோரை யினிக்கேடில்லையென்னும்படி கெடுத்துத் தாசியையுழக்கி யென்றுங் கொள்க. (௧௩௨)

ஒண்மணிக்குழைவில்வீசவொளிர்ந்துபொன்னோலைமின்ன
வண்ணமேகலைகளார்ப்பவான்சிலம்பொலிப்பமுத்துங்
கண்ணியும்பசும்பொனாணுங்கதிர்முலைபுடைப்பக்காம
ரண்ணலங்குமரன்றன்னோடாயிழைபாடினாளே.

குமரனோடு ஆயிழையாடினாளெனவே * ஒருவினையொடுச்சொலுயர்பின்வழித்த தாய் இருவருமாடினாரென்பதுபடநின்றது. எனவே யவன் மேகலையார்ப்பச் சிலம் பொலிப்பவாடினானென்றும், அவள்வீச மின்னப்புடைப்பவாடினாளென்றுங்கொள்க, இவன்காட்டக் கண்டாளெனவேண்டுதலின். (௧௩௩)

மூசுதேன்வாரியல்குற்பட்டபின்முலைகளென்னு
மாசறுகந்தின்மென்றோண்மணித்தொடர்கொளுந்திவாடக
ஞாசறுவயிரத்தோட்டிநுதலணிந்தமுத்தசெவ்வாய்
காசறுகவளமாகக்களிறுகோட்பட்டதன்றே.

போகாமல்வளைத்தலிற் கண்தோட்டியாயிற்று. அதற்கேற்ப நுதலணிந்தென்றா. கூடனிமிராமைக்கு வயிரமென்றார்.

---

* ஒருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே. இது தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமைமயங்கியல், அ.

இ - ள். சீவகனாகியகளிறு, செவ்வாய்கவளமாக வல்குலாகியகூடத்தே அகப்பட்டபின்பு, தன்முலைகளென்னுங் கம்பத்திலே தோளாகியசங்கிலியாலேபூட்டிக் கண்ணாகியதோட்டியை நுதலிலேயணிந்து இங்ஙனந் தப்பாமற் பிணிக்கப்பட்டதென்க. (௧௯௪)

ஒப்பிணை தனக்கிலாதானுறுவரையகலமூழ்கிச்
செப்பிணையனையசெங்கேழ்வனமுலைபொருதுசேப்பக்
கற்பகமரத்தைப்புல்லிக்கைவிடாதொழிந்துகாமத
துப்புரவுமிழுங்காமவல்லியின்றோற்றமொத்தாள்.

இ - ள். தனக்கு இணைக்குமொப்பிலாதானகலத்தே தன்முலைகள் சிவக்கும்படி பொருதுமூழ்கப்பட்டுத் தான் வல்லியின்றோற்றத்தையொத்தாளென்க.

கற்பகத்தைக் கைவிடாதேபுல்லித தங்கி அதற்குத் துப்புரவைக்கொடுப்பதோர் வல்லி - இல்பொருளுவமை. (௧௯௫)

காய்வுறுவேட்கைதன்னாற்கங்குலும்பகலும்விள்ளான்
வேய்வெறுத்தமைந்ததோளாள்விழுத்திணையமுதமென்று
சேய்நலங்கடந்தசெல்வன்றிருநலந்தெளித்திட்டாற்ற
வாய்விடாள்பருகியிட்டாண்மடக்கிள்ளைமருட்டுஞ்சொல்லாள்.

வேய்தாஞெவ்வாமையான், வெறுத்துமாறினதோள்.

இ - ள். செல்வன் எரிகின்றகாமத்தாலே விள்ளானுயத் தோளானை யமிர்தென்றுகருதி அவளுடலாற் கலங்காதபடி நலத்தைத்தேற்றி ஆற்றுவித்தலாலே அவள் நீங்காமற் பருகினாளென்க. (௧௯௬)

திரையிடைக்கொண்டவின்னீரமுதுயிர்பெற்றதென்னு
முறையுடைக்கோதைமாதரொளிநலநுகர்ந்துநாளும்
வரையுடைமார்பனங்குவைகினனென்பமாதோ
கரைகடலனையதானைநகாவலன்காதலானே.

உயிர - சீவகன்.

இ - ள். வரைதோற்கின்றமார்பன், அமிர்துதனக்கோருயிரைப்பெற்றதென்று உலகங்கூறுமுறையையிப்பொழுதுடையமாதரது நலத்தை நாளுநுகர்ந்து அரசனது காதலாலே அவ்விடத்தே சிலநாள் தங்கினனென்க. (௧௯௭)

வாளினன்மிடைந்தநண்ணார்வருமுலைத்தடத்துள்வைகித
தோளினன்மிடைந்துபுல்லித்தொண்டைவாயமுதமாந்திக்
காளைசெல்கின்றநாளுட்கட்டியங்காரன்மூதூர்
மீளிவேற்குரிசிற்குற்றோக்குற்றதுவிளம்பலுற்றேன்.

மிடைந்து - மிடைய.

இ - ள். காளை முறைகூறியவாறே வாளாலேபோர்செய்யப்பட்ட கண்ணாளது முலைத்தடத்தேவைகிப் புல்லி மாந்தி நடக்கின்றநாளிலே, இராசமாபுரத்திலிருக்கின்ற அக்காளைக்குற்றோர்க்கு உற்றகாரியத்தைக் கூறலுற்றேனென்றாரென்க. ()

வெண்மதியிழந்தமீன்போல்விடலைக்குத்தம்பிமாழாந்
தொண்மதிச்சூழ்ச்சிமிக்கானுள்ளுழியுணர்தறேற்றான்
புண்மதித்துடைந்தபோதுபொழிந்துமட்டொழுகுநன்னாட்
டுண்மதிவருந்தநாடியொளிநகரெய்தினானே.

இ - ள். சீவகற்கிளையான் மதியையிழந்த உரோகிணிபோலேமயங்கி மதியாற் சூழ்ச்சிமிக்கானிருப்பிடமறியானாய் நாட்டின்கணனே யறிவுவருந்தத்தேடிப் பின்பு குணமாலையகத்தைச் சேர்ந்தானென்க. (௧௯௯)

வெள்ளிவெண்மலைக்குவேந்தனொருமகள்வேற்கட்பாவை
யொள்ளிழையவளைக்கேட்பானுறவலிசெல்லுமாங்கண்
வள்ளிதழ்க்கோதைதானேயிட்டதோர்வண்ணந்தன்னைக்
கொள்ளாத்தான்முரலலுற்றுக்கோலமையாழ்கொண்டாள்.

இ - ள். ஆண்டுக்காணாதே, சுலுழவேகன்மகள் பாவை ஒள்ளிழை யவளைக் கேட்டற்கு அவன்செல்கின்ற வளவிலே, அக்கோதை தானே புணர்த்ததோர் புணர்ப்புவிசேடத்தைத் தானேமனங்கொள்ளப் பாடலுற்று வீணையைக் கைக் கொண்டாளென்க. (௨௦௦)

ஆடகச்செம்பொனணியாணெய்யார்ந்தனையநின்கோய்
மாடகநொண்டுகொண்டுமாதத்தைந்திறையவீக்கிச்
சூடகமணிந்தமுனைகைதொகுவிரல்சிவப்பவெற்றித்
தோடலர்கோதைகீதந்துணிவினிற்பாடுகின்றாள்.

மாடகம் - பாலிகைவடிவான வீக்குங்கருவி.

இ - ள். கோதை பொன்னணியிற்கட்டின கெய்யொழுகினாற்போன்ற நரம்பினை மாடகத்தாலேமுறுக்கிக்கொண்டு நிறையவீக்கச் குயிந்தவிரல் சிவக்கும்படி தெறித்துப்பார்த்துக் கீதத்தைத் தெளிவோடே பாடாநின்றாளென்க. (௨௦௧)

வேறு.

௧. இறுமருங்குல்போதணியிற் கிளையன்னுந்துகைகயி
னறுமலர்காசிக்குவார்நண்ணார்துறந்தா
ரண்ணார்துறப்பப்பனிவளையுந்தோடுறப்பக்
கண்ணோவாமுத்துறைப்பத்தோழிகழிவேனோ.

இக்கவிமுதல நான்குமொருதொடர்

தோழி! அவர்துறப்ப, வளையுந் துறப்ப, கண்மாறாதேயழ, இங்ஙனங் கழிவேனோ? கழியாததொரு நீருமமருமோவென்றாளென்க. ஒகாரம் வினா. ஒழிந்தவற்றிற்குமிவ்வாறுகூறுக. (௨௦௨)

௨. பூமாலைநடிநீர்பொறையாற்றாநுண்மருங்கு
லேமாராவென்றினைவாரெண்ணார்துறந்தா
ரெண்ணார்துறப்பவினைவளையுந்தோடுறப்ப
மண்ணாவேற்கண்டுயிலாதோழிமருள்வேனோ.

முலைப்பாரத்தைச் சுமத்தலாற்ருதமருங்குன் மாலைசூடின் முறியும். மண்ணுதல் - மஞ்சனமாடுதல்; கடைதலுமாம். துயிலாவாவென்க. (௧௪௩)

௩. வண்டூதவம்மருங்குனேமென்றுபூமாலை
கொண்டோச்சுநாதலார்கூடார்துறந்தார்
கூடாதவர்துறப்பக்கோல்வளையுந்தோடுறப்பத்
தோடார்பூங்கண்டுயிலாதோழிதுயர்வேனே.

வண்டூத - வண்டு இயல்பான மணத்தையூத. ஒப்பனைக்குப் பூவுமாலையும் வந்தவளவிலே, பூவை யவள்கையினின்றுஞ்சிந்தி மாலையை யவள்சூடாதபடி தன்கைக் கொண்டு, இஃதெடுத்திலேனாயின் மருங்குன்முறியுமென்றுகூறி, படிநதவண்டை அதனோனோட்டினனென்றுணர்க. பா ற்கூறியவேயாம். (௧௪௪)

வேறு.

௪. ஊன்றகர்த்தனையபோன்றுழுடெரிமுளைபபோன்றுந்
தோன்றுபூவிலவத்தங்கட்டொகையணிலனையபைங்காய்
கான்றமென்பஞ்சியார்ந்தமெல்லணையாழ்கைநீக்கித்
தேன்மயங்கிணர்பெய்கோதைசிந்தையினீட்டினாளே.

தகாக்கப்பட்டபூவையொத்த வூன்போன்றும், எரி பலவாய்முளைப்பனபோன்றுந் தோன்றும் பூவையுடைய இலவத்திடத்து அணிலனைய காய்கான்றபஞ்சென்க.

இ - ள். அங்ஙனம்பாடுகின்றவள் கழிவேனே? மருள்வேனே? துயர்வேனே? என்று பாடி யாழைவைத்து அணையிலே சாய்ந்து வருத்தத்திலே நீட்டித்தாளென்க. (௧௪௫)

வேறு.

நுண்ணணியவரியொடுதிரண்டுநோக்குநா
கண்மனங்கவற்றியகாமாதொண்டைவா
யண்ணலைநினைநதுவெய்துயிர்பபவாய்நலம்
வண்ணத்தின்மழுங்கிவாட்கண்ணிவாடினாள்.

நுண்ணியவரியோடே திரண்டு விருப்பமருவினவாய்.

இ - ள். வாட்கண்ணி நோக்குநா கண்மனங்கவற்றியவண்ணலை அங்ஙனநினைந்து வெய்துயிர்த்தலாலே வாயினதாய்நலம் பழையவண்ணத்தினின்றுநீங்கப்பட்டு மேனியும் வாடினாளென்க (௧௪௬)

மின்றவழ்மணிவரைமாலைமார்பனைப்
பொன்றவழிளமுலைபொருதுபுல்லுநா
ளென்றுகொலெனநினைந்திருந்தசெவ்வியுட்
சென்றனன்சீவகற்கிளையசெல்வனே.

பொருது - பொர.

இ - ள். அங்ஙனம்வாடினவள் வரைபோலுமார்பனை இப்பசலைப்பரந்த முலைகள்

புல்லுநாள் என்றுதானென்று சென்றநாளொழிந்தநாளைத் தன்ஞானத்தால் நினைந்திருந்தகாலத்திலே நந்தட்டன் சென்றானென்க. (கசஎ)

வேறு.

ஐவிலினகலநின்றாங்கடிதொழுதிறைஞ்சினற்கு
மைவிலைபெற்றகண்ணாண்மைந்தனை மருண்டுநோக்கிக்
கைவிலுங்கணையுமில்லாக்காமன்போந்திருக்கவென்ன
மொய்வெல்லுங்குருதிவேலான்மூவிற்கணிறைஞ்சிநின்றான்.

இ - ள். ஐந்துவிற்கிடைநீளத்தேநின்று அவ்விடத்தேவணங்கிக் கவிழ்ந்துநின்றவனுக்கு மை விலைபெறுதற்குக் காரணமானகண்ணாள் அவனை மருண்டுபார்த்து வேலான்! இங்ஙனேபோந்திருக்கவென்றுகூற, அக்காமனும் பின்னை மூன்றுவிற்கிடைநீளத்தேவந்து வணங்கி நின்றானென்க.

மொய்-பகை. யிறைஞ்சினாற்குக்கூறவென்க. அவன்கேட்டதற்குமருண்டாள். வேலான்போந்திருக்கவென்று அவள்கூறக காமனிறைஞ்சிநின்றானென்று தேவர் கூற்றாக்குக. இனிப் பிள்ளையை யுவந்துகூறுமாறே கூறினாளென்று அவள்கூறலுமாம். (கசஅ)

திங்கள்வாண்முகமுநோகாள்றிருமுலைத்தடமுநோக்கா
ணங்கதிர்க்கலாபமின்னுமணியல்குறபரப்புநோக்கான்
செங்கயற்கண்ணினாடன்சீறடிச்சிலம்புநோக்கி
யெங்குளாரடிகளென்னாவின்னணமியம்பினானே.

இ - ள். கயற்கண்ணினாளுடைய முன்பு திங்களையொக்குமுகத்தில் இப்பொழுதுநிகழ்கின்ற வாட்டத்தையுநோக்கானாய், முன்புநன்றாகியமுலை இப்பொழுது பசந்தபசப்பையுநோக்கானாய், முன்பு கலாபமின்னுமல்குலிலாடை மாசுண்டதன்மையையுநோககானாய்த் தானிறைஞ்சிநிற்றலின் அடியிற்சிலம்பொன்றையுமேநோக்கி, எங்குளாரடிகளென்று இப்படியொருவார்த்தைகூறினானென்க.

உம்மைகள் வருத்தத்தின்சிறப்புணர்த்தின. அவள்வாடியிருந்த வருத்தமிகுதியைத் தானுணராதே அவட்குப்பொருந்தாததோர் மொழி மேற்கூறுகின்றானென்பார், இன்னணமியம்பினானென்றார் (கசகூ)

பொறிகுலாய்க்கிடந்தமார்பிற்புண்ணியன்பொன்றினானேல்
வெறிகுலாய்க்கிடந்தமாலைவெள்வளைமுத்தநீக்கி
நெறியினானோற்றலொன்றோநீளெரிபுகுதலொன்றோ
வறியலென்கொழுநன்மாய்ந்தாலணிசுமந்திருப்பதென்றான்.

பொறி - மூன்றுவரை.

இ - ள். புண்ணியன்பொன்றிவிட்டானாயின், நீ நோற்றலொருகாரியம்; அஃதன்றிஎரியிலேபுகுதலொருகாரியம்; இவ்விரண்டுமன்றிக் கணவனிறந்தால் அணிசுமந்திருப்பது யான்கேட்டறியேனென்றானென்க. (கரு0)

காய்தழல்கவரப்பட்டகற்பகமரத்திற்கன்றி
யாய்கழற்குரிசில்வாடியற்புத்தியழலுணிற்ப

வாய்மொழிந்துரைக்கலுற்றாள்வளைகுழற்கற்றைவண்டார்த்
தோய்பிழிதுளிக்குங்கண்ணிச்சுரும்புசூழ்கொம்பனாளே.

இ - ள். அங்ஙனங்கூறிக் குரிசில் தீமேய்ந்தகற்பகம்போலே யன்பாகிய தீயின் வெம்மையிலே வாடிக் கன்றிநின்றானாக, அதனைக்கண்டு பண்ணியகுழற்பற்றத்தை யும, வளவியதாரினையும், செறிந்த மதுவைத்துளிக்குங் கண்ணியினையுமுடையதோர் கொம்பனாள், முற்பட அவன் மறைந்து வேற்றுருக்கொண்டிருக்கின்றபடியைக் கூறி விட்டுப் பின் செய்திகூறுதலுற்றாளென்க. (௧௫௧)

மதுமுகத்தலர்ந்தகோதைமாற்றமைந்தற்குரைப்பாள்
கொதிமுகக்குருதிவைவேற்குரிசிலோநம்மையுள்ளான்
விதிமுகமணங்களெய்திவீற்றிருந்தின்பமுய்ப்ப
மதிமுகமறியுநாமேவாடுவதென்னையென்றாள்.

இ - ள். கோதை நந்தட்டனுக்கு வார்த்தைகூறுகின்றவள், குரிசிலோ நம்மை நினையானாய் ஊழின்முகத்தாலே யுளவாய மணங்களைச்செய்து இன்பத்தைநிகழ்த்த, மதிமுகமென்னும் விஞ்சையையறிந்திருக்கின்ற நாமே யிதற்குப்புலப்பதன்றி அவற்கு ஏதமுண்டாமென்று வாடுவது என்னென்றாளென்க.

நாமெனத் தன்னையுயர்த்துக்கூறினாள். இதனால் அவன்செய்திகூறினாள் (௧௫௨)

வேண்டியதெமக்குநேரின்வில்வலாய்நுமையனைக்
காண்டியெனவுரைப்பக்காளையெழுமையுமடிமைநேர
மாண்டதோர்விஞ்சையோதிமதிமுகந்தைவந்திட்டா
னீண்டதுபெரிதுமன்றிநினைத்துழிவிளக்கிற்றன்றே.

இ - ள். வில்வல்லாய்! யாம்வேண்டிய அடிமைத்தொழிலை நீயெமக்குநே ரின நும்முடையதமையனைக் காண்பையென்று தத்தை யசதியாடிக்கூற, அவனும் இம்மையேயன்றி யெழுமையும் அடிமையாகக்கடவேனென்று நேர்ந்தானாக, அவன் ஒருவிஞ்சையையோதித் தன்முகத்தைத் தடவினான்; அவ்விஞ்சை அவனிருந்தவிடத் தை இவனுக்கு விளக்கிற்றென்க.

நீண்டதென்றது - இவனுக்கு மிகவும் அரியகாட்சியை. அரிதன்றாகவிளக்கிற் றென்றவாறு. பெருமை - அருமை. இனித் தூரியவூர் தூரிதன்றாகவென்றலுமாம். ()

பொற்புடையமளியங்கட்பூவணைப்பள்ளிமேலாற்
கற்பகமாலைவேய்ந்துகருங்குழற்கைசெய்வானை
முற்படக்கண்டுநோக்கிமுறுவல்கொண்முகத்தனாகி
விற்படைநிமிர்ந்ததோளான்றொழுதுமெய்குளிர்ந்துநின்றான்.

அழகிய கள்ளையுடைய பூவணைப்பள்ளியாகிய பொற்புடையமளியென விசே டித்துநின்ற இருபெயரொட்டு. கற்பகம்: அரசர் தமதாணையால் இவ்வுலகிற் கொணர்ந்தகற்பகந் தேவரதுசாபத்தாற் றன்னிலையன்றிப் பூவளவே யுண்டாயிற் றென்க. மந்தாரமும் அவ்வாறும்; கவிரமும் அவ்வாறும். இனி யுத்தரகுருவிலுள்ள கற்பகம் ஈண்டுக்கொணர்ந்தாரென்றுமாம். கனகமாலைக்குக் கற்பகமாலையென்றொரு பெயருமாம்.

இ-ள். அமளிமேலேயிருந்து வேய்ந்து கைசெய்வானை நந்தட்டன் எதிர் முகமாகக்கண்டு மகிழ்ந்தமுகத்தனாய்த் தொழுது குளிர்ந்துநின்றானென்க.

நோக்கியென்றது - தத்தை அவன் வேற்றுருக்கொண்டிருப்பானென்றுகூறிய வதனை மனத்தானோக்கியென்றவாறு. (கருச)

வேறு.

செய்தவிஞ்சைசையைத்தேமொழிமாற்றலு
மையனெஞ்சொடுவணடிமிர்தாரினான்
பொய்யதன்மையிற்பூங்கழலானடிக்
கெய்துகேனருளாயென்றிறைஞ்சினான்

அடிக்கு - உருபுமயக்கம்

இ-ள். தேமொழி தான்செய்தவிஞ்சையை மாற்றினவளவிலே, தாரினான், "வீற்றிருந்தின்பமுய்ப்ப" என்றது பொய்யன்மையாலே, யான சீவகனடியைச்சாரவேன்; அதற்கருளென்று மையல்கெஞ்சினோடு இறைஞ்சினனென்க. (கருரு)

மதுக்கைமாலையும்வண்டிமிர்சாந்தும்
புதுகக்கச்சாந்தபொன்வாளுஞ்சுரிகையும்
கதுப்பினாமுங்காமர்கலங்களும்
பதிக்கட்டம்மெனப்பாவையுமேவினாள்

கையியுடையமதுமாலை மயிருக்கினியபூகு.

இ-ள். பாவையும் மாலைமுதலியவற்றை யானிருக்கின்றவிடத்தே தாருங்களென்று ஏவல்செய்வார்க்குக்கூறி அவர்கொண்டுவந்தவற்றை நீயணியென்று இவனை யேவினாளென்க. (கருக)

மணியின்மேற்புறம்போர்த்தன்னமாக்கதிர்
துணியவீசுந்துளங்கொளிமேனியன
பணியிற்பல்கலந்தாங்குபுசென்றபின்
னணிசெய்கோதையங்காமினியோதினாள்.

இ-ள். பளிக்குமணியின்மேலே இளையகதிரைப்போர்த்தன்னவாகத் தத்தை யதுபணியாலே தன் பழையவடிவிற்குப்புறத்தே யிருண்டணியவீசும் ஒளிமேனியை யுடையனாய்ச கலங்களையும் ஒழிந்தவற்றையுந் தாங்கிச் சென்றபின்பு, அவள் அழகிய வாகாசகாமினியை யோதினாளென்க

கலமெனவே படைக்கலங்களுமடங்கின. பணியென்றது - இப்பொழுது சீவகன் கொண்டுநிற்கிற நிறமும் வடிவும் அவனைக்காணுமளவும் இவனுக்குநிற்கவென்று நிருமித்ததனை. இங்ஙனநிருமித்தது, நந்தட்டனவடிவுடனே கொண்டுபோய் அரசன் கோயிலில் * ஆடவர்குறுகாவருங்கடிவரைப்பினுள்ளே வைத்தாற சீவகனறிவதற்கு

* நெடுநல்வாடை:—பீடுகெழு சிறப்பிற் பெருந்தகை யல்ல - தாடவர் குறுகா வருங்கடி வரைப்பின். பெருந்தகை=பாண்டியன்.

முன்னே தீங்குபிறக்குமென்றுகருதியும், புறமபேவிட்டாற் சீவகனென்னும்பெயா வழங்காமல் அபபொருட்டுருவதோாபெயா ஆண்டு வழங்குகின்றமையின் இவற்கு அறிந்துகோயிலுட்சேறலரிதென்றுகருதியுமென்றுணாக அஃது "அந்நாட்டவ்வூரப் பெயரல்லாப்பெயர்சொன்னான்" என்பதனானுணாக. இதனானே சுதஞ்சணனைநீங்கின பின்பு தன்னைமறைத்தற்கு வடிவுமபெயரும் வேறாகவேநிகழ்த்துகின்றானென்ப தூஉம் பெற்றாம். வடிவுமறையாக்கால் இவைமறைத்தநனாற் பயனின்றாம். இவ்விலம பகங்களிற்சீவகனென்றபெயா தேவர்கூற்று பொருளானாசகுமிடத்தும அப்பெயரே கூறிப் பொருளுணாக்கவேண்டுதலின் வந்தது. அந்நிலத்தாா அபபெயரறியாரென் றுணாக. இனி இவ்வாறன்றி யாசாதுலத்திலும வணிகாகுலத்திலும் பிறந்தவாகட்குச் சிறிதுவடிவொப்பன்றி ஒருவடிவேயென்றுமேற்கூறுதல பொருந்தாது. அது தே வாக்குக்கருத்தாயின், ஈரொடன்றிய பிறாணடுமிருவாகருமொருவடிவென்றேகூறுவா, அதுகூறாமையானும் இதுவே தேவாகருக்கருத்தென்றுணாக. (௧௫௭)

சாந்திறான்மெழுகித்தடமாயல
ராட்டதாமங்களேற்றியகிற்புகை
யேந்தியிட்டனையாரொடுநீங்கினா
னாந்தொணுறுங்குபகக்கோதையே.

இ - ள் கோதை, அரணையோடு மின்கிடக்கின்றவிடத்தைமெழுகி நாறுதிப் புகைத்து ஆயத்தோடே போந்தாளென்க.

சாந்து - பசித்த. (௧௫௮)

தூமமார்ந்ததுகிலணைபபளளிமே
னாமனம்பியிற்சானைகிடந்தபி
னேமமாபுரத்திட்டேதோாமாதெய்வ
நாமநல்லொளிநந்தனைபென்பவே.

இ - ள் நாநட்டன் காமனைப்போலே யப்பள்ளிமேலேகிடந்தபின்பு ஒருதெய் வமஅவனைக்கொண்டுபோய ஏமமாபுரத்தே அரசன்கோயிலுக்குள்ளே யிட்டுவைத்த தென்க.

நாமம் - அச்சம், உரி-சொல் ஈறுதிரிந்தது. அச்சங்கூறுதலாலும் திருமிதத்தவடி வாயிற்று. (௧௫௯)

மின்னும்பூணும்மிளிாநதிராரமும்
பொன்னும்பூத்ததொாகற்பகப்பொன்மர
மன்னகாளையமாதுயிலேற்றினான்
மன்னும்வெஞ்சுடாமாக்கலிவர்ந்ததே.

இ - ள். விளங்குா பூண்முதலியவற்றைப் பூத்ததோர் கற்பகமரத்தையொத்த காளை துயிலுணர்ந்தான். அவ்வளவிலே, ஞாயிறும் உதயகிரியிலே வந்து பரந்த தென்க. (௧௬௦)

வேறு.

செய்யவாய்நெடியகண்ணாள்செல்கெனவிடுக்கப்பட்ட
வெய்யவாட்டடக்கைவீரனிருந்ததலும்விசயனென்பான்

கையவாஞ்சிலையினானைக்கண்டுவந்தருகுசேர்ந்தான்
பையவாய்ப்பரந்தவல்குற்பாவையர்க்கமிர்தமன்னான்.

கையில்அவாவுதற்குக் காரணமானசிலையினானெனவே காமனும்.

இ - ள். தந்தையாலே போவென்றுவிடப்பட்ட நந்தட்டனிருந்தவளவிலே, அமிர்தமன்னானாகிய விசயனென்பான், அவனைக்கண்டு மகிழ்ந்து அருகேசேர்ந்தா னென்க. (௧௬௧)

தெய்வமேகமழுமேனித்திருவொளிவலந்தமாபி
னையநீயாரையென்றற்கவனுரைகொடாதுவிட்டான்
பையவேபெயர்ந்துபோகிப்பனிமலர்க்கோதைமார்பின்
மையலங்களிறுபோலுமைத்துனற்கிதனைச்சொன்னான்

சீவகன்கொண்ட வடிவுகொண்டு நின்றதொருதெய்வமாதலின், தெய்வமேகமழு மேனியாய் அவற்குத்தோன்றிற்று. வடிவொன்றேயாகவுந் தெய்வத்தன்மையைத் தன்னுணர்வுமிகுதியா னுணர்தலின், இவற்குச் சிறிதுவேறுபாடுமுண்டென்றறிந்து நீயாரையென்றான்.

இ - ள். மேனியையும் மார்பினையுமுடையவையா! நீயாரென்று வினவினாற்கு அவன் மறுமொழி கொடாதேவிட்டான்; அதனாலே யவன் மீண்டுபோய்க் கோதை மார்பினையுடைய மைத்துனனுக்கு இச்செய்தியைக்கூறினானென்க.

வசுந்தரியவற்குக்கூற, அவன்கண்டசெய்தியை யிதனையென்றார். ஐ - அசை இவ்விடத்திருந்து உரைகொடாதிருந்ததுவும், அவன்வெருதபடிகாததுவும் இவன் மேற்றங்கிய தெய்வமென்றுணர்க (௧௬௨)

க. சந்தனக்களியும்பூவுந்தமனியக்குடமுந்துணிருங்
கெந்தநாறகிலுமுத்துங்கிளரொளிவிளக்குமேந்தி
யந்தில்விற்பயிற்றுந்தானமவழிபடவாங்குச்சென்றான்
மந்திரமடந்தையன்னாள்வசுந்தரிவந்துசொன்னாள். (௧௬௩)

உ ஆரகிற்சேக்கைநீங்கிவெறுநிலத்தடிகடாமே
நீரிற்கிடந்ததென்கொலென்றயானினைந்துபோகிச
சேர்துணைகழறச்சென்றேன்செல்வியோடாங்குக்கண்டேன்
போர்பலகடந்தவேலோய்மாயங்கொல்போற்றியென்றாள். (௧௬௪)

௩. கணைகடிகண்ணிசொல்லக்காணியயானுஞ்சென்றேன்
மணியிலங்கொண்பொன்வைவாளோடகமருங்குல்வைத்த
விணைகடிசீயமன்னானிளமையும்வனப்புமேருந்
துணையமைவடிவுஞ்சொல்லினிற்பொறியொற்றிக்கொண்டான்.

௪. நீண்டதோணெடியசெங்கணீலமாய்ச்சுரிந்தகுஞ்சி
பூண்டதோராரமேனிப்பொன்னுரைத்திட்டதொக்கும்

காண்டகுகாதிற்றாழ்ந்தகுண்டலங்குவளைப்பைந்தா
ராண்டகையழகன்யாரகொலறியலனவனையென்றான்.

இவைநான்குமொருதொடர்.

அந்தில் - அசை.

இ - ள். மந்திரமாகிய மடந்தையை யொப்பாளாகிய வசுந்தரி விற்பயிற்றுந் தானத்தை வழிபடுதற்குச் சந்தனக்குழம்புமுதலியவற்றை யேந்தி யவ்விடத்தேசென் றவள் வந்து எனக்கு ஒருவார்த்தைகூறினாள், அவள்கூறினபடி: அடிகடாஞ் சேக் கையைநீங்கி வெறுநிலத்தே நீர்மையோடேகிடந்த காரணமென்னென்று நினைத்துப் போய்க் கனகமாலையைக் சோபித்தற்குச்சென்றேன்; சென்றநான் அவளுடனே யவ் விடத்தேகண்டேன், ஆதலின், வேலோய்! அவர்செய்தி மாயம்போலேயிருந்தது; அந் நிலைமையைப் பாதுகாத்துக்கொள்ளென்று கூறினாள், அவள் அங்ஙனங்கூறுதலின், யானும் அச்செய்தியைக் காண்டற்குச்சென்றேன்; சென்றயான்கண்ட ஒப்பில்லாத சீயமன்னான் றன்னுடைய இளமையையும், வருப்பழகையும், தோற்றப்பொலிவை யும், ஒப்பில்லாதவடிவையுங் கூறில், நின்னுத்தமஇலக்கணத்தை யொற்றிக்கொண் டிருந்தான்; அங்ஙனமிருந்த தோளையுங் கண்ணையுங் குஞ்சியையுங் கல்விலேபொன் னுரைத்ததொக்கும் ஆரமேனியையுங் குண்டலத்தையுமுடைய வழகன் யார்? அவனை யானறிகின்றிலேனென்றா னென்க.

வசுந்தரி யடிகள்வெறுநிலத்தே கிடந்தாரென்று கழறச்சென்றேனென்றமை யானும், சீயன் நிற்பொறியொற்றிக்கொண்டானென்றமையானும், உவமைகூறுத லின்றி இருவரும் இருவர்க்குமொருவடிவென்றே கூறினர். உவமையாவது சிறி தொத்து இரண்டிற்கும்வேறுபாடுணர்த்துவது; இஃதுஅதுவன்மையுணர்க. பொறியும் ஒன்றிலழுத்தினால்ஒப்பன்றி யதுவேயாயிருக்குமென்றுணர்க. இவ்வாற்றானும் நிரு பித்தமையேகூறிற்றும். வசுந்தரிமகடூஉவாதலிற் றெய்வத்தன்மையுணர்ந்திலள். ()

இனத்திடையேறுபோலுமெறுழ்வலியுரைத்தமாற்ற
மனத்திடைமகிழ்ந்துநேடுமைந்தனந்தட்டனேயாம்
புனத்திடைமயிலனாற்பொருளுரைபெற்றுவந்தா
னெனத்தவிராதுசென்றங்கெய்தினனெய்பவனே

யாமென்றேற்றார். மைந்தன்யாமென்பவெனக்கூட்டுக. பொருளுரை - மந் திரம

இ - ள். விசயன்கூறியகூற்றை யிவன்கேட்டு உட்கொண்டு தாங்கண்டமைந் தனை நாமென்பர்கள், அதற்குக்காரணம் தந்தைபொருளுரையாலே யான்கொண்ட விவ்வடிவைப்பெற்று நந்தட்டனேவந்தானென்று கருதி மனத்திடைமகிழ்ந்து தங்கா தே யப்பொழுதே யவ்விடத்தேசென்றணுகினானென்க.

என்ப எனப் பன்மையாற்கூறிற்று, வசுந்தரிகூற்றையுங்கருதி. அன்றே-அப் பொழுதே. (௧௬௭)

கருமுகிற்பொடித்தவெய்யோன்கடலிடைநடப்பதேபோற்
றிருமுகஞ்சுடரநோக்கிச்சீவகன்சென்றுசேர்ந்தான்
மருமனையரிநிற்கண்டதனஞ்சயன்போலத்தம்பி
திருமலர்த்தடக்கைகூப்பிச்சேவடிதொழுதுவீழ்ந்தான்.

கடலிடைத்தோற்றின விளங்கதிர் கருமுகிலிடத்தே விடாதுநடப்பதேபோலு முகம். முகில் குழலிற்கும், வெய்யோன முகத்திற்குமுவமை * "கடற் - றோற்றுஞ் செஞ்சுடர்போலச்சுடர்ந்ததே" என்றாரபின்னும்

இ-ள். சீவகன் றன்முகஞ்சுடரநோக்கிச் சென்றுசோர்ந்தான்; அப்பொழுது தருமனையரிதாகக்கண்ட விசயனைப்போலே நம்பி தொழுதுவீழ்ந்தானென்க.(௧௬௮)

தாமரைத்தடக்கைகூப்பித்தாண்முதற்கிடந்ததம்பி
தாமரைத்தடந்தையொத்தான்றம்முனும்பரிதியொத்தான்
றாமரைக்குணத்தினானுமும்முறைதழுவிக்கொண்டு
தாமரைச்செங்கணானுந்தன்னுறுபரிவுதீர்ந்தான்.

இ-ள். அங்ஙனந்தொழுதுகிடந்ததம்பி தாமரைத்தடத்தையொத்தான்: றமைய னும் அவன்முகமுதலியவுறுப்பையலர்த்தலிற் பரிதியையொத்தான்; அவ்வழிபாட்டின் பின்பு தாமரையென்னுமெனனையுடைய குணத்தினானை அன்பின்மிகுதியான் முக் காற்றழுவிக்கொண்டு பின்பு சீவகனுந் தனக்குற்றவருத்தமெல்லாந்தீர்ந்தானென்க.

என்றது - யான்போந்தபின்பு இருமுதுகுரவருற்றதென்னென்று தனக்குற்றுக் கடந்தபரிவும் இவன்வாய்க்கேட்டுத்தீர்ந்தானென்க (௧௬௯)

என்னுறுநிலைமையோராதெரியுறுதளிரின்வாடிப
பொன்னுறுமேனிகன்றிபபோயினீர்பொறியிலாதேன்
முன்னுறவிதனையோரேன்புரிபபேரோசையெல்லாம்
பின்னுறுபரிவுசெய்தேன்பேதையேன்கவலலென்றான்.

எனக்குற்றநிலைமையை யோராதேயென்றது நீயென்னைக் கொண்டுபோகாத நிலைமை யையறிந்தும், உண்மையென்றுணராதே யென்றவாறு. "சொல்லப்போகியகள்வன்" என்று இருடிகூறியகூற்றைக் கந்துகன்கூறக்கேட்டு இவ்வாறுவருந்துமென்று இவ னனங்கூறினான். பொறியிலாதேனென்றது - இருமுதுகுரவரையும் வழிபட்டிருக்கும் நல்வினையில்லாதேனென்றவாறு.

இ-ள். பொறியிலாதேன் கட்டியங்காரனைக் கொலைசெய்யாததுபோலப் பிரிவிப்ப தோர் தீவினைவந்து முன்னின்றதலாற் றுணையாயுள்ள தருமிகாலமாகவும் நுமக்குத் தீங்குவருகின்றவிதனை யோரேனாய்ப் பேதையேனாகியயானே முதனின்மேனிவளமை யின், மேனிசென்றுபோனீயாளும் ஓசையும் எல்லாம் என்றுநிலைமையையோராதே வாடிப் பின்பு முடியவுறுபவர்க்குத் துன்பத்தைச் செய்தேன். இனி நீவருந்தாதே கொள்ளென்றானென்க.

இதனையென்றது-களிற்றிடையுதவியதனை. முன்னும் †"வாழ்பினையென்றுவிட் டான்" என்றார். இனி முன்னுறவென்றதனை அச்சணந்தியாசாரியாசரு நேருகின்ற பொழுதென்னின், அதுபொருந்தாது, என்னை? தான்மேல்வருகின்றதறியானுதலா னும, ஆசிரியன்கூறுமுலே ஓராண்டு அவனிருப்பனென்றுணர்ந்து "இன்னுயிரவனை யுண்ணுமெல்லைநாள்வந்ததில்லை" என்று தான்கூறினமையானுமென்பது. (௧எ०)

* இலக்கணையாரிலம்பகம், ௪௨०. † பதுமையாரிலம்பகம், ௨.

இ - ள். குங்குமமெழுதலாலே அத்தகிரியையொத்த நந்தட்டன் மார்பிலே யணிந்த சாதிவைரத்தின் ஒளிகலந்தபூண் சீவகனது வரைபோலுமார்பிலேமின்னும படி எதிரேயிருந்து கூடவுண்டான், அல்குலாளும் விருந்திடுகூற்றாலே விருந்து செய்தாளென்க. (௧௭௫)

விருந்தவள்செய்தபின்றைத்தம்பியுந்தானும்வேறா
விருந்துழியென்னைக்காணாதுற்றதையெவன்கொலென்று
பொருந்தினர்செய்தவெல்லாம்புனைவிடுத்துரைமோவென்னக்
கருங்கழற்செங்கட்பைந்தார்க்காளையீதுரைக்கின்றானே

இ - ள். அவள் விருந்துசெய்தபின்பு தம்பியுந்தானுந் தனித்திருந்தவிடத்து, என்னைக் காணாமையினாலே தாவர்முதலாயினோர் உற்ற வருத்தமென்னென்று அதனை முதற்கேட்டுப் பின்பு தோழன்மாரசெய்த கூடியபாடெலலாம் வேறுபடுத்திச் சொல்லாயென்று சீவகன்கூற, நந்தட்டனும் இதனைக் கூறுகின்றானென்க

உரைக்கின்றவன் இவ்விதிதிட்டானென்றுரைத்தானெனச ‘சொல்லிய’’ என்னுங்கவியோடுமுடிக்க. கருங்கழல் - கொடியகழல். புனை - கூறுபாடு. சீவகன், தான் முன்பு அவர்செய்திகண்டுபோந்தபின்பு அவரசெய்தபடிகேட்கின்றான், குணமாலையாரிலம்பகத்தில் நந்தட்டனுடன் தோழன்மார்கூடுதற்குமுன்பு அவர்தம்மிற்கூறிய வாறு இவனறியாமைதலின், தானும் அவரங்கூடினபின்பு பிறந்தசெய்தியையன்கூறுகின்றான். இதனால் அதற்கிது வேறுபாடாயிற்று. (௧௭௬)

புண்ணுமிழ்குருதிபோர்த்தபோர்க்களம்போன்றுதோன்றி
யண்ணலங்கதிருமத்தமடைந்துசெவ்வான்கொளாக்கித்
துண்ணெனக்களத்துநீங்கித்தொல்லைநாட்புறத்துத்தொக்கே
யெண்ணுமின்செய்வதென்றான்பதுமுகனெரியும்வேலான்.

இ - ள். கதிரும் அத்தகிரியையடைதலாலே குருதிபோர்த்த களம்போலே தோன்றிச் செக்கர்வான்கொண்டவந்தியிலே எல்லாரும் மணமுமியின்புறுதியாலே நாணுக கென்றவளவிலே, பின்பு நின்னைக்காணாமையின், அவ்விடத்துநின்று நீங்கி நகரிடத் தேகுவிந்து யாம் இனிச்செய்யுங்காரியமென்னையென்று எண்ணுமினென்று கூறினான் பதுமுகனென்க. (௧௭௭)

மின்னெனமிளிரும்பைம்பூட்புத்திசேனெனுமேவுவா
கன்னவிரேறளிஞ்சைகாண்கலேமாயினின்னே
மன்னனைவாளினாலேவானகங்காட்டிநந்தா
தன்னையுஞ்சவட்டிப்போகிச்சாமியைச்சார்துமென்றான்.

இ - ள். அப்பொழுது புத்திசேனனென்னுமவன் தோழனினைக்காணோமாயின், இப்பொழுதே கட்டியங்காரனைக்கொன்று நகரையமழித்துப் போய்ச் சீவகனைச் சேர்வேமென்றானென்க. (௧௭௮)

சிலையொடுதிரண்டதிண்டோட்டேமாதத்தனென்பான்
மலையுடையுருமிற்சீறிமாற்றலனுயிரையுண்ட

கூறுவது; உயிர்வாழும் பக்கம் என்னிடத்தில்லை; ஆதலின், இது கூறவேண்டா; என்கண்கள் கையாக அவற்றினீராலே நுமக்குஞ் செல்வனுக்குஞ்செய்யும் நீர்க்கடன் மரபெல்லாஞ் செய்துவிட்டேன்; இனிக் காட்டுத்தீப்போலே சேரவெழுகவென்றே னென்றானென்க.

அழுதது-இழவென்னுமெய்ப்பாடு. நுமக்கெனவே சுற்றமெல்லாமடங்கும். ()

கோட்டிளங்குழவித்திங்களிரண்டன்னவெயிற்றுக்கோளே
வேட்டதோர்சிங்கஞ்சூழ்ந்தவேங்கையினினத்தின்வெய்ய
வாட்படையெழுந்துவாழ்கசீவகனென்னுமாகட்
பாட்டினையொருவனெங்கள்பரிவறப்பாடினானே.

கோடு - வளைவு.

இ - ள் முன்பு சிங்கத்தைச்சூழ்ந்த புலித்திரள்போலே வெய்யவாகிய நமது வாட்படை அச்சிங்கத்தினைதந்தார்க்கு யான் அங்ஙனங்கூறக்கேட்டு எழுந்திருந்து சீவகன் வாழ்கவென்றவளவிலே, எங்கள் வருத்தந்தீர ஒருத்தன் பாட்டினைப்பாடினானென்க.

நீயும் யாங்களுஞ் சிங்கமும் புலியும்போலிருப்போமென்றுமன (௧௮௩)

பருவரற்கங்கேவரின்வேவாணுத்தப்பசலைதீர
வருகின்றதுடன்றாமுன்னைகவினாயுகமெல்யவேவேண்டா
வருவிழும்மதத்தயானையாருதுழிக்காரென்றெண்ணி
தெரிவிலபேதைமுல்லைபூத்தனதெளியிமதென்றான்

இ - ள். யானை மதத்தவாய் அதிர்ந்துழி அவற்றைக்காரென்றெண்ணி ஆராயாதே முல்லை பூத்தன, இதனைப் பருவமன்றென்று தெளிந், இன்னே மெலியவேண்டா; யானவரிடத்தேசென்றாற் குறித்தபருவத்தே நீட்டித்தாராயின் மெலியவமையும்; யான்சென்றபொழுதே நின்பசலைதீரச் சேர்வாயருவரென்றானென்க.

இது பருவமன்றென்று தலைவியையாற்றுவித்துத் தூதுசெல்கின்ற பாணன் கூற்று. * "நிலம்பெயர்ந் துறைதல் எவர்க்குமிலை யாத்தல் - கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை யுரிய" என்னுங் கற்பியற்சூத்திரத்தானும், † "அரக்கத்தன்ன * * * தே ரே" என்னுமகப்பாட்டில், "யாமகா குயமகொல் பாண வென்ற - மனையோள் சொல்லெதிர சொல்லல் செல்லேன்-செவ்வழி நல்லியா ழிசையினென் பையெனக்-கடவுள் வாழ்த்திப் பையுள் மெய்ந்நிறுத்- தவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே" என்பதனானுங்கொள்க. எனவே சீவகன் இப்பொழுதுவாரானென்பதூஉம், யாஞ்சென்று பின்புகொண்டுவருவோமென்பதூஉம், இதற்குக்கருத்தென்று தேறிப் போதத்தொழில்தவிர்தல் பயனும். இனி என்றானென்று பாடமோதித் தோழி யாற்றுவித்தாளென்றல் ஈண்டைக்குப் பொருந்தாது. இன்னேவருவரெனக்கூட்டி இப்பொழுதே வருவரென்றால் இவனும் இப்பொழுதே வருவனென்பதுகருத்தாமாதலிற் பொருந்தாது. (௧௮௪)

* தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், ௨௮.
† அகநானூறு, ௧௪.

யெல்லையிவ்விரண்டினொன்றேயிப்பகன்முடிப்பலென்று
மல்லிகைக்கோதையைம்பான்மலைமாண்மனையைச்சேர்ந்தேன்.

இ-ள். அங்ஙனமீண்டு செல்வனைக்கண்டு வணங்குதல் ஒருகாரியம்; அது கூடாதாயின், இறத்தலொருகாரியம்; இவ்விரண்டினொன்றை யின்றைப்பகற்பொழுதினெல்லையின் முடிப்பேனென்றுகருதித் தத்தைமனையைச் சேர்ந்தேனென்க. (

மணியொலிவீணைபண்ணிமாண்டகோழடவயாத
ரணிமுலைத்தடத்தினொற்றிவெப்பராற்றடையமாற்றிய
பிணைமலர்க்கோதைகீதம்பாடயான்பெரிதும்பேதுற்
றிணைமலர்க்கண்ணிக்கொவ்வாவிளிவருகிளவிசொன்னேன்.

இ-ள். கோதையையுடையவம்மாதா அழகிய ஓசையையுடைய யாழைப் பண்ணி அதனரம்பைத்தடவுதற்கு முலைத்தடத்தேசேர்த்தி அதன் வெப்பத்தாலே அதன்குளிர்ச்சியைமாற்றிப் பாட, யான் பித்தேறி அவளுக்குப்பொருந்தாத கிளவியைக்கூறினேனென்க.

இளிவருகிளவி - "பொறிகுலாய்" என்னுங்கவி (௧௯௦)

சொல்லியவென்னைநோக்கித்துளங்கனும்மடிகள்பாதம்
புல்லயான்புணர்ப்பலென்றுபொழுதுபோயபட்டபின்றை
யெல்லிருள்விஞ்சையோதியிவ்வழியிடுவித்திட்டாள்
சொல்லுமினடிகணீரும்போந்தவாறெனக்குமென்றான்.

இ-ள். அங்ஙனங்கூறிய வென்னைநோக்கி வருந்தாதேகொள்; நும்மடிகள் பாதத்தை நீசேரும்படி யான்கூட்டுவேனென்றுகூறி ஞாயிறுபட்டபின்பு விஞ்சையையோதி விடியற்காலத்திருளிலே இவ்விடத்தே இடுவித்தாளென்று உரைத்தான்; அங்ஙனமுரைத்தபின்பு, அடிகளே! நீரும் போந்தவாறு எனக்குக கூறுமினென்றானென்க.

காளையீதுரைக்கின்றயன் இடுவித்திட்டாளென்றுரைத்தானெனக்கூட்டுக. (௧௯௧)

தாதையாருவப்பச்செய்வான்றாழ்கச்சிற்பிணிப்புண்டைய
போதராநின்றபோழ்திற்போரப்புலிக்குழாத்திற்சீறிக்
காதனஞ்சுற்றமெல்லாங்கையிலங்கெஃகமேந்திச்
சாதலேபுரிந்துதோன்றுந்தன்மையங்கரிற்கண்டேன்.

இ-ள். ஐயனே! தாதையார் மனமகிழ அவரேவல்செய்தற்காக விடாமற் றங்குவதோர் கச்சிட்டுப்பிணித்தாற்போல அவர்சொல்லாற்பிணிப்புண்டு போதுகின்ற காலத்தே, நஞ்சுற்றமெல்லாம் எஃகமேந்திப் புலிக்குழாம்போலேசீறிச் சாதற்கொருப்பட்டுத்தோன்றுமியல்பை அங்கரிற்கண்டேனென்க

கச்சின், இன் - உவமப்பொரு. (௧௯௨)

கண்டபினின்னைக்காண்பேன்கருவரையுலம்பிப்பல்கால்
விண்டுவுழுடையவாலின்வெடிதருராய்வெகுண்டுநோக்கி

*"வாரணத்தொழுவின்முற்றி-மீளிமைசெய்யின்" என்றநிலையைவிட்டு வாழ்த்துதல் - ஓம்ணமோஅரஹந்தாணமென்றல். அழுங்க - சூழ்ந்தவர்வருந்த. (ககஙசு)

மந்திரமூன்றுந்தந்துவானவன்விடுப்பச்செல்வேற்
கிந்திரதிருவிற்சூழ்ந்தவினமழைக்குழாத்திய்வேழங்
கொந்தழற்காட்டுத்தீயால்வளைப்புண்டகுழாத்தைநோக்கிச்
சிந்தித்துக்கவன்றுநிற்பத்திருமழைபொழிந்ததன்றே.

மந்திரமும் பிறவுமுண்மையின், உம்மை †"இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு - வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்" என்னுமும்மையன்றி, மூன்றுமந்திரமும், வழிமுதலியனவுமென எச்சவும்மை செல்வேற்குக் கவன்றென்க. எண்ணிறந்த இனக்களிற்றின்றுயரை நீக்குதற்குரியயான் நீக்காதொழியின், ‡மூவகைப்பாவத்திலும் உடன்பாடாகிய பாவமெய்தி நெருநற் சுற்றமுமயாலுற்றதுன்பம் போல் இதுவும்பின்புவருமென்று எனக்குக்கவன்றென்றான். முன்பு "வேழப்பேரினந் - தங்கியகாடு" என்றா. சிந்தித்து நிற்ப - தெய்வத்தைப்பாவித்து நிற்ப. அன்றே - அப்பொழுதே. இந்திரவில்லும், மேகமும் சூழ்ந்தயானைசகுவமம்.

இ - ள். தேவன்விடுப்பக் குழாத்தைநோக்கிச் செல்வேற்குக்கவன்று சிந்தித்து நிற்ப, மழை யன்றே பெய்ததென்க.

சீவகன் மற்றும் வழியினிகழ்ந்தனவெல்லாங்கூறாது இதனையேகூறியதென்னையெனின், "யாண்டுநேரெல்லை" என்றமொழி நங்கட்டனறியாதாரவின், இன்னும் இராசமாபுரத்துச்சென்றாலும் இந்துன்பமுளதாமோவென்றுகருதினும் அந்கருதாதபடி மற்றைநாளே அத்தீவினையுள்ளாதங்கவேண்டும் பேறநுஞ்செய்தேனென்றான். இனிச் செல்வேற்குமழைபொழிந்ததென்க் கூட்டித் தேவன "மாமழைபலவும்-கெடுக்கும்" என்ற மந்திரத்தைக்கூறலின், அவன்கூறியமந்திரமே இம்மழையைப்பெய்வித்ததென்றுமாம். இதற்கு நெருநற் சுற்றமுற்றதுயரை நினைவாற்றனவென்று கவன்றென்க. இம்மந்திரங்களின்பெருமையால் இனி நமக்கு எவ்விடத்தும் இடரிலதமின்றென்பதறிவித்தல் பயனாகவ் தகூறினான். (ஈகஎ)

க. வெல்களிற்றச்சநீங்கியினம்வொடுவனத்தினேகி
பல்லவதேசமெய்யாவதித்தலைபதியெய்தினானமன்னா
னல்வனப்புடையதேவிதிலோத்தமைபெற்றநம்பி
செல்வன்மற்றுலோகபாலன்றிருமருபதுமையென்பாள். (கசஅ)

உ. அரிதுரந்தகோழிநாமந்தரவன்னிக்கடித்ததாகத்
திருவிழையவளைத்தீர்த்தேன்றீவிலாகணையுமேனண்டிப்
பொருகளியானைமன்னன்புனைவிழையவளைத்தந்தா
னிருமதிகழிந்தபின்னைமயிலைப்பிரராப்பொழுதிற்போந்தேன்.

இவையிரண்டுமொருதொடர்

* குணமாலையாரிலம்பகம், கoஅ.

† தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், ௬௬.

‡ மூவகைப்பாவம்: செய்தல், செய்வித்தல், உடன்பாடெனவிவை. இவற்றை வடநூலார் முறையே கிருதம் காரிதம் அநுமோதமென்பர்.

இ - ள். அங்ஙனம் அக்களிற்றினச்சத்தைநீக்கி யேகிப் பல்லவதேச கண்ணி அதற்குரிய செல்வனாகிய தனபதியென்னு மன்னனுடைய தேவி திலோத்தமை பெற்றபிள்ளை உலோகபாலன், மகள் பதுமை; அவளைக் குக்குடசர்ப்பங் கடித்ததாக, அவளைத்தீர்த்தேன்; அதனாலே என்னோடுறவுவேண்டி அவ்வரசன் அவளைத்தந்தான்; தந்து இரண்டுதிங்கள் சென்றபின்பு போந்தேனென்க.

களிற்றினச்ச நீக்கமையா தன்சுற்றத்திற்கு மச்சமின்றும். (௧௯௯)

வாவிப்புண்ணடையினாளைவஞ்சித்துத்தக்கநாட்டை
மேவியான்காணலுற்றுசசார்தலுமிப்பருள்ளான்
றாவிப்பொன்மாடமூதூர்ச்சுபத்திரனென்னைக்கண்டே
யாவிக்கணறிவுபோலவெவனாயன்புபட்டான்.

* வணிகர் இப்பர், கவிப்பர், பெருங்குடியரென்றுமூன்றுபாலார். தூவிப்பொன்-கிளிச்சிறை; தூவியுமாம்.

இ - ள். யான் அங்ஙனம் அவளையொளித்துப்போந்து தக்கநாட்டை. மேவி மூதூரைக்காணலுற்றுச் சார்ந்தவளவிலே, இப்பருள்ளானாகிய சுபத்திரன்கண்டு ஆவியிடத்து அறிவுகலந்தாற்போலக் கலந்து அன்புற்றானென்க. (௨௦௦)

பண்ணமைதேர்ினேறியவனொடியானிருந்துபோகி
விண்ணுயர்செம்பொன்மாடத்திழிந்தவன்விளங்கப்புக்கேன்
வெண்ணிலாமுத்தஞ்சூழ்ந்தவெம்முலைத்தடங்கணாளை
மண்ணொன்றுஞ்செல்லநின்றமகிழ்ச்சியின்மகிழ்ந்துதந்தான்.

அவண்விளங்க - அவள்நாணுதலின், மனைவிளங்கிற்று. உலகந் தன்னிடத்திலே செல்லநின்ற மகிழ்ச்சியாவது அரசவுரிமை. இன் - பொரு.

இ - ள். அவன் அங்ஙனம் அன்புறக் கொண்டுபோதலின், யான் அவனுடனே தேரிலேயேறியிருந்து போய் இழிந்து மாடத்தே புக்கேன்; புக்கபின் தன்மகளை மகிழ்ந்து தந்தானெனக. (௨0௧)

அவ்வழியிரண்டுதிங்களகழிந்தபினவளினீங்கி
யிவ்வழிநாடுகாண்பான்வருதலுமிறைவன்கண்டே
செவ்வழிபாடராகிச்சிலைத்தொழிற்சிறுவர்நம்ப
மைவழிநெடுங்கணாளைத்தந்தனமதலையென்றான்

இ - ள். மதலாய்! அவ்விடத்தே யிரண்டுதிங்கள்போனவளவிலே, அவளில்லினின்று நீங்கி இவ்விடத்து இந்நாடுகாணவருகின்றேன்; வருதலளவிலே, இறைவன் சிறுவர் செவ்வியவழிபாடராய் வில்தொழிலைக் கற்ப, அதனை அவன்கண்டு கருமை மிக்க கண்ணாளைத் தந்தானென்றானென்க

* வணிகர் மூவகையரென்பதும், அவர்களிலக்கணமும் பின்னுள்ள வெண்பாவாலுணர்க. சிவசம்போதனை, ஆறாவது உலோகாதிகாரம், ௬௨:—இப்பர் கவிப்பர் பெருங்குடி வாணிகரென், றெப்புடைய மூவ ருரைக்குங்கால், றப்பில், மிதியடியே றானைமிசை நோக்கினர்கள் காணு, நிதியுடைய ராவா நிலத்து. இஃது எதிர் நிரனிறை.

ஏனைப்படைக்கலங்களின்றொழிலும், யானைமுதலிய வேற்றுத்தொழிலுங் கற்றாரேனும் அவைகூறாது விற்றொழிலேகூறினார், அதன்சிறப்புநோக்கி.

"பெண்ணிடர்" என்னுங்கவிமுதல் இவ்வளவு மொருதொடராக்கி என்றானெனமுடிக்க. (௨0௨)

தானுழந்துற்றவெல்லாந்தம்பியையுணரக்கூறித்
தேனுழந்தரற்றுந்தாரான்குரவனைச்சிந்தித்தாங்கு
வானிழிந்தாங்குக்கண்ணீர்மார்பகனைப்பக்கையா
லூனுமிழ்ந்திலங்கும்வேலானொற்றிமற்றிதனைச்சொன்னான்.

இ - ள். சீவகன் தானுற்றனவெல்லாவற்றையும் தம்பியையறியக்கூறிக் குரவனைக்காணப்பெற்றிலமேயென்று நினைத்தவன்பொருட்டு நந்தட்டனழுதானை, சீவகன் அதனைத்துடைத்து இதனைச் சொன்னானென்க.

இனிக் கூறி - கூற; சீவகன்கூற இதனைக் குரவருங் கேட்கப் பெற்றிலமேயென்று சிந்தித்தநந்தட்டனுக்குக் கண்ணீர் மாரபிடத்தேநனைப்பவென்றுமாம் ()

திண்பொருளெய்தலாகுந்தெவ்வரைச்செகுக்கலாகு
நண்பொடுபெண்டிர்மக்கள்யாவையுநண்ணலாகு
மொண்பொருளாவதையாவுடன்பிறப்பாகலாகா
வெம்பியையீங்குப்பெற்றேனெனக்கரியதென்றான்.

எம்பி - முன்னிலைப்படாக்கை.

இ - ள். ஐயனே! எய்தலாம், செகுக்கலாம்; நண்ணலாம்; ஆககலாகாவொண்பொருளாவது உடன்பிறப்பு. இத்தன்மைத்தாகியநின்னை இவ்விடத்தேபெற்றேன்; எனக்கு இனி யரியதில்லையென்றானென்க. (௨0௪)

வேறு

தேனிற்பாலனைசெல்வன்றம்பியோ
டானியம்பலகழியவாயிடை
வேனிற்குன்றெனத்தோழர்வெந்துமெய்
யூனினைகின்றா செய்வதுன்னினார்.

இ - ள். சீவகனுக்கு நந்தட்டனுடனே தேனிடத்துப்பால்போல இனிதாகப் பலபொழுதுகழியாநிற்க, அவ்விராசமாபுரத்தே, தோழர் குன்றென மனங்கொதித்து உடம்பில் ஊன்மெலிகின்றவர், செய்யுங்காரியத்தை நினைத்தாரென்க.

ஊனின், இன் - அசை. (௨0௫)

க. 'நாடுமின்னினிநாங்கள்செயவதென்
றீடினுலிருந்தெண்ணிநால்வரு
மாடுமஞ்ஞையஞ்சாயற்றத்தைமெய்
வாடலொன்றிலள்வஞ்சமாங்கொலோ.

உ. கள்ளமுண்டெனிற்காண்டுநாமென
மெள்ளவெய்தினார்வினவக்கூறினாள்
வள்ளற்குற்றதும்மறைந்தவண்ணமும்
வெள்ளிவெண்மலைவேந்தன்பாவையே.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். தோழன்மாரானால்வரும் வருத்தத்தோடேயிருந்து அங்ஙனமெண்ணி இனி நாஞ்செய்யுங்காரியத்தைத் துணிமினென்றுகூறி, தத்தை வருத்தமில்லாளாத லின் அவன்கரந்துறைகின்றானே அங்ஙனங் கரந்துறைதலுண்டாயின் நாங் காண் பேமென்றுதுணிந்து மெல்லச்சென்று அவர்கேட்ப, அவள் அவன்கரந்திருக்கிறபடி யையும், அவனுக்கு அவ்விடத்துற்றநன்மைகளையுங் கூறினாளென்க.

நாங்கள், கள் - பகுதிப்பொருள்விகுதி (உ0எ)

மற்றவள்சொலக்கேட்டமைந்தாக
ளிற்றதம்முயிரியல்பிற்பேர்ததவட்
பெற்றமாந்தரிறபெரிதுமெய்குளிர்ந்
தற்றமின்மையினவலநீங்கினா.

இ - ள். அவள்கூறக்கேட்ட மைந்தர்கள், பின்னைப்போனவுயிரை முறையான் மீட்டு அவ்விடத்தே பெற்ற மாந்தரைப்போலே மெய்குளிர்ந்து அக்கூற்றுப் பொய்ய ன்மையின், வருத்த நீங்கினரென்க (உ0அ)

திருவின்சாயறன்சீறடிச்சிலம்
புருவக்குஞ்சிவாயுறத்தியொயயெள
வுருகுமுள்ளத்தினுடம்புவீங்கினர்
பருகுகாதலிற்பாடியாடினா.

இன் - பொரு. சிலம்பு - ஆகுபெயர்; அடியைநோக்கிவணங்கி.

இ - ள். அங்ஙனம் அவர்வருத்த நீங்குதலின், வணங்கி அவனிட்டதன்பால் உருகுமுள்ளத்தால உடம்புபூரித்தார், அவனைக் காணபேமென்னுங் காதலாற் பாடி யாடினாரென்க. (உ0கூ)

வேறு.

பைத்தரவத்திரைசிந்தியபல்கதி
ரொய்த்தெரிநித்திலம்வைத்தனபல்லின
ளிததிருவின்னுருவந்தொழுதார்தம
தெத்துயரங்கெடுமென்றினசொன்னார்.

இ - ள். அரவத்திரை பொங்கிச் சிந்திய விளங்குகின்ற நித்திலத்தை வைத் தாற்போலும் பல்லினளாகிய இத்திருவின்வடிவைத் தொழுதாருடைய எல்லாத்துய ருங் கெடுமென்று இத்தன்மையன கூறினாரென்க. (உகல)

ஐயனையாமவணெய்துவமாயிழை
நொய்தினுரைபொருளுண்டெனினெய்தா

மையெழுத்தூசியின்மாண்டதொர்தோட்டிடைக்
கைவளர்கோதைகரந்தெழுத்திட்டாள.

இ - ள். ஆயிழாய்! யாம் அவ்விடத்தேசென்று ஐயனைச்சேர்வேம்; சேர்ந்தாற் கூறுங்காரிய முளதேற் கடிதிற்கூறெனை, அவள் மையைத் தோய்த்தெழுதும் எழுத்தையுடைய எழுத்தாணியாலே தோட்டிடையிலே எழுத்தைக்கரந்து கடிதாகவெழுதினளென்க.

மை - மஷி. அவ்வெழுத்தறிந்தாலும் பிறர்வாசியாதபடி யெழுதினாள். கை - கற்பொழுக்கம். (உகக)

ஆங்குருக்காரரக்கிட்டதன்மீமிசைப்
பூங்குழையாற்பொறியொற்றுபுநீட்டத்
தேங்குழலாடொழுதாடிசைசெல்கெனப்
பாங்கரங்குப்படர்கும்றனரன்றே.

இ - ள். தேங்குழலாள் அங்ஙனமெழுதி அரக்கிட்டு அதன்மேலே காதிற்குழையாலே யிலச்சினையிட்டு இஃது அவனிருக்கின்ற திசையேசெல்கவெனத் தெய்வத்தைத்தொழுதாள்; தொழுது அதனைநீட்ட, தோழன்மார் அவ்விடத்தே போகலுற்றாரென்க.

நபுலரும் விபுலரும, குரவனைநோக்கிச் சிலபிள்ளைகள்நிற்கவேண்டுமென்றலின், நின்றார். (உகஉ)

வேந்திரியக்கணைவித்திய வெஞ்சிலை
காய்ந்திரிக்கும்புருவக்கருங்கண்ணிய
ராய்ந்தரிக்குந்நறவம்மலர்மாலையை
வேய்ந்தரிக்கும்மிஞிறூர்ப்பவிடுத்தாள.

இ - ள். வேந்திரிய வித்துதற்குக் காய்ந்து சிலையிற்றங்குங்கணையைக் கெடுக்கும் புருவத்துட்டங்குங் கண்ணியராலே ஆராய்ந்து நிமணங்களைந்து தொடுக்குமாலையைச் சூழ்ந்து மேயுமிஞிறூர்ப்ப விடுத்தாளென்க.

தன்றலையைச்சாய்த்துப் போமென்றலின், மிஞிறூர்த்தது (உகரு)

வேறு

க. அலங்குவெண்மதியைப்பசியடையவப்பகலே
நிலங்கொண்டோங்கினநிரம்பியபுகர்சுழியுடைய
வுலம்புமுன்னிருதாள்களுமுமிழ்வனபோல்வ
விலங்குபாய்வனவிடுகணைவிலக்குவாசிமா. (உரச)

உ. அள்ளற்சேறருமணல்புனலருவரைப்படினு
முள்ளம்போற்செல்வவுரனசைவில்லனவமருட்
கொள்ளிமண்டலம்போற்கொடிபடத்திரிந்திடுவ
வெள்ளிமால்வரைத்தாழ்வரைமேம்படப்பிறந்த. (உகரு)

முயங்கி யமைச்சருடனே காரியத்தையெண்ணி அவனைப்போகவிடுநெறியாலேபோக விட்டான்; அவனும் போக்கறிவித்தற்குக் கனகமாலைகோயிலிலேசென்றானென்க.

அரசனாகவே போகவிட்டான். (௯௯௦)

விள்ளாவியனெடுந்தேர்வேந்தன்காதன்மடமகளே
கள்ளாவிகொப்புளிக்குங்கமழ்பூங்கோதாயென்மனத்தி
னுள்ளாவியுள்ளாய்நீயொழிந்தாயல்லையெனக்கையிற்
புள்ளாவிச்செங்கழுநீர்க்குவளைசெய்தாள்புனைபூணாள்.

இ - ள். வியனெடுந்தேர்வேந்தன்காதல் நீங்காதமடமகளே! கள்ளினாற்றத் தைக் கொப்புளிக்குங்கோதாய்! நீ என்மனத்தினுள்ளே யுறைகின்றவுயிராயுள்ளாய்; ஆதலின், நீயென்னையகன்றாயல்லையென்று பிரிவுணர்த்த, அதனையுணர்ந்து பூணாள் தன்கையிலிருந்த வண்டிற்குயிராகிய செங்கழுநீரை நெட்டுயிர்ப்பாலே கருங்குவளை யாக்கினாளென்க.

இனிக் கள்ளை நீராவியாகக் கொப்புளிக்குமென்றும், உயிரிலேயிருத்தலினென் றும், அன்னங்களையுடையவாவியிற்கழுநீரென்றுமுரைப்ப. (௯௯௧)

வார்முயங்குமென்முலையவளைவேய்த்தோளாணமனமகிழ
நீர்முயங்குகண்குளிரப்புல்லிநீடோளவனீங்கித
தேர்முயங்குதானையான்சிறுவர்சேடாரகன்மார்பந்
தார்முயங்கிக்கூந்தன்மாவிவர்ந்தான்சங்கமுரன்றவே.

இ - ள். அதுகண்டு அவளைமனமகிழவுங் கண்குளிரவும்புல்லி, அவன் அங்கு நின்றும்போய் நரதேவன்புதல்வராகிய மைத்துனன்மாரைத்தழுவிக்கொண்டு மாவை யேறினான்; அப்பொழுது நன்னிமித்தமாகச் சங்கமுழங்கினவென்க. (௯௯௨)

கனகமாலையாரிலம்பக முற்றிற்று.

ஆ கவி ௧௮௮௮

எட்டாவது

# விமலையாரிலம்பகம்.

முருகுகொப்புளிக்குங்கண்ணிமுறிமிடைபடலைமாலைக்
குருதிகொப்புளிக்கும்வேலான்கூந்தன்மாவிவர்ந்துசெல்ல
வுருவவெஞ்சிலையினாற்குத்தம்பியிஃதுரைக்குமொண்பொற்
பருகுபைங்கழலினாருட்பதுமுகன்கேட்கவென்றே.

இ - ள். தலையின்மாலையினையும், வகைமாலையினையும், வேலினையுமுடைய சீவகன் மாவையேறிப்போகாநிற்க, அவனுடையதம்பியாகியநந்தட்டன் பொன்னாற் செய்த கழலினையுடைய தோழரிற் பதுமுகன் கேட்பாயாகவென்று இக்காரியத்தை யுரைக்குமென்க.

அதுமேற்கூறுகின்றார். சிலையினாற்கு-உருபுமயக்கம். காலையகத்திட்டகழல். (க)

விழுமணிமாசுமூழ்கிக்கிடந்ததிவ்வுலகம்விம்பக்
கழுவினீர்பொதிந்துசிக்கக்கதிரொளிமறையக்காப்பிற்
றழுவினீருலகமெல்லாந்தாமரையுறையுஞ்செய்யாள
வழுவினாதம்மைப்புல்லாள்வாழ்கநுங்கண்ணிமாதோ.

இ - ள். பெரியமணி மாசேறி உலகைவிலையாகப் பெறும்படி கிடந்ததனைக் கடுக வெளியாக்கினீர்; இதனான் ஒருதீங்கின்றி நுங்கண்ணி வாழ்வதாக; இனி முன்பு போலே அகப்படப்பொதிந்து மறையக்காப்பீராயின், உலகெல்லாங்கைக்கொண்டீர்; காவாது வழுவினீராயின், இங்ஙனம் வழுவினாரைத் திருச்சேராளென்றானென்க.

சிக்க - அகப்பட. (உ)

தொழுததங்கையினுள்ளுந்துறுமுடியகத்துஞ்சோர
வழுதகண்ணீரினுள்ளுமணிகலத்தகத்துமாய்ந்து
பழுதுகண்ணரிந்துகொல்லும்படையுடனொடுங்கும்பற்றா
தொழிகயார்கண்ணுந்தேற்றந்தெளிகுற்றார்விளிகுற்றாரே.

சோர - வார.

இ - ள். கையிலும், முடியிலும், கண்ணீரிலும், பூணிலும், கொல்லும்படை யொடுங்குமாதலால், அப்பழுதையாராய்ந்து அக்கூடாநட்புடையோரைத் தம்மிட த்துநின்று நீக்கிப் பின்னும் யாவர்சிலரிடத்துந் தெளிதலைப் பற்றாதொழிக; அன்றித் தெளிதலுற்றார் விளிதலுற்றாரென்றானென்க.

அரசர்க்கு ஓர் துன்பம்வந்தவிடத்து அவர் நட்புடையோர்போல அழுதகண்ணி

ருங் கொலைசூழ்தலின், கண்ணிலும் படையொடுங்கிற்றும். *" ஒன்னார் - அழுதகண் ணீரு மனைத்து" என்றார் தேவரும். (௩)

தோய்தகைமகளிர்த்தோயின்மெய்யணிநீக்கித்தூய்நீ
ராய்முதுமகளிர்தம்மாலரிறபத்திமிரியாட்டி
வேய்நிறத்தோளினார்க்குவெண்டுகின்மாலைசாந்தந்
தானலகலங்கள்சேர்த்தித்தடமுலைதோய்கவென்றான்.

இ - ள். கூடுதற்குரிய மகளிரைக் கூடவேண்டின், அவர்பூணைநீக்கி ஆராய்ந்து தெளிந்த மூப்பிமாரராலே குற்றமறத்திமிர்ந்து தூயநீராட்டி அவர்க்குத் துகின்முதலிய வற்றைச்சேர்த்திப் பின்பு தான் அவர்முலையைத் தோய்வானாகவென்றானென்க.(௪)

வண்ணப்பூமாலைசாந்தம்வாலணிகலன்களாடை
கண்முகத்துறுத்தித்தூய்மைகண்டலாற்கொள்ளவேண்டா
வண்ணலம்புள்ளோடல்லாவாயிரம்பேடைச்சேவ
லுண்ணுநீரமுதங்காக்கயூகமோடாய்கவென்றான்.

அண்ணலம்புள் - அரசவன்னம். சேவல் - சக்கரவா புள்.

இ - ள். பூமாலைமுதலியவற்றைப் புள்ளின்கண்ணிலுஞ் சேவலின்முகத்திலு முறுத்தித் தூய்மைகண்டல்லது கைக்கொள்ளவேண்டா; தண்ணீரிலுஞ் சோற்றி லுந் தீங்குவாராமற்காத்தற்குக் கருங்குரங்கிற்கு இட்டு ஆராய்கவென்றானென்க

அன்னம் கண்குருதிகாலும்; சககரவாகம் முகங்கடுக்கும்; குரங்கு உண்ணாது. ()

அஞ்சனக்கோலினாற்றநாகமோரருவிக்குன்றிற்
குஞ்சரம்புலம்பிவீழக்கூர்றுதியெயிற்றிற்கொல்லும்
பஞ்சியின்மெல்லிதேனும்பகைசிறிதென்னவேண்டா
வஞ்சித்தற்காக்கவேண்டுமரும்பொருளாகவென்றான்.

இ - ள். அஞ்சனக்கோலால் அடித்தற்குப் பற்றாததோர்நாகம் தன்னெயிற்றா லே அருவிக்குன்றுவீழ்வபோற் குஞ்சரம்புலம்பிவீழக் கொல்லும்; ஆதலிற் பஞ்சியிற் காட்டின் மெல்லிதாயினும் பகையைச் சிறிதென்றுகருதவேண்டா; அதனை யரும் பொருளாகநினைத்து அஞ்சித் தன்னைக் காக்கவேண்டுமென்றானென்க. (௬)

பொருந்தலாற்பல்லிபோன்றும்போற்றலாற்றாயரொத்து
மருந்தவர்போன்றுகாத்துமடங்கலாலாமைபோன்றுந்
திருந்துவேற்றெவ்வர்போலத்தீதறவெறிந்துமின்ப
மருந்தினன்மனைவியொத்துமதலையைக்காமினென்றான்.

இது இவனைக் காக்கும்வண்ணங்கூறுகின்றது.

---

* திருக்குறள், கூடாநட்பு, அ.

இ - ள். விடாமலிவனிடத்திருத்தலிற் பல்லியைப்போன்றும், இவற்கு வேண்டுவனசெய்துபோற்றலிற் றுயனையொத்தும், அருந்தவர் சீலமுதலியவற்றைத் தப்பாமற்காக்குமாறுபோல இவற்கும் அவைதப்பாமற்காத்தும், ஐம்பொறியுந் தனக்கடங்கலின் ஆமையையொத்தும், இவற்குத் தீதுண்டானல் அதுதீரும்படி பகைவனைப்போலே யிடித்தும், அடிசிலில் இவன்விரும்புவனவேதேடி நுகர்வித்தலின் மனைவியையொத்தும் நமக்குப்பற்றுனவனைக் காப்பீராகவென்றுனென்க.

*"வான மூன்றிய மதலை போல" என்றார்பிறரும். தாம் அடங்கியேயிவனையடக்கல்வேண்டுமெனக் கூறுகின்றவன் இங்ஙனங்கூறினனென்க. பலருங்கேட்டலிற் காமினென்றான். (எ)

பூந்துகின்மாலைசாந்தம்புனைகலம்பஞ்சவாச
மாய்ந்தளந்தியற்றப்பட்டவடிசினீரின்னவெல்லா
மாந்தரின்மடங்கலாற்றப்பதுமுகன்காக்கவென்றுங்
கேந்துபூண்மார்பனேவவின்னணமியற்றினனே.

இ - ள். அதுகேட்டசீவகன் இவர்களை நெஞ்சாலேயாராய்ந்துபார்த்து இவர்களிற் றுகின்முதலியவித்தன்மையவெல்லாவற்றையும் நெஞ்சாலேயளந்து பதுமுகன் காப்பானகவென்றேவ, அவனும் இப்படிக் காத்தலை நடத்தினனென்க. (அ)

வேறு.

சிறுகண்யானையினஞ்சேர்ந்துசேவகங்கொளத்
துறுகலென்றுணர்கலாத்துள்ளிமந்திம்மக
கறியசந்தின்றுணிநாறவெந்தனகள்கொண்
டெறியவெள்கிம்மயிர்க்கவரிமாவிரியுமே.

இ - ள். யானைத்திரள் துயில்கோடலிற் குரங்கின்குட்டிகள் அதனைக் கல்லென்றுகருதி யானையென்றுணராவாய் மேலேதுள்ளிச் சந்தனக்குறடுவெந்தனவற்றைக்கொண்டு ஒன்றையொன்றெறிய, அதுகண்டு கவரிமா நாணுக்கென்றிரியுமென்க.

துள்ளும் பாடமாயின், துள்ளுமகவென்க. (௯)

புகழ்வரைச்சென்னிமேற்பூசையிற்பெரியன
பவளமேயனையனபன்மயிர்ப்பேரெலி
யகழுமிக்குலிகவஞ்சனவரைச்சொரிவன
கவளயானையினுதற்றவழுங்கச்சொத்தவே.

இ - ள். பவளமேயனையவாகிய மயிரையுடைய வெருகிற்பெரியனவாகிய பேரெலி அஞ்சனவரையிலேயிருந்து அகழுஞ் சாதிலிங்கந் தாழ்வரையின் றலையிலே வீழ்கின்றவை யானையினுதலிலேதவழும் பட்டுக்கச்சையொத்தனவென்க.

† "வெவ்வாய் வெருகினைப் பூசை யென்றலும்" என்றார். (௧௦)

* பெரும்பாணாற்றுப்படை:—வான மூன்றிய மதலை போல, வேணி சாத்திய வேற்றருஞ் சென்னி, விண்பொர நிவந்த வேயா மாடத்து.

† தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், சுஅ.

அண்ணலங்குன்றின்மேல்வருடைபாய்ந்துழக்கலி
னெண்மணிபலவுடைந்தொருங்கவைதூளியாய்
விண்ணுளுருவுண்டெனவீழுமாநிலமிசைக்
கண்ணகன்மரமெலாங்கற்பகமொத்தவே.

இ - ள். குன்றின்மேற்றிரியும் வருடைமான் பாய்ந்துமிதித்தலின், மணிகள் பலவுமுடைந்து செந்தூளியாய் அத்தூளி தேவருலகை உருவுண்டதென்னும்படி நிலத்தேவீழாநிற்கும்; அங்ஙனம் விழுதலின் நிலத்தின்மரமெல்லாம் அதுபோர்த்துக் கற்பகத்தையொத்தனவென்க. (கக)

மானிடம்பழுத்தனகிலுத்தமற்றவற்றயற்
பான்முரட்பயம்பிடைப்பனைமடிந்தனையன
கானிடைப்பாந்தள்கண்படுப்பனதுயிலெழ
வூனுடைப்பொன்முழையாளிநின்றுலம்புமே.

முரண் - மாறுபாடு.

இ - ள். மக்கள்வடிவாகப் பழுத்தனவாயிருந்தன கிலுத்தமென்னுமரம். பின்னை அவற்றயலிற் கானிடையிலே பால்போல வெள்ளிய ஏற்றிழிவுடையநிலத்திற் குழியிடையிலே பனைகிடந்தனையனவாகிய பாந்தள்துயில்வன துயிலெழும்படி யாளிநின்று இடிக்குமென்க.

முரட்பரம்பும் பாடம். (கஉ)

சாரலந்திமிசிடைச்சந்தனத்தழைவயின்
னீரதீம்பூமரந்நிரந்ததக்கோலமும்
மேரிலவங்கமும்மின்கருப்பூரமும்
மோருநாவிகலந்*தோசனைகமழுமே.

திமிசு - ஒருமரம்.

இ - ள். திமிசுசூழ்ந்த சந்தனமரத்திற் றழைக்கு நடுவே நின்ற நீர்மையையுடைய தீம்பூமரமும், தக்கோலமரமும், இலவங்கமரமும், கருப்பூரமரமும், புழுகோடேகூடி நாற்காதவெல்லை நாறுமென்க. (கங)

மைந்தரைப்பார்ப்பனமாமகண்மாக்குழாஞ்
சந்தன்மேய்வனதவழ்மதக்களிற்றினம்
மந்தழைக்காடெலாந்திளைப்பவாமானினஞ்
சிந்தவால்வெடிப்பனசிங்கமெங்குமுளா.

இ - ள். பார்ப்பனவாகிய பெரியமகண்மாக்குழாமும், மேய்வனவாகிய களிற்றினமும், திளைப்பனவாகிய ஆமானினமுஞ் சிந்தும்படி வால்வெடிப்பனவாகிய சிங்கம் எவ்விடத்தும் உளவாயிருக்குமென்க.

இனி யிவைநான்கும் எங்குமுளவென்றுமாம. (கச)

வருக்கையின்கனிதொறும்வானரம்பாய்ந்துராய்ப்
பொருப்பெலாம்பொன்கிடந்தொழுகிமேற்றிருவில்வீழ்ந்

---

* நாற்காதத்தை யோசனையென்பது சைனநூல் வழக்கம்.

தொருக்குலாய்நிலமிசை மிளிர்வவொத்தொளிர்மணி
திருக்கிளரொளிகுலாய்வானகஞ்செகுக்குமே.

இ - ள். பொருப்பெலாம் கனிதோறும் வானரம்பாய்கையினுலே அதிற்றேன் பரந்தொழுகிப் பொன்கிடந்து மணியொளிகுலாவி மேலுண்டாகியதிருவில் நிலமிசை வீழ்ந்து ஒருங்குவளைந்து மிளிர்வனவற்றையொத்து விசும்பைவெல்லுமென்க.

செய்தெ னெச்சங்களைக் காரணமாக்குக. பொருப்புச் செகுக்கும். ஒருங்கு-விகாரம். (கரு)

வீழ்பனிப்பாறைநணணெறியெலாம்வெவ்வெயிற்
போழ்தலின்வெண்ணெய்போழ்பொழிந்துமட்டொழுகுவ
தாழ்முகில்சூழ்பொழிழ்சந்தனக்காற்றசைந்
தாழ்துயர்செய்யுமவ்வருவரைச்சாரலே.

இ - ள். வீழ்ந்தபனிக்கட்டிகள் வெயிலுருக்குதலாலே, வெணணெய்போலே பொழிவதுஞ்செய்து மட்டொழுகுவனவாகிய முகில்சூழ்பொழிலிற் சந்தனக்காற்று மசைந்து இப்படி அவ்வருவரைச்சாரலின் நெறியெல்லாம் ஆழ்துயரைச் செய்யுமென்க. (கசு)

கூகையுங்கோட்டமுங்குங்குமமும்பரந
தேகலாகாநிலத்தல்கிவிட்டெழுந்துபோய்த்
தோகையும்மன்னமுந்தொக்குடன்ஞர்ப்பதோா
நாகநன்காவினுணயந்துவிட்டார்களே.

கூகை - ஒருகொடி. *“கூகை நூன்றுடுகுழீஇயின” வென்றூர்பிறரும்.

இ - ள். கூகைமுதலியனபரத்தலின், அழகாற் போதற்கரியநிலத்தே தங்கி அவ்விடத்தைவிட்டெழுந்துபோய் மயிலுமன்னமுமார்ப்பதோர் காவிலேவிட்டாரென்க.()

வேறு.

பூத்தகிறவழும்போர்வைபூசுசாநதாறிபொன்னூற்
கோத்துநீர்பிலிற்றுங்காந்தங்குங்குமவைரப்பொற்கோய
சாத்துறிபவளக்கன்னல்சந்தனவாலவட்ட
நீத்தவரிடத்துநாற்றிநிழன்மணியுலகஞ்செய்தார்.

இ - ள். அகிற்புகை பொலிவுபெற்றுப்பரக்கும் படாமுதலியவற்றையும, சிற்று லவட்டத்தையும், காந்தத்தையும, குங்குமம்வைக்கும் வைரமழுத்தின குகையையும், பரணிக்கூட்டையும், பவளக்கரகத்தையும், சந்தனமரத்தாற்செய்த பேராலவட்டத் தையுந் தாபதரிடத்தேதூக்கி, அவ்விடத்தைத் தேவருலகாக்கினுரென்க. (கஎ)

---

* மலைபடுகடாம்:—நாவல், காவிற் கருங்கனி கல்லறை யுதிர்ந்தன, நீரூ றுயவை மாறுகொள வொழுகின, கூகை நூன்றுடு குழீஇயின தேமாச், சேறுசிறந் துண்ணுநர்த் தடுத்தன.

நித்திலமுலையினார்தநெடுங்கணானோக்கப்பெற்றுங்
கைத்தலந்தீண்டப்பெற்றுங்கனிந்தனமலர்ந்தகாண்க
வைத்தலர்கொய்யத்தாழ்ந்தமரமுயிரில்லையென்பார்
பித்தலராயிற்பேய்களென்றலாற்பேசலாமோ.

இ-ள். மகளிர் கண்ணால் நோக்கப்பெற்றும், கையால் தீண்டப்பெற்றும், கனியாதன கனிந்தன; மலராதன மலர்ந்தன; அவர் கையைவைத்து அலர்கொய் யத் தாழ்ந்துகொடுப்பதுஞ்செய்தன; காண்க, ஆதலின், மரம் உயிரில்லையென்பார் பித்தர்; அல்லராயிற் பேய்களென்றல்லது வேறே பேசலாமோவெனத் தம்முட்கூறி னாரென்க. (கக)

பொறிமயிலிழியும்பொற்றார்முருகனிற்பொலிந்துமாவி
னெறிமையினிழிந்துமைந்தன்மணிக்கைமத்திகையினீக்கி
வெறுமையினவரைப்போக்கிவெள்ளிடைப்படாதநீரா
லறிமயிலகவுங்கோயிலடிகளைச்செவ்வியென்றான்.

வெறுமையினவர் - அறிவின்மையை யுடையார். வெள்ளிடை - வெள்ளிய விடம்.

இ-ள். மைந்தன் மயிலினின்றிழியுமுருகனைப்போல மாவினின்று இழியு நெறியானிழிந்து கையினின்றும் மத்திகையைநீக்கி யறிவிலாதாரைச் செவ்வியறியப் போக விடுத்தாற் றேவியையறிந்து வெளியாமிடமுண்டாம்; அஃதாகாததோர் தன்மையாலே நீதானேசென்று அடிகளைச் செவ்வியறியென்றானென்க.

அன்புசெலுத்தலின் அவனோடேகூடச்செல்கின்றவன் செவ்வியறிந்தேசேறல் நீதியாகலானும், பதுமுகன் றன்னையறிவிக்கத் தேவியறியவேண்டுதலானுஞ் செவ்வி யறியென்றானென்க. (உ0)

எல்லிருட்கனவிற்கண்டேன்சண்ணிடனாடுமின்னே
பல்லியும்பட்டபாங்கர்வருங்கொலோநம்பியென்னாச்
சொல்லினடேவிநிற்பபதுமுகன்றொழுதுசேர்ந்து
நல்லடிபணிந்துநம்பிவந்தனனடிகளென்றான்.

எல் - பகல்.

இ-ள். விடியற்காலத்திருளிலே கனவிலே நம்பிவரக்கண்டேன்; இடக்கண் ஆடும்; நல்லவிடத்தே பல்லியுமிட்டன; ஆதலால் நம்பி இன்னேவருமோவென்று கூறினாளாய்த் தேவிநின்றவளவிலே, பதுமுகன்சேர்ந்து தொழுது வணங்கி, அடிக ளே! நம்பிவந்தானென்றானென்க.

நம்பி - நம் முதனிலையாக நமக்கு இன்னானென்னும் பொருள்படவருவதோர் உயர்ச்சிச்சொல். (உக)

எங்கணையனென்றாட்கடியன்யானடிகளென்னாப்
பொங்கிவில்லுமிழ்ந்துமின்னும்புகழ்மணிக்கடகமார்ந்த
தங்கொளித்தடக்கைகூப்பித்தொழுதடிதழுவிவீழ்ந்தா
னங்கிரண்டறப்புமுன்னீரலைகடல்கலந்ததொத்தார்.

முன்னீர் - முற்பட்டநீர்மை; அஃதாவது உதிரமுறவறியுமென்னும் பழமொழி.

இ - ள். ஐயன் எவ்விடத்தானென்று வினவினாட்குச் சீவகன்றானும் அன்புமிகுதியாற் கூடச்சேறலின், இவனென்று பதுமுகன் கூறாமல் அடிகளே! அடியேன் யானென்றுத் தொழுது அடியைப்பிடித்துவீழ்ந்தான்; அவ்விடத்து அவ்விருவரும் முன்னீராலே யிரண்டற்புக்கடல் கலந்ததன்மையை யொத்தாரென்க.

இதுகருதி முன் வெள்ளிடைப்படாதவென்றார். (௨௨)

திருவடிதழுவிவீழ்ந்தசிறுவனைக்கண்டபோழ்தே
வருபனிசுமந்தவாட்கண்வனமுலைபொழிந்ததீம்பான்
முருகுடைமார்பிற்பாய்ந்துமுழுமெய்யுநனைப்பமாதர்
வருகவென்களிறென்றேத்திவாங்குபுதழுவிக்கொண்டாள்.

இ - ள். அங்ஙனம்வீழ்ந்த சிறுவனைக்கண்டபொழுதே வாட்கண்சுமந்த பெருகுகிறநீரும், முலைபொழிந்தபாலும் அவனெழுந்திருக்கின்றகாலத்தே மெய்யைநனைத்தலாலே, ஐய! நீயிங்கேவருகவென்றேத்தி அவனுடையமார்பிற்காட்டிற் றன்மார்பு பாய்ந்து அவனையொடுங்குமபடி தழுவிக்கொண்டாளென்க.

இன் - உறழ்பொரு. பாயவெனத்திரித்து, ஏத்தி வாங்கி அவை முருகுடைமார்பிற்பாயத் தழுவிக்கொண்டாளென்றுமாம். (௨௩)

காளையாம்பருவமோராள்காதல்மீக்கூர்தலாலே
வாளையார்நெடியகண்ணாண்மகனைமார்பொடுங்கப்புல்லித்
நாளையாமுன்புசெய்ததவந்ததுவிளைவிலாதேன்
றுளையாந்தீர்ந்ததென்றாடொழுதகுதெய்வமன்னாள்.

இ - ள். அருந்ததிபோல்வாளாகியவிசயை, சிளமைபபருவம் இனித் தழுவலாகாதென்றோராளாய்க் காதல்பெருகிபரத்தலாலே மகனைக் குழவிப்பருவம்போலே தன்மார்பிலேயொடுங்கும்படி தழுவி, ஐயனே! முற்பிறப்பின்முயற்சியாற்செய்த தவப்பயனில்லாதேன் றுளில் வருத்தந் தீர்ந்ததென்றாளென்க

அரசனைக்கோறலின், வாளையொக்கு நெடியகண்ணாளென்று அவட்குப் பெயராயிற்று. ஐ - அசையுமாம். (௨௪)

வாட்டிறற்குரிசிறன்னைவாளமாகத்துணித்துக்
காட்டகத்தும்மைநீத்தகயத்தியேன்காணவந்தீர
சேட்டிளம்பரிதிமார்பிற்சீவகசாமியீரே
யூட்டரக்குண்டசெந்தாமரையடிநோவவென்றாள்.

இ - ள். பெருமையையுடைய இளைய பரிதிபோலுமார்பினையுடைய சீவகசாமியீரே! தாமரைபோலும் அடி நோம்படி அரசனையமரிலேகைவிட்டு நும்மைச் சுடுகாட்டிலே கைவிட்ட கொடியேனைக் காணவந்தீர, இஃதோரன்பின்மிகுதி யிருந்தவாறு என்னென்றாளென்க.

சீவகசாமியென்று மிருபெயரொட்டுப் பண்புத்தொகை *"பண்பு கொள்

* தொல்காப்பியம், சொல்லதிகாரம். விளிமரபு, ௨௩.

பெயரு மதனோ ரற்றே" என்றசூத்திரத்திற் றன்னினமுடித்தலென்பதனாற் சேகசாமியீரேயென ஈரோடு ஏகாரம்பெற்றதெனக் கூறினும். (உரு)

கெடலருங்குரைபகொற்றங்கெடப்பிறந்ததுவுமன்றி
நடலையுளடிகள்வைகநட்புடையவர்கணைய
விடைமகன்கொன்றவின்னுமரத்தினேன்றந்ததுன்பக்
கடலகத்தழுந்தவேண்டாகளைகவிக்கவலையென்றான்.

குரைய - அசை. கொற்றங்கெட - அரசன்பட. நட்புடையவர் - சச்சந்தனொடுநட்புக்கொண்டவர்; என்றது தோழருடையதந்தையரை.

இ - ள். கொற்றங்கெட நட்புடையவர்நைய அடிகள் வருத்தத்தேதங்கப் பிறந்ததுவுமன்றி யிப்பொழுதும் இடையன்கொன்ற மரத்தின் றன்மையுடையேனாகிய யான்றந்த துன்பக்கடலிலே அழுந்த வேண்டா; இத்துன்பத்தைக் களைகவென்றானென்க.

உயிருடனிருந்தேனாய்ப் பகையைவென்றேனுமல்லேன்; உயிரை நீத்தேனுமல்லேனென்று கருதி மரத்தினேனென்றான். (உசு)

க. யானலனவ்வையாவாள்சுநந்தையேயையற்கென்றுங்
கோனலன்றந்தைகந்துக்கடனெனக்குணத்தின்மிக்க
பாலிலத்துறையுந்தீந்தேனனையவாயமிர்தமூற
மானலங்கொண்டநோக்கிமகன்மனமகிழச்சொன்னாள். (உஎ)

உ. எனக்குயிர்ச்சிறுவனுவானந்தனேயையனல்லன்
வனப்புடைக்குமரனிங்கேவருகெனமருங்குசேர்த்திப
புனக்கொடிமாலையோடும்பூங்குழறிருத்திப்பொறாற
ரினத்திடையேறனுனுக்கின்னளிவிருந்துசெய்தாள்.

இவையிரண்டுமொருதொடர்.

இருமுதுகுரவர்க்குந் துன்பஞ்செய்தேனென்றலின், உனக்கு இவரன்றோ இருமுதுகுரவரென்கின்றாள்.

இ - ள். குணத்தின்மிக்க விசயை, நினக்குத்தாயாவாள் சுநந்தையே; யானல்லேன்; தந்தையாவான் கந்துக்கடனே, கோனல்லனென்று பாலிடத்தே தங்குந்தேனையொப்பனவாய் இனிமையூறும்படி வார்த்தைகூறினாள்; கூறிப் பின்பு புனக்கொடிபோல்வாள் சீவகன் மகிழும்படி எனக்கு உயிர்போலுஞ் சிறுவனான் நந்தட்டனே; நீயல்லை; ஆதலாற் குமரன்! இவ்விடத்தேவருகவென்றுகூறி அருகே யணைத்துத் திருத்தி அவனுக்கு இனிய தண்ணளியாகிய விருந்தைச்செய்தாளென்க.

அல்லன் - முன்னிலைப்படர்க்கை. (உஅ)

க. சிறகராற்பார்ப்புப்புல்லித்திருமயிலிருந்ததேபோ
லிறைவிதன்சிறுவர்தம்மையிருகையினாலும்புல்லி
முறைமுறைகுமரர்க்கெல்லாமொழியமைமுகமன்கூறி
யறுசுவையமிர்தமூட்டியறுபகல்கழிந்தபின்னாள். (உகூ)

வேறு.

௨. மரவநாகமணங்கமழ்சண்பகங்
குரவங்கோங்கங்குடம்புரைகாய்வழை
விரவுபூம்பொழில்வேறிருந்தாய்பொரு
ளுருவமாதருரைக்குமிதென்பவே.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். மயில் தன்பார்ப்புக்களை இரண்டுசிறகாலும் புல்லியிருந்த தன்மைபோலத் தன்சிறுவரை இரண்டுகையினாலும் புல்லி அமைந்த முகமனாகிய மொழிகளை முறைமுறையே தோழர்க்கெல்லாங்கூறி யடிசிலையூட்டி ஆறுநாள்கழிந்தபின்பு, அம்மாதர் மரவமுதலிய விரவியபொழிலிலே, காரியத்திற்குரியவரை வேறே கொண்டிருந்து நூற்கண் ஆராய்ந்த இப்பொருளை உரையாநிற்குமென்க. (௯0)

நலிவில்குன்றொடுகாடுறைநன்பொருட்
புலியனாமகட்கோடலும்பூமிமேல்
வலியின்மிக்கவர்தம்மகட்கோடலு
நிலைகொள்மன்னர்வழக்கெனநேர்பவே.

இ - ள். அழித்தற்கரிய மலையிலுங் காட்டிலுமுறைகின்ற பெரும்பொருளையுடைய குறுநிலமன்னர் மகளைக் கொள்ளுதலும், வலியவரசர் மகளைக் கொள்ளுதலுந் தம்முன்னுள்ளோர்நிலையைக் கொள்ளவேண்டிய மன்னர்முறைமையென்று மதிவல்லோர் நேர்வரென்க.

எனவே வலியின்மிக்கவர்மகளை நீகொண்டது நன்றென்றாள். (௯௧)

நீதியாலறுத்தந்நிதியீட்டுத
லாதியாயவரும்பகைநாட்டுதன்
மோதி * முள்ளொடுமுட்பகைகண்டிடல்
பேதுசெய்துபிரித்திடல்பெட்டதே.

இ - ள். அரசநீதியாலே ஆறிலொன்றாக வறுத்திட்டு அப்பொருளை யீட்டுதல், தொன்றுபட்டபகையைத் தந்நெஞ்சிலே நிலைபெறுத்துதல், முள்ளைக்கொண்டு முள்ளைக்களையுமாறுபோலே தமக்கு ஒன்றாராய் உறவா யிருப்பவரிருவரைத் தம்மிற்பேதுசெய்து ஒருவரைக்கொண்டு ஒருவரை மோதியிடுதல், தம்மிற்கூடிவந்து வினைசெய்வாரைப் பிரித்துத் தம்மோடே கூட்டிக்கோடல், இவை அரசர்விரும்பப்பட்ட காரியமென்க. (௯௨)

ஒற்றர்தங்களையொற்றரினாய்தலுங்
கற்றமாந்தரைக்கண்ணெனக்கோடலுஞ்
சுற்றஞ்சூழ்ந்துபெருக்கலுஞ்சூதரோ
கொற்றங்கொள்குறிக்கொற்றவற்கென்பவே.

---

* முள்ளொடு முட்பகை கண்டிடலென்பதைப் பின்னுள்ள வெண்பாவிற் காண்க. **பழமொழி**, ௫௯:—தெள்ளியுணருந் திறனுடையார் தம்பகைக், குள்வாழ் பகையைப் பெறுதலுறுதியே, கள்ளினாற் கள்ளறுத்தல் காண்டு மதுவன்றே, முள்ளினான் முட்களையு மாறு.

இ - ள். ஒற்றரை யொற்றரைக்கொண்டாராய்தலும், நீதிநூல்கற்ற அமைச்சரைக் கண்ணென்றுகோடலும், மந்திரிச்சுற்றத்தையுந் தந்திரிச்சுற்றத்தையும் இவன் இதற்குரியனென்று விசாரித்துப்பெருக்கலும் வெற்றிகொள்ளுங் கருத்தையுடைய அரசற்கு உபாயமென்க. (௬௩)

க. வென்றியாக்கலுமேதகவாக்கலுங்
குன்றினார்களைக்குன்றெனவாக்கலு
மன்றியுங்கல்வியோடழகாக்கலும்
பொன்றுஞ்சாகத்தினாய்பொருள்செய்யுமே. (௬௪)

உ. பொன்னினாகும்பொருபடையப்படை
தன்னினாகுந்தரணிதரணியிற்
பின்னையாகும்பெரும்பொருளப்பொருள்
துன்னுங்காலைத்துன்னாதனவில்லையே.

இவையிரண்டுமொருதொடர்.

செய்தல் - தேடுதல்.

இ - ள். ஆகத்தினாய்! அங்ஙனந்தேடும் பொருள் பலவெற்றியையுண்டாக்கலும், மதிப்பையுண்டாக்கலும், கல்வியையும் அழகையுமுண்டாக்கலும், குறைந்தவரைப் பெருகவாக்கலுமன்றியும், இப்பொருளாலே படையாம்; அதனாலே தரணியாம், அதனாலே பின்னைப் பெரியபொருளாம்; அது கைகூடுமளவில் வீடுங் கிடைக்குமென்க.

என்றவள் இங்ஙனமுரைக்குமென வருவிக்க. (௬௫)

நிலத்தினீங்கிநிதியினுந்தேய்ந்துநங்
குலத்திற்குன்றியகொள்கையமல்லதூஉங்
கலைக்கணாமருமிங்கில்லைகாளைநீ
வலித்ததென்னெனவள்ளலுங்கூறுவான்.

இ - ள். இங்ஙனமுரைத்துப் பின்னுங் காளாய்! நிலத்தினின்றுநீங்கிப் பொருளினுங்குறைந்து நங்குலத்திற்குறைந்த கொள்கையேம்; இந்நிலையேயன்றி இதனை நீக்கற்குரிய அமைச்சருமில்லை, இந்நிலைக்கு நீதுணிந்தகாரியமென்னென்று தேவிகேட்ப, அவனும் ஒருமொழிகூறினானென்க. (௬௬)

வேறு.

எரியொடுநிகர்க்குமாற்றலிடிக்குரற்சிங்கமாங்கோர்
நரியொடுபொருவதென்றாற்சூழ்ச்சிநற்றுணையோடென்னாம்
பரிவொடுகவலவேண்டாபாம்பவன்கலுழனாகுஞ்
சொரிமலர்ச்சுரும்புண்கண்ணிச்சூழ்கழனாந்தனென்றான்.

இ - ள். சிங்கந் தனக்குநிகராகிய சிங்கத்தோடேயன்றி நரியோடே பொரக்கடவதென்றால் அவ்விடத்து அருளிச்செய்த சூழ்ச்சியுந் துணைகளுமென்னாய்முடியும்; அதுபோல யான் அவனுடனே பொருவதானால், அவைவேண்டா; யானேயுமன்றிப் பொருமளவில் அவன்பாம்பும் நந்தட்டன் கருடனுமாயிருக்கும்; ஆதலால் எம்மேல் வைத்தவன்பாலே இதற்குவருந்தவேண்டா வென்றானென்க.

இவனைக்காணக் கெடுமென்றான். (௬௭)

கெலுழனேநந்தனென்னுக்கிளரொளிவளப்பினனைக்
கலுழத்தன்கையிற்றீண்டிக்காதலாற்களித்துநோக்கி
வலிகெழுவயிரத்தூண்போற்றிரண்டுநீண்டமைந்ததின்றோட்
கலிகெழுநிலத்தைக்காவாதொழியுமோகாளைக்கென்றாள்.

இ - ள். அதுகேட்டதேவி நந்தன்கருடனேயென்று காதலிற்களித்து நோக்கி அவனை மனமுருகும்படி தன்கையினாலேதீண்டி இத்தோள்கள் உனக்கு நிலத்தைக் கொண்டுதந்து அதனைக்காவாதே யிருக்குமோவென்றாளென்க.

தந்தென வருவிக்க. கலி - கட்டியங்காரன். காளை - சீவகன். (கஅ)

க. இடத்தொடுபொழுதுநாடிபெவ்வினைக்கண்ணுமஞ்சார்
மடப்படலின்றிச்சூழுமறிவல்லார்க்கரியதுண்டோ
தடத்திடைக்காக்கையொன்றேயாயிரங்கோடிகூகை
யிடத்திடையழுங்கச்சென்றாங்கின்னுயிர்செகுத்ததன்றே. (கக)

உ. இழைபொறையாற்றகில்லாதிட்டிடைநளரநின்ற
குழைநிறமுகநதிறா போழ்குறித்ததேதுணிந்துசெய்யார்
முழையுறைசிங்கம்பொங்கிமுழங்கிமேற்பாய்ந்துமைநோய்
வழையுறைவனத்துவன்கணரிவலைபட்டதன்றே.

இவையிரண்டுமொருதொடர்.

மடப்படல் - விகாரம்.

இ - ள். காட்டிலே ஒருகாக்கை எண்ணிறந்த கூகையிருக்கின்ற விடத்தே அவைவருந்தும்படி பகறகாலத்தேசென்று கொன்றதல்லவோ; சிங்கம் இடமறியாதே செறிந்தவனத்தின் நரிமேலேபாய்ந்து அநநரியாகியவலையிலே அகப்பட்டதல்லவோ; ஆதலால், யாம வீரமுடையேமென்று மகளிரைப்போலே தாங்கினைத்ததே துணிந்துசெய்யாராய்க் காலத்தையுமிடத்தையுநாடி அஞ்சச்செய்யும் வினையிடத்து மஞ்சாராய்ச் சூழுமறிவினையும்வல்லார்க்குப் பின்னை அரியவினையுண்டோவென்றாளென்க.

வீரத்தையேகருதாதே காலமுமிடமுமறிந்துசெய்கவென்றாள். * "பகல்வெல்லுங் கூகையைக் காக்கை" என்றும், † "காலாழ் களரி னரியடும்" என்றுந் தேவருங் கூறினர். (உ௦)

ஊழிவாய்த்தீயொடொப்பான்பதுமுகனுரைக்குமொன்று
ராழிவாய்த்துஞ்சமற்றெம்மாற்றலாலொருஙகிவென்று
மாழைநீணிதியந்துஞ்சுமாநிலக்கிழமையெய்தும்
பாழியாற்பிறரைவேண்டேம்பணிப்பதேபாணியென்றான்.

இ - ள். அதுகேட்டுத் தீயோடொப்பானாகியபதுமுகன் எம்மாற்றலால்நெருங்

* திருக்குறள், காலமறிதல், க.
† ,, இடனறிதல், க௦.

கிப்பகைவரை யாழிவாயிலேபடும்படிவென்று நிலக்கிழமைமையெய்துவேமாதலின், வலியாற்பிறரைவிரும்பேம்; அருளிச்செய்யுமதே தாமதமென்றானென்க.

எய்தும் - பன்மைத்தன்மை. பாழியேமென்றும் பாடம். (சுக)

பொருவருங்குரையமைந்தர்பொம்மெனவுரறிமற்றிந்
திருவிருந்தகன்றமார்பன்சேவடிசேர்ந்தயாங்க
ளெரியிருந்தயருநீர்மையிருங்கதிரேற்றதெவ்வா
வருபனியிருளுமாகமதிக்கவெம்மடிகளென்றார்.

பொருதல் - விகாரம்.

இ - ள். ஒழிந்த தோழர் கடுகமுழங்கி இச்சீவகனடியைச் சேர்ந்தயாங்கள் வெம்மைக்கு நாமொவ்வோமென்று நெருப்பிருந்து வருந்துந்தன்மையையுடைய ஞாயிறும், எம்முடனெதிர்த்த செவ்வர் பனியும் இருளுமாக, எம்மடிகள் மதித்தருளுகவென்றாரென்க. (சுஉ)

வேறு.

கார்தோன்றவேமலருமுல்லைகமலம்வெய்யோன்
றேர்தோன்றவேமலருஞ்செம்மனின்மாமன்மற்றுன்
சீர்தோன்றவேமலருஞ்சென்றவன்சொல்லினோடே
பார்தோன்றநின்றபகையைச்செறற்பாலையென்றாள்.

இ - ள். அதுகேட்டதேவி, செம்மால்! காருந்தேருந் தோன்றினவளவிலே, முல்லையுங் கமலமும் மலருமாறுபோல, உன்சீர்தோன்றின பொழுதே, நின்மாமன் அகமலர் மலரும்; ஆதலான் அவனிடத்தே சென்று அவனேவலோடே பகையைக் கொல்வாயாக வென்றாளென்க.

பார் நின்றலே விளங்க. நின்ற - நிலைபெற்றுநின்ற. (சுஙு)

நன்றப்பொருளேவலித்தேன்மற்றடிகளுளைச்
சென்றப்பதியுளெமர்க்கேயெனதுண்மைகாட்டி
யன்றைப்பகலேயடியேன்வந்தடைவனீமே
வென்றிக்களிற்றானுழைச்செல்வதுவேண்டுமென்றான்.

இ - ள். அடிகளே! கூறியது நன்று; தோழரறிவித்த அன்றைப் பகற்பொழுதே அந்தக் காரியமே யானுந்துணிந்தேன்; இனி நாளை யிராசமாபுரத்தே சென்று என்சுற்றத்திற்கு யானிருந்தபடியை யறிவித்து ஒருநாளிருந்து மற்றைநாளேபோந்து அடியேனடைவேன்; நீர் என்மாமனிடத்து ஏறச்செல்லு நிலைமையை விரும்புமென்றானென்க.

"இளையவண் மகிழ்வகூறி" என்னுங்கவியானும், "வீட்டகந்தோறும் * * எதிர்கொள்க" என்றதனானும், "ஊர்தோறு" என்றதனானும் அன்றைப்பகலே வருவேனென்றல் பொருந்தாமையுணர்க. *"கிளந்த வல்ல செய்யுளுட் டிரிநவும்" என்ற

* தொல்காப்பியம், எழுத்ததிகாரம், குற்றியலுகரப்புணரியல், எஎ.

தனுல் நும்மென்னுஞ்சொல் நீயிரென முழுவதுந் திரியாது மகரநிற்பத்திரிந்து நீமெனநின்றது. ஏகாரம்-பிரிநிலை. இனி நீமென்று ஓர் திசைச் சொல்லுமாம். ()

வேழ்ந்றைவந்தன்னநுதிவெம்பரற்கானமுன்னி
நூற்றைவ்ரோடுநடந்தாணுதிவல்வின்மைந்தன்
காற்றிற்பரிக்குங்கலிமான்மிசைக்காவலோம்பி
யாற்றற்கமைந்தபடையோடதர்முன்னினுனே.

நுதி - முன்பு; "மதியோ நுதலாா நுதிக்கோலஞ் செய்து" என்றாற்போல. ஓம்பி - ஓம்ப.

இ - ள். வல்வின்மைந்தன் படையாலே தேவிக்குக்காவலிட, அவளும் அவன் போவதற்குமுன்பே நூற்றைவரோடே கானமுன்னிநடந்தாள்; நடந்தபின்பு அவன் மான்மிசையேறி யதனைப்போகத் தொடங்கினுனென்க.

பகைவாகக்கஞ்சி அவன் படையைக் காவலிட்டபின்பு, தேவிதான் தனக்குக் காவலாகத் தன்னைப்போல் நோன்புகொண்ட மகளிராய்ப் பள்ளியிலுறைவார் நூற்றைவரோடேபோனுள், தவஞ்செய்வார் தனியேபோதன் மரபன்றென்று. இனி வல்வின் மைந்தன் முன்பு படையோடே மான்மிசையிலேயேறி அதனைமுன்னினவன் தேவிக்குக்காவலோம்ப, அவள் நோன்புகொண்டமகளிர் நூற்றைவரோடே நடந்தாளென்றுமாம். இனி நடந்தானென்று பாடமோதி, முன்பு படையோடே அதர் முன்னினவன் மாமிசையினுள்ளானைத் தேவிக்குக்காவலாகவோம்பித் தான் நூற்றைவரோடுமே போனுனென்பாருமுளா. (சரு)

மன்றற்கிடனுமணிமால்வரைமார்பன்வான்க
ணின்றெத்திசையுமருவிப்புனனீத்தமோவாக்
குன்றுங்குளிர்நீர்த்தடஞ்சூழ்ந்தனகோலயாறுஞ்
சென்றப்பழனப்படப்பைப்புலனுடுசேர்ந்தான்.

மன்றற்கு - கல்யாணத்திற்கு. வான் தன்னிடத்தேமாருதுபெய்தலின், அருவி நீர்ப்பெருக்கொழியாதகுன்று. படப்பை - தோட்டம்.

இ - ள். மாாபன் குன்றையும், ஆற்றையுங்கடந்து அவ்வேமாங்கதத்தைச் சேர்ந்தானென்க (சகூ)

வேறு.

காவின்மேற்கடிமலர்நெகிழ்ந்தநாற்றமும்
வாவியுளினமலருயிர்த்தவாசமும்
பூவிரிகோதையர்புனைந்தசாந்தமு
மேவலாற்கெதிரெதிர்விருந்துசெய்தவே.

இ - ள். நெகிழ்ந்த காவின் நாற்றமுதலியன வில்வல்லாற்கு விருந்துசெய்தனவென்க. (சஎ)

கரும்பின்மேற்றொடுத்ததேன்கலிகொடாமனைச்
சுரும்பின்வாய்த்துளித்தலிற்றுவைத்தவண்டொடு

திருந்தியாழ்முரல்வதோர்தெய்வப்பூம்பொழிற்
பொருந்தினான்புனைமணிப்பொன்செய்பூணினன்.

இ - ள். பூணினன் கரும்பில்வைத்ததேன் சுரும்பின்வாய்த்துளித்தலின், அச் சுரும்பொலித்தவை பின்பு வண்டோடு யாழ்போல முரலும்பொழிலைப் பொருந்தினானென்க. (சஅ)

பொறைவிலங்குயிர்த்தனபொன்செய்மாமணிச
செறிகழலிளைஞருஞ்செல்லனீங்கினார்
நறைவிரிகோதையர்நாமவேலினாற்
கறுசுவைநால்வகையமுதமாக்கினார்.

இ - ள். குதிரைமுதலியன சுமத்தலைவிட்டு இளைப்பாறின, இளையரும் வருத்த நீங்கினார்; அவ்வளவிலே கோதையா வேலினாற்கு அடிசில்சமைத்தாரென்க. (சகூ)

கட்டியினரிசியும்புழுக்குங்காணமும
புட்டில்வாய்ச்செறித்தனர்புரவிக்கல்லவு
நெட்டிருங்கரும்பொடுசெந்நென்மேய்ந்துநீர்
பட்டனவளநிழற்பரிவுதீர்ந்தவே.

இ - ள். கருப்புக்கட்டியுடனே கலந்தவரிசியுங் காணமும் இட்டபுட்டிலை நீரிலே யலைந்தனவாகியபுரவிக்கு வாயிலேசெறித்தார்; அவையொழிந்த எருதுமுதலியனவு மேய்ந்து நிழலிலேகிடந்து வருத்தந்தீர்ந்தனவென்க. (ருo)

குழிமதுக்குவளையங்கண்ணிவார்குழ
பிழிமதுக்கோதையர்பேணவின்னமு
தழிமதக்களிறனையின்றயின்னரே
சழிமலர்விழித்தகண்கமலம்பட்டவே

குழிமதுக்குவளை - குழியிற்குவளை.

இ - ள். களிறனன் கோதையாபேண இன்னமுதையுண்டபின்பு, கழியின் மலர்கள் கண்விழித்தன; கமலந் துயின்றனவென்க. (ருக)

எரிமணியிமைத்தனவெழுந்ததீம்புகை
புரிநரம்பிரங்கினபுகன்றதீங்குழ
றிருமணிமுழவமுஞ்செம்பொற்பாண்டிலு
மருமணியின்குரலரவஞ்செய்தவே.

இ - ள். அவ்வந்திக்காலத்தின் மணிவிளங்கின; அகிற்புகையெழுந்தன; நரம்பு இரங்கின; குழல் பாடலைக்கூறின; அழகியமுழவமுங் கஞ்சதாளமுங் குதிரைமணி யின் குரலோடே யொலித்தனவென்க. (ருஉ)

தெளித்தவின்முறுவலம்பவளஞ்செற்றவாய்க்
களிககயன்மழைக்கணார்காமங்காழ்கொளீஇ
விளித்தவின்னயிர்துமழ்கீதம்வேனலா
னளித்தபின்னமளியஞ்சேக்கையெய்தினான்.

தெளித்தவின்முறுவல் - விளக்கிய இனியமுறுவல்.

இ-ள். மகளிர்பாடிய கீதத்தைச் சீவகன் கொண்டாடியபின்பு காமத்தே வயிரங்கொண்டு படுக்கையாகிய தங்குமிடத்தையெய்தினனென்க. (௫௩)

தீங்கரும்பனுக்கியதிருந்துதோள்களும்
வீங்கெழிற்றோள்களுமிடைந்துவெம்முலை
பூங்குளிர்தாரொடுபொருதுபொன்னுக
வீங்கணங்கனையிருளெல்லைநீந்தினான்.

இ-ள். கருமபைக்கெடுத்த தோள்களும், எழிற்றோள்களும் மிடைதலாலே முலை அவன்றாரோடேபொருது பூண்கள்சிந்தும்படி இரவெல்லையை யிங்ஙனநீந்தினனென்க.

* "வியநெறியால்விடுத்தான்" என்றலின், இவன்நுகாதற்குரிய மகளிர்பலரும் வந்தாரென்க. (௫௪)

கனைகதிர்க்கடவுள்கண்விழித்தகாலையே
நனைமலர்த்தாமரைநக்கவண்கையால்
புனைகதிர்த்திருமுகங்கழுவிப்பூமழை
முனைவனுக்கிறைஞ்சினன்முருகவேளனான்.

இ-ள். முருகவேளனான் ஞாயிறால் உலகங் கண்விழித்தகாலையிலே, தாமரைப்பூவைக்கெடுத்த கையாலே முகங்கழுவிப் பூமழையைப்பெய்து முனைவனுக்கு வணங்கினனென்க.

கடவுள்தோன்றினகாலமுமாம். நனை, முதற்கேற்ற அடை. இரண்டனுருபு மயக்கமுமாம், முனைவனையென்று. (௫௫)

நாட்கடன்கழித்தபினமவேலினான்
வாட்கடியெழினகரவண்மைகாணிய
தோட்பொலிமணிவளைத்தொய்யின்மாதரார்
வேட்பதோர்வடிவொடுவிரைவினெய்தினான்.

இ-ள். வேலினான் நாட்காலத்துச்செய்யுங் கடன்களைமுடித்தபின்பு மகளிர் விரும்புவதோர் வடிவைக்கொண்டு ஒளியின்மிகுதியையுடையு ஊரின்வண்மையைக் காண்டற்கு விரைவோடெய்தினனென்க. (௫௬)

அலத்தகக்கொழுங்களியிழுக்கியஞ்சொலார்
புலத்தலிற்களைந்தபூணிடறிப்பொன்னிதழ்
நிலத்தகுமாலைகாறொடர்ந்துநீணகர்
செலக்குறைபடாததோர்செல்வமிக்கதே.

இ-ள். அவன்கால் இங்குலிகச்சேற்றிலேயிழுக்கிப் பூணிலேயிடறி மாலையுஞ் சேரத்தொடரப்படுதலாலே போகத்தொலையாதிருப்பதோர்செல்வம் நீணகர்க்குமிக்கதென்க. (௫௭)

---

* கனகமாலையாரிலம்பகம், ௬௬௦.

வேறு.

கத்திகைக்கழுநீர்கமழ்கோதையர்
பத்தியிற்படுசாந்தணிமென்முலை
சித்தியிற்படர்சிந்தையினாரையு
மிற்றிசைப்படர்வித்திடுநீரவே.

கத்திகை - தொடைவிசேடம்.

இ - ள். கோதையருடையமுலை பத்தியிலேயுண்டாஞ் சித்தியிலேசெல்கின்ற துறவோரையும் இல்லறத்திலே செலுத்துவித்திடும் தன்மையை யுடையவாயிருக்கு மென்க. (ருஅ)

வஞ்சிவாட்டியவாண்மினுசுப்பினார்
பஞ்சியூட்டியபாடகச்சீறடி
குஞ்சிசூட்டியமைந்தர்குழாமலா
லிஞ்சிவட்டமிடம்பிறிதில்லையே

இ - ள். வட்டமாகிய மதிலினிடமெல்லாம் மகளிரடியைக் குஞ்சியிலேசூட்டிய மைந்தர்திரளல்லது வேறுதிரளில்லையென்க.

வாட்டிய - கெடுத்த. (ருகூ)

மின்னினீள்கடம்பின்னெடுவேளகொலோ
மன்னுமைமங்கணைவார்சிலைமைந்தனோ
வென்னனோவறியோமுரையீரெனப்
பொன்னங்கொம்பனையார்புலம்பெய்தினார்.

இ - ள். பொற்கொம்பனையார் இவன் மேனியினொளியாலே முருகனோ! காமனோ! யார்தானறிகிலம்; உரையீரென்று வருந்தினாரென்க. (கூo)

விண்ணகத்திளையானன்னமெய்ப்பொறி
யண்ணலைக்கழிமீன்கவர்புள்ளென
வண்ணவார்குழலேழையர்வாணெடுங்
கண்ணெலாங்கவர்ந்துண்டிடுகின்றவே.

இ - ள். அங்ஙனம்புலம்பினவேழையர் கணணெல்லாம் முருகனுடைய உத்தம விலக்கணத்தையொத்த இலக்கணத்தையுடைய அண்ணலை நீர்வடிந்த கழியின் மீனைக் கவரும் பறவையென்னும்படி கைக்கொண்டுநுகராநின்றனவென்க.

தொழிலுவமம். (கூக)

வேறு.

புலாற்றலைத்திகழும்வைவேற்பூங்கழற்காலினானை
நிலாத்தலைத்திகழும்பைம்பூணிழன்மணிவடந்தோடேந்திக்
குலாய்த்தலைக்கிடந்துமின்னுங்குவிமுலைபாயவெய்தாய்க்
கலாய்த்தொலைப்பருகுவார்போற்கன்னியர்துவன்றினாரே.

புலால்நாற்றந் தலையிலேதிகழும்வேல்.

இ - ள். சீவகனைக் கலவியிலே வெய்தாய்க்கலாய்த்து அக்கலாந்தீர்ந்து தம் முலைபாய நுகர்வாரைப்போலே கன்னியர் நெருங்கினரென்க.

நிலாத் தன்னிடத்தேதிகழும் மணிவடத்தோடே பூண் தலையிலேகிடந்துமின்னும் ஏந்திக்குவிந்த முலையென்க. (சுஉ)

வேனெடுங்கண்களம்பாவிற்படைசாற்றியெங்குந்
தேநெடுங்கோதைநல்லாரமைந்தனைத்தெருவினெய்ய
மானெடுமழைக்கணோக்கிவானவர்மகளுமொப்பாள
பானெடுந்தீஞ்சொலாளோர்பாவைபந்தாடுகின்றாள்.

இ - ள். நல்லார கண்களம்பாக விற்படையையமைத்து மைந்தனைத் தெருவிலேயெங்குமெய்யாநிற்க, நோக்கினையுடையாள், நெடுமானவாமகளுமொப்பாள், பால்போலுஞ்சொல்லாள், ஒருபாவை, அவள் பந்தாடாநின்றாளென்க.

நெடுமை - பெருமை. (சுந)

வேறு

குழன்மலிந்தகோதைமாலைபொங்கவெங்கதிர்முலை
நிழன்மலிந்தநேர்வடந்திழற்படப்புடைததர
வெழின்மணிக்குழைவில்வீசவின்பொனோலைமின்செய
வழன்மணிக்கலாபமஞ்சிலம்பொடார்ப்பவாடுமே.

இ - ள் அவள், குழலிற் கோதையும் மாலையும்பொங்க, முத்துவடம் முலையிலே புடைத்தலைச்செய்ய, குழை வில்லைவீச, ஓலை ஒளியையுண்டாக்க, கலாபமுஞ் சிலம்பு மொலிப்ப ஆடுமென்க. (சுச)

அங்கையந்தலத்தகத்தவைந்துபந்தமர்ந்தவை
மங்கையாடமாலைசூழும்வண்டுபோலவந்துடன்
பொங்கிமீதெழுந்துபோய்ப்பிறழ்ந்துபாய்தலின்றியே
செங்கயற்கண்புருவநதம்முளுருவஞ்செய்யத்திரியுமே.

இ - ள். ஐந்துபந்து; அங்கையாகிய அழகியநிலத்திடத்தவாக மங்கை முதலாடுதலாலே, அதிலேயமர்ந்தவை பின்முறைமைகுலைந்துபோய் வீழ்தலின்றி மாலையைச் சூழும் வண்டுபோலே பொங்கி மீதெழுந்துபோய் உடனேவந்து கண்ணும்புருவமுங் கூடத்திரிந்துஅழகுசெய்யத் திரியுமென்க. (சுரு)

மாலையுட்கரந்தபந்துவந்துகைத்தலத்தவா
மேலநாறிருங்குழற்புறத்தவான்முகத்தவா
நூலினேர்நுசுப்புநோவவுச்சிமாலையுள்ளவா
மேலெழுந்தமீநிலத்தவிரலகையவாகுமே.

இ - ள். மாலையின்மறைந்தபந்து கையிடத்தவாம்; குழற்புறத்தவாகியபந்து முகத்திடத்தவாம்; நுசுப்புநோம்படி உச்சியிற்போனபந்து மீண்டும் மாலைக்குள்ளேயாம்; மாலைமேலேபோய் உயர்ந்தபந்து மீண்டும் விரலிடத்தன, கையிடத்தனவாமென்க. (சுசு)

கொல்லுநீங்கல்கோதைவேய்தல்குங்குமமணிந்துரா
யெண்டிசையுமேணியேற்றிலங்கநிற்றல்பத்தியின்
மண்டலம்வரப்புடைத்தன்மயிலிற்பொங்கியின்னணம்
வண்டுந்தேனும்பாடமாதர்பந்துமைந்துற்றாடுமே.

இ - ள். மாதர், வண்டுந்தேனுந் தேனைநுகராதே நின்றுபாட மயில்போற் பொங்கி யுராய் எண்டிசையும் பந்தைக்கொண்டுலாவுதல், இடையேகுங்குமமணிந்து கோதைவேய்தல், படிமுறையாகவடித்தல், அப்பத்தியோடே தன்னைச்சூழ்ந்துவர அடித்தலென்கின்ற நிலைமைகளிலே வலியுற்று இங்ஙனம் * பந்தாடுமென்க. (௬௭)

பந்துமைந்துற்றாடுவாள்பணைமுலையிற்குங்குமஞ்
சுந்தரப்பொடிதெளித்தசெம்பொற்சுண்ணம்வாணுதற்
றந்துசுட்டியிட்டசாந்தம்வேரின்வார்ந்திடைமுலை
யிந்திரதிருவினெக்குருகியென்னவீழ்ந்தவே.

இ - ள். அங்ஙனமாடுகின்றவளுடைய நுதலிலே கொண்டுவந்து சுட்டியாக விட்டசாந்தமும், முலையிலிட்டகுங்குமமும், சிந்துரப்பொடியும், ஓடவைத்த பொற் சுண்ணமும், வியர்வையினீர்களாந்தொழுகி முலையிடையிலே யிந்திரவில் நெகிழ்ந் துருகி யொழுகினாற்போலே வீழ்ந்தவென்க. (௬௮)

நன்மணிச்சிலம்பினோடுகிண்கிணிந்நகந்நகும்
மின்மலர்ந்தமுல்லைமாலைநக்கிமிக்கிறந்தெழுந்து
பொன்மலர்ந்தகோதைபந்துபொங்கியொன்றுபோந்துபாய்ந்து
மின்மலர்ந்தவேலினான்முன்வீதிபுக்குவீழ்ந்ததே.

இ - ள். சிலம்புங்கிண்கிணியுநகாநிற்பப் பொன்னைமலர்ந்ததோர் மின்போல நகுங் கோதையதொருபந்து, மலர்ந்தமுல்லைமாலையை மிக்குத்தீண்டுதலாலே தன் வரையையிறந்து எழுந்துபாய்ந்து பொங்கிப் போந்து வீதிபுக்கு வேலினான்முன்னே வீழ்ந்ததென்க. (௬௯)

வீழ்ந்தபந்தின்மேல்விரைந்துமின்னினுண்ணுசுப்பினாள்
சூழ்ந்தகாசுதோன்றவந்துகினெகிழ்ந்துபூங்குழ
றாழ்ந்துகோதைபொங்கிவீழ்ந்துவெம்முலைகடைவரப்
போழ்ந்தகன்றகண்ணிவந்துபூங்கொடியினோக்கினாள்.

இ - ள். நுசுப்பினாளாகிய ஆவியைப்போழ்ந்தகன்றகண்ணி, துகில்நெகிழ்தலிற் காசுதோன்றக் குழல் தாழ்ந்துவீழ்தலின் அதிற்கோதை முலையைத்தைவர வீழ்ந்த பந்தின்மேலே வேட்கைசெலுத்தி விரைந்துவந்து கொடிபோலேநோக்கினாளென்க.()

---

* இங்ஙனம் பலவகையாகப் பந்தாடுதலின் வேறுபாடுகளை உதயணகுமாரன் காதையிற்காண்க.

வேறு.

மந்தாரமாலைமலர்வேய்ந்துமகிழ்ந்துதீந்தேன்
கந்தாரஞ்செய்துகளிவண்டுமுரன்றுபாடப்
பந்தார்வஞ்செய்துகுவளைக்கண்பரப்பிநின்றாள்
செந்தாமரைமேற்றிருவின்னுருவெய்திநின்றாள்.

இ - ள். களிவண்டு மந்தாரமாலையின்மலரைமொய்த்து அதிற்றேனையுண்டு மகிழ்ந்து காந்தாரமென்னும்பண்ணையாக்கி ஆளாபஞ்செய்து பாடும்படி பந்திலே யாரவஞ்செய்துநின்று அவனைக்காண்டலின், அவன்மேலே கண்ணைப்பரப்பி யிமையாதுநின்றவள், முன்பு கண்ணிமைத்தகுறைபாடுதீர்தலிற் றிருவின்வடிவை நேரே பெற்றுநின்றாளென்க. (எக)

நீர்தங்குதிங்கண்மணிநீணிலந்தன்னுளோங்கிச்
சீர்தங்குகங்கைத்திருநீர்த்தண்டிவலைமாந்திக்
கார்தங்கிநின்றகொடிகாளையைக்காண்டலோடும்
பீர்தங்கிப்பெய்யாமலரிற்பிறிதாயினாளே.

ஓடு - உடனிகழ்ச்சி.

இ - ள். கங்கையினீரையுண்டு சந்திரகாந்தக்கல்லாகிய நிலத்திலே வளர்ந்து பசுமைதங்கிநின்றதோர்கொடி அவனைக்காண்டலோடே பழம்பூப்போலேவெளுத்து வேறாயினாளென்க. (எஉ)

பெண்பாலவர்க்கணியாய்ப்பிரியாதநாணுந்
திண்பானிறையுந்திருமாமையுஞ்சேர்ந்தசாயல்
கண்பாற்கவினும்வளையுங்கவர்ந்திட்டகள்வன்
மண்பாலிழிந்தமலரங்கணைமைந்தனென்றாள்.

இ - ள். மகளிர்க்குப்பூணாய் நீங்காதநாணும், நிறையும், மாமையுஞ் சேர்ந்த சாயல், தன்கண்ணாலேயென்னழகையும் வளையையுங்கவர்ந்தகள்வன் வடிவுகொண்டு உலகிலேவந்த காமனென்றுகருதினாளென்க.

சாயல் - ஆகுபெயர். (எங)

என்றாணினைந்தாளிதுபோலுமிவ்வேட்கைவண்ணஞ்
சென்றேபடினுஞ்சிறந்தார்க்குமுரைக்கலாவ
தன்றாயரிதாயகத்தேசுட்டிருக்கும்வெந்தீ
யொன்றேயுலகத்துறுநோய்மருந்தில்லதென்றாள்.

இ - ள். என்றுகருதினவள் தன்னிலேநினைந்தாள்; நினைந்தபடி: இந்தவேட்கையென்று உலகங்கூறுகின்றதன்வண்ணம் இதுபோலேயிருந்தது; இதுதான், இறந்துபடினுங் குரவர்க்குங்கூறலாவதொன்றன்றாய்ப் பொறுத்தற்குமரிதாய் உள்ளேநின்று சுட்டிருக்கும் வெந்தீயாயிருந்தது; இதுதான் நோய்களிலேவைத்துக் கொண்டு வேறுபரிகாரமற்றதுமாயிருந்தது; இதுவுமொரு நோயென்று நினைந்தாளென்க. (எச)

நிறையொன்றுமில்லைகெருப்பிற்சுடுங்காமமுண்டேற்
குறையாநிறையினெருகுன்றியுங்காமமில்லை
பறையாயனைறயும்பசப்பென்றுபரிந்துவாடி
யறைவாய்க்கடல்போலகன்காமமலைப்பநின்றாள்.

இ - ள். மகளிர்க்கு நிறைநிற்குமிடத்து ஓர்குன்றியளவுங் காமம் இல்லையா யிருந்தது; காமமுண்டாகில் நிறை ஒன்றுமில்லையாயிருந்தது; அதுவுமன்றி அத னைமறைத்தாலும் பசப்புச் சாற்றுமாயிருந்ததென்றுகூறி வாடிக் கடல்போலே காமம் மேன்மேலலைப்பநின்றாளென்க. (எரு)

நெஞ்சங்கலங்கிநிறையாற்றுப்படுத்துநின்றா
ளஞ்செங்கழுநீரலர்ந்தம்மதிவாண்முகத்தே
வஞ்சம்வழங்காதவன்கண்களினோக்கமாதோ
தஞ்சம்வழங்கித்தலைக்கொண்டதுகாமவெந்தீ.

இ - ள். பொய்கூறாதவன் தன்கண்ணாலே இங்ஙனநெஞ்சுகலங்கி நிறையைப் போக்கிநின்றவளது கழுநீர்மலர்ந்ததோர் மதிபோலுமுகத்தேநோக்கினைக, அவ னெதிர்நோக்கினனிகழ்ந்த காமத்தீ அவற்கு எளிமையை முதற்கொடுத்துப் பின்பு பாம்புபோற் றலைகொண்டதென்க. (எசு)

பூவுண்டகண்ணாள்புருவச்சிலைகோலியெய்ய
வேவுண்டநெஞ்சிற்கிடுபுண்மருந்தென்கொலென்று
மாவுண்டநோக்கின்மடவாளைமறித்துநோக்கிக்
கோவுண்டவேலான்குழைந்தாறலணாயினனே.

உண்ட - உவமவாசகம்.

இ - ள். வேலான், பூப்போலுங்கண்ணாள் புருவமாகியவில்லைவளைத்துக் கண் ணாகிய அம்பாலேயெய்தலின், ஏவுண்ட என்னெஞ்சிற்புண்ணுக்கு இடுமருந்து யா தென்றாராய்ந்து குழைந்து வேறுமருந்தின்மையின், இவளேமருந்தென்று அவளை மீண்டும்பார்த்து ஆண்டுப்பெறற்குக் கூட்டியுரைக்குங் குறிப்புரையாகிய நோக்காலே யுயிரைப்பெற்று ஆற்றாமையிலேநின்றானென்க.

இதனால் முன்புபோலப் பொதுநோக்குப்பெறின் இறந்துபடுதலுக்கு மருந் தென்றுகருதினனும். (எஎ)

காமக்கடுநோய்க்கனல்சூழ்ந்துடம்பென்னுமற்றிவ்
வீமத்தினோடுமுடனேசுடவேகலாற்றா
ஞமத்தினார்ந்ததுகிலேந்தியவல்குறாதை
பூமொய்த்திருந்தகடைமேய்புலம்புற்றிருந்தான்.

இ - ள். காமநோயாகிய கனல்சூழ்ந்து உடம்பென்னும்விறகுடனே யுயிரை முழுக்கச்சுடுதலிற் போகலாற்றானாய் விமலையுடையதாதையாகிய சாகரதத்தனுடைய கடையிலே வருந்தியிருந்தானென்க. (எஅ)

வேறு.

நாவிநோய்செய்தநறுங்குழலாளணீலக்
காவிநோய்செய்தகருங்கயற்கட்பூங்கொடியென்
னாவிநோய்செய்தவணங்கென்றறியாதேன்
மேவிநோய்தீரவினைத்தருவாரில்லையே.

கயற்கண் - ஒருபெயர். குழலாள் - மானிடமாது.

இ - ள். அங்ஙனமிருந்தவன் காவிக்குநோய்செய்த கண்ணிணையுடைய கொடியை என்னுயிரையுமுட்படவருத்தியதோர் தெய்வமென்றேகருதி நறுங்குழலாளாக வுணராதே பின்னுமயங்கினேனை மேவி மிக்கவருத்தந்தீரும்படி என்னுற்றனையென்று வினவுவாரின்றாயிருந்ததென்றானென்க.

இனிக் குழலாள் கொடி அணங்கென்றுகூறி, அறிவுகலங்கினேனையென்றுமாம். (௭௯)

தெண்ணீர்ப்பனிக்கயத்துமட்டலர்ந்ததேங்குவளைக்
கண்ணீர்மைகாட்டிக்கடல்போலகன்றவென்
னுண்ணீர்மையெல்லாமொருநோக்கினிற்கவர்ந்த
பெண்ணீர்மைமேனாட்பிறந்துமறியுமோ.

இ - ள். சிறியதோர் குளத்தேயலர்ந்த குவளைபோலுங் கண்ணின்றன்மையைக் கொண்டு அதனொருநோக்கினாலே கடல்போலகன்ற என்னுள்ளிலறிவையெல்லாங் கவர்ந்ததொரு பெண்டன்மை முன்னாளிலும் பிறந்தறியுமோ? இன்று என்னை வருத்துதற்குத் தோன்றியதன்றோவென்றானென்க. (௮௦)

மருங்குழலுஞ்செவ்வாயுங்கண்மலருங்காது
மருமபொற்பூண்முலையுமாருயிர்க்கேகூற்றம்
விருந்தினராயவந்தாரைவெற்றுடலாநோக்கும்
பெருந்திருவியார்மகள்கொல்பேரியாதாங்கொல்லோ.

இ - ள். அங்ஙனம் ஒருநோக்கினாலே விருந்தினரைப் பிணமாக நோக்கும் பெருந்திருவியுடைய குழன்முதலிய இக்கூற்றமெல்லாம், எளியவுயிரொன்றனையும் அழித்தற்கே தான் இத்தன்மையையுடைய இவள் எந்நல்வினையுடையோர்மகள்? இவட்குப்பெயர் கூற்றமென்றாமோ, பெண்ணென்றாமோவென்றானென்க. (௮௧)

வாருடுத்தவெம்முலையவண்டார்பூங்கோதையைப்
போகொடுத்தார்பெண்ணென்றார்கூற்றமேயென்றிட்டார்
தாருடுத்ததீண்மார்பர்தம்முயிர்தாம்வேண்டுவரே
னீருடுத்தவிந்நகரைநீத்திட்டொழியாரோ.

வாருடுத்த - வார்சூழ்ந்த.

இ - ள். இவளைப் பெயரிட்டவர்தாந் தம்முயிர் நீங்குறாதிருத்தல்வேண்டுவோராயிற் கூற்றமென்னார்; தாருடுத்தநீண்மார்பர் கூற்றமென்றிடுவோராயின், இந்நகரைக்

கைவிட்டுத் தாமிருத்தற்குரியதோரிடத்தே யிராரோ, அங்ஙனமிராமையிற் பெண்ணென்றே பெயரிட்டாரென்று பெயரைத் தெளிந்துகூறினானென்க.

தந்தையைப் பெயர்கொடுத்தாரென்று ஒருவனைக்கூறும் பன்மையாற்கூறினார். நீண்மார்பரென்றது - அப்பெயரைச் சுட்டிக்கூறிற்று. (அஉ)

பைங்கண்மணிமகரகுண்டலமும்பைந்தோடுந்
திங்கண்முகத்திலங்கச்செவ்வாயெயிறிலங்கக்
கொங்குண்குழலுழக்கோட்டெருத்தஞ்செய்தநோக்
கெங்கெங்கேநோக்கினுமங்கங்கேதோன்றுமே.

இ - ள். மகரவடிவாகச்செய்தகுண்டலமுந் தோடும் முகத்தேயிலங்க, எயிறு சிறிதிலங்க, குழல் எருத்திலேவீழச் சாய்ந்தகழுத்துத்தந்தபார்வை பார்த்தவிடமெங்குந் தோன்றாநின்றதென்றானென்க.

இஃது எதிர்பெய்துபரிதல். முன்பெற்ற அருணோக்கினைவியந்தான். (அங)

வாளார்மதிமுகத்தவாளோவடுப்பிளவோ
தாளார்கழுநீரோநீலமோதாமரையோ
நீள்வேலோவம்போகயலோநெடுங்கண்ணோ
கோளார்ந்தகூற்றமோகொல்வான்றொடங்கினவே.

இ - ள். இந்த மதிபோலுமுகத்திற்கிடக்கின்றவை, ஒருகால் அங்ஙனம் அருணோக்கமுஞ்செய்தலிற் கண்ணோ, கயலோ, வடுப்பிளவோ, கழுநீரோ, நீலமோ, தாமரையோவென்றற்குந்தக்கு, ஒருகாற் பொதுநோக்கமுஞ்செய்து கொல்வான் றொடங்கினவாதலிற் கூற்றமோ, வாளோ, வேலோ, அம்போவென்றற்குந்தக்கு இருபகுதியுமுடையவாயிருந்தன வென்றானென்க. (அச)

வேறு.

என்றுங்கொன்மாதர்நலமெய்துவதென்றுசிந்தித்
தொன்றார்க்கடந்தான்புலம்புட்கொண்டிருத்தலோடு
மன்றேயமைந்தபசும்பொன்னடராறுகோடி
குன்றாமல்விற்றான்குளிர்சாகரதத்தனென்பான்.

இ - ள் ஒன்றார்க்கடந்தான் இங்ஙனங்கூறி மாதர்நலத்தை யெய்துந்தன்மை என்றுகூடுமென்றுநினைந்து வருந்தியிருந்தானாக, அற்றைநாளே ஆண்டுறையுஞ் சாகரதத்தன் மாற்றமைந்தகட்டிப்பொன் ஆறுகோடியென்னுமெண்ணிற்குறையாதபடி சரக்கைவிற்றானென்க.

குளிர் - இசைச்சொல். (அ௫)

திருமல்கவந்ததிருவேயெனச்சேர்ந்துநாய்கன்
செருமல்குவேலாய்க்கிடமாலிதுவென்றுசெப்ப
வரிமல்கிவண்டுண்டுறைமாமலர்க்கண்ணிமைந்த
னெரிமல்குசெம்பொனில்மாமனொடேறினானே.

திருவேயென்று உவப்பின்கட் பான்மயங்க உவமித்தார். வண்டுகள் மதுவை யுண்டு வரியென்னும்பண்ணை யறைகின்ற கண்ணி.

இ - ள். நாய்கன் எனக்குச்செல்வமிகவந்ததிருவேயென்று சேர்ந்து இனி யிவ் வில்லம் நினக்கு இருப்பிடமாயிருந்ததென்றுசெப்ப, அதுகேட்ட அம்மைந்தன் அம் மாமனோடே பொன்னிலத்தேயேறினானென்க. (அசு)

க. நம்பன்சிறிதேயிடைதந்திதுகேட்கநாளு
நம்பொன்னகருள்ளமைந்தேன்மற்றெனக்கமைந்தாள்
கம்பமிலாதாள்கமலைக்குவிமலையென்பாள்
செம்பொன்வியக்குநிறத்தாள்திருவன்னசீராள். (அஎ)

உ. பூம்பாவைவந்துபிறந்தாள்பிறந்தபோழ்தே
யாம்பாலவெல்லாமறிவாரன்றெழுதியிட்டார்
தூம்பியாதுமில்லாக்குளம்போன்றதென்றேமில்பண்டங்
கூம்பாதசெல்வக்கொடியேயிதுகேண்மோவென்றான். (அஅ)

ந. மங்கைநக்குரியான்கடையேறும்வந்தேறலோடும
வங்கந்நிதியமுடன்வீழுமற்றன்றிவீழா
தெங்குந்தனக்குநிகரில்லவனேநமமாப
நங்கைக்கியன்றநறும்பூவணைப்பள்ளியென்றான். (அகூ)

ச. ஏழாண்டின்மேலுமிரண்டாண்டிரண்டெய்திநின்றாள
வீழாநிதியுமுடன்வீழ்ந்ததுவேலனுய்க்கே
யூழாயிற்றெல்குநுசுப்பஞ்சுவுருதுவிங்கிச
சூழாரம்வைத்தமலையாணமுஞ்சூழ்கவென்றான்.

இவைநான்குமொருதொடர்.

க. கம்பமிலாதாள் - கற்பிலசைவிலாதாள்

உ. தூம்பிலலாக்குளம்போன்றதென்றான், சாக்கு விலைபோகாமையின். கொடி - ஒழுங்கு. "கொடிககூறை" என்றார்பிறரும்

ந. வீழும் - நின்னிடத்தே தாழும். மற்று - அசை.

இ - ள். நம்பன், சிறிதேயிடந்தந்து இதனைக்கேட்க. இந்நகரிலே நாளுமிருந் தேன்; இங்ஙனமிருந்தேற்கு அமைந்தாளாய்க் கம்பமில்லாதாளாகிய கமலைக்கு விமலையென்பாள் நிறத்தாள், சீராள், பாவை, இவள்வந்துபிறந்தாள்; பிறந்தவப் பொழுதே மேலாங்காரியங்களையெல்லா மறியுங்கணிகள் சாதகஞ்செய்தார்; செய்த வன்றே எனது குற்றமற்றபண்டந் தூம்பில்லாத குளத்தை யொத்தது; இதற்குக் காரணம் விளைவினைகேள; அவர்களிலொருவன் இந்நிலையும் நினக்குச் செல்வம்வரு மொழுங்கே; அதுவரும்வழியுங்கேளென்றான்; என்றவன் இவளுக்குரியகணவன் கடையிலேவந்தேறும்; ஏறினவளவிலே நிதியஞ்சேரவிழும்; அல்லதுவீழாது; அங் ஙனம்வீழும்படி வந்தவன்மார்பமே இவட்குப் பள்ளியாவதுமென்றான்; அதற்கேற்ப வீழாநிதியும் இப்பொழுது வீழ்ந்தது: யாண்டும் பதினொன்றற்றுப் பன்னிரண்

டாயிற்று. ஆதலின், நினக்கே யூழாயிற்று; இனி இவள்நலத்தைத் தழுவுவாயாக வென்றானென்க.

கமலைக்குப்பிறந்தாளென்க. கணி சாகரதத்தனை யுவந்து செல்வக்கொடியே யென்றானென்றுமாம். (௬௦)

வேறு.

ஏற்றகைத்தொடிவீழ்ந்தெனவேந்தலைத்
தேற்றினான்றிருமாநிலஞ்செவ்வினே
தோற்றமாதருந்தோன்றலைக்காண்டலு
மாற்றினுடனதாவியுந்தாங்கினள்.

வீழ்ந்தது - விகாரம்.

இ - ள். எடுத்தகையிலே ஒருதொடி தானேவந்துவீழ்ந்ததன்மைபோல நமக்கும் இதுவந்ததென்றுகருதும்படி அவன் ஏந்தலை யிங்ஙனங்கூறித் தேற்றினான்; தேற்றினபின் மாதருந் தோன்றலை யுள்ளேவரக்கண்டவளவிலே தனதாவியையும் போகாமற்றடுத்தாள்; தடுத்து நலஞ்சூழகவென்று தந்தை யவற்குக்கூறியது தானும் பின்புகேட்டலின், ஆற்றுவதுஞ் செய்தாளென்க (௬௧)

அம்பொற்கொம்பனையாளையும்வார்கழற்
செம்பொற்குன்றனையானையுஞ்சீர்பெறப்
பைம்பொனீணகரப்பல்லியமார்த்தெழ
விம்பரில்லதொரின்பமியற்றினார்.

இன்பமென்றது - மணத்தை; ஆகுபெயர்.

இ - ள். நகரிலே பல்லியங்களாரவாரிப்பக் கொம்பனையாளையுங் குன்றனையானையும் இன்பத்தையியற்றினாரென்க (௬௨)

கட்டிலேறியகாமருகாளையும்
மட்டுவாயவிழ்மாமலர்க்கோதையும்
விட்டுநீங்குதலின்மையின்வீவிலா
ரொட்டியீருடம்போருயிராயினார்.

இ - ள். பிணிப்பினையுடைய இல்வாழ்க்கையிலேசென்றகாளையுங் கோதையும் தம்மிரண்டுடம்புமொன்றாய் விட்டுநீங்குதலின்மையின், விட்டுநீங்கினாருமக்களது மெய்வருத்தமாகிய கேடில்லாதவர் அங்ஙனம் ஒருடம்பாதலேயன்றி மனமுமொன்றாயினாரென்க.

உயிரொன்றெனவே மனமுமொன்றென்பதுபோதரும். (௬௩)

நிலவுவெண்கதிர்நீர்மையபூந்துகில்
கலவங்கண்புதையாதுகனற்றலி
னுலகமூன்றுமுறுவிலைத்தென்பவே
புலவுவேற்கண்ணினான்முலைப்போகமே.

இ - ள். அவர் அங்ஙனமாதலின், அதற்குமுன் நீங்காமல் நிலைபெறும் பூந்துகில் மேகலையைமறையாதே தானேநெகிழ்ந்து அவனைக்கனற்றுதலின், ஆண்டுப்பெற்ற நுகர்ச்சியின்பம் உலகமூன்றுமுறுகின்ற விலையையுடைத்தென்க.

அவன் கொளுத்த அவள்கோடலிற் கனற்றுதல் அவன் மேலேறிற்று. மூலைப் போகமென்றார், உடம்பைப்பற்றி இன்பநுகராநிற்க நிகழ்வதோர் கரணமென்பது தோன்ற. (௧௪)

தேனவாங்கமழ்கண்ணியுந்தெவ்வர்த
மூனவாங்கதிர்வேலுநாளையுங்
கானவாங்கடிநாறுமென்பள்ளிமேல்
வானவாமவகையால்வைகினார்களே.

இ - ள். கண்ணியுங்காளையுங் கானம்விரும்பும் மணமெல்லாநாறும்பள்ளிமே லே வைகினாரென்க.

மக்களது மெய்வருத்தமின்றி நுகர்ந்தமைதோன்றத் தேவராவும்வகையென் றார். இத்துணையும் மணஞ்செய்த அன்றைநுகர்ச்சிகூறிற்று. (௧௫)

வேறு.

வெண்மதிநெற்றிதோய்த்துவிழுத்தழும்பிருப்பநீண்ட
வண்ணனன்மாடத்தங்கணகிற்புகையமளியேறிப்
பண்ணமைமகரவீணைநரம்புரீஇப்பாவைபாட
மண்ணமைமுழவுத்தோளான்மகிழ்ச்சியுண்மயங்கினானே.

இ - ள். மதியின்றலைதேய்த்தலிற் றழும்பிருப்பநீண்ட மாடத்தில் அமளியிலே சென்றேறிப் பாவை யாழ்வாசித்துப்பாட, அதுகேட்டுத் தோளான் இன்பமகிழ்ச்சியி லே மயங்கினானென்க.

இதுமுதல் மற்றைநாளிற்புணர்ச்சிகூறுகின்றார். அதுவும் அமளியேறியென் றதனால் நீங்கியிருந்து நாட்கடன்கழித்தெய்தினானென்றுணர்க. இங்ஙனம் இரண்டு நாள் சென்றமைதோன்ற மேலே *"நாளிரண்டுசென்ற" என்றார். (௧௬)

இன்னரிச்சிலம்போடேங்கிக்கிண்கிணியிரங்கியார்ப்பப்
பொன்னரிமாலைதாழப்பூஞ்சிகையவிழ்ந்துசோரப்
பின்னிருங்கலாபம்விம்மிப்பிறழ்ந்துகண்ணிரங்கவெம்பித்
துன்னருங்கடிகொள்காமக்கொழுங்கனிசுவைத்துவிள்ளான்.

இ - ள். ஊற்றின்பத்தைச் செறிதனீங்கின புணர்ச்சியைவிரும்பிச் சிலம்புங் கிண்கிணியுமார்ப்ப, மாலைதாழ, சிகைசோர, கலாபம்விம்மிப் பிறழ்ந்தொலிப்பக் காமமாகியகனியைச் சுவைத்துப் பகலெல்லாநீங்கிற்றிலனென்க.

கனி - சாரம். தாழ்தலானுஞ் சோர்தலானும் ஊற்றினைச் செறிதனீங்கின கரண மாம். (௧௭)

தொழித்துவண்டிமிருங்கோதைதுணைமுலையுழக்கப்பூமட்
டழித்துமட்டொழுகுந்தாரானணிவள்ளத்தாய்ந்ததேற

* சுரமஞ்சரியாரிலம்பகம், ௧.

லெழிற்பொலிமாதர்க்கேந்தவினிதினிதுனுகர்ந்துகாமக்
கொழித்திரைகடலுண்மூழ்கிக்கோதைகண்டுயின்றவன்றே.

தொழித்து - சிதறி.

இ - ள். அக்கரணநிகழ்ந்தபின் கோதைமுலைகள் பூம்பட்டையழித்து நீங்காமன் முயங்கலின், மட்டொழுகுந்தாரான் மாதர்க்குத் தேறலைவள்ளத்தேயேந்த, அவள் அதனை யினிதாகநுகர்ந்து காமமாகிய கொழித்திரைக்குங்கடலிலே மீண்டுமெழுந்தத லின், அவன்றுயில்வதற்குமுன்னே யவள்கண் சிறிது துயின்றனவென்க. (கூஅ)

பாசிலைசுருட்டிமைந்தன்கொடுக்கியபரந்துமின்னும்
தூசுலாமல்குறீண்டத்துயிற்கண்கள்விழித்ததோற்றம்
வாசவான்குவளைமெல்லவாய்விடாநின்றதொக்கு
மேசுவதொன்றுமில்லாவிணைவடமுலையினாட்கே.

. வெற்றிலை மடித்துக் கொடுத்தற்கென்றது - இடக்கா. புணர்ச்சிக்கண் டோன்றலின், தூசுநெகிழ்ந்து மேற்கிடந்தமைதோன்ற உலாவுமென்றா.

இ - ள். மைந்தன் புணர்ச்சிவேண்டி விமலையதல்குலைத்தீண்ட அவட்குக கண விழித்ததோற்றங் குவளை முன்பு அலருந்தன்மையன்றி மெல்லெனவலருந்தன்மை யை யொக்குமென்க. (கூகூ)

கங்குற்பாற்புகுந்தகள்வனிவனெனக்கதுப்பிற்றாழ்ந்த
தொங்கலான்முன்கையாததுச்சொல்லுநீவந்ததென்ன
நங்கையாஸ்பசித்துவந்தேனெப்பொருணயப்பதென்றாட்
கங்கலுழ்மேனியாய்நின்னணிநலவமிழ்தமென்றான்.

அனந்தராதலிற் றானறியாமற்புகுந்த கள்வனென்று அசதியாடினாள்.

இ - ள். இவன்கள்வனென்றுகூறித் தப்பாதபடி மாலையாற் கையையாத்து இனி நீவந்தகாரியங்கூறென்றுகேட்க, யான் பசியான்வந்தேனென்றுகூற, நீவிரும்பு வனவற்றின் இப்பொழுது விரும்புவது எப்பொருளையென்று வினவினாட்கு அழ கொழுகுகின்றமேனியாய்! நின் அழகாகியவமிழ்தமுழுதுமென்றானென்க.

பசித்துண்பார்க்கு உணவுகள் பலவென்பதுதோன்ற, எப்பொருளென்றாள். ()

செயிர்த்தவள்சிவந்துநோக்கிச்சிறடிசென்னிசேர்த்தி
யயிர்ப்பதென்பணிசெய்வேனுக்கருளிற்றுப்பொருளதென்ன
வுயிர்ப்பதுமோம்பியொன்றுமுறையலையாகிமற்றிப்
பயிர்ப்பில்பூம்பள்ளிவைகுபகட்டெழின்மார்பவென்றாள்.

செயிர்த்து - செயிர்க்க. முன்பு நின்னலமென்றானுற் பிறர்நலமன்றி நின்னல மென்பது போதருதலின், அது செயிராம. நோக்கி - நோகக. பயிர்ப்பு - அரு வருப்பு.

இ - ள். தான்குற்றங்கூறலின், அவள்கோபித்துப்பார்க்கச் சென்னியை யடியி லேசேர்த்தி என்னை அயிர்க்கின்றதன்மையென்னென்றுவினவ, அதற்கு மறுமொழி

கொடாமையிற் றான் நெட்டுயிர்ப்புக்கொண்டு நினதேவலே செய்வேனுக்கு அருளினதுயாதொன்று அது காரியமென்றானாக, அதற்கு வருந்திப் பயிர்ப்பில்லாதமார்பனே! நீயித்தன்மையன சிறிதுங்கூறாயாகி இதனால்வரும் இறந்துபாட்டையுமோம்பி இப்பள்ளியிலே யினித் தங்கென்றாளென்க.

அதுபொருளென்றான், இறந்துபடுவாயென்னினும் அதுவே தனக்குப்பொருளென்பதுதோன்ற. எனவே ஊடலுங்கூடலுங் கூறினாரென்க. (௧௦௧)

உள்ளிழுதுடையவெம்பியுற்பலவுருவுகொண்ட
வெள்ளியிற்புனைந்தகோலவிளக்கொளிவெறுவிதாக
வள்ளிதழ்க்கோதைவல்லான்வட்டிகைநுதியின்வாங்கிப்
பள்ளிமேலெழுதப்பட்டபாவைபோலாயினாளே.

இ - ள். வெள்ளியாற்செய்தவிளக்கு இழுதுடையும்படி மிக்கெரிதலின் அரக்காம்பலின்வடிவைக்கொண்ட ஒளி பின்பு விடியற்காலமாதலின், அவ்வொளிகெடாநிற்கக் கோதை புணர்ச்சியவசத்தாலே பாவைபோலாயினாளென்க.

எழுதவல்லவன் றுகிலிகைநுதியாலே வட்டிகைப்பலகையையொழித்துப் பள்ளிமேலெழுதினதொருபாவை. வட்டிகையை வாங்குதல் ஈண்டு ஒழித்தன்மேற்று. இனிக் "கட்டிலேறிய" என்னுங் கவிமுதலியவற்றை ஒருநாளைக்கூட்டமாக்கியுமுரைப்ப. (௧௦௨)

வேறு.

மங்கையர்பண்ணியமருதயாழ்குழ
னங்கையைப்பிரியுமிந்நம்பியின்றெனா
வங்கதறகிரங்கினவாரும்பேதுறக்
கங்குல்போய்நாட்கடன்கழிந்ததென்பவே.

இ - ள். புணர்ந்தோரெல்லாம் விடிந்தமையுணர்ந்து பிரிகின்றோமேயென்று பேதுறும்படி மங்கையரெல்லாரும் பண்ணிப்போந்த யாழுங் குழலும் இன்று தாமேயருளி, யாம்பிரிவித்தலின், இந்நம்பி இந்நங்கையைப் பிரியாநிற்குமேயென்று அப்பிரிவிற்கு இரங்கினபோலேயிருந்தன. அவை யங்ஙனமிரங்க, கங்குல்அவ்விடத்தினின்றும் போக, நாட்கடன்கழிந்ததென்க.

மருதம் - காலைப்பண். போய் - போக. (௧௦௩)

ஏந்துபூங்கோதைகடிருத்தியோர்படச்
சாந்துகொண்டிளமுலையெழுதித்தையன்
காந்தளங்முகிழ்விரல்கையினாற்பிடித்
தாய்ந்தவட்கிதுசொலுமலங்கல்வேலினான்.

இ - ள். வேலினான் ஏர்படத்திருத்தியெழுதி அவள்விரலைக்கையாலேபிடித்து ஆற்றுவிக்குநெறியையாய்ந்து அவட்கு இப்பிரிவையுணர்த்தாநிற்குமென்க. (௧௦௪)

பூவினுட்டாழ்குழற்பொன்செயேந்தல்குன்
மாவினுட்டாழ்தளிர்மருட்டுமேனியாய்

காவினுட்டோழனைக்கண்டுபோதர்வே
னேவினுட்டாழ்சிலையெறிந்தகோலினே.

செய்பொன் - மேகலை.

இ - ள். குழன்முதலியவற்றையுடைய மேனியாய்! ஏத்தொழிலிடத்து வலி யின்றிக்குறைந்த வில்லெய்த அம்புபோலேபோய்த் தோழனைக்கண்டு மீள்வே னென்று சொன்னானென்க.

தாழ்சிலையென்றதனாற் றூரிதன்றி அணியவிடத்தே போய்வருவேனென்று னென்று அவள்கருதினாள்; தான்கருதியது வலியில்லாதவம்பு இலக்கைப்பட்டுவைத்து மீண்டும்வந்ததேனும், எய்தவனிடத்துவாராது மாறிப்போமாறு போலே யானும் நின்னிடத்துவாராது இந்நகரிலே மீண்டுவருவேனென்றான்; அதுதமர்க்குண்மை காட்ட மேல்வருகின்றமையைநோக்கிக்கூறினான். (௧0௫)

என்றவனுரைத்தலுமெழுதுகண்மலர்
நின்றநீரிடைமணிப்பாவைநீந்தலின்
மன்றனாறரிவையைமருட்டிமாமணிக்
குன்றனான்கொடியவளகுழையவேகினான்.

இ - ள். என்று அவன்கூறினானாக, கொடியினுடைய மையெழுதிய கண்ண மலரில் ததும்பிவீழாதே நின்றநீரிடத்தே மணிப்பாவைநீந்துதலின், அவ்வரிவை யைத்தேற்றியவன் அவள்குழையப் போயினானென்க. (௧0௬)

விமலையாரிலம்பக முற்றிற்று.

ஆ-ட கவி ௧௬௬௪

## ஒன்பதாவது

# சுரமஞ்சரியாரிலம்பகம்.

வாளிரண்டுமாறுவைத்தபோன்மழைக்கண் மாதரார்
நாளிரண்டுசென்றவென்றுநையமொய்கொள்காவினுட்
டோளிரண்டுமன்னதோழர்தோன்றலைப்புணர்ந்தபின்
றாளிரண்டுமேத்திநின்றுதையலூரும்வேண்டினார்.

மாறு - எதிர். மாதரார் - கூடவந்தவர்.

இ - ள். காவிடத்து மாதரார் இரண்டுநாள் கழிந்தவென்று வருந்தாநிற்க, அவ்விடத்தே தோழர் தோன்றலைச்சேர்ந்தபின்பு, அவன்மணக்கோலங்கண்டு ஏத்திநின்று நீர் மணஞ்செய்த தையல்நாமத்தை எமக்குக் கூறுகவென்றாரென்க.

இனி விமலையிடத்து ஒருநாளைக் கூட்டமேயுளதென்பார்க்கு மாதரார்நையும்படி தோழர் நாமம்வேண்டினாரென்க. என்றது இவர்கேட்டதுகொண்டு சுரமஞ்சரியைச் சீவகன்கூடவேண்டுமொழி புத்திசேனன்கூற, அவன் மற்றைநாளும் அவளைப் பிரிதலின், அவர் நாளிரண்டுசென்றவென்று நைதற்குககாரணமாயிற்று, தோழர் நாமம்வேண்டியதென்றவாறு. (க)

பாடுவண்டிருந்தவன்னபல்கலையகல்குல்
வீடுபெற்றவரும்வீழும்வெம்முலைவிமலையென்
றாடுவானணிந்தசீரரமபையன்னவாணுத
லூடினும்புணர்ந்தவொத்தினியவளுளாளரோ.

*"வண்டிருப் பன்ன பல்கா ழல்குல்" என்றார்பிறரும். வீடுபெற்றவரும் விரும்பும முலையினையும், அல்குலினையும், சீரினையுமுடைய அரம்பையென்க.

இ - ள். ஊடல் கடிதிற்றீர்தலிற் புணர்ந்ததன்மையையொத்து இனியவளாய் அரம்பையையொத்த வாணுதல் விமலையென்று பெயர்கூறப்பட்டு உளளாயினாளென்றானென்க. (உ)

அம்பொனாந்துடையகாமனையனென்னவந்தண
னம்புநீரல்லர்நன்குரங்குநீரராயினுந்
தங்குரவர்தாங்கொடுப்பினெஞ்சுநொந்துதாழ்வர்தாம்
பொங்கரவவல்குலாரெனப்புகன்றுசொல்லினான்.

நம்பு - நசை. பொல்லாங்குக்கு நன்றான குரங்கு.

---

* பொருநராற்றுப்படை: உண்டெனவுணரா வுயவு நடுவின் - வண்டிருப் பன்ன பல்கா ழல்குன் - இரும்பிடித் தடக்கையிற் செறிந்துதிரள் குறங்கின்.

இ - ள். அதுகேட்டவர்ஐயன் காமனென்றேவியந்தாராக, புத்திசேனன்கூறு வான் குடிப்பிறந்தமகளிர்தாந் தங்குரவர் தம்மைக்கொடுப்பாராயின், அக்கொடுக்கப் பட்டார் மகளிர்விரும்புநீரரல்லராய்ப் பொல்லாராயினுந் தாம் அதற்கு நெஞ்சாலே நொந்து அவரை வழிபடுவர்; இங்ஙனம் வியக்கவேண்டாவென்று நகையாடலை விரும்பிக்கூறினானென்க. (௯)

அற்றுமன்றுகன்னியம்மடந்தைமாரணிநலம்
முற்றினாரைநீடுவைப்பின்மூள்கும்வந்துபாவமுங்
குற்றமற்றுமாகுமென்றுகோதைசூழ்ந்துகூறினார்க்
குற்றடுத்தயாவுயிர்ததொழிதல்யார்க்குமொக்குமே.

அற்றுமன்று - அத்தன்மையுமன்று.

இ - ள். கன்னியராகிய அம்மகளிர் நலமுதிர்ந்தவர்களைக் கொடாதே நெடு நாள் வைப்போமாயின், அதற்குப் பாவமவந்து புகுதும்; மற்றுங் குடிப்பழியுமுளதா மென்று கருதிப் பேசினார்க்குத் தாமே கோதையைச்சூழ்ந்துகொண்டு சென்றுகொ டுத்துத் தம்பாரங்கழித்து இளைப்புத்தீர்ந்துவிடுதல் குடிப்பிறந்து பழிநாணுவார்க் கெல்லாம் ஒக்குமாதலான், இதுவும் அங்ஙனம்வந்ததாதலின், நீர்வியத்தல் வேண்டா வென்றானென்க. (௪)

வேறு.

க. மதுக்குடம்விரிந்தனமாலையாரொடும்
புதுக்கடிபொருந்துதிபுக்கவூரெலாம்
விதிக்கிடைகாணலாம்வீதிமாநகா
மதிக்கிடைமுகத்தியோர்மடந்தையிண்டையாள். (௫)

உ. ஆடவர்தனதிடத்தருகுபோகினு
நாடிமற்றவர்பெயர்நயந்துகேட்பினும்
வீடுவலுயிரெனவெகுளுமற்றவள்
சேடியர்வழிபடச்செல்லுஞ்செல்வியே (௬)

௩. காமனேசெல்லினுங்கனன்றுகாண்கிலாள்
வேமெனக்குடம்பெனும்வேய்கொடோளியை
யேமுறுத்தவணலநுகரினெந்தையை
யாமெலாமங்கமாதிலகனென்றுமே.

இவைமூன்றுமொருதொடர்.

விதிக்கிடைகாணலாம் - சிற்பநூற்கு ஒப்புக்காணலாம். நகர் - வீடு. மதிக் கிடை - மதிக்கொப்பு. வீதியையும், நகரையுமுடையவூரென்க.

இ - ள். அவன் பின்னும் நீபுக்கவூரெல்லாம் மகளிரோடே புதுமணஞ்செய் வை; ஆயினும் ஓர்மடந்தை நீமணஞ்செய்தவிவ்வூரிடத்தே யிருக்கின்றாள்; மற்றவ டான் ஆடவர் தன்மனைக்கு அருகேசெல்லினும், தன்னருகிருந்தோர் அவர்பெயரை நாடிக்கேட்பினும் உயிரைவிடுவேனென வெகுளாநிற்கும்; அச்செல்விதான் சேடியர் வழிபடச் செல்லாநிற்கும்; காமனேசெல்லினுங் காணாளாய் எனக்கு உடம்புவேமென்

ஞநிற்கும். அவளைமயக்கமுறுத்தி யவள்நலத்தை நீநுகரின் நின்னை யாங்கள் காம னுக்குத்திலகனென்று பெயர்கூறுவேமென்றானென்க.

மா - *"தட்குமாகாலே" என்றாற்போலநின்றது. (எ)

வேறு.

தாசியர்முலைகடாக்கத்தளையவிழ்ந்துடைந்ததண்டார்
வாசங்கொண்டிலங்குமுந்நூல்வலம்படக்கிடந்தமார்ப
பேசியபெயரினளைப்பேதுறுதொழிவேனாகி
னாசுமன்பிலாதபுன்பெண்கூடுதல்யானவெலென்றான்.

அதற்குத் தானும் அசதியாடி வஞ்சினங்கூறுகின்றான்.

இ-ள். சேடியாமுயக்கத்தாற் பிணிப்புநெகிழ்ந்து விரிந்த வாசங்கொண்டில ஙகுந்தாரும் நூலுங்கிடந்த மார்பனே, நீகூறிய பெயரையுடையாளை மயக்கமுறுத்தா தே விடுவேனாயின், சிறிதும அன்பில்லாதாளை யான் கூடுவேனாகக் கடவேனென்றா னென்க. (அ)

வண்டுதேன்சிலைகொளுமாந்தளிர்மலர்களம்பாக்
கொண்டவன்கோட்டந்தன்னுட்கொடியினைக்கொணர்ந்துநீல
முண்டதுநாற்றியாண்பேரூட்டுவலுருவக்காமன்
கண்டபொழ்ப்படிவனுசார்ந்துகாந்திருநாளையென்றான்.

வண்டுந்தேனுஞ் சிலைகொண்டநாணாக, மலர்கள் அம்பாகக் கொண்டவனென்க. தளிர்போலு மேனியையுடைய கொடி. இனிச் சிலைகள்பாடமாயிற் சேமவில்லைக் கூட்டுக. வெண்ணூல் நீலமுண்டதனைக்காற்றினாற்போல, அவள் புதிதாகக்கொண்ட கோட்பாட்டைப்போக்கி அவட்கு இயல்பாகக் கோடற்குரிய ஆண்பெயரை யூட்டுவே னென்றானென்க. காற்றியென்றதற்கேற்ப ஊட்டுவேனென்றான். வடிவையுடைய காமனைப் பொன்னாற்செயதவடிவமென்க

இ-ள். காமன்கோட்டத்தே நீகூறியகொடியினைக கொணர்ந்து நாளைக்கூடு வேன்; நீயப்படிவத்தைசசேர்ந்து காந்திருவென்றானென்க (க)

வேறு.

இழைநான்வெமுலையிட்டிடையேந்தல்குன்
பழைசகண் மாதனைமாலுறுநோய்செய்வான்
முழைக்கஸ்வாளரியேறனமொய்ம்பினு
னுழைக்கணாளாக்குழைத்தெழுந்தானரோ.

இ-ள். மொய்ம்பினான் முலைமுதலியவற்றையுடையமாதனை நோய்செய்ய வேண்டித் தன்முகத்திடத்தக கண்போல் ஏவல்கொள்ளுந் தன்மையார்க்கு அங்ங னங்கூறி எழுந்திருந்தானென்க. (கo)

* புறநானூறு, கசுச: அதளெறிந் தன்ன நெடுவெண் களரி - னொருவ னட்டும் புல்வாய் போல - வோடி யுய்தலுங் கூடும - னொக்கல் வாழ்க்கை தட்குமா காலே·

சோருங்காரிகையாள்சுரமஞ்சரி
யாரஞ்சூடியவம்முலைப்பூந்தடந்
தாருமார்பமுந்தண்ணெனத்தோய்வதற்
கோருமுள்ளமுடன்றெழுகின்றதே.

சோரும் - ஒழுகும்.

இ - ள். அங்ஙனம் எழுந்தவனதுள்ளங் காரிகையாளாகிய சுரமஞ்சரி முலைத் தடத்தைத் தாருமார்பமுங்குளிரும்படி கூடுதற்கு வருந்தியெழுகின்றது, பலருங்கூறக் கேட்டிருத்தலின், அவள்வடிவை இத்தன்மைத்தென்று ஓராநிற்குமென்க.

ஆண்டுக் கனகபதாகைகூறலானும், தானுணர்ந்தமைதோன்றப் "பணைத்தோட் சுரமஞ்சரி" என்றமையானும், ஈண்டுப் புத்திசேனன் கூறினமையானும், ஊழானும் வருந்தி அவள்வடிவையோருமென்றார். தண்ணெனவெனவே வருந்தினான். (௧௧)

வேறு.

௧. கடைந்தபொற்செப்பெனக்கதிர்த்துவீங்கின
வடஞ்சுமந்தெழுந்தனமாக்கண்வெம்முலை
மடந்தைதன்முகத்தவென்மனத்திலுள்ளன
குடங்கையினெடியனகுவளையுண்கணே. (௧௨)

௨. ஏத்தருமல்லிகைமாலையேந்திய
பூத்தலைக்கருங்குழற்புரியினாற்புறம்
யாத்துவைத்தலைக்குமிவ்வருளிலாளவள்
காய்த்தியென்மனத்தினைக்கலக்குகின்றதே. (௧௩)

௩. சில்லரிக்கிண்கிணிசிலம்புஞ்சீறடிச்
செல்விதன்றிருநலஞ்சேரும்வாயிரு
ளல்லலங்கிழவனோரந்தணாளனாய்ச்
செல்வல்யான்றெளிதகவுடைத்தென்றெண்ணினான்.

இவைமூன்றுமொருதொடர்.

இவை ஆராய்கின்றபடியுங் கூடுமுபாயமுங் கூறுகின்றன. மனத்திலுள்ளன வென்றது, *"நங்கைகண் - போலும் வேலவனே" என்றுசொன்னது உட்கொண்டு.

இ - ள். வடஞ்சுமந்தெழுந்தனவாகிய முலை செப்பென வீங்கினபோலேயிருந்தன; மடந்தைமுகத்தனவாகி என்மனத்தனவாகிய கண்கள் குடங்கையினெடியன போலேயிருந்தன; இவற்றையுடைய இவ்வருளிலாள் தன்குழலாகிய கயிற்றாலேயென்னையாத்து அலையாநின்றாள்; இவள்நலம் இங்ஙனம் என்மனத்தினைக் கலக்காநின்றது. இத்தன்மையையுடைய செல்விநலத்தை இனிச் சேரும்வழிதான் ஒருகிழவனாகிய அந்தணனாய் யான்செல்வேன்; அச்செலவு அவளயிராமற் றெளிதகவுடைத்தென்று கருதினானென்க.

ஏத்துதல் தரும் - விகாரம். அல்லல் - பசிப்பிணி. (௧௪)

* குணமாலையாரிலம்பகம், ௪௬.

அணங்கரவுரித்ததோலனையமேனியன்
வணங்குநோன்சிலையெனவளைந்தயாக்கையன்
பிணங்குநூன்மார்பினன்பெரிதொர்புத்தக
முணர்ந்துமூப்பெழுதினதொப்பத்தோன்றினான்.

இ - ள். அங்ஙனங்கருதினவன் பாம்பின்றோலையொத்த மேனியனாய், வில்லெனவளைந்தயாக்கையனாய், உத்தரீயத்தோடுபிணங்கிய நூன்மார்பினனாய், மூப்பிலக்கணமெழுதும்படி கூறிய நூலினையுடையதோர் புத்தகத்தையுணர்ந்து, அம்மூப்பையெழுதியதன்மையொப்பத் தோன்றினானென்க. (கரு)

வெண்ணரையுடம்பினன்விதிர்த்தபுள்ளிய
னுண்ணவிராறுவையனெரிந்தநோக்கினன்
கண்ணவிர்குடையினன்கைத்தண்டூன்றினன்
பெண்ணலங்காதலிற்பேயுமாயினான்.

இ - ள். அவன் நரையுடம்பினனாய்த் தெறித்தபுள்ளியனாய் நுண்ணிதாய்ப்பீறினவுடையையனாய்த் தலைவளைதலின் வளைந்தநோக்கினனாய்ப் பீறினகுடையினனாய் வலியாகவுடையதோர் தண்டையூன்றிப் பெண்ணலத்தைக்காதலித்து அதனைப் பெற்றேபோதலிற் பேயின்றன்மையனாயினானென்க.

*"பலிகொண்டு பெயரும் பாசம் போலத் - திறைகொண்டு பெயாதி" என்றாற் போல. (கசு)

காப்புடையாழ்மிடறென்னுந்தோட்டியாம்
றாப்புடையவணலந்தொடக்கும்பாகனாய்
மூப்பெனுமுகபடாம்புதைந்துமுற்றிழை
காப்புடைவளநகர்காளையெய்தினான்.

இ - ள். காளை பிணிப்பையுடைய யாழையொத்த மிடறென்னுந் தோட்டியாலே ஆடவரைநீக்கின தூயநெஞ்சிடத்தையுடையவள் நலத்தைப்பிணிக்கும் பாகனாய் மறைந்து சுரமஞ்சரிமனையை யெய்தினானென்க.

இவனையறியாதபடி மறைத்தலின், முகபடாமென்றார். (கஎ)

† வேறு.

தண்டுலவியாகநனிதாழ்ந்துதளர்ந்தேங்கிக
கண்டுகடைகாவலர்கள்கழறமுகநோக்கிப்
பண்டையிளங்காலுவப்பல்பாலடிசிலிந்நாள
கண்டுநயந்தார்தருவகாதலிப்பலென்றான்.

---

* பதிற்றுப்பத்து, எட்டாம்பத்து, க.

† நற்றொடிமகளிருநகரமைந்தரு - மெற்றிவன் மூப்பெனவிரங்கிநோக்கவே- பொற்றொடி வளநகர் வாயில்புக்கனன் - பற்றியதண்டொடு பையமெல்லவே. இது கஎ - வது கவியின்பின் சிலபிரதிகளிலுள்ளது; உரையில்லை.

இ - ள். அங்ஙனமெய்தினவனைக் கடைகாப்பார்கண்டுகெழற, அவர்முகத்தை நோக்கித் தண்டேடபற்றுக்கோடாகத் தாழ்ந்து நிலைதளர்ந்து இளைத்துநின்று பண்டை யிளம்பருவத்திற் பாலடிசிலொன்றுமேயுவப்பேன்; இப்பருவத்தில் யான் கண்டுவிரு ம்பப்பட்ட மகளிர்தருவனவெல்லாங் காதலிப்பேனென்றானென்க.

இஃது இடக்கர். எனவே செவிகேளாமையிற் றம்பசியையே கூறினரென்று அவருணர்ந்தார். இதற்கு இப்பொழுது என்னைக்கண்டு நயந்தார்தரும் உணவுகளெ ன்னுமொருபொருடோன்றிற்று. (கஅ)

கையிற்றெழுதார்கழியமூப்பிறசெவிகேளா
மையலவர்போலமனம்பிறந்தவகைசொன்னா
மையநடக்கென்றுபசிக்கிரங்கியவர்விடுத்தார்
தொய்யின்முலையவர்கடைதோன்றனனிபுக்கான்.

இ - ள். இதுகேட்டவவர்கள், மூப்பாலே மிகச்செவிகேளாராய்ப் பித்தரைப போலே மனத்திற்றோற்றியவகையே சொன்னாராதலிற் பசியுடையரென்று பசிக்கி ரங்கி, இனிப் டையநடக்கவென்று கையாற்றெழுதாராய் விடுத்தார; விடுத்தபின்பு, தோன்றல் மகளிர்காக்கின்ற வாயிலிலே சென்றானென்க. (கக)

கோதையொடுதாழ்ந்துகுழல்பொங்கிஞிமிறார்ப்ப
வோதமணிமாலையொடுபூண்பிறழவோடி
யேதமிதுபோமினெனவென்னுமுரையீயா
னாதவுகுதன்மையினெடொல்கியுறநின்றான்.

இ - ள். அம்மகளிர் கோதையுங்குழலுந்தாழ, ஞிமிறு பொங்கியார்ப்ப, கடலிற பிறந்த முத்தமாலையும் பூணும்பிறழ ஓடிவந்து இவ்வரத்து நமக்கு ஏதமாயிருக்கும்; மீண்டுபோமினென்றுகூற, அதற்குச் சிறிதும் மறுமொழிகொடானாய் ஊதப்பறக்குந் தன்மையோடே வந்து கிட்டநின்றானென்க.

தாழ்ந்து - தாழ. (௨0)

கச்சுவிசித்தியாத்தகதிர்முலையாமணியயில்வா
ணச்சுநுனையம்புசிலைநடுங்கவுடனேந்தி
யச்சமுறுத்தமுதுபுளித்தாங்குத்தமதினொசொல்
வெச்சென்றிடச்சொல்லிவிரிகோதையவர்சூழ்ந்தார்.

இ - ள். அங்ஙனமுறநிற்றலின், அவ்விரிகோதையவர் கச்சுவிசித்தமுலையராய, வாளையும், சிலையுடனே நஞ்சுதோய்த்த நுனையினையுடைய அம்பையுமேந்தி, இவ னடுங்கும்படி அச்சமுறுத்து அமிர்தம் தன்றன்மைதிரிந்தாற்போலத் தஞ்சொல் வெவ்விதாகக்கூறிச் சூழ்ந்தாரென்க. (உக)

பாவமிதுநோவவுரையன்மின்முதுபார்ப்பார்
சாவர்தொடினேகடிதுகண்டவகைவண்ண
மோவியர்தம்பாவையினெடொப்பரியநங்கை
யேவல்வகைகண்டறிதுமென்றுசிலர்சொன்னார்.

இ - ள். அவர்களிலே சிலர் முதுபார்ப்பானை நோவவுரைக்கின்றவிது பாவமாதலின், நோவவுரையன்மின்; நீண்டுவேமாயிற் கடிதுகாவராதலிற் நீண்டன்மின்; ஓவியர்தம்பாவையால் வண்ணமொப்பரிய நங்கைக்கு நாங்கண்டவகையைக் கூறி அவளது ஏவல்வகையைக்கண்டு பின்பு இவரைநீக்குந்தன்மையை யறிவேமென்று கூறினரென்க. (உஉ)

கையவளைமையகுழலையரியவாட்க
ணையுமிடைவெய்யமுலைநங்கையொருபார்ப்பா
னுய்வதிலனூழின்முதுமூப்பினொடும்வந்தான்
செய்வதுரைநொய்தினெனச்சேறுமெழுகென்றாள்

இ - ள். கையிடத்தனவாகியவளையினையும், கருமையையுடையகுழலினையும், வியக்கத்தகக செவ்வரியையுடைய கண்ணினையும், இடையினையும், முலையினையுமுடையநங்காய்! ஒருபார்ப்பான் ஊழான் முதியமூப்போடேவந்தான்; அவன்றான் உய்யுந்தன்மையிலன்; அவனிடத்துச்செய்யுங்காரியத்தை அவனிறப்பதற்குமுன்னே கடிதிற்கூறென்ன, அவளும் அவன் இத்தன்மையனாயின், யாஞ் செல்லக்கடவேம்; நீர் முன்னேசெல்கவென்றாளென்க.

ஊழிமுது மூப்பாயிற் காலமாக்குக. (உங)

மாலைபலதாழ்ந்துமதுப்பிலிற்றிமணங்கமழுங்
கோலவகிற்றேய்வைகொழுஞ்சாந்தமுலைமெழுகிப்
பாலைமணியாழ்மழலைபசும்பொனிலத்திழிவாள்
சோலைவரைமேலிழியுந்தோகைமயிலொத்தாள்.

சாந்தமணிந்தமுலையையுடைய மழலையென்க காவிடத்திற்கன்னிமாடமாதலிற் சோலைவரையென்றார்.

இ - ள். பாலையாழ்போலும் அழகிய மழலைச்சொல்லையுடையாள் அகிற்றேய்வையான் மெழுகப்பட்டு மாலைதாழ்தலின் மதுத்துளித்து மணங்கமழும பொன்னிலத்தினின்றுமிழிகின்றவள் வரையிடத்தினின்றிழியும் மயிலையொத்தாளென்க. (உச)

சீறடியகிணகிணிசிலம்பொடுபுலம்ப
வேறுபடுமேகலைகண்மெல்லெனமிழற்றச்
சேறுபடுகோதைமிசைவண்டுதிசைபாட
நாறுமலர்க்கொம்புநடைகற்பதெனவந்தாள்.

இ - ள். அடியவாகியகிண்கிணி சிலம்போடேயொலிப்ப, மேகலைகள் மிழற்ற, தேன்விளைகின்ற கோதையிடத்துத் தேன் புட்பதூளியிலேகலந்து சேறாகையில் அத்தேனைநுகரப்பெறாமையில் வண்டுகள் திசைதோறுமெழுந்துபாட, கொம்பு நடைகற்கின்றதன்மையென்ன வந்தாளென்க.

தகிலுள்ளும்புறம்புங்கிடத்தலின், வேறுபடுமேகலையென்றார். (உரு)

வந்தவரவெண்ணையெனவாட்கண்மடவாய்கேள்
சிந்தைநலிகின்றதிருநீர்க்குமரியாட

வந்திலதனையபயனென்னைமொழிகென்றாண்
முந்துநலிகின்றமுதுமூப்பொழியுமென்றான்.

இ - ள். நீ வந்தவரத்து என்னகாரியத்தைக்கருதியென்று அவள்வினவ, மடவாய்! கேள்; சிந்தையிலேநின்று வருத்துகின்ற அழகியநீர்மையையுடைய நின்னைப் புணரவந்தேனென்றானாக, அச்சொல்லை ஆடவேண்டுமென்றுநினைத்தலிற் சித்தத்தே நலிகின்ற தீர்த்தநீராகிய குமரியாற்றை' ஆடவந்தேனென்றானாக இவள்கருதி, அவ்வியாற்றிலாடுதலாலுண்டாய பயன் எத்தன்மைத்து? அதனைக் கூறென்றாள்; அவனுந் தான்வருங்காலத்து வாராது முன்னேவந்து நலிகின்ற மூப்புப்போமென்றானென்க.

அது இவளைக்கூடின் இம்மூப்புநீக்குநலைக்கருதிக்கூறினான். மேற் காமன் கோட்டத்திற் கூடுவதன்முன்னே மூப்புநீக்கிற்று, இனிக் கூட்டத்திற்கையமில்லையென்றுகருதி. இக்கூற்று இவட்கு முற்பட இம்மூப்புப்போமென்றாற்போலிருந்தது. (உசு)

நறவிரியநாறுகுழலாள்பெரிதுநக்குப்
பிறருமுளரோபெறுநர்பேணிமொழிகென்னத்
துறையறிந்துசேர்ந்துதொழுதாடுநரிலென்றாற்
கறிதிர்பிறநீவிரெனவையமிலையென்றான்.

நறவிரிய - பூமணங்களெல்லாந்தோற்க.

இ - ள். அதுகேட்டு அவள் மிகநக்குக் குமரியாடி நின்னையொழிய இளமை பெறுவார் பிறருமுளரோ? அறிவீராயிற் றெரிந்துகூறுவீரென்றாளாக; நீகொண்ட விரதத்தைக் கெடுத்துக்கூடுந்துறை இம்மூப்பாலென்றறிந்து நின்னையணுகிக் கூடுவார் என்னையொழிய இல்லையென்றவனுக்குச் சேர்துறை யறிந்தாடினார் இல்லையென்றானாக அவள்கருதி, நீர் உலகத்தாரறியுந் துறையன்றியே வேறோர்துறையறிவீரேயென்று இகழ்ந்துகூறினாளாக, அதற்கு ஐயமில்லையென்றானென்க. (உஎ)

செத்தமரமொய்த்தமழைபாற்பெயருமென்பார்
பித்தரிவருற்றபிணிதீர்த்துமெனவெண்ணி
யத்தமெனமிக்கசுடரங்கதிர்சுருக்கும்
மொய்த்தமணிமாடமிசையத்தகவடைந்தாள்.

இ - ள். செத்ததோராமரம் பெருமழையால் உயிரைப்பெறுமென்கின்றவிவர் பித்தர்; இனியிவருற்ற பசியைத்தீர்ப்போமென்றுகருதி அப்பசிதீர்க்கும்படி மாடமிசையேசேர்ந்தாளென்க.

எனவே இவனைக் கொண்டுபோந்தாளாம். அத்தகிரியென்று ஞாயிறு கதிரைக் குவிக்குமாடமென்க. (உஅ)

வடிவமிதுமூப்பளிதுவார்பவளவல்லிக்
கடிகைதுவர்வாய்கமலங்கண்ணொடடிவண்ணங்
கொடிதுபசிகூர்ந்துளதுகோல்வளையினீரே
யடிசில்கடிதாக்கியிவணேதொளர்மினென்றாள்.

இ - ள். வளையினீர்! வாய் பவளக்கொடி துணித்ததாய்க் கண்ணும் அடியுங் கமலமலராயிருக்கின்ற இம்மூப்புவடிவு நமக்கு அளிக்கத்தக்கது; இதனை அளியாதிருப்பிற் கொடிது; அதுவேயுமன்றிப் பசியுமிக்குளதாயிருந்தது; ஆதலின், அடிசிலைக் கடிதாகச்சமைத்து இவ்விடத்தே கொணர்மினென்றாளென்க. (௨௯)

நானமுழைத்தாங்குநறுநீரவனையாட்டி
மேனிகிளர்வெண்டுகிலும்விழுப்பொனியல்பூணும்
பானலங்கொடுங்கிளவிபவித்திரமுநல்கத்
தானமர்ந்துதாங்கியமைதவிசின்மிசையிருந்தான்.

இ - ள். தீங்கிளவி அப்பொழுதே அவனை வாசவெண்ணெயையூட்டுவித்து நீராலாட்டுவித்து, புனைந்தபுடைவையையும் பொற்பூணூலினையும் பவித்திரத்தை யுநல்க, அவன் அமர்ந்து மெய்ப்படுத்தி இட்டதவிசின்மேலே யிருந்தானென்க. (௩௦)

திங்கணலஞ்சூழ்ந்ததிருமீன்களெனச்செம்பொற்
பொங்குகதிர்மின்னுபுகழ்க்கலங்கள்பலபரப்பி
யிங்குசுவையின்னமிர்தமேந்தமிகுசான்றோ
னெங்குமிலையின்னசுவையென்றுடனயின்றான்.

இ - ள். மதியை நலநதோடேசூழ்ந்தமீன்கள் பொங்குகதிரைச்சூழ்ந்ததென்னும்படி செம்பொற்கலத்தையும் பக்கத்தட்டங்களையும்பரப்பித் தங்கின அறுசுவையடிசிலையேந்த, சான்றோன் எவ்விடத்துமில்லை, இத்தன்மைத்தாய சுவையென்று வியந்து, அவ்வியப்புடனே யயின்றானென்க (௩௧)

தமிழ்தழியசாயலவர்தங்குமலர்த்தூநீ
ருமிழ்கரகமேந்தவுரவோனமர்ந்துபூசி
யமிழ்தனையபஞ்சமுகவாசமமைத்தாய்ந்த
கமழ்திரையுங்காட்டவவைகொண்டுகவுண்மடுத்தான்.

இ - ள். இனிமைதழுவிய சாயலையுடையவர் மலர்தங்குந்தூநீரை உமிழுங் கரகத்தையேந்த உரவோன் பூசி ஐந்துவகைப்பட்ட முகவாசத்தைக்கூட்டி ஆய்ந்த வெற்றிலையையுங்காட்ட, அவற்றை வாங்கிக்கொண்டு கவுளடுத்தானென்க. (௩௨)

வல்லதெனையென்னமறைவல்லன்மடவாயா
னெல்லையெவனென்னப்பொருளொய்திமுடிகாறுஞ்
சொல்லுமினுநீவிர்கற்றகாலமெனத்தேன்சோர்
சில்லென்கிளிக்கிளவியதுசிந்தையிலனென்றான்.

இ - ள். அங்ஙனமிருந்தபின்பு, நீர்வல்லதென்னென்று அவள்வினவ, மடவாய்! யான் மறைந்தவேடங்கோடலைவல்லேனென்றானாக, அவள் அதனைவேதத்தைவல்லேனென்றானாகக்கருதி, அவ்வேதம் அநந்தசாகையதாதலின் நீர்கற்றவெல்லை எவ்வளவென்று வினவ, அவன் அதற்கு யான் நினைத்தகாரியத்தைப்பெறுமளவுமென்றானாக, அவள் அதனை வேதந் தான்கருதிய தத்துவத்தை முற்றவுணர்த்திமுடியுமளவுமென்றா

ளுகக்கருதி, இக்கலையெல்லாம் நீர்கற்றகாலத்தையின்னுங்கூறுமென்றுவினுவ', அவன் அதற்குக் கிளிச்சொல்லென்கின்றசிலகிளவியையுடையாய்! அக்காலங்கூற நினைவிலேனென்றானென்க.

என்றது: மேலும்விஞவுமுத்தரமும் பெருகுதல்கருதி, அஃது எனக்குக் கருத்தன்றென்றான்; அவள் அதனைநினைந்திருந்திலேனென்றாளுகக்கருதினுள். (ருங)

இன்னவர்களில்லைநிலத்தென்றுவியந்தேத்தி
யன்னமனமென்னடையினுளமர்ந்துநோக்கப்
பின்னையிவள்போகுதிறம்பேசுமெனவெண்ணித்
தன்னஞ்சிறிதேதுயின்றுதாழவணக்கான்.

இ - ள். சுரமஞ்சரி இந்நிலத்தில் இத்தன்மையையுடையவர்கள் இல்லையென்று ஏத்தி அவள் நோக்கினுளாக, அவன் இனி இவள் நம்மைப்போமாறுகூறுவளென்று கருதி மிகவுஞ் சிறிதே துயின்று தலைதாழ, அவள் அதுகண்டு நககாளென்க. (ருச)

கோலமணிவாய்க்குவளைவாட்கண்மடவாளைச்
சாலமுதுமூப்புடையசாமிமுகநோக்கிக்
காலுமிகநோஞ்சிறிதுகணணுந்துயில்குற்றே
னேலங்கமழ்கோதையிதற்கென்செய்குவாயென்றான்.

கோலமணி - அழகியமுத்து; என்றது முறுவலை. இத்திங்கள் காாத்திகையாம்.

இ - ள். சாமி மடவாளைப்பார்த்து வாடைக்காற்றுமிகுதலாலே நெஞ்சுநோம், இதனுலேசிறிதுபொழுதில் இறந்துபடுந்தன்மையையெய்தினேன்; கோதாய், இதற்கு என்செய்வேன்; உரையாயென்றானென்க

கண்ணிமைப்பளவுமென்றது உயிருடனிருத்தலையுணர்ததினுற்போலக் கண்டுயிலுதலும் இறந்துபாடுணர்த்திற்று. அதனைக் காலுநோங் கண்ணுந்தூங்குமென்றாளுகக் கருதினுள். (ருரு)

மட்டுவிரிகோதைமதுவார்குழலினுடன்
பட்டுநிணர்கடடில்பரிவின்றியுறைகென்று
ளிட்டவணைமேலினிதுமெல்லெனவசைந்தான்
கட்டழல்செய்காமக்கடலைக்கடையலுற்றான்.

இ - ள். அங்ஙனங்கருதினவவள் பட்டுக்கச்சுநிணர்ந்த தன் கட்டிலிலிட்ட அணைமேலே வருத்தமின்றித் தங்குகவென்றாள்; அதுகேட்டு அழலின்றன்மையைச் செய்கின்ற காமக்கடல் அலையின்றிநின்றதனை யலைக்கலுற்றவன் அதன்மேலே தன் வருத்தந்தோன்ற அசைந்தானென்க. (ருசு)

காலையொடுதாழ்ந்துகதிர்பட்டதுகலங்கி
மாலையொடுவந்துமதிதோன்றமகிழ்தோன்றி
வேலனையகண்ணியர்தம்வீழ்துணைவர்திண்டோள்
கோலமுலையாலெழுதக்கூடியதையன்றே.

இ - ள். கதிர் பகற்பொழுதோடே மேற்றிசையிலேவீழ்ந்து கலங்கிப் பட்டது; பட்டபின்பு மாலைக்காலத்தோடே மதிவந்துதோன்றலின், மகளிர் மகிழ்ச்சிதோன்றித் தங்கணவர்தோளை முலையாலேயெழுதும்படி இராக்காலங் கூடிற்றென்க. (கஎ)

ஏந்துமலர்ச்சேக்கையகில்வளர்த்தவிடுபுகையும்
வாய்ந்தமலர்க்கோதையமிர்துயிர்க்குநறும்புகையுங்
கூந்தலகிற்புகையுநதுகிற்கொழுமெனறும்புகையும்
வாய்ந்தவரைமழையினுயர்மாடத்தெழுந்தனவே.

இ - ள். சேக்கையிடத்து அகில்வளர்த்தபுகையுங் கோதைக்குப்புகைத்த அகிற்புகையுங் கூந்தற்குப்புகைத்தவகிற்புகையுந் துகிற்குப்புகைத்தவகிற்புகையும் பயன்றருமலையின் மழையென்ன, மாடத்தே யெழுந்தனவென்க. (கஅ)

ஆசிலடிபாலமிர்தஞ்சிறியவயின்றம்பூங்
காசில்கடிமாலைகலநொய்யமதிகவற்குந்
தூசுநறுஞ்சாந்தினியதோடிவைகடாங்கி
மாசின்மடவாரணமணிவீணைநரம்புளர்ந்தார்.

ஆசில் - குற்றமற்ற. கூதிராதலிற் பாலடிசில்கூறினார். சிறியவயின்றென்றது - மடவார *அற்பாகாரிகளென்பதுபற்றி. நொய்யகலம். மதிகவற்கும் - அறிவை வருத்தும்.

இ - ள். மடவார், அடிசிலையயின்று மாலைமுதலியவற்றைத்தாங்கி யாழைவாசித்தாரென்க. (கக)

பூஞ்சதங்கைமாலைபபுகழ்க்குஞ்சிப்பொருவில்லார்
வீங்குதிரடோளுந்தடமார்பும்விரைமெழுகித்
தீங்கரும்புமென்றனையவின்பவளச்செவ்வாய்த்
தேங்கொளமிர்தாரந்துசெழுந்தார்குழையச்சோர்ந்தார்.

இ - ள். ஒருபுறமாலையினையுங் குஞ்சியினையுமுடைய ஆடவர் தோளிலும் மார்பிலும் விரையைமெழுகி இனிய பவளவாயிலுண்டாகிய கரும்பைமென்றனைய அமிர்தத்தையுண்டு மாலைவாடும்படி முயங்கினாரென்க. (சo)

பொன்னறையுளின்னமளிப்பூவணையின்மேலான்
முன்னியதன்மன்றலதுமுந்துறமுடிபபான்
மன்னுமொருகீதமதுரம்படமுரன்றாற்
கின்னமிர்தமாகவிளையாருமதுகேட்டார்.

இ - ள். அணையிடத்தான் அக்காலத்திலே தானினைந்திருந்த காந்தருவமாகிய வதனை முற்படமுடிக்கவேண்டி நிலைபெற்றதொருகீதத்தை இனிமையுண்டாகப் பாடினாற்கு இளையாரும் அதனை யினிதாகக்கேட்டாரென்க.

நான்காமுருபிற்கு இவர்கேட்டது கொடைப்பொருட்டாம். (சக)

---

* பதுமினி "அற்பவுண்டியாள்" எனக் காமநூலார் கூறினர்.

வேறு.

மன்மதன் மணிக்குரன்மருட்டுமென்றுமால்கொள்வா
ரின்னதன்றியக்கரின்னியக்கவந்ததென்றுதம்
பின்னுமுன்னுநோக்குவார்பேதுசாலவெய்துவார்
கன்னிதன்மனத்திழைத்தகாளைகாமம்வாழ்த்துவார்.

இ - ள். காமனது அழகியகுரலேயென்றும், மருட்டுமென்றும் மால்கொள்வார்; இத்தன்மைத்தன்று இயக்கரால்நடத்தப்படுதலின் வந்ததென்று நோக்குவார்; எய்துவார்; இப்பாட்டுடையான் சீவகனேயென்று அவனைவாழ்த்துவாராயினரென்க. (சஉ)

கொம்பினொத்தொதுங்கியுங்குழங்கன்மாலைதாங்கியு
மம்பினொத்தகண்ணினாரடிக்கலம்மரற்றவும்
நம்பிதந்தகீதமேநயந்துகாணவோடினார்
வெம்புவேட்கைவேனிலானின்வேறலானுமாயினான்.

இ - ள். அங்ஙனமானவர் இடைவருந்துமென்று சலங்கைகளரற்றுநிற்கவும் ஒதுங்கியுந் தாங்கியுங் கீதத்தைவிரும்பிச் செவிப்புலனாற்கேட்டற்கு ஓடினார். அப்பொழுது அவனுங் கட்புலனாகாமையாலும் பாட்டினாலுங் காமனேயாயினனென்க.

கேள்வியுமுணரப்படுதலிற் காட்சியேயாம். நாடினாரும் பாடம். (சஙு)

தாமமாலைவார்குழற்றடங்கணார்க்கிடங்கழி
காமனன்னகாளைதன்கருத்தொடொத்ததாகலான்
மாமலர்த்தெரியலான்மணிமிடற்றிடைக்கிடந்த
சாமகீதமற்றுமொன்றுசாமிநன்குபாடினான்.

இ - ள். மகளிர்க்கு நம்வயத்தனாகானென்று தம்மிடத்தினின்று நீக்கப்படுவோனாகிய காளை தன்னினைவோடு அவர்கருத்துமொத்ததாதலிற் கொன்றைமாலையையுடைய இறைவனது நீலமணிபோலு மிடற்றிடத்தேகிடந்ததொரு சாமகீதத்தைச் சாமி பின்னுநன்றாகப் பாடினனென்க.

தெரியலானைச் சீவகனெனிற் பின்னர்ச் சாமியென்னும்பெயர்வேண்டாவாம். ()

கள்ளமூப்பினந்தணன்களிந்தகீதவீதியே
வள்ளிவென்றநுண்ணிடைமழைமலர்த்தடங்கணா
புள்ளுவம்மதிமகன்புணர்த்தவோசைமேற்புரன்
றுள்ளம்வைத்தமாமயிற்குழாத்திறோடியெய்தினார்.

இ - ள். வேடனாகியமகன் மதியாற்புணர்க்கப்பட்ட தம்மோசையாகவழைக்கின்றவோசைமேலே விரும்பி மனம்வைத்த மயிற்றிரள் ஓடுமாறுபோலே, தடங்கணாரெல்லாம் அந்தணனது முற்றுப்பெற்ற கீதத்தின்வழியே யோடிச்சேர்ந்தாரென்க.

வள்ளி - வல்லி. புள்ளுவமகன் - புள்ளினோசையைத் தன்னிடத்தே யுடைய மகன். (சரு)

வேறு.

இனிச்சிறிதெழுந்துவீங்கியிட்டிடைகோறுநாங்க
ளெனக்கொறுகொறுப்பபோலுமிளமுலைப்பரவையல்குற்
கனிப்பொறைமலிந்தகாமர்கற்பகமணிக்கொம்பொப்பாள்
பனிப்பிறைப்பூணினான்றன்பாண்வலைச்சென்றுபட்டாள்.

கொறுகொறுத்தல் - குறிப்புச்சொல்லாகிய இரட்டைக்கிளவி.

இ - ள். நாங்கள்மேல் இந்நிலையிற்சிறிதெழுந்துவீங்கி யிடையைக்கொல்வோமென்று கோபிப்பனபோலு முலையினையுமல்குலையுமுடையதொரு பழமாகிய பாரமிக்க கற்பகக்கொம்பொப்பாள் பூணினனது பாட்டாகியவலையிலே சென்றுஅகப்பட்டாளென்க. (சகூ)

அடிக்கலமாற்றவல்குற்கலைகலந்தொலிப்பவந்து
முடிப்பதென்பெரிதுமூத்தேன்முற்றிழையரிவையென்ன
வடிக்கணாணக்குநாணித்தோழியைமறைந்துமின்னுக்
கொடிக்குழாத்திடையோர்கோலக்குளிர்மணிக்கொம்பினின்றாள்.

முடிப்பது - இடக்கர்.

இ - ள். அரிவை அரற்ற ஒலிப்ப வந்து, முடிப்பதென்? யான் பெரிதுமூத்தேனேயென்ன, அவள் நாணி நக்குத் தோழியைமுன்னிட்டுக்கொண்டு மின்னுக்குழாத்திடையிற் கொம்புபோலே நின்றாளென்க. (சஎ)

இளையவர்க்காணின்மன்னோவெஃசெய்வீர்நீவிரென்ன
விளைமதுக்கண்ணிமைந்தர்விளிகெனத்தோழிகூற
முளையெயிற்றிவளையாருமொழிந்தனரில்லையென்றோ
வுளைவதுபிறிதுமுண்டோவொண்டொடிமாதர்க்கென்றான்.

இ - ள் நீர் என்னையொழிய இளையவரைக்கண்டீராயின், மிகவும் என்செய்வீரென்றானாக, நீகூறிய அவர்பெயரும் இவ்விடத்துக்கெடுகவென்று தோழிகூற, இங்ஙனங்கூறியது இவளைப் பேசினாரில்லையென்றோ? இவட்குவருந்துங்காரியமாக அவர்செய்தது பிறிதுமுண்டோ? கூறென்றானென்க. (சஅ)

வாய்ந்தவிம்மாதர்சுண்ணஞ்சீவகன்பழித்தபின்றைக்
காய்ந்தனளென்றுகூறக்காளைமற்றிவட்குத்தீயான்
மாய்ந்தனன்போலுமென்னமாதராரொருங்குவாழ்த்தி
யாய்ந்தனமையனுய்ந்தானறிந்தனமதனையென்றார்.

வாய்ந்த - விகாரம்.

இ - ள். இம்மாதர்வாய்த்த சுண்ணத்தைச் சீவகன்பழித்தபின்பு ஆடவரைக் காய்ந்தனளென்றுகூற, அதுகேட்டு இவட்குத்தீயானாகியகாளை மாய்ந்தான்போலுமேயென்றானாக, மகளிரெல்லாம் நூறும்புகுவானென்று வாழ்த்தி, ஐயனுய்ந்தான்; அதனையாராய்ந்தேம்; பின்பு விளங்குவதுஞ்செய்தேமென்றாரென்க.

அது மேற்கூறுகின்றார். (சகூ)

காலுற்றகாமவல்லிக்கொடியெனக்கலங்கிநங்கை
மாலுற்றுமயங்கியாங்கண்மடக்கிளிதூதுவிட்டேஞ்
சேலுற்றநெடுங்கட்செவ்வாய்த்தத்தைதன்செல்வங்கண்டே
பாலுற்றபவளச்செவ்வாய்த்தத்தையாற்பரிவுதீர்ந்தேம்.

இ - ள். நங்கை அவற்குற்றதுகேட்டுக் கலங்கிப் பித்தேறியேங்குதலின், யாங்கள் தத்தையைக்கண்டறிந்துவாவென்று கிளியைத்தூதுவிட்டேம்; அங்ஙனம்போய்ச் சேலையொத்த கண்ணிணையுடைய தத்தைதன்பொலிவைக்கண்டு வந்துகூறிய அத்தத்தைசொல்லாலே வருத்தந்தீர்ந்தேமென்றாரென்க.

சொல்வருவிக்க. பாலுற்ற - பாலுண்ட. (௫௦)

அன்பொட்டியெமக்கோர்கீதம்பாடுமினடித்தியாரு
முன்பட்டதொழிந்துநுங்கண்முகவியர்முனிவுதீர்ந்தார்
பொன்றொட்டேம்யாமுநும்மைப்போகொட்டோம்பாடல்கேளா
தென்பட்டுவிடினுமென்றாரிலங்குபூங்கொம்பொடொப்பார்.

மூத்தவர்தணுதலின், அடித்தியாரென்றா.

இ - ள். கொம்பொடொப்பார் அடித்தியாரும் ஆடவரைக்காணேனென்று நெஞ்சிற்கொண்டதனைத்தவிர்த்து நும்மிடத்து முகவியராய் முனிவுதீர்ந்தாராதலின், நீரும் எம்மிடத்து அன்புசெய்தலைப்பொருந்தி எமக்கு ஒருகீதத்தைப்பாடுமின்; நீர் என்பட்டு விடினும் பாடல்கேளாமல் நும்மைப் போகவொட்டோம்; அதற்கு யாமும் இவளை யாணையிட்டேமென்றாரென்க. (௫௧)

பாடுதும்பாவைபொற்பேபற்றிமற்றெமக்குநல்கி
னூடமைத்தோளினீரஃதொட்டுமேற்கேண்மினென்ன
நாடியார்பேயைக்காண்பார்நங்கைகாளிதுவுமாமே
யாடுவதொன்றுமன்றிவ்வாண்மகனுரைப்பதென்றார்.

இ - ள். தோளினீர்! பாவை தனது தோற்றப்பொலிவுதொடங்கி யொழிந்தவற்றையும் எமக்கு நல்குவளாகில் பாடக்கடவேம்; அதனை யொட்டுவாளாயிற் கேண்மினென்றானாக, அவர்கள் அதனைப் பொன்னாயிருப்பதொரு பேயைப்பிடித்து எமக்குத்தரிற் பாடுவேமென்றானாகக்கருதிப் பொன்னல்லாத பேய்தன்னைநாடிக்காண பார்யார்? அதுவுமன்றி இவ்வாண்மகன் பொற்பேயென்றுகூறுகின்றது இவ்வுலகில் நிகழ்வதொன்றன்றாதலால் இதுவும் நாமொட்டுதற்காமேயென்றாரென்க.

உலகிலில்லாததற்கு உடம்படலாம், அஃது ஒருவனாற் காட்டமுடியாதாதலின். * "ஒருபொருளிருசொற் பிரிவில வரையார்" என்னுஞ்சூத்திரத்து வரையாரென்றதனாற் பொற்பேயென்னுமேகாரவீற்றுப்பெயர் வேறுமோர் பொருடந்துநிற்றலிற் பேயென்று யகரவீறுமாய்நின்றது. இதற்கு யகரவொற்று விகாரத்தாற்றொக்கதாம்;

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், ௬௪.

* "அருங்கழி காத மகலுமென் றுழென் றலந்துகண்ணீர் - வருங்கழி காதல் வனசங்கள்" என்றவிடத்து அலர்ந்தென்பது அலந்தென்றுவிகாரப்பட்டுநின்றாற்போல.(ருஉ)

பட்டுலாய்க்கிடந்தசெம்பொன்பவளமோடிமைக்குமல்கு
லொட்டினாளதனையோரா துலம்பொருதோளினானும்
பட்டவாணுதலினாய்க்குப்பாடுவல்காமன்றந்த
தொட்டிமையுடையவீணைச்செவிச்சுவையமிர்தமென்றான்.

இ - ள். பட்டுச் சூழ்ந்துகிடந்தவல்குலையுடையாள் அவன் கருதியபொருளை யோராதே யில்லாததற்கு ஒட்டலாமென்றுகருதி யொட்டினாள்; ஒட்டினபின் தோளினானுங் காமன்பாடின ஒற்றுமையையுடைய சாரீரவீணையாகிய செவிக்கு இனிமைதரு மமிர்தத்தை வாணுதலையுடைய நினக்குப பாடுவேனென்றானென்க.

இனிப் பொன்னாலேபேயைப்பண்ணிக் கொடுப்போமென்று ஒட்டினாளென்பாருமுளர். காமனைககூறினான், இவள் வரமவேண்டிப்போதலைக்கருதி. (ருங)

வயிரவில்லுமிழும்பைம்பூண்வனமுலைமகளிர்தம்மு
ளுயிர்பெறவெழுதப்பட்டவோவியப்பாவையொப்பாள்
செயிரில்வாண்முகத்தைநோக்கிதேன்பொதிந்தமுதமூறப்
பயிரிலாநரம்பிற்கீதம்பாடியதொடங்கினானே.

இ - ள். நின்றமகளிரிற் சுரமஞ்சரிமுகத்தைப்பார்த்துக் கீதத்தைப்பாடுதற்குத் தொடங்கினானென்க.

நரம்பிற்பயிரில்லாதகீதம் - நரம்போடுகூடி மறைகின்ற அருவருப்பில்லாதகீதம்; தனித்துப்பாடுதல் அரிதென்றார். அமுதம - இனிமை. நரம்போடேபாடினானென்பாருமுளா (ருச)

வே று.

தொடித்தோள்வளைநெகிழத்தொய்யின்முலைமேல்
வடிக்கேழ்மலர்நெடுங்கண்வார்புயலுங்காலும்
வார்புயலுங்காலும்வளைநெகிழுநந்திறத்தா
லார்வமுறுநெஞ்சமழுங்குவிக்குமாலை.

இ - ள். வட்டமான வளைநெகிழாநிற்க, வடுவகிர்போலு நிறத்தையுடைய கண்ணும் முலைமேலேநீராக்காலும்; அங்ஙனங்காலுதற்கும் நெகிழ்தற்குங்காரணமாகிய நம்மிடத்துளதாகிய ஆர்வமுற்றநெஞ்சினை மாலைவந்து வருத்துவிக்குமென்க. ()

ஐதேந்தகலல்குலாவித்தழலுயிராக்
கைசோர்ந்தணலூன்றிக்கண்ணீர்கவுளலைப்பக்
கண்ணீர்கவுளலைப்பக்கையற்றியாமினையப்
புண்ணீரும்வேலிற்புகுந்ததான்மாலை.

---

* திருச்சிற்றம்பலக்கோவையார், ககo.

இ - ள். மெல்லிய காஞ்சியையேந்தியவல்குலையுடையாய், கொட்டாவிகொண்டு உயிர்த்துச் சோர்ந்து கையையணலிலேயூன்றுதலாலே, கண்ணீர் கவுளையலைப்ப வீழும்; அங்ஙனமலைத்தலின், யாம் கையற்று அதன்மேலே யினையும்படி மாலைவந்த தென்க.

வீழுமெனவருவிக்க. (௫௬)

அவிழ்ந்தேந்துபூங்கோதையாகத்தலர்ந்த
முகிழ்ந்தேந்துபூண்முலைமேற்பொன்பசலைபூப்பப்
பொன்பசலைபூப்பப்பொருகயற்கண்முத்தரும்ப
வன்புருகுநெஞ்சமழுங்குவிக்குமாலை.

இ - ள். கோதாய்! எனதாகத்தில் வீங்கினமுலைமேலே பொன்போலும்பசலை பொலிவுபெறும்படிதோன்றும்; அங்ஙனம்பூவாநிற்க, அரும்பாநிற்க, நெஞ்சை மாலை வந்து அழுங்குவிக்குமென்க.

தோன்றுமெனவருவிக்க. இத்தாழிசைமூன்றும், தனக்கு வேட்கை நிகழ்ந்த தாகக் கூறலாகாமையின், மாலைப்பொழுதுகண்டு ஆற்றாததலைவி தோழிக்குக்கூறிற் றாகக்கூறினான். இனித் தலைவன் ஆற்றானாய்க் கூறிற்றென்பாருமுளர். (௫௭)

வேறு.

பாடினான்றேவகீதம்பண்ணினுக்கரசன்பாடச்
சூடகமகளிர்சோர்ந்துசெருக்கியமஞ்ஞையொத்தா
ராடகச்செம்பொற்பாவையந்தணற்புகழ்ந்துசெம்பொன்
மாடம்புக்கநங்கற்பேணிவரங்கொள்வனானையென்றாள்.

இ - ள். பண்ணினுக்கரசன் தேவனாற்பெற்ற பாட்டைப்பாடினானாக, மகளிர் சோர்ந்து மயங்கியமயிலையொத்தார்; அப்பொழுது சுரமஞ்சரி அந்தணனைப்புகழ்ந்து காளைக் கோயிலிலேபுக்கு நமக்குத்தெய்வமாகிய காமனைவழிபட்டு இப்பாட்டை யுடையசீவகனைத் தரவேண்டுமென்று வேண்டிக்கொள்வேனென்று கூறினாளென்க. ()

மடலணிபெண்ணையீன்றமணிமருள்குரும்பைமான
உடலணியாவினையவுருத்தெழுமுலையினாரு
மடலணிதோழிமாருமார்வத்திற்கழுமவிப்பாற்
கடலணிதிலகம்போலக்கதிர்திரைமுளைத்ததன்றே.

வடிவாற் பனையீன்றகுரும்பையையமானத் தோன்றினமுலை; நிறத்தால் மணி மருள் முலை.

இ - ள். சுரமஞ்சரியும், பிறரை வருத்துதலுடையராய், அவளைச்சூழ்ந்த தோழி மாரும் வரம்வேண்டவெண்ணும் வேட்கையிற்றிரள,இப்பாற் கடலிடத்தே கதிரவன் றோன்றினானென்க. (௫௯)

பொன்னியன்மணியுந்தாருங்கண்ணியும்புனைந்துசெம்பொன்
மின்னியற்பட்டஞ்சேர்த்தியானெய்பால்வெறுப்பவூட்டி

மன்னியற்பாண்டில்பண்ணிமடந்தைகோல்கொள்ளவைய
மின்னியற்பாவையேற்பத்தோழியோடேறினாளே.

இ - ள். நிலைபெற்ற செலவினையுடையஎருத்தை மணிமுதலியவற்றாற்புனைந்து சேர்த்தி ஊட்டிப் பண்ணி ஒருமகள் செலுத்துங்கோலைக்கொள்ள, பாவை தோழியுடனே யாடவரைக்காணாமற போம்போக்கிற்கியைய வண்டியையேறினாளென்க.()

ஆடவரிரியவேகியஞ்சொலார்சூழக்காமன்
மாடத்துளிழிந்துமற்றவ்வள்ளலைமறையவைத்துச்
சூடமைமாலைசாந்தம்விளக்கொடுதூபமேந்திச்
சேடியர்தொழுதுநிற்பத்திருமகள்பரவுமன்றே.

இ - ள். அரசனாணையால் ஆடவர்போக மகளிர்சூழவேகி யிழிந்து கூடவந்த வந்தணனைத் தான்பரவுகின்றது கேளாதபடி கடியறையிலே மறையவைத்துச் சேடியர் சூடுதலமைந்த மாலைமுதலியவற்றையேந்தித் தன்னைத்தொழுதுநிற்பத் திருமகள் பரவாநிற்குமென்க. (சுக)

பொன்னிலஞ்சென்னிபுல்லவிடமுழந்தாளையூன்றி
மின்னவிர்மாலைமென்பூங்குழல்வலத்தோளின்வீழக்
கன்னியங்கழுகின்கண்போற்கலனணியெருத்தங்கோட்டித்
தன்னிருகையுங்கூப்பித்தையலீதுரைக்குமன்றே.

இ - ள். தையல் இடமுழந்தாளையூன்றி மாலையுங்குழலும் வலத்தோளிலே வீழும்படி கமுகின்கண்போலுங்கழுத்தை வலத்தேசாய்த்து நிலத்தைச் சென்னி புல்லும்படி வணங்கி யெழுந்திருந்து இரண்டுகையினையுங்குவித்துநின்று இதனைக் கூறுமென்க. (சுஉ)

*தாமரைச்செங்கட்செவ்வாய்த்தமனியக்குழையினாயோர்
காமமிங்குடையேனாளைச்சீவகனகலஞ்சேர்த்தின்
மாமணிமகரமம்புவண்சிலைக்கரும்புமான்றேர்
பூமலர்ப்பாவையிவ்வூரொடும்பொலியவென்றாள்.

இ - ள். கண்ணையும், வாயையுமுடைய குழையினாய், இவ்விடத்தே யொரு வரம் வேண்டுதலையுடையேன், அது யாதெனிற பூமலிமாரபனே, எனக்குச் சீவகனைத் தருதல்; அங்ஙனந்தரில் நினக்கு மகரக்கொடியும், அம்பும், சிலையாகியகரும்பும், தேரும், ஊரோடே பொலியத் தருவேனென்றாளென்க.

காமமிகுகும் பாடம். (சுங)

மட்டவிழ்கோதைபெற்றாய்மனமகிழ்காதலானை
யிட்டிடைநோவநில்லாதெழுகெனவேந்தனோழன்

* கணவரோடு பிரிவின்றி யின்பநுகர விரும்பியமகளிர் காமவேள்கோட்டஞ் சென்று அவனைத்தொழுவர்; "சோமகுண்டஞ் சூரிய குண்டத் துறைமூழ்கிக் - காம வேள் கோட்டந் தொழுதார் கணவரொடு - தாமின் புறுவ ருலகத்துத் தையலார்- போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர்" என்றார் சிலப்பதிகாரத்திலும்.

பட்டிமையுரைத்ததோராள்பரவியதெய்வந்தன்வாய்
விட்டுரைத்திட்டதென்றேவேற்கணாள்பரவிமீண்டாள்.

இ - ள். கோதாய்! நின்காதலானைப்பெற்றாய்; இனி யிடைநோவ நில்லாதே போவென்று புத்திசேனன் வஞ்சனைகூறினமை யறியாதே தான் பரவியதெய்வந் தன்வாய்விட்டுக்கூறிற்றென்றே பின்னும்பரவி வேற்கண்ணாள்மீண்டாளென்க. (சுச)

அடியிறைகொண்டசெம்பொனாடகச்சிலம்பினாளக்
கடியறைமருங்கினின்றமைந்தனைக்கண்டுநாணி
வடியுறுகடைக்கணோக்கநெஞ்சுதுட்கென்னவார்பூங்
கொடியுறவொசிந்துநின்றாள்குழைமுகத்திருவோடொப்பாள்.

அடியிறைகொண்ட - அடியிலே தங்குதல் கொண்ட. ஆடகச்செம்பொனாற் செய்தசிலம்பு. கடியறை - மணவறை.

இ - ள். சிலம்பினாளாகிய திருவோடொப்பாள் அறையிடத்தே பழைய வடிவைக்கொண்டுநின்ற சீவகனை நெஞ்சுதாளுக்கெனக்கண்டு வடுவகிர்போலுங் கடைக்கண் நோக்காநிறக நாணிக் கொடிபோல வளைந்துநின்றாளென்க. (சுரு)

இலங்குபொன்னோலைமின்னவின்முகஞ்சிறியகோட்டி
யலங்கலுங்குழலுந்தாழவருமணிக்குழையோர்பாதிற
கலந்தொளிகான்றுநின்றுகதிர்விடுதிருவில்வீச
நலங்கனிந்துருகிநின்றாளமவேற்காமாதனாள்.

இ - ள். வேல்போலுங்கண்ணாள் அலங்கலுங்குழலுந்தாழ, குழை திருவில வீச, ஓலைமின்ன முகத்தைச்சிறியவாகசசாய்த்து, அன்புமுறறி, நெஞ்சுருகிநின்றாளென்க.

கதிர்கலந்துநின்று ஒளியைக்கான்றுவிடுமணிக்குழை, அதற்கியல்பு. (சுசு)

எரிமணிக்கலாபத்திட்டவிந்திரநீலமென்னு
மொருமணியுந்தினேரேயொருநதிருமிழ்வதேபோ
லருமணிப்பூணினாடனவ்வயிறணிந்தகோல
திருமயிரொழுக்கம்வந்தென்றின்ணிறைகவர்ந்ததன்றே.

இ - ள். அங்ஙனம் நின்றநிலையை அவன்கண்டு மேகலையிலழுத்தின இந்திர நீலமென்னும் ஒப்பில்லாதமணி பலகதிரையுமிழாதே உந்திநேரே யொருகதிரை உமிழுந்தன்மைபோலப் பூணினாளது வயிற்றை யழகுசெய்த அழகுடைய மயிரொழுக்கம்வந்து என்னிறையைக் கவர்நததல்லவோ, இனி ஒழிந்தன என்செய்யுமென்று தன்னிலேகூறினானென்க. (சுஎ)

தேறினேன்றெய்வமென்றேதீண்டிலேனாயினுய்யேன்
சீறடிபரவவந்தேனருளெனத்தொழுதுசேர்ந்து
நாறிருங்குழலினாளைநாக்கொவிடையிற்புல்லிக்
கோறொடித்தங்கனெய்யக்குழைந்துதார்திவண்டதன்றே.

இ - ள். நின்னடியைப் பரவவந்தேன்; வந்தயான் நின்னைத் தெய்வமென்றே

கருதிப் பின்பு மானிடமென்றேதேறினேன்; இனித் தீண்டேனாயினுய்யேன்; அருளாயென்று சேர்ந்து அநங்கனெய்தலாற் கொடுப்பாரும் அடுப்பாருமின்றி நாகை யணைகின்ற விடைபோலேபுல்ல, தார்குழைந்து வாடிற்றென்க.

புல்லி - புல்ல. (சுஅ)

கலைபுறஞ்சூழ்ந்தவல்குற்காமயிற்சாயலாளு
மலைபுறங்கண்டமார்பின்வாங்குவிற்றடக்கையானு
மிலைபுறங்கொண்டகண்ணியின்றமிழியம்கையின்ப
நிலைபெறநெறியிற்றுய்த்தாரிகாதமக்கிலாதநீரார்.

இ - ள். மயிற்சாயலாளும், பச்சிலையை இடத்தேயுடைத்தாகிய கண்ணியை யுடைய மலைதோற்ற மார்பினையுடைய தடக்கையானுமாகிய தமக்கொப்பிலாதநீரார் இனியதமிழ்கூறிய இயற்கைப்புணர்ச்சியாகிய இன்பம் நிலைபெறும்படி முறைமையின் நுகர்ந்தாரென்க.

இது சுட்டி யொருவர் பெயர்கொள்ளப்படாதலின், உலகியல்வழக்கான கந்தருவமாம். (சுகூ)

குங்குமங்குயின்றகொம்மைக்குவிமுலைகுளிர்ப்பத்தைவந்
தங்கலுழ்மேனியல்குற்காசுடன்றிருத்தியம்பொற்
பொங்குபூஞ்சிலம்பிற்போர்த்தபூந்துகளவித்துமாதர்
கொங்கலர்கோதைசூட்டிக்குழலைத்திருத்தினானே.

இ - ள். அங்ஙனநுகர்ந்து வேட்கைதீராநுகராமையிற பிறந்த வெப்பநீங்கும்படி மாதருடைய முலையையும், அழகொழுகுகிற மேனியையுங் குளிரத்தடவிப் புணர்ச்சியாற்குலைதலின் அல்குலில் மணிகளையுஞ்சேரத்திருத்திச் சிலம்பிற்போர்த்த பொங்குபூந்தாதையுந்துடைத்துக் கோதையை முன்புபோலேசூட்டிக குழலத்தை யுந்திருத்தினானென்க.

அவ்விடம் பூப்பரப்பிக்கிடத்தலிற பூந்துகள்கூறினார். (எ0)

வேறு.

வானாகமழ்மதுவுஞ்சாந்துமேந்திமதுத்துளிததுவண்டுஞ்சுரும்புமூசு
ந், தேனார்பூங்கோதாய்நினக்குக்காமன்சிலையிரண்டுஞ் செவ்வனேகோலித்த
ந்தான், றானாரப்பண்ணிநடமுநீக்கித்தன்றுருதி தோய்த்துத்தகைமைசா
ன்ற, வூனார்நதவோரிணையம்புந்தானென்னையுளனாகவேண்டினானே.

இ - ள். வானின்கண்ணேநிறைந்து கமழுகின்றமதுவையுஞ் சாந்தையும் ஏந்தி அம்மதுவைத்துளித்தலின், மூசும்வண்டுஞ் சுரும்புந் தேனினமுநுகருங்கோதாய், நின்னைக்கண்டுவைத்து நினக்குக் காமன் றன்கையில்வில்லையுஞ் சேமவில்லையுநேரே வளைத்துத்தந்தான்; அதுவுமன்றி அவன்றன் தாழ்வறப்பண்ணிக் குருதியைத்தோய்த்து உறையைநீக்கி யழகுநிறைந்தவோரிணையம்பையுந் தந்தானதலால் என்னை உயிருடனிருக்கவேண்டி யிருந்தானென்று இகழ்ந்துகூறினனென்க.

ஏகாரம் - தேற்றம். நோக்கியமேனிவாடுதலின், ஊனார்ந்தவென்றார். (எக)

கண்ணக்ககண்ணிக்கமழ்பூங்குழற்கருமபேர்தீஞ்சொலாள்கதிர்முலைக ளின், வண்ணக்குவானுநிலனுமெல்லாம்விலையேமழைமின்னுநுசுப்பினாளை ப், பெண்ணுக்கணியாகவேண்டிமேலைப் பெரியோர்பெருமான்படைத்தா னென்று, புண்ணக்கவேலான்புகழநாணிப்பூநோக்கிப்பூக்கொசிந்தகொம் பொத்தாளே.

இ - ள். புள்ளுமகிழ்ந்தவேலான் நுசுப்பினாளை அயன் படைக்கின்றபொழு தே பெண்களுக்கு ஒருதிலகமாகவேண்டிப்படைத்தானாதலின், இவளுடைய முலைக ளின்வண்ணத்துக்கு வானும்நிலனுமெல்லாம் விலைபோதாவென்றுபுகழ, நாணிப் பூவுக் கொசிந்த கொம்பையொத்தாளென்க.

இதுமுன்னிலைப்படர்க்கை மதுவைப்புறப்படவிட்ட கண்ணியையும், குழலையு முடைய சொல்லாள் - சுட்டிப்பெயர். (எஉ)

வேறு

இறங்கியமாதர்தன்னையெரிமணிக்கடகக்கையாற்
குறங்கின்மேற்றழுவிவைத்துக்கோதையங்குருதிவேலா
னறந்தலைநீங்கக்காக்குமரசன்யானாகநாளைச்
சிறந்தநின்னலத்தைச்சேர்வேனாய்விடிற்செல்கவென்றான்.

இ - ள். வேலான் அங்ஙனநாணியமாதரைக் கையாற்றழுவிக் குறங்கின்மே லேவைத்துக்கொண்டு நாளை நின்னலத்தைச்சேர்வேனாயின், யான் கட்டியங்காரனைக் கடவேன், நீயினிச் செல்வாயாகவென்றானென்க (எங)

வில்லிடுமணிசெயாழிமெல்விரல்விதிர்யிற்கூப்பி
நல்லடிபணிந்துநிற்பநங்கைநீநடுங்கவேண்டா
செல்கெனச்சிலம்புசெம்பொற்கிண்கிணிமிழற்றவொல்கி
யல்குற்காசொலிப்பவாயம்பாவைசென்றெய்தினாளே

ஆழி - மோதிரம்.

இ - ள். அவள்போதற்கொருப்பட்டுக் கணவனைத்தொழுதலன்றியாதலின் கை கூப்பித்தொழுது வணங்கிநிற்ப, நங்காய்! நீநடுங்கவேண்டா; செல்கென்று அவன் கூற, அவள்சிலம்புங் கிண்கிணியுமிழற்றக் காசொலிப்ப ஒல்கிச்சென்று ஆயத்தைச் சேர்ந்தாளென்க. (எச)

பருமணிப்படங்கொளுகப்பையெனப்பரந்தவல்குற்
றெரிமணிப்பூணினானுக்கின்னலமொழியவேகித்
திருமணிச்சிவிகையேறிச்செம்பொனீண்மாடம்புக்காள்
விரிமணிவிளங்குமாலைவெம்முலைவேற்கணாளே.

இ - ள். பரியமணியைப் படத்தேகொண்ட பாம்பினதுபடமென்னப் பரந்த வல்குலையும், மாலையினையும் முலையினையுமுடைய வேற்கணாள் சீவகனிடத்தே யன்பு நிற்கத் தான்போய்ச் சிவிகையிலேயேறி மாடத்தேபுக்காளென்க. (எரு)

க. திருவிற்றான்மாரிகற்பான்றிவலைநாட்செய்வதேபோ
லுருவிற்றாய்த்துளிக்குந்தேறலோங்குதார்மார்பன்றோழர்
பொருவிற்றாநம்பிகாமதிலகனென்றிருந்தபோழ்திற்
செருவிற்றாழ்நுதலினாள்கண்மணத்திறஞ்செப்புகின்றார். (எசு)

உ. கனைகடலமுதுந்தேனுங்கலந்துகொண்டெழுதப்பட்ட
புனைகொடிபூத்ததேபோற்பொறுக்கலாநுசுப்பிற்பாவை
நனைகுடைந்துண்டுதேக்கிநன்மணிவண்டுபாடும்
புனைகடிமாலைமாதர்திறத்திதுமொழிந்துவிட்டார்.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். இந்திரவில் தான் மழைபெய்யக்கருதுதற்குத் துவலையை நாட்கொள்வதுபோலே வடிவிற்றாய்த் தேறலைத்துளிக்குந்தாரையுடைய மார்பினையுடைய சீவகன்றோழர் யாம் உவமிக்கின்ற நம்பிதான் காமதிலகனென்றுகூறி யிருந்தவளவிலே, எதிட்ட விற்றோற்கின்ற நுதலினாளிடத்து இவன் மணஞ்செய்யுந்திறம் இதுவென்று செப்புகின்றவர்கள் அம்மாதருடைய சுற்றத்தாரிடத்தே இம்மணத்தைக் கூறிவிட்டாரென்க.

திறம் - சுற்றம். எழுதப்பட்ட நனையையுடையதொரு கொடி, அமுதையுந் தேனையுந் தன்னுள்ளேகலந்துகொண்டு, இரண்டுமுகையைப்பூத்த தன்மைபோலிருக்கின்ற முலைகளைப்பொறாத நுசுப்பினையுடைய பாவைபோலுமாதரென்க. வண்டு குடைந்து உண்டு தன்வயிற்றை நிறைத்துப்பாடும் மாலையையுடைய மாதரென்க. ()

ஐயற்கென்றுரைத்தமாற்றங்கேட்டலுமலங்கணய்தன்
வெய்யதேன்வாய்க்கொண்டாற்போல்விழுங்கலோடுமிழ்தறேற்றான்
செய்வதென்னோற்றிலாதேனோற்றிலாடிறத்தினென்று
மையல்கொண்டிருப்பவிப்பாற்குமரிதன்மதியிற்சூழ்ந்தாள்.

இ - ள். சீவகற்கு இவளைத் தரவேண்டுமென்று கூறியமாற்றத்தை நாய்கன் கேட்டவளவிலே, உடன்படுதலையும் மறுத்தலையுந்தேறானாய நல்வினையிலாதேன் நல்வினையிலாதாடிறத்திற் செய்வதென்னென்று கலங்கியிருப்ப, குமரி யவ்விடத்தே தன்மதியாலே யறத்தொடுநிற்பதாகச்சூழ்ந்தாளென்க.

வெய்யதேனை வாயிடத்திற்கொண்டால் வெம்மையால் நஞ்சென்றுவிழுங்காதேயும் இனிமையாலுமிழாதேயுமிருக்குமாறுபோல, இவள் விரதத்தால் உடன்படாதேயுஞ் சீவகனாதலின், மறாதேயுமிருந்தான். (எஅ)

பொற்பமைதாமக்கந்துபொருந்தியமின்னுப்போல
வெற்பகவெரியுமாலைப்பவளத்தூண்பொருந்தியின்னீர்க்
கற்பெனுமாலைவீசிநாணென்னுங்களிவண்டோப்பிச்
சொற்புகரின்றித்தோழிக்கறத்திறனுரைக்கின்றாள்.

இ - ள். சுரமஞ்சரி தாமத்தையுடைய கந்தைப்பொருந்திய மின்போலே ஞாயிறுதோற்கவெரியும் மாலையையுடைய தூணைச்சேர்ந்துநின்று கற்பாகியமாலையை

வீசினாளென்னும்வண்டையோட்டிச் சொற்குற்றமின்றாகத் தோழிக்கு அறந்தொடு நின்றாளென்க.

மாலையாலோட்டவே வண்டு மிகவுநீங்காதாம். *"உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ், செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" என்றதனாற் சிறிது நாணை விட்டாள். இன் - அசை. (எக)

வழிவளர்மயிலஞ்சாயல்பவளப்பூம்பாவையன்ன
கழிவளர்கயற்கணங்கைகற்பினையறிந்துதோழி
யழிமதுமாலைசேர்த்தியடிபணிந்தரவாழ்த்திப்
பொழிமதுப்புயலைங்கூந்தற்செவிலியைப்பொருந்திச்சொன்னாள்.

இ - ள். ஆசாரத்திலேவளர்ந்ததோர் மயில்போலுஞ்சாயலையுடைய பாவையன்ன நங்கையது கற்பினை, மதுவைப்பொழிவதோர புயலபோன்ற ஐங்கூந்தலையுடைய தோழியறிந்து மாலையைச்சோத்தி வாழ்த்திப்பணிந்துபோய்ச் செவிலியைப் பொருந்தி யறத்தொடுநின்றாளென்க.

கழியில்வளர்ந்த கயல். (அ0)

கனைவளர்கோதைதற்றாய்நங்கைக்கீதுள்ளமென்று
சுனைவளர்குவளையுண்கட்சுமதிக்குச்செவிலிசெப்பக
கனையிருட்கனவிற்கண்டேன்காமர்பூம்பொய்கைவற்ற
வனையதாங்கன்னிநீரின்றற்றதாநங்கைக்கென்றாள்.

இ - ள். அச்செவிலி கோதையுடைய நற்றாயாகிய சுமதிக்கு இது நங்கைக்கு நினைவென்று அறத்தொடுநிற்ப, அவள் இரவு கனவிலே ஒருபொய்கைவற்றக்கண்டேனாதலால், அப்பொய்கையினீர்போன்ற தன்மையதாங் கன்னிநீரும் நங்கைக்கு இன்று அற்றதாயிருந்ததென்றாளென்க. (அக)

க. கெண்டையுஞ்சிலையுந்திங்களிளமையுங்கிடந்துதேங்கொ
டொண்டையங்கனியுமுத்துந்தொழுதகவணிந்துதூங்குங்
குண்டலமுடையதிங்களிதுவெனுமுகத்தினாதை
வண்புகழ்க்குபேரதத்தன்கேட்டனன்மனைவிசொன்னாள். (அஉ)

உ. செருவிளைத்தனலும்வேலோய்சிறுமுதுக்குறைவிதானே
பெருவளைப்பிட்டுக்காத்தகற்பிதுபோலுமையன்
கரிவிளைத்தாய்ந்தசுண்ணம்வாட்டினனெனறுகண்டாய்
திருவிளைதேம்பெய்மாரிபாற்கடற்பெய்ததென்றாள்.

இவையிரண்டுமொருதொடர்.

இளமையையுடையதிங்கள். கெண்டைமுதலியனகிடக்கப்பட்டுத் தொண்டைக் கனியையும் முத்தையுமணிந்து குண்டலத்தையுடையதோர்திங்கள் - இல்பொருளுவமை. தொழுதக - நன்குமதிப்ப.

* தொல்காப்பியம, பொருளதிகாரம், களவியல், உஉ.

இ-ள். அச்செய்தியை மனைவி வேலோய், சிறியாளாகிய பேரறிவாட்டி தானே பெரியகாவலிட்டுக்காத்த இந்தக்கற்புத் தனதாய்ந்தசுண்ணத்தைச் சீவகன் கரிபோக்கித் தீதென்றானென்று கருதிப்போலேயிருந்ததென்றுசொன்னாள்; சொல்லி இது நமக்குத் தேன்மாரி பாற்கடலிலேபெய்ததுகண்டாயென்றாள். இதனை மதிபோலுமுகத்தி தாதையாகிய குபேரதத்தன்கேட்டனனென்க.

இனிப் பிரித்துமுடிப்பாருமுளர். (அங)

வேட்பதுவிரும்பிநாய்கன்கிளைக்கெலாமுணர்த்தியார்க்கும்
வேட்பனவடிசிலாடைவிழுக்கலன்மாலைசாந்தங்
கோட்குறைவின்றியாக்கிநகுபூமியங்கறங்கியார்ப்ப
நாட்கடிமாலையாற்குநங்கையைநல்கினானே.

இ-ள். நாய்கன் கேட்கப்படுவதாகியவதனை விரும்பிக்கேட்டுச் சுற்றத்திற்கெல்லாமறிவித்து விரும்பப்படுவனவாகிய அடிசின்முதலியவற்றை யார்க்குங்கொள்ளக் குறைவின்றாகவுண்டாக்கி இயமார்ப்ப நல்லநாளிலே சீவகற்குச் சுரமஞ்சரியைக் கொடுத்தானென்க.

கேட்டலுமென்றும் பாடம். (அச)

பரியநுண்சிலம்புசெம்பொற்கிண்கிணியார்ந்தபாதத்
தரிவையராடன்மிக்காரருமணிவீணைவல்லா
ருரியநூற்றெண்மர்செம்பொனொன்றரைக்கோடிமூன்றா
ரெரியழன்முன்னர்நேர்ந்தேனென்மகட்கென்றுசொன்னான்.

இ-ள். நல்கினவன் பரியகமுதலியனவார்ந்த பாதத்தையுடைய ஆடன்மிக்கார் வீணைவல்லாராகிய உரிய அரிவையர் நூற்றெண்மர், பொன் ஒன்றரைக்கோடி, ஊர் மூன்று, இவற்றை என்மகட்குக் கொடுத்தேனென்று அழலின்முன்னேநின்று கூறினானென்க. (அரு)

மாசறுமணியுமுத்தும்வயிரமுமொளிருமேனி
யாசறுசெம்பொனோங்கலலங்கலங்குன்றனானுந்
தூசுறுபரவையல்குற்றூமணிக்கொம்பனாளு
மாசறக்கலந்தவின்பக்கடலகத்தழுந்தினாரே.

இ-ள். மணிமுதலியனவும், அலங்கலுமொளிரும் மேனியையுடைய மேருவையொப்பானும், அல்குலையுடைய கொம்பனாளும் இன்பக்கடலிலே யழுந்தினாரென்க. (அசு)

அது மேற்கூறுகின்றார்.

பொன்வரைபொருதயானைப்புணர்மருப்பனையவாகித்
தென்வரைச்சாந்துமூழ்கித்திரள்வடஞ்சுமந்துவீங்கி
மின்வளர்மருங்குல்செற்றவெம்முலைமணிக்கண்சேப்பத்
தொன்னலம்பருகித்தோன்றறுறக்கம்புக்கவர்களொத்தான்.

பொன்வரையென்றது - இவன்மார்பை. மூழ்கிச் சுமந்து வீங்கி மருங்குலைச் செற்றமுலை.

இ - ள். தோன்றல் மருப்பனையவாய் மார்பைப்பொருத முலைக்கண்சிவக்கும்படி யவனன்னலத்தைப்பருகித் துறக்கம்புக்கவர்களையொத்தானென்க. (அஎ)

வரிக்கழற்குரிசின்மார்புமடந்தைவெம்முலையுந்தம்முட்
செருச்செய்துதிளைத்துப்போரிற்சிலம்பொலிகலந்தபாணி
யரிப்பறையனுங்கவார்க்குமேகலைக்குரலோடீண்டிப்
புரிக்குழல்புலம்பவைகிப்பூவணைவிடுக்கலானே.

திளைத்து - திளைக்க. ஈண்டி - ஈண்ட.

இ - ள். குரிசில்மார்பும் முலையுந் தம்மிலே முரபடப்போர்செய்து பின்புசெய்யும்போரிலே திளைத்தலிற பாணிகலந்த பறைகெடவார்க்கும் மேகலைக்குரலோடே சிலம்பொலியீண்டக் குழல்குலைந்து பூவைத்துளிப்பத் தங்கி விடுக்கலாயினனென்க.

திளைத்தபோரும் பாடம். (அஅ)

மணியியல்வள்ளத்தேந்தமதுமகிழ்ந்தனந்தர்கூர
வணிமலர்க்குவளைப்பூம்போதொருகையினருளியம்பொற்
பிணையனாளருகுசேரிற்பேதுறுநுசுப்பென்றெண்ணித்
துணையமைதோள்கடம்மாற்றோன்றறான்புல்லினானே.

இ - ள். தோன்றறான் பின்னும்புணர்ச்சிகருதி அதற்குக்களிகூரும்படி மதுவை வள்ளத்தே யொருகையாலேந்த, அதனையுண்டு மயக்கமிகுதலின், இப்பிணையனாளைப் புணரின் இடைமுரியுமென்றெண்ணிக் கூந்தற்குப் போதை யொருகையாலே கொடுத்து மார்புறமுயங்கிற் புணர்ச்சிவேட்கைமிகுமென்று சிறிதுநீங்கித் தோளால்நெகிழப்புல்லினானென்க.

அஞ்சொற்பிணையனூற்றியசோதி யென்பது பாடமாயிற் புகழுமாலைசூட்டி யென்க. (அகூ)

க. மல்லலங்கங்கைபோலும்பலர்முயங்காரமார்பிற்
புல்லன்மின்போமின்வேண்டாவென்றவள்புலந்துநீங்க
முல்லையங்கோதையொன்றும்பிழைப்பிலேன்முனியனீயென்
றல்லலுற்றரந்தமார்ந்தசீறடிதொழுதிட்டானே. (கூ0)

உ. வட்டிகைப்பாவைநோக்கிமகிழ்ந்திருந்திலீரோவென்னுந்
தொட்டிமையுருவந்தோன்றச்சுவரையேபொருந்திநின்றாய்
கட்டழகுடையநங்கைநீயெனக்கருதிக்கண்ணு
ளொட்டியானோக்கிற்றென்றாளொருபிடிநுசுப்பினாட்கே. (கூக)

ங. நுண்டுகினெகிழ்ந்தவல்குன்மணிபரந்திமைப்பநொந்து
கண்கணையிடுகக்கோட்டிக்காமத்திற்செயிர்த்துநோக்கிக்

குணடலமிலங்கக்கோதைகூந்தலோடவிழ்ந்துசோர
வொண்டொடியூடிநின்றாளொளிர்மணிப்பூங்கொம்பொப்பாள்.

இவைமூன்றுமொருதொடர்.

இ-ள். கொம்பொப்பாளாகிய ஒண்டொடி, அவன் மார்புறமுயங்காமை யிற் பிறர்முயங்கவைத்தானென்று கருதி, பலருங் கங்கைபோல் ஆயிரமுகமாக முயங்குமார்பினால் இனிப் புல்லன்மின், தீண்டவேண்டா; போமினென்று அவள் புலந்துநீங்கிநிற்ப, அவளுருவம் பளிக்குச்சுவரிலே யெறித்ததனை அவளேயென்று கருதிக் கோதாய, யான்பிழைப்பிலேன்; நீமுனியலென்று அடியைத்தொழுதான்; அதனான் எம்மையேதொழுதானென்று புலவிதீராது பின்னும் வட்டிகைப்பாவை போல்வாள் என்னுருவம் பளிங்கிலே தோன்றலிற் சிறிதுபாடமிக்குத் தோன்ற, அதனிடத்து நன்மையேநோக்கி மகிழ்ந்திருந்திலிரோவென்னாக் காமத்தாலேமன நொந்து செயிர்த்துக் கலைகளை இடுகக்கோட்டி நோக்கி யிமைப்ப இலங்கச் சோர வூடிநின்றாள், நின்றஅந்நுண்ணனுசுப்பினாட்கு நங்காய், யான் கண்ணால் ஒட்டிநோக்கிற்று; நீபளிக்குச்சுவரிலே பொருந்திநின்றாயாதலின், நின்னிழலைக் கட்டழகுடைய நீயென்றுகருதிக்காணென்றானென்க.

நம்மின்மிக்கவடிவுகண்டு விரும்பினனென்று வூடினாள். என்னவென்றுபாட மாயின், என்றுகூறியூடினாளென்க (௧௨)

கிழவனாய்ப்பாடிவந்தென்கீழ்ச்சிறையிருப்பக்கண்டே
னெழுதியபாவைநோக்கியிமையவித்திருப்பக்கண்டே
னொழிகவிக்காமமோருரிரண்டாகமாயிற்றென்றாங்
கழுதகண்ணீர்கண்மைந்தனாவிபோழ்ந்திட்டவன்றே.

இ-ள். அங்ஙனந்தேறவுங் கொண்டதுவிடாதகுணமுடைமையிற் கேளாளாய், கிழவனாய் என்காவலிடத்தேவந்துபாடியிருப்ப அதுகண்டேன்; பளிங்கிற்றோன்றிய பாவையை விரும்பி ஒருபடத்திலேயெழுதவேண்டி இமையாதுநோக்கியிருப்பவுங் கண்டேன், ஓரிடத்தே இரண்டுமுறைமைநிகழ்ந்ததாதலால் ஈண்டுநிகழ்த்துகின்ற காமத்தையொழிகவென்று அழுதகண்ணீர்கள் மைந்தனுயிரைகெடுத்தவென்க.

நீகவென்றதனை. "என்பாட்டிப்பாலோசில" என்றாறபோலக்கொள்க. (௧௩)

அலங்கறுதவிழவஞ்செஞ்சிறடியணிந்தவம்பூஞ்
சிலம்பின்மேய்சென்னிசேர்த்திச்சிறியவர்செய்ததீமை
புலம்பலர்பொறுப்பர்பொய்தீர்பெரியவரென்றுகூறி
யிலங்குவேற்கண்ணியூடலிளையவனீக்கினானே.

இ-ள். இளையவன் இதுநீருமுபாயமாடி வேற்கண்ணியூடலை, சிறியவர்செய்த தீமையைப் பெரியவர் வெகுளாய்ப் பொறுப்பரல்லவோவென்றுகூறிச் சிலம்பின் மேலே தாதவிழும்படி தன்சென்னியைச்சேர்த்தி நீக்கினானென்க. (௧௪)

யாழ்கொன்றகிளவியாடனமிழ்துறழ்புலவிநீக்கிக்
காழின்றிக்கனிந்தகாமக்கொழுங்கனிதுகர்ந்துகாதற்

றாழ்கின்றதாமமார்பன்றையலோடாடிவிள்ளா
னாழ்சென்றமதியம்வெய்யோனொட்டியொன்றாயதொத்தான்.

இ - ள். காதலாற்றங்குகின்றசீவகன் கிளவியாளது புலவியைநீக்கி அவளோடேகூடி நீங்காதாய் விதையின்றிப்பழுத்த காமமாகியகனியை நுகர்ந்து, முறையா னிறைந்த உவவுமதியை வெய்யோன்பொருந்தி யொன்றானதன்மையை யொத்தா னென்க. (௧௫)

பச்சிலைப்பட்டுமுத்தும்பவளமுமிமைக்குமல்கு
லச்சிலைவேற்கண்மாதர்நகைமுகமுறுவன்மாந்தி
யிச்சையுங்குறிப்புநோக்கியெய்வதேகருமமாகக்
கைச்சிலைகணையோடேந்திக்காமனிக்கடையைக்காப்பான்.

பச்சிலைப்பட்டு - பசியவிலைத்தொழிலையுடைய பட்டு. மாந்தி - மாந்த.

இ - ள். அல்குலையுங் கண்ணையுமுடைய மாதரது முறுவலை அவன்மாந்தும்படி அவனினைவையும், அவன்முகத்திற்குறிப்பையுநோக்கி, எய்வதேதனக்குத்தொழிலாகக் கையிலே வில்லை யம்புடனேயேந்தி யிவ்வாயிலை யிப்பொழுதுகாப்பான் காமனே, வேறொருவனல்லனென்று தேவர்கூறினாரென்க. (௧௬)

கடிப்பிணைகாதுசேர்த்திச்சிகழிகைக்காதநாறத்
தொடுத்தலர்மாலைசூட்டிக்கிம்புரிமுத்தமென்றோ
ளடுத்தணிந்தாகஞ்சாந்தினணிபெறவெழுதியல்கு
லுடுத்தபொற்கலாபந்தைவந்தொளிவளைதிருத்தினானே

இ - ள். பிரியக்கருதிக் காதிலே கடிப்பிணையையிட்டு, முடியிலே மாலையைச் சூட்டி, தோளிலே கிம்புரிவடிவான முத்தத்தைச்சேர்த்தி யணிந்து, ஆகத்தைச் சாந்தாலேயெழுதி, அல்குலைச் சூழ்ந்த கலாபத்தைத் தைவந்து வளையைத்திருத்தினா னென்க. (௧௭)

இலங்குவெள்ளருவிக்குன்றத்தெழுந்ததண்டகரச்செந்தீ
நலங்கிளரகிலுந்தேனுங்கட்டியுநன்குகூட்டிப்
புலம்பறவளர்த்தவம்மென்பூம்புகையமளியங்கண்
விலங்கரசனையகாளைவெள்வளைக்கிதனைச்சொன்னான்.

இ - ள். குன்றிலெழுந்த தகரவிறகிற்றீயிலே அகின்முதலியவற்றைக் கூட்டி யிட்டுக் குற்றமறவளர்த்த புகையினையுடைய அமளிக்கண்ணேயிருந்து சிங்கவேற்றை யொத்தகாளை சுரமஞ்சரிக்கு இதனைக்கூறினானென்க. (௧௮)

கருமநீகவலவேண்டாகயற்கணாய்பிரிவல்சின்னா
ளருமைநின்கவினைநீதாங்கலதுபொருளென்றுகூறப்
பெருமநீவேண்டிற்றல்லால்வேண்டுவபிறிதொன்றுண்டோ
வொருமைநின்மனத்திற்சென்றேனுவப்பதேயுவப்பதென்றாள்.

இ - ள். கயற்கண்ணாய், நீ கவலவேண்டா; யான்கூறுகின்றகாரியம் யாதெ னிற் சிலநாள் நின்னைப்பிரிவேன்; பிரிந்தால் நின்கவினைத்தாங்குவாயாக; அஃது

அருமையையுடைய பொருள்காணென்றுகூற, பெரும, நீவிரும்புவதன்றி யான் விரும்புவது வேறொன்றுண்டோ, யானொருபடிப்பட்ட நின்னுடைய மனம்போலே யொழுகினேனாதலின், நின்மனமுவப்பதேகாண் என்மனமுவப்பதென்றாளென்க.

தாங்கல் - அல்லீற்றுவியங்கோள். பொருள் - காரியம். வேண்டுவ - ஒருமைப் பன்மைமயக்கம். (௯௯)

நாணொடுமிடைந்ததேங்கொளமுடிக்குறுகிளவிகேட்டே
பூண்வடுப்பொறிப்பப்புல்லிப்புனைநலம்புலம்பவைகேன்
றேன்மிடைகோதையென்றுதிருமகனெழுந்துபோகி
வாண்மிடைதோழர்சூழத்தன்மனைமகிழ்ந்துபுக்கான்.

இ - ள். அவள் அங்ஙனங்கூறிய நாணொடுமிடைந்த கிளவியைக் கேட்டுக் கோதாய, நின்னலம்புலம்ப வைகேனென்றுபுல்லிச் சீவகன்போய்த் தோழர்சூழச் சென்று தன்மனையிலேபுக்கானென்க.

பிரிவாற் பிரிந்து நங்கைக்குறாகிளவி. (௧௦௦)

புரவியுங்களிறுநோக்கிப்பொன்னெடுந்தேருநோக்கி
யிரவினும்பகலுமோவாதென்மகன்யாண்டையானென்
றழுதகண்ணீரினாலேகைகழீஇயவஞ்சுகின்ற
மெழுகெரிமுகந்ததொக்குந்தாய்மெலிவகற்றினானே.

இ - ள். புரவிமுதலியவற்றைநோக்கி யிவற்றைவிட்டு என்மகன் எவ்விடத் திருக்கின்றானென்று இரவும்பகலும் ஓவாது அழுத கண்ணீராலே கைகழுவி வருந்துகின்ற தாயது, மெழுகு நெருப்பைமுகந்தாற்போல நெஞ்சுருகுகின்ற வருத் தத்தை நீக்கினானென்க.

இருவர்கூட்டமைச் சிந்தித்திருத்தலிற் கந்துகன் மெலிவை யகற்றினான் எனல் வேண்டாவாயிற்று. (௧௦௧)

ஒற்றருமுணர்த்தலோடுமுரைபவித்துறுப்பினாலே
சுற்றத்தார்க்குரைப்பவீண்டித்தொக்குடன்றழுவிக்கொள்வா
ரெற்றுவார்நைந்துசோர்வார்நம்பியோநம்பியென்று
வுற்றுடன்றழுதகண்ணீர்காலலைத்தொழுகிற்றன்றே.

இ - ள். ஒற்றரும் உணர்த்தலின்றாக வுரையைத்தவிர்த்து உறுப்பாலே சுற்றத் தார்க்கு வரவையுணர்த்த, அவரீண்டிச் சேரத்தழுவிக்கொள்வாராய், எற்றுவாராய்ச் சோர்வாராய்த்தொக்கு நம்பியோ! நம்பியோ! என்று அழுதகண்ணீர் காலையிழுத்தோ டிற்றென்க.

இஃது உவகைக்கலுழ்ச்சி. (௧௦௨)

கந்துகன்கழறக்கல்லென்கடற்றிரையவிந்தவண்ணம்
வந்தவர்புலம்புநீங்கமறைபுறப்படுமென்றெண்ணி
யெந்தைதானிறந்தநாளின்றெனநகரியம்பியாரு
மந்தமிலுவகைதன்னாலகங்குளிர்ப்பெய்தினாரே.

இ - ள். இவ்வழுகையால் இம்மறைபுறப்படுமென்றெண்ணிக் கந்துகன் கழறினனாக, கடற்றிரை கல்லென்கின்ற ஓலியவிந்தாற்போல வந்தசுற்றம் அழுகையைத் தவிர, பின்னரும் அந்தமிலுவகையாலே யஞ்சி "நாயனார் போனநாள்" இன்றென்று அகத்திலுள்ளோரெல்லாருங் கூறி அழுதபின்பு அகமகிழ்ச்சியெய்தினரென்க. (க0௩)

செங்கயன்மழைக்கட்செவ்வாய்த்தத்தையுமகிழ்ந்துதீஞ்சொ
லெங்கையைச்சென்றுகாண்மினடிகளென்றிரந்துகூற
மங்கலவகையிற்சேர்ந்துமதுத்துளியறாதமாலை
கொங்கலர்க்கண்ணிசேர்த்திக்குங்குமமெழுதினானே.

இ - ள். இவனைக்கண்டு தத்தையுமகிழ்ந்து அடிகளே, சென்று குணமாலையைக்காண்மினென்று புலவியில்லாத தீஞ்சொல்லாலே இரந்துகூற, அவனுஞ் சேர்ந்து மாலையையுங் கண்ணியையும் மங்கலக் கூற்றாலே முதற்சேர்த்திக் குங்குமத்தை யணிந்தானென்க.

தேவன் "பன்னிருமதியின்" என்றதனைத் தானுணர்தலிற் றனக்குக்கூட்டமின்மையுணர்தலானும், அவள் வருத்தமிகுதியானும் இங்ஙனமிரந்துகூறினாள். குணமாலை கணவனிருத்தலின் மங்கலவணிக்கு உடன்பட்டுப் பின்பு கூட்டத்திற்கு உடம்படாதுகூறுகின்றாள். (க0௪)

தீவினையுடையவென்னைத்தீண்டன்மினடிகள்வேண்டா
பாவியேனென்றுநொந்துபரிந்தழுதுருகிநையக்
காவியங்கண்ணியொன்றுங்கவலெல்யானுய்ந்ததெல்லா
நாவியேநாறுமேனிநங்கைநின்றவத்தினென்றான்.

இவளைத்தீண்டிச் சீவகன்கொலையுண்டானென்று உலகங்கூறலிற் றீவினையுடையவென்னையென்றாள். தான் விலக்கவும் இவன்றீண்டலிற் பின்னும் வேண்டாவென்றாள். இவளைப் பெற்றுவைத்தும் இங்ஙனநீக்கிக் கூறவேண்டலிற் பாவியேனென்றாள்.

இ - ள். அடிகளே, தீண்டன்மின், வேண்டா, பாவியேனென்று அன்புற்றழுதுநையாநிற்க, கண்ணி, கவலல்; யான் எல்லாவற்றையும் பிழைத்தது நீசெய்து வைத்த நல்வினையாலேகாணென்றானென்க.

*"நந்ததிண்டேர் ** பண்" என ஆசிரியனைத் தப்பப் புகுந்ததனையும், †"பெணணிடர்விடுப்ப" வந்ததன்மையையும், தான் கட்டியங்காரன் ‡ பரிகரத்தைக் கொல்வேமோவென்று நினைத்ததனையுங்கருதி, எல்லாமென்றான். (க0௫)

அன்னமென்னடையுநோக்குஞ்சாயலுமணியுமேரு
மின்னினுண்ணுசுப்பும்வெய்யமுலைகளுமுகமுந்தோன்ற

* குணமாலையாரிலம்பகம், உ௩அ. † கனகமாலையாரிலம்பகம், க௩௬.
‡ பரிகரம் - நாற்புறத்துந் தொழில்செய்வோர் தொகுதி.

வென்மனத்தெழுதப்பட் டாயாயினுமரிவைகேளா
யுன்னையான்பிரிந்தநாளோரூழியேபோன்றதென்றான்.

அணி - அழகு. ஏர் - எழுச்சி.

இ - ள். என்று பின்னும் அரிவாய், கேளாய்; நடைமுதலியனவெல்லாம் என் மனத்தெழுதப்பட்டு நீங்காதிருந்தாயாயினும் நின்னை மெய்யுறு புணர்ச்சியின்றிப் பிரிந்தவொருநாள் ஓரூழிகாலம்போலேயிருந்ததுகாண; இன்னும் என்னை வருத்தாதேகொள்ளென்றானென்க. (௧௦௬)

இளையவன் மகிழ்வகூறியின்றுயிலமர்ந்துபின்னாள்
விளைபொருளாயவெல்லாந்தாதைக்கேவேறுகூறிக்
கிளையவர்சூழவோமாவ்வாணிகனாகிகேடி
றளையவிழ்தாமமாபன்றன்னகர்நீங்கினானே.

இ - ள். தாமமாபன் இங்ஙனம் அவள்மனமகிழுவனவற்றைக்கூறி யவளைக் கூடி மற்றைநாட் டாதைக்கு மேன்முடியுங்காரியங்களைத் துணிந்துகூறிச் சுற்றஞ் சூழத் தாவுகின்றகுதிரையைக்கொள்ளும்வாணிகனாய் அதற்கோர்வேடங்கொண்டு தன் மனையினின்றும்போனானென்க.

பின்னாளென்ற [illegible]க் கூறலின், "அன்றைப்பகலே வந்தடைவேன்" என்றல் ஆகாதென்றுணர்க. (௧௦௭)

சுரமஞ்சரியாரிலம்பகம் முற்றிற்று.

---

ஆக கவி ௨,௱௩

[illegible]

பத்தாவது

# மண்மகளிலம்பகம்.

குடம்புரைசெருத்தற்குவளைமேய்கயவாய்க்குவிமுலைப்படர்மருப்பெருமை
நடந்தவாயெல்லா நறுமலர்மரையிலைச்சொரிந்தவந்தீம்பா
மடஞ்சிறையன்னங்குருகொடுநாரைபார்ப்பினையோம்புதண்மருத
மடங்கல்போற்றிறலார்மாமணிகறங்கவளவயற்புள்ளொழுக்கழிந்தார்.

செருத்தல் - மடி. கயவாய் - பெரியவாய். பால் - எழுவாய்.

இ - ள். திறலார் செருத்தன்முதலியவற்றையுடைய எருமைதான் போனவிடமெல்லாந் தாமரையின் இளையவிலையிலே சொரிந்தபால, அன்னமுங் குருகும்நாரையுமாகிய பார்ப்பினத்தைவளர்க்கும் மருதநிலத்தே மணிசறங்குதலிற் புள்ளொழுப் போயினாரென்க.

இவைபாலுண்டல் நிலப்பண்பு. (௧)

புரிவளையலறிப்பூசலிட் டீன்றபொழிகதிர்நித்திலமுழக்கி
வரிவளைசூழும்வலம்புரியினத்துட சலஞ்சலமேய்வனநோக்கி
யரிதுணையன்னம்பெடையெனத்தழுவியன்மையினைமலெய்தித்
திரிதருநோக்கந்திகிலார்நோக்கிநெய்தலுங்கைவலத்தொழிந்தார்.

தீது - ஈனங்கேட்டை

இ - ள். திகிலார், புரிந்தவளை சூன்முதிர்ச்சியாலே மெய்ந்நொந்து கூப்பிட்டீன்ற முத்தையுழக்கி ஆயிரஞ்சங்குசூழத்திரியும் வலம்புரி யாயிரத்துக்குள்ளே சலஞ்சலமேய்வனவற்றைநோக்கிப பாலையுநீரையும்பிரிக்கவல்ல அன்னம் பெடையென்று சென்றுதழுவி யவையன்மையின் வருந்தி மறித்துப்போகின்ற நோக்கத்தைத் தாம் பார்த்துத் தனக்குரிய ஒழுக்கத்திடத்தின் நெய்தனிலத்தையும் போயினாரென்க. (௨)

கோட்டிளங்கலையுங்கூடிமென்பிணையுங்கொழுங்கதிர்மணிவிளக்கெறிப்பச்
சேட்டிளங்கொன்றைத்திருநிழற்றுஞ்சச்செம்பொறிவண்டவற்றயலே
நாட்டிளம்பிடியார்நகைமுகம்பருகுநல்லவர்போன்மலர்பருகு
மோட்டிளமுல்லைமொய்ம்மலர்க்கானமுருகுவந்தெதிர்கொளநடந்தார்.

இ - ள். உயர்ந்த கொன்றைநிழலிலே மணிவிளக்கெறிப்பக் கலையும்பிணையும் * துஞ்ச வண்டுகள் அக்கொன்றைக்கயலே நின்ற முல்லைமலர்களை மகளிர்முகத்தின் நகையைப் பருகும் ஆடவரைப்போலப் பருகுதற்குக் காரணமான முருகு எதிர் கொள்ள முல்லைமலரையுடைய கானத்தைப் போயினாரென்க. (௩)

குழவிவெண்டிங்கட்கோட்டின்மேற்பாயக்குளிர்புனல்சடைவிரித்தேற்கு
மழலவிர்சூலத்தண்ணலேபோலவருவிநீர்மருப்பினினெறியக்

* துஞ்சும்படியென்று சிலபிரதிகளிலுள்ளது.

கழைவளர்குன்றிற்களிறுநின்றுடுங்கடிகமழுஞ்சந்தனச்சார [ர்.
விழைவளர்முலையார்சாயல்போற்றோகையிறைகொள்பூங்குறிஞ்சியுமிறந்தா

இ - ள். கங்கையினீர் இளையதாகிய பிறைகோட்டிலேவீழ ஒற்றைச்சடையைவிரித்துநின்று எற்குமிறைவனைப்போலே அருவிநீர் மருப்பிலேவீழக் களிறு குன்றிலேநின்றுடுஞ் சாரலிலே தோகைகள் தங்குதல்கொண்ட குறிஞ்சிநிலத்தையும் போனாரென்க.

இஃது இல்பொருளுவமை. கங்கைக்குத்தலைபபாகிய இமவானிற் பதுமையென்னும் பொய்கையில் நீர்விழுகின்ற தாழ்வரையில் உருத்திரப்படிம மிருத்தலிற் சூலத்தண்ணலென்றார். (௪)

ஊன்றலைப்பொடித்தாங்கனையசெஞ்சூட்டி ேனொளிமயிர்வாரணமொருங்கே
கான்றபூமராவிக்கவட்டிடைவளைவாய்பபருந்தொடுகவர்குரல்பயிற்று
மான்றவெம்பாலையழன்மிதித்தன்னவருஞ்சுரஞ்சுடர்மறைபொழுதி [தே.
னூன்றினார்பாய்மாவொளிமதிக்கதிர்போற்சந்தனமொருங்குமெய்புதைத

ஆங்கென்றது முற்கூறிய * முல்லையுங் குறிஞ்சியுஞ்சேர்ந்தவிடத்தை. கவர்குரல் - இரைகளைக் கவர்ந்துகொள்ளுகைக்கு விரும்புகின்றகுரல். வாரணமும்பருந்தும்பாலைநிலத்தினதுவெப்பமிகுதியின் நாள்வழியிளைப்பால் ஓரிடத்திருந்தும் ஒன்றையொன்று நலியமாட்டாமையின், ஓரிடத்திருந்து கவர்குரல பயிற்றுமென்றார். வெம்மை - விகாரம்.

இ - ள். ஊன் றலையிலேதோறறினாலொத்த சூட்டினையுடைய வாரணம, வெம்மையாற் பூவையுதிர்த்த கடம்பிலிருக்கின்ற பருந்துடனேயிருந்து சேரக் குரலைப்பயிற்றும் அவ்விடத்து அழன்மிதித்தன்ன வெம்மையமைந்த பாலையாகிய சுரத்தை அந்திக்காலத்தே மதிபோலுஞ் சந்தனத்தே யும்பு சேரமறையப்பட்டு மாவை விசையிலேசெலுத்தினாரென்க.

வெம்மைமிகுதியால் அந்திக்காலத்தேபோனார். † "நடுவ ணைந்திணை நடுவண தொழியப் - படுதிரை வையம் பாத்திய பண்பே." என்று பாலைக்கு நிலமின்றென்றமையானும், ‡ "நடுவுநிலைத் திணையே நணபகல் வேனிலொடு - முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே" என்றமையானும், அக்காலமன்றி இவர்செல்கின்றகாலம் முன்பனிதொடங்குகின்றகாலமாகவும பாலைகூறியவாறு என்னையெனின்; காவும் பொதுவாய்த் தேயந்தோறும் வேறுபட்டிருக்கும்; சித்திரையும் வைகாசியுங் குடகமலைக்குக் காரகாலத்தையாக்கினாற்போல மார்கழித்திங்களும் இவர்போகின்ற தேயத்திற்கு முதுவேனிலாய் வெம்மையைவிளைத்துப் பாலையையாக்கிறறு. இனி இமயத்தைச் சூழ்ந்தவிடந் தெய்வத்தினாணையால் எக்காலமும் மாறாமல் ஓரிடம் ஒருகாலமாயே யிருக்குமாதலின், அவ்விடத்தே யிவர்போகின்றாரென்றுமாம். (௫)

---

* "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து - நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப் - பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" என்றார் சிலப்பதிகாரத்திலும்; மதுரைக்காண்டம், காடுகாண்காதை.

† தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், ௨.

‡ " " " ௯.

நிலையிலாவுலகினின்றவண்புகழைவேட்டவனிதியமேபோன்று
மிலைகுலாம்பைம்பூணிளமுலைத்தூதினின்கனித்தொண்டையந்துவர்வாய்க்
கலைவலார்நெஞ்சிற்காமமேபோன்றுங்கடவுளார்வெகுளியேபோன்று
முலைவிலார்நில்லாதொருபகலுள்ளேயுருப்பவிர்வெஞ்சுரங்கடந்தார்.

இதுவும் அவ்விடத்தே அவர்போனகடுமைகூறிற்று

இ - ள். கேடிலார் தாழாதே யொருமுகூர்த்தத்தே, புகழைவிரும்பினவன் கையிற்பொருள் போமாறுபோலேயும், பூணையுடைய முலையாகிய தூதினையுந் தொண்டைபோலும் வாயினையுமுடைய பரத்தையாகாமம் போமாறுபோலேயும், இருடிகள்கோபம் போமாறுபோலேயும் சுரத்தைக் கடந்துபோனாரென்க.

கனி - முதாகேற்றவடை கலைகளாவன *"வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்துக்-கூத்தும் பாட்டுந் தூக்குந் துணிவும் - பண்ணியாழ்த் தானமும் பாடைப் பாடலுந் - தண்ணுமைக் கருவியுந் தாழ்தீங் குழலுங் - கந்துகக் கருத்து மடைநூற் செய்தியுஞ் - சுந்தரச் சுண்ணமுந் தூநீ ராடலும் - பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமுங் - காயக் கரணமுங் கண்ணிய துணர்தலுங் - கட்டுரை வகையுங் கரந்துறை கணக்கும் - வட்டிகைச் செய்தியு மலராய்ந்து தொடுத்தலுங் - கோலங் கோடலுங் கோவையின் கோப்புங் - காலக் கணிதமுங் கலைகளின் றுணிவு - நாடக மகளிர்க்கு நன்கென வகுத்த - ஓவியச் செந்நூ லுரைநூற் கிடக்கையுங் - கற்றுத்துறை போகிய பொற்றொடி நங்கை" என்று மணிமேகலையிற் கூறப்பட்டனவாம். (௬)

புதுக்கலம்போலும்பூங்கனியாலும்பொன்னிணர்பிண்டியும்பொருந்தி
மதுக்கலந்தூழ்த்துச்சிலம்பிவீழ்வனபோன்மலர்சொரிவகுளமுமயங்கிக்
கதிர்த்தகல்பூணிகம்புடாழ்பீலிநாரைகுரனாரைவண்டான
மெதிர்த்ததண்புனல்சூழ்நதிக்கரைமேலிளையவரயாவுயிர்த்தெழுந்தார்.

இ - ள். வெட்கோவரிடத்துப் புதுக்கலத்தையொக்கும்பொலிவுபெற்றகனியையுடைய ஆலும் பிண்டியும் பொருந்தி, முன்னர்ச் செவ்விகலந்து பின்பு காம்புகழலுதலிற் சிலம்பிவீழ்வனபோல மலரைச்சொரிகின்ற மகிழுமயங்கி, பூணியுங் கம்புளுஞ் சிறுசின்னம்போலுஞ் செறிந்தகுரலையுடைய நாரையும் வண்டானமு மெதிர்த்த நதிக்கரைமேலே யிளையவர் இளைப்பாறிப் போனாரென்க.

பூணி, கம்புள் இறந்தவழக்கு. (௭)

அள்ளிலைப்பலவினளிந்துவீழ்சுளையுங் கனிந்துவீழ்வாழையின்பழனு
ம், புள்ளிவாழலவன்பொறிவரிக்கமஞ்சூன் ஞெண்டினுக்குய்த்துநோய்தணி
ப்பான், பள்ளிவாய்நந்துமாமையும்பணித்துப்பன்மலர்வழிபடக்குறைக்கும்
வெள்ளநீர்ப்படப்பைவிதையம்வந்தடைந்தேவேந்தனுக்குணர்த்தமுன்விடுத்
தார்.

இ - ள். செறிந்தஇலையையுடைய பலவின்சுளையையும், வாழைப் பழத்தையும் புள்ளியையுடைத்தாய் ஆண்டுவாழும் அலவன் நிறைந்த சூலையுடைய பெடைக்குக்கொடுத்து அதன் வேட்கையைத்தணித்தற்கு நத்தையையுமாமையையு மிதித்து

* மணிமேகலை, இரண்டாவது ஊரலருரைத்தகாதை.

மலனை வழியாம்படிகுறைக்கும் விசையத்தைச்சேர்ந்து வேந்தனுக்கு அறிவிக்கும்படி முன்னே யாள்விட்டாரென்க. (௮)

வீட்டகந்தோறும்வில்லகவிரல்போற்பொருந்தினின்றருங்கெதிர்கொள்கென், றேட்டின்மேற்றீட்டித்திருவெழுத்திட்டாங்கிறைவனுந்தமர்களைப்பணிப்ப, நாட்டகத்தமிர்துநளிகடலமிர்துநல்வரையமிர்தமுமல்லாக், காட்டகத்தமிர்துங்காண்வரக்குவித்தவ்வண்ணகன்புறவெதிர்கொண்டார்.

வீட்டகம் - விசாரம். * "வில்லக விரலிற் பொருந்தி" என்றார்பிறரும்.

இ - ள். இறைவனுந் தன்னாட்டவர்க்கு விடுசெலவுடைய இடங்கடோறும் விற்பிடித்த விரல்போற கிட்டிநின்று சேரவெதிர்கொள்கவென்று நினைப்பிட்டுத்திருவெழுத்துச் சாத்தித் திருமுகங்கொடுத்துக் காரியபம்பயனையுமேவ.அவரும் அமிர்துகளைக் குவித்து முல்லைநிலத்தேசென்று எதிர்கொண்டாரென்க.

நாட்டிலமிர்து: "செந்நெற சிறுபயறு சேதா நறுநெய்தேங் - கன்னற் கதலியோ டைந்து." கடலமிர்து: "ஓக்கோலை சங்க மொளிர்பவள மொண்முத்த - நீர்ப்படு முப்பினோ டைந்து." வரையமிர்து: "தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கங் - கற்பூரஞ் சாதியோ டைந்து." காட்டிலமிர்து: "அரசகிறல் செந்தே னணியயிற் பீலி- திருத்தகு நாவியோ டைந்து." அமிர்தென்றது பொருள்களை. (௯)

பொருமதயானைப்புணர்மருப்பேய்ப்பபொன்சுமந்தேந்தியமுலையா
ரெரிமலர்ச்செவ்வாய்திறந்துதேனூறவேத்துவார்பூக்கடுப்பதொழுவார்
வருகுலைக்கமுகும்வாழையுநடுவார்வரையுமிழாவிபோன்மாடத்
தருநறும்புகையுமேந்துவாரூர்தோறமரர்தமுலகமொத்ததுவே

ஆவி - நெட்டுயிர்ப்பு.

இ - ள். ஊர்தோறும் பூணைச்சுமந்து மருப்பேய்ப்ப வந்தியமுலையார் ஏத்துவார் தொழுவார் ஏந்துவாராக, ஆடவர் கன்னிக்கமுகும் வாழையும் நடுவாராக, நாடு தேவருலகத்தையொத்ததென்க.

இனி நகரின்செயதி கூறுகின்றார். (௰)

வேறு.

பாடினருவிப்பயங்கெழுமாமலை
மாடநகரத்துவாயிலுங்கோயிலு
மாடம்பலமுமரங்கமுஞ்சாலையுஞ்
சேடனைக்காணியசென்றுதொக்கதே.

பாடினருவி - ஒலியினியவருவி. உலகைத் தாங்குமவனாதலின், சேடனென்றார்.

---

* குறுந்தொகை, ௩௭0: பொய்கை யாம்ப லணிநிறக் கொழுமுகை - வண்டுவாய் திறக்குந் தண்டுறை யூரனோ - டிருப்பி னிருமருங் கினமே கிடப்பின் - வில்லக விரலிற் பொருந்தி யவனல்ல கஞ்சே ரிருமருங் கினமே. இது வில்லக விரலினார் பாடியது.

இ-ள். சேடனைக்காண்டற்கு மலைபோலுமாடத்தையுடைய நகரிடத்து வாயின் முதலியவற்றிலே யூர்தொக்கதென்க.

அம்பலம் - பலருங்கூத்துககாணுமிடம். அரங்கம் - நாடகமாடுமிடம். (௧௧)

பல்கதிராரமும்பூணும்பருமித்துக்
கொல்சினவெந்தொழிற்கோடேந்திளமுலை
நல்லெழின்மங்கையர்நன்னுதற்சூட்டிய
வெல்கதிர்ப்பட்டம்விளங்கிற்றொருபால்.

இ-ள். ஆரத்தையும் பூணையும் பலபிரகாரமாக வணிந்து இளமுலையாகிய கோட்டையேந்திய மங்கையராகிய யானைகளின் நுதலிற்சூட்டிய பட்டம் ஒருபக்கம் விளங்கிற்றென்க. (௧௨)

சுண்ணமுஞ்சூட்டுஞ்சொரிந்துகுவார்குழற்
பண்ணாரிபகாரொடுகாற்சிலம்பார்த்தெழ
வண்ணலைக்காணியவார்வத்திற்போதரும்
வண்ணமகளிர்வனப்பிற்றொருபால்.

இ-ள். ஒருபக்கம், அண்ணலைக் காணவேண்டிச் சுண்ணத்தையுஞ் சூட்டையுங் கண்ணியையுஞ் சொரிந்து குலைகின்றகுழலையுடைய மகாரையெடுத்துக்கொண்டு சிலம்பொலிப்ப ஆர்வத்தோடேபோதும் மகளிர்வனப்பினை யுடைத்தென்க.

தலையிற்சுண்ணமணிந்தார், மகாராதலின். (௧௩)

எதிர்நலப்பூங்கொடியெள்ளியசாயற்
கதிர்நலமங்கையர்தாமொருடார்ந்தோட
முதிராவிளமுலைமுத்தொடுபொங்க
வதிராரிங்கிண்கிணியார்க்குமொருபால்.

இ-ள். ஒருபக்கம், தோற்றினநலத்தையுடைய கொடியையிகழ்ந்த சாயலினையுங் கதிர்த்தநலத்தையுமுடைய மங்கையர் தம்முலைகள் முத்தோடு கோபிக்க ஓடலின், இடைமுரியுமென்று நடுங்கின கிண்கிணி யிங்ஙனம்போகன்மினென்று காலைக்கட்டிக்கொண்டு கூப்பிடுமென்க.

முத்தொடுபொங்குதல் - முத்துவடம்புடைத்தற்குக் கோபித்தல். (௧௪)

கருங்கண்ணியர்முலைக்கச்சுறவீக்கி
மருங்குநுடங்கமழைதவழ்மாட
நெருங்கவிறைகொண்டநேரிழையார்தம்
பெருங்கணலம்வரும்பெற்றித்தொருபால்.

இ-ள். ஒருபக்கம், முலையைக் கச்சாலிறுகவீக்கி யிடைதளரவந்து மாடத்தே தங்குதல்கொண்ட மகளிர்கண்கள் இவனைக்காண்டற்கு இடம்பெறாது அலம்வருந் தன்மையை யுடைத்தென்க. (௧௫)

மின்னுகுழையினர்கோதையர்மின்னுயர்
பொன்வரைமாடம்புதையப்பொதிமயி

றுன்னியதோகைக்குழாமெனத்தொக்கவர்
மன்னியகோலமலிந்ததொருபால்.

இ - ள். ஒருபக்கம், ஒளிமிக்க மேருப்போலுமாடம் புதையும்படி குழையினராய்க் கோதையராய்த் துன்னியதோகையையுடைய பொறிமயிற்குழாமெனத் தொக்கவர்கோலம் மிக்கதென்க. (கரு)

பாடன்மகளிரும்பல்லாலையேந்தல்கு
லாடன்மகளிருமாவணவீதிதொ
றோடவுதிர்ந்தவணிகலமுக்கவை
நீடிருள்போழுநிலைமைத்தொருபால்.

இ - ள் ஒருபக்கம், பாடன்மகளிரும், ஆடன்மகளிருமோடுதலிற் கழன்ற கலஞ் சிந்தினவை நிலைபெற்ற இரவில் இருளைக் கெடுக்குநிலைமைத்தாயிருந்ததென்க. குடைமுதலியவற்றின் இருளுமாம். ஆடு - வெற்றி. (கஎ)

கோதையுந்தாரும்பிணங்கக்கொடுங்குழைக்
காதன்மகளிருமைந்தருங்காணிய
வீதியுமேலும்மிடைந்துமிடைமலர்த்
தாதடுத்தெங்குந்தவிசொத்ததுவே.

இ - ள். மைந்தருமகளிருங் காதலால் இவனைக்காணடிகுத் தம்மாலைகள் பிணங்கும்படி வீதியிலும் மேலுமிடைதலின், அம்மலரிற்றாதுநெருங்கி யெங்குந் தவிசையொத்ததென்க. (கஅ)

மானக்கவரிமணிவண்டகற்றவங்
கானையெருத்தத்தமரகுமரனிற்
சேனைக்கடலிடைச்செல்வனைக்கண்டுவந்
தேனையவருமெடுத்துரைக்கின்றார்.

மானக்கவரி - * "மயிர்நீப்பின் வாழாக் கவரி," ஆகுபெயர்.

இ - ள். அவ்வீதியிடத்திற் சேனைக்கடலிடையிலே யானையெருத்தத்தே தேவகுமரனைப்போலே சாமரைவீசவிருந்த செல்வனைக்கண்டு உவந்து எல்லாரும் எடுத்துச்சொல்லாநின்றாரென்க. (கக)

க. தேமலரங்கட்டிருவேபுகுதக
மாமலர்க்கோதைமணாளன்புகுதக
காமன்புகுதககாளைபுகுதக
நாமவெழில்விஞ்சைநம்பிபுகுதக. (உ௦)

உ. மின்றோய்வரைகொன்றவேலோன்புகுதக
வின்றேன்கமழ்தாரியக்கன்புகுதக
வென்றோன்புகுதகவீரன்புகுதக
வென்றேநகரமெதிர்கொண்டதுவே.

இவையிரண்டுமொருதொடர்.

* திருக்குறள், மானம், ௯.

மலரிடத்துத் திரு. மலரங்கண் - மலர்போலுங்கண்ணுமாம். உவப்பின்கட் பான்மயங்கிற்று.

இ - ள். திருப் புகுதுக, திருமால் புகுதுக, காமன் புகுதுக, காளை புகுதுக, விச்சாதரகுமாரன் புகுதுக, மேகத்தைத்தீண்டின வரையைப்பிளந்தமுருகன் புகுதுக, இயக்கன்புகுதுக, அருகன்புகுதுக, வீரன் புகுதுகவென அங்கரி எதிர்கொண்டதென்க.

கோதை - திரு. இலககணையுமாம் புகுதக - ஒருசொல்விழுக்காடு. (உக)

க. இடிநறுஞ்சுண்ணஞ்சிதறிவெச்சாருங்
கடிமழ்மாலையுங்கண்ணியுஞ்சிந்தித்
துடியடுநுண்ணிடைத்தொண்டையஞ்செவ்வாய்
வடியடுகண்ணியர் வாழ்த்துபுநிற்பார்.

இககவிமுதல் ''என்னோர்'' என்னுங்கவியளவுமொருதொடர்.

இடையினையும், வாயினையுமுடைய கண்ணியர் எவ்விடமும இடித்தசுண்ணத்தைச்சிதறி, மாலையையுங்கண்ணியையுஞ்சிந்தி வாழ்த்திநிற்பார். (உஉ)

உ சுரும்பிமிர்மாலைதொழுவனர்நீட்டி
யிரும்பிடிநின்னடைகற்றவெமக்கு
விரும்பினையாய்விடின்மெல்லநடமோ
கருங்கணிர்நாயனைக்காணமற்றென்பார்.

பிடியைத்தொழுவாராய் மாலையைநீட்டி, யிரும்பிடி, நின்னடையை வேண்டிக் கற்றவெமக்கு அன்புறுவாயாயிற் காமனைக் கண்ணாலேகாணும்படி மெல்லநடப்பாயாக வென்பார்.

இது பிடிக்குமுன்னின்றமகளிர்கூற்று. (உங)

ங. படநடைபெண்மைமென்னைப்பெனபதோராய
கடுநடைகற்றாய்கணவனிழப்பாய்
பிடியலைபாவியெனபபூண்பிறழ்ந்து
புடைமுலைவிம்மப்புலந்தனர்நிற்பார்.

இது பிடிக்குப்பின்னின்றமகளிர்கூற்று.

பெண்மைக்கழகு மென்னடையென்பதோராயாயக கடியநடையைக் கற்றநீ கணவனையிழக்கக்கடவை, பாவி, நீதான் பிடியல்லையென்றுகூறி, அதுபோனவழியை மெய்யைச் சாய்த்துப் பார்த்தலிற் பூணும்பிறழ்ந்து முலையுமொருபக்கத்தேவிம்ம வெறுத்துநிற்பார். (உச)

ச. மயிர்வாய்ச்சிறுகட்பெருஞ்செவிமாத்தாட்
செயிர்தீர்திரள்கைச்சிறுபிடிகேள்வ
*னயிராவணத்தொடுகூஞ்றுமையய
னுயிர்காவலற்கொண்டுதவநில்லென்பார்.

* ஐராவணம் - கோவிந்தராஜனதுபட்டத்துயானையின்பெயர்.

மயிரையுடைய வாய் முதலியவற்றையுடைய சிறுபிடி, நின்கணவனுகிய ஐரா வணத்தோடே சூளுறுவேம்; இனிச் சூளுறுதபடி நீயணுகிய உயிர்காவலனைக் கொண்டு அவன் எமக்குதவும்படி நில்லென்பார்.

சூளுறு மென்பது - சேறு மென்றாற்போலப் பன்மை யுரைக்குந் தன்மைச் சொல். (உரு)

ரு. கருனைக்கவளந்தருதுங்கமழ்தா
ரருமையழகிற்கரசனைநாளைத்
திருமலிவீதியெஞ்சேரிகொணாமோ
வெரிமணிமாலையிளம்பிடியென்பார்.

இளம்பிடியே, பெறுதற்கரிய அழகினையுடைய அரசனாவனை யெஞ்சேரியில் வீதியிலே நாளைக் கொணர்வாயாக; கொணர்ந்தாற் கருனையையுடைய கவளத்தைத் தருவேமென்பார். (உசு)

சுா என்னோர்மருங்கினுமேத்தியருமணிப
பொன்னார்கலையினர்பொற்பூஞ்சிலம்பினா
மின்னார்குழையினர்கோதையர்வீதியுண்
மன்னகுமரனைவாழ்த்திமகிழ்ந்தார்.

இ - ள். அந்நகரில் வீதியிலே சிலமகளிர வாழ்த்துபுநிற்பார், நடமோவெனபார், புலந்தனாநிற்பார், நில்லென்பார், தருவேமென்பாராய்க் கலையினராய்ச் சிலம்பின ராய்க் குழையினராய்க் கோதையராய் மருங்கில்நின்றவெல்லாரும் அரசகுமரனை யேத்தி வாழ்த்தி மகிழ்ந்தாரென்க.

ஏத்துதல - புகழ்தல வாழ்த்துதல் - பல்லாண்டுமுதலியனகூறல. (உஎ)

வேறு.

விளங்குபாற்கடலிற்பொங்கிவெண்டிரையெழுவபோலந்
துளங்கொளிமாடத்துச்சித்துகிற்கொடிநுடங்கும்வீதி
யுளங்கழிந்துருவப்பைந்தார்மன்னவன்கோயில்சோர்ந்தா
னிளங்கதிர்ப்பரிதிபௌவத்திறுவரையிருந்ததொத்தான.

இ - ள். இளங்கதிர்ஞாயிறு கடலிடத்து உதயகிரியிலேயிருந்த தன்மையை யொத்தவன் பாற்கடலில் வெண்டிரைபொங்கி யெழுவனபோல மாடத்துச்சியிற் கொடி நுடங்கும் வீதியினடுவேபோய் மன்னவன் கோயிலைச் சேர்ந்தானென்க. (உஅ)

இழையொளிபரந்தகோயிலினமலர்க்குவளைப்பொற்பூ
விழைதகுகமலவட்டத்திடைவிராய்ப்பூத்ததேபோற்
குழையொளிமுகமுங்கோலக்கொழுங்கயற்கண்ணுந்தோன்ற
மழைமின்னுக்குழாத்தின்மாலைமங்கையர்மயங்கினின்றார்.

இ - ள். கோயின்மங்கையர் கமலப்பூவின்வட்டத்திடையே குவளைவிராய்ப்

பூத்ததுபோலே முகமுங்கண்ணுந்தோன்ற மெய்ம்மறைந்து மின்றிரள்போலே கலந்துநின்றாளென்க. (௨௧)

எரிக்குழாஞ்சுடரும்வைவேலேந்தலைக்கண்டுநோயிற்
றிருக்குழாமனையபட்டத்தேவியர்மகிழ்ந்துசெய்ய
வரிக்குழாநெடுங்கணாரக்கொப்புளித்துமிழவம்பூ
விரைக்குழாமாலைத்தேனும்வண்டுமுண்டொழுகநின்றார்.

இ-ள். பட்டத்தேவியா ரேந்தலை நெடுங்கண்ணாலேகண்டு இங்ஙனம் ஒரு மகனைப்பெற்றேமேயென்று மகிழ்ந்து மாலையிடத்தேமறைந்துநின்றாரென்க.

பூவில்விரையொழுகுதலாலே தேனும்வண்டும் முதற் கொப்புளித்துப் பின்னரவைவிடு உமிழும்படி திரளுந்தலையடைந்தாசியமாலையென்க. உமிழத் திரளுமென்க.()

அலங்கறவிழ்ந்துசோரவல்குற்பொற்றோரைமின்னச்
சிலம்பின்மேற்பஞ்சியார்ந்தசீறடிவலத்ததூன்றி
நலந்துறைபோயநங்கைதோழியைப்புல்லிநின்றா [ள்
ளிலங்கொளிமணிக்கொத்தீன்றவேந்துபொற்கொடியொப்பா

அவிழ்ந்து - அவிழ

இ-ள். மாணிக்கக்கொத்தையீன்ற பொற்கொடிபோலுமொப்பாளாகிய அழகின் கூறெல்லாநிரம்பியநங்கை தாதுசோர, அலங்கலவிழ, அல்குற் பொன்வடமின்ன இடக்காலிற்சிலம்பின்மேலே வலத்தைத்தாக்கியதாளை யூன்றித்தோழியைச் சாந்துநின்றாளென்க. (௩௧)

தாமரைப்போதிற்பூத்ததண்ணறுங்குவளைப்பூப்போற்
காமருமுகத்திற்பூத்தகருமழைத்தடங்கண்டம்மாற்
றேமலர்மார்பினனைநோக்கினள்செல்வன்மற்றப்
பூமலர்க்கோதைநெஞ்சமூழ்கிப்புக்கொளித்திட்டானே.

இ-ள். தாமரைப்பூவிலே பூத்த குவளைப் பூப்போலே முகத்திலேபொலிவு பெற்றகண்களாலே மார்பினனைநோக்கினாள்; அவனும அவள் நெஞ்சிலேமறைந்து புக்கு அவ்விடத்தினின்றும்போந்து கட்புலனாகாமையாயினனென்க.

மூழ்கவெனத்திரித்து, நெஞ்சிலேபுக்கு மூழ்க வொளித்தானென்றுமாம். (௩௨)

வேறு.

விண்ணுறுசெல்வார்மனம்வெய்துறப்போந்துவீங்கிப்
பண்ணுறுசொல்லாண்முலைபாரித்தவென்றுநோக்கக்
கண்ணுறுசென்றகளியைங்கணைக்காமனன்ன
புண்ணுறும்வேலான்மனமூழ்கினள்பொன்னனாளே.

தேவருலகிலே * சாசாரனென்னுந் தேவர்கோவாயிருந்து போதுகின்றபொழுது அத்தேவர் இவன்போகின்றானென்று மனம்வருந்தும்படி போந்து இவ்வுலகிலே கண்ணார்க்குப்புலனாதலைப் பொருந்தினானொருகாமனையொத்த சீவகனென்று தேவர் இவனைவியந்துகூறினர். புண்டோற்றுதற்குக்காரணமான வேலான்.

இ-ள். வேலான் பண்டோற்றுஞ்சொல்லாண்முலை வீங்கிப்பரித்தவென்று நோக்கினாக, அவன்மனத்தே யவள்மறைந்தாளென்க.

இனி அமிர்தகலசம்போந்தென்றால் முலையைக்கண்டு தேவர்வருந்தினரென்றே பொருடருதலிற் குற்றமாம். (௩௩)

மைதோய்வரையினிழியும்புலிபோலமைந்தன்
பெய்தாமமாலைப்பிடியின்னிழிந்தேகிமன்னர்
கொய்தாமமாலைக்கொழும்பொன்முடிதேய்த்திலங்குஞ்
செய்பூங்கழலைத்தொழுதான்சென்னிசேர்த்தினானே.

இ-ள். மைந்தன் வரையினின்றிழியும் புலிபோலே பிடியினின்றிழிந்துபோய் மாமனை முதற் கையாற்றொழுதான், தொழுது மன்னர்முடி தேய்த்தலாலே இலங்கும் அவனடியைத் தன்சென்னியிலே சேர்த்தினானென்க.

கொய்த ஒழுங்குபட்ட மாலையினையுடையமன்னர். கழல் - ஆகுபெயர். (௩௪)

பொன்னங்குவட்டிற்பொலிவெய்தித்திரண்டதிண்டோண்
மன்னன்மகிழ்ந்துமருமானைவிடாதுபுல்லித்
தன்னன்புகூரத்தடந்தாமரைச்செங்கண்முத்த
மின்னும்மணிப்பூண்வரைமார்பநனைப்பநின்றான்.

இ-ள். மன்னன் மருமானை விடாமற்றோளாற்புல்லி யன்புமிகுதலிற் றன அழுதகண்ணீர் அவன்மார்பைநனைக்கும்படி நின்றானென்க. (௩௫)

ஆனாதுவேந்தன்கலுழ்ந்தானெனக்கோயிலெல்லாந்
தானியாதுமின்றிமயங்கித்தடங்கண்பெய்மாரி
தேனார்மலரீர்த்தொழுகச்சிலம்பிற்சிலம்புங்
கானார்மயிலின்கணம்போற்கலுழ்வுற்றதன்றே.

இ-ள். வேந்தன் றானென்கின்றதன்மை யாதுமின்றி மயங்கி ஆனாதழுதா

* சீவகன், முற்பிறப்பில், பதினாறுகற்பலோகத்துள் ஒன்றாகிய ஸஹஸ்ராரகற்பத்தில் இந்திரனாக இருந்தவனாதலால் இங்ஙனங்கூறினர், பதினாறுகற்பங்களாவன: (க) சௌதர்மம், (உ) ஈசானம், (௩) சனற்குமாரம், (௪) மாகேந்திரம், (௫) பிரமம், (௬) பிரமோத்தரம், (௭) இலாந்தவம், (௮) காபிஷ்டம், (௯) சுக்கிரம், (க0) மகாசுக்கிரம், (கக) சதாரம், (கஉ) ஸஹஸ்ராரம், (க௩) ஆநதம், (க௪) பிராணதம், (க௫) ஆரணம், (க௬) அச்சுதம் என்பனவாம். இவை ஸ்ரீபுராணத்திலும், மேருமந்தரத்திலுஞ் சொல்லப்பட்டன.

னென்றுகருதிக் கோயிலெல்லாம் மலையிலழுகின்ற மயிற்றிரள்போலே கண்பெய்த மாரி மலரீர்த்தொழுகும்படி யழுதலுற்றவென்க.

உற்றது - ஒருமைப்பன்மைமயக்கம். காஞர்சிலம்பு. (௬௬)

வேறு.

பகைநரம்பிசையுங்கேளாபபைங்கதிர்ப்பசும்பொற்கோயில்
வகைநலம்வாடியெங்குமழுகுரன்மயங்கிமுந்நீ
ரகமடைதிறந்ததேபோலலறநற்கோக்கிளையநங்கை
மிகைநலத்தேவிதானே *விலாவணைநீக்கினாளே.

இ - ள். நரம்பிசையிற்பகையுங் கேட்டறியாத கோயிலுள்ளார சச்சந்தன்றன் மையைக் கேட்டலின், அழுகுவாடி யழுகுரலெங்குங்கலந்து கடலிடத்துக் கரை யைத்திறந்தாற்போல அலறுதலிற் கோக்கிளையாகநங்கையாகியவிசயை தானேவந்து அழுகையைநீக்கினாளென்க.

மிகையாகிய குணத்தையுடை யதேவி. (௬௭)

பல்கதிர்மணியும்பொன்னும்பவளமுங்குயிற்றிச்செய்த
செல்வப்பொற்கிடுகுசூழ்ந்தசித்திரகூடமெங்கு
மல்குபூந்தாமந்தாழ்ந்துமணிப்புகைகமழவேந்தன்
வெல்புகழ்பரவாதோவிதியுளியெய்தினானே.

இ - ள். மணிமுதலியவற்றை யழுத்திச்செய்த கிடுகுகள்சூழ்ந்துக்கின சித்திர கூடமெங்கு தாமந்தாழப்பட்டுப் புகைகமழாநிற்க, ஏத்தாளிகள் புகழைப்பரவ, வேந் தன் முறையாலே அதனைச்சேர்ந்தானென்க. (௬௮)

எரியணிபடைப்பைசெம்பொற்படியகமிலங்குபொன்வாள்
கருமணிமுகடுவேய்ந்தகஞ்சனைகவரிகொண்ட
வருமுலைமகளிர்வைத்துவான்றவிசடுத்துநீங்கப்
பெருமகனெண்ணங்கொள்வானமைச்சரோடேறினானே.

படியகம் - படிக்கம். கஞ்சனை - கலசப்பானை. காஞ்சனக்கவரி பாடமாயின் பொற்காம்பிட்ட கவரியென்க.

இ - ள். அவனெய்தினபின்பு அடைப்பைமுதலியவற்றைக் கொண்ட மகளிர் அவற்றை ஆசனத்தருகேவைத்து நீங்க, சீவகன் மாமனுடனே காரியம்விசாரித் தற்கு அவனமைச்சருடனே சென்றேறினானென்க. (௬௯)

உலந்தநாளவர்க்குத்தோன்றுதொளிக்குமீன்குளிக்குங்கற்பிற்
புலந்தவேலனெடுங்கட்செவ்வாய்ப்புதவிநாட்பயந்தநம்பி
சிலம்புநீர்க்கடலந்தானைச்சீதத்தற்கரசுநாட்டிக்
குலந்தருகொற்றவேலான்கொடிநகர்காக்கவென்றான்.

இ - ள். அவ்வளவிலே கோவிந்தன், நாளற்றவர்க்குத் தோன்றாதேமறையும் அருந்ததிதோற்குங் கற்பினையும், வேலைப்புலந்த கண்ணினையும், வாயினையுமுடைய

* விலாவணை - பிராகிருதம்.

புதல்வியென்னுந்தேவிபயந்த நம்பியாகிய சீதத்தனுக்கு நல்லநாளிலே அரசைக்காட்டி நீயிந்நகரைக் காப்பாயாகவென்றானென்க.

குலந்தருதல் - புதல்வற்பயந்து மேலுங் குலத்தைவளர்த்தல். தான் அக்கடன் கழித்துப் பொருதுபடக்கருதுதலின், அதற்கு அமைச்சருடன்படாரென்று அவரை வினவாது தானேயரசளித்தான்; * "வீறுசால் புதல்வற் பெற்றனை யிவணர்க் - கருங் கட னிறுத்த செருப்புகன் முன்ப" என்றாற்போல. (௬0)

மாற்றவனொற் றரொற்றுவகையினின் மறையநம்பிக்
காற்றினதோழர்க்கெல்லாமணிகலமடிசிலாடை
வேற்றுமையின்றிவேண்டிட்டமைத்தனனருளிப்பா
லேற்றுரிமுரசநாணவெறிதிரைமுழக்கிற்சொன்னான்.

இ - ள். பகைவனொற்றா ஆராயாத கூற்றாலே மறையும்படி சீவகற்குதவிய தோழர்க்கெல்லாம் அணிகலமுதலியவற்றைச் சீவகற்கமைத்தாற்போல அமைத்தன னாய்த் தலையளிசெய்துவிட்டு இப்பால் வென்றவெற்றினுரிபோர்த்த முரசநாணத்திரை முழக்குப்போல் ஒருமொழிகூறினானென்க.

வேண்டிட்டடிசில் - தாந்தாம் விரும்பப்படுகின்ற பொருள்களையுடையவடிசில். இன்றி - இன்றாக. † "வென்றதன் பச்சை சீவாது போர்த்த - திண்பிணி முரசம்" என்றார்பிறரும். நீகொன்றசீவகன்றோழர்க்குக் கோவிந்தன் சிறப்புச்செய்தானென்று ஒற்றர் கட்டியங்காரற்குக்கூறினால் மேலுறவாகி யாங்கொலைசூழ்கின்றது தவறுமென் றுகருதி மறையக்கொடுத்தான். சீவகன்வேறோர் வேடமாதலின், அவனை ஒற்றலா காதாம். (௬௧)

கட்டியங்காரனம்மைக்காண்பதேகருமமாக
வொட்டித்தான்விடுத்தவோலையுளபொருளுரைமினென்னத்
தொட்டுமேற்பொறியைநீக்கிமன்னனைத்தொழுதுதோன்ற
விட்டலர்நாகப்பைந்தாரவிரிசிகன்கூறுமன்றே.

இ - ள். தன் மைத்துனன் அரசவுரிமையைக் கோவிந்தனேயெய்தக் கருத்து டையனென்று தான்கருதிக் கட்டியங்காரன்றான் கருத்தறிதலே காரியமாகத் துணிந்து வரவிட்ட வோலையிலுள்ள காரியத்தை நீருரைமினென்ன, விரிசிகன் அவ்வோலையை யெடுத்து மேலிவிட்ட இலச்சினையைவாங்கி யரசனைத்தொழுதுதோன்றக் கூறுகின் றானென்க. (௬௨)

விதையத்தார்வேந்தன்காண்ககட்டியங்காரனோலை
புதையவிப்பொழிலைப்போர்த்தோர்பொய்ப்பழிபரந்ததென்மேற்
கதையெனக்கருதல்செய்யான்மெய்யெனத்தானுங்கொண்டான்
சிதையவென்னெஞ்சம்போழ்ந்துதெளிப்பினுந்தெளிநர்யாரே.

* பதிற்றுப்பத்து, எட்டாம்பத்து, ௪.

† புறநானூறு, ௨௮௮: மண்கொள வரிந்த வைந்நுதி மருப்பின் - அண்ண னல்லே றிரண்டுடன் மடுத்து - வென்றதன் பச்சை சீவாது போர்த்த - திண்பிணி முரச மிடைப்புலத் திரங்க.

இ - ள். கட்டியங்காரனோலையை விதையத்தார்வேந்தன் காண்பானாக, ஓர் பொய்ப்பழி, உலகிலுள்ளோரறிவைக்கெடுத்து என்மேலே கிடந்ததனைத் தானுமுட் படப் பொய்வார்த்தையென்று கருதுதலைச்செய்யானாய் மெய்யென்றுகொண்டான்; இனி என்னுயிர்கெடும்படி யென்மனத்தைப்பிளந்துகாட்டித் தெளிவித்தாலும் வேறு தெளிவாரில்லை; ஆயினுந் தானாதலிற் றெளிவிக்கின்றேனென்க. (௬௩)

௧. படுமணிப்பைம்பொற்சூழிப்பகட்டினமிரியப்பாய்ந்து
கொடிநெடுந்தேர்கணூறிக்கொய்யுளைமாக்கள்குத்தி
யிடுநொடியணிந்தமார்பரிருவிசும்பேறச்சீறி
யடுகளிறசனிவேகாலமாயதனைச்சோனன்.  (௬௪)

௨. நூற்றுவர்பாகர்தம்மைப்பிளந்துயிருண்டதென்னு
மாற்றமுதைகேட்டுச்சென்றுமதக்களிமடக்கிமேற்கொண்
டாற்றலன்றுசோதியாப்புறவிக்கும்போழ்திற்
கூற்றெனமுழங்கிவீழ்த்துக்கொல்லக்கோவிளகிற்றன்றே.

இவையிரண்டுமொருதொடர்.

எழுதசொடியணிதற்குக காரணமானமாாபா; வீரத்திற்குக் கொடியெடுத்தன் மரபு.

இ - ள் அசனிவேகம் பாயாது நூறிக குத்திச் சீறிச சுழல, அதனைப்பொரு ளாய்ப் பாகரை யேவினானாக, அது பாகாநூற்றுவரைக் கொன்றதென்கின்ற வார்த்தை யைக்கேட்டுச் சென்று தான் அதனையேறிக் கந்திலேசோத்திக் கட்டுகின்றவளவிலே, வீழ்ததுக் கூற்றெனக்கோறலின், அரசன்பட்டானென்க.

கோவிளகிற்று - மங்கலமரபு. (௬௫)

தனக்கியானுயிருமீவேன்றன்வரப்பழியுநீங்கு
மெனக்கினியிறைவன்றானேயிந்நிலக்கிழமைவேண்டி
நினைத்துத்தாமெடித்தல்செல்லாதென்சொலேதெளிந்துநொய்தாச்
சினக்களியானைமன்னன்வருகெனச்செப்பினானே.

இ - ள். மன்னன் உலகங்கூறும்பொய்யைநினைத்துத் தான்சூழாதே யான் தெளித்தசொல்லையேதெளிந்து தான்வந்துதெளியப் பழியுநீங்கும், தனக்கு யானுயி ரையுமுட்படத்தருவேன்; இனி எனக்கிறைவன் றானேயாதலின், இந்நிலக்கிழமை யை விரும்பிக் கடுகவருகவென்று விரிசிகன்வாசித்தானென்க.

வருகவென்னுமளவும் ஓலைபபாசுரம். நெடித்தல் - விகாரம். உயிருமீவே னென்றது ஊழ்கூறுவித்தது. (௬௬)

ஓலையுட்பொருளைககேட்டேயொள்ளெயிறிலங்காக்குக்
காலனைப்பளியன்றானேகையிறைல்விளிக்குமென்றை
நூல்வலீரிவனைக்கொல்லுநுண்மதிச்சூழ்ச்சியீதே
போல்வதொன்றில்லையென்றான்புனைமணிப்பொன்செய்பூணான்.

இ - ள். அவ்வோலையிற்காரியத்தைச் சீவகன்கேட்டு நக்குத் தானே காலனைக்

கையால்விளிக்குமென்று தன்னிலேகருதி, நூல்வலீர், இவனைக்கொல்லுதற்குக் காரணமான சூழ்ச்சி யிதுபோல்வது வேறில்லையென்றானென்க.

மதியாற்சூழுஞ்சூழ்ச்சியிதென்றது - நட்பாய்ப்போகின்றதனை. (௪௭)

கள்ளத்தானம்மைக்கொல்லக்கருதினானுந்தம்மனைக்
கள்ளத்தாலுயிரையுண்ணக்கருதினேமிதனையாரு
முள்ளத்தாலுமிழவேண்டாவுறுபடைவந்துகூட
வள்ளுவார்முரசமூதூரறைகெனவருளினானே.

இ-ந்து அதுகேட்ட கோவிந்தன்கூற்று. வள்ளுவார் - பெயர்த்திரிசொல்.

இ-ள். யாவர்சிலரும் உள்ளத்தினின்றுந் தோற்றுவிக்கவேண்டா; கள்ளந்தால் நம்மைக் கொல்லக் கருதினான்; நாமும் அவனை யங்ஙனங்கருதினோமாதலின், இந்நட்பை முதற்சாற்றிப் பின்பு படைகூடும்படி சாற்றி யூரிலே முரசறைவிக்க வென்று கோவிந்தனருளிச்செய்தானென்க (௪௮)

கட்டியங்காரனோடுகாவலனொருவனானான்
விட்டுநீர்செல்லும்பொன்னும்வழங்குமின்விளைவகூறி
னொட்டலனிறைவன்சொன்னீர்நாமவல்லவென்னக்
கொட்டினான்மணிக்கண்வள்வாரக்குளிறிடிமுரசமன்றே.

மேல்விளையுங்காரியங்களைச் சொல்லுநீர்மையையுடைய நாக்கள் அவற்றைக் கூறின், அந்நா நுமமுடையனவல்லவென்று அறிவுடையோர் அறிவில்லார்க்குக் கூறும்படியாகச் சாற்றினானென்க. இது முரசறைவான்கூற்றெனிற் பகைமை கூறிற்றேயாமாதலின், அவன்கூற்றன்று.

இ-ள். காவலன் பகையைவிட்டுக் கட்டியங்காரனோடு உறவானான்; இனி அவ்விறைவன் நெல்லும்பொன்னும் வழங்காதிருத்தற்கு உடம்பட்டானாதலின், நீர் அவற்றை யிரண்டுநாட்டிலும் ஒக்கவழங்குமினென்று உறவுதோன்ற முதற்சாற்றினானென்க. (௪௯)

விண்டவருடலங்கீறிச்சுவைத்துநின்மழுலும்வேலு
மொண்கொடியுருவத்திண்டேரொளிமயிர்ப்புரவிபண்ணி
வண்கழலணிந்துமள்ளர்வாள்வலம்பிடித்துநாளைத்
தெண்டிரைப்பரப்புநாணத்திருநகர்த்தொகுகவென்றான்.

இ-ள். மள்ளர் வேழமுதலியவற்றைப்பண்ணி யணிந்து பிடித்து நாண நாளை நகரிலே தொகுவாராகவென்று பின்பு சாற்றினானென்க. (௫0)

ஏற்றுரிபோர்த்தவள்வாரிடிமுரசறைந்தபின்னாட்
காற்றெறிகடலிற்சங்குமுழவுமுரசுமார்ப்பக்
கூற்றுடன்றன்னதானைகொழுநிலநெளியவீண்டிப்
பாற்கடற்பரப்பின்வெள்வாட்சுடரொளிபரந்ததன்றே.

நண்டி - நண்ட.

இ - ள். அங்ஙனஞ்சாற்றின மற்றைநாட் கடல்போன் முரசுமுதலியனவார்ப் பத் தானையீண்டுதலிற பாற்கடல்போலே வாளொளி நகரிலேபரந்ததென்க. (௫க)

புதையிருளிரியப்பொங்கிக்குங்குமக்கதிர்கணோக்கி
யுதையத்தினெற்றிசேர்ந்தவொண்சுடர்ப்பரிதிபோலத்
துதையொளிமாடத்துச்சிவெண்குடைநீழற்றோன்றி
விதையத்தாரவென்றிவேந்தன்விழுப்படைகாணுமன்றே.

இ - ள். வேந்தன், செறிந்தவிருள்கெடும்படிகதிரினைப் புறப்படவிட்டுப் பொங்கி யுதயகிரியைச்சேர்ந்த பரிதிபோல மாடத்துச்சியிலே குடைநிழலிலே தோன்றிப் படையைககாணநிற்குமென்க. (௫உ)

வேறு.

“அரும்பனை” முதல் “செம்பொனீன்முடி” அளவுமொருதொடர.

க. அரும்பனைத்தடக்கையாகத்திரள்புறம்வாளெயிறைந்திணுங்கொல்வ
கருங்கடற்சங்குங்கறந்தவான்பாலுங்கனற்றியகாலுகிருடைய
பெரும்புலிமுழக்கின்மாறெதிர்முழங்கிப்பெருவரைகீண்டிடுந்திறல
திருந்தியேழுறுப்புந்திண்ணிலந்தோய்வதீயுமிழ்தறுகணிற்சிறந்த. (௫௩)

உ. கவிழ்மணிப்புடையகால்வணிப்புணறிறுகன்றதந்நிழலொடுமலைவ
வவிழ்புயன்மேகமனையமும்மதத்தவமூவதினறுநூறுதானாகம்
புகழ்பருந்தார்ப்பப்பூமதம்பொழிவானின்றவிராயிரங்கவுள்வண்
டிகழ்மதஞ்செறித்தகவிராயிரத்தைஞ்ஞூறிளையவுமத்துணைக்களிறே.

இவையிரண்டுமொருதொடர.

அபராசிதத்திற்குக் *“கடாந்திறந்து” என்னுங்கவியிற்கூறிறை.

இ - ள் கை, கால், தாலவட்டம், கொம்பென்கின்ற ஐந்தாலுங்கொல்வன, சங்கையும் பாலையும் வெண்மையாற்கெடுத்த உகிரையுடையன, புலி முழக்கினால் எதிரேமுழங்கி யதனைக் காணாமையின், அதுதங்குமலையைக் கிழிக்குந்திறல, எழு முழமுந் திருந்தி நிலந்தோயுமுறுப்புமூன்றுநிலந்தோய்வன, சிறந்தன, புடையன, மலைவனவாய்ச் சொரிகின்றநீரையுடையமேகமனைய மதத்தவாகியநாகம் மூவாயிரத் தறுநூறு; புகழும் பருந்துமார்ப்ப, மதம்பொழிதற்குநின்றன இரண்டாயிரம்; கவுளை வண்டிகழும்படி மதமடைத்தன இரண்டாயிரத்தைஞ்ஞூறு; களிற்றுக் கன்றுகள் இரண்டாயிரத்தைஞ்ஞூறென்க

ஆக யானை பதினாயிரத்தறுநூறு. எழுதிருந்தியெனமுடிக்க. உறுப்புமூன்று வன: கையும், கோசமும், தாலவட்டமும். இவற்றோடு கால்நான்குங்கூட்டி எழு றுப்பு நிலந்தோயுமென்பாருமுளர். (௫௪)

குத்தமேயயில்வாள்குனிசிலைமுன்றுங்குறைவிலார்கூற்றொடும்பொருவா
ரந்தாமாறுயானைகொண்டேறப்பழக்கெளிற்பயந்திடுந்திறலார்

* காந்தருவதத்தையாரிலம்பகம், ௬௯௪.

முன்கமர்தம்முண்முழுமெய்யுமிரும்புமேய்ந்திடவெஞ்சமம்விளைத்தார்
கொந்தழலஞ்சாக்குஞ்சரமிவர்ந்தார்கோடியேவிருத்தியாவுடையார்.

இ - ள். தீக்கு அஞ்சாக் குஞ்சரங்களை யேறினவர்கள் எறிகோல், வாள், வில் லென்கின்ற மூன்றிலுந் தாழ்வற்றவராய்க் கூற்றோடும்பொருவாராய் அந்தரவழியாக ஏறும்படி யானையைகொண்டு பறக்கவென்னிற் பறக்குந்திறலாராய் முற்பட்டபோலே மெய்ம்முழுதும் இரும்புமேயும்படி சமரத்தைவிளைத்தவராய்க் கோடிபொன்னைச் சீவிதமாகவுடையாராயிருப்பாரென்க. (௫௫)

குங்குமநறுநீர்பந்திநின்றுடுங்குதிரையாறுயிரத்திரட்டி
பொங்குவெண்மயிர்சூழ்பொற்படைபொலிந்தவறுபதிறுயிரம்புரவி
வெங்கணைதவிர்ப்பவெள்ளிவெண்படையவாய்விடினிலவரைநில்லாப்
பைங்கதிர்க்கொட்டைக்கவரிசூழ்ந்தணிந்தபகரினத்தொகையனபாய்மா.

இ - ள். புறப்படாமற் பந்தியிலேநின்று குங்குமங்கலந்த பனிநீரையாடும் * நம்பிரான் பன்னீராயிரம்; பொற்கலனையாற்பொலிந்த மயிர்சூழ்புரவி யறுபதிறுயிரம்; தம்மேலிருந்தெய்தவம்பைப் பின்னிடுவன, வெள்ளிக்கல்லணையுடையன, குசையை நெகிழவிடிற் பறப்பனவாய்ச் சூழ்ந்து கவரியணிந்த பாயமாக் கூறின், அறுபதிறுயிரமென்கின்ற எண்ணையுடையவாயிருக்குமென்க.

ஆகக்குதிரை நூறுயிரத்து முப்பத்திராயிரம் (௫௬)

வேய்நிறக்கரும்பின்வெண்ணிறப்பூப்போன்மிடைந்தொளிர்குந்தமும்வாளூர், தோநிலையரவின் றோற்றமேபோலுஞ் சிலைகளும்பிறகளுந் துறைபோ, யூனமொன்றில்லாருயர்குடிப்பிறந்தாராயிரமடுகளங்கண்டார், பாணிலாப்பூணார்படைத்தொழிற்கலிமாப்பண்ணுறுத்தேறினாரவரே.

இ - ள். மூங்கில்போலுங் கரும்பினது பூப்போலுங் குந்தமுதலியவற்றையும் ஒழிந்தவற்றையும் முற்றக்கற்றுப் பிறகுறைவற்றார், குடிப்பிறந்தார், களங்கண்டார், பூணாராகியவவா அம்மாவைப் பண்ணி யேறினாரென்க.

தோம் - குற்றம். இனி யேறினாராகியவவா இத்தன்மையரென்றுமாம். (௫௭)

வேறு.

க. தறுகணாண்மையதாமரைநிறத்தனதகைசா
பறுவில்வான்குளம்புடையனமாளவுத்தகத்த
பறையினூலுவபடுசினைநாவலின்கனிபோற்
குறையில்கோலத்தகுளிர்புனற்சிந்துவின்கரைய. (௫௮)

உ. பாரசூரவம்பல்லவமெனும்பதிப்பிறந்த
வீரவாற்றலவிளைகடுந்தேறலினிறத்த
பாரிற்றோர்செலிற்பழிபெரிதுடைத்தெனநாணிச்
சோரும்வார்புயறுளங்கவிண்புகுவனதுரகம்.

இவையிரண்டுமொருதொடர்.

* உத்தம இலக்கணமமைந்த குதிரையை நம்பிரானென்றல் மரபு. இது வைஷ்ணவ ஸம்பிரதாயத்திலும் வழங்குகின்றது.

இ - ள். மாளவதேசத்திடத்தனவாகியதுரகம் ஆண்மைய, நிறத்தன, வெண் குளம்புடையனவாயிருக்கும்; சிந்துவின்கரையனவாகியதுரகம் பறையொலிபோல முழங்குவ, நாவலின்கனிபோலுங் கோலத்தவாயிருக்கும்; பாரசூரவம் பல்லவமென் னும் பதியிற்பிறந்ததுரகம் ஆற்றல, நிறத்த, விண்புகுவனவாயிருக்குமென்க.

வீரத்தைநடத்துதலைபுடையன. (ருக)

பீலிமாமயிலெருத்தெனப்பெருவனப்புடைய
மாலைமாரட்டத்தகத்தனவளரிளங்கிளியே
போலுமேனியபொருகடற்கலத்தின்வந்திழிந்த
கோலநீர்ப்பவளக்குளம்புடையனகுதிரை.

மாலை - ஒழுங்கு. மாரட்டமென முதலெழுத்தை நெடிலாக்கவேர்துக, * மர ட்டம்.

இ - ள். மாரட்டதேசத்திடத்தனவாகிய குதிரைகள் மயிற்கழுத்துப்போலும் நிறத்தனவாயிருக்கும், கலத்தின்வந்திழிந்தனகுதிரைகள் கிளிபோலுநிறத்தனவாய்ப் பவளக்குளம்புடையனவாயிருக்குமென்க. (சுo)

இன்னபோர்குலப்புரவிபண்ணுறுத்தனவியற்றோர்
பொன்னும்வெள்ளியுமணியினும்புனைந்துவெண்மதியந்
தன்னையூர்கொண்டதகைபனதொகைசொல்லினாறுநூ
றென்னுமீறுடையிருபதினாயிரமிறையே

மதி - குறட்டிற்குவமம். † பரிவேடிப்பு - சூட்டிறகுவமம்.

இ - ள். தகையனவாய்ப பொன்முதலியவற்றாற் பனையபபட்டுத்தன்மைய வாகியபுரவி பண்ணுறுத்தனவாகியதொகைசொல்லின், அறுநூறென்னுமெண் ணினை யீற்றிலேயுடைய இருபதினாயிரமென்க.

இறையே - விளி (சுக)

நொச்சிமாமலர்நிறத்தனநொடிவருபுந்நீ
ருச்சிமாக்கதிர்போற்சுடுமொளிதிகழயில்வா
ளெச்சத்தல்லவுமெறிபடைபயின்றுதமொன்னா
ரிச்சங்கூற்றினுக்கிடுபவர்தோமிசையவரே

புகரால் நொச்சிமலர்போலு நிறத்தனவாய் முந்நீர்மாக்கதிர் உச்சியிற்சுடுமாறு போலச் சுடும் ஒளிதிகழ்வாளென்க. எச்சத்துநொடிவருமென்க.

இ - ள். தோராட்கள் தமக்குரிய வில்லொழிந்தவிடத்தக கற்றற்குரியரென்று கூறுதல்வரும் வாளையும் அல்லாதபடைகளையும் உட்படப்பயின்று தம்பகைவரை நிச்சங் கூற்றினுக்கு விருந்தாகவிடுபவராயிருப்பாரென்க. (சுஉ)

வேறு.

க. எயிற்றுப்படையாண்மையினினிடிக்கும்புலியொப்பார்
பயிற்றியவில்வாள்பணிகரும்வேலொடுடன்வல்லார்
துயிற்றியபல்கேள்வியினர்தூற்றிக்கொளப்பட்டா
ரயிற்றுப்படையார்கண்மதயானைகதனறுப்பார். (சுஙு)

* மகாராஷ்ட்ரமென்பது மரட்டமெனப் பிராகிருதத்தில் வழங்குகின்றது.

† பரிவேடிப்பு - பரிவேஷத்திலிருந்துண்டாயது; சுற்றியதென்பது பொருள்.

உ. காலனொடுசூழ்ந்தகடுநோய்களையுமொப்பா
ராலுங்கடற்றார்த்தன்மலையகழ்தலிவைவல்லார்
ஞாலமறியாண்டொழிலர்நான்கிலக்கமுள்ளார்
மேலுநுமராலுரிமையுட்சிறப்புப்பெற்றார்.

இவையிரண்டுமொருதொடர்.

இ-ள். தமதாண்மையால் எயிறுகியபடையையுடைய புலியையொப்பார், வில்லையும் வாளையும் பிறர் தம்பக்கலிலேசெறுகும்படி வேலோடேகூடவல்லார், தம்மிடத்தே தங்கப்பண்ணிய பலநூற்கேள்வியினையுடையார், தெரிந்துகொள்ளப்பட்டார், வேலினதுவலியாலே பகைவரதுயானையைக் கரனறுப்பார், வருத்திக்கோறலிற் காலனையும் பற்றினநோயையுமொப்பார், செருக்கினைற் கடல்தூர்த்தன் மலையகழ்தலென்கின்ற இத்தொழிலைவல்லார், ஆண்டொழிலர், நுமரால் சிறப்புப்பெற்றாராகியவர் நான்குநூறாயிரமென்னும் எண்ணிடத்தாரென்க.

எயிலதுதுப்பை யடைகின்ற வலியினையென்றுமாம். (கூச)

சிங்கத்துரிபோர்த்தசெழுங்கேடகமும்வாளும்
பொங்குகதிர்வேலும்பொருவில்லுமுடன்பரப்ப
மங்குலிடைமின்னுமதியுஞ்சுடரும்போல
வெங்கட்டொழிற்கூற்றுமரண்சேரவிரிந்தன்றே.

கேடகத்திற்கு ஞாயிறும், வாளிற்கும் வேலிற்கு மின்னும், வில்லிற்குப் பிறையுமுவமை.

இ-ள். இக்காலாட்படையுங் கேடகமுதலியவற்றைப்பரப்பிக் கூற்றுந் தனக்கோரரணைச்சேரும்படி விரிந்ததென்க. (கூரு)

வேறு.

செம்பொனீண்முடிததேர்மன்னர்மன்னற்குப்
பைம்பொனாழிதொட்டான்படைகாட்டின
னம்பொனொண்கழலானையிராவணம்
வெம்பவேறினன்வெல்கெனவாழ்த்தினான்.

ஆழிதொட்டான் - * ஏனாதிமோதிரஞ்செறித்த சேனாபதி.

இ-ள். அங்ஙனம் படையைக்காண்கின்ற மன்னர்மன்னற்கு ஆழிதொட்டான், இறையே! மதத்தவாகியநாகம் அறுபதிற்றறுபது, மதம்பொழிவானின்றன ஈராயிரம், மதஞ்செறித்தன ஈராயிரத்தைஞ்ஞூறு, இளையகளிறும் ஈராயிரத்தைஞ்ஞூறு; இக்குஞ்சரங்களையேறினவாகள் கோடியேவிருத்தியாவுடையராயிருப்பார்; குதிரை யாறாயிரத்திரட்டி, புரவி யறுபதினாயிரம், பாய்மாவும் அறுபதினாயிரமாயிருக்கும்; பூணாராகியவவர் அம்மாவைப் பண்ணியேறினார்; மாளவத்தகத்தன

* ஏனாதியென்பது அரசனாற் கொடுக்கப்படும் பட்டம்: வெண்பா. "போர்க்கட லாற்றும் புரவித்தோப் பல்படைக்குக் - கார்க்கடல் பெற்ற கரையன்றே - போர்க்கெல்லாந் - தானாதி யாகிய தார்வேந்தன் மோதிரஞ்சே - ரேனாதிப் பட்டத் திவன்." என்பதனானுணர்க.

வாகியதுரகம் ஆண்மைய, நிறத்தன, வெண்குளம்புடையனவாயிருக்கும்; சிந்துவின் கரையனவாகியதுரகம் ஆலுவ, கோலத்தனவாயிருக்கும்; பாரசூரவம்பல்லவமெனும் பதியிற்பிறந்ததுரகம் ஆற்றல, நிறத்தன, விண்புகுவனவாயிருக்கும்; மாரட்டதேசத்தகத்தனவாகிய குதிரை மயிற்கழுத்துப்போலு நிறத்தனவாயிருக்கும்; மரக்கலத்தின்வந்திழிந்தகுதிரைகள் பவளக்குளம்புடையனவாயிருக்கும். இப்புரவி பண்ணுறுத்ததேர் இருபதினுயிரத்தறுநூறு. இத்தேராட்கள் கூற்றினுக்கிடுபவராயிருப்பவர்; சிறப்புப்பெற்றோராகியவவர் நான்குநூருயிரமென்னுமெண்ணிடத்தார். இக்காலாட்படையுங் கூற்றும்அரண்சேருமபடி பரந்ததென்றுசொல்லிப் படைகாட்டினுன், அதுகண்டு அவனும் ஐராவணத்தைக் கடுகவேறினுன்; அப்பொழுது வெல்க வென்று வாழ்த்தினுரென்க.

இவ்வியானைக்கு இதுபெயர். (சுசு)

சிறுவெண்சங்குமுரன்றனதிண்முர
சறையுமாக்கடல்காரெனவார்த்தன
நெறியினல்லினபுள்ளுநிமித்தமு
மிறைவன்கண்வலனுடிற்றிசைந்தரோ.

இ - ள். அப்பொழுது சங்குமுழங்கின; முரசு கடலுங காருமெனவார்த்தன; நெறியிலே பறவைகளும், நிறைகுடமுதலியனவும் நன்மையேயறிவித்தன; இறைவன்வலக்கண் பலகாலும் துடித்ததென்க. (சுஎ)

மல்லல்யானைக்கறங்குமணியொலி
யல்லதைங்கதிமான்கொழுந்தாரொலி
கல்லெனுர்ப்பொலிமிக்கொளிர்வாண்மினிற்
செல்லுமாக்கடல்போன்றதுசேனையே.

இ - ள். சேனை இவ்வொலிகளுமிக்கு வாளொளியோடேநடப்பதொரு கடலையொத்ததென்க.

"விக்கிதம் வற்கிதம் வெல்லு முபகண்ட - மத்திமஞ் சாரியோ டைந்து." (சுஅ)

மாலைமாமதிவெண்குடைமல்கிய
கோலக்குஞ்சிநிழற்குளிர்பிச்சமுஞ்
சோலையாய்ச்சொரிமும்மதத்தானிலம்
பாலைபோய்மருதம்பயந்திட்டதே.

இ - ள். பாலைநிலங் குடையாலுங் குஞ்சியாலும் பிச்சத்தாலுங் குளிர்நிழற் சோலையாய், மதத்தாலே பாலைத்தன்மைபோய் மருதத்தன்மையை யுண்டாக்கிற்றென்க. (சுகூ)

மன்றன்மாமயிலார்த்தெழமானினங்
கன்றினேடுகலங்கினகாற்பெய
வென்றிவேம்படையஞ்சிவனத்தொடு
குன்றெலாங்குடிபோவனபோன்றவே.

இ - ள். பெடையோடூடுகின்ற மயில்களெல்லாம் ஆர்த்தெழுதலாலும், மானினங்களெல்லாங் கன்றோடே கலங்கியோடுதலாலும், படைக்கஞ்சிக் காடுமலையுங் குடிபோவனபோலேயிருந்தனவென்க. (௭௦)

வேறு.

படுகண்முழவினிமிழருவிவரையுங்காடும்பலபோகி
யிடுமண்முழவினிசையோவாவேமாங்கதநாடெய்தியபி
னெடுவெண்ணிலவினெற்றிதோய்நிழலார்செம்பொற்புரிசையே
கடிமண்காவல்கருதினாய்கோயிலாகக்கருதினான்.

இ - ள். சீவகன்காத்தற்றொழிலையுடைய மண்ணை அவன் காக்குமாறுகருதிய கோவிந்தன் அருவியையுடைய பலவரையையுங் காட்டையும்போய் ஏமாங்கதத்தைச்சேர்ந்தபின்பு புரிசையின்புறத்தையே தனக்குக்கோயிலாகக்கருதினானென்க.

மதிற்புறத்தே விட்டான். (௭௧)

போகமகளிர்வலப்பெருங்கண்டுடித்தபொல்லாக்கணுக்கண்டா
ராகமன்னற்கொளிமழுங்கிற்றஞ்சத்தக்கூராலினும்
கூகைகோயிற்பகற்குழறக்கொற்றமுரசம்பாடவிந்து
மாகநெய்த்தோர்சொரிந்தெங்குமண்ணும்விண்ணுமதிர்ந்தவே.

இ - ள். அவன்விட்டபொழுது கட்டியங்காரன்தேவிமார் வலக்கண்டுடித்த; அவர் கனக்கண்டார்; அவற்குமேனி யொளிகெட்டது; அவையேயன்றிக் கூகை கோயிலிலே பகலேயிருந்து அஞ்சத்தக்ககுரலாலேகுழற, முரசு ஒலியவிய, மாகத்தினின்றுங் குருதிசொரிய, மண்ணும்விண்ணுமதிர்ந்தவென்க.

பூகம்பமும், வெள்ளிடியும். (௭௨)

கூற்றம்வந்துபுறத்திருந்ததறியான்கொழும்பொனுலகாள்வான்
வீற்றிங்கிருந்தேனெனமகிழ்ந்துவென்றிவேழமிருநூறுங்
காற்றிற்பரிக்குந்தேர்நூறுங்கடுங்காலிவுளியாயிரமும்
போற்றிவிடுத்தான்புனைசெம்பொற்படையேபடுத்துப்புனைபூணான்.

இ - ள். பட்டுப்போய்ப் பொன்னுலகை யாளுதற்குரியானாகியபூணான் சீவகன் வந்து தன்னைக்கோறற்குப் புறத்திருந்ததறியானாய் இனிக் கோவிந்தனையுங்கொன்று வீற்றிருந்தேனன்றே வென்றுகருதித் தன்னினைவுமுடிந்ததென்று தன்னைப்போற்றி மகிழ்ந்து வேழமுதலியவற்றைப் பொற்படைகளாலேயணிந்து கோவிந்தனுக்குப் போகவிட்டானென்க.

பொன்னுலகாளுதற்கென்றுமாம். (௭௩)

மன்னனுக்கோர்மதவேழம்வாரிமணாளனென்பதூஉ
மின்னுக்கொடித்தேர்விசயமும்புரவிபவனவேகமும்
பொன்னிற்புனைந்துதான்போக்கநிகழ்வதோரான்மகிழ்வெய்தி
முன்பான்விட்டவினைக்களிற்றினிரட்டிவிடுத்தானெனமகிழ்ந்தான்.

இ - ள். அவற்றிற்குநிகராகக் கோவிந்தன்றன் வேழங்களில் வாரிமணன் னென்னும் வேழத்தையும், தேர்களிலே விசயமென்னுந்தேரையும், புரவிகளிற் பவனவேகமென்னும்புரவியையும் அவனிடத்தேபோகவிட, மகிழ்ந்து யான்முன் களிற்றேடே போகவிட்டனவற்றின் இரட்டிசிறப்புடையனவற்றை வரவிட்டா னென்று கட்டியங்காரன் மகிழ்ந்தானென்க.

நின்பெரும்படை யென்சிறுபடைக்கு நிகர்க்குமென்பதுதோன்ற வரவிட்டா னென்றுணராமையின், நிகழ்வதோராானென்றார். (௭௪)

வேறு.

விங்குநீர்விறையததார்கோன்கட்டியங்காரன்றன்னோ
டாங்கவனொருவனாகியன்பெனுமயில்கொள்வாளால்
வாங்கிக்கொண்டுயிரையுண்பான்வஞ்சத்தாற்சூழ்ந்தவண்ண
மோங்குநீரோதவேலிக்குரையாமுரைத்துமன்றே.

இ - ள். கோவிந்தன் கட்டியங்காரன்றன்னோடு கூடியிருந்து அன்பென்னும கூர்மைகொண்டவாளாலே யவனுயிரை யவ்விடத்தே வாங்கிக்கோடற்கு வஞ்சனை யாலே சூழ்ந்தசெய்தியை யாம் உலகிற்கு அறிய வுரைப்பேமென்றாரென்க.

அன்பென்றது சிவகனை; ஆகுபெயர். (௭௫)

பெருமகன்காதறபாவைபித்திகைப்பிணையன்மாலை
யொருமகனோக்கினுயிரொடும்போகடாத
திருமகளவட்குப்பாலனருந்திரிபன்றியெய்த
வருமகனாகுமென்றங்கணிமுரசறைவித்தானே.

இ - ள். கோவிந்தன் அன்புவைத்தபாவையாகிய ஒப்பில்லாதமகள், தன்னை நோக்கினை யுயிரையாங்குந்திரு, அவட்குக்கணவனாவான் எய்தற்கரியதிரிபன்றி யெய்த அரியமகனாமென்று முரசைச்சாற்றுவித்தானென்க. (௭௬)

ஆய்மதக்களிறுதிண்டேரணிமயிர்ப்புரவியம்பொற்
றாய்கதிர்ச்சிவிகைசெற்றிக்கலந்தவைநுழைகளாகத்
தோய்வரையுலகவெள்ளந்தொன்னகரதகொககதேபோ
லாய்முடியரசவெள்ளமணிநகரீண்டிற்றன்றே.

உலகவெள்ளம - உலகத்தைக்கொள்ளும்வெள்ளம்.

இ - ள். செறிந்த நீரையுடைய யுகாந்தவெள்ளம் வரைகளோடு நகரிலே தொக்கதுபோலே அரசவெள்ளங் களிறுமுதலியனசெற்றிக் கலந்தவை நுழைகளா கக்கொண்டு அணிநகரிலே யீண்டிற்றென்க. (௭௭)

நல்லவள்வனப்புவாங்கநகைமணிமாலைமார்பர்
வில்லன்றேயுவனிப்பாரும்வெங்கணைதிருத்துவாரும்
சொல்லுமினெமக்குமாங்கோர்சிலைதொடாளென்பாரும்
பல்சரம்வழங்குவாரும்பரிவுகொள்பவருமானார்.

இ-ள். தம்மை இலக்கணையதழகு மனத்தைவளையித்தலின், அவ்வரசர் அன்றே வில்லையெய்யத்தொடங்குவாரும், திருத்துவாரும், எமக்கும் அவ்விடத்தே சிலைதொட நாட்சொல்லுமினென்பாரும், வழங்குவாரும், இவையுமறியாதே பரிவு கொள்வாருமாயினரென்க.

வாங்க - இழுக்கவென்றுமாம். (எஅ)

பிறையெயிற்றெரிகட்பேழ்வாய்ப்பெருமயிர்ப்பைம்பொற்பன்றி
யறையெனத்திரியுமாய்பொற்பூமியினிறைந்துமன்ன
ருறுகணையொன்றும்வில்லுமுடன்பிடித்துருவநேமிப்
பொறிதிரிவதனைநோக்கிப்பூமுடிதுளக்கினின்றார்.

அறை - * பத்திராலாபனம்.

இ-ள். எயிறுமுதலியவற்றையுடைய பொற்பன்றி யென்னை யாவராலும் எய்யவரிதென்று சாற்றுகின்றதென்னத்திரியுமங்கிலத்தே மன்னரெல்லாம்நிறைந்து கணையொன்றையும வில்லையுஞ் சேரப்பிடித்துச் சக்கரத்தினுள்ளே பன்றிதிரிவதனை நோக்கித் தலையசைத்துநின்றாரென்க. (எக)

ஏந்தெழிலாகஞ்சாந்தினிடுகொடியெழுதிக்காதிற்
காய்ந்தெரிசெம்பொற்றோடுங்கனமணிக்குழையுமின்ன
வேந்தருள்வினிதைவேந்தன்வெஞ்சிலைதனைவாங்கி
யாய்ந்தபொற்பன்றிநெற்றியருந்துகளார்ப்பவெய்தான்.

இ-ள். அவ்வரசரில், விநிதையிலரசன் றனதாகத்தே யெழுதுகொடியைச சாந்தாலேயெழுதிக் காதிலே தோடுங்குழையுமின்ன வில்லைவளையவாங்கிப பன்றிய னெற்றியிலே யம்புபட்டுத் துகளெழ வெய்தானென்க. (அ0)

குடர்தொடர்குருதிக்கோட்டுக்குஞ்சரநரத்தார்கோன்
சுடர்கதிர்ப்பட்டமின்னச்சுரும்பிமிர்கண்ணிசிந்த
வடர்கதிர்ப்பைம்பொற்பூணுமாரமுமகலத்தொல்கப்
படர்சிலைகுழையவாங்கிப்பன்றியைப்பதைப்பவெய்தான.

குடர்தொடர்ந்த குருதிக்கோடு, குஞ்சரமென்றபெயர்க்கு அடை. குஞ்சரநகரம்- அஸ்தினபுரம்.

இ-ள். கோன், மின்னச் சிந்த ஒல்க வில்லை வளையவாங்கிப் பன்றியைத துளங்கவெய்தானென்க.

அடர் - நெருக்கம். (அக)

வார்மதுத்துளிக்குமாலைவாண்முடித்தொடுத்துநாலக்
கார்மதங்கடந்தவண்ணைகக்காம்பிலிக்காவன்மன்ன
னோர்மதக்கேழலெய்வானேறலும்பொறியினேறுண்
டார்மதக்களிற்றுவேந்தர்க்கருகைகையாகவீழ்ந்தான்.

* பத்திராலாபனம் - தான் துன்பமடையாதிருத்தலைச்சொல்லுதல். பத்திராலம்பனமென்றும், பத்திராலேபனமென்றும், வச்சிராலம்பனமென்றும், வச்சிராலே பனமென்றும் பிரதிபேதமுண்டு.

இ - ள். காரினதுசெருக்கைவென்ற கையினையுடைய காம்பிலியின்மன்னன் கேழலையெய்யவேண்டி முடியிற்கட்டி மதுத்துளிக்குமாலைநாலும்படி விசையுடனே சக்கரத்தேயேறினவளவிலே யதன்விசையினாலே யேறுபட்டு வேந்தர்க்கு ஒருநகையாக வீழ்ந்தானென்க. (௮௨)

முலைவட்டப்பூணுமுத்துமுயங்கலிற்கிழிந்துபொல்லா
விலைவட்டத்தாமமார்பிற்கோசலத்திறைவனெய்த
குலைவட்டக்குருதியம்புவானின்மேறபூசலுய்ப்பான்
சிலைவட்டநீங்கிவிண்மேற்செவ்வனேயெழுந்ததன்றே.

முலையிடத்துவளர்ந்தபூணும் முத்தும்படுதலிற் பூக்கிழிந்து பொல்லாதாகியதாமம். இனிப் பொல்லாமுத்தென்று கூட்டித் துளையிடாத நாயகமுத்தென்றுமாம். குலைவட்டம் - அம்பிற்குதை.

இ - ள். கோசலநாட்டினிறையவனெய்தவம்பு, வானிடத்தே பூசலைச்செலுத்துதற்கு வில்லின்வட்டத்தினின்றுநீங்கி நேரே யெழுந்ததென்க. (௮௩)

ஊடியமடந்தைபோலவுறுசிலைவாங்கவாரா
தாடெழுவனையதிண்டோளவந்தியனதனைநோனா
னெடுழுந்தார்ப்பமற்றந்நன்சிலைமுரித்திட்டம்பே
வாடினன்பிடித்துநின்றான்மணமகன்போலநின்றான்.

ஆடு - வெற்றி.

இ - ள். அவந்தியில்வேந்தன் றன்சிலை யூடியமடந்தையைப்போலே வளைக்க வளையாதாக அதனைப்பொறானாய் அச்சிலையை வலியுடனேவாங்கி நாடார்ப்ப முரித்து அம்பையேபிடித்து வாடினனாய்நின்றான்; நின்றவன் மணமகன்போல நின்றானென்க. (௮௪)

மில்கித்தேனொழுகுங்கோதைப்பிறர்மனையாள்கட்சென்ற
வுள்ளத்தையுணர்விண்மிக்கானொழித்திடப்பெயர்ந்ததேபோன்
மல்லனீரமகதராசனெய்தகோன்மருளவோடிப்
புல்லியப்பொறியைமோந்துபுறங்கொடுத்திட்டதன்றே.

இ - ள். பிறர்மனையாளிடத்துச்சென்றநெஞ்சை யறிவான்மிக்கான்மீட்க, அது மீண்டாற்போலே மகததேயத்திலரசனெய்தகோல் கண்டார் இதுபடுமென்றுமருளும்படியோடி அப்பொறியைப்பொருந்தித் தீண்டி மீண்டுபோயிற்றென்க. (௮௫)

தெள்வரைப்பொதியிலாரமகிலொடுதேய்த்ததேய்வை
மன்வரையகலத்தப்பிமணிவடந்திருவில்வீச
மின்னெனவிட்டகோலைவிழுங்கக்கண்டழுங்கிவேர்த்துக்
கன்மலிந்திலங்குதிண்டோட்கலிங்கர்கோன்மெலிந்துமீண்டான்.

இ - ள். கலிங்கத்தினரசன் ஆரம் அகிலொடுதேய்த்த குழம்பையப்பி வடம் மின்னெனவில்லைவீசாநிற்க எய்தகோலைப் பொறி விழுங்கக்கண்டு இரங்கிவேர்த்து மேனிமெலிந்து மீண்டானென்க. (௮௬)

கன்மழைபொற்குன்றேந்திக்கணநிரையன்றுகாத்து
மன்னுயிரின்றுகாக்கும்வாரணவாசிமன்னன்
மின்னிமைசுடரவாங்கிவிட்டகோலுற்றுருதாய்
மன்னுயிர்நடுங்கநாணிமண்புக்குமறைந்ததன்றே.

இ - ள். அன்று கன்மழைக்குக் குன்றையேந்தி நிரையைக்காத்து இன்று உயிரைக்காக்கும் வாரணவாசியின்மன்னனெய்தவம்பு, அதனிடத்தே யழுந்தாணிச் சிறிதுற்று மிகவுருதாய் மக்கள் தம்மேலேவருமென்று நடுங்கும்படி போய் மண்புக்கு மறைந்ததென்க. (௮௭)

எரிகதிர்ப்பைம்பொற்சுண்ணமிலங்கமெய்ம்முழுதுமப்பிப்
புரிகழலணிந்தநோன்றாட்போதனபுரத்துவேந்த
னரிதினிற்றிகிரியேறித்திரிந்துகண்சுழன்றுசோர்ந்து
விரிகதிர்க்கடவுளபோலவெறுநிலத்தொல்ப்பவீழ்ந்தான்.

இ - ள். சுண்ணத்தையப்பிக் கழலையணிந்தகாலையுடைய போதனபுரத்தின் வேந்தன் சக்கரத்திலே யரிதாகவேறி அது கொள்ளிவட்டம்போற்றிரிதலின், அதில் நிற்றலாற்றாதே கண்சுழன்று சோர்ந்து பலரும் ஆரவாரிக்கும்படி ஞாயிறு தன் வட்டத்தினின்றும் நிலத்தேவீழ்ந்தாற்போல வீழ்ந்தானென்க. (௮௮)

மலையச்செஞ்சாந்துமுந்நீர்வலம்புரியீன்றமுத்து
மிலைவைத்தகோதைநல்லார்முலைப்பொறியுமார்ந்து
சிலைவைத்தமார்பிற்றென்னன்றிருமணிப்பன்றிநோக்கித்
தலைவைத்ததம்புந்தானுந்தரணிமேற்பாதம்வைத்தான்.

இ - ள். சாந்தும் முத்தும் முலைத்தழும்புநிறையப்பட்டு மலையை யொப்பாக வைத்த மார்பிற்றென்னனெய்தவம்பும் பன்றியைநோக்கிச் சென்று தலைவைத்தது; தானும் நிற்றலாற்றாது நிலத்திலே காலைவைத்தானென்க. (௮௯)

விற்றிறல்விசயனென்பான்வெங்கணைசெவிட்டிநோக்கி
யொற்றுபுதிருத்திக்கைம்மேலுருட்டுபுநேமிசார்ந்தாங்
குற்றதன்சிலையின்வாய்ப்பெய்துவைபகழிவாங்க
விற்றுவின்முறிந்துபோயிற்றிமைப்பினினிலங்கித்திட்டான்.

இ - ள். விசயன் றன்கணையை யொருக்கடித்துநோக்கி யிடக்கைமேலே யழுக்கித் திருத்தி யுருட்டாநின்று நேமியிலேகுதித்துத் தனக்குற்றவில்லிலேதொடுத்துச் சிறகமைந்த அப்பகழியைவாங்கினுகை, வில் இரண்டாய் முறிந்துபோயிற்று; ஒருகணத்திற் குதித்தானென்க. (௯0)

குண்டலமிலங்கவாங்கிக்குனிசிலையுறையினீக்கிக்
கொண்டவன்கொழும்பொற்றுருமாரமுமிளிரவேறிக்
கண்டுகோனிறையவாங்கிக்காதுறமறிதலோடும்
விண்டுநாணற்றதாங்கேவிசயனும்வீக்கமற்றான்.

இ - ள். அவன் குண்டலமிலங்கும்படி சேமவில்லைவாங்கிக்கொண்டு உறையி னின்றுநீக்கித் தாருமாரமும் பிறழவேறிப் பன்றிமூன்றுங் கூடுங்காலத்தைக்கண்டு கோலைநிறையவாங்குதலாலே, அது காதிலேசெல்லமறிகின்றவள்விலே நாணற்றது; அப்பொழுதே யெய்கின்றகருத்தைக் கைவிட்டு விசயனுந் தன்பெருமைகுறைந்தா னென்க.

விண்டு - விகாரம். சீவகனிடத்தே சற்றலின், எய்தற்குரியனாகியவிவற்கு ஊழ் இங்ஙனஞ் செய்தது (கக)

உளைவனப்பிருந்தபான்றேரொளிமுடிமன்னரெல்லாம்
வளைவனப்பிருந்ததோளாளவருமுலைப்போகம்வேண்டி
விளைதவப்பெருமையோரார்விற்றிறன்மயங்கியாருங்
களைகலார்பொறியையாங்கோராறுநாள்கழிந்தவன்றே.

இ - ள். மன்னர்யாவரும விற்றிறல்விளைத்தற்குக் காரணமான தவத்தின்பெரு மை நமக்கில்லையென்றோராராய்த் தோளாளுடைய முலைப்போகத்தைவிரும்பி யறி வுமுதலியனகலங்குதலிற் பொறியைக்களையாராக, இப்படி ஆறுநாள் சென்றவென்க.

மயங்கி - மயங்க. (கஉ)

வேறு.

பனைக்கையானைமன்னர்பணியப்பைம்பொன்முடிமேற்
கனைக்குஞ்சுரும்பார்மாலைதவழ்ந்துமதுவுந்தேனு
நனைக்குங்கழலோன்சிறுவனுமவெள்வேல்வலவ
னினைக்கலாகாவகையானேராருயிர்மேலெழுந்தான்.

இ - ள். மன்னர்வணங்குதலின், அவர்முடியிற் கனைகுஞ்சுரும்புந் தேனு மார்ந்த மாலையின்மதுத் தவழ்ந்துநனைக்கும் அடியையுடைய சச்சந்தன்புதல்வனாகிய வேல்வெற்றியையுடையவன் அவர்நினைக்கவொண்ணாத வஞ்சனையாலே பகைவருயி னைக் கொள்ள எழுந்தானென்க.

உம்மை மாறுக (கங)

காரின்முழங்குங்களிறுங்கடலின்முழங்குந்தேரும்
போரின்முழங்கும்புரவிக்கடலும்புகைவாட்கடலுஞ்
சீரின்முழங்குமுரசுமலறுஞ்சிறுவெண்சங்கு
நீரின்முழங்கமுழங்குநீலயானையிவர்ந்தான்.

முன்னின்றஇரண்டின்னும், உவமப்பொரு. போரின், இன் - ஏது. சீரின் - சீ ரோடு.

இ - ள். களிறுமுதலியன நீர்மையோடேமுழங்காநிற்கத் தான் கரியயானையை மேற்கொண்டானென்க. (கச)

கல்லார்மணிப்பூண்மார்பிற்காமனிவனேயென்ன
வில்லார்கடலந்தானைவேந்தர்குழாததுட்டோன்றப்
புல்லான்கண்ணிறைக்கிப்புலிகாண்கலையிற்புலம்பி
யொல்லானெல்லானாகியுயிர்போயிருந்தான்மாதோ.

இ - ள். அவ்வியானையின்மேல்வந்த வேலான் வேந்தர் இவனேகாமனென்னும்படி அவர்குழாத்திலேதோற்றினனாக, தானிற்குமுறைமையினிற்கமாட்டாத கட்டியங்காரன் பொருந்தானைத் தான் கண்ணுற்றுநோக்கிப் புலிகாண்கலைபோல் அறிவு முதலியனபோயிருந்தானென்க. (௧௫)

புலியாப்புறுத்திக்கொண்டேன்போக்கிவிட்டபிழைப்பும்
வலியார்திரடோண்மதனன்னிவனைப்பிழைத்தபிழைப்பு
நலியுமென்னைநலியுமென்னாக்களிற்றினுச்சி
யிலையார்கடகத்தடக்கைபுடைத்துமெய்சோர்ந்திருந்தான்.

இ - ள். புலியை யகப்படுத்திக்கொண்டயான் அதனை வாளுருவிவிட்டதப்பும என்னைநலியாநிற்கும்; மதனனாகியவவனை யிவன் றப்பினதப்பும் என்னைநலியாநிற்குமென்றுகூறிக் களிற்றினுச்சியிலே கையைப்புடைத்து அவசமாயிருந்தானென்க.

யாப்புறுத்திக்கொண்டேனென்றது - அநங்கமாலைகூத்திற் சீவகன் றனியே வந்தமை கருதி. (௧௬)

மைபூத்தலர்ந்தமழைக்கணமாமழைமானேர்நோக்கிற்
கொய்பூங்கோதைமடவார்கொற்றங்கொள்கென்றேத்தப்
பெய்பூங்கழலான்வேழத்திழிந்துபிறைபோற்குலாய
செய்பூண்சிலைநாணெறிந்தான்சேரார்நாளுக்கனவே.

மாமழை - இளமை. குலாயசிலை; செய்யப்பட்டசிலை; நாண்பூண்டசிலை.

இ - ள். மையழகுபெற்றலர்ந்த கண்முதலியவற்றையுடைய மடவாரேத்தக் கழலான் இழிந்துநின்று சிலையின் நாணையெறிந்தான்; அப்பொழுதே பகைவர்நாள் உலந்தனவென்க.

பிள்ளைகளையும், அவனையுஞ் சேரக்கோறலிற்சேரா ரென்றார். (௧௭)

வேறு.

கனிபடுமொழியினுடனகாரிகைநகவழ்றவந்து
குனிசிலைதோற்றமன்னர்கொங்குகொப்புளிக்குநீலப்
பனிமலர்க்காடுபோன்றார்படர்சிலைதொடாதவேந்த
ரினிதினின்மலர்ந்தவேரார்தாமரைக்காடுபோன்றார்.

இ - ள். கனிபோலுமொழியினாளது அழகு கேள்வியான்வருத்துதலின், வந்து சிலைதோற்றமன்னர் ஞாயிறுபோன்ற சீவகனைக்கண்டு நீலத்தினெருக்கத்தையொத்தார்; சிலைதொடாதவேந்தர் அவனைக்கண்டு கொங்குகொப்புளிக்குந் தாமரையினெருக்கத்தை யொத்தாரென்க. (௧௮)

போர்த்தகல்விசும்பின்வந்துபொறிதிரிபன்றிமூன்று
நீர்த்தகப்புணர்ந்தபோதினெடுந்தகைமூன்றுமற்றுச்
சூர்த்துடன்வீழநோக்கிச்சுடுசரஞ்சிதறவல்லா
னேர்த்தொன்றேபுணர்ப்பநாடியொருபகல்காறுநின்றான்

போருக்குத் தகுதலையுடைய பன்றி; என்றது ஒன்று இடந்திரிய ஒன்று வலந்திரிகின்ற மாறுபாட்டினை.

இ - ள். நெடுந்தகை பொறியாலே யிசும்பிற்றிரிகின்ற பன்றிமூன்றும்வந்து நீர்மைதகப்புணர்ந்தகாலத்து அவை சேரவற்றுச் சுழன்றுவிழும்படி யோர்த்துப் பல சரத்தைச்சிதறவல்லவன் இப்பொழுதுஅவைமூன்றும் ஒன்ருந்தன்மையேகூடுதற்கு நாடி ஒருமுகூர்த்தத்தளவும நோக்கி நின்ருனென்க.

இவன் குப்புற்று நேமியில் நிற்குங்காலத்து அவையும் ஒன்ருமாதலின், ஒன்றேபுணர்ப்பவென்ருர். (௯௯)

பொறியின்மேலேறலுற்றானாணிற்போதல்செய்யா
னெறியின்வில்லூன்றிநிற்பநிழன்மணிப்பன்றியற்று
மறியுமோவென்றுமுன்னேமணிமுடிசிதறிவீழ்ந்த
செறிகழன்மன்னர்நக்குத்தீயைத்தீவிளைத்துக்கொண்டார்.

இ - ள். திகிரிமேலேறுதலுமறியானைப் போகின் நகுவரென்னுநாணினாற் போதலைச்செய்யானுமாய் வில்லையூன்றிநிற்ப, பன்றி யற்றுவிழுமோவென்றுகூறி, முன்பு வீழ்ந்தமன்னர் நக்குத் தீயைக் கோபத்தை விளைத்துக்கொண்டாரென்க.

நெறியினென்ருர், தொழிற்கேற்ப நின்றநிலைதோன்ற. சிதறி - சிதற. (௧00)

சிரற்றலைமணிகள்வேய்ந்ததிருந்துபொற்றிகிரிசெம்பொ
னுரற்றலையுருவப்பன்றியிடம்வலந்திரியநம்பன்
விரற்றலைப்புட்டில்வீக்கிவெஞ்சிலைகணையோடேந்திக்
குரற்றலைவண்டுபொங்கக்குப்புற்றுநேமிசேர்ந்தான்.

சிச்சிலியின்றலைபோன்ற நிறத்தையுடைய மணிகள்வேய்ந்த உருவப்பன்றி. புட்டில் * விரற்சரடு. குரல் - மயிர்.

இ - ள். திகிரியின்மேலுண்டாகிய உரலிடத்துப் பன்றிகள் இடத்திலும்வலத்திலுந் திரியாநிற்க, நம்பன் வீக்கி யேந்தி வண்டுபொங்கும்படி குதித்து அத்திகிரியைச் சேர்ந்தானென்க. (௧0௧)

ஒள்ளழல்வைரப்பூணுமொளிர்மணிக்குழையுமின்ன
வொள்ளழற்கொள்ளிவட்டம்போற்குலாய்ச்சுழலப்பொன்றா
னொள்ளழனேமிநக்கமண்டலமாகநின்று
னுள்ளழற்பரிதிமேலோர்பரிதிநின்றதனையொத்தான்.

வைரப்பூணும், அழலபோலுமணிக்குழையும், பொன்ருணும் மின்ன நின்ருனென்க.

இ - ள். அழலைநக்கநேமி அவ்வழலையுடைய கொள்ளிவட்டம்போலே சுழலா

* இதனை விரற்சாடென்றுங் கூறுதற்கிடமுண்டு; கைச்சாடென்று சிலபிரதிகளிலுள்ளது. இப்பெயர் இக்காலத்து வழக்கமின்மையால் இதனுருவம் இன்னது தானென்று நிச்சயிக்கக்கூடவில்லை.

நிற்க, அதன்மேலே மண்டலவிருப்பாகநின்றவன் தானிருத்தற்குரிய மண்டலத்தி னுள்ளிராதே அதன்மேலே யொருனாயிறுகின்ற தன்மையையொத்தானென்க.

பரிதி-வட்டம்; * "பரிதி போகிய புடைகிளை கட்டி" என்றாற்போலக்கொள்க.()

அருந்தவக்கிழமைபோலவிருதவில்லறுதநாண்வாய்த்
திருந்தினார்சிந்தைபோலுந்திண்சரஞ்சுருக்கிமாறு
யிருந்தவன்பொறியும்பன்றியியற்றரும்பொறியுமற்றுங்
கொருங்குடனுதிரவெய்தானூழித்தீயுருமோடொப்பான்.

தவக்கிழமை இரண்டிற்குமுவமை. இவ்வுவமைகூறிற்று, விசயனுக்கு அவை இற்றும், அற்றும் போனமைசுருதி. திருந்தினார் - இருடிகள்.

இ - ள். உருமேற்றையுந் தீயையுமொப்பான் தவக்கிழமைபோல இருதவில் வில் அறுதநாண்வாய்த் தொடுத்தசரத்தை வில்லினுள்ளேயாம்படி நிரம்பவளைத்துக் கட்டியங்காரன்நல்வினையும் பன்றியாகியபொறியுஞ் சேரவற்று அவ்விடததேவீழும் படி யெய்தானென்க.

அதனையெய்தவன்றே யஃதனும்படுதலின், உடனென்றார். (௧0௩)

இலங்கெயிற்றேனமேவுண்டிருநிலத்திடித்துவீழக்
கலங்குதெண்டிரையுங்காருங்கலிவளிமுழக்குமோபட
வுலம்புபுமுரசங்கொட்டியொய்யெனச்சேனையார்ப்பக்
குலம்பகர்ந்தறைந்துகோயான்கோவிந்தன்கூறினானே.

இ - ள். அப்பன்றி யங்ஙனமேவுண்டு இடிநதது நிலத்தேவீழ்தலிற சேனை கடன்முதலியவற்றையொப்ப முழங்காநின்று முரசைக்கொட்டி யாராநிற்ப, கோமா னாகியகோவிந்தன் சீவகன்குலத்தைக் கட்டியங்காரனுக்கு முற்படக்கூறிப் பின்பு எல்லாருமறியச் சாற்றினானென்க.

இனிக் குலத்தைப்பகார்ந்து நின்னைக் கொல்வேனென்று வஞ்சினங்கூறினா னென்றுமாம். (௧0௪)

வானிடையொருவன்றோன்றிமழையெனமுழங்கிச்சொல்லுந்
தேனுடையலங்கல்வெள்வேற்சீவகனென்னுஞ்சிங்கங்
கானுடையலங்கன்மாலைக்கட்டியங்காரனென்னும்
வேன்மிடைசோலைவேழத்தினுயிர்விழுங்குமென்றான்.

இ - ள். வானிடத்தேதோன்றிச் சொல்லுமொருவன் சீவகனென்னுஞ்சிங்கம் வேலாகியசோலையில்நிற்கின்ற கட்டியங்காரனென்னும் வேழத்தினுயிரை விழுங்கு மென்று கூறினானென்க.

ஒருவன் - இயக்கன். (௧0௫)

வேறு.

விஞ்சையர்வெம்படைகொண்டுவந்தாயென
வஞ்சுவலோவறியாயெனதாழ்மலே

* பதிற்றுப்பத்து, எட்டாம்பத்து, ௪.

வெஞ்சமமாக்கிடின்வீக்கமறுத்துன்னொடு
வஞ்சனைவஞ்சமறுத்திடுகென்றான்.

இ-ள். விஞ்சையர்படையைக் கொண்டுவந்தாயென்று யான்அஞ்சுவேனோ? எனதாற்றலை நின்றந்தையறிவன்; நீயறியாய்; இனி யாம் போர்செய்திட்டால் நின்னையும், என்னைக் களவாற் கொலைசூழ்ந்த கோவிந்தனையும், அக்களவைத்தீர்த்து வீக்கமறுத்திடுவேனென்றானென்க.

வீக்கம் - பெருமை. (௧௦௬)

சூரியற்காண்டலுஞ்சூரியகாந்தமங்
காரழலெங்ஙனங்கான்றிடுமங்ஙனம்
பேரிசையாளிசைகேட்டலும்பெய்ம்முகிற்
காரிடிபோன்மதனன்கனன்றிட்டான்.

இ-ள். சூரியகாந்தமாகியவது சூரியனைக்கண்டவளவிலே யழலை எங்ஙனம் காலும்? அதுபோல மதனன் சிவகன்வெற்றியைக் கேட்டவளவிலே கார்காலத்தின் முகிலிடிபோலக் கோபித்தானென்க. (௧௦௭)

காற்படையுங்களிறுங்கலிமாவொடு
நூற்படுதேருநொடிப்பினிறபண்ணி
நாற்படையுந்தொகுத்தான்மக்களைச்சிலை
வேற்படைவீரரொர்நூற்றுவர்தொக்கார்.

இ-ள். கட்டியங்காரன் காலாளாகியபடையுங் களிறும் மாவும் நூல்வழிப் பட்டதேருமாகிய நால்வகைப்படையையும் ஒருகணத்திற்சமைத்துத் தொகுத்தான்; தொகுத்தவளவிலே வேற்படைவீரராகிய அவன்மக்கள் நூற்றுவருந் தொக்காரென்க. (௧௦௮)

நஞ்சுதோய்த்த அலகையுடைய வேல்.

விற்றிறலான்வெய்யதானையும்வீங்குபு
செற்றெழுந்தான்படையுஞ்சினமொய்ம்பொடு
மற்றவர்மணடியவாளமர்நூட்பினு
ளுற்றவர்க்குற்றதெலாமுரைக்குற்றேன்.

இ-ள். சிவகன்றானையும், கட்டியங்காரன்படையும், அவர்தாங்களுமுற்று, மொய்ம்பொடு மிக்குச் சென்ற வாட்போராகியபோரிலே, அவர்கட்குற்ற செய்திக ளெல்லாம் உரைக்கலுற்றேனென்றாரென்க.

உற்றதெல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். (௧௦௯)

வேறு.

அத்தமாமணிவரையனையதோன்றல
யத்தகத்தருவியின்மணநதவோடைய
முத்துடைமருப்பினமுனைக்கண்போழ்வன
பத்தியிற்பண்ணினபருமயானையே.

இ-ள். அத்தகிரியை யொத்த தோன்றல; அதனருவிபோன் மத்தகத்தே மணந்த நுடைய; மருப்பின; பகைப்புலத்தை யவரெதிர்ந்தவிடத்தே கொல்வன வாகிய பருமயானைகள் அணிகளிலே சமைந்தனவென்க. (கக௦)

கோல்பொருகொடுஞ்சிலைகுருதிவெம்படை
மேல்வரடக்குபுவேழமேறலின்
மாவிருவிசும்பிடைமணந்தவொண்கொடி
கால்பொருகதலிகைக்கானமொத்தவே.

இ-ள். மேலாட்கள் வில்லையும், ஒழிந்தபடைகளையும் வேழங்களின்மேலே யடக்கி அவற்றையேறலின், எடுத்தகொடி காற்றடித்துஇலைகிழிந்த கதலிகைக் காட்டையொத்தனவென்க. (ககக)

க. குடையுடைநிழலினகோலமார்ந்தன
கிடுகுடைக்காப்பினகிளர்பொற்பீடிகை
யடிதொடைக்சமைந்தனவாவத்தேர்த்தொகை
வடிவுடைத்துகின்முடிவலவர்பண்ணினார். (ககஉ)

உ. கொய்யுளைப்புரவிகள்கொளீஇயதிண்ணுகம்
பெய்கயிறமைவரப்பிணித்துமுள்ளுறீஇச்
செய்கயிறுய்ந்தனசிலையுமல்லவுங்
கையமைத்திளைஞருங்கருவிவீசினார்

இவையிரண்டுமொருதொடர்.

இ-ள். மேலேநாட்டின குடையினுடைய நிழலின, அம்புபடாதபடி நாற்றின கிடுகுடைத்தாகிய * காப்பின; பொற்றட்டுக் கோலமார்ந்தன, எய்யுங்காலத்து அடிவைத்துநிற்றற்கும், எய்தற்றொழிற்குமமைந்தனவாகிய தேர்த்திரளிலே தலைக்கட்டினையுடையபாகர் புரவிகளைப்பூட்டின நுகத்திற்பெய்தகயிற்றைத் தேருடனேபிணித்துப் பண்ணினார்; பண்ணினபின்னர் அவை முள்ளுறுத்திய வாய்க்கயிறும் ஆய்ந்து பிடிக்கப்பட்டன; அப்பொழுது தேர்வீரரும் வில்லையும், ஒழிந்தபடைகளையுங் கையிலேயமைத்துக் கவசத்தையணிந்தாரென்க. (ககங)

க. பறந்தியமருக்கினபரவைநாட்டினுட
கறங்கெனத்திரிவனகவரிநெற்றிய
பிறந்துழியறிகெனப்பெரியநூலவர்
குறங்கெழுத்துடையனகுதிரையென்பவே. (ககச)

உ. கொன்னுனைக்குந்தமுஞ்சிலையுங்கூர்நுதி
மின்னிலைவாளொடுமிலேச்சரேறலும்
பொன்னரிப்புட்டிலுந்தாரும்பொங்குபு
முன்னுளைத்தாத்தெழப்புரவியொய்த்தவே.

இவையிரண்டுமொருதொடர்.

* இதனை ரதகுப்தியென்றும், வரூதமென்றுங் கூறுவர் வடநூலார்.

இ - ள். பறந்துசெல்லுஞ்செலவிலே தருக்கின; பரத்தலையுடைய போரிலே திரிவன; நெற்றிய; நூலவர் பிறந்தவிடமறிகவென்று குறங்கிலேயெழுதின எழுத்தையுடையனவாகிய குதிரைகளை மேலாளாகிய மிலேச்சர் குந்தத்தோடும் வாளோடும் வில்லோடுமேறலின், அப்புரவிகள் கெச்சையுந் தாருமார்ப்ப மொய்த்தனவென்க.

என்ப - அசை. (௧௧௫)

மாலையுங்கண்ணியுமணந்தசென்னிய
ராலுபுசெறிகழலார்க்குங்காலினர்
பாலிகையிடையறப்பிடித்தபாணியர்
சாலிகையுடம்பினர்தறுகணாளரே.

இ - ள். தறுகணாளர் ஆலுபு சென்னியர், காலினர், * வாள்முட்டி யிடையறம்படிபிடித்த கையினர், கவசமணிந்த வுடம்பினராயிருந்தாரென்க.

இவர் காலாட்கள். (௧௧௬)

போர்மயிர்க்கேடகம்புளகத்தோற்பரம்
வார்மயிர்க்கிடுகொடுவள்ளித்தண்டையு
நேர்மரப்பலகையுநிரைத்ததானையோர்
போர்முகப்புலிக்கடல்புகுந்தொத்ததே.

இ - ள். மயிர்போர்த்த பரிசையையும், கண்ணடிதைத்தகடகினையும், மயிர்க்கிடுகினையும், பிரப்பங்கொடியாற்பண்ணின பரிசையினையும், வலியபலகையினையும் நிரைத்த அக்காலாளாகியபடை புலிக்கடல்புகுந்ததன்மையை யொத்ததென்க.

பரந்ததூஉம் பாடம். (௧௧௭)

வேறு.

பாரகனைமதத்தபல்பேய்பருகதொடுபரவச்செல்லும்
போர்மதக்களிறுபொற்றேர்நான்கனைக்கச்சமாகு
மோமணிப்புரவியேழாமிலக்கமேழ்தேவகோடி
கூரமலிகடலங்காலாள்கற்பகத்தாரினாற்கே.

இ - ள். சீவகற்குப் பேயும்பருந்தும் பரவச்செல்லும் மதத்தவாகிய களிறுந் தேரும் ஒரோவொன்று நான்கனைக்கச்சமாகும்; புரவி எழுநூறுயிரமாம்; காலாள் எழுதேவகோடியாமென்க. (௧௧௮)

நிழன்மணிப்புரவித்திண்டேர்நிழறுமிழாய்க்குனிந்துகுத்து
மழறிகழ்கதத்தயானையைந்தனைக்கச்சமாகு
மெழின்மணிப்புரவியேழாமிலக்கமேழ்தேவகோடி
கழன்மலிந்திலங்குங்காலாள்கட்டியங்காரற்கன்றே.

இ - ள். கட்டியங்காரற்குத் தேரும்யானையும் ஒரோவொன்று ஐந்தனைக்கச்சமாம்; புரவி யெழுநூறுயிரமாம்; காலாள் எழுதேவகோடியாமென்க. (௧௧௯)

* வாள்முட்டி - சத்திப்பிடி.

வேறு.

குலங்கெழுமகளிர்தங்கோலநீப்பவு
மலங்குளைப்புரவியுங்களிறுமாளவு
நிலமகணெஞ்சுகைகையெறிந்துநையவும்
புலமகன்சீறினன்புகைந்ததெஃகமே.

இ - ள். மகளிர் கோலத்தைக்கைவிடவும், புரவியுங் களிறும்படவும், தன் கணவராகிய மன்னர்படுதலின், நிலமகள் நெஞ்சிலே கையாலே யடித்துக்கொண்டு வருந்தவும், சீவகன் சீறினன்; அவனெஃகமும புகைந்ததென்க.

புலமகனென்றார், ஓர்யாண்டுஞ்சென்றுசீறலின். * "நிலமக ளழுத காஞ்சியும்" என்றார்புறத்திலும். (௧௨0)

குணில்பொரக்குளிறினமுரசம்வெள்வளை
பணைபரந்தார்த்தனபம்பைவெம்பின
விணையிலவெழுந்ததாழ்பீலியெங்கணு
முணையினாற்கடலகழ்முழக்கமொத்தவே.

இ - ள். பெருங்கடிப்பெறிதலின் முரசம் முழங்கின; வளையும்பணையும் பரந்தார்த்தன; பம்பை யொலித்தன; சிறுசின்னங் தமக்கொப்பின்றியேயெழுந்தன. இவ்வோசைகளின்மிகுதியாலே எவ்விடத்தொலியுங் கடலிடத்துமுழக்கையொத்தன வென்க.

பணை - முரசின்விசேடம பம்பை - ஒருவாச்சியவிசேடம. (௧௨௧)

முடிமனரெழுதருபரிதிமொய்களி
றுடைதிரைமாக்கலமொளிறுவாட்படை
யடுதிறலெறிசுறவாகக்காய்ந்தன
கடலிரண்டெதிர்ந்ததோர்காலமொத்ததே.

இ - ள். மன்னர் பரிதியாகக் களிறு திரையாகக் குதிரை மரக்கலமாக வாட்படை சுறவாகத் தம்மிற்காய்ந்தனவாகிய விரண்டுகடல் போர்செய்தற்கெதிர்ந்ததொரு காலமுண்டாகில் அதனை யொத்தது இக்காலமென்க (௧௨௨)

அருங்கணையடக்கியவாவநாழிகை
பெரும்புறத்தலமரப்பிணித்தகச்சினர்
கருங்கழலாடவர்கருவிவாய்க்கொளீஇச்
சொரிந்தனர்கணைமழைவிசும்புதூர்ந்ததே.

இ - ள். கொடிய கழலையுடையவீரர் கட்டினகச்சினராய் அம்பறாத்தூணி தம் முதுகிலேயசையும்படி வில்லிடத்தே யம்பைத்தொடுத்து அதனைச்சொரிந்தார்; அப்பொழுது விசும்பு தூர்ந்ததென்க.

தூணியைப்பிணித்த கச்சுமாம். (௧௨௩)

* புறநானூறு, ௩௬௫: முன்னோர் செல்லவுஞ் செல்லா தின்னும் - விலங்கலப் பெண்டிரிற் பலர்மீக் கூற - வுளனென வழியா யானெனப் பன்மா - ணிலமக ளழுத காஞ்சியு - முண்டென வுரைப்பரா லுணர்ந்திசி னோரே.

நிணம்பிறங்ககலமுந்தோளுநெற்றியு
மணங்கருஞ்சரங்களினழுத்தியையென
மணங்கமழ்வருபுனன்மறலுமாந்தரிற்
பிணங்கமர்மலைந்தனர்பெற்றியின்னதே.

இ - ள். சரங்களான் வருத்துதற்கரிய மார்புமுதலியவற்றிலே யச்சரங்களைய ழுத்துதலிற் பெருகினகுருதியிலே நின்று புதுப்புனலிற் போர்செய்யுமாந்தரைப்போ லே பிணங்குகின்ற அமரை மேற்கொண்டவாறன்மை யின்னதென்க.

அது மேற்கூறுகின்றார். (கஉச)

கழித்தனர் கனைவாள்புகைந்துகண்கடை
விழித்தனதீந்தனவிமைகள்கூற்றெனத்
தெழித்தனர்திறந்தனரகலமின்னுயி
ரழித்தனரயிலொளியரவமிக்கதே.

இ - ள். அவர் கூற்றுப்போலே கோபித்தார், கோபித்தலிற் கண்கள்தீப்போல விழித்தன; அதனால் இமைகடீந்தன, அக்கோபத்தை முடித்தற்கு வாள்புகைந்து கனலும்படி யுறைகழித்தார்; கழித்து அகலத்தைத்திறந்தார்; திறந்து உயிரைப்போக் கினார்; அதன்பின்பு வேலாற்பொருகின்றவா போரரவமிக்கதென்க. (கஉரு)

பொருங்களத்தடவர்பொருவில்பைந்தலை
யரும்பெறற்கணணியோடற்றுவீழ்வன
கருங்கனிப்பெண்ணையங்கானங்கால்பொர
விருங்கனிசொரிவனபோன்றவென்பவே

இ - ள். தும்பைமாலையோடும் பொருமாடவர் செவ்வித்தலைகளற்றுக் களத்தே வீழ்கின்றவை கனியையுடைய பனங்காடு காற்றடித்தலின், அப்பழத்தைச்சொரிவ னபோன்றனவென்க. (கஉசு)

இது முதற்கூறிய அம்பாலும், வாளாலுந் தலைகளற்றதற்குவமை.

பணைமுனிந்தாலுவபைம்பொற்றாரின
கணைவிசைதவிர்ப்பனகவரிநெற்றிய
துணையமையிளமையதோற்றமிக்கன
விணைமயிர்ப்புரவியோடிவுளியேற்றவே.

இ - ள் பந்தியினிற்றலை வெறுத்து ஆலுவன; தாரின; தவிர்ப்பன; நெற்றி யன; போரிற்குதவியாயமைந்த இளமையன; வடிவுமிக்கனவாகிய புரவியும் புரவியுந் தம்மிற் போரைத்தொடங்கினவென்க. (கஉஎ)

கூருளிமுகம்பொரக்குழிசிமாண்டன
வாரொளியமைந்தனவாய்பொற்சூட்டின
காரொளிமின்னுமிழ்தகையகாலியற்
றேரொடுதேர்தமுட்சிறந்துசேர்ந்தவே.

இ - ள். உளிவாயாற்றுளைபடுதலின், நடுவுநிற்குங்குறடு மாண்டன; அதனிற்

றைத்த ஆரமைந்தன; சூட்டின; காரின் மின்னொளியைக் காலும் தகைமையனவாகிய உருவையாற்செல்லுதலை யுடைய தேருந்தேருந் தம்மின்மிக்குப் போரைத்தொடங்கினவென்க. (கஉஅ)

அஞ்சனமெழுதினகவளமார்ந்தன
குஞ்சரங்கூற்றொடுகொம்மைகொட்டுவ
வஞ்சனவரைசிறகுடையபோல்வன
மஞ்சிவர்குன்றெனமலைந்தவேழமே.

இ - ள். எழுதப்பட்டன; ஆர்ந்தன; கூற்றை நன்குமதித்துக் கொமமைகொட்டுவன; ஓடுகின்றவிசையாற் பறக்கின்ற மலையையொப்பனவாகிய குஞ்சரமும்வேழமுங் குன்றுகள் மலைந்தவென்ன மலைந்தவென்க.

மஞ்சு - கொடிக்குவமை. (கஉகூ)

மாக்கடற்பெருங்கலங்காலின்மாறுபட்
டாக்கியகயிறறுந்தோடியெங்கணும்
போக்கறப்பொருவனபோன்றுதீப்படத்
தாக்கினவரசுவாத்தம்முளென்பவே.

இ - ள். பெருங்கலங்கள் நங்கூரத்திற்கட்டியகயிறு காற்றாலற்று எவ்விடத்தினும் போக்கறவோடி மாறுபட்டுப் பொருவனபோலே, அரசரேறியயானைகள் கோடுங்கோடுஞ் சந்தித்துத் தீப்பிறக்கும்படி தம்மிற்பொருதனவென்க. (கஙo)

விடுசரம்விசும்பிடைமிடைந்துவெய்யவன்
படுகதிர்மறைந்திருள்பரந்ததாயிடை
யடுகதிரயிலொளியரசர்மாமுடி
விடுகதிர்மணியொளிவெயிலிற்காய்ந்தவே.

இ - ள். சரம் விசும்பிடத்தே நெருங்குதலின், வெய்யவன்கதிர்கள் மறைந்து இருள்பரந்தது; அப்பொழுது அவ்விருளைப் படைக்கலங்களினொளியும் மணியொளியும் வெயில் கெடுக்குமாறுபோலக் கெடுத்தனவென்க. (கஙக)

பூண்குலாம்வனமுலைப்பூமிதேவிதான்
காண்கலேன்கடியனகண்ணினாலெனாச்
சேணகுலாங்கம்பலஞ்செய்யதொன்றினான்
மாண்குலாங்குணத்தினான்மறைந்திட்டாளரோ.

இ - ள். மண்மகடான் றனது நற்குணத்தாலே யிங்ஙனங் கடியமறங்களை யென்கண்ணாற் காணமாட்டேனென்று கருதிப் பெரிய நிலமெல்லாம் பரந்த உதிரமென்கின்ற செய்யதொரு படத்தாலே மறைந்தாளென்க.

குணத்தினாளும் பாடம். (கஙஉ)

வேறு.

கலைக்கோட்டவகலல்குற்கணங்குழையார்கதிர்மணிப்பூண்
முலைக்கோட்டாலுழப்பட்டமொய்ம்மலர்த்தாரகன்மார்பர்

மலைக்கோட்டு வெழில்வேழந் தவநூறி மதயானைக்
கொலைக்கோட்டா லுழப்பட்டுக் குருதியுட் குளித்தனரே.

கலையையுடைய வல்குல். கோடு - பக்கம்.

இ-ள். கோட்டவாகிய வல்குலையுடைய மகளிர் முலைக்கோட்டாலுழப்பட்ட மார்பர் இப்பொழுது மலைக்குவட்டின்றன்மையை யுடையவாகிய வேழத்தைநூறி அதன்கோட்டாலுழப்பட்டுக் குருதியுள்ளே குளித்தாரென்க. (௧௱௩)

மணமாலைமடநல்லார் தமெல்விரலாற்றொடுத்தணிந்த
வணமாலையிருங்குஞ்சி யரங்குருதிப்புனலலைப்ப
நிணமாலைக்குடர்சூடி நெருப்பிமையாநெய்த்தோரிற்
பிணமாலைப்பேய்மகட்குப் பெருவிருந்தயர்ந்தனரே.

ஈர்க்குங் குருதி - விகாரம்

இ-ள். மணஞ்செய்தமயலையுடைய மகளிரணிந்த மாலையையுடைய குஞ்சியை இழுத்தோடுங் குருதிநீர் அலைப்ப, அந்நெய்த்தோரிலே நெருப்புப்போல விழித்துக்கிடந்து நிணவொழுங்கையுடைய குடரைச்சூடிப் பிணத்தைத்தின்னுமியல்பையுடைய பேய்க்குத் தம்மை விருந்துசெய்தாரென்க (௧௱௪)

தோலாப்போர்மறமன்னர் தொடித்தோள்களெடுத்தோச்சி
மேலாண்மேனெருப்புமிழ்ந்து மின்னிலங்குமயில்வாளாற்
காலாசோடறவெறிந்த கனைகழற்காலலைகடலு
ணீலநீர்ச்சுறவினம்போ னெய்த்தோருட்பிறழ்ந்தனவே.

இ-ள். மன்னர்தோளையுயர்த்து வாளாலேயோச்சி மேலாண்மேல் வெட்டுகின்றகாலத்துச் * சந்நாகத்தோடேயறும்படி வெட்டப்பட்டகழற்கால், கடலினீரிலே நீலச்சுறவினம் பிறழ்ந்தாற்போலே குருதியிலே பிறழ்ந்தனவென்க. (௧௱௫)

கருவிப்புளினங்கழிந்து கணைமொய்ப்பக்கதஞ்சிறந்து
குருவிசேர்வரைபோன்ற குஞ்சரங்கொடியணிந்த
வுருவத்தேரிறமுருக்கி யுருணேமிசுமந்தெழுந்து
பரிதிசேர்வரைபோலப் பகட்டினம்பரந்தனவே.

இ-ள். பலகாரத்தினூடேபோய்க் கணைகள்மொய்த்தலிற் சிலகுஞ்சரங்கள் நினைவுபோய்க் குருவிசேர்ந்த வரைபோன்றன; சிலபகட்டினம் பரிதியெழுந்துசேர்ந்த வரைபோலே கதஞ்சிறந்து முருக்கித் தேருருளையைச்சுமந்து பரந்தனவென்க.

இறமுருக்கி - பொடியாகமுரித்து. (௧௱௬)

மாலைவாய்நெடுங்குடைமேன் மதயானைக்கைதுணிந்து
கோலநீள்கொழுங்குருதி கொளவீழ்ந்துகிடந்தன
மேலைநீள்விசும்புறையும் வெண்மதியம்விசும்பிழுக்கி
நீலமாசுணத்தோடு நிலத்திழிந்ததொத்தனவே.

* ஸந்நாஹம் - கவசம்.

என

இ - ள். யானையின்கோலங் குருதியைக்கொள்ளும்படி கைகளற்றுக் குடைமேலே வீழ்ந்துகிடந்தவை, முன்பு விசும்பிலேயுறையுமதியம் அதனைத்தப்பிக் கரும்பாம்போடே நிலத்தே வீழ்ந்ததன்மையை யொத்தனவென்க.

மேலை; ஐ - அசை. (௧௩௭)

அஞ்சனநிறநீக்கியரத்தம்போர்த்தமருழக்கி
யிங்குலிகவிறுவரைபோன்றினக்களிறிடைமிடைந்த
குஞ்சரங்களபாய்ந்திடலிற்குமிழ்விட்டுமிழ்குருதி
யிங்குலிகவருவிபோன்றெவ்வாயுந்தோன்றினவே.

இ - ள். முற்படவே யஞ்சனநிறத்தைப்போக்கி அரத்தத்தைப்பூசதலிற் சாதிலிங்கத்தையுடைய பெரியவரையையொத்து மிடைந்துகிடந்த இனக்களிறுகள், அமரையுழக்கிச்சென்று பகைவர்யானைகளைப்பாய்தலின், உமிழ்குருதி சாதிலிங்கவருவி போலே யெங்குந்தோன்றினவென்க. (௧௩௮)

குஞ்சரந்தலையடுத்துக்கூந்தன்மார்காலணையாச்
செஞ்சோற்றுக்கடனீங்கிச்சினவுவாளபிடித்துடுத்த
பஞ்சிமேற்கிடந்துடைஞாண்பதைத்திலங்கக்கிடந்தாரை
யஞ்சிப்போந்தினநரியோடோரிநின்றலறுமே.

நீங்கி - நீங்க. பஞ்சி - ஆகுபெயர்.

இ - ள். குஞ்சரத்தைத் தலையணையாகவடுத்து மாதைக் காலணையாகவடுத்து வாளைப்பிடித்து உடுத்ததுகிலின்மேலே யல்லிக்கயிறுகிடாது துளங்கியிலங்கச் செஞ்சோற்றுக்கடன் நீங்கும்படி பட்டுக்கிடந்தவரை யஞ்சிக் குதித்துப்போய்நின்று இனநரியும் ஓரியும் அலறுமென்க. (௧௩௯)

காதலார்க்கமிர்தீந்தகடற்பவளக்கடிகைவா
யேதிலாப்புள்ளுண்ணக்கொடேமென்றுவாய்மடித்துக
காதணிந்தபொற்றோடுங்குண்டலமுநகக்கா
வீதைந்தவரைமார்பர்விஞ்சையர்போற்கிடந்தனரே.

ஏது - காரணம்.

இ - ள். வரைமார்பர் தம்மனைவியர்க்கு அமிர்தீந்தவாயை யவ்வமிர்தையுண்டற்குக் காரணமில்லாத பறவைகளுண்ணக் கொடேமென்றாற்போல வாயைமடித்து, தோடுங்குண்டலமும் நகத் தாமுநகக் கிடந்தாரென்க.

உயிர் போகாதாரைப்போற கிடத்தலின், விஞ்சையர்போலென்றார். (௧௪0)

குடர்வாங்குகுறுநரிகள்கொழுநிணப்புலாற்சேற்றுட்
டொடர்வாங்குநாய்போற்றோன்றினதொடித்திண்டோள்
படர்தீரக்கொண்டெழுந்தபறவைகள்படநாக
முடனேகொண்டெழுகின்றவுவணப்புள்ளொத்தனவே.

இ - ள். புலால்நாற்றத்தையுடைய நிணச்சேற்றிலேநின்று குடைவாங்குநரிகள் சங்கிலியை வலிக்கும் நாய்போற்றோன்றின; இனைதேருநினைவுதீரத் தோளைக்கொண்டெழுந்தபறவைகள் படநாகத்தைக் கொண்டெழுகின்ற கருடனையொத்தனவென்க. (கசக)

வரையோடுமுருமிடிப்பவளையெயிற்றுக்கொழுங்குருதி
நிரையுளையரிநன்மாநிலமிசைப்புரள்வனபோற்
புரையறுபொன்மணியோடைப்பொடிப்பொங்கப்பொருதழிந்
தரைசோடுமரசுவாவுகளத்துளாழ்ந்தனவே.

இ - ள். எயிற்றினையும் உளையினையுமுடைய அரியாகியமா உருமேறிடித்தலின், வரைகளோடேவீழ்ந்து குருதியையுடையநிலத்தே புரள்வனபோல அரசுகள் அரசுவாக்களோடே களத்தேவீழ்ந்து புரண்டனவென்க

புரையறுமணி - குற்றங்கெட்டமணி பொன்னோடையின்மணி பொடியாய்ப்பொங்கும்படி பொருதலின், அழிந்தாழ்ந்தனவென்க. (கசஉ)

நடம்பெருங்குவளை கட்டாழ்குழலார்சாந்தணிந்து
வடந்திளைப்பப்புல்லியவரைமார்பம்வாள்புல்ல
நடந்தொழுகுகுருதியுள்கிடந்தவெரிமணிப்பூ
ணிடம்படுசெவ்வானத்திளம்பிறைபோற்றோன்றினவே.

இ - ள். மகளிர் சாந்தோடணிந்து எரிகின்ற மணிவடந்திளைப்பப் புல்லியமார்பை வாள்புல்லுதலின், நடந்துபோகின்றகுருதியிலே விளங்கிக்கிடந்த முத்துவடம் செக்கர்வானிற் பிறைபோற்றோன்றினவென்க

இத்துணையும் தூசிப்படைக்கும்பொது. (கசங)

வேறு.

காளமாகிருளைப்போழ்ந்துகதிர்சொரிகடவுட்டிங்கள்
கோளராவிழுங்கமுந்நீர்க்கொழுந்திரைக்குளித்ததேபோ
னீளமருழக்கியானைநெற்றிமேற்றத்திவெய்ய
வாளின்வாய்மதனன்பட்டான்விசயன்போர்விசயம்பெற்றான்.

இதுமுதலாகப் பிரித்துக்கூறுகின்றார்.

இ - ள். கருமைமேன்மேலும் பெருகாநின்ற இருளைக்கெடுத்துக் கதிரையீன்ற திங்கள் பாம்புவிழுங்குதலின், உயரப்போய்ப் பின்பு கடலிலேயழுந்தியதோர்தன்மைபோலே, மதனன் அமரையுழக்கி விசயனதுயானைநெற்றியிலேபாய்ந்து அவன்வாளின்வாயிலே பட்டுப் படைக்குள்ளே வீழ்ந்தான்; விசயனும் போரிலே வெற்றியைப் பெற்றானென்க. (கசச)

மன்மதனென்னுங்காளைமணியொளிப்புரவித்தேர்மேல்
மின்மழைசொரிந்துகூற்றிற்றெழித்தனன்மலைப்பெய்தார்ப்பக்

கொன்மலிமார்பன்பொற்றேர்கொடுஞ்சிலையறுப்பச்சீறிப்
பொன்வரைப்புலியிற்பாய்ந்துபூமிமேற்றோன்றினானே.

இ - ள். அவன்றம்பி மன்மதனென்னுங்காளை விசயனைத்தலைப்பெய்து தேர்மேலேநின்று வில்லாலே மழையைச்சொரிந்து தெழித்தனனாயார்ப்ப, அவ்விசயன் தேரிற்கயிற்றையும், வில்லையுமறுப்ப, அவன்சீறி வரையினின்றும்பாயும் புலிபோலே நிலத்திலேபாய்ந்து தோன்றினானென்க. (௧௪௫)

நெற்றிமேற்கோல்களைமூன்றுநெருப்புமிழ்ந்தழுந்தவெய்யச்
சுற்றுமாலைபோலத்தோன்றநன்னுதலிற்சூடிப்
பொற்றேர்பவளந்தன்மேற்புனைமணியழுத்தியாங்குச்
செற்றெயிறழுந்தச்செவ்வாய்கவ்விவாளுருவினானே.

இ - ள். அங்ஙனந்தோன்றின மன்மதன்நெற்றியை மாலைபோலே சூழ்ந்து சென்று அந்நெற்றியிலேயழுந்தும்படி விசயன் மூன்றம்பையெய்தானாக, அவன்அவற்றை மாலைபோலே தன்னுதலிலேசூடிக் கோபித்துப் பவளத்தின்மேலே முத்தையழுத்தினாற்போலச் செவ்வாயிலேயெயிறழுந்தும்படி வாயையமடித்து வாளையுருவினானென்க.

பொற்றது - பொலிவுபெற்றது. (௧௪௬)

தோளினாலெஃகமேந்தித்தும்பிமேல்வரக்கையா
னீளமாப்புடைப்பப்பொங்கிநிலத்தவன்கவிழ்ந்துவீழக்
கீளிரண்டாகக்குத்திஎடுத்திடக்கிளர்பொன்மாமன்
வாளினாற்றிருகிவீசிமருப்பின்மேற்றுஞ்சினானே

தும்பி - யானை.

இ - ள். அந்தயானையவன் கையாலேயேந்தி விசயனேறியிருந்த யானையின்மேலேபொங்கிச் சென்றானாக, அவ்வியானையவன்றூரிய[illegible]ம்படி தன்கையிற் றணடாலடிக்கையில் அவன்கவிழ்ந்து நிலத்தேவீழ, அவ்வியானைசென்று அவனையிரண்டு கூறாகக்குத்திக் கொம்பிலேயெடுப்ப, அப்போது உணர்ச்சியுண்மையின், உடம்புதிறிது திருகி வாளாலேவெட்டி யக்கொம்பிலேபட்டானென்க.

இத்துணையும் மதனனும், மன்மதனும் விசயனோடுபொருது பட்டபடி கூறிற்று.(

நனைகலந்திழியும்பைந்தார்நான்மறையாளன்பையப்பொற்
புனைகலக்குப்பையொப்பான்புத்திமாசேனன்பொங்கி
வனைகலத்திகிரித்தேர்மேன்மன்னனைக்குறுகிக்கொண்டான்
கனையெரியழலம்பெய்தகண்ணுதன்மூர்த்தியொத்தான்.

நனைகலந்திழியும் பைந்தார் - அரும்புகள் இடையிலேகலக்கப்பட்டு அலர்ந்தவற்றிற் றேனிழியுந்தார். நனை - தேனுமாம். மா - அசை. எரிகிற அழலாகியவம்பு.

இ - ள். அந்தணன், பொன்னிறத்தையொப்பான், புத்திசேனன், அவன்

பொங்கித் திகிரிபோலேவட்டம்வருந்தேரில் அரசனைவெற்றிகொண்டான்; அப்பொழுது அவன் றிரிபுரமெரித்த இறைவனை யொத்தானென்க. (கசஅ)

சண்பகப்பூங்குன்றொப்பான்றேவதத்தன்வெய்தா
விண்புகவுயிரைப்பெயவாய்வீழ்தருகடாத்தவேழ
மண்பகவிடிக்குஞ்சிங்கமெனக்கடாய்மகதர்கோமான்
றெண்கடற்றானையோடுநாணிவேல்செறித்திட்டானே.

இ - ள். பொன்னணிந்தலிற சண்பகம்பூத்த மலையையொப்பானாகிய தேவதத்தன் பலவுயிரையும் வருந்தாமல் விண்ணிலேபுகும்படி செலுத்தவேண்டி வேழத்தின்மேலே சிங்கமெனவிருந்து அதனை மகதர்கோன்மேலே வெய்தாகச் செலுத்தி அவன் றானையோடலின், நாணி மீண்டானென்க. (கசகூ)

சின்னப்பூவணிந்தகுஞ்சிச்சீதத்தன்சினவுபொன்வாண்
மன்னருட்கலிங்கர்கோமான்மத்தகத்திறுப்பமன்னன்
பொன்னவிர்குழையும்பூணுமாரமுஞ்சுடரவீழ்வான்
மின்னவிர்பரிதிமாநீர்க்கோளொடும்வீழ்வதொத்தான்.

சின்னப்பூ - விடுபூ.

இ - ள். சினவுமன்னரிற் கலிங்கர்கோமான்றலையிலே ஸ்ரீதத்தன் வாள் தங்கிற்றாக, அவன் குழைமுதலியன சுடரப் படைநடுவேவீழ்கின்றவன், பரிதி கோளுடனே கடலில்வீழ்வதனை யொத்தானென்க.

கோளிருக்குக் குழைமுதலியன வுவமம். (கருo)

கொடுஞ்சிலையுழவன்மான்றேர்க்கோவிந்தனென்னுஞ்சிங்க
மடங்கருஞ்சீற்றத்துப்பின்மாரட்டனென்னும்பொற்குன்
றிடந்துபொற்றூளிபொங்கக்களிற்றொடுமிறங்கிவீழ
வடர்ந்தெரிபொலஞ்செயம்பினழன்றிடித்திட்டதன்றே.

மடங்கரும் - விகாரம்.

இ - ள். மாரட்டனென்னும் பொன்மலை பொற்றூளிபொங்கும்படி மார்பிடந்து களிற்றோடுந்தாழ்ந்துவீழும்படி வில்லுழவனாகிய கோவிந்தனென்னுஞ் சிங்கம் அழன்று அடர்ந்துசென்று அம்பாலேயிடித்ததென்க.

சிங்கமுமலையுமாதலின், இடித்ததென்றார். கோவிந்தமகாராசன் மாரட்டனோடு பொருதபடி கூறினார். (கருக)

கோங்குபூத்துதிர்ந்தகுன்றிற்பொன்னணிபுளகம்வேய்ந்த
பாங்கமைபருமயானைப்பல்லவதேசமன்னன்
றேங்கமழ்தெரியற்றீம்பூந்தாரவனூர்ந்தவேழங்
காம்பிலிக்கிறைவனூர்ந்தகளிற்றொடுமலைந்ததன்றே.

பாங்கு - உறவு. தெரிதலையுடைய தீவிய பூந்தாரவன் - உலோகபாலன்.

இ - ள். கோங்குபூத்து உதிர்ந்துகிடந்த குன்றுபோலே பொன்னாற்செய்த கண்ணாடிதைத்த யானையையுடைய பல்லவதேசத்தின்மன்னனாகிய தாரவனேறின வேழங் காம்பிலிக்கிறைவனேறின களிற்றோடேமலைந்ததென்க. (௧௫௨)

கொந்தழல்பிறப்பத்தாக்கிக்கோடுகண்மிடைந்ததீயால்
வெந்தனவிலையிலாதசாமரைவீரமன்ன
னந்தரம்புதையவில்வாயருஞ்சரம்பெய்தமாரி
குந்தத்தால்விலக்கிவெய்யகூற்றெனமுழங்கினானே.

இ - ள். அப்பொழுது அவற்றின்கோடுகள் அழல்பிறப்பததாகக மிடைந்த தீயாலே சாமரைவெந்தன; அபபொழுது உலோகபாலன் விசும்புமறையும்படி தன்வில்வாயினின்றும்பெய்த சரமாரியைக் காமபிலிமன்னன் றன்னெறிகோலாலே விலககி முழங்கினனென்க.

தாக்கி - தாக்க. (௧௫௩)

மற்றவனுலோகபாலன்வயங்குபொற்பட்டமார்ந்த
நெற்றிமேலெய்தகோலைப்பறித்திடவுமிழ்ந்தநெய்த்தோ
ரற்றவன்களிற்றிற்பாயத்தோன்றுவானுதயந்துச்சி
யொற்றைமாக்கதிரைநீட்டிபொண்சுடரிருந்ததொத்தான்.

இ - ள். அங்ஙனமுழங்கின காம்பிலிமன்னன் றன்வில்லையேங்கியலோகபாலனது நெற்றியிலேயழுந்த எய்தகோலைத் தான்பறித்திடுதலின், உமிழ்ந்தகுருதி தானேறின வலியகளிற்றிலேவீழத் தோன்றுகின்றவுலோகபாலன், ஞாயிறு ஒற்றைக்கதிரைப்புறப்படவிட்டு உதயத்துச்சியிலே யிருந்ததன்மையை யொத்தானென்க.

இதனைக் காம்பிலிமன்னன்மேல் ஏற்றுவாருமுளர். (௧௫௪)

கொடுமரங்குழையவாங்கிக்கொற்றவனெய்தகோல்க
ணெடுமொழிமகளிர்கோலநிழன்மணிமாலைதன்னோடுபட்
டுடனுழவுவந்தமார்பமூழ்கலிற்சிங்கம்போலக்
கடன்மருள்சேனைசிந்தக்காம்பிலிமன்னன்வீழ்ந்தான்.

இ - ள். அங்ஙனமிருந்த உலோகபாலன் வில்லைவலித்து எய்தகோல்கள்சென்று அவன்மார்பிலே மூழ்கலிற் றன்சேனைகெடும்படி சிங்கம்பட்டுவீழ்ந்தாற்போலக் காம்பிலிமன்னன் பட்டுவீழ்ந்தானென்க.

தங்கற்புமிகுதியால் வஞ்சினங்கூறுதற்குரிய மகளிர். இத்துணையுங் காம்பிலிமன்னனும், உலோகபாலனும் பொருதபடிகூறினார். (௧௫௫)

பொன்னிறக்கோங்கம்பொற்பூங்குன்றெனப்பொலிந்தமேனி
நன்னிறமாவின்மேலானலங்கொடார்புலனென்பான்
மின்னிறவெஃகமேந்திவிங்குநீர்மகதையார்கோன்
கொன்னிறக்களிற்றினெற்றிக்கூர்ந்தன்மாப்பாய்வித்தானே.

இ - ள். பொலிவினையுடைய பூங்கோங்கமும் பொன்னிறக்குன்றமுமென்னப் பொலிந்தமேனியையுடைய புரவிமேலானாகிய நபுலனென்கின்றவன் வாளையெடுத்து மகதையார்கோன்களிற்றினுச்சியிலே அம்மாவைப் பாய்வித்தானென்க.

கொன் - அச்சம்.

(கருசு)

ஏந்துதன்கண்கள்வெய்யவிமைத்திடவெறித்தமேலோம்பி
நாந்தகவுருவனானிநக்குநீயஞ்சல்நண்டாய்
காய்ந்திலேனென்றுவள்ளலேகவினமாக்குன்றிற்பொங்கிப்
பாய்ந்ததோர்புலியின்மற்றோர்படையின்மேற்பாய்வித்தானே.

நாந்தகம் - வாள்.

இ - ள். அம்மகதையார்கோன் கண்களிமைத்தலின், நபுலன் அவனைவெட்டாதே யிவன்மேலேவந்தேனேயென்று நாணி நக்கு நின்னைக்காய்கின்றிலேன்; நீயஞ்சலென்றுதேற்றித் தன்யானை, ஒருகுன்றினின்றும் ஒருகுன்றிலே பொங்கிப்பாய்ந்த புலிபோலே அக்களிற்றினின்றும் வேறோர் வெய்யகளிற்றின்மேலே பாய்வித்தானென்க.

(கருஎ)

கைப்படையொன்றுமின்றிக்கைகொட்டிக்குமரனார்ப்ப
மெய்ப்படைவீழ்த்துநாணிவேழமுமெறிதல்செல்லான
மைப்படைநெடுங்கண்மாலைமகளிர்தம்வனப்பிறசூழ்ந்து
கைப்படுபொருளிலாதான்காமம்போற்களைமீண்டான்.

இ - ள். அவன் அங்ஙனம்பாயவிடுத்த களிற்றிலிருந்தகுமரன் றன்கையிற் படைகளொன்றுமின்றாய் மற்போர்செய்தற்குக் கையைத்தட்டி யார்த்தானாக, அவனை வெட்டுதலைநாணி யவன்வேழத்தையுமெறியானாய் மீண்டானென்க.

மகளிர்தம்மழகாலே யிவர்புணர்தற்குரிய மகளிரென்று நினைத்துச்சென்று, அவர்க்குப்பொருள்வேட்கையென்கின்ற குறைபாடுண்மைகண்டு, அக்காலத்து அவர்க்குக் கொடுத்துப் புணரவேண்டும்பொருளில்லாதவன் காமம்போலேமீண்டானென்க. அவற்குக் கொடுத்தற்குத் தன்கைப்படையொழிய வேறின்மையிற் படைவழங்காதுமீண்டான். இனி மகளிர் தம்மழகாலே யொருவனை யிவன் புணர்ச்சிக்குத் தக்கானென்று கருதிச்சென்று தங்கையிடத்தே யுண்டாம் பொருளையுடையனல்லாதானிடத்து அவர்வேட்கைமீளுமாறுபோல மீண்டானென்றுமாம். இது பான்மயக்குவமம். மற்போர் - எருமைமறமாம் இத்துணையும் நபுலன்போர்கூறினார். (கருஅ)

வேறு.

மண்காவலைமகிழாதிவனுடனேபுகமொழிய
விண்காவலைமகிழ்வீர்நனியுளிரோவெனவிபுலன்
வண்காரிருண்மின்னேயுமிழ்தேய்வாயதொராயில்வாள்
கண்காவலகழுகோம்புவதுயரானிவினவும்.

இருளையுடைய காரின் மின்னையேயுமிழுந் தேய்ந்த வாயையுடையவாள். கண் காவல - கண்ணைக்குத்தும்.

இ - ள். விபுலன் கழுகையோம்புவதாகிய வாளையுயர்த்து மன்காவலைமகிழாதே யிவ்வுலகுடனேபுகழ்நிற்க என்னோடேபொருது விண்காவலை மிகவும் விரும்பும் வீரருள்ளீரோ? உண்டாகில் மேல் என்னோடு பொருதற்குவாருமென்று வினவுமென்க.

நபுலன்சென்றுமீளுதலின், இவன் விரைவிச்சென்றான். (௧௫௯)

வீறின்மையின்விலங்காமெனமதவேழமுமெறியா
னேறுண்டவர்நிகராயினும்பிறர்மிச்சிலென்றெறியான்
மாறன்மையின்மறம்வாடுமென்றிளையாரையுமெறியா
னாறன்மையின்முதியாரையுமெறியானயிலுழவன்.

இ - ள். தனக்கெதிர்ப்பாரின்மையின், வேலுழவன் மதவேழத்தையெறிந்தாலும் விலங்கையெறிந்தானென்பரென்றுநினைத்து அதனாலேவெற்றியின்மையின வேழத்தையும் வெட்டானாய், முன்புவெட்டுண்டவர் தனக்கு ஒப்பாராயினும் பிறர் படைதீண்டின எச்சிலென்று அவரையும்வெட்டானாய், தனக்கிளையாரையும் நிகரன்மையின் மறம்வாடுமென்று வெட்டானாய், அறமன்மையிற் றன்னின்மூத்தோரையும்வெட்டானாய் நின்றானென்க. (௧௬௦)

ஒன்றாயினும்பலவாயினுமோரோச்சினுளொறிய
வென்றாயினமதவேழமுமுளவோவெனவிளவிப்
பொன்றாழ்வரைப்புலிபோத்தெனப்புனைதாமிஞிறார்ப்ப
சென்றான்பலகளிறாயிரமிரியச்சினவேலோன்.

இ - ள் அங்ஙனநின்ற வேலோன் இத்திரளிலேசென்றால் ஒன்றேயாயினும் பலவேயாயினும் ஒருவெட்டிலே வெட்டுதற்குப் பலபோரிலும்வென்று எனக்குப பற்றுவனவாகிய வேழமாயினுமுளவோவென்றுவினவி மேருவிலிருக்கிற புலியேறென்னும்படி ஆயிரங்களிறிரிய மிஞிறார்ப்ப யானையின்மேலே சென்றானென்க.

'அயிலுழவன்,' 'வேலோன்' என்றது யானையிலிருந்துபொருபடத்து வேல் வேண்டுமென்றுகருதி. (௧௬௧)

புடைதாழ்குழைபொருவில்லுயாபொன்னோலையொடெரிய
வுடைவாளொடுகடிவட்டினொடொளிர்வாளினொடொருவ
னடையாநிகரெறிநீயெனவதுவோவெனநக்கான்
கிடையாயினனிவனேயெனக்கிளராணழகுடையான்

இ - ள். ஒப்பில்லாத வுயர்ந்தவோலையோடே குழைவிளங்க அல்லிக்கயிற்றோடும் மிக்கவட்டுடையோடும் வாளோடுமொருவீரன்வந்து அவனைச்சேர்ந்து நீயெனக்கு நிகர்; என்னைவெட்டென்றானாக, இவனே யுலகிற்கெல்லாம் ஒப்பாயினானென்று கூறும்படிவிளங்கும் ஆணழகையுடைய விபுலன் நக்கானென்க.

அதுவோவெனநக்கானென்றது - முற்பட மார்புகொடுத்தானென்னும் புகழை நீயெய்தக்கருதியோ அப்புகழைத் தாரேனென்று நக்கானென்க. (௧௬௨)

இன்னீரினதிரைமேலிரண்டிளவெஞ்சுடரிகலி
மின்னோடவைசுழன்றுயிடைவிளையாடுகின்றனபோற்
பொன்னணினர்பொருவில்லுயர்புனைகேடகந்திரியாக்
கொன்வாளினர்கொழுந்தாரினர்கொடிமார்பினர்திரிந்தார்.

இ - ள். கடலிடத்தனவாகிய திரைமேலே யிரண்டிளஞாயிறு இருந்து அவை தாம் இகலிக் கையிற்பிடித்தமின்னோடே சுழன்று விளையாடுகின்றவைபோலே நாணினர் வாளினர் தாரினர் மார்பினராய்க் கேடகத்தைத்திரித்து யானையைக்கொண்டு சாரிகையிலே திரிந்தாரென்க.

மின் - வாளிற்குவமை. (கசுரு)

விருந்தாயினையெறிநீயெனவிரைமார்பகங்கொடுத்தாற்
கரும்பூணறவெறிந்தாங்கவனினதூழினியெனவே
யெரிந்தாரயிலிடைபோழ்ந்தமையுணராதவனின்றான்
சொரிந்தார்மலரரமங்கையர்தொழுதார்விசும்படைந்தான்.

இ - ள். அங்ஙனங் களிற்றோடுதிரிதலிற் சேர்ந்து வெட்டுதல்கூடாமையின் வேற்போனாக்கருதி, யான்வந்தபின்வந்தமையின் நீயெனக்குவிருந்தாயினையாதலின் நீமுற்பட வேலாலெறியென்று விபுலன் றன்மார்பைக் கொடுத்தவற்கு, அவனும் கவசத்தளவறும்படி யெறிந்து, இனி யெறியுமுறை நினக்கென்றானாக, விபுலனெறிந்த நொய்ம்மையாலே வேல்பட்டுருவினபடியை யவன்றானறியாதே விசும்பைச்சேர்ந்தான்; அப்பொழுது அரமங்கையர் மலரைச்சொரிந்தார்; சொரிந்து தொழுதாரென்க.

விண்ணுலகைவிரும்பியவிபுலன் ஈண்டுநிற்க, நல்வினையால் அவன் விண்ணுலகிலேநின்றானென்று தேவர்கூறினார். அவன் ஆங்கு நின்றானென்க. நிலைபெற்றிருந்தநிலையை அவனங்கேநின்றானென்றல் உலகவழக்கு. இனி யடைந்தாரென்ற பாடத்திற்கு இருவருமடைந்தாரென்பார்க்கு அவனின்றானென்பதனை யானைமேல் நின்றானென்றன் மரபன்மையிற் காலாளாய் இருவருநின்றாரெனல்வேண்டும்; அது முற்கூறியவுவமங்கட்குப் பொருந்தாதாம். அயிலை வாளாக்குதல் பொருத்தமின்று. இத்துணையும் விபுலன்பொருதபடி கூறினார். (கசுச)

வேறு.

நித்திலக்குப்பைபோலநிழலுமிழ்ந்திலங்குமேனிப்
பத்திப்பூணணிந்தமார்பிற்பதுமுகன்பைம்பொற்சூழி
மொய்த்தெரியோடைநெற்றிமும்மதக்களிற்றின்மேலான்
கைத்தலத்தெஃகமேந்திக்காமுகற்கண்டுகாய்ந்தான்.

இ - ள். மார்பிலணிந்த பத்திகளையுடைய முத்துப்பூணாலே நித்திலத்திரள் போல நிழலுமிழ்ந்திலங்கு மேனியையுடைய பதுமுகன், முகபடாத்தையும் ஓடை நெற்றியையுமுடைய களிற்றின்மேலிருந்தவன், எஃகத்தையேந்திக் காமுகனைக்கண்டு காய்ந்தானென்க. (கசுடு)

மாற்றவன்சேனை தாக்கித்தளர்ந்தபின்வன்கண்மள்ள
ராற்றலோடாண்மைதோன்றவாருயிர்வழங்கிவீழ்ந்தார்
காற்றினாற்புடைக்கப்பட்டுக்கடலுடைந்தோடக்காம
ரேற்றிளஞ்சுறாக்களெங்குங்கிடந்தவைபோலவொத்தார்.

மாற்றவன் - காமுகன்.

இ - ள். அவன்காய்ந்ததனைக்கண்டு காமுகன்சேனைவந்து தாக்குதலிற் பதுமுகன்படை கெட்டது; அதன்பின்பு அதனோடுகெடாதே மீண்டுநின்ற வன்கண்மள்ளர் ஏறாகிய சுறாக்கள்போலே வலியுமாண்மையுந் தோன்றநின்று பொருது பட்டுக்கிடந்தவர்கள், பெருங்காற்றால் அடிக்கப்பட்டுக் கடலுடைந்துபோக அச்சுறாக்கள் நிலமெங்குங் கிடந்தவற்றை யொத்தாரென்க.

காற்றுக் காமுகன்படைக்கும், கடல் பதுமுகன்படைக்குமுவமை. போல ஒத்தாரென்றவிரண்டும் உவமவுருபாதலின், போலவென்பதனை முன்னே கூட்டுக (௧௬௬)

தூசுலாம்பரவையல்குற்றுணைமுலைமகளிராடு
மூசல்போற்சேனைபோடப்பதுமுகன்களிற்றையுந்தி
மாசில்சீர்மழையினெற்றிமாமதிநுழைவதேபோற்
காய்சினக்களிற்றினெற்றியாழிகொண்டழுத்தினானே.

கெட்டபடை மீண்டும் பொருதுகெடுதலின், ஊசலோடுவமித்தார்.

இ - ள். தன்முன்னின்ற சேனைகெடுதலிற் பதுமுகன்பொறானாய்க் களிற்றைச் செலுத்தி ஆழியைக் கையிலேவாங்கிக்கொண்டு சென்று மழையினெற்றியிலே மதி நுழையுமாறுபோலக் காமுகன்களிற்றினெற்றியிலே யழுத்தினானென்க. (௧௬௭)

பெருவலியதனைநோனான்பிண்டிபாலத்தையேந்தி
யருவரைநெற்றிபாய்ந்தவாய்மயிற்றோகைபோலச்
சொரிமதக்களிற்றின்கும்பத்தழுத்தலிற்றோன்றல்சீறிக்
கருவலித்தடக்கைவாளிற்காளையைவெளவினானே.

பிண்டிபாலம் - தலையிலேபீலிகட்டப்பட்டு எறிவதோர் படை. யானைசோர்ந்தமையின், வாளாலேவெட்டினான்.

இ - ள். காமுகன் அதனைப்பொறானாய்ப் பிண்டிபாலத்தையெடுத்து மலைத்தலையிலேபாய்ந்த தோகைமயில்போலே பதுமுகன்களிற்றின்மத்தகத்தே யழுத்துதலின் அவன்சீறித் தன்கையில்வாளாலே காமுகனைவெட்டினானென்க.

பீலியாதலின், மயிலோடுவமித்தார். கருவலி - பெரியவலி. (௧௬௮)

தீமுகத்துமிழும்வேற்கட்சில்லரிச்சிலம்பினார்தங்
காமுகன்களத்துவீழக்கைவிரலுதியிற்சுட்டிப்
பூமுகமாலைமார்பன்பொன்னணிகவசமின்னக்
கோமுகன்கொலைவல்யானைகூற்றெனக்கடாயினானே.

மகளிர் தம்மிடத்துக் காமுகன். பூமுகம் - பூப்போலுமுகமெனச் செவ்வி கூறினார்.

இ - ள். காமுகன்பட்டவளவிலே, அவன்றம்பி மாலைமார்பனாகியகோமுகன், என்றமையனைக் கொன்றவனிவனென்று சுட்டிக்காட்டிக் கவசமின்னக் களிற்றைக் கடாவினானென்க. (௧௬௯)

சாரிகைதிரியும்யானையுழக்கலிற்றரணிதன்மே
லார்கலிக்குருதிவெள்ளமருந்துகள்கழுமியெங்கும்
வீரியக்காற்றிற்பொங்கிவிசும்புபோர்த்தெழுதப்பட்ட
போர்நிலைக்களத்தையொப்பக்குருதிவான்போர்த்ததன்றே.

களம் - இடம். குருதிவான்போர்த்தது - செக்கர்வானிட்டது.

இ - ள். அவன் அங்ஙனஞ்சேறலிற் போர்செய்யுநிலைமையெழுதப்பட்ட இடத்தையொப்பத் தப்பாமற் சாரிகையிலேதிரிகின்ற யானைகள் கடல்போலுங் குருதி வெள்ளத்தை யுழக்கலின், அது துகளாய்த் திரண்டு, புரவியுங்களிறுமெடுத்த பெருங்காற்றாலே பொங்கி விசும்பெங்கும் போர்த்துச் செக்கர்வானிட்டதென்க. ()

சென்றதுதடக்கைதூணிசேந்தனபுருவங்கோலி
நின்றவிற்குனிந்ததம்புநிமிர்ந்தனநீங்கிற்றாவி
வென்றிகொள்சரங்கண்மூழ்கிமெய்ம்மறைத்திட்டுமின்றோய்
குன்றின்மேற்பவளமேபோற்கோமுகன்றோன்றினானே.

இ - ள். பதுமுகன்கை தூணியிலேசென்றது; அப்பொழுது கண்கள்சிவந்தன; புருவங்கள்வளைந்தேநின்றன; வில்வளைந்தது; அம்புகள்நேரேசென்றன; அவன்முன் னின்ற படைகளினுயிரெல்லாம் போயின; பின்பு அவன்மேலே யம்புகளழுந்தி மெய்யைமறைத்து அதிலே சிலவுருவிப்போதலிற் குருதிபோர்த்துக் கோமுகன் மின்செறிந்தமலையிற் பவளம்போலத் தோன்றினானென்க. (௧௭௪)

பனிவரைமுளைத்தகோலப்பருப்புடைப்பவளம்போலக்
குனிமருப்புதிரந்தோய்ந்தகுஞ்சரங்கொள்ளவுந்திக்
கனிபடுகிளவியார்தங்கதிர்முலைபொருதுசேந்த
துனிவரைமார்பன்சீறிச்சுடுசரஞ்சிதறினானே.

இ - ள். முலைபொருது சிவந்தமார்பன் பனிவரையிலேமுளைத்த பருமையை யுடைய பவளம்போலே குருதிசெறிந்த குனிமருப்பையுடைய குஞ்சரத்தைப் போர் கொள்ளும்படி செலுத்திச் சீறிச் சரத்தைச்சிதறினானென்க.

வரைவெறுக்குமார்பன் - கோமுகன். (௧௭௨)

பன்னலம்படுஞ்சிக்குன்றம்படரெரிமுகந்ததொப்பத்
தன்னிருகையினாலுந்தடக்கைமால்யானையாலு
மின்னுயிர்பருகிச்சேனையெடுத்துக்கொண்டிரியவோட்டிக்
கொன்முரண்டோன்றவெம்பிக்கொலைக்களிற்றுழவனார்த்தான்.

இ - ள். அங்ஙனஞ்சிதறி எஃகுதலையுடைய பஞ்சியாகியமலையை எரிமுகந்த தன்மையையொப்பத் தன்கையாலும் யானையாலும் பதுமுகன்சேனை விசையெடுத்

தோம்படி பொருத ஆண்டுப் போகாதுநின்றவருயிரைப்பருகிப் பெரியவலிதோன்ற வெம்பிக் கோமுகனார்த்தானென்க.

இதனைப் பதுமுகன்பொருதானென்பாருமுளர். (கஎ௩)

தருக்கொடுகுமரனார்ப்பத்தன்சிலைவளையவாங்கி
யொருக்கவன்கையும்வாயுமுளங்கிழித்துடுவந்தோன்றச்
சுருக்குக்கொண்டிட்டவண்ணந்தோன்றலெய்திடுதலோடு
மருப்புறக்களிறுகுத்தியயிரந்தான்கழிந்ததன்றே.

இ - ள். அங்ஙனம்பொருத செருக்கோடே கோமுகன் கையை வாயிலே வைத்து ஆர்த்தானாக, பதுமுகன் அதுபொறாதே தன்வில்லைவலித்துச் சேரச்சுருக் குக்கோத்தாற்போலே கையையும் வாயையும்கிழித்துப் பின்பு அவனுள்ளத்தை யுங்கிழித்து ஈர்க்குத்தோன்றும்படி பலவம்பையும் எய்கிறவளவிலே, கோமுகன் களிறு தன்மருப்புறும்படி பதுமுகன்களிற்றைக் குத்தலின், அதன்கொள்கை போயிற்றென்க. (கஎச)

நித்திலமணிவண்டென்னுநெடுமதக்களிறுபாய
முத்துடைமருப்புவல்லேயுடைந்துமுத்தொழுகுகுன்றின்
மத்தகயானைவீழ்ந்துவயிரங்கொண்டொழிந்ததாங்குப்
பத்திரக்கடிப்புமின்னப்பதுமுகன்பகடுபோர்த்தான்.

இ - ள். கோடு * புய்க்கலாதுநின்ற அக்களிற்றைப் பதுமுகனேறின நித்தில மணிவண்டென்னுங்களிறு திருகிக் குத்துதலின், முன்பு தைத்துநின்ற மருப்பு முரிந்து முத்தொழுகுமலைபோலே அவ்வியானைவீழ்ந்து செற்றங்கொண்டு பட்டது, அப்பொழுது பதுமுகன் களிற்றை மீட்டானென்க.

பத்திரக்கடிப்பு - நன்றாகியகுதம்பை. இத்துணையும் பதுமுகன் பொருதபடி கூறினார். (கஎரு)

க. பத்திரக்கடிப்புமின்னப்பங்கியைவம்பிற்கட்டிக்
கொத்தலர்தும்பைசூடிக்கோவிந்தன்வாழ்கவென்னாக்
கைத்தலத்தெஃகமேந்திக்காளைபோய்வேழநின்றான்
மத்தகயானைமன்னர்வயிறெரிதவழ்ந்ததன்றே. (கஎசு)

௨. மேகலைப்பரவையல்குல்வெள்வளைமகளிர்செஞ்சாந்
தாகத்தைக்கவாந்துகொண்டவணிமுலைத்தடத்துள்வைகிப்
பாகத்தைப்படாதநெஞ்சிற்பல்லவதேசமன்னன்
சேவகன்சிங்காதன்செருக்களங்குறுகினானே.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். மகளிரது ஆகத்தை யிடங்கொண்டுபெருத்த சாந்தணிந்த முலைத்தடத் தே தங்காநிற்கவும் அவர்கள்கூற்றிலேசெல்லாத நெஞ்சினையுடைய உலோகபாலன்

* புய்த்தல் - பறித்தல்; "மைந்துகால் யாத்து மயங்கிய ஞாட்பினுட் - புய்ந் துகால் போகிப் புலான்முகந்த வெண்குடை" என்றார் களவழிநாற்பதிலும்: ௩௬.

சேவகனாகிய சிங்கநாதன் மயிரைக் கச்சாலேகட்டிச் சூடி வேலையேந்தி வாழ்க வென்று மின்ன வேறேநின்றான்; ஆண்டுத் தன்னெதிர்சென்றோரின்மையின், அக்காளை செருக்களத்தைக் குறுகினான்; அப்பொழுது மன்னர்வயிற்றில் எரிதவழ்ந்த தென்க.

வைகி - வைக. பாகம் - பங்குமாம். குருகுலத்தைவிளக்குதலானும், சீவகற்கும் உலோகபாலற்கும் இறைவனாதலானுங் கோவிந்தனைவாழ்த்தினான். (கஎஎ)

புனைகதிர்மருப்புத்தாடிமோதிரஞ்செறித்துப்பொன்செய்
கனைகதிர்வாளையேந்திக்கால்கழலணிந்துநம்மை
யினையனபட்டநாளாலிறைவர்கணினைப்பதென்றே
முனையழன்முளிபுற்கானமேய்ந்தெனநீந்தினானே.

இ - ள். அங்ஙனங் குறுகினவன் யானைக்கொம்பாற்செய்த வாசின்கண்ணே புனைகதிரையுடைய மோதிரத்தைச்செறித்து அவ்வாசிலே பொன்னிட்டவாளையேந்திக் காலைக்கழலாலணிந்து நம்மை யிறைவர்கணினைத்துக் கொண்டாடுவது இத்தன்மையவான வெற்றிகளுண்டான நாள்களாலேயென்றுகருதி யுலர்ந்தபுற்கானத்தை யழன்மேய்ந்தாற்போலப் போரைவெட்டிக் கடந்தானென்க.

பாடுகுறித்தலின், வாளைவாங்கினான். இத்துணையுஞ் சிங்கநாதன்செயல் கூறினார். (கஎஅ)

தாரணிபரவைமார்பிற்குங்குமமெழுதித்தாழ்ந்த
வாரமும்பூணுமின்னவருவிலைப்பட்டினங்க
ணேர்படக்கிடந்தபொன்ஞாணிருள்கெடவிழிப்பவெய்ய
பூரணசேனன்வன்கைப்பொருசிலையேந்தினானே.

இ - ள். தாரணிந்தமார்பிலே ஆரமும் பூணுமின்னநிற்கக் குங்குமத்தையெழுதிப் பட்டின்கண்ணே யழகுபடக்கிடாத * அல்லிக்கயிறுவிளங்கப் பூரணசேனன் வில்லையேந்தினானென்க.

இருள் கெடுகையினாலே விழிப்ப - ஒடவைசகையினாலே விளங்க. (கஎகூ)

ஊனமர்குறடுபோலவிரும்புண்டுமிகுத்தமார்பிற்
றேனமர்மாலைதாழச்சிலைகுலாய்க்குனிந்ததாங்கு
மானமர்நோக்கினாருமைந்தருங்குழீஇயபோருட
கானமர்காமனெய்தகணையெனச்சிதறினானே.

இ - ள். இறைச்சிகொத்தும் பட்டடைமரம்போல இரும்புமேய்ந்து பசிதீர்ந்து மிகுத்துவைத்த மார்பின் மாலைதாழ மெய்வளைதலாலே சிலைகுனிந்தேநின்றது; அப்பொழுது மகளிருமைந்தரும் திரண்டபோரிலே காமனெய்த கானமர் கணையென்னும்படி கணையைச சிதறினானென்க.

காமன் ஒருவனாய்நின்று பலரையுமெய்தலின், உவமம். (கஅ0)

வண்டலைமாலைதாழமதுவுண்டுகளித்துவண்கைப்
புண்டலைவேலையேந்திப்போர்க்களங்குறுகிவாழ்க

* இதற்குக் கொடி, சூத்திரம் என்னும் பெயர்களுண்மையின், வல்லிக்கயிறென்றலும் பொருந்தும்.

கண்படுகாறுமெங்கைதகட்டியங்காரனென்றே
யுண்டொலையார்கவேலென்றுறுவலிதாக்கினானே.

வண்டலைமாலை - மதுவுண்டு களித்து வண்டலைக்கிற மாலை; நிகழ்காலமுணர நின்றது. களித்த பாடமாயின், அகரத்தைச் சுட்டாக்கி அவ்வுறுவலியென்க.

இ - ள். அப்பூரணசேனன் வில்லைநீக்கி மாலைதாழுக் கையாலே வேலையேந்திக் களத்தைக்குறுகிக் கட்டியங்காரன் உலகெல்லாந்துஞ்சும் ஊழியளவும் வாழ்வானாகவென்று வாழ்த்தி யிவ்வேல் உயிர்களைக் கடுகவுண்டு வயிறுநிறைவதாகவென்று கூறிப் பொருதானென்க. (கஅக)

கூற்றெனவேழமவீழக்கொடிநெடுந்தோகனூறு
வேற்றவர்தம்மைச்சீறுவெந்திரநூழில்செய்யா
வாற்றலங்குமரன்செல்வானலைகடற்றிரையினொற்றி
யேற்றுமீனிரியப்பாய்ந்தவெறிசுறுவேறுபோன்றான்.

இ - ள். பூரணசேனன வீழ்த்து நூறிச் சீறி ஒருகணமாயமபோலக் கொன்று குவித்தலைச்செய்து செல்கின்றவன் எறுகியமீன்களிரியப் பாய்ந்த சுறுவேறுபோன்றானென்க. (கஅஉ)

மாலைக்கணும்பல்போலமகளிர்தங்குழாத்திற்பட்டார்
கோலவாட்போருட்பட்டாற்குறுமுயற்கூடுகண்டு
சாலத்தாம்பனிக்கும்பொய்கைத்தாமரைநீரராயின்
ஞாலத்தாராண்மையென்னுமெனநகாவருகின்றானே.

இ - ள். மகளிர்குழாத்தின் மாலைக்காலத்து ஆம்பல்போல மகிழ்ச்சியுற்றவர்கள் வாட்போரிற்சென்றால் மதியைக்கண்டுமயங்குந் தாமரையின்றன்மையராயினாராயின், ஞாலத்தார வீரத்தையாளுந்தன்மை என்னாய்முடியுமென்று நக்கு வாரா நின்றானென்க.

இத்துணையுங் கட்டியங்காரன்படைத்தலைவன் பூரணசேனன்செயல் கூறினார்.

முடிச்சடைமுனிவனன்றுவேள்வியிற்கொண்டவேற்கண்
மடத்தகைமகளிர்கோலவருமுலையுழக்கச்சேந்து
கொடிப்பலவணிந்தமார்பிறகோவிந்தன்வாழ்கவென்று
நடத்துவானவனைநோக்கிநகாச்சிலைபாரித்தானே.

முனிவன் - வீரபத்திரதேவன், இறைவன் றன்னைப்போலேபடைத்தலின், அவனை முனிவனென்றார். அன்று தக்கன்வேள்வியைத் தவிர்ப்பான்வேண்டி யிறைவன் றனைகப்படைத்துககொண்ட முனிவனைப்போலுங் கோவிந்தன்; வேற்கண்மகளிர் முலையுழக்குதலிற் சிவக்கப்பட்டுக் கொடியணிதற்குக் காரணமான மார்பினையுடைய கோவிந்தன்.

இ - ள். கோவிந்தன் வாழ்கவென்று நடத்துகின்றசிங்கநாதன் பூரணசேனனை நோக்கி நக்கு வில்லைவளைத்தானென்க. (கஅச)

போர்த்தநெய்த்தோரனுகிப்புலாம்பருந்தார்ப்பச்செல்வான்
சீர்த்தகையவனைக்கண்டேசினவுவேலினுமார்ந்தின்

றார்த்துயிருன்னையுண்ணக்குறைவயிறுருமென்றுங்
கார்த்தவாய்நிறையவெய்தானம்புபெய்தூணியொத்தான்.

இ - ள். போர்த்தகுருதியனுய்ச் செல்கின்ற பூரணசேனன் சிலைபாரித்த சிங்கநாதனைக்கண்டு என்கையில்வேல் இன்னும் வயிறுநிறைந்ததில்லை; உன்னுயிரை யூற்றியுண்ணக் குறைவயிறுநிறையுமென்று ஆர்த்தவாய் அப்பொழுதேநிறையும்படி சிங்கநாதனெய்தான்; அப்பொழுது பூரணசேனன் அம்புபெய்தூணியை யொத்தானென்க.()

மொய்ப்படுசரங்கண்மூழ்கமுனையெயிற்றுளிபோல
வப்பணைக்கிடந்தமைந்தனருமணித்திருவில்வீசுஞ்
செப்பிளமுலையினூர்கண்சென்றுலாய்ப்பிறழச்சிந்திக்
கைப்படவெடுத்திட்டாடும்பொலங்கழற்காயுமொத்தான்.

இ - ள். பின்னுஞ் சிங்கநாதனெய்தசரங்கள் சென்றுமூழ்குதலின், ஆளிபோல அப்பணையிலேகிடந்த பூரணசேனன் கழலினுடைய காயையுமொத்தானென்க.

பொலஞ்செப்பையொத்த முலையினூராடுமென்க *“பொற்பே பொலிவு” என்றும், † “பொன்னென் கிளவி யீறுகெட” என்றுஞ் சூத்திரஞ்செய்தமையிற் பொலம், பொலிவாகாமையுணர்க. கண்பிறழப் பரப்பியாடுங்கழலென்க. இத்துணையுஞ் சிங்கநாதனேடுபொருது பூரணசேனன் பட்டபடி கூறினூர். (கஅசு)

புனைகதிர்ப்பொன்செய்நாணிற்குஞ்சியைக்கட்டிநெய்த்தோர்
நனைகதிரெஃகமேந்திநந்தன்வாழ்கென்னநின்ற
வினையொளிர்காளைவேலைக்கடக்கலார்வேந்தர்நின்றூர்
கனைகடல்வேலையெல்லைகடக்கலாவண்ணநின்றூர்.

இ - ள். பொன்னுற்செய்தநாணுற் றன்மயிரைக்கட்டிக் குருதியானனைந்த வேலையேந்தி நந்தட்டன்வாழ்வானகவென்று நின்றபோரில் விளங்கினகாளை கையில் வேலைக்கடக்கமாட்டாராய் வேந்தர்நின்றவர்கள், கடல் கரையினெல்லையைக் கடக்கமாட்டாத தன்மைபோல நின்றூரென்க.

இவன் நந்தட்டன் சேவகன். (கஅஎ)

நின்றவப்படையுளானேயொருமகனீலக்குஞ்சி
மன்றலமாலைநெற்றிமழகளிறன்றிவீழான் [ன்
வென்றிலங்கொளிறும்வெள்வேன்மின்னெனவெகுண்டுவிட்டா
சென்றவேல்விருந்துசெங்கண்மறவனக்கெதிர்கொண்டானே.

இ - ள். களிறன்றிவீழானுய்க் கட்டியங்காரன் படையினுள்ளானுய்நின்ற நீலக்குஞ்சியையுடைய வொருமகன் வெகுண்டு வேலை மின்னெனவிட்டான்; அங்ஙனஞ்சென்ற வேலாகிய விருந்தை நந்தட்டன்சேவகன் மகிழ்ந்து எதிர்கொண்டானென்க.

மன்றல, அ - அசை. வென்று புகழ்பரந்த வொளிறுவேல். (கஅஅ)

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரியியல், நகக.
† ,, எழுத்ததிகாரம், புள்ளிமயங்கியல், சுக.

மான்வயிறார்ந்துநோக்கும்வெருவுறுமருளினோக்கிற்
றேன்வயிறார்ந்தகோதைத்தீஞ்சொலார்கண்கள்போலு
மூன்வயிறார்ந்தவெள்வேலொய்யெனப்பறித்துநக்கான்
கான்வயிறார்ந்துதேக்கிக்களிவண்டுகளைக்குந்தாரான்.

மணத்தைத்தேக்கி வயிறுநிறைந்து வண்டொலிக்குந்தாரான் - நந்தட்டன் சேவகன்.

இ - ள். தாரான், மான் வயிறுநிறைந்தபொழுது நோக்கும் அச்சமுற்ற மருளுனோக்கினையுடைய மகளிர் கண்கள்போலும்வேலை விரையப்பறித்து இதுவுமொரு வேல்பெற்றேமேயென்று நக்கானென்க.

இன் - அசை. (௧௬௧)

விட்டழல்சிந்திவெள்வேல்விசும்பின்வீழ்மின்னினொய்தாக்
கட்டழனெடுங்கண்யாதுமிமைத்திலன்மகளிரோச்சு
மட்டவிழ்மாலைபோலமகிழ்ந்துபூண்மார்பத்தேற்றுக்
கட்டழலெஃகஞ்செல்லக்காளைநெறியாயினானே.

இ - ள். நந்தன்சேவகன் கையில்வேல் அழலைவிட்டுச்சிந்தி மின்னின்நொய்தாகச்செல்ல அவன்கண்கள்சிறிதுமிமைத்திலன்; அங்ஙனமிமையாதேநின்று பின்னும் அவன்விட்டவேல்களையும் மகளீரோச்சுமாலைபோலே மகிழ்ந்து மார்பிலேயேற்றுச் சாளரமாய்நின்றானென்க.

கட்டியங்காரன்சேவகன் நந்தட்டன்சேவகனோடு பொருதுபட்டான். காற்றுப் போம்வழி சாளரமாம்;*"மான்கட் காலதர் மாளிகை யிடங்களும்" என்றார்பிறரும்.()

கவிமதங்கடந்துகாமர்வளப்புவீற்றிருந்தகண்ணார்
குவிமுலைநெற்றித்தீந்தேன்கொப்புளித்திட்டபைந்தார்
செவிமதக்கடலங்கேள்விச்சீவகன்கழல்கள்வாழ்த்திச்
சவிமதுத்தாமமார்பிற்சலநிதிதாக்கினானே.

இ - ள். செவ்வித்தேனையுடைய தாமமார்பிற் சலநிதியென்னும்வீரன் புகழுங் கவிஞர்கருத்தைக்கடந்து அழகுவீற்றிருந்த கண்ணாருடைய முலைத்தலையிலே தேனைக் கொப்புளித்ததாரினையுங் கேட்டோர்செவிக்குப் பொருந்துவதாகிய கடல்போலுங் கேள்வியினையுமுடைய சீவகன்கழலைவாழ்த்திப் போரைத்தொடங்கினானென்க.

இவன் சீவகன்றோழன். (௧௬௬)

௧. குஞ்சரங்குனியநூறித்தடாயினகுருதிவாடன்
னெஞ்சகநுழைந்தவேலைப்பறித்துவான்புண்ணுணீட்டி
வெஞ்சமநோக்கிநின்றுமிறைக்கொளீஇத்திருத்துவாழ்கண்
டஞ்சிமற்றரசர்யானைக்குழாத்தொடுமிரிந்திட்டாரோ. (௧௬௭)

௨. தோட்டுவண்டொலியன்மாலைத்துடியிடைமகளிராய்ந்த
மோட்டுவெண்முத்தமின்னுமுகிழ்முலையுழுதுசாந்தங்

* சிலப்பதிகாரம், புகார்காண்டம், இந்திரன்விழவூரெடுத்தகாதை: வேயா மாடமும் வியன்கல விருக்கையும் - மான்கட் காலதர் மாளிகை யிடங்களும்.

கோட்டுமண்கொண்டமார்பங்கோதைவாள்குளித்துமூழ்கிக்
கோட்டுமண்கொள்ளநின்றான்குரிசின்மண்கொள்ளநின்றான்.

இவையிரண்டுமொருதொடர்.

க. நுழைந்தவேல் - பட்டுருவாதவேல். வெஞ்சமநோக்கிநின்று-யாஞ் சுவர்க்க மெய்தும்படி வரும் வெஞ்சமம் நமக்கு இனியில்லையென்று கருதிநின்று. நோக்கி- இது நோக்கனோக்கம்.

உ. தோடு - தொகுதி. ஒலியல் - ஒலித்தல். ஆய்ந்த - தெரிந்துகோத்த. மகளிர் முலையுழுது சாந்தைத் தலையிலேகொண்டமார்பு - சலநி[illegible]மார்பு.

இ - ள். அவன் குஞ்சரங்களை வீழவெட்டி வளைந்தவாளைத் தன்னெஞ்சினின்ற வேலைப்பறித்து அப்புண்ணிலேசொருகி யவ்வாளின்வளைவுக்கு விளக்கத்தைப் போக்கு கின்றவனைக் கண்டு அரசர்கெட்டார்; கெடுதலின், நமக்கு இனி வெஞ்சமமில்லை யென்று கருதிநின்று அக்கருத்தேயாய்த் தன்னுடம்பென்னுநினைவின்றிக் கை அம் மார்பிற் புண்ணிலே யவ்வாளைப் பலகாலுஞ்செலுத்துதலின், அவ்வாள் முழுகித் தசையைக் குத்தியெடுப்பநின்றவன் சீவகன் மண்பெறநின்றானென்க.

வாள் உருவாதிருத்தலிற் றசையைக்குத்தியெடுத்தது. குருதியிலே தான் குளி த்துநின்றானென்க. கெட்டவரசர் மீண்டுவந்துவெட்டினரென்பாரக்கு வாள்குத்திற் றென்றன் மரபன்மையுணர்க. இத்துணையுஞ் சலநிதி பொருதுநின்றபடிகூறினார்.()

எரிமணிக்குப்பைபோலவிருளறவிளங்குமேனித்
திருமணிச்செம்பொன்மார்பிற்சீவகன்சிலைகையேந்தி
யருமணியரசராவியழலம்பிற்கொள்ளைசாற்றி
விரிமணிவிளங்குமான்றேர்விண்டொழவேறினானே.

செம்பொன் - ஆகுபெயர்.

இ - ள். மேனியையும், மார்பினையுமுடையசீவகன் சிலையையேந்தி அரசருயி ரைத் தன்னம்பினாலே கொள்ளைகொள்ளுந்தன்மையைத் தன்னெஞ்சிலே யமையப் பண்ணித் தேரை யேறினானென்க.

பார்த்துநின்ற விஞ்சையர்தொழ. (சுகச)

கருவளிமுழக்குங்காருங்கனைகடலொலியுங்கூடி
யுருவலிச்சிங்கவார்ப்புமொருங்குடன்கூடிற்றென்னச்
செருவிளைகழனிமள்ளரார்ப்பொடுசிவணிச்செம்பொற்
புரிவளைமுரசமார்ப்பப்போர்த்தொழிறொடங்கினானே.

இ - ள். பெருங்காற்றின்முழக்குங் காரின்முழக்குங் கடலினொலியுந் தம்மிற் கூடப்பட்டு அவ்விடத்தே சிங்கவார்ப்புஞ் சேரக்கூடிற்றென்னும்படி செருவிளைகிற கழனியில் வளைமுரசமார்க்கிற ஆர்ப்போடேபொருந்தி வீரருமாராநிற்கப் போர்த் தொழிலைத் தொடங்கினானென்க. (சுகரு)

அரசர்தமுடியும்பூணுமாரமும்வரன்றியார்க்கு
முரசமுங்கொடியுந்தாரும்பிச்சமுஞ்சுமந்துமாவும்
விரைபரித்தேருமீர்த்துவேழங்கொண்டொழுகிவெள்ளக்
குரைபுனற்குருதிசெல்லக்குமரன்விற்குனிந்ததன்றே.

அரசருடையவென்பதனை எங்கும் கூட்டுக.

இ-ள். வெள்ளமாகிய நீர்போலுங்குருதி, முடிமுதலியவற்றையரித்து முரச முதலியவற்றைச்சுமந்து மாவையுந்தேரையுமீர்த்து வேழத்தையும் மெள்ளக்கொண் டொழுகி நடக்கும்படி குமரன்வில் வளைந்ததென்க.

இது பெருகினமுறைமைகூறிற்று. (கக௬)

கேழ்கிளரெரிகட்பேழ்வாய்க்கிளர்பெரும்பாம்பினோடுஞ்
சூழ்கதிர்க்குழவித்திங்கட்டுறுவரைவீழ்வதேபோற்
றாழிருந்தடக்கையோடுந்தடமருப்பிரண்டுமற்று
வீழ்தரப்பரந்தவப்புநிழலிற்போர்மயங்கினாரே.

இ-ள். அதுகுனிந்தபொழுது பெரும்பாம்போடே இரண்டிளம்பிறை மலையி னின்றும் வீழுந்தன்மைபோலே கையோடே மருப்பிரண்டுமற்று யானையினின்றும் வீழும்படி பரந்த அம்பினிழலாலே யரசர் மனங்கலங்கிப் போரையறிந்திலரென்க.()

ஆடவராண்மைதோற்றுமணிகிளர்பவளத்திண்கை
நீடெரிநிலைக்கண்ணாடிப்போர்க்களத்துடைந்தமைந்தர்
காடெரிகவரக்கல்லென்கவரிமாவிரிந்தவண்ண
மோடக்கண்டுருவப்பைந்தாரரிச்சந்தனுரைக்கின்றானே.

இ-ள். ஆடவராண்மைதோற்றும் நிலைக்கண்ணாடியாகிய போர்க்களத்தே நெஞ்சுடைந்தமைந்தர் காட்டை யெரிகவரக் கவரிமாவோடினாற்போல ஓடக்கண்டு கட்டியங்காரனமைச்சனாகிய அரிச்சந்தன் ஒருமொழிகூறாநின்றானென்க.

கண்ணாடியில் அழகும்அழகின்மையுந்தோன்றுமாறுபோலக் களத்திலும் ஆண் மையும் ஆண்மையின்மையுந்தோன்றலின், இதனையுவமித்தார். மிக்கவீரரன்மை யிற் கவரிமா உவமமாயிற்று. (கக௮)

மஞ்சிவர்மின்னனார்தம்வாலரிச்சிலம்புசூழ்ந்து
பஞ்சிகொண்டெழுதப்பட்டசீறடிப்பாய்தலுண்ட
குஞ்சியங்குமரர்தங்கண்மறம்பிறர்கவர்ந்துகொள்ள
வஞ்சியிட்டோடிப்போகினாண்மையார்கண்ணதம்மா.

இ-ள். அவன், இதனைக் கேட்பீராக; மைந்நீர், மகளிருடைய சீறடியாலே பாய்தலுண்ட குஞ்சியையுடையகுமரர் தம்வீரத்தைப் பிறர்கொள்ள ஓடுவராயின், இனி யாண்மை யாரிடத்ததென்றானென்க.

சிலம்புசூழப்பட்டு எழுதினவடி. நீர் மகளிரிடத்தன்றிப் போரிலும்ஆடவராக வேண்டுமென்றான். குமரர்-முன்னிலைப்படர்க்கை. கேட்பிக்குமிடத்தேவருகின்ற

அம்மவென்னுமசைச்சொல் "உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார்." என்றதனுன், அம்மாவெனநீண்டு அது "விளியொடு கொள்ப" என்றதனுன், அம்மாமைந்நிரெனநின்றது. முற்கூறிய மைந்தரை விளித்தானும். *"அம்மவாழிகேளிர்" என்றாற்போல ஈண்டும் பன்மையுணர்த்திற்று. (கககக)

உழையினமுச்சிக்கோடுகலங்குதலுற்றபோதே
விழைவறவிதிர்த்துவீசிவிட்டெறிந்திடுவதொப்பக்
கழலவருள்ளமஞ்சிக்கலங்குமேலதனைவல்லே
மழைமினினீக்கியிட்டுவன்கண்ணராபவன்றே.

கழலவர் - எழுவாய். இட்டு - போகட்டு.

இ-ள். வீரர் தம்முள்ளம் உடம்பின்மேல் வேட்கையாலே அதனைக் கைவிடுதலஞ்சிக் கலங்குமேல் உழைமான் றலையிற்கோடு கழலுங்காலத்து அதன்மேல் வேட்கையால் மனங்கலங்குதலுற்றபொழுதே யதனிடத்திலே வேட்கையறும்படி விட்டு அதனையசைத்துவீசிப் போகடுந்தன்மையையொப்ப, அவர் அவ்வுடம்பின் மேலே வேட்கையை வல்லேநீக்கி மின்போற் றோன்றினவாய் தெரியாமன் மறைத்திட்டு வன்கண்ணராவா; அது நமக்கும் வேண்டுமென்றானென்க. (உ00)

தற்புறந்தந்துவைத்ததலைமகற்குதவிவீந்தார்
கற்பகமாலைசூடிக்கடியரமாளிர்த்தோய்வர்
பொற்றசொன்மாலைசூட்டிப்புலவர்கள்புகழக்கன்மே
னிற்பர்தம்வீரந்தோன்றநெடும்புகழ்பரப்பியென்றான்.

இ-ள். வீரர்தாந் தம்மைப்பாதுகாத்து இவர் இடுக்கண்வந்தால் உதவுவரென்றுவைத்த தந்தலைவற்கு அங்ஙனமுதவி வீரந்தோன்றப் புகழ்பரப்பி வீந்தால் அவர்தாஞ் சுவர்க்கத்தேசென்று அரமகளிரைக்கூடுவர்; அதுவன்றி இவ்விடத்தே புலவர் சொன்மாலையைச்சூட்டிப்புகழக் கன்மேனிற்பர்; ஆதலான், நமக்கும் இவை எய்தலாமென்றானென்க. (உ0க)

பச்சிரும்பெஃகிட்டாங்குப்படையைக்கூர்ப்பித்தலோடுங்
கச்சையுங்கழலும்வீக்கிக் † காஞ்சனத்தளிவம்வாய்க்கிட்
டச்சுறமுழங்கியாராவண்ணலங்குமரன்கையு
ணச்செயிற்றம்புதின்னநாளினையாகலுற்றார்.

இ-ள். உருக்கினவிரும்பிலே யெஃகுவைத்தாற்போலப் படையை அவன் அங்ஙனங் கூர்மையிட்டவளவிலே யவர்வீக்கி யிட்டு முழங்கி யார்த்துச் சீவகன் கையிலம்புண்ணத் தமதுநாள் அதற்கிரையாதலை யுற்றாரென்க.

பொற்றளிவம் - பொற்கின்னம். அம் - அசை. (உ0உ)

* அகநானூறு, (மணிமிடைபவளம்) கஉக: அம்ம வாழி கேளிர்முன்னின்று - கண்டனி ராயிற் கழறலிர் மன்னே.

† முன்னும் "செம்பொன் வாயுளிட்டு" என்றார். காந்தருவதத்தையாரிலம்பகம், உஅகூ.

வடதிசையெழுந்தமேகம்வலனுராய்மின்னுச்சூடிக்
குடதிசைசேர்ந்துமாரிகுளிறுபுசொரிவதேபோற்
படர்கதிர்ப்பைம்பொற்றின்டேர்பாங்குறவிமைப்பினூர்ந்தா
னடர்சிலையப்புமாரிதாரைநின்றிட்டதன்றே.

இ - ள். அவர் அங்ஙனம்வருதலிற் சீவகன் தேரை அழகுபெறவேறினான்; அப்பொழுது அப்புமாரி, தாரைமாரிசொரியுந்தன்மைபோல் மாறாதுநின்றதென்க.

வடதிசையெழுந்தமேகம் வலமாகச்சென்று குடதிசையிற்சேர்ந்து மின்னைச்சூடி முழங்கி மாரியைச்சொரிவதுபோலென்க. (௨0௩)

அற்றுவீழ்தலைகள்யானையுடம்பின்மேலழுந்திநின்ற
பொற்றதிண்சரத்திற்கோத்தபொருசரந்தாள்களாகத்
தெற்றிமேற்பூத்தசெந்தாமரைமலர்போன்றசெங்கண
மற்றத்தாதுரிஞ்சியுண்ணும்வண்டினம்போன்றவன்றே.

இ - ள். அவ்வம்பால் அற்றுவீழ்கின்றதலைகள் பட்டயானைகளின்மேல் நின்ற பொலிவையுடைய சரங்களிற் கோத்தவை, அவ்வம்பு தாள்களாகத் திண்ணைகளிலே பூத்த செந்தாமரைமலரையொத்தன; அவற்றின்கண்கள் அப்பூவின் வண்டினத்தை யொத்தனவென்க.

ஏவின்மையிற் சரத்திற்கோக்கவெய்தான். (௨0௪)

வேறு.

திங்களோடுடன்குன்றெலாந்துளங்கிமாநிலஞ்சேர்வபோற்
சங்கமத்தகத்தலம்வரத்தரணிமேற்களிறழியவும்
பொங்குமானிரைபுரளவும்பொலங்கொடேர்பலமுறியவுஞ்
சிங்கம்போற்றெழித்தார்த்தவன்சிறுவர்தேர்மிசைத்தோற்றினார்.

இ - ள். அதனைக்கண்டு கட்டியங்காரன்புதல்வர் சிங்கம்போலே கோபித்து ஆர்த்து அழியவும் புரளவும் முறியவுந் தோன்றினாரென்க.

சீவகன்படை இங்ஙனம்பட அவர்தோன்றினார். திங்களோடேகுன்றுகளெல்லாஞ்சேரவீழ்ந்தாற்போலே சங்குகள் மத்தகத்தேயசையக் களிறுகள்வீழ்ந்தன. ()

சந்தனஞ்சொரிதண்கதிர்த்திங்களந்தொகைநாம்பல
குங்குமக்கதிர்க்குழவியஞ்செல்வனோடுடன்பொருவபோன்
மங்குல்மின்னெனவள்ளறேர்மைந்தர்தேரொடுமயங்கலின்
வெங்கண்வில்லுமிழ்வெஞ்சரமிடைந்துவெங்கதிர்மறைந்ததே.

இ - ள். குங்குமம்போலுங் கதிரையுடைய இளஞாயிற்றோடே சந்தனம்போலுந் தண்கதிரைச்சொரிகிற பலதிங்களந்தொகைதாஞ் சேரப்பொருவனபோலே வள்ளல் தேரோடே மைந்தர்தேருமயங்குதலிற் சரமிடைதலாலே கதிர்மறைந்ததென்க. ()

குருதிவாளொளியரவினாற்கொள்ளப்பட்டவெண்டிங்கள்போற்
றிருவநீர்த்திகழ்வலம்புரிவாய்வைத்தாங்கவன்றெழித்தலும்
பொருவில்கீழ்வளிமுழக்கினாற்பூமிமேற்சனநடுங்கிற்றே
யரவவெஞ்சிலைவளைந்ததேயண்ணல்கண்ணழலுமிழ்ந்ததே.

இ - ள். அவன் குருதிபோலுமிக்கவொளியையுடைய செம்பாம்பாலேகொள்ளப்பட்ட திங்கள்போலக் கையாலே வலம்புரியைப்பிடித்து வாயிடத்தேவைத்து முழக்கினவளவிலே, கீழ்நோக்கியெழுந்த ஒப்பில்லாத காற்றின்முழக்காலே சனம் நடுங்கிற்று; அப்பொழுது வில்லும்வளைந்தது; கண் அழலையுமிழ்ந்ததென்க.

திருவ, அ - அசை. திருத்திகழ்ந்த அக்கடலுமாம். (உ0எ)

கங்கைமாக்கடற்பாய்வதேபோன்றுகாளைதன்காமுக
மைந்தராரத்தவர்வாயெலாநிறையவெஞ்சரங்கான்றபி
னெஞ்சம்போழ்ந்தழலம்புணாநீங்கினாருயிர்நீண்முழைச்
சிங்கவேறுகள்கிடந்தபோற்சிறுவர்தேர்மிசைத்துஞ்சினார்.

இ - ள். சீவகன்வில், கங்கை கடலிலே ஆயிரமுகமாகப்பாயுந் தன்மையை யொத்து மைந்தர் ஆர்த்தவர்வாயெல்லாநிறையும்படி அம்பைக்கான்றபின்பு சில அம்புகள் அவர்நெஞ்சைப்பிளந்து உயிரையுண்டலின், உயிர்நீக்கப்பட்டாராய் முழைகளிலே சிங்கவேறுகிடந்தாற்போலே சிறுவர் தேர்மிசையிலே பட்டுக்கிடந்தாரென்க.

நீங்கினார் - வினையெச்சமுற்று. இத்துணையுங் கட்டியங்காரற்கு உதவியான அரசருடனும், அவன்படைத்தலைவருடனும், அவன்புதல்வர் தனியேவகுத்துவந்தவருடனும் சீவகன்பொருதபடிகூறினார் (உ0அ)

நிவந்தவெண்குடைவீழவும்வேந்தர்நீள்விசும்பேறவு
முவந்துபேய்க்கணமாடவுமோரிகொள்ளைகொண்டுண்ணவு
மவந்தமெங்கணுமாடவுங்களிறுமாவொடுங்கவிழவுஞ்
சிவந்தசீவகசாமிகண்புருவமும்முரிமுரிந்தவே

இதுமுதலாகத் தனியே பதுமவியூகம்வகுத்துநின்ற கட்டியங்காரனுடன சீவகன்பொருகின்றமை கூறுகின்றார்.

இ - ள். குடைவீழவும், அவனைச்சூழ்ந்த வேந்தர் விசும்பையேறவும், ஆடவும், உண்ணவும், குறைத்தலை யெங்குமாடவும், களிறும் மாவுங்கவிழவுஞ் சீவகசாமி கண்கள் சிவந்தன; அவற்றிற்குத்தகுதியாகப் புருவமும் முரிதலைச்செய்தவென்க.

எச்சங்கள் எதிர்காலநோக்கின. குறையாகிய தலையையுடையதனைக் குறைத்தலையென்றது ஆகுபெயர். அவன்படைவகுப்பைக்கண்டு சீவகற்குக் கோபம் நிகழ்ந்தமைகூறினார். முரிமுரிந்ததனை, *"அணியலுமணிந்தன்று" என்றாற்போலக் கொள்க. (உ0௯)

* புறநானூறு, முதலாவது வாழ்த்து: கறைமிட றணியலு மணிந்தன் றக் கறை - மறைநவி லந்தணர் நுவலவும் படுமே.

பொய்கைபோர்க்களம்புறவிதழ்புலவுவாட்படைபுல்லித
ழையகொல்களிறகவிதழரசரல்லிதன்மக்களா
மையில்கொட்டையம்மன்னனுமலர்ந்ததாமரைவரிசையாற்
பையவுண்டபின்கொட்டைமேற்பவித்திரத்தும்பிபறந்ததே.

இ - ள். அங்ஙனங்கோபித்து, பொய்கை போர்க்களமாக, புறவிதழ் வாட் படையாக, அதற்குள்ளிற் புல்லியவிதழ் களிறாக, உள்ளிற்சிறியவிதழ் அரசராக, அல்லி தன்பிள்ளைகளாக, கொட்டை தானாக மலர்ந்ததோர் பதுமவியூகத்தை முறை யாலே மெல்லக் கொன்றபின்பு அக்கொட்டைமேலே தும்பிபறந்ததென்க.

குலனுங்குணனுமுதலியன தூயனென்பது தோன்றப் பவித்திரத்தும்பியென் றார். (உகம)

## வேறு.

கலைமுத்தங்கொள்ளுமல்குற்கார்மனழமின்னனார்த
முலைமுத்தங்கொள்ளச்சாந்துமிழ்ந்துதார்முருகுவிம்மு
மலைமுத்தங்கொள்ளுமார்பின்மன்னனுங்கண்டுகாய்ந்தான்
சிலைமுத்தங்கொள்ளுந்திண்டோட்செம்மலுந்தீயிற்சேர்ந்தான்.

இ - ள். மேகலைபொருந்துதலைக்கொள்ளும் அல்குலையுடைய மகளிர்தம் முலை கள்புல்லுதலிற் சாந்தமழிந்து தாரிற் றேனும்விம்முமாபினையுடைய மன்னனுஞ் சீவ கனைக்கண்டுகாய்ந்தான்; விற்பொருந்துந் தோளினையுடையசீவகனும்அவனைக்கண்டு தீப்போலக் கோபித்தானென்க.

மலையை யுவமிக்கப் பொருந்துமார்பு. (உகக)

தன்மதத்திவண்டவண்டுதெங்கியகாட்டுள்வேழ
மின்மதஞ்செறித்திட்டஞ்சிப்பிடிமறந்திரிந்துபோகும்
வென்மதக்களிறுவெய்யவசனிவேகத்தின்மேலான்
மின்னுமிழ்மாலைவேந்தன்வீரற்குவிளம்பினனே.

இ - ள். தன்மதத்திலேதிளைத்த தேனினம்போய்த் தங்கிய காட்டிலே வேழங் கள்அவற்றினாற்றத்தாலேயஞ்சி மதஞ்செறித்துப் பிடியைமறந்து கெட்டுப்போதற் குக் காரணமான களிறாகிய அசனிவேகத்தின்மேலானாகியவேந்தன் சீவகனுக்கு ஒரு மொழிகூறினனென்க.

இதனால் யானையின்வலிகூறினார். (உகஉ)

நல்வினையுடையநீரார்நஞ்சுண்ணினமுதமாகு
மில்லையேலமுதுநஞ்சாமின்னதால்வினையினாக்கங்
கொல்வல்யானிவனையென்றுமிவன்கொல்லுமென்னையென்று
மல்லனநினைத்தல்செல்லாரறிவினாற்பெரியநீரார்.

இ - ள். நல்வினையுடையார் பகைவரிட்ட நஞ்சையுண்டால் அதுவுங்கொல்

லாது; அந்நல்வினையின்றேற் றுனழியாதிருத்தற்குண்ட அமிர்தும் கொல்லும்; இருவினையினுக்கம் இத்தன்மைத்தாயிருந்தது; ஆதலின், அறிவுடையார் யான் இவனைக் கொல்வேனென்றும் இவன் என்னைக்கொல்வனென்றும் பொருளல்லன நினையாராதலின், இது நின்செயலென்று கருதவேண்டா வென்றானென்க.

என்றது: தன்சிறையை அவன் தெய்வத்தால் நீங்கினதன்மையையும், தனக்கு அரணைவிட்டவியூகம் பட்டதன்மையையுங் காட்டியபடி. (௨௪௩)

அகப்படுபொறியினாரையாக்குவரியாவரம்மா
மிகப்படுபொறியினாரைவெறியராச்செய்யலாமோ
நகைக்கதிர்மதியம்வெய்தாநடுங்கச்சுட்டிடுதலுண்டே
பகைக்கதிர்ப்பரிதிசந்துமாவியும்பயந்தலுண்டே.

இ - ள். நீகேளாய், நின்கையிலேயகப்படுதற்குக் காரணமான தீவினையுடையாரை யாக்குவார்யாரென்று தன்புதல்வர் பட்டமைகருதிக் கூறினான். ஆதற்கு வேண்டுநல்வினையுடையாரை வெறுவியராக்கலாமோவென்று அவர்கள்நூற்றுவராலும் நின்னைக் கொல்லக்கூடாதாயிற்றேயென்று கூறினான். இங்ஙனம் என்புதல்வர் நின்கையாலே படுதலின், இனி ஞாயிறுந் தன்றன்மைதிரிந்து தட்பமுடைத்தாதலும் உலகிலேயுண்டாம். நீயவரைக் கோறலின், மதியுந் தன்மைதிரிந்து வெவ்விதாகலும் உலகிலுண்டாமென்று அவரை வியந்துகூறினானென்க.

ஏகாரங்கள் தேற்றம். பகை - மதிக்குப்பகை. (௨௪௪)

புரிமுத்தமாலைப்பொற்கோல்விளக்கினுட்பெய்தநெய்யுந்
திரியுஞ்சென்றற்றபோழ்தேதிருச்சுடர்தேம்பினல்லா
லெரிமொய்த்துப்பெருகலுண்டோவிருவினைசென்றுதேய்ந்தாற்
பரிவுற்றுக்கெடாமற்செல்வம்பற்றியாரதனைவைப்பார்.

புரி - வடம். கோல் - தண்டு.

இ - ள். நெய்யுந்திரியுமாண்டபொழுதே அழகியவிளக்கு அவிதலன்றி நெருப்புச்செறிந்து மிகுதலுண்டோ! அதுபோலப் பெரிய நல்வினைமாண்டாற் செல்வங்கெடாதபடி அதனைப் பிடித்துவைப்பார யாவருமில்லை, ஆதலின், இது நின்செயலன்று காணென்றானென்க.

*“முன்னே - மொய்யமர்பலவும்வென்றான்” ஆயினுந் தன்புதல்வர் சூழக்கிடக்கின்றமைகண்டுஞ் செற்றமிக்கு மேற்செல்லாது இங்ஙனங்கூறினான்; அரசகுலமன்மையின். (௨௪௫)

நல்லொளிப்பவளச்செவ்வாய்நன்மயிரெயிறுகோலி
வில்லிடாக்குவிரனஞ்சினுயென்னவேந்தன்
வெல்வதுவிதியினாகும்வேல்வரினிமைப்பேனாயிற்
சொல்லிநீநகவும்பெற்றாய்தோன்றன்மற்றென்னையென்றான்.

இ - ள். சீவகன்அதுகேட்டு, இவன் இங்ஙனங் குறைந்தேகிற்பனாயிற் றோறலரிதென்றுகருதி அவற்குச் செற்றமிகும்படி பெருகச்சிரித்து நீயஞ்சினாய்காணென்ன,

* நாமகளிலம்பகம், ௧௭௬.

வேந்தன் கூறுவான்; வெல்லுந்தன்மை விதியாலுண்டாம்; அதுயான்கூறேன்; தோன்றல்! நின்கையில் வேல்வந்தால் இமைப்பேனாயின், ஈண்டு என்னைக்கூறும் அஞ்சினானென்றசொல்லை யாண்டுக்கூறி நீசிரிக்கவுங்கடவையென்றானென்க.

பெற்றாய் - காலமயக்கம். (உகசு)

க. பஞ்சிமெல்லடியினார்தம்பாடகந்திருத்திச்சேந்து
நெஞ்சுநொந்தழுதகண்ணீர் துடைத்தலினிறைந்தகோல
வஞ்சனக்கலுழிபஞ்சேறாடியகடகவண்கை
வெஞ்சிலைகொண்டுவெய்யவுருமெனமுழங்கிச்சொன்னான். (உகஎ)

வே று.

உ. இல்லாளையஞ்சிவிருந்தின்முகங்கொன்றநெஞ்சிற்
புல்லாளனாகமறந்தோற்கிலெனப்புகைந்து
வில்லாளழுவம்பிளந்திட்டுவெகுண்டுநோக்கிக்
கொல்யானையுந்திக்குடைமேலுமோர்கோறொடுத்தான்.

இவையிரண்டுமொருதொடர்.

க. திருத்திச் சிவந்து கண்ணீர் துடைத்தலின், அஞ்சனமாகிய கலக்கத்தையுடைய சேற்றையாடிய நிறைந்த கோலத்தையுடையகை.

உ. அழுவம் - பரப்பு.

இ - ள். அங்ஙனங்கூறிக் கையிலே வில்லையெடுத்து உருமெனமுழங்கி மறந்தோற்றேனாயின், மனையாளையஞ்சி விருந்தின்முகத்தை மகிழ்ச்சிசெய்யாதுவிட்ட புல்லாளனாகக்கடவேனென்று வஞ்சினஞ்சொன்னான்; சொல்லிப் புகைந்து பிளந்து நோக்கி யுந்திச் சச்சந்தனைக்கொன்ற தவற்றின்மேலே சீவகனையுங்கொல்லக்கருதி ஓரம்பைத்தொடுத்தானென்க.

சச்சந்தனைக்கொன்று குடைகவித்தலிற் குடையிட்டுநிற்பதன்மேலுமெனவே அவனைக்கொன்றமை கூறிற்றாம். இனி வழங்கினானென்றுபாடமோதிச் சீவகனெய்தமைபொருது கட்டியங்காரன்அம்புதொடுத்தானென்பாருமுளர். (உகஅ)

தொடுத்தாங்கவம்புதொடைவாங்கிவிடாதமுன்ன
மடுத்தாங்கவம்புஞ்சிலையும்மதனாணுமற்றுக்
கடுத்தாங்குவீழக்கதிர்வான்பிறையம்பினெய்தான்
வடித்தாரைவெள்வேல்வயிரம்மணிப்பூணினானே.

இ - ள். சீவகன், கட்டியங்காரன் ஆங்குத்தொடுத்த அவ்வம்பைத் தொடையை நிரம்பவாங்கி விடுதற்குமுன்னே, அவ்வம்புமுதலியன சேர அவ்விடத்தேயற்றுக் கோபித்துப்போனாற்போல வீழும்படி எய்தானென்க.

வடித்ததாரை. தொடுத்த, வடித்தவென்பன விகாரம். கடுத்துக் கடுகியென்றுமாம். (உகக)

அம்புஞ்சிலையுமறுத்தானென்றழன்றுபொன்வாள்
வெம்பப்பிடித்துவெகுண்டாங்கவன்றேரின்மேலே
பைம்பொன்முடியான்படப்பாய்ந்திடுகென்றுபாய்வான்
செம்பொன்னுலகினிழிகின்றவொர்தேவனொத்தான்.

இ - ள். பொன்முடியான் அம்பையும்வில்லையும் அவனறுத்தானென்று வெகுண்டு வாளையழன்று வெம்பும்படிபிடித்துச் சீவகன் றேரின்மேலே பட்டுக்கிட அத்தேரிடத்தே பாயக்கடவேனென்று பாய்கின்றவன் யானையினின்றும் பொழுது, நல்வினையுலந்து பொன்னுலகினின்றும் போதுகின்ற ஒருதேவனை யொத்தானென்க.

மொய்யார்குழலார்முலைப்போர்க்களமாயமார்பிற்
செய்யோன்செழும்பொற்சரஞ்சென்றனசென்றதாவி
வெய்தாயிழியாவெருவத்துவர்வாய்மடியா
மையார்விசும்பின்மதிவீழ்வதுபோலவீழ்ந்தான்.

இ - ள். மாதர்முலைக்குப் போர்க்களமாகியமார்பிலே சீவகனம்புகள்சென்றனவாக, உடனேஉயிர்சென்றது; அப்பொழுது வாய்மடித்துக் கண்டார்வெருவ வானை மறைத்து விசும்பினின்றும் மதிவீழ்ந்தன்மைபோல வீழ்ந்தானென்க.

சச்சந்தனை * "வெஞ்சுடரினுண்டையவித்தான்" என்று ஞாயிற்றினுவமை கூறிப்போந்து, அவன்பதலவன் அவளரசையமாதலின் சச்சந்தன் சீவகனைச்செய்தானென்றுஞாயிறாக்கி அஞ்ஞாயிற்றின்முன்னர் மதி நில்லாதேகெடுமென்பதுதோன்ற மதிவீழ்வதுபோல வீழ்ந்தானென்றார். மேகம் யானைக்குவமைகூறினார். இது, சச்சந்தன்பட்ட அன்றுதொட்டு இன்றளவும் கட்டியங்காரன் கொடுங்கோலிருள் அரசாண்டதன்மையும், அதுதான் நீராகக்காலத்தே இருள்பரந்திருப்ப மதிபட்ட தன்மைத்தென்றுங்கூறினார்.

வேறு.

கட்டியங்காரனென்னுங் கலியரசழிந்ததிங்குப்
பட்டவிப்பகைமைநீங்கிப்படைத்தொழிலொழிகவென்றுக்
கொட்டினர்முரசமள்ளராரர்த்தனர்குருதிக்கண்ணீர்
விட்டழுதவன்கணார்வமண்மகணீங்கினாளே.

இ - ள். கட்டியங்காரனென்னுங் கலியாகியவரசு பட்டது; இனி நீங்கிப் போர்த்தொழிலொழிகவென்று அவ்விடத்தே முரசைக்கொட்டக் கேட்டு வீரராரர்த்தனர்; அப்பொழுது மண்மகள் குருதியாகியகண்ணீரை அழுது அவன்கண் ஆர்வத்தைக் கைவிட்டாளென்க.

ஒல்லைநீருலகமஞ்சவொளியுமிழ்பரிதிதன்னைக்
கல்லெனக்கடலினொற்றிக்கவுட்படுத்திட்டுநாகம்

---

* நாமகளிலம்பகம், உகூ.

பல்பகல்கழிந்தபின்றைப்பன்மணிநாகந்தன்னை
வல்லைவாய்போழ்ந்துபோந்தோர்மழகதிர்நின்றதொத்தான்.

இ - ள். நாகம் ஒளிப்பரிதியை உலகமஞ்சும்படி கடலிலே கடுகவிழுங்குகையினாலே அப்பன்மணிநாகந்தனைப் பலநாட்சென்றபின்பு வாயைப்பிளந்துபோந்து அக்கதிர்நின்ற தன்மையையொத்தானென்க.

அது - *"மந்திரிமாநாகமுடன்விழுங்கிற்று" என்றதனை. இது தந்தை புதல்வனைப்பிறப்பனென்னும் விதிபற்றிக்கூறினார். (௨௨௪)

கோட்டுமீன்குழாத்தின்மன்னரீண்டினார்மன்னர்சூழ்ந்தார்
மோட்டுமீன்குழாத்தினெங்குந்தீவிகைமொய்த்தசூழ்ந்த
மாட்டுநீர்க்கடலொலித்ததொங்காவெனார்மாய்
கேட்டுநீர்நிறைந்துகேடில்விசயைகண்குளிர்ந்தனவே.

கோட்டுமீன் - சுறா. மோட்டுமீன் - உடு. முத்தையலைக்கின்றநீர் இன்சொல்- பொரு. கனவுபுணையாக இறந்துபடாதிருந்தலிற் கேடிலவிசயையென்றார்.

இ - ள். மாளரிமன்னர், அரசர்சூழ்ந்தார், விளக்குமொய்த்தன, கடலார்த்தது, விசயை வெற்றியொழுங்கைக்கேட்டு அரசனையிழந்ததற்றுக் கண்ணீர்நிறைந்து பின்பு குளிர்ந்தனவென்க.

அவன்புதல்வனைக்கொன்று பின் அவனைக்கொன்றதனை யொழுங்கென்றார். ()

அணிமுடியரசமாலையாழுதிவாள்களினன்று
மணிபுனைகுடத்தினெய்த்தோர்மன்னனுநீர்மருகாட்டிப்
பணைமுலைப்பைம்பொன்மாலைப்பாசிழைப்பூமித்தேவி
யிணைமுலைபோகமாகநுகரியவெய்தினானே.

இ - ள். முடியிணையும் மாலையிணையுங் குருதிதோய்ந்த வாள்களாயுமுளை நெருப்பினது கொழுந்தென்னுமரசர், சீவகனை மணிபொற்குடத்தின் மன்னனுநீராலே யாட்ட, அவன் நிலமகள்முலையைப் பொருவுற நுகர்தற்கு அவளைப்பொருந்தினானென்க.

ஆட்டி - ஆட்ட. முலையிணையும், மாலையிணையும், குழையிணையுமுடைய நிலமகள். இது வீராபிடேகம். இனி அரசனைக்கொண்டு வாள்களென்னுங்குடத்தின் நெய்த்தோராகிய மன்னுநீராலே மண்மகளையாட்டுவித்து அவளையெய்தினானென் பாருமுளர். (௨௨௫)

மண்மகளிலம்பகமுற்றிற்று.

ஆ. கவி ௨,௬௨௫.

* நாமகளிலம்பகம், ௨௬௩.

முருகனை; *"அவுணர் நல்வல மடங்கக் கவிழிணர்-மாமுத றடிந்த" என்றார்; தேவர் இவனை முருகனென்று ஒருபெயர்கூறினார்; மேலும் † "திருமால்போந்தான்" என்பர்.

இ - ள். கூடின ஆரமுதலியவற்றையுடைய நல்லார் சீவகனையேத்திக் கூடாரங்களிலும் மாடங்களிலும் மயில்போற்றிரண்டாரென்க.

கூடாரம் - நெற்கூடுகள். (உ)

வேறு.

மாலைச்செற்றான்மக்களொடெல்லாமுடனேயிம்
மாலைச்செற்றான்வைந்நுனையம்பின்னிவனென்பார்
மாலைக்கின்றான்மாய்ந்ததுமாயாப்பழியென்பார்
மாலைக்கேற்றவார்குழல்வேய்த்தோண்மடநல்லார்.

மால் - சச்சந்தன்.

இ - ள். நல்லார், கட்டியங்காரனை மக்களோடு எல்லாருஞ்சேர இம்மாலைக் காலத்தே யம்பாலே யிவன் கொன்றானென்பார்; குணமாலைக்கு மாயாப்பழி யின்றான் மாய்ந்ததென்பாராயினாரென்க.

இவளைத்தீண்டித் துன்பமுற்றானென்னும்பழி. பூமாலைக்கேற்றகுழல். (௩)

நாகநெற்றிநன்மணிசிந்துமருவிபோ
னாகநெற்றிநன்மணியோடைநறவிம்மு
நாகநெற்றிநன்மலர்சிந்தநளிர்செம்பொ
னாகநெற்றிமங்கையரொத்தார்மடநல்லார்.

இ - ள். மணியையுடைய மலைத்தலையிலே வந்துவிழும் அருவிபோலே மணியோடையையுடைய யானையினெற்றியிலே சுரபுன்னைத்தலையிலுண்டான பூக்களைச் சொரிதலாலே, மாடங்களின்மேல்நின்ற மடநல்லார், சுவர்க்கத்திடத்திற் பூச்சொரிகின்ற மங்கையரை யொத்தாரென்க (௪)

கோடிகோடிங்கூம்புயர்நாவாய்நெடுமாடங்
கோடிப்பட்டிற்கொள்கொடிகூடப்புனைவாருங்
கோடித்தானைக்கொற்றவற்காண்பானிழைமின்னுக்
கோடிச்செம்பொற்கொம்பரின்முன்முன்றொழுவாரும்.

இ - ள். கோளாலே திக்குகளிலே யோடுகின்ற நாவாய்தந்த புதியபட்டினாற் றைத்த கொடிகளை மாடங்களிலே சேரக் கட்டுவாரும், அவன்றன்னைக் காணவேண்டிக் கொம்புபோலேவளைந்து கொற்றவனைத் தொழுவாருமாயினாரென்க.

இருபதுபட்டிற்குக் கோடியென்று பெயராக்கியுமுரைப்ப. கோடியென்னும் எண்ணையுடைய படை. (௫)

* திருமுருகாற்றுப்படை. † பூமகளிலம்பகம், ௪௯.

அம்புகைவல்வில்லார்கழன்மன்னர்திறலேத்த
வம்புகைக்கொண்டாலினிவற்கீண்டுநிகராவா
ரம்புகையார்ந்தவந்துகிலல்குல்லவிர்கோதா
யம்புகைக்காணுமையனைக்கையிற்றொழுதென்பார்.

இ-ள். அம்பையுகைக்கின்ற வில்லையுடைய வீரரேத்த உலகையிங்ஙனங் கொண்டால் இனி யிவற்கு ஈண்டு நிகராவார் யாரென்பாரும், கோதாய்! ஐயனைக் கையாற்றொழுது கையில்வளையைக் காணேமென்பாருமாயினரென்க.

அம்புசூழ்தலின், அம்பென்று உலகிற்குப் பெயராயிற்று; ஆகுபெயர். அழகிய புகையார்ந்த துகில். (௬)

மைத்துனநீண்டமாமணிமாடம்மிசையேறி
மைத்துனநீண்டவாட்டடங்கண்ணார்மலர்தூவ
மைத்துனமன்னர்மால்களிறேறிப்புடைசூழ
மைத்துனநீண்டமாமணிவண்ணனவனொத்தான்.

மைத்துன்ன-மேகநெருங்க. வாள் மைத்து உன்னநீண்ட கண்-வாள் ஒளிமழுங்கி நினைகும்படி நீண்டகண், மைத்தல்-ஒளிகெடுதல், * "மைம்மைப்பினன்று குருடு" என்றாற்போல. மைத்துன்ன - கருமைபொருந்த

இ-ள். மாடத்தையேறி மகளிர்மலர்தூவ மைத்துனவரசர் சூழச் செல்கின்ற அவன் மணிவண்ணனை யொத்தானென்க. (௭)

வேறு.

ஊதுவண்டரற்றும்முயர்தாமரை
போதுபூங்கழுநீரொடுபூத்துடன்
விரிமல்கினபோன்மிளிர்வேற்கணு
மாதரார்முகப்பூவுமலர்ந்தவே.

இ-ள். தாமரைப்பூக் கழுநீரோடே பூத்து மல்கினபோலே மகளிர் முகப் பொலிவும் எங்கும் பரந்தனவென்க (௮)

வினைவித்தகவ்வேந்தடுவீங்குதோள்
நாளுங்காரிகையார்கதிர்வெம்முலைப்
பூணுமாரமுமின்றுபொன்பூத்தலர்ந்
தியாணருரமராபதிபோன்றதே.

இ-ள். ஊர் காரிகையாரையும், அவரணிந்த கலங்களையுந் தானீன்று, வேய்ந்த

* பழமொழி, ௧௮௮:—இம்மைப் பழியு மறுமைக்குப் பாவமுந் - தம்மைப் பரியார் தமரா யடைந்தாரிற் - செம்மைப் பகைகொண்டு சேராதார் தீயரோ - மைம் மைப்பி னன்று குருடு. மைம்மைப்பினன்றுகுருடு என்றது - தோன்றிற்றுந் தோன் றாதுமாங் கண்ணின் றன்மையினுங் குருட்டுக்கண்ணின்றன்மையே நன்றென்றவாறு.

பொன்னாற்பொலிவுபெற்றுப் பரத்தலிற் சீவகனை வந்துகாண்பதோர் அமராபதியை ஒத்ததென்க. (௯)

தேம்பெய்கற்பகத்தாரவன்சேர்தலும்
பூம்பெய்கோதைப்புரிசைக்குழாநல
மோம்புதிங்களுலந்துசுடர்கண்டு
வாம்பலாய்மலர்க்காடொத்தழிந்ததே.

இ - ள். சீவகன் கோயிலைச்சேர்ந்தவளவிலே, பெய்யப்பட்ட பூங்கோதையை யுடைய புரிசையிடத்திருந்த மகளிரழகு, மதிபடுதலின் இளஞாயிற்றைக்கண்ட ஆம்பலினுடைய குவிந்த மலாத்திரளையொத்துக் கெட்டதென்க. (௧௰)

வேறு.

மாகம்முழக்கின்மணிநாகம்பதைபபவேபோ
லாகம்மறவரசன்கோயில்புக்கம்பொன்மாலே
தோகைம்மடவார்துவர்வாய்துடித்தஞ்சவெம்பா
வேகம்முடைத்தாய்விழியாதொழிநீசுகென்றார்.

இ - ள். மடவார் விசும்பில்இடியோசையாலே பாம்புகள் பதைப்பனபோலே யாம்படி, மறவா கோயிலிலேபுக்கு, இவ்விடத்தினின்றும் ஏகுகவென்றாரென்க.

அப்பொழுது அவா துடித்து வெம்பி யஞ்ச, விழித்துக் கோபித்துக் கூறினரென்க. அழாமற்பொருமுதலிற் றுடித்தது. (௧௧)

செய்பாவையன்னார்சிலம்பார்க்குமென்சீறடியார்
செய்பூந்தவிசின்மிசையல்லதுசேறலில்லார்
மையார்ந்தகண்ணீர்மணிப்பூண்முலைபாயவிம்மா
வெய்தாமடவார்வெறுவெந்நிலத்தேகினாரே.

இ - ள். அதுகேட்டதிருவையொப்பார சீறடியார சேறலிலராகிய மடவார, கண்ணீர் முலையிலேபாயும்படி பொருமி வெய்தாகவழுது வெவ்விய வெறுநிலத்தே போயினாரென்க. (௧௨)

நெருப்புறுபோலநிலமோந்துழிச்செய்யவாகிப்
பருக்கென்றகோல*மரற்பல்பழம்போன்றுகொப்புள்
வருத்தம்மிழற்றிப்பசும்பொற்சிலம்போசைசெய்யச்
செருக்கற்றபஞ்சிமலர்ச்சீறடிநோவச்சென்றார்.

இ - ள். அங்ஙனமேகுதலின், நிலமோந்துழி நெருப்புற்றபோலச் செய்யவாகுதலாலே வாடின இலவமலரையொத்த சிற்றடியில் மரற்பழம்போன்று கொப்

* அரக்குருக் கன்ன செந்நிலனொதுங்கலிற் - பரற்பகை யுழந்த நோயொடு சிவணி - மாற்பழுத் தன்ன மறுகுநீர் மொக்குள், என்றார் பொருநராற்றுப்படையிலும்.

௨. மாலேறனையாளொடுமக்களுக்கஃதோவென்னா
வேலேறுபெற்றபிணைமானெனமாழ்கிவீழ்ந்து
சேலேறுசின்னீரிடைச்செல்வனபோன்றுசெங்கண்
மேலேறிமூழ்கிப்பிறழ்ந்தாழ்ந்தவிறந்துபட்டாள்.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். உழையளைநோக்கிக் கட்டியங்காரனால் அருள்பெற்றுப் பட்டமணிந்தவள் இவர்களுள் யாவளென்று சீவகன்கேட்க, நீகேட்டவட்குக் களத்திற்செய்தி கூறுகின்றவர் அவள்பொறுக்கும்படிகூறாதே முடிகள் சூழ்ந்துகிடக்கக் கட்டியங்காரன்றானும் மக்களும் பட்டாரென்றுகூறினார்; அதுகேட்டு அவள் ஏறனையாளொடு மக்களுக்குமுற்றது அஃதோவென்னா இறந்துபட்டாள்காணென்றாரென்க.

யாவளென்றுவினவ இறந்துபட்டாளென்று உத்தரங்கூறினார். என்றாரென வருவிக்க. வட்டத்தார். மால்-பெருமை. அஃதோவென்றது - *"மன்னா தீ-யீண்டு தங்கிளையோடு மெரித்திடும்" என்று அமைச்சர்கூற, அவன் கேளாதிருந்தமை தான் கேட்டிருத்தலின், அது பின்பு பயந்தபடியோவென்றாள். சேல் வற்றின சின்னீரிற் கடிதிற்சேறலின்றி மெல்லச் செல்லுமவைபோற் கண்ணும் மெல்லவேறி மறிந்து கீழ்மேலாய் வீழ்ந்தன வென்றறிந்து பட்டசெய்திகூறினார். (௧௮)

ஐவாயரவினவிராரழல்போன்றுசீறி
வெய்யோனுயிர்ப்பின்விடுத்தேனென்வெகுளிவெந்தீ
மையாரணலமணிநாகங்கலுழன்வாய்ப்பட்
டுய்யாவெனநீருடன்றுள்ளமுருகல்வேண்டா.

இ - ள். பாம்பினது நஞ்சு ஒன்றற்கு உயிருள்ளளவும் வெகுண்டு, அவ்வுயிர் போயபின்பு அவ்வெகுட்சி போமாறுபோலே யானுங் கட்டியங்காரன் உயிர்போய பின்னரே என் வெகுளியாகிய தீயையும் போகவிட்டேன்; இனி நீர், கருமைநிறைந்த கழுத்தையுடைய நாகங் கருடன்வாய்ப்பட்டு உய்யா; அதுபோல் எமக்கும் இனியுய்தலின்றென்றுகருதி யுள்ளம்வருந்தி யுருகவேண்டாவென்றானென்க. (௧௯)

மண்கேழ்மணியினுழையுந்துகிலுள்வாய்த்த
நுண்கேழ்நுசுப்பின்மடவீர்நும்மைநோவசெய்யே
னொண்கேழ்க்கழுநீரொளிமுத்தமுமிழ்வதேபோற்
பண்கேழ்மொழியீர்நெடுங்கண்பனிவீழ்த்தல்வேண்டா.

இ - ள். துகிலினுள்ளேமறையும் மண்ணுதல் பொருந்தின மணிபோல்வாய்த்த மடவீர்! யான் நும்மை நோவனவற்றைச் செய்யேன்; ஆதலால், மொழியீர்! இனிக் கழுநீர் முத்தைக் கால்வதுபோல அழல்வேண்டாவென்றானென்க.

போர்த்து நின்றதற்கு உவமை. நூலிற்காட்டில் நுண்ணிய நுசுப்பினையுடைய மடவீர். கேழ் - நிறம். (௨0)

* நாமகளிலம்பகம், ௨௨௧.

என்னுங்கட்குள்ளமிலங்கிர்வளைக்கையினீரே
மன்னிங்குவாழ்வுதருதும்மவற்ருனும்வாழ்மின்
பொன்னிங்குக்கொண்டுபுறம்போகியும்வாழ்மினென்ருன்
வின்னுங்கவீங்கிவிழுக்கந்தெனநீண்டதோளான்.

இ - ள். வில்லைவலிக்கவீங்கி நீண்டதோளான், ஈரப்பட்ட வளைக்கையினீரே! நும்மன்னன் நுமக்குத்தந்த சீவிதங்களை யாமும் இவ்விடத்தே தருவேம்; அவற்றைக் கொண்டு ஈண்டிருந்தும் உயிர்வாழ்மின்; அன்றி ஈங்குநின்றும் பொன்னைக்கொண்டு நுஞ்சீவிதங்களிலே போயும் உயிர்வாழ்மின்; இரண்டில் நுங்கருத்தியாது? கூறு மினென்ருனென்க. (உ௬)

நீதநும்முவேலான்றிருவாய்மொழிவான்முழக்கம்
வாய்த்தங்குக்கேட்டுமடமஞ்ஞைக்குழாத்தினேகிக்
காய்த்தெங்குசூழ்ந்தகரும்பார்தம்பதிகள்புக்கார்
சேய்ச்செந்தவிசுநெருப்பென்றெழுஞ்சீறடியார்.

இ - ள். மிகச்சிவந்த தவிசையும் நெருப்பென்றுநீங்குஞ் சீறடியார், நியைப் புறப்படவிடும் வேலானுடைய வார்த்தையாகிய வான்முழக்கத்தை அவ்விடத்தே வாய்ப்பக்கேட்டு, போவேமென்றுகூறி, மயிற்குழாம்போலே மகிழ்ந்துபோய்த் தம் பதிகளிலே புக்காரென்க.

மயில் மழைக்கு மகிழ்தலின், மயில்போலென்ருர். (உ௭)

காதார்குழையுங்கடிசங்கமுங்குங்குமமும்
போதாரலங்கற்பொறையும்பொறையென்றுநீக்கித்
தாதார்குவளைத்தடங்கண்முத்தரும்பனிம்மா
மாதாரமயிலன்னவாசண்பகச்சாம்பலொத்தார்.

மாலையாகிய பாரம்.

இ - ள். காதன்மிகுந்த மயிலன்னவர், தங்கணவனையிழத்தலிற் குழைமுதலிய வற்றைப் பாரமென்றேநீக்கி அழுது சண்பகப்பூவாடலையொத்து கோன்மைமேற் கொண்டிருந்தாரென்க. (உ௮)

ஆய்பொற்புரிசையணியாரகல்கோயிலெல்லாங்
காய்பொற்கடிகைக்கதிர்க்கைவிளக்கேந்திமள்ளர்
வேய்பொன்னறையும்பிறவும்வினாந்தாபந்தபின்றைச்
சேய்போற்கமலமடந்தைதொழச்சென்றுபுக்கான்.

கடிகை - துணித்தது; என்றது பொன்போர்த்தமூங்கிற்குழாயை.

இ - ள். மள்ளர், கடிகையோடேகூடிய விளக்கையேந்திட புரிசைசூழ்ந்தகோயிலையும் பொன்னறையையும் பிறவிடங்களையுமெல்லா [illegible] சோதித்துக் காவலிட்டபின்பு திருமகள் வணங்க அவ்விடத்தே முருகமன்னனச் சென்றுபுக்கானென்க. ()

முலையீன்றபெண்[illegible]த்திரடாமங்கடாழ்ந்[illegible]
மலையீன்றமஞ்சின்மணிப்பூம்புகைமல்கிவிம்மக்

கலையின்றசொல்லார்கமழ்பூவணைகாவல்கொண்டார்
கொலையின்றவேற்கண்ணவர்கூடியமார்பற்கன்றே.

தாழ்ந்து - தாழ. முலைபோலுங் காயையின்ற பனைபோலுந்தாமம். மலையீன்ற மஞ்சுபோலே மாடமுற்றும் புகைநிறைந்து புறம்போத.

இ - ள். கலைகளைத் தோற்றுவித்த சொல்லார் சீவகற்குப் பள்ளியிடத்தைத் தாழ விம்மக் காத்தலை மேற்கொண்டாரென்க. (உ௫)

போர்க்கோலநீக்கிப்புகழ்பொன்னினெழுதப்பட்ட
வார்க்கோலமாலைமுலையார் மண்ணுறுப்பவாடி
நீர்க்கோலஞ்செய்துநிழல்விட்டுமிழ்மாலைமார்பன்
றூர்க்கோலமான்றேர்த்தகைமாமற்றொழுதுசொன்னான்.

இ - ள். முத்தமாலை நிழல்வீசுமார்பன் போர்க்கோலத்தைப்போக்கிப் பொன்னாலேயெழுதப்பட்ட கச்சையுங் கோலத்தையும் மாலையையுமுடைய முலையார் நீராட்டவாடி அதற்குத்தக்க கோலத்தைச்செய்து தூசியினழகினையுந் தேர்த்திரளையுமுடைய மாமனைவணங்கி ஒருமொழிகூறினானென்க.

களவேள்வி முடித்துக் களத்தினின்றும் வருதலிற் பின்னும் மஞ்சனமாடினான். (உ௬)

எண்கொண்டஞாட்பினிரும்பெச்சிற்படுத்தமார்பர்
புண்கொண்டுபோற்றிப்புறஞ்செய்கெனப்பொற்பநோக்கிப்
பண்கொண்டசொல்லார்தொழப்பாம்பணையண்ணல்போல
மண்கொண்டவேலானடிதைவரவைகினானே.

ஞாட்பின், இன் - பொரு.

இ - ள். தேவாசுரம், இராமாயணம், மகாபாரதமென்கின்றபோரில் வீரர் புண்படுமாறுபோலப் புண்பட்டவீரர் புண்ணைப்போற்றிக்கொண்டு காத்தருளுவீராக வென்றுகூறினான்; கூறித் தானுங் கூடப்போய்ப் பொற்பநோக்கிப் பின்பு பள்ளிகொண்டானென்க.

பலபுண்களையுமறிந்து பரிகரித்தமையால் அவனைக்கூறினான். செய்க - வேண்டுகோட்பொருட்டுவந்த வியங்கோள். இனி அப்போரோடு எண்ணுதல்கொண்ட போரென்று தேவர்கூற்றுமாம். * "மண்கருதும்வேலான்" என்றதற்கு மண்கொண்டவேலானென்றார். (உ௭)

வேறு.

வாள்களாலேதுகைப்புண்டுவளைபுண்கூர்ந்தபோல்வேழ
நீள்கால்விசையகேமித்தேரிமைத்தார்நிலத்திற்காண்கலாத்
தாள்வல்புரவிபண்ணைவிழ்த்தயானையரவித்தாங்கன்ன
கோள்வாயெஃகமிடம்படுத்தகொழும்புண்மார்பராயாவுயிர்த்தார்.

கூர்ப்பு - மிகுதி. ஆங்கு - அப்பொழுது.

* பதுமையாரிலம்பகம், ௬௦.

இ - ள். வேழமும், காற்றுப்போலும் விசையவாகியதேரும், இமைத்தவர் பின்பு நிலத்திற்காணாத புரவியும், பண்ணவிழ்த்தயானை கொட்டாவி கொண்டாலனைய வாம்படி வாளிடம்படுத்தின புண்ணையுடைய மார்பரும் இளைப்பாறினாரென்க. (உ௯)

கொழுவாய்விழுப்புண்குரைப்பொலியுங்கூந்தன்மகளிர்குழைசிதறி
யழுவாரழுகைக்குரலொலியுமதிர்கண்முரசின்முழக்கொலியுங்
குழுவாய்ச்சங்கின்குரலொலியுங்கொலைவல்யானைச்செவிப்புடையு
மெழுவார்யாழுமேத்தொலியுமிறைவன்கேளாத்துயிலேற்றான்.

இ - ள். அழகிய இடும்பைதரும் புண்வாய்காற்றைப் புறப்படவிடுகின்ற ஒலியையும், பட்டவர்க்கு மகளிரழுகின்ற அழுகைக்குரலிற்பிறந்த ஒலியையும், முரசினது நடுங்கினகண் முழங்குதலிற்பிறந்த ஒலியையும், திரண்டவாயையுடைய சங்கினது முழக்கத்தாலெழுந்த ஓசையையும், கொந்தயானையது செவிப்புடையையும், எழுவார்யாழையும், ஏத்துகிறஒலியையும் இறைவன்கேட்டுத் துயிலுணர்ந்தானென்க. (உக)

தொடித்தோளமகளிரொருசாரார்துயரக்கடலுளவர்நீந்த
வடிக்கண்மகளிரொருசாரார்வரம்பிலின்பக்கடனீந்தப்
பொடித்தான்கதிரோன்றிரைநெற்றிப்புகழ்முப்பழநீர்ப்பளிங்களை இக்
கடிப்பூமாலையவரேந்தக்கமழ்தாமரைக்கல்கழீஇயினான்.

இ - ள். பட்டவருடைய மகளிரொருகூற்றார் துன்பக்கடலிலே நீந்தாநிற்க, வென்றவர்மகளிரொருகூற்றார் இன்பக்கடலிலே நீந்தாநிற்கக் கதிரோன் கடலிலே தோன்றினான்; அப்பொழுது அவன் கடு, நெல்லி, தான்றிப்பழநீரிலே கருப்பூரத்தைக் கரைத்து மகளிரேந்தக் கண்ணைக் கழீஇனானென்க (௩௦)

புனைவற்றொழுதுமுடிதுளக்கிப்பரந்துசெம்பொனகொளவிசி
நினையலாகாநெடுவாழ்க்கைவென்றிக்கோலம்விளக்காகப்
புனையப்பட்டவஞ்சனநதைப்புகழவெழுதிப்புனைபூணான்
கனைவண்டார்கருமலங்கலுங்கலனுமேற்பத்தாங்கினான்.

இ - ள். பூணான் பிறரால் பெறலாமென்று கருதலாகாத செல்வத்திற்கும், வெறறிக்கோலத்திற்கும் விளக்கமாம்படி முனைவனை யஞ்சலிசெய்து வணங்கித் தானம் பண்ணிக் கைசெய்யப்பட்ட அஞ்சனத்தையெழுதி யலங்கலையுங் கலத்தையும் பொருந்தத் தாங்கினானென்க. (௩க)

முறிந்தகோலமுகிழ்முலையார்பரவமொய்யார்மணிச்செப்பி
னுறைந்தவெண்பட்டுடுத்தொளிசேர்பஞ்சவாசங்கவுட்கொண்டு
செறிந்தகழுநீர்ப்பூப்பிடித்துச்சேக்கைமரீஇயசிங்கம்போ
லறிந்தார்தமக்குமங்கனையண்ணல்செம்மாந்திருந்தானே.

இ - ள். அண்ணல், தளிர்த்தகோலத்தையுடைய முகிழ்த்தமுலையார்பரவ உடுத்துக கவுட்கொண்டு பூவைப்பிடித்து இக்கோலத்தாலே அறிந்தார்க்கும் அங்கனே

யாய், ஆண்மையினாற் சேக்கையை மரீஇயதோர் சிங்கம்போலே அச்சேக்கையிலே வீற்றிருந்தானென்க.

மெலியவும் பாடம். இது மற்றைநாளிற்சமயம். (௬௨)

வார்மீதாடிவடஞ்சூடிப்பொற்பார்ந்திருந்தவனமுலையா
ரேர்மீதாடிச்சாந்தெழுதியிலங்குமுந்நீர்வலம்புரிபோற்
கார்மீதாடிக்கலம்பொழியுங்கடகத்தடக்கைக்கழலோனைப்
போர்மீதாடிப்புறங்கண்டபுலால்வேன்மன்னர்புடைசூழ்ந்தார்.

ஆடி - ஆட.

இ - ள். கச்சையறுத்துச் சூடி யார்ந்து அடிபரந்த முலையாரது அழகு மேலாம்படி சாந்தையுமெழுதிக் காரைவென்று சங்கநிதிபோற் கலத்தையும்பொழியுங் கையினையுடைய கழலோனைப் போரைவென்று பகைவரைப் புறங்கண்ட அரசர் சூழ்ந்தாரென்க. (௬௩)

வேறு.

தொல்லைநால்வகைத்தோழருந்தூமணிநெடுந்தேர்
மல்லற்றம்பியுமாமனுமதுவிரிகமழ்தார்ச்
செல்வன்றாதையுஞ்செழுநகரொடுவளநாடும்
வல்லைத்தொக்கதுவளங்கெழுகோயிலுளொருங்கே.

இ - ள். தோழருந் தம்பியும் மாமனுந் தாதையும் பழையவூரும் நாடுங் கோயிலிலே விரையத் திரண்டனவென்க.

நந்தட்டன் சிறந்தமையிற் கூறினார். இனைவிராய் எணணி அஃறிணையான்முடிந்தன. பன்மையொருமைமயக்கம். (௬௪)

துளங்குவெண்மதியுந்தவெண்கதிர்தொகுத்தமைபோல்
விளங்குவெள்ளியம்பெருமலையொழியவந்தெழிலார்
வளங்கொண்மாநகர்மழகதிர்சூழ்இயினபோலக்
களங்கொண்டண்டினர்கதிர்முடிவிஞ்சையர்பொலிந்தே.

இ - ள். மதிசொரிந்தகலைக் குவித்த தன்மைபோல் விளங்கும்வெள்ளிமலையிலே கலுழவேகனிருப்ப, ஒழிந்த விஞ்சையரெல்லாரும் வந்து மாநகரை யிடங்கொண்டு இளங்கதிர் திரண்டாற்போலே மாநகரிலே பொலிந்து நண்டினாரென்க.

ஒழிய - தங்க. (௬௫)

க. எண்ணமென்னினியெழின்முடியணிவதுதுணிமின்
கண்ணனாரொடுகடிகையும்வருகெனவரலும்
பண்ணினார்முடிபழிச்சியமணிபொனிற்குயிற்றி
யண்ணலாய்கதிரலம்வரப்புலமகணகவே. (௧௬)

உ. விரியுமாலையன்விளங்கொளிமுடியினன்றுளங்கித்
திருவின்மால்வரைக்குலவியதனையதோர்தேந்தா

ரருவிபோல்வதோராரமுமார்பிடைநடப்ப்
வெரியும்வார்குழையிமையவனொருவன்வந்திழிந்தான்.

இவையிரண்டுமொருதொடர்.

இனியென்றது-காலங்கழிக்குமதன்றென்றவாறு. என்றதனானே புரோகிதன் முதலாகத் துறைதோறும் வரிக்கவேண்டுவாரை வரித்ததுவும், அங்குரார்ப்பணம் அதிவாஸமுதலிய சடங்குகளெல்லாம் நிகழ்த்தி முகூர்த்தம் பார்த்திருந்ததுவுந் தோன்றக் கூறிற்றும். கண்ணனார்-உபதிருஷ்டா; என்றது புரோகிதனை; இஃது ஒருவனைக்கூறும் பன்மை. கடிகை - * முகூர்த்தவிதாயி. பழிச்சிய - புகழ்ந்த. மணிகளைப் பொன்னிலேயழுத்தி யவற்றின் கதிர்களசையும்படி முடியைப் பண்ணினாருமென்க. அண்ணல் - தலைமை.

இ - ள். முன்னொருக்கவரெல்லாரும் முடியணியுந்தன்மையைத் துணிமினென்று அமைச்சனைநோக்கிக் கூற, அவரும் முடியைப்பண்ணினாரும், கடிகையும், கண்ணனாரும் வருகவென்றழைப்ப, அவர்கள்வந்தவளவிலே, திருவிற் றுளங்கி மால்வரையிலே குலவியதன்மையை யொப்பதோர்தாரும், அருவிபோல்வதோர் முத்தாரமும் மார்பிலே துயலாநிற்ப, விளங்கொளிவிரியுமியல்பினையுடைய முடியினையுடைய இமையவனொருவன் வந்திழிந்தானென்க

முடியமைத்தற்குக்கூறிய நூலெல்லாம் முற்றமுடித்தலின், காமகள் மகிழ வென்றார். நாமகள் நகப் பண்ணினாருமென்க. (௬௭)

கொம்மையார்ந்தனகொடிபடவெழுதினகுவிந்த
வம்மையார்ந்தனவழகியமணிவடமுடைய
வெம்மைசெய்வனவிழுந்தகுமுலைத்தடமுடைய
பொம்மெனோதியாபொழிமின்னுக்கொடியெனவிழிந்தார்.

இ - ள். அவன்றேவியர் பெருமையார்ந்தன, எழுதப்பட்டன, குவிந்தன, அழகிய கருமைநிறைந்தன, வடமுடையன, கொடியனவாகிய முலையையுடைய ஒழுகுகின்ற மின்னொழுங்கென இழிந்தாரென்க.

பொங்கி மெத்தென்றவோதி. (௬௮)

மையல்யானையின்படுமதங்கெடப்பசுட்டரசன்
செய்தமும்மதம்போற்றிசைதிசைதொறுங்கமழுந்
தெய்வவாசத்துத்திருநகர்வாசங்கொண்டொழிய
வெய்யர்தோன்றினர்விசும்பிடைச்சிறப்பொடும்பொலிந்தே.

இ - ள். இழிந்தவர்கள் யானையின்மதங்கெடும்படி களிற்றரசனுண்டாக்கின மதம்போலே திசைதோறுங்கமழுந் தெய்வமணத்தாலே நகரிலுள்ளமணங் கைக்கொள்ளப்பட்டு அடங்கும்படி பொலிந்து கடுக நகரிடத்தே தோன்றினாரென்க.

சிறப்பென்றது உபகரிக்கக் கொண்டுவந்தனவற்றை. (௬௯)

* முகூர்த்தவிதாயி - முகூர்த்தம்விதிப்பவன்.

வெருவிமாநகர்மாந்தர்கள்வியந்துகைவிதிர்ப்பப்
பரிதிபோல்வளபாற்கடனூற்றெட்டுக்குடத்தாற்
பொருவில்பூமழைபொன்மழையொடுசொரிந்தாட்டி
யெரிபொனீண்முடிகவித்தனன்பவித்திரற்றொழுதே.

சொரிந்து - சொரிய.

இ - ள். பூமழை பொன்மழையோடே சொரியாநிற்க, அவன் பரிதிபோலும் நூற்றெட்டுக்குடத்தாலே பாற்கடலிலேமுகந்து ஆட்டி, மாந்தர் அஞ்சி வியந்து கை விதிர்க்கும்படி தொழுது முடியைக் கவித்தானென்க.

பவித்திரனென்றார், நெஞ்சிற்றூய்மைதோன்ற. ஆசிரியனுதலிற் றொழு தான். (௬௦)

தேவதுந்துபிதேவர்கட்கோகையுய்த்துரைப்பா
ஞவியம்புகையணிகிளர்சுண்ணமோடெழுந்த
நாவினேத்தினரரம்பையர்நரம்பொலியுளர்ந்த
காவன்மன்னருங்கடிகையுங்கடவதுநிறைத்தார்.

தேவதுந்துபி-தெய்வவாச்சியம் அவி-ஆவியெனவிகாரம்; என்றது - ஹோமத்தால் விளைந்த ஹவிஸ். நரம்பு பாட்டொலியோடே வாசிக்கப்பட்டன; மன்னர் கைக்காணியிட்டு வணங்கினர்; கடிகையர் மங்கலம்பாடினர்.

இ - ள். துந்துபி யுரைத்தற்கு அவியோடும் புகையோடுஞ் சுண்ணத்தோடு மெழுந்தன; அரம்பையரேத்தினர்; உளர்ந்தன; மன்னருங் கடிகையரும் நிறைத்தா ரென்க.

ஏத்துநர்பாடமாயின், ஏத்துநராகிய அரம்பையரென்க. (௬௧)

திருவமாமணிக்காம்பொடுதிரள்வடந்திளைக்கு
முருவமாமதியிதுவெனவெண்குடையோங்கிப்
பரவைமாநிலமளித்ததுகளிக்கயன்மழைக்கட்
பொருவில்பூமகட்புணர்ந்தபினிமையவனெழுந்தான்

திருவமாமணி-அழகியமணி; அ - அசை. காம்புமவடமுந் திளைக்குமதி - இல பொருளுவமை. குடை - அபிடேகாங்கமாகிய கொற்றக்குடை.

இ - ள். குடை யோங்கி நிலத்தையளித்தது; அங்ஙனமளித்தலிற் கயல் போலுங் கண்ணையுடைய பூமகளை அவன்புணர்ந்தான்; புணர்ந்தபின் சுதஞ்சணன் போயினனென்க. (௬௨)

வேறு.

மின்னுங்கடற்றானையின்மாமணிக்கைவெண்கவரிவிரிந்துவீசப் [ன்ற
பொன்னங்குடைநிழற்றப்பொன்மயமாமுழைக்கலங்கள்பொலிந்துதோ
மன்னர்முடியிறைஞ்சிமாமணியங்கழலேந்தியடியீடேத்தச்
சின்னமலர்க்கோதைத்தீஞ்சொலார்போற்றிசைப்பத்திருமால்போந்தான்

இ - ள். திரைபோற் கவரிவீசத் திருவின்வடிவாகிய குடை யுலகைநிழற்றக் கலங்கள்தோன்ற ஏத்த இசைப்பத் திருமால் நன்னிலமிதித்தற்குப் போந்தானென்க.

பொன் - திரு; "நன்பொன் போகிய பொன்னூரம்" போல. இது பவனிக்குடையாதலிற் பொன்னங்குடையாயிற்று. கழலையேந்தி அடியிடுதலை மன்னர் முடியாலேயிறைஞ்சி யேத்த. சின்னமலர் - விடுபூ. காத்தற்றொழிலாலும், வடிவாலுந் திருமாலென்றேகூறினார். அடுத்து இரண்டுபவனி அரசர்க்காகாமையிற் கல்யாணத்திற்குப்பின்பு பவனிகூறுவார் ஈண்டு நன்னிலமிதித்து மண்டபத்தேபுகுந்தமைதோன்ற அடியீடேத்தவென்றார். (௬௩)

மந்தாரமாமாலைமேற்றொடர்ந்துதழுவவராததாமமல்கி
யந்தோவென் றஞ்சிறைவண்டேக்கறவின்புகைபோய்க்கமழ்மியாயபொற்
செந்தாமரைமகளேயலலதுபெண்சாராததிருவின்மிக்க
சிந்தாமணியேய்ந்தசித்திரமாமண்டபத்துச்செல்வன்புக்கான்.

தழுவவாராத்தாமங்களிற் றேனை யுணப்பெறாதே வண்டுகள் ஏக்கறுக்கும்படி புகைபரந்து. திருவல்லது பெண்சாராததெனவே சமயமிருக்குமண்டபமாம்.

இ - ள். தொடரப்பட்டு மல்கப்பட்டுக் கமழப்பட்டுத் திருவல்லது பெண் சாராத மண்டபத்தே திருவான்மிக்க சிந்தாமணியின் றன்மைபொருந்திய செல்வன் புக்கானென்க.

மேல் நினைத்தனகொடுக்கின்றனாதலிற் சிந்தாமணியென்றார். (௬௪)

பைங்கண்ணுளையெருத்திற்பன்மணிவாயொளிறப்பவளவிற்
சிங்காசனத்தின்மேற்சிங்கம்போற்றேர்மன்னர்முடிகளாசூழ
மங்குன்மணிநிறவண்ணன்போல்வாரகுழைகடிருவில்வீசச்
செங்கட்கமழ்பைந்தார்ச்செஞ்சுடர்போற்றேர்மன்னனிருந்தானன்றே.

இ - ள். பைந்தாரையுடைய மணிநிறவண்ணன்போலுஞ்சீவகன், முடிகளையுடைய தேர்மன்னர் சிங்கம்போற்சூழக் குழை திசையெங்கும் வில்லைவீசக் கண்முதலியவற்றையுடைய சிங்காசனத்தே ஞாயிறுபோல வீற்றிருந்தானென்க.

மங்குல் - திசை. எனவே தந்தையைப்போல் இருந்தானென்றார். (௬௫)

வேறு.

வார்பிணிமுரசகாணவானதிரமுழக்கமேய்ப்பத்
தார்பிணிதாமமார்பன்றம்பியையுராததுணேக்கி
யூர்பிணிகோட்டஞ்சீப்பித்துறுதவனுண்டநாட்டைப்
பார்பிணிகறைபினீங்கப்படாமுரசறையியென்றான்.

உள் - உருபுமயக்கம். பாரிறைக் கட்டினை காவைமையினின்றுநீங்க. என்றது - ஆறிலொன்றையுந் தவிரவென்றவாறு.

இ - ள். சீவகன் றம்பியை முகத்தைநோக்கி யூர்களிலுள்ளாரைப் பிணித்த

சிறைக்கோட்டத்தையும் இடிப்பித்து முன் அரசாட்சியுறுதவன் ஆண்டநாட்டைப் பதினாறியாண்டளவுங் கடமைகொள்ளாமை தோன்ற முரசறைவியென்று முரசகாரனை வான்முழக்கமேய்ப்பக் கூறினானென்க.

கறையினீங்கவென்பது கடமைகொள்ளாமையென்னும் பொருட்டாய் நாட்டை யென்னும் இரண்டாவதற்கு முடிபாயிற்று, ஐ - அசையுமாம். (௪௬)

கடவுளரிடனுங்காசில்கணிபெறுநிலனுங்காமர்
தடவளர்முழங்குஞ்செந்தீநான்மறையாளர்தங்க
ளிடவியநிலத்தோடெல்லாமிழந்தவர்க்கிரட்டியாக
வுடனவைவிடுமினென்றானொளிநிலாவுமிழும்பூணான்.

இ - ள். அங்ஙனஞ் சாற்றக்கூறிய பூணான் பின்பு அமைச்சரைநோக்கி, அந்தணர்தம்முடைய இறையிலிநிலத்தோடே தேவர்களிறையிலிநிலத்தையுஞ் சோதிட நூலோர் இறையிலிநிலத்தையும் ஒழிந்த இறையிலிநிலங்களையும் முன்புபோலே இறையிலியாக விடுமினென்று, பின்னும் அவனாண்டகாலத்து அவற்றையுடனிழந்தவர்க்கு இரட்டியாக விடுமினென்றானென்க.

விடுமினென்ற முன்னிலைப்பன்மையான் அமைச்சரைநோக்கிக் கூறினமை உணர்க. விடுமினென்றதனை இரண்டிடத்திற்கும் ஏற்றுக. உடனிழத்தல் - அவன் சேரமாற்றுதலின், இழத்தல். (௪௭)

க. என்றலுந்தொழுதுசென்னிநிலனுறீஇயெழுந்துபோகி
வென்றதிர்முரசம்யானைவீங்கெருத்தேற்றிப்பைம்பொற்
குன்றுகண்டனையகோலக்கொடியணிமாடமூதூர்ச்
சென்றிறைமுழங்கச்செல்வன்றிருமுரசறைவிக்கின்றான். (௪௮)

உ. ஒன்றுடைப்பதினையாண்டைக்குறுகடனிறைவன்விட்டா
னின்றுளீருலகத்தென்றுமுடனுளீராகிவாழ்மின்
பொன்றுகபசியுநோயும்பொருந்தலில்பகையுமென்ன
மன்றலமறுகுதோறுமணிமுரசார்ததன்றே. (௪௯)

௩. நோக்கொழிந்தொடுங்கினீர்க்குநோய்கொளச்சாம்பினீர்க்கும்
பூக்குழன்மகளிர்கொண்டான்புறக்கணித்திடப்பட்டீர்க்குக்
கோத்தருநிதியம்வாழக்கொற்றவனகரோடென்ன
வீக்குவார்முரசங்கொட்டிவிழுநகரறைவித்தானே.

இவைமூன்றுமொருதொடர்.

க. அறைவிக்கின்றான் - பெயர்.

உ. உறு - மிகுதி. என்ன - என்று பறையன்கூறாநிற்க. என்னமுரசமார்த்ததென்க. அன்றே - அப்பொழுதே.

௩. நோக்கொழிந்தார் - கண்கெட்டவர். சாம்புதல் - பொருளின்றிக்குவிதல். மகளிர் - பரத்தையர். பரத்தையரிடத்து வேட்கையாலே கொண்டவன்பாதுகாவாத

அறிவுடைய மகளிர்க்கும். கோ - பசு. கோத்தலை விகாரமாக்கிக் கோத்தலைத்தரு நிதியம் - இடையறுாத பொருளென்றுமாம்.

இ - ள். என்று சீவகன்கூறின வளவிலே, நந்தட்டன் எழுந்திருந்து தொழுது வணங்கிப் போய் மூதூரிலே விரையச்சென்று முழங்கும்படி முரசறைவிக்கின்றவன் முரசறைகின்றவனுக்கு இறைவனருளியமொழியைச் சாற்றென்றுகூற, அவனும் வென்றதிர்முரசத்தை யானையெருத்தத்திலேற்றிப் பசியும்நோயும்பகையும் பொன்றுக; இன்றுளீர்! உலகத்துடனே என்றுமுள்ளீராய் வாழ்வீரென வாழ்த்தி, இறைவன் இந் நாட்டைப் பதினுறுண்டிற்குக் கடமையிழந்தானென்று கூறுநிற்க முரசமார்த்தது; அப்பொழுதே நோக்கொழிந்திருக்குஞ் சாம்பினீர்க்கும் புறக்கணிக்கப்பட்டீர்க்கும் கொற்றவன் மனைகளுடனே கோவையும் நிதியத்தையும் நீர்வாழும்படி தருமென்று முரசறைவான் கூறும்படி யவனுக்கறிவித்து அவனைகொண்டு நகரிலே முரசைக் கொட்டி அறைவித்தானென்க.

அரசன்கூறுதன தான்கூறிச் சாற்றுவித்தானல்லன்; அவன் அரசாட்சி பெற்றுற் செய்யுமறங்கள் தனக்கு முற்கூறியவற்றைப் பின் தான் சாற்றுவித்தானென்று கொள்க. (௩0)

திருமகனருளாற்பெற்றுத்திருநிலத்துறையுமாந்த
ரொருவனுக்கொருத்திபோலவுளமகிழ்ந்தொளியின்வைகிப்
பருவருபகையுநோயும்பசியுங்கெட்டொழியவிப்பாற்
பெருவிறல்வேந்தாவேந்தறகுற்றதுபேசலுற்றேன்.

இ - ள். இங்ஙனம் அரசன்றன் அருளப்பெறுதலின், அவனிலத்தின் மக்களெல்லாம், பகையும் நோயும் பசியுங் கெட்டேபோக, ஒருவனுக்கொருத்திபோல மனமகிழ்ந்து ஒளியோடே தங்காநிற்கின்ற நாளிலே, வேந்தற்குற்றதொன்று கூறுதலுற்றேனென்றுரென்க.

வைகி - வைக. (௩௧)

பூமகளிலம்பக முற்றிற்று.

ஆ பவி உ, கூஎஎ.

பன்னிரண்டாவது

# இலக்கணையாரிலம்பகம்.

அலங்கலேந்தியகுங்குமவருவரைமார்பன்
கலந்தகாரிகையவர்களைத்தருகெனவருள
விலங்குமாலைவெள்ளருவியவெழில்வரைமணந்த
புலம்புநீள்சுரம்போய்க்கொணர்ந்தருளொடுங்கொடுத்தார்

இ - ள். மாலையையேந்திய வரைபோலுமார்பன் தான் மணஞ்செய்தமகளிரைத் தருவீராகவென்று அருளிச்செய்ய, அவரும்அவனருளிச்செயலோடே வருத்தமிக்க சுரத்தைப்போய்க் கொணர்ந்து கொடுத்தாரென்க.

அருவியவாகிய வரை. (க)

மோடுகொண்டெழுமதியமும்பரிதிகண்டறியாப்
பாடுவண்டொடுபறவையுமஞ்சுங்காப்பின்
மாடமாமணிச்சிவிகையின்மயிலெனவிழிந்தார்
வீடுகண்டவர்போன்றுமின்னிடுகொடியனையார்.

இ - ள். மின்னையும், எழுதுகொடியையுமனையார், மதியையும் பரிதியையுங் கண்டறியாத மாடத்தின்கண்ணே வண்டும்பறவையுமஞ்சுங் காவலையுடைய சிவிகையினின்றும் மயிலிழிந்தாற்போல இழிந்தாரென்க.

துன்பமுறுதற்கு ஒரு சாபம்பெற்று அச்சாபம்வீடுகண்டவரைப்போலே மகிழ்ந்து இழிந்தாரென்க. வீடுகண்டவர் பின் வருத்தநீங்கினாற்போல இவரும் இனி வருத்தநீங்கினரென்றுமாம். (உ)

அன்றுசூடியமாலையராடியசாந்தர்
பொன்றிவாடியமேனியர்பொன்னிறைசுருங்கார்
சென்றுகாதலன்றிருவிரிமரைமலரடிமே
லொன்றிவீழ்ந்தனர்குவளைக்கண்ணுவகைமுத்துதிர்த்தே.

இ - ள். இவன்பிரிகின்ற அன்றுசூடிய மாலையராய் ஆடின சாந்தினராய், கெட்டமேனியராய், பெறுதற்கரிய நிறைகெடாதவர்கள் கண் உவகைமுத்துதிரும்படி சென்று காதலனடிமேலே வீழ்ந்தாரென்க. (ங)

இலங்குபூண்வரைமார்புறவெருத்தவன்முயங்க
மலங்கி... [illegible] ...வருபனிசுமந்து... [illegible]

கலங்குநீரிடைக்கலக்குறுகருங்கயலிணைபோற்
புலம்பியோடினசெவியுறநெடியனபொலிந்தே.

இ - ள். சின்னீரிடத்தே வெருவக் கலங்கலுற்ற கயலிணைபோலே இவன்பிரிவிற்குமலங்கிப் புலம்பி ஓடினவாட்கண்கள் ஈண்டு அவன்அவளைச் சேரவெடுத்து முயங்குதலிற் பொலிந்து உவகைக்கண்ணீரைச்சுமந்து செவியுற நெடியனவாயின வென்க.

வெருவவென்க. ஓடுதல் - கெடுதல்; "ஓடியதுணர்தலும்" என்றாற்போல. (௪)

வேனில்வாய்ப்பட்டுவிரிமுகைதளிரொடுகரிந்த
கானக்கார்முல்லைகார்மழைக்கெதிர்ந்தனபோல
மானமங்கையர்வாட்டமும்பரிவுந்தங்கணவன்
றேனெய்மார்பகந்தீண்டலுந்தீர்ந்தொளிசிறந்தார்.

இ - ள். முதுவேனிலிடத்தே அகப்பட்டுக் கரிந்தமுல்லை மழையையேறுக்கொண்டனபோல மங்கையர் தங்கணவன்மார்பைத் தீண்டினவளவிலே மேனியில் வாட்டமும், மனத்தில்வருத்தமுந் தீர்ந்துபோய் ஒளிமிக்காரென்க.

மழைக்கு, கு - உருபுமயக்கம். மானம் - புலவி. தேனைப்போன்ற மார்பென்றார், தேனுக்கு இன்சுவைநிகழ்ந்தகாலத்தே புளிச்சுவைநிகழுமாறுபோல, இம்மார்பும் இம்மகளிர்க்கு இன்பநிகழ்த்தினகாலத்தே பிறர்க்கும் இவ்வாறு இன்பநிகழ்த்துமேயென்னுங்கருத்தை அவர்க்குப் பிறப்பித்தலின். இனித் தூதாய்வந்த தேனினம் இளைக்கிறமாரபுமாம். (௫)

சேலுண்கண்ணியர்சிலம்பொடுதிலகமுந்திருத்தி
மாலைநல்லனமதுக்கமழ்தகையனமிலைச்சிக்
கோலமென்முலைக்குங்குமம்பிடுகொடியெழுதிச்
சோலைவேய்மருடோண்முத்துந்தொழுதகவணிந்தார்.

இ - ள். சேடியர் தேவியர்க்குச் சிலம்பிலேநின்றுந் திலகத்தளவுந்திருத்தி முடியிலே மதுக்கமழ் தகையனவாகிய மாலைகள்நல்லனவற்றைச்சூட்டி முலையிலுந் தோளிலுங் குங்குமத்தாலேஎழுதுகொடியெழுதிக் கணவன் தொழுதல்தகும்படி முத்துவடத்தையும் அணிந்தாரென்க. (௬)

நஞ்சுமேய்ந்திளங்களிக்கயன்மதர்ப்பனபோல
வஞ்சிவாட்கண்கண்மதர்த்தனமலர்ந்துடன்பிறழப்
பஞ்சுசூழ்மணிமேகலைபரிந்தவைசொரிய
வஞ்சிநுண்ணிடைகவின்பெறவைகினன்மாதோ.

அவசத்தாற் பிறந்த அனந்தர்நோக்கினை நஞ்சென்றார். உடன் - எல்லாம். பஞ்சு - ஆகுபெயர். தனதுநுண்மையான் ஊற்றின்பநிரம்பப்பெறாதவிடை *மெய்

---

* அகநானூறு, ௩௨௪: மெய்புகு வன்ன கைகவர் முயக்கத் - தோருயிர் மாக்களும் புலம்புவர் மாதோ.

புகுவன்ன முயக்கத்தாலே ஊற்றின்பம் பெறும்படி வைகுதலின், இடைகவின்பெற என்றார்.

இ - ள். கயல் நஞ்சைமேய்தலிற் செருக்குவனபோலக் கண்கள் மலர்ந்து இறுமாந்து அஞ்சிப் பிறழ, மேகலையற்றவை மணியைச்சொரிய, இடை கவின்பெற வைகினானென்க. (எ)

அரிபொற்கிண்கிணியணிகிளர்சிலம்பொடுசிலம்புந்
திருவச்சீறடிச்செழுமலர்க்கொழுங்கயன்மழைக்க
ணுருவநுண்ணிடையொளிமணிவருமுலையுருவா
ரெரிபொன்மேகலையிலக்கணைகடிவினைநொடிவாம்.

ஐதாகிய பொன்றுவது நகடு. திருவ, அ - அசை.

இ - ள். கிண்கிணி சிலம்பொடுசிலம்பும் திருவையுடைய சீறடித்தாமரை முதலியவற்றையுடைய இலக்கணையது மணவினையைக் கூறுவாமென்றாரென்க. (அ)

ஆழியால்கடலகம்பெருங்கேள்விகடுறைபோ
யூழினன்றியுமுறுவினையோரையின்முடிப்பான்
சூழியானையுந்துளங்குபொற்சிவிகையுமுடையான்
வேழவேந்தறகுவிழுப்பெருங்கணிவிரித்துரைத்தான்.

இ - ள். கரையையுடைய பெரிய கடல்போன்றநூலை முறைநககற்று யானையுஞ் சிவிகையும் பெற்றானாகியகணி விதியால் றானேமுடிதலேயன்றி யிந்நல்வினையை ஓரையாலு முடித்தாற்குப் பொருந்திய நாள்களை அரசனுக்கு விரித்துரைத்தானென்க. (கூ)

ந. ஓங்குகொற்றவற்கோதியவியாபெருநாளால
வீங்குவெள்ளியங்குன்றனவிளங்கொளியுடைய
தேங்கொள்மாலையுந்திலகமுமணிந்ததிண்குலைத்த
பாங்கிற்பண்ணினநூற்றெட்டுப்படுமதக்களிறே.

இதுமுதல் "மாலைவாண்முடி" அளவுமொருதொடர்.

கொற்றவற்கோதியநாளென்றதனால் "நவநக்ஷத்ரோதய" என்றது சன்மநக்ஷத்திரமுதலாக ஒன்பதுநாளினுதலின், இக்கல்யாணத்துக்கு அந்நாளொன்பதிலும் பொருந்துவதொருநாளிலே முரசுசாற்றுகின்றாரென்க. மாலையுந் திலகமுமணியப்பட்ட களிறு. திணைகுலம் - மாறுபடாதசீலம். குரூஉத்தவாய் மதத்தையுடைய களிறு விளங்கொளியையுடைய வெள்ளிக்குன்றெனப் பண்ணப்பட்டனவென்க. வெள்ளணியணிந்தனவென்க. (கய)

உ. விளங்குவெண்டுகிலுடுத்துவெண்சாந்துமெய்பூசித்
துளங்குமஞ்சிகைதுளைச்சிறுகாதினுட்டுளங்க
வளங்கொண்மாலைகள்சூடிமுத்தணிந்துவண்முரசங்
களங்கொள்வேழத்தின்மேற்றினர்கடிமுரசறைவான்.

மஞ்சிகை - காதணி. சிறுதுளைக்காது. முரசறையவேண்டி. துளங்காநீறக உடுத்துப் பூசிச் சூடி யணிந்து முரசை அவற்றிற் றலைவனாகிய வேழத்திலே யேற்றினா ரென்க. (கக)

ங. கேண்மின்கேண்மின்கள்யாவருமினியனகேண்மின்
பூண்மினித்திலமணிவடம்பூசுமின்சாந்தம்
வாண்மினுண்ணிடைவருந்தினுஞ்சூட்டணிகழகா
ரானமாகியவருவிலைவண்ணப்பட்டுடுமின்.

கேண்மின் - விரைசொல்லடுக்காதலின், மூன்றாயிற்று. ஆனம் - தேயம். ()

ச. பிள்ளைவெண்பிறைச்சிறுநுதற்பெரும்பட்டமணிமி
னுள்ளமேனியுமொளிர்மணிக்கலங்களிற்புனைமின்
வள்ளல்வாய்மொழியான்படுபாலமிர்தல்லா
லுள்ளமேவினும்பிறவுணப்பெறீரெழுநாளும்.

பிள்ளைப்பிறையென்பது *"பிள்ளைகுழவி" என்னுஞ் சூத்திரத்துமைமைய யெச்சப்படுத்தி அதனாற்கொள்க. உள்ளமேனி - முன்பு அணியணிந்த இடமொழிய உள்ளமேனி. வள்ளல்வாய்மொழி - அரசனருளிச்செயல். நெஞ்சம்பிறவற்றிலே மேவினும். (கங)

ரு. வாழைமல்கியமணிக்குலைககமுகொடுநடுமின்
றாழநாற்றுமின்றாமங்களகிற்குடம்பரபபி
யாழின்பாடலுமாடலுமரங்குதோறியற்றி
போழுமால்விசும்பெனப்பல பொலங்கொடியெடுமின்

கமுகோடே வாழையை அகிற்குடம் - தூபகுடம் விசும்பைப போழு மென (கச)

சு. மாலைவான்முடிமன்னவன்மணவினையெழுநாட்
சீலமில்லனசிளக்களிறகற்றுகென்றணிந்த
கோலமாமுரசிடியுமிழ்தழங்கெனமுழுங்க
நீலமாக்கடனெடுநகர்வாழ்கெனவறைந்தார்.

மணவினைநிகழுமேழுநாளும். சீலமில்லனவாகிய கோலக்களிறறையகற்றுக.

இ - ள். கொற்றவற்கோதியநாளிலே முரசறைதற்குக் களிறுகள் பண்ணின, அக்களிற்றிற் றலைவனாகியவேழத்திலே முரசையேற்றினா; ஏற்றி நெடுநகர்வாழ்க வெனக்கூறி அரசன்றிருவாய்மொழியாகிய இனியவற்றை யாவருங்கேண்மின்; இவ் வேழுநாளும் இடைவருந்தினும் பூண்மின்; பூசுமின்; அணிந்து உடுமின்; அணிமின்; புனைமின்; பாலடிசிலேயுண்மின்; நடுமின்; நாற்றுமின்; பரப்பி யியற்றி யெடுமின்; இன்னும் இவ்வேழுநாளுங் களிற்றையகற்றுகவென்றுகூறி யிடியொலிபோலே முரசை முழங்க வறைந்தாரென்க. (கரு)

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், உச.

வேறு.

முரசமார்ந்தபின்மூவிருநாள்கள்போய்
விரைவொடெங்கணும்வெள்ளைவிம்மின
புரையில்பொன்மணியாழ்குழறண்ணுமை
யரவவானினதிர்ந்தவணிமுழா.

ஆர்த்த - விகாரம். போய் - போக. போகாநிற்க இவையுநிகழ்ந்தனவென மேல்வருவனவற்றையும் உடனிகழ்ச்சியாககுக. புரை - குற்றம்.

இ - ள். முரசமார்த்தபின் ஆறுநாள் செல்லாநிற்க, எங்கணும் விரைவுடனே வளைவிம்மின; யாழ், குழல், தண்ணுமை, முழவு இவை வான்போலே யதிர்ந்தன வென்க. (கசு)

விண்விளக்குவபோல்விரிபூந்துகள்
கண்விளக்கிக்கலந்தவெண்சாந்திறை
மண்விளக்கிமலர்பலிசிந்தினா
பண்விளக்கியபைங்கிளியின்சொலார்.

இ - ள். பண்ணைத்தோற்றுவித்த சொல்லார் தேவருலகத்துத தராலைத்துடைக்கு குமாருபோலே சிந்தின மணிகள்முதலியவற்றோடேஅக்கண் கலந்த விரிந்தபூந்துக ளைத்துடைத்துச் சாந்திஞனிலத்தைமெழுகி யில்லுறைதெய்வத்துக்குப் பூப்பலியை யஞ்சிந்திஞரென்க.

விளக்குதல் - தகுதிபற்றியவழக்கு. (கஎ)

ஆய்ந்தமோட்டினவான்படுபாலுலை
போந்துபொங்கியவாவியினுறபொலிந்
தேந்துமாடங்கடாமிழினென்பன
பூந்துகில்புறம்போர்ந்தனபோன்றவே.

இ - ள். இழினென்னுமோசையை யுடையவாகிய மாடங்கள்தாம் அழகிய வயிற்றையுடையவாகிய ஆனிலேதோற்றிய பாலுலே பானையின்புறம்பேபோந்து பொங்கிய ஆவியினுலேபொலிந்து பூந்துகிலைப் புறமபோர்த்தனபோன்றனவென்க.()

திருவினல்லவர்செம்மலர்ச்சீறடிப
பரவியூட்டியபஞ்சரத்தக்களி
விரவிமீநிலஞ்சோநதொளிபூத்துராய்க்
குருதிவானிலங்கொண்டதுபோன்றதே.

இ - ள். திருவினுநல்லவாதம்மடியைச் சேடியாபரவியூட்டிய செம்பஞ்சின் சேறு நிலத்தின்மீதே விரவிச்சேர்தலின், அவ்வொளி பூத்துப் பரந்து செக்கர்வான் நிலத்தைக்கொண்ட தன்மைபோன்றதென்க. (கக)

பால்வெண்டிங்கண்மணிக்கைபடுத்தவை
போலுமாடியுளேக்கிப்பொலங்கலக்

கோலஞ்செய்பவர்கோலவெறிப்பினால்
மாலைவண்டினமாலைக்கண்கொண்டவே.

இ - ள். திங்கள் மணிக்காம்புசேர்த்தினவற்றையொக்குங் கண்ணாடியில் நோக்கிப் பொற்கலத்தையுடைய கோலத்தைச்செய்பவர் கோலத்தால்வருங் கண்வெறிப்பாலே யொழுங்கையுடைய வண்டினங்கள் கண் டோன்றுவாயினவென்க. (உ0)

போகுமாமழைபோழ்ந்துபுதத்தொறு
மாகமேந்துவபோன்மணித்தோரண
மாகநாற்றினதாமமணிக்குட
மேகமாநகர்வீதிநிறைத்தவே.

இ - ள். தனக்கு நிகரில்லாத நகர்வீதியிலே வாயிறோறும் மழையைப்போழ்ந்து மாகத்தையேந்துவபோலுந் தோரணங்களிலே தாமங்கள் பொருந்த நாற்றப்பட்டன; மணிக்குடங்கள் வைக்கப்பட்டனவென்க. (உக)

ஆடன்மங்கையர்கிண்கிணியார்ப்பொலி
பாடலின்னொலிபணைமையாழொலி
மோடுகொண்முழவின்முழக்கீண்டிய
மாடமாநகர்மாக்கடலொத்ததே.

மங்கையா கிண்கிணி யசைதலிற்பிறந்தவொலி.

இ - ள். இவ்வொலிகளாலே நகா கடலையொத்ததென்க.

முழக்கத்தாலீண்டினவொலி. (உஉ)

சுந்தரத்துகளாபூந்துகள்பொற்றுக
மந்தரத்தெழுமின்புகையாலரோ
விந்திரன்னகாசாறயர்ந்திவ்வழி
வந்திருந்ததுபோன்மலிவுற்றதே.

இ - ள். இந்நகர் சிந்தூரத்துகளாலும் பூந்துகளாலும் பொற்றுகளாலும் புகையாலும் அமராபதி சாறயர்ந்து ஈண்டுவந்திருந்தாற்போலே மிகுதியுற்றதென்க. (உஙு)

வேறு.

நிரந்துகன்னலுநெய்யுநீத்தப்பெய்
திரந்துபாலமிர்தெங்குமூட்டுவார்
பரந்துபூந்துகில்பன்மணிக்கலஞ்
சுரந்துகொள்கெனச்சுமக்கநல்குவார்.

இ - ள். எவ்விடமும் பரந்துசென்று இரந்துகொண்டு கன்னலையும் நெய்யையுந் தொலைக்கவொண்ணாதபடிபெய்து பாலடிசிலை யூட்டுவார்; துகிலையுங் கலத்தையுங் கொண்டுவந்து கொள்கவென்று சுமக்கும்படி நல்குவாரென்க. (உச)

வருக்கையின்பழம்வாழையின்கனி
திருக்கொண்மாங்கனிதெளித்ததேறலின்
கருப்புச்சாற்றொடுகலந்துகைசெய்து
புரித்ததெங்கிளநீரும்பூரிப்பார்.

இ - ள். பலாப்பழமுதலியவற்றை நீராக்கினதேறலை யினிய கருப்புச்சாற்றோடே கலந்து சமைத்து அதனையும் விருப்பமிக்க இளநீரையும் பூரிப்பாரென்க. (௨௫)

கூந்தலேந்தியகமுகங்காய்க்குலை
யாய்ந்தமெல்லிலைபளிதமாதியா
மாந்தர்கொள்ளைகொண்டுண்ணமாநில
மேந்தலாம்படித்தன்றியீட்டுவார்.

கூந்தல் - தலை

இ - ள். கருப்பூரமுதலாகப் பாக்கையும் வெற்றிலையையும் மாந்தர் கொள்ளை கொண்டு சுமக்கலாம்படித்தன்றாக மாநிலமுண்ணும்படி யீட்டுவாரென்க.

வெற்றிலையையுண்ணவென்றல் மரபன்மையின், ஈண்டு மாநிலமுண்ணவெனவே மண்ணுண்ணும்படியென்னும் பொருட்டாம். ஏந்தல்-சுமத்தல். "அடகுபுலால் பாகு பளிதமு முண்ணான்" என்பது பன்மைபற்றிக் கூறிற்றெனவேவேண்டும்; பாகு பசிப்பிணிதீர நுகரும்பொருளன்மையின். இனி மாந்தர் முற்கூறிய பாலடிசில்முதலியவற்றையுண்டலின், அவர்தின்றற்குப் பளிதமுதலியவற்றைக் கொள்ளைகொண்டு சுமக்கலாம்படித்தன்றாக ஈட்டுவார் என்றுமாம். (௨௬)

தூமமார்ந்தனதுப்புரவ்வுக
ளேமமாயினவேந்திநிற்றலா
னாமநன்னகர்நன்பொற்கற்பகங்
காமவல்லியுங்களங்கொண்டிட்டதே.

இ - ள் மெய்க்குறுதியாகிய தூமத்தையும், அதனை யொழிந்து ஆர்ந்தனவாகிய நுகர்பொருள்களையும் ஆடவருமகளிரும் ஏந்திநிற்றலின், இந்தநன்னகரைக் கற்பகமுங் காமவல்லியுமிடங்கொண்டு தம்மிடத்தைக் கைவிட்டனவென்க.

இட்டது - ஒருமைப்பன்மைமயக்கம். (௨௭)

வழூவின்மாந்தருமாவுமல்கிய
தொழூதிதன்னையான்சுமக்கலேனென
முழுதுமண்மகண்முற்றும்வாய்திறந்
தழுதிட்டாளெனயும்பாலுமாகவே.

இ - ள். மண்மகள் மாந்தருமாவுநிறைந்த தொழுதிதன்னை யான் முழுதுஞ் சுமத்தலாற்றேனென்று வாய்முற்றுந்திறந்து செய்யும்பாலுமாக அழுதிட்டாள் போலே இருந்ததென்க.

எனவே யாவுங்கூறினர். (௨௮)

வேறு.

கொடியெழுந்தலமருங்கோயில்வாயில்கண்
மடலெழுந்தலமருங்கமுகும்வாழையு
மடியிருந்துகிலுடைமாக்கண்ணடியும
புடைதிரள்பூரணகுடமும்பூத்தவே.

இ - ள். கோயில்வாயில்களெல்லாங் கமுகும், வாழையும், மடித்ததுகிலையுடைய கண்ணடியும், நிறைகுடமும் பொலிவுபெற்றனவென்க. (௨௯)

கடிமலர்மங்கையர்காய்பொற்கிண்கிணி
யுடைமணிபொற்சிலம்பொலிக்குங்கோயிலுட்
குடைநிழன்மன்னர்தங்கோதைத்தாதுவேய்ந்
தடிநிலம்பெறுததோர்செல்வமார்ந்ததே.

இ - ள். மங்கையர்கிண்கிணியும், மேகலையும, சிலம்பும் ஒலிக்குங் கோயிலிடமெல்லாம், மன்னர்தங்கோதையிற் றாதுவேய்தலின், அம்மகளிரடி தாதொழிந்து நிலத்தைத் தீண்டப்பெறுததோர் செல்வம் மிக்கதென்க. (௩௦)

துளங்குபொற்குழைகளுந்தோடுஞ்சுண்ணமுங்
கிளர்ந்தகில்சாந்துபூக்கமழ்ந்துகேடில்சீ
ரிளங்கதிரெறிமணிப்பூணுமாரமும்
விளங்கிமேலுலகினைவெறுப்பித்திட்டதே.

இ - ள். இக்கோயில், குழையுந்தோடும் ஒளிகிளரப்பட்டுச் சுண்ணமும் அகிலுஞ் சாந்தும் பூவுங் கமழப்பட்டுப் பூணும் முத்தாரமும் விளங்கப்பட்டு மேலுலகை யிகழப்பண்ணிற்றென்க. (௩௧)

விரிந்துவான்பூத்தெனவிதானித்தாய்கதி
ரருங்கலப்பொடியினலாய்பொற்பூமகண்
மருங்குல்போற்குயிற்றியநகரின்மங்கலப்
பெருந்தவிசடுத்தனர்பிணையன்மாலையார்.

இ - ள். வான் மீனைவிரிந்துபூத்ததென விதானித்து அருங்கலங்களையிடித்த பொடியாலே மண்மகளிடைபோலே நுடங்கும்படி கோலமிட்டவிடத்தே யரசர்க்கு உரியமகளிர் மங்கலமாகிய வாசனத்தை யிட்டாரென்க. (௩௨)

நலங்கிளர்காணமுமணியுநன்பொனும்
வலம்புரிமுத்தமுங்குவித்தமங்கல
மிலங்கினமணிவிளக்கெழுந்ததீம்புகை
கலந்தவாயிரத்தெண்மர்கவரியேந்தினர்.

காணம் - பழங்காசு.

இ - ள். காணமுதலியனகுவித்தன; அவற்றின்மேலே அட்டமங்கலமிலங்கின; விளக்கெழுந்தன; புகை கலந்தன; ஆயிரத்தெண்மர் கவரிவீசினரென்க. (௩௩)

மங்கலப்பெருங்கணிவகுத்தவோரையான்
மங்கலமன்னவன்வாழ்த்தவேறலு
மங்கலவச்சுதந்தெளித்துவாய்மொழி
மங்கலக்கருவிமுன்னுறுத்திவாழ்த்தினார்.

இ - ள். மங்கலங்கூறாநிற்க, மன்னவன் மங்கலநாளைக்கூறுங் கணிவகுத்த முகூர்த்தத்துடனே யாசனத்திலே யேறினவளவிலே மங்கலமாகிய அறுகுமரிசியுமிட்டு அபிமந்திரித்த பொற்கருவியை மஞ்சிகன் சேர்த்தினானாக வாழ்த்தினாரென்க.

உறுத்தி - உறுத்த. (௬௪)

முழங்கினவின்னியமொய்த்ததேத்தொலி
கொழுங்கயற்கண்ணினார்கொண்டுபொன்னக
விழிந்தனர்திருமயிரேற்பநீரதி
னிழன்றனசாமரைநிரைசங்கார்த்தவே.

இ - ள். இன்னியமுழங்கின; ஏத்தொலியுஞ்சிறந்தது; சாமரை நீர்மையோடே நிழன்றன; சங்கு ஆர்த்தன; அப்பொழுது மகளிருந் திருமயிரைப் பொன்னகலிலே பொருந்தக்கொண்டு மண்டபத்தினின்றிழிந்தாரென்க. (௬௫)

பாற்கடற்றிளைத்ததோர்பவளப்பூங்கொடி
போற்சுடர்ந்திலங்கொளிப்பொன்செய்கோதையை
நாட்கடிமயிர்வினைநன்பொற்றாமரைப்
பூக்கடிக்கோயிலாள்புலம்பவாக்கினார்.

பாற்கடல் கூறினார், குலத்தின் றூய்மைக்கு.

இ - ள். பவளக்கொடிபோல் விட்டுவிளங்குகின்ற ஒளியினையுடைய இலக்கணையைப் பூவாகிய சிறப்பையுடைய கோயிலிற்றிரு ஒவ்வேமென்று வருந்தும்படி நல்லநாளிலே மயிர்வினைக்கல்யாணத்தை யாக்கினாரென்க.

கடிக்கோயில் பாடம். (௬௬)

வேறு.

விரைத்தலைமாலைசூட்டிமின்னனாரங்கைசேப்ப
வரைத்தசாந்தணிந்தகோட்டவாயிரத்தெட்டுவேழ
நிரைத்தனமண்ணுநீர்க்குமுரசொடுமுழவம்விம்ம
வரைத்தலைத்துவலைபோன்றுமதநிலநனைப்பவன்றே.

இ - ள். வரைத்தலைத்துவலைபோலே மதம் நிலத்தைநனையாநிற்க மின்னனார் மாலையைச் சூட்டித் தாமரைத்த சந்தனத்தையணிந்த வேழங்கள், இயங்கள்விம்மாநிற்க மஞ்சனநீர் கொண்டுவருதற்கு நிரைக்கப்பட்டனவென்க.

கோட்டவாகிய வேழம். (௬௭)

கான்முகம்புதைத்ததெண்ணீர்கலந்துபொற்குடங்களார்த்தி
பூன்முகம்புதைத்தவேற்கண்ணவர்களிற்றுச்சியேற்றி

வான்முகம்புதைத்தபன்மீன்மதியெனமருண்டுநோக்கத்
தேன்முகம்புதைத்தமாலைக்குடைநிழற்றிருவிற்றந்தார்.

கான் - ஆகுபெயர்.

இ-ள். நினைத்தையழுத்திய வேல்போலுங்கண்ணினார், பூ முகமறைத்த நீரை முகந்து பொலிவினையுடைய குடங்களைநிறைத்து அவற்றை மீனுமதியுமென்றுநோக்கும்படி அக்களிற்றிலேயேற்றிக் குடைநிழலிலே செல்வத்தோடே தந்தாரென்க.

குடங்கட்குப் பன்னிறமுடைமையானும், சிறுமைபெருமையானும் மீனுமதியமுமுவமமாயின. தேனின முகத்தைமறைத்த மாலை. (௩௮)

க. இழைத்தபொன்னகரின்வெள்ளியிடுமணைமன்னரேத்தக்
குழைப்பொலிந்திலங்குகாதிற்கொற்றவனிருந்தபின்றை
மழைக்கவின்றெழுந்தவார்கொண்மகளிர்நறவறுகைநெய்தோய்த்து
தெழுதிக்குழைதிருவில்வீசமகளிர்நெய்யேற்றுகின்றார். (௩௯)

உ. மின்னுமிழ்வைரக்கோட்டுவிலங்கொளியிமயமென்னும்
பொன்னெடுங்குன்றம்போலப்பூமிமேனிலவிவைய
நின்னடிநிழலின்வைகவேமியஞ்செல்வனாகி
மன்னுவாய்திருவோடென்றுவாழ்த்திநெய்யேற்றினாரே.

இவையிரண்டுமொருதொடர்.

இ-ள். பொன்னாலிழைத்தநகரிலே வெள்ளியாற்செய்யப்பட்ட மணையிலே யரசரேத்தக் கொற்றவனிருந்தபின்பு, மகளிர் மழைக்குக்கிளைத்தெழுந்தவறுகை நெய்யைத்தோய்த்துக் குழை வில்லைவீச நெய்யேற்றுகின்றவர்கள், இமவானைப்போலே நிலத்திலேநிலைபெற்று நின்னடிநிழலிலே யுலகம்வைகச் சக்கரவாளசக்கரவாததியாய் இலக்கணையோடே மன்னுவாயாகவென்று வாழ்த்திநெய்யையேற்றினாரென்க. ()

வே று.

நீடுநீர்மணிநீருமல்லவு
மாடுநீரனவத்துமண்களு
மூடுமின்னனுருநிஞ்சியாட்டினார்
கூடியின்னியங்குழுமியார்த்தவே.

நீடுநீர் - கங்கைமுதலியதீர்த்தநீர். மணிநீர் - சந்திரகாந்தக்கல்லினீர். அலவவென்றது - அத்தையுமண்ணையுமொழிந்த ஐந்துவினையையும், முப்பத்திருவகை ஓமாலிகையையுமாம். அத்து - துவர். பத்துமண்ணென்றும்பாடம். மண்ணவன: "ஆனையே றேனக்கோட் டாற்றங் கரைபுற்று - வானவர்தங் கோயிலெழில் வான்கழனி - பானிலவு - முத்தெறியும் வெண்டிரைநீர் மூதூர் வடதருவேர் - பத்துமிதன் மண்ணைகப் பார். ஒழிந்தனவற்றிற்குக் "கங்கையின்களிற்றினுச்சி" என்றகவியிற் கூறினும். ஊடு - இடை.

இ-ள். இடை மின்னையொப்பார், பூசுநீரனவாகிய அத்தாலும், மண்ணாலும்,

வீடுபெற்றனவின்றேடென்னவே
சூடினானரோசுரும்புண்கண்ணியே.

ஈடில்சந்தனம் - விகாரம்; இடுதல் - உவமித்தல். இது வழக்கு. வீடு பெற்றன வென்றது - இவன்சூடிய மலர்பெற்றவழகு தாஞ்சூடுங்காலத்திற் பிறவாமைகண்டு எல்லாருந் தம்மைச்சூடுந்தன்மையைக் கைவிடுதலே மலர் பெற்றனவென்றவாறு.

இ - ள். சந்தனத்தைத் * தாமரையிதழின்கனத்தோடேபூசி மலர் வீடுபெற் றன இன்றேடென்னும்படி யம்மலரையுடைய கண்ணியைச் சூடினானென்க. (சசு)

மற்பகம்மலர்ந்தகன்றமார்பின்மேல்
விற்பகக்குலாயாரம்வில்விடக்
கற்பகம்மலர்ந்தகன்றதோவெனப்
பொற்பகப்பொலங்கலங்கடாங்கினான்.

இ - ள். மற்றொழிலான் பிறரிடத்துநின்றும் போம்படி தன்னிடத்தே பரக்கப் பட்டு அகன்ற மார்பின்மேலே யிந்திரவிற்றோற்கும்படி குலாவி யாரம்வில்விடா நிற்கக் கற்பகம் பூத்துப் பரந்ததோவென்னும்படி பொற்பை யகத்தேயுடைய பொலிந் தகலங்களை யணிந்தானென்க. (சஎ)

உருவமார்ந்தனவுரோமப்பட்டுடுத்
தெரியும்வார்குழைசுடரவிந்திர
திருவிலன்னதார்திளைப்பத்தேங்குழ
லரிபெய்கண்ணணியர்க்கநங்கனாயினான்.

இ - ள். எலிமயிர்முதலியவற்றாற்செய்த பட்டை யுடையாகவுடுத்துக் குழை சுடரத் தார்திளைப்பக் கண்ணியர்க்கு அநங்கனாயினானென்க.

செயவெனெச்சம் †"ஆன்வந்தியையும் வினைநிலையான்" முடிந்தன. இவனை யொழிந்தோர்க்கு அரியனாய் வருத்துதலின், அநங்கனென்றார். (சஅ)

தாவிறூழ்வடந்தயங்கநீருறீஇ
மேவியச்சுதந்தெளித்தபின்விரைந்
தாவியம்புகைசுழற்றியாடியும்
வீவில்வெஞ்சுடர்விளக்குங்காட்டினார்.

இ - ள். மகளிர், வடந்தயங்க விரைந்துமேவி யச்சுதத்தை நீரிலேயுறுத்தித் தெளித்தபின்பு தூபத்திரவியம் ஆவித்தபுகையைச் சுழற்றி விளக்கையும், ஆடியை யுங் காட்டினாரென்க.

ஆவியம் புகை - வினைத்தொகை. இவை காட்டுதலியல்பு. (சக)

---

* "வெள்ளிலோத்திரத்தின் பூம்பொருக்கரைத்தசாந்தின்-காசறுதுவலைக்தாம ரகவிதழ் பயிலமட்டித்து" என்றார் முன்னும். காந்தருவதத்தையாரிலம்பகம், கக0.

† தொல்காப்பியம், சொல்லதிகாரம், வினையியல், கூரு.

உவரிமாக்கடலொல்லென் வெண்டிரை
யிவரியெழுவபோன்றிலங்குமாமயிர்க்
கவரித்தொகைபலவீசுங்காவல
ரிவரித்தொகையென்பதின்றியாயினார்.

உவரிநீரையுடைய கடற்றிரை பரந்தெழுவனபோன்றிலங்குங் கவரி. மயிர்க்கவரி - முதற்கேற்ற அடையடுத்தவாகுபெயர். இத்தொகையர் - விகாரம்.

இ - ள். இவர் இத்தொகையரென்பதின்றாகக் கவரிவீசுங் காவலர் திரண்டாரென்க. (௫௦)

அறுகைவெண்மலரளாயவாசநீ
ரிறைவன்சேவடிகழுவியேந்திய
மறுவின்மங்கலங்காட்டினார்மணங்
குறைவில்கைவினைக்கோலமார்ந்ததே.

இ - ள். அறுகையுமலரையுங்கலந்த நீராலே யிறைவனடியைக்கழுவி, எடுத்த அட்டமங்கலங்களையுங் காட்டினார்; அப்பொழுது குறைவில்லாத கைவினையையுடைய மணக்கோலமார்ந்ததென்க. (௫௧)

வேறு.

ஊனிமிர்கதிர்வெள்வேலுறைகழித்தனபோலுந்
தேனிமிர்குவளைக்கட்டிருமகளனையாளைப்
பானிமிர்கதிர்வெள்ளிமணைமிசைப்பலர்வாழ்த்தி
வானிமிர்கொடியன்னார்மணியணைசேர்த்தினரே.

இ - ள். ஊனிலேவளர்ந்த வேல் உறைகழித்தவற்றையொக்குங் கண்ணையுடைய இலக்கணையை மேகத்திலேபரந்த மின்னுக்கொடியையொப்பார் பலரும் வாழ்த்தி வெள்ளிமணையிலிட்ட அழகியவணையிலே யிருத்தினாரென்க.

பால்போலப்பரந்த கதிர். (௫௨)

வரைவிளைவளர்பொன்னேவலம்புரியொருமணியே
திரைவிளையமிர்தம்மேதிருவிழையெனவேத்தி
வரிவளைமுழவிம்மமணிகிளரொளிமையம்பா
லரைவிளைகலைநல்லாரறுகைநெய்யணிந்தனரே.

இ - ள். நல்லார், திருவிழையானவள் பொன்னே மணியே யமுதேயென்றேத்தி வளையும்முழவும் விம்மாநிற்க அவ்வம்பாவிலே யறுகாலே நெய்யையணிந்தாரென்க.

ஏகாரம் தேற்றம். திருவிழைகென்று பாடமாயின், விளியாக்கி நின்னைத் திருவிரும்புகவென்க. அரசென்னும் பண்புப்பெயர் அரையெனப் பண்புமாத்திரை விளக்கிற்று. அரசியல்முற்றுப்பெற்ற நூற்கலையை வல்ல நல்லாரென்க. (௫௩)

கள்ளவிழ்கமழ்கோதைக்காவலன்றிருமகளை
வெள்ளிருமதயானைவிழுமணிக்குடமேற்றித்
தெள்ளறன்மண்ணுநீராட்டினர்தேமலர்மே
லொள்ளிழையவளொத்தாளுருவநுண்ணுசுப்பின்னாள்.

இ - ள். வெள்ளணியணிந்த யானையிரண்டின்மேலே குடத்தையேற்றிக் காவலன்மகளை நீராட்டினார்; அங்ஙனம் இரண்டினாலுமாட்டுதலிற் றிருவையொத்தாளவளென்க. (௫௪)

வான்மலர்நுனைசூடிமணியணிகலஞ்சிந்தத்
தானிளமணலெக்கர்தவழ்நதிர்மணியார
மேனையநறஞ்சுண்ணங்குங்குமமிடுங்களியாத்
தேனினமிசைபாடத்தீம்புனலடைந்தனரே.

இ - ள். அவராட்டினதீம்புனல்தான் மணியுமாரமும் இளமணலாகிடுமெக்கராக ஏனையவாகிய சுண்ணமுங் குங்குமமும் வண்டலாகக்கொண்டு மலராகிய நுனையைச்சூடி யணிகலங்களின் மணியை மணியாகச் சிந்தித் தேனினம்பாட நடந்ததென்க. (௫௫)

நான்றபொன்மணிமாலைநகுகதிர்ப்பவளத்தூ
ணூன்றினவொளிமுத்தமண்டபந்தொளிர்திங்கள்
கான்றனகதிர்காய்த்தும்வட்டணைக்கதிர்முத்த
மீன்றபொன்விதானத்தின்னிழலுய்த்திரீஇயினரே.

இ - ள். பொன்மாலையுமணிமாலையுநான்ற பவளத்தூணாட்ட முத்தமண்டபத்தே யவளையுய்த்துத் திங்களினுடைய கான்றனவாகிய கதிரைத் தாமெறிக்கும்வட்டணையிலே யிருத்தினாரென்க.

விதானத்தினிழலிலணை. (௫௬)

மையணிமதயானைமத்தகவகலல்கு
லெய்யணிகுழன்மாலைநிழலுமிழ்குழைமங்கை
மெய்யணிகலன்மாலைமின்னிருந்துகிலேந்திக்
கையணிகுழன்மாலைக்கதிர்முலையவர்சூழ்ந்தார்.

இ - ள். கையாலணிந்தகுழலையும், மாலையையும், முலையையுமுடைய மகளிர் அணிகலமுதலியவற்றையேந்தி யஞ்சனமணிந்த யானையின்மத்தகம்போலு மல்குல் முதலியவற்றையுடைய மங்கையைச் சூழ்ந்தாரென்க.

கையணி - கைசெய்யப்பட்டவென்றுமாம். (௫௭)

அவ்வளையவிராழிக்கால்பொலிந்தழகார்ந்த
மைவிளைகழுநீர்க்கண்விலாசியுமணியல்குற்
கைவளையலங்காரமாலையுங்கமழ்கோதை
நைவளமிகுசாயனங்கையைப்புனைகின்றார்.

இ - ள். கோதையினையும், நட்டபாடையினுமிக்க மெல்லியமொழியினையுமு டையநங்கையை யழகிய வளைந்த விரன்மோதிரத்தையுடைய கால்பொலிவுபெற்று அழகார்ந்தவிலாசியும், கையில்வளையையும் மணியல்குலையும்முடைய அலங்காரமாலை யும் ஒப்பியாநின்றாரென்க.

மைவிளைகழுநீர் - நீலோற்பலம். (ருஅ)

யானையுளரசன்றன்னணிகிளர்வலமருப்பீர்ந்
தூனமிலொளிர்செம்பொன்பதித்தொளிமணியழுத்தி
வான்மணமுணச்செய்தமங்கலமணிச்சீப்புத்
தான்முகில்கழிமதிபோழ்முன்னுறைநீக்கினளே.

இ - ள். களிற்றரசனது வலக்கொம்பையறுத்துப் பொன்னைப்பதித்து மணிய ழுத்தி மணந்தங்கச்செய்தசீப்பை விலாசிதான் முகிலினின்றுங் கழியுமதிபோலேஅத னுறையினின்று நீக்கினளென்க. (ருகூ)

வே று.

மைந்நூற்றனையமாவீழ்மோதிவகுத்துந்தொகுத்தும்விரித்துங்
கைந்நூற்றிறத்திற்கலப்பவாரிக்கமழ்நானக்கலவை
யைந்நூற்றிறத்தின்னகிலின்னாவியளைந்துகமழவூட்டி
யெந்நூற்றிறமுமுணர்வாளெழிமேலற்றிமிலின்னேற்பமுடித்தாள்.

இ - ள். எந்நூற்றிறமுமுணாவாள் தன்கையாலே யிருளைநூற்றனைய வண்டு வீழ்மோதியைக் கலவையையும் புகையையும் வியக்கத்தக்க நூல்வழியோடேயளைக் ஆட்டிக் கலக்கவாரி முகத்துக்கேற்ப இமில்போலே முடித்தாளென்க.

கையான்முடித்தாள். குழலையும் அளகத்தையும் வகுத்தும், கொண்டையைத் தொகுத்தும், பனிச்சையையும் துஞ்சையையும விரித்தும் நூற்றிறத்தின் முடித்தா ளென்க. (சுo)

கரும்புந்தேனும்மமிழ்தும்பாலுங்கலந்ததீஞ்சொன்மடவாட்
கரும்பும்மிலையுமயக்கியாய்ந்தமுல்லைச்சூட்டுமிலைச்சித்
திருந்துதிங்கள்சூழ்ந்தமின்னிற்செம்பொற்பட்டஞ்சேர்த்தி
விரும்பும்முத்தம்மாலைநான்றவிழுப்பொன்மகரஞ்செறித்தாள்.

இ - ள். தீஞ்சொன்மடவாட்குத் திங்களைச்சூழ்ந்தமின்போலே பட்டத்தைச் சேர்த்தி யரும்புமிலையும் இடையிட்டுக்கட்டின முல்லைச்சூட்டைக் கற்புக்குமிலைச்சி முத்தமாலைநான்ற மகரவாயானபணியை யணிந்தாளென்க. (சுக)

கள்ளுந்தேனும்மொழுகுங்குவளைக்கமழ்பூநெரித்துவாங்கிக்
கிள்ளைவளைவாய்கிரிற்கிள்ளித்திலகந்திகழப்பொறித்துத்
தெள்ளும்மணிசெய்சுண்ணம்மிலங்கத்திருநீர்நுதலின்னப்பி
யுள்ளம்பருகிமதர்த்தவாட்கண்ணுருவம்மைமயிற்புனைந்தாள்.

கள்ளும் - களவுகாணும்; * "கள்ளத்தாற் கள்வே மெனல்" என்றார். கமழ் தேனும் பொசியுமளவன்றி யொழுகுங் குவளைப்பூவென்க.

இ - ள். கிள்ளையின்வளைவாய்தான் தன்றன்மையைக் கள்ளும் உகிராலே மயி ரைச்கோத்துவாங்கி யதனுள்ளே குவளைப்பூவைப் புறவிதழைக்கிள்ளி நெரித்துத் திகழப்பொறித்துத் திருநீர்நுதலிலே திலகத்தை மணிச்சுண்ணத்தாலே யிலங்கவப் பிக் கண்ணை நிறத்தையுடைய மையாலேபுனைந்தானென்க.

பொறித்து - எழுதினாற்போல். கணவனுள்ளத்தைப்பருகி. (௬௨)

நாகம்மருப்பினியன்றதோடுந்நலங்கொள்சுறவுக்குழையும்
போகநீக்கிப்பொருவில்திருவில்லுமிழ்ந்துமின்னுப்பொழியு
மேகமாகியெரியும்மணியினியன்றகடிபபுவாங்கி
மேகவிசும்பிற்றேவர்விழைபவிளங்கச்சேர்த்தினாளே.

இ - ள். நாகமருப்பினியன்றதோட்டையும் நலங்கொண்ட மகரக்குழையை யுங் காதினின்றும்போகநீக்கி, மின்னைதுசொரியும் பொருவில்லாத திருவில்லைத் தானுமிழ்ந்து ஏகமாகி யெரியுமணியினியன்ற குதம்பையை யேந்தினின்றவள்கையி னின்றும்வாங்கிக்கொண்டு அவள்விளங்கச்சேர்த்தினாளென்க.

தேவர் - ஈண்டுப் பெண்பன்மை. (௬௩)

வேறு.

விலங்காம்பொருதசங்கின்வெள்வளைமெழுக்குமுன்கை
நலங்கிளர்பவளநன்பொன்விரன்மலரியாழிமின்னக்
கலந்திப்றுபணைத்ததோளுங்களின்வளர்முழுத்துமாந்த
வலம்புரியீன்றமுத்தமணிநிலாகக்காள்றே.

இ - ள். வளைந்த வாளரமறுத்த சங்கவளைபொலிக்குமுன்கையில் நலங்கிளர் பவளம்போலும் விரலிலணிந்த நன்பொன்மணியாழி மின்னாநிற்க, தோளிலுங் கழுத் திலுமணிந்தமுத்தம் நிலாவைக்கெடுத்தனவென்க.

இன் - அசை. (௬௪)

மாமணிமுகடுவேய்ந்தமரகதமணிச்செப்பன்ன
தூமணிமுலைகடம்மைத்தொழுதகக்கமழுஞ்சாந்திற்
காமருகாமவல்லிக்கொடிகளின்கொண்டுபூத்துத்
தூமணிக்கொழுந்துமென்றோட்டியல்வரவெழுதினாளே.

மரகதமணியைத் தலையிலேயழுத்திய பெரிய பவழச்செப்பு. இவள்நிறம் பவ ழத்தின்நிறமென்றார் பலவிடத்தும்.

---

* திருக்குறள், கள்ளாமை, ௨: உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக் கள்ளத்தாற் கள்வே மெனல்.

இ - ள். காமவல்லியாகியகொடி முலைகடம்மை யிடங்கொண்டு கவின்பூத்தத் தோளிலே கொழுந்தசையும்படி தொழுதகச் சாந்திஞலெழுதிஞளென்க. (௬௫)

நாண்சுமக்கலாதநங்கைநகைமின்னுநுசுப்புநோவப்
பூண்சுமக்கலாதபொன்ஞாண்வடத்தொடுபுரளநோக்கிப்
பாண்குலாய்வண்டுபாடும்பங்கணைமறந்துகாமன்
காண்கிலேன்கடியவென்றவ்வுருகிமெய்கரந்திட்டானே.

இ - ள். பிறரால் சுமக்கலாகாத நாணினையுடைய நங்கையது நுசுப்புநோம்படி சுமக்கலாகாத பூணும் நாணும் முத்துவடமும்புரளவணிய, அதனைக் காமனேக்கி மலர்க்கணையை யெய்யமறந்து இங்ஙனங் கடியனகாண்கிலேனென்றுகருதி யிவடன் மெய்யிலேகரந்து வேட்கையை விளைவித்தானென்க.

அநங்கனெனன். (௬௬)

அலாக்கிடந்தகன்றவல்குலரிக்கிளர்திருவிற்பூப்பத்
தலாக்கதிர்க்காசுகண்டாராவிலைத்தளரச்சூட்டி
நிலாக்கிடந்தனையதூநீறுநன்கொளாப்படுத்தா
ளுலாக்கதிர்த்திங்களம்மென்கதிர்விரித்துடுத்ததொத்தாள்.

இ - ள். கண்டாராவிதளரும்படி காசுகள் அலாததன்மைகிடந்தகன்றவல்குலின் மேலேசூட்டப்பட்டுத் தெய்வத்தன்மைநாறும்பட்டையுடுத்தாளுடுத்தவள் நிறைமதியின் கதிரை விரித்துடுத்த தன்மையை யொத்தாளென்க.

திருவிற்போலப்பூப்பச்சூட்டி. ஆவிலை, ஐ - அசை. கலாய் - கலவி. கண்கொளா - இழைதெரியாத அணிந்தாளாடையாயின், விசேடியாக்குக. (௬௭)

இடைச்செறிந்துறுகுறங்கெளிக்கிம்புரியினையின்னும்
புடைச்சிறுபாடுபுல்லிக்கிங்கிணிச்சிலம்போடாப்ப
நடைச்சிறுபாதங்கோலமணிவிரலணிந்துநாகத்
துடைச்சிறுநாவிற்றோகையிரிஇயினலங்காரமாலைசேர்ந்தாள்.

இ - ள். ஒருகூறு கிம்புரிவடிவான குறங்குச்செறி குறங்கைக்கெளவிநெகிழப் பரட்டைப்புல்லிக் கிண்கிணியுஞ்சிலம்புமாரப்பவணிந்து பாதத்திலும்விரலிலும் அணிவனவற்றையுமணிந்து பாம்பினுடைய சிறிய நாப்போலுந் தோகையை விலாசிதாழ இருத்தியிட்டாள்; பின்பு அலங்காரமாலை சேர்ந்தாளென்க. (௬௮)

அம்பலரடியுங்கையுமரிக்கிளர்பவளவாயுஞ்
செம்மலர்நுதலுநாவுந்திருந்தொளியுகிரோடேழ்
விம்மிதப்பட்டுவீழவலத்தகமெழுதியிட்டா
ளம்மலர்க்கண்டபுள்ளிட்டரிவையைத்தெரிவைதானே.

இ - ள். அம்மாலைதான் அரிவையை மாலையணிந்து கழுத்தையுள்ளிட்டு உகிரோடேயடிமுதலியவற்றையெல்லாம் அதிசயித்துவிரும்பும்படி யலத்தகத்தை எழுதிஞளென்க.

செம்மலா - நெற்றிமாலை. (௬௯)

வாண்மதர்மழைக்கணோக்கிவருமுலைத்தடமுநோக்கிக்
காலவரவகன்றவல்குற்கண்விருப்புற்றுநோக்கிப்
பாணுவண்டரற்றுங்கோலச்சிகழிகைவடிவுநோக்கி
யாண்விருப்புற்றுநின்றாரவ்வளைத்தோளினாரே.

இ - ள். தோளினார் விருப்பமுற்று, தங்கண்ணாலே யவள்கண்ணையுநோக்கி, முலையையுநோக்கி, அல்குலையுநோக்கி, பாட்டையுடைய வண்டொலிக்கும் முடியின் வடிவையுநோக்கி நுகர்தற்குரிய ஆண்மையை விரும்பிநின்றாரென்க. (௭௦)

வேறு.

தெருள் நலான்படைத்தவன்காணிற்செவ்வனே
மருள்கலாதவர்களுமருள்வர்மம்மரோ
யிருளிலாரெங்ஙனமுய்வரின்னதா
லருளிலாரவணலமணிந்தவண்ணமே.

இ - ள். அருளிலாதார் அவளழகையணிந்தவண்ணம் இப்படி யாண்மையை விரும்புந் தன்மையாயிருந்தது; இனி யயனும் காணில் நாமபடைத்தவடிவன்றென்று மயங்குவன்; இருடிகளும் நேரேமயங்குவர்; இத்தன்மையாயதனைக் கண்டால் மயக்க நோயையுடைய இல்வாழ்வார் எங்ஙனம் பிழைப்பாரென்றாரென்க. (௭௧)

அலர்ந்தவந்தாமரையல்லிப்பாவையைப்
புலந்துகண்சிவந்தனபோன்றுநீர்பிரிந்
திலங்கிமின்னுமிழ்ந்துலாமேனியேந்துபொன்
மலர்ந்ததோர்கற்பகமணிக்கொம்பாயினாள்.

நீர்பிரிந்து - கோபித்து.

இ - ள். பூண்கள் இலங்கி மின்னுமிழ்ந்துலாம் மேனியையுடையாள் திருவை நிகராகக்கூறற்குப் புலந்து கோபித்தனபோலக் கண்கள் கோபிக்கப்பட்டுக் கற்பகக் கொம்பாயினாளென்க.

மையெழுதுதலிற் சிவந்து கோபித்ததனை நல்வினையுடையாரிடத்தே சென்று மீளுந் திருவையொப்பாகக்கூறியதற்குப் பொறாது கோபித்தவெனத் தற்குறிப்பேற்றமாகக் கூறிற்றாம். (௭௨)

மருடகமல்லிகைமாலைவல்லவன்
பொருடகத்தொடுத்தனபுனைந்தபூஞ்சிகை
யிருடுணித்திடையிடையியற்றிவெண்ணிலாச்
சுருடுணித்தொருவழித்தொகுத்ததொத்ததே.

இ - ள். வல்லவன் எழுத்துவடிவுபடக் கட்டினவாகிய மல்லிகைமாலையைப் புனைந்தமுடி, இருளையுந்துணித்து நிலாச்சுருளையுந்துணித்து ஒன்றைவிட்டொன்றாக இயற்றி யோரிடத்தேகுவித்த தன்மையையொத்ததென்க. (௭௩)

கோமகளுருவமாய்க்கூற்றம்போந்தது
போமினும்முயிருயக்கொண்டு*போயினுங்
காமினமெனக்கலைசிலம்புகிண்கிணி
தாமனும்வாயினுற்சாற்றுகின்றவே.

இ - ள். கூற்றங் கோமகள்வடிவாய்க் கோறற்குவந்ததாதலின், நும்முயிரை யுய்யக்கொண்டுபோமின்; போனுலும் ஆண்டு மனம்வருந்துதலைககாமினென்று கலை முதலியனதாந் தம்வாயினுலே மிகவுஞ்சாற்றுகின்றனவென்க.

அம் - அசை. (எச)

அருளிலாரிவடமரன்னராயினு
முரிதிரையுலகெலாமுருளுமின்றெனக்
கருதினகவரிசாந்தாற்றிவெண்குடை
யரிவையைமறைத்தனவாலவட்டமே.

இ - ள். அரிவையை யாண்டுக் கவரிசாந்தாற்றிமுதலியன மறைத்தன; அவை யின்று முரிகிறதிரையையுடைய உலகமெல்லாங் கெடுமெனக்கருதி, அணிந்த இவள் தமர் அருளிலாராயிருந்தார்; அவா அந்தன்மையராயினும் யாம் அவைகெடாமல் அருளுதுமென்று கருதினபோலே யிருந்தனவென்க. (எரு)

வேறு.

க. கரும்பேதேனேயமிர்தேநாமர்மணியாழே
யரும்பார்மலர்மேலன்னமேகோபமூலையன்னம்மே
சுரும்பார்சோலைமயிலேகுயிலேசுடர்வீசும்
பெரும்பூண்மன்னன்பாவாய்பூவாய்பிணைமானே (எசு)

உ. அம்மெல்லனிச்சம்மலருமன்னமதூவியும்
வெம்மையாமென்றருசிமெல்லமிதியாத
பொம்மென்னிலவப்பூம்போதனகின்னடிபோற்றி
யிம்மென்கலையாரிடுவென்றேத்தவொதுங்கினுள்.

இவையிரண்டுமொருதொடர்.

கணவற்கு மெய்ம்முழுதும் இனிதாயிருத்தலிற் கரும்பு. நல்லாருறுப்பெல்லாங் கொண்டு இயற்றலிற் றேன். இவ்வுலகிலில்லாத மிக்கசுவையும, உறுதியுங்கொடுத்த லின்அமிர்து. காமவேட்கையை விளைவித்து இனிய பண்டோற்றலின், மழலையை யுடையதோர்யாழ். கணவற்குச் செல்வத்தைக்கொடுத்தலிற் றிரு. நடையால் அன்னம். சாயலான் மயில். காலமன்றியுஞ் சேட்டோர்க்கு இன்பஞ்செய்தலின், குயில். மன்னன்மகளேயென்றல் புகழன்மையின், மன்னன்பாவாயென்றது அவன் கண்மணிப்பாவையென்பதுணர்த்திற்று. இனி யிவள் கொல்லிப்பாவையன்று; மன் னன்பாவையென்றுமாம். சேடியர்கற்பித்த கட்டளைதப்பாமற் கூறலிற் பூவை. நோக்கத்தான் மான்.

இ - ள். இம்மென்கின்ற ஓசையையுடைய கலையார்பலருங் கரும்புமுதலிய

* போய்மனமென்றும் பாடம்.

பெயர்களாலேவிளித்து, அனிச்சத்தையுந் தூவியையும் மெல்லமிதித்தாலும் வெம்மைபிறக்குமென்றஞ்சி யவற்றைமிதியாத நின்னடியைப்பேணி யிடுவாயாகவென்றேத்த அவளும் அங்ஙனம் கடந்தாளென்க. (எஎ)

தூமாண்டமேக்குடமாயிரமாய்ச்சுடர்பொற்றூண்
டாமாயிரமாய்த்தகையார்மணித்தூணொருநூறாய்ப்
பூமான்டாமத்தொகையாற்பொலிந்தகுளிர்பந்தர்
*வேமாணியர்தம்மகளிரின்விரும்பகனிசேர்ந்தாள்.

இ - ள். தூய்மைமாண்ட தூமக்குடமாயிரமாய் விளங்குகின்ற பொற்றூண்டாம் ஆயிரமாய்க் குளிர்ந்தபந்தரிலே சமைத்த மணித்தூணொருநூறாய்த் தாமத்தாற்பொலிந்த வேள்விச்சாலையைத் தெய்வமகளிரைப்போல விரும்பும்படி சேர்ந்தாளென்க. (எஅ)

தேனார்காமன்சிலையுங்கணையுந்திறைகொண்ட
வானார்மதிவாண்முகமும்மடமான்மதர்நோக்குங்
கோனார்மகடன்வடிவுநோக்கிக்குடைமன்ன
ரானார்கண்ணூடமுல்போயமையாராரானரே.

* காமன்சிலையுந் தேனார்கணையையும்வென்ற புருவமுங்கண்ணும் முகத்திற்கு அடை..

இ - ள். அரசன்மகளுடைய முகத்தையும், பார்வையையும், வடிவையுநோக்கி, மன்னராயினரெல்லாங் கண்பொறிபோய் அமையாராயினரென்க. (எகூ)

வேறு

வண்டலர்கோதைவாட்கண்வனமுலைவளர்த்ததாயர்
கண்டுயிருண்ணுங்கூற்றங் கயிறரீஇக்காட்டியிட்டா
ருண்டுயிர்சிலர்களவாழ்கென்றுநதராசங் கம்மைத்தா
தெண்டிரைமேலியென்றுந்தீதினதாகமாதோ.

இ - ள். கோதையை வளர்த்ததாயர் அவள்கண்ணையுமுலையையுங் கூற்றமென்றேயறிந்து உலகெங்குந் தீதிடத்ததாம்படி கோறற்குக் கயிறரீஇக் காட்டினார்; பின்பு அருள்பிறந்து இவற்றுள் வாட்கண் சிலருயிர்களையுண்டுவாழ்க, முலைகள் அதனையொழிவதாகவென்று உத்தரீயத்தைவைத்தாரென்க. (அ0)

கண்ணினுமின்றுநன்டாங்கூற்றினைக்காமாசெவ்வா
யொண்ணுதலுருவக்கோலத்தொருபிடிநுசுப்பிற்றீஞ்சொல்
வண்ணித்தலாவதில்லாவருமுலைமதர்வைநோக்கிற்
பெண்ணுடைப்பேதைநீர்மைப்பெருந்தடங்கண்ணிற்றம்மா.

வண்ணித்தல் - வர்ணித்தல். பெண்டன்மையையுடைய பேதைநீர்மை.

இ - ள். இன்று கூற்றினைக் கண்ணதுலேகண்டனம்; அதன்றன்மைகூறிற செவ்வாய்முதலியவற்றை யுடைத்தாயிருந்ததென்று கண்டார்கூறினரென்க. (அக)

---

* வேமாணியரென்பது விமானத்தாற் சஞ்சரிப்பவரென்னும் பொருளதோர் பாகதச்சிதைவு.

அரத்தகமருளச்செய்தசீறடியளியதம்மாற்
குரற்சிலம்பொலிப்பச்சென்னிக்குஞ்சிமேன்மிதிப்பநோற்றான்
றிருக்குலாய்க்கிடந்தமார்பிற்சீவகனங்களெல்லாந்
தரித்திலந்தவத்தையென்றுதார்மன்னரேமுற்றாரே.

அரத்தகம் - திரிந்தது.

இ - ள். பிறர்மருளச் செம்பஞ்சியணிந்த அளியசீறடிகளாலே சென்னியிற் குஞ்சியிலே சிலம்பொலிக்கும்படி மிதிக்கநோற்றான் சீவகனே; யாங்களெல்லாம் அதற்குத் தவஞ்செய்திலேமென்று அரசர் மயக்குற்றாரென்க. (௮௨)

கோவிந்தனென்னுஞ்செம்பொற்குன்றின்மேற்பிறந்துகூர்வேற்
சீவகனென்னுஞ்செந்நீர்ப்பவளமாகடலுட்பாய்வான்
பூவுந்தியமுதயாறுபூங்கொடிநுடங்கப்போந்து
தாவிரிவேள்விச்சாலைமடுவினுட்டாழ்ந்ததன்றே.

பூவுந்தி - உவமமும், வேற்றுமையுந்தொகைன. உந்தி கொப்பூழையும் ஆற்றிடைக்குறையையும், கொடி மருங்குலையும் படர்கொடியையுமுணர்த்தும்.

இ - ள் பூவுந்தியையுடைய அமுதமாகியயாறு கோவிந்தனென்னுமேருவிலே பிறந்து சீவகனென்னுஞ் செந்நீர்க்கடலிலே சேரவேண்டிக் கொடிநடங்கப்போந்து யாகசாலையாகியமடுவிலே செறிந்துபொழுதுதங்கிற்றென்க

செந்நீர் - புதுநீர் (௮௩)

சாணிடைநெடியவாட்கண்டலையவிழ்குவளைபூப்பப்
பூணுடைமுலையின்பாரம்பொறுக்கலாச்சுளிவின்மேலு
நாணடைநடுங்கிகையானைமுகம்புதைத்ததோற்றஞ்
சேணிடையரவுசேர்ந்ததிங்களையொத்ததன்றே.

இ - ள். முலைப்பாரத்தைப் பொறுக்கமாட்டாத வருத்தத்தின்மேலும் நாணுதலாலே நடுங்கி நடுவுசாணளவாக நெடியகளை அலருகின்ற குவளைபோலப் பொலிவுபெறும்படி முகத்தைக் கையாலே மறைத்ததோற்றம், விசும்பிடையில் அரவுசேர்ந்த மதியையொத்ததென்க.

கையிடையிலே கண்டோன்றுதலின், அலர்கின்றாற்போன்றதென்றார். (௮௪)

௧. முதுதமிழ்திளைகளங்கமொய்கொள்பாதாலமுத்தீ
யொத்தளவேலைவேள்வியொளிகடனன்குநாவை
வைத்தநான்மறையுநீந்திவாய்குணமென்னுஞ்சாவி
வித்திமேலுலகத்தின்பம்விளைததுமெய்கண்டீரா. (௮௫)

௨. தருமணற்றருப்பையார்ந்தசமிதையிம்பான்றினும்
விரிமலரணிந்தகோலவேதிகையியற்றியானை
யொருமணியகலுட்பெய்தோர்பொன்னைகலார்ந்ததூப
மிருமணியகலுணீர்பெய்திடவயினிரீஇயினாரே.

இவையிரண்டுமொருதொடர்.

௧. மொய்கொள்பாதாலம் - வலிகொண்டபாதாலம்; என்றது வடவாமுகாக்கினியை. கடலிடையிலே பாதாலத்தேசெல்ல நீரைவாங்குதலின், அதற்குப் பாதாலமென்று பெயர்கூறினர். குணம் - ஆகுபெயர்.

௨. தருமணல் - தண்டிலார்த்தமாகக் கொண்டுவந்த மணல். தண்டிலமாவது - அக்கினியைப்பிரதிஷ்டிக்கிறவிடத்தே சதுரமாகப் பரப்புகின்றமணல். தருப்பை - தர்ப்பை. ஆர்ந்தசமிதை - சமிதைக்குக்கூறுமிலக்கணங் குறைவற்றசமிதை; என்றது - பரிதிகளையும், வேண்டுஞ் சமிதைகளையும். வேதிகை - விவாகார்த்தமாகவிட்ட சதுஸ்தம்பவேதிகை. இயற்றுதலாவது - வேதிகையில் அக்கினியைப்பிரதிஷ்டிக்குமிடத்தே தண்டிலத்தைக் கற்பித்து அதிலே அக்கினியைப் பிரதிஷ்டித்துத் தருப்பையை நான்குவிளிம்பிலுஞ் சூழவைத்துப் பரிதிகளைக் கீழ்த்திசையொழிந்த திசைகளிலேவைத்தல் முதலியன. இருமணியகலென்றது பிரணீதபாத்திரமும், புரோக்ஷணீபாத்திரமும். ஒருமணியகல் - ஆச்சியஸ்தாலி. பொன்னகலார்ந்ததூபம்பெய்தென்றதும், மேலிற்கவியில் "ஆன்பாலவி" என்றதும் மதுபர்க்கார்த்தமாக வைத்தவை. * "[illegible] ।
[illegible]॥" என்று விவாகவேதிகையிலே அக்கினியைப்பிரதிஷ்டித்து மதுபர்க்கங்கூறினர்.

இ - ள். திரைகள் அங்கமாகவும், பாதாலம் முத்தீயாகவும், ஒத்தனவாகியகரைகள் வேள்வியாகவும் இங்ஙனமொலிசெய்யுங்கடனன்குநாணும்படிவைத்த நான்மறைகளைநீந்தி நற்றொழிலாகிய சாலிநெல்லைவித்திச் சுவர்க்கத்தின்பத்தைவிளைத்து வீடுணர்ந்த நீரராகியவந்தணர் வேதிகையிலே மணல்முதலியமூன்றினலுமியற்றி யிருமணியகலிலேநீர்பெய்து ஒருமணியகலிலேநெய்பெய்து பொன்னகலிலே தூபம் பெய்து வைக்குமிடமாகியவிடங்களிலே வைத்தாரென்க. (அகூ)

நெற்பொரிநிறையப்பெய்துநிழலுமிழ்செம்பொன்மூழிக்
கற்புரிகடவுளான்பாலவியொடுகலப்பவைத்து
முற்பெரியானையாகத்தருப்பையான்முடிந்துமூன்று
பொற்புரிவளையும்பொய்தீர்சமிதைகளிரண்டும்வைத்தார்.

பொற்கலத்தே நெற்பொரியை நிறையப்பெய்து; பொரி - இலாசஹோமார்த்தமான பொரி. கற்புரிகடவுள்-அச்மாரோபணார்த்தமானவம்மி. ஆன்பாலவி-பாலுநெய்யுங்கலந்தது. முற்பெரியான்-பிர்மா. தருப்பையான்முடிந்து-பிர்மமுடியாகத் தருப்பையான்முடிந்து. மூன்றுபொற்புரிவளையென்றது தண்டிலத்தை மேற்கே தொடங்கிக் கிழக்கேமுடியத் தெற்கில்விளிம்பிலும் நடுவிலும் வடக்கில்விளிம்பிலும், தெற்கே தொடங்கி வடக்கேமுடிய மேற்கில்விளிம்பிலும் நடுவிலும் கிழக்கில்விளிம்பிலுங் கீறுகின்றகீற்றுக்களை. அக்கினியைப் பிரதிஷ்டிப்பதற்குமுன்பே கீறுகின்றவற்றையீண்டுக்கூறினரொன்றுணர்க. முதன்மூன்றுகீறிக் குறுக்குமூன்றுகீறுதல் தோன்ற மூன்றென்றொழியாது பின்னரும் பொலிவுபெறப் புரிந்தவளையென்றார். மூன்றுவளையைக் குண்டமென்றல் பொருந்தாது. பொய்தீர்சமிதைகளிரண்டாவன: தென்கீழைக்கோடியிலும், வடகீழைக்கோடியிலும்வைக்கும் ஆகாரசமிதைகளிரண்டும்.

* கபர்த்திகாரிகை.

இ - ள். நிறையப்பெய்து அவியோடு கலப்பக் கடவுளையும்வைத்து முடிந்து வரையும் சமிதையிரண்டையும் வைத்தாரென்க. (அஎ)

மந்திரவிதியின்மாண்டசிறுவிரற்றருப்பைசூழ்ந்து
மூந்துநாமொழிந்தநெய்யைமுனைமுதிர்தருப்பைதன்னுன்
மந்திரித்தமையமுக்கான்மண்ணிமற்றதனைநீக்கிச்
சிந்தித்துமறையிற்செந்தீத்தண்டிலத்தங்கண்வைத்தார்.

மந்திரவிதியின் - வேதோக்தமானபடியே. முனையென்றது-நறுக்கிநெய்க்குள் ளேபோகடுகிற தருப்பாக்கிரத்தை. அமையமந்திரித்து முனைமுதிர்ந்தநெய்யென்க.

இ - ள். தருப்பைநுனியை நறுக்கியிட்டநெய்யை, சிறுவிரலாலே தருப்பை யைச்சூழ்ந்து அத்தருப்பைதன்னாலே யிருகையாலுமிடையறுதபடி முக்கான்மண் ணி, அதனைச் செந்தீயிலேபோகட்டுத் தண்டிலத்திற் செந்திக்கருகேவைத்தாரென்க.

மறையிற்சிந்தித்து - வேதோக்தமானபடியே தியானித்து. தியானித்துவைத் தாரென்க. (அஅ)

தண்டிலத்தகத்திற்சாண்மேலெண்விரற்சமிதைநானுன்
கெண்டிசையவருமேததத்துடுப்புநெய்சொரிதலோடுங்
கொண்டுமுற்கடவுள்பொங்கிவலஞ்சுழன்றெழுந்ததென்ப
தெண்டிரைவேலியெங்குந்திருவிளையாடமாதோ.

இ - ள். சமிதைபதினறையும நெய்யையுஞ்சொரிந்தவளவிலே சாண்மேல் எண்விரலகலமாகப்பரப்பிய தண்டிலத்திடையில் அழற்கடவுள் அவற்றைக்கைக் கொண்டு பொங்கி யெண்டிசையவருமேத்தும்படி திரு விளையாட வலத்தே சுழன் றெழுந்ததென்க.

என்ப - அசை. துடுப்பு - தருவி (அக)

கனையுடைததுகிலிற்றோன்றுங்காஞ்சனவட்டில்முந்நீர்த்
திரையிடைவியாழந்தோன்றத்திண்பிணிமுழவுஞ்சங்கு
முரசொடுமுழங்கியார்ப்பமொய்கொள்வேல்மன்னரார்ப்ப
வரசருளரசனுய்பொற்கலசநீரங்கையேற்றான்.

இ - ள். வெண்டுகிலிற்றோன்றும் பொன்வட்டிப்போலே, கனையையுடைய முந் நீர்த்திரையிலே பிருகஸ்பதியுதயமாக முழவுமுதலியனவுமரசருமார்ப்ப அரசரிற் றலைவன் அகங்கையில் நீரையேற்றானென்க.

அக்கினியைப்பிரதிஷ்டித்து உதகம்பண்ணுதலுமுளதாகலின், இங்ஙனங் கூறி னர். (கய)

குளிர்மதிகொண்டநாகங்கோள்விடுக்கின்றதேபோற்
றளிர்புனைகோதைமாதர்தாமனைமுகத்தைச்சேர்ந்த
வொளிர்வளைக்கையைச்செல்வன்விடுத்தவளிடக்கைபற்றி
வளரெரிவலங்கொண்டாய்பொற்கட்டிருளேறினனே.

இ - ள். நாகம் மதியைக்கொண்டகோளை விடுகின்றாற்போலே கோதைமுகத்தைச் சேர்ந்தகையை மாதர்விடுக்க, அவளிடக்கையைப்பற்றி யெரியைவலங்கொண்டு கட்டிலிலே யேறினானென்க.

தளிர்புரைகை." விடுத்து - விடுக்க. அநந்தரமுள்ள ஓமங்களையும் பண்ணிப் பாணிக்கிரகணமும்பண்ணி அக்கினியை வலங்கொண்டான்; எனவே பொரியாலுள்ளவோமமும் அம்மியிற்காலவைப்பித்ததுவும பெற்றாம். கட்டில் - விவாகம் பண்ணி யெழுந்திருந்து சாந்தியானகூத்தும், ஆலத்தியுமகளொடு அருந்ததிகாணப் போமளவுமிருக்குங்கட்டில். இஃது அரசியல். (௬௧)

க. விளங்கொளிவிசும்பிற்பூத்தநலருந்ததிகாட்டியான்பால்
வளங்கொளப்பூத்தகோலமாரடிகழீஇயபின்றை
யிளங்கதிர்க்கலத்தினேந்தலயினிகண்டமாந்திருந்தான்
றுளங்கெயிற்று ழுவைதொல்சீர்ப்போகையோடிருந்ததொத்தான். ()

வேறு.

உ. பொன்னங்காம்பிற்பொலிந்தமுத்தவிதானம்புணர்ந்துதேம்
மன்னுமாலைபலதாழ்ந்துமணப்புகைவிம்மிமல்கிய
வன்னத்தூவியடாபஞ்சியவிர்மயிராதியாகப்
பன்னிச்சொன்னபதினைந்தும்படுத்தார்பாவைமார்களே.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். 'அருந்ததியை மனைவிகருக்காட்டிக் கூறி அறைவாசலிலே பாலாலே மலரடியைக்கழுவிய பின்பு பாலடிசிலையேந்தக் கண்ணுற்களொடு பாவைமாாபடுத்த படுக்கையிலே யமர்ந்திருந்தவன் புலி மயிலோடிருந்ததன்மையையொத்தானென்க.

உன்னுதிருத்தல் மரபு. உவமை-இல்பொருளுவமை. பொற்காம்பிலே விதானம்புணரப்பட்டு மாலைதாழப்பட்டுப் புகைமல்கிய மணவறையிலே தூவிமுதலியவற்றாற்படுக்கும் பதினைந்தும் படுத்தாரென்க. வேண்டினவிடத்தே நடுதற்குசசமைத்த முத்துப்பந்தர். (௬௨)

வேறு.

பனிமயிர்குளிர்ப்பனபஞ்சின்மெல்லிய
கனிமயிர்குளிர்ப்பனகண்கொளாதன
வெலிமயிர்ப்போர்வைவைத்தெழினிவாங்கினு
ரொலிமயிர்ச்சிகழிகையுருவக்கொம்பனார்.

இ - ள். தழைத்த மயிரான்முடித்த முடியையுடைய கொம்பனார், பனித்தான் மயிர் பிறர்க்குக்குளிர்ப்பன; மெல்லியன; நெருப்பின்கண் வேதற்குரியமயிரைவேவாமற் குளிரப்பண்ணுவன; நுண்மையாற் கண்கொளாதனவாகிய எலிமயிர்ப்போர்வையைவைத்து உருவுதிரையை வளைத்தாரென்க. (௬௩)

விழுத்தகுமணிச்செவிவெள்பொற்கைவினை
யெழிற்பொலிபடியகமிரண்டுபக்கமுந்
தொழிற்படவைத்தனர் துளும்புமேகலைக்
கழித்தவேலிரண்டுகெண்டையகண்ணினர்.

இ - ள். கண்ணினர் மணியாற்செய்தவளையினையும், வெள்ளியாற்செய்ததொழிலினையுமுடைய படிக்கத்தை இருவர்க்குந் தொழிற்படும்படி யிரண்டுபக்கத்திலும் வைத்தாரென்க. (௬௫)

வேறு.

க. அங்கருங்காலிசீவியூறவைத்தமைக்கப்பட்ட
செங்கவிரிரயகாயுஞ்செம்பழுக்காயுந்தேந்தே
னெங்கனுங்குளிர்த்தவின்னீராம்பசுங்காயுமூன்றுந்
தங்களிசெய்யக்கூட்டித்தையலார்கைசெய்தாரே. (௬௬)

உ. கைசெய்துகமழுநூறுங்காழ்க்கும்வெள்ளிலையுங்காம
மெய்தநன்குணர்ந்தநீராரின்முகவாசமூட்டிப்
பெய்தபொற்செப்புமாலைப்பெருமணிச்செப்புஞ்சுண்ணந்
தொய்யறப்பெய்ததூநீர்த்தொடுகடற்பவளச்செப்பும். (௬௭)

௩. தாமணிநானச்செப்புஞ்சலஞ்சலக்கலன்பெய்செப்புந்
தூமணித்துகில்களாகதவலம்புரித்துளங்குசெப்புங்
காமநீக்காமவல்லிகவின்கொண்டுவளர்ந்ததேபோ
லுமேவெனெடுங்கட்பாவையாப்பனவேந்தினாரே.

இவைமூன்றுமொருதொடர்.

க. கருங்காலிமரத்தைச்சீவி யூறவைத்துக் காய்த்தினசெங்கவியைக் கலந்த காயும், பழுக்காயும், தேன்போலே மெய்ம்முழுதையுங் குளிர்ப்பித்த இனியநீரையுடைய பசுங்காயுமாகிய இம்மூன்றையுங்கூட்டிக் கருப்பூரமுதலியவற்றைக் கலந்தாரென்க. தங்களி - தமக்கியல்பாகியகளி.

உ. கைசெய்ய பட்டுக்கமழுஞ் சுண்ணாம்பும் ஊட்டி - கூட்டி. தொய்யற - குற்றமற.

௩. தாமமணிந்த செப்பு. சலஞ்சலவடிவாகிய செப்பு. வலம்புரிவடிவாகிய விளங்குசெப்பு.

இ - ள். நன்குணர்ந்தநீராராகிய தையலார் இவர்களுக்குக் காமவேட்கைபொருந்தும்படி கைசெய்த பாக்கினையும், வெற்றிலையினையும், நூற்றையும் இனியமுகவாசத்தோடேகூட்டிப் பெய்தசெப்பையும், ஒழிந்தசெப்புக்களையும், காமவல்லி வளர்ந்ததேபோலும் பாவை மற்றும்விரும்புவனவற்றையும் ஏந்தினாரென்க. (௬௮)

விரிகதிராரமின்னித்தாரொளுந்திருவில்வீசிக்
குரிசின்மாமேகம்பெய்தகொழும்புயற்காமமாரி

யரிவைதன்னெஞ்சமென்னுமகன்குளநிறைந்துவாட்கட்
கரியமைசேறுசிந்திக்கலிங்குகடிறந்தவன்றே.

இ - ள். சீவகனாகிய கொழுவிய நீரையுடைய கரியமேகம், ஆரமாகிய மின்னை மின்னித் தாரென்னுந் திருவில்லைவீசிப் பெய்த காமமாகிய மாரியாலே இலக்கணையது நெஞ்சென்னுங் குளநிறைந்து கண்ணாகிய கலிங்குகள் மையாகிய அமைந்த சேற்றினைச்சிந்தித் திறந்தனவென்க.

என்றது-அவன்விளைவித்த காமவின்பநிறைதலின், உவகைக்கண்ணீர் வீழ்ந்தன என்றவாறு. * "புயலன் றலர்சடை யேற்றவன்" என்றார். (கக)

தோக்கையந்துகிலினுடன்றுணைமுலைபொருதுசேந்த
வேக்கொசிவிலாதவில்லானிடுகொடியகலமின்றேன்
றேக்கிவண்டிமிருங்கோதைசெல்வன்றாருழக்கநைந்து
பூக்கொய்துதுவண்டகொம்பின்பொற்பினளாயினாளே.

தோக்கை-கொய்சகம். ஏத்தொழிலுக்குக் கெடுதலில்லாத. சிவப்புக் கோபமும், தார் தூசியுமாக வேறும் பொருள்பயந்துநிற்கும்.

இ - ள். சீவகனது மார்பாகிய மலையுடனே யிலக்கணையுடைய முலைகளாகிய யானைகள் முதற்பொருது சிவந்தன; அதுபொருதே அச்செல்வன்றார் பின்புஉழக்க, அக்கோதைநைந்து பூக்கொய்து துவண்ட கொம்பின்றன்மையளாயினாளென்க.

இதனால் இருவர்புணர்ச்சியுங்கூறினார். இடுகொடிமுலையென்க. (க00)

அணித்தகுபவளமேற்பக்கடைந்துமுத்தழுத்தியம்பொன்
றுணித்தடிவிளிம்புசேர்த்தித்தொழுதகச்செய்தவண்கை
மணிச்சிரற்சிறகுநாணவகுத்தசாந்தாலவட்டம்
பணித்தகுமகளிர்வீசிப்பாவையைக்குளிர்ப்பித்தாரே.

பவளத்தைக்கடைந்து அடியிலே யேற்ப முத்தையழுத்தித் தொழுதல் தகச் செய்த காம்பினையுடைய ஆலவட்டம்.

இ - ள். பொற்றகட்டைநறுக்கி விளிம்பிலேசேர்த்திப்பீலியிட்டுச் சிச்சிலியின் சிறகுநாணவகுத்த சந்தனவாலவட்டத்தாலே வீசுதற்றொழிற்குத்தக்க மகளிர் வீசிப் பாவையைக் குளிர்ப்பித்தாரென்க. (க0க)

வேறு.

சேந்துநீண்டசெழுந்தாமரைக்கண்களி
னேந்திமாண்டமுலைக்கண்களினெழுதிச்
சாந்தமாகமெழுதித்தடமாமல
ராய்ந்துசூட்டியவனஞ்சலிசெய்தான்.

இ - ள். அவள் அவசம் நீங்கும்படி மகளிர்குளிர்ப்பித்த நிலையைக்கண்டுதானும்

* திருச்சிற்றம்பலக்கோவையார், உசூ0.

அதற்கேற்பச் சாந்தத்தாலே யாகத்தையெழுதி மலரைச்சூட்டிக் குளிர்ப்பித்த நிலையைக் கூட்டத்திற்கிடையீடு செய்தானெனக்கருதி யவளுடையநிலையைகண்டு தன்னுடைய தாமரையைப்போலுங் கண்களாலே யவண்முலைக்கண்களிலே யெழுதி அடியைத் தொழுதானென்க.

இஃது ஊடல் தீர்த்தமைகூறிற்று. (௬௦௨)

மணிசெய்வீணைமழலைக்குழல்பாண்டிலொ
டணிசெய்கோதையவர்பாடியகீதம்
பணிவில்சாயல்பருகிப்பவளக்கொடி
மணியுமுத்துமலர்ந்திட்டவொத்தாளே.

பாண்டில - தாளம்.

இ - ள். கோதையவர் வீணை குழல் பாண்டிலென்கின்றவற்றோடே பாடிய கீதத்தைச் சாயல்கேட்டு ஒருபவளக்கொடி மணியையுமுத்தத்தையும் பூத்த தன்மையையொத்தாளென்க

மணி - பவளம், வாய்க்குவமை இவர் பண்டுசெய்த நிலைமைதோன்றப் பாடிய பாட்டினாற் சிறிதுமுறுவல்கொண்டாளென்றார், அதுபாடுநன்மரபு. பாட்டுக்குப் பரிசில்கொடுத்தாளென்றார் போலவு நின்றது. (௬௦௩)

எய்ததுநீர்ச்சிலம்பின்குரல்மேகலை
வித்திரதர்வருத்தம்விளைத்தபொனத்
தத்துநீர்த்தவளைக்குரற்கிண்கிணி
யுய்த்தொர்பூசலுடனிட்டனவன்றே.

இ - ள். அவன்புணர்தலாற் றவளைக்குரல்போன்ற குரலையுடைய கிண்கிணியும், நீர்மையையுடையசிலம்பும் உடனே பூசலிட்டன, அப்பொழுதே அந்நிலையையுணர்ந்து அவள்புணர்தலான் இன்குரல்மேகலையுங் காதலைவித்தித் தமக்கு வருத்தத்தை விளைத்தாளென்பனபோல அவற்றுடனே பூசலையிட்டனவென்க.

அன்றே - அப்பொழுதே. உய்த்து - அவன்புணர்ச்சியைநீக்கி. (௬௦௪)

ஏந்திநாங்களுடனேயிடுபூசலை
வேந்தர்வேந்தன்கொடுங்கோலினனாகி
யாய்ந்துகேட்டுமருளானெனநவிந்த
சாந்தமேந்துமுலையாள்கலந்தாமே.

ஏந்தி - எடுத்து.

இ - ள். இருவரும் வேறுவேறாக நிகழ்த்துகின்ற தொழிலைத்தவிராதவின், அவளணிந்த கலங்கடாம், இவள்வருந்துமென்று யாங்கள் செராவிடுகின்ற பூசலை வேந்தன் கேட்டுங் கொடுங்கோன்மன்னனாய் ஆய்ந்தருளான்; இனி யாம் ஒழிவோமென்று கருதினாற்போலே யொலியவிந்தனவென்க.

கலங்கள் இரண்டுகாலத்தும் அவட்கேயொலித்தலின், அவள்கலமென்றே கூறினார். (௧௦௫)

வேறு.

வீடுமலியுலகினவர்போலவிளையாடுந்
தோடுமலிகோதையொடுதுதைந்தவளைமின்போ
லாடுகொடியணிந்தவுயரலங்கல்வரைமார்பன்
கூடுமயிர்களையும்வகைகூறலுறுகின்றேன்.

வீடுமலியுலகினவர் - சிவலோகம், பரமபதமென்கின்ற உலகிலுள்ள அரனும் அரியும். இவர்களுக்கு நித்தசம்போகமுள்ளது. இனி அதிகாரதேவர்கள் அதிகாரத்தின்முடிவிற் கற்பமறுதியாகவிருந்து முத்தியெய்துவரென்பதனால், உலகமென்றது வீடுபெறுதற்குக்காரணமான சுவர்க்கமென்றுமாம். இனிப் போகமொழிந்தவற்றைக் கைவிடுதன்மிக்க வுலகமென்றுஞ் சுவர்க்கமாம். கொடியணிதற்குக் காரணமானமார்பு. வளையிற்றுதைந்தமின்போலே மாலையைத் தனக்கென்றே வளைந்த மார்பு.

இ - ள். கோதையுடனே யுலகினவர்போலே விளையாடுமார்பன் இலக்கணையுடனே கூடுவதொரு மயிர்களையுஞ்சடங்கினைக் கூறுதலுறுகின்றேனென்றாரென்க.

நாலாநாள் அரசர்க்கு மயிர்களைதன்முறைமையென்றுகூறுதலின், இது கூறுகின்றார். (௧௦௬)

உச்சிவளைவளர்ந்திளமைமொழிந்தவுயர்திண்கா
ழிச்சவிபவில்லையெனவெழுதியவையூன்றிக்
கச்சுவிளிம்பணிந்ததொழிற்கம்பலவிதான
நச்சுமணிநாகருறைநாகமெனவிரித்தார்

இ - ள். வளையுச்சியிலேவளர்ந்து முற்றின காம்புகள் இப்படி அழகுடையன இல்லையென்னும்படி யெழுதினவற்றை நட்டுக் கம்பலமாகிய விதானத்தை நாகலோகமென விரித்தாரென்க. (௧௦௭)

முத்தகநிறைந்தமுளையெயிற்றுமதயானை
மத்தகமுந்திருமகடன்வடிவுபடமாதோ
வொத்தகலமெண்முழமென்றேதிநகரிழைத்தா
மொய்த்தெரிசெம்பொற்றுகளினூன்முடிவுகண்டார்.

மத்தகமும், எயிறுமுடைய யானை.

இ - ள். நூன்முடிவுகண்டார், நகரைத் தன்னிலொத்தஅகலம் எண்முழமென்றேதி அதனுள்ளே யிரண்டருகும் யானையும் பொற்றுகளால் நடுவே திருவுமாகக் கோலஞ்செய்தாரென்க. (௧௦௮)

உழுந்துபயறுப்பரிசியப்பமருங்கலங்கள்
கொழுந்துபடக்கூப்பிநனியாயிரமரக்கால்
செழுந்துபடச்செந்நெனிறைத்தந்துண்கொடியறுகின்
கொழுந்துகுறைத்தணிந்துநாலைவேய்கணவர்வைத்தார்.

இ - ள். வேற்கண்ணவர் உழுந்துமுதலியவற்றைக் கொழுந்துபடக்கூப்பி யாயிரமரக்காலிலே செந்நெல்லை வளமைப்படநிறைத்து அவற்றிலே யறுகையணிந்து இங்ஙனம் வைத்தாரென்க.

செழுந்து, உரிச்சொல் ஈறுதிரிந்தது. (கஎக)

செங்கயலிரட்டைதிருவார்சுடாசுடர்நுடி
பொங்குகொடிவார்முரசந்தோட்டிபுணர்கும்ப
மங்கலங்களெட்டுமிவைமணியிற்புனைந்தேந்தி
யங்கயற்கணாரிவையர்கடைக்கிழக்கினின்றார்.

இ - ள். அரிவையா, தம்மை மணியாலேபுனைந்து புணர்கயல்முதலிய மங்கலங்களெட்டையுமேந்தித் தென்கிழக்கேநின்றாரென்க.

திருவார்ந்ததென்றது - சாமரையை; விகாரம். இனிக் கும்பத்தோடே புணர்ந்த மங்கலங்களெட்டுமெனவே சாமரைகூறிற்றென்றுமாம். (கஎ0)

வெள்ளுருவமாலைவடகீழிருவர்மின்போ
லொள்ளுருவவாளுருவிநின்றனர்தென்மேல்பா
லுள்ளுருகநோக்கியுருபூத்தகலுமேந்திக்
கள்ளுருவமாலையவர்கைதொழுதுநின்றார்.

இ - ள். வெள்ளியவடிவையுடைய மாலையணிந்த மகளிருவர் வாளையுருவி வடகிழக்கேநின்றார்; கள்ளையுடைத்தாகிய அழகிய மாலையுடையமகளிர் உழுத்தகலையுமேந்தி யன்பிலுறுகெஞ்சுருகத் தெய்வத்தைநோக்கித் தொழுது தென்மேற்கே நின்றாரென்க. (கஎக)

தோரைமலாகீரறுகுதுளும்புமணித்தால
மாரவடமேற்றிசைகணிருந்தவிர்பஞ்சிச்
சீர்நிறையவளையகலந்திருத்தத்திருநோக்கும்
வாரமுறைகருவிவடக்கிருந்தனநன்மாதோ.

இ - ள். மூங்கிலரிசிமுதலியனதுளும்பும் மணித்தாலம் வடமேற்றிசையிலே யாரவிருந்தன; வளையகலத்தைச் சீர்நிறையத்திருத்துதற்குப் பட்சபாதமுறைமையாகத் திருமகளேக்கும்பொற்கருவி பஞ்சின்மேலே வடதிசைக்கண்ணே யிருந்தனவென்க.

பஞ்சி - மெல்லிகில். உறைகருவி பாடமாயின், வாரமுறைகருவியென்க. ()

பானுவாயிறெய்யவணைப்பைங்கதிர்கள்சிந்தித்
தானிரவிதிங்களொடுசேர்ந்திருந்ததேபோல்
வேனிரைசெய்கண்ணரியொடுமெல்லெனவிருந்தான்
வானுயரவோங்குகுடைமன்னர்பெருமானே.

இ - ள். இரவிதான் பைங்கதிர்களைச்சிந்தித் திங்களோடேசேர்ந்து அணையிலே

இருந்த தன்மைபோலே மன்னர்பெருமானும் இலக்கணையோடே பொருந்தி யிரு; தலின் மென்மைதோன்ற விருந்தானென்க.

செய் - உவமச்சொல். (கககூ)

வேறு.

குளநென்முன்றிற்கனிதேன்சொரிசோலைக்குளிர்மணி
வளமைமல்கியெரியம்மடமந்திகைகாய்த்துவா
னுளமையாடியிருக்கும்வனத்தீர்ஞ்சடைமாமுனி
கிளையைநீங்கிக்கிளர்சாபத்தினுவிதனுயினன்.

இ - ள். குளநெல்லுணங்கு முன்றிலின்கண்ணே கனி தேனைச்சொரிகின்ற சோலையிடத்தே மணியெரிய, அதனைத் தீயென்று மந்திகருதிக் கைகாய்த்துதற்கு உளமையாடியிருக்கும் வனத்தின்முனி தன்னை யொருவன்சபித்தலின், வந்துதோன்றின சாபத்தாலே சுற்றத்தைநீங்கி நாவிதனுயினனென்க. (ககச)

க. ஆய்ந்தகேள்வியவன்கான்முளையாய்வழித்தோன்றினுன்
ரேய்ந்தகேள்வித்துறைபோயலங்காரமுந்தோற்றினன்
வேந்தன்றன்னுற்களிற்றூர்திசிறப்பொடுமேயினன்
வாய்ந்தகோலம்முடையான்பெருமஞ்சிகர்க்கேறனுன். (ககரு)

வேறு.

உ. நித்திலவடமும்பூணுமாரமுநிழன்றுதாழ
வொத்தொளிர்குழைகள்காதினன்றுபொன்னூசலாட
பைத்தரவலகும்பாவைகரகநீர்சொரியப்பாங்கின்
வித்தகன்பூசிவெள்வேல்வேந்தனுக்கிறைஞ்சினனே.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். கேள்வியையுடைய அம்முனிவழியிலே பிள்ளையாய்த்தோன்றினன்; தொக்கநூற்கேள்விமுற்றக்கற்று அலங்காரமென்பதோர் நூலுங்கண்டான்; அரசனு [illegible] வரிசையுடனே யானையும்பெற்றான்; அழகுடையான்; தன்றொழிலின் மிகுதியால் [illegible] கரனன். வித்தகன்; அவன் ஒருபாவைபோல்வாள் நித்திலவடமுதலியன [illegible] குழையூசலாடக் கரகத்தினீரைவார்க்கப் பாங்கோடே வாய்பூசி வேந்தனை வணங்கினனென்க.

வேந்தனுக்கு, கு - உருபுமயக்கம். (ககசு)

நச்செயிற்றரவினேக்கின்மன்னனைநடுங்கநோக்கி
வச்சிரவண்ணன்காப்பவாழியரூழியென்று
வச்சுதங்கொண்டுமன்னனடிமுடித்தெளித்துநங்கை
யுச்சியெண்டிமிருமாலையொளிமுடிச்சிதறினனே.

இ - ள். அரவினேக்குப்போலே யுன்பகைவனா நடுங்கும்படிநோக்கி வச்சிர வண்ணன்காப்ப ஊழிகாலம் வாழ்வாயாகவென்று, அறுகையும் அரிசியையுங் கைக்

கொண்டு மன்னனடியிலும் முடியிலுந்தெளித்து அவற்றை யிலக்கணையுடையமுடியி னுச்சியிலே தெளித்தானென்க.

செல்வமுண்டாதற்கு வைச்சிரவணனைக்கூறினன். (கக௭)

வாக்கினிற்செய்தபொன்வாண் மங்கலவிதியினேந்தி
யாக்கியமூர்த்தத்தண்ணல்வலக்கவுளூறுத்தியார்ந்த
தேக்கணின்னகிலினவிதேக்கிடுங்குழலினளை
நோக்கலனுனிந்துநொய்தாவிடக்கவுளூறுத்தினனே.

இ-ள். நூல்விதியோடே வாக்குண்டாகப் பொன்னாற்சமைத்த மங்கலமான கத்தியையெடுத்து அண்ணலது வலக்கவுளிலேயுறுத்தி யிலக்கணையைக் குறித்து நோக்காதே சிரித்துநோக்கி அவளிடக்கவுளிலே யுறுத்தினனென்க.

ஆக்கியமூர்த்தத்து-பொருந்தவிட்டமுகூர்த்தத்தே. நெய்யை யிடத்தேயுடைய அகிற்புகையையுண்டு தேக்கிடுங் குழல். (கக௮)

ஆய்ந்தபொன்வாளைநீக்கியவிர்மதிப்பாகக்கன்மேற்
காய்ந்தவாள்கலப்பத்தேய்த்துப்பூநிறீஇக்காமர்பொன்னாண்
டோய்ந்ததன்றுறங்கில்வைத்துத்துகிலினிற்றுடைத்துத்தூய்தா
வாய்ந்தகைப்புரட்டிமாதோமருடகப்பற்றினனே.

இ-ள். உறுத்தின பொற்கத்தியைப் போக்கிப் பின்பு இரும்பும் எஃகும் ஒரு நீர்மையாகக் காய்ந்த மயிர்க்கத்தியை மதிப்பாகம்போலுங் கல்லிலேதீட்டிப் பூவை அக்கல்லிலேநிறுத்தித் தன்றுடையிலேவைத்துப் பின்புசீலையிலேதுடைத்துக் கையிலே தூய்தாகப்புரட்டி உற்றதுதெரியாதபடி முகத்தைத் தீண்டினனென்க.

"பூவைநிறுத்தியிட்டு" என்பர். ஞானிதவிர பொன்னாண்டோய்ந்த குறங்கென் றார். (ககக)

வேறு

எற்றியும்மிழித்தும்மிடையொற்றியும்
போற்றிச்சந்தனம்பூசுகின்றானெனக்
கூற்றனைன்முகக்கோலஞ்செய்தான்கடம்
போறுமுஞ்செஞ்சுடர்போலசுடர்ந்ததே.

இ-ள். ஏறவொதுக்கியும், இழியவொதுக்கியும், நடுவுதிறந்தும் கூற்றனைன்முகத்தை யழகுசெய்தான்; அது ஞாயிறுபோலே விளங்கிற்றென்க.

சந்தனத்தைப் போற்றிப் பூசுகின்றானென எற்றியும்இழித்துமென்க (க௨0)

கோதைப்பாரத்தினானுந்தன்றுணினு
மேதிலான்முகநோக்குமிளிவினும்
பாதநோக்கியபான்மதிவாள்முக
மேதமின்றியெடுத்தனன்மெல்லவே.

இ - ள். மாலையின்பாரத்தாலும், இயல்பாகவுள்ளநாணத்தாலும், நாவிதன் முகத்தைநோக்குகின்ற இளிவரவாலுங் கவிழ்ந்தமுகத்தை யேதமின்றும்படி அவன் மெல்ல வெடுத்தானென்க. (௧௨௧)

உருவச்செங்கயலொண்ணிறப்புள்வெரீஇ
யிரியலுற்றனபோன்றிணைக்கண்மலர்
வெருவியோடவிசும்பிற்குலாவிய
திருவிற்போற்புருவங்கடிருத்தினன்.

இ - ள். சிச்சிலிக்குவெருவிக் கயல் கெடுதலுற்றனபோலே கண்கள் வெருவி யோடும்படி புருவங்களைத் திருத்தினனென்க.

கண்கள் அஞ்சிப்பார்க்க விசும்பில்வளைத்த திருவில். (௧௨௨)

ஆரமின்னவருங்குயந்தான்களைந்
தோருமொண்டிறற்கத்திரிகைத்தொழி
னீரிற்செய்தடியேத்துபுநீங்கினன்
றாரன்மாலைத்தயங்கிணர்கதண்ணியான்.

தாரன் - சுட்டு.

இ - ள். தாரன் கண்ணியானாகிய அந்நாவிதன் மயிர்க்கத்தியைநீக்கிக் கத்திரிகையாற்செய்யுந்தொழிலை நீர்மையாற்செய்து வாழ்த்தி நீங்கினனென்க. (௧௨௩)

வேறு.

அன்னப்பெடைநடுக்கியசைந்துதேற்றாநடையாளு
மன்னர்குடைநடுக்கும்மாலைவெள்வேன்மறவோனு
மின்னுமணிக்குடத்தின்வேந்தரேந்தமண்ணாடிப்
பொன்னங்கடிமலருந்துகிலுஞ்சாந்தும்புனைந்தாரே.

இ - ள். அன்னப்பெடையை யஞ்சுவித்து இளைத்து நடக்கின்றாளென்று பிறரைத்தெளிவியாத நடையையுடையாளும், மறவோனும் வேந்தர் மணிக்குடத்தே நீரை யேந்த மஞ்சனமாடி மலர்முதலியவற்றை யணிந்தாரென்க. (௧௨௪)

எஞ்சுற்றமென்றிரங்காதாகமெல்லாங்கவர்ந்திருந்து
தஞ்சுற்றம்வேண்டாதமுலைக்கீழ்வாழ்வுதளர்கின்ற
நஞ்சுற்றவேனெடுங்கட்பாவைநல்கூர்சிறுநுசுப்பிற்
கஞ்சுற்றுழிப்புலர்ந்தாங்கணிந்தாரம்மமணிவடமே.

இ - ள். இடந்தந்து நம்மைத்தோற்றுவித்த ஆகமென்றருளாதே அவ்வாகத்தையெல்லாங் கைக்கொண்டு அடிபரந்து தாம் பிறந்தவிடத்தையுட்பட வேண்டாமற் கொடியவாகிய முலையின்கீழேயிருந்து குடிவாழ்க்கைதளருகின்ற நுசுப்பிற்கு, இவ்விடத்தை விடுவதற்குமுன்னே தப்பிப்போகவேண்டுமென்று அஞ்சினவிடத்தே விடிந்தாற்போல வடத்தையணிந்தார்; இத்தீங்கினைக் கேட்பீராகவென்க.

நஞ்சுதோய்ந்தவேல். பாவையதுநுசுப்பு. நல்கூர் - அடை. (௧௨௫)

சுடுமெண்மிசைமாரிசொரியச்சூழ்ந்துசுமந்தெழுந்து
நெடுநன்னிமிராவிநாறுநெய்தோய்தளிர்மேனி
துடிநுண்ணிடைப்பெருந்தோட்டுவர்வாயேழைமலர்மார்பன்
கடிமன்மலர்ப்பள்ளிகளிப்பக்காமக்கடலாழ்ந்தான்.

இ - ள். மாரி நீரைச்சுமந்து உலகைவலமாகவந்து உயர்ந்து வெங்கார்மண்ணிலேசொரிய நிமிர்ந்தவாவிபோலநாறும் மேனிமுதலியவற்றையுடைய இலக்கணை கடிமணப்பள்ளியிலே களிக்கும்படி மலர்மார்பன் காமக்கடலிலே யழுந்தினனென்க.

எழுந்தவும் பாடம். (௧௨௬)

வேறு.

வழங்குதாரவன் மார்பிடைமட்டுகப்
புழுங்குகோதைபொற்பின்றிறம்பேசலாம்
விழுங்குமேகம்விடாதுதழீஇக்கிடந்
தொழிந்தமின்னுக்கொடியொத்தொழிந்திட்டாள்.

உலகங் கொண்டாடப்படுதலின், வழங்குதாரவனென்றார். மட்டு உகாநிற்கவும் பின்னரும் மட்டையுகுத்தற்குப் புழுங்குவதோர் கோதையென்று இக்கோதைக்கு விசேடங்கூறினார். புழுக்கம் - வேட்கையாற்றோற்றமென்க.

இ - ள். தாரவன் மார்பிடைத்தங்கிய கோதைபோல்வாளுடைய அழகின் கூற்றைச் சிறிதுஉவமைகூறலாம்: தன்னை உள்ளடக்குதற்குரிய மேகம் உள்ளடக்க மாட்டாதே புறத்தே தழீஇக்கிடத்தலாலே பழையதன்மையை யொழிந்ததொரு மின்னையொத்துத் தங்கினளென்க. (௧௨௭)

தாமமார்பனுந்தையலுமெய்யுணர்
வாமிதென்றறியாதுகளித்தவர்
தூமங்கொப்புளிக்குந்துகிற்சேக்கைமேற்
காமனப்பணைக்கள்ளுகவைகினார்.

இ - ள். சீவகனும், இலக்கணையும இது தம்முடம்பென்றுணருமுணர்வறியாது ஒருவர்மெய்யின் ஒருவர்மெய்மயங்கிக் களித்தவர்கள் பின்னுஞ் சேக்கைமேலே காமனப்பணையிலே வைகினரென்க. (௧௨௮)

வேறு

மாதாதன்வனப்புநோக்கிமகிழ்ந்துகண்ணிமைத்தல்செல்லான்
காதலித்திருப்பக்கண்கள்கரிந்துநீர்வரக்கண்டம்ம
பேதைமைபிறரையுள்ளியழுபவர்ச்சேர்தலென்றாள்
வேதனைபெருகிவேற்கண்டையுமிழ்ந்திட்டவன்றே.

இ - ள். அவளழகைநோக்கி மகிழ்ந்து கண்ணிமையாதுய்க்க காதலித்திருத்தலால் அவன்கண்கள்கரிந்து நீர்வர, அதனைக்கண்டு, கேட்பாயாக; பிறரைநினைந்தழுபவரைச் சேர்தல் அறியாமைகாணென்றாள்; அவ்வளவிலே வருத்தமிகுதலிற் கண்கள் நீரைச் சொரிந்தனவென்க.

வணப்புநோக்கிக் கண்கரிந்தது-ஆக்கம்பற்றிப்பிறந்த மருட்கையென்னு மெய்ப்பாடு; மருட்கையாவது வியப்பு. (கஉ௯)

நாறுசாந்தழித்துமாலைபரிந்துநன்கலன்கள்சிந்திச்
சீறுபுசெம்பொனாழிமணிவிரனெரித்துவிம்மா
வேறியுமிழ்ந்துமூளும்புருவங்கண்முரியநொந்து
தேறுநீர்பூத்தசெந்தாமரைமுகம்வியர்த்துநின்றாள்.

இ-ள். சீறுநின்று அழித்துப் பரிந்து சிந்தி நெரித்து விம்மிப் புருவங்கள் ஏறியுமிழ்ந்தும் முரியும்படி நொந்து முகம்வியர்த்து நின்றாளென்க. (க௩0)

இற்றதென்னாவியென்றுவெரிமணிமிமைக்கும்பஞ்சிச்
சிற்றடிப்போதுபுல்லித்திருமகன்கிடப்பச்சேந்து
பொற்றதாமரையிற்போந்துகருமுத்தம்பொழிவவேபோ
லுற்றுமைகலந்துகண்கள்வெம்பனியுகுத்தலன்றே.

இ-ள். திருமகன் வேறோருபாயத்திற்கு இவளாற்றாளென்றுணர்ந்து இற்றதென்னாவியென்னச் சீறடியைப்புல்லிக்கிடப்ப, அவளுமதுகண்டு ஊடல் தீரக்கருதலிற் கண்கள் நீரையுகுத்தனவென்க.

சேந்து பொலிவுடையவென்க. பொற்பென்னுமுரிச்சொல் றிரிந்தது. தாமரையினின்றும் புறப்பட்டுச் சிறிது கரியநீர்மையையுடையமுத்தஞ் சிந்துவனபோலே கண் மைகலந்து வெய்யவாகிய பனியையுகுத்தன; ஊடல் முழுதுந்தீராமையின் வெம்பனியாயிற்று. பொழிதல் ஈண்டுத் தன்வினை. உற்று - ஊடறீர்தலுறவெனத் திரிக்க. *"பொய்ப்ப விடேஎ மெனநெருங்கிற் றப்பினே-னென்றடி சேர்தலுமுண்டு." என்றாராகலின், அடியில்வணங்கியபின்னும் ஊடல்தீராதழுதாளென்றல் கற்பிற்குப் பொருந்தாது. "இளிவே யிழவே" என்னுஞ்சூத்திரத்தில் அழுகையாவது அவலமுங் கருணையுமாதலின், †"கயமலருண் கண்ணாய்" என்னுங்கலியில், "தானுற்ற-நோயுரைக் கல்லான் பெயருமன் *** சேயேன்மன் யானுந் துயருழப்பேன்" என்றவழிப் பிறன்கட்டோன்றிய இளிவரல்பொருளாக அவலந்தோன்றினாற்போல, இதனையும் பிறன்கட்டோன்றிய இளிவரல்பொருளாகப்பிறந்த கருணையென்று கொள்க. வணங்குதல்-அவற்கிளிவரவு. அதனாற் கருணைபிறந்தது. அழுகை ஈண்டுக் கருணை. இதனான் ஊடறீரக் கருதினாளாம். (க௩க)

கொண்டபூணின்னைச்சார்ந்துருலாய்க்கொழுந்தீன்றகொம்பே
கண்டுகண்கரிந்துநீராயுகுவதுதரக்கலாமே
பண்டியான்செய்தபாவப்பயத்தையார்க்குரைப்பன்றேன்காள
வண்டுகொள்வருடிநங்கைவரந்தரமொழிமினென்றான்.

---

* கலித்தொகை, மூன்றாவதுமருதம், உ௪.
† ,, இரண்டாவதுகுறிஞ்சி, க.

இ - ள். அக்கருணைபிறந்தமையின், இனி மொழிகூறுதற்கு இடமென்றறிந்து, நீயணிந்தபூண் நின்னைச்சாருதலாலே குலாவிக் கொழுந்தீனுதற்குக் காரணமானகொம்பே! நின்னைவிடாமற் பார்த்தலாலே கண்கரிந்து நீராயுருவதனை நீயறியாது கரக்கலாமேயெனவினவினான்; ஆண்டு அவட்குச் சிறைதவுபிறர்க்கின்மையென்னுமெய்ப்பாடு பிறத்தலின், அவள் உத்தரங்கூறுமையாற் றான் அதனையுணர்ந்து நிறையழிந்து, தேன்கள்! வண்டுகாள்! யான் முற்பிறப்பிற்செய்த தீவினையின்விளைவை நுமக்கன்றி வேறு யார்க்குரைப்பேன்; இனி நீங்கள் நங்கையைக் காலைவருடி வரந்தரும்படி கூறுமினென்றானென்க.

சிறைதவுபிறர்க்கின்மையாவது-புணரக்கருதி யுள்ளஞ்சிறைந்து நிறையழிந்துழிப் புறத்தார்க்குப் புலனாகாமை நெஞ்சினைநிறுத்தல். பிறர்க்கின்மையெனவே தலைவனுணரும. இது கற்பிற்குமுரித்தென்றார். இம்மெய்ப்பாடு இவட்குநிகழ்ந்தமை தானுணர்ந்து இடையில்வந்த புள்ளைநோக்கி, இனி நுமக்கு எளிது; நீர் ஊடறீர்ப்பீராகவென்றான்; ஊடற்குக் காரணமின்றியும் இத்துணையெல்லாம் நிகழ்ந்ததற்கு வருந்தினானாகலின். (கஙஉ)

பூவையுங்கிளியுங்கேட்டுப்புனைமுகம்வைத்துநோக்கிக்
காவலன்மடந்தையுள்ளங்கற்கொலோவிரும்புகொல்லோ
சாவம்யாமுருகியொன்றுந்தவறிலனருளுநங்கை
பாவையென்றிரந்துமென்மைபறவைகட்முட்டாமே

இ - ள். பூவையுங் கிளியும அவன்வருத்தக்கூற்றைகேட்டுக் கூட்டின்வாயிலிலே முகத்தைவைத்துப் பார்த்திருந்து தம்மிற்றும் யாமும் நஞ்சேவல் இங்ஙனம் வணங்கி யூடறீர்க்குமிடத்துத் தகாதென்று மனமுருகி யிறந்துபடுவேம்; இதுகண்டும் அருளாதவிவண்மனங் கல்லோ! இரும்போ? அறிகின்றிலமென்றன; என்றபின்னும் அப்பறவைகடாம், நங்காய்! பாவாய்! இவன் சிறிதுந் தவறிலன், இனி நீயருளாயென்று இரக்கக்கடவேமென்றுங் கூறினவென்க

அவை அவனூடறீரக்காரியதன்மை தாமுணராததோராமையின், இவனிறந்துபடுமெனக்கருதி யிங்ஙனங்கூறின. (கஙங)

பெற்றகூழுண்டுநாளும்பிணியுபூழ்ந்திருத்தும்பேதாய
* முற்றிமைசொல்லினங்கைமுன்றுநாளடிசில்காட்டாள்
பொற்றொடிதந்தைபிரேபொத்துநும்வாயையென்றோ
கற்பித்தார்பூவையார்தங்காரணக்கிளவிதம்மால்.

இ - ள். அங்ஙனம் உசாவினவளவில், பூவையார் தமக்குமேல்வருங்காரியத்திற்குக் காரணமாகிய சொற்களாலே, பேதாய்! யாம் பெறுமசோறுதையுண்டு நாடோறுங் கூட்டிலேபிணிப்புண்டு வருந்தியிருப்பேம், இத்தன்மையேமாகியயாம் முதுக்குறைமைகூறின், பொற்றொடியாகிய நங்கை நமக்கு மூன்றுநாள் அடிசிலைக்காட்டாளாதலாற் றந்தையீரே! நும்வாயைப் பொத்துமினென்று கற்பித்தாரென்க.

தந்தையீரேயென்றது இழிவுசிறப்பு. (கஙச)

* முற்றன்மையென்றும் பாடம.

க. பழியொடுமிடைந்ததேனுஞ்சிறைடிபரவினுற்கு
வழிபடுதெய்வமாகிவரங்கொடுத்தருளல்வேண்டு
மொழிபடைக்களிறுபோலவுயங்கவுமுருகிநோக்காப்
பிழிபடுகோதைபோலாம்பெண்டிைாக்கெடப்பிறந்தாள். (கஙு)

உ. ஈன்றதாயானுமாகவிதனைக்கண்டுயிரைவாழே
னென்றியான்சாவலென்றேநலக்கிளிநூலின்யாப்ப
மான்றவண்மருண்டுநக்காள்வாழியவரம்பெற்றேனென்
றான்றவனுரைப்புல்லியணிநலம்பரவினானே.

இவையிரண்டுமொருதொடர்.

க. பிழிபடுகோதைபோலாம்பெண்டிா - உபாயத்தாற் றேனைவாங்கிக்கொள்ளப் படும் .கோதைபோலேயாம் பரத்தையர். தம்மியல்புகெட்டுப் பொருள்வேட்கை யால் அதன்றன்மையராவராதலின், ஆமென்றார். அக்கோதையை யுபாயத்தால் நெகிழ்த்துவாங்கினாற்போல இவர்க்கும் பொருளால் மனம்நெகிழ்த்து இன்பங் கோடல்வேண்டும். கெடவென்பது பொல்லாராகவென்னும்பொருட்டு. ஐ-அசை.

உ. இதனை - இவனிறந்துபட்டால் இவட்கு உளதாம்பழியை. யானும் - இவட் குப் பிள்ளையாகியயானும்.

இ - ள். நற்குணத்தையுடையகிளி, பூவையின்மொழியைக்கேளாதே வேல் தைத்துநின்ற களிறுபோற் கணவன்வருந்தவும் நெஞ்சுருகாத பரத்தையர் தன்குடிப் பிறப்பாற் பொல்லாராகப்பிறந்தவள், தன்கணவன்செயல் பழியோடே மிடைந்ததா யினும் அதுதீர அடிபரவினவனுக்கு வரங்கொடுக்கவேவேண்டும்; இங்ஙனஞ்செய் யாமையின், நிகழ்கின்றவிதனை யான்கண்டு உயிரைக்கொண்டிரேன்; யானும் இங் ஙனம் மான்றவளைப்பெற்ற தாயாந்தன்மையேனும்படி நான்றுகொண்டு சாவக்கட வேனென்றுகூறி நூலாலே கழுத்தையாப்ப, அவளிதனைக்கண்டு இதனன்புடை மையாலேமருண்டு நக்காள்; அதுகண்டு அவனமைந்து வரம்பெற்றேனென்று புல்லி நலத்தைப் பரவினானென்க.

வாழியவென்றது கிளியை. தாயாந்தன்மையேனென்றது, இங்ஙனங் கொடியவ ளைப்பெற்ற கொடியவளாகக்கடவேனெனக்கருதி. கொடுமை - வலியச்சாதல். ()

வேறு.

நிறையோதநீர்நின்றுநீடவமேசெய்யினும்வாழிநீல
மறையோவரிவைவரிநெடுங்கணொக்கிலையால்வாழிநீலங்
கண்ணெவ்வாயேனுங்களித்துநகுதிநின்
வண்ணமிதுவோமதுவுண்பார்சேரியையோவாழிநீலம்.

வாழி - இகழ்ச்சிக்குறிப்பு. களித்துநகுதி - தேனையுட்கொண்டு அலர்தி; செ ருக்கிச் சிரியாநின்றாயென்பதும் பயந்தது. வண்ணம் - நிறமுஞ் சாதியுந்தோன்ற நின்றது.

இ - ள். நீலமே! நீஇவள்கண்ணை யொக்கவேண்டுமென்று கடலிலே யொருகாலாலேநின்று உயர்ந்ததவத்தைச்செய்யினும் இவள்கண்ணையொவ்வாயாய்நின்றாய்; இதற்கு யான் வஞ்சினங்கூறவோ? அதுவேண்டா; நீலமே! நீகண்ணையொவ்வாதிருக்கவும் களித்து நகாநின்றாய்; அதற்குத் தாழ்வில்லை; நின்வண்ணம்யாது? கரும்புறமல்லவோ? அதுவும் நினக்குத்தகும்; அஃதொழிந்து கள்ளுண்டார்சேரியிலே நிற்றலின், அக்குணமும் பட்டதோவென்றானென்க.

இஃது *"அறுசீ ரடியே யாசிரியத் தளையொடு-நெறிபெற்று வரூஉ நேரடி முன்னே" எனச் செய்யுளியலிற் கலிக்கு அறுசீரடிவிதித்தலின், வாழிநீலமென ஆசிரியத்தளைபெற்ற அறுசீரடிகள் "கண்ணெவ்வாயேனுங்களித்துநகுதி" என்னும் நேரடியின்முன்னும்பின்னும்வந்த வகைநிலைக்கொச்சகம். உம்மையான் வெண்டளையும் விரவும். † "பாநிலை வகையே கொச்சகக் கலியென - நூனவில் புலவர் நுவன்றறைந் தனரே." என ‡ வகைநிலைக்கொச்சகத்திற்குவிதிகூறலின், ஓசை தள்ளியவாறுமுணர்க. இனி ஆசிரியத்துறையென்பார்க்கு ஆகாமை கடவுள்வாழ்த்தாகிய முதற்கவியிற்கூறினாம். (௧௬எ)

வேறு.

பாண்குலாய்ப்படுக்கவேண்டாபைங்கிளிபூவையென்னு
மாண்பிலாதாரைவைத்தாரென்னுறாரென்றுநக்கு
காண்குலாய்க்கிடந்தநங்கைநகைமுகவமிர்தமீந்தாள்
பூண்குலாய்க்கிடந்தமார்பிற்பொன்னெடுங்குன்றனாற்கே.

இ - ள். நங்கை, நீ பாண்மைச்சொல்லாலேவளைத்து எம்மை யகப்படுத்த வேண்டா; கிளிபூவையென்னும் மாட்சிமையில்லாதாரை வளர்த்துவைத்தார் என்ன இனிவரவுறாரென்றுநக்குக் குன்றனாற்கு அமுதையீந்தாளென்க.

பூவைக்குங் கருத்து அதுவாதலிற் சேரக்கூறினான். (௧௬அ)

நலங்குவித்தனையமாதாநன்னலமாயவெல்லாம்
புலம்புவித்தருளினீங்கிப்பகைப்புலம்புக்கவேந்திற
கலங்குவித்தனையநம்பிகவர்ந்திடக்கலாபமேகைச்
சிலம்புநொந்திரங்கத்தேன்றார்பரிந்துதேனெழுந்தவன்றே.

நலம் - மகளிர்நலம். பகைப்புலம்புக்கவேந்துபோலே யருளின்நீங்கிக் கவர்ந்திட. கலம் பலநிலங்களிற்பிறந்த பலமணிகளையுந் தன்னிடத்திற்சேர்த்தாற்போலே பல்லோரிடத்துள்ள நற்குணங்களெல்லாந் தான்சேர்த்தானென்றார். புலம்புவித்து-அவசமாக்கி. பரிந்து - பரிய.

இ - ள். நம்பி மாதர்நலமெல்லாவற்றையுஞ் சிலம்பிரங்கத் தார்பரியப் புலம்புவித்துக் கவர்ந்திட, அம்மாதருங் கலாபமேங்க நம்பிநலத்தைக் கவர்ந்திடத் தேனினமெழுந்தனவென்க. (௧௬௯)

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், ௬௪.
† " " " ௧௫௬.
‡ அகநிலைக்கொச்சகமென்றும் பிரதி பேதமுண்டு.

திருநிறக்காமவல்லி திருக்கவின்கொண்டுபூத்துப்
பெருநிறங்கவினியார்ந்தகற்பகம்பிணைந்ததேபோ
லருநிறக்குரிசின்மார்பத்தசைந்தனளலங்கல்வேலு
னெரிவுற்றதடற்றுவாளுநீலமுநிகர்த்தகண்ணாள்.

நெரிவுற்றதடறு - சருச்சரைபட்ட புறத்தையுடையவுறை. தடத்துவாளென்ற பாடத்திற்கு நெரிவுற்றநீலமென்க; வலியவலர்த்தின நீலம்.

இ-ள். கண்ணாள், காமவல்லி திருவினமுகைக்கொண்டுபூத்துக் கற்பகத்தைப் பிணைந்தாற்போலே குரிசின்மார்பிலே யவசத்தாலே துயின்றாளென்க. (௧௬௦)

வேறு.

௧. மணிக்கணமாமயிற்சாயன்மாதரு
மணிக்கதன்னதோளரசசீயமும்
பிணித்தகாதலாற்பின்னிச்செல்வுழிக்
கணித்தநாள்களேழ்கழிந்தகாலையே. (௧௬௧)

௨. சூட்டுஞ்சுண்ணமுமணிந்துசுந்தர
மோட்டியொண்பொனாலோங்குதாரொடு
பூட்டிக்குண்டலம்பொறபப்பெய்தபின்
மோட்டுமூத்தொளிர்வடம்வளாயினார். (௧௬௨)

௩. பானுரையனைபைந்துகிலணிந்
தானிரைப்பினத்தலங்கலேறனான்
மானிரைப்பினம்மருளுநோக்கினா
ளுனுயிருணுமொருவனாயினான்.

இவைமூன்றுமொருதொடர்

௨. சுந்தரமோட்டி - சிந்துரப பொடியைப் பூசி

இ-ள். மாதரும் அரசச்சீயமும் முற்பிறப்பிற் பிணித்தகாதலாலே பிணைந்து செல்கின்றவளவிலே யறுதியிட்ட நாள்களேழுங்கழிந்த எட்டாநாளிலே ஒப்பித்தற்குரியார் தாரோடே சூட்டுஞ்சுண்ணமுமணிந்து ஒட்டிப்பூட்டிப்பெய்தபின் வளாயினார்; அவர் வளைத்ததன்பின், எறுழன் அணிந்து மகளிருயிரையுண்ணும் ஒருவனாயினானென்க. (௧௬௩)

சுநந்தைதன்மகன்சுடர்பொற்சூழித்தே
னினங்கவர்ந்துணவிலிற்றுமும்மதத்
தநந்தனன்னகையானையேறினான்
குனிந்தசாமரைகுளிர்சங்கார்த்தவே.

இ-ள். முன்பு சுநந்தைமகனென்று உலகங்கருதப்பட்டவன் இப்பொழுது

குழியினையுஞ் சொரியுமதத்தினையும் அநந்தனைபொத்த நெடிய கையினையுமுடைய யானையையேறினன்; அப்பொழுது கவரிகள் வீசின; சங்குகளார்த்தனவென்க. ()

வேறு.

க. இரும்பிடி நூறுசூழவிறுவரைநின்றதேபோற்
கரும்பொடுகாய்நெற்றுய்த்துக்கருப்புரக்கந்தினின்ற
சுரும்புசூழ்மதத்தசூளாமணியெனுஞ்சூழியானைப்
பெருந்தகைப்பிணையன்மன்னர்முடிமிதித்தேறினானே. (௧௪௫)

உ. சட்டகம்பொன்னிற்செய்துதண்கதிர்வெள்ளிவேய்ந்து
வட்டநல்வைரம்வாய்ப்பநிரைத்துமேன்மணிகள்சேர்த்திச்
சுட்டுதற்கரியமுத்தின்றொத்துவாய்நாற்றிமுந்நீர்ப்
பட்டவான்பவளக்காம்பின்குடைநிழற்பரிதியொத்தான்.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். கரும்போடே நெல்லைத்துய்த்து நூறுபிடிசூழ ஒரு பெரியவரைநின்றாற் போலக் கருப்பூரமணிந்த கம்பத்தே சேர்ந்துநின்ற சூளாமணியென்னும் யானையை மன்னர்முடியை மிதித்தேறினவன், பொன்னாலே சட்டத்தைச்செய்து வெள்ளி யாலேவேய்ந்து வைரத்தாலே வட்டத்தைநிரைத்து அதன்மேலே மணிகளையழுத்தி விலையிடுதற்கரிய முத்துத்தாமத்தைவிளிம்பிலே நாற்றவும்பட்டுப் பவளக்காம்பை யுடையதோர் குடைநிழலிலிருந்த பரிதியையொத்தானென்க.

ஏறினான் - தொழிற்பெயர்; சுட்டு. யானையின்பெயரும், ஏறினமுறைமையும் முற்கூறுமையிற் பிற்கூறினார். (௧௪௬)

மடற்பனைக்குழாத்திற்பிச்சநிரைத்தனமன்னர்சூழ்ந்து
புடைக்களிறேறித்திங்கட பொழிகதிர்க்குப்பையன்ன
வெடுத்தெறிகவரிவீசவியம்பலமுழங்கியார்ப்பக்
கடற்படைவெள்ளஞ்சூழக்காவலன்வீதிசேர்ந்தான்

இ - ள். பிச்சங்கள் பனைக்குழாம்போலே நிரைத்தன; அவ்வளவிலே காவலன், மன்னர் பக்கத்திற் களிறுகளிலேயேறிச் சூழ்ந்து கவரியைவீச, இயமார்ப்ப, படைவெள்ளஞ்சூழ வீதியைச் சேர்ந்தானென்க. (௧௪௭)

அடிநிலமுறுதலுணியருவருத்தமரிலுலித்
திடுமயிர்சிறகராகவெழுந்துமேற்பறப்பவேபோய்
படுமழைத்துளியிற்பாய்மாப்பரந்தனநிரந்தபொற்றே
ரிடைநிலமின்றிவேழமீண்டினமள்ளர்தொக்கார்.

அப்படைசூழ்ந்தபடி கூறுகின்றார்.

இ - ள். அமரில் ஆலித்து அடிநிலமுறுதலை யருவருத்து நாணி இட்டமயிர் சிறகுபோலேதோன்ற எழுந்து பறப்பனபோலே பாய்ந்துசெல்கின்ற மாப் பரந்தன; தேர் நிரந்தன; இடைவெளி யின்றாம்படி வேழம் ஈண்டின; வீரருந்தொக்காரென்க.

துளி எண்ணிறத்தற்குவமை. (௧௪௮)

கொழுமடற்பெண்ணையின்றகுரும்பையுஞ்செப்புங்கொன்ற
விழுமுலைத்தடத்தினுடையர்கணவனைக்காணவேகிக்
கழுமொலியரவவானங்கனைபெயலகடற்பெய்தன்ன
குழுமொலியரவமீண்டிக்கொடிநகர்பொலிந்ததன்றே.

இ - ள். மக்களெல்லாம் இலக்கணையுடைய கணவனைக் காணவேகி ஈண்டுதலின், நகர் பொலிந்ததென்க.

வானங் கடலிலேபெய்த ஒலியன்ன திரண்டவரவத்தோடேயீண்டி. கடல் பழையவொலிக்கும், பெயல் புதியவொலிக்குமுவமை. (௧௪௯)

ஒள்ளிலைச்சூலந்தெண்ணீருலாமுகில்கிழிக்குமாடக்
கொள்கொடிக்குழாத்தினாலுங்கொழுநறும்புகையினாலும்
தெள்ளுறுசுண்ணத்தாலுந்தேமலர்த்துகளினாலும்
புள்ளினம்பொழுதுகாணாபுலம்பிக்கூடடைந்தவன்றே

இ - ள். சூலம் தெளிந்த நீர்பரந்த முகிலைக்கிழிக்குமாடத்திற் கட்டின கொடித்திரண்முதலியவற்றாலே கதிர்மறைந்து பறவைத்திரள் பகற்பொழுதைக் காணாவாய் வருந்திக் கூட்டைச் சேர்ந்தனவென்க.

கடலிலேயுலாவும் முகிலுமாம். (௧௫௦)

பைந்தொடிமகளிர்பாங்கர்பரிந்துநூல்சொரிந்தகாசு
சிந்தினதழலென்றஞ்சிச்சிறையனனிலத்தைச்சேரா
விந்திரகோபமாமென்றம்மயில்குனிந்துகுத்திச்
சிந்தையிற்றேம்பத்தாமேதிருமணிநக்கவன்றே

இ - ள். கணவா னூடினமகளிர்மேகலையைப் பற்ற அதுபரிதலின் நூல்சொரிந்த மணிகள் சிந்தினவற்றை நெருப்பென்றஞ்சி யன்னம் நிலத்தைச் சேராவாயின; அவற்றை யிந்திரகோபமென்று மயில்கள் குத்தி அவையன்மையின் நெஞ்சாலே வருந்த, ஒளிவிட்டமணிகள் அதற்கு நக்காற்போன்றிருந்தனவென்க.

இப்பறவைகள் ஆண்டுவளர்த்தன. (௧௫௧)

வெள்ளைமைகலந்தநோக்கிற்கிணகிணிமிழற்றியார்ப்பப்
பிள்ளைமைகாதல்கூரப்பிறழ்ந்துபொற்றேருவிழுத்
துள்ளுபுசெலீஇயதோற்றந்தொடுகழற்காமன்காமத்
துள்ளுயிரறியப்பெண்ணைப்பிறந்ததோர்தோற்றமொத்தார்.

இக்கவிமுதலாக வேட்கைபிறவாப்பருவத்தாரும், பிறக்கின்றபருவத்தாரும், பிறந்த பருவத்தாருமென *மூன்றுகூறாக்கிக் கூறுகின்றார். †"பேதை யல்லை பேதையங் குறுமகள்-பெதும்பைப் பருவத் தொதுங்கினை புறத்தென" என்றலிற் பேதை வேட்கைபிறவாப் பருவத்தாதலும், பெதும்பை வேட்கைபிறக்கின்ற பருவத்தாதலும் பெற்

* இப்படியே வடநூலாரும் மகளிரை மூன்றுகூறாக்கி வழங்குவர்.

† அகநானூறு, களிற்றியானைநிரை, ௭.

ரும். இவையொழிந்த மங்கை, மடந்தை, அரிவை, தெரிவையென்னும் பெயர்கள் வேட்கைபிறந்தபருவத்துப் பெயர்களாம். அன்றி யவையும் பலபருவத்தை யுணர்த்தும் பெயர்களெனின், அதுமுன்னூல்களிற் கூறுமையானும், சான்றோர் வேறுபாடு கூறுமன் மகளிர்க்குப் பொதுப்பெயராகச் செய்யுள்செய்தலானுந் தேவர்க்கும் அது கருத்தென்றும். இனி உலாவிற்கங்கமாகப் புதியநூல்களிற் கூறியவிதி இதற்காகாமையுணர்க.

இ - ள். வேட்கைபிறவாதமகளிர் தம் பிள்ளைத்தன்மையாலே காண்டற்குக் காதன்மிகக் கிண்கிணியாரப்பத் தோடுவீழத் துள்ளாநின்று நோக்கோடுசென்றதோற்றங் காமன் காமத்தினின்பூத்தை மேனுகர்ந்தற்குப் பெண்ணைப்பிறந்த தோற்றத்தை யொத்தாரென்க

உள்ளொன்றுகொள்ளநோக்காது வெள்ளைமைகலந்த நோக்கோடென்க. ()

தன்னெறிவளர்க்காமன்றன்பூலையிரண்டுமாகி
முன்னரேவளர்கின்றாற்போன்முகிழ்முலைமுத்தமேந்திப்
பொன்னெறிமணியிற்பொங்கிக்குழல்புறம்புடைப்பவோடிப்
பின்னிரீஇவைத்தபோலப்பெதும்பையர்விதும்பிநின்றார்.

இ - ள். பெதும்பையா, காமன் தன்னீதி யுலகிலேவளரும்படி மகளிர்முலையிரண்டுந்தானுகி வளர்கின்றாற்போலே முகிழ்த்தமுலையிலே முத்தத்தையேந்திப் பொன்னிலேவந்து தாக்குகின்ற நீலமணிபோலே குழல்பொங்கி முதுகிலே புடைக்கும்படியோடி மனமசைந்து முன்னரே நின்றாரென்க.

போலே முகிழ்த்தவென்க. எறிதல் - "நிரையெறிதல" போனின்றது. பின்னுந் தலைநிறுத்திவைத்தாற்போலே நின்றாரென்றது - சேரநிறுத்தினாற்போல நின்றமை கூறிற்று. இனிக் காமன்றன் றன்னெறிவளர முலையிரண்டுந் தனக்குண்டாய் வளர்கின்றாற்போலே நின்றாரென்றுமுரைப்ப இது வேட்கைபிறக்கின்றாளைக் கூறிற்று. (கருங)

அணிநிலாவீசுமாலையார்குப்புல்லென்னப்போகித்
துணிநிலாவீசுமாலைப்பிறைநுதற்றோழிசேர்ந்து
மணிநிலாவீசுமாலைமங்கையாமயங்கிநின்றா
பணிநிலாவிசும்பைம்பொற்கொடிமணிமலர்ந்தகொத்தார்.

இ - ள். ஒளியைவீசும் மணிமாலையையுடைய மங்கையா தாம் ஆடுகின்ற ஒளியைவீசுமாலையையுடையவரங்கு புல்லெனப்போய் நிலாவைவீசும் மாலைக்காலத்துப் பிறைபோலுநுதலையுடைய தோழியைச்சேர்ந்து மயங்கிநின்றவர்கள் ஒளியைவீசும் பொற்கொடி மணியைப்பூத்தன்மையை யொத்தாரென்க

பணிகொடி - ஒழுந்தகொடிகள் தாழ்கின்றகொடி ணி பாத்தனுமாம். இது சிறிது வேட்கைபிறந்த மயங்கினாளைக் கூறிற்று. (கருச)

வள்ளுகிர்வரித்தசாந்தின்வனமுலைநோக்கினாரை
யுள்ளுயிருண்ணுங்கூற்றினுடையாறு நண்ணரிந்துபொங்க
கள்ளுயிருண்ணுமாலைக்கதுப்பொருகையினேந்தி
கவளிமாவிளக்கிடன்னநன்மைகுமரர்கண்கினரே.

உகிராலேயெழுதினமூலை-எழுவாய். கரிக்தென்றார், கோபத்தாற் கருகிமென்றாற்போலவுந் தோன்ற. மாலையிற்றேனினது மணத்தையுண்ணுமயிர்.

இ - ள். செறிந்தவிருளுக்கு விளக்கிட்டாற்போலுந் தோற்றப்பொலிவையுடைய நங்கைமார், தம்முலை தம்மைநோக்கினாைக் கூற்றுப்போலே கோபித்துப் பொங்கக் குலைந்தகதுப்பை யொருகையாலேயேந்தி நிறைந்தாரென்க.

இனிக் கதுப்பையேந்துதலின், இருளிலே விளக்கிட்டன்னவென்றுமாம். இது முதலாக வேட்கைமிக்காரைக் கூறுகின்றார். (கருரு)

மட்டொளித்துண்ணுமாந்தர்மாண்புபேர்ன்மறைந்துவண்ணப்
பட்டொளித்தொழியவல்குற்பசுங்கதிர்க்கலாபந்தோன்றக்
குட்டநீர்க்குவளைக்கண்கள்விருந்துணவிரும்பிநின்று
ரட்டுந்தேனணிந்தமாலைப்பவளக்கொம்பணிந்ததொத்தார்.

மாலையையுடையதோர் பவளக்கொம்பை யொப்பித்ததன்மையை யொத்தாரென்றது-முற்கூறியவரைச்சுட்டிற்று. கள்ளைக் கரந்துண்ணுமாக்கள் கரக்கவுந்தோன்றுமாறுபோல, மேகலை வண்ணப்பட்டிலே யொளித்துக் கிடவாநிற்கவுஞ் சிறிதுதோன்றவென்க.

இ - ள். அவர்கள் மேகலைதோன்றக் கண்கள் இவனிடத்துப்புதுமையை மறைந்துநுகர விரும்பியேநின்றாரென்க. (கருசு)

பெரும்பொருணீதிச்செங்கோற்பெருமகனுக்கம்போலப்
பரந்திடமின்றிமேலாற்படாமுலைகுவிந்தகீழா
லரும்பொருணிதிகேளாவரசனிற்சுருங்கிநைந்து
மருங்குநொந்தொழியவீதிமடந்தையரிடங்கொண்டாரே.

பெரியபொருளாகிய நீதிபொருந்தின செங்கோலையுடைய பெருமகன். ஆல்-அசை.

இ - ள். தன்மேலேயிருந்து பெருமகனுக்கம்போலே மார்பு இடமின்றாம்படி பரந்து குவிந்த படாமுலைக்கீழேயிருந்து, பொருளாகிய நீதியைக்கேளா அரசனைப் போலே நைந்து இடை நோம்படி மடநதையர்வந்து வீதியையிடமாகக் கொண்டாரென்க.

இதுமுதலியமூன்றுகவி பின்புவந்தோரைக் கூறுகின்றன. (கருஎ)

செல்வர்க்கேசிறப்புச்செய்யுந்திருந்துநீர்மாந்தர்போல
வல்குற்குமுலைக்குமீந்தாரணிகலமாயவெல்லா
நல்கூர்ந்தார்க்கில்லைசுற்றமென்றுநுண்ணுசுப்புநைய
வொல்கிப்போய்மாடஞ்சேர்ந்தாரொருதடங்குடங்கைக்கண்ணார்

இ - ள். கண்ணார், தமதநுசுப்பு மிடித்தார்க்குச் சுற்றமின்றாயிருந்ததென்று வருந்தாநிற்கவுஞ் செல்வர்க்குப் பின்னும் வேண்டுஞ்சிறப்புக்களைச்செய்யும் பொல்லாதசீர்மையையுடைய மாந்தரைப்போலே அல்குற்கும் முலைக்கும் அணிகலமாயவெல்லாம் ஈந்தார்; ஈந்தபின்பு போய் மேனிலத்தைச் சேர்ந்தாரென்க. (கருஅ)

கார்வளர்மின்னுவீசுங்குண்டலங்காய்பொன்னோலை
யேர்வளர்பட்டமேற்பவணிந்திருள்சுமந்துதிங்க
ணீர்வளர்நீலம்பூத்துநிரைத்தபோனிரைத்தமேலால்
வார்வளர்முலையினார்தமாமழைவாண்முகங்கண்மாதோ.

இ - ள். திங்கள்பலவுங் காரிலேதோன்றிய மின்னைவீசுங் குண்டலமுதலியவற்றைப் பொருந்தவணிந்து இருளைச்சுமந்து நீலத்தைப்பூத்து நிரைத்தனபோலே முலையினார்தம் இளையமுகங்கள் மேனிலத்தேநிரைத்தனவென்க. (கருகூ)

குழையணிகொண்டவாறேகோதைகாறொடரவோடிச்
சிறையழிசெய்பொனுந்தித்தேன்பொழிந்தொழுகவேந்திப்
பறையிசைவண்டுபாடப்பாகமேமறையநின்றார் [தார்.
பிறையணிகொண்டவண்ணல்பெண்ணொர்பால்கொண்டதொத்

இ - ள். செம்பாதி குழையாகப் பூணணிந்தவளவிலே பிள்ளையார்வந்தாராக, முன்பே யவர்க்குக்கொடுத்தற்குச் சமைத்தெடுத்த கோதைகள் தம்மிற்பிணங்க வோடிச்சென்று சிறையழிந்ததேன் செம்பொனுந்தியிலே பொழிந்தொழுக அக்கோதையையேந்திச் செம்பாதியணியாத நாணத்தாலே யொருபாகமறையநின்றவர்கள், அண்ணல் ஒருபாலிலேகொள்ளப்பட்ட பெண்ணையொத்தாரென்க.

பறை - பறத்தல (கசு0)

பொன்னரிமாலைபூண்டுபூஞ்சிகைகுலாவிமுன்கை
மின்னரிச்சிலம்புதொட்டுவிருப்பொடுவிரைந்துபோவான்
கன்னியராடிநோக்கித்தம்மைத்தாங்கண்டுநாணிப்
பின்னவையணிந்துசெல்வாரிடம்பெறாதொழிந்துபோனார்.

இ - ள். கன்னியர் அவனைக்காணவேண்டுமென்கிற விருப்பத்தாலே போதற்குவிரைந்து பொன்னரிமாலையைக் கழுத்திலேபூண்டு பூஞ்சிகையிலே யதனைவைத்தாராகக்கருதி அதனையொழியப் பூஞ்சிகையைமுடித்துத் தொட்டுக் கண்ணாடியைப் பார்த்துத் தம்மையதிலேகண்டு நாணிப் பின்பு அவையணிந்துசெல்கின்றவர்கள் காண்டற்கிடம்பெறாதே தவிர்ந்துபோனாரென்க. (கசுக)

முத்துலாய்படர்ந்தகோலமுலைமுதன்முற்றமெல்லாம்
வித்தியவேங்கைவீயும்விழுப்பொனும்விளங்கக்காமத்
தொத்துநின்றெரிந்துகண்டார்கண்சுடச்சுடர்ந்துநின்று
ரொத்தொளிர்காமவல்லியொருங்குபூத்தலர்ந்ததொத்தார்.

இ - ள். கண்ணுற்கண்டவர்களுக்குச் சாமத்தீயின்தொத்து நின்றெரிந்து சுடுதலாலே, அவர்கள் வேங்கைவீயையும் பொன்னையும் வித்தியபோலும் பசலை யுலாவி நடந்த முத்தணிந்தமுலைதோன்றுதற்குக் காரணமாகிய மார்பெல்லாம் பசலை படர்ந்து விளங்கநின்றாரென்க.

அலர்ந்த காமவல்லியையொத்தாரென்பது சுட்டுப்பெயராயிற்று. இனிப் பசந்த தம்மைநோக்கினார்கண் சுடும்படிநின்றார், வல்லிபூத்துப் பொலிவழிந்த தன்மையை

யொத்தாரென்றுமுரைப்ப. இத்துணையும் *மணநிலைவகையிற்பிறந்த பெண்பாலார யும்பரத்தையரையுங் கூறினர். இது மக்கள்வகையாற் காமப்பொருட்பகுதி பற்றி முன்னோர்கூறிய குறிப்புவகையான்வந்த செந்துறைப் பாடாண்பகுதியாம். (கசுஉ)

உகிர்வினைசெய்துபஞ்சியொள்ளொளியரத்தமூட்டி
யகில்கமழுங்கைசேப்பவரிவையரலங்கரூங்கி
யகிர்படுமழைக்கண்சின்னீர்மாக்கயலெதிர்ந்தவேபோல்
முகில்கிழிமின்னின்னோக்கிமுரிந்திடைகுழைந்துநின்றார்.

இதுமுதலாகக் கற்புடைமகளிரைக் கூறுகின்றார்.

இ - ள். மகளிர தமமழுகியகைசிவக்கும்படி உகிரைச்சீவிப் பஞ்சாலேயூட்டி யகில்கமழலங்கலை யணிந்து கயல் சின்னீரை யெதிர்ந்தாற்போல வடுவகிர்போலுங் கண் உவகைக்கண்ணீரரும்ப நோக்கிப் பாதுகாத்தற்கு இவ்வரசனைப்பெற்றேமே யென்று முரிந்து முகில்கிழிமின்னினின்றாரென்க.

இடைகுழைந்து நின்றாரெனவே மனக்குழைவின்றென்று கற்புக்கூறினர். ()

முனித்தலைக்கண்ணிநெற்றிச்சிறார்முலைமுழாவிற்புல்லிப்
புனிற்றுப்பால்பிலிற்றிதேமாவடுவிறுத்தாய்குப்பாய
நுனித்துக்கண்ணரக்கிநோக்காதோசிந்துநின்றார்கான்றே
கனிப்பொறைமலிந்துநின்றகற்பகப்பூங்கொம்பொத்தார்.

இ - ள். இருடிகள் தலைபோலும் புன்றலையையும், கண்ணிநெற்றியையுமுடைய சிறார் முலையிலேசேர்தலாலே யீன்றணிப்பாற் பாலூறி வடுவிறுத்தாற்போலே பிலிற்றிப்பாயக் கண்ணையமுக்கி யரசனை நுனித்துநோக்காதே நாணிநின்றவர்கள் கற்பகத்தை யொத்தாரென்க.

கனியாகியபாரமிக்குநின்றதோர் கற்பகமெனவே புதல்வனாகியபயனைக் கொடுத்தாரென்பது கூறினர். கற்பகங்கூறிற்று, கற்புமிகுதியாற் றங்கணவர்க்குச் செல்வமெல்லாங் கொடுப்பாரென்றுகருதி. (சகூச)

அவிரிழைசுடரமுல்லையலங்கலங்கூந்தல்சோரத்
தவிர்வெய்யகாமந்தாங்கித்தடமுலைநால்கப்சாய
விவர்தருபிறவியெல்லாமின்னமாகென்றுநின்றார்
சுவர்செய்தாங்கெழுதப்பட்டதுகிலினைப்பாவையொத்தார்.

முல்லை கற்பிற்குச்சூடினார். தவிர்வெய்யகாமந்தாங்கி - போகப்பட்ட கொடிய காமத்தையுடையராய். வெய்யகாமம்-அடை. இது †"வீதராகா" என்றாற்போல நின்றது. இன்னமாக - பிறக்கும்பிறவியெல்லாம் நீசாக்கின்றவுடலிலே யிங்ஙனம் இனிதுறைவேமாக. பாவை, கொண்டநிலை தான்கெடுமளவுங் குலையாத்தன்மை போல, அவர் தாங்கொண்டகற்புங் குலையாதிருத்தலிற் பாவையென்றார்

* மணநிலைவகையென்றும் பிரதிபேதமுண்டு.

† வீதராகர்-போன ஆசையையுடையவர்.

இ - ள். சுடரச் சோரத் தாங்கிச் சாய இன்னமாகென்று கூறிநின்றார் பாவை யையொத்தாரென்க. (௧௬௫)

வேரிநாறலங்கன்மாலேயின்னிழையயங்கியெங்கும்
பூரித்துப்புதலந்தோறுங்குவளையுமளையும்பூத்துப்
பாரித்துப்பைம்பொனகருலகிவண்வீழ்ந்ததேபோன்
மாரிமாமயிலனாருமைந்தருமயங்கினாரே.

இ - ள். நாகரும், பொன்னுலகிற்றேவரும் பரக்கவந்து இவ்விடத்தை விரும் பினதன்மைபோலே, நகரெங்கும் அலங்கலும், மாலேயும், இழையும்பூரித்து மயங்கப் பட்டு வாயிரோறுங் கண்ணும் முகமும்பொலிவுபெறப்பட்டு மயிலனாரும் மைந்தரும் மயங்கினாரென்க.

தம்மைக்காக்கின்றவரசனாதலின், அன்புமிகுதியால் இருபாலாருமுடன்வந்தார.

கோதைதாழ்குடையினீழ்ற்கொற்றவன்பரிதியாக
மாதரார்முகங்கடொன்னுந்தாமரைமலர்ந்ததெண்ணீர்க்
காதநாலகன்றபொய்கைக்கடிநகர்குவளைபூத்துப்
பேதுறுகின்றபோன்றபெருமழைக்கண்கணயாதோ.

இ - ள். கட்டியங்காரனென்னும் மதியாறகுவிந்த மாதரார் முகமென்னுந்தாம ரை இக்கொற்றவன்பரிதியாக நாற்காதத்தளவும் அகன்ற நகராகியபொய்கையெங்கும் மலர்ந்தன; மலர்ந்தபின் அவற்றிற் கண்களுங குவளைபூத்துப் பேதுறுகின்றனபோன் றனவென்க.

பேதுறுதல் - இன்மையுற்றமயஙகுதல். (௧௬௭)

மாந்தருமாவுஞ்செல்லமயங்கியேலெழுந்தநீறு
தேந்தருகோதையாாதந்தெண்மட்டுததுவலேமாற்ற
வாய்ந்தபொன்னகரமெங்குமணிகலவொளியினாலே
காய்ந்துகண்கலக்கப்பூத்தகற்பகமொத்ததன்றே.

முற்கூறிய மயிலனாரும், மைந்தரும் மயஙகினவர்களுடைய செய்தி கூறு கின்றார்.

இ - ள். மாந்தருமாவுஞ் செல்லுதலாலே மயங்கியெழுந்த நீற்றை மகளிர் வீசு கின்ற பூவிற்றேன் மாற்றாநிற்க, ஆய்ந்தகலங்களை அவன்வேண்டாதிருக்கவும் அவன் முன்னே வீழ மைந்தர் எங்கும் வீசுகின்றவிளக்கத்தாலே, இப்பொன்னகர், வேண்டக் கொடுக்கின்ற கற்பகத்தைக்காய்ந்து எதிர்ப்பட்டவளவிலே கொடுத்ததோர் கற்பகத் தை யொத்ததென்க.

கண்கலத்தல் - எதிர்ப்படுதல். பூத்ததனாற்பயன் கொடையேயாம். (௧௬௮)

பெண்பெற்றபொலிசைபெற்றார்பிணையனார்பெரியயாமுங்
கண்பெற்றபொலிசைபெற்றாமின்றெனக்களாந்துமுந்நீர்

மண்பெற்றவாயுள்பெற்றுமன்னுவாய்மன்னவென்னுப்
புண்பெற்றவேலினன்மேற்பூமழைதூவினாரே.

முற்கூறியமகளிர் இங்ஙனங்கூறிப் பூவைவீசுகின்றார்.

இ - ள். வீரமகளுந் திருமகளும் நின்னை விடாதேயுறைதலிற் றும் பெண்டன்மையைப் பெற்றதனாலுள்ள லாபத்தைப்பெற்றார். அதனால் அவர்கள் நின்னை விடாதுறைவாராகவென்று யாங் கூறவேண்டா; கற்புமிகுதியால் அவர்களிற் பெரிய யாமுஞ் சச்சந்தன்மகனாகியநின்னை எமக்கரசனாகக் காணப்பெறுதலின், இன்று கண்பெற்றதனாலுள்ள இலாபம் பெற்றேமென்றுகூறி யவன்தந் ஆயுளுக்குக்கரைந்து, மன்னனே! முக்கீரும் மண்ணும்பெற்றவாயுளை நீபெற்று மன்னுவாயாகவென்று வாழ்த்தி யவன்மேலே பூவைத் தூவினாரென்க.

இஃது உபபுமூலகுமுள்ளவளவும் வாழ்வீரென்னும உலகவழக்கு. உம்மை-சிறப்பு. இங்ஙனம் நீவொழ்கென வாழ்த்துதற்குரியோர் கற்புடைமகளிர். ஏனையோர்வாழ்த்துவரேற் பயனின்றாம். இத்துணையும் உயர்குடிப்பிறந்தோ ருறைகின்ற வீதிகூறினார். (௧௬௯)

வேறு.

சுண்ணமேற்சொரிவார்தொழுதுதொங்கல்வீழ்ப்பார்
தண்ணென்சந்தனநீரார்ந்துதேன்றுளும்பும்
வண்ணப்பந்தெறிவார்வளையொலிப்பவோச்சிக்
கண்ணியிட்டெறிவார்கலவைநீர்தெளிப்பார்.

இ - ள். ஒழிந்தமகளிர் ஒச்சிச் சொரிவார்; வீழ்ப்பார்; சந்தனமும் பனிநீரும் நிறையப்பட்டுத் தேன்றுளும்பும் பூப்பந்தையெறிவார்; கண்ணியையெறிவார்; பசுங்கூட்டையும் பனிநீரையுங் கூட்டித் திருத்திமுதலியவற்றைற் றெளிப்பாராயினாரென்க. (௧௭௦)

முந்துசூர்தடிந்தமுருகனம்பியென்பா
ரைந்துருவவம்பினனங்கனென்றயர்வார்
கந்துகன்வளர்த்தசிங்கங்காண்மினென்பார்
சிந்தையிற்களிப்பார்சேய்நெடியகண்ணார்.

இ - ள். சிந்தையாற் களிப்பார்ந்த மிக்கநெடியகண்ணார், இந்நம்பி முருகனென்பார்; காமனென்றுவருந்துவார்; சிங்கங்காணுங்களென்பாராயினாரென்க. (௧௭௧)

தேசிகமுடியுந்திருந்துபட்டுடையும்
பாசமாகநின்றுபன்மலர்க்கழுநீர்
மூசிவண்டிமிரும்மொய்யலங்கறூழக்
காசில்காமஞ்சொல்லிக்கண்ணினாலிரப்பார்.

இ - ள். வண்டிமிருங் கழுநீர்மாலைதாழும்படி சிலமகளிர் சீவகனுடைய முடியும் உடையுந் தம்மைப் போகாமற்பிணிக்குங் கயிறாகக் கருதிநின்று தங்கண்ணாலே காமத்தைச்சொல்லி யிரப்பாராயினாரென்க. (௧௭௨

வல்லடைறந்ததாரான்வண்ணங்கண்டபின்றைக்
கண்டிலேனென்மாமைகைவளையொடென்பா
ரொண்டொடியிவன்றன்னுருவுகண்டுவாழ்வார்
பெண்டிராய்ப்பிறந்தார்பெரியர்போதவென்பார்.

ஒண்டொடி! இவன்வடிவைக்கண்டு ஈண்டுவாழ்கின்ற யாமேகாண் பெண்டிராய்ப் பிறந்தேமென்பார். அவர்க்கெதிரே அவனை நுகருமகளிரோவென்று வினவினார்க்கு அவர் தவத்தாற் பெரியர்காண், அதனைவிடலாகாதோவென்பார், தம்மைப் பிறர்போற்கூறினர்.

இ - ள். என்பார்; என்பாராயினரென்க. (சுஎக)

வேறு.

கொழித்திரையோதவேலிக்குமரனைப்பயந்தநங்கை
விழுத்தவமுலகமெல்லாம்விளக்கிநின்றிட்டதென்பா
பிழிப்பொலிகோதைபோலாம்பெண்டிரிற்பெரியநோற்றாள்
சுழித்துநின்றருதகற்பிற்சுநந்தையேயாகவென்பார்.

இ - ள். கொழித்திரைக்கின்றகடலை வேலியாகவுடைய வுலகிற் பெண்டிருள் இவனைப்பெற்ற விசயைதவமேகாண் உலகெல்லாம்விளக்கி நிலைபெற்றதென்பார்; அது வன்று; பெண்டிருட்பெரியவாக நோற்றாள் சுநந்தையேகாணென்பாராயினரென்க.

பிழியையுடைய பொலிகோதை. ஆகவென்பதனை மாறுக. சுழித்தல்-வேறோரிடத்தின்றி நிற்றல். அருதகற்பு - அருட்கற்பு. (சுஎச)

௩. சாந்தகங்கிழியமாலைத்தடமுலைஞெமுங்கப்புல்லிச்
சேர்ந்தெழுநங்கைமாரேதிருநங்கைமார்களல்லார்
கூந்தலுமுலையுமுத்துநகோதையுஞ்சுமந்துநைவான்
போந்தவந்நங்கைமார்கள்பொய்ந்நங்கைமார்களென்பார்.

இதுமுதல் "நஞ்சுகுடித்தாலும்" என்னுங்கவியளவுமொருதொடராக்குக.

இ - ள். ஆகங்கிழியும்படி ஞெமுங்கப்புல்லிப் புணர்ந்தெழு முலையினையுடைய நங்கைமாரே நல்வினைசெய்தநங்கைமார்; அந்நங்கைமாரல்லாதார் கூந்தன்முதலியவற்றைச்சுமந்து வருந்துதற்கென்றே பிறந்த பொய்ந்நங்கைமார்களென்பாரென்க.

வடிவுமாத்திரையேயாய்ப் பயன்பெறாமையிற் பொய்யென்றார். (சுஎடு)

௨. இடம்படவகன்றுநீண்டவிருமலர்த்தடங்கணென்னுங்
குடங்கையினுண்டுகொண்டுபருகுவார்குவளைக்கொம்பி
னுடம்பெலாங்கண்களாயினொருவர்க்குமின்றியொப்ப
வடங்கவாய்வைத்திட்டாரப்பருகியிட்டிடுமினென்பார்.

இ - ள். கண்ணென்னுங்கைகளாலே முகந்துகொண்டு பருகுவார்; குவளையை முழுதும்பூத்ததோர் கொம்புபோலே யுடம்பெல்லாம்பொருந்தக் கண்ணாயிற்றாயின்,

இவர்களொருவர்க்கும் இன்றும்படி யிவன்மேனியடங்க அக்கண்களிடத்தே வந்து நிறைய வதனையிட்டுவைத்து நுகருமின்; அல்லது இவ்விரண்டுகண்களாலும் காண முடியாதென்பாரென்க.

இட்டிடுமின் - வினைத்திரிசொல். (களசு)

௩. முலைமுதறுறந்தவன்றேமூரிக்தாளாளியானைத்
தலைநிலம்புரளவெண்கோடுகொண்டதேபோன்றுதன்கைச்
சிலையிடம்பிடித்தனூன்றேதெவ்வனைச்செகுத்தநம்பி
நிலவுமிழ்குடையினீழற்றுஞ்சுநவையமென்பார்.

இ - ள். யாளி முலையைத்துறந்தவன்றே யானைத்தலை நிலத்தேகிடந்து பதைக்கும்படி யதன்கோட்டைவாங்கி யுண்டதன்மைபோல, உலகறியத் தன்கையிலே வில்லையெடுத்து நிரைமீட்டவன்றே தெவ்வனைக்கொன்ற நம்பியது குடைநிழலிலே இவ்வுலகு தங்குகவென்பாரென்க.

தெவ்வரென்றபன்மை - பிள்ளைகள் நூற்றுவரையுங்கருதி. வேடர் பகைவரன்மைமுன்னர்க்கூறினும். யானைக்குக் கோட்டைப்பறித்தபின்னாருஞ் சிறிதுபொழுது பதைத்துயிர்போமாறுபோல நிரைமீட்டவன்றுதொட்டும் இவன் நமக்குப்பகையாவனென்னுங்கருத்துடனே பதைத்துப் பட்டானென்று தாங்கருதியிருந்தமைகூறினார். அவன்பதைத்தமை, *"வாளுற்ற புண்ணுள் வடிவேல் லெறிந் திற்ற தேபோல்" என்றதனானுணர்க. (களஎ)

வேறு.

௪. இந்நகரப்புறங்காட்டிவன்பிறந்தவாறுந்
தன்னிகரில்வாணிகனிற்றான்வளர்ந்தவாறுங்
கைந்நிகரில்வேந்தர்தொழப்போந்ததுவுங்கண்டா
லென்னேதவஞ்செய்யாதிகழ்ந்திருப்பதென்பார்.

இ - ள். இவன் இந்நகரப புறங்காட்டிலே பிறந்தபடியும், தன்குலத்திற்கொத்தலில்லாத வாணிகனில்லிலே தான்வளர்ந்தபடியும், தபமொழுக்கத்திற்கொப்பில்லாதவரசர்தொழப் போந்ததன்மையுங்கண்டால், நல்லறிவுடையோர் தவஞ்செய்யாதிருப்பது என்னையென்பாரென்க.

பொன்னகரும் பாடம். கண்டார்கூற்றுதலிற் பிள்ளையார்குலத்திற்கு ஒவ்வாத வாணிகனென்றார். (களஅ)

௫. பெருமுழங்குதிரைவளைசணிந்திப்பிணியுறினுந்
திருமுயங்கலில்லையெனினில்லைபொருளீட்ட
மொருமுழமுஞ்சேறலிலரேனும்பொருளுளர்க்கே
வரும்வழிவினையுழந்துவாழ்கதவமாதோ.

பெருந்திரை - கடல். கடத்தற்கருமையின், வளையையும் நீந்தியென்றார்.

---

* கோவிந்தையாரிலம்பகம், ௬௭.

இ - ள். திணையையும் வணையையுநீந்தி வருந்தினும் ஒருவற்கு நல்வினையின் றேற் பொருளீட்டமில்லை; ஒருமுழநீளமுஞ் செல்லுதலிலராயினும் அவர்நல்வினை யுடையராயிற் பொருடானே வழிகேட்டு உழந்து அவரிருந்தவூரிலேவரும்; ஆதலால் அதற்கேதுவாகியதவம் வாழ்வதாகவென்பாரென்க.

தந்தை முறையாற் றேடியபொருள் தானேவந்து இவனுக்கு எய்திற்றென்றார்.()

௬. நஞ்சுகுடித்தாலுநவையின்றாதவநின்றா
லஞ்சியொளித்தாலுமரணில்லைதவமுலந்தாற்
குஞ்சரத்தின்கோட்டிடையுமுய்வர்தவமிக்கா
ரஞ்சலிலரென்றுமறனேகளைகணென்பார்.

தன்னையாக்கிய சச்சந்தனைக்கொன்ற பின்னுங் கட்டியங்காரன் அரசாண்டிருந்த மைகருதி, நஞ்சைக்குடித்தாலுந் தவநின்றால் நவையின்றாமாயிருந்ததென்றார். தாம வைவியூகம் வகுத்து அதனுள்ளேநின்றும் அவன்பட்டமைகருதி, அஞ்சியொளித்தா லுந் தவமாண்டால் அரணில்லையாயிருந்ததென்றார். இவையிரண்டானுங் கட்டியங்கா ரனிருவினையையும் வியந்தார். கட்டியங்காரன் இவனைச்சிறைசெய்து யானைக்கிடக் குறித்தமைகருதித் தவமிக்கார் கோட்டிடையினுமுட்பட உய்வாராயிருந்தாரென்றார். இதனாற் பிள்ளையார்நல்வினையை வியந்தார். ஆதலாற் றவஞ்செய்தார்க்குஞ் சிறிது தீவினையான் இடர்வந்தவிடமெங்குங் களைகணாவது அறக்கடவுளேயாயிருத்தலின், அதனையுடையார் அஞ்சுதலிலராயிருந்தாரென்பாரென்க. களைகண் - முதுக்கணெ ன்றார்போலும்பொருள். முன்னிற்றீவினை தவஞ்செய்தார்க்கும் இடையே நுகர வேண்டும்.

இ - ள். அன்பார் : என் பராபின்றென்க (௧௮௦)

வேறு.

முரல்வாயசூர்சங்கரடமுட்டாழைமுகைவிமழுங
களைவாயபுதுதினறுகானன்மேயுங்கடற்சேர்ப்ப
னுளைவாயநகர்பரவப்போகியொண்பொனெயில்சூழ்ந்த
விளைவாயபூம்பிணடிவேந்தன்கோயிற்கெழுந்தானே.

வளைந்து நிலத்தேவீழ்ந்த தாழையின்முகை அலருங்களையை யிடத்தேயுடைய கானலிலே சங்கு முத்தை யீன்று வருத்தமின்றித் தானேபோய் மேயுமெனவே, தன் பிள்ளைக்குச் செவிலியாய் அம்முகைவளர்க்குமென்று கருதிற்றென்பதும் ஒன்று தோன் றியவாறுகாண்க; சங்கு தாழையின்முகைக்கு உவமையாதலின். உளையிடத்தனவா கிய நகர்; "நிலநாவிற்றிரிதரும்" என்றாற்போல. தெய்வத்தன்மையால் விளையை மாறாமல் இடத்தேயுடையவாகிய பிண்டி.

இ - ள். சேர்ப்பன், நகரை வலமாகப்போய்ப் பின்பு வேந்தன்கோயிலுக்குப் போயினனென்க. (௧௮௧)

அருகுமயிலகவவன்னமேங்கக்குயில்கூவக்
குருகுபொறையுயிர்க்குவகொடுமுட்டாழைவெண்டோட்டு

முருகுபொறையுயிர்க்குமொய்பூங்காவிற்படைநீக்கித்
திருகுகனைகழலான்செம்பொற்கோயில்சேர்ந்தானே.

அருகேநின்று அகவ ஏங்கக் கூவக் குருகினமீனுங் காவெனவே, அக்குருகின் வருத்தத்திற்கு அவையும் வருந்தினவென்பது தோன்றிற்று. தாழை தோட்டிற்சுமந் திருந்த தேனுகியபாரத்தைச்சொரியுங்கா.

இ - ள். கழலான் காவிலே படையைநிறுத்திக் கோயிலைச்சேர்ந்தானென்க.()

திறந்தமணிக்கதவந்திசைகளெல்லாமணந்தேக்கி
மறைந்தவகிற்புகையான்மன்னர்மன்னன்வலஞ்செய்து
பிறந்தேனினிப்பிறவேன்பிறவாதாயைப்பெற்றேனென்
றிறைஞ்சிமுடிதுளக்கியேத்திக்கையாற்றொழுதானே.

அரசன்வருங்காலத்துப் பிறர்புகுதாமற் கதவடைத்து அவனுக்குத் திறத்தலி யல்பு. அகிற்புகையான் மணந்தேக்குதலாலே திசைகளெல்லாமறைந்தன.

இ - ள். அங்ஙனஞ்சேர்ந்தபொழுது கதவுகள் திறந்தன; திசைகள் மறைந்தன; அவ்வளவிலே மன்னன் வலஞ்செய்து பிறவாதநின்னைப் பெற்றேனாதலின், இதற்கு முன்பிறந்தயான் இனிப் பிறவேனேயென்று முடிதுளக்கி யிறைஞ்சி யேத்தாநின்று தொழுதானென்க.

ஏத்தியென்பது நிகழ்காலமுணர்த்திற்று (கஅங)

வேறு.

திருமறுமார்பினை திலகமுக்குடையினை
யருமறைதாங்கியவந்தணர்தாதையை
யருமறைதாங்கியவந்தணர்தாதைநின்
னெரிபுரைமரைமலரிணையடிதொழுதும்.

இ - ள். மார்பினையுடையை; குடையினையுடையை; ஆதிவேதத்தை முற்றக் கற்ற அந்தணர்க்குத் தாதையாந் தன்மையையுடையை; நீயங்ஙனமாதலின், நின்ன டியைத் தொழுதுமென்றானென்க.

யாமென்ற உளப்பாடு ஒழிந்த மக்களையுங்கருதிற்று. *"உம்மொடு வரூஉங் கட தற" என்று நிகழ்காலமுணர்த்தல் காலமயக்கு. எரிபுரையுமடியென்றா; பிறவி யைச்சுடுதலின். மலர்மேலேற்றுதலுமாம் (கஅச).

உலகுணர்கடவுளை யுருகெழுதிறலினை
நிலவிரிகதிரணிநிகரறுநெறியினை
நிலவிரிகதிரணிநிகரறுநெறியைநின்
னலர்கெழுமரைமலரடியிணைதொழுதும்.

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வினையியல், ரு.

இ - ள். கடவுட்டன்மையையுடையை; அநந்தவீரியத்தையுடையை; சுக்கிலத்தியானத்தையுடையை; நீயங்ஙனமாதலின், நின்னடியைத் தொழுதுமென்றானென்க.

நிலவின்கதிரையொத்தநெறி. அணி - உவமவுருபு. (௧௮௫)

மறுவறவுணர்ந்தனைமலமறுதிகிரியை
பொறிவரம்பாகியபுண்ணியமுதல்வனை
பொறிவரம்பாகியபுண்ணியமுதல்வநின்
னறைவிரிமரைமலர்நகுமடிதொழுதும்.

திகிரி - அறவாழி. இந்திரியங்கட்கு வரம்பாகிய முதல்வனென்றது-அவற்றிற்கு அவ்வருகுபட்டுநிற்கின்ற முதல்வனென்றவாறு.

இ - ள். உணர்ந்தாய்; திகிரியை; புண்ணியத்திற்குக் காரணமான தன்மையையுடையை; அத்தன்மையையுடையவனே! நின்னடியைத் தொழுதுமென்றானென்க.

இவைமூன்றுந் தாழம்பட்டவோசையும் முடுகியலுமாய் ஒருபொருண்மேல் மூன்றடுக்கிக் கந்தருவமார்க்கத்தான் இடைமடக்கிய தேவபாணித் தாழிசைக் கொச்சகவொருபோகு. (௧௮௬)

வேறு.

நந்தாவிளக்குப்புறமாகெனநான்குகோடி
நொந்தார்க்கடந்தான்கொடுத்தான்பின்னைநூறூர
நந்தாரகடாத்தகளிறுங்கொடித்தேர்கணூறுஞ்
செந்தாமரைமேனடந்தானடிசேர்த்தினானே.

இ - ள். நொந்தாரகடந்தோன் இறைவற்கு விளக்குப்புறமாகவென்று நூறூரையும், பூசனைக்கு நான்குகோடிபொன்னையுங் கொடுத்தான்; கொடுத்தபின்னருஞ் சேவித்தற்கு, நூறுகளிற்றையும், நூறுதேரையும், அவனுக்குச் சேர்த்தினானென்க.()

வாடாதமாலைமணிமாலைபொன்மாலைமுத்த
நீடாரமாலைநிழன்மாண்டபவழமாலை
மாடார்ந்திழியுமருவிம்மலர்பொற்பவேற்றிக்
கூடார்க்கடந்தான்வலங்கொண்டிடஞ்சென்றுபுக்கான்.

நீடாரம் - சந்தனம். தாமம் பாடமாயின், ஒழுங்காம். மாடு - பக்கம்.

இ - ள். கூடார்க்கடந்தான், வாடாதமாலைகளிற்றும் மணிமாலைமுதலியவற்றையும், மலனையந் திருவடிமேலேற்றி வலஞ்செய்துபோய்த் தன்கோயிலிடத்தேபுக்கானென்க (௧௮௭)

வேறு.

உலமருநெஞ்சினொடாமன்னவரூர்ந்தயானை
வலமருப்பீர்ந்துசெய்தமணிகிளர்கட்டிலேறி

நிலமகள்கணவன்வேந்தர்குழாத்திடைநிவந்திருந்தான்
புலமகள்புகழப்பொய்தீர்பூமகட்புணர்ந்துமாதோ.

இ - ள். நிலமகள்கணவன், நாமகள்புகழத் திருமகளைப்புணர்ந்து வேந்தர்திரளிலே சிங்காசனத்திலேறி யிருந்தானென்க.

நிவந்தென்றார்; அரசரிற் றான் மேலாயிருத்தலின். (கஅக)

எத்துணைத்தவஞ்செய்தான்கொலென்றெழுந்துலகமேத்த
வித்தியபுகழினாற்கு வின்றரசியற்றிநாடு
மொத்தனனல்கித்தன்னையுழந்தனள்வளர்த்ததாய்க்குச்
சித்திரதேவிபட்டந்திருமகனல்கினானே.

இ - ள். திருமகன், இவன் எவ்வளவுதவஞ்செய்தானென்று உலகமேத்தும்படி கந்துக்கடனுக்கு இதற்குமுன்பில்லாத அரசுரிமையை வலியக்கொடுத்து நாட்டையுநல்கித் தன்னைவருந்திவளர்த்த சுநந்தைக்கு நன்றாகிய தேவியென்னும் பட்டத்தையும் நல்கினானென்க.

*"அந்தணாளர்க் கரசவரை வின்றே" என்பதனான் அந்தணரொழிந்தவிருவர்க்கும் முடியுடைவேந்தராதற்றன்மையின்மையின், ஈண்டு அரசளித்தது குறுநிலமன்னர்க்குரிய அரசாயிற்று. (கஅ௦)

இனக்களியானைமன்னரிளவுடையானென்றேத்தத்
தனக்கிளையானைநாட்டித்தான்றனக்கென்றுகூறிச்
சினக்களியானைமன்னர்மகளிரைச்சேர்த்திநம்பன்
மனக்கினிதுறைகவென்றுவளங்கெழுநாடுமீந்தான்

இ - ள். நம்பன், நந்தட்டனை மன்னரெல்லாம் இளவுடையானென்றேத்தும்படியிளவரசாக்கி, யவன்றான், இரத்தலறியாதவன், எனக்கு நீங்கள் இக்காரியத்தைச் செய்தல்வேண்டுமென்றிரந்துகொண்டுகூறிக் குறுநிலமன்னர்மகளிரை நபுலற்கும விபுலற்குமணஞ்சேர்த்தி யினி நீங்கள் மனத்திற்கினிதாகவுறைவீரென்று கூறி யவர்க்கு நாடுகளையும் கொடுத்தானென்க.

நபுலனைக் †"காமம்போற்காளைமீண்டான்" எனவும், விபுலனை ‡"உணராதவனின்றான்" என்றும், அவர் படாமைகூறுதலின், அவர்க்கு இந்தவரிசைகொடுத்தானென்று கூறுதல் தேவர்க்குக்கருத்தாம். அது மன்னர்மகளிரையென்ற பன்மையானுமுணர்க. அன்றி விபுலன்பட்டானென்றுகூறுவார் நம்பனென்றது நபுலனையாக்கி யவனுக்கு மகளிரைச்சேர்த்தியென்க. (கஅக)

ஆழ்கடல்வையத்தில்லாவருநிதியரசுநல்ல
சூழ்மணியாழிசெம்பொற்சூட்டொடுகண்ணிகாதந்
றேழர்கடகருளித்தொல்லையுழந்தவர்தம்மைத்தோன்ற
வாழ்கெனநிதியுநாடுமென்னவன்கொடுப்பித்தானே.

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், அ௨.
† மண்மகளிலம்பகம், கடுஅ. ‡ மண்மகளிலம்பகம், கசுசு.

இ-ள். மன்னவன், காதற்றோழர்கட்கு உலகில் வேறுசிலர்க்கில்லாத பழைய வரசையும், ஒறுதிமோதிரத்தையும், செம்பொனாற்செய்த பட்டத்தையும், கண்ணியையும், நிதியையுமருளி, அவர்களையொழியத் தனக்கு உழந்தவர்களைத் தோன்ற வாழ்கவென்றுகூறி யமைச்சரைக்கொண்டு நிதியையும் நாட்டையுங் கொடுப்பித்தா னென்க. (௧௧௨)

வளர்த்தகைத்தாயர்தம்மைவருகெனவருளித்தங்கள்
கிளைக்கெலாஞ்சிறப்புச்செய்துகேட்டவர்மருளவைந்தூர்
விளைத்துண்கெடாதவைகலாயிரமிறுப்புத்தண்டக்
கொளக்கொடுத்தயாவுயிர்த்தான்கொற்றவனெல்பவன்றே.

இ-ள். கொற்றவன், தன்னைவளர்த்த செவிலித்தாயரை வருகவென்றழைத்து அவர்கள் சுற்றத்திற்குச் சிறப்புச்செய்து அவர்கள் தாங்கள்கொள்ளும்படி யுலகில் விளைதற்குள்ளனவற்றையெல்லாம் விளைவித்து நாடோறும் ஆயிரம்பொன்னிறுப்புத் தண்டக் கெடாதவூர்களைந்தைக் கேட்டவர்மருளக்கொடுத்து இளைப்பாறினானென்க()

கைத்தலமந்திகொண்டகைம்மகப்போன்றுதன்கட
பத்திமைவிடாதுமேனாட்படைக்கலநவின்றபொற்றேர்
மைத்துனமன்னர்க்கெல்லாம்வாநிதிமணிசெய்மான்றேர்
தத்துநீர்நிசைச்சென்மாவுந்தவழ்மதக்களிறுமீந்தான்.

இ-ள் மந்தியைக் கையாலேதழுவிக்கொண்ட ஒழுக்கத்தையுடைய மகப் போலே தன்கட் பத்தியை விடாதே நவின்றமன்னர்க்கு நிதிமுதலியவற்றை யீந்தா னென்க.

உம்மை விரிக்க *"மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பு - மவையு மன்ன வப்பா லான" என்றார். (௧௧௪)

கோமகன்கோலமான்றேர்க்கோவிந்தனென்னுங்கொய்தா
மாமற்குமடங்கலாற்றற்சட்டியங்காரனென்ற
தீமகனுடையவெல்லாந்தேர்ந்தவன்கொடுத்துச்செல்வ
னேவல்லகமலையொத்தானுலோகபாலற்குமாதோ.

இ-ள். சீவகன் கோவிந்தனென்னுமாமற்குச் சட்டியங்காரனுடைய பொருள்களெல்லாவற்றையும் ஆராய்ந்துகொடுத்துச் செல்வனாகிய உலோகபாலனுக்குச் சுரபியை யொத்தானென்க. (௧௧௫)

பேரிடர்தன்கணீக்கிப்பெரும்புணையாயதோழற
கோரிடஞ்செய்துபொன்னுலவனுருவியற்றியூரும்
பாரிடம்பரவநாட்டியவனதுசரிதையெல்லாந்
தாருடைமார்பன்கூத்தாத்தான்செய்துநடாயினானே.

இ-ள். தாருடையமார்பன் தன்கணிடரைநீக்கித் தெப்பமாகிய சுதஞ்சண

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௧௪.

னுக்கு ஒருகோயிலைச்செய்து அவன்வடிவைப் பொன்னுலியற்றி யோருனையும் நிலை பெறுத்தி யவன்சரிதத்தைத் தான் ஒருநாடகமாகச்செய்து நடத்தினனென்க. (௧௧௬)

ஊன்விளையாடும்வைவேலுறுவலிசிந்தித்தேறபத்
தான்விளையாடிமேனளிருந்தமேதார்தகைநல்லாலைத்
தேன்விளையாடுமாலையணிந்துபொற்பீடஞ்சேர்த்தி
யான்விளையாடுமைந்தூரதன்புறமாக்கினனே.

இ - ள். உறுவலி, இனிப்பெறுதார் யாரென்றுசிந்தித்து மேனுட் டான்விளை யாடியிருந்த ஆலத்திற்கு இதற்குச் செய்யுமுபகாரம் இதுவென்று அதற்கேற்ப மாலை யையணிந்து பீடத்தைச்சேர்த்தி யைந்தூரை யதற்கு இறையிலியாக்கினனென்க.

அதனிழலிலே பசுக்கள்கிடத்தல் அதற்கறமாகுமென்றும், அவற்றின்பால் அதற் குச் சொரிதற்குமாக ஆன்விளையாடு மைந்தூரென்ருர். (௧௧எ)

வேறு.

கொட்டமேகமழுங்குளிர்தாமரை
மொட்டின்வீங்கியவெம்முலைமொய்குழ
லட்டுந்தேனழியும்மதுமாலையார்
பட்டமெண்மரும்பார்தொழவெய்தினர்.

இன் - பொரு. தேனினமொய்க்குங்குழல். அழியும் மதுவைச்சொரிமாலை.

இ - ள். முலையினையுங் கொட்டமேகமழுங் குழலினையுமுடைய மாலையாரெண் மரும் பார்தொழும்படி பட்டமெய்தினரென்க. (௧௧அ)

பஞ்சிசூழல்குற்பல்வளைவீங்குதோள
வஞ்சிநுண்ணிடைவம்பணிவெம்முலை
விஞ்சையன்மகள்சீறடிவீழ்ந்தன
ரஞ்சிலோதியரும்பவிழ்கோதையார்.

இ - ள். அங்ஙனம் பட்டமணிந்தபின்பு குணமாலைமுதலிய வெழுவரும் அல் குன்முதலியவற்றையுடைய தத்தையை வணங்கினரென்க. (௧௧௯)

விடிலைந்தனைக்கோடிவிருத்திமே
ஞடியாயிரநாடொறுநங்கைமார்க்
காடுசாந்தடிசிற்புறமாக்கினன்
கோடுவாலொளிக்குங்குமக்குன்றனன்.

கோடுவாலொளி - நுடங்குகிற அழகியவொளி.

இ - ள். குன்றனன், நங்கைமார்க்கு ஐந்தைக்கோடிபொன் விடுதலில்லாத நாடுகளைச் சீவிதமாகவிட்டு, அதன்மேலே இவர்க்கு அண்ணிதாகவேண்டுமென்று நாடிச் சாந்துக்கும் அடிசிலுக்கும் நாடோறும் ஆயிரம்பொன்னுக்கு இறையிலியாக்கி னனென்க. (௨00)

ஆனைமும்மதமாடியகாடெலா
மானைநோக்கியர்வாய்மதுவாடின
வேனன்மல்கிவெவ்பேடர்சென்றவெந்நிலம்
பானன்மல்கிவெண்பாலன்னம்பாய்ந்தவே.

மான் நைகின்ற நோக்கியர்.

இ-ள். இவன் நிருத்துதலின், யானைதிரிந்த காடுகளெல்லாங் கணவரோடு கூடிய மகளிர் கொப்புளித்த மதுவையாடின; பேய்த்தேர்பரந்த நிலமெல்லாம் பானல் பூத்துப் பால்போலும் அன்னம் பரந்தனவென்க.

*"புறவே, யொள்ளிழை மகளிரொடு மள்ளர் மேன" என்றார்பிறரும். (உ0க)

மாரிமல்கிமணங்கமழ்மண்மகள்
வாரிமல்கிவரம்பிலளாயினு
ளாரியாவடிசிற்றளியானெய்வார்ந்
தேரியாயினவெங்கணுமென்பவே.

இ-ள். இவன்செய்கின்ற அறத்தின்மிகுதியாலே திங்கண்மும்மாரிபெய்து உலகம் விளைவுமிக்குத் தன்னெல்லையைக்கடந்தது; அதன்மேலாக மடைப்பள்ளியினின்றும் நெய்யொழுகுதலாலேயெவ்விடமும் ஏரியாயினவென்க.

எனவே பசுக்கள் மிகப் பால்பொழிந்தனவென்றார். (உ0உ)

ஏகவெண்குடையின்னிழற்றண்ணளி
மாகமாக்கடலெல்லைநிழற்றலாற்
போகபூமியும்பொன்கிளர்பூமுடி
நாகர்நாகமுநாணியொழித்தவே.

இ-ள். இன்னிழற்குடை மாகத்திலேநீண்டித் தண்ணளியாலே யுலகைநிழற்றலால், இதற்கு உத்தரகுருவும், பொன்னுலகும், நாகருடையநாகலோகமும் நாணித் தம்பெருமையைக் கைவிட்டனவென்க. (உ0ங)

வண்டுவேய்ந்துவரிமுரல்பூஞ்சிகைக்
கெண்டைவென்றகண்ணார்களுங்கேள்வரு
முண்டுமூத்திடையூறிலர்சேறலாற்
பண்டையூழியிற்பார்மலிவுற்றதே.

இ-ள். மகளிரும் மைந்தருநுகர்ந்து முறையேமுதிர்ந்து மக்கட்குவிதித்தவாயுளில் இடையூறின்றிச் சேறலாலே பார் பண்டையூழிபோலே மலிவுற்றதென்க.

வரி - பாட்டு. பண்டையூழி - திரேதாயுகம். (உ0ச)

---

* பதிற்றுப்பத்து, இரண்டாம்பத்து, ங.

அக

வேறு.

செருநாடுசெஞ்சுடர்வேற்றிருகுசெம்பொற்கனைகழற்காற்
றிருநாடுதேம்பைந்தார்ச்செல்வன்செவ்விபெறுதொழிந்து
பெருநாட்டருங்கலங்கள்சுமந்துபேருமிடம்பெறாஅ
தொருநாட்டரசுணங்கவுரவோன்கொற்றமுயர்ந்ததே.

இ - ள். செருவைநாடும் வேலினையும், காலினையும், திருமகளுறைந் தாரினையுமுடைய செல்வனது சமயத்தைப் பெறாமையினாலே காட்சியொழிந்து வேற்றுநாட்டிற்கலங்களைச்சுமந்து அசையுமிடம்பெறாதே யொருநிலையிலேநின்று அரசுணங்கும்படி யவன்வெற்றி யுயர்ந்ததென்க.

நாட்டு - நிலை. இனி ஒருநாட்டுக்குவேண்டும் அரசென்றுமாம். (உ0௫)

வேறு.

வலையவர்முன்றிற்பொங்கிவாளைவாளைபாயச்
சிலையவர்குரம்பையங்கண்மானினஞ்சென்றுசேப்ப
நிலைதிரிந்தூழிநீங்கியுத்தரகுருவுமாகிக்
கொலைகடிந்திவறவின்றிக்கோத்தொழினடாத்துமன்றே.

இ - ள். அவன், முன்றிலிலே வாளைபாயக் குரம்பையிலே மானினந்தங்கக் கொலைகடிந்து மக்கட்குப் பேராசையுமின்றாக நடாத்துமென்க.

இவ்வூழியிலே யுலகந் தன்னிலைதிரிந்து நீங்கி யுத்தரகுருவுமாகவெனத் திரித்து நடாத்துமென்பதனோடு முடிக்க. (உ0௬)

வேறு.

கதங்கனல்யானைநெற்றிக்கட்டியபட்டமேபோன்
மதங்கமழ்கோதையல்குன்மணிக்கிடந்திமைத்துக்காமப்
பதம்பலபார்க்குஞ்சாயற்பாவைமற்றநங்கமாலை
விதம்படக்கருதிமாதர்விளைத்ததுவிளம்பலுற்றேன்.

யானையினெற்றியிற் பட்டம்போலே யல்குலிலே மணிகிடந்திமைக்கப்பட்டுக் காமத்தையுண்டாக்குஞ் செவ்விபலவற்றையும் நோக்கும் பாவை. மதம் - தேன். கோதையையுஞ் சாயலையுமுடைய பாவை. இமைப்பவும் பாடம். பாவையென்றது தேசிகப்பாவையை. மற்று - வினைமாற்று.

இ - ள். அவள் அநங்கமாலை கூற்றிலே தான்படவே யிவற்குக் காதல்விளையுமாகக்கருதிக் காதலைவிளைத்தமை கூறலுற்றேனென்றாரென்க.

என்றது-பதுமையாருடன்கூட வழைத்துக்கோடன்முறைமையன்மையிற் பின்பு அழைக்கக்கருதியிருந்த தேசிகப்பாவை, சீவகன் றன்னிடத்தன்பின்மையிற் றன்னை மறந்தானாகக்கருதித் தானேவந்தவள், சீவகன்கருத்தறியாதே யவன் அநங்கமாலையையுட்கொண்டிருப்பானாகக்கருதி யவடோழி யோலைகொண்டுவந்தாளாக நடித்ததோர் செய்தியைக் கூறுகின்றாரென்றவாறு. *" தானுடைமுல்லையெல்லாந்தாதுகப் பறித்

* காந்தருவதத்தையாரிலம்பகம், ௯௬௪.

திட்டான்" எனவே கட்டியங்காரன் புணர்ந்தமை பெற்றும். அதனாற் பின்னையார் அவனைப் புணர்ந்தாராக மேற்கூறுதல் தேவர்க்குக் கருத்தன்றென்பதுணர்க. (௨௦௭)

வேறு.

ஈர்ந்தண் கோதையிளையார்குழாத்திடையாளெங்கோனடிசேர்வலென்
றூர்ந்தசெந்தாமரைமுகத்தினாளடிகள்வந்தீங்ககன்கடையுளாள்
சார்ந்தசாயற்றடமாமுலைத்தையல்வல்லேவருகென்றான்
சேர்ந்துமன்னர்முடிவைரவிற்றிளைக்குஞ்செம்பொற்செறிகழலினான்.

மன்னர்முடிசேர்தலாலே வைரத்தினொளிதிளைக்குமடியினன்.

இ - ள். அடிகளே! தாமரைமுகத்தினளாகிய கோதை சேடியர் திரளிடத்தாளாய்வந்து எம்மரசனைக் காண்பேனென்று தலைவாயிலிலே நின்றாளென்று வாயிலோனிசைப்ப, அவனும் அவளை விரையவருவாளாக வென்றானென்க.

நாமழைப்பதற்கு முன்னே தேசிகப்பாவைவந்தாளென்றுணர்தலின், வல்லே வருகவென்றான். அன்றி யநங்கமாலையை வல்லேவருக வென்றானாயின், இனி அவள் எக்காலத்துவருவாளென்று அவள்வரவை விரும்பியிருந்தானும்; ஆகவே யவளைத் தீண்டி யொப்பித்தலிற் றனக்குநிகழ்ந்தவேட்கையைக் கட்டியங்காரற்கஞ்சிக் கரந்திருந்து அவன் அவளை வலிதிற்கொண்டு போதற்கும் பொறுத்திருந்தானும்; ஆகலின், அவன் வீரத்திற்குக் குற்றந்தங்குமென்றுணர்க. (௨௦௮)

அருவிலையநன்கலஞ்செய்போர்வையன்னநாணவடியொதுங்கிச்சென்
றுருவமொவ்வாதொசியுநுசுப்பொல்கக்கோமானடிதொழுதபின்
மருவிச்சாயல்மணிமெல்விரல்கூப்பியோலைமரபினீட்ட
விரவியென்னவிளங்குமொளியிறைவன்கொண்டாங்கதுநோக்குமே.

நல்லகலத்தைப் புறத்தேகாட்டும் போர்வை. ஒசியும் - முறியும்.

இ - ள். சாயல், போர்வையுடனே தன்பழையவுருவமொவ்வாதபடி யன்னநாணநடந்துசென்று நுசுப்புவளையும்படி வளைந்து கோமானடியை வணங்கினபின்பு விரலைக்கூப்பி முறைமையாலே யோலையைநீட்ட, அதனை வாங்கிக்கொண்டு வாசிக்குமிறைவனென்க.

இது பெயரெச்சம். (௨௦௯)

௧. அடிகள்கண்டாங்குவந்தருளுகவநங்கமாலையடிவீழ்ச்சிமுன்
கொடியவேலான்கொதிநரங்கினீக்கிக்கோயிற்சிறைவைத்தபின்
கடிசெய்பைந்தார்கமழ்மாலைவேற்கன்றுகம்குச்சிறுவயானிப் [ய.
படியனல்காய்பசுமணிகள்வேய்ந்தோங்கும்பைம்பொற்செறிகழலினை

இதுமுதல் "அறனிழலாய்" என்னுங் கவியளவும் ஓலைப்பாசுரம்.

மாலை - வேலிற்கடை. அனலைக்காயுமணியும், பசுமணியும் வேய்ந்து. (௨௧௦)

௨. என்னநாளுமராற்றப்பொருள்விடுப்பப்போகியினமழைகள்போர்த்
தன்னந்தாஞ்சுமாடிக்குடிலினுள்ளன்றியான்கொண்டாடகத்தினைத

துன்னிநம்பியுருவுதீட்டித்தொங்கல்வேய்ந்துதொழுதாற்றநீ
மன்னர்மன்னமதிதோய்குடையாய்மகளிர்காமமறைந்தொழிதியோ.

துன்னி - துன்ன. தொழுதாற்ற - தொழுதுசெல்ல. மகளிரிடத்திற் காமத்திற் புலப்படாதேயொளித்து அதனைத் தவிர்கின்றாயோ. (௨௧௧)

௩. கண்கடுஞ்சாகதிர்முத்தமேகாலுங்கையார்வளைகழலுமாற், பண்கொள் சொல்லார்மாமைநீக்கிப்பைம்பொன்போர்த்தபடாமுலைகளு, மண்கொள் வேன்மன்னர்நண்பின்மையைவையக்கெல்லாமுடனறையவோ, பெண்களா விவிடுத்தொழிபவோபெரியோர்நண்படைந்தார்பெயர்பவோ.

மன்னர்க்கு நட்பின்மை யுலகுக்கெல்லாஞ் சாற்றவோ. மகளிராவி யவளைக் கைவிட்டுப்போகவமையுமோ. நட்பையடைந்தார் காண்கின்ற பெரியார் பெருமை நின்னைவிட்டுநீங்க வமையுமோ. (௨௧௨)

௪. அறனிழலாயுலகளிக்குநின்றாரமாலையணிவெண்குடைப்
புறனிழலினயலேனோயான்புல்லாமன்னர்நிணம்பொழியும்வேன்
மறனிழன்மதயானையாய்வந்தவென்றோழிவாமலேகை
திறனழியாமையின்னேவிடுத்தருளுகதேர்வேந்தர்வேந்தனே.

அறனிழலாய் - அறத்தினிழலையுடையாய். புறம் - இடம். மறனிழல் - மறத்தினதொளி.

இ-ள். ஓலையைவாங்கிக்கொண்டு வாசிக்குமிறைவன், அடிகள் அநங்கமாலை வணக்கத்தை யாங்குக் கண்டு உவந்தருளுகவென்று அவள்வணக்கத்தை நோக்கி, பின்பு கட்டியங்காரன் கோபித்து அரங்கினின்றுநீக்கிச் சிறைவைத்தபின்பு, சிறுவனே! கழலினாய்! என்று யான் இப்படி நாளுமரற்றப் பொருளாய் அவன் போகவிடப்போய் அடிச்சேரியிலே யிருந்ததன்றி யான் ஆடின நாடகத்தினைத் தான் பார்த்திருக்கின்றானாகத் தன்னுருவென்னவெழுதி வேய்ந்து, மன்னனே! குடையாய்! நீயொழிதியோ? பெயர்பவோ? அறையவோ? ஒழிபவோவென்றுகூறி யவ்வுருவைத் தொழுது யான் செல்லாநிற்கவும், என்கண்கள் துஞ்சாவாய் நீரையேகாலும்; வளை கழலாநிற்கும்; முலைகளும் பசந்தன; இங்ஙனம்வருந்துதற்கு யான் நின்குடையிடத்து நிழலின்நீங்கிய அயலிடத்தேனோ? அல்லேனாதலின், யானையாய்! வேந்தனே! வந்த வென்றோழியாகிய வாமலேகை வருந்தாமற் கூறி யின்னே விடுத்தருளுவாயாக வென்று வாசித்தானென்க.

இவன் அநங்கமாலையை யுட்கொண்டிருப்பானாகக்கருதி யிவர்க்கு அவளெழுதின ஓலைகொண்டு வந்தாளொருதோழியாகத் தேசிகப்பாவை நடித்தாள். இதனாற் றன் வேட்கை யறிவித்தாளாயிற்று. (௨௧௩)

புள்ளும்யாழுங்குழலுமேங்கப்புலந்துவல்லானிழைந்தியற்றிய
பள்ளிச்செம்பொற்படையமளிமேன்மழலைமணியாழ்நாண்வெளவிக்
கொள்ளுந்தீஞ்சொலலங்காரப்பூங்கொடியைப்புல்லிமணிக்குவட்டினை
யெள்ளிவீங்கித்திரண்டதோள்மேற்குழைவில்வீசவிருந்தானே.

புள் - வளை; *"புட்கை போகிய புன்றலை மகார்" என்றார். யாழ் கருதும் மழலைத்தீஞ்சொல்லையுடைய கொடி. பள்ளி - இடம்.

இ - ள். அங்ஙனம் வாசித்தவன், தேசிகப்பாவைநடித்த நிலைக்குமகிழ்ந்து அவள்கையில் வளையும் யாழுங் குழலுமேங்கப் பாட்டைக்கேட்டு அலங்காரத்தையுடைய வல்லியையொப்பாளைத் தன்றோள்மேற்புல்லி, வல்லான் நினைந்து கைசெய்தியற்றிய விடத்தில் அமளிமேலே வீச இருந்தானென்க.

தாளத்தையொற்றுதலின், வளையொலிப்பவென்றார். (௨௧௪)

அங்கைசேப்பக்குருகிரங்கவலங்கலம்பூங்குழறுயல்வர
மங்கைநல்லார்பவளவம்மியரைத்தசாந்தமலர்பெய்மாலை
பொங்குதூமக்கொழுமென்புகைபுரிந்தபஞ்சமுகவாசமுந்
தங்குதாமமார்பினுற்குந்தையலாட்குங்கொண்டேந்தினாரே.

இ - ள். மங்கை யங்கைசேப்ப வளையிரங்கத் துயல்வர அரைத்தசாந்தமுதலியவற்றைச் சீவகற்குந் தேசிகப்பாவைக்கும் நல்லாரேந்தினாரென்க.

கொண்டு - இவர்கள்கூட்டத்தையுட்கொண்டு. தூமம் - தூமமுட்டி; ஆகுபெயர். (௨௧௫)

அருளுமாறென்னையநங்கமாலையடித்திதோழியன்றேவெனத்
தெருளலான்செல்வக்களிமயக்கினாற்றிசைக்குமென்னறிவளக்கியகருதி
மருளிற்சொன்னாய்மறப்பேனோயானின்னையென்னமகிழைங்கணை
யுருளுமுத்தார்முகிழ்முலையினாளுள்ளத்துவகைதோற்றினாளோ.

இ - ள். நீயென்னை யருளுதற்குக் காரணமென்னை? யான் அநங்கமாலையாகிய அடித்தியுடைய தோழியன்றோவென்று அசதியாடிக் கூறினாளாக, அவனும்அதற்கு மறுமொழிகூறுகின்றவன் நாற்றிசைக்கும் என்னறிவை யளந்துகாட்டவேண்டியிவன் செல்வத்தாற்பிறந்த களிமயக்காலே யென்னைத்தெளியானென்று கருதி நின்பேதைமையாலே யிங்ஙனங்கூறினாய்; இந்நடிப்புவேண்டா; யான் நின்னை மறப்பேனோ வென்ன, அவள் உள்ளத்தே யுவகைதோற்றினாளென்க.

மயக்கின், இன் - ஏதுப்பொருட்டு. அறிவை யளந்துகாட்டவெனவே குறிப்பான் அறிவின்மையே யீண்டுக் காட்டிற்று. இனி ஆற்றிசைக்குமென்றுபாடமோதி மயக்கினாற் றெருளானென்றுகருதி நன்னெறியிலே யிசைக்குமென்னறிவை யளக்கியவென்றுமாம். திசைக்குமென்றுபாடமாயின், மயக்கினாற் றிசைக்குந் தெருளானென்க. யான்நின்னை மறப்பேனோவெனவே தேசிகப்பாவையேயாயிற்று. காமனங்கணையைத் தன்னிடத்தேயுடைய தேசிகப்பாவையெனவே வேட்கையைத் தானிகழ்த்துவாளாயிற்று. தோற்றினாளெனச் சினைவினை முதலோடுமுடிந்தது. ()

---

* மலைபடுகடாம்: புட்கை போகிய புன்றலை மகாரொடு - மற்றிடை சுழிதலோம்பி யாறற - நும்மில்புக் கன்ன கல்லளை வதிமி - னற்சேர் தல்கி யசைதலோம்பி - வான்கண் விரிந்த விடியலேற் றெழுந்து - கான்கட் பட்ட செந்நெறிக் கொண்மின்.

முறுவற்றிங்கண்முகவரங்கின்மேன்முரிந்துநீண்டபுருவக்கைக, ணெறியின்வட்டித்துநீண்டவுண்கண்சென்றும்வந்தும்பிறழ்ந்துமாடப், பொறிகொள்பூஞ்சிலம்புமேகலைகளும்புணர்ந்தவின்னியங்களார்ப்பவேந்த, னறியுநாடகங்கண்டான்பைந்தாரலர்ந்துமாதர்கலங்குழைந்ததே.

இ-ள். வேந்தன், சிலம்பும் மேகலையுங்கூடிய வின்னியமார்ப்ப முறுவலையுடையதோர் திங்கள்போலு முகமாகியவரங்கிலே புருவமாகிய கைகளைச்சுற்றிக் கண்களாடத் தான் முன்பு அவளிடத்துக்கண்ட நாடகத்தினை மீட்டுங்கண்டான்; அப்பொழுது அவனலம் அவசமாய் நெகிழ்ந்ததென்க.

நெறியின் - அப்புணர்ச்சிக்காலத்து நிகழுமுறையானே. சென்று - செவியுறச் சென்று. அவன்றொழிலாற் சிலம்பும், அவடொழிலான் மேகலையுமார்ப்ப. அறியு நாடகமெனவே முன்புபுணர்ந்த தேசிகப்பாவை யென்பது பெற்றாம். . (உகஎ)

நான்மருப்பின்மதயானை நறியபைந்தாமரைமடந்தையைத்
தேன்மதர்ப்பத்தினைத்தாங்கவன் றிருவின்சாயலலங்கவர்ந்தபி
னூன்மதர்த்தவொள்வேற்கண் ணார்பரவவிவ்வாறொழுகுமன்றே
வானகத்துநிலத்துமில்லாவண்ணமிக்கமணிப்பூணினான்.

நான்மருப்பென்பது யானையிரண்டினையுணர்த்திற்று. திரு - அழகு. தம்மை நோக்கினாருடம்பு மதர்த்தற்குக் காரணமான கண். வானிலுநிலத்திலு மில்லாதவ னென்றார், பிறன்றாரநச்சாத குணமுண்மையின்.

இ-ள். பூணினான், இரண்டானை பக்கத்தேநின்று நீராச்சொரிய நடுவே தாமரைப்பூவிலேயிருந்த திருமகளைத் தினைத்தாற்போலே யத்தேசிகபபாவை நலத்தை நுகர்ந்தபின்பு, மகளிர்பரவப் பின்பும் அவன் இங்ஙனமொழுகாநிற்குமென்க.

* "வரிநுத லெழில்வேழம் பூநீர்மேற் சொரிதரப் - புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறெய்தித் - திருநயந் திருந்தன்ன" என்றாபிறரும். இனி ஐராவதத்தின்மேலே பொய்கையாயதிற் றாமரையிலே யிருக்குந் திருவென்பாருமுளர். (உகஅ)

வேறு.

நரம்புமீதிறத்தல்செல்லாநல்லிசைமுழவும்யாழு
மிரங்குதீங்குழலுமேங்கக்கிண்கிணிசிலம்பொடார்ப்பப்
பரந்தவாணெடுங்கட்செவ்வாய்த்தேசிநப்பாவைகோல
வரங்கின்மேலாடல்காட்டியரசனைமகிழ்வித்தாளே.

இ-ள். அத்தேசிகப்பாவை, புணர்ச்சியாகிய நாடகமொழிய நரம்பினோசையைத் தப்பாத முழவுமுதலியனவேங்கக் கிண்கிணியுஞ் சிலம்புமார்ப்ப அரங்கின்மேலே கூத்தைக்காட்டி யரசனை மகிழ்வித்தாளென்க.

"இடக்க ணிளியா வலக்கண் குரலா - நடப்பது தோலியற் கருவி யாகும்."
என்றார். (உகக)

* கலித்தொகை, இரண்டாவது குறிஞ்சி, அ.

கடற்படைமன்னர் தம்மைக்காதலின்விடுத்துக்காமன்
றொடுத்தகோன்மார்பிற்றங்கத் தூமலர்க்கொம்பனாளை
வடித்தவின்னமிர்தினைப்பருகலின்மழைக்கட்செவ்வாய்
துடித்துவண்டுண்ணத் தூங்குஞ்செந்தளிரொத்ததன்றே.

விடுத்து - விடுக்க.

இ - ள். கூடவிருந்து நாடகங்கண்டவரசரைக் காதலோடேபோகவிடக் காமனம்பு அவனெஞ்சிலே தங்குதலின், அத்தேசிகப்பாவையை யமிர்துபோலேபருக, அவள் செவ்வாய் துடித்து மழைக்கண் வண்டுண்ணத் தூங்குஞ் செந்தளிரை யொத்ததென்க.

வண்டு - அதரத்தில் வடுவிற்குவமை; இல்பொருளுவமை. இசையுங்கூத்துங் காமத்திற்குத் தீபனமாகலிற் பின் புணர்ச்சிகூறினார். (உஉ०)

இளமையங்கழனிச்சாயலேருழுதெரிபொன்வேலி
வளைமுயங்குருவமென்றோள்வரம்புபோய்வனப்புவித்திக்
கிளைநரம்பிசையுங்கூத்துங்கேழ்த்தெழுந்தீன்றகாம
விளைபயனினிதிற்றுய்த்துவீணைவேந்துறையுமாதோ.

பொன் - ஆகுபெயர். போய் - போக.

இ - ள். பூணுகிய வேலிசூழ்ந்த இளமையாகிய கழனியிலே வீணைவேந்து தன்சாயலாகிய ஏராலேயுழுது தன்வனப்பை வித்துகையினாலே அஃது இசையுங் கூத்துமாக நிறத்தெழுந்து பின்பு ஈன்ற காமமாகிய விளைவின்பயத்தை யவன்றான் இனிதின் நுகர்ந்து உறையாநிற்குமென்க.

தோளாகிய வரம்பு சூழ்போகாநிற்கவுழுதென்க. தனதுசாயலான் விளைந்த அழகைக்கண்டவளவில் காமவேட்கைவிளைவித்தற்குக் கூத்தையும்பாட்டையும் நடத்துதலிற்பிறந்தது காமமென்க. (உஉக)

இலக்கணையாரிலம்பக முற்றிற்று.



ஆ. கவி உ, ருகஎ.



பதின்மூன்றாவது

# முத்தியிலம்பகம்.

---

## விசயமாதேவியார் துறவு.

நீரேந்திநெய்ம்மிதந்துநிணம்வாய்ப்பில்கியழல்விம்மிப்
போரேந்திப்பூவணிந்துபுலவுநாறும்புகழ்வேலோன்
காரேந்திடிமுரசமார்ப்பக்காய்பொற்கலன்சிந்திப
பாரேந்திச்செல்லுநாட்பட்டதாநாம்பகர்வதே.

இ - ள். நெய் மிதநதேகிடக்கப்பட்டுக் கோபத்தீநிறைந்து போர்த்தொழிலை மேற்கொண்டு நிணத்தைவாயினின்றுஞ் சிறுதிவலையாகவிட்டு மண்ணுநீராடிப்பூவைக்கொண்டு வழிபடப்பட்டுப் பின்னும் புலவுநாறுதற்குக் காரணமான வேலையுடையோன், காரேந்தினவிடிபோலுந் தியாகமுரசு முழங்கப் பூண்களை வரையாமற்கொடுத்துப் பாரைக்காத்துச செல்லுநாளிலே, பிறந்ததோர் செய்தி நாம் மேற் கூறுகின்றதென்றாரென்க.

* “வென்ற வாளின் மண்ணோ டொன்ற” என்று உழிஞையிலும், †“மாணார்ச் சுட்டிய வாண்மங் கலமும்” என்றுபாடாண்டிணையிலுங் கூறிய வாளினை வாகைத் திணையிற்கூறாது, ‡ “பெரும்பகை தாங்கும் வேலி னானும்” என்று வேலிற்கே வாகைகூறியது, காவற்றொழில்பூண்ட மாயோனைம்படையும்போலாது அழித்தற்றொழிலோர்க்கேயுரித்தாய் முக்கட்கடவுளும் முருகனுங் கூற்றுமேந்தி வெற்றிபெறுதற்குச் சிறந்ததென்பதுபற்றியெனப் புறத்திணையியலுட் கூறினமையால், ஈண்டும் வேலினைவியந்து மண்ணுநீராட்டின வெற்றியைக் கண்டோர்புகழ்தலிற் புகழ்வேலென்றார். இது கட்டியங்காரன்பட்டபின் பகையரசரைவென்றமை கூறிற்று. (க)

விண்பாற்சுடர்விலக்கிமேகம்போழ்ந்துவிசும்பேந்தி
மண்பாற்றிலகமாய்வான்பூத்தாங்குமணிமல்கிப்
பண்பால்வரிவண்டுந்தேனும்பாடும்பொழிற்பிண்டி
யெண்பாலிகந்துயர்ந்தாற்கிசைந்தகோயிலியன்றதே.

இ - ள். எட்டுக்கன்மங்களினீங்கி யெட்டுக்குணங்களாலுயர்ந்தாற்குப் பொருந்

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், கரு.
† ” ” ” ஙரு.
‡ ” ” ” உக.

தினகோயில், அரசனேவலாலே மேகத்தைப்பிளந்து இருசுடரையும்விலக்கி வான் மீனைப்பூத்தாற்போல மணிகள் மல்குதலாலே விசும்பின்மேலாய் மண்ணிற்கோயில் கட்குத் திலகமாய்ப் பொழிலாகியபிண்டிக்குள்ளே சமைந்ததென்க.

விசும்பு - தேவருலகு. வரி - பாட்டு. (உ)

அடிசிற்கலங்கழீஇக்கருனையார்ந்தவிளவாளை
மடுவின்மதர்த்துணராவாழைத்தண்டிற்பலதுஞ்சு
நெடுநீர்க்கழனிசூழ்நியமஞ்சேர்த்திவிழவயர்ந்து
வடிநீர்நெடுங்கண்ணார்கூத்தும்பாட்டும்வகுத்தாரே.

நியமம் - ஆகுபெயரால் ஊராயிற்று.

இ - ள். மடுவின்கண்ணே யடிசிலாகருங கலங்களைக் கழுவுதலாலே பொரிக் கறியை நுகர்ந்தவாளை செருக்கிக் களையேறவறியாவாய் வாழைத்தண்டின்மேலே பலவுந்துயிலுங் கழனிசூழ்ந்த ஊரை யிறையிலியாகவிட்டுத் திருநாளையுமியற்றிப் பரத்தையருடையகூத்தையும் பாட்டையுமுண்டாக்கினரென்க.

அரசனேவலின் அமைச்சர் இயற்றுவித்தார். (ஈ)

அல்லியரும்பதமுமடகுங்காயுங்குளநெல்லு
நல்லகொழும்பழனுங்கிழங்குந்தந்துநவைதீர்த்தார்க்
கில்லையேகைம்மாறென்றின்பமெல்லாமவர்க்கீந்தாள்
வில்லோன்பெருமாட்டிவிளங்குவேற்கணவ்விசயையே.

விசயை தானையுடன் தனித்துவாராமற் கூடப்போந்தமைபற்றி நவைதீர்த்தா ரென்றார். கைம்மாறில்லையென்றது-அவர்கள் பொருள்கண்மேற் பற்றற்றவராதலின், அவர்செய்தவுதவிக்குத் தன்னாற்செய்யலாமுதவி யின்றென்றுகருதி. தான் கோயில் சமைப்பித்துப் பூசனைசெய்த பயனெல்லாம் அவர்க்கு நீர்பெய்து கொடுத்தாள்.

இ - ள். சச்சந்தன்றேவியாகிய விசயை, அல்லிமுதலிய உணவைத்தந்து நவை தீர்த்தார்க்குக் கைம்மாறில்லையென்று ஈந்தாளென்க. (ச)

தனியேதுயருழந்துதாழ்ந்துவீழ்ந்தசுடுகாட்டு
ளினியாளிடர்நீக்கியேமஞ்சேர்த்தியுயக்கொண்ட
கனியார்மொழியாட்குமயிற்குங்காமர்பதிநல்கி
முனியாதுதான்காணமொய்கொண்மாடத்தெழுதுவித்தாள்.

இ - ள். அருளுடைமையின் எல்லார்க்குமினியாளாகிய விசயை, தன்னிட ரைத்தீர்த்துத் தாயதப்பள்ளியிலேசேர்த்துப் பிழைப்பித்துக்கொண்ட தெய்வத்திற் கும் அஃதுறையுஞ் சுடுகாட்டிலே கோயிலியற்றி மயிற்கும் எழுதுவித்தலைச்செய்தா ளென்க.

விசயை தனித்துவருத்தமுறுகையினாலே, பையப்பையவீழ்ந்த மயிற்குந் தானி ருக்கின்ற மாடத்தே தானெப்பொழுதுங் காணும்படி யெழுதுவித்தலைச் செய்தா ளென்க. மயிற்குமென்னுகான்காவது அச்சிறப்பைக் கொடுத்தாளென்பதனோடு முடியும். உம்மையிரண்டுஞ் சிறப்பு. (ரு)

[விசயமாதேவியார்துறவு.]

அண்ணல்பிறந்தாங்கைஞ்ஞூற்றைறவர்க்களந்தான்பால்
வண்ணச்சுவையமுதம்வைகநாளுங்கோவிந்தன்
வெண்ணெயுருக்கிநெய்வெள்ளமாகச்சொரிந்தூட்டப்
பண்ணிப்பரிவகன்றாள்பைந்தார்வேந்தற்பயந்தாளே.

தோழர் ஐஞ்ஞூற்றுநால்வர்களுஞ் சீவகனுக்குமாக ஐஞ்ஞூற்றைந்துபிள்ளைகளுக்குப் பாலளந்து. வண்ணவமுதம் - பருப்புச்சோறு. கோவிந்தன் - நந்தகோன்.

இ - ள். விசயை, சீவகன்பிறந்தவிடஞ் சுடுகாடாகக் கிடவாதபடி சாலையாக்கிக் கோவிந்தன் அதற்குரியனாய் நின்று நாடோறும் பிள்ளைப்பாலுமளந்து நெய்யைச்சொரிந்து அமுதத்தையுமூட்டப்பண்ணி அவ்வறம் வைகுதையினாலே பரிவையகன்றாளென்க.

பரிவு - இவ்விடத்துக் கூறியனவெல்லாஞ் செய்துமுடிக்கவேண்டுமென்று நினைத்திருந்த வருத்தம் (க)

தோடார்புனைகோதைசுநந்தைசேர்ந்துதொழுதாளைப்
பீடார்பெருஞ்சிறுவர்ப்பயந்தீர்வம்மினெனப்புல்லி
நாடார்புகழாளைநாணமொழிகள்பலகூறிக்
கோடாக்குருகுருவத்தைவிளக்கிட்டாளைவிளக்கினாள்.

புகழாள் - விசயை. ஐ - அசை. விளக்கிட்டாள் - சுநந்தை. இது சுட்டுப்பெயராம்.

இ - ள். விசயையைச்சேர்ந்து சுநந்தை கோதை கையாற்றொழுதாளை யவ்விசயை புல்லிக்கொண்டு பின்னும் அவளைச் சிறுவர்ப்பயந்தீர்! அணித்தாகவம்மினென நாணமுடையமொழிகள் பலகூறி விளக்கினாளென்க.

உலகம் பெருமைநிறைதற்குக் காரணமான சிறுவனை மீட்டும் நீர் பயந்திராதவின் என்னினு நல்வினையுடையீரென்றலின் இதுநாணமொழியாயிற்று. இவளே யிவ்வுலகைப் பிழைப்பித்தாளென்றலின், விளக்கினாளுமாயிற்று. (எ)

மறையொன்றுரைப்பனபோன்மலர்ந்துநீண்டுசெவிவாய்வைத்
துறைகின்றவேலரிக்கணுருவக்கொம்பினெண்மரு
மிறைவியடிபணியவெடுத்துப்புல்லியுலகாளுஞ்
சிறுவர்ப்பயந்திறைவற்றெளிவீரென்றாடிருவன்னாள்.

இ - ள். மலர்ந்து நீண்டு ஒருமறைமொழி கூறுவனபோலச் செவியிடத்தே வாய்வைத்து உறைகின்ற கண்ணிணையுடையவெண்மரும் விசயையடியைக் கொம்பு பணிந்தாற்போலப் பணிய, அவள் அவரையெடுத்துக்கொண்டு புல்லிச் சிறுவரைப்பயந்து தெளிமினென்றாளென்க.

எனவே யிருமைக்கும் பயன்கூறினாளென்க. இறைவன்-சருவக்ஞயன். முன்பு திருவையொப்பாள். சிறுவரில் நால்வர் உலகாளுதற்குரியரன்றேனுந் தங்குலத்தொ

ழிற்கேற்ப உலகாளுதற்குரியரென்பதுபற்றி யுலகாளுஞ் சிறுவரென்றாள். *"மெய் தெரி வகையி னெண்வகை யுணவின்" எனவும், †"கண்ணியுந் தாரு மெண்ணின ராண்டே" எனவும் ஆசிரியர்கூறினமையிற் றங்குலத்துக்குரிய உழுது பயன்கோடலும், அரசன்கொடுத்த சிறப்புக்களுமன்றித் தன்புதல்வராதலின் அரசாட்சிமுதலியன கொடுப்ப அவர்தாமுந் தம்வழித்தோன்றினோரும் ஆள்வரென்றுணர்க. உலகென்னுஞ்சொல் மண்ணுலகமுழுதுமேயன்றித் தன்கட்கூறுபட்ட நிலங்களையுமுணர்த்துமென்பது ‡"மாயோன் மேய காடுறை யுலகமும்" என்னுஞ் சூத்திரத்தானுணர்க.

பொங்குமணிமுடிமேற்பொலிந்தெண்கோதைத்தொகையாகிக
கங்குற்கனவகத்தேகண்ணுட்டோன்றிவந்தீர்நீ
ரெங்கும்பிரியற்பீரென்னாக்கண்கண்மலர்ந்திருந்து
கொங்குணறும்பைந்தார்க்கோமானிங்கேவருகென்றாள்.

இ - ள். என்றுகூறியவள், நீர் கங்குற்கனவிடத்தே முடிமேலே யெட்டுப்பூமாலைத்திரளாய்ப் பொலிந்துதோன்றிவந்தீர்; இவ்வாறுவந்தநீர் மேலும் எவ்விடத்தும் என்னைப்பிரியற்பீராகவென்று கூறி யுடம்புமுழுதுங்கண்ணாயிருந்து பின்னர்ச் சீவகனை யிவ்விடத்தே வருவாயாகவென்றாளென்க.

முன்னர் "இறைவற்றெளிவீர்" என்றும், ஈண்டுப் பிரியற்பீரென்றுங்கூறினமையாற் பின்னர் என்னிடத்தேவந்து துறப்பீராக வென்றாளாயிற்று. (கூ)

சிங்கநடப்பதுபோற்சேர்ந்துபூத்தூய்ப்பலர்வாழ்த்தத்
தங்காவிருப்பிற்றம்பெருமான்பாதமுடிதீட்டி
யெங்கோபணியென்னாவஞ்சாநடுங்காவிருவிற்கட்
பொங்கவிடுதவிசிலிருந்தான்போரேறனையானே.

இ - ள். ஏறனையான் அதுகேட்டுப் பலரேத்தச் சிங்கநடப்பதுபோல நடந்து சென்று முதற் பூவைத்தூவிப் பின்னர் விசையையடியிலே தன்முடியைத்தீண்டுவித்து இருத்தற்கஞ்சி மெய்ந்நடுங்கி யெனக்கு ஒல்லும்பணியுடை யினி யெவ்விடத்தே யென்று வினாய் இரண்டு விற்கிடைநீளம் அகலவிட்ட தவிசின்மேலே யிருந்தானென்க.

பெருமான், னஃகானொற்று மகடூஉவுணாத்திற்று. இவள்கூறிய வரமெல்லாந் தான்செய்து முடித்தலின், இன்னும் அவையுளவோவென்பதுதோன்ற எங்கோபணி யென்றான். (க0)

வேறு.

கொற்றவிமகனைநோக்கிக்கூறினளொன்பதுங்கோக்
குற்றதுபிறர்கள்கூறவுணர்ந்தனையாயினாறு

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், எஅ.
† ,, ,, ,, எகூ.
‡ ,, ,, அகத்திணையியல், ரு.

[விசயமாதேவியார்துறவு.]

மிற்றெனவுரைப்பக்கேண்மோவிலங்குபூண்லங்கன்மார்பிற்
செற்றவர்ச்செகுத்தவேற்சீவகசாமியென்றாள்.

உணர்ந்தனை என்பவெனமாறுக. ஆயினுமென்புழி, ஆன் - சாரியை.

இ - ள். அங்ஙனமிருந்த மகனைநோக்கித் தேவி யொருமொழிகூறினாள்; அஃ தியாதெனின், சீவகசாமி! நுந்தந்தைக்குற்றதீங்கு பிறர்கூற வறிந்தாயென்று சொல் லுவார்களாயினும் யான் இத்தன்மைத்தென்று கூறக் கேட்பாயாகவென்று கூறினா ளென்க.

சாமியென்னுமொருமை நும்மென்னும் பன்மையோடுமயங்கிற்று. பூணினை யம், மார்பினையம், கட்டியங்காரனையும் ஒழிந்தோரையும்வென்ற வேலினையுமுடைய சீவகசாமியென்க. (கக)

க. நாகத்தால்விழுங்கப்பட்டநகைமதிக்கடவுள்போலப்
போகத்தால்விழுங்கப்பட்டுப்புறப்படான்புன்சொனா
னாகத்தானமைச்சர்நுண்ணூற்றோட்டியாலழுத்திவெல்லும்
பாகர்க்குந்தொடக்கநில்லாப்பகடுபோற்பொங்கியிட்டான். (கஉ)

உ. நுல்மதிபோன்றுதோன்றநுணுகியநுசுப்பினார்தங்
கண்வலைப்பட்டபோழ்தேகடுங்கையரவோடொக்கும
பெண்மையைப்பெண்மையென்னார்பேருணர்வுடையநீரா
ரண்ணலைத்தெருட்டநேற்றதமைச்சருமகன்றுவிட்டார். (கங)

ங. கற்சிறையழித்துவெள்ளங்கடற்கவாயாங்குக்கற்றோர்
சொற்சிறையழித்துவேந்தன்றனைமுலைதுறத்தல்செய்யான்
விற்சிறைகொண்டபோலும்புருவத்துவிளங்குவேற்க
ணற்சிறைப்பட்டுநாடுநகரமுங்காவல்விட்டான். (கச)

ச. பிளிறுழும்மதத்தயானைப்பெருமகன்பிழைப்புநாடிக்
களிறுமென்றுமிழப்பட்டகவளம்போற்றகர்ந்துநில்லா
தொளிறுவேற்சுற்றமெல்லாமுடைந்தபினொருவனான்
வெளிறுமுனைவித்திடப்பின்னைப்பச்சிரம்விளைதலாமோ. (கரு)

ரு. மனைசலக்குயவனாணின்மன்னனாயறுந்துமுற்றிக்
கனைகுரலுருமினார்ப்பக்காவலனின்னைவேண்டி
வினைமயிறபொறியினைம்மனைப்போக்கிவிண்விரும்பப்புக்கான்
புனைமுடிவேந்தபோலப்போற்றெனமயங்கிவீழ்ந்தான்.

இவையைந்துமொருதொடர்.

இ - ள். அங்ஙனங்கூறுகின்றாள், பாம்பாலே தனதொளிமறைக்கப்பட்ட மதி யைப்போலப் போகத்தாலே தனதொளிமறைக்கப்பட்டுப் புறப்படானைக் காமத் தாற் கெட்டானென்று பிறர்கூறும் புன்சொற்குநாணுக. அதுகண்டு இத்தீங்கைத்

தம்மறிவாலே வெல்லும் அமைச்சர், இங்ஙனநுண்ணியநுசுப்பினார்தம் கண்வலைப் பட்ட பொழுதே அது பாம்புபோற் கொல்லுமென்றுகருதி, அண்ணலைப் பேருணர் வுடையீரார் பெண்மையைப் பெண்மையென்றார்காணென்றுகூறிப் பின்னும் நுண் ணூற்றோட்டியாலழுத்தித் தெருட்டிடுதலைத் தானுட்கொண்டு தன்னெஞ்சைத் தெ ளிவியாதே வேந்தன் துணைமுலையைத் துறத்தல்செய்யானாய் வில்லைச் சிறைசெய்து வைத்தாற்போலும் புருவத்திடத்தே விளங்குங் கண்ணாகிய தப்பாதசிறையிலே யகப் பட்டுத் தீவினையாலே கூரியவறிவுபோன்றுதோன்றி நாட்டையுநகரத்தையுந் தான் காத்தலைக்கைவிட்டுக் கட்டியங்காரன்கையிலே கொடுத்துப் பாகாதொடக்கவும் அவ ர்க்கு நில்லாத பகடுபோலே பொங்கியிட்டானாக, அதுகண்டவமைச்சரும் நீங்கிப்போ யினார்; அவர்போக அப்பெருமகன் வெள்ளங்கற்சிறையழித்துக் கடற்செல்ல அவாவி யாங்குக் கற்றோர் சொற்சிறையழித்துப் பிழைத்தபிழைப்பைச் சுற்றமெல்லாநோக்கி அரசனுழைநில்லாதே கவளம்போற் சிதறியுடைந்துபோனபின் தானொருவனுமேயா யினான்; அதனைக் கட்டியங்காரனுணர்ந்து குயவனாண்போலே மன்னனைக்கீழறுத்து அவர் தன்சுற்றத்தாரானபின் வந்துசூழ்ந்தார்ப்ப, அரசன் நின்னை யான்பெறவேண்டி யென்னை மயிற்பொறியிற்போக்கித் தான் றுறக்கம்புக்கான். அந்நிலை யவற்குவந்தது, தீவினையைவித்திவைத்து அதற்குப்பின்னை நல்வினையாக விளைவிக்கலாமையிற்காண். வேந்தனே! நீயும் இத்தன்மைத்தாகிய காமத்தினைப்போற்றுவாயாக; இனி யான்றுறத் தற்குப் போவலென்றுகூற, அவனும் அதுகேட்டு மயங்கி வீழ்ந்தானென்க.

வெளிறுவித்தி வச்சிரம்விளைத்தல் - அமணக்குநட்டு ஆச்சாவாக்கலாகாதென் னும் பழமொழி. (கசு)

க. சீதநீர்தெளித்துச்செம்பொற்றிருந்துசாந்தாற்றிதம்மான்
மாதரார்பலரும்வீசவார்ந்தெழுசிங்கம்போலப்
போதொடுகலங்கள்சோரவெழுந்துபொன்னாரமார்பன்
யாதெனக்கடிகண்முன்னேயருளியதென்னச்சொன்னாள். (கஎ)

உ. பிறந்துநாம்பெற்றவாறுளித்துணையென்பதொன்று
மறிந்திலம்வாழ்துமென்னுமவாவினுளழுந்துகின்றாங்
கறந்துகூற்றுண்ணுஞான்றுகண்புதைத்திரங்கினல்லா
லிறந்தநாள்யாவர்மீட்பாரிற்றெனப்பெயர்க்கலாமோ. (கஅ)

ங. சுவைத்தயிர்வேய்ந்தசோற்றிற்றுய்த்தினிதாநம்மை
யமைத்தநாளென்னுநாகம்விழுங்கப்பட்டதனைநங்க
ணிமைத்தகண்விழித்தலின்றியிறந்துபாடெய்துகின்றா
முமைத்துழிச்சொறியப்பெற்றாற்றியம்பெரிதும்பெற்றாம. ()

ச. கடுவெளிபுடைக்கப்பட்டகளமழைக்குழாத்தினும்
விடுவினைபுடைக்கப்பாறிவீற்றுவீற்றுயினல்லா
லுடலுறைபழக்கமில்லையொழிமதியத்தைகாதல்
வடுவுடைத்தென்றுபின்னுமாபெருந்தேவிசொன்னாள்.

இவைநான்குமொருதொடர்.

இ - ள். அங்ஙனம்வீழ்ந்த ஆரமார்பன் மாதரார்பலரும் பனிநீரைத்தெளித்துச

[விசயமாதேவியார்துறவு.]

சாந்தாற்றியால் வீசுதலாலே துயில்கொண்டெழுகின்ற சிங்கம்போலப் போதுங்கலமுஞ்சோர வெழுந்து எனக்கு அடிகள் முன்பு அருளிச்செய்ததியாது? அதனை இப்பொழுது அருளிச்செய்யுமென்று கேட்க, அவளும், வாழ்துமென்னும் அவாவினுள் அழுந்தாநின்றாம்; அங்ஙனமழுந்துகின்றநாம் பிறந்துஅறுதியாகப் பெற்றவாணாள் இவ்வளவென்பது சிறிதுமறிந்திலம்; அதனை நம்வாழ்வு இத்தன்மைத்தென அறியக்கூறிக் கூற்றுக் கறந்து உயிரையுண்ணும் அன்று இப்பிறப்பினைத் தப்புதற்குத் தவஞ்செய்யப் பெற்றிலேமேயென்று வருந்திவிடுத்தலல்லது அதனைச் செய்தற்குக் கழிந்த நாளை மீட்கவல்லாரொருவருமில்லை; அது நம்மால் மீட்கலாகாது; அக்கூற்று ஏவிய காலமென்னும்பாம்பு குறைவறச்சமைத்த கட்டித்தயிரால் வேய்ந்த சோறுபோலே நம்மை யினிதாகவைத்து நுகர்ந்து பின்னர் ஒன்றாகவிழுங்கப்பட்டு இறந்துபாடெய்துகின்றநாம் இப்பொழுது அவ்விறந்துபாட்டினுடைய வழிகியவிடத்தே யிருந்துமுன்புசெய்த நல்வினையாலே தினவுகின்றவிடத்தே சொறியப் பெற்றாமாதலிற் பெரிதும் ஊதியம்பெற்றாம்; இங்ஙனமிடம் பெற்றகாலத்துத் தவஞ்செய்யாதே நாமுஞ் சுற்றத்தின்மேல் நிகழ்கின்ற காதலைவிரும்புவேமாயின், அக்காதல் வடுவுடைத்து; அஃதென்னையெனிற் காற்றடிக்கப்பட்ட மழைக்குழாஞ் சிதறுமாறுபோலச் சிதறிவிடுதற்குக்காரணமான தீவினை சிதறவடிக்கப்பட்டுச் சுற்றமெல்லாம் வெவ்வேறாய்ப் போவதல்லது கூடவுறையும் பழக்கம் அதற்கில்லை; ஆதலால் எம்மிடத்துக் காதலை நீயுமொழிவாயாகவென்று சொன்னாள்; இங்ஙனஞ் சொல்லிப் பின்னுந் தேவி சில அறவுரைசொன்னாளென்க.

ஈண்டு உமைத்தூழிச் சொறியப்பெற்றாமென்பது-விழுங்குதற்கு வாய்க்கொண்ட காலஞ் சிறிதுபொழுது விழுங்காதிருக்கவும்பெற்றேமாதலின், ஈண்டுத் தவஞ்செய்து கோடுமெனவெழுந்த மனவெழுச்சிக்கண்ணே யதனை முற்றமுடித்துக் கொள்ளப் பெற்றேமென்றவாறாம். என்றுசொன்னாளெனச் சீதநீரென்ற கவியோடு கூட்டுக. மதி, அத்தை, இரண்டுமசை. (௨0)

வேறு.

௧. முருந்தனைய துமுறுவல்முற்றிழையார்சேரி
யிருந்திளமைக்கள்ளுண்டிடை தெரிதலின்றிக்
கருந்தலைகள்வெண்டலைகளாய்க்கழியாமுன்னே
யருந்தவமுந்தானமுமாற்றுமினோகண்டீர். (௨௧)

௨. உடற்றும்பிணித்தீயுடம்பினுயிர்பெய்திட்
டடுத்துணர்வுநெய்யாகவாற்றறவைபாகக்
குடித்துண்ணுங்கூற்றங்குடில்பிரியாமுன்னே
கொடுத்துண்மின்கண்டீர்குணம்புரிமின்கண்டீர். (௨௨)

௩. உழந்தாலும்புத்தச்சொன்றிட்டோர்தமேற்று
திழந்தார்பலராலிடும்பைநீர்யாற்று
ளழுந்துமாலப்பண்டியச்சிறுமுன்னே
தொளுஞ்சீலங்கூலியாக்கொண்டோர்மின்பாகீர். (௨௩)

பிறந்தவர்களெல்லாமவாப்பெரியராகித்
துறந்துபுகழ்வேண்டாரோர்துற்றவிழுமியா
ரறங்கரிதுசேய்த்தென்பதியாதுமறியாரேல்
வெறும்பொருளதம்மாவிடுத்திடுமினென்றான். (உச)

வேறு.

ரு. முல்லைமுகைசொரிந்தாற்போன்றினியபாலடிசின்மகளிரேந்த
நல்லகருனையாளுள்வாயும்பொற்கலத்துநயந்துண்டார்க
ளல்லலடையவடகிடுமினோட்டகத்தென்றயில்வார்க்கண்டுஞ்
செல்வநமரங்காணினையன்மின்செய்தவமேநினைமின்கண்டீர். (உரு)

சு. அம்பொற்கலத்துளடிபாலமர்ந்துண்ணுவரிவையந்தோ
வெம்பிப்பசிநலியவெவ்வினையின்வேறாயோரகல்கையேந்திக்
கொம்பிற்கொளவொசிந்துபிச்சையெனக்கூறிநிற்பாட்கண்டு
நம்பன்மின்செல்வநமரங்காணல்லறமேநினைமின்கண்டீர். (உசு)

எ. வண்ணத்துகிலுடுப்பின்வாய்விட்டழுவதுபோல்வருந்துமல்கு
னண்ணுச்சிறுகூறைபாகமோர்கைபாகமுடுத்துநாளு
மண்ணுந்தடகுரீஇயந்தோவினையேயென்றழுவாட்கண்டு
நணணன்மின்செல்வநமரங்காணல்லறமேநினைமின்கண்டீர். (உஎ)

அ. மைதிரண்டவார்குழன்மேல்வண்டார்ப்பமல்லிகைமென்மாலைசூடி
கைதிரண்டவேலேந்திக்காமன்போற்காரிகையார்மருள்ச்சென்றா[க்
ரைதிரண்டுகண்டங்குரைப்பவோர்தண்டூன்றியறிவிற்றள்ளி
நெய்திரண்டாற்போலுமிழ்ந்துநிற்குமிளமையோநிலையாதேகாண்.

இவையெட்டுமொருதொடர்.

க. இ-ள். மகளிர்சேர்ந்தவிடத்தே யிருந்து இளமையாகிய கள்ளையுண்டு அற முதலியவற்றையறிதலின்றிப் பயன்படாமன் மூப்பதற்குமுன்பே யிளமைப்பருவத்தே தவமுந் தானமுநிகழ்த்துமினென்றுசொன்னனென்க.

கண்டீரென்றது வினவொடுசிவணுதுநின்றதோரசை.

உ. இ-ள். வருத்துகின்ற நோயாகிய தீயையுடைய வுடம்பினுயிரைச் சோறாக முன்னேபெய்துகொண்டு உணர்வை நெய்யாகக்கூட்டி ஆற்றலைத் துவையாகக் குடித்து அதனை யுண்ணுங்கூற்றம் உடம்பை நிலைகுலைப்பதற்குமுன்னே கொடுத்துண்மின்; நற்குணத்தை விரும்புமினென்று சொன்னனென்க.

உயிர்போவதற்குமுன்னே உணர்வும், ஆற்றலுந் தேய்தலியல்பு.

௩. இ-ள். உடம்பாகிய சகடத்தை நடத்தும்பாகீர், அச்சகடந் தொழில் செய்துவருந்திப் பழகினாலும் புதியதோருயிராகிய அச்சைக்கொண்வேந்திட்டு ஊர்த லொண்ணாதாகலான், அச்சகடத்தைத் தனக்கடைத்த காலமுள்ளவளவுஞ்செலுத்திப்

[விசயமாதேவியார்துறவு.]

பின்னரிழந்தார் பலர்; இனி யங்ஙனமன்றித் தனக்கடைத்த காலத்திற்குநடுவேயுந் தீவினைமிகுதியால் உள்ளதாகிய விடும்பையாகிய நீரையுடைய ஆற்றிலே அச்சக டமழுந்தாநிற்கும்; அங்ஙனமழுந்தி யஃது • உயிராகிய அச்சுமுறிவதற்குமுன்னே யதனாற் கோடற்குரிய சீலத்தை நமக்குப் பெறுபயனாகக்கொண்டு அதனைச் செலுத் துமினென்று சொன்னாளென்க.

௪. இ-ள். பிறந்தமக்களெல்லாம் அவாப்பெரியராய்ப் புகழைவேண்டாராய் அதனைத் துறந்து தூற்றப்படுவதோர் அவிழையுமீயாராய் அறம் இத்தன்மைத்தென் பது சிறிதுமறியாராயின், அந்தஅவாப் பயனில்பொருளாம்; அதனைக் கைவிட்டுப் போகடுமினென்று சொன்னாளென்க.

அம்மா - ஐயோவென்னும் இரக்கக்குறிப்பு.

௫. இ-ள். முல்லைமுகையைச் சொரிந்தாற்போன்று மெல்லியதாய் இனிய வடிசிலை மகளிரொடுக்க, அதனைவிரும்பிப் பொரிக்கறி கருவியாகப் பொற்கலத்தே நாடோறுமுண்டவர் தீவினைசேர இவ்வோட்டகத்தே யடகையிடுமினென்றுகூறி யிர ந்துண்பாரைக் கண்டுவைத்துஞ் செல்வத்தைநினையன்மின்; நமரங்காள்! செய்கின்ற தவத்தையே நன்றாக நினைமினென்று சொன்னாளென்க.

அம் - அசை.

௬. இ-ள். அடுபாலை மனம்பொருந்திப் பொற்கலத்திலுண்ணாத வரசன்றேவி, ஐயோ! தீவினையான் முன்னின்றதன்மை வேறுபட்டுப் பசிவெம்பி நலிகையாலே ஓரகலைக் கையிலேந்திக் கொம்புபோலநடுங்கிப் பிச்சையிடுமினென்றுகூறி நிற்பா ளைக்கண்டுவைத்துஞ் செல்வத்தை நச்சன்மின்; நமரங்காள்! அறத்தையே நச்சுமி னென்றாளென்க.

௭. இ-ள். துகிலையுடுப்பின் அழுவதுபோல் வருந்துமல்குலிலே பிறரணு காத அருவருக்குஞ் சிறுகூறை யொருபாகமும் ஒருகை யொருபாகமுமாக வுடுத்து மேனோக்கி யடகையுருவி யதனை யிடுவதொன்றின்மையான், ஐயோ! வினையே! நீ என்செய்தாயென்றுகூறி நாடோறும் அழுவாளைக் கண்டுவைத்தும், நமரங்காள்! செல் வத்தை நணுகன்மின்; தவத்தைநணுகுமினென்றுசொன்னாளென்க.

இதுகாறும் பொதுவாகக் கூறினாள்.

௮. இ-ள். தம்மை யறிவிடத்தினின்றுந் தாமேநீக்கிக் குழலிலே மாலையை யார்ப்பச்சூடி யேந்திக் காரிகையாமருளக் காமன்போற்சென்றார் பின்பு ஐந்திரண்டு இருமுதலாலே யுமிழ்ந்து தண்டையூன்றிநிற்றற்குக் காரணமான இளமை நிலையாது காணென்று சொன்னாளென்க.

கை - காம்பு. இது சீவகனை நோக்கிக்கூறினாள்.

அறவுரைகூறினாள் எங்ஙனங்கூறினாளெனின், இங்ஙனமிங்ஙனங் கூறினாளென எல்லாவற்றோடுங் கூட்டுக. (௨௮)

வேறு.

என்றலுஞ்சுநந்தைசொல்லுமிறைவிதான் கண்டதையா
நன்றுமஃதாகவன்றேயாயினுமாகயானு

மொன்றினன்றுறப்பலென்னவொள்ளெரிதவழ்ந்தவெண்ணெய்க்
குன்றுபோல்யாதுமின்றிக்குழைந்துமெய்ம்மறந்துநின்றான்.

இ - ள். இறைவி யிங்ஙனங்கூறினவளவிலே, அதனைத் தனக்கு உறுதியாகக் கருதி யொருமொழிகூறுஞ்சுநந்தை, ஐயனே! இவள்கருதியகாரியம் நன்றாயினுமாக; தீதாயினுமாக; அதனை யானும்பொருந்தினேன்; இனித் துறப்பேனென்றுகூற, அது கேட்டுச் சீவகன் எரிதவழ்ந்த வெண்ணெய்க்குன்றுபோலவுருகி மறுத்துச்சொல்லுஞ் சொல் சிறிதுமின்றி நின்றானென்க.

கந்துக்கடன் முன்னேயிறத்தலிற் சுநந்தையைத் துறவுவிலக்கிக்கூறுதல் அற னன்றென்று கருதுதலின், மறுக்குஞ்சொல் யாதுமின்றி நின்றானென்க, கந்துக் கடனிறந்தமை இத்தொடர்நிலைச்செய்யுளுட் டேவர்கூறிற்றிலர், தகுதியன்றென்று கருதி; துறவால் உய்த்துணரவைத்தார். (உக)

வேறு.

ஓருயிரொழித்திரண்டுடம்புபோவபோ
லாரியனொழியவங்கௌவைமார்கடாஞ்
சீரியதுறவொடுசிவிகையேறினார்
மாரியின்மடந்தைமார்கண்கம்வார்ந்தவே.

இ - ள். உடம்பையொழித்து உயிர்போமாறன்றி யோருயிரைக்கைவிட்டு இர ண்டுடம்புபோந்தன்மைபோலே சீவகனிருப்பத் தாய்மாரிருவரும் முன்பு தாநின்ற நோன்பிற் சீரிதாகிய துறவையுட்கொண்டு சிவிகையிலே யேறிப்போயினார்; அங் கிருந்த தேவிமார்கள் கண்கள் மாரிபோல நீர்வடிந்தனவென்க. (௩0)

நன்மயிற்பொறியின்மேற்போயநாளினும்
புன்மையுற்றழுகுரன்மயங்கிப்பூட்பரிந்
தின்நகர்கால்பொருகடலினெங்கணு
மன்னனிலாகுலமயங்கிற்றென்பவே.

இ - ள். இந்நகரெவ்விடமுஞ் சச்சந்தன்பட்டநாளினுங்காட்டிற் புன்மையுற் றுப் பூப்பரிந்து கால்பொருகடல்போலே யழுகிறகுரல்மயங்கிப் பின்னர்ச் சீவகனைப் போலே கையறவிலே மயங்கிற்றென்க.

என்ப - அசை. (௩க)

அழுதுபின்னணிநகர்செல்லவாயிரந்
தொழுதகுசிவிகைகள்சூழப்போயபி
னிழுதமையெரிசுடர்விளக்கிட்டன்னவள்
பழுதில்சீர்ப்*பம்மைதன்பள்ளிநண்ணினாள்.

சுடர்-ஒளி. விளக்கிட்டன்னவளாகிய பம்மை; என்றது-பிறப்பாகிய இருளைப் போக்கி வீடாகியவொளியைப் பரப்புதற்குஉரியளென்றவாறு.

---

* பம்மை - பத்மை.

[விசயமாதேவியார்துறவு.]

இ - ள். நகர் பின்னேயழுதுசெல்லத் தன்னைத் தொழத்தக்க சிவிகைகள் ஆயிரஞ்சூழத் தான்சென்று பம்மையிருக்கின்ற பள்ளியைச் சேர்ந்தாளென்க.

ஆயிரஞ் சிவிகையிற்போகிய மகளிருந் துறப்பதற்கு ஒருப்பட்டுப் போயினு ரென்றுணர்க. (௩உ)

அருந்தவக்கொடிக்குழாஞ்சூழவல்லிபோ
லிருந்தறம்பகர்வுழியிழிந்துகைதொழு
தொருங்கெமையுயக்கொண்மினடிகளென்றனள்
கருங்கயனெடுந்தடங்கண்ணியென்பவே.

இ - ள். அவள் தவத்தினையுடைய மகளிர்திரளாகிய புறவிதழ் சூழ்ந்திருப்பத் தான் நடுவே யல்லிபோலவிருந்து அறங்கூறுகின்றவிடத்தே தேவியிழிந்து சென்று கைதொழுது, அடிகளே! எம்மையெல்லாஞ் சேரப் பிறவிக்கடலினின்றுங் கரையேற்றுவீராகவென்றாளென்க.

முன்பு கயல்போலுங் கண். (௩௩)

வேறு.

ஆரழன் முளரியன் னவருந் தவமரிதுதானஞ்
சீர்கெழுநிலத்துவித்திச்சீலநீர்கொடுப்பிற்றீந்தேன்
பார்கெழுநிலத்துறைப்பல்புகழீன்றுபின்றைத்
தார்கெழுதேவரின்பந்தையலாய்விளைக்குமென்றாள்.

முளரி - விறகு. தீந்தேனையுடைய தார்.

இ - ள். தையலாய்! அருந்தவம் முளரியிலழல்போலக் கொடியவாதலால், நினக்கு மேற்கோடலரிது; அதனைக் கைவிட்டுத் தானத்தினை யைம்பொறியும்வென்று அவாவற்றவிடத்தேவித்தி யதுமுளைக்கும்படி சீலமாகியநீரை யெப்பொழுதுங் கொடுப்பின், அஃது உத்தரகுருவிலேமுளைத்துப் புகழையீன்று பின்பு தேவரின்பத்தை விளைத்துவிடுமென்று கூறினாளென்க.

தானப்பயனாற் போகபூமியிலேபிறந்து ஆங்குள்ள நுகர்ச்சியையெய்திப் பின் துறக்கம்பெறுமென்றாள். (௩௪)

அறவுரைபின்னைக்கேட்டுமடிகண்மற்றெமக்குவல்லே
துறவுதந்தருளுசென்னத்தூநகரிழைத்துமேலா
னறவிரிதாமநாற்றிவானகம்விதானித்தாய்ந்து
திறவிதிற்றவிசுதூபந்திருச்சுடர்விளக்கிட்டாரே.

இ - ள். தேவி யதனைக்கேட்டு, அடிகளே! அறவுரை பின்னைக்கேட்டும்; இப்பொழுது துறத்தலைத் தந்தருளுவீராகவென்ன, ஆங்குள்ள தவமகளிரும் துறவுக்குச் செய்வனவற்றை யாராய்ந்து நகரைக் கோலத்தைச்செய்து தாமத்தைநாற்றி வானகத்தை மேலே விதானித்து நன்றாகத் தவிசையுந் தூபத்தையும் விளக்கையுமிட்டாரென்க. (௩௫)

வேறு.

பால்நுரைச்சிறடிகழுவிப்பைந்துகி
லூலினுலியன்றனநுனித்தவெண்மைய
காலனைக்கண்புதைத்தாங்குவெம்முலை
மேல்வளாய்வீக்கினார்விரியமின்னனலே.

மெல்லிதாகநூற்ற வெண்மையுடையநூல்; எனவே பட்டாகாதாயிற்று. முன்பு காலனைக் கண்புதைத்தாற்போல வெவ்வியமுலை கண்புதைத்தல் - அவன்சொலைத் தொழிலை மாற்றுவித்தல்.

இ - ள். அவற்றையிட்டபின் ஆகமவிதியாலே சிறடியைப் பாலாற்கழுவி நூலாலியன்ற கோடித்துகிலை முலைமேலே சூழ்ந்து வீக்கினாரென்க.

இஃது இருவர் தீக்கையுங் கூறிற்று. (௩௬)

தேனுலாமாலையுங்கலனுஞ்சிந்தப்பு
பானிலாத்திரளவம்மென்மைபந்துகி
லூனுலாய்த்தடமுலைமுற்றுஞ்சூழ்ந்தரோ
வேனிலான்வருநெறிவெண்முள்விக்கினார்.

இ - ள். மாலையையுங் கலத்தையும் வாங்கிபபோகட்டு நிலாப்போன்ற ஒளியினவாகிய துகிலுலாவ முலைமுற்றத்தைச்சூழ்ந்து காமன்வரும்வழியை முள்ளாலடைத்தாரென்க.

வெண்டுகிலாதலின், வெண்முளென்றார். இஃது ஒழிந்தமகளிருடைய தீக்கைகூறிற்று. (௩௭)

முன்னுபுகிழ்த்திசைநோக்கியொப்பமமலர்
நன்னிறத்தவிசின்மேலிருந்தநங்கைமா
ரின்மயிருகுக்கியவிருந்ததோகைய
பன்மயிற்குழாமொத்தார்பாவைமார்களே.

இ - ள். தவிசினைப்பொருந்தி யதன்மேலே கிழக்குநோக்கியிருந்த தாயரிருவரும், அல்லாதமகளிரும் மயிருகுத்தற்கிருந்த மயிற்றிரளை யொத்தாரென்க.

தோகையவாகிய மயில் (௩௮)

மணியியல்சீப்பிடச்சிகைகுடம்பாலுறு
லணியிருங்கூந்தலேயொளையமார்நடார
பணியிலர்பறித்தனர்பரமன்சொன்னநூற்
றுணிபொருளசிந்தியாத்துறந்தமேயினார்.

மணி பாலியன்றசீப்பிட அதுபொருமற் சிலைக்குறந்தலைச் சோறதகூந்தல்.

இ - ள் இறைவன்கூறிய ஆகமத்திற் றுணிபம்பொருளைச் சிந்தித்துத் துறந்தலைச்செய்ய மேவினவர்கூந்தலை அரியாங்கனைகடாம ஒன்றிற்குழ்வில்லாராய்ப் பறித்தாரென்க. (௩௯)

௧. கடியவைமுன்புசெய்தேன்கண்ணினாற்காணச்சின்னா
ளடிகளிந்நகரினுள்ளேயுறைகெனவண்ணல்கூற
முடிகெழுமன்னற்கொன்றுமறுமொழிகொடாதுதேவி
படிமம்போன்றிருப்பநோக்கிப்பம்மைதான்சொல்லினாளோ. (௪௪)

௨. காதலனல்லைநீயுங்காவலநினக்கியாமு
மேதிலமென்றுகண்டாயிருந்ததுநங்கையென்னத்
தாதலர்தாமமார்பனுரிமையுந்தானுமாதோ
போதவிழ்கண்ணிபீர்த்துப்புனல்வாரப்புலம்பினானோ.

இவையிரண்டுமொருதொடர்.

இ-ள். அண்ணல், முன்பு நும்மைக்காண்டற்குவேண்டும நல்வினைசெயயாதேன் கண்ணாலே யெப்பொழுதுங்காணும்படி அடிகள் இந்நகரினுள்ளே யுறைவீராகவெனக்கூற, அவற்கு விசயை யுத்தரஞ்சொல்லாது பாவைபோன்றிருந்தாளாக, அத்தன்மையைநோக்கிச சொல்விடத்தாளாகிய பம்மைதான், நீயும் எம்மாற் காதலிக்கப்படுமவனல்லை; காவல! நினக்கு யாங்களுஞ் சுற்றமல்லமென்றுகாண் நங்கையிருந்ததென்றுசொல்ல, அதுகேட்டு அரசன் றேவிமாருந்தானுமாக அழுதானென்க (௪௫)

ஏதிலனாயினாலுமின்றவர்தம்மறத்தைநோக்கக்
காதலனடிகளென்னக்கண்கனிந்துருகிக்காசின்
மாதவமகளிரெல்லாமாபெருந்தேவியாரை
யேதமொன்றில்லைநம்பிக்கின்னுரைகொடுமினென்றார்.

இ-ள். அங்ஙனமழுதவரசன், அடிகளே! யான் றேவிக்குச் சுற்றமன்றேனும் இறைவரறத்தைத் துணிந்துநிற்கின்ற நிலைமையைப்பார்க்க அதனாற் காதலிக்குந் தன்மையை யுடையேனென்றுகூற, தவமகளிரெல்லாம் மனமுருகிக் கண்ணேட்டஞ்செய்து தேவியாரை இனி மறுமொழிகொடுத்தலால் வருங்குற்றமின்று; நம்பிக்கு மறுமொழி கொடுமினென்றாரென்க. (௪௬)

திரைவளையிப்பியீன்றதிருமணியாரமார்பின்
வரைவளர்சாந்தமார்ந்தவரைக்குன்றனையதிண்டோள்
விரைவளர்கோதைவேலோய்வேண்டியவேண்டினேமென்
றுரைவளைத்து[illegible]ப்பக்காளையுள்ளகங்குளிர்ந்துசொன்னான்.

இப்பியீன்றவாரம்; மாணிக்கங்கலந்த கோத்தவாரம். கோதையையுடைய வேல்.

இ-ள். அதுகேட்டதேவி, மார்பினையுந் தோளினையுமுடைய வேலோய்! நீ விரும்பினகாரியங்களை யாமும் விரும்பினேமென்று உரையை வழியவெழுப்பிக்கூற, அரசன் மனமகிழ்ந்து ஒருமொழி கூறினானென்க.

வேண்டியவென்றபன்மை-உறைகவென்றதும், காதலனென்றதும். (௪௭)

அடிகளோதுறக்கவொன்றாமுறைமையாதுமல்லா
சுடுதுயரென்கட்செய்தாய்சுநந்தைநீயென்னையல்லை

[விசயமாதேவியார்துறவு.]

கொடியைநீகொடியசெய்தாய்கொடியையோகொடியையென்று
விடருற்றோர்சிங்கந்தாய்முனிருந்தழுகின்றதொத்தான்.

இ - ள். அவன் எங்ஙனங்கூறினனெனின், அடிகள் என்னிடத்து ஒன்றும் வருத்தமுற்றவரல்லர்; ஆதலான், அவரோ துறக்க; சுநந்தாய்! வருந்திவளர்த்தலின், நீயே யெனக்குத்தாய்; இதற்குமுன்னர் யாதுங் கொடியையல்லையாயினும் துறந்தா யாதலின், என்கட் சுடுதுயர் செய்தாய்; அங்ஙனஞ்செய்தநீ மிகவுங் கொடியை கொடியையென்று கூறுதலைச்செய்து சிங்கந் துன்பமுற்றுத் தாய்முன் இருந்தழுகின்றதன் மையை யொத்தானென்க. (சஅ)

சென்றதோசெல்கவிப்பாற்றிருமகளனையநங்கை
யின்றிவணுறப்பயானின்னரசுவந்திருப்பேனாயி
னென்றெனக்கொழியுமம்மாபழியெனவிலங்குசெம்பொற்
குன்றனான்குளிர்ப்பக்கூறிகோயில்புக்கருளுகென்றாள்.

இ - ள். அதுகேட்டசுநந்தை, தன்கணவனையிழந்து புதல்வனரசை யுவந்திருந் தாளென்று இதற்குமுன்னர் உலகத்துநிகழ்ந்தபழி நிகழ்ந்தேபோக; இனி நங்கையா கிய இவள் இன்று துறப்ப யான் இன்னும் நின்னரசை யுவந்திருப்பேனாயின், கேளாய்; இப்பாற்பிறக்கும்பழி யென்றுதான் எனக்குப்போவது; போகாமை நீயே யறிதியென்று அரசன்மனங் குளிரப்பக்கூறி, இனிக் கோயிலிலேபுக்கு உலகத்தைக் காப்பாயாகவென்றாளென்க. (சகூ)

பந்தட்டவிரலினார்தம்படாமுலைகிழித்தபைந்தார
நந்தட்டன்றன்னைநோக்கிநங்கையாரடிகள்சொன்னா
நொந்திட்டுமுனியவேண்டாதுறந்திலநும்மையென்னக்
கந்தட்டதிணிதிண்டோளான்கற்பகமலர்ந்ததொத்தான்.

பந்தட்ட - பந்தைவருத்தின.

இ - ள். சுநந்தை யங்ஙனங்கூறினபின்பு, நங்கையாராகியவடிகளும் நந்தட்ட னைநோக்கி, நும்மையாந்துறந்திலம்; அதனாலே நீநொந்து வெறுக்கவேண்டாவென்று சொன்னார்; அவனுங்கேட்டு மகிழ்ந்தானென்க. (ரு0)

துறந்தவிந்நங்கைமார்தந்தூமலரனையபாத
முறைந்தவென்சென்னிப்போதின்மிசையவென்றொப்பவேத்திக்
கறந்தபாலனையகந்திக்கொம்படுத்துருவப்பைம்பூண்
பிறங்குதார்மார்பன்போந்துபெருமணிக்கோயில்புக்கான்.

இ - ள். அவன்மகிழ்ந்தபின், அரசன் இந்நங்கைமாருடையபாதம் என்சென் னியிலுறைந்த போதின்மிசையனவென்று அவருறைகின்றதன்மைக்குப் பொருந்த வாழ்த்திப் பால்போன் மிகவுந்தூய கந்தியாகியகொம்பு இவர்களைப்புரக்கும்படிசேர்த் திப் பள்ளியினின்றும் போந்து கோயில்புக்கானென்க. (ருக)

வடிநிரைநெடியகண்ணார்மாமியார்விடுப்பவேகிக்
கடிநிரைசிவிகையேறிக்கதிர்மணிக்குடைபின்செல்ல
வுடைதிரைப்பரவையன்னவொளிறுவேன்மறவர்காப்பக்
கொடிநிரைக்கோயில்புக்கார்குங்குமக்கொடியனாரே.

கடிச்சிவிகை - வரைவினையுடையசிவிகை; என்றது - அரசனுந் தேவியர்குலங் கட்கேற்ப இவ்வாறு செல்லற்குரியரென்று முன்போதற்கும் பின்போதற்கும் வரை யப்பட்ட சிவிகையென்றவாறு; *"ஏற்றற் கண்ணு நிறுத்தற் கண்ணு - முரிமை கொடுத்த கிழவோன் பாங்கிற் - பெருமையிற் றிரியா வன்பின் கண்ணும்" என்றா கற்பியலின்கண்.

இ - ள். கொடியனாராகிய வடிவகிராநிரையன்னகண்ணார மாமிமார் விடுப்பப் பள் ளியினின்றும்போய் நிரைத்தசிவிகையிலேயேறிக் குடை பின்னேசெல்ல மறவர்காப் பக் கோயிலிலே புக்காரென்க. (௩உ)

வேறு.

முழுதுலகெழிலேத்துமுரிவேற்றானைமன்னன்
றொழுதகுபெருமாட்டிதூமணிப்பாவையன்னாள்
பொழிதருமழைமொக்குட்போகமவிட்டாசைநீக்கி
வழிவருதவமெய்திவைகினடெய்வமன்னாள்.

பாவையன்னாளென்றா, ஐம்பொறியால் நுகர்தற்குரியனவற்றை நுகராதிருந் தமைநோக்கி.

இ - ள். முன்பு அருந்ததியென்றுதொழத்தகக எழிலை யுலகமுழுதுமேத்துஞ் சச்சந்தன்பெருமாட்டி, பாவையன்னாள், தெய்வமன்னாள், அவள் மழைமொக்குள் போலும் போகத்தைத் தீதென்றுநீக்கி ஆசையையுநீக்கி வீட்டையெய்தும் வழியிலே வருகின்ற பரமாகமத்திற்கூறிய தவத்தையெய்தித் தங்கினாளென்க.

எனவே ஒழிந்தோர்கூறியதவங்கள் வீடுபேற்றிற்கு வழியல்லவாயின (௩௩)

விசயமாதேவியார்துறவு முற்றிற்று கவி, ௩௩.

## நீர் விளையாட்டணி.

உடைதிரைமுத்தஞ்சிந்தவோசனிக்கின்றவன்னம்
படர்கதிர்த்திங்களாகப்பரந்துவான்பூத்ததென்னு
வடர்பிணியவிழுமாம்பலலைகடற்கானற்சேர்ப்பன்
குடைகெழுவேந்தற்கிப்பாலுற்றதுகூறலுற்றேன்.

இ - ள். முரிகின்றதிரை முத்தைச்சிந்துகையாலே யதற்குவெருவிச் சிறை யடிக்கொள்கின்றவன்னந் திங்களாகக் கடல் வானாக அதகிந்தினமுத்தம் அவ்வான்

* தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், கூ.

[நீர்விளையாட்டணி.]

மீனைப் பூத்ததாகவுட்கொண்டு பகலே இதழ்பிணித்த பிணியவிழும் ஆம்பலலைநின்ற கடற்கானலையுடைய சேர்ப்பனாகிய வேந்தற்கு இப்பாற்பிறந்த செய்தியைக் கூறலுற் றேனென்றாரென்க. (௫௪)

க. துறவின்பாற்படர்தலஞ்சித்தொத்தொளிமுத்துத்தாம
முறைமுகின்றவுருவக்கோலச்சிகழிகைமகளிரின்பத்
திறைவனைமகிழ்ச்சிசெய்துமயக்குவானமைச்சரெண்ணி
நிறையநீர்வாவிசாந்தங்கலந்துடன்பூரித்தாரே. (௫௫)

உ. நீரணிமாடவாவிநேர்ம்புணைநிறைத்துநீணீர்ப்
போரணிமாலைசாந்தம்புனைமணிச்சிவிறிசுண்ணம்
வாரணிமுலையினார்க்குமன்னற்கும்வகுத்துவாவி
பேரணிகொண்டவிந்நீரிறைவகண்டருளுகென்றார்.

இவையிரண்டுமொருதொடர்.

முத்துத்தாமத்தையுடைய சிகழிகை.

இ - ள். அமைச்சர், இறைவன் துறவின்பாற்சேறற்கஞ்சி அக்கருத்தைப் போக்குதற்குரிய மகளிர் நீரிடத்துப் போர்செய்தற்குத் தம்மிடத்தேகொண்ட அணியின்பத்தாலே முன்னர் அவனை மனமகிழ்ச்சிசெய்து பின்னர் இன்பத்தே மயக்குதற் கெண்ணி, நீரைச் சாந்துடனேகலந்து வாவிநிறையப் பூரித்தார்; அங்ஙனம் பூரித்த மாடத்தையுடைய நீரணிவாவியிலே நொய்யதெப்பங்களையுநிறைத்து அழகிய மாலை முதலியவற்றையும் மகளிர்க்கும் மன்னர்க்கும் படைக்கலமாகவகுத்து இந்நீர்வாவியை, இறைவனே! கண்டருளுகவென்றாரென்க. (௫௬)

கணமலையரசன்மங்கைகட்டியங்காரனாகப்
பணைமுலைமகளிரெல்லாம்பவித்திரன்படையதாக .
விணைமலர்மாலைசுண்ணமெரிமணிச்சிவிறியேந்திப்
புணைபுறந்தழுவித்தூநீர்ப்போர்த்தொழிறொடங்கினாரே.

வேறொருபகையரசைத் தாங் கேட்டறியாமையானும், கட்டியங்காரன்கொடுமை யிக்காலத்துந் தம்மனத்து நிகழ்தலானுங் கட்டியங்காரனாகவென்றார். ·

இ - ள். அவ்வமைச்சர் வாவியைக் காட்டினபின்பு, தேவியரிற் காந்தருவதத்தை கட்டியங்காரனாக, ஒழிந்த மகளிரெல்லாம் அரசன்படையாகப் படைவகுத்து, மாலைமுதலிய கருவிகளையேந்தி, புணையின்புறத்தைத்தழுவி, நீர்க்கண்ணே போர்த் தொழிலைத் தொடங்கினாரென்க. (௫௭)

தூமலர்மாலைவாளாச்சுரும்பெழப்புடைத்துந்தேன்சோர்
தாமரைச்சதங்கைமாலைசக்கரமென்னவீழ்த்தும்
காமருகணையமாகக்கண்ணிகளொழுகவிட்டுந்
தோமரமாகத்தொங்கல்சிதறுபுமயங்கினாரே.

தேன்சோர்தாமரை - கைகள்.

இ - ள். அங்ஙனம் போர்தொடங்கினமகளிர், கையாலே மாலையை வாளாக வோச்சியும், ஒருதலைச் சதங்கைமாலையைப் பாருவலையமாகவெறிந்தும், கண்ணிக ளைக் கணையமாக முன்னே மிதக்கவிட்டும், பரியமாலைகளைத் தண்டாகச் செருநின் றுந் தம்மிற் கலந்தாரென்க. (௫௮)

௧. அரக்குநீர்ச்சிவிறியேந்தியாயிரந்தாரைசெல்லப்
பரப்பினாள்பாவைதத்தைபைந்தொடிமகளிரெல்லாந்
தரிக்கிலாகித்தாழ்ந்துதடமுகிற்குளிக்குமின்போற்
செருக்கியநெடுங்கண்சேப்பச்சிதநீர்மூழ்கினாரே. (௫௯)

௨. தானகமாடமேறித்தையலார்கதும்பப்பாய்வார்
வானகத்திழியுந்தோகைமடமயிற்குழாங்களொத்தார்
தேனினமிரியத்தெண்ணீர்குளித்தெழுந்திருவினன்னார்
பான்மிசைச்சொரியுந்திங்கள்பனிக்கடன்மூளைத்தலொத்தார். (௬0)

௩. கண்ணிகொண்டெறியவஞ்சிக்காறளர்ந்தசைந்துசோர்வார்
சுண்ணமுஞ்சாந்தும்வீழத்தொழுதகவிரந்துநிற்பா
ரொண்மலர்மாலையோச்சவொசிந்துகண்பிறழவொல்கி
வெண்ணெயிற்குழைந்துநிற்பார்வேற்கணாராயினாரே.

இவைமூன்றுமொருதொடர்.

௧. அரக்குநீர் - இங்குலிகங்கரைத்தநீர். வெண்முகிலின்மறையமின்போல்.

௨. தானகமாடம் - விகாரம்; நீரகத்துச்செய்த பலநிலங்களையுடைய மாடம் பால் - பால்போலுமொளி.

௩. காறளர்ந்து அசைந்து - நின்றநிலைகுலைந்து இளைத்து. கண்பிறழவொல்கி- கண் பிறழ்ந்துபார்க்கும்படி யொதுங்கி.

இ - ள். அங்ஙனம் இரண்டுபடையுங் கலந்தபின்னைத் தத்தை சிவிறியை யேந்தி யாயிரந்தாரையை முன்னர்நின்ற மகளிர்மேலே செல்லவிட்டாள்; அதனைத் தையலாரெல்லாருந் தரிக்கமாட்டாராய்க் குறைந்து கண்சிவப்ப நீரிலேமூழ்கினார்; அங்ஙனமூழ்கி யதனுட் சிறிதுபொழுது உறைதலாற்றாராய் மாடத்தேறிப்பாய்வார், மயிற்றிரளையொத்தார்; அதனுட் சிறிதுபொழுது உறைந்தெழுந் திருவினன்னார், தமது முகந்தோன்றியபொழுது திங்கள் கடலின்முளைத்த தன்மையொத்தார்; இங் ஙனமிவர்கள் குறைந்தபின், பின்னேவந்துபொருத வேற்கண்ணார், அவள் அதனை நீக்கிக் கண்ணிகொண்டெறிய அஞ்சிச் சோர்வார்; சுண்ணமுஞ்சாந்தும் வீழவெறிய இரந்துநிற்பார்; மாலையையோச்சக் குழைந்துநிற்பாராயினாரென்க (௬௧)

கூந்தலையொருகையேந்திக்குங்குமத்தாரைபாயப்
பூந்துகிலொருகைத்தாங்கிப்புகுமிடங்காண்டல்செல்லார்
வேந்தனைச்சரணென்றெய்தவிம்முறுதுயரநோக்கிக்
காய்ந்துபொற்சிவிறியேந்திக்கார்மழைபொழிவதொத்தான்.

இ - ள். அவர்கள் அங்ஙனமாயபின்பு, தத்தை மீண்டுஞ் சிவிறியையேந்தி

[நீர்விளை[illegible]டணி.]

வேந்தனருகே யணியாகநின்றமகளிர்மேலே விட்ட குங்குமத்தாரை யவர்கண்மே லேபரக்க, அவர்கள்அதற்காற்றாதே கூந்தலை யொருகையாலேயேந்தித் துகிலை யொருகையாலேயேந்திப் புகுமிடங்காணாராய் வேந்தனைச் சரணென்றுசேர, அவ னும் அவர்கள்வருத்தத்தைப் பார்த்துக் காய்ந்து சிவிறியையேந்திக் கார்தான் மழை பொழியுந்தன்மையை யொத்தானென்க. (கூஉ)

வீக்கினன் றூணையெய்தாச் சந்தனத் தளிர்கண்மாலை
யோக்கினார் கண்ணிசுண்ண முடற்றினா ருருவச்சாந்திற்
பூக்கமழ் துகிலுந் தோடு மாலையுஞ் சொரியப் போர்தோற்
றுங்கியவநங்கன் சேனை யாறலா றுயிற்றன்றே

இ - ள். அங்ஙனம் பொழிந்தபின்பு, தத்தையைச் சூழ்ந்தமகளிர் சந்தனத்தளிர் விரவிய மாலையை யோச்சினார்; ஓச்சிப் பின்னுங் கண்ணியாலுஞ் சுண்ணத்தாலுஞ் சாந்தாலுமெறிந்து அவனை யுடற்றினார், அவனும் பின்னர்ச் சிவிறியிற்றாரையை வெய் தாம்படி முறுக்கினான், அதற்காற்றாதே முன் போராயாக்கிய அச்சேனை துகிலுந் தோ டும் மாலையுஞ்சிந்தக்கெட்டு வழியல்லாவழிகளிலே போயிற்றென்க.

மகளிரெல்லாங் காமன்படையாதலின், தத்தைசேனையையுங் காமன்சேனை யென்றார். (கூ௩)

அன்னங்களாகியம்பூந் தாமரையல்லிமேய்வார்
பொன்மயிலாகிக்கூந்தல் போர்த்தனர் குளித்து நிற்பார்
நின்மலர்க்கமலமாகிப் பூமுகம் பொருந்தவைப்பார்
மின்னுமேகலையுந்தோடுங் கொடுத்தடி தொழுது நிற்பார்.

இ - ள். அங்ஙனங் கெட்டவர்கள், அன்னங்களாய் அல்லியைமேய்வார்; மயி லாய் மயிரான் மறைத்துக்கொண்டிருப்பார்; உடம்பைமறைத்துத் தாமரைப்பூவாய்ப் பூவுடன் முகத்தைப் பொருந்தவைத்திருப்பார், இறைகொடுத்துத் தொழுதுநிற்பா ராயினரென்க. (கூ௪)

பண்ணுரைமகளிர்மாலை துகில்கவர்ந்துகொள்ளக்
கண்ணுரைமகளிர்சோர்ந்து காரிருடிவளுமின்போற்
பெண்ணுரைபிடிக்கைக்கூந்தற் பொன்னரிமாலைதாழ
வெண்ணுரையுடுத்துநின்றார் வேந்தனோக்குண்ணநின்றார்.

பண்போலும் உரையினையுடைய மகளிரென்றது-அரசன்படையை. தங்கண்ணி னாலே யரசனுக்கு வருத்தத்தையுண்டாக்குமகளிரென்றது - அரசனைச் சேவித்தற்குரிய மகளிராய் எண்பத் தத்தையொடுகூடினபடையை. பிடிக்கைபோலப் பின்னின கூந்தல்.

இ - ள். அவர்கள் அங்ஙனமாயபின்னர்ப் பண்ணுரைமகளிர் கண்ணுரைமகளி ருடைய மாலையையுந் துகிலையுங் கவர்ந்துகொள்ளுதலிற் பொன்னரிமாலைஇருளி னுடங்குமின்போற்றாழச் சோர்ந்து தமதுபெண்டன்மையைப் பலருங்கூறவேண்டி வெண்ணுரையையுடுத்துநின்றவர், அரசன் தமதழகைநுகரநின்றாரென்க.

தமக்குத் தோற்றமை தோன்றத இழிவைக் கவர்ந்தாரென்க. பெண்களுக்கு உவமையாக உரைக்கப்படும் பிடியென்றுமாம். (௬௫)

௧. தன்படையுடையத்தத்தைசந்தனத்தாரைவீக்கி
யொன்பதுமுகத்தினோடியுறுவலியகலம்பாயப்
பொன்படுசுணங்குபோர்த்தபொங்கிளமுலையிற்றூவான்
முன்படுகுலிகத்தாரைமுழுவலிமுறுக்கலுற்றான். (௬௬)

௨. மெய்ப்படுதாரைவீழ்ினோமிவட்கென்னவஞ்சிக்
கைப்படைமன்னனிற்பக்கதுப்பயன்மாலைவாங்கிச்
செப்படமுன்கையாப்பத்திருமகன்றொலைந்துநின்றான்
பைப்புடையல்குலாளைப்பாழியாற்படுக்கலுற்றான். (௬௭)

௩. அடுத்தசாந்தலங்கல்சுண்ணமரும்புனல்கவரவஞ்சி
யுடுத்தபட்டொளிப்பவொண்பொன்மேகலையொன்றும்பேசா
கிடப்பமற்றரசனோக்கிக்கெட்டதுன்றுகின்மற்றென்ன
மடத்தகைநாணிப்புல்லிமின்னுச்சேர்பரிதியொத்தாள்.

இவைமூன்றுமொருதொடர்.

௧. வீக்கி - வீக்க. முன்படு - தத்தையது வலியை யடுகின்ற

௨. கைப்படை - சிவிறி. செப்பட - செவ்விதாக. பைப்புடை - படத்தின் பக்கம். பாழி - வலி.

௩. பட்டு ஒளிப்ப - நனைந்தபடியாலே மெய்ம்முழுதுந் தோன்றியபடி. பட்டு ஒட்டிக்கொள்ள. துகில் - வெண்பட்டு. புல்லி - புல்ல.

இ - ள். அவரழகை யங்ஙனநுகர்ந்தமன்னன், அல்குலாளைச் சாந்து அலங்கல் சுண்ணமென்கின்றவற்றால் அகப்படுக்கலுற்றான்; உற்றவன் அப்பொருள்கட்கடுத்த வலியாலே யவற்றைக்கொண்டு எறிதற்கஞ்சிநிற்ப, தத்தை தன்படை முன்னர்க் கெட, அவள்பொறாதே யொன்பதுதாரையாகவோடி யுறுவலியகலத்தேபாயும்படி சந்தனத்தாரையைவீக்க, அதுகண்டு திருமகன் முன்படுகுலிகத்தாரையை முழுவலியோடேமுறுக்கலுற்றான்; உற்றவன் கைப்படையின் மெய்ப்படுதாரை யிளமுலைமேல் வீழின், இவட்குநோமென்றஞ்சிச் செவ்விதாகத் தூவாதுத் தொலைந்துநின்றான்; அதுகண்டு அவள் மாலையைவாங்கி முன்கையையாப்ப, ஆண்டுப் புனல் இவளுடுத்த வெண்பட்டினைக் கவருகையினாலே, அப்பட்டு மேகலை சிறிதும்பேசாதேகிடக்கும்படியொளிப்ப, பின்னை யரசன் அதனைநோக்கி நினைதல்குலிற் றுகில்கெட்டுப்போயிற்றுக் காணென, அதுகேட்டு அவள் நாணித் தன்னைத்தழுவ, அவன் ஆண்டு மின்னுச் சேர்ந்த பரிதியையொத்து நின்றானென்க. (௬௮)

விம்மகிற்புகையின்மேனியுடம்பினைவேதுசெய்து
கொம்மெனநாவிநாறுங்கூந்தலையுலர்த்திநொய்ய

இ - ள். அங்ஙனஞ்சேர்ந்தவன், அவர்கள் மெய்ந்நலமாகியதடத்தே முழுது மூழ்குதலின், அதற்கஞ்சிக் கண் நீர்சுமந்திரங்காநிற்க, புருவம் நீ வருத்தினையென்று அதற்குத் தொழுவனபோலே வளையாநிற்க, பூஞ்சிகையணிந்தநித்திலம் அப்பூஞ்சிகை யழுவனபோலே சிந்தினவென்க. (௭௨)

எழுத்தின்பாடலுமாடலுமென்றிவை
பழுத்தகற்பகப்பன்மணிக்கொம்பனா
ரழுத்தியன்னவணிவளைத்தோண்மிசைக்
கழிக்குமைங்கணைக்காமற்குங்காமனே.

இ - ள். காமனுக்கும் வருத்தத்தைச் செய்கின்றவன், பாட்டையுங்கூத்தையுங் கேட்டுங் கண்டும் அடிப்பட்ட மகளிர்தோண்மிசைக் கூட்டத்தாலே அம்முதுவேனிற்காலத்தைக் கழியாநிற்குமென்க. (௭௩)

நீர்துளும்புவயிற்றின்னிழன்முகில்
பார்துளும்பமுழங்கலிற்பல்கலை
யேர்துளும்பவெரீஇயிறைவற்றழீஇக்
கார்துளும்புகொம்பிற்கவினெய்தினார்.

நிழல் - ஒளி. துளும்புதல்நான்கும் அசைதலாம்.

இ - ள். அங்ஙனம் அக்காலங்கழிந்தவளவிலே, முகின்முழங்கலின், அது கேட்டு மகளிரஞ்சி யிறைவனைத்தழுவிக் காராற் கவின்பெற்றசையுங் கொம்புபோலக் கவின்பெற்றாரென்க. (௭௪)

இழிந்துகீழ்நிலையின்னகிற்சேக்கைமேல்
கிழிந்துசாந்தழியக்கிளர்மென்முலை
தொழிந்துமட்டொழுகத்துதைதார்பொர
வழிந்தமேகலையஞ்சிலம்பார்த்தவே.

தொழிந்து - தொழித்து; விகாரம். என்றது சிதறியென்றதாம். பூக்கிழிந்து மட்டுச்சிதறி யொழுகும்படி தார்பொர.

இ - ள். அங்ஙனங் கவின்பெற்றவர்கள், அம்முகில் மழைபெய்தலிற்குளிர்ந்து கீழ்நிலத்தேயிழிந்து அகிற்சேக்கைமேலேயிருந்தபின்பு அரசனது தூசிப்படைமுலைச் சாந்தழியப் பொருதலின், அதற்கெதிரே யவர்மேகலைகள் பொருதழிந்தன; அது கண்டு மகிழ்ந்து பின்னர்ச் சிலம்புகளார்த்தனவென்க.

மகளிர்தொழிலான் மேகலையும், தலைவன்றொழிலாற் சிலம்பும் ஆர்த்தன. (௭௫)

தேனிருலனதீஞ்சுவையின்னளா
பானறுமுலைப்பாலமுதல்லதொன்
றூணுமேவலர்ச்சுறவெய்திய
மானறுமடநோக்கியரென்பவே.

(இருதுநுகர்வு.)

வடிவினாலும், மென்மையாலும், இனிமையாலும் இருமுலையொத்தஅடை. எந்நாளும் பாலறாத ஆனினது முலையிற்பாலமுதம்; என்றது - சினைமேலுங் கறக்கும்பசுவெனப் பசுவினது விசேடங்கூறிற்று. அமுதென்றதனால் "பசுவினமுது கொற்றிப் பாலே - காம நுகர்வார்க் குரித்து" என நூலிற்கூறியவாறே கூறினர். அச்சமுற்ற மானினது நோக்கம் விடாதநோக்கியர்.

இ - ள். அங்ஙனங் காமநுகர்கின்றநோக்கியர், இக்காரகாலத்திற்கு உரித்தாகக் கூறிய அடையையும், பாலமுதையுநுகர்வதல்லது, அவிழ்பதஞ் சிறிதும் நுகராராயினரென்க. (௭௬)

வேறு.

க. கூதிர்வந்துலாவலிற் குவவுமென்முலை
மேவுசெய்யசாந்தமும்வெய்யதேறலும்
போதவிழ்மாலையும்புகையுஞ்சுண்ணமும்
காதலித்தார்கருங்குழைக்கண்ணினார். (௭௭)

உ. சுரும்புகின்றுறுபலர்த்தொங்கலார்சுவி
னரும்புகின்றார்கடலமிர்தமேயென
விரும்புகின்றனிளவேனில்வேந்தனுஞ்
சரங்கள்சென்றழுக்கலுற்றான்வேந்தனே.

இவையிரண்டுமொருதொடர்

முலையை வெம்மைசெய்யுஞ் சாந்தம் - அகிற்சாந்தம் வெய்யதேறல் - அக்காலத்திற்கு ஆமென்றுவிரும்பியதேறல்.

இ - ள். கார்கழிந்து கூதிர்வந்துபரத்தலிற் கண்ணினார் சாந்தமுதலியவற்றைக் காதலித்தார்; அதனை யுட்கொண்டு காமன்அரசன்மேலே சரங்களையழுத்தலின், அவ்வேந்தன் அவர்களிருக்கின்றவிடத்தே யப்பொருள்களைக் கொண்டுசென்று கொடுத்து அத்தொங்கலார் அழகரும்புகின்றவர்களை யமுதமென்றேகருதி அக்கூதிர்காலமெல்லாம் நுகராநின்றானென்க. (௭௮)

குழைமுகமிடவயிற்கோட்டியேந்திய
வழனிறத்தேறலுண்மதிகண்டையென
நிழன்முகப்பகைகெடப்பருகிநீள்விசும்
புழலென்றுநோக்குவாண்மதிகண்டேடினாள்.

இ - ள். அங்ஙனம்நுகருகின்றான் அக்காலத்தே தனக்குக் கொடுப்பதாகவேந்தியதேறலைக் குழைமுகத்தை யிடத்தேகோட்டி நோக்குங் குணமாலை, அதனுள்ளே தன்முகமாகிய மதிதோன்றக்கண்டு அதனைமதியாகக்கருதித் தன்முகத்திற்குப் பகையாகுந்தன்மைகெடும்படி விரையப்பருகி யினி நீள்விசும்பிலே யுழல்வாயெனக்கூறி யவ்விசும்பிலே யம்மதியைக்கண்டு வாடினாளென்க. (௭௯)

க. பருகினேற்கொளித்துநீபசலைநோயொடு
முருகிப்போயின்னுமுற்றுளேயென்றுள்சுடக்
குருதிக்கண்கொளக்குணமாலையூடினா
ளுருவத்தாருறத்தழீஇயுடற்றிநீக்குவான். (௮௦)

உ. நங்கைநின்முகவொளியெறிப்பநன்மதி
யங்கதோவுள்கறுத்தழகிற்றேய்ந்தது
மங்கைநின்மனத்தினால்வருந்தலென்றவன்
பொங்கிளவனமுலைபொருந்தினானரோ.

இவையிரண்டுமொருதொடர்

பருகினேற்கென்னும் நான்கனுருபு இன்னுமுளையென்னும் பகைப்பொருள் கொண்டது. தேறலுண்டதனாற் சிவந்ததனை மதியோடேச் சிவந்ததாக்கினார்.

இ - ள். அக்குணமாலை யெங்ஙனமூடினாளெனின், பருகினேற்கு அக்காலத் துருகிப் பின்னரொளித்துப்போய் என்னையுள்சுடவுடற்றிப் பசலைநோயோடே இன்னுமுளையாயினையென்றுகூறிக் கண்சிவப்பவூடினாள்; அவ்வூடலைத் தழீஇநீக்குகின்றவன், நங்காய்! அங்கேசென்று நின்முகவொளிபரத்தலாலே அஃது உள்கறுத்து அழகினின்றுநீங்கித் தேய்ந்துவிட்டது; நினக்கேற்ப நன்மதியோ? அன்றே; இனிமங்காய்! நின்மனத்தினால் வருந்தாதேகொள்ளென்று ஊடலை நீக்கினான்; நீக்கிப் பின்னர் அவள்முலையைப் பொருந்தினானென்க. (௮௧)

வேறு.

க சொங்குவிம்முபூங்கோதைமாதரார்
பங்கயப்பகைப்பருவம்வந்தென
வெங்குமில்லனவெலிமயிர்த்தொழிற்
பொங்குபூம்புகைப்போர்வைமேயினார். (௮௨)

உ. கூந்தலின்புகைக்குவவுமென்முலைச்
சாந்தமேந்தினார்தமாலமாலையு
மாய்ந்துதாங்கினாரரவமேகலை
காய்ந்துநித்திலங்கடியசிந்தினா.

இவையிரண்டுமொருதொடர.

இ - ள். மாதரார், முன்னர்க் கூதிர்காலத்தே குளிரைஅஞ்சி மேகலையையு நீக்கி முத்தையுஞ்சிந்தினவர்கள், பின்னர்ப் பனிப்பருவம்வந்ததாகத் தொழிலினையும், புகையினையுமுடைய எங்குமில்லனவாகிய எலிமயிர்ப்போர்வையை மேவினார்; மேவி அக்காலத்திற்கேற்கும்படி கடியனவற்றை யாராய்ந்து கூந்தலிலே புகையையும், முன்னர்ச் சாந்தமேந்தியமுலையிலே பச்சிலையாற்றொடுத்த மாலையையுந் தாங்கினாரென்க. (௮௩)

[இருதுநுகர்வு.]

அளிந்ததீம்பழமிஞ்சியார்ந்தநீர்
விளைந்தவல்விளைவரிசிவேரியும்
வளைந்தமின்னனார்மகிழ்ந்துசண்பக
முளைந்துமல்லிகையொலியல்சூடினார்.

எலுமிச்சம்பழத்தின்நீரிலே ஆர்ந்தவிஞ்சி; செவ்விஞ்சி. அரிசி வலியவிளைவாக விளைந்தன; அவை பொரி, அவல்முதலியன; கருப்புக்கட்டிமுதலிய பலவுங்கூட்டி முறுகப் பொரித்தலின், வலியவிளைவாயிற்று. வேரி - மது.

இ - ள். நுடங்கினமின்னையொப்பார், இஞ்சியையும், வேரியையும், பொரி அவல்முதலியவற்றையுநுகர்ந்து, சிறுசண்பகத்தைவெறுத்து மல்லிகைமாலையைச் சூடினாரென்க.

இனிப் பழமும் இஞ்சியும், நீரிலேநின்றுவிளைந்த வலியவிளைதலையுடைய அல்லி யரிசியுமென்றுமுரைப்ப. (அச)

க. தொத்துடைம்மலர்த்தொங்கல்சண்பொர
முத்துடைம்முலைக்கண்கணொந்தவென்
றெய்த்தகடிச்சிலம்பிரங்குமின்குரல்
கைத்தெடுத்தலிற்காமந்தாழ்ந்ததே. (அரு)

உ. பொன்பணிப்புறம்பொற்பினார்நல
மன்பணித்தலையணைந்தவத்தலை
முன்பனிக்கலைமுழுதுநீங்கிப்போய்ப்
பின்பனித்தலைபேணவந்ததே.

இவையிரண்டுமொருதொடர்

க. எய்த்தென்றது - எய்யாதென்னும் எதிர்மறைவினைக்கு விதிவினை; அஃது அறிந்தென்னும்பொருட்டாம். கைத்து - செலுத்தி. எடுத்தல் - எழுப்புதல்.

இ - ள். திருமகள்வருந்தும்பொற்பினார், அங்ஙனம் கோலஞ்செய்தநலம் அன்பனை யிக்காலத்தேவருத்துதலாலே, அவனுந் தனதுதொங்கல் அவர்கள்முலைக்கண்ணைப்பொர முயங்கி, இம்முலைக்கண்கள் நொந்தனவென்று முன்னர்க்கூறிப் பின்னர்ப் புணர்ச்சிக்காலத்தையறிந்து சிலம்பினது இரங்குங்குரலைச் செலுத்தி யெழுப்புதலாலே, காமவின்பம் அக்காலத்திலே தங்கிற்று; அதனோடே முன்பனிக்காலமும் முழுக்கநீங்கிப்போய்ப் பின்பனிக்காலம் அவர்களெதிர்கொள்ளும்படி வந்ததென்க.()

க. வெள்ளிலோத்திரம்விளங்கும்வெண்மலர்க்
கள்செய்மாலையார்கண்கொளாத்துகி
லள்ளியேந்தியவரத்தவல்குலா
ரொள்ளெரிம்மணியுருவப்பூணினார். (அஎ)

௨. *செங்கெருப்புணுஞ்செல்வெலிம்மயி
ரங்கெருப்பளவாய்பொற்கம்பல
மன்னருய்ப்பனமகிழ்ந்துதாங்கின
ரென்னரொப்புமில்லவர்களென்பவே.

இவையிரண்டுமொருதொடர்.

க. வெள்ளிலோத்திரத்தினது வெண்மலராற்செய்த மாலை. அரத்தத்தினது நிறத்தை யள்ளிக்கொண்டு கண்ணுற்பார்க்கவொண்ணாத துகிலேயேந்தியவல்குல். அள்ளிக்கொள்ளுதல் - வாரிக்கொள்ளுதல். என்றது - அரத்தந்தோயாமல் அரத்தநிறத்தை யியல்பாகக்கொண்ட துகிலாயிற்று. * "கோபத் தன்ன தோயாப் பூந்துகில்" போல இத்துகிலும் இவர்க்குள்ளதென்றார்.

௨. நெருப்பைத்தின்னும் எலிமயிர்க்கம்பலம்; அந்நெருப்பினளவுமெய்மையை யென்று ஆராய்ந்த பொலிவினையுடைய கம்பலம்; உய்ப்பனவாகியகம்பலம். உய்த்தல் - திறைதருதல். என்னரும் - எத்தன்மையரும்.

இ - ள். என்னருந் தமக்கு ஒத்தலையில்லாதமகளிர், குளிர்நீக்குதற்கு மாலையார், அல்குலார், பூணினராய்க் கம்பலத்தைத் தாங்கினரென்க.

இனி அரத்தத்தை யள்ளியேந்தினவல்குலென்றுமுரைப்ப. என்னருப்புமென்று பாடமோதி, எக்குற்றமுமில்லாதாரென்றுமுரைப்ப. (௯௨)

ஆடலின்சுவையமர்ந்துநாடொறும்
பாடல்மெய்ந்நிறீஇப்பருகிப்பண்சுவைத்
தோடுமாமதியுரிஞ்சுமொண்பொனின்
மாடக்கீழ்நிலைமகிழ்ந்துவைகினர்.

இ - ள். அவர்கள், நாடோறுங் கூத்தைக்கண்டும், மிடற்றுப்பாட்டைத் தங்கள் மெய்யிலேநிறுத்திப் பருகி யாழ்முதலியவற்றிற்பண்ணை நுகர்ந்தும் மாடத்தின்கீழ்நிலத்தே தங்கினரென்க. (௯௩)

வேறு.

புரிக்குழன்மடந்தையர்பொம்மல்வெம்முலை
திருக்கழற்குரிசிறன்றிளைக்கும்போரினுட்
செருக்குரற்சிறுபறைசிலம்புகிண்கிணி
யரிப்பறைமேகலையாகியார்த்தவே.

புரிக்குழல் - நெறிப்பினையுடையகுழல். செருக்குரல் - போரையுண்டாக்குங் குரல்.

இ - ள். அங்ஙனம்வைகின மகளிரிளமுலையும், தலைவன்றாரும் பொருகின்ற போரிலே, சிலம்புங் கிண்கிணியுஞ் சிறுபறையாகி, மேகலை யரிப்பறையாகி யார்த்தனவென்க. (௯௰)

* திருமுருகாற்றுப்படை.

[இருதுநுகர்வு.]

ஏச்செயாச்சிலைநுதலேலைமையார்முலைத
தூச்செயாக்குங்குமந்துதைந்தவண்டினம்
வாய்ச்சியாலிட்டிகைசெத்துமாந்தர்தம்
பூச்செயாமேனிபோற்பொலிந்துதோன்றுமே.

ஏச்செயாச்சிலைநுதல் - ஏத்தொழில்செய்தற்கு ஏறட்டும் அத்தொழில்செய்யாத விற்போலுநுதல்; இந்திரவில்லுமாம். வண்டினந் துதைந்தகுங்குமம் - வண்டினம் படிதற்குக் காரணமான குங்குமம்; அவர்கள் கழுவாத குங்குமம்.

இ - ள். அங்ஙனம் புணர்ந்த மகளிர்முலையிற் பூசின பாடழிந்துகிடந்தகுங்குமம், இட்டிகைவாய்ச்சியால் இட்டிகைசெத்துமாந்தருடைய கழுவாத மேனி போற்றோன்றுமென்க.

இனி அவாமுலையிற்குங்குமத்தே செறிந்த வண்டினந்தான் இட்டிகைசெத்தினார் மேனிபோற்றோன்றுமென்றுமுரைப்ப (கக)

வேறு.

நூரலம்பாவைகொப்புளித்துக்குளிரசயங்ந்நதுகளேபோன்
மரவம்பாவையிறரப்பருகிவாடையதுநடப்ப
விரவிநறுதென்றல்விடுதூதாவேனிலாற்குவிருந்தேந்தி
வரவுநோக்கிவயாமரங்களிலையூழ்த்திணரீன்றலர்ந்தனவே.

வாடைதொடங்கினகாலத்தே குரவம் பூத்தலின், அத்தேனைப் பலகாலுமுண்டு தெவிட்டினமைதோன்றக் கொப்புளித்தென்றார். கொப்புளித்தல் - காற்றுச்சிதற வடித்தல். பாவையிரண்டும் ஆகுபெயர். வாடைகழிகின்றகாலத்தே மரவம்பூத்த புதுமைபற்றி வயிறுநிறையவுண்டென்றார். இதனன் மிகக் காற்றுச்சிதறவடியாமை கூறிற்று. வாடைநடப்ப - வாடைபோகாநிற்கவெனநிகழ்வு. தென்றல்விரவி வரவுநோக்கி - தென்றல் வாடைபோகாநிற்க விரவிவருகின்ற வரவைக்குறித்து. இலையூழ்த்துவயாமரங்கள் - அதனாலே யிலையுதிர்த்து வயாநோய்கொண்டமரங்கள். அதுவிடுதூதா - அத்தென்றல்காமன்விடுத்ததூதாகக்கொண்டு. வேனிலாற்கு விருந்தேந்தி யிணரீன்று அலர்ந்தன - அக்காமனுக்கு விருந்திடுதலை யேறட்டுக்கொண்டு ஈன்று அலர்ந்து யிருந்திட்டன.

இ - ள். வாடை, கொப்புளித்துப் பருகி நடப்ப, தென்றல் விரவிவரவுநோக்கி அதனாலிலையூழ்த்து வயாநோய்கொண்டமரங்கள் பின்னர்அதுதூதாக விருந்தேந்தி இணரீன்று அலர்ந்தனவென்க.

இதனால் வாடையுந்தென்றலும் முன்னர்விரவித் தென்றல் பின்புமுதிர்ந்த தென்றார். கொப்புளித்துப் பருகியென்பனவும், வயாமரமென்பதூஉம், மாற்றருஞ் சிறப்பின்மரபன்றி, வழக்கின்கண் அடிப்பட்டுச் செய்யுளின்பம்படவந்த மரபென்று மரபியலிற்பாதுகாத்தாம். (கஉ)

இளிவாய்ப்பிரசம்யாழாகவிருங்கட்டும்பிகுழலாகக்
களிவாய்க்குயில்கண்முழவாகக்கடிபூம்பொழில்களரங்காகத்

தளிர்போன்மடவார்தணந்தார்தந்தடந்தோள்வளையுமாமையும்
விளியாக்கொண்டிங்கிளவேனில்விருந்தாவாடன்றொடங்கினான்.

இளி - இளியென்னும்நரம்பு. கணவரைப்பிரிந்தார் தம்முடைய வளைகழன்ற படியையும், மாமைநிறங் கெட்டபடியையும், தத்தங் கணவருணர்தற்குத் தூது சென்றபாணன் யாழ்மேல்வைத்துப் பாடும்பாட்டைப் பாட்டாகக்கொண்டென்க. அது * "நிலம்பெயர்ந் துறைதல் வரைநிலை யுரைத்தல் - கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை யுரிய" என்பதனானுணர்க; † "விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும்" என்றார்பிறரும்.

இ - ள். இளவேனிலென்னுங்கூத்தன், இன்னது இன்னதாகக்கொண்டு புதிதாக ஆடலைத்தொடங்கினனென்க. (௩௫)

வேனிலாடும்விருப்பினால்வியன்காய்நெல்லிச்சாந்தரைத்து
காளவெண்ணெய்கதுப்புரைத்துநறுநீராடியகிர்துகிர்க்குந்
தேனாரகிலின்புகைசேர்த்திவகுத்துநாவிக்குழம்புநீஇ
யானுப்பளிதநறுஞ்சுண்ணமுகிரினுழுதாங்கணிந்தாரே.

இ - ள். அங்ஙனம்வந்த வேனிற்காலத்தே விளையாடும்விருப்பினாலே, கதுப்பில் எண்ணெயைத்தேய்த்து நெல்லியையரைத்து அச்சாந்தைக்கொண்டு நீராடிப் பின்னர்ப் புகைத்து வகிர்ந்து புழுகைவார்த்து உகிராலேகிளைத்து அவ்விடத்தே கருப்பூரப்பொடியை யணிந்தாரென்க. (௩௬)

முத்தார்மருப்பினிடைவளைத்தமுரண்கொள்யானைத்தடக்கையி
னொத்தேருடையமல்லிகையினேயல்மாலையுறப்படக்கி
வைத்தார்மணிநூற்றனைவைம்பால்வளையமுடித்துவான்கழுநீ
ருய்த்தாங்கதனுட்கொளவழுத்திக்குவளைச்செவித்தாதுறுத்தாரே.

இ - ள். முன்னர் முன்பனிக்காலத்திற்கு ஐம்பாலிலே மருப்பினிடத்தேசுற்றிய யானைக்கையினையொத்து எருடையனவாகிய மல்லிகைமாலையையடக்கி யதனருகே வகைமாலையையும்வைத்தவர்கள், இவ்விளவேனிற்காலத்து அம்மயிரினைத் திரளமுடித்து அதனுள்ளே கழுநீர்மாலையைச்செலுத்தி யதுகொள்ளவழுத்தி யாங்கே குவளையினது செவ்வித்தாதையுமுறுத்தினாரென்க.

மல்லிகையினேயல் - மல்லிகையாற்கட்டின மாலை உறுப்புமாலையென்க. ([illegible])

புகையார்வண்ணப்பட்டுடுத்துப்பொன்னாகலைகளாப்புறஞ்சூழ்ந்து
நகையார்கவுளங்கிண்கிணியுஞ்சிலம்பு ‡ நாய்நாச்சீறடிமேல்
பகைகொண்டார்போம்சுமாதுயக்கண்பின்பருஉக்காம்பனையகணைக்கா
தகையார்திலங்கும்பரியகந்தாபேகவினச்சேர்த்தினார். [ல்சூழ்ந்

* தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், ௨௮.

† திரிகடுகம், ௧௧.

‡ "வருந்துகாய் நாவிற் பெருந்தகு சீறடி" எனப் பொருநராற்றுப்படையிலும், "மதந்தபு ஞமலி நாவி னன்ன - துளங்கியன் மெலிந்த கல்பொரு சீறடி" என மலைபடுகடாத்திலும் மகளிரடிக்கு நாய்நாவினை உவமைகூறினார்.

[இருதுநுகர்வு.]

கண்பின்பருஉக்காம்பு - இரண்டுகண்ணுக்கும் பின்னாகிய பரியதண்டு. என்றது இரண்டுகண்ணுக்கு நடுவாகிய பச்சைமூங்கிலை. *"தேனெய்பெய் - வாடாதகாம்பேபோல்" என்றார்முன்னும்.

இ - ள். அவர்கள், இடையோடு பகைகொண்டாரைப்போலே தாம் பட்டையுடுத்து அதன்மேலே மேகலையைவளைத்து அடிமேலே கிண்கிணியையுஞ் சிலம்பையுஞ் சுமத்திக் காம்பினையுங்கணைக்காலிலே பரியாகஞ்சூழ்ந்து கவினைச்சேர்த்தினரென்க.

அசை - கூறுபாடு. சூழ்ந்துதகையென்பது விகாரமுமாம். (கசு)

பிடிக்கைவென்றுகடைந்தனபோற்பஞ்சியார்ந்ததிரள்குறங்கு
கடித்துக்கிடந்துகவின்வளருங்காய்பொன்மகரங்கதிர்முலைமே
லுடைந்தசாந்தின்மிசைச்செக்கரொளிகொண்முந்நாட்பிறையேய்ப்பத்
துடிக்குங்கதிர்சோதுணைமுத்தந்திருவில்லுமிழ்ந்துசுடர்ந்தனவே.

ஒழுகநோக்குதலிற் பிடிக்கையைவென்று, திரட்சியாலுஞ் சருச்சரையின்மையாலும் பஞ்சியாலும் கடைந்தனபோற்றிரண்டகுறங்கு.

இ - ள். அவர்கள் பின்னருமணிதலிற் குறங்கைக்கௌவிக்கிடந்து அழகுவளரும் குறங்குசெறியும், செக்கர்வானிற் பிறையையொப்ப முலைமேற்பூசின சாந்தின் மேலே கிடந்தசையுங் கதிரையுடைய முத்தமும் வில்லைக்கான்று ஒளிவிளங்கின வென்க. (கஎ)

குழியப்பெரியதோண்முன்கையலரியார்காந்தட்குவிவிரன்மேற்
கழியப்பெரியவருவிலையசிறியமணிமோதிரங்கனலத்
தழியப்பெரியதடமென்றோட்சலாகைமின்னத்தாழ்ந்திலங்கும்
விழிகண்மகரகுண்டலமுந்தோடுங்காதின்மிளிர்ந்தனவே.

குழியப்பெரியவென்றது ஆகுபெயராற் கேவணங்களை. அருவிலையவென்றது ஆகுபெயராற் பூணினை. குழிய, தழியவென்பன செயவெனெச்சம்.

இ - ள். அவர்கள் பின்னருமணிதலிற் றிரண்ட முன்கையிடத்துக் காந்தளையொத்த விரன்மேலே சிறியமணிமோதிரங்கனலப் பெரியதோளிலே கேவணங்குழிந்திருத்தலிற் கழியப்பெரிய மணிகளார்ந்த அருவிலையையுடைய அணிகலந்தழுவக் காதிலே மகரகுண்டலமுந் தோடும் மிளிர்ந்தன வென்க.

மகரத்திற்குங் குண்டலத்திற்கும் இடையில் ஒட்டினசலாகை மின்னுநிற்கத்தோளிலே தாழ்ந்திலங்குங் குண்டலமா. விழித்த கண்ணையுடைய மகரம். இனிச் சலாகை, வாகுவலயமென்பாருமுளர். (கஅ)

நாறுமொளிவிட்டுச்சுடர்வீசுமாணிக்கக்குதம்பை
பேணிநல்லார்கழுத்தணிந்துபெருங்கண்கருமைவிருந்தூட்டி

* நாமகளிலம்பகம், கசஎ.

நீணீர்முத்தநிரைமுறுவல்கடுச்சுட்டெரிஞ்சக்கதிருமிழ்ந்து
தோணீர்க்கடலுட்பவளவாய்த்தொண்டைக்கனிகடொழுதனவே.

காவினைத்தன்னுள்ளேயடக்கி நகுகின்ற தாலியைப் பழையநிலையிலே கிடக்கும் படிபேணி. சுடர்வீசுமாணிக்கத்தைக் கழுத்திலேயணிந்து. கண்ணுக்குக்கரிய மையை யிருத்திட்டு. தோணீர்க்கடல்-தோன்றினகடல், வினைத்தொகை; தோள்-முதனிலை; நீர் இடைக்கிடப்பு.

இ - ள். நல்லார், பேணி யணிந்து ஊட்டிக் கடுவைச்சுட்டு முறுவலையுரிஞ்ச, அதுபட்டுப் பவளவாய் மிக்க கதிரையுமிழ்தலாலே, தொண்டைக்கனிகடோற்றுத் தொழுதனவென்க. (௯௯)

மாலைமகளிரணிந்ததற்பின் பஞ்சவாசங்கவுட்கொண்டு
சோலைமஞ்ஞைத்தொழுதிபோற்றேக்கைசெம்பொனிலந்துவளக்
காலிற்சிலம்புங்கிண்கிணியுங்கலையுமேங்கக்கதிர்வேலு
நீலக்குவளைநிரையும்போற்கண்ணார்காவிலிருந்தாரே.

இ - ள். வேலுங் குவளைநிரையும்போலுங் கண்ணாராகிய அம்மகளிர், ஒப்பனைக்குறைதீர மாலையையணிந்தபின் வெற்றிலையைத்தின்று காலிற்சிலம்பு முதலியனவேங்கக் கொய்சகம் நிலத்தேபட்டுத் துவளச் சென்று சோலையிலே மயிற்றிரளிருந்தாற்போலக் காவிலே யிருந்தாரென்க. (௬௦௦)

மணிவண்டொய்தேநலம்பருகமலாந்தசெந்தாமரைத்தடம்போ
லணிவேன்மன்னனலம்பருகவலர்ந்தவம்பார்மழைக்கண்ணா
பணியார்பண்ணுப்பிடியூர்ந்துபரூஉக்காற்செந்நெற்கதிர்சூடித்
தணியார்கழனிவிளையாடித்தகைபாராட்டத்தங்கினா.

இ - ள். ஒருவண்டு பூக்களினலத்தையெல்லாம்பருகப் பூத்த தாமரைத்தடம் போலே, அரசனேபருக வம்பார்நலத்தைக் காவிலேகொடுத்தமகளிர், அணிகல நிறைந்த சமைத்தலையுடைய பிடியையேறிப்போய்க் கழனியிலேவிளையாடிப் பருத்த தாளினையுடைய செந்நெற்கதிரைச்சூடி யதனாலுந்தணியாராய் அரசன் தமதழகைப் பாராட்ட அக்கழனியிலேதங்கினாரென்க.

இது நகரியினின்றும்போய் நாட்டிலுள்ளனவற்றைநுகர்ந்து இன்பமுற்றமை கூறிற்று. சூடியென்றார், தொழத்தகுதலின்; "தொழுதுகொள வென்க வுகாமை நன்கு" என்றார். (௬௦௧)

எண்ணற்கரியகுங்குமச்சேற்றெழுந்துநானநீர்வளர்ந்த
வண்ணக்குவளைமலரளைஇமணிக்கோல்வளைத்தவனேந்த
வுண்ணற்கினியமதுமகிழ்ந்தாரொலியன்மாலைபுறந்தாழக்
கண்ணக்கழுநீர்மெல்விரலாற்கிழித்துமோந்தார்கனிவாயார்.

இ - ள். அங்ஙனம் விளையாடிய கனிவாயார், அரசன் எழுந்து வளர்ந்த நிறத்தையுடையவாகிய குவளைமலரைவிரவி யுண்ணற்கினியமதுவை மணியழுத்தி விளிம்பிரம்புகட்டின வட்டிலிலேந்த அதனைப் பூமாலை முத்தமாலையென்கின்றவை

[புதல்வர்ப்பேறு.]

புறத்தேதாழவுண்டு மகிழ்ந்தார்; மகிழ்ந்தபின், இவர்கள்குறிப்பு இன்னவென்று அவன் கருதும்படி கழுநீரை யுகிராற்கிழித்து மோந்தாரென்க.

இப்பூ வடுப்படுத்திமோந்தும் இனிய நாற்றத்தவேயாயினாற்போல எம்மையும் உகிர்முதலியவற்றாற் சிறிது வடுப்படுத்திநுகர்தல் எமக்கு வருத்தமென்று அஞ்சினை யாயினும் அஃது எமக்கு மிக்கவின்பமேயாதலின், உனக்குமின்பஞ்செய்யுமென்ப துணர்த்துதற்குக் கிழித்துமோந்தாரென்க. இளமைச்செவ்விமிக்கமகளிர்க்கு இங் ஙனம் வடுப்படுத்திநுகர்தல் இன்பஞ்செய்யுமென்று காமநூலிற்கூறலின், அதனை யீண்டுக் கூறினர். அது *"காமத்தூழுறுகனியையொத்தாள் * * * வேந்தனுஞ் சிறைப்பறவையொத்தான்" என முன்னர்க் கூறியவாற்றானுமுணர்க. (௪௦௨)

இருதுநுகர்வு முற்றிற்று. கவி, ௬௬.

---

புதல்வர்ப்பேறு.

இவ்வாறெங்குமவிளையாடியிளையான்மார்பினலம்பருகிச்
செவ்வாய்விளர்த்துத்தோண்மெலிந்துசெய்யமுலையின்முகங்கருகி
யவ்வாய்வயிறுகால்வீங்கியணிச்சமலரும்பொறையாகி
யொவ்வாப்பஞ்சிமெல்லணைமேலசைந்தாரொண்பொற்கொடியன்னார்.

இ - ள். அக்கொடியன்னார், தாங்கருதிய இத்தன்மையை எங்கிலத்தினுமிரு ந்து புணர்ந்து, இக்கருத்துமுற்றியபின்னர் மகப்பேற்றைவிரும்பி அவனைப்போலும் புதல்வனைப் பெறவேண்டுமென்று அவன்வடிவழகையெல்லாம உட்கொண்டு புணர் ந்து கருப்பந்தங்குதலாலே, விளர்த்து, மெலிந்து, வயா நோய்செய்தவிடுகையினாலே பின்பு முலையின்முகங்கருகி வீங்கிப் பாரமாய்த் தமது மென்மைக்கொவ்வாத பஞ்சணை மேலே தங்கினாரென்க.

மார்பென்றது மெய்யை. பருகியென்னுஞ் செய்தெனெச்சங் காரணகாரியப் பொருட்டாய்க் கருப்பந்தங்கினமைதோன்ற நின்றது; பருகவென்றுமாம். பூப்பின் புறப்பாடீராறுநாளும் நீவாதுறைந்து, நாளுமோரையும் நன்றாயவாறுமுணர்ந்து, தலை வியைநோக்கி, நீயும் இன்பங்கருதாது இவனேபோலும்புதல்வனை யானுடையே னாகவேண்டுமென்று கருதுவாயெனத் தலைவன்கூறிப் பின்னர்ப் புணர்தல்வேண்டு மென நூலிற்கூறியவாறே இவருங்கூறினர். கால் - இடம. (௪௦௩)

தீம்பால்சுமந்துமுலைவீங்கித்திருமுத்தீன்றவலம்புரிபோற்
காம்பேர்தோளார்களிறீன்றார்கடைகடோறுங்கடிமுரசந்
தாம்பாற்பட்டதனிச்செங்கோற்றரணிமன்னன்மகிழ்தூங்கி
யோம்பாதொண்பொன்சொரிமாரியுலகமுண்ணச்சிதறினான்.

* நாமகளிலம்பகம், ௧௬௬.

இ - ள். காம்பேர்தோளார், மூலைகள் பாலைச்சுமந்து அடிவீங்கி, வலம்புரி, நலந்தொலைந்தினுமாறுபோலே நலந்தொலைந்து புதல்வனைப் பெற்றார்; அப்பொழுது மூரசந்தாம் வாயில்கடோறும் கூறுபடநின்றொலித்தன; அக்காலத்தே மன்னன் மகிழ்ச்சிசெறிந்து ஓம்பாதுசொரியும் பொன்மழையை உயர்ந்தோரேற்பப் பெய்தானென்க. (௪௦௪)

காடியாட்டித்தராய்ச்சாறுங்கன்மணியுந்நறுநெய்யுங்
கூடச்செம்பொன்கொளத்தேய்த்துக்கொண்டுநாளும்வாயுறீஇப்
பாடற்கினியபகுவாயுங்கண்ணும்பெருகவுகிருறுத்தித்
தேடித்தீந்தேன்றிப்பிலிதேய்த்தண்ணுவுரிஞ்சிமூக்குயர்த்தார்.

இ - ள். காடியைவார்த்திப் பிரமிச்சாறுங் கண்டசருக்கரைத்தேறும் நறுநெய்யுந் தம்மிற்கூடப் பொன்னுற்றேய்த்துப் பிள்ளைகள்கொள்ளும்படி மருந்தாகச் சில நாட்கொண்டு வாயுறுத்திப் பின்னர்த் தேனிலே அதிவிடயத்தையுந் திப்பிலியையுந்தேய்த்து நாளும்வாயுறுத்தி வாயுங்கண்ணும்பெருகும்படி யுகிரானகற்றி அண்ணுக்கையுரிஞ்சி மூக்கை யுயர்த்தினரென்க.

தராய் - திராயுமாம். தேடி - ஆராய்ந்தென்றுமாம். (௪௦௫)

யாழுங்குழலுமணிமுழவுமரங்கமெல்லாம்பரந்தியம்பத்
தோழன்விண்ணோனவட்டோன்றிவயங்காக்கூத்துவயங்கியபின்
காழார்வெள்ளிமலைமேலுங்காவன்மன்னாகடிநகர்க்கும்
வீழாவோகையவன்விட்டான்விண்பெற்றாரின்விரும்பினார்.

இ - ள். அக்காலத்தே தோழனாகிய சுதஞ்சணன்றோன்றி யாழுமுதலியன அரங்கெல்லாமிசைப்ப இவ்வுலகத்தில் ஆடாதகூத்து இவ்வுலகில்லையாடியபின்னர், கலுழவேகனிட்த்திலுந் தன்சுற்றமாகிய ஒழிநதாரிடத்திலுங் கெடாதவுவகையை யரசன் சொல்லிப் போகவிட்டான்; அவர்களும் அதுகேட்டு விண்பெற்றாரைப்போலே விரும்பினரென்க.

வயங்காக்கூத்து - சேவகசரிதை. காழார்மணிமுழவென்க. (௪௦௬)

தத்தநிலனுமுயர்வீழ்வுமபகையுட்பந்தசையும்
வைத்துவழுவில்சாதகமும்வகுத்தபின்னர்த்தொகுத்தநாட்
சச்சந்தனனேசுதஞ்சணனேதரணிகந்துக்கடன்விசயந்
றத்தன்பரதன்கோவிந்தனென்றுநாமந்தரித்தாரே.

இ - ள். அங்ஙனம் ஓகைபோக்கியபின்னர், கணிகள்திரண்டு, கோள்கள் தமமுடையதம்முடையநிலங்களிலே நிற்கின்றநிலைகளும், அவற்றுட் சில உச்சமானநிலையும், தாழ்ந்தநிலையும், தம்முட்பகைத்தநிலையும், தம்முட்பொருந்தினநிலையும், தாநிற்கின்றதசைகளையும் முன்னேயிடத்திச் சாதகமுமெழுதியபின்னர்ப் பன்னிரண்டெண்ணுமெண்ணுகத் தொகுத்தநாளிலே, அப்புதல்வர்கள் பெயர்களைச் சுமந்தாரென்க.

தேவிமாரை முற்கூறியமுறையே அவர்கள்புதல்வர்பெயர்களையும் வைத்தாரென்க. தரணி - உலோகபாலனியற்பெயர். நட்புமிகுதியால் உலோகபாலன்பெய

[சோலைநுகர்வு.]

ரும், விசயன்பெயருமிட்டான். தத்தன் - விசயமாதேவியார் தந்தைபெயர். அத கோவிந்தமகாராசன் தனதுமகனை ஸ்ரீதத்தனென்று பெயரிட்டதனுணர்க. அப் பெயரைத் தத்தனென்றுகுறைத்துவைத்தார்; சாகரதத்தன்பெயரென்பாருமுளர். பர தன் - அச்சணந்தியாசாரியன்பெயர். (௧௦எ)

ஐயாண்டெய்திமையாடியறிந்தார்கலைகள்படைநவின்றார்
கொய்பூமாலைகுழன்மின்னுங்கொழும்பொற்றோடுங்குண்டலமு
மையன்மார்களுளக்கின்றியாலுங்கலிமாவெகுண்டேர்ந்தார்
மொய்யாரலங்கன்மார்பற்குமுப்பதாகிநிறைந்ததே.

இ - ள். அவ்வையன்மார்கள், ஐயாட்டைநாளை யெண்ணைப்பெற்று மையோலை பிடித்துக் கலைகள்கற்றார்; படைக்கலம பயின்றார்; மாவைவெகுண்டேர்ந்தார்; அங் ஙனஞ் சமைந்தகாலம் அரசனுக்கு முப்பதாண்டாய் நிறைந்ததென்க.

மாலையுங் குழலுந் தோடுங் குண்டலமுமசையாமலூர்தல் ஒழிந்தோர்க்கு அரி தாகலின், அவைகள் நுளங்காமலூர்ந்தாரென்றார். வெகுண்டேர்ந்தார் - அடித்தேறி னார். நிறைந்ததென்றது-அரசவுரிமைநிகழ்த்தினயாண்டுமுப்பதும், முன்னர்க்கழிந் தயாண்டு பதினைந்தும் ஆக நாற்பத்தையாண்டுசென்றமையின், இல்லறத்திற்குரிய காலம் முற்றுப்பெற்றதென்றவாறு. இனித் துறவறத்தின்மேல் உள்ளநிகழ்தற்குக் காரணம் மேற்கூறுகின்றார். (௧௦அ)

புதல்வர்ப்பேறு முற்றிற்று. கவி, ௬.

---

## சோலைநுகர்வு.

பூநிறைசெய்தசெம்பொற்றோடிகம்புனையுமல்குல்
வீநிறைகொடியனாரும்வேந்தனுமிருந்தபோழ்திற்
றாநிறத்துகிலின்மூடிப்படலிகைகொண்டுவாழ்த்தி
மாநிறத்தளிர்நன்மேனிமல்லிகைமாலைசொன்னாள்.

இ - ள். பூநிறைதல்செய்த பூந்தட்டையொக்குமல்குலையுடைய பூத்த கொடிய னாரும், அரசனுஞ் சேர்ந்திருந்தகாலத்தே பூவிடுபெட்டியைத் துகிலான்மூடிக் கையி லேகொண்டு அரசனைவாழ்த்தி மல்லிகைமாலை ஒருமொழிகூறினாளென்க.

வீநிறைகொடியென்றார், புதல்வர்ப்பயந்தமைதோன்ற. (௧௦௯)

தடமுலைமுகங்கள்சாடிச்சாந்தகங்கிழிந்தமார்பிற்
குடவரையனையகோலக்குங்குமக்குவவுத்தோளாய்
தொடைமலர்வெறுக்கையேந்தித்துன்னினன்வேனில்வேந்த
னிடமதுகாண்கவென்றாளிறைவனுமெழுகவென்றான்.

குடவரை - அத்தகிரி. தொடைமலர் - தொத்தாகியபூ.

இ - ள். அவள் எங்ஙனங்கூறினாளெனின், முலைமுகங்கள்சாடிக் கிழிந்த மார்

பிணையுடைய வரசனே! காமன் பூவாகிய*பாகுடத்தையேந்திச் சோலையிலே யுளுயி னன்; அஃது அவனைக்காண்டற்குஇடம்; நீசென்று காண்பாயாக வென்றுகூறினள்; அரசனும் எழுந்திருப்பீராக வென்றானென்க. (௧௧௦)

முடித்தலைமுத்தமின்னுமுகிழ்முலைமுற்றமெல்லாம்
பொடித்துப்பொன்பிதிர்ந்தவாகத்தேவியர்புகழ்ந்துசூழக்
கடுத்தவாள்கனலவேந்திக்கன்னியர்காவலோம்ப
விடிக்குரற்சியமொப்பானிழையொளிவிளங்கப்புக்கான்.

முத்தமின்னுமுலை; முகிழ்போலுமுலை. கடுத்த - கோபித்த.

இ - ள். அங்ஙனங்கூறியவரசன், முடியைத் தலையிலேயுடைய முலைப்பரப் பெல்லாஞ் சுணங்குதோன்றிச் சிதறின ஆகத்தையுடையதேவியர் தன்னைச்சூழ, கன் னியர் புகழ்ந்து போற்றல்செய்ய, வாளையேந்தி, இழைவிளங்க அச்சோலையிலே புக் கானென்க. (௧௧௧)

இலங்குபொன்னாரமார்பினிந்திரனுரிமைசூழக்
கலந்தபொற்காவுகாண்பான்காமுறப்புக்கதேபோ
லலங்குபொற்கொம்பனாருமன்னனுமாடமாதோ
நலங்கவின்கொண்டகாவுநல்லொளிநந்திற்றன்றே.

இ - ள். அங்ஙனம்புகுந்த கொம்பனாருமரசனும், தாம் முன்புபழகின கற்பகச் சோலையைக் காண்டற்கு இந்திரன் உரிமைசூழப் புக்கு ஆடினதன்மைபோல ஆட, அக்கா ஒளிசிறந்ததென்க. (௧௧௨)

புலவியுண்மகளிர்கூந்தற்போதுகுக்கின்றதேபோற்
குலவியசிறகர்ச்செங்கட்கருங்குயில்குடையக்கொம்பா
நிலவியதாதுபொங்கநீணிலமணலிற்போர்த்துக்
கலவியிற்படுத்தசாய்பொற்கம்பலமொத்ததன்றே.

இ - ள். அந்தக் காவிடமெல்லாம், மகளிர் புலவிக்கண்ணே தமதுகூந்தலிற் போதை யுகுக்கின்றதன்மைபோலே, குயில் கொம்பிலேயிருந்து தாதுபொங்கக் குடைய அப்பூக்கள் மணலிலேவீழ்ந்து அதனை மறைக்கையினாலே, கலவிகாரணத் தாற்படுத்த கம்பலத்தை யொத்ததென்க. (௧௧௩)

காசுநூல்பரிந்துசிந்திக்கம்பலத்துக்கதேபோல்
மூசுதேன்வண்டுமொய்த்துமுருகுலாய்த்துயிலமன்னை
மாசில்பூம்பள்ளிவைகிவளர்ந்தெழுமகளிரொப்பத்
தூசுபோர்ச்சிறகரன்னந்தொழுதியோடிரியச்சேர்ந்தார்.

நூல்பரிந்து - நூலற்று.

இ - ள். மணிகள்சிந்திக் கம்பலத்தே வீழ்ந்துகிடந்த தன்மைபோலே அக்கம் பலத்தை யொத்தவிடத்தே தேனும்வண்டும் மொய்த்துத் துயிலாநிற்க, அப்பூம்பள்ளி யிலே மயில் கிடந்தெழுகின்றது துயில்கொண்டெழுகின்ற மகளிரையொவ்வாநிற்க, அன்னங்கள் கெடாநிற்க, அவர்கள் சேர்ந்தாரென்க. (௧௧௪)

---

* பாகுடமென்பது "ப்ராப்ருதம்." என்னும்வடமொழிச்சிதைவு; கையு றை யென்பது பொருள்.

[சோலைநுகர்வு.]

காதிக்கண்ணரிந்துவென்றவுலகுணர்கடவுள்காலத்
தாதிக்கண்மரங்கள்போன்றவஞ்சொலீரிதனினுங்கள்
காதலிற்காணலுற்றவிடமெலாங்காண்மினென்று
னீதிக்கணின்றசெங்கோனிலவுவீற்றிருந்தபூணான்.

காதி வினைகளைத் தன்னிடத்தேஇல்லாதபடி வேரறுத்து அவற்றைவென்ற. அவை ஞானாவரணீயமுதலாயின.

இ - ள். அங்ஙனஞ் சேர்ந்தபின்னர் அரசன், அஞ்சொலீர்! இம்மரங்கள் *இறைவன்றோன்றின ஆதிகாலத்திடத்து மரங்கள்போற் பயன்பட்டுநின்றன; இதனாலே நீர்நுங்காதலாற் காணவேண்டியவிடங்களெல்லாவற்றையுஞ் சென்று காண்பீராக வென்றானென்க. (௧௧௫)

வானவாமகளிர்போலவார்கயிற்றூசலூர்ந்துங்
கானவாமகளிர்போலக்கடிமலர்நல்லகொய்துந்
தேனிமிர்குன்றமேறிச்சிலம்பெதிர்சென்றுகூயுங்
கோனமர்மகளிர்கானிற்குழாமயிற்பிரிவதொத்தார்.

இ - ள். அவன் அங்ஙனங்கூறியபின்னர், அவன்றேவிமார் ஊர்ந்துங் கொய்துங் கூவியும் மயிற்குழாம் வெவ்வேறாகப் பிரியுந்தன்மையை யொத்தாரென்க. ()

நெடுவரையருவியாடிச்சந்தனநிவந்தசோலை
படுமதங்கவரும்வண்டுபைந்தளிர்கவரியேந்திப்
பிடிமகிழ்ந்தோப்பநின்றபெருங்களிற்றரசுநோக்கி
வடிமதர்மழைக்கணல்லார்மன்னனைமகிழ்ந்துநின்றார்.

இ - ள். அங்ஙனம் பிரிந்தநல்லார் அத்தொழில்களால் இளைத்தலின், அருவியிலேயாடி மிக்கமதத்தைநுகராநின்றவண்டைத் தளிராகியகவரியையெடுத்துப் பிடியோட்டச் சோலையிலேநின்ற களிற்றைநோக்கித் தாமும் அங்ஙனங்கூடுதற்கு அரசனை விரும்பிநின்றாரென்க. (௧௧௭)

கொழுமடற்குமரிவாழைத்துகிற்சுருள்கொண்டுதோன்றச்
செழுமலர்க்காமவல்லிசெருக்கயல்சிற்பமாகக்
கழுமணிச்செம்பொனாழிக்கைவிரலுகிரிற்கிள்ளி
விழுமுலைச்சூட்டிநின்றார்விண்ணவர்மகளிரொத்தார்.

---

* இறைவனென்றது ரிஷபதீர்த்தங்கரனை; இவர் முதல்தீர்த்தங்கரர். இவர் தந்தையும், பதினான்காமனுவுமாகிய நாபிராசன் காலத்து "மேகங்களெழுந்து மழை பொழிந்தன; எல்லாத்தானியங்களும் உழுது வித்தாமல் காலஸ்வபாவத்தால் தாமே விளைந்தன; கற்பகவிருட்சங்கள் மறைந்தபின், நானாவிதமாகிய விருட்சங்கள் தாமே தோன்றிப் பலித்தன" என்று ஸ்ரீபுராணங் கூறுதலின், ஈண்டு ஆதிகாலத்திடத்து மரங்களென்றது, அக்காலத்துத் தாமே தோன்றிப் பலித்தமரங்களை யென்றறிக.

இ - ள். அங்ஙனம்விரும்பினவர், வாழையினது துகில்போலும் வெள்ளிய குருத்தை வாங்கிக்கொண்டு அதிலே சிற்பத்தொழில்தோன்ற உள்ளே கயற்பிணைக் கும் அதனைச்சூழக் காமவல்லியுமாக உகிராற்கிள்ளி அதனை முலையிலேசூட்டி யிங் ஙனம் விநோதந்தோன்றநின்றார்; அப்பொழுது அவர் தெய்வமகளிரை யொத்தா ரென்க. (கக அ)

க. கடைதயிர்க்குரலவேங்கைகண்ணுறச்சென்றுநண்ணி
மிடைமயிர்க்கவரிநல்லான்கன்றுணக்கண்டுநிற்பார்
புடைதிரண்டெழுந்தபொம்மல்வனமுலைபொறுக்கலாற்றார்
நடைமெலிந்திகலியன்னநன்னடைநயந்துநிற்பார். (கக௯)

உ. எம்மவின்வருகவேந்தனிங்கெனவிரங்குநல்லியாழ்
வெம்மையின்விளையப்பண்ணியெஃகுநுண்செவிகள்வீழச்
செம்மையிற்கனிகொள்காமத்தூதுவிட்டோதமுத்தம்
வெம்முலைமகளிர்வீழ்பூம்பொதும்பருள்விதும்பினாரே.

இவையிரண்டுமொருதொடர்.

க. கடைகின்ற தயிரிலெழுந்த குரலவாகிய வேங்கை யெதிர்ப்படுதலாலே சென்றணுகிக் கவரிக்கன்றும் பசுவின்கன்றுமுண்ண. முன்னர் அன்னத்தோடிகலி நடந்து பின்னர் முலைப்பாரம் பொறுககலாற்றாராய்த் தமது நன்னடைதோற்று அவற்றினடையைநயந்து.

உ. எஃகுநுண்செவி - அரசனுடைய கூரியநுண்செவி. அது * மூவகைச்செ வியினுந் தலையானசெவி. தலைமையோடே கனிதல்கொண்டகாமம். கேட்டாற் காமத்தையே விரும்புவித்தலிற் பாட்டைக் காமத்தூதென்றார். முத்தம்விரும்பின முலை. சுற்றுக்கவிந்த பூக்களையுடைய இளமரச்செறிவு. விதும்பினார் - நடுங்கினார்.

இ - ள். அங்ஙனகின்றமகளிர், கண்டுநிற்பார்; நயந்துநிற்பாராய்ப் பின்னர்ப் புணர்ச்சிவிருப்பினாலே மிக்குகின்ற எம்மவின் அரசன் வரவேண்டுமென்றுகருதி யாழைப்பண்ணி யவன்செவிகள்தாழும்படிபாடி யவனையழைத்துப் பொதும்பிலே கூடுதற்கு விதும்பினாரென்க. (கஉ0)

பிடிமருணடையினார்தம்பெருங்கவின்குழையப்புல்லித்
தொடைமலர்க்கண்ணிசேர்த்திச்சுரும்புணமலர்ந்தமாலை
புடைமதுவொழுகச்சூட்டியுருவத்தார்குழையவைகிக்
கடிமலர்மகளிரொத்தார்காவலன்களிவண்டொத்தான்.

இ - ள். அவன், அதுகேட்டு வந்து அவர்கவின்கெடுகையினாலே கண்ணியைச சேர்த்தி மாலையைச்சூட்டித் தாரிற்பூ அலரப்புல்லி வைக, ஆண்டு அம்மகளிர் கடி மலரையொத்தார்; அவன்றான் களிவண்டையொத்தானென்க.

---

* மூவகைச்செவிகளாவன:—தோற்செவி, மரச்செவி, எஃகுச்செவியென்பா; "ஒட்டைமரச்செவியர்கேளார்" என்றார் கேமசரியாரிலம்பகத்திலும். தோற்செவி வந்தவிடத்துக் காண்க.

[சோலைநுகர்வு.]

வைகவெனத்திரிக்க. கடி - ஈண்டு வரைவு. கடியென்னுமுரிச்சொல் முத னிலையாய்நின்ற பெயரெச்சம் வினைத்தொகையாய்நின்றது. கடிந்தமலரெனவே, மேற் கூட்டமின்றாயிற்று. களிவண்டெனவே, மேற் றேனுகரும்விருப்பமின்றி நுகர்ச்சியமைந்த வண்டாயிற்று. என்றது, மேற் றுறவுக்குக் காரணங்கூறுகின்றா ராதலின், ஈண்டுத் தேனையுமிழ்ந்து அமிர்தத்தை நுகருமென்பதுதோன்றக்கூறினார்; "தேன்வாயுமிழ்ந்த வமிர்துண்டவன்போன்றுசெல்வன்" என்று பதிகத்துள்அவ்வா றேகூறலின். (கஉக)

இழைந்தவர்நலத்தையெய்தியினந்திரியேறுபோலக்
குழைந்ததார்நெகிழ்ந்ததானைக்கொற்றவன்பெயர்ந்துபோகி
வழிந்துதேன்வார்ந்துசோரும்வருக்கையினீழல்சேர்ந்தான்
விழைந்தவக்கடுவனுங்கோர்மந்தியைவிளித்ததன்றே.

இ - ள். தாரினையும், நெகிழ்ந்த துகிலினையுமுடைய கொற்றவன்றான், கூடின வர்கள் நலத்தையெல்லாம் விழைவறநுகர்ந்து, இனத்தை மனத்தாற்கைவிட்ட ஏறு போல மீண்டுபோய் ஓர் வருக்கையினீழலைச் சேர்ந்தான்; ஆங்கே களவொழுக்கத் தை விழைந்தகடுவன் அதுபெறுதற்கு ஒருமந்தியை யழைத்ததென்க.

தேன் பழத்தின் நின்றும் வடிந்துவீழும் வருக்கை. (கஉஉ)

அளித்திளமந்திதன்னையார்வத்தால்விடாதுபுல்லி [து
யொளித்ததொருபொதும்பிற்சேர்ந்தாங்கொருசிறைமகிழ்ச்சியார்ந்
தளிர்த்தலைப்பொதும்பினீங்கித்தம்மினமிரண்டுஞ்சேர்ந்த
களித்தலைக்கூட்டங்காதன்மந்திகண்டிருந்ததன்றே.

இ - ள். அம்மந்திவந்தபின்னர்க் கடுவன் சேய்த்தாக வொளித்துப்போய் ஒரு பொதும்பரின் ஒருசிறையிலே யம்மந்தியையளித்துப் புல்லுகையினாலே யவை யிரண்டும் மகிழ்ச்சியையார்ந்து அப்பொதும்பரினின்றுநீங்கித் தம்மினங்களைச் சேர்ந் தன; அக்கூட்டத்தினை யக்கடுவனது காதன்மந்தி கண்டிருந்ததென்க. (கஉங)

பரத்தையர்த்தோய்ந்தமார்பம்பத்தினிமகளிர்தீண்டார்
திருத்தகைத்தன்றுதெண்ணீராடிநீர்வம்மினென்ன
வுரைத்ததென்மனத்தினில்லையுயர்வரைத்தேனையுண்பார்
வருத்துங்காஞ்சிரமும்வேம்பும்வாய்க்கொள்வார்யாவர்சொல்லாய்.

இ - ள். அங்ஙனங் கண்டிருந்தமந்தி, பரத்தையைத் தோய்ந்தமார்பந் திருத் தகைத்தன்றாகலின், அதனைப் பத்தினிமகளிர் தீண்டார்; இனித் தெண்ணீரிலே குளித்து வம்மினெனக்கூற, அதுகேட்டுக் கடுவன் நீகூறியது யான் மனத்துநினைத்த தில்லை; அன்றியுந் தேனையுண்பார் காஞ்சிரத்தையும் வேம்பையுந்தின்னார்; யான் அத் தன்மையேனாதலை நீயேகூறாயென்றதென்க. (கஉச)

ஈங்கினியென்னைநோக்கியென்செய்தியெனக்குவாறு
ணீங்கினைசிறிதுநிற்பிற்காண்டியானியுமென்னைத்

தூங்கித்தான் றுளங்கமந்திதொழுத்தையேன்செய்ததென்று
தாங்குபுதழுவிக்கொண்டுதன்னைத்தான்பழித்ததன்றே.

இ - ள். அம்மந்தி மறுமொழிகொடாது தனித்துநோக்கலின், அக்கடுவன்றான் தூங்கி, இனி யிவ்விடத்து என்னை யிங்ஙனநோக்கி யென்செய்வாய்; எனக்குஉயிர் போயிற்று; அதனை யிங்ஙனஞ் சிறிதுபொழுதுநிற்பின், நீயுங் காண்பாயென்று மந்தி யதுமனக் துளங்கச்சொல்ல, அம்மந்தி, இத்தொழுத்தையேன் செய்ததோர் வருத்த மிதனை யொழிகவென்று எடுத்துத் தழுவிக்கொண்டு தன்னைத்தானே பழித்ததென்க.

தொழுத்தையேன் - நினது ஏவற்றொழில் செய்தற்குரியேன்; * "இல்லுட்-டொழுத்தையாற் கூறப் படும்." என்றார்பிறரும். (கஉ௫)

கண்ணினுற்குற்றங்கண்டுங்காதலன்றெளிப்பத்தேறிப்
பெண்மையானிகழ்ந்தமந்திபெருமகிழுவகைசெய்வான்
றிண்ணிலைப்பலவின்றேங்கொள்பெரும்பழங்கொண்டுகீறிப்
பண்ணுறுசுளைகள்கையாற்பகுத்துணக்கொடுத்ததன்றே.

தேறி - தேற. மனமகிழுமகிழ்ச்சி. பகுத்து - சோதுகளைநீக்கி.

இ - ள். அங்ஙனம் பழித்தமந்தி, குற்றத்தைக் கண்ணாற்கண்டுவைத்துந் தன் கணவனுடநீர்ப்பத் தன்பெண்மையாற் றேறுதலின், அதற்குக் கடுவன் மகிழ்ந்து அதனை மகிழ்ச்சிசெய்யவேண்டிப் பலாப்பழத்தையெடுத்துக்கொண்டு கீறிப் பகுத்து ஆராய்தலுற்றசுளைகளை யதுதின்னக் கொடுத்ததென்க. (கஉ௬)

இன்கனிகவருமந்திகடுவனோடிரியவோட்டி
நன்கனிசிலதனுண்ணநச்சுவேன்மன்னனோக்கி
யென்பொடுமிடைந்தகாமமிழிபொடுவெறுத்துநின்று
னன்புடையரிவைகூட்டம்பிறனுழைக்கணடதொத்தே.

சிலதன்-அரசனேவல்செய்து அக்காவினைக் காக்கின்றவன். பிறரும்† "பூவிலை மடந்தைய ரேவற் சிலதியர்" என்றார். என்பு - ஈண்டு உடம்பு. ஈண்டுக் காம மென்றது - அரசவுரிமையையெய்திநுகரும் போகத்தின்மேலே நிகழுமார்வத்தை. அது‡ "செல்வம் புலனே புணர்வுவிளை யாட்டென் - றல்ல னீத்த வுவகை நான்கே." என்பதனானுணர்க. ஈண்டு இழிபென்றது இளிவரலாகிய சுவையையாதலின், அச் சுவையையுணர்த்தும நால்வகை மெய்ப்பாட்டினும் முன்னர்நின்ற மூப்பினையே கொள்க. அது || "மூப்பே பிணியே வருத்த மென்மையோ - டியாப்புற வந்த விளி வர னான்கே" என்பதனானுணர்க. இனி நான்கினையும் வெறுத்தானென்றுமாம்.

* நாலடியார், புல்லறிவாண்மை, ௬.

† சிலப்பதிகாரம், புகார்காண்டம், இந்திரவிழவூரெடுத்தகாதை: குடா மாததர் வேதா ளிகரொடு - நாழிகைக் கணக்கா நலம்பெறு கண்ணுளா - காவற் கணி கைய ராடற் கூத்தியா - பூவிலை மடந்தைய ரேவற் சிலதியா - பயிறொழிற் குயிலு வா பன்முறைக் கருவியா - நகைவே ழம்பரொடு வகைதெரி யிருக்கையும்.

‡ தொல்காப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல், கக.

|| " " " ௫.

[சோலைநுகர்வு.]

இ - ள். அங்ஙனங் கனியைக்கவருமந்தியைக் கடுவனோடே கெட்டுப்போம் படியலைத்து அலைவுநின்கின்றகனியைச் சிலதனுண்ணாநிற்க, அதனை மன்னன் நோக்கித் தனக்கு அன்புடையமனைவி தன்னைக்கூடுகின்றகூட்டத்தைப் பிறனிடத்தே கூடக்கண்டதன்மையையொத்து, உடம்புதோன்றுகின்றகாலத்து உடன்றோன்றிச் செறிந்த ஆர்வத்தையும் மேல்வருகின்ற மூப்பையும் வெறுத்துநின்றானென்க. (கஉஎ)

கைப்பழமிழந்தமந்திகட்டியங்காரனொத்த
திப்பழந்துரந்துகொண்டசிலதனுமென்னையொத்தா
னிப்பழமின்றுபோகத்தின்பமேபோலுமென்று
மெய்ப்படவுணர்வுதோன்றிமீட்டிதுகூறினானே.

இ - ள். அங்ஙனம்வெறுத்துநின்றவன், கைப்பழமிழந்தமந்தி அரசையிழந்த கட்டியங்காரனொத்தது; அவற்றைத் துரந்துஇப்பழத்தைக்கொண்டசிலதனும் அவனைத்துரந்து அரசையெய்திய என்னையொத்தான்; இன்னும் வலியான்வாங்கி நுகர்தற்குரியவிப்பழத்தை நுகர்ந்து இவனெய்துகின்றவின்பம் இன்று யானுகர்கின்ற இப்போகத்தின்பத்தையொக்குமென்று உண்மையாகவுணர்வுதோன்றியதனானமையாதே தன்னெஞ்சுடனே மீண்டும் இத்தன்மைதோன்றக் கூறினானென்க. (கஉஅ)

மெலியவர்பெற்றசெல்வம்வேரொடுங்கீழ்ந்துவௌவி
வலியவர்கொண்டுமேலைவரம்பறத்தரம்புசெய்யுங்
கலியதுபிறவிகண்டாங்காலத்தாலடங்கிநோற்று
கலிவிலாவுலகமெய்தனல்லதேபோலுமென்றான்.

கலியாவது - நுகருமபொருள்களின்மையான் அவற்றின்மேற்செல்லும் பற்றால் நிகழும் வருத்தம்; செருக்குமாம்.

இ - ள். அவன் எங்ஙனங்கூறினானெனின், வலியில்லாதவர் பெற்றசெல்வத்தை வலியவர் மேலைவரம்பிகந்த வேரோடும் கீழ்ந்து வௌவிக்கொண்டு குறும்பு செய்யும் பிறவியதுகலியைக் கண்ணுறக்கண்டாம்; ஆதலின், இச்செல்வத்தைக்கைவிட்டுத் துறத்தற்குரியகாலத்தேதுறந்து தவஞ்செய்து ஐம்பொறியுமடங்கி யொன்றானு நலிவிலாத வீட்டுலகத்தை யெய்துதலே நல்லதுபோலுமெனக்கென்று கூறினானென்க.

மேலைவரம்பிகந்தென்றது - தந்தைதாயத்தைப் புதல்வன் எய்துதற்குரியனென முன்னர்க்கூறிய வரம்பைக்கடந்தென்றவாறு. என்றது: சச்சந்தனரசைக் கட்டியங்காரன் வலிதினெய்திய தன்மை கூறியவாறாயிற்று. அரம்பு - குறும்பு. (கஉகூ)

நல்வினையென்னுநற்பொற்கற்பகமகளிரென்னும்
பல்பழமணிக்கொம்பீன்றுபரிசில்வண்டுண்ணப்பூத்துச்
செல்வப்பொழ்சிறுவரென்னுந்தாமங்கடாழ்ந்துநின்ற
தொல்கிப்போம்பாவக்காற்றினொழிகவிப்புணர்ச்சியென்றான்.

இ - ள். நல்வினையென்கின்ற கற்பகத்தின்மணிக்கொம்பு, பரிசிலராகிய வண்டு

நகரும்படி பரிசிலைப்பூத்து, மகளிரென்கின்ற பழத்தையீன்று, புதல்வரென்கின்ற மாலைகள் தன்னிடத்தே தங்கிநின்றது; இங்ஙனநின்றது தீவினையாகிய காற்றுவந் தடித்தலின், நிலைபேறின்றிச் சாய்ந்து விழுந்துபோமாயிருந்தது; இஃது இங்ஙனம் விழுவதற்குமுன்னே யிவ்வில்லறத்திற்பயிற்சி நம்மைவிட்டு நீங்குவதாகவென்று நெஞ்சை வலியுறுத்தினனென்க. (௧௩௦)

வேட்கைமையென்னுநாவிற்காமவெந்தேறன்மாந்தி
மாட்சியொன்றுமின்றிமயங்கினேற்கிருளை நீங்கக்
காட்டினார்தேவராவர்கைவிளக்கிதனையென்று
தோட்டியாற்றொடக்கப்பட்டசொரிமதக்களிற்றின் மீண்டான்.

இ - ள். அங்ஙனம் வலியுறுத்தினவன், வேட்கைத்தன்மையென்னுநாவாலே காமமாகிய கள்ளை நிறையவுண்டு வீட்டினைத்தரும் நற்செய்கை சிறிதுமின்றிப் போகத்தே மயங்கினேற்கு இவ்விருணீங்கும்படி வீட்டுநெறியிலே செலுத்துங் கைவிளக்காகிய துறவுள்ளத்தைக் காட்டியவிவர்கள் தேவராகக்கூடுமென்றுகூறித் தோட்டியைக்கடந்த மதயானைபோலாது தோட்டியாற் றொடக்கப்பட்டதோர் மதயானைபோலே போகநுகர்ச்சியினின்றுமீண்டானென்க.

ஐ - அசை. காட்டினார் - மந்திபும், கடுவனும், சிலதனும். இவர்கள் இங்ஙனங் காட்டியநல்வினையான், மேலே தேவராவரென்றுமாம். களிறு - இல்பொருளுவமை. (௧௩௧)

கைந்நிறையெஃகமேந்திக்கனமணிக்குழைவில்வீச
மைந்நிறமணிவண்டார்ப்பவார்தளிர்கவரிவீச
மெய்ந்நெறிமகிழ்ந்துநின்றான்வேனில்வாய்க்காமனொத்தான்
மொய்ந்நிறமாலைவேய்ந்துமுருகுலாமுடியினானே.

இ - ள். அங்ஙனமீண்டமுடியினான், வீச ஆர்ப்ப வீச ஏந்தி வீட்டைவிரும்பிநின்றவன், காமனையொத்தானென்க.

தளிர் கவரிவீசவென்றார், பொதும்பிடைத் தனியேநிற்றலின். காமனையொத்தார், மனவேட்கையடங்குதலின். (௧௩௨)

கடுச்சிகைமுத்துத்தாமம்வானுதனான்றுநக்கப்
படுத்தனர்பைம்பொற்கட்டில்பாடினர்கீதந்தூப
மெடுத்தனரெழுந்துதேனார்ரிமணிவீணையார்தத
கொடிப்பலபூத்துச்சூழ்ந்தகுஙகுமக்குன்றமொத்தான்.

இ - ள். தொழில்செய்தற்குரியமகளிர், சிகைநடுவிற் றலைப்பாளை நான்றுநக்க நின்று கட்டிலைப்படுத்தார்; அதிலே அவனிருந்தபின்னர்ச் சிலர் தூபமெழுப்பினார்; சிலர் பாடினார்; அதன்பின்னர் யாழுமெழுந்தார்த்தன; அவை யங்ஙனம் நிகழ மகளிர்சூழவிருந்தவன், பலகொடிபூத்தசூழ்ந்த குங்குமமலையை யொத்தானென்க. ()

மெள்ளவேபுருவங்கோலிவிலங்கிக்கண்பிறழநோக்கி
முள்ளெயிறிலங்கச்செவ்வாய்முறுவற்றாதியாக

சோலைநுகர்வு.

வள்ளிக்கொண்டுண்ணக்காமங்கனிவித்தார்பனிவிற்றாழ்ந்த
வள்ளிதழ்மாலைமார்பன்வச்சிரமனத்தனானான்.

பனிவில் - முத்துவடம்; ஆகுபெயர்.

இ - ள். அங்ஙனமிருந்தவனை யம்மகளிர், தம்புருவத்தைவளைத்துக் கண் விலங்கிப்பிறழப் பார்த்துச் செவ்வாயில் எயிறிலங்க முறுவலிக்கு முறுவற்றூதுமுதலாக ஒழிந்த காமக்குறிப்புக்கள் நிகழ்த்துவனவற்றைக் கருவியாகக்கொண்டு அவன் காமவின்பத்தை யள்ளியுண்ணும்படி பழுப்பித்துப் பார்த்தார்; பார்த்ததற்கு அவன் மனநெகிழாது துறவின்கண்ணே வைரமனத்தனாயினானென்க. (கஙச)

முலைமுகஞ்சுமந்தமுத்தத்தொத்தொளிர்மாலையாரு
மலைமுகந்தனையமார்பின்மன்னனுமிருந்தபோழ்திற்
கொலைமுகக்களிறனாற்குநாழிகைசென்றுகூறக்
கலைமுகமல்லர்புல்லிக்கமழ்நீராட்டினாரே.

முலைத்தலைசுமந்த முத்தத்தொத்துவிளங்குமாலை. மலையின்பெருமையைக் கொள்ளைகொண்டாற்போலு மார்பு. மஞ்சனமாட்டுதற்குக்கூறிய இலக்கணங்கள்போன மல்லர்.

இ - ள். அங்ஙனம் மகளிருமரசனுமிருந்தபொழுதிற் கழிந்தநாழிகையைக் கணிகள்கூற, மல்லர் உடம்புதடவி மஞ்சனமாட்டினாரென்க. (கஙரு)

வெண்டுகில்மாலைசாந்தம்விழுக்கலம்விதியிற்சேர்த்தி
நுண்டுகிற்றிரைகள்சேர்ந்தநூற்றுலாமண்டபத்துக்
கண்டிரண்முத்தமென்றோட்காவிக்கண்மகளிர்போற்றி
யெண்டிசைமருங்குமேத்தவினிதினேறினானே.

இ - ள். துகின்முதலியநான்கினையும் அரசியலிற்கூறியவாற்றாலேசேர்த்தி எண்டிசையினின்று மகளிர் போற்றியேத்தத் திரைகள்சேர்ந்த நூறடியுலாவுதலையுடைய அமுதுசெய்யுமண்டபத்தே யேறினானென்க.

பொருட்கட்டோன்றும் வரையறைக்குணப்பெயராகிய நூறென்னுமெண்ணுப் பெயர் எண்ணுடைப்பொருண்மேல் ஆகுபெயராய்நின்றது, *"ஆறறி யந்தணர்" என்றாற்போல. உண்டால் நூறடியுலாவுதல் வேண்டுமென்று மருத்துவநூல்கூறிய தனைக் கூறினார். (கஙசு)

நெய்வளங்கனிந்துவாசநிறைந்துவான்வறைகளார்ந்து
குய்வளங்கழுமிவெம்மைத்தீஞ்சுவைகுன்றலின்றி
யைவருமொருவனன்னவடிசினூன்மடையனேந்த
மைவரைமாலைமார்பன்வான்சுவையமிர்தமுண்டான்.

இ - ள். கனிந்து, நிறைந்து, ஆர்ந்து, கழுமி, அறுசுவையுங்குறைதலின்றி வெய்

* கலித்தொகை, கடவுள்வாழ்த்து.

மையையுடையவடிசிலை வீமசேனனையொத்த மடையனேந்த, அரசன் அவ்வடிசிலை யுண்டானென்க.

குய் - தாளிப்பு. நூன்மடையன் - நூல்போனமடையன். (கஙூ௰)

கைப்பொடிசாந்தமேந்திக்காரகநீர்விதியிற்பூசி
மைப்படுமழைக்கணல்லார்மணிச்செப்பின்வாசநீட்டச்
செப்படுபஞ்சவாசந்திசைபெலாங்கமழுவாய்க்கொண்
டொப்புடையுறுவர்கோயில்வணங்குதுமெழுகவென்றான்.

பொடி - உழுத்தம்பொடி முதலியன.

இ - ள். முன்னர்ப் பொடியையும் பின்னர்ச் சந்தனத்தையுந் தன்கையிலே வாங்கி நீராலே நூலில்விதித்த விதிதப்பாமற்பூசி நல்லார் செப்பிலிருந்த முகவாசத்தைநீட்ட அதனைத்தின்று கோயிலில் உறுவரை யாம் வணங்குதும்; அதற்கு எழுவீராகவென்றானென்க.

செப்படுமொப்புடைக்கோயில் - செப்பினைத் தன்னோடுவமிக்குமளவில், அதனைக்கெடுக்கும் ஒப்பினையுடைய கோயில். உறுவர் - எல்லாத்தேவரினுமிக்கவர். ()

சோலைநுகாவுழுற்றது. நவி, கூ.

---

அறிவர்சிறப்பு.

ஒருபகல்பூசிஞேராண்டொழிவின்றிவிடாதுநாறும
பெரியவர்கேண்மைபோலும்பெறற்கரும்வாசவெண்ணெ
யரிவையர்பூசியாடியகிற்புகையாவியூட்டித்
திருவிழைதுகிலும்பூணுந்திறப்படத்தாங்கினாரே.

இ - ள். அதுகேட்டு அரிவையர் ஒருபொழுதுபூசின் ஒருகாலமுமொழிவின்றாய் எக்காலமும் விடாமல்நாறும் பெரியவர்கேண்மையையொக்கும் வாசவெண்ணெயைப்பூசி மஞ்சனமாடிப் புகைத்துத் துகிலையும் பூணையுந் தாங்கினாரென்க.

ஓராண்டுமென்னுமும்மை விகாரத்தாற்றொக்கது. அஃது எக்காலமுமென்னும் பொருட்டு. (கஙூக)

நற்றவஞ்செய்தவீரருளவழிநயந்துநாடும்
பொற்றதாமரையினுளிற்பூஞ்சிகைமுத்தமின்னக்
கொற்றவற்றொழுதுசேர்ந்தார்கொம்பனார்வாமன்கோயின்
மற்றவன்மகிழ்ந்துபுக்குமணிமுடிதுளக்கினானே.

மிகத் தவத்தைச்செய்து அதனால் நால்வகைவீரத்தையுமுடையார். அவை

[அறிவர்சிறப்பு.]

*"கல்வி தறுகண் ணிசைமை கொடையெனச்-சொல்லப்பட்ட பெருமித நான்கே" என்பதனானுணர்க.

இ - ள். அங்ஙனந் தாங்கினகொம்பனார், வீரனாநயந்து அவருள்ளவிடத்தை நாடும் பொற்றாமரையினைப்போலே கொற்றவனை நாடிச்சென்று முத்தமின்னைத் தொழுது சேர்ந்தார்; பின்னர்அவன் அதற்குமகிழ்ந்து வாமன்கோயிலிலேபுக்கு வணங்கினானென்க. (கசo)

வேறு.

கழுமலர்ப்பிண்டிக்கடவுளைக்கமலத்
தடிமலர்சூடியவருலகில்யாரே
யடிமலர்சூடியவருலகையேத்த
வடிமலர்தூவவருகின்றாரன்றே.

எக்காலமும் புதிதாகியமலர். கமலத்தேநடந்த அடியாகியமலர்.

இ- ள். கடவுளுடையதிருவடியை முற்பிறப்பிற் சூடினவர் இப்பிறப்பில் இவ்வுலகின்கண்யாவராய் நுகர்வரெனக் கேட்பீராயின், அவ்வடிமலரைச்சூடினவர்களன்றே யுலகமேத்தும்படி அரசர் வடித்தமலரைத்தூவ ஈண்டுவருகின்றவரென்று தேவியர்கேட்பத் துதித்தானென்க.

ஒழிந்தஇரண்டற்கும் இவ்வாறே பொருளுரைக்க. (கசக)

முத்தணிந்தமுக்குடைக்கீழ்மூர்த்திதிருவடியைப்
பத்திமையாலென்றும்பணிகின்றார்யாரே
பத்திமையாலென்றும்பணிவார்பகட்டெருத்தி
னித்திலவெண்குடைக்கீழ்நீங்காதாரன்றே.

பணிவார் - பணிந்துபோவார். எருத்தத்தின்மேலே குடைக்கீழே யிருக்கின்ற இருப்பு நீங்காமல்வருகின்றார். (கசஉ)

கருமக்கடல்கடந்தகைவலச்செல்வ
னெரிமலர்ச்சேவடியையேத்துவார்யாரே
னெரிமலர்ச்சேவடியையேத்துவார்வான்றோய்
திருமுத்தவிராழிச்செல்வரேயன்றே.

இருவினையாகிய கடலைக்கடந்து அதனாற்பெற்ற கேவலமடந்தையை நுகருஞ் செல்வன். முத்தவிராழி - முத்துவிளங்குகின்ற கொற்றக்குடை. ஆழி - வட்டம்; ஆகுபெயர். அங்ஙனமுடிதுளக்கினவன் வணக்கத்தாற்பெறும்பயனைத் தேவியர் கருதும்படி யிம்மூன்றுதாழிசையாலுங்கூறித் துதித்தானென்க. (கசங)

வேறு.

வண்ணமாமலர்மாலைவாய்ந்தன
சுண்ணங்குங்குமந்தூமத்தாழ்புனை

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல், க.

தண்ணல்சேவடியருச்சித்தானரோ
விண்ணிலின்பமேவிழைந்தவேட்கையான்.

இ - ள். தேவருலகிலில்லாத வீட்டின்பத்தையே விரும்பின வேட்கையையுடையவன், அங்ஙனந்துதித்துப் பின்னர் வாய்ந்தனவாகிய மலர்முதலியவைந்தினும் புனைந்து அண்ணல்சேவடியை யருச்சித்தானென்க. (கசச)

அறிவர்சிறப்புமுற்றிற்று. கவி, சு.

அறவுரை.

இலங்குகுங்குமமார்பனேந்துசீர்
நலங்கொள்சாரணர்நாதன்கோயிலை
வலங்கொண்டார்மலர்ப்பிண்டிமாநிழ
கலந்தகன்மிசைக்கண்டுவாழ்த்தினான்.

இ - ள். அங்ஙனமருச்சித்த குங்குமமார்பன், ஆகாயத்தேவந்து ஸ்ரீநாதன்கோயிலை வலங்கொண்டு பிண்டியின்கீழே பளிக்குக்கன்மிசையிலே நலங்கொண்டுநின்ற பெரிய மணிகளின் நிறத்தைக்கலந்த சாரணிருவரைக்கண்டு வாழ்த்தினனென்க.

மேல் இருசுடரை யுவமித்தலின், மாணிக்கமும் முத்துமேகொள்க. (கசரு)

உரிமைதன்னொடும்வலங்கொண்டோங்குசீர்த்
திருமகன்பணிந்திருப்பச்செய்தவ
னிருநிலமன்னற்கின்பமேயெனப்
பெருநிலமன்னன்பெரிதும்வாழ்த்தினான்

இ - ள். அங்ஙனம் வாழ்த்தின திருமகன் உரிமைச்சுற்றத்தோடே வலம்வந்து வணங்கியிருந்தவளவிலே, சாரணர் மன்னனுக்கு இருநிலமாளுதல் இன்பமன்றாயிற்றேயென்றுகேட்ப, அம்மன்னனன்றுன் இந்நிலத்தைத் துறந்தவன்மையை யுணர்ந்ததற்கு வியந்து மிகவுந் துதித்தானென்க.

ஏகாரம் - எதிர்மறை (கசசு)

தெருளலேன்செய்ததீவினையெனு
மிருள்விலங்கநின்றெரியுநீள்சுட
ரருளுமின்னெனக்கடிகளென்றனன்
மருள்விலங்கியமன்னர்மன்னனே.

இ - ள். அங்ஙனந்துதித்து இல்லறத்தின்மயக்கந்தீர்ந்தமன்னன், அடிகளே! பிறப்பறுமாறறியாதேன் எப்பிறப்புக்களிலுஞ் செய்துகொண்ட தீவினையென்னும் இருள்கெடும்படியாகச் சிலநாள்நின்று தவஞ்செய்து பின்னர் எரியுநீள்சுடராகிய ஞானத்தையெய்தும்படி எனக்கு அருளுமினென்றானென்க.

இனி இருள்விலகும்படி நின்று எரியுஞ்சுடர் - *இரத்தினத்திரயமுமாம். (கசஎ)

---

* இரத்தினத்திரயம்: நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம்.

[அறவுரை.]

வேறு.

பாற்கடற்பனிமதிபரவைத்திங்கதிர்
மேற்படமிகநனிசொரிவதொப்பவே
நூற்கடன்மாதவனுணித்தநல்லறங்
கோற்கடன்மன்னனுக்குரைக்குமென்பவே

இ - ள். அதுகேட்ட நூற்கடலாகிய சாரணன், பரவையிற் றோன்றின பனி மதி தன்கதிரைப் பாற்கடலின்மேலே வீழ நனிசொரிவதொப்ப, மிகவும் நுணித்த வறத்தை மன்னனுக்கு உரையாநிற்குமென்க.

செங்கோல் நடாத்துதலாற் கடனுடையன். (கசஅ)

வேறு.

தேனெய்தோய்ந்தனதிவ்யதிருமணியனைய
வானினுய்ப்பனவாசதிதருவனபதியோ
ரேனையாவருமமுதெனப்பருகுவபுகல்வ
மானமில்லுயர்மணிவண்ணனுவலியவலித்தான்.

உயர்மணிவண்ணன் - இருவரிலுமூத்தவன், இரத்தினப்பிரபையென்னுமவன்.

இ - ள். அங்ஙனமுரைக்கின்ற மணிவண்ணன், பலவகைப்பட்டவறங்களுள், தீவிய தேனெய்யை யொத்தனவாகையாலே, சிலநாட் டுறக்கத்திலே செலுத்துவன வாய் அறிவில்லோர்யாவரும் புகல்வனவற்றையும், பெறுதற்கரிய மணியையொத் தனவாய் வீட்டைத் தருவனவாய் அறிவுடையோர்யாவரும் அமுதெனப் பருகுவன வற்றையும் நவிலத்துணிந்தானென்க.

தேனுகர்வார்க்கு, அது பனிச்சுவையையுந்தருதலின், நிலையில்லாத துறக்கந்தரு கின்ற அறத்திற்கு உவமையாயிற்று. துறக்கத்தையும், வீட்டையுந் தருகின்ற இரு வகையறமுங் கூறுகின்றது, இவற்கு இன்னுந் துறக்கத்திற்செல்லுங் கருத்து உண்டா மோவென்பது உணர்தற்கு. மானம் - ஒப்பு. (கசகூ)

அருமையினெய்தும்யாக்கையும்யாக்கையதழிவும்
திருமெய்நீங்கியதுன்பமுந்தெளிபொருட்டுணிவும்
ஒருமையெய்தியகுணநிலைகொடைபெறுபயனும்
பெருமைவீட்டொடும்பேசுவல்கேளிதுபெரியோய்.

இ - ள். அங்ஙனந்துணிந்தவன், பெரியோய்! தவத்தாற்பெறுகின்ற மக்கள்யாக் கையையும், அந்தயாக்கை தனக்கடுத்த நூறியாண்டும் நிலைபெற்றுநில்லாது கருப்ப முதலாக அழிகின்றஅழிவையும், நல்வினைமெய்யினின்றும் நீங்கப்பட்டனவாகியநர கர் விலங்கு மக்கள் தேவரென்கின்ற நாற்கதியிற்றுன்பத்தையும், துணியப்படும்பொரு ளையும், அப்பொருளைத் துணியுந்துணிவையும், நிறத்தைப்பெற்ற சீலத்தினதுநிலையை யும், தானத்தையும், அத்தானத்தாலுஞ்சீலத்தாலும் காட்சியாலும் பெறும்பயனையும்,

பெருமையையுடைய வீட்டிலக்கணத்தோடுங் கூறுவேன்; அவற்றுள் இப்பெறுதற் கருமையை முதற்கேளென்றானென்க.

நீங்கிய - தொழிற்பெயர். இதுவென்றது பெறுதற்கருமையை. குருவென்னு முரிச்சொல் ஈறுதிரிந்தது. திருமையும பாடம். (கஙo)

அறவுரைமுற்றிற்று. கவி, சு.

---

## பெறுதற்கருமை.

பரவைவெண்டிரைவடகடற்படுநுகத்துளையுட
டிரைசெய்தென்கடலிட்டதோர்நோன்கழிசிவணி
யரசவதுளையகவயிற்செறிந்தெனவரிதாற்
பெரியயோனிகள்பிழைத்திவண்மானிடம்பெறலே.

பரவை - பரத்தல்.

இ - ள். அரசனே! எண்ணுங்கால் நால்வகைத்தோற்றத்தாற் பெரியவாகிய யோனிகளைத்தப்பி யிவ்வுலகிலே மக்கள்யாக்கையைப்பெறுதல், தென்கடலிலே போகட்டதோர்கழி வடகடலிலேயுண்டான நுகத்துளையிலே முதற்சென்றெய்தி அவ்வளவேயன்றி யத்துளையினடுவே சென்றுசெறிந்ததென்னும்படி யரிதாயிருக்குமென்றானென்க. (கஙக)

விண்டுவேய்நரலூஉம்விளைகானவரிடனுங்
கொண்டுகூர்ம்பனிகுலைத்திடுகிலைக்களக்குறும்பு
முண்டுநீரெனவுரையினுமரியனவொருவி
மண்டுதீம்புனல்வளங்கெழுநாடெய்தலரிதே.

ஊனேயுணவாகவிளையும்.

இ - ள். அங்ஙனமானிடமபெற்றாலும், நீருண்டென்று வார்த்தையினுங் கூறுதற்கரியவாய் வேய்வெடித்தொலிக்குங் கானவரிடத்தையும் மிக்க பனியைக்கொண்டு குலைக்குமிடமாகிய குறும்புகளையுநீங்கி நன்னாட்டிலேபிறத்தல் அரிதென்றானென்க.()

வில்லின்மாக்கொன்றுவெண்ணிணத்தடிவிளிம்படுத்த
பல்லினார்களும்படுகடற்பரதவர்முதலா
வெல்லைநீங்கியவிழிதொழிலிழிகுலமொருவி
நல்லதொல்குலம்பெறுதலுநரபதியரிதே.

இ - ள். நரபதி! மாக்களை வில்லாலேகொன்று அவற்றின் றசையைத் தின்கின்ற பல்லினராகிய கரும்புறத்தோரும், பரதவருமுதலாக எண்ணிறந்த இழிதொழிலால் இழிந்த குலங்களிற்பிறவாமல் நற்குலத்திலேபிறத்தலுமரிதென்றானென்க. ()

கருவிமாமழைகள்பெயல்பொழிந்தெனவழிநா
ளருவிபோற்றொடர்ந்தறுதலவரும்பிணியழலுட்

[நிலையாமை]

கருவிற்காய்த்தியகட்டளைப்படிமையிற்பிழையா
துருவின்மிக்கதோருடம்பதுபெறுதலுமரிதே.

இ - ள். குலத்திற்பிறக்குங்காலத்தும், பெருமழைபெய்ததாகப் பின்னுளிலே யருவி யிடையறுதொழுகுமாறுபோலே, உயிர்க்கிழவனைத்தொடர்ந்து விடாதன வாய்ப் போக்குதற்கரிய இருவினை வயிற்றுத்தீயினுள்ளேயிட்டுவைத்துக் காய்ச்சின கருப்பத்தின்கண்ணே யவ்விருவினையின்கட்டளையாற் பின்றோன்றும்வடிவத்திற் றீவினையின்கட்டளையால் உறுப்புக்குறையும் வடிவைத்தப்பி நல்வினையின்கட்டளையாலே யுருவான்மிக்கதோருடம்பை அம்மக்கள்யாக்கை பெறுதலுமரிதென்றானென்க.

பிணித்தலையுடையது பிணியாயிற்று. கட்டளையென்றார், தத்தம்பயனை நுகாவித்தற்குரிய கோவையையுடையதாதலைப் பிழையாவிதியினை. (கருச)

நாமமன்னதோர்சழிவனப்பறிவொடுபெறினு
நாமநாற்கதிநவைதருநெறிபலவொருவி
வாமனூனெறிவழுவறத்தழுவினரொழுக
லேமமென்றுடையிறைவமற்றியாவதுமரிதே.

இ - ள். இறைவனே! அங்ஙனம் மிக்கவழகை யறிவுடனேபெற்றாராயினும் அச்சத்தைத்தரும் நாற்கதியிலேசெலுத்துங் குற்றத்தைத்தரும் பரசமயங்களைக்கை விட்டு வாமனூல்வழியை யாவதும் வழுவறத் தழுவினராயொழுகுதல் அரிதென்றானென்க.

இத்துணையும், மக்களியாக்கை பெறுதற்கருமையும், அதுபெற்றாலும் நன்னிலமும் நற்குலமும் நல்வடிவும நல்லறமும்பெறுதற்கருமையுங்கூறி, இனி யவ்வியாக்கை நிலைபெறாதொழியுந்தன்மைகூறுகின்றார். (சருரு)

பெறுதற்கருமைமுற்றிற்று. கவி. ரு.

---

நிலையாமை.

க. இன்னதன்மையினருமையினெய்தியபொழுதே
பொன்னும்வெள்ளியும்புணர்ந்தெனவயிற்றகம்பொருந்தி
மின்னுமொக்குளுமெனநனிவீயினும்வீயும்
பின்னைவெணவெனியிற்றிரண்டபின்பிழைக்கவும்பெறுமே. ()

உ. வெண்ணெயாயதுவீங்குபுகூன்புறயாமை
வண்ணமெய்தலும்வழுக்கவும்பெறுமதுவழுக்கா
தொண்மைவாண்மதியுருவொடுதிருவெனத்தோன்றிக்
கண்ணனூரழக்கவிழினுங்கவிழுமற்றறிநீ. (கஇள)

௩. அழிதலின்றியங்கருநிதியிரவலர்க்கார்த்தி
முழுதும்பேர்பெறுமெல்லையுண்முரியினுமுரியும்
வழுவில்பொய்கையுண்மலரெனவளர்ந்துமையாடிக்
கெழீஇயினரொடுங்கிளையழக்கெடுதலுங்கெடுமே. (௧௫௮)

௪. கெடுதலவ்வழியில்லெனிற்கேள்விகடைபோய்
வடிகொள்கண்ணியர்மனங்குழைந்தநங்கனென்றிரங்கக்
கொடையுங்கோலமுங்குழகுந்தம்மழகுங்கண்டேத்த
விடையிற்செல்வுழிவிளியினும்விளியுமற்றறிநீ. (௧௫௯)

௫. எரிபொன்மேகலையிலங்கரிச்சிலம்பொடுசிலம்பு
மரிபொற்கிண்கிணியாயிழையரிவையர்ப்புணர்ந்து
தெரிவில்போகத்துக்கூற்றுவன்செகுத்திடச்சிதைந்து
முரியும்பல்சனமுகம்புடைத்தகங்குழைந்தழவே. (௧௬௦)

௬. கோதைமங்கையர்குவிமுலைத்தடத்திடைக்குளித்துக்
காதன்மக்களைக்கண்டுவந்தினிதினிற்கழிப்பப்
பேதுசெய்பிணிப்பெரும்புலிபாய்ந்திடப்பிணையா
மோதமாக்கடலுடைகலத்தவருற்றதுறவே. (௧௬௧)

௭. காமம்பைபயக்கழியத்தங்கடைப்பிடிசுருங்கி
யூமர்போலத்தமுரையவிந்துறுப்பினிலுரையாத
தூய்மையில்குளந்தூம்புவிட்டாமபொருளுணர்த்தி
யீமமேறுதலொருதலையிகலமாகடந்தோய்.

இவையேழுமொருதொடர்.

இ - ள். இகலமர்கடந்தோய்! நீ யானினிக்கூறுகின்றதனை யறிவாயாக; அஃதியாதெனின், இக்கூறிய நால்வகைத்தன்மையிற்காட்டின் மக்கட்குவிதித்த ஆயுள் நிலைபெறுதலரிதாகையினாலே, அது: பொன்னும்வெள்ளியும் புணர்ந்தவெனச் சுக்கிலமுங் குருதியும் வயிற்றகத்தேபொருந்தி மக்கள்யாக்கை யெடுத்தற்கெய்தியபொழுதிலே மின்னுமொக்குளுந் தோன்றிக் கெடுமாறுபோலக் கெடினுங்கெடும், அங்ஙனங் கெடாது வெண்ணெய்போற் றிரண்டபின்னர்க் கெடவும்பெறும்; அதிற்கெடின்றேல், அது யாமையின்றன்மையைப் பெற்றவளவிலே கெடவும்பெறும்; அஃது அந்நிலையிற் கெடாதேல், நிறைமதிபோலுங் குறையாவுருவுடனேபிறந்து இருமுதுகுரவாமுதலாயினாரழக் கெடினுங்கெடும்; அதிற்கெடின்றி யிரவலர்க்கு நிதிமுழுதையுங்கொடுத்துப் பெயரிடுமளவிலே கெடினுங்கெடும்; அதிற்கெடின்றேல் மையோலைபிடித்து நட்டோருங்கிளையுமழக் கெடுதலையுஞ்செய்யும்; அவ்வழிக்கெடின்றேல் நூல்களைமுற்றக்கற்று, மகளிர் வடிவையும், இளமையையும், அழகையுங்கண்டு அநங்கனேயென்று மனங்குழைந்திரங்கப் பரிசிலர் கொடையையேத்த விடைபோல்நடக்கின்றகாலத்தே கெடினுங்கெடும்; அதிற்கெடின்றேல் அரிவையரைப்புணர்ந்து வேறொன்றுந் தெரியாத போகநுகர்ச்சிக்காலத்தே கூற்றுவன் உயிரை வௌவுதலாலே பல்சனஞ்

[நரககதித்துன்பம்.]

சிதைந்து முகத்தேபுடைத்துக்கொண்டு அழும்படிகெடும்; அதிற்கேடின்றேல் மகளிரிடத்தேயூர்ந்து யவர்பெறும் புதல்வனைக்கண்டு உவந்து காலங்கழிக்குமளவிலே தஞ்சுற்றத்தார் உடைகின்ற மரக்கலத்திலிருந்தவருற்ற வருத்தத்தையுறும்படி நோயாகியபுலிபாயப் பிணமாய்க்கெடும்; அதிற்கேடின்றேல் தம்போகநுகர்ச்சி மெல்ல மெல்லக் கழிதலாலே தங்கடைப்பிடிகள்குறைந்து ஊமர்போலே யுறுப்பாலே வார்த்தைகூறித் தூய்மையில்லாத உடம்பாகியகுளம் ஒன்பதுவாயிலாகிய தூம்புகளுந் தம் வயத்தனவாகாமற் சோர்ந்திறந்துபாய்ந்து இவ்வியாக்கை முடிவிலாம்பொருளிதுவென்று அறியாதார்க்கறிவித்துச் சுடுகாட்டிலேயேறுதல் உறுதி; ஆதலால், நீ யிதற்கு வேறாகி நிலைபெறும்பொருளை யறிவாயாகவென்றானென்க.

முன்னிருதிங்களிற் பொன்னும்வெள்ளியும்போன்றும், பின்னிருதிங்களில் வெண்ணெய்போன்றும், ஐந்தாந்திங்களில் ஆமைபோன்றும், ஆறாந்திங்களிலுருத்தெளிந்தும் பிறக்குமென்றார். இரண்டிடத்திற் கூறிய மற்று - வினைமாற்று. பிணமாயென்றும் பாடம். (கசூஉ)

தேங்கொள்பூங்கண்ணித்திருமுடித்திலகவெண்குடையோ
யீங்கிதன்றியுமிமையவரமையலர்க்கடந்த
நாங்குமாலண்கைச்சக்கரமிக்குயர்பிறரும்
யாங்கணாரவருரொடுபெரெமக்குரையாய்.

இமையவர்க்குப் பகைவராயுள்ளாரை ஆண்டுச்சென்று வென்றபிறர்; திருவை ஒழிந்தவரசர்பாற் செல்லாமற் றம்மிடத்தே தாங்கும்பிறர்; முன்னர்ச் செலுத்துஞ் சக்கரம் மிக்குயர்தற்குக் காரணமாகியபிறர். உலகில் அரசரெல்லாரும் வணங்க விருத்தலிற் சக்கரவர்த்திகளைப் பிறரென்றார்.

இ - ள். அரசனே! யாம் இவ்வுலகில் மக்கட்குரியனவாகக்கூறிய இந்நிலையாமையேயன்றியும் அவரிற்சிறந்த சக்கரவர்த்திகளும் நிலைபெற்றிருந்தாரில்லை; அவர்களும்பெயரும் நிலைபெறாமையின், யாமுணர்ந்திலேம்; நீ நிலைபேறுணர்ந்தனவுள வேற் கூறென்றானென்க (கசூக)

நிலையாமைமுற்றிற்று கவி அ.

---

## நரககதித்துன்பம்.

வெவ்வினைசெய்யுமாந்தருயிரெனுநிலைதநுவித்தி
யவ்வினைவிளையுளுநண்ணுமவ்விடத்தவர்கடுன்ப
மிவ்வெனவுரைத்துமென்றுநினைப்பினும்பனிக்குமுள்ளஞ்
செவ்விதிற்சிறிதுகூறக்கேண்மதிசெல்வவேந்தே.

இ - ள். அங்ஙனங்கூறி, வேந்தே! தீவினையைச்செய்யுமாந்தர் தமதுயிரென்னு நிலத்தே யத்தீவினையையிதைத்து அத்தீவினையின்பயனை நுகரும் அந்நரகத்திடத்தே

அங்கரகர்படுந்துன்பம் இத்தன்மையவென உரைக்கக்கடவேமென்று நினைப்பினும் உள்ளநடுங்கும்; ஆயினுஞ் சிறிது அதன்றன்மைகூறச் செவியிற் கேட்பாயாக வென்றானென்க. (கஅச)

ஊழ்வினைதுரப்பவோடியொன்றுமூழ்த்தக்கதினுள்ளே
சூழ்குலைப்பெண்ணைநெற்றித்தொடுத்ததீங்கனிகளூழ்த்து
வீழ்வனபோலவீழ்ந்துவெருவரத்தக்கதுன்பந்
தாழ்துயருழப்பவூறுமருநரைநஞ்சுகண்டாய்.

இ-ள். தீவினை தம்மனத்தைச் செலுத்துதலாலே போய்ச்சென்று அதன் பயனையெல்லாம் நுகர்தற்குப்பொருந்தின முகூர்த்தத்திலே பெண்ணையிற்றொடுத்த கனிகள் ஊழ்த்துப் பெருங்காற்றாற் சோலியுண்டபோலே தலைகீழாகவீழ்ந்து பின்னரும் நரகத்தேசென்று பிற ஆழ்துயரையுழப்பார்; அவர்க்குச்செய்யுமிடத்து ஊறும் நஞ்சு காணென்றானென்க.

ஒன்றுமூழ்த்தம் - ஒருமுகூர்த்தமென்றுமாம். வெருவரத்தக்கதுன்பமென்றது நரகத்தை. நஞ்சு உணவாயஞ் சாகா, தீவினையைப் பார்த்தற்காக. எதிர்நின்று போர்செய்யாது எளியராயிருப்பாரைச் சேரக்கொன்றார், பின்னர் இங்ஙனநுகர்வ ரென்றார். (கஅரு)

இட்டிவேல்குந்தங்கூர்வாளெஃகினைச்சுரிகைகூட
நட்டவைநிறைத்தபூமிநகையுடைநரகர்பொங்கி
யுட்படவெழுந்துவீழ்ந்தாங்கூன்றார்ந்திட்டவண்ணம்
மெட்டெலாத்திசையுஞ்சிந்திக்கிடப்பவாலடக்கமில்லார்.

இ-ள். முன்னர் ஐம்பொறிகளிலடக்கமில்லாராய்த் தீவினையையுடையரா கியநரகர் பொங்கி யெழுந்து இட்டிமுதலியனகூட நட்டவை நிறைத்து நின்றபூமியி லே யவை தம்முள்ளேயழுந்தும்படி வீழ்ந்து அவ்விடத்தே [illegible] தட்டினாற் போல் எல்லாத்திசைகளிலுஞ்சிந்திக் கிடக்கின்றார்களென்றானென்க. (கஅசு)

வெந்தடிதின்றவெந்நோய்வேகத்தான்மீட்டுமாலை
பைந்தொடிமகளிராடும்பந்தெனவெழுந்துபொங்கி
வந்துடைந்துருகிவீழ்ந்துமாழ்குபுகிடப்பர்கண்டாய்
கந்தடுவெகுளிவேகக்கடாமுகக்களிற்றுவேந்தே.

இ-ள். வேந்தே! முற்பிறப்பிலே விரும்பியதசைகளைத் தின்றதனாற்பிறந்த தீவினையின்கொடுமையினாலே மகளிராடும்பந்தெனத் தீயினின்றும்பொங்கி யெழுந்து வீழ்ந்து மீட்டும் அதனுள்ளேவந்து உருகி யுடைந்து மயங்கிக் கிடப்பர்கா ணென்றானென்க. (கஅஎ)

வயிரமுண்ணிறைத்துநீண்டவார்சினையிலவமேற்றிச்
செயிரிற்றீயடுப்பர்கீழாய்ச்சென்னுனைக்கழுவிலேற்றி
மயிருக்கொன்றாகவாங்கியகைத்தகைத்திடுவர்மன்னா
வுயிரைப்பேதுறுக்குமாந்தருயிரைப்பேதுறுக்குமாறே.

உருகவெந்த செப்புப்பாவையைக் கண்டோர், ஆ! நகாதென்னும்படி தழுவி யாற்றாது அலறுங்காணென்றானென்க. (௧௭௧)

சிலையினான்மாக்கள்கொன்றுசெழுங்கடல்வேட்டமாடி
வலையினான்மீன்கள்வாரிவாழுயிர்க்கூற்றமான
கொலைஞரைக்கும்பிதன்னுட்கொந்தழலழுத்தியிட்டு
நலிகுவர்நாணுநாணுநரகரைநாமவேலோய்.

இ-ள். நாமவேலோய்! கொன்றும் வாரியும் வேட்டையாடி உடல்வாழுமுயிர்கட்குக் கூற்றமானபாவிகளை நரகத்துள்ள நெருப்பின்கண்ணேயழுத்தி நாடோறுநாடோறும் அந்நரகரைச் சுடாநிற்பரென்றானென்க. (௧௭௨)

பாரகங்கழூஉநர்போலப்பரூஉத்தடிபலருமேந்தி
வீரநோய்வெகுளிதோற்றிவிழுப்பறவதுக்கியிட்டுக்
காரகற்பொரிப்பர்கண்ணுட்சுரிகையைநடுவர்நெஞ்சிற்
பாரக்கூர்ந்தறிகணட்டுப்பனையெனப்பிளப்பமாதோ.

இ-ள். அதுவேயன்றிப் பாரிலுள்ளார்செய்த தீவினைகளைத் தாங் கழுவுவார் போலே நிரையபாலர்பலரும் பரியதடிகளையெடுத்து வலியநோயைக்கொடுக்குங் கோபமெழுந்து அவர்களுடம்பிற் கழிவதொன்றுமில்லையாம்படி கூடநறுக்கியிட்டுச் சிலரைக்காரகலிலேபொரிப்பர்; சிலரைக் கண்ணிலேசுரிகையைநடுவர்; சிலரை நெஞ்சிலேதறிகளைப்புடைத்துப் பின்னர்ப் பனைபோலப் பிளப்பரென்றானென்க.

பல்லுயிர்களுந் தாஞ்செய்த வினையைத் தாமேநுகரினும் அதனை முயன்றநுகாவித்துக்கழிப்பாராதலிற் கழூநர்போலவென்றார். இஃது ஒப்பில்போலி. (௧௭௩)

நாப்புடைபெயர்த்தலாற்றார்நயந்துநீர்வேட்டுநோக்கிப்
பூப்புடையணிந்தபொய்கைபுக்குநீருண்ணலுற்றாற்
சீப்படுகுழம்பதாகிச்செல்லலுற்றந்தோவென்னாக்
கூப்பிடுகுரலாய்நிற்பர்குறைப்பனைக்குழாங்களொத்தே.

இ-ள். அங்ஙனந் தீவினைப்பயனைநுகருங்காற் றண்ணீர்வேட்டு நாவை வறட்சியால் அசைத்தலாற்றாராய்ப் பூவணிந்த பொய்கைகளை நயந்துநோக்கிப் புக்கு அதிற் றண்ணீரையுண்ணத்தொடங்கினால் அது சீயாலுண்டான குழம்பாகையினாலே தாம் வருத்தமுற்றாராய் அப்பொழுது அழத்தொடங்கி, அந்தோவென்று கூப்பிட்டிடுங் குரலாராய்த் தலைபோன பனைத்திரளையொத்து நிற்பரென்றானென்க.

அணிந்தென்று பாடமாயிற் றோன்றுமென ஒருவினைவருவிக்க. (௧௭௪)

நறுமலர்த்தாமநான்றநானநீர்பயின்றதும்பந்தா
குறுகலுங்குடநெய்பெய்தகொந்தழல்போன்றுபொங்கிப்
பறையலகனையவெண்பற்பசுங்கழற்குண்டுமைங்க
உறுதுயர்நரகர்தம்மையுருகச்சுட்டிடுங்கனன்றே

பறையலகு - இசைகாலத்தட்டு பலகையெனமருவிற்று.

[நரககதித்துன்பம்.]

இ - ள். பலகறையையொத்த பெரிய பல்லினையும், பசுங்கழல்போலுங் கண்ணினையுமுடையநரகர் நீர்வேட்டுப் பந்தரைக்குறுகினவளவிலே அப்பந்தர் குடநெய் சொரிந்த நெருப்புப்போலப்பொங்கி அவரை யுருகச் சுட்டிடுமென்றானென்க.

சள் - அசை. (கஎரு)

வெந்துருக்குழம்புசெம்பின்விதனையுளழுத்தியிட்டு
மெந்திரவூசலேற்றிப்பெரியுணமடுத்துஞ்செக்கிற்
சுந்நெழுந்தரைத்தும்போகச்சுண்ணமாநுணுக்கியிட்டு
மந்தரத்தனையதுன்பம்வைகலுமுழப்பமாதோ.

இ - ள். வெந்து உருகுதலுற்ற செம்பாலான குழம்பிலே நிரையபாலரால் அழுத்தியிடப்பட்டும், எந்திரமானவூசலிலேற்றிக் கீழ நெருப்பையெரிக்கப்பட்டும், செக்கிலேயிட்டு நீரெழுந்துபோக அரைக்கப்பட்டும், சுண்ணமாக நுணுக்கியிடப்பட்டும் மந்தரமலைபோற் பெரிய துன்பத்திலே நாடோறும் வருந்துவரென்றானென்க.

விதனை - குழம்பு (கஎசு)

உழப்பட்டெருதுபோலவுரனறுதாளராகிக்
கொழுங்களியளற்றுள்வீழ்ந்துங்கொழும்புகைமடுக்கப்பட்டு
மழுந்துமிந்நரகந்தன்னுட்செல்பவர்யார்கொலென்னி
னொழுந்துவண்டிமிருட்பைந்தாரிறைவநீகேண்மோவென்றான்.

பகடு - பெருமை.

இ - ள். இறைவனே! யான் கூறியவாறேயன்றிப் பலருந் தாஞ்செய்த தீவினையாலே சென்று அழுந்தும் இந்நரகத்துள்ளே எருதுபோல வலியற்றகாலராய் அழுகிய செறிந்த சேற்றுள்ளேவிழுந்தும், ஆண்டுநின்றும் எழுதற்குப் புகைமடுக்கப்பட்டுஞ் செல்வர், அங்ஙனஞ் சேறற்குரியார் யாரென்று கேட்டியாயின், அவர்களை மேலே யான்கூறக் கேட்பாயாகவென்றானென்க.

“துன்னினழுந்துநரகம்” என்ப (கஎஎ)

கொல்வதேகன்றிநின்றார்கொடியவாகடியநீரா
ரில்லையேயிம்மையல்லாலும்மையுமுயிருமென்பா
ரல்லதுந்தவமுமில்லைதானமுமிழுவென்பாருஞ்
செல்பவந்நரகந்தன்னுட்டீவினைத்தேர்களூர்ந்தே.

இ - ள். கொலைத்தொழிலிலே யடிப்பட்டு நின்றாரும், நெஞ்சுகொடியாரும், கடியதொழில் செய்வாரும், இப்பிறப்பேயன்றி மறுமையுமில்லை; உயிர்க்கிழவனுமில்லையென்பாரும், நல்வினையுந் தீவினையுமில்லையென்பாரும், செய்ததானமும் பயனின்றாமென்பாருந் தீவினையாகிய தேரையேறி அந்நரகந்தன்னுட்செல்வரென்றானென்க.

தவமுஞ் சவமல்லதுமென்க. (கஎஅ)

நரககதித்துன்பமுற்றிற்று. கவி, கரு

---

## விலங்குகதித்துன்பம்.

எரிநீரவேநரகமந்நரகத்துன்பத்
தொருநீரவேவிலங்குதானுடையதுன்பம்
பெருநீரவாட்டடங்கட்பெண்ணணங்குபூந்தா
ரருநீரவேந்தடர்த்தவச்சணங்குவேலோய்.

இ - ள். பெரிய நீரவாகிய கண்ணையுடைய பெண்களை வருத்துந்தாரினையும், அடர்த்தற்கரிய தன்மையவாகிய வேந்துகளையடர்த்தவலியினையும், வருத்தத்தினைச் செய்யும் வேலினையுமுடையவரசனே! நரகம் எக்காலமும் எரியினது தன்மையவே; அந்நரகத்திலே பல்லுயிருமுறுந் துன்பத்தோடு ஒருதன்மையவே விலங்குசாதியுடைய துன்பமுமென்றானென்க. (கஎக)

கழைபொதிரப்பத்தேன்சொரிந்துகாய்த்தினைகளார்த்து
மழைதவழுங்குன்றில்வயமாமுழங்க
வுழையளியதாமுறூஉந்துன்பங்களின்மேல்
விழைவயராவேந்துறூஉந்துன்பமேகண்டாய்

இ - ள். இருளிலே மூங்கில்பொதிரப்ப அது தேனைச்சொரிந்து தினைகளை யார்த்துங் குன்றிலே புலிமுழங்க, அதுகேட்ட அளிய உழைமானுறுந் துன்பங்கள் பின்னிடத்து விருப்பஞ்செய்யாத வேந்துகளுறுந் துன்பமேகாணென்றானென்க. ()

நிணம்பிலிற்றும்வாயர்நெருப்பிமைக்குங்கண்ணார்
குணனஞ்சர்கூற்றனையகோணாய்மடுப்பக்
கணமஞ்ஞையஞ்சிக்கழுத்தொளிப்பகண்டாய்
மணமல்குபூந்தார்மழைதழீஇயகையாய்.

இ - ள். தாரினையுடைய மழைபோன்றகையாய்! வாயராய்க் கண்ணராய்த் தங்குணத்தால் நஞ்சின்றன்மையையுடையார், கூற்றனைய கொலைத்தொழிலையுடைய நாயைச்செலுத்த, அதற்கஞ்சித் தங்கழுத்தைச் சிறகிலேமறைப்பன மயில்கள்காணென்றானென்க. (கஅக)

மண்ணாரமஞ்சளரிஞ்சிமலர்சூட்டிக்
கண்ணார்மறியறுத்துக்கையாலுதிரந்தூ
யுண்ணீரேதேவீருவந்தென்பதிவ்வுலகை
நண்ணார்க்கடந்தோய்நமனுலகினான்மடங்கே.

இ - ள். நண்ணார்க்கடந்தோய்! இவ்வுலகம் மறிக்கு மஞ்சளரிஞ்சி மண்ணுதல் முடிகையினாலே பின்னர் மலரைச்சூட்டி யதனையறுத்துக் கையாலே யுதிரத்தைத்தூவி, தேவீர்! உவந்து உண்ணீரென்று கூறுகின்றகொடுமை நரகத்திலும் நான் மடங்கு கொடியதென்றானென்க. (கஅஉ)

மங்கைமனலனையமென்சூன்மடவும்பு
செங்கண்வரிவரால்செந்நீரிளவாளை

(விலங்குகதித்துன்பம்.)

வெங்கருனைபுல்லுதற்கு வேறுவேறாக்குறைப்ப
வங்காந்தழுகின்றதாரகண்ணே நோக்குமோ.

மனு - வழக்கு. இனி மனவென்னுஞ் செய்யுட்சொல் விகாரமாயிற்றென்று மாம்.

இ - ள். உடும்பு வரால் வாளையென்கின்றவற்றைப் பொரிக்கறியாகச் சமைத்தற்கு வேறுவேறாகவறுப்ப, அவை யுயிர்போவதற்கு வாயங்காந்தழுகின்றதீவினை யாரிடத்தேசெல்லுமென்றானென்க

அழுதல் - பழையதன்மைகெட்டு வருந்துதல்; அஃது அசைவென்னுமெய்ப்பாடாம். யார்கண்ணே நோக்குமென்றது - மேவினவர்கண்ணேயன்றி யேவினார்கண்ணும், உடம்பட்டார்கண்ணுஞ் செல்லுமென்றவாறு. (கஅரு)

கடலரணமாகாது காடரணமாகா
குடலரணமாகாது குன்றரணமாகா
வடுதுயரூழ்ந்தலைப்பவாங்கரணங்காணாப்
படுதுயரத்தாலேபதைத்தழியவேமே.

ஆங்கென்றது தாஞ்செல்கின்ற விலங்குகதியை அரணமென்றது - அதற்குக் காவலாகிய நல்வினையை. காணுவளியவென்க.

இ - ள். தாஞ்செல்கின்ற கதிக்குக் காவலாகிய நல்வினை முன்செய்யாதவிலங்குகள், தம்மையடுகின்றதீவினை சென்றலைக்கையினாலே கடல் அரணமாகாமற் காடுகள் அரணமாகாமற் குடல அரணமாகாமற் குன்றுகள் அரணமாகாமல் மேன்மேலுண்டாந்துயரத்தாலே பதைத்து வேமென்றானென்க.

குடரிற்கிடந்தவையும் நோயான்வருந்திவிடுமென்றான். ஆகாவென்றபன்மையை ஆகாவாயெனவிரித்து ஆகாமலெனவுரைக்க. (கஅச)

முழுப்பதகர்தாரெந்துமுட்டாற்றிற்குத்தி
யுழப்பெருதுபொன்றப்புடைத்துழுதுவிட்டாற்
கழித்துண்ணுங்காக்கைகடிவோருமின்றிப்
புழுச்சொரியத்துன்பம்பொறுக்கலாபொன்றும்.

அறிவுநுழைதற்குவழியிலராய, தீவினைசெய்யவாகாதென்பார்க்குப் பதகங்கூறுவார் முழுப்பதகர். பதிதர் - விகாரமுமாம்.

இ - ள். பதகர் உழுதற்றொழிலையுடைய எருத்தை முறப்படச் சாம்படியடித்து அதற்குப் போகாமையிற் றாற்றுக்கோலாலேகுத்தித் தமதுமுயற்சியாலே துரந்து உழுது கைவிட்டால் என்பைக்கழித்துத் தசையையுண்ணுங் காக்கையை யோட்டுவாரின்றாய்ப் புழுச்சொரியத் துன்பம்பொறுக்கமாட்டாது சாமென்றானென்க. ()

நிரம்பாதநீர்யாற்றிடுமணலுளாழ்ந்து
பெரும்பாரவாடவர்போற்பெய்பணடந்தாங்கி

மருங்கொற்றிழுக்கூன்றித்தாடவழ்ந்துவாங்கி
யுரங்கெட்டுறுப்பழுங்கிப்புல்லுண்ணுபொன்றும்.

இ-ள். சிறிதாகிய நீரையுடைய யாற்றில் இடைமணலுள்ளே சகடமழுந்துதலாலே, அதிற்பெய்த பண்டத்தைப் பெரும்பாரத்தைச்சுமந்தவாடவர் அதனைக் கைவிடாது தாங்குமாறுபோலத் தாமுந்தாங்கித் தமக்குப் போகலாநிலத்தைச்சேர்ந்து மூக்கைநிலத்தேயூன்றி யடிமுழந்தாளிட்டு இழுத்துத் தம்வலியெல்லாங்கெட்டுப் பின்பு உறுப்புக்களழுங்கிப் புல்லுண்ணுவாய்ச் சாமென்றானென்க. (௧௮௮௬)

போழ்மதிபோற்கூரிரும்பிற்பூநுதல்கள்போழ்ந்திடவுங்
காழ்நுதியிற்குத்துண்டுங்கார்மழைபோனின்றதிர்ந்தும்
வீழ்பிடிகள்சிந்தித்தும்வெந்நோயதம்மாங்குடலொடுஞ்
சாழத்தகந்நிலைகயானையலம்வருமே.

இ-ள். யானைகள், மதியைவகிர்ந்ததுபோலுந் தோட்டியாலே மத்தகத்தைப் பிளக்கப்பட்டும், பரிக்கோலாற் குத்துண்டும், அவைபொறாமல் அதிர்ந்தும், காயநோய் சுட வெந்து பிடிகளைநினைத்தும் ஆழகாட்டின களிறுகள் சுழலுமென்றானென்க. (௧௮௮௭)

எரிவளைப்பவெம்புகையுண்டின்னுயிர்விட்டேகு
மரிவளைப்பக்குஞ்சரமுமாவிபோனீராம்
வரிவளைக்கும்வெண்மயிர்கவரத்திற்குமாந்தர்
திருவளைந்தமார்பசெகுத்திடுவர்தேங்கார்.

இ-ள். திருவைத்தடுத்தமார்பனே! சிலவிலங்குகள், நெருப்புவளைப்பப் புகையையுண்கையினாலே யுயிர்விட்டுப்போம்; குஞ்சரங்களுஞ் சிங்கம்வளைப்பவுயிர்விட்டுப்போம்; அவையேயுமன்றி மாந்தர் நீர்மேலபிறக்குஞ்சங்கை வரிவளைக்கும், இப்பியை ஆவிபோலுமுத்திற்குங் கவரிமாவை மயிர்க்குந் தேங்காராய்க் கொல்வர்சானென்றானென்க. (௧௮௮௮)

வேள்விவாய்க்கண்படுத்தும்வெவ்வினைசெயாடவாகை
வாளின்வாய்க்கண்படுத்தும்வாரணத்தினுரிபோற்
கோளிமிழ்ப்புநீள்வலைவாய்க்கண்படுத்துமின்னணமே
நாளுலப்பித்திட்டார்நமரலாதாரெல்லாம்.

இ-ள். உணர்வின்மாக்கள் தமக்கு நன்மையைத் தருமென்றுபோர்த்த யானையின்பசுந்தோல் தம்முயிர்க்குக் கேடாயினாற்போல, கொடியமக்கள் நமக்கு நன்மையைத்தருமென்று விலங்குகளை விருந்திடுதற்கு வாளின்வாயாற் கொன்றும், வேள்வியிடத்தேகொன்றும், வலையிடத்தேகொன்றும் இப்படியே தமதுவாழ்நாளைத் தேய்ப்பித்துவிட்டார்; நம்முடைய தமரல்லாதாரெல்லாருமென்றானென்க.

யானையின்பசுந்தோல் பிறருடம்பிற்பட்டாற் கொல்லுமென்றுணர்க. *"கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்-செல்லா துயிருண்ணுங் கூற்று." என்றார்பிறரும். இனி யவற்றின் வாழ்நாளுமென்ப. இனி வாரணத்துரிபோலே தப்பாமற் கொல்லும் வலையென்றுமாம். இமிழ்ப்பு - கட்டு. கோள்வலை. (௧௮௮௯)

* திருக்குறள், கொல்லாமை, ௬.

[மக்கட்கதித்துன்பம்.]

கொல்வாருங்கூட்டிட்டுசெறிப்பாருமாடவர்க
ளெல்லாருநாய்வேட்டமாடாதமாத்திரையே
யல்லாதபைங்கிளியும்பூவையுமாதியா
வெல்லாங்கிளைபிரித்திட்டேமுறுநோய்செய்பவே.

ஆடவர்களெல்லாராயிருப்பார் - மகளிர். முற்கூறிய ஆடவரேயன்றி மகளிரு மென உம்மை எச்சவும்மை. அல்லாத - நஞ் சமயமல்லாத.

இ - ள். அல்லாதமகளிரும், கருணைபுல்லுதற்குக் கொல்வாருங் கிளியும் பூவையு முதலாக ஒழிந்தவுயிர்களையெல்லாந் தத்தங் கிளையைப்பிரித்துக் கூட்டுளடைப்பாரு மாய் அவற்றிற்கு வருத்தமுறுநோயைச் செய்வார்; ஆதலால், அவரும் புறம்போந்து நாய் வேட்டமாடாத மாத்திரையாயிருப்பர்காணென்றானென்க.

என்றதனால், உள்ளிருந்தும் பாவமேசெய்வரென்றான். (கக௦)

மல்லன்மலையனையமாதவரைவைதுரைக்கும்
பல்லவரேயன்றிப்பகுத்துணைப்பாவிகளு
மல்குல்விலைபகருமாய்தொடியராதியா
வில்பொருதோண்மார்பவிலங்காய்ப்பிறப்பவே.

இ - ள். வில்பொருத தோளையுடைய அரசனே! மலைபோலசையாத மாதவத் தோரைப் பழித்துரைக்கும்பலரும், பகுத்துண்ணாதாரும், பரத்தையர் முதலாயினு ரெல்லாரும் விலங்காய்ப் பிறப்பாகாணென்றானென்க. (கக௧)

விலங்குகதித்துன்பமுற்றிற்று. கவி, க௯.

---

மக்கட்கதித்துன்பம்.

தம்மைநிழனோக்கித்தாங்கார்மகிழ்தூங்கிச்
செம்மைமலர்மார்பமட்டித்திளையார்தோள்
கொம்மைக்குழநாடுங்கோலவரைமார்பர்
வெம்மைமிகுதுன்பம்வேந்தேசிலகேளாய்.

வரைமார்பர் - இகழ்ச்சி.

இ - ள். வேந்தே! தம்மார்பிலே பூசப்படுவனவற்றைப்பூசித் தம்மைக் கண் ணாடியிலேபார்த்துத் தம்மழகைத் தாங்கமாட்டாராய் மகிழ்ச்சிசெறிந்து பெரிய இள மைச்செவ்வியாலே இளையார்தோளைக்கூடும் வரைமார்பரது துன்பத்திலே சிலவற் றைக் கேட்பாயாகவென்றானென்க. (கக௨)

கருட்டடிமுடியிண்டுமலபிண்டப்
போர்வைபுழுமொய்ப்பப்பொல்லாக்குடர்சூடிச்

வேறு.

வேட்டனபெறாமைதுன்பம்விழைநரைப்பிரிதறுன்ப
மோட்டெழிலிளமைநீங்கமூப்புவந்தடைதறுன்ப
மேட்டெழுத்தறிதலின்றியெள்ளற்பாடுள்ளிட்டெல்லாஞ்
சூட்டணிந்திலங்கும்வேலோய்துன்பமேமாந்தர்க்கென்றான்.

இ-ள். மாலையணிந்து இலங்கும்வேலோய்! மக்கட்கு வேட்டபொருள்களைப் பெறாமை துன்பம்; விரும்பினாரைப் பிரிதல் துன்பம்; மூப்புவந்துசேர்தல் துன்பம்; இவையேயன்றி ஏட்டிலெழுத்தை யறிதலின்றி யிகழ்தல்முதலாக மற்றுள்ள இகழ்ச்சிகளெல்லாந் துன்பமேயாயிருக்குங்காணென்றானென்க. (உ௦௪).

மக்கட்கதித்துன்பமுற்றிற்று. கவி, ௪௦.

---

## தேவகதித்துன்பம்.

திருவிற்போற்குலாயதேந்தார்த்தேவாதந்தன்மைசெப்பிற்
கருவத்துச்சென்றுதோன்றார்காணிலந்தோய்தல்செல்லா
ருருவமேலெழுதலாகாவொளியுமிழ்ந்திலங்குமேனி
பரிதியினியன்றதொக்கும்பன்மலர்க்கண்ணிவாடா.

இ-ள். இனித் தேவருடைய குணத்தைக்கூறின், அவர் கருவிற்சென்றுபிறவார்; கால் நிலந்தீண்டுதல்செல்லார்; அவருருவத்தைக்கூறின், எழுதலாகா; அவர் நிறம் பரிதியினியன்றதொக்கும்; அவர்க்குக் கண்ணிவாடாவென்றானென்க.

அவர்க்குயாக்கையும்வடிவுமென்றுரைச்ச. (உ௦உ)

அங்கையுமடியுநோக்கிற்றாமரையலர்ந்ததொக்கும்
பங்கயமனையசெங்கண்பகுவொளிப்பவளஞ்செவ்வாய்
செங்கதிர்முறுவன்முத்தின்றெளிநகைதிகழுஞ்செய்யாள்
வெங்கடைமழைக்கணோக்கிவெய்துறத்திரண்டவன்றே.

இ-ள். அவர்தேவியர்க்குக் கையும்,அடியுந் தாமரையலர்ந்த செவ்வியையொக்கும்; கண் கமலத்தையொக்கும்; வாய் செங்கதிராகிய பேரொளியையுடைய பவளத்தையொக்கும்; திகழுமுறுவல் முத்தினொளியையொக்கும்; இவையேயன்றி யவர்க்குத் திருமகள் இவரழகைப் பெற்றிலேனென்று தானோக்கி வருந்தும்படி யொழிந்த அவயவவழகும் வந்துதிரண்டனவென்றானென்க. (உ௦௩)

தாமணிக்குவளைக்கண்ணரித்தளையவிழ்க்கோதைமாலை
வாண்முடிவைரவில்லும்வார்குழைசுடருமார்பிற்
பூணிடைநிலவுமேனிமின்னொடுபொலிந்ததேவ
ரூனுடையயிர்தம்வேட்டாலுண்பதுமனத்தினாலே.

[தேவகதித்துன்பம்.]

இ - ள். குவளைக்கண்ணியினையும், மார்பிற்கோதையினையும், நெற்றிமாலையினையும், வாண்முடியிலுண்டாகிய வைரவில்லினையும், சுடருங்குழையினையும், மார்பிற் பூணிடத்தில் நிலவினையும், மின்னொடுபொலிந்த நிறத்தினையுமுடைய அத்தேவர் உண்டற்றொழிலையுடைய அமிர்தத்தை யுண்டற்குவிரும்பினால் மனத்தாலேயுண்பது கையினாலுமுண்ணார்காணென்றானென்க. (உ௦௪)

சிதறரியொழுகியோடிச்செவியுறப்போழ்ந்துநீண்ட
மதரரிமழைக்கணம்பாவாங்குவிற்புருவம்வில்லாத்
துதைமணிக்கலாபமின்னத்தொன்மலர்க்காமனம்பு
புதைமலர்மாபத்தெய்யப்பூவணைமயங்கிவீழ்வார்.

சிதறரி - சிதறினசெவ்வரி. மதரரி - கதிர்த்தவழகு. ஓடிப் போழ்ந்து நீண்ட கண்.

இ - ள். காமன் றன்மலரம்பு முன்னர்ப்புதைந்த தேவருடைய மலர்ந்த மார்பிலே, தேவியர் புருவம் வாங்குவில்லாகக் கண் அம்பாகவெய்ய மயங்கிக் கலாபமின்ன அணையிலே வீழ்வார்காணென்றானென்க.

கலாபமின்னவென்றது புணர்ச்சியை. (உ௦௫)

௧. பூததைகொம்புபோன்றுபொன்னிழைசுடருமேனி
யேத்தருங்கொடியனாையிருகடுவாகப்புல்லிக்
காய்த்தியிட்டுள்ளம்வெம்பிக்கடைந்திடுகின்றகாம
நீத்துநீர்க்கடலைநீந்தும்புணையெனவிடுத்தல்செல்லார். (உ௦௬)

௨. பொங்கல்வெம்முலைகளென்னும்போதொடுபொருதுபூந்தா
ரங்கலங்தொடையன்மாலைகிழிந்தழகழியவைகிக்
கொங்கலர்கோதைநல்லார்குளைநடலமிர்தமாகத்
தங்கலர்பருகியாரார்தாழ்நதுகண்ணிமைத்தல்செல்லார்.

இவையிரண்டுமொருதொடர்.

௧. ஏத்தருங்கொடி - வேள் அம்பைச் செலுத்துதலைத் தருங்கொடி. இருநடுவாக - இடைமுரிய. நீத்து - பெருக்கு.

௨. பொங்கல் - பெருமை. அழகிய கலத்தினையுந் தொடையன்மாலையினையுமுடைய முலை. தங்கலர் - அமையார்.

இ - ள். கொம்பையொத்து இழைசுடருமேனியையுடைய கொடியன்னாைப் புல்லி யவருடைய முலைகளென்னுந் தாமரைமுகைகளோடே தமது தார்பொருது தோற்று அழகழியவைகி அதனாலுமமையாராய் அவரை யமிர்தமாகப்பருகி யதனாலுமாராராய் விருப்பமிகுகியாற் கண்ணிமையாமற் றாழ்ந்து உள்ளம்வெம்பிக் காய்த்தியிட்டுக் கடைந்திடுகின்ற காமக்கடலைநீந்துந்தெப்பம் இவர்களேயென்றுகருதி யவர்களைக் கைவிடார்காணென்றானென்க. (உ௦௭)

க. கருவியின்னிசைகளார்ப்பக்கற்பகமரத்தினீழற்
பொருகயலனையகண்ணும்புருவமுமரவஞ்செய்ய
வரவமேகலைகளம்பொற்கிண்கிணிசிலம்பொடார்ப்பத்
திருவனாராடல்கண்டுந்திருவொடுதிளைத்துமானார். (உ0அ)

உ. பனிமுகின்முளைத்தநான்குபசுங்கதிர்த்திங்களொப்பக்
குனிமருப்புழுதுமேகங்குஞ்சரங்குனிந்துகுத்த
வினிதினினிலக்குபொற்றோடேற்றுமின்குழைகளபொங்கத்
துனிவிலர்களிற்றோடாடித்தொழுதகக்கழிப்பர்வேந்தே.

இவையிரண்டுமொருதொடர்

க. அரவஞ்செய்ய - மனத்தைக்கலக்க.

உ. பனிமுகில்-பனிமாசு. வெண்மேகத்தேமுளைத்த நான்குபிறையையொப்ப வென்றார்; வெள்ளையானை நாற்கோட்டதாதலின். ஏற்று - போரேற்று. தொழுதக-விரும்ப.

இ - ள். வேந்தே! அங்ஙனநுகர்ந்தவர், கற்பகமரத்தின் நீழலிலேயிருந்து நால் வகைக்கருவிகளுடனே யினிய இசைகளாராநிற்கத் திருவனாருடைய மேகலைமுதலி யன ஆராநிற்ப அவர்கண்ணும்புருவமும் அரவஞ்செய்யாநிற்கக் கூத்தைக்கண்டுஞ் செல்வத்துடனே யொழிந்த விளையாட்டுக்களை விளையாடியும் அமையாராய்க் குஞ் சரம் மேகத்தோடேபோர்தொடங்கிக் குனிந்து திங்களொப்பவளைந்த மருப்பாலுங் குத்தும்படி தமது தோடுங்குழையும்பொங்க அதனை மேற்கொண்டு துனிவிலராய் அக்களிற்றோடேயிளையாடிப் பொழுதுபோக்குவாகாளென்றுளென்க. (உ0க)

கடிகைவாளாரமின்னக்கற்பகக்காவுகண்டுந்
தொடிகளினாறுமென்றோட்டேவியர்சூழ்வாம
னடிகையிற்றொழுதுபூத்தூயஞ்சலிசெய்துவீடே
முடிகவிப்பிறவிவேண்டேமுனைவவென்றிரப்பவன்றே.

கடிகை - தோள்வளை.

இ - ள். அவர், போகநுகர்தற்கு வேண்டுவனதருகின்ற கற்பககாவைக கண்டுவைத்தும் இது நிலையாதென்று உட்கொண்டு தேவியர்சூழத் தோள்வளையும ஆரமுமின்னச்சென்று வாமனடியைத்தொழுது பூவைத்தூவி வணங்கி, முனைவனே! இப்பிறவியைவிரும்பேம், வீடே யெமக்கு முடிவதாகவென்று இரப்பாகாளென்று ளென்க. (உக0)

மலங்குவித்தாவிவாடவெய்தினைபயிர்தம்பெய்த
விலங்குபொற்கலசமன்னவெரியணிமுலைகள்பாயக்
கலந்தனாசென்றபின்னுட்கந்தாகுறம்திருநகவெய்போன
புலம்புபோற்புலம்பித்தேவாபொற்புருத்திருப்பவன்றே.

பற்று, ஆவம், செற்றமுதலிய மலங்களைத்திரட்டித் தமக்குள்ளவாயுளை அவமே போக்கி.

[நற்காட்சி.]

இ - ள். தேவர், வாயளாவுகிறைய அமிர்தம்பெய்த கலசமன்ன முலைகள்பாயக் கலந்தனராய் ஆவியைவாட்டிச் சென்றபின்னுளிலே கதிர்போன ஞாயிற்றின்புலம்பு போற் புலம்பிப் பொலிவைப்போக்கி யிருப்பரென்றானென்க.

முலைகள் தேவரைமயங்கப்பண்ணி யாவியைவாட்டியென்றுமாம். (உகக)

எல்லேமூவைந்துநாள்களுளவெனவிமைக்குங்கண்ணு
நல்லெழின்மாலைவாடுநஞ்சுடையமிர்துண்டாரிற்
பல்பகற்றுய்த்தவின்பம்பழுதெனக்கவல்பகண்டாய்
பில்கித்தேனொழுகும்பைந்தார்ப்பெருநிலவேந்தர்வேந்தே.

இ - ள். வேந்தே! அத்தேவர்கட்கு உயிர்போகப் பதினைந்துநாள்களுளவெனக் கண்ணுமிமைக்கும்; மாலைவாடும்; அவர்தாம் நஞ்சையுள்ளேயுடைய அமிர்தையுண் டாரைப்போலே யங்ஙனம் பலநாளுநுகர்ந்தவின்பத்தைப் பயனின்றிக் காலம்போ க்கினோமேயென்று பின் வருந்துவர்காணென்றானென்க. (உகஉ)

தேவரேதாமுமாகித்தேவராற்றொழிக்கப்பட்டு
மேவல்செய்திறைஞ்சிக்கேட்டுமணிகமாப்பணிகள்செய்து
நோவதுபெரிதுந்துன்பநோயினுட்பிறத்தறுன்பம்
யாவதுந்துன்பமன்னுயாக்கைகொண்டவர்கட்கென்றான்.

இ - ள். மன்னு! தாமுந் தேவரேயாயிருந்தும் வேறொரு தேவராற் கோபிக் கப்பட்டும், அவரையிறைஞ்சி அவரேவல்கேட்டும், அவ்வேவலைச்செய்தும், அவர்கள் தம்முடைய அணிகலங்களிற் பெரியபணிகளைச்செய்தும் நோவது மிக்கதுன்பம்; அதனைவிட்டு மண்ணிடைவந்து மக்களாயும் விலங்காயும் பிறத்தலுந்துன்பம்; ஆத லால், யாதொரு யாக்கையை யெடுத்தவர்கட்கு அவ்வியாக்கைகளெல்லாந் துன் பத்தையே செய்யுங்காணென்றானென்க.

அணிதிரிந்த அணிகமாயிற்று. பணிகள்செய்வார் - மயன்முதலியோர்; *"நாவ லொடு பெயரிய பொலம்புனை யவிரிழை" என்றார்பிறரும். என்றானென்பதனை முன்னர்க்கூறியவற்றிற்குங் கூட்டுக. இனி † அணிகம் - ஊர்திகளாகியவற்றிலே யேறிப் பணிகள்செய்துமென்பாருமுளர்; வாகனதேவதைகளாகியென்பதாம். ()

தேவகதித்துன்பமுற்றிற்று. கவி, ௬உ.

---

## நற்காட்சி.

கொங்குவிம்முகுளிர்பிண்டிக்குழவிஞாயிற்றெழிலேய்ப்பச்
சிங்கஞ்சுமந்தமணியணைமேற்றேவரேத்திச்சிறப்பயா

---

* திருமுருகாற்றுப்படை: நாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச் சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித் - துணையோ ராய்ந்த விணையீ ரோதி.
†"அந்தரம்விளங்கவெங்குமணிகமூர்ந்தமரரீண்டி" என்பர் பின்னும்.

வெங்குமுலகமிருணீங்கவிருந்தவெந்தைபெருமானார்
தங்குசெந்தாமரையடியென்றலையவேயென்றலையவே.

இ-ள். பிண்டியின்கீழே அணைமேலே தேவர்சிறப்புச்செய்ய ஞாயிற்றெழில் வேய்ப்ப உலகமெங்குமிருணீங்கவிருந்த எந்தையாகிய பெருமானாருடைய தாமரை மேற்றங்கினவடி என்றலையிடத்தவே, என்றலையிடத்தவே யென்றானென்க.

இது விரைவு. இருள் - பிறதெய்வங்களைத் தெய்வமென்று கருதுதல். (உகச)

இலங்குசெம்பொனெயின்மூன்றுமெரிபொன்முத்தக்குடைமூன்றும்
வலங்கொண்டலர்தூஉயடியேத்தும்வையமூன்றும்படைமூன்றுங்
கலங்காதுயர்ந்தவதிசயங்கண்மூன்றுங்காமர்நூல்மூன்று
நலங்கொடீம்பாற்குணக்கடலுமுடையார்நம்மையுடையாரே.

எயின்மூன்றாவன: உதயதரம், பிரீதிதரம், கல்யாணதரம். குடைமூன்றாவன: சந்திராதித்தியம், நித்தியவிநோதம், சகலபாசனம். உலகமூன்றாவன: நாகலோகம், பூலோகம், சுவர்க்கலோகம். படைமூன்றாவன: இரத்தினத்திரயம்; அவை: நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம். அதிசயங்கள்மூன்றாவன: சகசாதிசயம், கர்மக்ஷயாதிசயம், தெய்வீகாதிசயம். நூன்மூன்றாவன: அங்காகமம, பூர்வாகமம், பகுசுருதியாகமம். குணக்கடல் - அநந்தஞானாதிகுணங்கள்.

இ-ள். இவற்றையுடையார்காண் நம்மை அடிமையாக வுடையாரென்றானென்க. (உகரு)

மன்றலாறுமணிமுடிமேன்மலிந்தசூளாமணிபோலும்
வென்றோர்பெருமானறவாழிவேந்தன்விரிபூந்தாமரைமேற்
சென்றதிருவாரடியேத்தித்தெளியும்பொருள்களோரைந்து
மன்றியாறுமொன்பானுமாகுமென்பாரறவோரே.

வென்றோர் - இருடிகள். * ஐந்தாவன: சீவம், புற்கலம், தருமம், அதருமம், ஆகாசம். அன்றி - இவ்வைந்துமேயன்றி. இவற்றோடு காலமுஞ்சேர ஆறுமாகும். ஒன்பதாவன: சீவம், அசீவம், புண்ணியம், பாவம், ஆஸ்ரவம், சம்வரை, நிர்ச்சரை, பந்தம், மோக்ஷம்எனவிவை.

இ-ள். அறவோர் சூளாமணிபோலும் பெருமான், வேந்தன், அவனுடைய அடியையேத்தித் தெளியும்பொருள்கள் ஐந்தும், ஆறும், ஒன்பதுமென்பரென்றானென்க. (உகசு)

பெரியவின்பத்திந்திரனும்பெட்டசெய்கைச்சிறுகுரங்கு
முரியசெய்கைவினைப்பயத்தையுண்ணுமெனவேயுணர்ந்தவனை
யரியரென்னமகிழாதுமெளியரென்னவிகழாது
மிருசார்வினையுந்தெளிந்தாரேயிறைவனூலுந்தெளிந்தாரே.

பெட்ட - விரும்பின.

---

* ஐந்தினைப் பஞ்சாஸ்திகாயமென்றும், ஆறினை ஷட்திரவியமென்றும், ஒன்பதினை நவபதார்த்தமென்றுங்கூறுவர்.

[நற்காட்சி.]

இ-ள். தஞ்செயலாற் றமக்குரியவாகிய இருவினையின்பயனை இந்திரனுங் குரங்கும் நுகருமென்றேயுணர்ந்து பிறர் இந்நிலை யெய்துதற்கரியரென்றுவியந்து இந்திரனை மகிழாதேயும், பிறர் இந்நிலை யெய்துதற்கெளியரென்றுவெறுத்துக் குரங்கை யிகழாதேயும் நல்வினைதீவினையின்றன்மை யித்தன்மைத்தென்று தெளிந்தவர்களேகாண் இறைவனுடைய நாற்பத்திரண்டு பரமாகமத்தையுந் தெளிந்தாரென்றானென்க.

* அவை பன்னிரண்டும், பதினான்கும் பதினாறும் ஆக நாற்பத்திரண்டு. (௨௧௭)

உறுவர்ப்பேணலுவர்ப்பின்மையுலையாவின்பந்தலைநிற்ற
லறிவர்சிறப்பிற்கெதிர்விரும்பலழிந்தோர்நிறுத்தலறம்பகர்தல்
சிறியாரினத்துச்சேர்வின்மைசினங்கைவிடுதல்செருக்கவித்த
லிறைவனறத்துளார்க்கெல்லாமினியராதலிதுதெளிவே.

இ-ள் மிக்கோரைவிரும்புதல், வெறுப்பில்லாமை, வீடெய்தங்கருத்துத் தம்மிடத்தேநிற்றல், அறிவர்க்குச்செய்யும் பூசைக்கு எதிர்விரும்புதல், அழிந்தோரைப் பழையநிலையிலேநிறுத்துதல், அறத்தைக்கூறுதல், அறிவின்மாக்களைக் கூடாதிருத்தல், சினத்தைப்போக்குதல், செருக்கைக்கெடுத்தல், இச்சமயத்தார்க்கெல்லாம் இனியராதல் ஆகியவித்தன்மைகாண் பரமாகமப்பொருளைத் தெளிந்த தெளிவாவதென்றானென்க. (௨௧௮)

செறியச்சொன்னபொருடெளிந்தார்சேரார்விலங்கிற்பெண்ணாகார்
குறுகார்நரகமேழுங்கீழ்மூத்தேவர்குழாந்தீண்டா
ரறியாதுரைத்தேனதுநிற்கவாமேநரகமாகாத
பொறியார்போகபூமியுள்விலங்குமாவரொருசாரார்.

இ-ள். யான் சொன்னபொருளைச் செறியத்தெளிந்தார், விலங்கிற்சேரார்; பெண்ணாகப்பிறவார்; எழுநரகத்தையுமணுகார்; கீழான மூன்றுதேவர்திரள்களைத் தீண்டார்; இவற்றுள் நரகமேழென்று அறியாமற்கூறினேன்; அது நின்மனத்தே யேழென்று துணியாமை நிற்பதாக; ஆகாதநரகம் ஆறே; அதற்குக் காரணம்யாதெனின், ஒருசாரார் நல்வினைநிறைந்த போகபூமியில் விலங்காய்ப் பிறப்பதுஞ்செய்வர் காணென்றானென்க.

நரகமேழாவன: இரத்தினப்பிரபை, சருக்கராப்பிரபை, வாலுகாப்பிரபை, பங்கப்பிரபை, தூமப்பிரபை, தமப்பிரபை தமத்தமப்பிரபையெனவிவை. கீழ்மூத்தேவராவார்: பவணர், வியந்தரர், †ஜ்யோதிஷ்கர். ஆகாதநரகமாறேயென்றது-பூர்வாயுஷ்

* அங்காகமம், ௧௨; பூர்வாகமம், ௧௪; பகுசுருதியாகமம், ௧௬. சீவசம்போதனை, வெண்பா: "ஆறிரண் டங்கமு மாய்ந்திரேழ் பூர்வமுங் - கூறிரண்டெண் கேள்விகளிற் குன்றாமற் - றேறி - வரந்தருநல் லோத்துரைக்கும் வாய்மையார் பாத - நிரந்தரநான் வந்திப்ப னின்று." என்பதனாலறிக.

† ஜ்யோதிஷ்கர்: சந்திராதித்திய கிரக நக்ஷத்திர தாரகைகள். "சந்திரருஞ் சூரியருந் தாரகையு நாண்மீனும் - வெந்திறல கோட்களு மெனவிளங்கி விசும்பாரு- மந்தரத்தை வலஞ்சூழ்ந்து வருபவரு நிற்பவருஞ் - சுந்தரஞ்சேர் மணிமுடியாய் சுடர்பவருஞ் சோதிடரே." என்றார் சூளாமணியிலும்.

யம் முன்போகாயுஷ்யங்கட்டினபின்பு ‡ தரிசனங்கொண்டவர், முதல்நரகத்திலே யும் போகபூமியிலே விலங்காயும் பிறப்பரென்றதென்க. (உகக

நற்காட்சிமுற்றிற்று. கவி, சு.

---

சீலம்.

எத்தருநிருமணியிலங்குநீர்மைய
கோத்தனபோழ்குணநூற்றுக்கோடியுங்
காத்தனகாவலபதினெண்ணாயிரம்
பாத்தனபண்ணவர்சீலமென்பவே.

இ - ள். காவலனே! இலங்குநீர்மையவாகிய திருமணியைக் கோத்தனபோலும் எண்பத்துநான்கு நூறாயிரமாகப் பகுக்கப்பட்டனவாகிய குணவிரதங்களும், நூற்றுக்கோடி மகாவிரதங்களும், பதினெண்ணாயிரஞ் சீலாசாரமும் பண்ணவா காக்கப்பட்டனகாணென்றானென்க. (உஉ0)

மொய்யமர்ஞாட்பினுண்முரல்கொண் மன்னவா
மெய்புகுபொன்னணிகவசமொப்பன
மையலைம்பொறிமதம்வாட்டிவைகலுஞ்
செய்வினைநுணுக்குவசீலமென்பவே.

இ - ள். அவற்றுட் சீலமென்றுகூறப்படுவன, வலிமேவினபோரிலே மன்னவர்மெய் சென்றுமறைபுங் கவசத்தையொப்பனவாய், நாடோறும் உண்ணின்று மயக்கத்தைச்செய்யும் ஐம்பொறியின் செருக்கைபுமவாட்டிப் புறத்துச்செய்யுந் தீவினையையுங் குறைப்பனகாணென்றானென்க. (உஉக)

மணித்துணரனையதங்குஞ்சிவண்கையாற்
பணித்தனர்பறித்தலிற்பாவைமாநிலக்
துணித்தொருதுணிசுமந்தனையதிண்பொறை
யணித்தகுமுடியினையாதியாகவே.

மணியனையதுணர் - நீலமணியனைய பற்றம்.

இ - ள். முடியினாய்! குஞ்சியைத் தங்கையாற்பறிக்கையினாலே இத்திண்ணிய பொறையுடைமை, நிலத்தை யிருகூறாக்கி அதில் ஒருகூற்றைச்சுமந்து பொறுத்த தன்மையவென்றுகருதி அச்சீலங்களுள் இதனை யாதியாகக்கொண்டு பணித்தாரென்றானென்க.

ஒருதுணியோடுவமித்தலின், ஏனையவொருகூறும், இஃது ஒருகூறுமாகக் கூறினான்; அருமையானென்றுணர்க. இது துறவின்பகுதியென்றுணர்க. (உஉஉ)

வேறு.

பெரியவாட்டடங்கட்செவ்வாய்ப்பிறர்மனைபிழைக்குமாந்தர்
மரீஇயவாய்ப்புறஞ்சொற்கூர்முண்மத்திகைப்புடையுமன்றி

---

‡ தரிசனம் - நற்காட்சி.

[தானம்.]

யொருவர்வாயுமிழப்பட்டதம்பலமொருவர்வாய்க்கொண்
டரியவைசெய்பவையத்தாலிப்பிறந்தார்களன்றே.

இ - ள். கண்ணினையுஞ் செய்யவாயினையுமுடைய பிறர்மனையாளை யவாவி யவ ளிடத்தேமருவி யொழுக்கத்தைத் தப்புமாந்தர் இம்மையிற் புறஞ்சொல்லாகிய கூர் முண்மத்திகைப் புடைபெறுதலுமன்றி அவளை முன்னா நுகர்ந்தாரொருவர் அவள் வாய்க்கண்ணே யுமிழப்பட்டதம்பலத்தைப் பின்னர் நுகர்வாரொருவர் தம்வாய்க் கண்ணே வாங்கிக்கொண்டுநின்று இங்ஙனம் அரியனவற்றையும் செய்வார்கள்; இத் தன்மையாா வையத்தில் ஆண்மக்களாய்ப் பிறந்தவர்களன்றுகாணென்றுனென்க.

இக்கவி இல்லறஞ்செய்வார்க்குரிய அவ்விரதங்களுள், இது காத்தலரிதென்று கூறிற்று. (௨௨௰)

ஒழுக்கமேயன்றித்தங்களுள்ளுணர்வழிக்குமட்டும்
புழுப்பயிறேனுமன்றிப்பிறவற்றின்புண்ணுமாந்தி
விழுப்பயனிழக்குமாநதர்வெறுவிலங்கென்றுமிக்கார்
பழித்தனவொழித்தல்சீலம்பார்மிசையவர்கட்கென்றான்.

இ - ள். உலகில் அறஞ்செய்வார்க்குச் சீலமாவன: ஒழுக்கத்தைக் கெடுத்தலே யன்றி யுணர்வையுங்கெடுக்குங் கள்ளையும், புழுப்பயின்றதேனையும், பிறவற்றின் புண்ணாகிய தசைகளையுமாந்தி வீடுபேற்றினை யிழக்குமாந்தர் உணர்வில்லா விலங்கு போல்வரென்று உயர்ந்தோர்பழித்தவற்றை நுகர்தலைத் தவிர்தல்காணென்றுனென்க.

சீலமுற்றிற்று. கவி, ரு.

---

தானம்.

நன்னிலத்திட்டவித்தினையம்வரவிளைந்துசெல்வம்
பின்னலம்பெருகவீனும்பெறலருங்கொடையும்பேசிற்
புன்னிலத்திட்டவித்திப்புற்கெனவிளைந்துபோக
மின்னொலத்தாறக்குந்தானத்தியற்கையும்விரித்துமன்றே.

இ - ள். நன்னிலத்திலேவிதைத்த விதைபோலே விருப்பம்வரவிளைந்து செல் வத்தைப் பின்பு உலகிலே பெருகவீனும் பெறுதற்கரிய கலையான தானத்தியற்கை யையும், சொல்லுமளவிற் பொல்லாநிலத்திலே விதைத்தவிதைபோலே பொல்லா தாகவிளைந்து போகமானது நிலைநில்லாது மின்போலத் தோன்றிமாயும் இடையான தானத்தினதியற்கையையும், இனி விரித்துக் கூறுதுமென்றுனென்க. (௨௨௫)

க. ஐவகைப்பொறியும்வாட்டியாமையினடங்கியைந்தின்
மெய்வகைதெரியுஞ்சிந்தைவிளக்குநின்றெரியவிட்டுப்
பொய்கொலைகளவுகாமமவாவிருள்புகாதுபோற்றிச்
செய்தவநுனித்தசீலக்கனைகதிர்த்திங்களொப்பார். (௨௨௬)

௨. வாய்ச்சிவாயுறுத்திமாந்தர்மயிர்தொறுஞ்செத்தினுலும்
பூச்சுறுசாந்தமேந்திப்புகழ்ந்தடிபணிந்தபோதும்

தூக்கியிவ்விரண்டுநோக்கித்தொல்வினையென்றுதேறி
நாச்செறும்பராவுங்கொள்ளார்நமர்பிறரென்றுமுள்ளார். (௨௨௭)

௩. பாற்கதிர்த்திங்கட்கோட்டிற்பருமித்தகளிறுபோல
நூற்கதிகொண்டுகண்ணுனுகத்தளவெல்லைநோக்கி
மேற்கதிக்கேணியாயவிழுத்தவர்மனையில்வந்தாற்
காற்கொசிகொம்புபோலக்கைதொழுதிறைஞ்சிமாதோ. (௨௨௮)

௪. தொடிக்கையாற்றொழுதுவாழ்த்தித்தூமணிநிலத்துளேற்றிப்
பொடிப்புனைதுகிலினீக்கிப்புகழ்ந்தடிகழீஇயபின்றை
யடுத்தசாந்தகிலினாவியாய்மலரருச்சித்தானார்
கொடுப்பர்நாலமிர்தமூன்றிற்குணம்புரிந்தடங்கினார்க்கே.

இவைநான்குமொருதொடர்.

௧. மனவெழுச்சியடங்கியாமைபோல் ஐம்பொறியையுங் கெடுத்துப் பொய் கொலை களவு காமம் அவாவாகிய இருள் சென்றுபுகாமற் சீலபுற்கலமுதலிய ஐந்தின் மெய்வகையினை யாராயுஞ் சிந்தையாகிய விளக்கை யவியாமல் எரியவிட்டுப் போற்றிச் செய்கின்றதவத்தைக் கூாக்கநிகழ்த்தின சீலமாகிய கதிரினையுடைய திங்களை யொப்பார்.

௨. மாந்தர் வாய்ச்சியினது வாயைச்சேர்த்தி யொருமயிர்க்கு ஒருசெத்தாகச் செத்தினாலும், பணிந்தபொழுதும் இவ்விரண்டினையுஞ் சீர்தூக்கிப்பார்த்துப் பழவினையென்றுதெளிந்து, செத்தினகாலத்தும் பணிந்தகாலத்தும் பிறரென்றும் நமரென்றுங் கொள்ளாராய் வைதலையும் வாழ்த்துதலைச்செய்தலையுமுள்ளார். இதுநிரனிறை.

௩. * திங்கள் எல்லாமீன்களையும் அளித்தற்குச் சுழலுஞ் சுழற்சிபோல எல்லாரையுமளித்தற்குப் பலதாரணிந்தகளிறு அடங்கி மெத்தென நடக்குமாறுபோலஆகமத்திற்கூறியவழியை யுட்கொண்டு நுகத்தளவாகிய எல்லையைநோக்கி மனையிடத்து வந்தால்.

௪. அடுத்த - பொருந்தின. நாலமிர்தம்: உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன. மூன்றின் - மனோவாக்குக்காயங்களின் தூய்மையோடே.

இ - ள். திங்களொப்பாராய் உள்ளாராய் மேற்கதிக்கெல்லையாகிய விழுத்தவர் மனையில்வந்தால், அவரைக் கையாற்றொழுது எதிர்கொண்டு மணிநிலத்திலேயிருத்திப் பின்னர்க் கொம்புபோலவிறைஞ்சிக் கைதொழுது அவரடியிற்பொடியைத் துகிலாற்றுடைத்து நீராற்கழுவினபின்னர், அவரைச் சந்தனமுதலியவற்றால் அருச்சித்து அமையாராய் அவர்க்கு நால்வகையமிர்தத்தையும் மூன்றோடே கொடுப்பர்காணென்றனென்க. (௨௨௯)

ஏன்பதுவகையினோதிற்றுத்தமர்க்காகுமார்ந்த
வின்பதமருளியீதல்டையெனமொழிபயார்க்கும்

* "அச்சுவினிமுதலாகிய நக்ஷத்திரங்களுள் கிரமஹானியின்றிச்சரிக்கின்றசந்திரனைப்போலக் கிருகந்தோறும் மௌனியாகி எழுந்தருளுகின்றஸ்வாமி" என ஸ்ரீபுராணத்தில் விருஷபதீர்த்தங்கரர்புராணத்துங்கூறினர்.

[தானப்பயன்.]

துன்புறவிலங்குகொன்றுசொரிந்துசோறூட்டினார்க்கு
நன்பொருள்வழங்கினார்க்கும்பயனமக்கறியலாகா.

இ - ள். ஒன்பதுவகையினாற் கொடுக்கவேண்டுமென்று கூறிற்று யான் முற் கூறிய*உத்தமராயினார்க்காகும்; குறைவற்றஇனிய சோற்றை யார்க்குமருளிக்கொடுத்தல் இடையாயதானமென்றுகூறுவர்; இவையன்றி விலங்கைத் துன்புறக்கொன்று சோற்றையூட்டினார்க்கும், அதனையுண்ட பாவிகட்கும், அவர்க்கு நல்லபொருளைக் கொடுத்தார்க்கும் விளையுந்தீவினைப்பயன் நமக்கு அறிந்துகூறமுடியாவென்றானென்க.

ஒன்பதாவன: "எதிர்கொள விடநனி காட்டல் கால்கழீஇ, யதிர்பட வருச்சனை யடியின் வீழ்தரன், மதுரநன் மொழியொடு மனமெய் தூயரா, யுதிரநம் வினையென வுண்டி யேக்கினா." எனவிவை. (௨௯௦)

தானமுற்றிற்று. கவி, ௬.

---

தானப்பயன்.

கூற்றுநாவலறுவதனையகூரிலை
யேற்றநீர்த்தூளும்புவாளிறைவவிங்கினிப்
போற்றினைகேண்மதிபொருவில்புண்ணியர்க்
காற்றியகொடைப்பயனறியக்கூறுவாம்.

அலறுவதாகிய கூற்றுநாவனைய வாள் - தன்கொடுமைகூறிப் பலருங் கூப்பிடப்படுவதாகிய கூற்றினது நாப் பல்லுயிரையும் உண்ணுமாறுபோலப் பகைவருயிரையுண்ணும்வாள்; வடிவுவமையுங்கொள்க. தூளும்புநீரேற்றவாள்-மணிக்குடங்களிலசையும் மஞ்சனநீரை யரசாசொரியும் வாள்.

இ - ள். இறைவனே! இனி யிவ்விடத்து மனைவியுந்தானும் மனம்பொருந்திப் புண்ணியர்க்குக் கொடுத்த கொடையின்பயனை நீயறியக்கூறுவேம்; அதனைப் போற்றிக்கேளென்றானென்க. (௨௯௧)

க. கடிப்புயாரங்கும்கொளீஇயகைதுரந்
தடித்துவார்மயிர்த்துதியலறலூதலிற்
பொடித்தபொற்றமனையனையபொங்கழ
லிடைக்கிடந்தெவ்வளவிரும்புகாய்ந்ததே. (௨௯௨)

உ. காய்ந்தவவ்வளவினுட்கொளவுநீரதொத்
தாய்ந்தறிகொடையினதளவிற்புண்ணியந்
தோய்ந்துயிருடம்பினையொழியத்தொக்கநாள்
வீந்துபோய்வயிற்றகம்விதியினெய்துமே.

இவையிரண்டுமொருதொடர்.

---

* அருங்கலச்செப்பு, ௯௯: குறள்வெண்பா. உத்தமர்க் கொன்பது புண்ணியத் தாலிவ - துத்தம தான மெனல்.

விளிம்பிற்பிணித்த கடிப்பிற்சேர்த்த வாளை விரல்கோத்துக்கொண்ட கையாலே நெருக்கிச் செலுத்தித் துருத்தியையூதலின், அவ்வழலிடைக்கிடந்த இரும்பு எவ்வளவுகாய்ந்தது; அக்காய்ந்தமிகுதியினாலே தானுண்ணுநீர்போல இருப்புயிருந் தோய்ந்தென்க. கொடியவாய்மயிரையுடைய துருத்தி. அலற - அதன்வாயொலிப்ப. உயிரென்றது - மேல் * "இரும்புபோலவாம் - பிணியுயிர்" என்பதனால், ஈண்டு நரகத்துச் சேறற்குரிய இருப்புயிரைக் கூறிற்றும்.

இ - ள். இவ்விருப்புயிர் பலபிறப்பினுந் தீவினையென்னுந் தீயினுட்கிடந்து காய்ந்தே தீவினைப்பயனாகிய நீரையுண்ணுதலைக்கெடுத்து ஈண்டுச்செய்த நற்றானத்தினதளவாலே யுண்டான புண்ணியநீரை யுண்டு போய்ப் போகபூமியிலே ஒருவயிற்றகத்தே யெய்துமென்றானென்க.

தப்பும்வழி யிதுவென்று ஆராய்ந்தறிந்த கொடை. தனக்கடைத்த காளறுதலின், உடம்பிவணொழியப் போயென்க. (௨௩௩)

க. திங்களொன்பதும்வயிற்றிற்சேர்ந்தபின்
வங்கவான்றுகில்பொதிமணிசெய்பாவைபோ
லங்கவிரட்டைகளாகித்தோன்றலுஞ்
சிங்கினாரிருமுதுகுரவரென்பவே. (௨௩௪)

உ. †இற்றவர்தேவராய்ப்பிறப்பவீண்டுடல்
பற்றியவிசும்பிடைப்பறவுமாறுகி
றெற்றெனவீங்கெனவீந்துபோகுமா
மற்றவம்மக்கடம்வணணஞ்செப்புவாம்.

இவையிரண்டுமொருதொடர்.

க. வங்கம் - மரக்கலம். சிக்கினார் - சிங்கினாரெனவிகாரம்.

உ. இற்றவர் - உடம்பைநீத்தவர்.

இ - ள். அவ்வுயிர் ஒன்பது திங்களாலுண்டான இருநூற்றெழுபதுநாளும் வயிற்றிலேயிருந்தபின், அவ்வுயிரையுடையவர்கள் துகிலாற்பொதிந்தபாவை அத்துகிலினின்றும்புறப்பட்டாற்போல அவ்விடத்தே வருத்தமின்றி யிரட்டைப்பிள்ளைகளாய்ப் பிறந்தவளவிலே, இருமுதுகுரவர் தம்மை முன்னாச்சிக்கிக்கொண்டுநின்ற

---

* முத்தியிலம்பகம், பரிநிர்வாணம், ௬௦.

† இக்கவியும், இதனுரையும் பின்னுள்ளவாறு சிலபிரதிகளில் வேறுபட்டுள்ளன.

இற்றவர்தேவராய்ப்பிறப்பவீண்டுடம் - பற்றமில்பறவைகளுடையக்கொண்டு போய்ச்-சுற்றியபாற்கடற்றுளும்பவிட்டிடும் - பொற்றிரள்வரையொடுமின்னுப்போலவே.

இ - ள். (சிக்கிக்கொண்டுநின்றவர்கள்) தம்முடம்பை நீத்துப்போய்த் தேவர்களாய்ப் பிறப்ப, வரையோடொடிய மின்னுப்போல ஈண்டியவுடம்பைச் சிலபறவைகளெடுத்துக்கொண்டுபோய்ப் பாற்கடலிலேபோகடுமென்றானென்க.

[தானப்பயன்.]

வர்கள், தம்முடம்பைநீத்துப்போய்த் தேவராய்ப்பிறப்ப, ஈண்டியவுடல் மேகவிகாசம்போலமாய்ந்துபோம்; அம்மக்கள்வண்ணம இனிச்செப்புவாமென்றுனென்க. ()

பிறந்தவக்குழவிகள்பிறர்கள்யாவரும்
புறந்தரலின்றியேவளர்ந்துசெல்லுநா
ளறைந்தனரொன்றிலாவைம்பதாயிடை
நிறைந்தனர்கலைகுணமுறுப்புநீரவே.

இ - ள். பிறந்தவப்பிள்ளைகள், புறத்துள்ளாரொருவரும் போற்றுதலின்றியே வளர்ந்துசெல்லுநாள் நாற்பத்தொன்பதென்னுநாளுக்குள்ளே நீர்மையையுடையவாகிய உறுப்புங் கலையுங் குணமும் நிறைந்தனரென்றும் ஆசமத்தையடைந்தா ரென்றுனென்க.

குழவியென்னும் விரவுப்பெயரின்பின்வந்த கள்ளீறு ஈண்டு உயர்திணையை யுணர்த்துதல், * "கடிசொல் லில்லை" என்பதனாற் கொள்க. (உகூசு)

வேறு.

சோலைமீனரும்பித்திங்கட்சுடரொடுபூத்ததேபோன்
மாலையுங்கலனுமின்றுவடகமுந்துகிலுநானறு
காலையுமிரவுமில்லாக்கற்பகமரத்தினீழற்
பாலையாழ்மழலைவேறாய்ப்பசும்மணிக்கொம்பினின்றாள்.

வடகம் - அத்தவாளம்.

இ - ள். பாலையாழ்போலுமழலைச்சொல்லாள், அவனைநீங்கிப்போய் ஒருசோலை மீனையரும்பித் திங்களை ஞாயிற்றோடு பூத்ததன்மைபோல ஈன்று நான்று காலையு மிரவுமில்லாத கற்பகமரத்தினிழலிலே மணிக்கொம்புபோலே நின்றாளென்று னென்க. (உகூஎ)

இலங்குபொற்குவடுசாந்தமெழுதியதனையதோண்மே
லலங்கிணர்குழைகணான்றுசாந்தின்வாய்நக்கிமின்னக்
கலவைகலந்தகன்றமார்பிற்கற்பகமாலைதாழ
விலங்கரசனையகாளைவேனில்வேந்தென்னச்சேர்ந்தான்.

இ - ள். சிங்கத்தையொத்த அந்தக்காளை, சாந்தமெழுதியதாகிய குடவரை யனைய தோள்மேற்கிடந்த சாந்தினிடத்துக் குழைகள் நான்று நக்கிமின்ன, மார்பிலே மாலைதாழக் காமனென்ன அக்கற்பகத்தைச் சேர்ந்தானென்றுனென்க. (உகூஅ)

குண்டலங்குலவிமின்னப்பொன்னரிமாலைதாழத்
தெண்கடலமிர்திற்செய்தபாவையிற்பாவைநிற்ப
விண்டலர்மாலைமார்பன்விதியினாற்சென்றுமாதோ
கண்டனன்கலந்தவுள்ளங்காதலினொருவரானார்.

---

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், ருசு.

இ - ள். ‧ அதனைச்சேர்ந்தவன், அமிர்தாற்செய்த பாவைபோல மின்னத் தாழ அவள்நின்றவளவிலே, ஊழாலே சென்றுகண்டான்; அப்பொழுது இருவருள்ளமுங் காதலினாற் கலந்தன; பின்பு ஒருமனத்தராயினாரென்றானென்க. (௨௩௯)

கொதிநுனைக்காமனம்புகொப்புளித்துமிழ்ந்துகாம
மதுநிறைபெய்துவிம்முமணிக்குடமிரண்டுபோல
நுதிமுகமுத்தஞ்சூடிநோக்குநராவிவாட்ட
விதிமுலைவெய்யவாகித்தாரொடுமிடைந்தவன்றே.

காமத்தைக் கொப்புளித்துக் கொதிநுனையினையுடையவம்பைக் காமன்சொரிய. உமிழ்ந்து - உமிழ. மதுப்பெய்துநிறைந்த மணிக்குடம்.

இ - ள். நோக்குநராவிவாட்டுதற்குக் கண்ணினையுடைய முகத்தே முத்தத்தைச்சூடி வெய்யவாகிக் குடமிரண்டுபோல விம்முமுலை, விதியாலே யம்பைக் காமனுமிழ அவன்றாரோடு மிடைந்தவென்றானென்க.

வாட்டுதற்கு முடிசூடின. (௨௪0)

இமைத்தநுங்கண்களென்னையிகழ்ந்தனிரென்றுசீற
வமைத்துநின்னழகுகோலமாரவுண்டறுக்கலாற்றா
திமைத்தனவஞ்சியென்னவிளையவள்சிலம்பிற்குஞ்சி
நமைத்தபூந்தாமந்தோயநகைமுகவிருந்துபெற்றான்.

இ - ள். நுங்கண்கள் இமைத்தன; ஆதலாலே நீர் என்னை யிகழ்ந்தீரென்று அவள்சீற, அதற்கஞ்சி, அவை நின்வடிவழகையும், ஒப்பனைக்கோலத்தையும் நிறையவுண்டு அறுக்கமாட்டாதே இமைத்தனகாணெனச் சொல்லாநிற்க, இளையவளது சிலம்பிலே தன்குஞ்சியிற்சூட்டிய தாமந்தோய்தலாலே யமைந்து நகைத்தமுகத்தில் விருந்தைப் பெற்றானென்றானென்க.

அமைத்து-பொறுத்து; வழுவமைத்தென்றாற்போலநின்றது. கூறவும் பாடம்.()

இன்னகிலாவிவிம்முமெழுநிலமாடஞ்சேர்ந்தும்
பொன்மலர்க்காவுபுக்கும்புரிமணிவீணையோர்த்து
நன்மலர்நானவாவிநீரணியயர்ந்துஞ்செல்வத்
தொன்னலம்பருகிக்காமத்தொடையலாற்பிணிக்கப்பட்டார்.

இ - ள். அங்ஙனம் புணர்ந்தவர்கள், மாடத்தைச்சேர்ந்துங் காவிலேபுக்கும் யாழைக்கேட்டும் வாவியிலாடுதற்கு நீர்க்கோலத்தைவிரும்பியுஞ் செல்வத்தையுடைய தொன்னலம்பருகிக் காமமாகிய மாலையாற் கட்டப்பட்டாரென்றானென்க. (௨௪௨)

பூமுற்றுந்தடங்கணுளும்பொன்னெடுங்குன்றனுளுங்
காமுற்றுநினைந்தவெல்லாங்கற்பகமரங்களீந்தத்
தாமுற்றுக்கழிப்பர்தானமிடையதுசெய்தநீரா
ரேமுற்றுக்கருமபூமியிருநிதிக்கிழமைவேந்தே.

[சீலப்பயன், காட்சிப்பயன்.]

**இ - ள்.** வேந்தே! அங்ஙனந் தலையானதானத்தைச்செய்த பூவின்றன்மை நிரம்பிய கன்னியருங் குமரருந் தாங்கள் விரும்பிநினைந்தவெல்லாங் * கற்பகமரங்கள் கொடுக்க, அவற்றைநுகர்ந்து காலங்கழிப்பர்; இடையதாகிய தானத்தைச் செய்தவர்களுங் கருமபூமியிலே யிருந்திக்கிழமைக்கண்ணே மயக்கமுற்றுக் காலங்கழிப்பரென்றுணென்க.

ஏமுற்று - "தேரேமுற்று" என்றாற்போலநின்றது. கடையானதானத்திற்குப் பாவமே யுண்மையின், ஈண்டுக் கூறிற்றிலர். (உசகூ)

அடங்கலார்க்கீந்ததானப்பயத்தினாலலறுமாநீர்த்
தடங்கடனடுவுட் †டீவபலவுளவவற்றுட்டோன்றி
யுடம்பொடுமுகங்களொவ்வாரொருபுடைகனிமாந்திவாழ்வர்
மடங்கலஞ்சீற்றத்துப்பின்மானவேன்மன்னரேறே.

இது முற்கூறிய பண்ணியரல்லாதார்க்கீந்த தானத்துக்குப் பயன்கூறுகின்றது.

இ - ள். மன்னரேறே! ஐம்பொறியையும் வாட்டாதார்க்குக் கொடுத்த தானப் பயனாலே, கடலிடைத் தீவுகள் பலவுள: அவற்றிலே உடம்பு மக்களுடம்பும், முகம் விலங்கின்முகமுமாய்த் தோன்றிக் கனியைமாந்தி வாழ்வரென்றுணென்க. (உசச)

**தானப்பயன்முற்றிற்று. கவி, கச**

---

சீலப்பயன். காட்சிப்பயன்.

செப்பியசீலமென்னுந்திருமணிமாலைசூழ்ந்தார்
கற்பகத்துளமரராவர்காட்சியினமிர்தமுண்டா
ரொப்பநீருலகமெல்லாமொருகுடைநிழற்றியின்பங்
கைப்படுத்தலங்கலாழிக்காவலராவர்கோவே.

இ - ள். கோவே! யான் முற்கூறிய சீலமென்னும் மாணிக்கமாலையைச்சூடினோர், கற்பத்தில் அமரராவர்; காட்சிப்பயனை நுகர்ந்தார் பின்னர் உலகெல்லாமொப்ப ஒருகுடையாலேநிழற்றி யின்பத்தை யகப்படுத்துச் சக்கரவர்த்திகளாவரென்றுணென்க. (உசரு)

**சீலப்பயன், காட்சிப்பயன்முற்றின. கவி, க.**

---

* கற்பகமரங்கள், ௬௦.

† இத்தீவுகளை அந்தரத்துவீபமெனவும், குமானுஷ்யத்துவீபமெனவுங் கூறுவர்; அவைகள் தொண்ணூற்றாறு; அவற்றை "வாரியுட்டீவு தொண்ணூற்றாறு" எனவும், ஈண்டு "உடம்பொடுமுகங்களொவ்வார்" என்றதை நோக்கி, "ஒன்றதாங் காலர் வாலர் கொம்பர்தாழ் செவியர் சீயம்-பன்றிமான் குரங்குகிளிபோட்டகங் கரடி யாதி-யொன்றலா முகத்தர் பல்ல மாயுகங் காத மோக்கர் - தின்றிடாப் பழத்தை மண்ணை முழைஞ்சிலு மரத்துஞ் சேர்வர்." எனவும் மேருமந்தரபுராணத்திற் கூறினர்.

## வீடுபேறு.

வீட்டினதியற்கைநாம்விளம்பிற்றீங்கதிர்
பாட்டரும்பனிமதிபழித்தமுக்குடை
மோட்டிருங்கொழுமலர்ப்பிண்டிமூர்த்திநா
லீட்டியபொருளகத்தியன்றதென்பவே.

இளைய ஞாயிற்றினது கூறுபாட்டினையும் பனிமதியினையும் பழித்த முக்குடை மூர்த்தி. மோடு - புடைபட்டவயிறு.

இ - ள். வீட்டினதியற்கையை நாங்கூறின், அது மூர்த்தியீட்டிய நூற்பொருளிடத்தேகூறிற்று; அதனை யான்கூறக் கேட்பாயாகவென்றானென்க.

என்ப - அசை. (உசகூ)

உள்பொருளிதுவெனவுணர்தல் ஞானமாந்
தெள்ளிதினப்பொருடெளிதல்காட்சியாம்
விள்ளறவிருமையும்விளங்கத்தன்னுளே
யொள்ளிதிற்றரித்தலேயொழுக்கமென்பவே

இ - ள். பொருள்களுள் உண்மைப்பொருள் இதுவெனவுணர்தல் ஞானமாம்; அங்ஙனமுணர்ந்த அப்பொருளின்றன்மை இதுவெனத் தெளிந்துவிடுதல் காட்சியாம்; அங்ஙனந் தெளிந்தவிரண்டினையும் நீக்கமற விளங்கும்படி தன்மனத்திலே நிலைபெறுத்துதல் ஒழுக்கமாமென்றானென்க.

ஐ, என்ப - அசை. (உசள)

கூடியமும்மையுஞ்சுடர்ந்தகொந்தழ
னீடியவினைமரநிரைத்துச்சுட்டிட
வீடெனப்படும்வினைவிடுதல்பெற்றதங்
காடெழிற்றோளினையநந்தநான்மையே.

இ - ள். தோளினாய்! இங்ஙனங்கூடிய மூன்றுதன்மையும் நின்றெரிந்தநெருப்பு மிகவளர்ந்த இருவினையாகியமரத்தினை நிரைத்துச்சுட்டுப்போகட அவ்விருவினை தாம் நெடுங்காலமபயின்ற உயிர்க்கிழவனைக் கைவிடுதல் வீடெனப்படும்; * அங்குப பெற்றபயன் அநந்தசதுட்டயங்களாமென்றானென்க.

அவை: அநந்தஞானம், அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்தசுகம். (உசஅ)

கடையிலாவறிவொடுகாட்சிவீரியங்
கிடையிலாவின்பமுங்கிளந்தவல்லவு
முடையதங்குணங்களோடோங்கிவிண்டொழ
வடைதலான்மேலுலகறியப்பட்டதே.

இதனாலே வினைவிடுத்தகாலத்துப்பெற்ற அநந்தசதுட்டயமுங்கூறிப் பின்னர்

---

* அநங்கனுச்சேட்டு, கடுஅ: (குறள்வெண்பா.) எல்லையி லின்ப முணர்வு வலிகாட்சி - புல்லும் வினைவென்ற வர்க்கு.

[பிறவிகளறவுரை.]

ஏனைநான்குங் கூறுகின்றார். கடையிலா - முடிவிலாத. இதனை நான்கினோடுங் கூட்டுக. இணை - ஒப்பு.

இ - ள். அறிவுங் காட்சியும் வீரியமும் இன்பமுமெனக் கிளந்தனவும், அல்லனவுந் தம்முடையகுணங்களாலேமிக்கு விண்ணிலுள்ளார் தொழும்படி வந்துசேருதலாலே வீட்டுலகென்பதொன்றுண்டு; அஃது யாவராலும் அறியப்பட்டதென்றானென்க.

அல்லவென்றது, ஏனைநான்கையும். (உசகூ)

வீடுபேறுமுற்றிற்று. கவி, ச.

---

## பிறவிகளறவுரை.

மாதவனெனும்பெயர்வரையினவ்வரை
போதகிலொலியிறவரிபவளவாய்த்தொடுத்
தாதியிலறவுரையருவிவீழ்ந்ததென
மாதுயரமலங்கெட மன்னனாடினான்.

இ - ள். அழகிய வரைகளையுடைய பவளம்போலும் வாயிற்பிறந்த ஏதமில் அறவுரையாகிய அருவி, தொடுத்து மாதவனெனப்பெயர்பெற்ற வரையினின்றும்வீழ்ந்ததாக, துயரைச்செய்யும் மலங்கெடும்படி மன்னன் ஆடினானென்க.

* "நுண்ணியவரியொடுதிரண்டு" என்றார் முன்னும். வாய், மேகமாயிற்று. ()

எல்லையிலறவுரையினியகேட்டபின்
றொல்லையெம்பிறவியுந்தொகுத்தபாவமும்
வல்லையேயணிமினமடிகளென்றனன்
மல்லலொன்றனன்றுபொன்மலர்ந்தமார்பினான்.

மல் - மற்றொழில். பொன் - திரு.

இ - ள். அங்ஙனமாடினமார்பினான், இனியவாகிய எல்லையில்லாத அறவுரையைக் கேட்டபின்னர், அடிகளே! எம்முடைய முற்பிறப்பையும், அப்பிறப்பில் யாந்தொகுத்த பாவத்தையுங் கடுக அருளிச்செய்யுமென்றானென்க.

அம் - அசை. கடுகத்திறத்தற்கு வல்லையென்றான். (உருக)

கதிர்விடுதிருமணிகையகத்தகொண்டதாக்
கெதிர்வதுமிறந்ததுமெய்தினின்றது
மதிர்வறத்தவிளக்கெறிப்பக்கண்டவன்
பதாறுதிருமொழிபணிக்குமென்பவே.

இ - ள். மணியை யங்கையிற்கொண்டால் ஆண்டுள்ளவற்றை யது விளக்குந்

* கனகமாலையாரிலம்பகம், கசசு.

தன்மையையொத்த நடுக்கமற்ற தவவிளக்கு விளக்குதலாலே முக்காலத்தையுமுணர்ந்தவன் மெய்யான வார்த்தையைச் சொல்லுமென்றாரென்க. (உருஉ)

வேறு.

முழுநீர்வளைமேய்தலின் முத்தொழுகிப்
பொழிநீர்நிலவின்னிருள்போழ்ந்தரிசிக்
கழுநீரொழுகக்கழுநீர்மலரும்
கழுநீர்துதாதகியென்றுளதே.

முழுநீர் - கடல்.

இ - ள். கடலிற்சங்கு நாட்டைத்தழுவின நீரிடத்தவாயவந்து வாரிலேஅரிசிக்கழுநீரிலே மெய்கையிற்றலே அவைசொரிந்த முத்து ஒழுங்குபட்டு அணையாய்க் கழுநீரைப் போகவொட்டாமற் றடுத்தலின், அந்நீரிடத்தே செங்கழுநீர் ஒழுகநின்று மலருந் தாதகியென்ற ஒருநாடுளதென்றுரைனன்க.

இருளைப்போழ்ந்து பரந்த நீர்மையையுடைத்தாகிய நிலவினையுடைய முத்தென்க. முத்தொழுகிக் கழுநீர்மலருமெனக் காரணகாரியமாதலின், அப்பொருட்டாயிற்று. (உருங)

கயல்பாய்ந்துகளக்கயல்வெம்பெரி இ
வியனீள்சுடர்மேன்மதிசேர்வதுபோ
லயலேயலர்தாமரைசேர்ந்துறையும்
வயல்சூழ்ந்தனவூர்வளமாந்தனவே.

கயல் பாய்ந்து உகளுகையினாலே மிக்கவன்னம்வெருவி விண்ணில் நடையிற்றை மதிசென்றுசேருந் தன்மைபோல அயலேயலர்ந்த தாமரையைச் சேர்ந்துறையும் வயலென்க.

இ - ள். அந்நாட்டில் வயல்சூழ்ந்தனவாகிய ஊர்கள் செல்வநிறைந்தனவென்றுனென்க. (உருச)

அவனைத்தவர்கூந்தலிற்புகைபோய்ச்
சிவணிச்சிறுகால்கமுகம்பொழில்சேர்ந்
துவனுறுப்பத்திடமந்துசெனநின்றுலவும்
பவனத்தொருபாங்கினதாளிதோ

இ - ள். தென்றற்காற்று, அந்நாட்டிலே ஊர்களில் மடப்பார் கூந்தலிற்புகையை முதற்பொருந்திப் பின்னர்க் கமுகம்பொழிலைச்சேர்ந்து அதின்மணத்தையும்பொருந்தி அந்நாடெங்கும் அவற்றைச்செலுத்த, அப்புகை வெண்மேகமென நின்றுலாவும்; ஆதலால், அந்நாடு அளிக்கத்தக்கதொருநாடன்று; நாகலோகத்தின் ஒருகூற்றின் றன்மையை யுடையதாயிருக்குமென்றுனென்க.

அந்நாடு கேடின்மையின், அளிக்கவேண்டாதாயிற்று. அளித்தல் - காத்தல். ()

மதியுஞ்சுடரும்வழிகாணவுற
பொதியும்பகின்புகையுங்கொடியு

[பிறவிகாறவுரை.]

நிதியின்கிழவன்னினிதாவுறையும்
பதிபொன்னகர்ப்படிகொண்டதுவே.

இ - ள். அந்நகரையுங் கொடியுந் திங்களையும் ஞாயிற்றையும் வழிகாணலுறு தனவாம்படி மறைக்கும்பதி, நிதியின்கிழவன் விடாமலுறையும் பொன்னகரின் றன்மையைக் கொண்டதென்றவாறு. (உருசு)

வேறு.

மயமாங்கியதுபுரவொய்தய
பூமிமாதிலகம்மெனும்பொற்கிளை
யாமந்நகர்விதிட்டாமெலாங்
காமவல்லிகிடந்தனபோன்றதுவே.

காமவல்லியெல்லாங் கிடந்தனபோன்றது - காமவல்லியெல்லாங் கிடக்கப்பட்ட அமராவதியின் நெருக்கமே.

இ - ள். ஆங்காங்கு நெருக்கமிட்டுத்தேகொண்ட பூமிமாதிலகமென்னும் நாமத்தையுடைய அந்நகரின் பொற்கிளை வீதிட்டாய், அமராவதியின் நெருக்கத்தை யொத்தன வென்றவாறு. (உருஎ)

வேறு.

பைங்கண்மன்னாமன்னனுடைய பவணமாதேவனென்பான
அங்கிணுள்முத்தமொப்பாள்சயமதியவன்றநம்பி
பைங்கிளிநாமன்னனசோதரனரசசீய
தங்கியங்கனவிபாற்றத்தையலாரைச்சேர்த்தினுரே.

இ - ள். அந்நகரிலுறையும் மன்னர்மன்னன் யாரென்னின், பவணமாதேவனென்று பெயர்கூறப் பட்டவனொருவன்; அவன்றேவி யாரென்னின், முத்தமொப்பாளாகிய சயமதியென்பாளொருத்தி. அவர்பெற்ற பிள்ளை யாரென்னின், காமனன்னானாகிய அசோதரன். அவன்றான் அரசசிங்கம்; அவனுக்குத் தையலாரைச் சேர்த்தினாரென்றவாறு. (உருஅ)

இளமுலைபொருதுதேந்தாரெழில்மழைகுதழியவைகிக்
கிளைநரம்பிசையுங்கூத்துங்கிளர்ந்தலைகனற்றநாளும்
வளையமயக்குருவமென்றேர்வாய்நலம்பருகிமைந்தன்
விளைமதுமதமாந்திவெற்றிப்போரநங்கனுனன்.

இ - ள். அம்மைந்தன் அத்தையலாரமுலைகள் பொருதலினாலே தார் குழைந்த ழிய அவர்கள்வாய்த்தநலத்தைப்பருகி இசையுங்கூத்துந்தோற்றியவைகள் நாளுங் காமத்தைக்கனற்ற வைகித் தேறலைமாந்தி மென்றோளினையுடைய அம்மகளிர்க்கு அநங்கனாயினனென்றவாறு. (உருகூ)

இலங்கரிபரந்தவாட்கணிளையவாபுலவிநீங்கச்
சிலம்பெனும்வண்டுபாடச்சீறடிப்போதுபுல்லி

யலங்கல்வாய்ச்சென்னிசேர்த்தியரிமதர்மழைக்கண்மல்க
நலங்கவர்ந்துள்ளமுண்ணார்நாமுறக்கழிக்குமாதோ.

இ - ள். அவன், அவ்விளையவர் புலவிநீங்கும்படி தன்சென்னியிலலங்கலிட்டுத் தே யவர் சீறடிப்போதை வண்டுபாடச்சேர்த்திப் பின்னர்அவளா யுவகைக்கண்ணீர் மல்கப்புல்லி நலத்தைநுகர்ந்து பகைவரஞ்சக் காலம்போக்குமென்றுனென்க.

இங்ஙனம் காமநுகரினும் வீரத்தின்மிக்கமைதோன்ற நாமுறவென்றார். (௨௯0)

வேறு.

மங்கையர்தம்மொடுமடங்கல்மொய்ம்பினன்
பங்கயப்பனித்தடஞ்சேரப்பார்ப்பனஞ்
செங்கயற்பேரினமிரியச்செவ்வனே
பொங்கிமேற்பறந்துவிண்புதைந்ததென்பவே

இ - ள். அம்மொய்ம்பினன், மங்கையருடனே நீர்விளையாடுதற்குப் பங்கயத் தடத்தைச் சேர்ந்தானாக, ஆண்டுறைந்த பார்ப்பையுடையவன்னத்திரள், அஞ்சிக் கய லிரியப் பொங்கி மேலே செவ்வனே பறக்கையினாலே விண்மறைந்ததென்று னென்க. (௨௯௧)

வேறு.

வேய்ந்தவெண்டாமரைக்கோதைபோல விசும்பிற்பறக்கின்றவெள்ளையன்ன
மாய்ந்தமுகிலாடைத்திங்கட்கண்ணியாகாயமென்னுமரிவைசாயற்
றோய்ந்ததன்காதலன்பற்றவற்றுச்சொரிகின்றமேகலைபோல்வீழ்ந்தவாளை
பாய்ந்துதுகைப்பக்கிழிந்தகூழைப்பனித்தாமரைசூழ்பகற்கோயிலே.

வாளை துகைத்தலாலேகிழிந்த கூழையிலையையுடைய குளிர்ந்த தாமரைசூழ்ந்த நீராவிமண்டபம். பகற்கோயிலென்றார், பகற்போதில் இருத்தல்பற்றி.

இ - ள். கட்டின வெண்டாமரைமாலைபோல விசும்பிலேபறக்கின்ற வெள்ளை யன்னம், ஆடையினையுங் கண்ணியினையுமுடைய ஆகாயமென்னுமரிவையது மேகலையை யவடன் சாயலைத்தோய்ந்த கணவன் ஊடறீர்ப்பான்பிடிப்ப அவை யற்றுச் சொரிகின்றபோலக் கோயிற்கணே வீழ்ந்தன வென்றுனென்க.

முத்தமேகலையென்றுணர்க. (௨௯௨)

வேறு

விரும்புபொற்றட்டிடைவெள்ளிக்கிண்ணமார்ந்
திருந்தனபோன்றிளவன்னப்பார்ப்பினம்
பொருந்துபொற்றாமரையொடுங்கிப்புக்கொளித்
திருந்தகண்டானிளங்கோக்கணம்பியே.

இ - ள். இளங்கோக்களுக்கெல்லாந் தலைவனாகிய அவன், பொற்றட்டிலே வெள்ளிக்கிண்ணமிருந்தவைபோன்று பறத்தலாற்றாமற் றாமரையிலேபுக்கு ஒடுங்கி யொளித்திருந்த அன்னப்பார்ப்பினத்தைக் கண்டானென்றுனென்க.

பொருந்து - ஒளித்தற்குப்பொருந்தின. நம்பி - ஈண்டு இளமைப்பெயரன்று.()

[பிறவிகளறவுரை.]

உரிமையுட்பட்டிருந்தொளிக்கின்றார்களைப்
பெருமநீகொணர்கெனப்பேசுகாஞ்சுகி
யொருமகற்கீந்தனன்கோயில்புக்கன
னெரிமுயங்கிலங்குவேற்காளையென்பவே.

இ - ள். அவன் அங்ஙனங்கண்ட வன்னப்பார்ப்பை அவனுரிமையுங்கண்டிருந்து, பெரும! ஒளிக்கின்ற பார்ப்புக்களைக் கொண்டுவாவென்று சட்டையிட்டு நின்ற இவ்வொருமகனுக்கு நீபேசுவாயாகவென்று அவர்கள்கூற, அதுகேட்டகாளையும் அங்ஙனங்கூறி, அவற்றுள் ஒன்றனைப்பிடிப்பித்து அவர்க்கீந்தனனாய்க் கோயிலிலே புக்கானென்றவாறென்க.

உட்பட்டென்றது-அக்காட்சிக்குட்பட்டென்றவாறு. எனவென்றதனை யிரண்டிடத்துங்கூட்டுக. பெருமைநீரென்று பாடமோதுவாருமுளர். பலபார்ப்பைப் பிடிப்பித்தானென்றாற் பலகாற்சிறைப்படுதல்வேண்டுமாதலின், அவற்றுள் ஒன்றென்றே பொருள்கூறவேண்டிற்று. (உகூச)

வடமலைப்பொன்னனார்மகிழ்ந்துதாமரைத்
தடமுறைவீர்க்கிவைதடங்களல்லவே
வடமுலையெனநடாய்வருடிப்பாலமிர்
துடனூநீஇயோம்பினார்தேம்பெய்கோதையார்.

இ - ள். இருவையொப்பார, அவனீந்ததற்குமகிழ்ந்து பின்னர் அவர்கடாந் தாமரைத்தடத்தேயுறையுநுமக்கு ஈண்டுறைகின்ற முலைத்தடம் அத்தடங்களல்லவே, வடங்களுறைகின்ற முலையல்லவோவென நன்மொழிகளை நடத்திக் கையாலேதடவியெல்லாருஞ்சேர்ந்து பாலமிர்தத்தைக்கொடுத்துப் பாதுகாத்தாரென்றவாறென்க.

உறைவீர்க்கென்றது-ஒன்றனைக் கூறும்பன்மைக்கிளவி. இப்பார்ப்புக் கட்டுதல் கூட்டிலடைத்தல்செய்யும் பருவத்ததன்றென்பதுதோன்ற முலையிலணைத்தென்றார். அஃது "இளவன்னப்பார்ப்பினம்" என்றதனானுமுணர்க. இதனுள் இப்பார்ப்பைக் கட்டிவைத்துவளர்த்தாரென்றது முலைத்தடத்தே யணைத்துவைத்து வளர்த்தாரொன்றமையாற் பிள்ளையாருங் கட்டுண்டாரென்றற்குக் காரணமின்மை யறிக. (உகூரு)

வேறு.

கண்டானொருநாட்கதிர்மாமுடிமன்னர்மன்னன்
வண்டாமரைசூழ்தடத்திற்பிரித்தார்கள்யாரே
யொண்டாரிளங்கோவென்றுழையவர்கூறவல்லே
கொண்டேகுவம்மின்கொலைவேலவன்றன்னையென்றான்.

இ - ள். மன்னர்மன்னன் ஒருநாள் இவர்கள் முலைமேலணைத்து வளர்க்கின்ற தன்மையைக் கண்டான்; கண்டு இதனைத் தடத்தினின்றும் பிரித்தார் யார்தானென்றான்; அதுகேட்டவுழையர் அசோதரனென்றுகூற, அதுகேட்டு அவன் அவனையிங்கே வல்லே கொண்டுவம்மினென்று கூறினானென்றவாறென்க.

கொலைவேலவனென்றது இகழ்ச்சிக்குறிப்பு; அரசனைப்பிடியாமற் பார்ப்பைப் பிடித்தலின். பார்ப்பைக் கட்டுதல், கூட்டிலடைத்தல் செய்யாமையால், அரசற்குக் காட்சியானமை யுணர்க. (௨௯௬)

௧. படுகண்முழவும்பசும்பொன்மணியாழுமேங்க
விடுகுந்துசுப்பினவராடவிருந்தநம்பி
யடிகட்கடிகளருளிற்றென்றிறைஞ்சவல்லே
கடிவிம்முதாரான்கழல்கையிற்றொழுதுசேர்ந்தான். (௨௯௭)

வேறு.

௨. அணிசேரிடக்கைவிரலால்வலத்தோளை
மணிசேர்வளைவாய்நிலைதைத்துவல
தணிமோதிரஞ்சூழ்விரல்வாய்புதையாப்
பணியாமுடியாற்பணிந்தானிளையோன்.

இவையிரண்டுமொருதொடர்.

இ-ள். அதுகேட்ட உழையர் நம்பியிடத்தேசென்று நமக்குநம்மரசனது அருள் இத்தன்மைத்தென்றுகூறியிறைஞ்ச, அதுகேட்டவன் வல்லேசென்று அரசனதடியைக் கையாற்றொழுது பின்னர்முடியாற்பணிந்தான்; பணிந்தபின்னர் இடக்கை விரலாலே வலத்தோளில் வளையை நன்றாகத்திருத்தி வலக்கையில்விரலாலே வாயைப்புதையாச் சேர்ந்தானென்றுனென்க.

முழவும்யாழுமேங்க நுசுப்பினவராட அருந்தகவிருந்த நம்பியென்க. (௨௯௮)

வேறு.

கிளைப்பிரிவுஞ்சிறையுமிரண்டுங்கேட்டியேல்
விளைந்தபயனித்தனையிருமற்றீங்கென
திளைக்குமாமணிக்குழைசுடரச்செப்பினான்
வளைக்கைப்பார்கவரிகொண்டெறியமன்னனே.

கிளைப்பிரிவு - தாயையுந் தந்தையையும்பிரித்தல். சிறையாவது - தானினைத்த வாறொழுகுதலின்றிப் பிறாநினைத்தவாறே யொழுகும்படி காத்தல். இளம்பார்ப்புக கிளையைப்பிரிந்திருந்த ஆற்றினவருமைநோக்கி யருஞ்சிறையென்றார்.

இ-ள். மகளிர் கவரிவீசாநிற்ப மன்னன், இவ்விரண்டின் பயனையுங் கேட்டியேல், அவ்விரண்டின்பயனையும் மேல் விளைத்தற்கு நோக்கத்தையொப்பாய்! இங்கே யிருவென்று குழைசுடரச் செப்பினனென்றுனென்க.

ஈண்டுப் பார்ப்பைப் பிரித்ததற்குத் தானும்பிரிந்தும், அதனைச்சிறைசெய்ததற்குத் தானுஞ்சிறைப்பட்டும் அத்தீவினை நுகர்ந்தானென்று முன்னாப் பொருளுரைத்தமை தேவர்க்குக் கருத்தென்றுணர்க; என்னை? நீ இப்பார்ப்பைக் கட்டிவைத்ததனையுங் கேளென்று அவனைநோக்கி ஈண்டு அரசன்கூறாமையின். (௨௯௯)

வேறு.

அறம்பெரியகூறினலங்கலணிவேலோய்
மறம்புரிகொணெஞ்சம்வழியாப்புகுதந்தீண்டிச்

[பிறவிகளறவுனா.]

செறும்பெரியதீவினைகள்சென்றுகடிதோடி
யுறும்பெரியதுன்பமுயிர்க்கொலையும்வேண்டா.

இ-ள். வேலோய்! பெரிய தீவினையின்றன்மையைக்கூறின், அவை மறத்தைவிரும்பிய நெஞ்சு வழியாகப்புகுந்து திரண்டு தம்மைச்செய்த உயிரோடேகடிதோடிச்சென்று அதனைச்செறும்; செறும்பொழுது அது பெரியதுன்பமுறும்; ஆதலால், அத்தீவினைக்கு அடியதாகிய உயிர்க்கொலையும் நமக்கு வேண்டா; இஃது அறங்களுட்பெரியவறமென்று கூறினனென்றுனென்க. (உஎ0)

மெய்யுரைவிளங்குமங் மேலுலகேகோபுரங்க
ளையமிலைநின்றபுகழ்வையகத்துமன்னு
மையல்விளேமாநரககோபுரங்கள்கண்டீர
பொய்யுரையும்வேண்டாபுறத்திடுமினென்றான்.

இ-ள். மெய்யுரையைக்கூறினால் அதற்கு இவ்வையகத்தே நிலைநின்றபுகழ் மன்னும்; மறுமையில் மேலுலகத்து மணிக்கோபுரங்களையுடைய கோயில்மன்னும்; பொய்யுரையைக்கூறினால், அதற்கு இம்மையிற்பழியும், மறுமையில் நரகத்துக்கோயில்களும் மன்னும்; இவ்விரண்டும் ஐயமில்லைக்கண்டீர்; ஆதலால், அப்பொய்யுரையையுங் கைவிடுமினென்றுகூறினனென்றுனென்க. (உஎக)

முளரிமுகநாகமுழையெயிறுழுதுகீற
வளவிறுயாசெய்வரிவண்மன்னரதனாலும்
விளைவரியமாதுயரம்வீழ்கதியுளுய்க்குங்
களவுகடனுகக்கடிந்திடுதல்சூதே.

தாமரைப்பூப்போலும் புகரையுடைத்தாகிய முகத்தையுடைய யானையினது முளைத்த வெயிறு.

இ-ள். களவின்விளைவினைக் கேள்; இவ்வுலகிலே மன்னர் யானைக்கொம்பு குத்திப்பிளக்கக் கொல்வர்; பின்னர் நரகத்திலே யரியதுன்பங்களை யது தானேசெலுத்தும்; ஆதலால் அக்களவை மேற்கொண்டு கடிதல் உபாயமெனக் கூறினனென்றுனென்க. (உஎஉ)

மடத்தகையநல்லார்மனங்கரியமாற்றூர்
பிடர்த்தலையொள்வாள்போற்பிறர்மனைகள்சேரி
னெடும்பரியதுன்பத்திடைப்படுவரின்னுக்
கடும்புடையகாமம்விடுத்திடுதனன்றே.

இ-ள். தம்மனைவியர்வருந்தப் பிறர்மனையாளைச்சேரிற் றுங்கற்கரிய துன்பத்திடையிலேயழுந்துவர்; ஆதலால் நடுங்குதலுடைய காமத்தினைக் கைவிடுதல் நன்றென்றுகூறினனென்றுனென்க.

மாற்றார் கழுத்தில்வைத்த வாள்போல் இன்றாத பிறர்மனையென்றது, கொடாதே விடுமென்றற்கு. (௨௭௩)

தெருளிற்பொருள்வானுலகமேறுதற்குச்செம்பொ
னிருளில்படிக்கால்புகழ்வித்தில்லையெனினெல்லா
வருளுநகவையநகவைம்பொறியுமையைப்
பொருளுநகவீட்டும்பொருள்யாதும்பொருளன்றே.

ஒருவன் தெளிவானாகில். அருள்கள் பலவாதலின், எல்லாவருளுமென்றார். வையம் - ஆகுபெயர். ஐம்பொறியும் பொருள்களை நுகரப்பெறுதவரர்த. பொருளு நக - அவ்வைம்பொறியும் நுகர்தற்குரியபொருள்களும் எம்மை நுகர்கின்றிலனென்று நக.

இ - ள். தெருளில், நக, நக, நைய, நக ஈட்டும்பொருள் சிறிதும் நற்பொருளன்று; அங்ஙனம் நீதாசவீட்டுதலில்லையெனின், அப்பொருள் இம்மையிற் புகழை விளைக்கும் வித்தாம்; மறுமையிற் செம்பொனுலகமேறுதற்கு மயக்கமற்ற ஏணியா மென்று கூறினானென்றானென்க. (௨௭௪)

பொய்யொடுமிடைந்தபொருளாசையுருளாய
மைபடும்வினைத்துகள்வழக்குநெறிமாயஞ்
செய்தபொருள்பெய்தகலன்செம்மைகடுசெந்தீக்
கைதவநுனித்தகவறாடலொழிகென்றான்.

இ - ள். பொய்யோடுநெருங்கின பொருளாசையையுடைய பரத்தையர், மாயத்தைச்செய்த இன்பநிறையப்பெய்ததோர் கொள்கலம்; ஆதலின் அது பாவமுண்டாந் தீவினையாகிய துகளைப் புகுத்தற்கு வழியாயிருக்கும்; அதனை யாடுதலையும், நடுநிலையைச்சுடுநெருப்பாகிய வஞ்சனைகூர்த்த கவறாடுதலையும் ஒழிகவென்று கூறினானென்றானென்க.

உருளாயம் - தம்மைநுகர்வார் மனங்கட்கேற்பப் புரளுமாயம். வழக்கு* "வளிவழக் கறுத்த வங்கம்" என்றாற்போலக் கொள்க. பொருளென்றது - காற்பொருட்கு முரித்தேனும் ஈண்டு இன்பத்தின்மேற்று. (௨௭௫)

காமமுடையார்கறுவொடார்வமுடையாருந்
தாயமொடுசார்ந்துபுனைவார்பசியினுண்பா
ரேமமுடையார்களிவரல்லரிவையில்லா
வாமனடியல்லபிறவந்தியன்மினென்றான்.

இ - ள். காமத்தையுடையாரும், செற்றத்தோடு ஆசையையுடையாரும், தாமத்

---

* புறநானூறு, ௩௬௮: களிறு முகந்து பெயர்குவ மெனினே - யொளிறு மழை தவிர்க்குங் குன்றம் போலக் - கைம்மா வெல்லாங் கணையிடத் தொலைந்தன - கொடிஞ்சி நெடுந்தேர் முகக்குவ மெனினே - கடும்பரி நன்மான் வாங்குவயி றொல்கி - நெடும்பீ டழிந்து நிலஞ்சேர்ந் தனவே - கொய்சுவற் புரவி முகக்குவ மெனினே - மெய் நிறைந்த வடுவொடு பேரும் பிறிதாகி - வளிவழக் கறுத்த வங்கம் போலக் - குருதியம்பெரும் புனல்கூர்ந் தனவே.

[பிறவிகளறவுரை.]

தையுஞ் சாந்தையும் புனைவாரும், பசியாலே யில்லிலேசென்று பலிகொள்வாருமாகிய இவர்கள் நம்மை உய்யக்கொள்ளுமவரல்லர்; ஆதலின், இத்தீக்குணங்களில்லாத வாமனடியல்லாத பிறவடிகளை வணங்கன்மினென்று கூறினானென்றானென்க. ()

பூவைகிளிதோகைபுணரன்னமொடுபன்மா
யாவையவைதங்கிளையினீங்கியழவாங்கிக்
காவல்செய்துவைத்தவர்கடங்கிளையினீங்கிப்
போவர்புகழ்நம்பியிதுபொற்பிலதுகண்டாய்.

இ-ள். நம்பி! தன்கிளையோடேபுணர்ந்த அன்னத்தோடே பூவைமுதலியனவும் பலவிலங்குகளும் ஒழிந்தனவுமாகிய அவை தங்கிளையினின்றுநீங்கி வருந்தப் பிரித்து இம்மையிற் காவலிட்டுவைத்தவர்கள் மறுமையிற் றங்கிளையினின்றுநீங்கித் தாமும் பிறராற் காவல்செய்யப்பட்டுப் போவார்; ஆதலின், நீபிரித்துக் காவல்செய்த விதுவும் பொலிவில்லாததுகாணென்று கூறினானென்றானென்க.

கட்டுதல் கூட்டிலடைத்தல்செய்தற்குரியவல்லா இளமைப்பருவத்தனவற்றையே யீண்டுக்கூறலிற் காவல்செய்தென்றார். ஈண்டுக் காவல்செய்துவைத்தவரென்று கூறுதலின், முன்னங் கட்டுண்டானென்றற்குக் காரணமின்மையுணர்க. (உஎஎ)

வேறு.

அல்லித்தாளற்றபோதுமறாதநூலதனைப்போலத்
தொல்லைத்தம்முடம்புநீங்கத்தீவினைதொடர்ந்துநீங்காப்
புல்லிக்கொண்டுயிரைச்சூழ்ந்துபுக்குழிப்புக்குப்பின்னின்
றெல்லையிறுன்பவெந்தீச்சுட்டெரித்திடுங்கானன்றே.

இ-ள். அல்லித்தண்டு அற்றுவீழ்ந்தபோதும் நூலறாது தொடர்ந்துநிற்குந் தன்மைபோலத் தம்முடம்பு உயிரை நீங்கிக்கிடக்க எல்லையில்லாத துன்பத்தையுடைய தந்தொல்லைத்தீவினையாகிய வெந்தீ அவ்வுயிரை நீங்காது தொடர்ந்துசென்றுசூழ்ந்து புல்லிக்கொண்டு அவ்வுயிர்போய்ப் புக்கதோர்மெய்யிலே தானும் புக்குப் பின்னே நின்று அதனை யெரித்துச்சுட்டிடுமென்று கூறினானென்றானென்க. (உஎஅ)

அறவியமனத்தராகியாருயிர்க்கருளைச்செய்யிற்
பறவையுநிழலும்போலப்பழவினையுயிரோடாடி
மறவியொன்றானுமின்றிமனத்ததேசுரக்கும்பால
கறவையிற்கறக்குந்தம்மாற்காமுறப்பட்டவெல்லாம்.

இ-ள். அறத்தையுடைய மனத்தராய்ப் பல்லுயிர்க்கும் அருளைச்செய்வராயின், அந்நல்வினை பறவையுநிழலும் விடாதுதிரியுமாறுபோல அவ்வுயிரை விடாமற்றிரிந்து சிறிதும் மறப்பின்றித் தம்மாற் காதலிக்கப்பட்டன எல்லாவற்றையுஞ் சுரபியைப் போலக் கொடுக்குமென்று கூறினானென்றானென்க.

மனத்தில் நினைத்ததேகொடுக்கும் பாலவாகியகறவை. (உஎகூ)

கெடுமணிபூபத்திட்டதவழ்நடையாமைநீனீர்த்
தொடுமணிக்குவளைப்பட்டந்துணையொடுகிளைப்பதேபோற்
கடுமணிக்கயற்கணால்லார்காமமும்பொருளுஞ்சிந்தித்
தடுமணியாவிநீப்பாரறிவிலாற்சிறியநீரார்.

மணி - அழகு. மணிக்குவளை - உவமத்தொகை. கடியகண். மணிக்கயல்- அழகியகயல். மணியடுமாவிநீப்பாரென்றது - வீடுபெறுதற்குரிய மணியுயிரைப் பாழேபோக்குவரென்றவாறு.

இ - ள். அறிவில்லாதார், யாகத்திற்குநட்டதறியிலே கட்டினயாமை தான் கிடக்கும்பொய்கையையுந் துணையையுநினைக்குமாறுபோல, நல்வினைசெய்யாதிருந்து காமத்தையும் பொருளையுநினைத்து ஆவிநீப்பாரென்று கூறினானென்க.

* "அழலெழு நித்திய மடுத்த யாமை - நிழலுடை நெடுங்கயம் புகல்வேட் டாஅங்கு" என்றாரகத்திலும். (உஅ0)

வீறழிவினைசெய்காலன்வைரவாள்வலையிற்பட்டாற்
சாறழிகுவளைமாலையவளையுந்தனமுநீக்கி
யாறழிவளையிற்றோன்றுமறநனிநினைப்பர்செம்பொ
னேறெழினெறியினேறிவிசும்பாளுநீரார்.

வீறழிந்த வினையாவது கொலைத்தொழில். பலகாலும்வெட்டினும் கேடின்றென்றற்கு வைரவாளென்றார். வாள்போல மாறுமற்கொல்லும் வலையிலகப்பட்டாலென்றது - பிறந்தாலென்றவாறு. சாறழிதனம் - விழாக்கொண்டாடுதன்மிக்கபொருள். ஆறிழிகின்றவளையென்றார், பயன்படுதலும் நிலைகுலையாமையும்பற்றி. செம்பொனீராரென்றது - சுவர்க்கத்தேசெல்லும் பொன்னாகிய வுயிரை யுடையாரை. நெறி- தவம்.

இ - ள். எழிலேறுபோலே அரிதெனவிகழாது தவத்தாலே விசும்பிலேயேறி அதனையாளுஞ் செம்பொனீரார், காலன்வலையிலகப்பட்டால், மகளிரையும் பொருளையுநீக்கி, மலைபோற்றோன்றும் அறத்தைச்செய்ய நினைப்பரென்று கூறினானென்றுனென்க. (உஅக)

---

* அகநானூறு, (நித்திலக்கோவை) ௩௬0: தாமலர்த் தாமரைப் பூவி னங் கண் - மாயிதழ்க் குவளை மலர்பிணைந் தன்ன - திருமுகத் தலமரும் பெருமதர் மழைக்க - ணணிவளை முன்கை யாயிதழ் மடந்தை - வார்முலை முற்றத்து நூலிடை விலங்கினுங் - கவவுவலந் துறையுங் கழிபெருங் காமத் - தின்புறு நுகர்ச்சியிற் சிறந்த தொன் றில்லென - வம்பான் மொழிந்த வென்மொழி கொள்ளாய் - பொருள்புரி வுண்ட மருளி னெஞ்சே - கரியாப் பூவிற் பெரியோ ரார - வழலெழு நித்திய மடுத்த யாமை - நிழலுடை நெடுங்கயம் புகல்வேட் டாஅங் - குள்ளுத லோம்புமதி யினிநீ முள்ளெயிற்றுச் - சின்மொழி யரிவை தோளே பன்மலை - வெவ்வறை மருங்கின் வியன்சுர - மெவ்வங் கூர விறந்தனம் யாமே.

என்பது: பொருள்வயிற் பிரிந்து போகாநின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது. இப்பாட்டினுள் நித்தியமென்பது வேள்விக்குண்டம். இயினந்தை மகன் இளங்கீரனார்பாடியது.

[பிறவிகளறவுணர்.]

துன்னிமற்றறத்தைக்கேட்டேதுகிலினெருப்புற்றதேபோல்
மின்னுத்தார்மார்பன்மெய்வெந்தாலியினுருகிப்பெண்பா
லன்னப்பார்ப்பன்றுகொண்டதடத்திடைவிடுவித்திட்டான்
பின்னைத்தன்கிளைகள்கூட்டம்பெருந்தகைவித்தினானே.

இ - ள். மின்னுப்போலுந் தாரையுடையமார்பன், அங்ஙனம் அறத்தைத்துன் னிக்கேட்டு அஞ்சி ஆலிபோலே நெஞ்சுருகிமெய்வெந்து பின்னர் உடுத்ததுகிலிலே நெருப்புற்றதனை விரைந்து நீக்குமாறுபோல விரைந்து அன்னப்பார்ப்பைப் பெண் பாலிடத்தினின்றும்விடுவித்து அன்று பிடித்த தடத்தின் நீரிடத்தே போகவிட்டான்; அங்ஙனஞ் செய்தலாலே, அப்பெருந்தகைமுன்னர்க் கிளைப்பிரிவை வித்தியதேயன் றிப் பின்னர்க் கிளைகளிடத்துக் கூட்டத்தையும் வித்தினானென்றானென்க.

இக்காரணத்தாலே விசயையைநீங்கிச் சுநந்தையிடத்தே வளர்ந்தானென்றும், பின்னர் அவளைச்சேர்ந்தானென்றும் முன்னர்க்கூறினார். (உஅஉ)

மெய்ப்படுமுதுபுண்டீர்ப்பான்மேவியமுயற்சிபோல
வொப்புடைக்காமந்தன்னையுவர்ப்பினாலொழித்துப்பாவ
மிப்படித்திதுவென்றஞ்சிப்பிறவிநோய்வெருவினானே
மைப்படுமழைக்கணல்லாரவாய்க்கொண்டவமிர்தமொப்பான்.

இ - ள். மகளிர் வாய்க்கொண்ட அமுதுபோல அவர் நினைத்ததன்மையனா யிருந்தவன், அறங்கேட்டபின்னர் உடம்பிலுண்டாகிய வொடுவைத் தீர்த்தற்குப் பொருந்திய முயற்சிபோலத் தன் இளமைக்கொப்புடைய காமத்தை வெறுப்பினா லொழித்துப் பாவத்தையும் இஃது இப்படிப் பெரியதோர் தன்மையையுடைத்தென் றஞ்சி யிவற்றையெல்லாமுடைய பிறவிநோயை வெருவினானென்றானென்க. (உஅ௩)

ஆளியாற்பாயப்பட்டவங்களியானைபோல
வாளிவிற்றடக்கைமைந்தன்வாய்விட்டுப்புலம்பிக்காம
நாளினஞ்சுதுய்த்தேனச்சறையாகநன்பொற்
றோளியர்த்துறந்துதூய்தாத்தவஞ்செய்வலடிகளென்றான்.

இ - ள். அங்ஙனம் வெருவினமைந்தன், நஞ்சிற்கு ஓரிருப்பிடமாகக் காமமா கியநஞ்சினை நாடோறுநுகர்ந்தேனென்று யானைபோலப்புலம்பி மகளிரைத்துறந்து தவத்தைத் தூய்தாகச் செய்வேன்; அடிகளேயென்று கூறினானென்றானென்க. ()

சிறுவன்வாய்மொழியைக்கேட்டேதேர்மன்னன்றானுஞ்சொன்னா
னுறுகளிற்றுழுவமற்றானொளிமுடித்தாயமெய்தி
யறைகடல்வேலிகாத்துநலங்கல்வேற்றாயமெல்லாம்
பெறுதகுபுதல்வர்க்கீந்துபின்னைநீதுறத்தியென்றான்

இ - ள். அங்ஙனங்கூறிய அசோதரன்மொழியைக்கேட்டு அரசனுஞ் சொன்

ஞன்; அஃதியாதெனின், உழுவனே! தாயத்தையெய்திக் காத்துப் புதல்வர்க்கீந்து பின்னை நீதுறத்தியென்று கூறினனென்றானென்க. (உஅ௫)

கொலைச்சிறையுய்ந்துபோகுமொருவனைக்குறுகவோடி
யலைத்தனர்கொண்டுபற்றியருஞ்சிறையழுத்துகின்றார்
தொலைப்பருஞ்சுற்றத்தாரோபகைவரோவடிகளொன்ன
விலைப்பருமணியைமுந்நீர்நடுக்கடல்வீழ்த்தவொத்தான்.

தொல்லை - விகாரம்.

இ - ள். அதுகேட்ட ஆசோதரன், அடிகளே! சிறையினின்றுந் தப்பிப்போ மொருவனைத் தொடர்ந்துசென்று பற்றிக்கொண்டு அலைத்தனராய்ச் சிறையிலே யழுத்துகின்றார் சுற்றத்தாரோ? பகைவரோ? என்றுகூற, அதுகேட்டவரசன் பெரு விலைமணியை மூன்றுதன்மையையுடைய நடுக்கடலிலே வீழ்த்த தன்மையையொத் தானென்றானென்க.

முந்நீர்க்கு "முந்நீர்ப்பிறந்த" என்ற கவியிற் கூறினும். (உஅ௬)

காதலமல்லமேனட்கழிந்தநம்பிறவிதம்மு
ளோதிலம்யாக்கையெல்லாமினிக்கொளுமுடம்பினுலு
மாதலாற்சுற்றமில்லையதுபட்டவாறென்றம்பூந்
தாதலர்மார்பனற்புத்தனையறப்பரிந்திட்டானே.

இ - ள். அத்தன்மையனாகியவரசன், முன்புபோன நம்பிறவிகளில் யாக்கை யெல்லாம் இவற்குச் சுற்றமல்லேம்; இனிப் பிறக்கும் பிறவிக்கண்ணும் யாக்கையெல் லாம் இவற்குச் சுற்றமாகேம்; ஆதலால் நமக்குச் சுற்றமென்பதொன்றில்லை; இவற குப் பட்டவாறுமதுவென்றுகருதி யன்பாகிய தளைபோம்படி யறுத்தானென்றானென்க.

தாய்முதலியோரையுங்கூட்டி யாக்கையெல்லாமென்றான். அதுவென்றது, தான் கருதிய கருத்தினை. (உஅ௭)

நற்பொறிகுயிற்றிவல்லான்செய்ததோர்நன்பொற்பாவை
பொற்பொறிகழிலவெல்லாப்பொறிகளுங்கழல்வதேபோற்
சொற்பொறிசோரவெல்லாப்பொறிகளுஞ்சோர்ந்துநம்ப
னிற்பொறியின்பநீக்கியிரரயிரர்சூழச்சென்றான்.

இ - ள். நடத்துதற்குரித்தாகிய நல்ல எந்திரத்தை யுள்ளேவகுத்து வல்லவன் செய்தபாவை அந்நற்பொற்குலைய எல்லாப்பொறியுங் குலையுந்தன்மைபோலே மங் கனத் தனைபரிந்தஅரசனது சொல்லாகிய எந்திரமொன்றுகழலுதலாலே, நம்பன் தன் னுடைய ஐம்பொறிகள் புலன்களிலேசெல்லும்வேட்கையும்போக இல்லின்கண் நல் வினையானுகருமின்பத்தையுநீக்கி இரண்டாயிரவரசர்கள் சூழ்ந்துசெல்லத் துறவிலே சென்றானென்றானென்க.

சோர்ந்து - சோர. (உஅஅ)

தணக்குறப்பறித்தபோதுந்தானளைவிடுத்தல்செல்லா
நிணப்புடையும்பனாயாதினனிக்கலரடு

(பிறவிகளறவுரை.)

மணப்புடைமாலைமார்பனொருசொல்லேயேதுவாகக்
கணைக்கவினழித்தகண்ணார்த்துறந்துபோய்க்கடவுளானான்.

இ - ள். வாலை யுறப்பிடித்துப் பறித்தகாலத்துந் தான் அளையைக்கைவிடாத உடும்பையொப்பாரை யாதொருகாரணத்தாலும் இல்வாழ்க்கையினின்றும் போக்கலாகாது; இங்ஙனம் அரிதாயிருக்கவும், அசோதரன் முற்பிறப்பிலுந் தவஞ்செய்து வருதலிற் றந்தைகூறியவொருசொல்லே துறவிற்குக காரணமாகசசருதி மகளிரைத் துறந்துபோய்க் கடவுளாயினானென்றுனென்க.

மணத்தைப் புடையிலேயுடைய. மணதளைக்கூடுதலையுடையமாலை. ஒருசொலென்றது, "விளக்கியவித்தருய்" என்றதனை. (உஅக)

தாமமார்ந்தணங்குநாறுஞ்சுரும்புசூழ்தாரினானுந்
தாமமாரொலியலைம்பாற்சயமதித்திருவுமார்ந்த
காமமாசுலவுடைாதழ்கதிர்விலைத்தோளினாரு
காமகாற்கதியுமஞ்சிநற்றவத்துச்சிகொண்டார்.

அணங்கு-தெய்வம். தாரினான்-பவனமாதேவன். சயமதியாகியதிரு - அவன்றேவி. காமமாகிய மாசிலேதழும்பிய தோளினார் - அசோதரன்றேவிமார்.

இ - ள். அவன் கடவுளானபின்னாத் தாரினானுஞ் சயமதியுந் தோளினாரும் காற்கதியிலுஞ் சேறற்கஞ்சி நற்றவத்தின்முடிவைக் கைக்கொண்டாரென்றுனென்க. ()

வேறு.

ஆசாரநாணத்தவஞ்செய்தலாக்கற்பகத்தார்ச்
சாசாரனென்னுந்தகைசாலொளித்தேவர்கோவாய
மாசாரமாயமணிவானுலகாண்டுவந்தாய்
தூசார்ந்தவல்குற்றுளும்புங்கலத்தாரொடென்றான்.

சாசாரன் - ஸஹஸ்ராரன். சாரம - ஸாரம். துளும்பும் - ஒழுகும்.

இ - ள். அங்ஙனங் கடவுளாகியநீ தவததிற்குக்கூறிய ஒழுக்கநாணத் தவஞ்செய்து அதனாலே கற்பகத்தாரையுடைய சாசாரனென்னும் இந்திரனாகி ஆண்டு வைத்தாரோடு வந்தாயென்றுனென்க.

வந்தாயென்றது, அவதரித்தலை. தேவருலகின்கண் நுகருமின்பமும் யானுகரப்பெற்றிலேனென்னும் அவாவற்றுலன்றி ஈண்டு வீடுபெறுதலின்றென்பது உணர்தற்கு இந்திரனாய் வந்தாயென்றான். எனவே எல்லாவவாவுமற்றது வீடாயிற்று. முற்பிறப்பிற் றேவியரானவரே யிப்பிறப்பிலுந் தேவியராய்வந்தாரென்று ஈண்டுச் சாரணர்கூறுதலின், முன்னர்க் கனவில் என் முத்தணிமாலைதூங்கக் கண்டாளென்றுணர்க. (உஅக)

மின்னார்சிலம்பிற்சிலம்புங்குரலன்னமேனன்
மன்னுபிரித்தாய்பிரிந்தாய்சிறைவைத்தனாற்

பொன்னாரமார்பசிறைப்பட்டனைபோலுமென்று
னின்னாப்பிறவிப்பிணிக்கின்மருந்தாயசொல்லான்.

சிலம்புபோலவொலிக்கும்.

இ-ள். மருந்தாயசொல்லான், மன்னா! முற்பிறப்பிலே அன்னப்பார்ப்பைக் கிளையினின்றும்பிரித்தாய்; அத்தீவினையாலே நீயும் இப்பிறப்பிற் கிளையினின்றும்பிரிந்தாய்; பொன்னாரமார்பனே! முன் அதனைக்காவல்செய்துவைத்த தீவினையாலே நீயும் ஈண்டுச் சிறைப்பட்டாய்போற் பிறர்க்குத் தோன்றினாயென்றானென்க.

பிறரிடத்துவளர்ந்தமை குறிப்பானுணரக்கூறினாராதலிற் சுநந்தையைப் பிறரென்று கூற்றாற்கூறாராயினார். போலுமென்பது * "வேறுபட வந்த வுவமத் தோற்றம்" என்னுஞ் சூத்திரத்தடங்கும்; ஒப்பில்போலியன்று. இதனைத் தற்குறிப்பேற்றமென்ப. சீவகற்குச்சிறைப்பட்டதன்மையின்மை, † "விலங்கிவில்லுமிழும்பூணான்" என்னுங்கவியிற்கூறினார். ஈண்டுச் சாரணர், "சிறைவைத்ததனாற்***சிறைப்பட்டனைபோலும்" என்றுகூறிய சிறையென்னுஞ்சொல்லும், முன்னர்க் கூறிப்போந்த கட்டென்னுஞ்சொல்லும் பரியாயச்சொல்லன்றி வேறுவேறு பொருடருஞ்சொற்களாம்; என்னை? இத்தமிழ்ப்பாடையில் உலகவழக்காகிய இயற்சொற்களில் ஒருவினையையுணர்த்துதற்கு ஒருசொல் வழங்குதலன்றியிருசொல் வழங்காமையின். சிறையென்பது - தடுத்துக்காத்தலை யுணர்த்தும்; முன்னர் "அருஞ்சிறை" என்றதற்குப் பின்னர்க் "காவல்செய்துவைத்தவர்கள்" என்றமையால். அன்றியும், ‡ "சிறைகாக்குங் காப்பெவன் செய்யும்" § "சிறைபனி யுடைந்த சேயரி மழைக்கண்" "கொலைச்சிறையுய்ந்து போகு மொருவனே" என்றாற்போல்வன பிறவற்றானும், சிறைக்கால், நீர்ச்சிறையென்னும் வழக்கானுமுணர்க. இஃது ஆகுபெயராய்ச் சிறைவைத்தானென்றாற் சிறைக்கோட்டத்தையுணர்த்துமாறுமுணர்க. இதற்குக் கொல்லுதல், அகப்படுத்தல், தகைதலென்றாற்போல ஆசிரியன் முழுவதூஉந்திரித்த திரிசொற்கள் பரியாயச்சொற்களாம்; இதற்குச் சிக்கலென்பது திசைச்சொல். இனிக் கட்டினானென்னுஞ் சொல், உண்டான், வந்தான், போனானென்பனபோலப் புடைபெயர்ச்சித்தொழிலுணர்த்துஞ்சொற்கு வேறோர்சொல்லின்றிநிற்கும்; இதற்கு வீக்கினான், பிணித்தான், யாத்தானென்றாற்போல ஆசிரியன் முழுவதூஉந் திரித்துக்கொண்ட வினைத்திரிசொற்கள் பரியாயச்சொற்களாம். இது பசுவின்முலையைக்கட்டினான், பாம்பின்வாயைக்கட்டினானென்றாற்போலப் புடைபெயர்ச்சித்தொழில் புலப்படாமலும் நிற்கும்; இவ்விரண்டுசொல்லும் வேறுவேறுபொருடருதலின், ஒன்றற்கொன்று பரியாயமாகாமையிற் சாரணர்கூறிய சிறையென்னுஞ்சொல்லிடத்துக் கட்டென்னுஞ் சொல்லின்பொருள் பிறத்தலின்மையின், முன்னர்க் கட்டென்றுகூறியது ஈண்டைக்குப் பொருந்தாதாயிற்று. ஈண்டு இவர்கூறிய பாவம் காரணமும், ஆண்டுச்

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், உவமவியல், கஉ.

† பதுமையாரிலம்பகம், உ.

‡ திருக்குறள், வாழ்க்கைத்துணைநலம், எ.

§ குறுந்தொகை, அக: சிறைபனி யுடைந்த சேயரி மழைக்கட் - பொறையரு நோயொடு புலம்பலைக் கலங்கிப் - பிறருங் கேட்குந ருளர்கொல் லுறைசிறந் - தூதை தூற்றுங் கூதிர் யாமத் - தானுளம் புலம்புதொ றுளம்பு - நாகவில் கொடுமணி நல்கூர் குரலே.

[பிறவிகளறவுரை.]

சிறைப்பட்டது காரியமுமாகவே கோடல்வேண்டவிற் சிறைப்பட்டானென்றே யாண்டும் பொருள்கூறுவதன்றிக்கட்டுண்டானென்று பொருள்கூறலாகாமையுணர்க. ()

வேறு.

மஞ்சிவாமணிவரையனையமாதவன்
வஞ்சமிலறவுரைபொதிந்தவாய்மொழி
யஞ்சினனிருந்தழியம்புவீழ்ந்தென
நஞ்சுமிழ்வேலினனெஞ்சில்வீழ்ந்ததே.

பயன்தருதலின், மஞ்சுகூறினார்.

இ-ள். சலிப்பற்றமாதவன் முற்கூறிய அறவுரையாலே, வேலினன், அரசாட்சியை யஞ்சியிருந்தவளவிலே, உமிழும்நஞ்சைப்பொதிந்தவாய்மொழி யவனடுங்கும்படி வீழ்ந்ததென்க.

நஞ்சைப்பொதிந்தவாய்மொழியென்றது - தீவினையாற் சிறைப்பட்டதன்மை கூறியதனை. அதுவும் அம்புவீழ்ந்தவிடத்தினின்றும் போதற்குப் பிறர்நடுங்குமாறு போலே அரசாட்சியைக் கைவிட்டுப்போதற்கு நடுங்கும்படி வீழ்ந்ததென்க. (உகஙு)

வாரணிமணித்துடிமருட்டுநுண்ணிடைக்
காரணிமயிலனார்சூழக்காவல
னோரணிமணிமுடியிறைஞ்சியேத்தினன்
சீரணிமாதவர்செழும்பொற்பாதமே.

காரணி - கார்காலமுண்டானவழகு

இ-ள். அதுகேட்டவளவிலே, காவலன், தேவியர் சூழவணங்கிநிற்ப மாதவர் பாதத்தை முடியாலேயிறைஞ்சி யேத்தினனென்க. (உகச)

கலந்திருமடப்பகன்றயந்தாமரை
நிலத்திருந்திருசுடர்நிமிர்ந்துசெல்வபோ
லுலப்பருந்தவத்தினோரிருசாரணா
செலத்திருவிசும்பொளிசிறந்ததென்பவே.

திரு - தாமரைக்கடை.

இ-ள். தாமரைப்பூவையுடையவிடத்தே சாரணரிருவருமிருந்து ஞாயிறுந் திங்களுஞ்செல்வனபோல விசும்பிலேசெல்ல, அவர்திருவொளி அவ்விசும்பெங்குஞ் சிறந்ததென்க. (உகடு)

பிறவிகளறவுரைமுற்றிற்று. கவி, சசு.

## தாய்த்திர்வு.

சாரணர்போயபின்சாந்தமேந்திய
வாரணிவனமுலைவஞ்சிக்கொம்பனார்
போரணிபுலவுவேற்கண்கள்பூத்தன
நீரணிகுவளைநீர்நிறைந்தபோன்றவே.

இ-ள். சாரணரிருவரும் போயபின் தேவியர் நீரணிகண்கள், பூத்தனவாகிய குவளை நீர்நிறைந்தன போன்றனவென்க.

இனித் திறப்பனென்றஞ்சி நீமல்கின. (உகசு)

பொன்வரைநிலாக்கதிர்பொழிந்துபோர்த்தபோற்
றென்வரைச்சந்தனந்திளைக்குமார்பினாய்
மின்னிவர்நுசுப்பினார்மெல்லியடில்லவே
யின்னுரைகொடான்கொடிக்கோயிலெய்தினான்.

இ-ள். மேருவிலே நிலாத் தனது கதிரைச்சொரிந்து அதனை மறைத்தாற் போல மலயத்திற்சந்தனங்கிடந்து பயன்கொண்டமார்பினன், தேவியர்வருந்த இன்னுரைகொடாதய் செல்லக் கோயிலைச்சேர்ந்தானென்க (உகஎ)

அஞ்சுவாரபொழிந்தபாலன்னமென்மயிர்ப்
பஞ்சிமெல்லணையின்மேற்பாவையல்குலார
மஞ்சிவர்மதிமுகமழுங்கவைகினார்
நஞ்சுயிர்த்தனிநலங்கரிந்துமையவே.

மடிசொரிந்த பாலெனவே நுரையுண்மைபெற்றும்.

இ-ள். அப்பொழுது தேவியர், நஞ்சுபோல வெய்துயிர்த்து மையமுங்க அரசன்றேளணைத் துயிலாது நுரைபோலும் பஞ்சணைமேலே வைகினரென்க. ()

### வேறு.

வெள்ளெயிற்றரவுமெய்ந்தமிச்சிலின்மெலிந்துமேகப்
புள்வயிற்பிறந்தபுட்போலொன்றலாதுரைத்தமேற்றார்
கள்வயிற்றலர்ந்தகோதைக்கலாபவில்லுமிழுமல்கு
லொள்ளெயிற்றவர்கள்பொன்பூத்தொளிமணியுருவநீத்தார்.

கள்ளை வயிற்றிலேயலர்ந்த மாலையினையுங் கலாபத்தினது ஒளியைக்காலுமல்குலினையுமுடைய எயிற்றவர்கள். மேகப்புள் - வானம்பாடி.

இ-ள். வானம்பாடிமேகத்துப்பிறந்த துளியையேயச்சிப் பாடுமாறுபோல அரசனுள்வயிற்பிறந்த அளியொன்றுமல்லாதனவற்றை யுரைத்தலறியாத தேவியர், பாம்புமெய்ந்த குறைமதிபோல் ஒளிகெட்டுப் பசந்து மணிகளினுருவைக் கைவிட்டாரென்க. (உகக)

[தாயத்தீர்வு.]

கிளிச்சொலினினியசொல்லார்கிண்கிணிசிலம்போடேங்கக்
குளித்துநீரிரண்டுகோலக்கொழுங்கயல்பிறழ்பவேபோற்
களித்துநீர்சுமந்துவாட்கண்கலாய்ப்பிறழ்ந்தலமந்தாட
வளித்ததாரலங்கலாழியவன்றிறமுரைத்துமன்றே.

இ - ள். அத்தேவியருடைய கிண்கிணியுஞ் சிலம்பு மேங்க, வாட்கண் ஆட முன்னரளித்த அரசன்றிறனை யினிக் கூறுதுமென்றாரென்க.

இரண்டுகயல் நீரிலேகுளித்துப் பிறழ்பவைபோலக் கண்கள் களித்து உவகைக் கண்ணீரைச்சுமந்து பிறழ்ந்து கலாய்த்து அலமந்தாடவென்க. அலங்கல் - ஆழிக் கடை. (௯00)

புனைமருப்பழுந்தக்குத்திப்புலியொடுபொருதுவென்ற
கனைகுரலுருமுச்சீற்றக்கதழ்விடையுரிவைபோர்த்த
துனைகுரன்முரசத்தானைத்தோன்றலைத்தம்பியென்றா
னனைமலரலங்கற்கண்ணிநந்தனுந்தொழுதுசேர்ந்தான்.

இ - ள். அந்நிற்கின்றவரசனுஞ் சீவினகொம்பு அழுந்தக்குத்திப் பொருது வென்ற உருமுப்போலுஞ் சீற்றத்தையுடைய ஏற்றினுரியைப்போர்த்தமுரசையுடைத் தாகிய தானையையுடைய நந்தனைக் கொண்டுவருவீராகவென்றான்; அவனும் வந்து தொழுது சேர்ந்தானென்க. (௯0௧)

கொடியணியலங்கன்மார்பிற்குங்குமக்குன்றமன்ன
னடிபணிந்தருளுவாழியரசருளரசவென்னப்
படுசினவெகுளிநாகப்பைத்தலைபணித்துமாழ்க
விடியுமிழ்முரசநாணவின்னணமியம்பினானே.

வெற்றிக்கொடியெடுத்தற்குக் காரணமான மார்பு. ஒழுங்குபடவணிந்த அலங் கலுமாம். பாம்பின்றலை நடுங்கிமயங்க இடிக்கும் இடியோசையைப்பிறப்பிக்கும் முரசம்.

இ - ள். அங்ஙனந் தொழுதுசேர்ந்தவன் பின்னர்க் குன்றமன்னனடியைப் பணிந்து, அரசனே! நினைத்தகாரியத்தை யருளிச்செய்வாயாகவென்ன, அவனும் முரசநாண இன்னணஞ் செப்பினானென்க.

அது மேற் கூறுகின்றார். வாழி - அசை. (௯0௨)

ஊனுடைக்கோட்டுநாகாஞ்சுரிமுகவேற்றையூர்ந்து
தேனுடைக்குவளைச்செங்கேழ்நாகிளந்தேரைபுல்லிக்
கானுடைக்கழனிச்செந்நெற்கதிரணைத்துஞ்சுநாடு
வேன்மிடைத்தானைத்தாயம்வீற்றிருந்தான்மோவென்றான்.

இ - ள். ஊனையுடைத்தாகிய கோட்டினையுஞ் சுரிமுகத்தினையுமுடையநத்தை வரம்பிற்றுயின்ற ஆவினதேற்றினையுஞ் செங்கேழ்நாகினையுமேறி இளந்தேரையினை

மூர்நிலமறிதமேற்று தூருமேன்முறிந்துவீழுந்
தார்நிலமார்பவேந்தர்தன்மையுமன்னதாமே.

வலம் - இடம். அலேகின்றமணி.

இ - ள். தாருக்குநிலமாகியமார்பனே! ஊரவல்லவன் றேறை ஒத்தநிலத்திலே யூருமாயின் மிகப் பலகாலநடக்கும்; அதனை யூருநிலமிதுவென்று அறியாதூருமாயின், அதுவுமுறிந்து தானும்வீழும்; அத்தன்மைத்தாம் வேந்தர்தன்மையுமென்றுனென்க.

என்றது - வேந்தர் அரசை யாளுமுறைமையினுளின், அது நீடுநடக்கும்; அவ்வாறு ஆளாராயின், அதுவுங்கெட்டுத் தாமும்வீழ்வரென்றும். (௬௧௧)

காய்ந்தெறிகடுங்கற்றன்னைக்கவுட்கொண்டகளிறுபோல
வாய்ந்தறிவுடையராகியருளொடுவெகுளிமாற்றி
வேந்தர்தாம்விழைபவெல்லாம்வெளிப்படார்மறைத்தல்கண்டாய்
நாந்தகவுழவரேறேநன்பொருளாவதென்றான்.

இ - ள். ஏறே! வேந்தர் அருளோடு அறிவுடையராகி ஒருவனைக் காய்ந்தெறியுங்கல்லைக் காலம்வருமளவுங் கவுளிலேமறைத்துவைத்த களிறுபோலே பகைவர் மேற்சென்ற கோபந்தோன்றுராய்ப் பொறுத்தாரென்று அவருட்கொள்ளும்படி யதனைக் காலம்வருமளவுமாற்றி, அவர்தாம் விரும்புவனவற்றையெல்லாம் ஆராய்ந்து கொடுத்து அவரை யழிக்கின்றவெண்ணத்தை மறைத்தல்காண் அவர்க்கு நன்பொருளாவதென்றுனென்க.

* "களிறு கவுளடுத்த வெறிகற் போல-வொளித்த துப்பினை" என்றார்பிறரும்.()

குடிபழியாமையோம்பிற்கொற்றவேல்மன்னர்மற்று
னடிவழிப்படுவர்கண்டாயரும்புகழ்கெடுதலஞ்சி
நொடியபலோரெழுத்தும்பொய்யைநுண்கலைநீத்தநீந்திக்
கொடியெடுத்தவர்க்குநல்குகொழித்துணர்குமரவென்றான்.

இ - ள். திங்கைநீக்கி நன்மையையுணர்கின்ற குமரனே! புகழ்கெடுதலையஞ்சிப் பொய்ம்மொழியோரெழுத்தையுங்கூறுதேகொள்; கலைகளாகிய கடல்களைநீந்தி வெற்றிக்கொடியையெடுத்த அமைச்சருக்கு எப்பொழுதுமருள்; இவையேயன்றிக்

* புறநானூறு, ௩0: செஞ்ஞாயிற்றுச் செலவு மஞ்ஞா - யிற்றுப் பரிப்புமப் பரிப்புச் சூழ்ந்த - மண்டில மும்வளி திரிதரு திசையும் - வறிது நிலைஇய காயமு மென்றிவை - சென்றளந் தறிந்தோர் போல வென்று - மினைத்தென் போரு முளரே யினைத்து - மறிவறி வாகாச் செறிவினை யாகிக் - களிறு கவுளடுத்த வெறிகற் போல-வொளித்த துப்பினை யாதலின் வெளிப்பட - யாஙனம் பாடுவர் புலவர் கூம்பொடு-மீசைப்பாய் களையாது மிசைப்பரந் தோண்டாது - புகாஅர்ப் புகுந்த பெருங்கலந் தகாஅ - ரிடைப்புலப் பெருவழிச் சொரியுங் - கடற்பஃ றாரத்த நாடுகிழ வோனே.

திணை-பாடாண்டிணை. துறை-இயன்மொழி. சோழனலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணனன் சாத்தனர் பாடியது.

(தாயத்தீர்வு.)

குடிமக்கள்பழியாமற் பாதுகாப்பாயாயின், பின்னை மன்னர் நின்னடியிடத்தே வீழ்வர்காணென்றானென்க. (௩௧௩)

சேனடந்தாங்குமோடிச்சென் றலாய்ப்பிறழும்வாட் கண்
மான்மடநோக்கின்மாதர்மாலைநாட் பயந்தமைந்தன்
கானடந்தனையமான்றேர்க்காளையைக்காவன்மன்னன்
றானுடனணிந்துதன்போலிளவரசாக்கினானே.

உம்மை-இசைநிறை. கானடந்தனைய-காற்று விசைகொண்டுநடந்தாற்போன்ற. இனித் தன்கால்நடந்தாற்போல மனங்கருதியதே செய்யுமென்றுமாம். கானடந்தனையகாளை - சுதஞ்சணன்.

இ-ள். சேனடந்தாங்குப் பிறழுங் கண்ணிணையும், மான்போலுநோக்கினையும், காதலையுமுடைய குணமாலை முதற்பயந்த மைந்தனாகிய காளையைச் சீவகன்றான் சச்சந்தனுடனே கூடியிருந்து பட்டங்கட்டித் தான் கந்துக்கடனுளில் இளவரசாயிருந்தாற்போல இளவரசாக்கினானென்க.

என்றது - தன்குலத்திற்கேற்ற நுகர்ச்சியையெய்தும் அரசவுரிமையை (௩௧௪)

கூரெயிறணிந்தகோலைக்கொழுங்கனிக்கோலச்செவ்வா
யோரணிமயிலஞ்சாயலிலக்கணையீன்றசிங்கஞ்
சீருடைச்செம்பொற்கண்ணிச்சிறுவனைச்செம்பொன்மாரி
பேரறைந்துலகமுண்ணப்பெருநம்பியாகவென்றான்.

இ-ள். செவ்வாயினையுஞ் சாயலையுமுடைய இலக்கணையீன்ற சிங்கமாகிய சிறுவனை உலகெல்லாம் நின்புகழைச்சாற்றி நீசொரிகின்ற பொன்மழையை நுகரும்படி பெருநம்பியாயிருப்பாயாகவென்றானென்க.

என்றது - சச்சந்தனுக்குப்பின்பு கோவிந்தனரசாளும்படி யுரிமைகொடுத்தானென்றவாறு. (௩௧௫)

தன்கழறொழாதமன்னர் தாமுதலமந்தேந்திநின்ற
பொன்றிகழுருவிற்றம்பிபுதல்வனைத்தந்துபோற்றி
மின்றிகழ்முடியுஞ்சூட்டிவீற்றிரீஇவேந்துசெய்தான்
குன்றுடன்குழீஇயபோலுங்குஞ்சரக்குழாத்தினானே.

குஞ்சரக்குழாத்தினான் - சச்சந்தன்.

இ-ள். சீவகன், தன்னடியை முன்பு பணியாதமன்னர் பின்புவணங்கித் திறையாகவெடுத்த பொன்னாற்செய்த பூண்விளங்கும்படி வில்லையுடைய நந்தட்டன் புதல்வனையழைத்துக் குறுநிலமன்னர்க்குரிய அரசாட்சியிலே யவனிற்கும்படிபோற்றிவீற்றிருத்தி, தன்மகன் சச்சந்தனை முடியுஞ்சூட்டி வேந்தாக்கினானென்க.

* "படையுங் கொடியும்" என்னுஞ்சூத்திரத்தான் அரசர்க்கே முடிகூறினமை யானும், † "வில்லும் வேலும்" என்னுஞ்சூத்திரத்தான் மன்பெறுமரபினோர்க்குமுடி கூறாமையானும், ‡"அந்தணாளர்க் கரசுவரை வின்றே" என்னுஞ்சூத்திரத்தான் அரசில்வழி அந்தணரே அரசியல்பூண்பரென்றமையானும், நந்தட்டன்புதல்வனை முடிசூட்டினானென்றல் பொருந்தாமையுணர்க. (௯௧௬)

நிலஞ்செதிளெடுக்குமான்றேர்நிதிலம்விளைந்துமுற்றி
நலஞ்செய்தவைரக்கோட்டநாறும்மதத்தநாகங்
குலஞ்செய்தகுமரர்க்கெல்லாங்கொடுத்தனனிதியுநாடு
முலஞ்செய்தவைரக்குன்றமோரிரண்டனையதோளான்.

செதிள் - தூளி. குலஞ்செய்த - குலத்தையுண்டாக்கின. இனித்திறஞ்செய்தென்று பாடமாயிற் கூறுபடுத்தியென்க. உலத்தாற் செய்தொழில்செய்ததோள்.

இ - ள். தோளான், தேர்களையும், கோட்டினையும் மதத்தினையுமுடையவாகிய யானைகளையும், நிதியையும், நாடுகளையும் ஒழிந்த குமரர்க்கெல்லாங் கொடுத்தானென்க. (௯௧௭)

நூற்கிடங்கொடுத்தகேள்வி நுண்செவிமண்கொண்ணாட்டில்
வேற்கிடங்கொடுத்தமார்பின்வில்வலான்றோழர்மக்கள்
நாற்கடல்வளாகங்காக்குநம்பிதன்கண்களாகப்
பாற்கடற்கேள்வியாளைப்பழிப்பறநாட்டினானே.

நூற்கேள்விக்கு இடங்கொடுத்த நுண்செவியினையும், மண்ணைக்கொள்ளும் போரிடத்தே வேலுக்கிடங்கொடுத்த மார்பினையுமுடையதோழர்.

இ - ள். வில்வலான், தோழர்மக்களாகிய தூயநூற்கேள்வியை யுடையாரைச் சச்சந்தனுக்குக் கண்களாக நாட்டினானென்க.

என்றது-தன்றோழர் தனக்குச்செய்த தொழில்களை யவர்மக்களுமிவற்குச் செய்கவென்றானென்றவாறு. (௯௧௮)

காவலர்கலமென்னுங்கழனிபுளுழுதுகாமர்
மாவலம்விளைத்தகோட்டுமழுகளிற்றரசனன்னான்
பூவலர்கொடியனாரைவிடுக்கியகோயில்புக்கான்
றாவலரொளியலார்தம்வலக்கண்களடித்தவன்றே.

மாவலம்விளைத்த - திருத்தங்கும் வெற்றியைவிளைத்த; மாபெருமையுமாம்.

இ - ள். களிற்றையொப்பான் றன்றேவியரை யில்லறத்திற் பற்றைவிடுவித்தற்குக் கோயிலிலேபுக்கான்; ஆண்டு அவர் வலக்கண்கள் துடித்தனவென்க.

செல்வச்செருக்கின்றிச் சாரணர்கூறிய அறத்தின்வழிச்சேறலிற் கடாமின்றிப் பாகன்றோட்டியை நீவாத களிற்றினையும், புதல்வர்ப்பயந்து பயன்கொடுத்தலின்

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், ௭௧.

† ,, ,, ,, ௮௯.

‡ ,, ,, ,, ௮௨.

[துறவுணர்த்தல்.]

பூவலர்ந்த கொடியையுமுவமித்தார். தூவலரொலியல் - தூய்தாக அலர்ந்தமாலை. இனித்தூவலர்கொடியனாரென்று பாடமோதி, அழிகின்றகொடியனையாரென்றுமாம், தூவுதல் - அழிதல். (கூகக)

நாயத்தீர்வு முற்றிற்று. கவி, உச.

---

துறவுணர்த்தல்.

செம்பொனாற்செறியவேய்ந்துதிருமணிமுகடுகொண்ட
வெம்புநீள்சுடருஞ்சென்னிவிலங்கியமாடமெய்தி
யம்பொனாற்செய்தபாவையனையவர்த்தம்மினென்றான்
பைம்பொனல்வளர்க்கப்பட்டபனைதிரண்டனையதோளான்.

பொன்னால்வேய்ந்து மணியால் முகடுகொண்டமாடம்; ஞாயிறும் விலங்கிப்போகப்பட்ட சென்னியையுடையமாடம்.

இ - ள். தோளான், மாடத்தைச்சேர்ந்து தத்தம் பொருண்மிகுதியாற் செல்வநன்றென்று துணியப்பட்ட பாவையனையாரைத் தம்மினென்றானென்க. (கூஉ0)

வேறு.

௧. தின்பளிதமாலைத்திரடாமந்திகழ்தீம்பூ
நன்கொளிசெய்தாமநறும்பூநவின்றதாமம்
பொன்னெளிர்ந்ததாமம்புரிமுத்தமிளிர்தாம
மின்னெளித்தமின்னுமணிவீழ்ந்ததிரடாமம். (கூஉக)

௨. ஈன்றமயில்போனெடியதாமநதிடையெங்கு
மான்றுமணம்விம்முபுகைமல்கிநுழையேபோற்
றோன்றுமணிக்காலமளித்தூவணையின்மேலார்
மூன்றுலகம்விற்குமுலைமுற்றிழையினாரே.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். அங்ஙனமழைக்கின்ற அரசனைவலர் செல்கின்றகாலத்து, ஈன்றமயில்போலு முற்றிழையினார், தின்னப்படுகின்ற கருப்பூரவொழுங்காற் றிரண்டதாமம், தீம்பூ மிகவுமொளிசெய்ததாமம், பூந்தாமம், பொற்றகட்டை யொப்பஞ்செய்ததாமம், முத்தத்தாமம், மின்னென்றுதெளிவித்த மணியினது மின்னுத்தங்கியதாமம் ஆகிய இத்தாமங்களினிடையே கிடந்த மணிக்காலமளியில் விம்மு புகைமல்குகையினலே மணமெங்குமயங்கி நுழையேபோற்றோன்றுமணையின்மேலாரா யிருந்தாரென்க. ()

இன்னதருளென்றிளையரேத்தஞ்சிமிறார்ப்ப
மின்னினிடைநோவமிளிர்மேகலைகண்மின்னப்
பொன்னரியகிண்கிணியும்பூஞ்சிலம்புமேங்க
மன்னனடிசேர்ந்திறைஞ்சிவாழியெனநின்றார்.

இ-ள். அவர் அங்ஙனமிருந்தவளவிலே, சென்றவிளையர், அரசன் றிருவுள்ளம் நீங்கள் தன்னிடத்தேறவருவதாயிருந்ததென்று கூறியேத்த, அவரும், ஆர்ப்பரோவ மின்ன ஏங்கச் சேர்ந்து வாழியெனக்கூறி மன்னனடியை வணங்கினின்றாரென்க. (௯௨௩)

கலவமயில்கால்குவித்தபோலுங்கமழைம்பா
னிலவுமணிமேகலைநிலாவுமிழும்பைம்பூ
ணிலவமலர்வாயினணிகூரெயிற்றினீரே
யுலவுமனம்வைத்துறுதிகேண்மினமிதென்றான்.

இ-ள். மயில் கலாபத்தைக்குவித்தாற்போலும ஐம்பான்முதலியவற்றையுடைய எயிற்றினீர்! நம்முடையமனம் பரந்தமனமாயிருக்கும்; அதனை யொருப்படுத்தி வைத்து உறுதியாகியகாரியத்தைக் கேட்பீராகவென்றானென்க.

அம் - அசை. (௯௨௪)

வேறு.

வாயமழுயிர்க்குமாழிமன்னவன்குறிப்புநோக்கி
வேயமழத்திரண்டமென்றோள்வெம்முலைப்பரவையல்குற்
றோய்பிழியலங்கலார்தந்தொன்னலந்தொலைந்துவாடிக்
காயமழற்கொடியைச்சேர்ந்தகம்பகமாலையொத்தார்.

வேய்வருந்தத்திரண்டதோள். தோய்பிழி - செறிந்தமது.

இ-ள். அதுகேட்ட தோண்முதலியவற்றையுடையதேவியர், அழலை வாயயிர்க்குமாழியையுடைய அரசன்றறைவையுட்கொண்டு, தந்நலந்தொலைந்து, வாடி, நெருப்பொழுங்கைச்சேர்ந்த மாலையை யொத்தாரென்க. (௯௨௫)

கருங்கடற்பிறப்பினல்லால்வலம்புரிகாணுங்காலைப்
பெருங்குளத்தென்றுந்தோன்றாபிறைநுதற்பிணையனீரே
யருங்கொடைத்தானமாய்ந்தவருந்தவந்தெரியின்மண்மேன்
மருங்குடையவர்கட்கல்லான்மற்றையர்க்காவதுண்டே.

இ-ள். பிணையனீரே! ஆராயுமிடத்து வலம்புரி கடலிற்பிறப்பினல்லது குளத்தினுள் எந்நாளும்பிறவா; அதுபோலக் கொடையாகியதானமும், அருந்தவமும் ஆராயின், மண்மேற் செல்வமுடையார்ககல்லது மிடியர்க்குண்டாந் தன்மையில்லையென்றானென்க.

அருங்கொடைத்தானம் - உத்தமதானம். (௯௨௬)

அட்டுநீரருவிக்குன்றத்தல்லதுவைரந்தோன்றா
குட்டநீர்க்குளத்தினல்லாற்குப்பைமேற்குவளைபூவா
விட்டுநீர்வினவிக்கேண்மின்விழுத்தகையவர்களல்லாற்
பட்டதுபகுத்துண்பாரிப்பார்மிசையில்லையன்றே.

இ-ள். நீர் வெளிப்படுத்தி யான்கூறுகின்றவிதனைக் கேட்பீராக; குன்றத்தல்

[துறவுணர்த்தல்.]

லது வைரந்தோன்றா; குளத்திலல்லது குவளைபூவா; அதுபோலத் தகுதிப்பாட்டை யுடையவர்களன்றி இவ்வுலகிற் பகுத்துண்பாரில்லையென்றானென்க. (௩௨௭)

நரம்பொலிபரந்தகோயினன்னுதன்மகளிர் தூவும்
பெரும்பலிச்சோற்றினீதல்பெரிதரிதாகுமேனுஞ்
சுரும்பொலிகோதையார்தமனைவயிற்றூண்டொறாட்டு
மரும்பலியனைத்துமீயினதுபொருட்குன்றுகண்டீர்.

இ - ள். அரசன்கோயிலிற் றேவியர் பரவித் தெய்வங்கட்குக் கொடுக்கும் பெரும்பலியாகிய சோறுபோல மிகக்கொடுத்தல் மிடியர்க்கு அரிதாயிருக்குமாயினுந் தத்தநிலைக்குத்தகும்படி மகளிர் தம்மனையிற் றூண்களிலுறையும் தெய்வங்கட்குத் தூவும்பலியளவும் ஈவர்களாயின், அத்தானம் பின்பு அவர்க்கு மேருவாயிருக்குங் காணுங்களென்றானென்க.

பொருட்குன்று - மகாமேரு. (௩௨௮)

அற்றவர்வருத்தநீக்கியாருயிர்கொண்டுநிற்கு
துற்றவிழீதல்செம்பொற்றுறக்கத்துக்கேணியாகு
முற்றுயிரோம்பித்தீந்தேனூனொடுதுறப்பின்யார்க்கு
மற்றுரையில்லைமண்ணும்விண்ணுநும்மடியவன்றே.

இ - ள். ஆருயிர்கொண்டுநிற்கும் வருத்தத்தைநீக்கி யற்றவர்க்குத் துற்றுஞ் சோற்றைக்கொடுத்தல் துறக்கத்திற்கு வழியாம்; அவையேயன்றிக் கொலைகடிந்து தேனையுமூனையுந் துறப்பாராயின், அவர்சிலர்க்கும் மண்ணும்விண்ணும் வந்து வணங்குதற்கு வேறுசில அறங் கூறவேண்டுவதில்லை; நுமக்கு அவ்விரதங்கள் முன்னர் உளவாதலின், மேல் அவ்விரண்டும் நும்மடியிடத்தவன்றேயென்றானென்க (௩௨௯)

வேறு.

மாலைப்பந்தும்மாலையுமேந்துமதுவார்பூஞ்
சோலைம்மஞ்ஞைச்சூழ்வளையார்தோள்விளையாடி
ஞாலங்காக்கும்மன்னர்களாவார்நறவுண்ணாச்
சீலங்காக்குஞ்சிற்றுபகாரமுடையாரே.

இ - ள். பந்தையும்மாலையையுங் கையுறையாகக்கொடுத்துச் சோலையில் மகளிர் தோளிலேவிளையாடி ஞாலங்காக்கும் வேந்தர்களாய் ஈண்டிருப்பார், முன்னர்க் கள்ளுண்ணாமையாகிய சீலத்தைக்காக்குஞ் சிறியவுதவியை யுடையாரென்றானென்க. ()

மாசித்திங்கண்மாசினசின்னத்துணிமுள்ளி
னூசித்துன்னமூசியவாடையுடையாகப்
பேசிப்பாவாய்பிச்சையெனக்கையகலேந்திக்
கூசிக்கூசிநிற்பர்கொடுத்துண்டறியாதார்.

இ - ள். முற்பிறப்பிற் பிறர்க்கிட்டுண்ணாதார், பின்பு அழுக்கினையுடையனவாகிய சிறியசீலைகளை முன்னாகிய ஊசியாலேதைத்த தையல்மொய்த்தவாடையைக் குளிர்மிக்ககாலத்திற்கு உடையாகக்கொண்டு ஓட்டையேந்தி, பாவாய்! பிச்சையிடு சென்றுபேசிச் செல்வர்மனையினுட் சேறற்குக்கூசிக்கூசி நிற்பரென்றானென்க. ()

வேறு.

காட்டகத்தொருமகன்றாக்குமாக்கலை
யோட்டுடைத்தாமெனினுய்யுநங்களை
யாட்டியிட்டாருயிரளைந்துகூற்றுவ
னீட்டியநிழன்மதுப்போலவுண்ணுமே

இ - ள். காட்டகத்து ஓட்டவல்லானொருவன் ஓட்டுங்கலை யோடவற்றாயின், அவனைத்தப்பியும்போம்; அங்ஙனந் தப்பாதபடி கூற்றுவன் நம்மை யோட்டி யுயிரைவாங்கி மதுப்போலவுண்ணுமென்றானென்க. (௧௧௨)

புள்ளுவர்கையினுமுய்யும்புள்ளுமா
கள்ளவிழ்கோதையீர்காண்மினல்வினை
யொள்ளியானொருமகனுரைத்ததென்னன்மின்
றெள்ளியீரறத்திறந்தெரிந்துகொண்மினே.

இ - ள். கோதையீர்! யான்முற்கூறியவாறேயன்றி நல்வினையால் புள்ளுவர் கையிலேயகப்பட்டுப் பிழைத்துப்போம் புட்களுமுள; அதுபோல யாமும் நல்வினை செய்தால் அக்கூற்றத்தைத் தப்பிப்போதலுங்கூடுமென்று காணுமின்; அறிவுடையீர்! யான் இங்ஙனங்கூறிய அறத்தினை யறிவுடையானொருவன் பயனின்றாகவுரைத்த தென்று கொள்ளன்மின்; அதன்றிறத்தை யுலகியல்பாற் றெரிந்துகொண்மினென் றானென்க. (௧௧௩)

மாய்தலும்பிறத்தலும்வளர்ந்துவீங்கலும்
தேய்தலுமுடைமையைத்திங்கள்செப்புமால்
வாய்புகப்பெய்யினும்மழுக்கினல்லறங்
காய்வதுகலதிமைப்பாலதாகுமே.

இ - ள். திங்கள், சாதலும் பிறத்தலுந் தேய்தலும் பெருகலும் யாக்கைக்குடைமையாதலை யறியாதோரையுமறியக்காட்டிச் செப்பாநிற்கும்; அதனைக்கண்டும், நல்லறத்தைச் செவிக்குள்ளே செல்லுமபடி சொரியினும் அதனைக்கேட்டும் மனங்கொள்ளாதே யவற்றைக் கைவிடுவது தீவினையின் கூறென்றானென்க. (௧௧௪)

புள்ளிநீர்வீழ்ந்ததுபெருகிப்புன்புலா
லுள்வளர்ந்தொருவழித்தோன்றிப்போரற
முள்குமென்றூழ்ப்புலாற்குரம்பையுய்ந்துபோய
வெள்ளநீரின்பமேவிளைக்குமெய்ப்பவே.

இ - ள். சுக்கிலம் பைக்குள்ளேவீழ்ந்ததுபெருத்துப் புறகீன்றதசைபரந்து தான்புக்கவழியாலே புறப்பட்டு அறிவுண்டாய் அறத்தைநன்றென்றுகொள்ளுமா

யின், அது பிறவியைத் தப்பிப்போம்படியாகக் கடல்போலப் பெரிய வீட்டின்பத்தை விளைவிக்குமென்றானென்க.

போகவெனத் திரிக்க. (ஙஙு)

பாற்றுளிபவளநீர்பெருகியூன்றிரள்
ஏற்றுநீர்க்குறும்புழையுய்ந்துபோந்தபின்
சேற்றுநீர்க்குழியுளேயழுந்திச்செல்கதிக்
காற்றுணைப்பெறாதழுதலறிவீழுமே.

இ - ள். சுக்கிலமுங் குருதியும் பொருந்துத் தசைதிரண்டு உய்ந்து இடையறாது ஊறுநீரையுடைய சிறுவாயிலாலே போந்தபின் அறிவையுடைத்தாய் அறத்தை நன்றென்றுகொள்ளாதாயின், செல்கதிக்கு நல்வினையாகிய பொதிசோற்றைப் பெறாதே போய் நரகத்தேகிடந்து அழுதுகூப்பிட்டு மீட்டும் அக்குறும்புழைக்குள்ளே யழுந்தி வீழுமென்றானென்க.

குறும்புழை - இடக்கர். பருகியென்றுபாடமாயின், உள்ளடக்கியென்க. ()

திருந்தியநல்லறச்செம்பொற்கற்பகம்
பொருந்தியபொருளொடுபோகம்பூத்தலால்
வருந்தினுமறத்திறமறத்தலோம்புமின்
கரும்பெனத்திரண்டதோட்காமவேற்கணீர்.

இ - ள். வேற்கணீர்! யான்கூறிய நல்லறமாகிய கற்பகம் வீடேயன்றிப் பொருளையும்போகத்தையும் பூத்தலால் வருந்தினீராயினும் அறத்தைமறத்தலைப் பாதுகாப்பீராகவென்றானென்க.

காலத்தைச்செய்யுமவெல். (ஙஙஎ)

மந்திரமருந்திவையில்லையாய்விடி
னந்தலையரவினையாவர்தீண்டுவார்
சுந்தரச்சுரும்புசூழ்மாலையில்லையேன்
மைந்தருமகளிரைமருங்குசேர்கிலார்.

இ - ள். உலகத்தில் மந்திரமுமருந்தும் இல்லையாயிற் பாம்பைத்தீண்டித் தம் வயத்ததாக்குவாரில்லை; அதுபோல நன்றாகிய நறுநாற்றங்களாற் றம்மைச் சுரும்பு சூழுமியல்பு தமக்கில்லையாயின், மைந்தரும் மகளிரருகேசென்று அவரைத் தம்வயத் தராக்குதலிலரென்றானென்க. (ஙஙஅ)

பொன்றுலாம்பொன்னனீர்தருதும்பாகுநீ
நின்றவாறுசிறுவரையாணுஞ்சொற்சில
வின்றெலாமெம்மருங்கிருந்துபேசினல்
வென்றுலாம்வேற்கணீர்விழுத்தக்கீர்களே.

இ - ள். பொன்னனீர்! வேற்கணீர்! நீரெல்லாம் முன்னர்ப் பாகுநின்று விழு

த்தக்கோர்களாயிருத்தலன்றி யின்று எம்மருக்கிருந்து பாகுதின்றுமல் சிறுவரையா னுஞ் சிலசொற் பேசுதலரிது; அங்ஙனம்பேசின் ஒருதுலாம்பொன் றருவேமென் றானென்க. (கூகக)

வேறு.

மெய்ப்படுசாந்தும்பூவுமிகனிகமழுமேனுங்
கைப்படுசாந்தும்பூவுங்கொண்டலாற்கலக்கலாகா
வைப்படுபித்துநெய்த்தோரசும்புசோரழுகற்புன்றோற்
பொய்ப்படவுரைத்ததுண்டோபொன்னனீர்நம்முணுமால்.

அழுகலசும்பு - மலங்கள்

இ - ள். பொன்னனீர்! நம்முள் நாமன்றோ கூறுகின்றோம்; ஐயோடுகூடிய பித்தையும், குருதியையும், புன்றோலினையுமுடைய அழுகலசும்புசோருமெய்யிலே முன்னேயணிந்த சாந்தும் பூவும் கமழுமாயினும் பின்னுங் கைவழியாகிய சாந்தும் பூவுங்கொண்டல்லது கூடலாகா, அத்தன்மையிற் பொய்யாக யான்கூறியதுண் டோ? கூறுமினென்றானென்க (கூச0)

அனிச்சத்தம்போதுபோலத்தொடுப்பவேகுழைந்துமாழ்கி
யினிச்செத்தாம்பிறந்தபோழ்தேயென்றுநாமிதனையெண்ணித்
தனிச்சித்தம்வைத்தநேற்றுந்தளர்ந்துகண்பரப்பிநோக்கிப்
பனித்துமெய்ந்தூற்றபோழ்தேபழுதிலாவறிவினென்னும்.

இ - ள். நாம் பிறந்தபொழுதே யினிச் செத்தேமல்லேமோவென்று இதனை யுமெண்ணி நூலாற்றொடுப்பவே மயங்கிவருமனிச்சப்பூப்போலத் தீவினையுற்றபொ ழுதே தளர்ந்து பரப்பி நோக்கி நடுங்குவேமென்றெண்ணிப் பழுதிலாவறிவினாலுண் டாந் தனித்தசித்தத்தை நிலைபெறவைத்ததைத் தெளியேம், ஆதலால் யாமுய்யுமாறு என்னையென்றானென்க. (கூசக)

நீனிறங்கொண்டவைம்பானிழன்மணியுருவநீங்கிப்
பானிறங்கொண்டுவெய்யபடாமுலைபையிற்றூங்கி
வேனிறமழைக்கண்டாழ்மிமைத்துறைந்தழுகிமேனி
தானிறங்கரக்குங்காலந்தையலீர்மெய்யதன்றே.

இ - ள். தையலீர்! மணியினது நீலநிறத்தைக்கொண்டமயிர் அவ்வுருவ நீங்கி வெளுத்து முலையும் பைபோலஞான்று கண்களும் இமையமுகிக்குறைந்து மேனியொளிகெடுமேப்பு மேல் நம்மிடத்தேவருமல்லவோ, அதற்குமுன்னே துறப் பீராகவென்றானென்க. (கூசஉ)

வேறு.

குஞ்சரமயாவுயிர்த்தனையகுய்கம
ழஞ்சுவையடிசிலையமர்ந்துண்டார்கடா
மிஞ்சிமாநகரிடும்பிச்சையென்றலா
லஞ்சினேன்றுறப்பல்யானுர்வமில்லையே.

[அந்தப்புரவிலாவணை.]

இ - ள். யானையுயிர்த்தாற்போன்ற ஓசையையுடைய தாளிப்புக்கமழும் அடிசிலையுண்டவர்கள்தாம் பின்னாப் பிச்சையென்றலாற் செல்வத்தில் ஆசையெனக்கில்லை; அரசாட்சியையஞ்சினேன்; இனி யான் துறப்பேனென்றானென்க. (௩௪௩)

துறவுணர்த்தல்முற்றிற்று. கவி, உ௪.

---

## அந்தப்புரவிலாவணை.

௧. ஒருவர்தம்வலிகெடுமுடன்றுபொங்கிமே
லிருவர்மற்றியைந்தெழுந்திருப்பினென்பபோ
லுருவநுணணுசுப்பிறவிருந்தவொண்மணிப
பரியகட்படாமுலைப்பைம்பொற்கொம்பனீர். (௩௪௪)

உ. கர்தலங்கழிந்தநாளிதனினிப்புற
மேதிலமெனறசொற்செவிச்சென்றெய்தலு
மாதராரமழைமலர்த்தடங்கண்மல்குநீர்
போதுலாமார்பின்வாய்ப்பொழிந்துவீழ்ந்தவே.

இவையிரண்டுமொருதொடர்

க. நீலமணிபோலும் பெரியகண்.

இ - ள். ஒருவர்மேலே யிருவரியைந்து உடன்று பொங்கி யெழுந்திருப்பின் அவ்வொருவர்வலி கெடுமென்று சொல்லிக்காட்டுவனபோல் நுசுப்புவருந்த வீங்கின முலைகளையுடைய கொம்பனீர்! இதற்கு முன்பு கழிந்தநாளெல்லாம் இல்லறத்தின்மேற் காதலையுடையேம்; அறங்கேட்டதற்கிப்பால் அதனைக் கைவிட்டதன்மையையுடையேம்; என்றசொல்லைத் தேவியார்கேட்டவளவிலே அவர்கள்கண்ணீர் இடையறாது சொரிந்து மார்பிலே வீழ்ந்தனவென்க. (௩௪௫)

வேறு.

செருக்கிநிணந்தின்றுசிவந்துமன்னருயிர்செற்ற
நெருப்புத்தலைநெடுவேற்கண்ணார்கண்ணீர்நிழன்மணிப்பூட்
பரப்பினிடைப்பாய்ந்துகுளமாய்ப்பாலார்படாமுலையை
வருத்திமணிநெடுங்கோட்டருவிபோலவீழ்ந்தனவே.

இ - ள். நிணந்தின்று செருக்கிச் சிவந்து செற்ற வேல்போலுங் கண்ணாருடைய அங்ஙனம்வீழ்ந்த கண்ணீர், பூணுகிய கரையுள்ளேபாய்ந்து குளமாய்நிறைந்து தம் மைத்தாங்கின முலையைவருத்தி மலையினின்றும அருவிவீழுமாறுபோல் அம்முலைகளினின்றும் வீழ்ந்தனவென்க. (௩௪௬)

அழலேந்துவெங்கடுஞ்சொலுருமேறுண்டாங்கலர்சிந்தி
நிழலேந்துபூங்கொடிகணிலஞ்சேர்ந்தாங்குநிலஞ்சேர்ந்து

கழலேந்துசேவடிக்கீழ்க்கண்ணீர்வெள்ளங்கலநிரப்பக்
குழலேங்குமாறேங்கியழுதார்கோதைநமடவாரே.

இ-ள். அன்னைநின்றழுதமடவார், பூங்கொடிகள் உருமேறுவீழ்ந்து அலர் சிந்தி நிலத்தே வீழ்ந்துகிடந்ததென்னும்படியாக எதிலமென்ற சொல்லாலே சேவடிக்கீழ்நிலத்தே வீழ்ந்துகிடந்து கண்ணீர்வெள்ளம் ஆங்குள்ள கலநிரப்ப வழுதாரென்க.

குழல் ஏங்கியழுமாறுபோல ஏங்கியழுதாரென்க. (கூசஎ)

வேறு.

குலிகவஞ்சேற்றுளூறிக்குங்குமநீருள்ஓங்கிப்
பொலிகெனவண்டுபாடப்பூத்ததாமரைகள்போலு
மொலிகழலடிகளுங்கீழ்ப்பிழைத்ததென்னுரைமினென்றுப்
புலிநிழற்பட்டமான்போற்போகுயிராகின்றார்.

அத்தேவியா அவனடிமுதலாக முடியளவுநோக்கிக் கூறுகின்றார்.

இ-ள். குலிகச்சேற்றிலேமுளைத்துக் குங்குமங்கலந்த பனிநீரிலேவளர்ந்து வண்டாகியபாணர் பரிசில்பெறுதற்குப் பொலிகெனப்பாடப் பூத்த தாமரைப்பூக்கள் போலுந் திருவடிகளே! யாங்கள் நும்மிடத்துப் பிழைத்ததியாது? அதனை யுரைமினென்றுகூறிப் புலிக்கட்பட்ட மானுயிர்போலப் போதற்கொருப்பட்ட உயிராகின்றாரென்க. (கூசஅ)

அருந்தவிசாகியெம்மைச்சுமந்தயாவுயிர்த்தவாண்மைப்
பெருந்தகுகுறங்குகாணீர்பெண்ணுயிரளியதாமே
வருந்துமாலென்றுநோக்கீர்வாடுமாலாவியென்னீர்
விருந்தினர்போலநின்றீர்வெற்றுடல்காண்மினென்பார்.

இ-ள். முன்னர் எமக்குத்தவிசாகி எம்மைச்சுமந்து இளைப்பாற்றிய ஆளுந் தன்மையையுடைய குறங்குகாள்! நீங்கள் அளிக்கத்தக்க பெண்ணுயிர்தாம் அளியாக்கால் வருந்துமென்று நினையீராய் இவ்வருத்தமேயன்றி இவ்வுயிர் வாடுமென்று நினையீராய் விருந்தினரைப்போலநின்றீர்; இனி வெற்றுடலைக் காண்பீராக வென்பாரென்க. (கூசகூ)

கோதையுந்துகிலுமேந்திக்குங்குமமெழுதிக்கொய்பூந்
தாதுகொண்டளகத்தப்பித்தடமுலைவருடிச்சேர்ந்து
காதல்கொண்டிருந்தகாமர்கைவிரலளியநீரு
மேதிலராகிக்கோமானெண்ணமேயெண்ணினீரே.

அளகம் - பனிச்சை.

இ-ள். ஏந்தி யெழுதி யப்பித் தைவந்து சேர்ந்து காதலைக்கொண்டிருந்த விரலே! எம்மையருளத்தக்கநீரும் எமக்கு அயலாகி யரசனெண்ணியதனை யெண்ணினீர்; இது தருமோவென்பாரென்க.

செக்கீக்கடவுளைவலஞ்செய்து அதுசான்றாக நம்மைப் பாதுகாப்பேமென்று எங்

[அந்தப்புரவிலாவணை.]

கைகளைப் பற்றினீரென்றலின், உம்மை - சிறப்பும்மை. சாந்தங் - காதல்கொண்டணிந்தவும் பாடம். (௩௲௦)

பஞ்சிகொண் டெழுதியார்ந்தசீறடிபணித்தலஞ்சிக்
குஞ்சிமேலேற்றகோமான்கொப்புளித்திட்டவெம்மை
வஞ்சித்தீர்மணிசெய்தோள்காள்வாங்குபுதழுவிக்கொள்ளீர்
நெஞ்சநீர்வலியீராகிநிற்பிரோநீருமென்பார்.

இ - ள். தோள்காள்! எழுதி யழகுநிறைந்தவடி யூடுகின்றகாலத்து உடம்பிற்பட்டால் நொந்துநடுங்குமென்றஞ்சித் தலையிலேற்றவரசன் இனி நுகரேமென்று கைவிட்டவெம்மை நீர் அணைத்துத் தழுவிக்கொள்ளீர்; இனி நீரும் நெஞ்சம்வலியீராகி நிற்பீரோ? அங்ஙனநிற்பீராயின், நும்முடையகை யெங்களைப்பற்றித் தெளிவிக்கின்றகாலத்து அதற்குதவியாயிருந்தும் உண்மைசெப்பாது வஞ்சித்தீரென்பாரென்க.

நெஞ்சினென்ற பாடத்திற்கு நெஞ்சுபோலென்க. ஈண்டும் உம்மை சிறப்பு. ()

முட்டிவட்டணையகோலமுத்துலாய்க்கிடந்துமின்ன
மட்டுவிட்டலர்ந்தகோதைமதுவொடுமயங்கிநாளு
மொட்டியிட்டுறையுமெங்கட்குயரணையாயமார்ப
நட்புவிட்டொழியுமாயினன்மையார்கண்ணதம்மா.

இ - ள். ஒன்றோடொன்றுசேர்ந்த அரகுவட்டணையவாய்த் திரண்டபெருத்த முத்துக்கிடந்துமின்ன எம்முடைய மார்பிற்கோதை நின்னிடத்துக்கிடந்த மாலையின் மதுவோடேமயங்கி நாடோறும் ஒன்றுபட்டுறையும்படி எங்கட்கு அணையாயமார்பே! கேளாய்; எம்மோடுகொண்ட நட்புக் கைவிட்டுநீங்கின், மற்று நற்குணம் யாரிடத்தே யுள்ளது கூறுயென்பாரென்க. (௩௲௨)

மாக்கவின்வளரத்தீண்டிமணிநகைநக்குநாளும்
பூக்கவினார்ந்தபைந்தார்புனைமதுத்தேனோடேந்தித்
தாக்கியெம்முலைகடம்மைநெருக்கினாய்தரணிமன்னி
னீக்கினையெம்மைநோக்காய்நீத்தியோநீயுமென்பார்.

இ - ள். எம்முடைய பெரியவழகு வளரும்படிதீண்டி மாணிக்கத்தினதொளியை நீதோற்றுவித்து மதுவைத் தேனினத்தோடேயேந்தி மற்றுள்ள பூக்களினழகுநிறைந்த கழுநீர்த்தாரே! நீ யெம்முலைகளைத்தாக்கி நெருக்கினாய்; அங்ஙனநெருக்கியநீயுந் தரணிமன்னனைப்போல எம்மைநீக்கிப் பாதுகாவாயாய்க் கைவிட்டுநின்றாயோவென்பாரென்க. (௩௲௩)

அன்னமேதோகைநல்யாழமுதமேயாய்ந்ததீந்தே
னின்னரேநங்கைமாரென்றேத்தியபவளச்செந்நா
வென்னைநீகண்டதெம்மையிரண்டுநாவாயினாயே
மன்னன்போலீரமின்றிவலித்தனைவாழியென்பார்.

இ - ள். நங்கைமார், அன்னம், தோகை, யாழ், அமுதம், தேனென்கின்ற இத் தன்மையரேயென்று ஏத்திய பவளமாகிய செவ்வியநாவே! நீ மன்னனைப்போல் அருளின்றி யெம்மை யழித்துக்கூறத் துணிந்தனை; இங்ஙனங்கூறுதற்கு எம்மிடத்துக் கண்ட குற்றம் எத்தன்மைத்தாகியகுற்றம்; அதனைக் கூறு; கூறாயேல் நீ யிரண்டு நாவாயேயிட்டாயென்பாரென்க. (௩௱௪)

பூணினுனெருங்கநொந்துபொதிரத்தனவெம்பியென்று
நாணினுல்வருத்தந்தீர்ப்பானன்முலைககண்கடம்மைப்
பேணிநீரெழுதியோம்பிப்பேரின்பங்கொண்டுதந்தீர்
காண்மினேவின்றெம்வண்ணங்கண்ணலீர்கண்களென்பார்.

இ - ள். இவை பூணுடேமயங்குதலாலே வெம்பி நொந்து புடைக்கொண்டனவென்று அரசன்கருதி அவன் நொய்தாகவணிந்த பொன்நாணினுற் பின்னுமுலை கட்டுப்பிறந்த வருத்தத்தைநீக்குதற்குக் கண்களே! நீர் அம்முலைக்கண்களைப்பேணி நும்மணிகளாலேயெழுதிப் பாதுகாத்துப் பேரின்பத்தைக்கொண்டு எமக்குப் பேரின்பத்தைத்தந்தீர்; இங்ஙனமின்பத்தைத்தந்தநீர் துன்பமாகக்கருதி இன்று அருளிலீராயினீர்; எம்வண்ணங்கெட்டபடியை இனிக் காண்பீராகவென்பாரென்க. (௩௱௫)

சென்னிமேன்மிதித்தவஞ்செஞ்சீறடிதிருவில்வீச
மின்னிவாளாரஞ்சிந்தவெறுநிலத்துறைந்துநீயெம்
மின்னகைமுறுவல்பார்த்தாயின்றெமதாவிபார்த்தாய
மன்னியமாலைவண்டார்மணிமுடிவாழியென்பார்.

இ - ள். வண்டார்மாலையினையுடைய நீலமணிபோலும் முடியே! வெறுநிலத்திலே ஆரமின்னிச்சிந்த அரசன் வீழ்ந்துவணங்கவும் அவன்சென்னிமேலே திருவில்வீச மிதித்த சீறடியிலே நீயுறைந்து எம்முகிழ்நகை யெய்துமோவென்று முன்புபார்த்தாய்; இன்று எம்மாவிவருந்துதலையம் பார்த்தாய்; நின்வழிபாடு பொய்யாயிருந்ததென்பாரென்க.

வாழி - அசை. என்பாரென்றவற்றிற்கு ஆயினரெனவருவித்துமுடிக்க. இத்துணையும் அவயவங்களைநோக்கிக் கூறிற்றாகத் தேவர்கூறினர்; * "சொல்லா மரபினவற்றொடு கெழீஇச் - செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்" என்னும் பொருளியற்சூத்திரத்தாலென்றுணர்க. (௩௱௬)

வீங்குபாற்கடலுநஞ்சாய்விளைந்ததால்விரிந்தவெய்யோன்
பாங்கிலாவிருளையின்றுபார்மறைத்திட்டதாலோ
தீங்கதிர்த்திங்கள்செந்தீச்சொரிந்ததாற்றிசைகளெல்லாந்
தாங்குமாறென்னையாவிதரிக்கிலேந்தேவிர்காளோ.

இ - ள். அரசன் இங்ஙனந் தன்றன்மைதிரிந்தமையால், இனிப் பாற்கடலும் நஞ்சாய்விளைந்தது; வெய்யோன் றன்னிடத்தில்லாதவிருளையினை, அவ்விருள் பாரை மறைத்துவிட்டது; திங்கள் திசைகளெல்லாஞ் செந்தீயைச்சொரிந்தது; ஆதலால்,

* தொல்காப்பியம், பொருளதிகாரம், பொருளியல், உ.

[அந்தப்புரவிலாவணை.]

தேவிர்காள்! யாம் எம்மாவியைத் தரிக்கமாட்டுகிலேம்; அதனைத் தரிக்குமாறு எங்ஙனங் கூறுவீராக வென்பாராயினரென்க.

ஈன்று - ஈன. (கூ௫எ)

வேறு.

விண்ணோர்மட மகள்கொல்விஞ்சைமகளோகொல்
கண்ணார்கழிவனப்பிற்காந்தருவதத்தையென்
றெண்ணியவாணெடுங்கண்மெய்கொள்ளவேமுற்றுப்
பண்ணுற்பயில்நீரினியென்பயில்வீரே.

இனித் தேவியர் அரசனைநோக்கி யொருவரையொருவர் காட்டிக்கூறுகின்றார்.

இ - ள். உலகம் எண்ணுந்தன்மையுண்டாயவனப்பிற் றத்தையுடைய வாள்போலுங்கண் அறிவைக் கவர்ந்துகொள்ளுகையினாலே யிவளை விண்ணோர்மகளோ; விஞ்சைமகளோவென்று மயக்கமுற்று விஞ்சைமகளேயென்றுதுணிந்து யாழ்வென்று உறவுகொண்டநீர் இங்ஙனங் கைவிட்டநிலையில் என்ன உறவு கொண்டீராவீரென்க. (கூ௫அ)

கொல்வேனெடுங்கட்குணமாலைகுஞ்சரத்தா
லெல்லையுற்றாளுக்கன்றாளிறடர்த்துப்
புல்லிப்புணர்முலையின்பூங்குவட்டின்மேலுறைந்தா
யெல்லேமற்றெம்பெருமாற்கின்றிவளுமின்றாளோ.

இ - ள். குணமாலை யானையால்வருத்தமுற்ற இவள்பொருட்டு அன்று அவ் யானையைவருத்தி யிவளைப் புல்லியுறைந்தாய்; அங்ஙனமுறைந்தநினக்கு இன்று இவளும் வெளியாக இன்னாளாயினளோவென்க. (கூ௫௯)

தூம்புடையவெள்ளெயிற்றுத்துத்தியழனாகப்
பாம்புடையநோக்கிப்பதுமைபவளவாய்
தேம்புடையவின்னமுதாச்சேர்ந்தாய்க்கினியதுவே
யாம்புடையநஞ்சடங்கிற்றின்றாறிற்றாகாதே.

தேம்புதலையுடைய பதுமை. இனி - இங்ஙனநீக்கின நிலையால். மேல் வளருங் கூற்றினையுடைய நஞ்சு ஒருபுறத்தேயடங்கித் தீராமனின்றது; அதுவே யின்று வளரிற்றாகாதோவென்க.

இ - ள். புரையினையுடைய எயிற்றினையும், பொறியினையும், நஞ்சினையுமுடைய நாகப்பாம்பின் நஞ்சுடையுமபடி நோக்கிப் பதுமைவாய் அமுதமாகக்கொண்டு கூடினநினக்கு அந்நஞ்சு எதிரந்ததில்லையாகாதோவென்க. (கூ௬0)

தாழ்ந்துலவிமென்முலைமேற்றண்ணாரம்வில்விலங்கப்
போழ்ந்தகன்றகண்ணினாலேப்பெற்றுப்போகலாய்
நாழ்ந்தமரரின்னமிர்தந்தக்கநாட்டாகாதே
வீழ்ந்தகேமவிழ்ந்தாய்நீயின்றதுவும்விட்டாயோ.

போழ்ந்து - போழ.

இ - ள். முலைமேல் ஆரந்தாழ்ந்து உலவி யொளியைக் குறுக்கிடும்படியாகக் கண்ணினாலே நின்னெஞ்சைப் பிளக்கவெய்த வவைப்பெற்றுப் போகமாட்டாயாய்ச் சுரர்கொண்டுபோகின்றவமுதந் தாழ்ந்துவீழ்ந்தது தக்கநாட்டிலே யாகாதேயென்று கருதி விரும்பினாய்; இன்றுஅவ்விருப்பமும் விட்டாயோவென்க. (௩௬௧)

கண்ணோகயலோகழுநீரோகாவியோ
பெண்ணோவமுதோபிணையோவெனப்பிதற்றித்
தண்ணெனசிலைத்தொழிலுங்காட்டிமுன்னின்புற்றீர்
புண்மேற்கிழிபோற்றுறத்தல்பொருளாமோ.

இ - ள். இவள்பொருட்டுச் சிலைத்தொழிலையும் அரசனுக்குக்காட்டி யிவளைப் பெற்றபின்னர், இவளைப் பெண்ணோ, அமுதோவென்றும், முகத்தில் இவை கண்ணோ, கயலோ, கழுநீரோ, காவியோ, பிணையோவென்றும் புனைந்துரைத்து முன்பு இன்புற்றநீர் இக்காலத்துப் புண்ணிற்கிடந்த சீலைபோலத் துறத்தல் அறமாமோ வென்க. (௩௬௨)

பொன்னகாவித்புகுந்தீர்பொழிமுகிலின்
மின்னின்னிடைநுடங்கநின்றாடல்மேவெனெடுங்கண்
மன்னனகரெலாமபோர்ப்பவலைப்பட்டீராக்
கின்னேயொளியிழந்தவின்னாவிடுகினவோ.

பொழிமுகில்கூறிற்று, மிகவிளங்குதற்கு. மன்னன் - சச்சந்தன். இனி மன்ன வென்று பாடமாயின், ஒருமைப்பன்மைமயக்கமாம். போர்ப்பவென்றது, * "எங் கெங்கேநோக்கினுமங்கங்கேதோன்றுமால்" என்றதனை.

இ - ள். இராசமாபுரத்து வீதியிலே புகுந்தநீர் விமலைகண் சூழ்போத அவ் வலையிலே யகப்பட்டீர; அவ்வலைப்பட்டவுமக்கு அக்கண் இப்படியே இன்றுவா யொளிகெட்டுக் குறைந்தனவோவென்க (௩௬௩)

செங்கச்சிளமுலையார்திங்கள்கறையூர்பல்லினார்
மங்கையர்களகாப்பமகிழ்ந்தாளைநீமகிழ்ந்து
பங்கயமேபோல்வாளைப்பார்ப்பானாய்ப்பண்ணமைத்துத்
தங்கினாய்கோவேதுறத்தறநவாமோ.

முதுமையாற் கறைபோக விளக்கமாட்டாத பல்லினார். பங்கயமேபோல் வாள் - தாமரை ஞாயிற்றையே நோக்குமாறுபோல நின்னையே நோக்கிக் கற்புக் கடம்பூண்டவள்.

இ - ள். கோவே! இளையருமுதியருமாகிய மங்கையர்காப்ப அக்காவலைமகிழ்ந் தாளை நீயுமகிழ்ந்து பார்ப்பானாய்ச்சென்று பாட்டாலே சேர்த்துக்கூடினாய்; இனி யிங்ஙனந் துறத்தல் நினக்குத் தகுதிப்பாடோவென்க.

பண்ணமைத்தென்றபாடத்திற்குப் பண்ணாலே யவள்வன்மையை நெகிழ்த்தெ, ன்க. (௩௬௪

* விமலையாரிலம்பகம், அ௩.

[கோயில்விலாவணை.]

புல்லாருயிர்செகுத்தபொன்னந்திணிதோளாய்
மல்லாரகன்மார்பமட்டேந்திவாய்மடுத்திட்
டெல்லாருங்காணவிலக்கணையோடாடினை
யல்லாந்தவளைநீங்கவன்பினகல்வாயோ

இ - ள். தோளாய்! மார்பனே! எந்தம் மதுவையெடுத்துக்கொடுத்து இலக்கணையோடு புணர்ந்தாய்; அங்ஙனம்புணர்ந்தநீ அவள் அலமந்துநடுங்க அன்பினின்றும் அகல்வாயோவென்க (௩௬௫)

அந்தப்புரவிலாவணைமுற்றிற்று. கவி, ௨௨.

---

## கோயில்விலாவணை.

௧ கல்லேமரனுமிரங்கக்கலுழ்ந்துருகி
யெல்லாத்திசைநேராறுமீண்டிளமயிலபோற்
சொல்லாத்துயர்வார்தொழுவாரழுவாரா
யல்லாந்தகன்கோயிலாழ்கடல்போலாயிற்றே. (௩௬௬)

௨. பூப்பரிவார்பொன்செய்கலம்பரிவார்பொன்வளையை
நீப்பிரெனப்புடைப்பார்நீடாமஞ்சிந்துவா
ரேப்பெற்றமான்பிணைபோலேங்குவாரின்னுயிரைக்
காப்பமேற்காவலனுங்காவானோவின்றென்பார். (௩௬௭)

௩. கழுநீருந்தாமரையுங்கண்டனவேபோலு
மழுநீர்மேற்கண்ணுமுகமுமுலறிச்
செழுநீர்மணிக்கொடிகள்காருகனுசேர்கொம்பா
யழுநீரவாயலறியலம்வருவபோன்றவே

இவைமூன்றுமொருதொடர்.

௧. சொல்லாவென்றது சொல்லாதென்றிங்ஙனஞ்சொல்லியென முற்கூறியவற்றைக் கூட்டியுரைக்க.

௨. காவலனோ - காதலனல்லனோ

௩. கழுநீரையுந் தாமரையையுங் கொண்டாற்போலுங் கண்ணுமுகமு மென்க.

இ - ள். தேவியர்கலங்கி நெஞ்சுருகிக் கல்லுமரமுமிரங்க இங்ஙனஞ்சொல்லிப் பூப்பரிவார்; கலம்பரிவார்; புடைப்பார்; சிந்துவார்; ஏங்குவார்; என்பாராயலறி மணிக்கொடிகள் கருமைசேர்ந்த கொம்பாயலறி அழுந்தன்மையவாய் அலம்வருவன வற்றை யொத்தார், அதுகண்டு எல்லாத்திசைகளிலுநின்ற மகளிரும் இளமயில்

போலீண்டித் துயர்வார்; தொழுவார்; அழுவாராய் அலமருகையினாலே கோயில் கடலொலிபோலே யொலியுண்டாயிற்றென்க.

வளவிய நீர்மையையுடைய மணியென்றார், பலநிறத்து மணிகளையுங்கருதி. ()

வேறு.

பண்ணார்பணைமுழவம்பாடவிந்துபன்மணியாழ்மழலைநீங்கிப்
புண்ணார்புனைகுழலுமேங்காபுனைபாண்டிலிரங்காவான்பூங்
கண்ணாரொலிகவுளகிண்கிணியுமஞ்சிலம்புங்கலையுமாரா
மண்ணார்வலம்புரியும்வாய்மடங்கிக்கோன்கோயின்மடிந்தனன்றே.

மண்ணார்கோன் - உலகெல்லாம் புகழ்நிறைந்தகோன். இனி மண்ணார்வலம்புரி - அரக்கிட்டாடின வலம்புரியென்றுமுரைப்ப.

இ - ள். பூப்போலுங் கண்ணாருடைய மழலைமொழிபோய் அழுங்குரன்மயங்குதலாலே, பெரியமுழவமும் பண்ணார்யாழும் ஒலிகெட்டுத் துளையார்ந்த குழலுமூதாவாய்க் கஞ்சதாளமுமொலியாவாய் ஒலிக்கின்ற பக்கத்தையுடைய கிண்கிணிமுதலியவுமொலியாவாய் வலம்புரியுமூதாதொழிந்து அரசன்கோயில் ஆரவாரமற்றதென்க.()

அணியார்மணியரக்குவட்டமூழ்த்திவைத்தனையசெங்கண்மாத்தாட்
பிணியார்பெருந்துருத்தியன்னபெருங்கவுளபிறையேர்கோட்ட
பணியார்கமழ்கடாத்தண்ணலரசுவாப்பண்ணார்பாய்மா
வினையாதுமில்லாதகண்ணீர்வீழ்த்துண்ணாநின்றினைந்தனவே.

இ - ள். அண்ணலுடைய மணியினையுங் கண்ணினையுந் தாளினையும் வண்டுகள்படிய நிறைந்த கடாத்தினையுமுடைய கவுள கோட்டவாகிய யானைகள், யாதுமொப்பில்லாத பண்ணுதனிறைந்த குதிரைகள் தாமுண்ணாவாய்அழுது வருந்தினவென்க. (கஎ0)

கழித்தகடிப்பிணையுங்கைவளையுமாலையுங்களைந்துமுத்தூந
தொழித்தநறுஞ்சாந்துஞ்சுண்ணமும்பன்மணியுங்கலனுஞ்சிந்தி
விழித்துவியன்கோயில்பன்மீன்பரந்திமைக்கும்பனியார்வானம்
பழித்துப்பசும்பொனுலகுகுடிபோயிற்றொத்ததன்றே.

சாந்துஞ் சுண்ணமுமளைந்த மணியென்க. களைந்தகழித்த சிந்திவிழித்து - வாங்கிப்போடப்பட்டன சிந்திவிளங்கியென்க. களைந்தமுத்தென்றும் பாடம். தொழித்தகலன் - ஆரவாரித்தகலன்.

இ - ள். கோயில் கடிப்பிணைமுதலியன விழித்துப் பன்மீனிமைக்கும் வானைப்பழித்து மக்களெல்லாம்போந்து அரசனிடத்தேநிற்றலிற் பொன்னுலகு குடிபோன தன்மையையொத்ததென்க. (கஎக)

அழலார்சுரையெயிற்றுவெஞ்சினவைவாளேலைசுமந்தவெகுளிநாக
நிழலார்திருமணியுந்தேவர்திருமுடிமேனிலவுவீசுஞ்
சுழலார்பசும்பொனும்வேய்ந்துசொரிகதிர்மென்பஞ்சியார்ந்த
கழலானகரமமுதுகடைகடல்போற்கலங்கிற்றன்றே.

[நகரவிலாவணை.]

அழல் - நஞ்சு. சுளை - பொய். நாகத்தின் றலைசுமந்த மணியும்பொன்னும் மேலேவேய்ந்து கதிரைச்சொரிகின்றநகரமென்க. சுழலுதலார்ந்த தேவர்முடிமே னிலவுவீசுங்கழல் - வலஞ்செய்தனிறைந்த தேவர்வணங்கின முடிமேல் நிலைபெற்று ஒளியைவீசுமடியென்க. கழல்-ஆகுபெயர். பஞ்சியார்ந்தகழல்-நிறத்தாலும், மென்மையாலுஞ் செம்பஞ்சின் றன்மைநிறைந்தவடி.

இ - ள். மேற் றேவர்வணங்குங் கழலானசரங் கடல்போற்கலங்கிற்றென்க.

அதுமேல் * "திருவடிப்போதமரர்முடிமேலணிந்தாரே" என்பதனுனுணர்க. ()

நோயிலிவிலாவணைமுற்றிற்று. நவி, எ

நகரவிலாவணை.

நீர்நிறைகுளத்துமாரிசொரிந்தெனநறுநெய்துள்ளு
நேர்நிறைபொரியுங்குய்யும்வறைகளுநிவந்தவாசம்
பார்நிறையடிசிற்பள்ளிதளியொடுசாலையெல்லா
மூர்நிறையுயிர்த்தல்ன்றியுயிர்சென்றபோன்றவன்றே.

குளத்திலே மழைபெய்ததென்னும்படி துள்ளும் நறுநெய்யாற்பொரித்த பொரிக்கறி; பலகாயங்கள் குறிக்குநேராக நிறைந்த பொரிக்கறி. குய்-தாளிக்குங்கறி. வறைகள் - துவட்டினகறிகள். பாரிலேநிறைந்த புகழினையுடையவூர்.

இ - ள். அடுக்களைகளிலும், கோயில்களிலும், சோறிடுஞ்சாலைகளிலுஞ் சமைக்கும்பொரியலுங் குய்யலும் வறையலும் வளர்ந்தவாசம் ஊர் நிறையும்படி தோன்றுதலின்றாய் அவ்விடங்கள் உயிர்சென்றாற்போன்றனவென்க. (௩எ௩)

கோடபுலிச்சுழல்கண்ணன்னகொழுஞ்சுவைக்கருணைமுல்லை
மோட்டிளமுகையின்மொய்கொள்கொக்குகிர்நிமிரல்வெண்சோ
றூட்டுறுகறிகொடேமாங்கனிசுவைத்தயிரொடேந்தி
வேட்டவர்ப்பெறுதுவீதிவெறுநிலங்கிடந்தவன்றே.

புலிக்கண்போன்றநிறத்தையுடையகருணைக்கிழங்கு. முல்லைமுகையாற்செய்த பந்துபோலத் திரட்டுதல்கொண்டசோறு; ஒரோவோரவிழ் கொக்குகிர்போலு நீட்சியையுடையசோறு. உண்ணப்பண்ணுங்கறி. தேமாவிற்கொண்டகனி.

இ - ள். முன்பு சோற்றையுங் கருணைமுதலியவற்றையுந் தயிரோடேயேந்தி விரும்பினோர்க்குக் கொடுக்கின்றவீதி, இன்று அரசன்றறவினாலவருந்தி விரும்புவாரின்மையின், அவர்களைப்பெறாமல் வெறுநிலமாய்க் கிடந்தனவென்க. (௩எ௪)

* முத்தியிலம்பகம், மணியரும்பதம், ௪.

மைந்தர்தம்வண்கையான்முன் மணிவள்ளத்தெடுத்ததேறல்
பைந்துகின்மகளிர்மேவார்பாசிழைபசும்பொன்மாலை
சிந்தியேகரந்தார்சொற்போன்மெய்யின்கட்சேர்தலின்றாய்ச்
சந்தனச்சாந்தொடாரந்தாங்கவினிழந்தவன்றே.

இ - ள். மைந்தர் தங்கையாலே முன்பு மகளிர்க்கெடுத்ததேறலை யின்று எடுத்தலைமேவார்; மகளிர் இழையையும் மாலையையுஞ் சந்தனக்குழம்பையும் ஆரத்தையுஞ்சிந்தி யவற்றைமேவார்; அவர் அங்ஙனமேவாமையின், அவை யழகிழந்தனவென்க.

உண்மைப்பொருளின்கட் செல்லுதல்செய்யாத துறவோர்சொல்லுஞ்சொல் பற்றுவிடாதிருக்கவும் பற்றற்றனபோன்றிருக்குமாறுபோல, அவர்களும் பற்றுண்டாயிருக்கவும் அரசன்றுறக்கின்ற வருத்தத்தால இவற்றிற் பற்றில்லாதாரபோல மேவாதிருந்தாரென்றுகொள்க. (௲எ௫)

தாழிவாய்மறைக்குந்தண்ணென்றடம்பெருங்குவளைக்கண்ணார்
மூழிவாய்முல்லைமாலைமுலைமுகமுரிந்துநோக்க
யாழின்வாய்முழவம்விம்மவாட்டொழிந்தயாந்துதீந்தே
னூழிவாய்க்கொணடதொக்கும்பாடலுமொழிநததன்றே.

இ - ள். தாழியின்வாயை மறைக்குங் குவளைபோலுங்கண்ணா ரெட்டியின் முல்லைமாலை முலைமேலேநக்க முழவொலிப்ப முரிந்தாடு மாட்டுமொழிந்து யாழின் வாயிசைக்கேற்பப் பாடும்பாட்டுமொழிந்து அவ்வூர் வருந்திற்றென்க.

ஊழ் - ஊழியெனத்திரிந்தது தேனினந்தான் பாடுமாறொழிந்து முறைமைப்படப் பாட்டினுலொக்கும் பாட்டு (௲எ௬

அருங்கலநிறைந்தவம்பூம்பவளக்காறிகழும்பைம்பொற்
பெருங்கிடுகென்னுங்கோலப்பேரிமைபொருந்திமெல்ல
வொருங்குடனகரமெல்லாமுறங்குவதொத்ததொல்லை
கருங்கடல்கல்லென்சும்மைகரந்ததுமொத்தன்றே.

அருங்கலநிறைந்தவம்பூம்பவளக்கால் - * “மணிபுனைசெம்பொற்கொட்டைவபணி” பவளக்கால். பவளக்கால்திகழுங்கிடுகு. கிடுகு - சட்டம். நகரிக்கு அங்காகண்ணாகவும், சட்டம் அதற்கிமையாகவும் உவமஞ்செய்தார்.

இ - ள். நகர் கிடுகென்னுமிமைபொருந்தி யுறங்குவதொத்தது; அதுவேயன்றியொலியவிந்துகிடத்தலிற் கடல் சும்மையைமறைத்ததுவுமொத்ததென்க.

இதனால் அங்காடியடைத்ததென்றார். (௲எ

கலையுலாய்நிமிர்ந்தவல்குற்கடல்விளையமுதமன்னார்
முலையுலாய்நிமிர்ந்தமொய்தார்முழவுமுத்துரிஞ்சமின்னச்

* நாமகளிலம்பகம், அ௪.

[நகரவிலாவணை.]

சிலையுலாய்நிமிர்ந்தமார்பன்றிருநகர்தெருள்கலாதாய்
நிலையிலாவுலகின்றன்மைநீர்மைமீக்கூறிற்றன்றே.

அமுதமன்னார் முலையுலாய்ப் பாய்ந்த மார்பன்; தாரும் முழவுபோலுமுத்தும் உரிஞ்சி மின்னும்படி சிலையுலாவிநிமிர்ந்த மார்பன்.

இ-ள். மார்பன் நகர், பொலிவழிதலால், இராசமாபுரமென்று தெளியலாகா தாய் உலகின்றன்மை நிலையில்லாநீர்மையாயிருக்குமென்று மேலாகக்கூறிற்றென்க.()

வேறு.

கூந்தலகிற்புகையும்வேள்விக்கொழும்புகையு
மேந்துதுகிற்புகையுமாலைக்கிடும்புகையு
மாய்ந்தபொருளொருவர்க்கீயாவதிலோப
மாந்தர்புகழேபோற்றேன்றுமறைந்தனவே.

இ-ள். கூந்தலுக்கிட்டபுகையும், யாகத்திற்புகையும், துகிற்கேந்தினபுகை யும், மாலைக்கிட்டபுகையும், பொருளையீயாத உலோபர்புகழ்போல மறைந்தனவென்க()

புல்லுண்புரவிபுலம்பிவிடுகுரல்போ
னல்லவளை போழரவநாரைநரல்குரல்போற்
கல்லாவிளையர்கலங்காச்சிரிப்பொலியுங்
கொல்யானைச்சங்கொலியுங்கூடாதொழிந்தனவே.

இ-ள். புரவிவருந்திச் சோம்புபோக்குங்கால் எழும்விளிபோலச் சங்கறுக் கின்றவரவமும், நாரைநரலுங் குரல்போல இளையர் விடாதுசிரிக்கின்றசிரிப்பொலி யும், யானையுஞ் சங்கும ஒலிக்கின்றவொலியும் அவ்விடத்துக் கூடாமல் நீங்கின வென்க. (கூஅ0)

பொற்புடையபூமாலைசாந்தம்புனைகலன்கள்
கற்புடையமங்கையரிற்காவலவையிழந்த
நற்புடையதேனார்நறவுநயம்பூல்லார்
சொற்பொருள்போல்வேட்கப்படாசோர்ந்தொழிந்தனவே.

இ-ள். மாலையுஞ் சாந்தமுங் கலன்களும் நறவுங் கற்புடைய மங்கையரைப் போலக் காவலிழந்தவை, அறிவில்லார் சொற்பொருள் சோர்ந்து வேட்கப்படாத வாறுபோல வேட்கப்படாவாய் ஒழிந்தனவென்க. (கூஅக)

தீம்பால்கிளிமறந்துதேவரவிமடங்கித்
தூம்பார்நெடுங்கைம்மாத்தீங்கரும்புதுற்றுவா
யாம்பாலுரைமடங்கியாரும்பிறர்பிறராய்க்
காம்பார்நடுவிருட்கட்காடேபோலாயிற்றே.

ஆம்பாலுரைமடங்கியாரும்பிறர்பிறராய் - அரசன் துறவினைத்தாமுமுட்கொண்ட

மையின், மனவேட்கையாலே நுகரப்படும்பொருள்கள்மேல் நிகழும் பகுதியையுடைய வார்த்தைகள் மீண்டு, அவற்றிற்பற்றுதலின்மையின், யாருஞ் சுற்றத்தொடர்ச்சியற்றவர்களாய். இடையாமத்திருளில்நின்ற முள்ளுடைய மூங்கில்நிறைந்த காடேபோலென்றதனாற்பயன்: இவ்வூரிற்பெற்ற செல்வந்தன்னையேநுகர்ந்தாற் பின்னும் மயக்கஞ்செய்யும் பிறவியாகியவிருளைப் பிறப்பித்தலும், முட்போலப் பற்றினாற் றொடக்கிக்கோடலும், வீட்டுப்பயன் கொடாமையுமாம். துறவுள்ளம்பிறந்தோர்க்கு இத்தன்மைத்தானநகரி காடுபோலாயிற்று; இனிக்கும், தேவருக்கும், களிற்றிற்கும் பொருள்களினுகர்ச்சியின்மையிற் காடுபோலாயிற்று.

இ-ள். மறத்தலானும் மடங்குதலானுந் துற்றுவாய்நிற்றலானும் பிறர்பிறராய் நிற்றலானும் அவற்றிற்கும் அவர்க்கும் நகரி காடுபோலாயிற்றென்க. (கூஅஉ)

நீர்முழங்குநீலநெடுமேகமால்யானைத்
தேர்முழங்குதானைத்திருமாவின்முன்றுறப்பான்
பார்முழங்குதெண்டிரைபோற்செல்வந்தம்பாலர்க்கீந்
தூர்முழுதுநாடுமுரவோன்றுள்சேர்ந்தவே.

நீரினையுடைய முழங்குமேகம்போலும் யானையுந் தேரும் முழங்குந் தானையையுடையவரசன்.

இ-ள். ஊரிலுள்ளாரும், நாட்டிலுள்ளாரும் அரசன்முன்னாகத் துறத்தற்குக் கடல்போலுஞ்செல்வத்தைத் தமதுபுதல்வர்க்களித்து அறிவுடையோன்றாளைச் சேர்ந்தாரென்க. (கூஅகூ)

நகரவிலாவணைமுற்றிற்று. கவி, கக.

---

## துறவுவலியுறுத்தல்.

கொல்லுலைப்பொங்கழற்கிடந்தகூரிலை
மல்லல்வேலிரண்டொருமதியுள்வைத்தபோற்
செல்லநீண்டகன்றகஞ்சிவந்தகண்ணினா
ரல்லலுற்றழுபவர்க்கரசன்சொல்லினான்.

சொல்லினான் - முற்றுவினைத்திரிசொல்.

இ-ள். அங்ஙனஞ் சேர்ந்தவளவிலே, மதியுள்ளே யிரண்டுவேலைச் சேரவைத்தாற்போல முகத்திலேகிடந்து செவியுறநீண்டு அகன்று சிவந்த கண்ணினாரழுபவர்க்கு அரசன் ஒருமொழி கூறினானென்க. (கூஅச)

## வேறு.

நற்றவம்பரனுஞானமுடனிறப்பின்வைய
மற்றமிறலத்திற்கென்றுமையவியனைத்துமாற்று
திற்றெனவுணர்ந்துநிற்பிற்றிருமகளொன்றுநீங்காள்
பற்றொடேநிற்பினொன்றுந்திருமகள்பற்றல்செல்லாள்.

இ-ள். நாம் தவத்தையுஞானத்தையுஞ் சேரநிறப்பின், ஞானந் தவத்திற்கு

[துறவுவலியுறுத்தல்.]

எந்நாளும் வெண்சிறுகடுகளவும் நிறையாற்ருது; அதனை யிற்றெனவுணர்ந்து அத்தவத் தேநிற்பிற் றிருமகள் என்றும் நம்மைநீங்காள்; நாம் பற்ருேடேநிற்பிற் றிருமகளும் நம்மைப் பற்றுதல்செய்யாள்; ஆதலாற் பற்றுவிட்டுத் தவஞ்செய்ம்மினென்ருனென்க. (௩௮௫)

உப்பிலிப்புழுக்கல்காட்டுட்புலைமகனுகுப்பவேகக்
கைப்பலியுண்டியானும்வெள்ளின்மேற்கவிழநீரு
மைப்பொலிகண்ணினீரான்மனையகமெழுகிவாழ
விப்பொருள்வேண்டுகின்றீரிதனைநீர்கேண்மினென்ருன்.

இ-ள். யானும் சுடுகாட்டிலே பாடைமேலேகிடந்து புலைமகன் ஒருகையாலே புழுக்கலாகிய பலியையிட்டு நீரையுகுப்ப அவற்றையுண்டு கவிழ, நீருங் கண்ணீரான்மெழுகிவாழ இப்பயனில்பொருளை விரும்பாநின்றீர்; அதனைவிட்டு இப்பயனுடையபொருளைக் கேட்பீராகவென்ருனென்க.

புலைமகனென்ருர், புரோகிதனை; அவன் தன்குலத்திற்குரியனசெய்யாது அரசன்குலத்திற்குரியதொழில்களை மேற்கொண்டுநிற்றலின். "புலைய னேவப் புன்மேலமர்ந்துண்டு" என்றும், *"இழிபிறப்பினோ னீயப் பெற்று" என்றும் பிறருங்கூறினர்; நாவிதனுமாம். கவிழ்தல் - பொன்றக்கெடுதல். (௩௮௬)

௧. கொல்சினயானைபார்க்குங்கூருகிர்த்தறுகணாளி
யில்லெலிபாத்துநோக்கியிறப்பிற்கிழிருத்தலுண்டே
பல்வினைவெள்ளநீந்திப்பகாவின்பம்பருகினல்லா
னல்வினைவிளையுளென்னுநஞ்சினுட்குளித்தலுண்டே. (௩௮௭)

௨. ஆற்றியமக்கணொன்றுமருந்தவமிலார்களாகிற்
போற்றியமணியும்பொன்னும்பின்செலாபொன்னனீரே
வேற்றுவரென்றுநில்லாவிழுப்பொருள்பரவைஞால
நோற்பவர்க்குரியவாருநோன்மினநீருமென்ருன்.

இவையிரண்டுமொருதொடர்.

---

* புறநானூறு, ௩௬௩. இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநில - முடைமையி னடுவிலைத் திடைபிறர்க் கின்றித் - தாமே யாண்ட வேமங் காவல - ரிடுதிரை மணலினும் பலரே சுடுபிணக் - காடுபதி யாகப் போகித் தத்த - நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே - அதனால் - நீயுங் கேண்மதி யத்தை வீயா - துடம்பொடு நின்ற வுயிரு மில்லை - மடங்க லுண்மை மாயமோ வன்றே - கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு - வெள்ளில் போகிய வியலு ளாங்க - ணுப்பிலா வவிப்புழுக்கல் கைக்கொண்டு பிறர்க்குநோக்கா - திழிபிறப்பினோ னீயப் பெற்று - நிலங்கல னாக விலங்குபலி மிசையு - மின்னா வைகல் வாரா முன்னே - செய்ந்நீ முன்னிய வினையே - முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே.

ஐயாதிச் சிறுவெண்டேரையார் பாடியது.

௧. வினை - இருவினை. பகாவின்பம் - நீங்காவீட்டின்பம். நல்வினைவிளையுள் - நல்வினையாலுண்டாகியசெல்வம்.

௨. ஆற்றிய - தேடிய. என்னும் - சிறிதும்.

இ - ள். பொன்னனீர்! யானையையுணவாகப் பார்க்கும்யாளி எலியை யுணவாகப் பார்த்திருத்தலில்லை; அதுபோல அறிவுடையோர் வீட்டின்பமாகியவமுதைப் பருகுதலன்றிச் செல்வமாகியநஞ்சினைப் பருகி யதனுள்ளேயழுந்துதலில்லை; அத்தன்மையையும் நெஞ்சினால்நோக்கி, மக்கள்தேடிவைத்த தவஞ் சிறிதுமுடையரல்லராயின், அவர்களாற் பேணிவைக்கப்பட்டவாகிய மணியும் பொன்னும் பின்செலா; அவையல்லா விழுமியபொருள்களும், ஞாலமும் அவரை வேறுஅவரென்று நினைத்து அவர் பக்கல் நில்லாவாய் நோற்பவர்க்கு உரியவாய்நிற்கும்; அத்தன்மையையுநோக்கி நீரு நோற்பீராகவென்றானென்க.

நோக்கியென்றதனை யிரண்டற்குங்கூட்டுக. (௩அஅ)

காதலஞ்சேற்றுட்பாய்ந்தமதியெனுங்கலங்கனீரை
யூதுவன்மிரைத்ததாரானுவர்ப்பினினுரிஞ்சித்தேற்ற
மாதரார்நெஞ்சந்தேறிமாதவஞ்செய்துமென்றார்
காதலான்காதலென்னுநிகளத்தாநெடுங்கணாரே.

உவர்ப்பு-வெறுப்பு; அஃதாவது பொருள்கண்மேற்சென்ற பற்றுள்ளத்தை விடுதல். தாரானாகிய காதலான் தன்மனைவியாமேல்வைத்த காதலென்னும் பிணிப்பாலே தேற்றவென்க. ஈண்டுக் காதலென்றது பலபிறப்பிலும் நமக்கு மனைவியராய வந்தவர் இப்பிறப்பிற்செய்யுந்தவத்தாற் பிறப்பற்று வீடுபெறவேண்டுமென்று காதலித்த காதலை. அன்றிக் காதலனிடத்துவைத்தகாதலாற் றுறந்தாரென்றல் பொருந்தாமையுணர்க. காதலாகிய சேற்றுக்குள்ளே பாய்ந்துநின்ற நீர்.

இ - ள். காதலான் மாதராருடைய அறிவென்னுநீரைக் காதலாகிய பிணிப்பாலே யுரிஞ்சித்தேற்ற அவர் நெஞ்சுவெறுப்பினாற் றேறித் தவஞ்செய்துமென்றாரென்க. (௩அக

தூமஞ்சால்கோதையீரேதொல்வினைநீத்தநீந்தி
நாமஞ்சால்கதியினீங்கிநன்பொன்மேலுலகினுச்சி
யேமஞ்சாலின்பம்வேண்டினென்னொடும்வம்மினென்றான்
காமஞ்சாய்த்தடர்த்துவெம்மகாஞ்சனக்குஞ்சமன்னான்.

காமத்தைத் தள்ளிநெருக்கின ஏமம் - வீடு.

இ - ள். மேருவையொப்பான், கோதையீரே! நாற்கதியினின்றுநீங்கி யவ்வினைக்கடலைநீந்தித் துறக்கத்துக்குமேலான வீட்டின்பத்தைவிரும்புவீராயின், இன்னென்னுடனே துறத்தற்கு வருவீராக வென்றானென்க. (௩௯

நாடகநயந்துகாண்பார்நலங்கிளர்கண்ணஞ்சுன்று
மாடகக்கலத்துளான்பாலமிர்தினைநயந்துவ்பாரை
நீடகம்வெகுண்டுகையாற்பிடித்துநீறட்டியிட்டேந்
கோடகமணிந்தகோலமுடியினைத்துறத்துமென்றார்.

[தேவிமார்துறவு.]

நாடகமெனவே பாட்டுங்கூறிற்று; * "விளியாதரன் கூத்தாட்டுக் காண்டலும்" என்றலின். சூன்றும் - தோண்டியும். உண்பாளை நீறட்டியுமென்றது-உண்பாளை யுண்ணுமற்றடுத்துமென்றவாறு. நீடகம்வெகுண்டும்-புக்கவன்பிறைற் புணர்கின்றுளை நெடுங்காலம் நெஞ்சாலே வெகுண்டும். கையாற்பிடித்தும் - நறியநூற்றங்களை நுகர் கின்றுளை நுகராமற் கையாற்பிடித்தும். இட்டேமென்றது - யாங்கள்பிறந்ததோர் பிறப்பிலே பிறனை இங்ஙனம் ஐம்பொறியானுகராமற் றடுத்து யாமும் நுகர்ச்சியைக் கைவிட்டேமாதலின், இனி யெமக்கு நுகர்ச்சியின்றென்றவாறு. கோடகம் - தாமம், முகுடம், பதுமம், கோடகம், கிம்புரியென்னும் † ஐவகையிற் சிகரமாச்செய்த முடி.

இ - ள். அதுகேட்டதேவியர், முடியினுய்! எமக்கு இனி நுகர்ச்சியின்மை யின், யாமும் நின்னேடு துறத்தலைச்செய்வேமென்றுரென்க. (௩௧௧)

வேறு.

சாந்தங்கிழியமுயங்கிததடமலராற்
கூந்தல்வழிபட்டகோவேநீசெல்லுலகில்
வாய்ந்தடியோம்வந்துன்வழிபடுநாளின்றேபோற்
காய்ந்தருளல்கண்டாயெனத்தொழுதார்காரிகையார்.

முயக்கத்தால் வருத்தநிகழ்ந்ததாகக்கருதி மலராற் கூந்தலைவழிபட்டு வருத்தந் தீர்த்த கோவேயென்றது - எமக்கு வருத்தமில்லாததனை வருத்தமாகக்கொண்ட நீ ஈண்டு வருத்தமுள்ளதனைத் தீர்க்கின்றிலையென்றதாம். வாய்ந்து-வீடுபெறுதற்குரிய தவங்கள்எமக்குவாய்த்து

இ - ள். அத்தேவியர், கோவே! நீசெல்லும் வீட்டுலகின்கண்ணே யடியேமும் வாய்த்துவந்து நின்னை வழிபடுநாள் இன்றுபோலே முனிந்தருளாதொழிகவென்று தொழுதாரென்க. (௩௧௨)

துறவுவலியுறுத்தல்முற்றிற்று. கவி, ௩.

---

## தேவிமார்துறவு.

தெண்டிரைநீத்தநீந்திற்றிங்கதிர்சுமந்துதிங்கள்
விண்படர்ந்தனையமாலைவெண்குடைவேந்தர்வேந்தன்
கண்டிரண்முத்தமாலைக்கதிர்முலைநங்கைமாரை
வெண்டிரைவியக்குங்கேள்விவிசயைகண்ணபயம்வைத்தான்.

திங்கள் கடலைநீந்திக் கதிரைச்சுமந்து விண்ணிலேசென்றுற்போன்ற குடையை யுடையவேந்தன். கண்டிரண்டமுலை. கடல்போலு நூற்கேள்வி.

---

* திரிகடுகம், கக.

† சூடாமணிநிகண்டு: முடியுறுப் பைந்தாந் தாம முகுடமே பதுமத் தோடு நெடியகோ டகமே மற்று நேர்ந்தகிம் புரியென் றுமே.

இ - ள். வேந்தன், தேவியரை விசயையிடத்தே யச்சமின்றாக் வைத்தா னென்க. (௯௧௩)

கடிமலர்நிறைந்துபூத்தகற்பகக்கொம்புங்காமர்
வடிமலர்மலர்ந்தகாமவல்லியுந்தம்மைத்தாமே
யுடைமலர்கொய்துபோககவுகுத்திடுகின்றதொத்தார்
பங்கடமலர்நெடுங்கணல்லார்பாசிழைநீக்குகின்றார்.

சிறந்தமலர் தேனிறைந்தலர்ந்தகொம்பு. விருப்பம்வடிந்தமலர் மலர்ந்த வல்லி.

இ - ள். தேவியர் தம்மெய்யணிகளைத் தாமேநீக்குகின்றவர், கொம்பும் வல்லியுந் தம்முடைய மலர் தம்மிடத்துநின்றும் போம்படி கொய்து சிந்துகின்றதன்மையை யொத்தாரென்க. (௯௧௪)

தழுமலர்த்தாமநான்றுசந்தகின்மனைந்துவிம்முஞ்
செழுமணிநிலத்துச்செம்பொற்றிருமுத்தவிதானநீழ
லெழுமையும்பெறுகவென்னுமெழின்முலைநெற்றிசூழ்ந்தார்
கழுமியதுகிலிற்காமன்கண்புடைத்திரங்கமாதோ.

இ - ள். பருமையாலே தழுவப்படுந் தாமநான்று சந்தனமணந்து அகிற்புகை விம்முநிலத்திலே மேற்கட்டியினிழலிலே யவரையிருத்திக் காமனிரங்கத் துகிலான் முலைநெற்றியைச் சூழ்ந்தாரென்க.

கணவனை எழுமையும்பெறுகவென்னுமுலை. இழைதெரியாமல் மயங்கிய துகில். கழுமல் - மயக்கம். (௯௧௫)

நறும்புகைநானநாவிக்குழம்பொடுபளிதச்சுண்ண
மறிந்தவராய்ந்தமாலையணிந்தபைங்கூந்தலாய்பொ
னிறந்தருகொம்புநீலக்கதிர்க்கற்றையுமிழ்வவேபோற்
செறிந்திருந்துகுத்துச்செம்பொற்குணக்கொடியாயினாரே.

இ - ள். அங்கனஞ் சூழப்பட்டவவர்கள், கற்பகக்கொம்பு நீலக்கதிர்த்திரளைக் கழிப்பவைபோல நாவியினது நானக்குழம்போடே புகையையுங் கருப்பூரப்பொடியையும் மாலையையுமணிந்த கூந்தலை மனோவாக்குக்காயங்களால் அடங்கியிருந்து உகுத்து நற்குணத்தையுடைய செம்பொற்கொடியாயினாரென்க. (௯௧௬)

தேவிமார்துறவுமுற்றிற்று. கவி, ௪.

---

## பெரியயாத்திரை.

இலம்பெரிதெனவிரந்தவர்கட்கேந்திய
கலஞ்சொரிகாவலன்கடகக்கையிணை
புலம்புரிந்துயர்ந்தனவிரண்டுபொன்னிற
வலம்புரிமணிசொரிகின்றபோன்றவே.

[பெரியயாத்திரை.]

ஏந்தியகலம் - உயர்ந்தகலம். புலம்புரிந்து - அறிவுமிக்கு. நிறப்பொன் - மாற்றுற்றபொன்.

இ - ள். பெரிதாக வறுமியோமென்று இரந்தவர்கட்குக் காவலன் புலம்புரிந்து கலஞ்சொரியுங்கையிணைகள், உயர்ந்தனவாகிய இரண்டுசெங்கநிதி பொன்னையும் மணியையுஞ் சேரச்சொரிகின்றனவற்றை யொத்தனவென்க. (௬௧௭)

என்பரிந்தெரிதலைக்கொள்ளவீண்டிய
வன்பரிந்திடுகலாவுலகமார்கென
மின்சொரிவெண்கலம்வீசும்வண்கைகள்
பொன்சொரிதாமரைப்போதுபோன்றவே.

என்பரிந்து - எலும்புருகி; என்பு - விகாரம். அன்பரிந்து - அன்பற்று. எரியுந்தன்மையைக் கொள்ள ஈண்டிய மின்சொரிகலம்; நெருப்பின்றன்மையைக் கொள்ள வீண்டியமின்னுமாம். வெண்கலம் - முத்தாற்செய்தகலங்கள். வன்கையும் பாடம். இரப்போர்மேலன்பற்று அவர்க்கிடமாட்டாத்வுலகங்கள் - வேற்றரசராண்ட நாடுகளும், இழிகுலத்தோருறையும் வன்பாலாகிய நிலங்களும் முதலியனவாம்.

இ - ள். அரசன், இடுகலாவுலகங்கள் ஆர்வனவாகவென்று என்பரிந்து கலங்களைவீசுங்கைகள் பதுமநிதியை யொத்தனவென்க. (௬௧௮)

பூந்துகில்புனைகலமாலைபூசுசாந்
தாய்ந்துலகுணாவுவந்தருளிமாமணி
காந்தியகற்பகக்கானமாயினு
னேந்தியமணிமுடியிறைவனென்பவே.

மாலை - முத்தமாலை. கானமென்றார், * பத்துவகைக் கற்பகங்கள் கொடுப்பனவெல்லாங் கொடுத்தலின்.

இ - ள். இறைவன், துகின்முதலியனவற்றை யுலகநுகரும்படி ஆய்ந்து உவந்து கொடுத்துக் கற்பகக் கானமாயினனென்க. (௬௧௯)

வேறு.

தேய்பிறையுருவக்கேணித்தேறுநீர்மலர்ந்ததேனு
ராய்நிறக்குவளையஞ்சிக்குறுவிழிக்கொள்ளும்வாட்கண்

* பத்துவகைக்கற்பகங்களாவன: (க) மத்தியாங்கம், (உ) தூரியாங்கம், (௩) பூஷணங்கம், (௪) மாலியாங்கம், (௫) தீபாங்கம், (௬) கிருகாங்கம், (௭) சோதிரங்கம், (அ) போசனங்கம், (௯) பாசனங்கம், (௧0) வஸ்திராங்கம் என்பனவாம். இவை முறையே திவ்யசாரமாகிய நானுவித பானங்களையும், நானுவித வாத்தியங்களையும், அநேகவித ஆபரணங்களையும், அநேகவித மாலைகளையும், அநேகவித இரத்தின தீபங்களையும், பிராஸாதமண்டபாதிகளையும், சந்திராதித்த ரொளியினையடக்குமொளியினையும், நானுவித ரஸத்தனவாகிய நான்குவகை யுணவினையும், வேண்டிய கலங்களையும், விசித்திரவஸ்திரங்களையுங்கொடுக்கும். இது ஸ்ரீபுராணத்திற் கண்டது.

வேய்நிறையழித்தமென்றோள்விசயையைத்தொழுதுவாழ்த்திச்
சேய்நிறச்சிவிகைசேர்ந்தான்றேவர்கொண்டேகினாரோ.

தேய்பிறையெனவே நுதலாயிற்று. குறுவிழிக்கொள்ளும் - மீண்டுகுவியும். வேய்போலுமென்றோள்.

இ - ள். அங்ஙனங் கொடுத்தபின்னர்ச் சேயையொத்தவன், நுதலையுங் கண்ணையுந் தோளையும் நிறையாலழித்த விசயையைத்தொழுது வாழ்த்திச் சிவிகையிலே யேறினான்; அப்பொழுது தேவர் கொண்டுபோயினாரென்க.

சச்சந்தன்பட்டபின், தன்னுறுப்புக்கள் பொலிந்திருக்கலாகாதென்று உட்கொண்டு அவற்றின்பொலிவினைக் கடிந்தமைதோன்ற, நிறையாலழித்தவென்றார். ()

பெரியயாத்திரைமுற்றிற்று. கவி, ச.

---

## சமவசரணவருணனை.

நரம்பெழுந்திரங்கினவீணைநன்குழல்
பரந்துபண்ணுயிர்த்தனபையமெல்லவே
விருந்துபட்டியம்பினமுழவம்வீங்கொலி
சுரந்தனசுடர்மணிப்பாண்டிலென்பவே.

இ - ள். அவனை யவர்கொண்டுபோகின்றபொழுது வீணையினரம்பு மிக்கிரங்கின; குழல் உயிர்த்தன; முழவம் புதுமையுண்டாய் இயம்பின; கஞ்சதாளம் மிக்க வோசையைக் கொடுத்தனவென்க. (ஊ0க)

மங்குலாயகிற்புகைமணந்துகற்பகப்
பொங்குபூமாலைகள்பொலிந்துபூஞ்சுணந்
தங்கியித்தரணியும்விசும்புந்தாமரோ
செங்கதிர்த்திருமணிச்செப்புப்போன்றவே.

இ - ள். அவன்போகின்றபொழுது அகிற்புகைமணந்து இருளாய் மாலைகள் பொலியப்பட்டுச் சுண்ணந்தங்கப்பட்டுத் தரணியும், விசும்பும் மணியிருக்கின்ற செப்பையொத்தனவென்க.

மணி - *சமவசரணம். (ஊ0உ)

---

* சமவசரணம் - பூமிக்கு ஐயாயிரம் வில்லுயரத்திற்குமேலே பன்னிரண்டு யோசனை யளவுள்ளதாய்ச் சௌதருமேந்திராதி தேவர்களால் நிருமிக்கப்பட்ட சினாலயம். இதற்குப் பூமியிலிருந்து இருபதினாயிரம்படிகளுள்ளனவென்பர். இவ்வாலயத்தின் இயல்பை, ஸ்ரீபுராணத்தும், மேருமந்தரபுராணத்தும் நிரம்பவிரித்துக் கூறினர். (கட்டளைக்கலித்துறை.) "என்னெஞ்ச மேயிட மேயுடைத் தேயிந்திராதிவிண்ணோர் - முன்னஞ்செய் பன்னிரண் டோசனைத் தாய்முழு மாமணித்தாண் - மன்னிஞ்சி மூன்றொடு மானுங் கணமுத லேழ்நிலத்துப் - பொன்னின் சினாலய மாயிற்றன் றோவெங்கள் புங்கவற்கே" என்றார் திருநூற்றந்தாதியிலும்.

[சமவசரணவருணனை.]

வேறு.

திலகமுக்குடைச்செல்வன்றிருநகர்
பலருமேத்தினர்பாடினராடினர்
குலவுபல்லியங்கூடிக்குழுமிநின்
றுலகவெள்ளமொலிப்பதுபோன்றவே.

இ - ள். அங்ஙனம்போகின்றபொழுது, செல்வன்றிருநகர் தோன்றியதனைக் கண்டு தேவருமக்களுமேத்தினர்; பாடினர்; ஆடினர்; பின்னர் அவருடைய வாச்சியங்கள் கூடிநின்று ஒலித்துக் கடல் குழுமிநின்று ஒலிக்கின்றதன்மையையொத்தன வென்க. (௩0௩)

காவிளைத்தனகாவொடும்பொய்கை
தேனிளைத்தனசெம்பொனெடுமதின்
மேனிளைத்தனவென்கொடியக்கொடி
வானுரிப்பனபோன்றுமணந்தவே.

இ - ள். அங்ஙனம் போகின்றபொழுது, மணநிளைத்தனவாகிய சோலைகளுடனே தேனினங்கள் இளைத்தனவாகிய பொய்கைகளுஞ் சூழ்ந்த மதிலின்மேலே அப்பொழுது கொடிகணிளைத்தன; அக்கொடிகள் காற்றாற் றேவருலகைத் தீண்டினவை அதனையுரிக்குமாறுபோன்று நெருங்கினவென்க. (௩0௪)

கோலமுற்றியகோடியர் * தூபையுஞ்
சூலநெற்றியகோபுரத்தோற்றமு
ஞாலமுற்றியபொன்வரைநன்றரோ
காலமுற்றுடன்கண்ணுற்றபோன்றவே.

கோலம் - அழகு. ஞாலந்தான்சூழ்ந்த.

இ - ள். தூபையின்றோற்றமுங் கோபுரங்களின்றோற்றமுமிருந்தபடி, மேருக்கள் தம்மிற் கூடுவதொருகாலம் மிகவுமுண்டாய்ச் சேர்க்கூடியவற்றை யொத்தனவென்க.

பலவண்டங்களுளவாதலிற் பலமேருவுளவாம். (௩0௫)

வாயிற்றோரணங்கற்பகமாலைதாழ்ந்
தேயிற்றிந்திரன்பொன்னகரின்புறம்
போயிற்றேயகிலின்புகைபோர்த்துராய்
ஞாயிற்றொள்ளொளிகையடைந்ததே.

---

* சமவசரணத்துள்ள பதினொருபூமியுள் நவஸ்தூபாபூமியென்று ஒருபூமியுளதாதலின், ஈண்டுத்தூபை கூறினர். பதினொருபூமிகளாவன: (க) சைத்தியப்பிராசாதபூமி, (உ) காதிகாபூமி, (௩) வல்லிபூமி, (௪) உத்தியானபூமி, (௫) துவசபூமி, (௬) கற்பகவிருட்சபூமி, (எ) நவஸ்தூபாபூமி, (அ) துவாதசகோஷ்டபூமி, (௯) பிரதமபீடம், (௧0) துவிதீயபீடம், (௧௧) திருதீயபீடம் என்பனவாம்.

இ - ள். வாயிலினட்டதோரணம், கற்பகமாலைதாழ்ந்து அகிலின்புகை பொருந்திற்று; அப்புகைபொருந்திப் பின்னருராய்ப் போர்த்து இந்திரநகரின் புறம்போயிற்று; போயபின்னர் ஞாயிற்றினொளிமழுங்க அது நடந்ததென்க. (௬0௬)

செய்யதாமரைப்பூவினுட்டேங்கமழ்
பொய்யில்சீர்த்திவெண்டாமரைபூத்தபோன்
மையஞ்செய்தடிபானிறப்புள்ளின
மையிருமாமத்தருஞ்சேர்ந்தவே.

இ - ள். அரசன்சென்ற ஆரவாரத்தாலே மதிலைச்சூழ்ந்த காக்களிலிருந்த வெள்ளையன்னங்கள் செந்தாமரையினுள்ளே வெண்டாமரை பூத்த தன்மையை யொத்து ஐயநிகழ்த்திப் பொய்கைகளிற் செந்தாமரைத்தலையிலே சேர்ந்தனவென்க.()

மல்லன்மாக்கடலன்னகிடங்கணிந்
தொல்லென்சும்மையபுள்ளொலித்தோங்கிய
செல்வநீர்த்திருக்கோயிலிம்மண்மிசை
யில்லையேற்றுறக்கம்மினிதென்பவே.

இ - ள். கிடங்குசூழ்ந்து சும்மையவாகிய புள்ளொலிக்கப்பட்டு ஓங்கியகோயில் இவ்வுலகிலில்லையாயிற் றுறக்கநன்று; இஃது உளதாதலாற் றுறக்கந் தீதாயிற்றென்க.()

வே று.

விளங்கொளிவிசும்பறுத்திழிந்துமின்னுதார்த்
துளங்கொளிமணிவண்ணன்றொழுதுதுன்னினன்
வளங்கெழுமணிவரைநெற்றிப்பாற்கட
லிளங்கதிர்ப்பரிதியொத்திறைவன்றோன்றினன்.

இ - ள். அங்ஙனம் தேவர் கொண்டுபோந்தபடியினாலே, சீவகன், விசும்பை யூடறுத்து இழிந்து கோயிலைநோக்கித் தொழுது சேர்ந்தான்; அப்பொழுது மணிவரைத்தலையினின்றும் பரிதியையொத்த இறைவன் தோன்றினனென்க.

மணி - ஈண்டுமாணிக்கம். பாற்கடலிற் பரிதியென்றார், ஒளிமிக்கிருந்ததற்கு. இறைவன் - * ஸ்ரீவர்த்தமானசுவாமிகள். (௬0௭)

வினையுதிர்த்தவர்வடிவின்னதென்னவே
வனைகதிர்த்தடக்கைவைத்திருந்தவாமனர்
கனைகதிர்த்திருமுகமருக்கனாகவாய்
புனைமலர்த்தாமரைபூத்ததொத்தவே.

இ - ள். அங்ஙனந்தோன்றி இருவினையைக்கெடுத்தவர்வடிவு இத்தன்மைத்தாயிருக்குமென்று அவ்வடிவுதான் கூறும்படியாகவே கையைவைத்திருந்த வாமனர

* ஸ்ரீவர்த்தமான சுவாமிகள் - இருபத்துநான்காந் தீர்த்தங்கரர்.

[சமவசரணவருணனை.]

ருடையமுகம் அருக்கனாகத் தேவர்கள்முகங்கள், அலர்ந்தவைதாம் தாமரைபூத்த தன்மையை யொத்தனவென்க. (௬௪௦)

இரிந்தனவிருவினையிலிர்த்தமெய்ம்மயிர்
சொரிந்தனகண்பனிதுதித்துக்காதலா
லரிந்ததுமணிமிடறலர்பெய்ம்மாரிதூஉய்த்
திரிந்தனன்வலமுறைதிலகமன்னனே.

இ - ள். அப்பொழுது மன்னனுக்கு இறைவன்மேற்சென்ற காதலாலே யிருவினை கெட்டன; மெய்ம்மயிர்கள் சிலிர்த்தன; கண்கள் உவகைநீரைச்சொரிந்தன; துதித்து மிடறு அரிந்தது; அவ்வளவிலே அவன் வலமுறையாகத் திரிந்தானென்க.()

முத்தொளிர்தாமமுமுருவமாமணித்
தொத்தொளிர்தாமமுஞ்சொரிபொற்றாமமுந்
தத்துநீர்த்தண்கடற்பவளத்தாமமும்
வைத்தபூந்தாமமுமலிந்துதாழ்ந்தவே.

இ - ள். அவன் அங்ஙனம் வலம்வருகின்றகாலத்தே, ஒளிரும் முத்துத்தாமமும், ஒளிரும மாணிக்கத்தாமமும், ஒளியைச்சொரியும் பொற்றாமமும், பவளத்தாமமும், கொத்துத் தன்னிடத்தேவைத்த பூவாற்செய்த தாமமும் மிக்கு அவ்விடத்தே தங்கினவென்க. (௬௪௨)

மணிவரையெறிதிரைமணந்துசூழ்ந்தபோ
லணிமயிர்க்கவரிகளமரரேந்தினார்
துணிமணிமுக்குடைசொரிந்ததீங்கதிர்
பணிமணிக்காரிருள்பருகுகின்றதே.

இ - ள். அப்பொழுது மாணிக்கமலையைத் திரைகள்சூழ்ந்தாற்போலே அமரர் கவரியையேந்தி யிறைவனைச்சூழ்ந்துநின்றுவீசினார்; ஆண்டு முக்குடைசொரிந்தகதிர் *நீலமணிகளி னிருளைப் பருகாநின்றதென்க.

பணித்தல் - ஏனையொளிகளைத் தாழ்த்தல். (௬௪௩)

முழாத்திரள்மொய்ம்மலர்த்தாமந்தாழ்ந்துமேல்
வழாத்திருமலரெலாமலர்ந்துவண்டினங்
குழாத்தொடுமிறைகொளக்குனிந்துகூங்குயில்
விழாக்கொளவிரிந்ததுவீரன்பிண்டியே.

வீரன் - ஸ்ரீவர்த்தமானசுவாமிகள்.

இ - ள். அப்பொழுது வீரன்பிண்டி, முழாப்போலத் திரண்டதாமம் நான்று

---

* சமவசரணத்தை இந்திரநீலமணிமயத்ததென்று நூல்கள்கூறுதலின், ஈண்டு நீலமணிகள் கூறப்பட்டன.

மேலால் வாடாத்திருமலர்பூத்து வண்டினங் குழாத்தோடு தங்குதல்கொள்கையிற்றலே பாரமிக்கு வளைந்து *குயில்கள்கூவும்படியாகப் பரந்ததென்க. (சுகச)

பிண்டியின்கொழுநிழற்பிறவிநோய்கெட
விண்டலர்கணைகதிர்வீரன்றோன்றினு
னுண்டிவணறவமிர்துண்மினோவெனக்
கொண்டனகோடணைகொற்றமுற்றமே.

இ - ள். அப்பொழுது பிறவியாகிய நோய்கெடும்படி நிழலிலே யிறைவன் றோன்றினான்; இனி, இவ்விடத்தே யறமாகிய அமிர்தமுண்டு; அதனை யுண்பீராக வென்று கோயிலிற் றிருமுற்றம் ஆரவாரத்தைக் கொண்டனவென்க.

கோடணை - † திவ்யத்தொனி. (சுகரு)

வானவர்மலர்மழைசொரியமன்னிய
வூனிவர்பிறவியையொழிக்குமுத்தமன்
றேனிமிர்தாமரைதிளைக்குஞ்சேவடி
கோனமர்ந்தேத்தியகுறுகினனரோ.

இ - ள். தேவர் பூமழைசொரியாநிற்க அரசன் பிறவியைக்கெடுக்கும் உத்தமனுடைய அடியை யேத்துதற்கு அணுகினனென்க.

ஊனிவர்பிறவி - உடம்புகளிலே பரக்கின்றபிறப்பு. இமிருந்தேனினந் தாமரையென்று திளைக்குஞ் சேவடி. (சுகசு)

குருகுலஞ்சீவககுமரன்கோத்திர
மருகவில்காசிபமடிகள்வாழியென்
றெரிமணிமுடிநிலமுறுத்தியேத்தினான்
புரிமணிவீணைகள்புலம்பவென்பவே.

திறக்கும்பொழுது குடியுங்குலமுங் கேட்டே திறப்பித்தலியல்பு.

இ - ள். அவனணுகினவளவிலே, அடிகளே! இவன்குலம் குருகுலம்; இவன் பெயர் சீவகன்; இவன் கோத்திரங் காசிபகோத்திரமென்று சொல்லுவார்களென்று உழையர்கூற, அவ்வரசனும் வணங்கி யாழ்வருந்தத் துதித்தானென்க.

வாழி - அசை. என்று - என்ன. (சுகஎ)

---

* "கோகிலங்கள் - கூக்கொண்டு சேருங் குளிர்பிண்டி யானை" என்றார் திருநூற்றந்தாதியிலும்.

† திவ்யத்தொனி - அருகனுக்குத் தேவர்கள் செய்யும் எண்வகைச் சிறப்பினுளொன்று. எண்வகைச்சிறப்பாவன: (திருநூற்றந்தாதி.) சுடர்மண் டலஞ்சுர துந்துபி தெய்வத், துவனிசிங்கப் - பிடர்மண் டலவணை பிண்டிவெண் சாமரை பெய்ம் மலரி-னடர்மண் டலமழை யம்பொற் குடைமும்மை யாமடியோ - மிடர்மண் டலங் கெடப் பாற்கிமை யோர்செயு மெண்சிறப்பே.

[சீவகன்றுறவு.]

மன்னவன்றுறவெனத்துறத்தன்மாண்பெனப்
பொன்வரைவாய்திறந்தாங்குப்புங்கவ
னின்னுரையெயிறுவில்லுமிழவீழ்ந்தது
மின்னியோர்வியன்மழைமுழங்கிற்றொத்ததே.

இ - ள். அங்ஙனந்துதித்தவரசன் யான்றுறப்பேனென்றுகூற, அதுகேட்டபுங்கவன், பொன்வரை வாய்திறந்தாற்போல வாய்திறந்து நின்மனந் துறவில்வீழ்ந்தது; இனி நீ துறத்தலே மாட்சிமையென்று எயிறு வில்லுமிழக்கூறிய இன்னுரை மழை மின்னி முழங்கியதன்மையை யொத்ததென்க.

எயிறுவில்லுமிழ்ந்தது மின்னுக்குவமை. (சுகஅ)

சமவசரணவருணனைமுற்றிற்று. கவி, கஅ.

---

# சீவகன்றுறவு.

காய்களிற்றினிடைமருப்பிற்கவளம்போன்றேமாராக்கதியுட்டோன்றி
யாய்களியவெவ்வினையினல்லாப்புற்றஞ்சினேனறிந்தார்கோவே
வேய்களியவண்டறையவிரிந்தலர்ந்ததாமரையின்விரைசேர்போதின்
வாயொளியேபெறநடந்தமலரடியைவலங்கொண்டார்வருந்தார்போலும்.

இ - ள். அறிந்தாருடைய கோவே! களிற்றின்மருப்பிடையிலேவைத்த கவளம் அதுநுகர்ந்து கெடுமாறுபோன்று கூற்றுவன்கைப்பட்டு அவனுகர்ந்து கெடுகின்ற கதிகளிலேபிறந்து ஆராய்ந்த களிப்பினையுடைய தீவினையாலே வருத்தமுற்று இப்பிறவியையஞ்சினேன்; இப்பிறவியால்வருந்தாதவர் தாமரையினது போதிடத்தே அதுதான் ஒளிபெறநடந்த நின்றிருவடிகளை வலம்வந்தார்போலேயிருந்ததென்றானென்க.

களிப்பினையுடையவாகிய வண்டறையும்படி விரிந்தலர்ந்த தாமரையென்றது-முதற்பொருட்கேற்ற அடையடுத்துநின்றது. போலுமென்றது * "ஒப்பில் போலியுமப்பொருட் டாகும்" என்றதனாற் பொருடந்தேநின்றது. (சுகக)

# வேறு.

சேடார்செம்பொற்றிருமணிவைரத்தொத்தணிந்துலகோம்பும்
வாடாமாலைவார்தளிர்ப்பிண்டிவாமநின்குணநாளும்
பாடாதாரைப்பாடாதுலகம்பண்ணவர்நின்னடிப்பூச்
சூடாதார்தாள்சூடார்மாலைச்சுடர்மணிநெடுமுடியே.

இ - ள். பெருமைநிறைந்த பொன்னோடே மணியையும் வைரக்கொத்தையுமணிந்து உலகைக்காக்கும் பிண்டியின்கீழிருந்த வாமனே! நின்குணத்தை நாளும்

---

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், இடையியல், கூC.

பாடார்தாளை யிறைவனென்று உலகம்பாடாது; நின்னடிப்பூச் சூடாதாரடிகளைத் தேவர் தம்முடிகளிற் சூடார்; ஆதலான், யான் நின்னைப்பாடி நின்னடியைச் சூடுவே னென்றானென்க.

வாடாதமாலையிணையுந் தளிரிணையுமுடைய பிண்டி. (௬௨௦)

வேறு.

வையமூன்றுமுடனேத்தவளருந்திங்கள்வாலெயிற்
றையவரிமானணையின்மேலமர்ந்தோய்நின்னையமராதார்
வெய்யவெந்நோய்வினையுகைப்பவீழ்ந்துதுன்பக்கடலழுந்தி
நெய்கைநுண்ணூனுழிகையினிரம்பாநின்றுசுழல்வரே.

ஐய - உரிச்சொல்; ஈறுதிரிந்தது.

இ - ள். உலகமூன்றும் ஒருகாலத்தேயேத்தப் பிறைபோலுமெயிற்றையுடைய சிங்கஞ்சுமந்த அணைமேலமர்ந்தவனே! நின்னை நெஞ்சாற்பொருந்தாதார், வெய்ய வினைதள்ளத் துன்பக்கடலிலேவீழ்ந்து அழுந்தி வெந்நோய்நிரம்பாநின்று நெய்தற் றொழிலையுடைய தார்கிடச்குநாடார்ப்போல மறுகுவரென்றானென்க. (௬௨௧)

தொழுதிப்பன்மீன்சூழாஞ்சூழத்தளும்பாதிருந்ததிங்கள்போன்
முழுதும்வையமுடனேத்தமுதுவாய்வலவையாயிருந்
தழுதுவினைகளல்லாப்பவறைந்தோய்நின்சொலறைந்தார்கள்
பழுதினறுநெய்க்கடற்சுடர்போற்பல்லாண்டெல்லாம்பரியாரே.

இ - ள். தொகுதலையுடைய பன்மீன்றிரள்சூழ அசையாதிருந்த திங்கள்போலே வையமுழுதும் ஒருகாலத்தேயேத்த முதியவுண்மையால் வெற்றியையுடையை யாயிருந்து இருவினைகளழுதுவருந்த அறத்தைச்சாற்றினவனே! நின்னறத்தைச்சாற் றினவர்கள் நெய்க்கடலிலிட்ட விளக்குப்போலே பலகாலங்களெல்லாங் கெடா ரென்றானென்க. (௬௨௨)

செழும்பொன்வேய்ந்துமணியழுத்தித்திருவார்வைரநிரைத்ததனுட்
கொழுந்துமலருங்கொளக்குயிற்றிக்குலாயசிங்காதனத்தின்மே
லெழுந்தபரிதியிருந்தாற்போலிருந்தவெந்தைபெருமானே
யழுந்தேன்வந்துன்னடியடைந்தேனருவாய்ப்போதலழகிதோ.

இ - ள். வேய்ந்து அழுத்தி நிரைத்து அதனுள்ளே கொழுந்தும் மலரும் வடிவுகொள்ளும்படி வல்லியைஎழுதிப் பண்ணின சிங்காசனத்திலே யிளஞாயி றிருந்தாற்போலவிருந்த எந்தையாகியபெருமானே! பிறவிக்கடலில் அழுந்தேனாய் வந்து நின்னடியைச்சேர்ந்தேன்; பிறப்பற்றுப்போதல் நினக்கு நன்றென்றா னென்க.

ஓகாரம் - சிறப்பு; ஈற்றசையுமாம். (௬௨௩)

வேறு.

குண்டலமும்பொற்றோடும்பைந்தாருங்குளிர்முத்தும்
வண்டலம்புமாலையுமணித்தொத்துநிலர்திவள

[சீவகன்றுறவு.]

விண்டலர்பூந்தாமரையின்விரைததும்பமேனடந்த
வண்டலர்பூந்திருவடியைமணிமுடியின்வணங்கினான்.

தார்-மார்பின்மாலை. வண்டுளருமாலை - முடியின்மாலை. அதின் மணிக்கொத்து.

இ - ள். அவன் அங்ஙனங்கூறிக் குண்டலமுதலியன நிலத்திலேகிடந்தசையத் திருவடியை முடியால்வணங்கினனென்க.

விரைததும்ப விரிந்தலர்ந்த தாமரையின்மேனடந்தவடி; பூக்களையுடையவடி.()

நிலவிலகியுயிரோம்பிநிமிர்ந்தொளிர்ந்துபசிபகைநோ
யுலகமிருள்கெடவிழிக்குமொண்மலரியறவாழி
யலகையிலாக்குணக்கடலையகன்ஞானவரம்பனை
விலையிலாமணிமுடியான்விலவியப்பவிறைஞ்சினான்.

இ - ள். மணிமுடியான், ஒளியால் நிலவைவிளக்கிப்பல்லுயிரையும்பாதுகாத்து மேனோக்கி விளங்கி யுலகம் பசியும் பகையும் நோயும் இருளுநீங்க விழிக்கும்அறவாழி யையுடைய எண்ணிறந்தகுணக்கடலை, ஞானத்துக்கு வரம்பாந் தன்மையையுடைய வனை யிறைஞ்சினனென்க. (௬௨௫)

தூத்திரண்மணித்தாமஞ்சொரிந்துபொன்னிலநக்கப்
பூத்திரண்மணிமாலைப்போர்ச்சிங்கம்போதகம்போ
லேத்தரியகுணக்கடலையிகலின்பவரம்பனைத் [தான்.
தோத்திரத்தாற்றுதித்திறைஞ்சித்துறப்பேனென்றெழுந்திருந்

தூய்தாத்திரண்ட முத்துத்தாமம். பூ - பொலிவு. இகலின்பம் - உலகிலுள்ள இன்பங்களுக்கு மாறாகியவின்பம். அஃதாவது வீட்டின்பம்.

இ - ள். மாலையையுடையசிங்கம், குணக்கடலாயவனை வீட்டின்பத்துக்கு வரம்பாயவனைத் தோத்திரங்களைச்சொல்லி வாழ்த்தித் தாமநிலநக்கப் போதகமி றைஞ்சுமாறுபோலவிறைஞ்சி இனி யான்றுறப்பேனென்றுகூறி அவ்விடத்துநின் றும் போந்தானென்க.

சுதன்மரென்னும் * கணதரரிருக்குமிடத்தே போந்தான். (௬௨௬)

வேறு.

முடியணியமரருமுலைநல்லார்களும்
புடைபணிந்திருந்தவப்புலவன்பொன்னகர்
கடிமலர்க்கற்பகங்காமவல்லியோ
டிடைவிராயெங்கணும்பூத்ததொத்ததே..

சுண்ணமணிந்த முலைநல்லவர்களாயிருக்கின்றவர்களும்.

---

* கணதரர்பதினொருவர்: கௌதமர், வாயுபூதி, அக்கினிபூதி, சுதன்மர், மௌரியர், மந்தரர், புத்திரர், மைத்திரேயர், அகம்பனர், அசேலகர், பிரபாஸர்.

இ - ள். அப்பொழுது தேவரும், அவர்தேவிமாரும் வணங்கியிருந்த அறிவுடை யோன்கோயில், கற்பகமுங் காமவல்லியுங் கலந்திருந்ததன்மையையொத்ததென்க. ()

ஒத்தொளிபெருகியவுருவப்பொன்னகர்
வித்தகன்வலஞ்செய்துவிழுப்பொற்பூமிபோய்
மத்தகமயிரெனவளர்த்தகைவினைச்
சித்திரக்காவகஞ்செல்வனெய்தினான்.

இ - ள். வித்தகனது ஒளிகளெல்லாம் ஒத்து மிக்க கோயிலைச் செல்வன் வலம் வந்து பொற்பூமியைக்கடந்துபோய்க் காவிடத்தைச் சேர்ந்தானென்க.

தலைமயிர்போலப் பேணிவளர்த்தகா. (சஉஅ)

ஏமநீருலகமோரிம்மிப்பாலென
நாமவேனரபதிநீக்கிநன்கலந்
தாமமார்மாலையுந்துறக்கின்றானரோ
காமனார்கலங்கழிக்கின்றதொத்ததே.

இ - ள். நரபதி, உலகத்தையுந் தவத்தையுந் தூக்கிப்பார்த்து உலகம் ஓரிம்மி யென்னுநிறையளவென்று அதனைநீக்கித் துறக்கின்றவன் அக்காலத்துக் கலத்தையும் மாலையையுங்கழிக்கின்றதன்மை, காமனார் அணிகலங்களைக் கழிக்கின்றதன்மையை யொத்ததென்க. (சஉகூ)

மணியுறைகழிப்பதுபோலமங்கலப்
பணிவரும்பைந்துகினீக்கிப்பாற்கட
லணிபெறவரும்பியவருக்கனுமெனத்
திணிநிலத்தியன்றதோர்திலகமாயினான்.

பணிவரும் - குறைகூறுதற்கரிய.

இ - ள். அரசன் மணியைமறைத்த உறையைக்கழிக்கின்ற தன்மைபோலத் தன்மேனியைமறைத்த துகிலைநீக்கி ஆண்டுப்பிறந்த மிக்கவொளியாலே பாற்கடலி லேயரும்பியவருக்கன் நிலத்திலே இயன்றதாமென்றுகூறும்படி யொருதிலகமாயினா னென்க. (சகூo)

மலிந்தநன்மாலைகள்வண்ணப்பூந்துகி
லலிந்துமின்னருமணிநன்பொற்பேரிழை
மெலிந்தனேன்சுமந்தெனநீக்கிமேனியைப்
பொலிந்ததோர்கற்பகம்போலத்தோன்றினான்.

இ - ள். அரசன் தன்மேற் கிடந்தனவற்றை நீக்கியிருந்தவன், யான் மாலையும், துகிலும், மணியும், இழையுஞ்சுமந்து மெலிந்தேனென்றுஅவற்றைநீக்கி மேனிற்ற லாற்பொலிந்ததொரு கற்பகமுண்டேல்அதுபோலத் தோன்றினானென்க.

மின்னைநலிந்து நருமணியென்க. (சகூக)

திருந்தியசீழ்த்திசைநோக்கிச்செவ்வனே
யிருந்ததோரிடிக்குரற்சிங்கம்பொங்கிமேற்

[சீவகன்றுறவு.]

சுரிந்ததன்னுளை மயிர்துறப்பதொத்தன
னெரிந்தெழுமிளஞ்சுடரிலங்குமார்பினன்.

உளை - கழுத்தின்மயிர்.

இ - ள். ஒளிமிக்குத்தோன்றுதற்குக் காரணமான இளஞ்சுடர்போல் இலங்கு மார்பினன், மயிர்களைதற்கிருந்தபொழுது, திருந்தின கீழ்த்திசையினைநோக்கி நேரே யிருந்ததோர் சிங்கம் தன்னுளையின் மயிரினைத் துறக்குந்தன்மையை யொத்தா னென்க.

மேல் - முன்பு. முன்புபொங்கி யிடிக்குங்குரலையுடைய சிங்கமென்க. (சுகஉ)

அஞ்சுடர்த்தாமரைக்கையினான்மணிக
குஞ்சிவெண்படலிகைக்குமரனீப்பது
செஞ்சுடர்க்கருங்கதிர்க்கற்றைதேறுநீர்
மஞ்சுடைமதியினுட்சொரிவதொத்ததே.

இ - ள். குமரன் தாமரைபோலுங்கையினாலே நீலமணிபோலுங் குஞ்சியை வாங்கி வெள்ளித்தட்டிலேயிடுகின்றதன்மை, செஞ்ஞாயிற்றிடத்துண்டாகிய கருங் கதிர்க்கற்றையை யஞ்ஞாயிறுதான்வாங்கித் தெளிந்தநீர்மையையுடைய மதியிடத் தே யிடுகின்ற தன்மைபோன்றதென்க. (சுகங)

வேலைவாய்மணியிலையுழ்த்துவீழ்ப்பதோர்
காலைவாய்க்கற்பகமரத்திற்காவலன்
மாலைவாயகிறவழ்குஞ்சிமாற்றலிற்
சோலைவாய்ச்சுரும்பினந்தொழுதுசொன்னவே.

வேலைவாய் - துறத்தற்குரிய நல்லபொழுதின்கண்ணே.

இ - ள். தன்னுடைய நீலமணிபோலுமிலைகளை முறைமைப்பட்டு உதிர்ப்ப தொரு காலத்திடத்துக் கற்பகமரம்போலே யரசன் மாலையில் அகிற்புகைதவழுங் குஞ்சியை வேலைவாய்க் களைதலாலே சுரும்பினந் தொழுது சிலமொழி கூறின வென்க. (சுகச)

க. தங்கிடையிலாத்திருக்கேசந்தன்னையுங்
கொங்குடைக்கோதையுங்கொய்துநீக்கினாய்
நுங்கடைநோக்கிநாம்வாழும்வாழ்க்கைய
மெங்கிடையவரினியெங்குச்செல்பவே. (சுகரு)

உ. என்றனதேனினமிரங்குவண்டொடு
சென்றனவிடுக்கியசெல்வன்பொன்மயி
ரின்றொடுதொழுதனநும்மையாமென
மன்றலுண்டவைவலங்கொண்டுசென்றவே.

இவையிரண்டுமொருதொடர்.

இ - ள். அச்சுரும்பினம், யாங்கள் நம்முடையவிடத்தை நோக்கிவாழும் உயிர் வாழ்வினை யுடையேம்; இங்ஙனமாகவும் தமக்கு ஒப்பில்லாத மயிரினையும் மாலையினை யம் வாங்கிப்போக்கினாய்; இனி யெம்மையொப்பார் எங்கேபோவரென்றன; அவ் வளவிலே வண்டோடே தேனினங்கள், செல்வனுடைய பெறுதற்கரிய மயிரினை வழி விடுதற்குச்சென்றவை, மன்றலையுண்டு இன்றோடே யுறவுகைவிட்ட நம்மைத் தொழுதேம்; இது முற்பிறப்பில் யாங்கள்செய்த தீவினையாமென்றுகூற, இவனை அவை வலங்கொண்டு சென்றனவென்க.

அவையென்றது மிஞிறுகளை. நீக்கினை, நம்மென்பன ஒருமைப்பன்மைமயக் கம். (சுகூ)

மேற்படுகற்பகமாலைவேய்ந்துபொ
னேற்புடைப்படலிகையெடுத்துக்கொண்டுபோய்
நாற்கடல்கடந்தவனமோவென்றிட்டிடப்
பாற்கடற்பனிமதிபோலவீழ்ந்ததே.

இ - ள். அப்பொழுது மேலிடத்துண்டாகிய கற்பகமாலையாலே சூழ்ந்து பட லிகையோடே யெடுத்துக்கொண்டுபோய் நாலுகடலைக்கடந்து * பாற்கடலிலே நமோ வென்று சுதஞ்சணன்போகட, அக்கடலிலே அப்படலிகை மதிபோலவீழ்ந்ததென்க.

பொன் - ஈண்டு வெள்ளி. (சுகூஎ)

வேறு.

க. ஏவாவிருந்தவடிகளிவாவாய்ச்சொற்
கோவாமணிகொழித்துக்கொண்டாலேபோலுமாற்
சாவாகிடந்தார்செவிச்சார்த்தினப்பொழுதே
மூவாவமரராய்முத்தணிந்துதோன்றுவரே. (சுகூஅ)

உ. தோளாமணிகுவித்தாற்போன்றிலங்குதொல்குலத்துச்
சூளாமணியாய்ச்சுடரவிருந்தானை
வாளார்முடிவைரவிற்றிளைத்துவண்டாற்றுந
தாளாரவேத்திப்போய்த்தன்கோயில்புகாதானே.

இவையிரண்டுமொருதொடர்.

ஏவா-சொல்லி. சாவாகிடந்தார்-உண்ணுகிடந்தான்போல நிகழ்வுணர்த்திற்று.

இ - ள். துறந்தமகிழ்ச்சியால் இறைவனைத்துதித்திருந்த அடிகளுடைய பரந் தவாய்ச்சொற்கள் துளையிடாத மாணிக்கத்தைக் குற்றநீக்கிக்கொண்டாலொக்கும்; இவற்றைப் பயனின்றிச் சாவாநின்றவர்கள் மனங்கொண்டு கேட்பராயின், அப்பொ ழுதே தேவராய்த்தோன்றுவரென்று சுதஞ்சணன் தன்னருகுநின்றார்க்குக்கூறித் துளையிடாதமணியைக் குவித்தாற்போன்றுவிளங்குந் தன்குலத்திலுள்ளார்க்கு ஒரு

* "உவரி தண்ணீர் தேன்சுரா - திவரும் பானெ யிக்குவின் - சுவைய நீரின் வாரிக - ளவையு மேழ வாகுமே." என மேருமந்தரபுராணத்திலும் பாற்கடலை ஐந்தாவதாகக்கூறினர்.

[சீவகன்றுறவு.]

நாயகமணியாய் விளங்கவிருந்தவனைப் பூவென்றுவண்டரற்றுந் தாளை நிறையவாழ்த்தித் தன்கோயிலிலே புக்கானென்க.

வைரத்தின் ஒளி திளைத்தென்னுஞ் செய்தெனெச்சம், அரற்றுமென்னும் பிறவினைகொண்டது; * "அம்முக கிளவியும்" என்னுஞ் சூத்திரவிதியால். (௪௩௯)

புக்கான்சுதஞ்சணனும்பொற்றாமரைமகளிர
தொக்காலேபோலுந்தன்றேவிக்குழாஞ்சூழ
மிக்கான்குணம்பாடியாடிமிகுதீம்பா
றொக்காடல்போற்சுதங்கணிறைந்தனவே.

இ - ள். அச்சுதஞ்சணன் எங்ஙனஞ் சென்றுபுக்கானென்னின், பொற்றாமரையிற் பலதிருச் சென்றுநெருக்கிருந்தாற்போலுந் தேவியாதிரள்சூழச் சீவகசாமிகுணத்தைப் பாடி ஆடிச் சென்றுபுக்கான்; அவன்புக்கபின்பு சீவகசாமிக்குச் † சுருதஞானங்கள் நிறைந்தனவென்க. (௪௪௦)

பற்றாவஞ்செற்றமுதலாகப்பாம்புரிபோல்
முற்றத்துறந்துமுனிகளாயெல்லாரு
முற்றுயிர்க்குத்தீம்பால்சுரந்தோம்பியுளத்து
மற்றிருள்சேராமணிவிளக்குவைத்தாரே.

பற்று - பெற்றதன்மேல் நிகழுமாசை. ஆர்வம் - பெறாதன்மேல் நிகழுமாசை.

இ - ள். நந்தட்டனும், தோழன்மாரும், பற்றும் ஆர்வமுஞ் செற்றமுமுதலாகிய வினையமுழுதையும் பாம்பு தோலுரிக்குந்தன்மைபோலே துறந்து இருடிகளாய் உயிர்களுக்குற்றுக் கருணையைச்சொரிந்து பாதுகாத்து நெஞ்சிலே அஞ்ஞானஞ் சேராத சுருதஞானத்தை வைத்தாரென்க. (௪௪௧)

கோமானடிசாரக்குஞ்சரங்கள்செல்வனபோற
பூமான்றிருக்கோயிற்புங்கவன்றாள்சேர்ந்தேத்தித்
தாமார்ந்தசீலக்கடலாடிச்சங்கினத்துட்
டோமானவலம்புரியின்றோற்றம்போற்புக்காரே.

இ - ள். சக்கரவர்த்தியடியைச்சேர யானைத்திரள்செல்வனபோலத் தாமரைக்கோயிலிலிருந்த ஸ்ரீவர்த்தமானசுவாமிகளடியைச் சேர்ந்து ஏத்திச் சீலக்கடலிலேயாடிச் சங்கினத்திலே வலம்புரி தோன்றினாற்போலப் பின் சீவகசாமியும் திரளும் முனிகள் குழாத்தினடுவே புக்காரென்க. (௪௪௨)

சீவகன்றுறவுமுற்றிற்று. கவி, ௨௪.

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வினையியல், ௯௪.

† சுருதஞானம் அக்ஷராத்மகம், அநக்ஷராத்மகமென இருவகைப்படும்.

## சேணிகன்வரவு.

மட்டலர்வனமலர்ப்பிண்டிவாமனவ்
விட்டலர்தாமரைப்பாதம்வீங்கிரு
ளட்டலர்பரிதியினளிக்கச்செல்லுநாட்
பட்டதோர்பொருளினிப்பழிச்சுகின்றதே.

இ - ள். இருளைக்கொன்று அலர்ந்த பரிதிபோல வாமனுடைய திருவடிகள் இருவினையைக்கெடுத்து அருள்பண்ணும்படி அவர்கள்வழிபட்டுச் செல்லுநாளிலே பிறந்ததொருபொருள் இனி யான்கூறுகின்றதென்று கூறினாரென்க. (சசஙூ)

வேறு.

கயலினமுகளிப்பாயமுல்லையம்பொதும்பிற்காமர்
புயலினமொக்குள்வன்கட்குறுமுயல்புலம்பிக்குன்றத்
தயல்வளர்கின்றவாமான்குழவியோடிரிந்துசெந்நெல்
வயல்வளர்கரும்பிற்பாயுமகததாடென்பதுண்டே.

இ - ள். கயலினம் எழுந்தபாய்கையாலே யதற்குவெருவிக் குறியமுயல் தன்னினத்தைநீங்கிக் கரும்பிற்பாயும் மகதநாடென்பதொரு நாடுண்டென்க.

பொதும்பு - குறுங்காடு. புயல் - நீர்; ஆகுபெயர். மொக்குள்போலுங் கண். இரிந்து - இரிய. குன்றத்தயலேவளர்கின்ற ஆமான் குழவியோடிரியும்படி முயல் பாயுமென்க. எனவே நிலமயக்கங் கூறினார். (சசச)

இரும்பிடிதழீஇயயானையிழிமதங்கலந்துசேறாய்ச்
சுரும்பொடுமணிவண்டார்க்குந்துகிற்கொடிமாடவீதிப்
பெருங்கடிநகரம்பேசினிராசமாகிருகமென்ப
ரருங்கடியமரர்கோமானணிநகராயதொன்றே.

இ - ள். யானையின்மதங்கலந்து சேறாய் அதனாலே சுரும்பும்வண்டும்ஆரவாரிக்கும் கொடியையுடைய மாடங்களையு.....த்தாகிய வீதியையுடைய அந்நாட்டினகரம் இராசமாகிருகமென்று பெயர்கூறுவர்; அதன்றன்மைபேசின், இந்திரனகரை யொப்பதொன்றாயிருக்குமென்க. (சசரு)

எரிமிடைந்தனையமாலையினமணிதிருவில்வீசும்
திருமுடியாரமார்பிற்சேணிகனென்பநாம
மருமுடிமன்னர்சூழவரசரணிபிண்டிவேந்தன்
றிருவடிவிருந்துசெய்வான்றிரண்முரசறைவித்தானே.

இ - ள். மாலையினையும், முடியினையும், ஆரமார்பினையுமுடைய அந்நகரியிலரசன்பெயர் * சேணிகனென்றுகூறுவர்; அவன் அரசர்சூழவிருந்து பிண்டிவேந்தன் றிருவடிக்குப் பூசனைசெய்தற்கு முரசறைவித்தானென்க.

சேணிகன் - ஸ்ரேணிகமகாராசன். (சசசு)

* சேணிகனை உத்தமஸ்ரோதாக்களுளொருவனென்பர்.

